# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

முதன்மடலம்-மூன்றாம் பாகம்

VOLUME I - PART III


வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,
முதன்மைப் பதிப்பாசிரியர்-இயக்குநர்
(முழுக் கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்கக வெளியீடு

1987

விற்பனை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## முதன்மடலம் - மூன்றாம் பாகம்

## (உ - ஔ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## Volume I - Part III

**வை. பழனிச்சாமி,** இ.ஆ.ப.,
*முதன்மைப் பதிப்பாசிரியர் - இயக்குநர்*
*(முழுக் கூடுதல் பொறுப்பு)*

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்ககத்திற்காக அச்சடிப்பு :
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*தரமணி, சென்னை - 600 113.*

செ.சொ.பி.அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு □ 3.
முதற்பதிப்பு : கும்பம் (மாசி) தி.பி. ௨௦௨௮; மார்ச்சு 1997



A Comprehensive Etymological Dictionary
of the Tamil Language, Vol.I, Part-III

**விலை : உருபா 150.00/-**

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314'' K.M4

**Published by :**
Directorate of Tamil Etymological
Dictionary Project,
Govt. Museum Campus,
Egmore,
Chennai - 600 008.

**Copies available at :**
International Institute of Tamil Studies,
Tharamani,
Chennai - 600 113.

**Type Setting by :**
Savithri Laser
Chennai 600 028.

**Printed at :**
Udhyam Offset Printers
Chennai 600 002.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கிய
மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
'முத்தமிழறிஞர்'

# கலைஞர் மு. கருணாநிதி






"ஈரெண்கால் மண்டபம் ஈந்தான் கரிகாலன்
பார்போற்றப் பாவாணர் இல்லத்தார்க் கெம்கலைஞர்
ஈந்தார் இருபான் இலக்கம் தமிழ்த்தாயோ
ஆர்ந்துபூ ரித்தாள் அகம்."

"தமிழினம் காக்கும் தலைவர் கலைஞர்
தமிழ்காக்கும் பாவாணர் சொல்லாய்வு பேணி
அகர முதலி அருந்திட்டம் கண்டார்
நிகரின்றி வாழ்க நெடிது"

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

தமிழ் காட்சிக்கு மட்டும் 'ஆட்சி மொழி' என்றில்லாமல், 'மாட்சிமை' மிகுந்த மகத்தான மொழி என்பதை உணர்த்தும் பொருட்டுக் கழக ஆட்சி, தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு 8.5.1974 அன்று "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்" ஒன்றை அமைத்தது.

ஒவ்வொரு நாளும் வழக்கில் சேர்ந்துவிடும் அந்நிய மொழிச் சொற்களுக்கு இணையாகப் புதிய சொற்களை உருவாக்கித் தமிழின் வளமையை மேன்மைப்படுத்தும் உன்னத முயற்சியாய் அது மலர்ந்தது.

1976ஆம் ஆண்டு கழக ஆட்சி கலைக்கப்பட்ட பிறகு இப்பணி அன்றைய ஆட்சியாளர்களால் ஆற்றுப்படுத்தப்படாமையால் தொய்வுற்றுப் போய் ஏறத்தாழ 23 ஆண்டுகட்குப் பின் மூன்றாம் தொகுதி வெளியிடும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறோம்.

கழக ஆட்சி அமையும் போதெல்லாம் அதுவரை நத்தை வேகத்தில் நகர்ந்த இப்பணி முழு மூச்சுடன் முயல் வேகத்தில் முடுக்கி விடப்படும்; இது மீண்டும் 1989இல் புதிய உத்வேகம் பெற்றது. 1991இல் நூல் அச்சடிக்கும் வேலை நிகழும் போது, மீண்டும் கழக ஆட்சி கலைக்கப் பட்டது. இருப்பினும் பெரும்பாலான பணிகள் முடிவுற்றிருந்ததால் இரண்டாவது தொகுதியை 1992ஆம் ஆண்டில் வெளியிட முடிந்தது. அதன்பின் ஐந்தாண்டுகள் கழிந்த நிலையில் மூன்றாவது தொகுதிக்கு முகவுரை எழுதும் பேற்றினைப் பெற்றிருக்கிறேன்.

இயக்ககத்தின் முதல் இயக்குநராகப் பணியேற்று, அரும்பணியாற்றிய பாவாணர் அவர்களுக்கு, மரியாதை செலுத்தும் வகையில் அவர்தம் நூல்கள் எல்லாம் அரசுடைமையாக்கப்பட்டு, அவரது குடும்பத்தாருக்குப் பரிவுத் தொகையாக அரசின் சார்பில் 20 இலட்சம் ரூபாயை வழங்கிப் பெருமைப்படுத்தியிருக்கிறோம் என்பது இந்நேர்வில் நினைவுகூரத்தக்கது.

அகர முதலி தொடர்ச்சியாக இனி விரைவில் வெளிவர வேண்டும் என்பதற்காக - செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககத்தை மேலும் சீரமைத்து, நான்கு ஆய்வாளர்கள் உட்படப் பன்னிரண்டு பேர் புதிதாகப் பணிஅமர்த்தப்பட்டு, தற்போது பணிகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. எனவே, இனிமேல் தொடர்ச்சியாக அடுத்தடுத்த தொகுதிகள் வெளிவருவதில் எந்தவிதமான தடையும் ஏற்படாது என நம்புகிறேன். மேலும், தமிழ் வளர்ச்சிக்கென்று தனியாக ஒரு அமைச்சகமும் ஏற்படுத்தப்பட்டுள்ள நிலையில் இன்னும் ஐந்தாண்டுக்காலத்திற்குள் அகர முதலியின் அனைத்துத் தொகுதிகளும் வெளிவர வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

இந்த மூன்றாவது தொகுதி 427 பக்கங்களைக் கொண்டு வெளிவருகிறது. 'உ' விலிருந்து தொடங்கி ஆய்த எழுத்து 'ஃ' வரை விளக்கம் இதில் இடம் பெற்றுள்ளது. ஆய்வு சிறப்பான முறையிலே செய்யப்பட்டுள்ளது என்பதற்கு அடையாளமாக ஒரு உதாரணம் கூற வேண்டுமேயானால்,

**ஏற்றம்** ēṟṟam, பெ. (n)

1. மேல் ஏறுகை ; mounting, as on a ladder, a horse, ascending ;
2. மேடு ; ascent., acclivity
3. உயர்கை, கொடியேற்றம் ; hoisting, as a flag, raising up
4. நீர்ப்பெருக்கு ; rising, as the flowing tide; "ஆணையாலே யேற்றந் தொடங்காக் கடலின்" (கம்பரா. நகர்நீ.141)
5. புகழ் (திவா.) ; praise, eulogy
6. இடிமரம் ; heavy wooden rammer set to a frame for pounding parched rice
7. அதிகப்படி ; increase, increment
   "மேல் ஏற்றம் ஒரு நாளைக்கு மூன்று மாவாக" (S.I.I. ii. 129)
8. மிகுதி ; excess "ஏற்றம் நெல்லுக்குறுணி எழுநாழியும்" (S.I.I.ii.70.5)
9. மேன்மை ; distinction, superiority, exaltation, pre-eminence
   "பத்தர்கட் கேற்ற நல்கினீர்" (தேவா. 599.6)
10. நினைவு ; remembrance
11. துணிவு ; courage "ஏற்ற மிலாட்டியென் னேமுற்றாள்" (தொல். சொல். 337, உரை)
12. ஏற்றமரம்; well sweep, picottah. "ஏற்றமிரண்டுள" (திருமந். 2873)
   ம: ஏத்தம்: க: ஏத, யாத: தெ: ஏதமு
   (ஏறு-ஏற்று-ஏற்றம் (சு.வி.78)

என்று பன்னிரண்டு வகையான பொருள் இருப்பதை மேற்கோளோடு குறிப்பிடும்போது இதன் தரம் தெரிகிறது. இப்போது நாம் 'உள்ளிருப்பு' என்று சொன்னதும் Internal Strike/pen-down strike எனப்படும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் தான் நினைவுக்கு வருகிறது. இக்காலத்தில் 'உள்ளிருப்பு' க்கு இப்படி ஒரு பொருள் இருந்தாலும், வைப்பு நிதி (reserve cash) எனும் பொருளையும், கருவூலக் காவல் (watching the treasury) எனும் பொருளையும் இந்த நூல் தந்திருப்பதை உணர்கிறோம்.

இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளோர் அனைவரும் இலக்கை அடைய முழுமையான ஒப்படைப்புடன் செயற்பட்டுக் கடுமையாக உழைக்க வேண்டும். ஏற்கனவே காலம் விரயமாகியிருக்கிறது என்கிற எச்சரிக்கை உணர்வை அடிக்கடி மனதில் உச்சரித்துக் கொண்டு ஒவ்வொரு நிமிடமும் அரும் பணியாற்ற வேண்டும்.

தமிழ் ஆட்சி மொழி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடிமகன் முனைந்து பாடுபட்டு இந்த உயர்ந்த பணியைச் செய்து முடிப்பார் என்ற திடமான நம்பிக்கை எனக்கிருக்கிறது.

இந்த மூன்றாம் தொகுதி தமிழ் கூறு நல்லுலகத்திற்கும், பிறமொழி ஆய்வாளர்களுக்கும் பெய்யெனப் பெய்யும் மழை போன்று அமைந்துள்ளது. தொன்மைச் சிறப்பில் மலை போல் உயர்ந்திருந்தாலும், புதுமைகளைப் போற்றி உள் வாங்கிக் கொள்வதில் கடல் போன்ற ஆழத்தையும் உள்ளடக்கிய உயரிய மொழி நம் தமிழ் மொழி என்பதை உணரச் செய்வதாய் இத்தொகுதி விளங்கிட விழைகிறேன்.

சென்னை
25.02.97

மு. கருணாநிதி

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்,
எம்.ஏ., பிஎச். டி.
தமிழ் ஆட்சிமொழி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத்
துறை அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# முன்னுரை

சொல்லாய்வறிஞர் ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களின் வாழ்நாட் பணியாகக் கருதப்பட்ட 'சொற்பிறப்பியல் அகரமுதலி'யின் மூன்றாவது தொகுதி இப்போது வெளியிடப்படுகிறது. 1957-இல் திராவிட இயக்க அடிப்படை உணர்வோடு வளர்ந்த எங்களை அழுத்தமான தனித்தமிழ் நோக்கில் திசை திருப்பிய பாவாணரின் நூலைப் பயின்ற என்போல்வார்க்கு நாற்பதாண்டுகட்குப் பின் அவரது நோக்கை நிறைவேற்றும் திட்டத்தைச் செயற்படுத்த வாய்ப்புக் கிட்டியுள்ளதை எண்ணி நெஞ்சு நெகிழ்கிறது; கண்கள் கசிகின்றன.

அந்த நினைவோடு இந்த முன்னுரை தொடர்கிறது.

பாவாணர் தரும் முன்னுரையிலிருந்து சில பகுதிகளைச் சுட்டிக் காட்டினால் இந்த நூலின் மேன்மை புரிந்து விடும்.

சொல்லின் பிறப்பை மட்டும் உணர்த்துவதே எல்லையென்று மேலை நாட்டார் கருதினர். ஆனால் பிறப்போடு நில்லாமல் சொல் வரலாற்றை வரைவது பாவாணர் பணி. இதற்குத் தமிழ் இடந்தருகிறது என்று உறுதிபடக் கூறுகிறார் அவர்.

அவருடைய நோக்கமே தமிழ் - தென்னாட்டுப் பழங்குடி மொழி, குமரி நாட்டு மொழி, திராவிடத் தாய்மொழி, ஆரியத்திற்கு முந்தைய மொழி, ஆரியத்துக்கு மூல மொழி, தற்சார்பு மொழி, உலக முதன் மொழி என்பது தான். இந்தக் கோட்பாடுகளில் அழுந்தி நிற்கும் தன் சொல்லாராய்ச்சியையும் இந்தக் கோட்பாடுகளை மெய்ப்பிக்கும் வகையிலேயே நகர்த்துகிறார். மேனாட்டறிஞர்களாகிய பரோவும் எமனோவும் வெளியிட்ட திராவிட மொழிகள் பற்றிய சொற்பிறப்பியல் அகரமுதலி மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். எனினும், அதில் பல தவறுகளும் உள்ளன என்கிறார் பாவாணர். அவரே பின் வருமாறு எழுதுகிறார் :

"ஒரு சில கூட்டுச் சொற்களைத் தவறாகவும் அவ்வகரமுதலி பிரித்துள்ளது.

எ-டு : தகப்பன் - தகு + அப்பன்.

தம் + அப்பன் - தமப்பன் - தகப்பன் என்பதே உண்மையான வரலாறு.

வரலாற்றிற் கெட்டாத தொல்பழங்காலத்தில் தோன்றிய உலக முதன்மொழியாகிய குமரிநிலத் தமிழின் சொற்பிறப்பியலை, உழைப்பொடும் பொறுமையொடும் நடுகண்மையொடும் மெய்யறியவாவொடுங்கூடி - நீண்டு ஆழ்ந்து நுணுகிய ஆராய்ச்சியாலன்றிப் பெருந் தமிழ்ப்புலவரும் அறியவொண்ணா நிலையில், வரலாறறியாது சமற்கிருத அடிப்படையில் தமிழாய்ந்த மேலையரிடம் எதிர்பார்ப்பது, இயற்கைக்கு முற்றும் மாறானதே. ஆதலால், பரோ எமனோவர் அகரமுதலிக் குறைபாட்டினால் அவர்க்கு எள்ளளவும் இழுக்கின்று."

இந்த ஆழம் இருப்பதால்தான் பாவாணர் நிமிர்ந்து நிற்கிறார்.

இந்த அகரமுதலியை எல்லார்க்கும் பயன்படும் பொதுவகையாகவும் (General Purpose), ஆய்வாளர்கட்கு மட்டுமே பயன்படும் சிறப்பு அகரமுதலியாகவும் (Research Purpose) கொள்ளலாம்.

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி (Lexicon)-யை இதற்கு முன்னோடியாகக் கொள்ளலாம். எனினும், அதிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி அந்தநாளிலேயே பாவாணர் திறனாய்வு நூலை வெளியிட்டுள்ளார். `Manifold Defects in the Madras University Tamil Lexicon' என்ற நூல் இதனை உணர்த்தும். இத்திறனாய்வு நூல் தமிழிலும் உள்ளது.

எனவே, குறையுணர்ந்து, குறையை உணர்த்தும் வல்லமை படைத்த பாவாணர் தான், இந்த அகரமுதலியைத் திறம்பட உருவாக்க முடியும் என்று முதல்வர் கலைஞர் அவர்கள் கண்டறிந்து 1974 ஆம் ஆண்டிலேயே அவர்க்கோர் இருக்கை நல்கியது வரலாற்று முத்திரை ஆகும்.

இந்த அகரமுதலியை 12 மடலங்களாக இந்த மடலங்களுக்குள் அடங்கிய 31 தொகுதிகளாகக் கொண்டுவர வேண்டுமென்பதுதான் பாவாணர் திட்டம். இப்போது தான், முதன் மடலத்தின் மூன்றாம் தொகுதி வருகிறது. அதுவும் ஐந்து தொகுதிகள் மூன்றாகச் சுருங்கியுள்ளன. இதுவும், 23 ஆண்டுகள் போன பின்பு வரும் தொகுதி. பாவாணர் பேரறிஞர். அவர் தம் காலத்தையும், ஆய்வு முடிய வேண்டிய காலத்தையும் சரியாகக் கணக்கிட்டு வேலைத் திட்டத்தை அமைத்துக் கொள்ளவில்லையோ என்றும் எண்ணத் தோன்றுகிறது அல்லது, அரசு தக்க ஏந்துகளை அமைத்துத் தாராமையால் ஏற்பட்ட சிக்கலா? - விளங்கவில்லை.

ஆனால், இன்று ஆய்வாளர் நால்வர் உள்ளிட்ட தொகுப்பாளர்களும் அலுவலகப் பணியாளர்களுமாகப் 12 பேர் பணியாற்றுகின்றனர். இதுவரை பெறாது - இன்று கலைஞர் ‘கருணை’யால் இந்த இயக்ககம் பெற்ற பெருவாய்ப்பு இது.

பாவாணர் திட்டப்படி 11 மடலங்களை - 26 தொகுதிகளை 5 ஆண்டுக்குள் முடித்தாகவேண்டுமே எனும் கவலையோடு பணிகளை முடுக்கியுள்ளோம்.

பாவாணரது அகரமுதலித் திட்டம் 1974-க்கு முன்பே திட்டமிடப் பட்டதுதான். இந்த நேரத்தில் உலகத் தமிழ்க் கழகத்தின் தீர்மானத்தை நினைவுகூர்வதே பொருத்தமாக இருக்கும். 1971-இல் இரண்டாவது முறையாக மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்றார். அந்தக் காலக் கட்டத்தில் ஒரு தூதுக்குழு சென்று முதல்வரைக் கண்டு பேசி, பாவாணரது அகரமுதலித் திட்டத்தை அரசே ஏற்றுச்செய்ய வேண்டுவது என முடிவு செய்தோம். அதன்படி, சென்னை வந்த தூதுக்குழுவில் பேராசிரியர் தி.வை.சொக்கப்பா, பெருஞ்சித்திரனார், செந்தமிழ்க் கிழார், மி.மு. சின்னாண்டார் ஆகியோருடன் நானும் இடம் பெற்றிருந்ததைப் பெருமையுடன் நினைவு கூர்கிறேன். இதற்கிடையில், பெருஞ்சித்திரனார் தமது ‘தென்மொழி’ இதழ் வழியாக, தனித்தமிழ் அன்பர்கள் 200 பேரைக் கொண்ட ‘பாவாணர் அகரமுதலித் தொகுப்புத் திட்டம்’ ஒன்றைச் செயற்படுத்தத் தொடங்கியிருந்தார் என்பதையும் அது சில மாதங்கள் நீடித்தது என்பதையும் வரலாற்று நோக்கோடு சுட்டுவது என் கடமையாகும்.

இந்த நிலையில்தான், மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களே 8.5.1974-இல் இத் திட்டத்தை அரசின் திட்டமாக அறிவித்துத் தமிழ் நெஞ்சங்களைக் குளிர்வித்தார். முதல் தொகுதியில் 25 பக்கங்களில் பட விளக்கங்கள் அமைகின்றன. அதிலும் 135 வண்ணப்படங்கள் மிக அருமையாக அச்சாகியுள்ளன. படத்தாள் 8-இல் அடுக்கு வாழை பச்சை நிறத்தில் - அண்டிக் கொட்டை எனும் முந்திரிக்கொட்டை அதற்கேயுரிய நிறத்தில். 'அடுப்பு ஊதி' எனும் மீனும் அணிலும் அழகிய வண்ணங்களில் - ஒரு தாய், பசுமாட்டில் பால்கறக்கும்போது இரு பின்னங்கால்களையும் ஒரு கயிற்றால் கட்டி வைப்பாள், உதைத்து விடாமலிருக்க - அந்த அணை கயிற்றை விளக்க ஓர் அருமையான படம். ஆனால், இரண்டாம் தொகுதியில் படங்கள் ஒன்பது பக்கங்களில் - அதிலும் 35 படங்கள் மட்டுமே வண்ணத்தில்.

இரண்டு தொகுப்பிலுமே வண்ணமல்லாத கறுப்பு வெள்ளைப் படங்கள் பல இடம் பெற்றுள்ளன. ஆனாலும், வண்ணப்படங்கள் யாவும் தொகுப்பின் தன்மையை வெகுவாக உயர்த்துகின்றன. இந்த மூன்றாவது தொகுதியிலும் வண்ணப் படங்கள் உள்ளன.

வழக்கத்தில் உள்ள பிறமொழிச் சொற்களையெல்லாம் அப்படியே தமிழாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று வஞ்சமனத்தொடும் நச்சு நினைப்பொடும் புலம்பித் திரிவோர்க்குப் பாவாணர் ஒரு சாட்டையடி தருகிறார்:

"அயன்மொழிச் சொற்களுள், சிறப்பாக வடமொழி, ஆங்கிலம் ஆகிய இருமொழிச் சொற்களே தமிழுக்குப் பெருங்கேடு விளைத்து வருகின்றன. வடசொற்கள் வலிந்து புகுத்தப்பட்டவை; ஆங்கிலச் சொற்களோ வலியப் புகுத்திக் கொண்டவை. முன்னதற்கு வடமொழி தேவமொழியென்னும் ஏமாற்றும், பின்னதற்கு ஆங்கிலம் அறிவியன்மொழியும், உலகமொழியும் ஒரு கால ஆட்சி மொழியுமாகும் என்னும் உண்மையும் துணைநிற்கின்றன.

அயன்மொழிச் சொற்களை வேண்டாது வழங்குவதனால் தமிழ்ச் சொற்கள் வழக்கு வீழ்ந்து நாளடைவில் இறந்துபடுவதுடன், புதுச்சொல் புனையும் ஆற்றலும் அவாவும் தமிழர்க்கு அற்றுப்போகின்றன. அதோடு, வழக்கிறவாத பல அடிப்படைத் தமிழ்ச் சொற்களும் அயற்சொற்களாக மாறிவிடுகின்றன.

பேசுவதே மொழியென்றும், கருத்தைத் தெரிவிக்கக் கருவியாயிருப்பதே மொழியின் பயனென்றும், கடன்சொற்களாலேயே மொழி வளருமென்றும்,

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே" என்றும்,

சிறந்த அறிவும் பரந்த நோக்கும் உள்ளவர்போற் சிலர் நடித்துத் தம் புல்லறிவைப் புலப்படுத்துவர். இக் காலத்தில் நாட்டுப்புறக் கல்லாமக்களும் 'ஐயா' என்னும் தமிழ்ச் சொல்லைப் புறக்கணித்து, 'சார்' என்னும் ஆங்கிலச் சொல்லையே ஆண்டு வருகின்றனர். அதனால், அச் சொல்லையும் அகரமுதலியிற் சேர்க்கவேண்டுமென்று தமிழ்ப் பகைவரும் கூறத் துணியார். ஆகவே, ஆழ வழக்கூன்றியனவும் தமிழுக்குத் தேவையானவுமான அயன் மொழிச் சொற்களே இங்குச் சேர்க்கப்பெற்றுள்ளன. அவற்றை மெள்ளமெள்ள ஒவ்வொன்றாக உதறிவிட்டு, பழந்தமிழ்ச் சொல்லையோ புதுப்புனைவுச் சொல்லையோ நாளடைவில் ஆளவேண்டும் என்னுங் கருத்தையே, தமிழர் உள்ளத்திற் பதித்தல் வேண்டும்" என்கிறார்.

'ஓசனை' என்ற தமிழ்ச் சொல் வடமொழியில் எப்படி 'யோசனை' யாகிறது என்பதை நயம்பட விளக்குகிறது அகரமுதலி. அதிலும் நீட்டலளவையோடு தொடர்பு கொண்டு - தொலைவை அளக்கும் ஓர் அளவுகோலாக விளங்குவது 'ஓசனை'. அந்த விளக்கம் ஏற்கும்படியாக அமைந்துள்ளது.

**ஓசனை** ōsaṉai பெ. (n) நான்கு கூப்பிடு தொலைவு; a measure of distance = 4 kūppiḍu. "இன்கருப்பூரமும்... ஓசனை கமழுமே" (சீவக. 1901.).

[ஓ - ஓயல் - ஓசல் - ஓசனை]

இச்சொல் வடமொழியில் யோசனையெனத் திரிந்தது. ஓ- ஓசனை = தொலைவு, ஓட்டுதல், சேர்தல் எனப்பொருள்படும். Yuj என்னும் சொல்லிலிருந்து yojana தோன்றியதாகக் கூறுவது பொருந்தவில்லை. குதிரை அல்லது எருதுகளைப் பூட்டுதல் என்று மட்டும் பொருள் தரும்சொல் எவ்வளவு தொலைவு ஓடவேண்டும் என்பதற்கான அடிப்படையும், சொல்லின் புடை பெயர்ச்சி ஒழுங்கும் (Semantic expansion) கருதாமல் வெறுமனே பொருள் புணர்த்திக் காட்டப்பட்டுள்ளது.

தமிழில் பண்டுதொட்டே நீட்டலளவுகளும் கீழ்வாயிலக்கங்களும் மிகச் செம்மையாகப் பேணப்பட்டதால் அளவைப் பெயர்கள் செப்பம் பெற்றுள்ளன. 5 1/4. அடி நீளமுள்ள கோலால் 2000 தடவை அளக்கும் தொலைவு ஒரு குரலோசை அல்லது கூப்பிடு தொலைவாகும். நான்கு கூப்பிடு தொலைவு ஒரு ஓசனை அல்லது காவதம் எனப்படும். இது, இக்காலத்திய 11 கி.மீ. தொலைவுக்குச் சற்றொப்பப் பொருத்தமானது. இத்தொலைவு 7½ நாழிகை (3 மணி) நேரத்தில் மெதுவாகச் செல்லும் வண்டி அல்லது மென்னடையாளர் கடக்கக் கூடிய தொலைவு என்று கூறப்பட்டுள்ளது. நிறுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை மூன்றையும் குறித்த 'கா' என்னும் சொல்லினடியாகத் தோன்றிய காவதம் - காதம் என்னும் சொல்லும் ஓசனை என்னும் சொல்லும் இந்திய மொழிகளில் ஊடாடியுள்ளன." என்கிறது அகரமுதலி.

'உய்த்தல்' எனும் ஒரு சொல்லுக்குத் தான் எத்தனை விளக்கங்கள்?

இந்த 'அகரமுதலி'யின் பயன் என்னவென்று விளங்கிக்கொள்ள இந்த விளக்கமே போதும்.

இதோ விளக்கம் :

உய்²-த்தல் uy-4 செ. குன்றாவி. (v.t.) 1. உய்யச் செய்தல்; to ensure salvation. "உய்த்த வியோமருபர்" (சதாசிவ.29). 2. நீக்குதல்; to drive away, dispel as darkness. "பல்விளக் கிருளின் றுன்னற வுய்க்கும்" (திருக்கோ.175). (செ.அக.)

(உ - உய் - உய்-த்தல்.)

உய்³-த்தல் uy - 4 செ.குன்றாவி. (v.t.) 1. செலுத்துதல்; to direct, guide. "நன்றின்பா லுய்ப்ப தறிவு" (குறள், 422). 2. படைக்கலம் விடுதல்; to discharge, let fly, as an arrow. "அம்புய்க்கும் போர்" (கம்பரா. மாரீச. 186)

3. அனுப்புதல்; to send, despatch. "பட்டிமையோலை யுய்ப்பான்" (திருவிளை. மெய்க்கா.13). 4. நடத்துதல்; to conduct, lead, direct "உய்த்திடு மிச்சை செய்தி" (சி.சி.1.62, நிரம்ப.) 5. கொண்டுபோதல்; to carry. "வேட்டுவ ருய்த்தன ரோவென" (சீவக.425). 6. நுகர்தல்; பட்டறிதல் to enjoy, experience. "காதல காத லறியாமை யுய்க்கிற்பின்" (குறள்.440). 7. கொடுத்தல்; to give. "மீளியாளர்க்கு மிகவுய்த்தன்று" (பு.வெ.3,9,கொளு.). 8. அறிவித்தல்; to make known, tell, reveal. "அவ்வழி யரசற் குய்த்தார்க்கு" (சீவக.1407). 9. ஆணை செலுத்துதல்; to rule. "ஞால முழுது முய்த்திடு மகவு" (பாரத. சம்பவ.10). 10.குறிப்பித்தல்; to mention. 11. ஊர்தியில் செல்லுதல்; to fly, as vehicle. 12. அமிழ்த்தல்; to press, sink. 13. ஈடேறச் செய்தல்; to realise. "உய்த்த வியோமரூபர்" (சதாசிவ. 29). மதியைச் செலுத்தி ஆராய்தல், உய்த்தறிதல், உய்த்துணர்தல். உய்த்தலில் பொருண்மை என்னும் தொடர்களை நோக்குக.

ம., க. உய்.

[உ - உய் - உய்-த்தல்]

இந்த ஆய்வில் ஈடுபட்டுள்ள பதிப்பாசிரியர்களும் தொகுப்பாளர்களும் பாவாணர்தம் நூல்கள் அனைத்தையும் முழுமையாகப் படிக்க வேண்டும். அவரது 'வேர்ச் சொல் கட்டுரைகள்' போன்ற நூல்களின் கருத்தினை நெஞ்சில் பதித்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் 'சொற்பிறப்பியல் அகரமுதலி'யின் தரம் தெளிவாக இருக்கும்.

எடுத்துக் காட்டுக்கு ஒன்றைக் கூறலாம். 'வள்' என்பது வேர்ச்சொல் (Basic Verbal Root). இதிலிருந்து வளை, வளையம், வளைவு, வளையல் போன்ற சொற்கள் பிறக்கின்றன. 'ள-ட' உறவு அடிப்படையில் வட்டு, வட்டை, வட்டாரம், வட்டம் போன்ற சொற்கள் பிறக்கின்றன.

இந்த ஆய்வுணர்ச்சியும் வட்டார வழக்கு (Regional dialect), இலக்கிய ஆட்சி (Literary usage) இவை பற்றிய தெளிவும் கொண்டுதான் இந்த ஆய்வை மேற்கொள்ள முடியும். எனவே, ஐந்தாண்டுகட்குள் அனைத்துப் பகுதிகளையும் ஆய்வு செய்து முடிப்போம் எனும் அறைகூவலோடும் ஆழ்ந்து பயின்று அருமையான முறையில் இப்பணியை முடிப்போம் எனும் நெஞ்சுறுதியோடும் ஆய்வாளர்கள் தங்கள் தொகுப்பு முயற்சியைத் தொடரவேண்டும்.

ஆழமும், ஆர்வமும், அக்கறையும் உடைய மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களுடைய தலைமையில் பாவாணர் அன்பராகிய என் போன்றாரின் உறுதுணையோடு இந்தப் பணியை முடிப்பதே தமிழுக்கு நாம் செய்யும் தொண்டு.

மு. தமிழ்க்குடிமகன்

சென்னை
25.02.1997

**வை. பழனிச்சாமி,** இ.ஆ.ப.,
அரசு செயலாளர், மற்றும்
முதன்மைப் பதிப்பாசிரியர் - இயக்குநர்
(முழுக் கூடுதல் பொறுப்பு),
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்ககம்.



தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை - **600 009.**

# பதிப்புரை

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும் தலைமையும் கொண்டது தமிழ்மொழி. நாட்டு வரலாறு, மொழி வரலாறு எழுதப்படுவதுபோல் சொற்களுக்குப் பிறப்பு மூலம் கண்டு சொல் வரலாறு விளக்கும் அகரமுதலியைச் சொற்பிறப்பு அகரமுதலி (Etymological Dictionary) என்பர். உலகின் பல மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பு அகரமுதலிபோல் தமிழிலும் சிறந்த சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பன் மடலங்களாக வெளியிடும் நோக்கில் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்களால் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இப்பொழுது முதன் மடலத்தின் மூன்றாம் பகுதியை வெளியிடுகிறது.

ஒரு மொழியின் அனைத்துச் சொற்களுக்கும் வேர்மூலம் காணும் முயற்சி மேற்கொள்ளப்படுவதில்லை. ஏனெனில் அனைத்துச் சொற்களுக்கும் வேர்மூலம் காண்பது கடினம். ஆங்கிலத்தில் 10 இலக்கம் சொற்களிருந்தாலும் 45,000 சொற்களுக்குத் தான் ஆங்கிலச் சொற்பிறப்பு அகரமுதலி வேர்மூலம் காட்டுகிறது. ஆயின், தமிழ் மொழியில் உள்ள அனைத்துச் சொற்களுக்கும் வேர் மூலம் காண முடியும் என்பதால் 12 மடலங்களாக இதனை வெளியிட. மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் அவர்கள் இத்திட்டத்திற்கு முதல் இயக்குநராக இருந்து ஆற்றுப்படுத்தியுள்ளார்.

பொதுவான அகரமுதலியைவிட இது பலவகையில் வேறுபட்டது. இனச்சொல் காட்டுதல், ஒரு பொருள் குறித்த பலசொல் காட்டுதல், ஒரு பொருளின் இனவகைகள் காட்டுதல், உண்மையான வேர்மூலத்தைப் பாவாணர் வேர்ச்சொற் கட்டுரைகளில் பொதித்த நெறிமுறைகளாலும், மரபிலக்கணம், மொழியியல் கூறுகள், இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, உலக வழக்கு ஆகியவற்றின் அணுகுமுறைகளாலும் கண்டறிதல், இன்றியமையாத சொற்களுக்கு அரைக்கலைக்களஞ்சியப் பாங்குடன் சிறப்புக் குறிப்புகள் தருதல் போன்றவற்றைச் சான்றாகச் சுட்டிக்காட்டலாம்.

பிற அகரமுதலிகளில் உள்ள பிழைகளைத் திருத்துதலும், பிறமொழிச் சொற்களுக்கும் மிகவும் திரிபடைந்த உலக வழக்குச் சொற்களுக்கும் செந்தமிழ்ச்சொல் வடிவம் தரப்படுவதும் இதன் சிறப்புக் கூறுபாடாகும்.

தமிழ் மொழியின் தூய்மை பேணவும், தாய்மை நிலைநாட்டவும் சொற்களின் செவ்விய பொருளறிந்து தரமாகப் பயன்படுத்தவும், ஆராய்ச்சி யாளர்க்கு மொழியியல் புதைபொருள்களை அகழ்ந்து காட்டவும் இந்தத் தொகுப்புகள் பெரிதும் பயன்படும்.

சான்றாக, ஒன்று, இரண்டு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது போன்ற எண்ணுப் பெயர்களுக்குத் தரப்பட்டுள்ள விளக்கங்களும், ஐந்திரம், ஆதி, இந்திரன், ஆய்த எழுத்து போன்றவற்றிற்குத் தரப்பட்டுள்ள மரபிலக்கண விளக்க நுட்பங்களும், இதன் முதன்மைப்பதிப்பாசிரியர் - இயக்குநராக இருந்து இதனைத் தொகுப்பித்த பேராசிரியர் இரா. மதிவாணன், மொழி ஞாயிறு பாவாணர் நெறியில் தடம் பிறழாது ஆய்வுசெய்ய முயன்றிருக்கிறார் என்பதைத் தெற்றெனக் காட்டுகின்றன.

இனி, அடுத்து வரவிருக்கும் மடலங்களை விரைந்து வெளிக்கொணருதற்காக மாண்புமிகு தமிழக முதலமைச்சர், முத்தமிழ் அறிஞர், கலைஞர் அவர்களும், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களும், உற்றுழி உதவி ஊக்கம் தந்து, ஆக்கம் சேர்க்கும் ஆர்வம் கொண்டு செயற்கரிய செய்யும் செந்தமிழ்ச் செம்மல்களாக நமக்கு வாய்த்திருத்தலின், எண்ணிய எண்ணியாங்கு திண்ணமாக எய்தலாம் எனப் பெருமிதம் கொள்ளலாம். தமிழுக்கும் தமிழகத்துக்கும் பெயர் விளங்கும் காலம் வந்ததெனப் பெரிதும் மகிழலாம்.

தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் திரிந்து தமிழ்ச்சொற்களை ஒன்றுவிடாமல் தொகுத்தல், உரிய விளக்கம் எழுதுதல், நன்கு பதிப்பித்தல் ஆகிய முப்பணிகளிலும் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், பணியாளர்கள் அனைவரும் மேலும் திறம்பட உழைத்து அடுத்தடுத்த அகரமுதலி மடலங்களை ஐந்தாண்டுக் கால வரம்புக்குள் வெளியிடப் பாடுபடவேண்டும் என்று விழைகிறேன்.

**வை. பழனிச்சாமி**

# வண்ணப்படங்களின் பட்டியல்

| படத்தாள் எண் (1) | படத்தின் பெயர் (2) | எதிரும் பக்கம் (3) |
|---|---|---|
| 1. | **உள்ளான் குருவி வகை**<br>கோரையுள்ளான்<br>கீறியுள்ளான்<br>கோழியுள்ளான்<br>காட்டு உள்ளான்<br>துடுப்பு உள்ளான்<br>மாறியுள்ளான்<br>பதுங்கையுள்ளான்<br>வாலாட்டியுள்ளான்<br>மயில் உள்ளான்<br>மூக்கு உள்ளான்<br>கட்டித்தலை உள்ளான்<br>தடிமூக்கு உள்ளான் | 140 |
| 2. | **உளுவை மீன் வகை**<br>வெள்ளுளுவை<br>கல்லுளுவை<br>கோரையுளுவை<br>மண்ணுளுவை<br><br>ஊசிக்கணவாய்<br>ஊசிக்கழுத்தி | 148 |
| 3. | ஊதுவிரியன்<br>ஊமத்தை<br>ஊளாமீன்<br>ஊற்றுப்பறி | 182 |
| 4. | எக்காளம்<br>எந்திரம் (திரிகை)<br>எருக்கு<br>எருமைச்சுறா | 246 |

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## உ

**உ**[1] *u*, *தமிழ்நெடுங்கணக்கில் இதழ் குவிவு ஐந்தாமுயிர்க் குற்றெழுத்து;* fifth letter of the Tamil alphabet representing the close back short rounded (labial) vowel sound.

*[உ - முன்மைச் சுட்டெழுத்து.]*

**உ**[2] *u*, *தமிழ் எண்களில் இரண்டு என்னும் எண்;* symbol for the number 2 usually written without the loop. "அ உ வறியா வறிவிலிடை மகனே" (யாப்.வி. 37.) (செ.அக.).

**உ**[3] *u*, இடை. (part.) 1. (அ) *தமிழில் மொழி முதலாகாத அயன்மொழி முன்னெழுத்துச் சொற்களுக்கு முன்னொட்டாக வரும் உயிர்க்குறில்;* prothetic vowel added to Sanskrit and other foreign loan-words beginning with யு, யூ, யோ, ரு, ரூ, ரோ, லு, லூ, லோ, as in உயுத்தம் for யுத்தம், உரோகிணி for ரோகிணி, உலோபி for லோபி. (ஆ) வடமொழி வேற்றுநிலை மெய்ம் மயக்கங்களின் தமிழ் மரபாக்கத்திற்காக மெய்யை உயிர்மெய்யாகப் பிரித்துக் காட்டும் மொழியிடைச் சாரியை; euphonic medial anaptyxis appearing in Sanskritic words in order to separate certain consonantal cluster sounds, as பதுமம் for பத்மம், சுவாமி for ஸ்வாமி, சுலோகம் for ஸ்லோகம், சுருதி for ஸ்ருதி (நன். 149, உரை). 2. *மெய்யில் முடியும் எழுத்துடன் சேரும் சாரியை;* final euphonic anaptyxis developing from the consonantal ending of a word, as in பல்லு for பல், and also in combinations, as in அவனுக்கு for அவற்கு.

**உ**[4] *u*, இடை. (part.) 1. (அ) *ஓர் அகச்சுட்டு;* base of the demons. pronoun expressing a person, place or thing occupying an intermediate position, neither far nor near, and meaning yonder or occupying a position near the person or persons spoken to "செய்குன்று வை" (திருக்கோ. 223) (ஆ) *புறச்சுட்டு;* demons. part. before nouns, expressing intermediate position or position near the person or persons spoken to, as உக்கொற்றன்; expressing a position, as behind or beyond. "ஊழையுமுப் பக்கங் காண்பர்" (குறள். 620). 2. (அ) *தொழிற்பெயர் ஈறுகளுளொன்று;* an ending of vbl. nouns as in வரவு, (ஆ) *பண்புப்பெயர் ஈறுகளுளொன்று;* an ending of abstract nouns, as in மழவு. (இ) *வினையெச்ச ஈறுகளுளொன்று;* ending of the past vbl. pple., as in செய்து; செய்பு. 3. *ஏவல் ஒருமை வினையீறு;* sing. imp.vbl. ending. நில்லு, எண்ணு. (செ.அக ).

க., ம., கோத. உ; து. உந்து; பர்., ஊத், ஊர், கூ. ஒயர்சு; குவி. ஊ, குரு., குச்., மால். உதி, பிரா. ஒ, ஒத்.

*[உ[1] → உ[4].]*

உகரச்சுட்டு தமிழ்நாட்டில் வழக்கற்றது. ஆயினும் யாழ்ப்பாணத்தில் வழங்குவதாகத் தெரிகின்றது. இது குடியேற்றப் பாதுகாப்பு என்னும் நெறிமுறைப்பட்டது. (வே.க.29).

**உ**[5] *u*, பெ (n.) *சிவசக்தி* (திருமந். 1751); energy of Śiva. (செ.அக.).

*[உ - முன்செலற் கருத்து வேர். ஊக்கம், ஆற்றல்.]*

**உ**[6] *u*, பெ. (n.) *ஐம்புள்ளுள் காகத்தைக் குறிக்கும் எழுத்து* (பிங்.); letter representing crow, in pañchapaṭchi. (செ.அக.).

*[உ - பழங்கால உருவெழுத்தமைப்பில் உகரம் காகத்தைக் குறிக்கும் கோட்டுருவத்தில் வரையப்பட்டிருக்கலாம்.]*

**உ**[7] *u*, பெ (n.) 1. *உயர்ச்சி;* height. 2. *வியப்பு;* surprise. 3. *நீர்நிலைகளின் கரை;* embankment.

*[உ → உ[7]]*

**உ**[8] *u*, பெ. (n.) 1. *நான்காம் வேற்றுமையீறு;* an ending of dative case. 2. *இரண்டாம் வேற்றுமையீறு;* an ending of accusative case.

ம., தெ. உ.

*[ம. அவன் + உ = அவனு (அவனுக்கு) தெ. நன்னு (என்னை) - மறைந்து போன வழக்கு மலையாளத்திலும் தெலுங்கிலும் எஞ்சியுள்ளது ]*

**உ**[9] *u*, இடை. (part.) 1. *ஒலிக்குறிப்பு இடைச்சொல்;* onomatopoeic. 2. *வியப்பு, சினக்குறிப்பு உணர்த்தும் இடைச்சொல்;* interjection of anger, etc.

ம., க., து., தெ. உ.

**உக்கடணம்** *ukkadaṇam*, பெ. (n) 1. *உரத்துக் கூவுதல்; பேரோசை எழுப்புதல்;* loud call, clarion call. 2. *சான்றோர் பலரறியக் கூறி ஒன்றைத் தொடங்கி வைத்தல்;* inaugurating something in the presence of the elite.

க. உக்கடணெ.

*[உகு → உக்கடம்[1] → உக்கடணம். உக்கடணம் → வ. உத்காட்டண.]*

**உக்கடம்**[1] *ukkaḍam*, பெ. (n) 1. *முதலாவது; தொடக்கம்;* first, beginning. 2. *வீட்டின் முன்னுள்ள தெருவாயில்; அரண்மனையின் முகப்பு; மதில்; வாயில்;* gate, facade, entrance.

*[உக்கடை → உக்கடம்.]*

**உக்கடம்**[2] *ukkaḍam*, பெ. (n) ***நீர்ச்சால் வடத்தில் தலைக்கண்ணி; முடிகயிறு;*** rope used in well-irrigation.

**உக்கடம்**[3] *ukkaḍam*, பெ. (n) 1. ***முன் பக்கத்தில் அமர்ந்து செலுத்தும் ஓடம்;*** steering boat. 2. ***ஊரின் எல்லையி லுள்ள காவலிடம்; காவற்பரண்;*** watch-tower.

**க.** உக்கட, **து.** உக்கடோ

*[உக்கம் = பக்கம், கடைசி, இறுதி, முனை, பின்பக்கமுள்ள பிடரி ஒ.நோ. உக்கடைப்புனம் = ஊரின் எல்லையிலுள்ள நிலம். உக்கடைவாயில (கடைசி எல்லை வாயில் (gate) → உக்கடை → உக்கடம்.]*

**உக்கடம்**[4] *ukkaḍam*, பெ. (n.) ***கோவைக்கு அருகிலுள்ள ஓர் ஊர்;*** village near Coimbatore.

*[உக்கடை → உக்கடம்.]*

**உக்கடை** *ukkaḍai*, பெ. (n.) ***நீரிறைக்கும் ஏற்றம்;*** wicker basket for drawing water for irrigation.

**க.** உக்கடியன்த்ர.

*[உகு → உக்கு → உக்கடை ]*

**உக்கணி** *ukkaṇi*, பெ. (n.) ***கைத்தறியில் கயிறு இழுத்துக் கட்டுவதற்காக உள்ள ஒரு கருவி;*** accessory of the handloom. (சேரநா.).

**ம.** உக்கணி

*[உக்கம் → உக்கணி. உக்கம் = கயிறு.]*

**உக்கம்**[1] *ukkam*, பெ. (n.) 1. ***இடை;*** waist. "உக்கஞ்சேர்த் திய தொருகை" (திருமுரு. 108). 2. ***பொருந்திய பக்கம்;*** conjoined side. (செ.அக.).

**ம.** உக்கம், **து.** ஒக்க, ஒக்கம்.

*[உ → உக்கம் உ = நடுப்பகுதி ]*

**உக்கம்**[2] *ukkam*, பெ. (n.) 1 ***பேரால வட்டம்;*** large circular fan. "உக்கமுந்தட்டொளியும் தந்து" (திவ். திருப்பா. 20). 2. ***சிற்றால வட்டம்;*** small ornamental fan. "உழைச்சென் மகளிருக்க மேற்றி" (பெருங். 1, 34, 213). 3. ***பொன்*** (சங் அக); gold.

*[உகு → உக்கம். உகுத்தல் = கொட்டுதல், சொரிதல், வீசுதல், பொலிதல்.]*

**உக்கம்**[3] *ukkam*, பெ. (n.) ***கட்டித் தூக்கியெடுக்குங் கயிறு;*** rope or cord attached to anything as to a handle (செ அக.).

**ம.** உக்கம்; **க.** உக்க; **து.** உக்கி, ஒக்கி, **தெ.** உக்கமு.

*[உ → உக்கம் (உயரம்) = மேலிழுக்கும் அல்லது மேலுயர்த்தும் கயிறு ]*

**உக்கம்**[4] *ukkam*, பெ. (n.) 1. ***நெருப்பு*** (சூடா.); fire. 2. ***வெப்பம்;*** heat.

**தெ.** உக்க.

*[உல் → உள் → உக்கம். உல் = தீ.]*

**உக்கம்**[5] *ukkam*, பெ. (n.) 1. ***உயர்ச்சி;*** height. 2. ***உயர்வு; சிறப்பு;*** sublimity.

*[உ' → உக்கம.]*

**உக்கம்**[6] *ukkam*, பெ. (n.) 1. ***எருது*** (பிங்.); bull, ox. 2. ***ஆன்;*** cow.

*[ஆ = ஆக்கள். ஒ.நோ. ox. ஆக்கம் → அக்கம் → உக்கம்.]*

**உக்கம்**[7] *ukkam*, பெ. (n.) 1. ***தலை;*** head. "உக்கத்து மேலும் நடுவுயர்ந்து" (கலித். 94). 2. ***சேவற் கொண்டை;*** plume on the head of the cock. 3. ***கோழி;*** fowl.

**ம.** உக்கம்.

*[உ = மேல், உயர்வு. உ → உக்கம். (மேலிருப்பது.)]*

**உக்கம்**[8] *ukkam*, பெ. (n.) ***கடுமை; மிகுதி;*** severity, excess. 'உக்கதவர் தித்ததவர்'' (மேருமந். 1097).

*[உ → உக்கு → உக்கம் ]*

**உக்கம்பருத்தி** *ukkam-parutti*, பெ. (n.) ***உப்பம் பருத்தி; வணப்பருத்தி;*** Indian cotton-plant. (செ.அக.).

*[உக்கம் + பருத்தி ]*

**உக்கரணம்** *ukkaraṇam*, பெ. (n.) 1. ***வீட்டின் சரக்கறை;*** store-house for provisions. 2. ***அரண்மனையின் களஞ்சியம்;*** granary in a palace.

**ம.** உக்கராணம்; **க., து.** உக்ராண; **தெ.** உக்ராணமு; **மரா.** உக்ராணி.

*[உள் + கரணம் = உட்கரணம் - உக்கரணம்; உள் = வீடு, அரண்மனை, அகம் → Skt. gnha > த. கிருகம் > கரணம்.]*

**உக்கரி**[1]**-த்தல்** *ukkari-*, 4. செ.குன்றாவி. (v.t.) ***வாயா லெடுத்தல்;*** to vomit. (W.).

*[உ + கரி.]*

**உக்கரி**[2]**-த்தல்** *ukkari-*, 4. செ.கு.வி. (v.i.) ***உக்காரமிடு தல்;*** hunkara, to bellow, as a bull. (W.).

*[முக்காரமிடு → முக்கரி → உக்கரி.]*

**உக்கரை** *ukkarai*, பெ. (n.) ***அக்கரை;*** opposite bank. "இக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளவே" (புறநா. 357.9).

*[உ = அந்த. உகரச்சுட்டு முன்மையும் உயர்ச்சியும் நடுவும் குறித்ததாம்.]*

**உக்கரைத்தட்டு** *ukkarai-t-taṭṭu*, பெ. (n.) ***மண முழவின் வலந்தரையின் நடுப்பாகத்துக்கு மேலுள்ள பாகம்*** (கலைமகள் xii, 400); part just above the middle of the Valantarai of a Mirutangam. (செ.அக.).

*[உ + கரை + தட்டு.]*

**உக்கல்**[1] *ukkal*, பெ. (n.) 1. ***பதனழிவு;*** rottenness, putridity. 2. ***உளுத்தது;*** that which is rotten or decayed.

*[உகு → உக்கல்.]*

**உக்கல்**[2] *ukkal*, பெ. (n.) 1. *பக்கம்;* side. (W.) 2. *மருங்கு;* hip. 3. *ஆலவட்டம்;* circular fan made of fragrant roots or palm leaves, carried in procession before idols and great persons. 4. *ஏறு;* bull. 5. *ஆன்;* cow. 6. *கோழி;* fowl. 7. *தீ;* fire. (ஆ.அக.).

ம. உக்கல்; து. ஒக்க.

**உக்கலரிசி** *ukkalariši*, பெ. (n.) *நொறுக்கலரிசி, நொய் யரிசி;* crushed rice. (சா.அக.).

*[உக்கல் + அரிசி.]*

**உக்கலை** *ukkalai*, பெ. (n.) *மருங்கின் பக்கம்* (பிங்.); hip.

ம. உக்கல்.

*[உக்கம் → உக்கலை.]*

**உக்கழுத்துமணி** *ukkaluttu-mani*, பெ. (n.) *கழுத்தணி வகை;* closely fitted necklace of gold beads. (செ.அக.).

ம. உக்கழுத்து.

*[உள் + கழுத்து + மணி.]*



உக்கழுத்துமணி

**உக்களம்** *ukkalam*, பெ. (n.) 1 *யாமக்காவல்;* night watch. 2. *தலைக்காவல்;* advance guard. 3. *பாளையஞ் சூழகழி;* entrenchment around a camp. (செ.அக.).

ம. உக்களம், க. உக்கட; தெ. உக்களமு, து. உக்கட.

*[உள் + களம் ]*

**உக்களவர்** *ukkalavar*, பெ. (n.) *இராக்காவலர்;* night watchmen. (கதி.அக.).

*[உள் + களம் - உக்களம் + அவர்.]*

**உக்களி** *ukkali*, பெ. (n.) *இனிய பணிகார வகை* (இராசவைத். 125.); sweet confection. (செ.அக.).

ம. உக்காளி; தெ. உக்கர.

*[உக்கம் + களி.]*

**உக்களை** *ukkalai*, பெ. (n.) *இடுப்பு;* hip. உக்கலை பார்க்க; see *ukkalai*. (செ.அக.).

*[உக்கலை → உக்களை. (கொ.வ.)]*

**உக்காக்கம்** *ukkākkam*, பெ. (n.) *அரைஞாண்;* waist cord. (யாழ்.அக.).

*[உக்கம் + அக்கம் = உக்காக்கம். உக்கம் = இடுப்பு. அக்கம் = கயிறு ]*

**உக்காரம்**[1] *ukkāram*, பெ. (n.) *கக்கல்* (பிங்.); vomiting. (செ.அக.).

*[உகு → உக்கரம் → உக்காரம்.]*

**உக்காரம்**[2] *ukkāram*, பெ. (n.) *ஒலி எழுப்புகை;* bellowing, as of a bull. (W.) (செ.அக.).

*[முக்காரம் → உக்காரம் ]*

**உக்காரை** *ukkārai*, பெ. (n.) *நீராவியில் வெந்த அஃகுல்லி என்னும் பிட்டு;* steamed meal-cake.

ம. உக்காலி, உதிரு, தெ. உக்கெர

*[உஃகுல்லி → உக்குல்லி → உக்கலி → உக்காலி → உக்காலை → உக்காரை ஒரு கலத்தின் வாயைத் துணியால் கட்டி அதன் மேல் அரிசி மாவையோ அல்லது பிற மாவையோ ஆவியில் வேகவைக்கும் ஒருவகைச் சிற்றுண்டி.]*

**உக்கி** *ukki*, பெ. (n.) 1 *இருகாதையும் இருகையால் மாறிப்பிடித்துக் கொண்டு உட்கார்ந்தெழும் தோப்புக் கரணம்;* form of salutation, specially before Ganesa, in which the worshipper is lowering and raising his body a certain number of times while folding his arms across his breast and holding his two ear lobes by alternate hands. 2. *தண்டனை வகை;* form of punishment. (செ.அக.).

*[உள்கி → உட்கி → உக்கி.]*

**உக்கிட்டு** *ukkittu*, பெ. (n.) *உட்கட்டு;* kind of necklace. (செ.அக.).

*[உள் + கட்டு - உக்கட்டு → உக்கிட்டு (கொ.வ.).]*

**உக்கிடர்** *ukkidar*, பெ. (n.) *சிலந்திப்பூச்சி;* spider. (W.) (செ.அக.).

*[உள் + கூடு = உட்கூடு → உக்கூடு → உக்கிடு → உக்கிடர். கூட்டினுள் இருக்கும் பூச்சி வகைகள். கூடு → கூடி → கூடன் என வழங்கி, வடபுல மொழிகளில் 'கீட்' எனத் திரிந்துள்ளதை ஒப்பு நோக்குக ]*

**உக்கிடு** *ukkidu*, இடை. (int.) *நாணத்தைக் காட்டும் குறிப்புச் சொல்* (இ.வ.); word expressive of shyness. (செ.அக.).

*[உள்கு → உள்கிடு → உக்கிடு.]*

**உக்கிப்போ-தல்** *ukki-p-pō-*, 8 செ கு.வி. (v.i.) 1. *உருகிப் போதல்;* wasting away with grief or pain. 2. *இளைத்துப் போதல்;* to pine away 3. *அழுகல்;* to rot.(சா.அக.).

*[உள் → உளு → உளுகு → உக்கு → உக்கி + போ.]*

**உக்கிரநாள்** *ukkiranāl*, பெ. (n) *தாழி*. (பரணி), *கொடு நுகம்* (மகம்), *கணை* (பூரம்), *முற்குளம்* (பூராடம்), *முற்கொழுங்கால்* (பூரட்டாதி) *ஆகிய ஐந்து நாண்மீன் கள்* (சோதிட சிந். 36); five naksatras Parani, Magam, Pūram, Pūrādam, Pūrattādi. (செ.அக.).

*[உக்கிரம் + நாள் ]*

**உக்கிரப்பாண்டியன்** *ukkirappāndiyan*, பெ. (n.) ***பாண்டிய மன்னர்களுளொருவன்;*** Pāndiyan monarch.

*[இவன் சோம சுந்தர பாண்டியன் மகன், கடல் சுவற வேல்விட்ட திருவிளையாடல் கண்டவனும் இவனேயாவான்.]*

**உக்கிரப்பெருவழுதி** *ukkira-p-peruvaludi*, பெ. (n.) ***கடைக் கழகத் திறுதிப் பாண்டியன்*** (இறை. 1, உரை. பக் 11) ***அகநானூற்றைத் தொகுப்பித்தோன்;*** Pāndiya king who reigned during the period of the Third Tamil Sangam in Madurai and under whose patronage Aganānūru was compiled.

*[உல் → உல்கு → உக்கு → உக்குரம் → உக்குரன் → உக்கிரன். ஒ.நோ அக்குரன் **உக்குரன்** பார்க்க; see ukkuran.]*

**உக்கிரம்**[1] *ukkiram*, பெ. (n.) 1. ***கொடுமை;*** blaze, glow, fierceness. "உக்கிர வடவைக்கனல்" (திருவிளை. யானை யெய். 20). 2. ***ஊக்க மிகுதி;*** vehemence, ardour, intensity, fervency, impetuosity. 3. ***சினம்;*** wrath, rage, fury. "உக்கிரமாக வீமன் வந்தவுறுதி கண்டு" (பாரத. இரண்டாம். போ. 12). (செ.அக.).

*[உல் = தீ, அனல், எரிதல். உல் + கு = உக்கு → உக்குரம் → உக்கிரம். ஒ.நோ. சுல் = எரிதல். சுல் + கு = சுக்கு → சுக்கிரன். சுக்கி = விண்மீன்.]*

**உக்கிரம்**[2] *ukkiram*, பெ. (n.) ***இலாமிச்சை*** (மலை.); cuscus grass. (செ.அக.).

**உக்கிரம்**[3] *ukkiram*, பெ. (n.) ***இசையுறுப்புகளுளொன்று*** (சிலப். 3, 150 உரை); limb of a musical piece, one of four Gīta-v-uruppu.

**உக்கிரமருந்து** *ukkiramarundu*, பெ. (n.) 1. ***காரமருந்து;*** pungent and stimulating medicine. 2. ***இதளிய கந்தக பாடாணங்களைக் கொண்டு செய்யுமருந்து;*** powerful medicine prepared from mercury, sulphur and arsenical compounds. 3. ***வேதைக்குதவும் மருந்து;*** one used in alchemy for transmuting metals. 4. ***கொப்புளத்தை எழுப்பு மருந்து;*** blistering agent. 5. ***வெடிமருந்து;*** gun powder. (செ.அக.).

**உக்கிரவெயில்** *ukkira-veyil*, பெ. (n.) ***கடுமையான வெயில்;*** intense heat of the sun.

*[உக்கிரம் + வெயில்.]*

**உக்கிரன்** *ukkiran*, பெ. (n.) ***சிவத்திரு மேனிகளுள் ஒன்று*** (காஞ்சிப்பு. சிவபுண்.15); manifestation of Siva. (செ.அக.).

*[உல் = தீ. உல் → உக்கு → உக்குல் → உக்குலன் → உக்குரன் → உக்கிரன். ஒ.நோ. அக்கு → அக்குரன்.]*

**உக்கிராணக்காரன்** *ukkirāna-k-kāran*, பெ. (n.) ***சரக்கறை மேற்பார்ப்போன்;*** steward incharge of provisions, store keeper.

ம. உக்ரான்; க. உக்ராண்க, உக்ராணதவ; து. உக்ரான்; தெ. உக்ராணி, உக்கிராபுவாடு.

*[உள் + கரணம். உள் = வீடு, அரண்மனை. கரணம் = மேற்பார்ப்பவன், கணக்கன் காரன் பெயரீறு.]*

**உக்கிராணம்** *ukkirānam*, பெ. (n.) ***வீட்டுச் சரக்கறை;*** store house for provisions, granary. (செ.அக.).

தெ. உக்ராண; க., து. உக்ராண; ம. உக்ராணம் *Mar.* ugrani.

*[உள் + கரணம் - உக்கரணம் → உக்கிராணம் (கொ.வ.) **உக்கரணம்** பார்க்க; see ukkaranam.]*

**உக்கு**[1]**-தல்** *ukku-*, 5 செ.கு.வி. (v.i) 1. ***மேலெழும்புதல்;*** to rise, go up. 2 ***பொங்குதல்;*** to spring.

க., து. உக்கு.

*[உ → உகு → உக்கு.]*

**உக்கு**[2]**-தல்** *ukku-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***மக்கிப்போதல்;*** to rot, decay, moulder. உக்கின மரம். 2. ***மெலிதல்;*** to pine away, waste away. அவள் துக்கத்தால் உக்கிப் போகிறாள் (இ.வ.). (செ.அக.).

ம. உக்குக.

*[உள்கு → உட்கு → உக்கு. உள்குதல் = உள்ளொடுங்குதல், உகுத்தல், உட்குதலாம். ஒ.நோ. வெள்கு → வெட்கு → வெட்குதல்.]*

**உக்கு**[3] *ukku*, பெ. (n.) ***இலவங்கம்*** (சங்.அக); clove.

*[உள்கு = உட்சுருங்கு. உள்கு → உக்கு.]*

**உக்குவிடு-தல்** *ukkuvidu-*, 20. செ.கு.வி. (v.i.) ***கரைந்து விடுதல்;*** to dissolve. "உப்பியல் பாவையுறையுற்றது போல உக்குவிடு மென்னுயிர்" (கலி. 132. 17).

*[உள்கு = சுருங்குதல், கரைதல், உள்ளு → உக்கு + விடு.]*

**உக்குளான்** *ukkulān*, பெ. (n.) ***சருகு தின்னும் முயல்;*** hare which is supposed to live on dried leaves (W.). (செ.அக.).

*[உகுதல் = சொரிதல், வீழ்தல். உகு → உக்கு = கீழே விழுந்த சருகு. உக்கு → உக்குளான் = சருகு தின்னும் முயல்.]*

**உக்குறள்** *ukkural*, பெ. (n.) ***குற்றியலுகரம்;*** shortened 'u'. "உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்" (நன். 164). (செ.அக.).

*[உ + குறள் - குறள் = குறுகியது. உக்குறள் = குறுகிய உகரம்.]*

**உக்குறுமை** *u-k-kurumai*, பெ. (n.) ***உகரக் குறுக்கம்;*** shortened 'u'. (ஆ.அக.).

**உக்கெலும்பு** *u-k-kelumbu*, பெ. (n.) ***மார்பெலும்பு;*** breast bone. (சா.அக.).

*[உ - முன்மைச் சுட்டு மார்பைக் குறித்தது. உ + எலும்பு - உக்கெலும்பு.]*

**உக்கை** *ukkai*, பெ. (n.) ***எருது;*** ox. (loc.). (ஆ.அக.).

*[உக்கு = உயர்வு, செருக்கு, செருக்குள்ள காளை. உக்கு → உக்கை.]*

**உக[1]-த்தல்** *uga-*, 3. செ.கு.வி. (v.i.) 1. ***உயர்தல்;*** to ascend, rise stately, soar upward. "மாவிசும் புகந்து" (மதுரைக். 334). 2. ***உயரப் பறத்தல்*** (பதிற். 779); to fly high.

ம. உக்குக; க. உக்கு (உப்பு); து. உக்கு; தெ. உக்கின்சு (குதித்தல்); *Goth.* hanhs, *Ger* hock; *Ice.* har, *As* heat; *E.* high.

*[உவ → உக → உக-த்தல். ஒ நோ சிவப்பு → சிகப்பு. ஆவா → ஆகா (இடைச்சொல்) ]*

**உக[2]-த்தல்** *uga-*, 3. செ.கு.வி (v.i.) 1. ***மகிழ்தல்*** (திவ். இயற். 2,8); to enjoy, to be glad, pleased, satisfied. 2. ***விரும்புதல்;*** to like. "காக்கை யுகக்கும் பிணம்" (வாக்குண். 24).

*[உவ → உக → உக-த்தல் = மகிழ்தல், உயர்தல். மேற்செலற் கருதது மகிழதற் கருத்தில் விரியும் ]*

**உகட்டு-தல்** *ugattu-*, 20. செ.கு.வி. (v.i.) ***அருவருப்பாதல்;*** to nauseate. "உகட்டிப் போந்த செய்தி" (திவ். திருக்குறுந். 4. வியா. பக்.17).

*[உகள் = வெளிவரல். உகள் + து = உகட்டு = புறந்தள்ளு, உருட்டு.]*

**உகந்துடைமை** *ugand-udaimai*, பெ. (n.) ***கணவனுடைய சொத்தில் மனைவிக்குரிய பங்கு;*** right of a married woman to a share of her husband's property. (Nāñ.). (செ.அக.).

*[உவ → உவந்து → உகந்து + உடைமை = விரும்பி எடுத்துக் கொள்ளத்தக்க உடைமை.]*

**உகப்பார்பொன்** *ugappār-pon*, பெ. (n.) ***வரிவகை*** (S.I.I. iii. 110.); tax. (செ.அக.).

*[உவ → உவப்பார் → உகப்பார் + பொன்.]*

**உகப்பு[1]** *ugappu*, பெ. (n.) ***உயர்ச்சி; "உகப்பே உயர்வு"*** (தொல்.சொல். 306); height, elevation. (செ.அக.).

*[உ → உக → உகப்பு.]*

**உகப்பு[2]** *ugappu*, பெ. (n.) 1. ***மகிழ்ச்சி;*** pleasure; joy. "பூதலத்தோ ருகப்பெய்த" (திருவாச. 11 .5). 2. ***விரும்பி வாழுமிடம்;*** happy resort, favourite resort. "இராவணனை..., யெய்தானுகப்பு" (திவ். இயற். நான்மு. 28). 3. ***விருப்பம்;*** wish, choice. (செ.அக.).

*[உவ → உக → உகப்பு.]*

**உகம்[1]** *ugam*, பெ. (n.) ***ஊழி;*** age of the world, long mundane period of years. "உகம் பல சென்றன" (கந்தபு. மேருப். 66).

ம. உகம்; *O.E* geoc; *E* yoke; *OHG., G.* joch; *OS., Goth.* juk; *ON.* ok; *L.* jugum; *Skt.* yuga.

*[உகு → உகம். உகுதல் = கெடுதல், அழிதல். முடிதல் = உலகம் முடியும் காலம்.]*

**உகம்[2]** *ugam*, பெ. (n.) 1. ***நுகம்;*** yoke. 2. ***இணை;*** pair.

*[உகு → உகம் = முடிவு, முனை, ஏர்க்காலின் முனைப்பகுதியில் பொருத்தப்படுவது.]*

**உகம்[3]** *ugam*, பெ. (n.) ***நிலவுலகம்;*** earth, world.

ம. உகம்.

*[உலகம் → உகம் ]*

**உகம்[4]** *ugam*, பெ. (n.) 1. ***தோற்றம்; தொடக்கம்;*** beginning. 2. ***முதலாவது;*** first for most. 3. ***தலைப்பாட்டு*** (சிலப். 14. 156, உரை.); leading song.

*[உகு → உகம். உகு = மேலெழும்புதல், உயர்தல், முதலாதல்.]*

**உகம்[5]** *ugam*, பெ. (n.) 1. ***நாள்*** (அக.நி.); day. 2. ***நீட்சி;*** length. (செ.அக.).

*[உகு → உகம். உகுதல் = கழிதல். உகம் = கழியும் நாள், நீட்சி.]*

**உகமகள்** *ugamagal*, பெ. (n.) ***நிலமகள்*** (ஆ.அக.); goddess of the earth. "உகமகணுதற்கண்" (இரகு. திக்குவி. 208).

*[உகம்[3] + மகள்.]*

**உகமம்** *ugamam*, பெ. (n.) ***பிறந்த இடம்;*** birth place.

*[உகு → உகம் + அம்.]*

**உகமுடிவு** *ugamudivu*, பெ. (n.) ***ஊழியிறுதி*** (திவா.); end of the world.

*[உகம் + முடிவு.]*

**உகரக்குறுக்கம்** *ugara-k-kurukkam*, பெ. (n.) ***குற்றியலுகரம்;*** shortened 'u'.

*[உகரம் + குறுக்கம். **குற்றியலுகரம்** பார்க்க; see kurriyalugaram.]*

**உகரக்கேடு** *ugara-k-kēdu*, பெ. (n.) ***நிலை மொழியிறுதியில் நின்ற உகரம் வருமொழி புணருமிடத்துக் கெடுதல்;*** elision of final 'u' of the first-word when joining with another word having a vowel for initial

*[உகரம் + கேடு. கெடு → கேடு.]*

**உகரம்** *ugaram*, பெ. (n.) 1. ***ஐந்தாமுயிர்;*** fifth letter (vowel) of the Tamil alphabet. 2. ***தமிழ் எண்களில் இரண்டு என்னும் எண்;*** symbol for the number two usually written without the initial loop (2).

*[உ + கரம். கரம் - சாரியை.]*

**உகல்[1]-தல்** *ugal-*, 2. செ.கு.வி. (v.i.) 1. ***உதிர்தல்; கீழேவிழுதல்;*** to drop off; as leaves, fruits; to fall out, as hair; to be blasted, nipped, shaken with the wind, to drop down, as tears. 2. ***சிந்துதல்;*** to be spilled, to fall. 3. ***சொரிதல்;*** to pour out. 4. ***சுழலல்;*** to be disconnected. 5. ***இறங்குதல்;*** to descend. 6. ***குதித்தல்;*** to jump.

*[உக → உகம்.]*

**உகல்**[2]**(லு)-தல்** *ugal(lu)-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***குதித்தல்;*** to jump. 2. ***தாவு;*** to billow "உகலியாழ் கடலோங்கு பாருளீர்" (தேவா. 75.1)

*[உகு → உகல் → உகல்(லு)தல் (வே.க. 31.)]*

**உகவல்லி** *ugavalli,* பெ. (n.) ***நாகமல்லி;*** ringworm-root.

*[உகம்[5] + வல்லி.]*

**உகவு** *ugavu,* பெ. (n.) ***நிலையழிவு;*** to be agitated, to wear off, to pass away. (செ.அக.).

*[உகு → உகுவு → உகவு]*

**உகவை**[1] *ugavai,* பெ. (n.) 1. ***மகிழ்ச்சி;*** joy, happiness "உகவையா னெஞ்ச முள்ளுருகி" (திவ் திருவாய். 6,2,9). 2. ***உவப்பு;*** cheer, inspiration. "முகவை யின்மையின் உகவை யின்றி" (புறம். 362-11).

*[உவ → உக → உகவை]*

**உகவை**[2] *ugavai,* பெ. (n.) 1. ***உதவி; நன்மை;*** help, good, favour. "உள்குவார்கட்கு உகவைகள் பலவுஞ் செய்து" (தேவா. 1146). உகவைப்பொன் பார்க்க (S.I.I. iii, 38); see *ugavai-p-pon* (செ.அக.).

*[உவ → உக → உகவை = உவத்தற்குரியது]*

**உகவைப்பொன்** *ugavai-p-pon,* பெ. (n.) ***காசாயவகை*** (S.I.I. v.ii, 290); a tax in money. (செ.அக.).

*[உவ → உக → உகவை + பொன்.]*

**உகள்-தல்** *ugal-,* 5. செ.கு.வி. (v.i.) ***உகளு-தல்*** பார்க்க. see *ugalu.*

**உகளம்**[1] *ugalam,* பெ. (n.) ***விருப்பம்*** (அக.நி.); desire, delight.

**உகளம்**[2] *ugalam,* பெ. (n.) 1. ***இணை;*** pair, brace, couple. "உகளமு முணரின்" (கோயிற்பு. பதஞ். 65). 2. ***இரண்டு;*** two.

**உகளி**[1]**-த்தல்** *ugali-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***குதித்தல்;*** to leap. "பேய்பிண மிக்கன வென்றுகளித் தனவே" (பாரத. பதினாறாம். 51). 2. ***மகிழ்ச்சி மிகுதல்;*** to delight, exult. "மேலைத் தொண்டு களித்து" (திவ். திருவாய். 10,8,7). 3. ***பாய்தல்;*** to jump.

*[உகுதல் = மேலெழும்புதல். உகு → உகள் → உகளு → உகளி-த்தல்.]*

**உகளி**[2] *ugali-,* பெ. (n.) ***பிசின்*** (நாமதீப.); gum.

*[உகள் → உகளி. மரப்பிசின் தானாகப் பொங்கி மேல் வருத லால் பெற்ற பெயர்.]*

**உகளு**[1]**-தல்** *ugalu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***தாவுதல்;*** to leap, bound, frisk. "இரலை...யுகள" (குறுந். 65). 2. ***ஓடித்திரிதல்;*** to run about. "பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள" (மதுரை. 74). 3. ***பாய்தல்;*** to leap over, bound. 4. ***கடத்தல்;*** to pass over (ஆ.அக.). 5. ***நழுவி விழுதல்;*** to slip down, fall off. "ஒளிமேகலை யுகளும்" (திருக்கோ. 350). 6. ***பிறழ்தல்;*** to turn upside down. "பொருகய லுகளிப் பாய" (சீவக. 1854). 7. ***வாயா லெடுத்தல்;*** to vomit.

*Mar* ugal

*[உகு → உகுள் → உகள் → உகளு. உகுதல் = மேலெழும்புதல், ததும்புதல், பொங்கி எழுந்து சிதறுதல்.]*

**உகளு**[2]**-தல்** *ugalu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***உயர்தல்;*** to go up. 2. ***பெருகுதல்; மிகுதல்;*** to become excess, grow more.

க. உக்கலி.

*[உகு → உகுள் → உகள் → உகளு]*

**உகா** *ugā,* பெ. (n.) 1. ***ஓமைமரம்*** (பிங்.); tooth-brush tree. 2. ***உவா மரம்*** (மலை.); sand paper tree.

ம. உகமரம்.

*[உவா → உகா]*



உகாமரம்

**உகாக்காய்** *ugā-k-kāy,* பெ. (n.) ***உகா மரத்தின் காய்;*** ooga fruit. (சா.அக.).

*[உகா + காய்.]*

**உகாதி** *ugādi,* பெ. (n.) ***ஆண்டின் தொடக்கம்;*** beginning of the year.

க., தெ. உகாதி.

*[உகம்[4] + ஆதி.]*

**உகாப்பட்டை** *ugā-p-pattai,* பெ. (n.) ***உகா மரத்தின் பட்டை;*** bark of the tree, ugā (சா.அக.).

*[உகா + பட்டை.]*

**உகாமை** *ugāmai,* பெ. (n.) 1. ***சிதறாமை;*** not spilled. 2. ***வெளியிடாமை;*** not let out, not spoken.

*[உகு + ஆ + மை.]*

**உகாய்** *ugāy,* பெ. (n.) ***ஒருவகை மரம்;*** a kind of tree. "உலறுதலை உகாஅய்" (நற். 66).

*[உவா → உகா → உகாய். உவப்பு = உயரம்.]*

**உகாய்க்குடிகிழார்** *ugāy-k-kuḍikiḻār*, பெ. (n.) ***கடைக்கழ கப் புலவர்களுள் ஒருவர்;*** poet of the Sangam period.

*[உகாய்க்குடி + கிழார். உகாய்க் குடி என்னும் ஊரினர். உகாய்க் குடி என்பது உகாய் (ஓமை) மரத்தினால் பெற்ற பெயர்.]*

**உகாயவாகை** *ugāyavāgai*, பெ. (n.) ***ஒருவகை வாகை மரம்;*** a kind of sirissa tree. (சா.அக.).

*[உகாய் + வாகை → உகாய வாகை.]*

**உகாரம்** *ugāram*, பெ. (n.) 1. ***உகரக்குறில் எழுத்து;*** short vowel 'u'. 2. ***இரக்கம் சுட்டிய இடைச்சொல்;*** interjection denoting compassion. 3. ***இளகும் உப்பு; கல்லுப்பு;*** black salt.

*[உ + காரம்.]*

**உகாரவுப்பு** *ugāra-v-uppu*, பெ. (n.) ***கல்லுப்பு*** (மூ.அ.); black salt, impure chloride of sodium.

*[உகாரம் + உப்பு.]*

**உகிர்** *ugir*, பெ. (n.) ***நகம்;*** finger or toe nail, talon, claw. "உகிர்த்தொடர் கழன்று" (மணிமே. 20:59).

ம. உகிர்; கை. கோரு; க. உகுரு; கோத. ஊர். ஊர்கன்; துட. ஊர்; குட., நா., து. உகுரு; தெ. கோரு. கொலா. கோர்; பர். கோரி, கூ. கோர; குவி. கோரு; கட. கேரெ; குரு. ஒரோக்; மால். ஓர்கு; பிரா. கோர் (விரல்); பட. உகில்.

*[உகு → உகுல் → உகுர் → உகிர். உகுதல் = மேலெழும்புதல், முளைத்தல்.]*

**உகிர்ச்சுற்று** *ugir-c-cuṟṟu*, பெ. (n.) ***நகச்சுற்று;*** whitlow. "உகிர்ச்சுற்றில் உலக்கை விழுந்தாற்போல்" (பழ.). (செ.அக.).

*[உகிர் + சுற்று.]*

**உகிர்நிலைப்பசாசம்** *ugir-nilai-p-pašāšam*, பெ. (n.) ***பிண்டிக்கை முப்பத்து மூன்றனுள் ஒன்று. அது சுட்டு விரலும் பெருவிரலும் உகிர்நுனை கவ்வி நிற்பது.*** (சிலப். 3,18. உரை); variety of gesticulation in which the tip of the nail in the thumb is brought into close with that of the fore-finger. (செ.அக.).

*[உகிர் + நிலை + பசாசம். பசைதல் = விரும்புதல், ஒட்டுதல், சேர்தல், பசை → பசையம் → பசாயம் → பசாசம்.]*

**உகிர்ப்புறவன்** *ugir-p-puṟavaṉ*, பெ. (n.) ***நகத்தின் மேல் அணியும் அணிவகை*** (S.I.I. ii. 16); jewel for nails. (செ.அக.).

*[உகிர் + புறவன். புறம் → புறவன். புறம் = மேலே.]*

**உகிரம்** *ugiram*, பெ. (n.) ***இலாமிச்சை;*** cuscus-grass.

*[உகிர → உகிரம்.]*

**உகிலாதி** *ugilādi*, பெ. (n.) ***புளி;*** tamarind. (சா.அக.)

*[எகின் + ஆதி - எகினாதி → எகிலாதி → உகிலாதி.]*

**உகின்** *ugiṉ*, பெ. (n.) ***எகின்; புளிமா*** (மலை.); Indian hogplum.

*[எகின் → உகின்.]*

**உகு[1]-தல்** *ugu-*, 21. செ.கு.வி. (v.i.) 1. ***உதிர்தல்;*** to shed or part with, as leaves from a tree, to shed, as feathers or hair, to become separated. "போயுகு மிலை கள்" (சி.சி. 1,15). 2. ***சிதறுதல்;*** to be strewed, scattered. "உண்கவுகாமை நன்கு" (ஆசாரக். 21.). 3. ***சிந்துதல்;*** to be spilled; to fail; to pour out. "அங்கணத்து ளுக்க வமிழ்தற்றால்" (குறள். 720). 4. ***சுரத்தல்;*** to trickle gently as water from a spring, or gush forth, as milk from cow's udder (J). 5. ***கெடுதல்;*** to wear off, pass away; to be lost. "இளமையுகா நின்ற மேனியும்" (திருநூற். 45) 6. ***சாதல்;*** to fall down, fig. to die. "உக்கார் தலைபிடித்து" (தேவா. 641,4). 7. ***கரைந்து தேய்தல்;*** to melt, pine, languish, wither. "உக்குவிடு மென்னுயிர்" (கலித். 138). 8. ***மறைதல்;*** to set, as heavenly bodies. "உதயக் குன்றினின்றுகு குன்றில்" (கம்பரா. இராவணனன்றா. 39.). 9. ***பறத்தல்;*** to fly about. "ஊதவுகு தன்மையினொடொல்கியுற நின்றான்" (சீவக. 2014). 10. ***நிலை குலைதல்;*** to be agitated. "நெஞ்சுக... கண்ணீர் மல்க" (தஞ்சைவா. 150). 11. ***உமிழ்தல்;*** to spit.

க., து. உகு. உகி.

*[உளு → உகு → உகு-தல் (வே.க.29.).]*

**உகு[2]-தல்** *ugu-*, 21. செ.கு.வி. (v.i.) 1. ***முளைத்தல்; தோன்றுதல்;*** to sprout, appear. 2. ***சிறத்தல்;*** to be glorified.

*[உ → உகு → உகு-தல். உ = உயர்ச்சி.]*

**உகு[3]-த்தல்** *ugu-*, 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***சிதறச்செய் தல்;*** to let fall, spill, scatter. "ஊஉனன்மையி னுண்ணா துகுத்தென" (மலைபடு. 148). 2. ***உதிர்த்தல்;*** to cast, as leaves, to exuviate, as a bird its feathers. "பழன மஞ்ஞை யுகுத்த பீலி" (புறநா. 13). 3. ***வெளியிடுதல்;*** to emit, pour out. "சீற்றமுகுத்த செந்தீ" (கம்பரா. இராவணனன்றா. 27.). 4. ***சிந்துதல்;*** to shed, as tears. "நெடுங்கணீ ருகுத்து" (சிலப் பதிக. 32). 5. ***சொரிதல்;*** to pour. "மென்பழ னுகுத்த தேனும்" (நைடத.நாட்டுப். 20).

க. உகிசு

*[உமு → உகு → உகு-த்தல். உகு = சிந்து (சிந்துதல்), சிதறுதல், தெளித்தல். உகு > வ. உக்ஷ (வ.மொ.வ. 90.)]*

**உகுணம்** *uguṇam*, பெ. (n.) ***மூட்டுப்பூச்சி;*** bed-bug. (W.)

*[உருள் → உகுள் → உகுணம்.]*

**உகுருவி** *uguruvi*, பெ. (n.) ***சூரைச்செடி;*** jackal jujuba. (சா.அக.).

*[உகு → உகுல் → உகுர் → உகுருவி.]*

**உகுல்** *ugul*, பெ. (n.) 1. ***வீழ்ச்சி;*** fall. 2. ***கேடு;*** ruin.

*[உகு → உகுல்.]*

**உகுவு** *uguvu,* பெ. (n.) 1. ***சிந்துகை;*** spilling. "சோர்ந்துகு வன்ன" (மதுரைக் 415).

*[உகு → உகுவு.]*

**உகுழ்** *ugul* பெ. (n.) ***உகுள்*** பார்க்க; see *ugul.*

*க. உகும்.*

*[உகுள் → உகுழ்.]*

**உகுள்** *ugul,* பெ. (n.) 1. ***சொரிதல்;*** pouring. 2. ***உமிழ்தல்;*** spitting. 3. ***கொப்பளித்தல்;*** to wash the mouth inside.

*க. உகுள்.*

*[உகு → உகுல் → உகுள்.]*

**உகுனை** *ugunai,* பெ. (n.) ***நெற்பயிருக்குரிய நோய் வகை*** (நீலகேசி. 366. உரை); disease affecting paddy (செ.அக.).

*[உகு + நோய் - உகுநோய் → உகுனை.]*

**உகே** *ugē,* பெ. (n.) ***கொண்டாட்டங்களின் போது வெற்றியாகட்டும் என்னும் பொருளில் எழுப்பப்படும் முழக்கம்;*** slogan raised on the occasion of festivals or function of grand celebration. மாதையனுக்கு உகே; மாதேவனுக்கு உகே! (கொங்.வ.).

*க. உகே.*

*[உகை → உகே. உகை = செலுத்துதல், முன்வருதல், மேலோங்கு தல், வெற்றி பெறல்.]*

**உகை[1]-தல்** *ugai-,* 4. செ.கு.வி. (v.i.) ***செல்லுதல்;*** to move, as a boat, to go, as a vehicle, to walk, as an animal. "காமவுததியைக் கரைவிட வுகையு நாவா யானும்" (கல்லா. 19). (செ.அக.).

*[உகு → உகை → உகை-தல் - மேற்செல்லுதல், எழுதல்.]*

**உகை[2]-த்தல்** *ugai-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***செலுத்து தல்;*** to drive as a carriage, to ride, as a horse, to row, as a boat, to discharge, as an arrow "பெருந்தோணி பற்றி யுகைத்தலும்" (திருவாச 30,4). 2. ***எழுப்புதல்;*** to stir up, as dust. "பலபுரவி நீறுகைப்ப" (மதுரைக் 184). 3. ***பதித்தல்;*** to set, as a gem "நீலமொன் றுகைக்கு நிறைந்த கணையாழி" (பணவிடு 97). 4. செ.கு.வி. (v.i.) 1. ***எழுதல்;*** to rise "உகத்தின் முடிவினி லுகைத்த கனைகடல்" (கலிங் 342. புதுப் 11,44). 2. ***உயரவெழும்புதல்;*** to leap, jump up. "கொடித்தடந் தேரினின் றுகைத்துமுன் குதியா" (பாரத நிரைமீ 41).

*க. உகு; GK ago, L ago*

*[உ → உகு → உகை → உகை-த்தல்.]*

**உகை[3]** *ugai,* பெ. (n.) ***உகா;*** tooth-brush tree. (செ.அக.).

*[உகா → உகை.]*

**உகை[4]** *ugai,* பெ. (n.) ***பானை;*** pot

*[உகு → உகை கொட்டிவைக்கப் பயன்படுவது.]*

**உங்கண்** *ungan,* வி.எ. (adv.) ***உவ்விடம்;*** yonder, where the person spoken to is chiefly poetic. "தனயரைக் கண்டிரோ வுங்க ணென்ன" (சேதுபு. அக்கினி. 32).

*[உ + கண் → உக்கண் → உங்கண்.]*

**உங்கரி-த்தல்** *ungari-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உம்மென் றொலித்தல்;*** to utter the exclamatory sound of 'hum' expressive of contempt or displeasure. "காமர் வில்லாளி யாகி யுங்கரித்து" (திருக்காளத்.பு. 6, 39). 2. ***அதட்டு தல்;*** to rebuke authoritatively, hector, threaten. 3. ***உரப்புதல்;*** to whoop, vociferate inarticulately as when driving cattle or in scaring away birds, beasts, or human beings 4. ***உங்காரஞ் செய்தல்;*** to utter 'hum' expressive of menace.

*ம. உங்கு.*

*[உம் + கரி-த்தல். உம் = ஒலிக்குறிப்பு இடைச்சொல். கருத்தல் → கரித்தல் கருத்தல் = செய்தல். உம்கரித்தல் = உம் என்னும் ஓசை எழுப்புதல். விரைவாகச் செலுத்துதல் குறிப்புமாம்.]*

**உங்காரணை** *ungāranai,* பெ. (n.) ***அவுரி;*** indigo. Indigofera tinctoria (சா அக.).

*[உங்காரம் → உங்காரணை.]*

**உங்காரம்** *ungāram,* பெ. (n.) 1. ***அச்சுறுத்தும் ஒலி*** (தொனி). exclamation 'hum' expressive of menace. "உங்காரத்தி னுரப்பு மோதையாள்" (கந்தபு.அக்கினி. 95). 2. ***வண்டின் ஒலி;*** buzzing sound, as that made by bees in flight. "உங்கார மதுகரங்கள்" (பாரத.வசந்த. 3).

*[உம் + காரம் - உங்காரம்.]*

**உங்கு[1]** *ungu,* வி.எ. (adv.) ***உவ்விடம்*** (கந்தபு.உமைவரு. 31), yonder, where the person spoken to is.

*[உ → உங்கு (முன்மைச் சுட்டு).]*

**உங்கு[2]** *ungu,* பெ. (n.) ***முன்னிலையில்; முன்பு;*** in the presence of, in front of.

*[ஊங்கு → உங்கு ஒ.நோ. ஊது → உது.]*

**உங்குணி** *unguni,* பெ. (n.) ***பெருங் கிளிஞ்சில் எனப் படும் நீலநிறக் கடல்மீன்;*** bluish sea-fish.

*[உ → உங்குணி.]*

**உங்கை** *ungai,* இடை (part.) 1. ***உன் தங்கை;*** your sister younger than you "மூக்குங்கையரியுண்டாள்" (கம்பரா. சூர்ப்பண 125). 2. ***உன் தாய்;*** your mother.

*[உன + கை = உஙகை கை ≈ இளையள், மெல்லியள், பெண் ஐ = மென்மை, அழகு. ஐ → கை (மென்மையுடையவள்).]*

**உங்ஙன்[1]** *unnan,* வி.எ. (adv.) 1. ***உவ்வாறு;*** in the way you do 2. ***உவ்விடம்;*** in the place where you are "என் தனயரைக் கண்டீரோ உங்ஙன்" (சேதுபு. அக்கினி 32).

*[ஊங்கு → ஊங்கண் → உங்கண் → உங்கன் → உங்ஙன். (மு.தா. 32)]*

**உங்஦ன்**[2] *unnan,* வி.எ. (adv.) 1. ***அத்தன்மை;*** thus, so, in that way. 2. ***இத்தன்மை;*** thus, so, in this way. 3. ***உத்தன்மை;*** thus, so, this or that (intermediate) way.

*[ஊங்கன் → உங்கன் → உங்கன் → உங்஦ன்[2].]*

**உச்சக்கோள்** *ucca-k-kōḷ,* பெ. (n.) ***உச்ச நிலையடைந்த கோள்;*** planet occupying an exalted position or sign in the zodiac (astrol.). (ஆ.அக.).

*[உச்சம் + கோள்.]*

**உச்சகாரம்** *uccagāram,* பெ. (n.) ***உகரமூர்ந்த சகர எழுத்து, 'சு';*** letter 'cu' being a vowel consonant of the combination 'u' and 'c'. (பாண்டி.அக.).

*[உ + சகாரம்.]*

**உச்சசந்தி** *ucca-sandi,* பெ. (n.) ***உச்சநிலைக் கோள் களின் சந்திப்பு;*** superior conjunction of planets. (Astrol.) (C.G.)

*[உச்சம் → உச்ச + சந்தி.]*

**உச்சட்டம்** *uccaṭṭam,* பெ. (n.) 1. ***நேர்மை;*** straightness. 2. ***இலக்கு;*** mark. (செ.அக.).

*[உச்சம் → உச்சட்டம். அட்டம் = தன்மை சுட்டிய பெயர் ஈறு ]*

**உச்சட்டை** *uccaṭṭai,* பெ. (n.) 1. ***ஒல்லி;*** thinness, slenderness (Loc.). 2. ***ஒஞ்சட்டை*** பார்க்க; see *oñjaṭṭai.*

*[ஒஞ்சட்டை → உஞ்சட்டை → உச்சட்டை]*

**உச்சடம்**[1] *uccaḍam,* பெ. (n.) 1. ***ஓர் புல்;*** a kind of cyprus. 2. ***ஓர்வகை வெள்ளைப் பூண்டு;*** a kind of garlic. 3. ***குன்றிமணி;*** Indian liquorice. 4. ***சரளங்காய்;*** Indian plum. (சா.அக.).

*[ஒருகா ஒள் + சடம் - ஒச்சடம் → உச்சடம்]*

**உச்சடம்**[2] *uccaḍam* பெ. (n.) 1. ***சினம்;*** anger. 2. ***விரைவு;*** speed.

*[உச்சம் → உச்சடம்.]*

**உச்சடை**[1] *uccaḍai,* பெ. (n.) 1. ***நறுமணப்புல்;*** fragrant grass. 2. ***ஒருவகைக் கிழங்கு;*** edible tuber, root edible. 3. ***சிறுநெல்லிச் செடி;*** plant.

க. உச்சடெ

*[உச்சடம் → உச்சடை.]*

**உச்சடை**[2] *uccaḍai,* பெ. (n.) 1 ***ஆகுலம்*** (இடம்பாசாரம்); foppishness. 2. ***வெள்ளுள்ளி;*** garlic. 3. ***வட்டக்கோரை;*** a kind of grass. 4. ***சீற்றம்;*** anger. 5. ***வழக்கம்;*** habit.

*[உசசடம → உச்சடை ]*

**உச்சண்டம்**[1] *uccaṇḍam* பெ. (n) ***கடுமையான தீவிர மானது;*** ferocious. இது உச்சண்ட மாகாளி கோவில் (உ.வ ).

க. உச்சண்ட

*[உச்சி → உச்சம் → உச்சண்டம்.]*

**உச்சத்தலம்** *ucca-t-talam,* பெ. (n.) ***உச்சி;*** pate, crown of head; top, summit. 'உச்சத் தலத்திடை நிற்ப தபானன்' (பிங்.).

*[உச்சம் + தலம்.]*

**உச்சத்தாவு** *ucca-t-tāvu,* பெ. (n.) ***கோளின்*** (கிரகத்தின்) ***உயர்நிலை;*** exalted position of a planet.

*[உச்சம் + தாவு.]*

**உச்சத்தானம்** *ucca-t-tāṉam* பெ. (n.) ***உச்சக்கோள்*** பார்க்க; see *üccakkōḷ.*

*[உச்சம் + தானம்.]*

**உச்சத்திசை** *ucca-t-tišai,* பெ. (n.) ***நற்பேற்றுநிலை*** (நல்லாகூழ்நிலை); prosperous period; the highest point of success; good fortune.

*[உச்சம் + திசை.]*

**உச்சதசை** *ucca-dašai,* பெ. (n.) ***உச்சத்திசை*** பார்க்க; see *ucca-t-tisai.*

*[உச்சம் + தசை.]*

**உச்சதரு** *ucca-taru* பெ. (n.) ***தென்னை*** (பச்.மூ.); coconut tree.

*[உச்சம் → உச்ச + தரு. உச்சம் = உயரம். உச்சதரு = உயரமான மரம்.]*

**உச்சந்தம்** *uccandam,* பெ. (n.) 1. ***விலையுயர்வு;*** being at the highest price in the market. 2. ***தணிவு;*** decline, after the height or crisis is past. 3. ***அதிகப்படுதல்;*** being increased. (ஆ.அக.)

*[உச்சம் → உச்சந்தம் ]*

**உச்சந்தமா-தல்** *uccandamā-,* 6. செ.கு.வி. (v.i.) ***தணி தல்;*** to be past the highest point, to be lessening, as rain; to become mitigated, as disease(J.).

*[உச்சம் + அந்தம் + ஆ-தல். அந்தம் சொல்லாக்க ஈறு.]*

**உச்சந்தலம்** *uccandalam,* பெ. (n.) ***உச்சந்தலை*** பார்க்க; see *uccantalai* (சா.அக.).

**உச்சந்தலை** *uccantalai,* பெ. (n.) 1. ***தலையின் உச்சி*** (ஆசாரக் 6); crown of head; pate. 2. ***நடுத்தலை;*** the top of the head; the point on the surface of the skull at the junction of the coronal and saggital sutures-Bregma. (சா.அக ).

ம. உச்சதல

*[உச்சம் + தலை.]*

**உச்சநிலைநாள்** *ucca-nilai-nāḷ* பெ. (n.) ***மாழ்கு*** (மிருகசீரிடம்), ***நெய்ம்மீன்*** (சித்திரை), ***பறவை*** (அவிட்டம்) ***என்ற மூன்று நாண்மீன்கள்;*** three stars Mirugacīriḍam, Cittirai, Aviṭṭam.

*[உச்சம் + நிலை + நாள்.]*

**உச்சம்**[1] *uccam,* பெ. (n.) 1. ***உயரம்*** (திவா.); height, elevation, altitude 2 ***உச்சந்தலை;*** extreme top, overhead. 3. ***தலைக்கு நேரான வான்முகடு;*** zenith, meridian, position overhead. "வெங்கதி ருச்சமாம் பொழுது" (காஞ்சிப்பு. பன்னிரு. 341) 4 ***சிறப்பு;*** excellence, superiority. "**உச்ச** மாணிக்கத்தாலே" (இராமநா. பாலகா. 17) 5. ***வல்லிசை*** (திவா.); treble. 6. ***கோள் நிலையுளொன்று*** (விதான. நட்பா. 21); exalted position of a planet one of five kiraga-nilai. 7. ***அறுதியளவு;*** extreme limit. தோணி உச்சவோட்டு ஒடிற்று 8 ***நுனி;*** edge. 9. ***முனை;*** brink. 10. ***நண்பகல்;*** noon, midday. 11. ***உயர்வு;*** supremacy

ம. உச்சம்; க. உச்ச.; *Skt* ucca

*[உ → உச்சி → உச்சம்.]*

**உச்சம்**[2] *uccam,* பெ. (n.) 1. ***எண்வகைப் பாடற் பயன்களுள் ஒன்று.*** (சிலப்.16 உரை); one of eight pādar-payan; effect of music. 2. ***புணர்ச்சி வகையுள் ஒன்று*** (கொக்கோ. 3,5); mode of sexual union. (செ.அக.).

*[உச்சி → உச்சம்.]*

**உச்சம்போது** *uccam-pōdu,* பெ. (n.) ***நடுப்பகல்;*** lit. time when the sun is in meridian, noon, midday. "**உச்சம்** போதே யூரூர் திரிய" (தேவா. 298,9.).

*[உச்சம் + (பொழுது) போது.]*

**உச்சம்பொழ்து** *uccam-pōḻdu,* பெ. (n.) ***உச்சம்போது*** பார்க்க. (S.I.I. iii 3.); see *uccampōdu.*

**உச்சயம்** *uccayam,* பெ. (n.) 1. ***குவியல்;*** heap. 2. ***வாழைக்காய்;*** unripe plantain fruit.

*[உச்சம் → உச்சயம்.]*

**உச்சயினி** *uccayiṉi,* பெ. (n.) ***ஒரு நகரம்.*** (காஞ்சிப்பு. தீர்த். 75); ancient city of Ujjain, formerly the capital of king Vikramāditya.

*[உஞ்சை → உச்சயினி.]*

**உச்சரம்** *uccaram,* பெ. (n.) ***உட்பருப்பு சிறியதாயும் வெளி ஓடு பெரிதாகவும் உள்ள தேங்காய்;*** coconut with a thick shell and thin kernal.

ம. உச்சரம்.

*[உ → உச்சு → உச்சரம்.]*

**உச்சராசி** *uccarāsi,* பெ. (n.) 1. ***கோள் உச்சத்திலிருக்கப் பெற்ற ஓரை*** (இராசி); (Astrol.) exalted sign of a planet. 2. ***ஆகூழ் ஓரை*** (அதிட்ட ராசி) (C.G.); fortunate natal sign.

*[உச்சம் + ராசி. Skt. rāsi > த. ராசி. **உச்சவோரை** பார்க்க see ucca-vōrai.]*

**உச்சரி-த்தல்** *uccari-,* 4. செகுவி (v.i.) 1. ***இதழ் முதலியவற்றின் தொழில்களால் எழுத்துகளைப் பிறப்பித்தல்; பலுக்குதல்;*** to pronounce, enunciate, articulate with the organs of speech 2. ***ஓதுதல்;*** worship; pray "அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க" (சி.சி. 9, 1).

*[உத்து → உச்சு → உச்சரி. ஒ.நோ. நச்சு → நச்சரி. உத்து = நாவைப் பொருத்திப் பேசு.]*

**உச்சரிப்பு** *uccarippu,* பெ. (n.) 1. ***உச்சரிக்கை; பலுக்கல்;*** pronunciation 2. ***எழுத்தினோசை*** (ஆ.அக.); sound of a letter.

க. உச்சார.

*[உத்து → உச்சு → உச்சரி → உச்சரிப்பு.]*

**உச்சல்** *uccal,* பெ. (n.) ***கரிய மச்சம்;*** black mole. (சேரநா.).

ம. உச்சல்.

*[உச்சு → உச்சல்.]*

**உச்சவம்** *uccavam,* பெ. (n.) 1. ***விழா*** (திவா.); festival, festivity. 2. ***செல்வம்;*** prosperity. "மாவுச்சவ மாபத்தும்" (ஞானவா. உபசா 12).

க. உச்சவ; *Skt.* utsava

*[உத்தம் = மேலெழுதல், மனம் பொங்குதல், மகிழ்ச்சியுண்டாதல். உத்தம் → உத்தவம் → உச்சவம். **உத்தவம்** பார்க்க; see uttavam.]*

**உச்சவீடு** *ucca-vīḍu,* பெ. (n.) ***உதயத்துக்கேழாமிடம்;*** exalted sign of a planet. (சா.அக.).

*[உச்சம் → வீடு.]*

**உச்சன்**[1] *uccaṉ,* பெ. (n.) ***விளையாட்டில், குறிவைத் தெறியும் கல், விதை முதலியவற்றுள் ஒன்று;*** cowrie, arecanut or tamarind seed, used for pitching in games. (J.). (செ.அக.).

*[ஒச்சு → உச்சு → உச்சன்.]*

**உச்சன்**[2] *uccaṉ,* பெ. (n.) 1. ***ஓரைச் சக்கரத்தில் தன் உச்சநிலையில் நிற்கும் கோள்*** (பஞ்.); planet in its exalted sign of the zodiac. 2. ***நெட்டையானவன்;*** tall man. (சா.அக.).

ம. உச்சன்.

*[உ → உச்சன்.]*

**உச்சன்**[3] *uccaṉ,* பெ. (n.) ***பித்தன்;*** madman.

க. உச்சு; தெ. உச்சு.

*[உச்சு → உச்சன்.]*

**உச்சனிமாகாளி** *uccaṉi-māgāḷi,* பெ. (n.) 1. ***உச்சயனி நகரத்திலுள்ள காளிதேவி;*** guardian goddess of the ancient city of Ujjain. 2. ***ஒரு சிற்றூர்த்*** (கிராம) ***தேவதை;*** village goddess. (Tinn). (செ.அக.).

*[உச்சயினி → உச்சனி + மாகாளி.]*

**உச்சாணி** *uccāṇi*, பெ. (n) ***எல்லாவற்றினும் உயரமானது;*** highest point, top, summit. உச்சாணிக் கொம்பிலிருந்து விழுந்தான், உச்சாணிக்கிளை. (உ. வ.)

*[உச்சி → உச்சாணி.]*

**உச்சாயம்** *uccāyam*, பெ. (n.) 1. ***உயர்வு;*** stateliness, loftiness, dignity. "உச்சாயமாக முகமன்கள் உரை செய்து" (நல். பாரத. ஆசிரமவாச. வனம்புகு 163) 2. ***மனவெழுச்சி; ஆர்வம்; ஊக்கம்;*** enthusiasm.

*[உ → உத்தம் → உத்தாயம் → உச்சாயம். **உத்தாயம்** பார்க்க, see uttāyam.]*

**உச்சாரணை** *uccāraṇai*, பெ. (n) ***உச்சரிப்பு*** பார்க்க (வீரசோ. யாப். 35.); see *uccarippu.*

***க. உச்சரண, உச்சாரண.***

*[உ → உந்து → உத்து → உத்தாரம் (குரலையுயர்த்தி உரத்துச் சொல்லுதல்) → உச்சாரம் → உச்சாரணம் → உச்சாரணை.]*

**உச்சாரம்**[1] *uccāram*, பெ. (n.) ***உச்சரிப்பு*** பார்க்க (சி.சி. 4.35 மறைஞா); see *uccarippu.*

***க. உச்சார***

*[உ → உந்து → உத்து (குரலை உயர்த்து) உத்தாரம் → உச்சாரம் (உரத்துச் சொல்லுதல்).]*

**உச்சாரம்**[2] *uccāram*, பெ. (n.) 1. ***உயர்ச்சி*** (யாழ்.அக.); height. 2. ***மேன்மை; வளர்ச்சி;*** development.

*[உ → உந்து → உத்து → உத்தம் (உயர்வு) → உத்தாரம் → உச்சாரம்.]*

**உச்சி**[1] *ucci*, பெ. (n.) 1. ***முகடு; உயர்வு;*** height, summit, meridian. 2. ***தலை;*** head. 3. ***நடுப்பகல்*** (பிங்.); midday, high noon. உச்சிப்பொழுது ஆகிவிட்டது (உ.வ.). 4. ***ஆண்மயிர்;*** hair of male. 5. ***எல்லை;*** limit, border, boundary. 6. ***குடுமி;*** tuft of hairs. 7. ***தலைக்கு நேரிடம்;*** zenith.

**க., ம., தெ., உச்சி; து. உச்ச.**

***[உ → உத்து → உச்சு → உச்சி.]***

**உச்சி**[2] *ucci*, பெ. (n.) ***நாய்*** (பிங்.); dog. (Onom. imit. of beckoning sound 'cu'.).

***[ஊசு = ஒலிக்குறிப்புச் சொல். ஊசு → ஊச்சு → உச்சு → உச்சி - நாயை விளிக்கும் ஒலிக்குறிப்புச் சொல் நாயைக் குறித்தது.]***

**உச்சிக்கடன்** *ucci-k-kaḍaṉ*, பெ. (n.) ***நண்பகல் கடமை*** (கூர்மபு. நித்தியகண். 15); midday worship or prayers.

*[உச்சி + கடன்.]*

**உச்சிக்கரண்டி** *ucci-k-karaṇḍi*, பெ. (n.) ***குழந்தைகளுக்கு உச்சியில் எண்ணெய் விடுஞ் சிறுகரண்டி;*** small spoon that is used when pouring oil on the head of a baby.

***[உச்சி + கரண்டி. உச்சியில் எண்ணெய் தேய்த்தற்குரிய சிற்றளவுள்ள கரண்டி.]***

**உச்சிக்கரண்டியளவு** *ucci-k-karaṇḍi-y-aḷavu*, பெ. (n.) ***தேயிலைக் கரண்டியளவு;*** tea spoonful.

*[உச்சி + கரண்டி + அளவு]*

**உச்சிக்கலயம்** *ucci-k-kalayam*, பெ. (n) 1. ***அடுக்கின் மேலிருக்கும் மட்பானை;*** pot which is on top (ஆ.அக.) 2. ***சிறிய மட்பானை;*** small pot.

*[உசசி + கலயம்]*

**உச்சிக்கவாஅன்** *ucci-k-kavāaṉ*, பெ (n.) ***குன்றத்துச்சியின் பக்கம்;*** side of a peak. "வறன் பொருந்து குன்றத்து உச்சிக்கவாஅன்" (நற். 92-4).

*[உச்சி + கவாஅன்]*

**உச்சிக்காலம்** *ucci-k-kālam*, பெ. (n.) 1. ***நண்பகல்;*** midday. 2. ***கோயிலின் நண்பகல்*** (மத்தியான) ***பூசை;*** noon service in the temple.

*[உச்சி + காலம்]*

**உச்சிகாய்-தல்** *uccikāy-*, 2. செ.கு.வி. (v.i.) ***அறிவிழத்தல்;*** to lose sense.

*[உச்சி + காய்.]*

**உச்சிகாய்ந்தவன்** *ucci-kāyndavaṉ*, பெ (n.) ***அறிவிழந்தவன்;*** fool. அவன் ஒரு உச்சி காய்ந்தவன்.

*[உச்சி + காயந்தவன்]*

**உச்சிக்கிழான்** *ucci-k-kiḻāṉ*, பெ. (n.) ***கதிரவன்;*** sun, lit. lord of the zenith. "உச்சிக்கிழான் கோட்டம்" (சிலப். 9.11). (செ.அக.).

*[உச்சி + கிழான்.]*

**உச்சிக்குடுமி** *ucci-k-kuḍumi*, பெ. (n.) ***ஆடவரின் தலையில் சுற்றிலும் மழித்து உச்சந்தலையில் மட்டும் மழிக்காமல் விடப்படும் மயிர்க் கற்றை;*** crest, hair-tuft on the centre of the head.

ம. உச்சிகுடும்மி.

*[உச்சி + குடுமி. கொடி (மேற்பகுதி உயர்ந்திருப்பது) → கொடிமி → குடுமி.]*

**உச்சிக்குருடன்** *ucci-k-kuruḍaṉ*, பெ. (n.) ***குள்ளன்;*** dwarf.

ம. உச்சிக்குருடன்.

*[உச்சி + குருடன்.]*

**உச்சிக்குழி** *ucci-k-kuḻi*, பெ. (n.) ***துளை; குழந்தையின் தலையுச்சிப் பள்ளம்*** (ஆ.அக.); membranous dent or depression in an infant's head, fontanelle.

*[உச்சி + குழி.]*

**உச்சிக்குழிகை** *ucci-k-kuḻigai*, பெ. (n.) ***உச்சி விழுகை*** பார்க்க; see *ucci-viḻugai.* (சா.அக.).

*[உச்சி + குழிகை.]*

**உச்சிக்கொடி** *ucci-k-kodi,* பெ (n.) ***புல்லுருவி;*** parasitic plant. (சா அக )

*[உச்சி + கொடி ]*



*உச்சிக் கொண்டை*

**உச்சிக்கொண்டை** *ucci-k-kondai,* பெ. (n.) 1 ***உச்சிமுடி;*** tuft or braid of hairs on the crown of one's head. 2. ***சேவல் முதலியவற்றின் தலைச்சூட்டு;*** cockscomb; crest as of a cock. (ஆ.அக.).

*[உச்சி + கொண்டை.]*

**உச்சிக்கொம்பன்** *ucci-k-komban,* பெ. (n.) 1. ***உச்சியில் நிமிர்ந்த கொம்புள்ள மாடு;*** bull or cow that has erect horns near together. 2. ***கல்யானை*** (காண்டா விலங்கு); rhinoceros, from its having one straight horn.

*[உச்சி + கொம்பன்*

உச்சிக்கொம்பன் எனபதற்குக் கல்யானை (காண்டா மிருகம்) என மற்றொரு பொருளைப் பிற அகரமுதலிகள் கூறியிருப்பது பொருத்தமாக இல்லை. ஏனெனில் கல்யானைக்குக் கொம்பு மூக்கின் மேல் உள்ளது. உச்சி என்னும் சொல் தலை உச்சி யையே சிறப்பாகக் குறிப்பது. சிந்துவெளி முத்திரையில் மாட்டு வகையைச் சார்ந்த உச்சிக் கொம்பன் *(unicorn)* பொறிக் கப்பட்டுள்ளதை ஒப்புநோக்குக. சா. அகர முதலியில் நிமிர்ந்த கொம்புள்ள மாடு எனப்பொருள் கூறப்பட்டிருப்பது பொருத்த மாகத் தெரிகிறது.*]*



**உச்சிக்கொம்பன்**

**உச்சிகுளிர்-தல்** *ucci-kulir-,* 2 செ.கு.வி. (v.i.) ***மகிழ்வ டைதல்;*** lit cooling of the head, fig. to feel happy, to be highly pleased, delighted. 'அப்பா என்றால் உச்சி குளிருமோ' (ஈடு. 4,3. ப்ர ஜீ). (செ.அக.).

**உச்சிச்சமயம்** *ucci-c-camayam,* பெ. (n.) ***நண்பகல்;*** midday. (ஆ.அக.).

*[உச்சி + சமயம் ]*

**உச்சிச்சுட்டி** *ucci-c-cutti,* பெ. (n.) ***குழந்தைகளின் தலையணி வகை;*** ornament for the forehead of children (செ.அக.).

*[உச்சி + சுட்டி.]*

**உச்சிச்செடி** *ucci-c-cedi,* பெ. (n.) ***புல்லுருவி;*** Indian mistletoe (செ.அக.).

*[உச்சி + செடி ]*

**உச்சிச்செடில்** *ucci-c-cedil,* பெ. (n.) ***செடிலாட்டம்;*** hook - swinging (செ.அக ).

*[உச்சி + செடில்.]*

**உச்சிசந்தி** *ucci-candi,* பெ. (n.) ***உச்சிக்காலப் பூசை;*** noon service in the temple. (செ.அக.).

*[உச்சி + சந்தி.]*

**உச்சிட்டம்** *uccittam,* பெ. (n.) 1. ***எச்சில் பண்டம்*** (பிங்.); unconsumed food remaining after one had eaten, regarded as being unclean and unfit to be eaten by another. 2. ***மிச்சில்;*** that which is left, refuse. "உச்சிட்டம் மென் றுலகினை யுண்கிலார்" (கந்தபு. வீரபத்.41).

*[எச்சில் → உச்சில் → உச்சிட்டம்.]*

**உச்சித்தம்** *uccittam,* பெ. (n.) ***மகரக்கை*** (சிலப். 3,18, உரை); variety of gesture with both hands.

*[ஒருகா. உத்து → உத்தித்தம் → உச்சித்தம்.]*

**உச்சித்திலகம்** *ucci-t-tilagam,* பெ. (n.) ***செம்மலருள்ள ஒருவகைப் பூஞ்செடி;*** flowering shrub with red blosssoms. "உதிக்கின்ற செங்கதிருச்சித் திலகம்... என்ன விதிக்கின்ற மேனி" (அபிராமி.1).

*[உச்சி + திலகம்.]*

**உச்சிதபண்டம்** *uccida-pandam,* பெ. (n.) ***தகுதியாகச் செய்த பண்டம்;*** delicious thing; preparation high pleasing to the taste. (சா.அக.).

*[உத்து → உத்தித → உச்சித + பண்டம். உத்து = பொருந்து. உத்தித = பொருந்திய, ஏற்ற, தகுந்த.]*

**உச்சிதம்**[1] *uccidam,* பெ. (n.) 1. ***உயர்ச்சி;*** height. 2. ***அழகு*** (சா.அக.); beauty. 3. ***அரியது*** (ஆ.அக.); rare thing. 4. ***கொடை;*** gift.

*[உத்து → உத்திதம் → உச்சிதம் = பொருத்தமானது, தக்கது, சிறந்தது, அரியது.]*

**உச்சிதம்**[2] *uccidam,* பெ. (n.) ***நெருஞ்சி*** பார்க்க; see *neruñji.* (செ.அக.).

*[உச்சி → உச்சிதம்.]*

**உச்சிப்படு-தல்** *ucci-p-paḍu-*, 20. செ.கு.வி. (v.i.) ***உச்சமாதல்;*** to ascend as of morning sun. "வெள்ளி உச்சிப்பட்டது, வியாழன் அஸ்தமித்தது" (திவ். திருப்பா. 13 வ்யா.). (செ.அக.).

*[உச்சி + படு.]*

**உச்சிப்பள்ளி** *ucci-p-paḷḷi*, பெ. (n.) ***பதினான்காம்*** (சதுர்த்தசி) ***நாள்தோறும் பள்ளிக்கூடத்தில் விடப் பெறும் பகல் விடுமுறை;*** noonday dismissal of school on the day preceding the new moon or the full moon. (செ.அக.).

*[உச்சி + பள்ளி. உச்சிநேரம் (நண்பகல்) வரை மட்டும் நடை பெறும் பள்ளி.]*

**உச்சிப்பிளவை** *ucci-p-piḷavai*, பெ. (n.) ***உச்சந்தலையிலுண்டாகும் புண்*** (மூ.அ.); ulcerous scab or sore on the crown of the head. (செ.அக.).

*[உச்சி + பிளவை.]*

**உச்சிப்பிறை** *ucci-p-piṟai*, பெ. (n.) ***பரவ மகளிரணியுந் தலையணிவகை;*** crescent shaped head ornament, a common ornament among women of the Parava Caste. (செ.அக.).

*[உச்சி + பிறை.]*

மணவிழாவின் போது பரதவ மகளிர் பிறை வடிவில் தலை யணி ஒப்பனை செய்து கொள்வர் சிந்துவெளி முத்திரைகளில் காணப்படும் மகளிர் தலையணியை இது ஒத்துள்ளது

**உச்சிப்பின்னல்** *ucci-p-piṉṉal*, பெ. (n.) ***உச்சிச்சடை;*** plait of the crown. (ஆ.அக.).

*[உச்சி + பின்னல்.]*

**உச்சிப்பூ** *ucci-p-pū*, பெ. (n.) ***குழந்தைகளின் தலையணி வகை;*** ornament for a child's forehead.

ம. உச்சிப்பூவு

*[உச்சி + பூ ]*

**உச்சிப்பொழுது** *ucci-p-poḻudu*, பெ. (n.) ***நடுப்பகல்;*** noon, midday. (செ.அக.).

*[உச்சி + பொழுது ]*

**உச்சிமல்லிகை** *uccimalligai*, பெ. (n.) ***ஊசி மல்லிகை*** பார்க்க; see *ūsimalligai*.

ம. உச்சிமலரு.

*[ஊசி → உச்சி + மல்லிகை.]*

**உச்சிமலை** *uccimalai*, பெ. (n.) 1. ***மலையுச்சி;*** hill top. 2. ***செங்குத்தான குன்று;*** steep hill (செ.அக.).

*[உச்சி + மலை ]*

**உச்சிமீன்** *uccimīṉ*, பெ. (n.) ***புள்ளிமீன்;*** spotted butter fish.

து. உச்சிமீன்.

*[உச்சி + மீன்.]*

**உச்சிமுகடு** *uccimugaḍu*, பெ. (n.) ***கூரையின் இரு பக்கமும் சேருகின்ற மேலிடம்;*** ridge of roof. (செ.அக.).

*[உச்சி + முகடு.]*

**உச்சிமுகரல்** *uccimugaral*, பெ. (n.) ***குழந்தையினுச்சியை அன்பு மேலீட்டினால் முகருதல்;*** smelling the crown of the head of a child through affection. (சா.அக.).

*[உச்சி + முகரல்.]*

**உச்சிமூலம்** *uccimūlam*, பெ. (n.) ***உச்சிமேடு*** பார்க்க; see *uccimēḍu*. "தானவனாகி நின்ற தவமது உச்சிமூலம்" (திருவள்ளு. சற்பம்).

*[உச்சி + மூலம் ]*

**உச்சிமேடு** *uccimēḍu*, பெ. (n.) ***தலையின் நடுவிடம்;*** central region of the head.

*[உச்சி + மேடு முகடு → மேடு ]*

**உச்சிமோ-த்தல்** *uccimō-*, 3. செ.குன்றாவி. (v.t.) ***உச்சந்தலையை மோந்து அன்பு பாராட்டுதல்;*** smell the crown of the head especially of a child, from affection. "தனிப் புதல்வன்றனை.. உச்சி மோந்து" (கோயிற்பு. வியாக்கிர. 2).

*[உச்சி + (முகர்தல்) மோ-த்தல்.]*

**உச்சிமோடு** *ucci-mōḍu*, பெ. (n.) ***உச்சி முகடு*** பார்க்க; see *ucci-mugaḍu*.

*[உச்சி → (முகடு) மோடு. முகடு → மோடு → மேடு ]*

**உச்சியணி** *ucci-y-aṇi*, பெ. (n.) ***தலைச் சீராவில் உள்ள அணித் தொங்கல்;*** pendant of a head-gear. (pond.)

*[உச்சி + அணி.]*

**உச்சியாட்டம்** *ucci-y-āṭṭam*, பெ. (n.) ***விளையாட்டு வகை;*** a kind of four-a-side game.

ம. உச்சிள்ளியாட்டம்.

*[உச்சி + ஆட்டம்.]*

**உச்சியார்** *ucci-y-ār*, பெ. (n.) ***தேவர்;*** celestial beings. "உச்சியார்க் கிறைவனாயுலக மெலாங்காத் தளிக்கும்" (யாப்.வி. 86. பக். 315).

*[உச்சி + ஆர்.]*

**உச்சியிடிக்கை** *ucci-y-iḍikkai*, பெ. (n.) ***குழந்தையினுச்சந்தலை தாய்மார்பிற் படுதலால் அவட்குண்டாகும் நோய்;*** disease of the nursing mother caused by her nipple being touched by the crown of her suckling baby's head (செ.அக.).

*[உச்சி + இடிக்கை. இடி → இடிக்கை.]*

**உச்சியெடு-த்தல்** *ucci-y-eḍu-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***வகிர் எடுத்தல்;*** part the locks of hair in two with a cleavage line from the crown to the forehead (J.).

2. ***உச்சி முடியை மென்மையாகப் பற்றியிழுத்தல்;*** slow pull of few hairs in the crown to relieve ailment.

*[உச்சி + எடு-த்தல்.]*

உச்சிமுடியை வகிர் எடுத்தலை உச்சியெடுத்தல் என்பது பொதுவழக்கு. உள்நாக்கு அல்லது சிறு நாக்கு மேலெடுப்பதற்காக மிளகுப் பொடியை உள்நாக்கில் தடவித் தலையின் உச்சியிலுள்ள சில முடிகளை மென்மையாக ஓரிருமுறை பற்றியிழுப்பது நாட்டுப்புறங்களில் நிலவும் பழங்காலக் கைமருத்துவ முறைகளுள் ஒன்று

**உச்சியெண்ணெய்** *ucci-y-enney,* பெ. (n.) ***குழந்தைகளின் உச்சந்தலையிலிடும் எண்ணெய்;*** oil smeared on the crown of the head especially of infants. (செ.அக.).

ம. உச்செண்ணெய்

*[உச்சி + எண்ணெய்.]*

**உச்சில்** *uccil,* பெ. (n.) ***ஒரு வகைச் செடி;*** a kind of plant,

ம. உச்செவி, ஒச்செவி.

**உச்சிவிடுதி** *ucci-vidudi,* பெ. (n) 1. ***உச்சிவீடு*** பார்க்க; see *ucci vīdu.* 2. ***தொழிலாளிகள், பள்ளிச் சிறுவர்களின் நண்பகல்*** (மத்தியான) ***விடுவு;*** midday recess for labourers, or for children at school. 3. ***நண்பகல் நேரத்தில் மழை விடுகை;*** cessation of rain at noon. (செ.அக.)

*[உச்சி + விடுதி உச்சி = நண்பகல்.]*

**உச்சிவிழுகை** *ucci-viḻugai,* பெ (n.) ***குழந்தைகளின் உயிர் ஏதத்திற்குரியதான உச்சிக் குழிகை;*** dangerous disease of infants, the most prominent symptom of which is an increased depression in the head of the infant. (செ அக.).

*[உச்சி + விழுகை.]*

**உச்சிவினை** *ucci-vinai,* பெ. (n.) ***உச்சிக் கடன்*** பார்க்க; see *ucci-k-kadan* (சேதுபு. துத்தம். 6). (செ.அக.).

*[உச்சி + வினை.]*

**உச்சிவீடு** *ucci-vīdu,* பெ. (n.) 1 ***உச்சிவேளையில் மழைவிட்டிருக்கை;*** cessation of rain at noon. 2. ***இடைவிடுகை;*** stopping at intervals. 'உச்சிவீடு விடாதே இத்தையே மனோரதியா நின்றது' (ஈடு. 9,3,7)

*[உச்சி + வீடு. வீடு - விடுபடுதல், நிற்றல்.]*

**உச்சிவுதயம்** *ucci-v-udayam,* பெ. (n) ***குழந்தைப் பேற்றின் போது முதலாக உச்சிவெளிக் காணல்;*** (In mid-wifery) the appearance of the upper part of the foetal head in labour vertex presentation. (சா.அக.)

*[உச்சி + உதயம்.]*

**உச்சிவுருமம்** *ucci-v-urumam,* பெ. (n.) ***நடுப்பகல்;*** midday.

*[உச்சி + உருமம் உருமம் = வெயில்.]*

**உச்சிவெளி** *ucci-veli,* பெ. (n.) ***உச்சிவீடு*** பார்க்க; see *ucci-vīdu.* (செ.அக.).

*[உச்சி + வெளி.]*

**உச்சிவெறி** *ucci-veṟi-,* பெ. (n.) ***உச்சிவீடு*** பார்க்க; see *ucci-vīdu.* (செ.அக.).

*[உச்சி + வெறி.]*

**உச்சிவேர்** *ucci-vēr,* பெ. (n.) ***மூலவேர்;*** top-root.

*[உச்சி + வேர்.]*

**உச்சு[1]-தல்** *uccu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***இலக்கிற் காய் முதலியன எறிதல்;*** to pitch at a mark, to play such a game of pitching with areca nuts, shells or coins. 2. (வஞ்சகத்தால்) ***வெல்லுதல்;*** to conquer in a game, come out successful in a controversy, win, secure an advantage by subtlety or artifice. 3. ***பிறர் பொருளை ஏய்த்துக் கவர்தல்;*** to get possession of another's property by fraud, stratagem, cunning, or deceit. 4. ***பித்துப் பிடித்தல்;*** to go mad, to become demented. (செ.அக.).

**உச்சு[2]-தல்** *uccu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***தேய்த்தல்;*** to rub.

க. உச்சு.

*[உல் → உத்து → உச்சு.]*

**உச்சு[3]** *uccu,* பெ. (n.) ***பித்தன்;*** mad man, mentally retarded.

ம. உச்சு; க. உச்சு.

*[உய்த்து → உத்து → உச்சு = அறிவிழந்தவன், நினைவு தப்பியவன்.]*

**உச்சுக்காட்டு-தல்** *uccu-k-kāṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) ***நாயைத் தூண்டிவிடுதல்;*** to urge or set a dog on a person or an object by repeating the sound 'உச்சு, உச்சு' while simultaneously pointing to the object of attack. நாயை உச்சுக்காட்டு. (கொங்.வ.).

*[உச்சு + காட்டு-தல். உச்சு = நாயை ஏவும் ஒலிக் குறிப்புச் சொல் நாயை உச்சுக்காட்டுகிறான் அல்லது உசுக் காட்டுகிறான் என்பது நாட்டுப்புற வழக்கு ]*

**உச்சுக்கொட்டு-தல்** *uccu-k-koṭṭu-,* 5. செ.கு.வி. (v.i) 1. ***இக்குக்கொட்டு*** பார்க்க; see *ikku-k-kottu.* 2 ***வெறுப்புக்குறி காட்டுதல்;*** to manifest one's dissatisfaction or disapproval by smacking the lips, so as to produce an interjectional sound like 'pshaw' expressive of contempt. (செ.அக )

*[உச்சு + கொட்டு-தல் உசசு = வாயால எழுப்பப்படும் இரக்கம் குறித்த ஒலிக் குறிப்புச் சொல் ]*

**உச்சுச்செனல்** *uccuccenal,* இடை (part.) ***நாயைக் கூப்பிடுதல்;*** calling a pet dog (ஆ.அக )

**உச்சூடை** *uccūdai,* பெ. (n.) ***கொடிக்கம்பத்தின் நுனி;*** pointed head of flag - pole.

*[உச்சி + சூடை ]*

**உச்சூன்** *uccūn,* பெ (n) ***உச்சூனம்*** பார்க்க, see *uccūnam.*

*[உச்சு + ஊன் ஊனொடு ஒட்டியிருப்பது, கொழுப்பு ]*

**உச்சூனம்** *uccūṉam*, பெ. (n.) ***கொழுப்பு;*** fat. (செ.அக.).

*[உத்து → உச்சு = பொருந்துதல். ஊன் தசையோடு பொருந்தி யிருப்பதால் உச்சூனம் எனப்பட்டது. உச்சு + ஊனம். ஊன் → ஊனம்.]*

**உச்செனல்** *uccenal*, இடை. (part.) ***நாயை அழைத்தற் குறிப்பு;*** utterance of an imit. word used in calling a dog. (செ.அக.).

*[உச்சு + எனல்.]*

**உச்சேதம்** *uccēdam*, பெ. (n.) ***உட்சிதைவு*** பார்க்க; see *utsidaivu*.

*[உள் + சேதம்.]*

**உச்சை** *uccai*, பெ. (n.) ***சிறுநீர்; மூத்திரம்;*** urine.

**க.** உச்செ; **தெ.** உச்ச.

*[உய் → உய்த்து → உத்து → உத்தே → உச்செ (பெய்தது. சொரிந்தது) → உச்சை]*

**உச்சைனி** *uccaiṉi*, பெ. (n.) ***உச்சயனி*** பார்க்க; see *uccayaṉi*.

**உசகம்** *uśagam*, பெ. (n.) ***ஆமணக்கு*** (சங். அக.); castor-plant. (செ.அக.).

*[ஒருகா உச்சகம் → உசகம் = உயரமாக வளரும் செடி.]*

**உசத்தி** *uśatti*, பெ. (n.) 1. ***உயர்த்தி; உயரம்;*** height. ***உயர்த்தி*** பார்க்க; see *uyartti*.

*[உயர்த்தி → உசத்தி ]*

**உசரம்** *uśaram*, பெ. (n.) ***உயரம்;*** height, elevation. 'நாலுதோரை உசரத்து' (S.I.I. ii, 134).

*[உயர் → உயரம் → உசரம் (கொ வ ). **உயரம்** பார்க்க, see uyaram.]*

**உசரி** *uśari*, பெ. (n ) ***முள்ளி;*** a thorny shrub in common.

*[ஒருகா உத்தரி → உச்சரி → உசரி அரிதல் = குத்துதல், புண்படுத்துதல்.]*

**உசல்** *uśal*, பெ. (n.) 1. ***விடியல்;*** dawn. 2. ***ஒருவகை மரம்;*** a kind of tree.

*[ஊசல் = மேல்வருதல், ஒளி மேலெழும்புதல். ஊசல் → உசல். Skt usal ]*

**உசவு**[1]**-தல்** *uśavu-*, 5 செ.குன்றாவி (v.t.) 1. ***சிந்தித்தல்; கலந்தாய்தல்;*** to consider, to think and decide to scrutinize ''ஏவவென் றுசவியே'' (பாரத. பதினேழாம். 221). 2 ***வேவுபார்த்தல்;*** to spy, to discern by careful observation

*[உசாவு → உசவு.]*

**உசவு**[2]**-தல்** *uśavu-*, 5. செ.கு.வி. (v.i.) ***உசாவா நிற்கும்;*** to enquire, to ask question. 'தனிக் குருகுசவு' (கலித். 121-15.) (சங்.இலக்.சொற்.).

*[உசாவு → உசவு.]*

**உசவு**[3] *uśavu*, பெ. (n.) ***எந்திரங்கட்கூட்டும் கரியமெண்ணெயுஞ் சேர்ந்த கூட்டு*** (சீவக. 78 6, உரை.); ***grease.*** (ஆ.அக.).

*[மசகு → முசகு → உசகு → உசவு.]*

**உசற்காலம்** *uśaṟkālam*, பெ. (n.) ***விடியற்காலம்*** (யாழ். அக.); dawn. (செ.அக.).

*[ஊசல் → உசல் + காலம். ஊசல் = மேலெழுதல், கிழக்கிற் கதிரொளி தலைகாட்டுதல்.]*

**உசனன்** *uśaṉaṉ*, பெ. (n.) ***வெள்ளி; சுக்கிரன்*** (கம்பரா. ஆறுசெல். 6); Venus. (செ.அக.).

*[ஒருகா உசல் → உசன் → உசனன் ]*

**உசனார்** *uśaṉār*, பெ. (n.) ***உசனன்*** பார்க்க (பாரத.குரு. 23); see *uśaṉaṉ*. (செ.அக.).

**உசா**[1] *uśā*, பெ (n.) 1. ***ஆராய்ச்சி;*** enquiry, investigation, question. ''சான்றோருசாப் போல'' (தொல். பொருள். 285, உரை) 2. ***ஒற்றன்*** (திவா.); spy.

*[உசாவு → உசா ]*

**உசா**[2] *uśā*, பெ. (n.) ***மூக்குத்திச்செடி;*** pointed leaved hogweed. (L.) (செ.அக.).

*[உச்சம் → உசை → உசா ]*

**உசாக்காலம்** *uśā-k-kālam*, பெ. (n.) ***கதிரவன் தோன்றலுக்கு நான்கு கடிகை முற்பட்ட காலம்;*** dawn, time of day before day break.

*[உசா + காலம் ]*

**உசாக்கேட்டல்** *uśā-k-kēṭṭal*, தொ.பெ. (vbl.n.) ***கருத்துரை கேட்டல்;*** investigation, consultation. (ஆ.அக.).

*[உசா + கேட்டல்.]*

**உசாக்கையர்** *uśākkaiyar*, பெ. (n.) ***கருத்துரை வழங்குவோர்;*** consultant, investigator. ''உசாக்கைய ரொருங்கு போனார்'' (இரகு அயனெ 12). (செ.அக.).

*[உசாவு → உசா → உசாக்கை + அர்.]*

**உசாத்துணை** *uśā-t-tuṇai*, பெ. (n.) ***உற்ற துணைவன்*** (திருக்கோ. 400 உரை); best adviser, reliable friend, faithful companion, congenial comrade. (செ.அக ).

*[உசாவு → உசா + துணை.]*

**உசாதல்** *uśādal*, தொ.பெ. (vbl.n.) ***வினாவுதல்;*** questioning.

*[உசாவுதல் + உசாதல்.]*

**உசாவடி** *uśāvaḍi*, பெ. (n.) ***உட்பிரிவு;*** separation into smaller parts, subdivision. (i.m.p.tj. 894). (செ.அக.).

*[உசாவு + அடி.]*

**உசாவல்** *uśāval*, பெ. (n.) 1. ***ஆராய்தல்;*** investigating. 2. ***எண்ணல்;*** thinking, considering. 3. ***வினாவல்;*** questioning.

*[உசாவு → உசாவல்.]*

**உசாவு-தல்** *ušāvu-*, 5 செ.குன்றாவி (v.t.) 1. ***சிந்தித்தல்;*** to consider, to take counsel with oneself, deliberate ''அரசியலுசாவி'' (பாரத வாரணா. 128). 2. ***கேட்டறி தல்;*** to enquire or investigate. ''உசாவுகோ வைய சிறிது'' (கலித். 7-4). 3. ***செவியுறுதல்*** (ஆ.அக.); to hear, to listen. உரைத்தமை யனைவரு முசாவி'' (விநாய கபு. 75, 84).

*[உல் = பொருந்துதல் கருத்து. உல் → உல → உலவு → உலாவு → உசாவு பிறரோடு பொருந்துதல், கலத்தல், சென்றுவரல், பிறரோடு கலந்து கருமம் மேற்கொள்ளல். ஆராய்தல், பேசு தல், வினாதல். உலாவு → உசாவு ஒ.நோ அலை → அசை → அசைவு → அசா. உசாவு என்னும் வினை வட புலத்திலும் வேரூன்றி வழக்குப் பெற்றதால் வடமொழியிலும் உசாவு → உவாசு எனத் திரிந்து பெருக வழங்கலாயிற்று.]*

**உசாவுந்துணை** *ušāvuntuṇai*, பெ (n) ***துன்பம் தீரக் கேட்டறியும் துணை; கேள்வித்துணை;*** counsel, adviser, consultant. ''..உளையான் உற்றது உசாவுந்துணை'' (கலித். 136.25). (சங்.இலக்.சொற்.).

*[உசாவும் + துணை.]*

**உசிப்பி-த்தல்** *ušippi-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***சேர்த்தல்;*** to unite, associate, to join with another. ''உன்னிடத் தெங்களை யுசிப்பித்துக் கொள்வாய்'' (திருக்காளத்.பு. காளன். 60).

*[உய் → உய்ப்பி → உயிப்பி → உசிப்பி → உசிப்பி-த்தல் (கொ வ.) **உய்ப்பி-த்தல்** பார்க்க; see uyppi-.]*

**உசிர்** *ušir*, பெ. (n.) ***உயிர்;*** life animal or vegetable. ''உசிர்க்கொலை பல நேர்ந்து'' (தேவா. 918, 3).

**க.** உசிர்; **து., தெ.** உசுரு, பட. உசரு.

*[உயிர் → உசிர் (கொ.வ.). **உயிர்** பார்க்க; see uyir.]*

**உசில்** *ušil*, பெ. (n.) ***ஒரு மரம்;*** a tree. 'உசிலங்கோடு. (தொல். எழுத். 405, உரை).

*[உசல் → உசில்]*

**உசிலம்** *ušilam*, பெ. (n.) ***உசில்*** பார்க்க (மலை.); see *ušil.* (செ.அக.).

*[உசில் → உசிலம்.]*

**உசிலரைப்பு** *ušilaraippu*, பெ. (n.) ***அரைப்புப்பொடி;*** powder made of dried sirissa leaves.

*[உசில் + அரைப்பு.]*

**உசிலி[1]-த்தல்** *ušili-*, 4. செ.குன்றாவி. (v.t.) ***சம்பாரப்பொடி கலந்து தாளித்தல்;*** to prepare with condiments as curry.

*[உசில் → உசிலி → உசிலி-த்தல் = உசிலை சேர்த்துத் தாளித்தல்.]*

**உசிலி[2]** *ušili*, பெ. (n.) ***கடலை அல்லது தவசங்களை வேகவைத்துப் பொடிதூவின கறி*** (இ.வ.); boiled pulse (also grains) seasoned with salt, chilli, mustard, oil etc., (செ.அக.).

**க.** உசலி, உசளி, உசளெ, உசுளெ; **தெ.** உசல்; *Mar.* usal.

*[உசில் → உசிலி.]*

**உசிலை** *ušilai*, பெ (n.) ***அரைப்புப்பொடி; சீக்கிரி;*** black sirissa. (செ அக ).

*[உசில் → உசிலை ]*

**உசீரம்** *ušīram*, பெ. (n.) ***இலாமிச்சை வேர்;*** cuscuss-root. ''சந்தன முசீரங் கோட்டம்'' (திருவாலவா. 43, 16). (செ.அக.).

*[உசில் → உசிலம் → → உசிரம் → உசீரம்.]*

**உசு[1]-த்தல்** *ušu-*, 4. செ.கு.வி. (v.i.) ***துளைத்தல்;*** to bore, punch.

*[உளு → உசு.]*

**உசு[2]** *ušu*, பெ. (n.) ***மரத்தைத் துளைக்கும் புழு;*** wood worm.

ம. உளும்பு.

*[உல் → உள் → உளு → உசு.]*

தொல்காப்பியர் காலத்தில் குறிலடுத்த உச்சகாரம் இரண்டே சொற்களில் ஆளப்பட்டது என்பதற்குச் சான்றாக உசு, முசு என்னும் இரு சொற்களை உரையாசிரியர் மேற்கோள் காட்டி னர் ''உச்சகாரம் இருமொழிக் குரித்தே'' (தொல். எழுத். 75)

**உசுக்கல்** *ušukkal*, தொ பெ. (vbl.n.) ***ஏவுதல்;*** driving, as of a dog to an object or person. (ஆ.அக.).

*[உ → உது → உதுக்கல் → உசுக்கல்.]*

**உசுப்பு[1]** *ušuppu*, பெ. (n.) ***உடற்கழிவு;*** dung, faeces. (Tinn.) (செ.அக.).

*[உல் → உலுப்பு → உசுப்பு.]*

**உசுப்பு[2]-தல்** *ušuppu-*, 5 செ.குன்றாவி (v.t.) 1. ***எழுப்புதல்;*** to rouse, wake up; to urge, as dogs. 2. ***வெருட்டுதல்;*** to frighten, to drive away as birds.

*[உசும்பு → உசுப்பு → உசுப்பு-தல். உசும்பு (த.வி ) → உசுப்பு (பி.வி.).]*

**உசும்பு-தல்** *ušumbu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***அசைதல்;*** to move, stir, to be in motion as wind.-5 செ.குன்றாவி. (v.t.). ***அதட்டுதல்;*** to rebuke, rant, hector. ''மாக்களை திர்ப் பினுசும்ப'' (பெருங். மகத. 13,59). (செ.அக.).

*[உல் → உலு → உலும்பு → உசும்பு ]*

**உசுல்** *ušul*, பெ. (n.) 1. ***துளைத்தல்;*** piercing. 2. ***தோண்டியெடுத்தல்; பறித்தெடுத்தல்;*** digging out, plucking out. 3. ***விளைந்தவற்றில் அரசனுக்குரிய பங்காகப் பெறல்; வரிப்பணம் தண்டுதல்;*** collecting tax.

*[உசு → உசல்.]*

**உசுலாத்திமாடு** *ušulāttimāḍu*, பெ. (n.) ***அதிமாகப் பால் கொடுக்கும் மாடு;*** a kind of a big cow, giving plenty of milk as from Gujarat. (செ.அக.).

*[உசலாத்தி + மாடு. உசல் → உசப்பு = அதிகப்படுத்து. உசல் → உசலாத்தி = சுரப்பு மிகுந்த, அதிகமாகப் பால் தருகின்ற.]*

**உஞ்சட்டை** *uñjaṭṭai,* பெ (n.) ***உச்சட்டை*** பார்க்க. see *uccaṭṭai.*

*[உசசட்டை → உஞ்சட்டை. (வே க 81.)]*

**உஞ்சயினி** *uñjayiṉi,* பெ. (n.) ***உச்சயினி*** பார்க்க (யசோதர 2.1 ); see *uccayiṉi* (செ அக )

**உஞ்சல்** *uñjal,* பெ. (n.) ***ஊஞ்சல்;*** swing. "உஞ்சனிகர் காதிற்கும்" (சிவப். பிரபந். வெங்கையு. 78).

மறுவ. உய்யாலை, ஊஞ்சல்

**க.** உய்யல்; **தெ.** உய்யாலை, உய்யேலே, ஊயலே, **ம.** உழிஞ்ஞல், ஊஞ்சல்; **து.** உச்சால், உய்யால்

*[உந்து → உஞ்சு → உஞ்சல்.]*

**உஞ்சவிருத்தி** *uñjavirutti,* பெ (n.) 1. ***தவசங்களைப் பொறுக்கி நடத்தும் வாழ்க்கை*** (காஞ்சிப்பு ஒழுக்கப் 36); gleaning grains of rice, as a means of livelihood 2. ***அரிசிப் பிச்சை யெடுத்துச் செய்யும் வாழ்க்கை;*** living by gleaning handfuls of rice, as alms, from door to door. (செ.அக.).

*[உய் → உய்ந்து → உஞ்ச + விருத்தி.]*

**உஞ்சி** *uñji,* பெ. (n.) ***நாயை ஏவிவிடும் குறிப்புச் சொல்*** (ஆ.அக.); onom. expr. of setting dog against an object or person.

*[உச்சு → உஞ்சு → உஞ்சி.]*

**உஞ்சில்** *uñjil,* பெ. (n.) ***உசில்*** பார்க்க. see *usil.* (செ.அக.).]

**உஞ்சு** *uñju,* இடை. (part.) ***நாயை அழைக்கும் ஒலிக் குறிப்பு;*** Onom. expr. used in calling dogs.

*[உஞ்சு - ஒலிக்குறிப்புச் சொல்.]*

**உஞ்சுக்காட்டு-தல்** *uñju-k-kāṭṭu-,* 5. செ.குன்றாவி (v.t.) ***உச்சுக்காட்டு*** பார்க்க; see *uccu-k-kāṭṭu.* நாயை உஞ்சுக் காட்டுகிறான். (செ.அக.).

*[உஞ்சு + காட்டு-தல்.]*

**உஞ்சேனை**[1] *uñjēṉai,* பெ. (n.) ***உச்சயினி*** பார்க்க. (தேவா. 1221, 8); see *uccayiṉi.*

**உஞ்சேனை மாகாளம்** *uñjēṉai-mākāḷam,* பெ. (n.) ***உச்சயினியிலுள்ள சிவன் கோயில்*** (தேவா. 1221,8); Śiva śhrine at Ujjaiṉ. (செ.அக.).

*[உஞ்சை → உஞ்சேனை + மாகாளம்.]*

**உஞ்சை** *uñjai,* பெ. (n.) 1. ***உசல்மரம்;*** tree known as usal. 2. ***அவந்திநகர்;*** city of Avanthi.

*[உஞ்சை என்பது மரத்தின் பெயரால‌மைந்த ஊராகலாம்.]*

**உஞ்சையம்பதி** *uñjaiyambadi,* பெ. (n.) ***உஞ்சை நகர்*** (சிலப். 6.20); city of Uñjainagar.

*[உஞ்சை + அம் + பதி.]*

**உஞ்ஞார்** *uññār,* பெ (n.) ***ஞாயிறு உதிக்கும் திசை; கிழக்கு;*** east (சேரநா )

ம. உஞ்ஞாரு

*[உதி + ஞாயிறு - உதிஞாயிறு → உஞ்ஞார் (மலை).]*

**உஞற்று**[1]**-தல்** *uñaṟṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***முயலுதல்;*** to attempt vigorously, strive diligently. "தாழா துஞற்றுபவர்" (குறள். 620). 2. ***செய்தல்;*** to do, perform, accomplish "மறத்துறை.. எதிர்வன் கெழீஇ யுஞற்றல்" (ஞான. 17,48). 3. ***தூண்டுதல்;*** to urge, incite, spur to action. "உள்ளம் உஞற்றுகையினாலே" (கலித். 18, உரை). (செ.அக.).

*[உய் → உயல் → உயற்று → உஞற்று.]*

**உஞற்று**[2] *uñaṟṟu,* பெ. (n.) 1. ***பாடாற்றுதல்*** (பிங்.); enthusiasm; striving, exertion. 2. ***முயற்சி;*** application, effort. "தன்னுஞற் றொழிந்திடான்" (இரகு. தசரத. 13). 3. ***தூண்டுதல்;*** inciting. 4. ***வழக்கம்;*** practice. (செ.அக.).

*[உய் → உயல் → உயற்று → உஞற்று.]*

**உட்கட்டி** *uṭkaṭṭi,* பெ. (n.) 1. ***அகக்காழ்ப்பு; உள்திடத் தன்மை;*** inner hardness or thickness. 2. ***அடர்த்தி;*** density. 3. ***உட்பொருள்;*** inner substance. (சேரநா.).

ம. உள்கட்டி

*[உள் + கட்டி.]*

**உட்கட்டு** *uṭkaṭṭu,* பெ. (n.) 1. ***வீட்டின் உட்பகுதி;*** inside of a house, private apartments. 2. ***பரதவச் சிறுமியர் குழந்தைப் பருவத்தில் அணியுஞ் சிறுதாலி;*** kind of necklace, worn especially by Parava girls. 3. ***உள்ளுரம்;*** mental courage. 4. ***உவளகம்;*** inner appartment. 5. ***மாதர் கழுத்திலணியும் ஒரு மணிவடம்;*** a kind of necklace, worn by women. (செ.அக.).

*[உள் + கட்டு.]*

**உட்கண்** *uṭkaṇ,* பெ. (n.) ***காட்சி;*** mind's eye, insight, wisdom. "நெஞ்சென்னும் உட்கண்ணேற்காணும் உணர்ந்து" (திவ். இயற். பெரியதிருவந். 28).

ம. உள்கண்; க. ஒளகண்ணு.

**உட்கண்டம்** *uṭkaṇḍam,* பெ. (n.) 1. ***கழுத்தினுட்பாகம்;*** inner part of the neck, throat. 2. ***உட்கழுத்து*** பார்க்க; see *uṭkaḻuttu.* (சா.அக.).

*[உள் + கண்டம் - உட்கண்டம். கண்டம் = கழுத்து. கழுத்து > Skt. kaṇḍam.]*

**உட்கணு** *uṭkaṇu,* பெ. (n.) 1. ***மரத்தினுள் முளி;*** (In botany) knobby or wart-like prominences on the inner side of any plant or tree - internal tuberosity. 2. ***எலும்பினுள்ளேயிருக்கு முளி;*** eminence on the inner side of a bone - inner tuberosity. (சா.அக.).

*[உள் + கணு - உட்கணு. கண் → கணு.]*

**உட்கதவு** *utkadavu*, பெ. (n.) ***திட்டிவாயில்;*** wicket-door. கணையமரம் ஏறட்ட உட்கதவினையுடைய வாயிலினையும் (பெரும் பாண். 127. உரை) (செ.அக.).

**க.** ஔஅகுணி (உள்தாழ்ப்பாள்).

*[உள் + கதவு - உட்கதவு.]*

**உட்கதை** *utkadai*, பெ. (n.) ***கதைக்குள் வரும் கிளைக் கதை;*** episode.

**க.** ஔகதெ.

**உட்கந்தாயம்** *utkandāyam*, பெ. (n.) ***நிலக்கிழாரக்குக் கட்டும் வரி*** (c.c.); levy or assessment paid to private land-lords. (செ.அக.).

*[உள் + கந்தாயம் - உட்கந்தாயம்.]*

**உட்கரு** *utkaru*, பெ. (n.) ***உள்ளே அடங்கி இருக்கும் பொருள்;*** things contained within; that which is inside, such as precious stones enclosed in the intenor of an anklet. உட்கருவை யுடைத்தாகிய... சிலம்பின் (சிலப். 16, 118, உரை). (செ.அக.).

**உட்கருத்து** *utkaruttu*, பெ (n.) 1 ***உள்மன நோக்கம்;*** innermost thought, real purpose, motive. 2. ***ஆழ்ந்த கருத்து;*** the deeper sense of a passage, underlying theme.

*[உள் + கருத்து - உட்கருத்து.]*

**உட்கருவி** *utkaruvi*, பெ. (n.) ***அகக்கருவி*** பார்க்க; see *aga-k-karuvi*. (செ.அக.).

**க.** ஔ அட்டை.

*[உள் + கருவி.]*

**உட்கல்** *utkal*, பெ. (n.) ***உட்கு-தல்*** பார்க்க; see *utku-*.

*[உள் → உள்கு → உள்கல் → உட்கல்.]*

**உட்கலகம்** *utkalagam*, பெ. (n.) ***உட்பூசல்;*** intestine broil civil war. (செ.அக.).

*[உள் + கலகம் = உட்கலகம்.]*

**உட்கழுத்து** *utkaluttu*, ***கழுத்தின் முன் பாகம்;*** front part of the neck.

*[உள் + கழுத்து = உட்கழுத்து.]*

**உட்கழுத்துச்சரடு** *utkaluttu-c-caradu*, பெ. (n.) ***கழுத்தோடு அணியப்படும் பதக்கஞ் சேர்ந்த பொற்சரடு வகை;*** close fitting golden necklace, with a pendant. (செ.அக.).

*[உள் + கழுத்து + சரடு.]*

**உட்கள்ளம்** *utkallam*, பெ. (n.) 1. ***உள் கரவு;*** deep-seated vice, dissimulation. 2. ***புண்ணினுள் நஞ்சு;*** hidden tumour or matter in a boil (செ.அக.).

**ம.** உள்களவு.

*[உள் + கள்ளம் = உட்கள்ளம்.]*

**உட்கள்ளன்** *utkallan*, பெ. (n.) 1. ***இடத்திற்குள் உள்ள கள்ளன்;*** thief within. 2 ***பருவின் உள்ளில் ஏற்படும் ஆணி;*** core of an ulcer.

**ம.** உள்கள்ளன்.

*[உள் + கள்ளன்.]*

**உட்கள்ளி** *utkalli*, பெ. (n.) ***உட்பொருள்; உள்ளிடத்து மந்தணம்;*** inner secret, hidden meaning. (சேரநா.)

**ம.** உள்கள்ளி

**உட்களவு** *utkalavu*, பெ. (n.) ***உள்வஞ்சகம்; மனத்தின் கபடத் தன்மை; கரவு;*** deceit, trick. (ஆ. அக.).

**ம.** உள்களவு

*[உள் + களவு = உட்களவு.]*

**உட்காந்தல்** *utkāndal*, பெ. (n.) ***உள்வெப்பம்;*** inner heat. (ஆ அக.).

*[உள் + காந்தல் = உட்காந்தல். காந்துதல் → காந்தல்.]*

**உட்காய்ச்சல்** *utkāyccal*, பெ. (n.) 1. ***உள்ளாக அடிக்கும் காய்ச்சல்;*** internal fever. 2. ***உள்ளெரிச்சல்;*** envy, jealousy.

**ம.** உள்ப்பனி

*[உள் + காய்ச்சல் = உட்காய்ச்சல்.]*

**உட்காய்வு** *utkāyvu*, பெ. (n.) ***பொறாமை;*** envy, jealousy.

*[உள் + காய்வு = உட்காய்வு.]*

**உட்கார்**[1]**-தல்** *utkār-*, 2. செ.கு.வி. (v.i.) ***வீற்றிருத்தல்;*** to sit down, to occupy a seat.

*[உள் → உள்கு → உள்குறு → உள்குறு-தல் → உள்கார்-தல் → உட்கார்-தல். மலையாளத்தில் இன்னும் இங்கே உட்கார் என்பதை 'இவ்விடெ உள்ளு' என்பர்.]*

**உட்கார்**[2] *utkār*, பெ. (n.) ***பகைவர்;*** foes, those who oppose openly without fear. "உட்காரெதிருன்றல் காஞ்சி." (பு.வெ.).

*[உள் → உட்கு = சினம், சினம் பொங்கும் பகைமை. உட்கு + ஆர் = உட்கார் = பகைவர்.]*

**உட்கார்த்து-தல்** *utkārttu-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***உட்கார வைத்தல்;*** to seat, make to sit.

*[உட்கார் → உட்கார்த்து.]*

**உட்காரம்** *utkāram*, பெ. (n.) 1. ***அச்சம்;*** fear. 2. ***நெஞ்சுறுதி;*** resolution, courage. (ஆ.அக.).

*[உட்கு → உட்காரம்.]*

**உட்காரல்** *utkāral*, தொ.பெ. (vbl.n.) ***உட்கார்தல்;*** sitting, taking seat. "உட்கார்ந்த பிராமணர்" (பிராசு. 174).

*[உட்கார் → உட்காரல்.]*

**உட்காரவை-த்தல்** *utkāravai-*, 5. செ.குன்றாவி (v.t.) 1. ***இருக்கையி லிருக்கச் செய்தல்;*** to seat, to make one sit by providing a seat. 2. ***அடக்குதல்;*** to floor, as an opponent, fig. to put to silence, as by a decisive argument, vanquish, overcome.

*[உட்கார் → உட்காரவை.]*

**உட்கால்** *utkāl,* பெ. (n.) ***நீர் வரத்திலுள்ள கால்வாய்*** (ஆ.அக); a channel.

*[உள் + கால். கால் = கால்வாய்.]*

**உட்கிடக்கை** *utkidakkai,* பெ. (n.) ***உட்கருத்து*** பார்க்க; see *utkaruttu.* (செ.அக.).

*[உள் + கிடக்கை = உட்கிடக்கை. கிடக்கை = கிடந்துள்ள, படிந்துள்ள எண்ணம், கருத்து உட்கிடக்கை = உள்ளெண்ணம்.]*

**உட்கிடை** *utkidai,* பெ. (n.) 1. ***உட்கருத்து*** பார்க்க; see *utkaruttu* 2. ***ஊரகச் சிற்றூர்;*** subordinate hamlet in a village group. "சுரண்டையூர் முதலுட்கிடை" (குற்றா. குற. 89.3).

*[உள் + கிடை = உட்கிடை. கிடை = கிடக்கை.]*

**உட்கு**[1]**-தல்** *utku-,* 5 செ.கு.வி (v.i.) 1. ***அஞ்சுதல்;*** to be afraid, to stand in awe, to show signs of fear. "நண்ணாரு முட்குமென்பீடு" (குறள், 1088) 2 ***நாணுதல்;*** to be bashful, be shy. "சேரன் வருக . உட்காதே" (தமிழ்நா. ஔவை). 3. ***நிலை கெடுதல்;*** to be nervous, to collapse. 4. ***மடிதல்;*** to die, to be ruined (செ.அக.).

*[உள்கு → உட்கு. உள்குதல் = அஞ்சுதல்.]*

**உட்கு**[2]**-தல்** *utku-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***வெட்டுதல்;*** to cut.

**உட்கு**[3] *utku,* பெ. (n.) 1. ***அச்சம்;*** fear, dread, terror. "நாணுமுட்கு மடைதர" (குறிஞ்சிப். 184). 2. ***நாணம்*** (பிங்.); shame, bashfulness, modesty.

*[உள்கு → உட்கு.]*

**உட்கு**[4] *utku,* பெ. (n.) 1. ***மிடுக்கு;*** strength, might. "உட்குடை யசுரர்" (திவ். திருவாய் 7,2,3). 2. ***மதிப்பு;*** dignity, respect. "உட்கில் வழி வாழாவூக்கம்" (இனி. நாற்.27).

*[உள்கு → உட்கு.]*

**உட்குடி** *utkudi,* பெ (n.) 1. ***உள்ளூரிலிருந்து பயிர் செய்து முழு வாரமும் பெறுதற்குரிய குடிகள்;*** (G.Sm.D.I 11,62), resident ryots who farm lands in time for the major crops and are entitled to the full shares or rates, dist. fr 2. ***புறக்குடி;*** a class of farmers in Salem District. (செ.அக.).

ம. உள்குடியான்

*[உள் + குடி உள்ளூரில் வாழும் குடி மக்கள்.]*

**உட்குடிப்பாயகாரி** *utkudi-p-pāyakāri,* பெ. (n.) ***உரிமை பெற்ற குடி*** (M.N.A.D. 284); tenant who has acquired an occupancy right in a village. (செ.அக.).

*[உள் + குடி + (பாயகாரன்) பாயகாரி பயன்காரன் → பாயகாரன் = உட்குடியாய் இருந்து பயன்பெறும் உரிமைக்கு உரியவன். பயன் → பாயம்.]*

**உட்குடைச்சல்** *utkudaiccal,* பெ. (n.) ***உடம்பினுள் உண்டாகும் நரம்பைப் பற்றியவோர் வலி;*** pain, affecting the nerves internally. (சா.அக.).

*[உள் + குடைச்சல் = உட்குடைச்சல்.]*

**உட்குத்தகை** *utkuttagai,* பெ. (n.) ***கீழ்க்குத்தகை;*** sub-lease. (செ.அக.).

ம. உள்குத்தகை.

*[உள் + குத்தகை = உட்குத்தகை.]*

**உட்குத்தல்** *utkuttal,* பெ. (n.) 1. ***கட்டி, பிளவை, சிலந்தி போன்றவற்றில் ஊசியால் குத்துவது போல் ஏற்படும் குத்தல் வலி;*** deep seated pricking pain in boil carbuncle, ulcer etc. 2. ***உட்செலுத்துதல்; உள்ளே குத்திச் செலுத்துதல்;*** piercing through a part or organ of the body for purposes of injection. (சா.அக.).

*[உள் + குத்தல = உட்குத்தல்.]*

**உட்குத்து** *utkuttu,* பெ. (n.) 1 ***உடம்பு காய்ந்து, வியர்த்து, பல் கிட்டி, நா வறண்டு, வாய் கீழ்நோக்கி, அன்னந் தண்ணீர் செல்லாது வருந்துமோர் குலையைப் பற்றிய நோய்;*** a kind of tetanus form heart disease, marked by perspiration, lock-jaw, dryness of the tongue, passage of gas downwards, aversion to food and drink etc, a kind of tetanus. 2 ***உடம்பினுள் ஊசியால் குத்தி மருந்தையுட் புகுத்துதல்;*** act of passing a liquid medicine into a part of the body-injection. 3. ***உள்ளுறுப்புகளைத் தாக்கும்படி கொடுத்த குத்து;*** blow dealt so as to affec' the internal organs.

*[உள் + குத்து = உட்குத்து.]*

**உட்குத்துப்புறவீச்சு** *utkuttu-p-puravīccu,* பெ. (n.) ***ஒரு இசிவுநோய்*** (வின்.); hepatic complaint attended with convulsions. (செ.அக.).

*[உள் + குத்து + புறம் + வீச்சு.]*

**உட்குப்பாயம்** *utkuppāyam,* பெ. (n.) ***உள் உடுப்பு;*** inner garment (சேரநா.).

ம. உள்குப்பாயம், க. ஒளஉடுபு.

*[உள் + குப்பாயம்.]*

**உட்குழி** *utkuli,* பெ. (n) 1. ***நாவாய்க்குழி அல்லது யோனியின் உட்குழி;*** cavity behind the vaginal aperture; fossa navicularis. 2. ***இடுப்பெலும்பினுட்புறம்;*** inner part of ilium-Venter. (சா.அக.).

*[உள் + குழி = உட்குழி.]*

**உட்குளிர்** *utkulir,* பெ. (n.) 1. ***உள்ளில் தோன்றும் குளிர்;*** internal cold. 2. ***விடுப்பு;*** relief.

ம. உள்குளிர்

**உட்குற்றம்** *utkurram,* பெ. (n.) ***ஆசை, அவா, பகைமை, இவறன்மை, செருக்கு, பொறாமை, முதலியன;*** innate or inborn human foible such as lust, anger etc.

*[உள் + குற்றம் = உட்குற்றம்.]*

**உட்குறி** *utkuri,* பெ. (n.) ***உள்ளிருந்து காட்டும் குறி;*** internal symptom. (சா.அக.).

*[உள் + குறி = உட்குறி.]*

**உட்குறிப்பு** *utkurippu,* பெ. (n.) ***உட்கருத்து*** பார்க்க; see *utkaruttu.* (செ.அக.).

*[உள் + குறிப்பு = உட்குறிப்பு.]*

**உட்கூதல்** *utkudal,* பெ. (n.) ***உடம்பினுள்ளாக உண்டாகும் குளிர்;*** internal cold, shivering, chillness. (செ.அக.).

*[உள் + கூதல் = உட்கூதல் கூதற் காற்றால் நடுங்குவது போன்று உட்குளிரால் நடுங்குதல்.]*

**உட்கூதிர்** *utkūdir,* பெ. (n.) ***உட்கூதல்*** பார்க்க; see *utkūdal.*

*[உள் + கூதிர் = உட்கூதிர். கூதல் → கூதர் → கூதிர். கூதிர் = கூதல்காற்று, கூதல் காற்று வீசும் குளிர்காலம்.]*

**உட்கை** *utkai,* பெ. (n.) 1. ***உள்ளங்கை;*** palm (of hand). 2. ***உள்ளாள்;*** one who is privy to, or in collusion with, another. 3. ***உட்கைச்சுற்று*** பார்க்க; see *utkaicurru.* 4. ***உட்பக்கம்;*** innser side. 5. ***உளவு;*** spying. 6. ***உதவி*** (சேரநா.); help, assistance. 7. ***அக்குள்*** (கருநா.); armpit.

ம. உளக்கை; க. ஒளகை, ஒளகெய்.

*[உள் + கை = உட்கை ]*

**உட்கைச்சுற்று** *utkaiccurru,* பெ. (n.) ***நாட்டியத்தில் இடக்கைப் புறமாகச் சுற்றுகை;*** turning to the left in dancing or winding, turning backwards or contrary to the sun. (செ.அக.).

*[உள் + கை + சுற்று.]*

**உட்கொள்[1](ளு)-தல்** *utkollu-,* 10. செ.குன்றாவி. (v.t.) 1. ***தன்னகத்துக் கொள்ளுதல்;*** to take, inclose, as one's own; to appropriate. "பாலையுட் கொண்டிடு செருக் கால்" (கந்தபு. ஆற்று. 14). 2. ***உட்கருதல்;*** to regard, look upon, consider. 3. ***உண்ணுதல்;*** to take in, as one's food or drink to swallow. "யாவரு மணிந்துட் கொண்டு" (கந்தபு. திருக்கல். 82). 4. ***உள்ளிழுத்தல்;*** to draw in or absorb, as the earth absorbs the rain water.

ம. உள்கொள்ளுக; க. ஒளகொள்.

*[உள் + கொள் = உட்கொள்.]*

**உட்கொள்[2](ளு)-தல்** *utkollu-,* 10. செ.குன்றாவி. (v.t.) ***வரி முதலியன தண்டுதல்;*** to collect, as taxes, etc. 'உட்கோளடங்க உட்கொண்டு' (S.I.I. vi, 147). (செ.அக.).

*[உள் + கொள்.]*

**உட்கோட்டை** *utkōttai,* பெ. (n.) 1. ***உள்ளான அரண்;*** citadel. (C.E.M.). 2. ***கங்கை கொண்ட சோழபுரத்திற்கு அண்மையிலுள்ள ஓர் ஊர்;*** village near Gangai konda chōla puram. (செ.அக.).

*[உள் + கோட்டை = உட்கோட்டை.]*

**உட்கோடல்** *utkōdal,* பெ. (n.) ***உட்கொளல்*** பார்க்க; see *utkolal.*

*[உள் + கோடல். கொளல் → கோடல்.]*

**உட்கோயில்** *utkōyil,* பெ. (n.) ***கோயில் கருவறை;*** inner shrine, the sanctum sanctorum. "உட்கோயில் புறக்கோயி லுட்பட" (S.I.I. v. 328).

*[உள் + கோயில்.]*

**உட்கோள்[1]** *utkōl,* பெ. (n.) ***வரி;*** tax, cess. "உட்கோள டங்க உட்கொண்டு" (S.I.I. vi. 147). (செ.அக.).

க. ஒளதெறகெ (உள் நாட்டில் போடப்படும் வரி).

*[உள் + கோள் = உட்கோள்.]*

**உட்கோள்[2]** *utkōl,* பெ. (n.) 1. ***உட்கருத்து;*** inner meaning, underlying theme. 2. ***கருத்து;*** meaning, significance. 3. ***கோட்பாடு;*** principle, concept. 4. ***அணிவகையுள் ஒன்று;*** figure of speech. (ஆ.அக.).

*[உள் + கோள் = உட்கோள். கொள் → கோள்.]*

**உட்சட்டை** *utcattai,* பெ. (n.) ***உள்ளுக்கிடும் அங்கி;*** vest, shirt, undergarment. (செ.அக.).

ம. உள்சட்ட; க. ஒளஉடுபு.

*[உள் + சட்டை = உட்சட்டை.]*

**உட்சண்டை** *utcandai,* பெ. (n.) ***உட்கலகம்;*** internal disturbance, family quarrel, civil war. (செ.அக.).

க. ஒளதோடி

*[உள் + சண்டை = உட்சண்டை.]*

**உட்சமயம்** *utcamayam,* பெ. (n.) ***இந்து சமயத்திலுள்ள அறுவகைப் பிரிவுகளு ளொன்று;*** one of the sub classes of six religious sects in Hinduism fold, viz., வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் (பிங்.). (செ.அக.).

*[உள் + சமயம் = உட்சமயம்.]*

**உட்சாடை** *utcādai,* பெ. (n.) 1. ***உட்கருத்து;*** inner sense. 2. ***குழூஉக்குறி;*** conventional term, peculiar to a society or profession.

*[உள் + சாடை = உட்சாடை.]*

**உட்சாத்து** *utcāttu,* பெ. (n.) ***அரைக்கச்சை;*** short inner garment worn round the waist, a kind of tunic. "உழுவை தான் கொடுத்த உட்சாத்தும்" (ஏகாம்.உலா. 203). (செ.அக.).

*[உள் + சாத்து = உட்சாத்து.]*

**உட்சிதைவு** *utcidaivu,* பெ. (n.) 1. ***அழிவு*** (நீலகேசி. 657); desolation. 2. ***வெட்டல்;*** cutting.

*[உள் + சிதைவு.]*

**உட்சீலை** *utcīlai,* பெ. (n.) 1. ***உள்ளே கட்டும் சீலை;*** under or inner garment. 2. ***உள்வைத்துத் தைக்கும்***

**துணி;** lining of a garment. 3. **புண்ணிற்குள் ஏற்படும் புரை;** sinus of an ulcer. (செ.அக.).

*[உள் + சீலை = உட்சீலை.]*

**உட்சுரம்** *utcuram,* பெ. (n.) **உட்காய்ச்சல்;** internal fever; low fever. (செ.அக.).

ம. உள்ச்சூடு.

*[உள் + சுரம் = உட்சுரம்.]*

**உட்சூத்திரம்** *utcūttiram,* பெ. (n.) 1. **எந்திரத்தின் மூலக்கருவி** (வின்.); main spring of a machinery. 2. **உள்ளுளவு;** clue to an affair. 3. **கணிதத்தில் குறுக்கு வழி;** (Arith.) short method or formula of working a sum. 4 **எளிதான வழி;** easy process. 5 **உட்குறிப்பு;** deeper meaning of a passage. 6. **மூலகாரணம்;** fundamental cause. 7. **மூலநூற்பா;** original, head verse. 8. **நுட்பமானவகை** (ஆ.அக.); minute design. (செ.அக.).

*[உள் + சூத்திரம்.]*

**உட்செல்-தல்** *utsel-,* 13. செ.கு.வி. (v.i.) **உள்ளே செல்லுதல்;** to enter, go in.

க. ஒளகெகோகு, ஒளகெசேரு.

*[உள் + செல்.]*

**உட்செல்லல்** *utsellal,* பெ. (n.) **உட்செலுத்து-தல்** பார்க்க; see *utseluttu-.*

*[உள் + (செல்லுதல்) செல்லல்.]*

**உட்செலுத்து-தல்** *utseluttu-,* 13. செ.குன்றாவி. (v.t.) 1. **உள்ளே செலுத்துதல்;** to insert, inject 2. **சூழ்ச்சி செய்து உள்ளே புகுவித்தல்;** to administer, as a medicine or a poison, by sweet persuasion. 3. **கையூட்டுக்கொடுத்தல்;** to send in a bribe secretly. (செ.அக.).

*[உள் + செலுத்து = உட்செலுத்து.]*

**உட்சேவகம்** *utsēvagam,* பெ. (n.) **வரிவகை** (S.I.I. vi. 147.); cess. (செ.அக.).

*[உள் + சேவகம் = உட்சேவகம். செய் → செவை → செவகம் → சேவகம்.]*

**உட்டாகம்** *uttāgam,* பெ. (n.) **உள்வறட்சி** பார்க்க; see *ulvaratci.*

*மறுவ. நீர்வேட்கை, வாயறுகை, விடாய், நாவறட்சி, தழப்பி.*

*[உள் + தாகம்.]*

**உட்டாணி** *uttāni,* பெ. (n.) **கனத்த மணி;** heavy, solid gem.

ம. உட்டாணி, *Mar.* uthavana.

*[ஒருகா. உருட்டாணி → உட்டாணி.]*

**உட்டாறா** *uttārā,* பெ. (n.) **கப்பலில் சவாப் பாய்களை இறக்க வுதவுங் கயிறுகள்** (M.Navi. 87); ropes used to tighten sails of a ship

*[ஒருகா. உருட்டு → உட்டு + (ஆர்த்து) ஆறா.]*

**உட்டி** *utti,* பெ. (n.) 1. **விளையாட்டில் பயன்படுத்தும் வித்துகள் அல்லது காய்கள்;** seeds used in games. 2. **கன்றுகளுக்கு வாயிலிடும் முச்சாணு அல்லது வலை;** small basket or coir net for calves' mouths to prevent eating soil etc.

க. உட்பு.

*[உண்டை → உட்டை → உட்டி.]*

**உட்டினிடம்** *uttinidam,* பெ. (n.) 1. **தலைப்பாகை;** turban. 2. **மூடி;** lid. (ஆ.அக.).

*[உச்சி → உத்தி → உட்டி + இன் + இடம்.]*

**உட்டுளை** *uttulai,* பெ. (n.) **உள்ளே உள்ள துளை;** inner hole, bore or hallow space in a tube or pipe. (செ.அக.).

*[உள் + துளை = உட்டுளை.]*

**உட்டுறவு** *utturavu,* பெ. (n.) **உள்ளத்துறவு;** mental renunciation of one's desires and attachments. (செ.அக.).

*[உள் + துறவு = உட்டுறவு. உள் = உள்ளம்.]*

**உட்டுறை** *utturai,* பெ. (n.) 1. **கோயில் முதலியவற்றில் உட்காரியம் நடத்தும் பிரிவு;** department of internal affairs as in a temple. (Loc.). (செ.அக.). 2. **உள்துறை:** Home Dept.

*[உள் + துறை = உட்டுறை.]*

**உட்டெளிவு** *ut-telivu,* பெ. (n.) 1. **மனத்தெளிவு;** clearness of mind, freedom from doubt. 2. **வடித்தசாறு** (வின்.); clear liquid, poured off from the sediment. 3. **உள்வயிரம்** (வின்.); strength and soundness, as in timber 4 **உட்பக்க வளவு** (வின் ), inner measurement. 5. **பேரறிவு** (ஆ.அக ), wisdom. 6. **பழுது திருத்தி யெடுத்துக் கொண்டது.** (ஆ அக.); that which has been selected after clarification

க. ஒளகறிவு

*[உள் + தெளிவு = உட்டெளிவு உள் = உள்ளம் ]*

**உட்டேட்டம்** *uttēttam,* பெ. (n ) 1. **மன நாட்டம்;** secret object of pursuit, activating motive. 2 **உட்சம்பாத்தியம்;** property acquired and kept in secret. (செ.அக )

*[உள் + தேட்டம் = உட்டேட்டம் தேட்டம் = தேடியது, தேடித் திரட்டிய செல்வம் ]*

**உட்டை**[1] *uttai,* பெ. (n ) **விளையாட்டுக்காய்;** seeds used in Indian indoor games of children ''உட்டையென வைத்து விளையாடு பைங்கழற்காய்'' (திருப்போ. சந். பிள்ளைத் அம்புலி 6). (செ அக.).

*[உண்டை → உட்டை ]*

**உட்டை**[2] *uttai,* பெ. (n ) **குவியல்;** heap. ஒரே உட்டையா கப் போட்டுவைக்காதே (கொங்.வ.)

*[ஒட்டு → உட்டு → உடடை.]*

**உட்டொடர்** *uttodar,* பெ (n) ***பெருந்தொடர் மொழியின் பாகமான சிறுதொடர்*** (தொல் சொல். 42 சேனா); simple sentence forming part of a compound sentence. (செ அக)

*[உள் + தொடர் = உட்தொடர்]*

**உட்டொளை** *uttolai,* பெ. (n) 1. ***உள்ளான ஓட்டை;*** hollow space or bore in a pipe or tube. 2 ***உட்டுளை*** பார்க்க; see *uttulai* (செ அக.).

*[உள் + துளை = உட்டுளை → உட்டொளை. (கொ.வ.)]*

**உட்டொளைப்பொருள்** *uttolai-p-porul* பெ. (n.) 1. ***உட்டொளையுள்ள குழல் முதலியன;*** anything tubular or hollow 2 ***உட்டுளைப் பொருள்***பார்க்க, see *uttulai-p-porul* (செ.அக.)

*[உள் + துளை + பொருள் = உட்டுளைப்பொருள் → உட்டொளைப் பொருள் துளை → தொளை]*

**உட்டோல்** *uttol,* பெ. (n.) 1. ***மீத்தோலுக்கடியிலுள்ள தோல்;*** true skin below the epidermiscorium or dermis 2. ***உட்சவ்வு;*** inner membrane. (சா.அக.).

*[உள் + தோல் = உட்டோல்.]*

**உட்பகை** *utpagai,* பெ. (n.) 1. ***நட்புப் பாராட்டிக் கெடுக்கும் பகைமை*** (விரோதம்) (குறள். 889); internal enmity, hatred or grudge; rancour at heart with out-ward profession of friendship 2. ***குடிகளின் பகைமை;*** civil hostility. 3. ***காமம் முதலிய அறுபகை*** (பிங்); internal enemy of man having reference to the six emotions which tend to corrupt and taint his soul. "பற்றற்ற ஓகப் பகையால் உட்பகையாறும் முற்றத் துறந்து" (பாரத. சம்பவ. கீழ்.). (செ.அக.).

ம. உள்பக; க. ஒளவகை.

*[உள் + பகை = உட்பகை.]*

**உட்பட** *utpada,* இடை. (part.) ***உள்ளாக;*** together with, inclusive of. "நாடும் பொய்கையு முட்பட வுரைத்தனன்" (சீவக. 1216). (செ.அக.).

*[உள் + பட = உட்பட.]*

**உட்படி** *utpadi,* பெ. (n.) 1. ***துலாக்கோலிலிடும் படிக்கல் எவ்வளவு குறைகின்றதென்பதை அறிதற்கு இடும் சிறு படிக்கல் முதலியன*** (வின்); that which is thrown into a scale to make up the weight; a makeweight. 2. ***நடப்புப் பயிராண்டு;*** current year for the assessment of tax etc. (செ.அக.).

*[உள் + படி = உட்படி.]*

**உட்படு**[1]**-தல்** *utpadu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***உள்ளாதல்;*** to be within, included. 2. ***கீழாதல்;*** to be under, as in age. 3. ***அகப்படுதல்*** (பு.வெ. 8.34.); to fall into, as a trap; to be caught. 4. ***உடன்படுதல்;*** to be taken in, concerned in; to become a party. 5. ***சேர்தல்;*** to join. "ஆறுட்பட்டவை யிருகாலத்து". (கந்தபு. அக்கினி. 205). (செ அக.).

ம. உள்பெடுக, க. ஒளபடு

*[உள் + படு = உட்படு]*

**உட்படு**[2]**-த்தல்** *utpadu-,* 18. செ.குன்றாவி. (v.t.) 1. ***உள்ளாக்குதல்;*** to cause to be put in. 2. ***அகப்படுத்து தல்;*** to inclose, ensnare, envelop 3. ***உடன்படுத்துதல்;*** to persuade, bring round. 4. ***உட்செலுத்துதல்;*** to thrust in, as is done with a gauze through a wound or injury. (சா.அக.).

*[உள் + படு = உட்படு]*

**உட்பத்தியம்** *utpattiyam,* பெ. (n.) ***மருந்துண்ணுங்காலத் தில் புணர்ச்சி விலக்கும் பத்தியம்*** (வின்.); abstinence from sexual indulgence as regimen to be observed while one is taking medicine. (செ.அக.).

*[உள் + பத்தியம் = உட்பத்தியம். உள் = உள்முகமான, வெளிப் படச் சொல்லாமல் குறிப்பாய் உணரத்தக்க.]*

**உட்பந்தி** *utpandi,* பெ. (n.) ***விருந்தில் தலைவரிசை;*** inmost or first row of guests at a feast. (செ.அக.).

*[உள் + பந்தி = உட்பந்தி.]*

**உட்பலம்** *utpalam,* பெ. (n.) 1. ***அகவலிமை;*** reserve strength, as of one's physique, property, friends, or fighting force. 2. ***ஆண்மை;*** vitality 3. ***துணைவர் வலிமை;*** supporter's strength. 4. ***செல்வ வலிமை;*** wealth strength. 5. ***படை வலிமை;*** military strength. (செ.அக.).

*[உள் + பலம் = உட்பலம். த. வலம் > Skt. bala > த. பலம். **உள்வலி** பார்க்க; see ulvali.]*

**உட்பாய்ச்சல்** *utpāyccal,* பெ. (n.) ***உள்ளே மருந்தைப் புகட்டல்;*** lit. throwing in, the act of passing a liquid or a medicine in liquid form into a part of the body such as the rectum or a blood vessel. (சா.அக.).

*[உள் + பாய்ச்சல் = உட்பாய்ச்சல்.]*

**உட்பாயம்** *utpāyam,* பெ. (n.) ***கருவழிதல்;*** abortion.

*[உள் + பாயம் பயத்தல் → பாயம் (பிரசவம்).]*

**உட்பிடி** *utpidi,* பெ. (n.) ***கைவேல்*** (அக.நி.); lance; spear.

க. ஒலவிடு. (அகங்கையின் உட்பாகம்).

*[உடன் + பிடி → உடம்பிடி → உட்பிடி.]*

**உட்பிரசவம்** *utpirasavam,* பெ. (n.) ***உட்பாயம்*** பார்க்க; see *utpāyam.* (சா.அக.).

*[உள் + பிரசவம் = உட்பிரசவம். பயத்தல் → பாயம் → Skt prasava > த. பிரசவம்.]*

**உட்பிரிவு** *utpirivu,* பெ. (n.) ***ஒன்றின் பல வகைகளுள் ஒன்று; உள்பாகம்;*** subdivision. (சேரநா.).

ம. உள்பிரிவு.

*[உள் + பிரிவு.]*

**உட்புகவு** *utpugavu*, பெ. (n.) ***உள்ளே புகுகை;*** act of entering as into a room or a house. (செ.அக.).

*[உள் + புகவு புகு → புகவு.]*

**உட்புகு-தல்** *utpugu-*, 21. செ.கு.வி. (v.i.) 1. ***உள்ளே புகுதல்;*** to get into, enter. "உட்புகுந் தென்னுளமன்னி" (திருவாச 31.3.) 2. ***ஆழ்ந்து கவனித்தல்;*** to enter deeply into, get into the heart of. அந்தச் செய்தியை உட்புகுந்து பார் (உ.வ.). (செ.அக.).

ம. உள்புகுக; க. ஒளவோகு, ஒளபுகு.

*[உள் + புகு - உட்புகு → உட்புகு-தல்.]*

**உட்புண்** *utpun*, பெ (n.) 1 ***உள்ளாகவிருக்கும் ஆறாப்புண்;*** internal or deep seated ulcer 2. ***உள்ளகத் திலேற்படும் புண்;*** inflammation of internal organs 3. ***புரைப்புண்;*** scar with a sinus. (சா.அக.).

ம. உள்புண்ணு

*[உள் + புண் = உட்புண்.]*

**உட்புரவு** *utpuravu*, பெ. (n.) ***அரசினைச் சாராத அறப் புறம்;*** endowed land. "நாட்டு நீங்கலாய் உட்புரவாய்த் தேவதானமாக" (S.I.I.ii. 509). (செ அக.).

*[உள் + புரவு = உட்புரவு.]*

**உட்புரை** *utpurai*, பெ. (n.) 1. ***உட்டுளை;*** tubular cavity. 2. ***உள்மடிப்பு;*** small inner folds of a garment. 3. ***மந்தணம்;*** secret part of a matter. (W.) (செ.அக.).

*[உள் + புரை = உட்புரை.]*

**உட்புளகம்** *utpulagam*, பெ. (n.) 1. ***மயிர்க் கூச்சிடல்;*** hair on ends through joy or rapture. (சா.அக.). 2. ***மெய்சிலிர்-த்தல்*** பார்க்க; see *meycilir*.

*[உ.ள் + புளகம் = உட்புளகம்.]*

**உட்புறக்குடி** *utpura-k-kudi*, பெ. (n.) ***நிலவுரிமையில்லா விடினும், நீண்டகாலப் பயன்படுத்தத்தால் வாரஞ் செலுத்திக் கொண்டுவரும் வரை அந்நிலத்திற்கு உரிமையுள்ளவனான குடியானவன்;*** cultivator who has no title to a piece of land but who by the right of long enjoyment, cannot be dispossessed as long as he pays the stipulated rent. (செ.அக.).

*[உள் + புறம் + குடி.]*

**உட்புறம்** *utpuram*, பெ. (n.) ***உட்பக்கம்;*** inner side of a thing. (செ.அக.).

*[உள் + புறம் = உட்புறம்.]*

**உட்புறம்பாதல்** *utpurambādal*, பெ. (n.) ***உட்பக்கம் வெளிப்பக்கமாதல்;*** assuming a perverse position or the turning inside out, etc. as in inversion of the womb. (சா.அக.).

*[உள் + புறம்பு + ஆதல்.]*

**உட்புறம்பின்மை** *utpurambinmai*, பெ. (n.) ***இடையீ டின்மை*** (நாநார்த்த 733.); continuity, non-interruption. (செ.அக.).

*[உள + புறம்பு + இன்மை.]*

**உட்புறவு** *utpuravu*, பெ. (n.) ***உட்புரவு*** பார்க்க; see *utpuravū*. (ஆ.அக.).

*[உள் + புறவு = உட்புறவு (கொ.வ.).]*

**உட்புறவுறுப்புகள்** *utpuravuruppugal*, பெ (n.) ***உடம்பி னுள்ளேயிருக்கும் நுரையீரல், தாமரைக்காய், கல்லீ ரல், இரைப்பை முதலியன;*** the internal organs of animals such as the lungs, the heart, the liver, the stomach and the other viscera (சா.அக.).

*[உள் + புறம் + உறுப்புகள் = உட்புறவுறுப்புகள்.]*

**உட்பூசை** *utpūsai*, பெ. (n.) ***மனத்தகப் பூசை*** (சி.சி. 2.28); mental and spiritual worship. (செ.அக.).

*[உள் + பூசை = உட்பூசை பூசை = பூக்களைக் கொண்டு செய்வது. பூ + செய் - பூசை.]*

**உட்பேதம்** *utpēdam*, பெ. (n.) ***அகவேறுபாடு*** (சி.போ.பா. 1); internal or sectional difference, subdivision, opp. to புறப்பேதம். (செ.அக.).

*[உள் + பேதம் = உட்பேதம்.]*

**உட்பொய்** *utpoy*, பெ. (n.) ***உள்ளீடற்ற பொருள்;*** hollow, unsubstantial thing. உட்பொய்யான காளாம்பி (சிறு பாண். 134, உரை) (செ.அக.).

*[உள் + பொய் = உட்பொய்.]*

**உட்பொருள்** *utporul*, பெ. (n.) 1. ***உண்மைக் கருத்து;*** real purport or significance. "வேதத்தினுட்பொருள்" (திவ். கண்ணிநுண். 8). 2. ***மறைபொருள்;*** secret or esoteric meaning. 3. ***உட்பயன்*** (ஆ.அக.); intrinsic benefit. (செ.அக.).

ம. உள்பொருள்.

*[உள் + பொருள் = உட்பொருள்.]*

**உட்போடு-தல்** *utpōdu-*, 19 செ.குன்றாவி. (v.t.) 1. ***வயமாக்குதல்;*** to entice, coax, wheedle. அவனை உட்போட்டுக் கொண்டு காரியம் நடத்துகிறான். 2. ***காயச் செய்தல்*** (ஆ.அக.); to cause to dry. 3. ***வாட்டுதல்*** (ஆ.அக.); to wither. (செ.அக.).

*[உள் + போடு = உட்போடு → உட்போடு-தல்.]*

**உடக்கு$^1$-தல்** *udakku-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***செலுத்துதல்;*** to dart or shoot, as an arrow. "வில்வாங்கி யுடக்குஞ் சரத்தால்" (மாறன. பா. 660). 5. செ.கு.வி. (v.i.) 2. ***நாணிற்செறிதல்*** (மாறன.பா. 374); to be fitted to the string of the bow, as an arrow. (செ.அக.).

*[ஒடுக்கு → உடுக்கு → உடக்கு.]*

**உடக்கு$^2$-தல்** *udakku-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***உள்ளீ டின்றி யிருத்தல்;*** to lack strength or solidity; to be tubular, to be hollow. (Tinn.) (செ.அக.).

*[உணக்கு → உடக்கு.]*

**உடக்கு**[3] *udakku,* பெ (n.) 1 ***உடல்;*** body "உடகலைத் தகர்த்தே யுயிரையமன் கொள்கையிலே" (பட்டினத்துப் பக். 260). 2. ***உள்ளீடின்மை;*** hollowness. (Tinn) (செ.அக.)

*[விடக்கு → உடக்கு]*

**உடக்கு**[4] *udakku,* பெ. (n.) ***திருகாணிச் சுரையி னுட்சுற்று*** (வின்.), thread of a screw. (செ.அக.)

*[ஒடுக்கு → உடுக்கு → உடக்கு]*

**உடக்கெடுத்துப்போ-தல்,** *udak-k-eduttu-p-pō-,* 15 செ.கு.வி (v.i.) ***உடம்புமிக மெலிதல்;*** to grow lean and emaciated, to become skin and bone. (Loc.) (செ.அக.).

*[உணக்கு → உடக்கு + எடுத்து + போ]*

**உடங்கு** *udangu,* பெ (n) ***பக்கம்;*** propinquity, side, nearness "எமதுடங்கிற் பலித்ததோ" (விநாயகபு. 622, 19). கு.வி.எ. 1 ***ஒத்து;*** amicably, harmoniously. "உடங்குயிர் வாழ்க வென்று" (மணிமே 10.664) 2. ***ஒருபடியாக;*** (மணிமே 10, 64, உரை.); in the same manner 3. ***சேர;*** together, closely. "தடந்தோட் கொப்ப வுடங்கணிந்து" (பெருங். மகத. 2, 231). 4. ***உடனே;*** immediately "ஒலிகேட்டோ னுடங்கெழில் யானையங் குண்டென வுணர்தல்" (மணிமே. 27, 32).

*[உடன் → உடங்கு (வே.க 43.)]*

**உடங்கோடி** *udangōdi,* பெ. (n.) ***இண்டு*** (பெரியமாட். 160); tiger stopper. (செ.அக.).

**உடசம்**[1] *udaśam,* பெ. (n.) ***இலைக்குடில்;*** hut made of leaves, hermit's thatched hut. "உடசமேற்படரு மாடன் மென்கொடி" (சேதுபு நைமி. 12) (செ.அக.).

*[உலவை → உலசம் → உடசம்.]*

**உடசம்**[2] *udaśam,* பெ. (n.) ***வெட்பாலை*** (தைலவ. தைல. 72); ivory tree

*[உலவை → உலசம் → உடசம்.]*

**உடசிப்பி** *udaśippi,* பெ. (n.) ***சிப்பிமுத்து;*** oyster pearl as distinguished from pearls got from other sources. (சா.அக.).

*[உடசம் + சிப்பி = உடசற்சிப்பி → உடற்சிப்பி → உடசிப்பி.]*

**உடணம்** *udaṇam,* பெ (n.) 1. ***இஞ்சி;*** ginger. 2. ***மிளகு;*** pepper. 3. ***சுக்கு;*** dried ginger. 4. ***திப்பிலி மூலம்;*** root of piper longum - Piper cubeba. (சா.அக.).

*[உல் → உள் → உடு → உடணம்.]*

**உடந்தை** *udandai,* பெ. (n.) 1. ***சேர்க்கை;*** union. "மனைவியா மனந்தையோடுடந்தையாய்" (மச்சபு. ஆதிசிருட்டி. 15). 2. ***துணை;*** alliance, support, abetment. "உடந்தையாய்த் திரிவாரும்" (இராமநா. அயோத். 4). 3. ***உறவு;*** relationship. எனக்கும் அவனுக் கும் உடந்தையில்லை. (உ.வ.) 4. ***கூட்டாள்;*** companion.

ம. உடந்த, க., து. ஒட, தெ. ஒட

*[உடன → உடநதை (வே.க 43)]*

**உடந்தைக்குற்றவாளி** *udandai-k-kuṟṟavāli,* பெ. (n.) ***சேர்க்கைக் குற்றவாளி;*** a better of an offence, co-offender, accomplice (செ.அக.)

*[உடன் → உடநதை + குற்றவாளி]*

**உடந்தையாதல்** *udandai-y-ādal,* பெ (n.) 1 ***ஒருமித் தல்;*** coalese. 2. ***ஒன்றுபட்டிருத்தல்;*** combine into one. (ஆ அக.).

*[உடந்தை + ஆதல்]*

**உடப்பிறந்தாள்** *uda-p-piṟandāḷ,* பெ. (n.) ***உடன்பிறந்த வள்;*** sister. (செ.அக.).

*[உடன் + பிறந்தாள் = உடன்பிறந்தாள் → உடப்பிறந்தாள் (கொ வ.).]*

**உடப்பிறந்தான்** *uda-p-piṟandāṉ,* பெ. (n.) ***உடன்பிறந்த வன்;*** brother

ம. உடப்பிறன்னவன், க. ஒடவுட்டி தவனு, தெ. தோடபுட்டின வாடு.

*[உடன் + பிறந்தான் → உடன் பிறந்தான் → உடப்பிறந்தான் (கொ வ).]*

**உடப்பிறப்பு** *uda-p-piṟappu,* பெ (n.) 1. ***உடன்பிறந்த வன்-ள்;*** one born of the same parents, brother or sister. 2. ***தம்மக்கள்; பிறவிகள்;*** brotherhood, fraternity. (செ.அக.).

ம. உடப்பிறப்பு, உடப்பிறவி, க. ஒடவுட்டித.

*[உடன் + பிறப்பு = உடன்பிறப்பு → உடப்பிறப்பு (கொ.வ.).]*

**உடப்பு**[1] *udappu,* பெ. (n.) ***துறட்டு முள்*** பார்க்க (மூ.அ.); see *turattumuḷ.* (செ.அக.).

*[ஒடு → ஒடம் → உடம் → உடப்பு.]*

**உடப்பு**[2] *udappu,* பெ. (n.) ***உடைப்பு*** பார்க்க; *see udaippu.*

*[உடைப்பு → உடப்பு.]*

**உடம்** *udam,* பெ. (n.) ***வேலமரம்;*** babool tree. (சா.அக.).

*[ஒடு → ஒடம் → உடம்]*

**உடம்படல்** *udampadal,* பெ. (n.) ***உடன்படு-தல்*** பார்க்க; see *udanpadu-.*

*[உடன் + படல் = உடன்படல் → உடம்படல்.]*

**உடம்படிக்கை** *udampadikkai,* பெ. (n.) ***உடன்படிக்கை*** பார்க்க; see *udanpadikkai.*

ம. உடம்படி, க. ஒடம்படிகெ; தெ. ஒடம்படிக; து. ஒடம்படிகெ.

*[உடன் + படிக்கை = உடன்படிக்கை → உடம்படிக்கை (கொ.வ.).]*

**உடம்படு-தல்** *udampadu-,* 20. செ.கு.வி. (v.i.) ***ஒப்புதல்;*** to consent, agree to acquire.

ம. உடம்பெடுக, க. ஒடம்படு.

*[உடன் + படு = உடன்படு → உடம்படு* ***உடன்படு*** பார்க்க. see *udanpadu.]*

**உடம்படுத்தநோய்** *udampadutta-nōy,* பெ. (n.) ***முக்குற்றக் கோளாறுகளினாலும் மனவருத்தங்களினாலும் இயல்பாகவே உடம்பிலேற்படும் நோய்;*** disease of an idiopathic type due to the morbid diathesia of the body arising from the action of any of the three fundamental bodily humours or from the dynamical energies of the mind (சா அக.).

*[உடம்பு + அடுத்த + நோய்]*

**உடம்படுமெய்** *udampadu-mey,* பெ (n.) ***நிலை மொழி யீற்றிலும் வருமொழி முதலிலும் உள்ள இரண்டு உயிர்களைச் சேர்க்கும் மெய்யெழுத்து*** [அவை 'ய், வ்' என்பன (நன் 162 ).], (gram) consonantal glide 'y' or 'v' which comes in combination of two vowels to prevent a hiatus.

*[உடம்பு + அடு + மெய்]*

**உடம்படுவிலக்கு** *udampadu-vilakku,* பெ. (n.) ***அணி வகையுளொன்று; அஃது உடம்பட்டார் போலக் கூறி விலக்குவது;*** figure of speech (ஆ.அக.).

*[உடன் + படு + விலக்கு]*

**உடம்பறியாமற்போதல்** *udamparyāmarpōdal,* பெ (n.) 1. ***மயக்கமுறல்;*** swooning 2 ***உணர்ச்சியற்றுப்போதல்;*** becoming senseless, to be void of perception. 3 ***மெய்மறத்தல்;*** becoming unconscious (சா அக.).

*[உடம்பு + அறியாமல் + போதல்]*

**உடம்பறியாமை** *udamparyāmai,* பெ (n) 1 ***தன்னை மறத்தல்;*** unconsciousness 2 ***சுழுத்தி நிலை;*** (in yoga philosophy) state of insensibility to one's own surroundings 3 ***மருள்;*** (in religious philosophy) degree of delight that arrests the whole mind or in which the mind is carried away, as it were, from the body, ecstasy. (சா அக )

*[உடம்பு + அறியாமை]*

**உடம்பாடு**[1] *udambādu,* பெ (n.) 1 ***இசைவு;*** agreement, consent அது எனக்கும் உடம்பாடு (உ வ ) 2. ***ஒற்றுமை;*** union, concord "உடம்பாடிலாதவர் வாழ்க்கை" (குறள். 890) 3. ***உடன்படிக்கை;*** agreement

ம உடம்பாடு, தெ. ஒடம்பாடு

*[உடன் + (படு) → பாடு = உடன்பாடு → உடம்பாடு]*

**உடம்பிடி** *udambidi,* பெ. (n) ***வேல்;*** spear. "உடம்பிடித் தடக்கை" (பெரும்பாண். 76)

*[உடன + பிடி = உடனபிடி → உடம்பிடி = கையில எப்பொழுதும் உடனபிடிததிருக்கும வேல]*

**உடம்பிலை** *udambilai,* பெ. (n.) ***நெடுநாரை*** பார்க்க; see *nedunārai*

*[ஒருகா உடம்பில → உடம்பிலை]*

**உடம்பின்கூறு** *udambinkūru,* பெ. (n.) ***உடற்கூறு*** பார்க்க; see *udarkūru.* (சா.அக.).

*[உடம்பு + இன் + கூறு.]*

**உடம்பு** *udambu,* பெ (n.) 1. ***உடல்*** (குறள் 338.); body 2. ***மெய்யெழுத்து;*** consonant. "உயிரு முடம்புமா முப்பதும்" (நன் 59) 3. ***உயிருக் கிருப்பிடம்*** (ஆ அக ); receptacle for life

ம. உடம்பு, க. ஒடம்பெ, ஒடம்பி, து. உடலு, ஒடாலு; தெ. ஒடலு, ஒளளு

*[உழல → உடல → உடம்பு]*

**உடம்புக்கீடு** *udambuk-k-īdu,* பெ (n.) ***மெய்ம்மறை*** (கவசம்), armour, coat of mail. சீலமே யுடம்புக்கீடு (சீவக 3074 உரை)

*[உடமபு + கு + ஈடு = உடம்புக்கீடு = உடம்புக்கு இட்டுக் (அணிந்து) கொள்வது.]*

**உடம்புகட்டுவிடல்** *udambu-kattu-vidal,* பெ (n) ***உடம்பு தளர்தல்;*** infirmity through old age, to lose strength

*[உடம்பு + கட்டுவிடல்]*

**உடம்புகருத்தல்** *udambu-karuttal,* பெ. (n.) ***காய்ச்சலால் கருத்தல்;*** dosha (defect) arising from fever, asphixiated condition

*[உடமபு + கருத்தல்]*

**உடம்புகாந்தல்** *udambu-kāndal,* பெ. (n.) ***உடம்பு வெப்பங்கொள்ளல்;*** body becoming hot. (சா.அக ).

*[உடமபு + காநதல்]*

**உடம்புதேற்று-தல்** *udambu-tēṟṟu-,* 5 செ கு வி. (v.i.) ***உடம்பை வலிமையாக்குதல்;*** to make one grow strong in body.

*[உடமபு + தேறறு-தல் தேறு → தேறறு (பி.வி ).]*

**உடம்புதேறு-தல்** *udambu-tēru-,* 5. செ.கு வி. (v.i.) ***உடல் நலம் அடைதல்;*** to recover one's health and strength as a convalescent.

*[உடம்பு + தேறு]*

**உடம்புநடுக்கம்** *udambu-nadukkam,* பெ (n.) 1 ***நோய், அச்சம், சினம் முதலியவற்றால் உடம்பில் ஏற்படுமோர் வகை அசைவு;*** trembling arising from disease, fear, anger or excitement 2. ***குளிரினால் உடம்பு உதறல்;*** shivering out of cold.

*[உடமபு + நடுக்கம் நடுங்கு → நடுக்கம்.]*

**உடம்புபிடி-த்தல்** *udambu-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) 1 ***உடம்பிற் சதை உண்டாதல்;*** to pick up flesh. 2. ***உடம்பைக் கையாற் பிடித்து அமுக்குதல்;*** the process of pressing the parts of a person's body, shampooing, to massage, (சா.அக )

*[உடம்பு + பிடி-த்தல்]*

**உடம்பெடு-த்தல்** *udambedu-*, செ.கு.வி. (v.i.) 1. *பிறத்தல்;* to be born with a material body. "படிக்க வுடம்பெடுத்தேன்" (இராமநா ஆரன் 25). 2 *செய லுடையனாதல்;* to lift oneself up, to have the strength to move அடித்த அடியால் அவன் உடம்பெடுக்க முடிய வில்லை. 3 *உடம்பு தேறல்;* recover from ailment. ஆ.அக ).

*[உடம்பு + எடு-த்தல் எடுத்தல் = பிறத்தல், தோன்றுதல், செயற்படல், நலமுறல் ]*

**உடம்பை** *udambai*, பெ. (n.) *கலங்கற்புனல்* (பிங்.); turbid water.

*[உழம்பு → உழம்பை → உடம்பை உழமபுதல் = கலஙகுதல் ]*

**உடம்பைத்தேற்றல்** *udambai-t-térral*, பெ (n.) 1 *நோயா லிளைத்த உடம்பை மருந்து கொடுத்துத் தேற்றுதல்;* toning up the body with medicine 2 *இளைத்த உடம்பிற் குத் தகுந்தபடி ஊட்டங்கொடுத்தல்;* strengthening the body by nourishment during convalescence 3 *உடம்பை வலுவடையச்செய்தல்;* invigorating the system (சா அக.).

*[உடமபு + ஐ + தேற்றல் தேறு → தேற்று → தேற்றல் ]*

**உடம்பொடுபுணர்த்தல்** *udambodu-punarttal*, பெ. (n.) *கூறும் இலக்கியத்திலேயே சொல்ல வேண்டிய தொன்றை உய்த்துணர வைக்கை* (குறள், 27 உரை); device in literary art in which an author seeks skilfully to suggest by implication certain ideas which, being quite germane to the subject he is dealing with, would in his opinion, help to make his presentation quite clear to the reader, but which he (the author) could not, except as digression, proceed to elaborate in the regular course in his work

*[உடமபு + ஒடு + புணர்த்தல.]*

**உடமுள்** *udamul*, பெ (n) *வேல மரத்தின் முள்;* thorn of the Acacia tree (சா.அக.).

*[ஒடு → உடு + முள் - உடமுள் ]*

**உடமை** *udamai*, பெ (n.) 1 *ஒருவனுக்கு உரியதான தன்மை;* ownership, proprietorship 2. *உடனிருக்கும் பொருள்;* belongings. 3. *செல்வம், பொருள்;* wealth, property.

ம. உடம, க. ஒடமெ, தெ. ஒடமி, ஒடமை; து. ஒடவெ; பட. ஒடமெ, கோத. ஒடய்ன் (பொருளுக்குரியவர்)

*[உடு → உடை → உடைமை → உடமை (வே க ).]*

**உடர்** *udar*, பெ. (n.) *உடம்பு;* body. "உடரெலா முயிரிலா" (கம்பரா குக.70). (ஆ அக.)

*[உடல் → உடர் ஒ நோ. சாம்பல் → சாம்பர். பந்தல் → பந்தர் ]*

**உடர்கரி-த்தல்** *udarkari-*, 4. செ.கு வி (v.i.) *உடற்கரி* பார்க்க; see *udarkari*

*[உடல் + கரி - உடற்கரி → உடர்கரி.]*

**உடல்**[1] *udal*, பெ (n.) 1. *உடம்பு* (பிங்.); body. 2. *மெய்யெழுத்து;* consonant. "உடன் மேலுயிர் வந்து" (நன் 204) 3 *பிறவி;* birth "தோலினுடையாலும் தீரா துடல்" (சைவச பொது 403). 4 *கருவி;* means, instrument. "பகவதனுசந்தானத்துக்குடலாமே" (ஈடு. 1,2,8)- 5. *பொன்* (திவா ), gold. 6. *பொருள்;* money, the wherewithal. "விளக்கேற்றற் குடலில னாப" (பதினொ திருத்தொண் 54) 7 *ஆடையின் கரை யொழிந்த பகுதி;* main body of a cloth, excluding the border spaces உடல் அரக்கு (உ.வ.). 8 *ஆடையி னிழை;* texture of a cloth as judged by the warp and woof 9 *உயிருடனிருப்பது;* alive 10 *உடலிருக் கும் கூடு;* skeletal frame.

ம. உடல் க. ஒடல், தெ. ஒடலு, ஒன்று; கோத. ஒட்ள்வ, துட. விடன். து. உடலு, உடாலு, கூ. ஒல்லு

*[உழல் → உடல் ]*

**உடல்**[2] *udal*, பெ (n.) *பெரிய முரசு;* big drum (Loc.)

*[உதள் → உதல் → உடல் உதள் பார்கக; see udal ஒ.நோ Hind dhol ]*

**உடல்(லு)-தல்** *udal-*, 13., செ கு.வி (v.i) 1. *சீற்றங் கொள்ளுதல்;* to be enraged "உடன்று மேல் வந்த வம்ப மளளரை' (புறநா 77,9). 2. *மாறுபடுதல்;* to quabble; to bicker, wrangle "உடலினேனல்லேன்" (ஐங் குறு 66). 3 *போர் புரிதல்* (திவா ), to fight, wage war. 4. *ஆசையால் வருந்துதல்;* to pine for, yearn after. "உள்ளமுடன் றெழுகின்றதே" (சீவக 2005) 5 *ஒளிர் தல்* (ஆ.அக ), to shine, glitter.

*[உள் → உடு → உடல் (வெப்பமடைதல்) → உடலு-தல் ]*

**உடல்கனத்தல்** *udalkanattal*, பெ (n.) *உடம்பு பருத்தல்;* growing stout and heavy. (சா.அக.).

*[உடல் + (கனம்) கனத்தல் ]*

**உடல்கனப்பு** *udal-kanappu*, பெ (n.) *உடம்பு காந்தல்;* growing hot (சா அக.)

*[உடல + கனப்பு கனல் → கனப்பு ]*

**உடல்காய்தல்** *udal-kāydal*, பெ. (n) *காய்ச்சல்;* suffering from fever (சா.அக )

*[உடம்பு + காய்தல (காய் = காய்தல், வெபபமடைதல்) ]*

**உடல்தளிர்காணல்** *udal-talir-kānal*, பெ. (n.) *மெலிந்த உடம்பு மறுபடியும் சதைபற்றல்;* putting on flesh. (சா அக.).

*[உடல் + தளிர் + காணல் ]*

**உடல்வளர்ச்சி** *udal-valarcci*, பெ. (n.) 1 *உயிர் வாழ்வ தற்கு வேண்டும் பொருள்கள்;* necessaries of life. "திண்ணெனவென் னுடல் விருத்தி தாரீரேயாகில்" (தேவா. 678, 9). 2 *உடல் வளருகை;* growing physically.

*[உடல் + வளர்ச்சி.]*

**உடல்வாசகம்** *udal-vāšagam,* பெ. (n.) 1. ***முதலும் முடிவு மொழிந்த மடல்*** (எழுத்தாவணம்) ***பாகம்*** (வின்.); main body of any writing exclusive of the greeting and the signature, as in a letter (W.).

*[உடல் + வாசகம். வாசி → வாசகம்.]*

**உடல்விடாவீடு** *udal-vidā-vīdu,* பெ (n.) ***உடலிருந்த வீடு*** பார்க்க; see *udalirunda-vīdu.*

*[உடல் + விடா + வீடு.]*

**உடல்விடுவீடு** *udal-vidu-vīdu,* பெ. (n.) ***உடலிறந்த வீடு*** பார்க்க; see *udaliranda-vīdu.*

**உடல்வினை** *udal-viṉai,* பெ. (n) ***முன்வினை;*** fruits of one's previous karma that are experienced in the present life. ''உடல்வினையோடும் ஆண்டுப் பிறந்தது'' (சி போ பா. 8,1,1). (செ அக.)

*[உடல் + வினை உடலோடு வந்த வினைப்பயன் ]*

**உடல்வெதுப்பு** *udal-veduppu,* பெ. (n) ***உடம்பை யடுத்த சூடு;*** bodily heat, animal heat. (சா.அக.).

*[உடல் + வெதுப்பு, வெதும்பு → வெதுப்பு ]*

**உடல்வெள்ளை** *udal-vellai,* பெ (n) ***பக்கங்கள் மட்டும் சாயமூட்டிய வெள்ளையுடை*** (யாழ்ப்.); cloth that is dyed only at the borders leaving the main body of the cloth white. (செ.அக )

*[உடல + வெள்ளை. உடம்பு = புறத்தே வெளிப்படக் காணும் பகுதி ]*

**உடல்வேதிச்சி** *udal-vēdicci,* பெ (n.) ***கொடி வேலி*** பார்க்க, see *kodivēli.*

**உடல்வேலை** *udal-vēlai,* பெ. (n) ***ஓவியம் வரைதல், வண்ணம் பூசுதல் ஆகியவற்றின் அடிப்படை வேலை;*** body of a work, chiefly applied to painting or any other art work. (செ.அக.)

*[உடல் + வேலை.]*

**உடலக்கண்ணன்** *udal-a-k-kaṇṇaṉ* , பெ. (n.) ***உடல் முழுமையும் கண்கள் கொண்ட இந்திரன்*** (கல்லா.1); Indra who has eyes all over his body (செ.அக.)

*[உடல் + அ + கண்ணன அகரம் ஆறனுருபு உடலக்கண்ணன் = உடம்பெல்லாம் கணணுடையவன். கண் = துளை, துளை யடையாளம் ]*

**உடலதிர்ச்சி** *udal-adircci,* பெ. (n.) ***காயம் அல்லது மன வருத்தத்தினால் நரம்புக் குண்டாகு மதிர்ச்சி;*** sudden vital depression due to an injury or emotion, acting on the nervous system-shock. (சா.அக.)

*[உடல் + அதிர்ச்சி.]*

**உடலந்தம்** *udal-andam,* பெ. (n.) ***உடம்பழிவு*** பார்க்க; see *udambalivu* (செ.அக.).

*[உடல் + அந்தம் ]*

**உடலம்** *udalam,* பெ. (n.) ***உடம்பு;*** body. ''சலந்தர னுடலந்தடிந்த''. (தேவா. 584,7). (செ.அக.).

ம. உடலம்.

*[உடல் → உடலம்.]*

**உடலல்** *udalal,* தொ.பெ. (vbl.n.) ***உடல்(லு)-தல்*** பார்க்க; see *udal-.* (செ.அக.).

*[உடல் + அல்.]*

**உடலவருத்தனை** *udala-varuttaṉai,* பெ. (n.) ***மெய்யாற் செய்யும் நடனக்குறி*** (சிலப். 3,16, உரை); gesticulation by means of movements of the body. (செ அக.).

*[உடல் + அ + வருத்தனை த. வருத்தல். Skt vartana. வருத்தனை அகரம் சாரியை.]*

**உடலற்பனை** *udalarpaṉai,* பெ (n.) ***திப்பிலிப்பனை;*** elephant's palm. (சா.அக.).

*[உடலல் + பனை.]*

**உடலற்றநாள்** *udalarranāl,* பெ. (n.) ***மாழ்கு*** (மிருகசீரிடம்), ***நெய்மீன்*** (சித்திரை), ***பறவை*** (அவிட்டம்) ***ஆகிய நாள்கள்*** (சோதிட சிந்.40); naksatras, mirukacīridam, chittirai, and avittam, their earlier halves belonging to certain signs of the Zodiac and the latter halves to the next signs. (செ அக ).

*[உடல் + அற்ற + நாள் இந்நாளில் மனை கோலக்கூடாது ]*

**உடலனல்** *udal-aṉal,* பெ. (n.) ***உடம்பில் நிற்கும் சூடு;*** bodily temperature, animal heat. (சா.அக.).

*[உடல் + அனல் ]*

**உடலாட்டம்** *udal-āttam,* பெ. (n.) ***மாட்டுக் குற்றவகை*** (பெரியமாட்.20); defect in cattle. (செ.அக.).

*[உடல் + ஆட்டம் ]*

**உடலிம்பனை** *udal-imbaṉai,* பெ. (n.) ***கூந்தற்பனை;*** elephant's palm. (சா.அக.).

*[உடலும் + பனை - உடலும்பனை → உடலிம்பனை. (கொ வ.)]*

**உடலிரண்டுயிரொன்று** *udaliranduyiroṉru,* பெ. (n.) 1. ***கிளிஞ்சல்;*** shell 2. ***நட்பு;*** friendship.

*[உடல் + இரண்டு + உயிர் + ஒன்று ]*

**உடலிருந்தவீடு** *udalirunda-vīdu,* பெ. (n.) ***உடலொடு பேறு, உயிர்ப்பேறு*** (சீவன் முத்தி), (ஞானவா ஞான. விண் 36), emancipation of the soul while it is still in the bondage of the flesh, opp to. உடலிறந்தவீடு. (செ.அக.).

*[உடல் + இருந்த + வீடு ]*

**உடலிலான்** *udal-ilāṉ,* பெ. (n) ***சிவனின் கனலால் எரிக்கப்பட்டுச் சாம்பலாக்கியதால் உடலற்று இருக்கும் காமன்;*** one who has no body, referring to mythical

Manmadan, the Indian Cupid, whose body was burnt to ashes by the fiery stare of Sivā. (W) (செ அக.).

*[உடல + (இலலான்) இலான]*

**உடலிறந்தவீடு** *uda-liranda-vīdu,* பெ (n.) ***உடல் விட்டபேறு*** (விதேகமுத்தி). (ஞானவா. ஞானவிண் 36). emancipation of the soul after death, opp to உடலிருந்த வீடு (செ அக.).

*[உடல் + இறந்த + வீடு ]*

**உடலுநர்** *udalunar,* பெ. (n.) ***பகைவர்;*** foes. "உடலுநருட்க" (புறநா. 17,36)

*[உடல → உடலு → உடலுநர் ]*

**உடலுருக்கி** *udal-urukki,* பெ (n.) ***கணைச்சூடு*** (பைஷஜ). wasting disease of childhood. (செ.அக ).

*[உடல் + உருக்கி ]*

**உடலூதல்** *udal-ūdal,* பெ. (n.) ***உடம்பு பருத்தல் அல்லது வீங்கல்;*** swelling of the body-edima. (சா அக.).

*[உடல + ஊதல் ஊதல் = பருத்தல் ]*

**உடலெடு-த்தல்** *udal-edu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உடம்பெடு*** பார்க்க; see *udambedu*

*[உடல் + எடு- ]*

**உடலெழுத்து** *udal-eluttu,* பெ. (n.) ***மெய்யெழுத்து;*** consonant. (செ.அக.).

*[உடல் + எழுத்து.]*

**உடவாரம்** *udavāram,* பெ. (n.) ***உடன்வாரம்*** பார்க்க; see *udan-vāram.*

*[உடன் + வாரம் = உடன்வாரம் → உடவாரம் (கொ.வ ).]*

**உடற்கடுப்பு** *udar-kaduppu,* பெ (n.) 1. ***உடம்பினி லேற்பட்ட யெரிவு;*** burning sensation in the body. 2. ***உடல்வெதுப்பு;*** irritation. 3. ***உடம்பின் குத்தல்;*** darting pain in the body as in rheumatism. (சா.அக.).

*[உடல் + கடுப்பு ]*

**உடற்கரி-த்தல்** *udar-kari-,* 4. செ.கு.வி. (v.i.) ***தோள் தட்டுதல்*** (சிலப். 6,49, உரை); pat one's own shoulder, as in challenging (செ.அக.).

*[உடல்+கரி-த்தல், கருத்தல் = செய்தல், கருத்தல் → கரித்தல்.]*

**உடற்கருவி** *udar-karuvi,* பெ. (n.) ***மெய்ம்மறை*** (வின்.); coat of mail, armour. (செ.அக.).

*[உடல் + கருவி.]*

**உடற்கழிவு** *udar-kalivu,* பெ. (n.) ***உடம்பினின்று கழியும் கழிவுகள்*** (மலம், சிறுநீர் முதலியன); waste matter discharged from the body such as, urine, faeces, etc. (சா.அக.).

*[உடல் + கழிவு.]*

**உடற்காப்பு** *udar-kāppu,* பெ. (n.) ***உடற்கருவி*** பார்க்க; see *udarkaruvi.* "இருப்புடற் காப்பினர்" (திருவிளை. நரிபரி. 29) (செ.அக.).

*[உடல + காப்பு ]*

**உடற்காயம்** *udarkāyam,* பெ. (n) ***உடம்பி லேற்பட்ட காயம்;*** physical injury. (சா.அக.).

*[உடல் + காயம்.]*

**உடற்காவல்** *udarkāval,* பெ. (n) ***உடற்கருவி*** பார்க்க; see *udarkaruvi* "ஒன்றானு மறாவுரு வாவுடற் காவலோடும்" (கம்பரா. நாகபா 15). (செ அக.).

*[உடல் + காவல்.]*

**உடற்குற்றம்** *udarkurram,* பெ. (n.) ***மாந்தனின் உடம்புக்கு உளதாகும் பதினெண் குற்றங்கள்;*** eighteen moral and physical imperfections or defects attributed to the human body viz, 1 ***பசி;*** hunger 2 ***நீர் வேட்டல்;*** thirst. 3 ***அச்சம்;*** fear 4. ***வெகுளி;*** anger 5 ***உவகை;*** delight. 6 ***வேண்டல் ஆசை;*** desire. 7 ***நினைப்பு;*** thought 8. ***உறக்கம், தூக்கம்;*** sleep 9. ***நரை;*** grey hair. 10. ***நோய்;*** disease 11 ***சாவு;*** death 12 ***பிறப்பு;*** birth. 13. ***மதம்;*** self-conceit. 14 ***இன்பம்;*** pleasure. 15. ***வியப்பு;*** surprise. 16. ***வியர்த்தல்;*** perspiration 17. ***துன்பம்;*** grief. 18. ***கையறவு;*** inability. (சா அக.).

*[உடல் + குற்றம் ]*

**உடற்குறை** *udarkurai,* பெ. (n.) ***தலையற்ற உடல்; தலையரிந்த மரம்;*** headless body, trunk.

*[உடல் + குறை ]*

**உடற்கூற்றிலக்கணம்** *udarkūrrilakkanam,* பெ. (n.) ***உடம்பி னுறுப்புகளின் தொழில்களையும் அவை களின் தன்மைகளையும் பற்றிக் கூறுமோர் நூல்;*** science of parts of the human body, its structure, frame, quality and also the functions of the several organs. (சா.அக.).

*[உடல் + கூற்று + இலக்கணம் ]*

**உடற்கூற்றுவண்ணம்** *udarkūrruvannam,* பெ. (n.) ***பட்டினத்தடிகள் செய்த ஒரு நூல்;*** treatise by Pattinatt-adigal

*[உடல் + கூற்று + வண்ணம் ]*

**உடற்கூறு** *udarkūru,* பெ. (n.) ***உடல் அமைப்பு; உடலின் கூறு;*** anatomy of the body. (செ.அக.).

*[உடல் + கூறு ]*

**உடற்சி** *udarci,* பெ. (n.) ***சினம்;*** irritation, resentment, anger. "உடற்சி செய்ய" (***சீவக.*** 1078). (செ.அக.).

*[உடல் → உடற்சி ]*

**உடற்பொருள்** *udarporul,* பெ. (n.) ***உடலுக்குள் உண்டாகும் மான்மணத்தி*** (கஸ்தூரி), ***ஆன்மணத்தி*** (கோரோசனை), ***புனுகு, அம்பர் முதலிய பொருள்கள்;*** scented substances such as musk, bezoar, amber etc. found inside, the body of animals. (சா.அக.).

*[உடல் + பொருள்.]*

**உடற்றத்துவம்** *udarrattuvam,* பெ (n) ***உடல்மெய்யியல்*** பார்க்க; see *udalmeyyiyal*

*[உடல் + தத்துவம்.]*

**உடற்றல்** *udarral,* பெ (n) 1. ***பெருஞ்சினம்*** (திவா.); wrath, exasperation 2. ***அழித்தல்*** (ஆ.அக.), destroying 3. ***அலைத்தல்;*** tormenting 4. ***சிதறவடித்தல்;*** damaging 5. ***துரத்தல்;*** chasing 6. ***போர் செய்தல்;*** fighting (ஆ.அக.)

*[உடல் → உடற்று → உடற்றல்.]*

**உடற்றியோர்** *udarriyōr,* பெ. (n) ***சினப்பித்தவர்;*** provocator, enemy "ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே" (புறநா. 419)

*[உடற்று → உடற்றியோர்.]*

**உடற்று[1]-தல்** *udarru-,* 5. செ.குன்றாவி (v.t.) 1. ***பொருதல்;*** to fight 2. ***சிதறடித்தல்;*** to make the enemies flee.

*[உடல் → உடற்று.]*

**உடற்று[2]-தல்** *udarru-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1 ***வருத்துதல்;*** to afflict, torment. "உண்ணின்றுடற்றும் பசி" (குறள், 13). 2. ***சினமூட்டுதல்;*** to provoke, infuriate, enrage. "நின்னுடற்றியோர் நாடே" (புறநா. 4) 3. ***மூண்டு நடத்துதல்;*** push on vigorously as a campaign in war. "அமருடற்றினான்" (பாரத. இராச. 50). 4. ***விடுத்தல்;*** to discharge briskly, as a shower of arrows "பலகோடிபாண முடற்றினான்" (பாரத. பதின்மூ 24). 5. ***கெடுத்தல்;*** to balk, spoil, damage, thwart "ஒல்லுங்கரும முடற்றுபவர்" (குறள், 818).

*[உடறு → உடற்று → உடற்று-தல்.]*

**உடறு-தல்** *udaru-,* செ.கு.வி. (v.i.) ***சினத்தல்;*** to be enraged at. "காலனைத் துண்டமதா வுடறிய சேவடியான்" (தேவா. 524.7) (செ.அக.).

*[உடல → உடறு → உடறு-தல். உடலுதல் = சினத்தல்.]*

**உடன்** *udan,* வி.எ (adv.) 1. ***ஒக்க;*** together with. "உடன்கலந்தார்க்கு" (பு.வெ.10; சிறப்பிற்.9). 2. ***ஒருசேர;*** altogether "உள்ளியவெல்லாம் உடனெய்தும்" (குறள் 309). 3. ***அப்பொழுதே;*** instantly, immediately after, at once. "அட்டுடனுயிரு நல்கி" (கந்தபு. பாயி. 67). - இடை (part) மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு; an instr. ending as in சாத்தனுடன். - கு.பெ.எ. (adj.) 4. ***ஒரே வகுப்பைச் சேர்ந்த;*** belonging to the same class. உடன்மாணாக்கன். (உ.வ.). (செ.அக.)

**உடன்கட்டி** *udan-katti,* பெ. (n.) ***சூட்டடிக் கதிர்களைக் கடாவிட்டுழக்குகை;*** treading out grain sheaves, a second time by buffaloes or bulls. (Loc.). (செ.அக.).

*[உடன் + கட்டு + அடி.]*

**உடன்கட்டை** *udan-kattai,* பெ. (n.) ***கணவன் பிணத்துடன் தானும் இணைந்து வெந்து கொள்வது;*** widow's burning herself in the funeral pyre of her husband.

ம. உடன்கட்ட.

*[உடன் + கட்டை. கட்டை = விறகு.]*

**உடன்கட்டையேறு-தல்** *udan-kattai-y-ēru-* 5. செ.கு.வி (v.i.) 1 ***இறந்த கணவனுடன் ஒன்று கூடித் தீயில் உயிர்விடுதல்;*** to ascend, as a woman, the funeral pyre of her husband, to perform *suttee.* 2. ***பிரியேனென்று நிற்றல்;*** to be inseparable

மறுவ. தலையொடு முடிதல், ஆஞ்சிக் காஞ்சி.

*[உடன் + கட்டை + ஏறு-தல்.]*

போர்க்களத்தில் கணவர் இறந்த பின் தாம் பகைவரால் சிறைப்பிடிக்கப் படலாகாது என நினைத்த மகளிர் பாதுகாப்பு நோக்கில் உடன்கட்டை யேறியும் தீப்பாய்ந்தும் உயிர் மாய்த்துக் கொண்ட தொன்முது வழக்கம் தமிழகத்தில் தானாகவே மறைந்தது வடபுலத்தில் மூடநம்பிக்கையாக வளர்ந்திருந்தது

**உடன்குற்றவாளி** *udankurravāli,* பெ. (n.) ***உடனிருந்து குற்றஞ்செய்தவன்;*** co-offender, accomplice, abettor. (செ.அக.).

*[உடன் + குற்றவாளி. குற்றம் + ஆளி - குற்றவாளி.]*

**உடன்கூட்டத்ததிகாரி** *udan-kūttatt-adigāri,* பெ. (n.) ***சோழர் காலத்துச் சிற்றூர் அவைத்தலைவன்*** (S.I.I iii.35); head of the village assembly in the days of Chola administration. (செ.அக.).

*[உடன் + கூட்டத்து + அதிகாரி.]*

**உடன்கூட்டாளி** *udan-kūttāli,* பெ. (n.) 1. ***கூட்டுப் பங்காளி;*** partner, participator, associate. 2. ***உடனொத்தவன்;*** play fellow, companion, friend; equal in status, age or rank. (செ.அக.).

*[உடன் + கூட்டு + ஆளி - உடன் கூட்டாளி.]*

**உடன்கேடு** *udan-kēdu,* பெ. (n.) ***உடனிருந்து துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளுதல்;*** be a companion in grief. "தம்மொடுடன் கேடான நெஞ்சுமேயா யிருந்தது" (ஈடு, 10, 6, ப்ர.). (செ.அக.).

*[உடன் + கேடு.]*

**உடன்கேடன்** *udan-kēdan* பெ. (n.) ***உடனிருந்து துன்புறுபவன்;*** sharer with another of his grief and sorrow "உடன்கேடனாய் நின்றுநோக்கும்" (ஈடு. 1,1,3). (செ.அக.).

*[உடன் + கேடன்.]*

**உடன்கையில்** *udan-kaiyil,* கு.வி.எ. (adv.) ***உடனே;*** immediately, as soon as. (Loc.) 'உடன் கையிலே கூலி கிடைக்குமா?' (இ.வ.) (செ.அக.).

*[உடன் + கை + இல்.]*

**உடன்பங்காளி** *udan-pangāli,* பெ. (n.) ***கூட்டுக்காரன்*** (ஆ.அக.); co-partner.

*[உடன் + பங்காளி.]*

**உடன்பங்கு** *udaṉ-pangu,* பெ (n.) ***கூட்டுப் பங்கு;*** joint share, joint heirship (W.) (செ அக )

*[உடன + பங்கு ]*

**உடன்படல்** *udaṉ-padal,* தொ பெ (n.) 1 ***இசைதல்;*** agreeing. 2. ***உடன்படிக்கை செய்தல்;*** entering into an agreement 3. ***இசைதல், எழுவகை மதத்தினொன்று;*** one of the seven *mathams* 4. ***சேரல்;*** joining 5 ***பொருந்தல்;*** sticking 6. ***ஒட்டல்;*** adhering 7. ***நேர்தல்;*** happening.

*[உடன்படு + அல் ]*

**உடன்படி** *udaṉ-padi,* பெ (n ) ***ஒப்பந்தம்;*** agreement (செ அக ).

*[உடன் + படி படு → படி ]*

**உடன்படிக்கை** *udaṉpadikkai,* பெ. (n.) 1. ***ஒப்பந்தம்;*** contract, agreement, covenant, treaty 2 ***உறுதிப்பாடு;*** promise, assurance அவனுக்கு அவன் உடன்படிக்கை சொல்லுகிறான். (R.).

**ம.** உடமபடி, **க.** ஒடம்படிகெ, **தெ.** ஒடம்படிக.

*[உடன்படு → உடன்படிக்கை ]*

**உடன்படிக்கைக் கணக்கு** *udaṉpadikkai-k-kaṇakku,* பெ (n ) ***பேரேடு;*** ledger. (C G). (செ அக )

*[உடன் + படிக்கை + கணக்கு ]*

**உடன்படு[1]-தல்** *udaṉ-paḍu-,* 20. செ.கு வி. (v.i.) ***இசைதல்*** (பிங்.); to agree, assent, consent, acquiesce, yield. (செ.அக.).

**க.** ஒடம்படு, **தெ.** ஒடம்படு.

*[உடன் + படு.]*

**உடன்படு[2]-த்தல்** *udaṉpaḍu-,* 17. செ.குன்றாவி (v.t.) ***உடன்படுத்து-தல்*** பார்க்க; see *udaṉpaduttu*

**உடன்படுத்து-தல்** *udaṉpaduttu-,* 5 செ குன்றாவி. (v.t.) ***இணைத்தல்;*** persuade into giving consent, make one yield or agree. ''இசைந்துடன் படுத்தினான்'' (பாரத. குருகுல. 44).

**க.** ஒடம்படிசு, **தெ.** உடம்பருன்சு.

*[உடன் + படுத்து ]*

**உடன்பறிமுதல்** *udaṉ-parimudal,* பெ. (n.) 1 ***முறைமன் றக் கட்டளைப்படி பொருட் பறிமுதல் செய்கை;*** immediate seizure of property according to legal decree. 2. ***தீர்ப்பளிக்கும் முன்னே சொத்தைக் கைப்பற்றுகை;*** attachment before judgement.

*[உடன் + பறிமுதல்.]*

**உடன்பாட்டுவினை** *udaṉpāttu-viṉai,* பெ. (n.) ***உடன் பாட்டைத் தெரிவிக்கும் வினை;*** affirmative verb, opp.to எதிர்மறைவினை. (செ.அக.).

*[உடன்படு → உடன்பாடு → உடன்பாட்டு + வினை.]*

**உடன்பாடு** *udaṉpāḍu,* பெ. (n.) 1. ***இசைகை*** (பிங்.); consent, accord, acquiescence. 2. ***மனப்பொருத்தம்;*** concord, harmony, unanimity. ''உடன்பாடிலாத மனைவி தொழிலின்னா'' (இன்னா. 12).

**ம.** உடம்பாடு, **தெ.** ஒடபாட்டு

*[உடம்பாடு → உடன்பாடு (வேக 43) ]*

**உடன்பாடுவான்** *udaṉ-pāduvāṉ,* பெ (n.) ***பக்கப் பாட்டுக்காரன்*** (S.I.I. vii, 65), supporting chorus, accompanist 'வீணை வாசிப்பானுக்கும் உடன் பாடுவா னுக்கும்' (உ.வ.). (செ.அக ).

*[உடன + பாடுவான பாடு → பாடுவான்.]*

**உடன்பிறந்தார்** *udaṉ-pirantār,* பெ. (n.) ***கூடப்பிறந்தவர்;*** children of the same parents, brothers or sisters or both. ''உடன் பிறந்தார் சுற்றத்தார்'' (வாக்குண் 20).

**மறுவ.** பிறவர்.

*[உடன் + பிறந்தார் ]*

**உடன்பிறந்தாள்** *udaṉ-pirandāḷ,* பெ. (n.) ***கூடப் பிறந்த வள்;*** sister (செ.அக.).

**மறுவ.** பிறவி.

*[உடன் + பிறந்தாள் ]*

**உடன்பிறந்தான்** *udaṉ-pirandāṉ,* பெ. (n.) ***கூடப் பிறந்த வன்;*** brother.

**மறுவ.** பிறவன்.

*[உடன் + பிறந்தான் ]*

**உடன்பிறப்பு** *udaṉ-pirappu,* பெ. (n.) 1. ***உடன்பிறந்த தன்மை;*** state of being born of the same parents. ''இன்றொடுந் தவிர்ந்த தன்றே யுடன்பிறப்பு'' (கம்பரா. கும்பக. 166) 2. ***கூடப்பிறந்தவர்*** (நல்வ. 24); person or persons born of the same parents. (செ.அக.).

**ம.** உடப்பிறப்பு. உடப்பிறவி. **க.** ஒடகுட்டிக.

*[உடன் + பிறப்பு.]*

**உடன்புணர்ப்பு** *udaṉ-puṇarppu,* பெ. (n.) ***சமகூட்டு*** (மணிமே. 227,243) (அரும்.); inseparable concomittance (Log ).

*[உடன் + புணர்ப்பு ]*

**உடன்போக்கிடையீடு** *udaṉpōkk-iḍai-y-īḍu,* பெ. (n.) ***இது நம்மனையில் வரைந்து கொள்ளாது தன்னூரில் வரைந்தானென்று, தலைவி சுற்றத்தார் வெறுப்படைத லால் தலைவியை உடன்கொண்டு போகும் போது தலைவி சுற்றத்தாரிடை ஈடுபட்டு மீண்டு வருதல்;*** intimate movement of the heroine with her own relations before going away with her lover since after elopement the heroine will have to marry the hero in his place against the wishes of her people.

*[உடன்போக்கு + இடையீடு ]*

இது. போக்கறிவுறுத்தல், வரவறிவுறுத்தல், நீக்கமிரக்கம், மீட்சி யென நால் வகையினையும், நீங்கும் கிழத்தி பாங்கியர் தமக்குத் தன் செலவுணர்த்தி விடுத்தல், தலைமகன் தன் செலவின்னாட் குணர்த்தி விடுத்தல் நற்றாய்க் கந்தணர் மொழி தல், தலைவற்குணர்த்தல், தலைமகளைத் தலைமகன் விடுத் தல், தமருடன் செல்பவள் அவன் புறநோக்கிக் கவன்றரற்றல் எனும் விரிவினையு முடைத்து. (அபி.சிந்).

**உடன்போக்கு** *udaṉ-pōkku,* பெ. (n.) 1. ***பெற்றோரறியா மல் தலைவி தலைவனுடன் செல்கை*** (நம்பியகப். 181); an unmarried young woman going away with her lover to his own place without the knowledge of her parents. 2. ***கூடப்போதல்;*** accompanying. போக்கறி வுறுத்தல் முதலாகத் தேற்றலீறாகிய வெட்டும் உடன் போக்கினுள் அடங்கும்.

க. ஒடவோகு.

*[உடன் + போக்கு.]*

**உடன்போக்குவிரி** *udaṉ-pōkku-viri,* பெ. (n.) ***பாங்கி தலைவர்க் குடன்போக் குணர்த்தல் முதலாகத் தலை வன்றன் பதியடைந்தமை தலைவிக் குணர்த்த லீறா கிய பதினெட்டு;*** process of revelation by the heroine's friend the news of elopement. (ஆ.அக ).

*[உடன் + போககு + விரி.]*

**உடன்மாணாக்கன்** *udaṉ-māṇākkaṉ,* பெ. (n.) ***உடன்பயி லும் மாணாக்கன்;*** classmate. (செ.அக.).

*[உடன் + மாணாக்கன்.]*

**உடன்வந்தி** *udaṉ-vandi,* பெ. (n.) ***கூடவே வருவது;*** inseparable companion, as one's shadow. 'உடன் வந்தி யான வல்வினை' (ஈடு, 5,8,5). (செ.அக.).

*[உடன் + வந்தி.]*

**உடன்வயிற்றோர்** *udaṉ-vayiṟṟōr,* பெ. (n.) ***உடன் பிறந்தவர்*** (சிலப். 10,227); those born of the same mother like brothers and sisters. (செ.அக.).

க. ஒடகுட்டு.

*[உடன் + வயிற்றோர். வயிறு → வயிற்றோர்.]*

**உடன்வயிறு** *udaṉ-vayiṟu,* பெ. (n.) ***உடன் வயிற்றோர்*** பார்க்க; see *udaṉvayiṟṟōr.* "பிறப்போரன்ன உடன்வயிற் றுள்ளும்" (புறநா. 183). (செ.அக.).

*[உடன் + வயிறு.]*

**உடன்வாரம்** *udaṉ-vāram,* பெ. (n.) ***மேல் வாரம் குடிவாரமாகப் பிரிக்கப் படாத நெல்*** (T.A.S.i.7.); gross produce before it is divided between landlord and tenant. (செ.அக.).

ம. உடன்பாரம், க. ஒடவார.

*[உடன் + வாரம்.]*

**உடன்றல்** *udaṉṟal,* பெ. (n.) ***போர்;*** war. (செ.அக.).

*[உடல் → உடலு → உடன்றல்.]*

**உடனடி** *udaṉ-adi,* வி.எ. (adv.) ***உடனே;*** immediately. (Tinn.). (செ.அக.).

ம. உடனடி

*[உடன் + அடி ]*

**உடனா-தல்** *udaṉ-ā-,* 6. செ.கு.வி. (v.i.) ***கூடிநிற்றல்*** (சி.சி. 2,80); to be in company with associate

*[உடன் + (ஆகு) ஆ.]*

**உடனாளி**[1] *udaṉāḷi,* பெ. (n.) ***உடன் கூட்டாளி*** பார்க்க; see *udaṉ-kūṭṭāḷi.* (செ.அக.).

*[உடன் + ஆளி.]*

**உடனாளி**[2] *udaṉāḷi,* பெ. (n.) ***சொத்துள்ளவன்;*** wealthy person.

க. ஒடெய; தெ. ஒடயடு, ஒடயுடு; து. ஒடயெ, ஒடெயெ; குட ஒடைவே.

*[உடைமை + ஆளி - உடைமையாளி → உடனாளி.]*

**உடனிகழ்தல்** *udaṉigaḻdal,* பெ. (n.) ***ஒருங்கு நிகழ்தல்*** (நன். 297, விருத்.); happen simultaneously. (செ.அக.).

*[உடன் + நிகழ்தல்.]*

**உடனிகழ்ச்சியணி** *udaṉigaḻcci-y-aṇi,* பெ. (n.) 1. ***அஃதாவது கற்றோரை மகிழ்விக்கும் உடனிகழ்தலைச் சொல்லும் அணி;*** figure of speech. இதனை வடநூலார் சகோத்தியலங்கார மென்பர் தண்டியாசிரியர் புணர் நிலை என்பர். 2. ***புணர்நிலையணி*** பார்க்க (அணியி.21); see *puṇarnilaiyaṇi.* (அபி.சிந்.).

*[உடன் + நிகழ்ச்சி + அணி.]*

**உடனிகழ்வான்** *udaṉigaḻvāṉ,* பெ. (n.) ***துணைவன்*** (திவா.); companion, comrade. (செ.அக.).

*[உடன் + நிகழ்வான்.]*

**உடனிகழ்வு** *udaṉigaḻvu,* பெ. (n.) ***உடனிகழ்ச்சி*** பார்க்க; see *udaṉigaḻcci* (நன். 297)

*[உடன் + நிகழ்வு ]*

**உடனிலை** *udaṉilai,* பெ. (n.) 1. ***கூடி நிற்கை;*** the state of being together. உரோணியோ டுடனிலை புரிந்த மறுவுடை மண்டிலக் கடவுளை (பெருங் இலாவாண. 9,67) 2. ***உடனிருந்த இருவரைப் பாடும் ஒரு புறத் துறை*** (புறநா. 58); (puṟap.) singing the praise of two companions.

*[உடன் + நிலை ]*

**உடனிலைக்குதிரைச்சேவகர்** *udaṉilai-k-kudirai-c-cēvagar,* பெ. (n.) ***பரியேறும் மெய்க்காவலர்*** (S.I.I.ii, 274); mounted body guards. (செ அக.).

*[உடனிலை + குதிரை + சேவகர் ]*

**உடனிலை இரட்டுறமொழிதல்** *udaṉilai-iraṭṭuṟa-moḻi-dal,* பெ (n.) ***ஒரு பாட்டு நேரேவரும் பொருளையன்றி வேறொரு பொருள் கொண்டு நிற்கும் அணி*** (திருக்கோ. 1, உரை), figure of speech, paronomasia as a literary embellishment in a stanza conveying both the natural as well as a hidden meaning. (செ அக )

*[உடனிலை + இரட்டுற + மொழிதல ]*

**உடனிலைச்சிலேடை** *udaṉilai-c-cilēdai,* பெ (n.) ***உடனிலை இரட்டுறமொழிதல்*** பார்க்க; see *udaṉilai-iraṭṭuṟamoḻidal.*

*[உடனிலை + சிலேடை ]*

**உடனிலைச்சொல்** *udaṉilai-c-col,* பெ. (n.) ***ஒப்புமைக் கூட்டம்*** பார்க்க; see *oppumaikkūṭṭam.* (செ.அக.).

*[உடனிலை + சொல் ]*

**உடனிலைமயக்கம்** *udanilai-mayakkam,* பெ. (n.) ***உட னிலை மெய்ம்மயக்கம்*** பார்க்க; see *udanilai-mey-m-mayakkam.*

*[உடன் + நிலை + மயக்கம்.]*

**உடனிலைமெய்ம்மயக்கம்** *udanilai-mey-m-mayakkam,* பெ. (n.) ***'ர்' 'ழ்' என்னும் இரண்டு மொழிந்த 16 மெய்களுள் ஒவ்வொன்றும் தன்னுடன் தான் நின்று மயங்குகை*** (நன்.110, உரை); (Gram ) doubling of any consonant other than 'ர்' 'r' or 'ழ்' 'l' whether in single or in compound words as அப்பம், அப்படி, opp-to வேற்றுநிலை மெய்ம்மயக்கம். (செ.அக.).

*[உடன் + நிலை + மெய்ம்மயக்கம் ]*

**உடனுக்குடனே** *udanu-k-kudanē,* வி.எ. (adv.) ***அப்போதைக்கப்போது;*** then and there. வந்த கடிதத்துக்கு உடனுக்குடனே மறுமொழி எழுது. (உ.வ.).

**ம.** உடனுடன்; **க.** ஒடனோடனே, ஒடனொடனெ; **தெ.** தோடதோடனெ.

*[உடனுக்கு + உடனே.]*

**உடனுற்றவன்** *udan-urravan,* பெ. (n.) ***ஒரே வகுப்பு வேலையாள்*** (ஆ.அக.); servant of the same grade.

*[உடன் + உற்றவன்.]*

**உடனுறவு** *udan-uravu,* பெ. (n.) ***உடல் தொடர்பு; புணர்ச்சி;*** sexual combination· the habitual coition or sexual intercourse of man and woman. (சா.அக.).

*[உடல் + உறவு - உடலுறவு → உடனுறவு (கொ வ ).]*

**உடனுறை** *udan-urai,* பெ. (n.) ***ஒரு நிலத்தில் உடனுறைகின்ற கருப்பொருளாற் பிறிதொரு பொருள் பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சி*** (தொல் பொருள் 242); suggestive meaning conveyed indirectly by means of a specific reference to a distinctive feature of any tract of land. (செ.அக.).

*[உடன் + உறை.]*

**உடனுறைவு** *udan-uraivu,* பெ. (n.) 1. ***புணர்ச்சி*** (பெரியபு. திருநீலகண்.5); cohabitation. 2. ***கூடி வாழ்தல்;*** living together. (செ.அக ).

*[உடன + உறைவு.]*

**உடனே** *udanē,* வி.எ. (adv.) 1. ***கூடிய அதே நேரத்தில்;*** immediately. 2 ***ஒருசேர;*** simultaneously. ''உருவமுமாருயிரு முடனே யுண்டான்'' (திவ் திருவாய். 9,6,5.). 3. ***முழுக்க;*** entirely. ''உடனேகூட'' (சீவக. 1966). (செ அக ).

**ம.** உடனே, **க.** ஒடனே; **தெ.** தொடனே; **குட.** ஒடனெ; **து.** ஒட்டு.

*[உடன் + ஏ.]*

**உடனொடியில்** *udanodiyil,* வி.எ. (adv ) ***உடனடி*** பார்க்க; see *udanadi. (Loc.).* (செ.அக.).

*[உடன் + நொடியில் ]*

**உடனொத்தபங்காளி** *udan-otta-pangāli,* பெ. (n.) ***சரிபங்குடையவன்*** (ஆ.அக.); co-partner.

*[உடன் + ஒத்த + பங்காளி.]*

**உடனொத்தவன்** *udan-ottavan,* பெ. (n.) ***சமமானவன்;*** equal fellow, compeer. (செ.அக.).

*[உடன் + ஒத்தவன்.]*

**உடா** *udā,* பெ. (n.) ***உடும்பு;*** iguana.

**க.** உடா.

*[உடு → உடுவு → உடா.]*

**உடு¹-த்தல்** *udu-,* 18. செ.குன்றாவி. (v.t.) 1. ***சேர்தல், பொருந்துதல்;*** to join, stick. 2. ***ஆடை முதலியன அணிதல்;*** to put on as clothes. ''பட்டுந்துகிலு முடுத்து'' (நாலடி. 264). 3. ***சூழ்தல்;*** to surround, encircle ''அருங்குறும் புடுத்த கானப் பேரெயில்'' (புறநா.21). 3. ***சேர்தல்; பொருந்தல்;*** to join, stick.

ம. உடுக்குக, **க.** ஒடு, உடி, உடிகெ, உடுகெ; **தெ.** உடுபு; **துட.** உட்ப்; **குட.** உடி, உடிபி; **து.** உடுங்ரே; **கோண்., கட.** ஊட்.

*[உள் → உடு → உடு-த்தல் ]*

**உடு²** *udu,* பெ. (n.) 1. ***உடும்பு;*** iguana. 2. ***உடைபோற் கோட்டை மதிலைச் சுற்றியுள்ள அகழி;*** moat.

**க.** உடு, உட, **தெ.** உடு, **து.** உடு, ஒடு, ஒட்டு, **ம.** உடும்பி; **கொலா.** உடுகை.

*[உள் → உடு. உள் = பொருந்துதல், பற்றுதல். உடு = பற்றிக் கொள்ளும் இயல்புடைய உடும்பு ]*

**உடு³** *udu,* பெ. (n.) 1. ***விண்மீன்;*** star. 2. ***வெள்ளி;*** Venus.

**க., தெ.** உடு.

*[உடு = விளங்குதல் (எரிதல்) கருத்துவேர் ஒளியுள்ள நாண் மீன், வெள்ளி. உள் → உடு, (ஒ நோ.) தொள் → தொடு; பள் → படு ]*

**உடு⁴** *udu,* பெ. (n.) 1. ***இடுப்பு;*** waist. 2. ***ஆடு*** (பிங்.); goat, sheep.

*[உள் → உடு = ஒடுங்கிய மருங்குடையது ]*

**உடு⁵** *udu,* பெ. (n.) 1. ***நாணைக் கொள்ளுமிடம்*** (குறிஞ்சிப். 170); point where the arrow is pressed against the bow-string. 2. ***அம்பு;*** arrow. ''உடுவென்று நஞ்சந் துய்த்து'' (இரகு. மீட்சி. 50). 3. ***அம்பினிறகு;*** feather of an arrow. ''உடுவமை பகழிவாங்க'' (சீவக. 2191). 4 ***அம்புத்தலை*** (பிங்.); arrow-head. 5. ***ஓடம் இயக்குங் கோல்*** (பிங்.); oar, boatman's pole. (செ.அக.).

*[உள் → உடு உள் = பொருந்தல் உடு = பொருந்துவது ]*

**உடு⁶** *udu,* பெ. (n.) 1. ***பள்ளம்;*** deep pit. 2 ***அகழி;*** moat. 3. ***நீர்நிலை;*** pool, tank.

*[உள் → உடு (பள்ளம்).]*

**உடு**[7] *udu*, பெ. (n.) ***உசிலைமரம்;*** black sirissa.

க. உடு. (உசிலைப்பூ)

மறுவ. சீக்கிரி மரம், உசிலை, ஊஞ்சமரம், துரிஞ்சில்மரம், அரஞ்சி, அரைப்புமரம், உறிஞ்சுமரம், உடுப்பை.

*[உள் → உடு. உள் = வெப்பம். உடு = வெப்பத்தால் கோடையில் இலையுதிர்க்கும் மரம்.]*

**உடு**[8] *udu*, பெ. (n.) ***உடுத்துக்கொள்ளும் உடுப்பு;*** dress, robe.

*[உடு (வி.) → உடு (பெ.).]*

உடு என்னும் முதனிலைத் தொழிற்பெயர் உடுத்துக்கொள்ளும் ஆடைக்கு ஆயிற்று.

**உடுக்கு**[1] *udukku*, பெ. (n.) ***இடையொடுங்கிய சிறு பறை;*** small drum tapering in the middle.

தெ. உடுக; ம. உடுக்க; க., து. உடுகு; குவி. டூறு; *Pkt.* hudukku; *Skt.* hudukka.

*[(உடு → உடுக்கு. உடு=ஒடு ஒடு → ஒடுகு → ஒடுங்கு → ஒடுக்கு → ஒடுக்கம். (வ.மொ.வ.22).]*

**உடுக்கு**[2] *udukku*, பெ. (n.) 1. ***வெப்பம்;*** heat. 2. ***கொதித்தல்;*** boiling.

தெ. உடுக்கு.

*[உள் → உடு → உடுக்கு.]*

**உடுக்குச்சுருக்கம்** *udukku-c-curukkam*, பெ. (n.) ***உடம்பின் நடுவிலிருக்கும் உறுப்பினுடைய*** (அதாவது வயிறு அல்லது கருப்பையின்) ***சுருக்கம்;*** contraction of an organ (as the stomach or the uterus) at or near the middle of the body, hour-glass contraction. (சா.அக.).

*[உடுக்கு + சுருக்கம்.]*

**உடுக்கை**[1] *udukkai*, பெ. (n.) ***உடை; ஆடை;*** raiment, clothing. "உடுக்கை யிழந்தவன் கைபோல" (குறள். 788). (செ.அக.).

க. உடுகெ, உடிகெ.

*[உடு → உடுக்கை. உள் → உடு = பொருந்துதல், இடுப்பிற்செருகிக் கட்டுதல், உடுத்தல்.]*

**உடுக்கை**[2] *udukkai*, பெ. (n.) ***இடைசுருங்கு பறை;*** small drum tapering in the middle. நிலையாய் உடுக்கை வாசிப்பான். (SII.ii.254).



உடுக்கை

ம. உடுக்க; க. உடுகு, தெ. உடுக; து. உடுகு > *Skt. hudukka.*

*[உடு → உடுக்கு → உடுக்கை. உடுக்கை = ஒடுங்கிய நடுப்பகுதியை உடையது.]*

**உடுக்கைக்கொடி** *udukkai-k-kodi*, பெ. (n.) ***வள்ளிக் கொடி;*** creeper of the sweet potato plant. (சா.அக.).

*[உடுக்கை + கொடி. உள் → உடு = பொருந்தல், நடுவிருத்தல், நடுவு.]*

**உடுக்கைச்சுருக்கம்** *udukkai-c-curukkam*, பெ. (n.) ***நடுவிற் சுருங்கல்;*** tapering in the middle as in the small drum.

*[உடுக்கை + சுருக்கம். உள் → உடு = பொருந்தல், நடுவிருத்தல், நடுவு.]*

**உடுக்கைமரம்** *udukkai-maram*, பெ. (n.) ***கருங்காலி மரம்;*** black wood. (சா.அக.).

*[உடுக்கை + மரம்.]*

**உடுக்கைரேகை** *udukkai-rēgai*, பெ. (n.) ***உடுக்கை வரிகை*** பார்க்க; see *udukkai-varigai*.

**உடுக்கைவரிகை** *udukkai-varigai*, பெ. (n.) ***கை வரி*** (ரேகை) ***வகை*** (சிவக். பிரபந். சரபே.குற. பக். 344); (palmistry) line in the palm. (செ.அக.).

*[உடு → உடுக்கை + வரிகை.]*

**உடுக்கோன்** *udukkōṉ*, பெ. (n.) ***திங்கள்;*** moon, lord of the stars. "உடுக்கோனாலும்.. அகன்றிடாத் திமிரவிட்டம்" (பிரமோத். 2,40). (செ.அக.).

*Skt.* uduganādhipā.

*[உடு + கோன்.]*

**உடுகாட்டி** *udu-kātti*, பெ. (n.) ***பொன்னாங்காணி*** பார்க்க; see *ponnāṅgāṇi* (செ.அக.).

*[உடு + காட்டி.]*

**உடுசி** *uduci*, பெ. (n.) ***உசிலை மரம்;*** black sirissa. (சா.அக.).

*[உடு → உடுசி.]*

**உடுத்து-தல்** *uduttu-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***ஆடையணிவித்தல்;*** to dress on. (செ.அக.).

*[உடு → உடுத்து.]*

**உடுநீர்** *udu-nīr*, பெ. (n.) ***அகழிநீர்;*** ditch water. (சா.அக.).

*[உடு + நீர். உடு = பள்ளம், அகழி.]*

**உடுப்பம்** *uduppam*, பெ. (n.) ***தெப்பம்,*** raft, float.

*[உடு → உடுப்பம். உடு = பள்ளம்.]*

**உடுப்பாத்தி** *udu-p-pātti*, பெ. (n.) ***சிறு கடல் மீன் வகை;*** light-green, fresh water fish. (செ.அக.).

*[உடு + பாத்தி.]*



உடுப்பாத்தி

**உடுப்பு** *uḍuppu,* பெ. (n.) 1 ***ஆடை;*** cloth, unsewn garment "மணிக்கோவை யுடுப்பொடு துயல்வர" (மணிமே. 3, 140). 2. ***அங்கி முதலியன;*** clothes, clothing, vesture, dress. (செ.அக.)

ம. உடுப்பு, **க.** உடபு, உடுபு, **துட** உட்ப்வ; **குட** உடிபி; **து.** உடுச்ர, **தெ.** உடுபு.

*[உடு → உடுப்பு ]*

**உடுப்பை** *uḍuppai,* பெ. (n.) ***நிலப்பாலை;*** round-leaved discous featherfoil. (செ.அக.).

*[உடு → உடுப்பை ]*

**உடுபதம்** *uḍu-padam,* பெ. (n.) ***விண்;*** firmament, from its being the path of the stars. "உடுபதத்தினு முடி வில்லை" (பாரத. கிருட். 60).

*[உடு + பதம். உடு = விண்மீன். உடுபதம் = விண்மீன்கள் இருக்குமிடம்.]*

**உடுபதி** *uḍu-pati,* பெ. (n.) **உடுக்கோன்** பார்க்க (திவ்.); see *uḍukkōṉ.* (செ.அக.).

*[உடு + பதி.]*

**உடுபம்** *uḍubam,* பெ. (n.) ***தெப்பம்;*** raft, float. (செ.அக.).

*[உடு → உடுப்பம் → உடுபம் (கொ.வ.) = உட்குழிவான தோணி அல்லது தெப்பம்.]*

**உடுபுடைவை** *uḍu-puḍaivai,* பெ. (n.) 1. ***உடை;*** garments (W.). 2. ***எளிய உடை;*** dress for daily wearing.

ம. உடுபுடவ.

*[உடு + புடவை.]*

**உடும்பு** *uḍumbu,* பெ. (n.) ***மூன்று அடி நீளம் வரை வளரும், இந்தியா முழுமையும் காணப்படும், பெரிய பிளவுபட்ட நாக்குள்ள பல்லிவகை;*** genus of large thick-tongued aboreal lizards found all over India, and growing to 3 ft. in length, varamus bengalenis. "அரவு முடும்பும் போல் ஏறினார் ஏணிபலர்" (பு. வெ. 619).

ம. உடும்பு; **க.** உட, உடு; **குட** உடும்பி; **து.** உடு, ஒடு, ஒட்ட; **தெ.** உடுமு; **கொலா.** உடுக், உருக்; **நா.** கீடுக்; **பர்.** உடு.

*[உள் → உடு = சேர்த்தல், நெருக்கல், இறுகப்பிடித்தல், பற்றுதல். உடு → உடும்பு ]*



உடும்பு

**உடும்புக்கல்** *uḍumbu-k-kal,* பெ. (n.) ***உடும்பினுடம் பிலிருக்குங்கல். இது மருந்திற்குப் பயன்படும்;*** stone or calculus found inside the body of a guana useful in medicines. (சா.அக.).

*[உடும்பு + கல்.]*

**உடும்புக்காலிவரகு** *uḍumbu-k-kāli-varagu,* பெ. (n.) ***வரகுவகை;*** variety of millet which is sown in September and matures in three months. (செ.அக.).

*[உடும்பு + காலி + வரகு.]*

**உடும்புநாக்கன்** *uḍumbu-nākkaṉ,* பெ. (n.) ***பொய்யன், ஏமாற்றுக்காரன்;*** one who has a double tongue as the big lizard, deceitful man. (செ.அக.).

*[உடும்பு + நாக்கன்.]*

உடும்பின் நா பிளவுபட்டிருத்தலின் முன்னொன்றும் பின் னொன்றுமாகப் பேசும் இரட்டை நாக்கு படைத்தவன் என்னும் பொருளில் இச்சொல் வழக்கூன்றியது.

**உடுமடி** *uḍu-maḍi,* பெ. (n.) **ஆடை** (அமரா. கதை. 84); apparel. (செ.அக.).

*[உடு + மடி. மடி = ஆடை.]*

**உடுமாற்று** *uḍu-māṟṟu,* பெ. (n.) 1. ***உடை மாற்றுகை;*** change of dress. உடுமாற்றுக்குச் சேலையுண்டா? (உ.வ.) 2. ***நடைபாவாடை;*** clothes used for spreading on the floor on certain special occasions.

*[உடு + மாற்று. உடு = உடுத்துக் கொள்ளும் உடை.]*

**உடுமானம்** *uḍu-māṉam,* பெ. (n.) **உடை** (யாழ்.அக); dress, clothing. 2. ***தகுதிக்குத் தகுந்த உடை;*** dress style according to etiquette. (செ.அக.).

*[உடு + மானம். உடு = உடுத்தல்; மானம் - பெயரீறு. ஒ.நோ. வருமானம்.]*

**உடுவம்** *uduvam,* பெ (n.) ***அம்பின் ஈர்க்கு;*** shaft of an arrow "உடுவந்தோன்ற .. எய்திடுதலோடும்" (சீவக. 2275). (செ.அக ).

*[உடு + அம்.]*

**உடுவலை** *udu-valai,* பெ. (n.) ***ஆழமில்லா ஆற்றுப்பகுதியின் குறுக்கே அல்லது படகின் அடிப்பகுதியில் கட்டப்படும் சற்றொப்ப நாற்பது இரட்டை முழ நீள முள்ள மீன் வலை வகை;*** fisherman's net, about 40 yards in length, tied across a stream in its shallow part.

*[உடு + வலை ]*

**உடுவிலான்** *uduvilān,* பெ. (n.) **உடுக்கோன்** பார்க்க (பிங்.); see *udukkōn.* (செ.அக.).

*[உடு + இல் + ஆன்.]*

**உடுவேந்தன்** *udu-vēndan,* பெ. (n.) **உடுக்கோன்** பார்க்க (பிங்.) see *udukkōn.* (செ.அக.).

*[உடு + வேந்தன் ]*

**உடுவை**[1] *uduvai,* பெ. (n.) 1. ***அகழி;*** ditch surrounding a fort. (W.) 2. ***நீர்நிலை;*** pool, reservoir of water.

*[உள் → உடு → உடுவை. உடு = பள்ளம் ]*

**உடை[1]-தல்** *udai-,* 3. செ கு.வி. (v.i.) 1 ***தகர்தல்;*** break as a pot; to burst into fragments. "என்னாகும் மண்ணின் குடமுடைந்தக் கால்" (வாக்குண். 18.). 2. ***பிளத்தல்;*** to crack, split, to be cloven. "உடைகவட்டோமை" (கல்லா. 7.). 3. ***ஏரி ஆறு முதலியன கரையுடைதல்;*** to be breached, as a tank. வீராணத்தேரி உடைந்தது. (உ.வ.). 4. ***புண்கட்டியுடைதல்;*** to burst open, as a boil. 5. ***முறுக்கு அவிழ்தல்;*** to become untwisted, as a rope. கயிற்றின் முறுக்குடைந்தது. (உ.வ.). 6. ***மலர்தல்;*** to blossom as a flower "கோடுடையும்.. சேர்ப்பன்" (பு.வெ. 12. பெண். 3.). 7. ***தோற்றோடுதல்;*** to be discomfited, routed, broken, as the ranks of an army. "வழுதி சேனையுடைந்ததே" (திருவிளை சுந்த ரப். 18.). 8. ***மனங்குலைதல்;*** to be dispirited, dejected, as one's heart with grief; to be in despair. "உடைபு நெஞ்சுக" (கலித். 10.). 9. ***எளிமைப்படுதல்*** (பிங்.); to become poor, reduced in circumstances. 10. ***வெளிப் படுதல்;*** to be divulged, to become publicly known 11. ***சாதல்;*** to die. "உடைந்துழிக் காகம்போல்" (நாலடி. 284.). 12. ***கெடுதல்;*** to be ruined (W.). 13. ***உலைதல்;*** to break down, as a witness in cross-examination. (Mod.). சாட்சியுடைந்து போயிற்று (உ.வ.). (செ.அக.).

ம. உடயுக; **க.** ஒடி, ஒடெ, உடி; **கோத.** ஒட்வ்; **துட.** வட்; **குட.** ஒடெ, ஒட; **து.** உடெபுனி, உடெவினி; **தெ.** ஒடபி; **கொலா.** நாட்; **நா.** ஒட்வ; **பர்.** ஒட்; **கோண்.** வோடானா; **கட.** ஒர்.

*[உள் → உளை → உடை → உடை-தல்.]*

**உடை[2]-த்தல்** *udai-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***தகர்த்தல்;*** to break into pieces, as a vessel a lamp, a clod, any solid or massive substance, teeth. "மகுட கோடிக ளுடைத்தலின்" (பாரத காண்டவ. 27 ). 2 ***குட்டுதல்*** (திவா ); to cuff on another's head with the knuckles. 3 ***பிளத்தல்;*** to split, as wood, to fracture, as the skull. "கட்டையையுடைத்துக்கொடு" (உ.வ ). 4 ***கரை உடைத்தல்;*** to burst, as the bank of a river. "செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டோர்" (நாலடி. 222.). 5. ***புண்கட்டியுடைத்தல்;*** to open, as a boil. 6. ***முறுக்கவிழ்த்தல்;*** untwist, untwine. 7. ***தோற்கச் செய் தல்;*** to defeat, rout, put to disorderly flight. "படைக்குட் டம் பாய்மா வுடையா னுடைக்கிற்கும்" (நான்மணி. 18 ) 8. ***வெளிப்படுத்துதல்;*** to break, as news; to reveal அவன் அந்த இரகசியத்தை உடைத்து விட்டான் (உ வ.). 9. ***அழித்தல்;*** to damage, ruin, impoverish. "பெண்மையுடைக்கும் படை" (குறள். 1258.). 10. ***வருத்துதல்;*** to trouble, distress. "பொறாமை யுள்ளு டைக்கு மென்க" (இரகு.யாக. 12.). (செ.அக.).

*[உள → உளை → உடை → உடை-தல் → உடை-த்தல் (பி.வி.).]*

**உடை**[3] *udai,* பெ. (n.) 1. ***இடுப்பு;*** waist. 2. ***இடுப்பில் உடுத்தும் ஆடை*** (திவா.); clothes, garment, dress. (செ.அக.).

ம. உட, க. உடெ; **தெ.** உடுபு; **துட.** உட்ப்; **குட.** உடிபம்; **து.** உடுதல்ரெ; **கோண்.** உகாதானா.

*[உடு[4] → உடை.]*

**உடை**[4] *udai,* பெ. (n.) ***செல்வம்*** (பிங்.); wealth.

ம ஒட, **க.** ஒடெ, ஒடமெ; **கோத.** ஒட்பயன் (முதலாளி), ஒட்ரம் (வீட்டுப் பொருள்), குட. ஒடவெ (முதலாளி); **தெ.** ஒடமி, ஒடமெ; **து.** ஒடவெ. (செ.அக.).

*[உள் → உடு → உடை. உடைத்தாதல், உள் = இருத்தல். உடு = தன்பாலிருத்திக்கொள்ளுதல்.]*

**உடை**[5] *udai,* பெ. (n.) 1. ***குடைவேல்மரம்*** (திவா.); umbrella-thorn babul. 2. ***நீருடைமரம்;*** buffalo-thorn cutch. 3. ***வேலமரவகை;*** pea-podded black babul. (செ.அக.).

*[உடு → உடை = வட்டமாய் (சுற்றாய்)க் கிளை பரப்பிய மரம்.]*

**உடை**[6] *udai,* பெ. (n.) 1 ***விடியற்காலம்;*** dawn. (regarded as the spouse of the sun). "உடைதன் காந்த" (இரகு. திக்கு. 85.). 2. ***எருதின் விதை;*** testicles of ox. எருதுக்கு உடை அடித்து விட்டார்கள் (உ.வ.). (செ.அக.).

*[உள் → உடு → உடை. உள் = வெப்பம் உடு = வெப்பமுடையது, ஒளியுடையது, வெளிப்படுவது. உடை = வெளிப்படுத்துவது. உடை = வெளிப்படுத்துவது. ஒளியை வெளிப்படுத்தும் பாங்குடைய விடியற்காலமும், விள்ளு (விந்து) வெளிப்படும் பாங்குடைய எருதின் விதையும் உடை எனப்பட்டன. இச் சொல் தொடக்கத்தில் உள் → உளை → உழை என வழங்கிப் பின் வடமொழியில் உஷை → உஷா எனத் திரிந்தது.]*

**உடை**[7] *udai,* பெ. (n.) 1. ***முள்;*** thorn. 2. ***சாணம்;*** cowdung. (செ.அக.).

*[உள் → உடு → உடை. உள் = இருத்தல். உடு = இருக்கச் செய்தல், கீழே கிடத்தல்.]*

**உடை**[8] *uḍai,* பெ. (n.) ***சேணம்*** (அக.நி.); horse - saddle. (செ.அக.).

*[உள் → உடு → உடை. உள் = இருத்தல்; உடு = இருத்துதல்.]*

**உடை**[9] *uḍai,* பெ. (n.) ***அணிகலன்*** (அக.நி.); jewellery. (செ.அக.).

*[உள் → உடு → உடை = உடைமை. உள் = இருத்தல் உடு = தன்பாலிருத்திக்கொள்ளுதல்.]*

**உடைக்கல்** *uḍai-k-kal,* பெ. (n.) ***காவிக்கல்*** (தைலவ. தைல. 33.); redochre, used in dyeing. (செ.அக.).

*[உள் → உடு → உடை + கல். உடு = வெப்பமுடையது, ஒளியுடையது, செந்நிறமுடையது.]*

**உடைகுலைப்படு-தல்** *uḍaikulai-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***கரையழிதல்*** (ஈடு. 6,4,4.); be breached, as a bank of river or the shore of a tank. 2. ***நிலையழிதல்;*** be deranged, discomfited. 'உடை குலைப்படுகிற மனஸ்' (ஈடு. 5,1,4.). (செ.அக.).

*[உடை + குலை + படு-தல். உடை = சுற்று, சுற்றியிருப்பது.]*

**உடைகுளம்** *uḍai-kuḷam,* பெ. (n.) ***முற்குளம்*** (பூராடம்.) (திவா.); 20th nakṣatra whose configuration looks as if it were a breached tank. (செ.அக.).

*[உடை + குளம். கரையுடைந்த குளம் போன்ற தோற்றமுடையது.]*

**உடைகொல்** *uḍai-kol,* பெ. (n.) ***குடைவேல மரம்;*** umbrella - thorn, babul. (செ.அக.).

*[உடை + கொல். கொல் = கொலு, சீராய் அமைதல், சுற்றிலும் ஒரு சீராய்க் குடைபோல் கவிந்தமரம்.]*

**உடைசல்** *uḍaisal,* பெ. (n.) ***உடைந்த பொருள்;*** cracked, worthless articles; broken pieces. (செ.அக.).

*[உடை → உடைசல்.]*

**உடைஞாண்** *uḍai-ñāṇ,* பெ. (n.) ***உடைநாண்*** பார்க்க; see *uḍaināṇ.* ''உடுத்த பஞ்சிமேற்கிடந் துடைஞாண் பதைத்திலங்க'' (சீவக. 2240.).

ம. உடஞாண்; க. ஒட்யாணெ; தெ. ஒட்யாணமு; து. ஒட்யாண.

*[உடை + ஞாண். நாண் → ஞாண். ஊடு → உடு → உடை = இடுப்பு. இச்சொல் நாளடைவில் உடைஞாண் → ஒடிஞாண் → ஒடிஞாணம் → ஒட்டியாணம் எனத் திரிந்துவிட்டது.]*

**உடைத்தானவன்** *uḍaittāṉavaṉ,* பெ. (n.) ***உடையவன்;*** proprietor, possessor, owner. (செ.அக.).

*[உடைமைத்து → உடைத்து + ஆனவன்.]*

**உடைதாரம்** *uḍai-tāram,* பெ. (n.) ***அரையிலணியும் அணிவகை;*** cord or girdle used as an ornamental belt over the waist-cloth. ''உடைதாரமு மொட்டியாண மும்'' (மீனாட். பிள்ளைத். ஊசற். 10.). (செ.அக.).

க. உடுதார, உடிதார, உடெதார.

*[ஊடு → உடு → உடை + தாரம் (கயிறு). உடை = இடுப்பு.]*

**உடைதோல்** *uḍai-tōl,* பெ. (n.) ***தோற்பரிசை;*** buck. ''முதற்சுரிகை யுடைதோலும் வாங்கிக் கொண்டு'' (பெரியபு.கண். 54.). (செ.அக.).

க. உடெதோல், உடெதொவல்.

*[உடை + தோல். உடை = சுற்று, சுற்றான.]*

**உடைந்தவாய்ச்சிலந்தி** *uḍainda-vāy-c-cilandi,* பெ. (n.) ***ஆழ்ந்த நீண்ட பிளப்புள்ள சிலந்தி;*** deep and more or less linear from the ulcer - Dissured ulcer. (சா.அக.).

*[உடை → உடைந்த + வாய் + சிலந்தி.]*

**உடைநாண்** *uḍai-nāṇ,* பெ. (n.) ***இடுப்பில் அணியும் நாண் அல்லது அணிகலன்;*** cord or ornament worn round the waist - cloth to serve as a waist band and confine the cloth at the waist. ''உடைநாணொடு கடிவட்டி னொடு'' (சீவக. 2263). (செ.அக.).

க. உடெநேண், உடெநூல்.

*[உடை + நாண் (கயிறு).]*

**உடைப்பட்டை** *uḍai-p-paṭṭai,* பெ. (n.) ***உடைக்கு மேற் கட்டுங் கச்சை;*** kind of sash. ''அரைப்பட்டையுடைப் பட்டை யூடு கட்டி'' (கூளப்ப. 43.). (செ.அக.).

*[உடை + பட்டை.]*

**உடைப்படை** *uḍai-p-paḍai,* பெ. (n.) ***நிலைப்படை*** (S.I.I. iv, 492); standing army. (செ.அக.).

*[உடை + படை.]*

**உடைப்பிற்போடு-தல்** *uḍaippiṟ-pōḍu-,* 10. செ.குன் றாவி. (v.t.) ***அகலத் தள்ளுதல்;*** cast away as worthless as a thing thrown into a breach. அதை உடைப்பிற் போடு. (உ.வ.).

*[உடைப்பு + இல் + போடு. உடைப்பு = நீண்ட பள்ளம், நெடுங்குழி, கரையுடைத்தோடும் நீர்ப்பெருக்கு, மீட்டெடுக்க வேண்டாத கழி பொருள்களை வீசி எறிதற்குரிய இடம். இக்கால் சாய்க்கடையையும் குறிக்கும்.]*

**உடைப்பு** *uḍaippu,* பெ. (n.) 1. ***உடைத்தல்;*** causing to break. 2. ***உடைகை;*** breach, bursting of a tank. 3. ***உடைந்த அறுவாய்*** (S.I.I. ii, 393); portion breached, channel cut through a ridge in a field.

ம. உடப்பு; க. ஒடபு; து. உடி.

*[உடை → உடைப்பு. தொ.பெ.]*

**உடைப்புக்கட்டு** *uḍaippu-k-kaṭṭu,* பெ. (n.) ***அணை, குளம் முதலியவற்றிலுள்ள உடைப்புகளைச் செப்ப னிடுகை;*** repair of a breach in an embankment. (செ.அக.).

*[உடைப்பு + கட்டு.]*

**உடைப்பெடு-த்தல்** *uḍaippeḍu-*, செ.கு.வி. (v.i.) ***வெள்ளத்தாற் கரையழிதல்;*** to be breached, as a tank. ஏரி உடைப்பெடுத்துவிட்டது (உ.வ.). (செ.அக.).

*[உடைப்பு + எடு.]*

**உடைப்பொருள்** *uḍai-p-poruḷ*, பெ. (n.) ***உடைமைப் பொருள்*** (சி.போ. அவையடக்கம், சிற்.); property in one's possession meaning a slave when referring to human beings, and other items of worldly goods when referring to animals and things. (செ.அக.).

*[உடை + பொருள்.]*

**உடைமணி** *uḍai-maṇi*, பெ. (n.) 1. ***குழந்தைகளின் அரையணி;*** waist ornament with bells worn by a child. "உடைமணி கட்டிச் சிறுதே ருருட்டி" (திருக்கோ. 385). 2. ***மேகலை*** (சீவக. 2407); jewelled gridle worn by women. (செ.அக.).

*[உடை + மணி. உடை = இடுப்பு.]*

**உடைமுள்** *uḍai-muḷ*, பெ. (n.) ***குடை வேலின் முள்;*** thorn of the babul. (செ.அக.).

*[உடை (குடைவேலமரம்) + முள்.]*

**உடைமேற்புல்லுருவி** *uḍaimēṟ-pulluruvi*, பெ. (n.) ***உடைவேலின் மேல் வளரும் புல்லுருவி;*** parasitic plant found grown on arrow-thorn tree. (சா.அக.).

*[உடை + மேல் + புல் + உருவி. உடை = குடைவேலமரம்.]*

**உடைமை**[1] *uḍaimai*, பெ. (n.) 1. ***உடையனாந்தன்மை;*** state of possessing, having, owning. "அன்பீனு மார்வ முடைமை" (குறள், 74). 2. ***உடைமைப் பொருள்;*** possession, property. "உடைமை யெல்லாமும்" (திரு வாச 33.7). 3. ***செல்வம்;*** wealth, riches. "உடைமை யாற் போத்தந்த நுமர்" (கலித். 58). 4. ***அணிகலன்கள்*** (ஆ.அக.).; ornament. (செ.அக.).

ம. உடம; **க.** ஒடமெ; **தெ.** ஒடமி, ஒடமெ; **கோத.** ஒட்ய்ன்; **துட.** விடம் (இடுகாட்டில் இடும் பொருள்கள்); **குட.** ஒடெவெ. **து.** ஒடெவெ.

*[உடு → உடை → உடைமை (வே.க. 43).]*

**உடைமை**[2] *uḍaimai*, பெ. (n.) ***மேல்வாரம்; வருவாய்;*** perquisite. "பணஉடைமை நெல்லுடைமை" (S.I.I.v. 331). (செ.அக.).

*[உடை → உடைமை.]*

**உடைய** *uḍaiya*, இடை. (part.) ***ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு*** (நன். 300 சங்கர.); particle of the genitive case. (செ.அக.).

ம. உடய; **க.** ஒடெய.

*[உடை → உடைய (சு.வி. 69).]*

**உடையநம்பி** *uḍaiya-nambi*, பெ. (n.) ***சுந்தரமூர்த்தி நாயனார்;*** Sundaramurti Nayanar. "உடையநம்பி தனி வரும் மகிழ்ச்சி பொங்க" (பெரியபு. ஏயர். 107). (செ.அக.).

*[உடை → உடைய + நம்பி.]*

**உடையல்** *uḍaiyal* பெ. (n.) 1. ***உடைதல்;*** breaking. 2. ***உடைந்தது;*** that which is broken. 3. ***கெடல்;*** losing.

*[உடை → உடையல்.]*

**உடையல் விடு-தல்** *uḍaiyal-viḍu-*, 18. செ.குன்றாவி. (v.t.) ***ஏளனஞ் செய்தல்;*** to mock, ridicule, banter, make fun of. (செ.அக.).

*[உடை → உடையல் + விடு.]*

**உடையவர்** *uḍaiyavar*, பெ. (n.) 1. ***கருவறைத் தெய்வம்;*** Master, Lord. "உடையவர் கோயில்" (பெரியபு. திரு ஞான. 664). 2. ***ஆன்மார்த்த இலிங்கம்;*** Siva-linga used in private worship. 3. ***இராமானுசர்,*** (ஈடு. 10,7,1); Ramanuja, the Guru of Sri Vaishnavas. 4. ***செல்வர்;*** prosperous man, rich fellow. (செ.அக.).

ம. உடயர்.

*[உடை + அவர்.]*

**உடையவன்** *uḍaiyavaṉ*, பெ. (n.) 1. ***உரியவன்;*** owner, one who possesses. 2. ***செல்வமுள்ளவன்;*** possessor of wealth. "உடையவர்களெனநாடி" (திருப்பு. 249). 3. ***கடவுள்;*** God, as possessing the universe.

ம. உடயவன், உடயக்காரன்; **தெ.** ஒடயடு.

*[உடை + அவன்.]*

**உடையார்** *uḍaiyār*, பெ. (n.) 1. ***கருவறைத் தெய்வம்;*** Lord, Master. "உடையார்...திருவிழாவில்" (S.I.I.ii, 306). 2. ***சில குலப்பிரிவினரின் பட்டப் பெயர்;*** title of certain castes of cultivators 3. ***இலங்கையில் ஒரு சிற்றூர்ப் பணியாளன்;*** village official in North and East Ceylon. 4. ***செல்வர்;*** the rich, as those who have world's goods. "உடையார்மு னில்லார்போல்" (குறள், 395).

*[உடை → உடையார்.]*

**உடையார் சாலை** *uḍaiyār-sālai*, பெ. (n.) ***கோயிலில் உணவளிக்கும் இடம்;*** place where food is served in a temple. 'சிவயோகிகள் பதின்மரும் உடையார் சாலையிலே உண்ணக்கடவர்' (S.I.I.ii. 133). (செ.அக.).

*[உடை → உடையார் + சாலை.]*

**உடையாள்** *uḍaiyāḷ*, பெ. (n.) ***உமாதேவி;*** Goddess Parvathi.

*[உடை + ஆள்.]*

**உடையாளி** *uḍaiyāḷi*, பெ. (n.) ***கடவுள்;*** Lord of the universe, God. (செ.அக.).

*[உடை + ஆளி.]*

**உடையான்**[1] *udaiyāṉ*, பெ. (n.) 1. ***இறைவன்;*** Master, Lord. "உடையா னல்லாதானை உடையானெனா" (சி.போ. அவையடக்கம், சிற்.). 2 ***சிறப்புப்பெயர்*** (பி.வி. 31, உரை); (Gram). substantive noun as qualified by an attributive. 3. ***உடையவன்;*** a possessor or an owner. (செ.அக.).

ம. உடயோன்; க. ஒடெய.

*[உடை + அவன் = உடையவன் → உடையான்.]*

**உடையான்**[2] *udaiyāṉ*, பெ. (n.) ***உடுத்தவன்;*** one who is wearing dress. (ஆ.அக.).

*[உடை + ஆன்.]*

**உடைவாரம்** *udai-vāram*, பெ. (n) ***மேல்வாரங் குடி வாரமாகப் பிரிப்பதற்கு முன்னுள்ள மொத்த விளைவுத் தவசம்;*** gross produce from the land before it is divided between the landlord and the cultivators. (செ.அக.).

*[உடை + வாரம்.]*

**உடைவாலக்கீரை** *udai-vālakkīrai*, பெ. (n.) ***தண்டங் கீரை;*** garden-green. (சா.அக.).

*[உடைவால் + அ + கீரை.]*

**உடைவாள்** *udai-vāl*, பெ. (n.) ***உடையிற் செருகும் சுரிகை*** (திவா.); short scimitar.

ம. உடவாள்.

*[உடை + வாள் உடை = இடுப்பு. இடுப்பிற் செருகும் வாள் உடையிற் செருகும் வாள் எனின் உடையின் எப்பகுதி எனத் தெளிவுபடாமை காண்க.]*

**உடைவு** *udaivu*, பெ. (n.) 1. ***தகர்கை;*** cracking, fracturing. 2. ***உடைப்பு;*** breach. 3 ***தோற்றோடுகை;*** defeat, discomfiture. "களிற்றை .பொருதுடைவு கண்டானும்" (திவ் இயற். 1,18) 4. ***தளர்வு;*** debility, weakness. (W.). 5. ***களவு*** (பழ. 194); theft, stealing. 6. ***கேடு*** (த.சொ.அக.); reduction of circumstances from wealth to poverty. (செ.அக.).

ம. உடவு, க. ஒடி, உடி; தெ. ஒடபி; துட. விட்ய்; குட. ஒடவெ; து. ஒட்கு.

*[உடை → உடைவு ]*

**உடைவேல்** *udai-vēl*, பெ. (n.) ***வேலமரவகை; குடை வேல்;*** pea-podded black babul. (செ.அக.).

*[உடை + வேல் வேல் = வேலமரம் ]*

**உடோ** *udō*, இடை. (int.) ***அடா;*** exclamation, addressed familiarly to an inferior. "நேரே நின்றன்றோ உடோ பரிமாறுவது" (ஈடு, 4,8,2).

*[ஏல → ஏழ → ஏட → அட → அடா → உடோ (கொ.வ.)]*

**உடோளக்கை** *udōlakkai*, பெ. (n) ***விரல்களை நெருக் கிக் கொண்டு தோளுக்கு நேராக இரு கைகளையும் நீட்டும் இணைக்கை வகை*** (பரத பாவ 52 ); (Natya.) hand-pose in which both hands are stretched in front of the shoulders, with fingers kept close to one another. (செ.அக.).

*[உ + தோள் + அ + கை = உதோளக்கை → உடோளக்கை. உ = முன்மை சுட்டிய குறிப்பு. ஒ.நோ. உக்கடை = வீட்டின் அல்லது ஊரின் முன்வாசல் (gate)]*

**உடோளாயம்** *udōl-āyam*, பெ. (n.) ***கட்டித் தூக்குஞ் சிறு மூட்டை*** (நாம தீப.); small package or bundle. (செ.அக.).

*[உ + தோள் + ஆயம் = உதோளாயம் → உடோளாயம் ]*

**உண்**[1]**(ணு)-தல்** *uṇ(ṇu)-*, 13. செ.குன்றாவி. (v.t.) 1. ***உண்ணுதல்;*** to eat or drink; to suck as a child; take food. 2. ***உணவைக் கடியாது உட்கொள்ளுதல்*** (திவ். திருவாய். 6,7,1); to swallow without biting. 3. ***துய்த்தல்;*** to enjoy, experience. "மங்கைய ரிளநல மைந்த ருண்ண" (கம்பரா. உண்டா. 63). 4. ***உட்கொள் ளுதல்;*** to draw in, receive. "நதியுண்ட கடல்" (தாயு. மலைவளர். 1.). 5 ***பொருந்துதல்;*** to be fitted to. "உறியுண்ட கரகத்தோடு" (திருவிளை யானையெய். 38). 6. ***ஒத்தல்;*** to resemble. "சேலுண் கண்ணியர்" (சீவக. 2383). 7. ***கவர்தல்;*** to seize, grasp. "அவுணனா ருயிரை யுண்ட கூற்றினை" (திவ். திருக்குறுந். 2.). 8. ***இசைவாதல்;*** to harmonise with, to be agreeable to. "ஓசை யூட்டினு முண்ணாத வாறும்" (யாப். வி.பக்.97) - து.வி. (aux v.) ***செய்ப்பாட்டு வினைப்பொருள் உணர்த்தும் ஒரு ஈறு;*** used with vbl bases and vbl. nouns to form the passive, as in. கட்டுண்டான், கேடுண் டான். (செ.அக.)

ம. உண்ணுக, க. உண்ணு, தெ. ஊடு (குடித்தல்); கோத. உண், துட. உண் (குடித்தல்), குட. உண்ண, து. உண்பினி, உணுபினி, கொலா. உண் (குடித்தல்); நா. உண், பர். உண்; கூ. உன் கோண். உண்டினா; குரு. ஒணா; மால் ஒனெ; பிரா. குனிங்.

*[உல் → உள் → உண் ]*

**உண்**[2] *uṇ*, பெ. (n.) ***உணவு;*** food. "உண்விழைவார்க் கில்லை யுயிரோம்பல்" (அறநெறிச். 115.).

*[உள் → உண்.]*

**உண்**[3] *uṇ*, பெ. (n.) 1. ***மென்மை;*** tenderness. 2. ***சிறியது;*** tiny.

*[இல் → உல் → உள் → உண்.]*

**உண்கண்** *uṇ-kaṇ*, பெ. (n.) ***மையெழுதிய கண்;*** eye painted black on the lower lid. "இருநோக்கு இவளுண் கண் உள்ளது" (குறள், 1091). (செ.அக.).

*[உண் + கண்.]*

**உண்கல்** *uṇ-kal*, பெ. (n.) ***சுக்காங்கல்*** (சுக்கான்கல்) (R ); lime stone. (செ.அக.).

*[வெண் + கல் = வெண்கல் → உண்கல்.]*

**உண்கலம்** *uṇ-kalam*, பெ. (n.) ***உண்ணும் ஏனம்;*** plate or dish to eat from, whether of metal, China glass or leaf.

*[உண் + கலம்.]*

*பொன், வெள்ளி, வெண்கலம் இவற்றால் செய்த கலங்கள்; வாழையிலை, பலா, முந்திரி, தாமரை, மந்தாரை, காட்டு முருக்கு போன்ற இலைகளால் தைத்த தொன்னைகள் முதலி யன உண்கல வகைகளாகும்.*

**உண்கலன்** *uṇ-kalaṉ*, பெ. (n.) ***உண்கலம்*** பார்க்க; see *uṇ-kalam.*

*[உண் + கலம் = உண்கலம் → உண்கலன் ஈற்றுத் திரிபு.]*

**உண்டல்** *uṇḍal*, பெ. (n.) 1. ***உண்டாகுகை;*** coming into existence. "காட்டாத்திலங்கி வேறுண்டல் போல்" (சி.போ.பர. 12,3,2). 2. ***உட்கொள்ளல்;*** eating, swallowing. (செ.அக.).

*[உள் → உண் → உண்தல் → உண்டல்.]*

**உண்டழிவு** *uṇḍaḻivu*, பெ. (n.) ***உணவிடுதற்குரிய செலவு;*** feeding expenses. "திருவிழா உண்டழிவுக்கு மாக" (S.I.I. iii 298). (செ.அக.).

*[உண்டு + அழிவு அழிவு = செலவு.]*

**உண்டறு[1]-த்தல்** *uṇḍaṟu-*, 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***புசித்துச் செரிப்பித்துக் கொள்ளுதல்*** (ஈடு. 10,5,11); eat and digest. 2. ***துய்த்து முடித்தல்;*** experience to the fullest extent, enjoy the maximum benefit of. "உண்டறுக்க வொண்ணாத போக்யதாதி சயத்தை" (ஈடு, 10,3,2). 3. ***நன்றி மறத்தல்;*** to be ungrateful. "அல்லாத உபகாரங்களை உண்டறுக்கிலும்" (திவ்.திருநெடுந். 2. வ்யா ). (செ.அக.).

*[உண்டு + அறு ]*

**உண்டறு[2]-த்தல்** *uṇḍaṟu-*, 4. செ குன்றாவி. (v.t.) ***ஈடுசெய்து தீர்த்தல்;*** to exhaust. "இவ்வுக்தி மாத்ரமும் உண்டறுக்க மாட்டாது சரண்யன் கிருபை" (ரஹஸ்ய. 340). (செ.அக ).

*[உண்டு + அறு.]*

**உண்டா-தல்** *uṇḍā-*, 6. செ.கு.வி. (v.i.) 1. ***உளதாதல்;*** to come into existence, rise into being, to be formed. "நன்றுண்டாகவென" (சீவக. 1159). 2. ***விளைதல்*** (பிங் ); to grow as vegetables; to thrive, flourish. 3. ***செல்வச் செழிப்பாதல்;*** to become rich, wealthy, opulent, to prosper. "உண்டாய போழ்தில்.. தொண்டாயி ரவர் தொகுபவே" (நாலடி, 284) 4. ***நிலையாதல்;*** to be permanent, lasting, durable "செல்வமொன் றுண் டாக வைக்கற்பாற் றன்று" (நாலடி. 1). 5. ***கருவுண்டா தல்;*** to conceive. அந்த அம்மையார் உண்டாகியிருக் கிறார் (உ.வ.).

*[உண்டு + ஆ (கு).]*

**உண்டாக்கல்** *uṇḍākkal*, பெ. (n.) 1. ***உண்டாக்குதல்;*** making, producing. 2 ***உருவாக்கல்;*** creating, bringing into being 3. ***விளைவித்தல்;*** cultivating, rearing. 4. ***உயர்த்துதல்; உரிய இடத்துக்குக் கொண்டு வருதல்;*** enriching, raising, bringing up.

*[உண்டு + ஆக்கல்.]*

**உண்டாக்கு-தல்** *uṇḍākku-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1 ***ஒன்றை உண்டாக்குதல்;*** to make, produce. "மண் ணால் பிரதிமை யுண்டாக்கினான்" (உ.வ.). 2. ***படைத் தல்;*** to bring into being, create. "தீர்த்தமிங்குண்டாக்கெ னச் செப்பலோடும்" (திருவிளை. தீர்த்தவி. 8). 3. ***விளைவித்தல்;*** to raise, as crops or trees; to cultivate. "நந்தனம்... உண்டாக்கி" (திருவிளை. தருமிக். 4). 4. ***வளர்ச்சிக்குக் கொண்டு வருதல்;*** to enrich, raise to affluence. அந்தப் பிரபு அவனை உண்டாக்கி வைத்தார். (உ.வ.). 5. ***சம்பாதித்தல்;*** to earn. (சேரநா.). (செ.அக ).

ம. உணடாக்கு.

*[உண்டு + ஆக்கு.]*

**உண்டாக** *uṇḍāga*, வி.எ. (adv.) 1. ***உரிய காலத்துக்கு முன்; முன்பே;*** early, betimes; before it is too late. "வேண்டி னுண்டாகத் துறக்க" (குறள், 342). 2. ***மிகுதியாக;*** abundantly. என்னிடம் அந்தப் பண்டம் உண்டாக விருக்கிறது. (உ.வ.). (செ.அக.).

*[உண்டு + ஆக.]*

**உண்டாட்டம்** *uṇḍāṭṭam*, பெ. (n.) ***விளையாட்டு;*** festivity, joviality. "கொண்டலுண்டாட்டங் கொண்டான்" (கம்பரா. சூர்ப்ப. 51). (செ.அக.).

*[உண்டு + ஆட்டு = உண்டாட்டு → உண்டாட்டம்.]*

**உண்டாட்டு[1]** *uṇḍāṭṭu*, பெ. (n.) 1. ***கள்ளுண்டு மகிழ்கை*** (பிரமோத். 22.13); festivity, joviality, as of warriors celebrating the seizure of cows by indulging in drink. 2. ***கள்ளுண்டு மகிழ்தலைத் தெரிவிக்கும் புறத்துறை*** (தொல் பொருள். 58); (puṟap.) poems describing the merry-making of victors. (செ.அக.).

*[உண்டு + ஆட்டு ]*

**உண்டாட்டு[2]** *uṇḍāṭṭu*, பெ. (n.) 1. ***விளையாட்டு;*** play, game. 2. ***மகளிர் விளையாட்டு வகை;*** ladies' game. (செ.அக.).

*[உண்டு + ஆட்டு. கள்ளுண்டு வேல் திரித்து விளையாடும் ஆடவர்க்கே உரிய உண்டாட்டு பொதுவாக விளையாட்டைக் குறித்தது ]*

**உண்டாயிரு-த்தல்** *uṇḍāy-iru-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***கருக்கொண்டிருத்தல்;*** to be pregnant. அவள் உண்டா யிருக்கிறாள் (கொ.வ.). 2. ***உளதாயிருத்தல்;*** to come into existence, rise into being, be formed.

*[உண்டு + (ஆகி) ஆய் + இரு.]*

**உண்டி[1]** *uṇḍi*, பெ. (n.) 1. ***உணவு;*** food. "அறுசுவை யுண்டி" (நாலடி.1). 2. ***சோறு*** (சூடா.); boiled rice. "உண்டி முதற்றே உணவின் பிண்டம்" (புறநா.) 3. ***பறவை முதலியவற்றின் இரை*** (சூடா.); food of birds and beasts in general. 4. ***நுகர்ச்சி;*** experience. "உண்டி வினையின்றி" (சி.போ. 3,5. அதிகரணம், அவ.).

க. உண்ணி.

*[உண் → உண்டி]*

**உண்டி**[2] *undi*, பெ. (n.) ***உண்டிகை*** பார்க்க; see *undigai*.

**உண்டிகை** *undgai*, பெ. (n.) 1. ***கூட்டம்;*** huge gathering, large concourse of people. "சாரிகை மறுத்துத் தண்டா வுண்டிகை" (பரிபா. 6,36). 2. ***பணம் இட்டுவைக்கும் பெட்டி அல்லது குடுவை;*** box, pot with a line-shaped opening for saving money.

*[உள் → உண்டு → உண்டிகை. உள் = இருத்தல், இருத்துதல், வைத்தல், இடுதல்.]*

**உண்டிசுருங்கல்** *undi-surungal*, பெ. (n.) ***உணவு குறைவாகவுண்ணல்;*** eating less than the required quantity. "உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு" (கொன்றை வேந்தன்-5). (சா.அக.).

*[உண் → உண்டி + சுருங்கல்]*

**உண்டிப்பொருத்தம்** *undi-p-poruttam*, பெ. (n.) ***செய் யுண் முதன் மொழிப் பொருத்த வகை.*** (பிங்.); rule of propriety which enjoins that the initial letter of a poem should be one of amuta-v-eluttu, and not one of nacceluttu one of ten ceyyun-mutan-moli- p-poruttam. (செ.அக.).

*[உண் → உண்டி + பொருத்தம்.]*

**உண்டியச்சு** *undi-y-accu*, பெ. (n.) ***கி.பி. 13ஆம் நூற்றாண்டில் மலை நாட்டில் வழங்கிய நாணய வகை;*** coin current in the West Coast about the 13th A.D. (M.E.R. 20 of 1916). (செ.அக.).

*[உண் → உண்டி + அச்சு.]*

**உண்டு**[1] *undu-*, 15. செ.கு.வி. (v.i.) ***உள்ள தன்மையை உணர்த்தும் ஐம்பால் மூவிடத்துக்கு முரிய ஒரு குறிப்பு வினைமுற்றுச் சொல்*** (நன்.339); finite verb denoting existence, used in common to all genders and persons and both numbers - கு.வி.மு. (adv.) அற்பத்தைக் குறிக்குஞ் சொல்; expr. used to denote a diminutive sense in respect of quantity or measure such as இத்தனை, அத்தனை. இத்தனையுண்டு கொடுத்தான்டா. (உ.வ.).

ம. உண்டு, தெ. உண்டு; க. உண்டு; **கோத.** ஒள்; **துட.** விள்ட்; குட. உன்று; **து.** உண்டு; **கொலா;** அள், அன்டீ; **பிரா.** அன்னிங்.

*[உள் + து - உண்டு.]*

ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றும் வினையாலணையும் பெயருமாகிய 'உண்டு' என்னும் சொல் இன்று பால்வழு வமைதியாக இருதிணையைம்பால் மூவிட ஈரெண் கட்கும் பொதுவாக வழங்கி வருகின்றது இன்றும், அதுவுண்டு மரமுண்டு என்பவற்றில் ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்றாகவும் உண்டு பண்ணு (உள்ளது பண்ணு), உண்டாக்கு (உள்ள தாக்கு) என்பவற்றில் ஒன்றன்பாற் படர்க்கை வினையாலணையும் பெயராகவும், ஆளப்பெறுதல் காண்க (வே.க. 42). 'உள்' குறிப்பு வினையை இற்றை மொழியியலார் குறைவினை (defective verb) என்பர் இதனைப் பிழைபடப் பேசியது மக்கள் குறையேயன்றி மொழியின் குறைபாடு அன்று என்பது பாவாணர் கருத்து இருத்தல் அல்லது உளதாகும் பொருளில் 'உள்' வினைச்சொல் உண்டிந்தி → உண்ட்டுந்தி → உண்டுனு என முக்காலத்திலும் புடைபெயர்தலால் குறைவினை எனக் குறை கூறல் நன்றன்று

**உண்டு**[2] *undu*, இடை. (part.) 1. ***ஓர் உவமவுருபு;*** suffix used as a sign of comparison. "குன்றுண் டோங்கு திரடோளவன்" (சீவக 1159). 2. ***ஒரு துணைச் சொல்;*** expletive. தேவரைத் திருவடி தொழ நெடுந்தூர முண்டு வந்திருக்கிறது. (ஈடு. 6,9,3, வ்யா. பக். 403). (செ.அக.).

*[உள் → உண் → உண்டு.]*

**உண்டு**[3] *undu*, பெ. (n.) ***ஊன்றுகால்*** (யாழ். அக.); support. (செ.அக.).

*[ஊன்று → உண்டு (கொ.வ)]*

**உண்டுபடர்க்கொடி** *undu-padar-k-kodi*, பெ. (n.) ***வெள் ளிண்டங்கொடி;*** shining leaved soap pod. (சா.அக.).

*[உண்டு + படர் + கொடி. உண்டு = வெண்மை உட்கொண்டு.]*

**உண்டுபடு-தல்** *undu-padu-*, 20. செ.கு.வி. (v.i.) 1. ***உண்டாதல்;*** to appear, come into existence. "உண்டு படு விடங்கண்டத் தொடுக்கினான்காண்" (தேவா. 1047, 8). 2. ***தோன்றுதல்;*** to be formed or produced by natural processes observable by the sense, to happen, occur (W.). 3. ***மேன்மேலும் உண்டாதல்;*** to grow, thrive, flourish. 4. ***முளைத்தல்*** (ஆ.அக.); to be sprouted. 5. ***தோன்றுதல்;*** to be seen, appear. (செ.அக.).

*[உண்டு + படு.]*

**உண்டுபடுத்து-தல்** *undu-paduttu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***படைத்தல்; உண்டாக்குதல்;*** to make, create. 2. ***கட்டிவிடுதல்;*** to fabricate, concoct. (செ.அக.).

*[உண்டு + படுத்து.]*

**உண்டுபண்ணிவை-த்தல்** *undu-panni-vai-*, 4. செ.குன்றாவி. (v.t.) ***நல்ல நிலையில் வைத்தல்;*** to put into the state or condition of being, to set up or establish the fortune or standing of, to elevate, as a person. (செ.அக.).

*[உண்டு + பண்ணி + வை.]*

**உண்டுபண்ணு-தல்** *undu-pannu-*, 12. செ.குன்றாவி. (v.t.) ***உண்டாக்குதல்;*** to make, create, give rise to. "துவிதமே அத்துவித ஞானத்தை யுண்டு பணு ஞானம்" (தாயு. எங்கு. 3). (செ.அக.).

*[உண்டு + பண்ணு.]*

**உண்டுருட்டி** *undurutti*, பெ. (n.) ***முன்னோர் ஈட்டிய பொருள்களை யெல்லாம் தின்று அழிப்பவன் (ள்);*** one who squanders and eats away all his ancestral property. (செ.அக.).

*[உண்டு + உருட்டி.]*

**உண்டுறையணங்கு** *undurai-yanangu,* பெ. (n.) *நீருண் ணுந் துறையிலுள்ள தேவதை;* malignant goddess presiding over springs or streams from which fountain or ghat people take their drinking water; naiad of Indian myth. "உண்டுறை யணங்கிவ ளுறை நோயா யின்" (ஐங்குறு.28).

*[உண் + துறை + அணங்கு.]*

**உண்டென** *undena-,* கு.வி.எ. (adv.) *நிரம்ப;* profusely, lavishly. உண்டெனத் தரவேணும் (உ.வ.) (செ.அக.).

*[உண்டு + என.]*

**உண்டை**[1] *undai-,* பெ. (n.) 1 *திரண்ட வடிவுள்ளது;* ball, globe, sphere, anything round or globular, commonly rather small. பொரியுண்டை 2. *வில்லுண்டை;* ball of stone or earth shot from a bow. "உடுத்திரள் பலகோ ளின்ன வுண்டையாக் கொண்டு" (கந்தபு. திருவிளை. 29). 3. *கவளம்;* food in the shape of a ball, mouthful. "உண்டைகொண் மதவேழம்" (கம்பரா. கடிமண.28). 4. *ஒருவகைச் சருக்கரை* (பிங்.); a kind of sugar. 5. *ஆயமாடுகருவி;* dice. உண்டையுருட்டல் (குறள். 401, உரை). 6. *குறுக்கிழை;* woof, weft. 'மடிப் புடைவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக்கிடக் கும்' (ஸ்ரீவசன. 2,191). 7. *படைவகுப்பு;* a form of array of an army; "உண்டையுமழிதலுற்ற" (கந்தபு. தரும கோபன். 79.). 8. *கூட்டம்;* group, collection. கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன் (பரிபா. 6,36, உரை). 9. *கஞ்சாவுண்டை;* ball of ganja mixed with jaggery. "அவன் உண்டை போடுகிறவன்" (செல்வி. 77 நவம். 122).

**ம.** உண்ட; **க.** உண்டெ; **தெ.** உண்ட; **கோத.** உண்ட்; **துட.** உட்ய்; **து.** உண்டெ; **கோண்.** உன்தா.

*[உருண்டை → உண்டை.]*

**உண்டை**[2] *undai,* பெ. (n.) *சிற்றுண்டி* (யாழ்.அக.); light refreshment. (செ.அக.).

*[உருண்டை → உண்டை. சோற்றுருண்டையை முதலில் குறித் துக் கவள அளவிலான சிற்றுண்டிக்கு ஆகிவந்தது.]*

**உண்டைக்கட்டி** *undai-k-katti,* பெ. (n.) *கோயிலில் பட்டையாகத் தரும் படையல் செய்த உணவு;* balls of offering distributed in temples. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + கட்டி.]*

**உண்டைக்கார்** *undai-k-kär,* பெ. (n.) *நான்கு மாதங் களிற் பயிராகும் நெல் வகை;* a coarse paddy sown in August and maturing in four months. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + கார்.]*

**உண்டைக்கெளுத்தி** *undai-k-kelutti,* பெ. (n.) *சிறு கடல் மீன் வகை;* bluish-leaden salt-water cat fish. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + கெளுத்தி.]*

**உண்டைச்சம்பா** *undai-c-camba,* பெ. (n.) *ஐந்து திங்களிற் பயிராகும் நெல்வகை;* a paddy maturing in five months. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + சம்பா ]*

**உண்டைச்சாதம்** *undai-c-cādam,* பெ. (n.) **உண்டைக் கட்டி** பார்க்க (வின்.); see *undai-k-katti.* (செ.அக.).

*[உருண்டை → உண்டை + சாதம் ]*

**உண்டைச்சுரை** *undai-c-curai,* பெ. (n.) *சுரைவகை* (நாமதீப.); a kind of calabash. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + சுரை.]*

**உண்டைநிலைமை** *undai-nilaimai,* பெ. (n.) *உருண்டை வடிவமாயிருக்கும் நிலைமை;* the state of being a globule, spheroidal state. (சா.அக.).

*[உருண்டை → உண்டை + நிலைமை.]*

**உண்டைநூல்** *undai-nūl,* பெ. (n.) 1. *நூலுண்டை;* ball of thread. 2. *நெசவின் குறுக்கிழை;* woof, weft. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + நூல்.]*

**உண்டையம்** *undaiyam,* பெ. (n.) *கடுக்காய்;* gall-nut. (சா.அக.).

*[உருண்டை → உண்டை → உண்டையம்.]*

**உண்டைவிடு-தல்** *undaividu-,* 18. செ.குன்றாவி. (v.t.) *குத்துதல்;* to strike with the first; to cuff. (செ.அக.).

*[உருண்டை → உண்டை + விடு.]*

**உண்டைவில்** *undaivil,* பெ. (n.) *காய்ந்த களி மண் ணுருண்டையை வைத்துத் தெறிக்கும் சுண்டுவில்;* bow from which dried balls of clay are shot. "கூனே சிதைய வுண்டைவில் நிறத்தில் தெறித்தாய்" (திவ். திருவாய். 1,5,5.). (செ.அக.).

*[உருண்டை → உண்டை + வில்.]*

**உண்ணம்**[1] *unnam,* பெ. (n.) **உடை**[5] பார்க்க (மலை); see *udai.* (செ.அக.).

**உண்ணம்**[2] *unnam,* பெ. (n.) 1. *வெப்பம்;* heat. 2. *நெருப்பு;* fire. "உண்ணவண்ணத் தொளி நஞ்ச முண்டு" (தேவா. 510.6.). (செ.அக.).

*[உல் → உள் → உண் → உண்ணம் > Skt. usna.]*

**உண்ணல்** *unnal,* பெ. (n.) 1. *துய்த்தல்;* enjoying, experiencing. 2. *விழுங்கல்;* swallowing. (ஆ.அக.).

*[உள் → உண் → உண்ணல்.]*

**உண்ணா** *unnā,* பெ. (n.) *அண்ணத்துள்ள சிறு நாக்கு* (திவா.); uvula. (செ.அக.).

*[உள் + நா - உண்ணா.]*

**உண்ணாக்கு** *unnākku,* பெ. (n.) **உண்ணா** பார்க்க; see *unnā.* (செ.அக.).

ம. உண்ணாக்கு.

*[உள் + நாக்கு = உண்ணாக்கு.]*

**உண்ணாச்சி** *unnācci,* கு.பெ.எ. (adj.) ***மிகவும் சிறிய;*** very small. உண்ணாச்சி மாங்காய். (சேரநா.).

ம. உண்ணாச்சி.

*[உள் → உண் → உண்ணி → உண்ணாச்சி.]*

**உண்ணாட்டம்** *unnāttam,* பெ. (n.) 1. ***ஆராய்ச்சி;*** searching, enquiry. "உண்ணாட்டங் கொள்ளப் படுத லால்" (நாலடி. 18.). 2. ***உட்கருத்து*** (வின்.); real purpose; motive. (செ.அக.).

*[உள் + நாட்டம் - உண்ணாட்டம்.]*

**உண்ணாநோன்பி** *unnānōnbi,* பெ. (n.) ***குறித்த காலங் களிற் பட்டினி விட்டுண்ணுஞ் சமண முனிவன்;*** Jaina ascetic who fasts on specified occasions. "உண்ணா நோன்பி தன்னொடுஞ் சூளுற்று" (மணிமே. 3, 102.). (செ.அக.).

*[உண்ணு + ஆ + நோன்பி. நோன்பு → நோன்பி. 'ஆ' எதிர்மறை இடைச்சொல்.]*

**உண்ணாநோன்பு** *unnānōnbu,* பெ. (n.) ***விரும்பிய செய்கையை முடிக்கப் பட்டினி கிடக்கை;*** hunger-strike. (mod.).

*[உண்ணா + நோன்பு.]*

**உண்ணாமறிப்பு** *unnā-marippu,* பெ. (n.) ***கடன் கொடுத் தோர் கடன் வாங்கினவர்களை உணவு கொள்ள வொட்டாமல் தகையும் மறியல்;*** the creditor's act of preventing his debtor from taking food till he is paid. "கடன்காரர் வந்திழுக்க வுண்ணா மறிப்பி லுடை வாரும்" (தெய்வச். விறலிவிடு. 366.). (செ.அக.).

*[உண்ணு + ஆ = உண்ணா + மறிப்பு. ஆ (எ.ம.இ.நி.).]*

**உண்ணாமுலை** *unnāmulai,* பெ. (n.) ***திருவண்ணா மலையில் எழுந்தருளியிருக்கும் அம்பிகை;*** Parvathi, worshipped in the shrine at Tiruvannāmalai. "உண்ணா முலை உமையாளொடு முடனாகிய வொருவன்" (தேவா. 1025.).

*[உண்ணு + ஆ + முலை. ஆ (எ.ம.இ.நி.).]*

**உண்ணாமுலை எல்லப்பநயினார்** *unnāmulai-ellappa-nayinār,* பெ. (n.) ***திருவண்ணாமலையில் வாழ்ந்த ஒரு புலவர்;*** name of a poet who lived at Tiruvannāmalai.

**உண்ணாவரகு** *unnāvaragu,* பெ. (n.) ***வெள்வரகு;*** coarse millet, unsuited for fodder. "உண்ணா வரகொடு கொள்வித்தின்று" (பு.வெ. 6,26, கொளு.). (செ.அக.).

*[உண்ணு + ஆ + வரகு. ஆ, எதிர்மறை இடைச்சொல்.]*

**உண்ணாவிரதம்** *unnāviradam,* பெ. (n.) ***உண்ணா நோன்பு*** பார்க்க; see *unnānōnbu.*

*[உண்ணு + ஆ - உண்ணா + விரதம்.]*

**உண்ணாழிகை** *unnāligai,* பெ (n.) ***கோயில் கருவறை*** (கருப்பக் கிருகம்); innermost sanctuary of a temple. "உண்ணாழிகையா ருமையாளோடு" (தேவா. 592.3.). (செ.அக.).

ம. உண்ணாழிக.

*[உள் + நாழிகை - உண்ணாழிகை. நாழிகை = இடைவெளி, இடம்.]*

**உண்ணாழிகையார்** *unnāligaiyār,* பெ (n) ***கோயில் கருவறையில்*** (கருப்பக் கிருகத்தில்) ***வாழுங்கடவுள்;*** God abiding in the sanctum sanctorum. "அந்தணர்கள் மாடக் கோயி லுண்ணாழிகையார்" (தேவா. 592,3.). (செ.அக.).

*[உள் + நாழிகை + ஆர். - உண்ணாழிகையார்.]*

**உண்ணாழிகையுடையார்** *unnāligaiyudaiyār,* பெ. (n.) ***கோயில் கருவறையில் திருப்பணி செய்வோர்*** (S.I.I.i. 115.); servants grafted for duty in the inner most sanctuary of a temple. (செ.அக.).

*[உள் + நாழிகை = உண்ணாழிகை + உடையார்.]*

**உண்ணாழிகை வாரியம்** *unnāligai-vāriyam,* பெ. (n.) ***கோயில் ஆளுவக் குழு*** (I.M.P.cg. 205.); managing committee of a temple. (செ.அக.).

*[உள் + நாழிகை = உண்ணாழிகை + வாரியம்.]*

**உண்ணி**[1] *unni,* பெ. (n.) 1. ***உண்பவன்;*** one who eats. "அப்ப னிரந்துண்ணி" (தனிப்பா. i, 35,66.). 2. ***உயிர் வகை;*** acarus, tick on dogs, sheep and cattle. "புலிமுகத் துண்ணி பறித்துவிடல்" (பழ. 109.). 3. ***பாலுண்ணி*** (வின்.); wart. (செ.அக.).

ம., க. உண்ணி.

*[உண் → உண்ணி.]*

**உண்ணி**[2] *unni,* பெ. (n.) 1. ***குழந்தை;*** infant, baby, child. 2. ***மாட்டின் கன்று;*** calf of a cow. 3. ***பிஞ்சு;*** tender fruit. 4. ***சிறியது;*** that which is small.

ம. உண்ணி.

*[உண்[3] (சிறுமை) → உண்ணி.]*

**உண்ணிக்கொக்கு** *unni-k-kokku,* பெ. (n.) ***ஒருவகைப் பறவை;*** species of stork. (செ.அக.).

*[உண் → உண்ணி + கொக்கு.]*

**உண்ணிமாங்காய்** *unni-māngāy,* பெ. (n.) ***பிஞ்சு மாங்காய்;*** tender mango. (சேரநா.).

ம. உண்ணிமாங்ங.

*[உண்ணி + மாங்காய்.]*

**உண்ணியப்பம்** *unni-y-appam,* பெ. (n.) ***சிறிய உருண்டை வடிவான இனிப்புப் பணிகார வகை;*** small, round, sweet cake. (செ.அக.).

ம. உண்ணியப்பம்.

*[உண்ணி + அப்பம் = உண்ணியப்பம் உள் = உள்ளே, கீழே, தாழ இருத்தல், சிறிதாய இருத்தல் உள் → உள்ளி → உண்ணி = சிறுவன், சிறியது ஒ.நோ. ம. உண்ணி - சிறுவன ]*

**உண்ணீடம்** *unnīdam*, பெ. (n) 1. ***தலைப்பாகை;*** turban 2. ***மணிமுடி;*** crown. (செ.அக.)

*[உள் + நீடு + அம் = உண்ணீடம் = உட்கூம்பு வடிவாக அமைந்த தலைபபாகை அல்லது மணிமுடி ]*

**உண்ணீர்** *unnīr*, பெ (n) ***குடிக்கும் நீர்;*** drinking water. ''சிற்றூற லுண்ணீரு மாகி விடும்'' (வாக்குண். 12.). (செ.அக ).

*[உண்ணு + நீர் = உண்ணீர்.]*

**உண்ணீரம்** *unnīram*, பெ. (n.) ***உள்ளீரம்;*** internal moisture

*[உள் + ஈரம் - உள்ளீரம → உண்ணீரம ]*

**உண்ணுகை** *unnugai*, தொ பெ (vbl n ) 1 ***துய்த்தல்;*** enjoying 2 ***உண்டல்;*** eating, swallowing (ஆ அக )

*[உண → உணணு → உணணுகை ]*

**உண்ணோக்கல்** *unnōkkal*, பெ (n.) ***எண்ணத்தை ஒருமுகப்படுத்தல்;*** meditation (செ அக )

*[உள் + நோககுதல = உணணோககுதல → உண்ணோககல ]*

**உண்பலி** *unbali*, பெ (n) ***பிச்சை;*** alms of food ''உடைதலையி லுண்பலிதே ரம்பலவன்'' (திருவாச 10,2 ) (செ.அக ).

*[உண் + பலி ]*

புலால் தவிர்த்துத் தவமேற்கொண்ட துறவியர்க்குப் பழம் தருதல. வடபுல மொழிகளில் பலம் தருதல பலி தருதலாயிற்று கடவுளுக்கு இடும் படையலும பலியாயிற்று

**உண்மட்டைநார்** *un-mattai-nār*, பெ (n.) ***பனை மட்டையின் உட்பக்கத்து நார்*** (யாழ்ப்); fibre of the inner side of the palmyra leaf stem (செ அக )

*[உள் + மட்டை + நார் = உணமட்டைநார் ]*

**உண்மடை** *unmadai*, பெ. (n) 1. ***அடிமதகுத் திறப்பு;*** lower opening of a sluice in a water course. 2 ***கோயிற்குள்ளிடும் படைப்பு;*** offerings of fruits, betel, cooked rice and pastries presented to village deities 3 ***உள்வாய்க்கால்*** (ஆ அக.). inside the temples, opp to புறமடை. (செ அக.).

*[உள் + மடை = உண்மடை ]*

**உண்மலம்** *un-malam*, பெ. (n) ***மனமாசு*** (பிங்.), mental impurity ஆணவம், கன்மம், மாயை. (செ.அக ).

*[உள + மலம = உண்மலம ]*

**உண்மாசு** *un-māsu*, பெ (n.) ***உண்மலம்*** பார்க்க; see *unmalam* ''உண்மாசு கழுவுவது நீறு'' (திருவிளை. விருத் தகு 16 ) (செ.அக.).

*[உள + மாசு = உண்மாசு ]*

**உண்மிடறு** *un-midaru*, பெ. (n) ***உட்கண்டம்*** (பிங்.); inner throat, larynx (செ அக.).

*[உள் + மிடறு = உணமிடறு ]*

**உண்முகம்** *un-mugam*, பெ (n) ***மனத்தால் உட்புறம் நோக்கும் நோக்கம்;*** looking inward. ''கான நீரிற்கண் டுண்முக மடைவார்'' (மகராஜாதுறவு, 102.). (செ அக )

*[உள + முகம் = உண்முகம்.]*

**உண்முடிச்சு** *un-mudiccu*, பெ (n.) ***உள்ளாகச் செய்யும் வஞ்சம்;*** a deep - seated knot said of a treacherous design to inveigle another (W )

*[உள + முடிசசு = உணமுடிச்சு ]*

**உண்மூக்கு** *un-mūkku*, பெ (n) ***மூக்கின் உட்புறத்தின் மேற்பாகம்*** (யாழ் அக ), top of the nostril (செ அக )

*[உள + மூககு - உணமூக்கு ]*

**உண்மூலம்** *un-mūlam*, பெ (n) ***உட்பக்கமாக உண்டாகும் மூலநோய்;*** internal piles (செ அக )

*[உள + மூலம = உணமூலம் ]*

**உண்மை**[1] *unmai*, பெ (n) 1. ***உள்ளது;*** existence, reality, opp to இன்மை ''உண்மையுமாய் இன்மையுமாய்'' (திருவாச 38 8 ) 2 ***உளதாகை;*** state of being. ''கூற்றுண்மையான்'' (நாலடி 20 ) 3 ***உள்ள தன்மை;*** nature, intrinsic quality, essence 4 ***மெய்ம்மை*** (திவா ), sincerity, honesty, probity, veracity, truth 5 ***ஊழ்.*** (குறள் 38 அதி அவ ), destiny, inevitability of the issue of one's actions. 6. ***பொருள்களின் இயற்கைக் குணத்தைச் சுட்டிச் சொல்லுதல்;*** (சி சி அளவை, 1 ) (Log ). statement regarding natural objects, that such an object has such an attribute as 'fire burns' (செ.அக ).

ம. உண்ம, **க.** ஒள்பு, **தெ.** உணிக, **கோத.** ஒட்

*[உள → உணமை ]*

'உள்ளதாயிருக்கும் தன்மை, உள்ளதொடு பொருந்தியது என்னும் பொருள் மொழிநூற்கு ஒவவாது வாய்மை = வாயபபது, நிறைவேறுவது மெய்மமை = உடமபுபோல் உண்மையானது (substance, substantiality) உண்மை, வாய்மை, மெய்ம்மை எனனும சொறகளின் முககரணத் தொடாபு, தனனேர்ச்சியான (accidental) போலியே (வே க 42 )

**உண்மை**[2] *unmai*, பெ (n.) ***ஆதன்*** (ஆன்மா) (சி சி பர. ஆசீவக 8 ), individual soul (செ.அக.).

*[உள + மை = உணமை ]*

**உண்மைஏய்ப்பு** *unmai-ēyppu*, பெ (n.) ***நம்பிக்கை ஏமாற்றம்; இரண்டகம்*** (துரோகம்); flagrant breach of trust.

*[உண்மை + ஏய்ப்பு ]*

**உண்மைத்தாழ்ச்சி** *unmai-t-tālcci*, பெ. (n.) ***உண்மைக் குறைவு*** (சங் அக ), lack of truthfulness. (செ.அக.).

*[உணமை + தாழ்ச்சி ]*

**உண்மைநெறிவிளக்கம்** *unmai-neṟi-viḷakkam,* பெ (n.) ***உமாபதி சிவாச்சாரியாரியற்றிய சிவ நூல்;*** treatise on the Śaiva Śiddhānta Philosophy by Umāpati-Śivāccāriyār one of 14 Meykaṇḍa - Cāttiram (செ அக.)

*[உண்மை + நெறி + விளக்கம் ]*

**உண்மைப்படு-தல்** *unmai-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) ***உறுதிப்படுதல்;*** to become evident to the mind to appear as certainty as the deity to His worshippers, to prove true, as religion. (செ அக.).

*[உண்மை + படு ]*

**உண்மைப்படுத்து-தல்** *unmai-p-paḍuttu-,* 5. செ குன்றாவி. (v.t.) ***மெய்ப்பித்தல்;*** to prove or demonstrate to be true. (செ.அக.).

*[உண்மை + படுத்து ]*

**உண்மைப்பிடி** *unmai-p-piḍi,* பெ (n.) ***உறுதியான சமயப்பற்று*** (வின்.), unfaltering adherence to religious truth, consistent and steady perseverance in religion (W.). (செ அக.)

*[உண்மை + பிடி ]*

**உண்மைப்பொருள்** *unmai-p-poruḷ,* பெ. (n.) 1. ***கடவுள்;*** God, as the only Reality 2 ***சரியான பொருள்;*** true meaning 3 ***மறுக்கலாகாத உண்மைச் செய்தி;*** unquestionable or axiomatic truth "ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்லடியார் மேல், ஊனத் திரளை நீக்குமது வும் உண்மைப் பொருள்" (தேவா 102f ). 4 ***உள்ள பொருள்;*** existing material 5. ***உவமப் பொருள்;*** that which is compared, subject of comparison (செ.அக.)

*[உண்மை + பொருள் ]*

**உண்மையதிகாரம்** *unmai-y-adigāram,* பெ. (n.) ***சிவஞானபோத முதலிய நூல்களில் இறைவனுடைய வடிவிலக்கணமெனப்படும் சிறப்பியல்பைக் கூறும் பகுதி;*** portion in Saivaite sacred works describing the characteristics of the Lord's personality (ஆ அக.)

*[உண்மை + அதிகாரம் ]*

**உண்மையளவை** *unmai-y-aḷavai,* பெ (n.) ***மெய்ம்மையினால் அளவைப்படுத்தல்;*** measure of truth

*[உண்மை + அளவை ]*

**உண்மையறிவு** *unmai-y-aṟivu,* பெ (n.) 1 ***மெய்யறிவு;*** knowledge of the truth 2 ***மெய்யான அறிவு;*** true knowledge 3 ***ஊழாலுள்ளதாகிய அறிவு;*** knowledge acquired as a result of the inevitable consequence of past karma, as dist from that acquired by learning. "உண்மையறிவே மிகும்" (குறள் 373.) (செ.அக.).

*[உண்மை + அறிவு ]*

**உண்மையுத்தரம்** *unmai-y-uttaram,* பெ (n.) ***வழக்காளி கூறும் உண்மை மொழிகளை எதிர்வழக்காளி யொப்புக் கொண்டு கூறும் விடை*** (சுக்கிரநீதி 270 ); answer of the defendant admitting the truth of the plaint. (செ அக.).

*[உண்மை + உத்தரம் ]*

**உண்மைவழக்கு** *unmai-vaḻakku,* பெ. (n) ***உள்வழக்கு*** பார்க்க (மணிமே 30.194.); see *uḷvaḻakku* (செ அக.).

*[உண்மை + வழக்கு ]*

**உண்மைவிளக்கம்** *unmai-viḷakkam,* பெ. (n.) ***மனவாசகங் கடந்தாரியற்றிய சைவநூல்;*** text-book of the Śaiva Śiddhanta Philosophy by Maṉa-Vācakan-Kaḍandār, one of 14 Meykaṇḍa Cāttiram (செ.அக.)

*[உண்மை + விளக்கம் ]*

**உண** *uṇa,* பெ (n.) ***உணவு*** (சிலப். 2,28, உரை.); food. (செ.அக.).

*[உள் → உண் → உணா → உண (கொ வ ).]*

**உணக்கம்** *uṇakkam,* பெ (n) 1. ***உலர்ந்த தன்மை;*** withering, drooping, dejection (W) 2 ***வாட்டம்;*** slackness, languidness, inactivity (செ.அக.)

ம. உணக்கம், து. ஒணகெலு, க. ஒணகிலு

*[உணங்கு → உணக்கு → உணக்கம் ]*

**உணக்கு[1]-தல்** *uṇakku-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. ***உலர்த்துதல்;*** to cause to dry, to dry in the sun "தொடிப் புழுதி கஃசா வுணக்கின்" (குறள். 1037.). 2 ***கெடுத்தல்;*** to injure, ruin. "உணக்கினான்.. என் வாழ்க்கை" (விநாயகபு. 80,120 ). 3. ***வருத்து;*** torment, give trouble (செ.அக.).

ம. உணக்குக, க. ஒணத்த, கோத. ஒண்க், துட. விணக், குட. ஒணக், து. உணங்கு, பட. ஒணக்கு

*[உணங்கு → உணக்கு (பி வி ) → உணக்குதல் ]*

**உணக்கு[2]** *uṇakku,* பெ (n) ***உணக்கம்*** பார்க்க; see *uṇakkam* "உணக்கலாததோர் வித்து" (திருவாச. 30,1.). (செ அக.)

*[உணங்கு → உணக்கு ]*

**உணக்குப்பொருள்** *uṇakku-p-poruḷ,* பெ. (n.) ***காய்கறிகளின் வற்றல்*** (நாமதீப.); dried vegetables. (செ.அக.)

*[உணக்கு + பொருள்.]*

**உணங்கல்** *uṇaṅgal,* பெ. (n.) 1 ***உலர்த்திய கூலம்;*** dried grain. "உணங்கல் கெடக்கழுதை யுதடாட்டங்கண்டென் பயன்" (திவ். திருவாய். 4,6,7.) 2 ***வற்றல்;*** dried food material "வெள்ளென் புணங்கலும்" (மணிமே. 16,67). 3. ***உணவு;*** cooked food "ஓடு கையேந்தி உணங்கல் கவர்வார்" (தேவா 1030, 3 ). 4. ***உலர்ந்த பூ*** (பிங் ); withered flower. 5. ***வற்றலிறைச்சி;*** dried meat. 6 ***ஒசிதல்;*** suffer 7. ***துயருறல்;*** feel sorry (ஆ அக.).

ம. உணங்ஙல், க., பட. ஒணகலு; து. ஒணகெலு.

*[உணங்கு → உணங்கல்.]*

**உணங்கு-தல்** *unangu-*, செ.கு.வி. (v.i.) 1. ***உலர்தல்;*** to dry, as grain, vegetables or fish. ''தினைவிளைத்தார் முற்றந் தினையுணங்கும்'' (தமிழ்நா. 154.). 2. ***மெலிதல்;*** to become gaunt, as the body by fasting. ''ஊடலுணங்க விடுவாரோடு'' (குறள். 1310.) 3. ***வாடுதல்;*** to be dejected in mind, to languish. ''வணங்கிய சிந்தையீர்'' (கந்தபு. மோன. 21.). 4. ***சுருங்குதல்;*** to shrink, shrivel. ''உணங்கரும் புகழ்'' (காஞ்சிப்பு. நாட்டுப்.1.). 5. ***செயலறுதல்;*** to pine away, droop, become listless. ''உணங்கிடுங் கரண மென்னில்'' (சி.சி. 4,7.).

ம. உணங்ஙுக, க. ஒணகு, கோத. ஒண்க், துட. விங்க், விண்க், குட. ஒணங்க், து. ஒணகட்டு (உலர்ந்தது).

*[உண் → உணங்கு → உணங்கு-தல்.]*

**உணத்தல்** *unattal*, பெ (n.) ***உணத்து-தல்*** பார்க்க, see *unattu-* (ஆ.அக.)

**உணத்து-தல்** *unattu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1 ***காயவிடுதல்;*** to cause to dry. நெல்லை யுணத்தினான் 2. ***வற்றுவித்தல்;*** to emaciate as the body, to attenuate ''மெய்யுணத்தலும்'' (தைலவ. தைல. 110). (செ.அக.)

*[உண → உணத்து → உணத்து-தல.]*

**உணப்பாடு** *unappādu*, பெ (n.) ***உண்ணப்படுகை*** (நன் 274 மயிலை); edibility, state of being eaten or consumed. (செ அக.).

*[உண்ண + படு - உண்ணப்படு → உணப்பாடு படு → பாடு (மு.தி.தொ.பெ.)]*

**உணர்**[1]**-தல்** *unar-*, 2. செ.குன்றாவி (v.t.) 1 ***அறிதல்;*** to be conscious of; to know, make out, understand. ''முன்ன முகத்தினுணர்ந்து'' (புறநா 3,25.) 2 ***கருதுதல்*** (திவா.); to think, reflect, consider, contemplate 3 ***ஆராய்தல்;*** to examine, test, oberve, scrutinize ''உற்று நாறியுங் கண்டு முணர்ந்து'' (சீவக 885.) 4 ***நுகர்தல்;*** to experience, as a sensation. ''ஐந்தினையு மொன்றொன் றாப் பார்த்துணர்வது'' (சி.போ 11,1,1.) 5 ***நினைத்தல்;*** to realize, conceive, imagine ''அண்டனை யான் மாவி லாயந்துணர'' (சி.போ 9,2,3) 6 ***உள்ளம் நெகிழ்தல்;*** to feel 7 ***பகுத்தறிதல்*** (ஆ.அக.); to rationalize. 8 ***உணர்ந்தறிதல்*** (ஆ.அக.); to known by sense or perception (செ.அக.).

ம. உணருக, க. ஒணர்

*[உள் → உள்ளார் → உளர் → உணர் (உள்ளத்தால் அறிதல்)]*

**உணர்**[2]**-தல்** *unar-*, 2 செ.குன்றாவி. (v.i.) 1 ***துயிலெழுதல்;*** to wake from sleep ''மன்னநீ யுணர்தி யென்னா'' (கம்பரா. கும்ப 44.) 2 ***அயர்வு நீங்குதல்;*** to get back to consciousness, recover from languor. 3. ***பிரிதல்*** (பிங்.); to separate 4. ***ஊடல் நீங்குதல்;*** to become reconciled as a husband to his wife, to be reunited after a love quarrel ''ஊடலுணர்தல்'' (குறள். 1109.) (செ.அக.).

*[உள் → உளர் → உணர் உளர் = முன்னுறல், அசைதல், எழுதல், விலகல்.]*

**உணர்ச்சி** *unarcci*, பெ (n.) 1 ***உணர்கை;*** consciousness, perception, understanding, knowledge, feeling 2. ***மனம்;*** mind. ''சிறியாருணர்ச்சி யுளில்லை'' (குறள். 976.). (செ.அக.).

ம. உணர்ச்சி

*[உணர் → உணர்ச்சி **உணர்த்தி** பார்க்க, see unartti]*

**உணர்த்தி**[1] *unartti*, பெ (n.) 1. ***உணர்தல்;*** feeling. 2. ***அறிதல்;*** knowing.

*[உணர் → உணர்த்தி.]*

**உணர்த்தி**[2] *unartti*, பெ (n.) ***நினைவு;*** recollection, remembrance. ''மறந்தமையை ஸ்மரிப்பியுங்கோள்; உணர்த்தியற்றாரை யுணர்த்த வேணுமே'' (ஈடு. 6,1,4.).

*[உணர்த்து → உணர்தி]*

**உணர்த்தி**[3] *unartti*, பெ (n.) ***சுவை;*** taste. தேங்கூழ் உணர்த்தியாய் இருந்தது (இ.வ.) ஒணத்தியா தின்கிறியே (கொ.வ.)

*[உணர் → உணர்தி உணர்த்தி என்னும் தென்சொல் வடபுல மொழிகளில் உணாத்தி → ருத்தி → ருச்சி → ருசி எனத் திரிந்தது]*

**உணர்த்தியறு-தல்** *unarttiyaru-*, 4. செ.கு.வி (v.i.) ***மெய்ம்மறத்தல்;*** to swoon; to lose consciousness ''ஸ்வதஸ்ஸர் வஜ்ஞமான வஸ்துவும் உணர்த்தியறும் படி யாய்த்துப் படுக்கை வாய்ப்பு'' (ஈடு 10,2,8 வ்யா. பக் 60.). (செ.அக.)

*[உணா → உணர்த்தி + அறு-தல்]*

**உணர்த்து-தல்** *unarttu-*, 15 செ.கு.வி (v.i.) 1 ***அறிவித்தல்;*** to teach, instruct, cause to feel or understand, enlighten, convince ''உடல நைந்தொருத்தி யுருகுமென் றுணர்த்துமினே'' (திவ் திருவாய். 6,1,4) 2. ***துயிலெழுப்புதல்;*** to wake from sleep ''ஏனல் காப்போ ருணர்ததிய கூஉம்'' (புறநா. 28.). 3 ***ஊடல் தீர்த்தல்;*** to pacify, as the husband his wife ''உணர்த்தல் வேண்டிய கிழவோன்'' (தொல். பொருள் 150) 4 ***நினைப்பூட்டுதல்;*** to put in mind, remind, recall to mind ''உணர்த்த லூட லுணர்ந்து'' (திவ். திருவாய். 6,1,5) 5. ***பெரியோர் அறியுமாறு செய்தல்;*** to inform a superior, to submit.

ம. உணர்தது, க. உன்னிசு.

*[உணர் → உணர்த்து]*

**உணர்ந்ததையுணர்-தல்** *unarndadai-y-unar-*, 2 செ.குன்றாவி (v.t.) ***ஓரளவை, அது முன் குறித்துவந் துற்ற காலத்து நெருப்பு மருந்தென்றறிந்தான் பின்பும் அது மருந்தெனவுள்ளங் கோடல்;*** to remember the previous remedy for something in a new tangle. (ஆ.அக.).

*[உணர் → உணர்ந்தது + ஐ + உணர்.]*

**உணர்ந்தோர்** *unarndōr,* பெ (n.) ***அறிவுடையோர்;*** wise, learned men

*[உணர் → உணர்ந்தோர்]*

**உணர்ப்பு** *unarppu,* பெ (n) 1 ***தெளிவிக்கப்படுகை;*** regaining clarity of mind "உணர்ப்புவயின் வாரா ஊட லுற்றோள்" (தொல் பொருள் 150) 2. ***கல்வி;*** education (செ அக)

தெ. நேரபபு. ம. உணர்ப்பு

*[உணர் → உணர்ப்பு = மனத்தெளிவு எப்பொருளைப் பற்றியும் தெளிவான விளக்கம் தரும் எழுத்தறிவான கல்வியும் தெலுங் கில் நேர்பபு எனப்படுகிறது உணர்ப்பு → தெ நேர்ப்பு]*

**உணர்வு** *unarvu,* பெ (n) 1 ***அறிவு*** (திவா), consciousness, sense-perception 2 ***தெளிவு*** (திவா), clear discernment 3 ***துயில் நீங்குகை;*** waking from sleep 4 ***ஊடல் தீர்கை*** (சூடா), reconciliation after a love quarrel 5 ***ஒழிவு*** (பிங்), separation, cessation 6. ***ஆதன்;*** soul. 'ஒருவனையே நோக்குமுணர்வு" (திவ் இயற். 1,67). (செ.அக.)

ம. உணர்வு

*[உணர் → உணர்வு]*

**உணர்வுக்கேடு** *unarvu-k-kēdu,* பெ (n) 1 ***அறிவுக் கேடு;*** loss of wisdom. 2 ***கேடு;*** loss of perception

*[உணர்வு + கேடு கெடு → கேடு (மு தி தொ பெ)]*

**உணர்வெழுத்து** *unarveluttu,* பெ (n.) ***குறியினா லுணரப்படும் ஒருவகையெழுத்து*** (யாப் வி. 535); symbolic letter (செ அக.)

*[உணர்வு + எழுத்து]*

**உணர்வோர்** *unarvōr,* பெ. (n) ***உணர்ந்தோர்*** பார்க்க; see *unarndōr* (ஆ.அக.)

*[உணர்வு + (ஆர்) ஓர் → உணர்வோர்.]*

**உணராமை** *unarāmai,* பெ. (n.) 1. ***அறியாமை;*** ignorance, lack of knowledge 2. ***உள்ளம் நெகிழாமை;*** lack of feeling, unmindfulness 3. ***மயக்கம்;*** intoxication, infatuation, bewilderment (செ அக.)

*[உணர் + ஆ (எ ம.இ) + மை]*

**உணரார்** *unarār,* பெ (n.) ***அறிவை இயைத்துப் பாராதார்;*** the ignorant, the foolish, the uninformed folk. "உணரார் புரமூன்றெரிய" (தேவா. 508,2). (செ.அக.).

*[உணர் + ஆ + ஆர் ஆ (எ.ம.இ.) தொக்கது.]*

**உணவின்பிண்டம்** *unavinpindam,* பெ. (n.) ***உடம்பு;*** body

*[உணவு + இன் + பிண்டம்.] .*

**உணவு** *unavu,* பெ. (n.) 1. ***உண்ணப்படுவன; உட கொள்ளப்படுவன;*** food, sustenance, eatables. "உண வெனப் படுவது நிலத்தொடு நீரே" (புறநா. 18). 2. ***சோறு*** (பிங்.); boiled rice. 3. ***உணவுப்பொருள்;*** food-stuffs "எண்வகை யுணவு" (தொல் பொருள 633) 4 ***மழை*** (அக நி), rain (செ அக)

*[உண → உண → உண → உணவு உண + அ + உ - உணவு அகரம வினைததொகையைப பெயரெச்சமாகக வந்தது உண ணும தொழிலுறுதற்குகந்த உணபொருளைக் குறிக்க வந்த முனைமைச சுட்டாகிய உகரம ஈறாயிற்று உணணககூடியது எனப பொருள படுதலான, இதனை முதனிலை வினையா லணையும பெயா எனலாம்]*

**உணா** *unā,* பெ (n) 1 ***உணவு;*** food, sustenance "இந்நான கல்லது உணாவு மில்லை" (புறநா 335) 2 ***சோறு*** (சூடா), boiled rice

ம. உணா (படையல்)

*[உண → உணவு → உணா]*

**உணாப்பொருத்தம்** *unā-p-poruttam,* பெ (n) ***உண்டிப் பொருத்தம்*** பார்க்க (வெண்பாப் முதன் 7), see *undi-p-poruttam*

*[உண் → உணவு → உணா + பொருத்தம]*

**உணி** *uni,* பெ (n) 1 ***நுகர்வது, நுகர்வர்;*** enjoyer 2 ***நுகர்விப்பது என்னும் பொருள்பட நிற்கும் ஒருமைப் படர்க்கை இறுதி;*** third person singular or plural termination to denote getting someone enjoyed or experienced. 3 ***ஒருயிரி;*** animate being

*[உண → உணணி → உணி]*

**உணை**[1]**-தல்** *unai-,* 2 செ.கு வி (v i) 1 ***உரைமெலி தல்;*** to emaciate, slacken. 2. ***உள்நைதல்;*** to be frayed, to be wornout, as cloth

*[உள் + நை - உணை இககால் இச்சொல் உணைதல் → நொணைதல் → நொணத்தல் எனத திரிந்தது]*

**உணை**[2] *unai,* பெ. (n.) ***மெலிவு*** (யாழ்.அக.); emaciation, weakening.

*[உள் + நை - உணை]*

**உணைவு** *unaivu,* பெ. (n.) ***உணைதல்;*** fraying.

*[உள + நைவு - உணைவு.]*

**உத்தண்டம்** *uttandam,* பெ (n) 1. ***கொடுமை;*** fierceness, relentlessness, barbarity. 2. ***இறுமாப்பு;*** imperiousness, haughtiness அவன் உத்தண்டமாகப் பேசுகி றான். (உ.வ.). (செ.அக.).

*[உத்து → உத்தண்டம்.]*

**உத்தண்டமணி** *uttanda-mani,* பெ. (n.) ***பொன் மணி களாலான மாதர் கழுத்தணி வகை*** (வின்.); woman's necklace make of gold beads (W.). (செ.அக.)

தெ. உத்தண்டமு, க. உத்தண்ட.

*[உத்து → உத்தண்டம் + மணி.]*

**உத்தண்டமாலை** *uttanda-mālai,* பெ. (n.) ***பொன் மணிகளாலான மாதர் கழுத்தணி வகை;*** woman's necklace made of gold beads. "உத்தண்ட மாலையைக்

காதோலையைப் பொன் மோதிரததை வைத்தென் றாலுங் கடுகு வாங்கித்தா'' (விறலி விடு 258) (செ அக )

க. உததணட, உததண்டாலெ, **தெ.** உத்தண்டமு

*[உத்து → உத்தணடம + மாலை ]*

**உத்தண்டன்** *uttandan*, பெ (n) 1 ***கொடியவன்;*** fierce, cruel person ''தண்டனை செய்யும் உத்தண்டனை'' (தனிப்பா 1,224,14) 2 ***இறுமாப்புள்ளவன்;*** haughty, conceited person (செ அக )

*[உதது → உததணடன ]*

**உத்தண்டால்** *uttandāl*, பெ (n) ***உத்தண்டமணி*** பார்க்க, see *uttandamani* (செ அக )

*[உதது → உத்தணடம → உததணடால் ]*

**உத்தம்**[1] *uttam*, பெ (n) ***உத்தமபலம்*** பார்க்க (மூ அ ), see *uttamabalam* (செ அக )

**உத்தம்**[2] *uttam*, பெ (n) ***கொட்டை முந்திரி;*** cashew nut (ஆ அக )

*[உதது → உததம ]*

**உத்தம்**[3] *uttam*, பெ (n) ***பித்தேறுகை*** (அக நி ), becoming mad or maddened (செ அக ).

*[உதது → உததம ]*

**உத்தம்**[4] *uttam*, பெ. (n.) ***போர்க்களம்;*** battle-field.

*[உதது → உத்தம் ]*

**உத்தம்பகம்** *uttampagam*, பெ (n) ***வளர்ச்சி;*** augmenting, raising ''அது பழைய அபிநிவேசத்திற்கு உத்தம்பகமாய் '' (திவ் இயற் திருநெடுந் 1. வ்யா ) (செ.அக.)

*[உத்து → உத்தம → உததம்பகம் ]*

**உத்தம்பரி** *uttambari*, பெ (n) ***கொத்துமலி*** பார்க்க (மூ அ ); coriander (செ அக ).

*[உதது → உததம → உத்தம்பரி ]*

**உத்தம்பி-த்தல்** *uttambi-*, 4 செ கு வி. (v i.) ***வளர்தல்*** (ரஹஸ்ய 94), to augment, develope (செ.அக ).

*[உ → உதது → உததமம் → உத்தமபி ]*

**உத்தமம்** *uttamam*, பெ (n.) 1. ***எவற்றுள்ளும் சிறந்தது;*** that which is pre-eminent ''உத்தம குணத்தார்க்கு'' (தணிகைப்பு அகத் 159). 2. ***நன்மை*** (பிங் ); excellence; nobility; goodness. (செ.அக.) 3 ***அரத்தை*** (சங் அக.) galangal

ம. உததமம், **க.** உத்தம, *Skt uttama*

*[உ → உத்து → உத்தம் → உத்தமம் உத்து = உயர்வு. உத்தமம் = உயாவானது ]*

**உத்தமன்** *uttaman*, பெ. (n.) ***சான்றோன்*** பார்க்க; see *sāṉṟōṉ* ''உத்தம னித்த அடியார் மனமே நினைந்துருகி'' (திருவாச. 5,3). (செ அக ).

ம. உத்தமன்

*[உத்து = உயர்வு. உத்து → உத்தம் → உத்தமன் ]*

**உத்தமாகாணி** *uttamāgāṇi*, பெ. (n.) ***வேலிப்பருத்தி;*** hedge-twiner. (W ) (செ.அக.)

ம. உததமாரணி, *Skt uttamarani.*

*[உத்தமன் + காணி]*

**உத்தமி** *uttami*, பெ (n.) 1. ***மிக உயர்ந்த பெண்;*** excellent woman ''போதுமென் றுத்தமி பெழலும்'' (தணிகைப்பு வள்ளி 63 ) 2. ***கற்புடையவள்;*** chaste woman

*[உத்து = உயர்வு உதது → உத்தம் → உத்தமி ]*

**உத்தர** *uttara*, பெ (adj ) ***மேலான;*** upper. (சா.அக.).

ம., க. உத்தர, *Skt uttara*

*[உதது - உயர்வு உதது → உத்தர.]*

**உத்தரக்கணம்** *uttara-k-kanam*, பெ. (n.) ***அடுத்த நிமயம்;*** next moment. (செ.அக.).

*[உததரம + கணம் ]*

**உத்தரக்கற்கவி** *uttara-k-kar-kavi*, பெ (n) ***கதவு நிலைக்கு மேற் சித்திரம் வகுக்கப்பட்ட உத்திரம்*** (நெடுநல். 82. உரை ), ornamented entablature of stone forming part of the lintel in a building. (செ.அக.)

*[உததரம + கல + கவி ]*

**உத்தரகாண்டம்** *uttarakāndam*, பெ (n) ***இராமாயணத் தின் இறுதிக்காண்டம்;*** seventh book of the Rāmāyaṇa, so called because it relates events after the coronation of Rāma, prob. also because it is a later work that has been appended to Vālmīki's Rāmāyana. (செ.அக.).

*Skt uttara kanda*

*[உத்தரம + காண்டம் ]*

**உத்தரகாலம்** *uttara-kālam*, பெ. (n ) 1. ***எதிர்காலம்;*** future time 2 ***ஒரு வெள்ளுவா*** (பௌர்ணமி) ***வுக்கும் அடுத்த வெள்ளுவாவுக்கும் இடைப்பட்ட காலம்;*** the time reckoned from full-moon to full-moon (சேரநா ). (செ.அக ).

ம. உத்தரகாலம்.

*[உத்தரம் + காலம் ]*

**உத்தரம்** *uttaram*, பெ. (n.) 1. ***மறுமொழி;*** answer, reply, rejoinder ''வத்தவர் பெருமகனுத்தர நாடி'' (பெருங். மகத 10, 55). 2 ***எதிராடல்;*** written statement filed by the defendant in a case. 3. ***பின் நிகழ்வது;*** that which follows; that which comes later. 4. ***மேற்பட்டது;*** that which is superior. ''அதுக்குத் தரமில்லதை'' (உத்த ரரா திருவோலக். 4). 5 ***தலைக்கு மேலுள்ள முகட்டு விட்டம்*** (நெடுநல்; 82, உரை); beam, or cross-beam in a building. 6. ***வடகதிர் வழி*** (விதான குணா. 74); period of the sun's progress towards the north. 7. ***குமரிமலை முழுகியபின் உயர்ந்த வடக்குத்திசை*** (திவா ), north. 8 ***வடவனல்*** (பிங்.), submarine fire. 9 ***12ஆவது விண்மீன், மானேறு;*** 12th nakṣatra, part of Cinka-rāci and Kaṉṉi-rāci containing Denebola or *Leonis*. (செ.அக.)

ம. உத்தரம், *Skt* uttara

*[உ + தரம் - உத்தரம் தட → தடம் → தரம் ]*

உ - உயாவுக் கருத்து முன்மைச் சுட்டு தடம், தடவை என்பன முறை எனப பொருள படுதலான தடம → தரம் எனத் திரிந்த திரிபுச் சொல்லும் அதே பொருள் சுட்டியது தட → தடம் → தரம் = வளைவு சுற்றிச் சுற்றி வரும் முறைமை, ஒரு சீரான இயங்கு நிலைமை அல்லது இருப்பு நிலைமை தன்மை, இயல்ப, ஒழுங்கு, பெருமை, அருமை, தரம் = அகலம், அகன்ற பக்கம், பகுதி என்னும் பொருளிலும் இருவேறு பொருட்பாடு களில புடைவிரிந்து வழங்கும் இங்கு, உ + தரம் - உத்தரம் = உயாநத பககம, உயரததிலுள்ள நிலம், எனப பொருளபட்டது "uttara", northern because the northern part of India is higher என்று Monier Williams அகரமுதலியும் கூறுதல் காண்க

*[உ = உயர்ந்த தரம் = நிலைமை உ + தரம் = உத்தரம் ]*

வடமொழியாளர் உத் + தர என்று பகுத்து, தர என்பதை உறழ்தர (comp degree) ஈறாகக் காட்டுவா அங்ஙனங் காட்டினும், உத என்பது உயர்வு குறித்த தமிழுகரச் சுட்டினின்று தோன்றியதே மேலும் உத்தர தேசம், உத்தரமடஙகல, உத்தர மதுரை முதலிய சொற்களில், உறழ்தரக கருத்தின்மையையும் நோககுக "உபபாலுயாந்த உலகம் புகும" (நான்மணி 27) "உபபககம் நோககி யுபகேசி தோணமணநதான்" (திருவளளுவ மாலை, 21) இதில உப்பக்கம என்பதறகு (உயர்நத) வட திசை என்று பொருளுரைப்பதே சாலச் சிறநததாம் (வ மொ வ 92, வே.க 32,37 )

**உத்தரமடங்கல்** *uttaramadangal,* பெ (n.) ***வடவைத்தீ*** (வடமுகாக்கினி) பார்க்க, see *Vadavai-t-tī* submarine fire. (செ அக )

*[உத்தரம + மடஙகல ]*

**உத்தரமத்திமபூமி** *uttara-mattima-būmi,* பெ. (n) 1. ***வடகுளிர் வெப்பச் சமநிலம்*** (வின் ), north temperate zone 2. ***வட வெப்பநிலம்*** பார்க்க, see *vaḍa-veppanilam.* (செ.அக ).

*[உத்தரம் + மத்திமம் + பூமி (வட நடுநிலம்) ]*

**உத்தரமதுரை** *uttara-madurai,* பெ (n) ***கண்ணன் தோன்றிய வடமதுரை*** (திருவள்ளுவமாலை 21 ); Matura, the birth place of Krishna. (செ அக )

*[உததரம + மதுரை.]*

**உத்தரமந்திரி** *uttara-mandiri,* பெ. (n.) ***முதன்மை அமைச்சர்;*** prime minister. "உத்தர மந்திரி பதமெய்தின" (I M P Mr 366 ). (செ.அக.).

*[உத்தரம் + மந்திரி.]*

**உத்தரமீன்** *uttara-mīṉ,* பெ (n.) ***வடமீன்*** பார்க்க; see *vadamīṉ* "உத்தரமீனின் கொண்கன்" (சேதுபு. துத்தம. 6 ). (செ அக.).

*[உத்தரம் + மீன்.]*

**உத்தரமீனோரை** *uttara-mīṉ-ōrai,* பெ. (n.) ***கோள் மண்டல விண்மீன்களுக்கு வடபாலுள்ள விண்மீன் தொகுதி;*** (M Navi. 109 ); constellations to the north of the Zodiac

*[உத்தரம + மீன் + ஓரை ]*

**உத்தரமும்மை** *uttara-mummai,* பெ (n ) ***மானேறு*** (உத்தரம்), ***கடைக்குளம்*** (உத்தராடம்), ***பிற்கொழுங்கால்*** (உத்தரட்டாதி) ***ஆகிய மூன்று விண்மீன்கள்;*** the three nakṣatras. Viz. Uttaram, Uttarāḍam, Uttarattādi

*[உத்தரம் + மும்மை ]*

**உத்தரமுனை** *uttara-muṉai,* , பெ. (n.) ***வடமுனை,*** (வடதுருவம்), north pole.

*[உத்தரம் + முனை ]*

**உத்தரவாணி** *uttara-vāṇi,* பெ (n.) ***கண்டங்கத்தரி*** (வை மூ), a highly thorny plant with diffuse branches. (செ.அக )

*[ஒருகா உத்தரம் + ஆணி மேற்பகுதியில் ஆணிபோன்ற முள் உளளது ]*

**உத்தரவு** *uttaravu,* பெ (n) 1 ***கட்டளை;*** order, command 2 ***அனுமதி;*** grant, leave, permission 3 ***தெய்வ ஒப்புதல்;*** divine permission such as that suggested in dreams or revealed by inspiration 4 ***விடை; மறுமொழி;*** answer, reply 5 ***வேண்டுகோட்குப் பின் தரும் விடையோலை;*** reply.

ம., தெ. உத்தரவு

*[உ + தரம் = உத்தரம் → உத்தரவு ]*

உகரம் முன்மையும் உயர்ச்சியும் குறித்த சுட்டு உத்தரம் என்பது மேலோர் உயர்ந்தோர் பதவிநிலை சுட்டியது மேலிடத்திலிருந்து விடப்படும் கட்டளை, உத்தரவு கீழ்த்தரத்திலுள் ளவர்களின் வேண்டுகோளை ஏற்று ஆணையிடப்படும் விடையோலையும உததரவு, மறுமொழி எனும் பொருளில் வழக்கூன்றியது

**உத்தரவுகொடு-த்தல்** *uttaravu-kodu-,* 4. செ.கு.வி. (v.i.) 1 ***இசைவளித்தல்;*** to give permission, 2. ***கட்டளை கொடுத்தல்;*** to issue an order 3 ***போகச் சொல்லுதல்;*** to send away, dismiss. (செ.அக.).

*[உத்தரவு + கொடு.]*

**உத்தரவுச்சீட்டு** *uttaravu-c-īṭṭu,* பெ. (n.) 1. ***கடவுச்சீட்டு;*** passport, permit. 2. ***அதிகாரச் சான்றிதழ்;*** certificate of right, of authority. (செ அக.).

**உத்தராசங்கம்** *uttarāśangam,* , பெ. (n.) ***மேலாடை;*** upper garment, cloth worn loosely over the shoulders. "உத்தராசங்கம் வைத்தார்". (சீவக. 2457.). (செ.அக.).

*[உத்தரம் + ஆசங்கம். < Skt ā-sanga]*

**உத்தாமணி** *uttāmaṇi,* பெ. (n.) ***வேலிப் பருத்தி;*** hedge - twiner.

*[ஒருகா உத்து + ஆமணி.]*



உத்தாமணி

**உத்தி**[1] *utti,* பெ. (n.) 1. ***அணிகலத்தொங்கல்*** (பிங்.); pendant of an ornament. 2. ***திருமகள் உருவம் பொறித்த தலையணி;*** head-ornament of women, with figure of Lakshmi, embossed upon it. "தெய்வவுத்தியோடு" (திரு முரு. 23.). (செ.அக ).

*[உ → உத்து → உத்தி.]*

**உத்தி**[2] *utti,* பெ. (n.) 1. ***பாம்பின் படப்பொறி;*** spots on the hood of the cobra. "கேழ்கிளருத்தி யரவு" (நற். 129). 2. ***தேமல்*** (திவா.); yellow or tawny spots on the skin, chiefly of women, considered as marks of beauty. (செ.அக.).

*[உ → உத்து → உத்தி (மேல் தோன்றும் நிற அழகு.]*

**உத்தி**[3] utti, பெ. (n.) 1. ***பேச்சு*** (பிங்.); words; speech. (செ.அக.).

*[உ → உத்து. மேலெழுப்புதல், வெளியிடுதல், பேசுதல். உத்து → உததி ]*

**உத்தி**[4] *utti,* பெ. (n.) 1. ***சேர்க்கை;*** union, mixture, combination. "கந்த உத்தியினால்" (மணிமே 28,15 ). 2 ***நூலுக்குச் சொல்லப்படும் 32 வகை உத்தி;*** (Gram.) literary devices employed by an author of a standard work who keeps in mind the rules of exegesis, 32 in number, viz, நுதலிபபுகுதல், ஒத்துமுறை வைப்பு, தொகுத்துசசுட்டல, வகுத்துக காட்டல், முடித்துக் காட்டல், முடிவிடங்கூறல, தானெடுத்து மொழிதல், பிறன் கோட்கூறல், சொற்பொருள் விரித்தல், தொடாசொற் புணர்த்தல், இரட்டுற மொழிதல், ஏதுவின் முடித்தல, ஒப்பின் முடித்தல், மாடடெறிந்தொழுகல், இறந்தது விலக்கல், எதிரது போற்றல், முன மொழிந்து கோடல், பின்னது நிறுத்தல, விகறபத்தின் முடித்தல, முடிந்தது முடித்தல், உரைததுமென்றல், உரைத்தாமென்றல், ஒரு தலை துணிதல், எடுத்துக காட்டல், எடுத்த மொழியின் எய்த வைத்தல், இனனதல்ல திதுவென மொழிதல், எஞசிய சொல்லினெய்தக கூறல், பிறநூன் முடிந்தது தானுடன் படுதல், தன குறிவழக்கம் மிக வெடுததுரைத் தல், சொல்லின் முடிவினப்பொருள் முடித்தல், ஒனறின முடித்தல் தன்னின முடித்தல், உய்த்துணரவைப்பு (நன் 14 ) (செ அக )

ம. உத்து.

*[உ → உத்து = சேர்த்துக் கட்டு, பொருத்து. மாடுகளைச் சேர்த்துக் கட்டும் கயிறு உத்தாணி எனப்படுதல் நோக்குக புணர்ப்பு, பொருத்தம், பொருத்தமானதை அறியும் அகக்கரணம், நூற்கும் உரைக்கும் பொருந்தும் நெறிமுறை. "உத்தி" இதில் 'உத்' என்னும் செயற்கையடியை வடமொழியார் யுத் (இ.வே.) என்று திரிப்பர். விளையாட்டில் இவ்விருவராய்ச் சேர்ந்து வரும் சேர்க்கையைக் குறிக்கும் உத்தி என்னும் சொல்லும் இதுவே. தெ.உத்தி கழித்தலை அல்லது தள்ளுதலைக் குறிக் கும் உ.ஃ. என்னும சொல்லும் உகர அடியானதே. உ → உந்து உந்துதல் = முன்தளளுதல, தள்ளுதல். உந்து → உத்து → உத்தி. "பொன்னெல்லா முத்தியெறிந்து" (கலித்.64). உ → யு (இ.வெ.). (வ.மொ.வ.92.93).]*

**உத்தி**[5] *utti,* பெ. (n.) 1. ***விளையாட்டில் எதிர்ப்பக்கத்தில் ஒருவனுக்கு நிகரான துணைவன்;*** player on the opposite side, corresponding to one on one's own side in a game in which the players are divided into two parties. 2. ***விளையாட்டிற் கன்னை*** (கட்சி) ***பிரித்தற்கு ஈரிருவராய்ச் சேர்தல்*** (வே.க.44); to divide a team in doubles for play. என் உத்தி யார்? (உ.வ.). (செ.அக.).

தெ. உத்தி.

*[உ → உத்து → உத்தி.]*

**உத்தி**[6] *utti,* பெ. (n.) 1. ***கடல்*** (அக நி.); sea. 2. ***நிகழ்நிலையாக அமைக்கப்பட்ட கண்ணிக் கால்;*** temporary irrigation channel. (Madr.) (செ.அக.).

*[உ → உத்து → உத்தி. உத்து = மேலெழும்புதல். உத்தி = மேலெழும்பும் அலைகளைக் கொண்ட கடல் ]*

**உத்திக்கட்டு-தல்** *utti-k-kattu-,* 5 செ குன்றாவி (v.t.) ***விளையாட்டிற் கன்னை*** (கட்சி) ***பிரித்தற்கு ஈரிருவராய்ச் சேர்தல்;*** to divide a team in doubles for play. (வே.க 44).

*[உத்தி + கட்டு.]*

**உத்திகை** *uttigai,* பெ. (n.) ***உத்தி***[1] பார்க்க see *utti*[1]. (செ அக )

**உத்திரம்**[1] *uttiram,* பெ (n) 1 ***உத்தரம்***[4] பார்க்க, see *uttaram*[4] "உத்திர நூல்களெல்லாம்" (விநாயக 75 6) 2 ***உத்தரம்***[4] பார்கக, see *uttaram*[4] "செழுந்து கிருத்திரம் பரபபி" (பாரத இராச 6) (செ அக.).

ம. உத்திரம்

*[உள + திரம - உத்திரம் உத்தரம் → உத்திரம் ]*

**உத்திரம்**[2] *uttiram,* பெ. (n) 1 ***மஞ்சள்;*** turmeric. 2. ***மரமஞ்சள்;*** tree of turmeric (செ அக )

*[உருத்தரம் → உததரம் → உததிரம் ]*

**உத்து**[1]**-தல்** *uttu-,* 5 செ குன்றாவி (v t) 1 ***கழித்தல்;*** to discard, throw away "பொன்னெல்லா முத்தியெறிந்து" (கலித் 64) 2 ***முன்தள்ளுதல்;*** to push (செ அக.).

*[உந்து → உத்து - உதது-தல ]*

**உத்து**[2] *uttu,* பெ. (n.) 1. ***உயரம்;*** height, elevation. 2. ***உயர்வு, பெருமை;*** elegance, excellence. 3. ***வெந்தது, செம்பு;*** copper.

*[உ → உத்து.]*

**உத்துங்கம்** *uttungam,* பெ. (n.) 1. ***உயர்ச்சி;*** height, eminence, grandeur, loftiness. ''உத்துங்க மிக்க வொரு வன் றவிசேறி'' (கந்தபு. சிங்க. 475). 2. ***உயர்ந்தது;*** that which is superior, excellent. ''உத்துங்க துங்க னுலா'' (விக்கிரம. உலா.). (செ.அக.).

*[உ + துங்கம். உ + உயர்வு, துங்கம் = வெண்மை, அழகு, சிறப்பு.]*

**உத்தும்பரம்** *uttumbaram,* பெ. (n.) ***செம்பு;*** copper. (சா.அக.).

*[உது → உத்து → உத்தும்பரம்.]*

**உதக்கு**[1] *udakku,,* பெ. (n.) **வடக்கு** (திவா.); north.

*[உ → உத்து = உயரம், மேடு உத்து → உது → உதக்கு = மேடான வடக்குத் திசை. உதக்கு = இடப்பக்கம். உதட் டாங்கை, ஒரட்டாங்கை என்னும் கொங்கு நாட்டு வழக்குகள் உதட்டு, உதக்கு என்னும் சொற்களுக்கு இடப்பக்கம் எனப் பொருளைத் தெளிவுபடுத்துகினறன மேற்கு மேடான திசையா கத் தமிழக மக்களுககுத தென்பட்டமையின அதனின்றும் வேறுபடுதத, காலையில கதிரவனைக் கணடு வழிபடு வோர்கரு உதக்குத் திசை இடப்பககம் இருத்தலின் இடப்பக்கப் பொருளும் பெறலாயிற்று ]*

உதககு → வதக்கு → வடக்கு எனத் தமிழிலும், உதக்கு → உடக்கு → உணககு → நாக்கு → நாத்து → நார்த்து → (North) என மேலையாரிய மொழிகளிலும், திரிபுற்றிருத்தலைக காண லாம் ஆஙகிலச் சொறபிறப்பு அகரமுதலி தொகுதத கிளெயின பெருமகனாரும், இதே கருததை North எனனும் சொல் விளககததில் வலியுறுத்தி இருககிறார North இடப்பக்கம எனப் பொருளாட்சி பெற்றிருத்தலை அவா காடடினார் ஆயின் அதறகு மூலமான உதககு தமிழில உளளது எனபதை அவர் அறியாராயினார் வட மொழியில் இடது பககம், வாமபாகம, உத்தரம் எனப் பெயர் பெற்றிருநதாலும், அவை உதககு என்னும சொல்லின் வேர் மூலததிரிபுகளேயாகும்

**உதகக்கொட்டு** *udaga-k-kottu,* பெ (n) ***நீரிழிவு நோய்;*** diabetes 'ஊனுகு தொழுனையி னுதகக் கொட்டின் வெப்பிற் சூலையின்'' (ஞானா 19) (செ அக ).

*[உதகம + கொடடு ]*

**உதகஞ்செய்-தல்** *udagañcey-,* 1 செ.கு வி (v.i.) ***பொருளை நீர் வார்த்துக் கொடையளித்தல்;*** to pour water into the hand of the recipient of a gift by the donor when it is handed to him (செ அக.).

*[உதகம + செய ]*

**உதகநெறி** *udaganeri,* பெ (n) ***கொடையளிக்க வேண் டியமுறை;*** prescribed form in which a gift is to be made. ''உதக நெறி தபபாவாறு முந்தவளித்து'' (திருவா லவா 31,5) (செ அக )

*[உதகம + நெறி ]*

**உதகம்**[1] *udagam,* பெ. (n.) ***நீர்;*** water. ''வாசநல் லுதகம்'' (கந்தபு. திருக்கல்.70).

*[ஊறு → ஊற்று → ஊத்து → ஊத்தம் → உத்தம் → உத்தகம் → உதகம். ஓடும் இயல்பினால் நீல் = (நீள்) நீர் எனப் பெயர் பெற்றது போல, தோண்டிய இடங்களில் ஊறும் இயல்பினால் ஊற்று எனப் பெயர் பெற்றது. கொச்சைத் திரிபுறு ஊத்து → உத்து → உதகம் என மருவியது. வழிப்போக்கர் மணலில் ஊற்றெடுத்து நீர் பருகுவதும், கால்நடைகளை நீர் பருகச் செய்வதும், தொன்று தொட்டு வரும் தலைமுறை வழக்கம். உலக மொழிகள் பலவற்றிலும் இச்சொல் வேரூன்றிவிட்டது. I.E ued, Skt. ud, Av. vaidai, Lit. udra, GK udar, Alb uje, L undu, Gothic wato. E water மிகுமழையால் தரையில் ஊற்றுகள் காணப்படின், தரை முழுவதும் ஓதம் பரவிவிட்டது என்று தமிழக நாட்டுப்புற மக்கள் பேசுவதைக் காணலாம். ஊற்று → ஊத்து → ஓதம் எனத் தமிழிலும் உதகம் என வடபுல மொழிகளிலும் இந்தைரோப்பிய மொழிகளிலும் வழக்கூன்றி யது. தமிழில் பிறந்து உலக மொழிகளில் வேரூன்றிய தமிழ்ச் சொற்களுள் இதுவும ஒன்றாகும் ]*

**உதகம்**[2] *udagam,* பெ (n.) **நிலவுலகம்** (உரி.நி.); earth. (செ அக.).

*[உதகம் = நீர், கடல், கடலுடுத்த நிலம் ]*

**உதகம்**[3] *udagam,* பெ (n) ***காய்கறிகளிட்டுச் சமைத்த குழம்பில் காய்கறி தவிர்த்த நீராளப் பகுதி; தெளிசாறு;*** thin porridge after separating vegetable pieces.

க. உதக

*[உதகம் = நீர், நீராளமான குழம்பு ]*

**உதகம்பண்ணு-தல்** *udagam-pannu-,* 12 செ குன்றாவி (v.t.) ***உதகஞ்செய்*** பார்க்க (S.I.I III 35.), see *udagañcey.*

**உதகமண்டலம்** *udaga-mandalam,* பெ (n) 1. ***நீலமலை மாவட்டத் தலைநகரின் பெயர்;*** name of the Nilgiri District head quarters 2 ***மேகமண்டலம்;*** cloudy region referring to the Nilgris (சா அக )

படை. ஒத்தெகெ

*[ஒற்றை + கல் + மன்று - ஒற்றைக்கல் மன்று → ஒத்தக்கல் மந்து → உதகமண்டலம ]*

உதகம் = நீர் எனப் பொருள் கொண்டு, நீர் சூழ்ந்த பகுதி என்று மூலம் காட்டுவது பொருந்தாது நீலமலைப் பழங்குடி மக்கள இதனை ஒத்தக்கல் மந்து என்றே அழைப்பர் ஒறறைக்கு நின்றான் மன்று எனக் காட்டி தனியொருத்தனாய் நின்று பொருது வெனறவனின் ஊர் எனவும் கூறுகின்றனா

**உதகமந்தம்** *udaga-mandam,* பெ (n.) ***தண்ணீர்ச் சோறு;*** mixture of water and meal stirred together (சா அக.).

*[உதகம் + மததம - உதகமத்தம் → உதகமநதம் மத்துதல் - கடைதல மத்து → மததம் → மந்தம் ]*

**உதகமுய்-த்தல்** *udaga-muy-,* 4. செ குன்றாவி. (v.t.) ***உதகஞ்செய்*** பார்க்க, see *udagañcey.* (செ.அக )

*[உதகம + உய.]*

**உதகமூலம்** *udaga-mūlam*, பெ. (n.) 1. ***தண்ணீர் விட்டான் கிழங்கு*** பார்க்க. (தைலவ. தைல. 77.); see *tannīrviṭṭān kiḻangu*. 2. ***பச்சைவேர்;*** green root. "சால விருட் சோதகமூலம்" (தைலவ. தைல. 85.). (செ.அக.).

*[உதகம் + மூலம்.]*

**உதகமேல்-தல்** *udaga-mēl-*, 7. செ.குன்றாவி. (v.t.) ***கொடை பெறுதல்;*** to receive gifts. "நான் உதகமேற்றது அளந்து கொள்ள வேண்டாவோ" (திவ். பெரியாழ். 1,8,8. வ்யா.பக். 173.). (செ.அக.).

*[உதகம் + ஏல். ஏலுதல் = ஏற்றல், பெறுதல், வாங்கிக் கொள்ளு தல்.]*

**உதகரணம்** *uda-garaṇam*, பெ. (n.) ***உதைத்து அழுத் துகை;*** pressing by leg (after kicking). "இலங்கைக் கோமானை.. திருவிரலால் உதகரணம் செய்து" (தேவா 286.10.).

*[உதை + கரணம் - உதகரணம்.]*

**உதகு** *udagu*, பெ. (n.) ***புன்கு.*** (மூ.அ.); Indian beech.

*[உதவு → உதகு. கோடை நீழலும் புன்கின் எண்ணெயும் தரும் உதவி நோக்கி உதவி → உதகு (மரம்) எனப் பெயர் பெற்றதாகலாம் மிகவும் பரவலாக எள்ளின் நெய், ஆமணக்கு நெய் போன்றவை விளக்கெரிக்கப் பயன்படுத்தப்படுவதற்கு முன்பு புன்கின் விதையிலிருந்து எடுதத எண்ணெய் விளக கெரிக்கப் பயன்பட்டமையின் ஆக்கம் கருதி உதகு எனப்பட்ட தாகலாம் ]*

**உதச்சீரகம்** *uda-c-cīragam*, பெ. (n) ***பெருஞ்சீரகம்;*** anise-seed (சா அக.).

*[உ → உது - உயரம, பெரியது உது + சீரகம் - உதச் சீரகம் ]*

**உதட்டடி** *udaṭṭaḍi*, பெ. (n) 1 ***அதிரடி;*** rebuking 2 ***வாய்வெருட்டு;*** threatening

*[உதடு + அடி - உதட்டடி.]*

**உதட்டாங்கை** *udaṭṭāṅgai*, பெ (n.) ***இடக்கை;*** left hand (செ அக )

*[உதடு² + ஆம + கை - உதடடாங்கை ]*

**உதட்டுநோய்** *udaṭṭu-nōy*, பெ (n) ***உதடடி லேற்படும் பதினாறுவகை நோயினுள் ஒன்று;*** one of the sixteen ailments which affects the lips (சா அக.).

*[உதடு + நோய ]*

**உதட்டுரோகம்** *udaṭṭu-rōgam*, பெ. (n.) ***உதட்டு நோய்*** பார்க்க, see *udaṭṭu-nōy*

**உதட்டைப்பிதுக்கல்** *udaṭṭai-p-pidukkal*, பெ (n) ***நிந் தனை அல்லது இல்லை என்பதைக் காட்டு மோர் குறி;*** gesture to show remorse or negation

*[உதடு + ஐ + பிதுக்கல் ]*

**உதடன்** *udaḍaṉ*, பெ (n) ***தடித்த உதடடையுடையவன்.*** (வின்.), thick lipped person or the blubber - lipped

*[உதடு → உதடன ]*

**உதடி** *udaḍi*, பெ. (n.) 1. ***தடித்த உதட்டையுடையவள்;*** blubber - lipped woman. 2. ***தடித்த உதடுகளை உடைய கடல் மீன்வகை;*** purplish mullet, Upenius macronema, having thick lips.

*[உதடு → உதடி.]*

**உதடு¹** *udaḍu*, பெ. (n.) 1. ***வாயிதழ்*** (கலிங். 128. புது); lip. 2. ***பானை முதலியவற்றின் விளிம்பு;*** brim, margin (W.). 3. ***வெட்டுவாய்.*** (வின்.), edge of a wound. 4. ***அல்குலின் இருபக்கத்து உதடு;*** hairy fold of skin on either side of the slit of the vulva - labium majus. (சா.அக.).

*Skt.* oṣṭa; ம. உதடு; க. ஒதடு, ஒதுடு, ஒதரு; தெ. பெதவி; கொலா. பெதவே, பெத்தேல், பட. துடி.

*[உதழ்தல் = மேலெடுத்தல், திறத்தல், வாய்திறத்தல். உதழ் → உதடு = திறக்கும் தன்மையது ]*

**உதடு²** *udaḍu*, பெ. (n.) 1 ***இடதுகை;*** left hand. 2. ***இடதுபக்கம்;*** left side.

*[உதழ்தல் = மேலெடுத்தல், விலக்குதல், ஒதுக்குதல். உதழ் → உதடு = நற்பணிக்கு ஆகாது என விலக்கப்பட்ட இடது கை, இடது பக்கம் ]*

**உதண்** *udaṇ*, பெ. (n.) ***மொட்டம்பு;*** arrow - head of the sharp of a bud. "யானை யுதணாற் கடிந்தான்" (திணைமாலை 2 ).

*[உதள் → உதண்.]*

**உததி** *udadi*, பெ. (n.) 1. ***கடல்;*** sea. "ஒருததி காட்டுமால்" (இரகு. நாட்டுப் 41.). 2. ***முகில்*** (ஆ.அக ); cloud 3 ***நீர்க்குடம்;*** water jar.

*[உதகம → உததி ]*

**உதப்பி** *udappi*, பெ (n.) 1. ***செரியாத இரை;*** undigested food in the stomach of a beast. "இலத்தி வாயாலோடிய துதப்பியோட" (திருவாலவா 26 17 ) 2 ***ஈரல்;*** ventricle of animals 3 ***தெறிக்கும் எச்சில்;*** saliva drivelling from the mouth, slaver (J ) (செ அக.)

ம. உதப்பி

*[உதப்பு → உதப்பி ]*

**உதப்பிவாயன்** *udappi-vāyaṉ*, பெ (n ) ***எச்சில் தெறிக்கப் பேசுவோன்;*** one who emits saliva while speaking, a drooler (J.) (செ அக.).

*[உதகம் → உதப்பி + வாயன் ]*

**உதப்பு¹** *udappu*, பெ (n.) 1 ***எதிர்ப்பு; இடறுதல்;*** offence, opposition 2 ***அடித்தல்; உதைத்தல்;*** kicking, striking, kick. (சேரநா.)

ம. உதப்பு, க. ஒதெ, கோத. ஒத் (உதை = துன்புறுத்தல)

*[உதை → உதைபபு → உதபபு ]*

**உதப்பு²-தல்** *udappu-*, 5 செ குன்றாவி (v t) 1 ***கடிந்து கூறுதல்*** (வின் ), to scold, reprove 2 ***அச்ச மூட்டுதல்;***

*இகழ்ந்து நீக்குதல்* (வின் ); to reject with an exclamation of disdain, to rebuff 3 *குதப்புதல்;* to move about in the mouth, mumble 4 *வாயினின்று உண்ணும் பொருள் வெளிவரும்படி மிகுதியாய்ச் சுவைத்தல்* (சொ ஆ க ), munching awkwardly (செ .அக )

*[குதபபு → உதபபு ]*

**உதம்**[1] *udam*, பெ. (n ) **உதகம்** (சூடா), water (செ அக )

*[உதகம → உதம இனி, ஒதம் → உதம் எனறுமாம் ]*

**உதம்**[2] *udam*, பெ (n.) 1 *அழைத்தல்;* calling 2. *கேட்டல்;* hearing

*[உது → உதம் ]*

**உதம்பல்** *udambal*, பெ. (n.) *அதட்டுதல்;* frightening.

*[உது → உதம்பல் = உரத்த குரலுடன பேசும் பேச்சு உது = குரலின் உயர்ச்சி.]*

**உதம்பு-தல்** *udambu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *மறுத்தல்;* to deny, refuse.

*[உது → உதமபு = உரத்த குரலில் பேசு, எதிர்த்துப்பேசு ]*

**உதயகாலம்** *udayakālam*, பெ (n.) 1 *ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் தோன்றுங் காலம்;* rising time of any heavenly body 2. *ஞாயிறு தோன்றுங்காலம்;* time of sunrise, early morning (செ.அக )

*[உது → உதய + காலம். உது = மேலெழும்புதல், தோன்றுதல்.]*

**உதயகாலை** *udaya-kālai*, பெ. (n.) **உதயகாலம்** பார்க்க (வின்.); see *udayakālam*. (செ.அக.).

*[உதயம் + காலை.]*

**உதயகிரி**[1] *udayagiri*, பெ. (n.) **உதயப்பொருப்பு** பார்க்க; see *udaya-p-poruppu*. (செ.அக.)

*[உதயம் + கிரி.]*

**உதயகிரி**[2] *udayagiri*, பெ. (n.) *குறிஞ்சி யாழ்த்திற வகை* (பிங்.); ancient secondary melody type of the Kuriñchi tracts. (செ.அக.).

*[உதயம் + கிரி ]*

**உதயகுமரன்** *udaya-kumaran*, பெ. (n.) *காவிரிப்பூம் பட்டினத் தரசனாகிய நெடுமுடிக் கிள்ளியின் புதல் வன்;* son of the king Neḍumuḍi-k-kiḷḷi of Kāvirippūmpaṭṭi-ṉam. (அபி.சிந்.).

*[உதயம் + குமரன் ]*

**உதயணகுமாரகாவியம்** *udayana-kumārakāviyam*, பெ. (n.) *வத்தவநாட்டு அரசனாகிய உதயண குமார னுடைய வரலாற்றைக் கூறும் ஒரு தமிழ் நூல்;* Tamil epic which describes the history of Udayaṇa kumāraṉ of Vatsava country.

*[உதயணன் + குமாரன் + காவியம். Skt* kavya > *த காவியம்.]*

**உதயணன்** *udayaṇaṉ*, பெ. (n.) *பெருங்கதையின் காப்பியத்தலைவன்;* Udayana, a celebrated King of Vatsa and hero of the Peruṅ-kadai.

*[உது → உதயம் → உதயணன்.]*

**உதயணன்கதை** *udayaṇaṉ kadai*, பெ. (n ) *கொங்கு வேளிரால் இயற்றப்பட்ட பெருங்கதை;* Perun-kadai, an epic written by Kongu-vēlir, Cir 10th C recounting the life and exploits of Udayanaṉ

*[உதயணன + கதை ]*

**உதயப்பருப்பதம்** *udaya-p-paruppadam*, பெ (n.) **உத யப்பொருப்பு** பார்க்க (திவ் நாய்ச் 14,6 ); see *udaya--p-poruppu*

*[உதயம் + பருப்பதம் பொற்றை → பொறை → பொருப்பு → பருபபதம ]*

**உதயப்பொருப்பு** *udaya-p-poruppu*, பெ. (n ) ***ஞாயிறு உதிக்கும் மலை.*** (சீவக. 2153, உரை ); eastern mountain from behind which the sun is supposed to rise.

*[உதயம + பொருப்பு.]*

**உதயபர்வதம்** *udaya-parvadam*, பெ. (n.) **உதயப் பொருப்பு** பார்க்க; see *udaya-p-poruppu*. (செ அக.)

*[உதயம் + பர்வதம் பருப்பதம் → பர்வதம் ]*

**உதயம்** *udayam*, பெ. (n.) 1. *தோற்றம்;* appearance, becoming visible ''உதயாத்தமன மறிவுக்குள வாகாவே'' (பிரபோத. 32,18 ) 2. *நாண்மீன். கோள்மீன் முதலி யன கீழ்த்திசை யடிவானத்துத் தோன்றுகை;* rising of the sun, planets and stars, appearance of heavenly body above the horizon. 3. *உதிக்குங்காலம்;* time of rising of a heavenly body. 4 *பிறப்பு;* birth, origin, appearance 5. **உதயப்பொருப்பு** பார்க்க; see *udaya-p-poruppu*. ''உதயத்தி னெற்றி சேர்ந்த வொண்சுடர்'' (சீவக. 2153). 6. *உதய ஓரை;* constellation in which a planet is seen when on the horizon, ascendant. 7. ***ஊதியம்.*** (ஆ.அக.); gain, earning. (செ.அக.).

*[உது → உதயம் ]*

**உதயராகம்** *udaya-rāgam*, பெ. (n.) 1. ***காலைப்பண்*** (பரத. இராக. 69, உரை); melody-type appropriate to the time of sun rise. 2. **உதயப்பண்** பார்க்க; see *udaya-p-paṇ*.

**உதயராசி** *udaya-rāśi*, பெ. (n.) **உதயவோரை** பார்க்க; see *udaya-v-ōrai*.

**உதயலக்கினம்** *udaya-lakkiṉam*, பெ. (n.) **உதயவெழு வோரை** பார்க்க; see *udaya-v-eḻu-v-ōrai*.

*[உதயம் + இலக்கினம்.]*

**உதயவெழுவோரை** *udaya-v-eḻu-v-ōrai*, பெ. (n.) *பிறக் கும் போது உதயமாயுள்ள எழுவோரை* (இலக்கினம்); sign rising at the moment of one's birth.

*[உதயம் + எழும் + ஓரை.]*

**உதயவோரை** *udaya-v-ōrai*, பெ. (n.) 1. *பிறக்கும்போது உதயமாயுள்ள ஓரை* (இராசி); (Astrol.) sign rising at the moment of one's birth. ''ஒடை மாகளிறனானுதயராசி'' (கம்பரா. திருவவ. 110). 2. *தற்காலத்து உதிக்கு மோரை* (வின்.); sign rising at present. (செ.அக.).

*[உதயம் + ஓரை.]*

**உதயன்** *udayan*, பெ (n) **ஞாயிறு** (பாரத இந்திர 5), sun (செ அக)

*[உது → உதி → உதியன் → உதயன்]*

**உதயாத்தமனம்** *udayāttamanam*, பெ (n) 1 **ஞாயிறு எழுவது மறைவதுமாகிய காலை, மாலைகள்;** sunrise and sunset 2 **ஞாயிறு, திங்கள், விண்மீன்களின் தோற்றமறைவுகள்;** rising and setting of the sun, moon, or other heavenly bodies (செ அக)

*[உதயம + அத்தமனம]*

**உதயாதிபன்** *udayādiban*, பெ (n) 1 **ஞாயிறு;** sun "உதயாதிப னென நின்றார்தம் வெங்கையில்" (வெங் கைக்கோ 15) 2. **உதய ஓரையை ஆளும் கோள்;** planet which is the lord of the rising sign. (செ.அக.).

*[உதயம + அதிபன் அதியன → அதிபன்]*

**உதயாலை** *udayālai*, பெ. (n.) **உதயகாலம்** பார்க்க; see *udayakālam*.

*[உதயம் + காலை - உதயகாலை → உதயாலை (கொ வ)]*

**உதரக்கட்டு** *udara-k-kattu*, பெ. (n) **அரைப்பட்டிகை;** girdle or belt made of gold or silver and worn over the dress.

*[உதரம் + கட்டு.]*

**உதரக்கனல்** *udara-k-kanal*, பெ. (n.) 1 **செரிமானத்துக்கு உதவும் வெப்பம்;** body heat promoting proper digestion. 2. **பசித்தீ;** fire of hunger.

*[உதரம் + கனல்.]*

**உதரக்கொதி** *udara-k-kodi*, பெ. (n.) **மிகுபசி** (வின்.); great hunger. (செ.அக.).

*[உதரம் + கொதி. கொதி = கொதித்தல், பசிமிகுதல்.]*

**உதரத்தீ** *udara-t-tī*, பெ. (n.) **உயிர்த் தீயுள் ஒன்றான சாடரா அழல்** (சாடராக்கினி) (சூடா.); fire of hunger lit., stomach-fire, one of Uyir-t-tī.

*[உதரம் + தீ.]*

**உதரத்துடிப்பு** *udara-t-tudippu*, பெ. (n.) **மிகுபசி;** great hunger (W.). (செ.அக.).

*[உதரம் + துடிப்பு.]*

**உதரபந்தனம்** *udara-bandanam*, பெ. (n.) **உதரக்கட்டு** பார்க்க; see *udara-k-kattu*. "திருவயிற்றுதர பந்தனம்" (திவ். அமலனாதி. 4).

*[உதரம் + பந்தனம்.]*

**உதரம்** *udaram*, பெ. (n.) 1. **வயிறு;** stomach, belly, abdomen. "உதரங் குளிர்ந்து" (பாரத. துருவாச. 12). 2. **கருப்பை** (ஆ.அக.); womb, uterus.

ம. உதரம்; *Skt* udara; *Mar* udara; *AL* uerus, *Lith.* vedaras.

*[உது → உதரம உது = நடுப்பகுதி, இடைப்பகுதி உடம்பின் நடுப்பகுதியில் உள்ள வயிறு உதரம் எனப்பட்டது. அது, இது, உது என்னும் முச் சுட்டுகளில் 'உது' இடைப்பட்டதைக் குறித்தல் காண்க ஒ நோ அது → அதை → அதைத்தல் - வீங்குதல், பருத்தல் அது → அதரம பருத்த உதடு]*

**உதவடு-த்தல்** *udavadu-*, 4 செ கு வி (v.i) **உதவி செய்தல்;** to do a favour, bestow a benefit "ஏவல் வினை செய் திருந்தாக் குதவடுத்தல" (பழ 274) (செ அக)

*[உதவு + அடு - உதவடு]*

**உதவரங்கெட்டது** *udavarankettadu*, பெ (n) **உதவறக் கெட்டது** பார்க்க (யாழ்ப) see *udavara-k-kettadu*. (செ அக.)

*[உதவு + அற + கெட்டது = உதவறககெட்டது → உதவரக்கெட்டது → உதவரங்கெட்டது (கொ வ.)]*

**உதவரங்கெட்டவன்** *udavarankettavan*, பெ. (n) **முழுதுங் கெட்டவன்;** person who is spoiled beyond hope of redemption (J.). (செ.அக.).

*[உதவு + அற + கெட்டவன் – உதவறக் கெட்டவன் → உதவரங்கெட்டவன் (கொ.வ).]*

**உதவல்** *udaval*, பெ. (n.) 1 **கொடுக்கை** (சூடா.); giving. 2. **துணை செய்தல்** (ஆ.அக.); helping. (செ.அக.)

ம. உதவல்.

*[உதவு → உதவல்.]*

**உதவறக்கெட்டது** *udavara-k-kettadu*, பெ. (n.) **முற்றுங் கெட்டது;** that which is spoiled beyond redemption (J.). (செ.அக.).

*[உதவு + அற + கெட்டது → உதவறக்கெட்டது.]*

**உதவாக்கட்டை** *udavā-k-kattai*, பெ. (n.) **பயனற்றவன்;** worthless fellow, person who is good - for - nothing as a rotten piece of wood. (செ அக.).

*[உதவாத + கட்டை – உதவாக்கட்டை.]*

**உதவாக்கடை** *udavā-k-kadai*, பெ. (n.) **பயனற்றவன்;** worthless fellow, low-down creature. (செ.அக.).

*[உதவாக்கட்டை → உதவாக்கடை (கொ.வ.).]*

**உதவாக்கரை** *udavā-k-karai*, பெ. (n.) **பயனற்றவன்;** unhelpful person as useless as a crumbling bank. (செ.அக.).

*[உதவாத + கட்டை - உதவாக்கட்டை → உதவாக்கடை → உதவாக்கரை (கொ.வ.).]*

**உதவாக்கழிகுறடு** *udavā-k-kalikuradu*, பெ. (n.) **பயனில்லாதவன்;** worthless person. "கானடுக்க முற்றனையோ போடா வுதவாக் கழி குறடே" (பஞ்ச.திருமுக. 1142). (செ.அக.).

*[உதவாத + கழி + குறடு → உதவாக்கழிகுறடு. கழி = மிகுதி; குறடு = சம்மட்டி அடிவாங்கும் கிடை, இரும்புக்கட்டை; இழிவு சுமக்கும் இயல்பினன்.]*

**உதவாத்தேன்** *udavā-t-tēṉ,* பெ (n) ***கள்ளிச் செடியி ணருகிற்கட்டிய தேன், இது மருந்துக்கும் கண் நோய்க்கு முதவாது;*** honey from the honey comb found near Kalli, a plant of the Euphorbia genus This kind of honey is prohibited in medicine

*[உதவாத + தேன]*

**உதவாரக்கெட்டது** *udavāra-k-kettadu.* பெ (n) ***உதவ றக்கெட்டது*** பாரக்க (யாழ்ப), see *udavaṟa-k-kettadu* (செ அக)

*[உதவு + அற + கெட்டது - உதவறக கெட்டது → உதவரக்கெட்டது → உதவாரககெடடது (கொ வ)]*

**உதவாரங்கெட்டவன்** *udavārangettavan,* பெ (n) ***உதவ ரக்கெட்டவன்*** பார்க்க. (J), see *udavara-k-kettavaṉ* (செ அக)

*[உதவு + அற + கெடடவன் – உதவறக்கெட்டவன் → உதவரக் கெட்டவன் → உதவாரங்கெட்டவன (கொ வ.)]*

**உதவி** *udavi,* பெ (n) 1 ***துணை;*** help, assistance, support "செய்யாமற் செய்த உதவிக்கு" (குறள், 101). 2 ***கொடை;*** gift, donation, contribution "உயர்ந்தவர்க் குதவிய வுதவி" (கம்பரா வேள்வி 35) 3. ***துணை*** (ஆ அக), companionship. (செ அக)

ம. உதவி, **க.** ஒதவு, **கோத.** ஒத்க், ஒத்கி; **துட.** விதொவ்ய; **து.** ஒதகுனி, பட. ஒதவு.

*[உய் → உய்ந்து → உத்து → உது → உதவு → உதவி.]*

**உதவிசெய்யானை** *udavi-šey-yāṉai,* பெ. (n.) ***யானைக் கூட்டத்துக்குத் தலைமையான யானை*** (பிங்.); chief in a herd of wild elephants. (செ. அக.).

*[உதவி + செய் + யானை.]*

**உதவிந்து** *udavindu,* பெ. (n.) ***நீர்த்துளி;*** drop of water. (சா.அக.).

*[உதகம் + விந்து – உதகவிந்து → உதவிந்து.]*

**உதவு[1]-தல்** *udavu-,* 5. செ குன்றாவி. (v.t.) 1. ***கொடுத் தல்;*** to give, contribute, bestow. "ஈகாற்றுணையுமுத வாதார்" (நாலடி.218). 2. ***துணை செய்தல்;*** to help, aid, assist. "நம்மாட்டுதவிய நன்னர்க்கு" (பெருங். வத்தவ. 3;11). 3. ***தடுத்து நிற்றல்;*** to withstand, as an invading army. "இடத்துதவும் நல்லாளுடைய தரண்". (குறள்,746). 4. ***சொல்லுதல்;*** to report, tell, inform. "அன்னையர்க்குதவல் வேண்டும்" (கல்லா.40).

*[உய் → உய்த்து → உத்து → உது → உதவு.]*

**உதவு[2]-தல்** *udavu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***கூடியதாதல்;*** to be possible. "உதவியதேதும் பெரியோர்க் கூட்டி" (சைவச.பாயி.19). 2. ***பயன்படுதல்;*** to be of use. இது மருந்துக்குதவும். (செ.அக.).

ம. உதவுக; **க., தெ.** ஒதவு.

*[உத்து → உது → உதவு.]*

**உதவு[3]** *udavu,* பெ (n) ***கூரை வேயுங் கழி;*** bamboo pole used in the frame work for thatched buildings (செ அக)

*[[illegible] உதவு]*

**உதள்** *udal,* பெ (n) 1 ***ஆட்டுக்கடா;*** ram, he-goat "உதளு மப்பரும்" (தொல் பொருள் 602). 2 ***ஆடு*** (திவா), goat, sheep 3 ***மேழ ஓரை*** (திவா), aries of the zodiac 4 ***மரவகை*** (தொல் எழுத்.400, உரை), tree (செ அக)

ம. உதள, **க**, பட. ஹோது

*[உது → உதள ஆட்டினங்களில ஆணினம், உயர்ந்து பருத்துக் காணபபடுதலின உதள் எனப்பட்டது உது = உயர்வு, பருமை]*

**உதளிப்பனை** *udalippaṉai,* பெ. (n.) ***கூந்தற்பனை*** பார்க்க; see *kūndaṟpaṉai.* (செ.அக.).

*[உது → உதள் → உதளி + பனை. உதள் = பருத்திருத்தல்.]*

**உதளை** *udaḷai,* பெ. (n.) ***காட்டலரி வகை;*** jungle mango. (செ அக.).

ம. உதளம்..

*[உதள் → உதளை. பருத்த அல்லது அகன்ற இதழ்களைக் கொண்ட அலரி வகை]*

**உதறிநட-த்தல்** *udaṟinada-,* 3. செ.கு.வி. (v.i.) ***வெடுக்கு வெடுக்கென்று நடத்தல்;*** to walk with short, quick, jerky steps. (செ.அக.)

*[உதறு → உதறி + நட.]*

**உதறிமுறிப்பான்** *udaṟimuṟi-p-pāṉ,* பெ. (n.) ***மருந்துச் செடி;*** medicinal plant that grows only in hot and dry places. (செ.அக.).

**உதறு[1]-தல்** *udaṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***அசைத்து எற்றுதல்;*** to shake off, throw off, shake out as a cloth. "பாய லுதறிப் படுப்பது" (கம்பரா. கடல்தா. 4). 2. ***விலக்குதல்;*** to renounce, as the world, friends, etc. "பேறனைத்து மணுவெனவே யுதறித்தள்ள" (தாயு. ஆகார.3).

*[உதல் → உதறு.]*

**உதறு[2]-தல்** *udaṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***விரைந்து அசைதல்;*** to move to and fro, to shake. 2. ***குளிர், அச்சம் முதலியவற்றாற் கை கால் நடுங்குதல்;*** to shake, as one's hands, feet or body, through cold, fear or anger. (செ.அக.).

ம. உதறுக; **க.** ஒதறு, ஒதரு; **தெ.** உதரு, உதுரு, உதிலு; **து.** உதேவுனி; **கட.** உதர்ப்; **பட.** ஒதரு.

*[உதல் → உதறு.]*

**உதறுஇசிவு** *udaṟu-išivu,* பெ. (n.) ***இசிவுக் காய்ச்சல்;*** fever attended with trembling.

*[உதறு + இசிவு.]*

**உதறுகாலி** *udaṟukāli,* பெ. (n.) 1. ***உதைகாற்பெற்றம்*** (வின்.); cow that kicks or twitches away its leg and does not allow to be milked. 2. ***காலை இழுத்து நடப்பவள்;*** woman who shakes her feet in walking, such gait being supposed to bring evil upon her household. உள்ளதையுங் கெடுத்தா ளுதறுகாலி வந்து. (உ.வ.). (செ.அக.).

*[உதறு + காலி.]*

**உதறுசன்னி** *udaṟušanni,* பெ. (n.) 1. ***கைகால்களில் நடுக்கங் காணுமோர் வகை இசிவுக்காய்ச்சல்;*** a kind of fever attended with shaking or trembling of the limbs like typhoid. 2. ***உடம்பில் நடுக்க முண்டாக்கும் இசிவு;*** delirium. 3. ***உதறு இசிவு*** பார்க்க; see *udaṟu - išivu.* (சா.அக.).

*[உதறு + சன்னி.]*

**உதறுசுரம்** *udaṟu-šuram,* பெ. (n.) 1. ***குளிர் காய்ச்சல்;*** intermittent fever accompanied by cold and shivering. 2. ***நச்சுக்காய்ச்சல்;*** malarial fever. (சா.அக.).

*[உதறு + சுரம்.]*

**உதறுவலி** *udaṟu-vali,* பெ. (n.) ***நடுக்கு வாதை;*** shaking palsy. (செ.அக.).

*[உதறு + வலி.]*

**உதறுவாதம்** *udaṟu-vādam,* பெ. (n.) ***உதறு வலி*** பார்க்க; see *udaṟu-vali.* (செ.அக.).

**உதன்** *udaṉ,* பெ. (n.) ***சிவன்;*** Siva. (ஆ.அக.).

*[உது → உதன் = மேலானவன், உயர்ந்தவன்.]*

**உதாத்தம்** *udāttam,* பெ. (n.) 1. ***செல்வத்தினுயர்ச்சியை யேனும், மனத்தின் பெருமையையேனும், மேம்படுத்திக் கூறுவதாகிய ஓர் அணிவகை*** (தண்டி.72); figure of speech which expresses either abundance of wealth, or the greatness of thought. 2. ***மறைகளைச் சொல்லும் ஓசை நான்கனுள் ஒன்றாகிய எடுத்தலோசை*** (திருவிளை. தடாதகை.8); rising accent of one of the four Vēdasvaram.

*[உது → உதாத்தம் = உயர்வு, முன்னேற்றம், செழிப்பு.]*

**உதாத்தன்** *udāttaṉ,* பெ. (n.) 1. ***பெரியோன்;*** great man. 2. ***கொடையாளி;*** liberal donor. (செ.அக.).

*[உது → உதாத்தம் → உதாத்தன்.]*

**உதாம்பரம்** *udāmbaram,* பெ. (n.) ***செம்பு;*** copper. (செ.அக.).

*[உது → உதும்பரம் → உதாம்பரம். (கொ.வ.).]*

**உதி**¹ *udi,* பெ. (n.) 1. ***ஒதிய மரம்;*** goom pain tree. "உதிமரக் கிளவி" (தொல். எழுத். 243). 2. ***மரவகை;*** falcate trumpet flower. 3. ***உலைத்துருத்தி*** (பிங்.); bellows of the furnace of the iron smith. 4. ***விச்சை;*** science, learning knowledge. "உதியொரேழிரண்டுந் தந்த முனிவ" (இரகு. அயனு.19). 5. ***உளுந்து;*** black gram. 6. ***இழைக்கட்டு;*** any layer of the body with an aggregation of cells-tissue. 7. ***கடலாத்தி;*** falcate trumpet flower. (சா.அக.).

*[உது → உதி (பருத்தது). உது = மேலெழும்புதல், கிளர்தல், விளங்குதல்.]*

**உதி**²**-த்தல்** *udi-,* 4. செ.கு.வி. (v.i.) ***பருத்தல்;*** to swell, increase in size. ஆள் உதித்து விட்டான். (உ.வ.).

*[உது → உதி. உது = மேலெழும்பு, பெரியதாகு.]*

**உதி**³**-த்தல்** *udi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***எழுதல்; உதயமாதல்;*** to rise or appear as a heavenly body. "மீளவு முதித்தனன்" (பாரத. இரண்டாம். 32). 2. ***தோன்றுதல்;*** to spring up, come into existence, arise, as primitive elements one out of another. "உதிப்பது மீறு முண்டு" (சி. சி.1,2). 3. ***பிறத்தல்;*** to commence, as a new year, an age; to be born, as a great personage (W.)

*[உது → உதி. உது = மேலெழும்பு.]*

**உதிச்சியம்** *udi-c-ciyam,* பெ. (n.) ***வெட்டிவேர்;*** fragrant root. (சா.அக.).

*[உதித்தியம் → உதிச்சியம்.]*

**உதிதன்**¹ *udidaṉ,* பெ. (n.) ***தோன்றினவன்;*** one who is born. "உதிதற்குரியாள் பணியால்" (சீவக. 23).

*[உது → உதி → உதிதன்.]*

**உதிதன்**² *udidaṉ,* பெ. (n.) ***பாண்டிய மன்னன்*** (இறை.2,31); *Pāṇḍiya king.* (செ.அக.).

*[உது → உதி → உதியன் → உதிதன்.]*

**உதிப்பு** *udi-p-pu,* பெ. (n.) 1. ***தோற்றம்;*** birth, appearance. "மரிப்பொடுதிப்பு" (பிரபுலிங. முத்தாயி. 23). 2. ***மெய்யறிவு;*** knowledge, wisdom. "ஊற்றுச் செறித்துடனுதிப்பை யாக்கும்" (யசோதர. 1,65). 3. ***வீக்கம்;*** swelling. (சா.அக.).

*[உது → உதி → உதிப்பு.]*

**உதியஞ்சேரல்** *udiyañ-jēral,* பெ. (n.) ***மாபாரதப் போரில் பாண்டவப் படைகளுக்குப் பெருஞ்சோறு அளித்தவனாகக் கருதப்படும் பழைய சேரருள் ஒருவன்*** (பதிற்றுப். 20, பதிகம்); king who is said to have fed the armies of the Pāṇḍavās in the Mahābhārata War.

*[உது → உதி → உதியன் + சேரல்.]*

**உதியம்பால்** *udiyampāl,* பெ. (n.) ***ஒதிய மரத்தின் பால்;*** essence of the odina tree. (சா.அக.).

*[உது → உதி + அம் + பால்.]*

**உதியம்பூர்** *udiyampūr,* பெ. (n.) ***ஓரூர்;*** name of a village. (செ.அக.).

*[உதியன் + புரம் = உதியன்புரம் → உதியம்பூர்.]*

**உதியமரம்** *udiyamaram,* பெ. (n.) ***ஒதியமரம்;*** goom pain tree. (சா.அக.).

*[உதி + மரம்.]*

**உதியன்** *udiyaṉ,* பெ. (n.) 1. ***இயற்பெயர்;*** proper name. 2. ***சேரன்*** (திவா.); title of Cēra dynasty. 3. ***அறிவாளி;*** learned man.

*[உது → உதி → உதியன். உதி = உயரம், மேன்மை.]*

**உதிர்**[1] *udir,* பெ. (n.) ***நறுமணச்செடி;*** the fragrant root of a plant. (சா.அக.).

*[உது → உதுர் → உதிர். உதுர் = மேலெழும்பல், நறுமணம்.]*

**உதிர்**[2]**-தல்** *udir-,* 2. செ.கு.வி. (v.i.) ***கீழ்விழுதல்;*** to drop off, as leaves, fruits; to fall out, as hair; to be blasted, nipped, shaken with the wind; to drop down, as tears. "தீவளியா னற்கா யுதிர்தலு முண்டு" (நாலடி.19). 2. ***பிதிர்தல்;*** to crumble, fall to pieces, as cakes. "உதிருகின்ற சிற்றுண்டி கொண்டு" (கந்தபு. ஆற்றுப்.27). 3. ***சாதல்;*** to die, used in imprecations (W.). நீ சீக்கிர முதிர்ந்து போவாய். (வின்.). 4. ***குலைதல்;*** to be demolished. "உதிராமதிலு முளகொல்" (பு.வெ.6,4.).

ம. உதிருக; க. உதிர், உதிரு, உதுர்; துட. வித் (இடை ஆடை நெகிழல்); து. உதுருனி, உதருனி.

*[உது → உதுர் → உதிர்.]*

**உதிர்**[3]**-த்தல்** *udir-,* 2. செ.குன்றாவி. (v.t.) 1. ***விழ்த்துதல்;*** to cast leaves or fruits, as trees, to cause to drop or fall in numbers or succession to shake off, beat off, peel off, strip; to knock out, as teeth; to shed, as tears. "குயில் குடைந் துதிர்த்த புதுப்பூஞ் செம்மல்" (சிறுபாண்.4). 2. ***பிதிர்த்தல்;*** to break in pieces. பிட்டையுதிர்த்தான். 3. ***உதறுதல்;*** to shake out, as a cloth. "பலரிடை யாடை யுதிரார்" (ஆசாரக்.37). (செ.அக.).

ம. உதிர்; க. உதிரிக.

*[உ → உது → உதுர் → உதிர்.]*

**உதிர்**[4] பெ. (n.) 1. ***துகள்;*** crumb. "உடைந்தன வுதிராகி" (கந்தபு. சதமக.13). 2. ***முத்தக் காசு;*** straight-sedge tuber. (W).

*[உதுர் → உதிர்.]*

**உதிர்க்கிடாரி** *udir-k-kiḍāri,* பெ. (n.) ***கருடன் கிழங்கு;*** Indian birth-wort. (சா.அக.).

*[உதிர் + கிடாரி. கடாரி → கிடாரி. கடாரி = கன்னித்தன்மை, இளமை.]*

**உதிர்க்குக்கிடாரி** *udirkku-k-kiḍāri,* பெ. (n.) ***உதிர்க் கிடாரி*** பார்க்க *udir-k-kiḍāri.]*

**உதிர்காய்** *udir-kāy,* பெ. (n.) 1. ***சொரி காய்; காற்றடித்து உதிர்ந்த காய்;*** fallen fruit. 2. ***குலையினின்று பிரிந்த காய்;*** fruit shaken from a bunch.

*[உதிர் + காய்.]*

**உதிர்காலம்** *udir-kālam,* பெ. (n.) ***இலையுதிர் காலம்;*** season of the year during which leaves fall off from trees - Autumn. (சா.அக.).

*[உதுர் → உதிர் + காலம்.]*

**உதிர்கோலகம்** *udirkōlagam,* பெ. (n.) ***கம்மாறு வெற்றிலை;*** a dark and thick species of betel - Piper betel. (சா.அக.).

*[உதுர் → உதிர் + கோலகம். (கருப்பு.)]*

**உதிர்சம்பம்** *udir-šambam,* பெ. (n.) ***பழுத்து உதிர்ந்த எலுமிச்சை;*** ripe lime fallen or dropped off the tree. (சா.அக.).

*[உதுர் → உதிர் + சம்பம்.]*

**உதிர்சருகு** *udir-šarugu,* பெ. (n.) ***மரத்தினின்று காய்ந்து விழுந்த இலை;*** the dried leaves dropped off the tree. (சா.அக.).

*[உதிர் + சருகு.]*

**உதிர்ப்பகம்** *udirppagam,* பெ. (n.) ***சவுக்கு மரம்;*** casuarina equisetifolia. (சா.அக.).

*[உதிர்ப்பு → உதிர்ப்பகம். கோஷடயில் அல்லது வறட்சியில் இலையுதிர்த்து நிற்கும் இயல்புடைய மரம்.]*

**உதிர்ப்பு** *udirppu,* பெ. (n.) 1. ***உகுக்கை;*** spitting. 2. ***உதிர்வு;*** falling. (ஆ.அக.).

*[உதிர் → உதிர்ப்பு.]*

**உதிர்பன்னீர்** *udirpaṉṉīr,* பெ. (n.) ***பன்னீர் மரம்;*** dew-flower.

*[உதிர் + பன்னீர்.]*

**உதிர்மணல்** *udir-maṇal,* பெ. (n.) 1. ***சிற்றீரமுள்ள மணல்;*** loose damp sand (W.). 2. ***புதைமணல்;*** quick sand.

*[உதிர் + மணல்.]*

**உதிர்வு** *udirvu,* பெ. (n.) ***உதிர்கை;*** falling.

*[உதிர் → உதிர்வு.]*

**உதிர்வேங்கை** *udir-vēṅgai,* பெ. (n.) ***உதிரவேங்கை*** பார்க்க; see *undiravēṅgai.* (சா.அக.).

*[உதிரம் + வேங்கை = உதிர்வேங்கை.]*

**உதிரக்கட்டு** *udira-k-kaṭṭu,* பெ. (n.) 1. ***அரத்தத்தை நிறுத்துகை;*** stoppage of hemorrhage. 2. ***பூப்புப் படாமை;*** non occurrence or suppression of the menses.

*[உதிரம் + கட்டு.]*

**உதிரக்கல்** *udira-k-kal,* பெ. (n.) ***மாணிக்க வகை;*** blood stone, heliotrope.

*[உதிரம் + கல்.]*

**உதிரக்கலப்பு** *udira-k-kalappu,* பெ. (n.) ***அரத்தத் தொடர்புள்ள உறவு;*** blood relationship, consanguinity.

*[உதிரம் + கலப்பு.]*

**உதிரக்குடோரி** *udira-k-kudōri* பெ. (n.) ***கருடன் கிழங்கு.*** (மூ.அ.) பார்க்க; see *karuḍan kiḻaṅgu.*

உது → உதுரம் - உதிரம் + குடோரி. (கிடாரி → கடாரி → குடோரி)
உதிரம் = செந்நீர், செந்நிறம்
*[கிடாரி (குடோரி) இளமை, கன்னித்தன்மை.]*

**உதிரங்களை-தல்** *udiraṅ-kaḷai-,* 2. செ.கு.வி. (v.i.) ***அரத்தம் வடித்தல்.*** (குறள், 948, உரை); to bleed, draw out blood.

*[உதிரம் + களைதல்]*

**உதிரச்சிக்கல்** *udira-c-cikkal,* பெ. (n.) ***மாதவிலக்கு பற்றிய நோய்;*** painful menstruation.

*[உதிரம் + சிக்கல். **உதிரம்** பார்க்க; see **udiram.**]*

**உதிரசூலை** *udira śūlai* பெ. (n.) ***கருப்ப நோய் வகை;*** clots of blood formed in the uterus (W.)

*[உதிரம் + சூலை. **உதிரம்** பார்க்க; see **udiram.**]*

**உதிரத்துடிப்பு** *udira-t-tuḍippu,* பெ. (n.) ***நெருங்கிய உறவினர் படுந்துன்பங் கண்டு உண்டாகும் மன வருத்தம்;*** painful sensation felt on seeing a near relation in suffering (W.)

*[உதிரம் + துடிப்பு. **உதிரம்** பார்க்க; **see udiram.**]*

**உதிரத்தெறிப்பு** *udira-t-teṟippu,* பெ. (n.) ***அரத்தந் தொடர்பான உறவு;*** blood relationship. 'நாராயணத்வ பரயுக்தமான உதிரத் தெறிப்பாலே' (ஈடு.)

உதிரம் + தெறிப்பு. தெறிப்பு = பரவல், தொடர்ந்து வருதல். ***உதிரம் பார்க்க; see udiram.]***

**உதிர நரம்பு** *udira-narambu,* பெ. (n.) ***அரத்த நாடி;*** blood-vessel.

*[உதிரம் + நரம்பு. **உதிரம் பார்க்க; see udiram]***

**உதிரப்பாடு** *udira-p-pāḍu,* பெ. (n.) ***மகளிர்க்கு நேரும் பெரும்பாடு என்னும் நோய், பெருங்குருதிப்போக்கு;*** excessive menstruation.

*[உதிரம் + பாடு. படு → பாடு (படுவது பாடு) படுதல் = விழுதல், ஒழுகுதல், கசிதல்.]*

**உதிரப்போக்கு** *udira-p-pōkku,* பெ. (n.) ***அரத்தம் வெளிப்போகை;*** bleeding.

*[உதிரம் + போக்கு. **உதிரம் பார்க்க; see udiram.]***

**உதிரம்** *udiram,* பெ. (n.) ***அரத்தம்;*** blood. 'உதிரம் உறவறியும்' (சீவக. 1910, உரை.).

உல் - எரிதல் கருத்து வேர். உல் → உல → உலு → உது (உரு) = எரிநிறம், சிவப்பு. உது → உதுர் - உதுரம் → உதிரம் = செந்நீர், குருதி, அரத்தம்.

அரத்தத்தைக் குறிப்பிடும் குருதி (குருநிறம் = செந்நிறம்) என்னும் சொல்லும் 'குரு' (சிவப்பு) வேரடியாகப் பிறந்தது என்பதை ஒப்பிடுக.

**உதிரமாகாளி** *udiramākāḷi,* பெ. (n.) ***பெரிய வௌவால் வகை;*** Vampire.

*[உதிரம் + மாகாளி.] உதிரம் = செந்நிறம்.*
*மாகாளி என்பது வடிவில் பெரியது, கொடுந்தன்மையது என்னும் பொருள்களைக் குறிப்பால் சுட்டியதாகலாம்.*

**உதிர முறிப்பான்** *udira murippān,* பெ. (n.) ***விட்டுணுக்கி ராந்தி என்றழைக்கப்படும் மூலிகைச் செடி (மூ.அ.)*** a plant that grows only in hot and dry places.

*[உதிரம் + முறிப்பான்]*

**உதிரல்** *udiral,* பெ. (n.) ***உதிர்ந்த பூ;*** flowers that have fallen down. "வேங்கை விரிந்த விணருதிரலோடு" (பரிபா.7,12.). (செ.அக.).

*[உதிர் → உதிரல்.]*

**உதிரவேங்கை** *udira-vēṅgai,* பெ. (n.) ***வேங்கை மர வகை*** (மூ.அ.); East-Indian Kino, as having reddish sap. (செ.அக.).

**உது** *udu,* ***சு.பெ.*** (demons. pron.). 1. ***சேய்மைக்கும் அண்மைக்கும் நடுவணதைக் குறிக்கும் ஒரு சுட்டுப் பெயர்;*** that which is between the near and the more remote. "உதுக்காண்"(யாப்.வி.94, பக். 356.). 2. ***முன் னிலையாளனிடம் உள்ள பொருள்;*** that which is near the person(s) spoken to. உது என்ன? (யாழ்ப்.). 3. ***முன்னால்;*** in front of. (எனக்கு முன்). (செ.அக.).

ம. உது; க. உது; தெ. உ; து. உன்த்; பர். ஊத்; கூ. ஒவி; குவி. ஊதி, ஊஅதி; குரு. கீத்; பிரா. ஒத்.

*[உ → உந்து → உது.]*

**உதுக்கம்** *udukkam,* பெ. (n.) 1. ***நீர்;*** water. 2. ***சம்பாரம் கூட்டிய குழம்பு;*** curry juice.

க. உதுக.

*[ஓதம் = நீர். ஓதம் → உதம் → உதுகம் → உதுக்கம்.]*

**உதுக்கலம்** *udu-k-kalam,* பெ. (n.) *நடுவில் குழிந்த மரவுரல் அல்லது கல்லுரல்;* mortar either of wood or stone.

*Skt. உலூகல (உரல்).*

*[உது - நடுப்பகுதி. கலம் = குழிவான ஏனம். நடுப்பகுதியில் குழியுள்ள உரல், உதுக்கலம் எனப்பட்டது. இது உதுகலம் → உலூகல எனச் சமற்கிருதத்திலும், உலூகல → ரோால எனத் தெலுங்கிலும் திரிந்தது. வடமொழி அகரமுதலியில், ulūkala = a wooden mortar, name of a particular kind of cup for holding the soma, shaped like a mortar, எனக் கூறப்பட்டிருத்தலால் மரவுரலையே முதலிற் குறித்த சொல்லாக இது வழங்கியது என அறியலாம்.]*

**உதுகதி** *udugadi,* பெ. (n.) *வாயாலெடுத்தல்;* vomiting. (சா.அக.).

*[உது + கதி. உது + மேலெழும்பல். கதி = நிலைமை.]*

**உதும்பரக்குட்டம்** *udumbarakkuttam,* பெ. (n.) *உடம்பு முழுவதும் செம்புள்ளிகளையுடைய ஒருவகைக் குட்டம். இது அரத்தத்தில் உதிக்கும் பூச்சிகளால் ஏற்படுவதாகச் சொல்லப்படும்;* a species of leprosy with red spots all over the body. It is said to be caused by a kind of germ supposed to be generated in the blood. (சா.அக.).

*[உதும்பரம் + குட்டம்.]*

**உதும்பரப்பரணி** *udumbara-p-parani,* பெ. (n.) 1. *காட்டாமணக்கு;* wild croton. 2. *சிவப்புக் காட்டாமணக்கு;* red physic nut. (சா.அக.).

*[உதும்பரம் + பரணி.]*

**உதும்பரம்**[1] *udumbaram,* பெ. (n.) 1. *செம்பு* (பிங்.); copper. 2. *அத்தி மரம்* (பிங்.); red-wooded fig tree. 3. *வாயிற்படி;* threshold of a house (W.). ஒன்றிய கபாடஞ் சாரு முதும்பரங் கடந்து சென்றான். 4. *செவ்வகத்தி* (மூ.அ.); red-flowered West-Indian pea--tree. 5. *எருக்கு* (மூ.அ.); madar. 6. *நெற்களம்* (ஆ.அக.); threshing floor. 7. *சிவப்பு;* redness. 8. *பேயத்தி;* wild fig-ficus oppositifolia. 9. *அத்திப்பழம்;* the fruit of ficus glomerata. 10. *சீமையத்தி அல்லது தேரத்தி;* hebrew tenah or European fig tree. (சா.அக.).

**உதும்பரம்**[2] *udumparam,* பெ. (n.) *செங்குட்ட நோய்* (நாநார்த்த.); red leprosy.

**உதூகலம்** *udūgalam,* பெ. (n.) *உரல்;* mortar. (ஆ.அக.).

*[உது = நடுப்பகுதி. உது → உதூ + கலம் (நடுவில் கலம்போல் குழிந்தது.).]*

*இச்சொல் வடமொழியில் உலூகல எனத் திரிந்தது. உதுக்கலம் பார்க்க; see udu-k-kalam.]*

**உதை**[1]**-தல்** *udai-,* 4. செ.குன்றாவி. (v.t.). 1. *காலால் எற்றுதல்;* to kick. அவன் என்னை உதைத்தான். 2. *நன்றாக ஊன்றுதல்;* to plant the foot firmly against a post or a wall. 'முட்டுக்கட்டை சுவரை உதைத்துக் கொண்டிருக்கிறது. (இ.வ.). (செ.அக.). 3. *தாக்கி மீளுதல்;* to dash and retreat. (ஆ.அக.).

*[உது → உதை (முன் தள்ளுதல்.)]*

**உதை**[2]**-த்தல்** *udai-,* 4. செ.குன்றாவி. (v.i.) 1. *காலாலெற்றுதல்;* to kick. "கூற்றொன்றை யுதைத்தாய் போற்றி" (தேவா. 966, 1). 2. *அவமதித்தல்;* to spurn, reject, as advice. (W.). அவன் என் பேச்சை யுதைத்துத் தள்ளி விட்டான் (இ.வ.). 3. *செலுத்துதல்;* to discharge, as an arrow. "இச்சிலையுதைத்த கோற் கிலக்கம்" (கம்பரா. கார்முக.9.). 4. *அடித்தல்;* to beat, strike. அவனை நன்றாய் உதைத்தான். (உ.வ.).

*[உது → உதை (முன் தள்ளுதல்).]*

**உதை**[3]**-த்தல்** *udai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. *நடுங்குதல்;* to tremble with fear, shiver with cold used impers. அதைக் கேட்டதும் அவனுக்கு உதைக்கிறது. 2.. *மாறுபடுதல்;* to be inconsistent. அவன் சொன்னது முன்னுக்குப் பின் உதைக்கிறது.

க., து., பட ஒதெ; ம. உத.

*[உது → உதை = முன்தள்ளுதல், உதைத்தல்.]*

**உதை**[4] *udai,* பெ. (n.) 1. *காலினெற்று;* kick. ஓர் உதை உதைத்தான். 2. *காலாலமுத்துகை;* pressure of foot, as in pushing (W.). 3. **உதைகால்** பார்க்க; see *udaikāl.* 4. *அடி;* beating, flogging. 5. *குதிப்பு;* leap to recoil or rebound of a sun. 6. *தாங்குதல்;* support. (சேரநா.).

ம. உத; க., து., பட ஒதெ; தெ. ஊத.

*[உ → உது → உதை.]*

**உதைகால்** *udai-kāl,* பெ. (n.) 1. *தாங்கு முட்டுக்கால்;* prop, set against a slanting wall or a falling tree. 2. *முட்டுக்கால்;* physical deformity whereby the hind-legs of an animal touch each other; knock-knee, as in the case of overloaded donkeys. 3. *உதைக்குங்கால்;* kicking leg. "உதைகாற் பசு" (குடா. 3, 13). 4. *உத்திரத்தின் மீதுள்ள குத்துக்காலின் ஆரக் கால்கள்;* supports to king post (C.E.M.). (செ.அக.).

*[உதை + கால்.]*

**உதைகால்பெற்றம்** *udai-kāl-perram,* பெ. (n.) *பால் கறக்கும் போது உதைக்கும் இயல்புள்ள கறவை மாடு;* cow with kicking leg.

*[உதை + கால் + பெற்றம்.]*

**உதைகாலி** *udaikāli,* பெ. (n.) ***உதைக்குங் குணமுள்ள மாடு*** (அபி.சிந்.பக்.788); cow with kicking leg. (செ.அக.).

*[உதை + காலி. கால் → காலி.]*

**உதைகாற்பசு** *udaikārpasu,* பெ. (n.) ***உதைகால்பெற்றம்*** பார்க்க; see *udai-kāl-perram.*

*[உதை + கால் + பசு. பெற்றம் → பெத்த → பெச்சு → பெசு = பசு.]*

**உதைகொடு¹-த்தல்** *udai-kodu-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உதைத்தல்;*** to give kicks.

*[உதை + கொடு.]*

**உதைகொடு²-த்தல்** *udaikodu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***முட்டுக்கொடுத்தல்;*** to set a prop, put a buttress as against a wall or a tree. 2. ***ஊஞ்சலை ஆட்டிக்கொள்ளுதல்;*** to push and give impulse to a swing. (J). (செ.அக.).

*[உதை + கொடு.]*

**உதைசுவர்** *udai-suvar,* , பெ. (n.) 1. ***முட்டுச்சுவர்;*** wall rest, buttress. 2. ***அணை சுவர்;*** supporting wall. (ஆ.அக.).

*[உதை + சுவர்.]*



உதைசுவர்

**உதைத்துக்கொள்ளல்** *udaittu-k-kollal,* பெ. (n.) 1. ***குளிரால் நடுக்கங்கொள்ளல்;*** shivering with cold. 2. ***அச்சத்தால் நடுக்கங் கொள்ளல்;*** trembling with fear. 3. ***வலிப்பு அல்லது இழுப்பினால் கை கால் உதைத்துக் கொள்ளல்;*** violent and irregular motion of the limbs through fits. (சா.அக.).

*[உதை → உதைத்து + கொள்ளல்.]*

**உதைப்பளவு** *udaippalavu,* பெ. (n.) ***கைந்நொடிப் பொழுது;*** moment. "கண்ணன் உதைப்பளவு போது போக்கின்றி" (திவ். இயற். நான்முக. 32). (செ.அக.).

*[உதை → உதைப்பு + அளவு.]*

**உதைப்பு** *udaippu,* பெ. (n.) 1. ***தாக்குகை;*** dashing against. 2. ***அச்சம்;*** fright, alarm. (செ.அக.).

*[உதை → உதைப்பு.]*

**உதைபு** *udaipu,* பெ. (n.) ***கதவு*** (பிங்.); door. (செ.அக.).

*[உதைப்பு → உதைபு. (முன் தள்ளுவது.)]*

**உதைமானம்** *udaimānam,* பெ. (n.) 1. ***முட்டு;*** backing of an abutment, buttress of an arch; prop, support. 2. ***கருநாடகத் துப்பாக்கிக் கைப்பிடி;*** pistol grip of a Karnatic gun.

*[உதை → உதைமானம். மானம் = சொல்லாக்க ஈறு.]*

**உதையக்காப்பு** *udaiya-k-kāppu,* பெ. (n.) ***நன்றாக அடிக்கை;*** sound thrashing. (செ.அக.).

*[உதை + அ + காப்பு. (காய்ப்பு.)]*

**உதையப்பெருமாள்** *udaiya-p-perumāḷ,* பெ. (n.) ***பட்டினி;*** starvation. (செ.அக.).

*[உதை → உதைய + பெருமாள். பெருமாளுக்குரிய நோன்பு.]*

**உதையம்** *udaiyam,* பெ. (n.) ***செருப்படை;*** a low spreading plant grown in the fields.

*[உதை → உதையம்.]*

**உதையரலிக்கஞ்சி** *udai-y-arali-k-kañji,* பெ. (n.) ***பச்சைக் கருப்பூரம்;*** crude camphor. (சா.அக.).

*[உதை + அரலி + கஞ்சி.]*

**உதையவன்பால்** *udaiyavanpāl,* பெ. (n.) ***எருக்கன் பால்;*** the milky juice of madar or sun plant. (சா.அக.).

*[உதையவன் + பால்.]*

**உதையுண்ணி** *udai-y-unni,* பெ. (n.) ***காலால் உதைபடுபவர்;*** one who is repeatedly kicked. (சா.அக.).

*[உதை + உண்ணி.]*

**உதோள்** *udōḷ,* கு.வி.எ. (adv.) ***உதோளி*** பார்க்க; see *udōli.* (தொல். எழுத். 398, உரை.). (செ.அக.).

*[உ → உது → உதா → உதோ → உதோள்.]*

**உதோளி** *udōli,* பெ. (n.) ***உவ்விடம்*** (தொல். எழுத். 159); the place where the person addressed is or the intermediate place.

*[உ → உது → உதா → உதோ → உதோள் → உதோளி.]*

**உந்த** *unda,* கு.பெ.எ. (adj.) ***உங்கேயுள்ள;*** which is near the person addressed or which is intermediate. "உந்தவேல்" (பாரத. பதினான். 213.). (செ.அக.).

*[உ → உந்து → உந்த.]*

**உந்தரம்** *undaram,* பெ. (n.) 1. ***வழி;*** way (W.). 2. ***எலி;*** rat. (செ.அக.).

*[உந்து → உந்தரம்.]*

**உந்தல்¹** *undal,* பெ. (n.) 1. ***தள்ளு; உந்து;*** push. 2. ***தள்ளியிருக்கின்ற பாகம்;*** the projecting part. 3. ***முளைத்து நிற்கின்ற நிலை;*** jutting out, projection. (சேரநா.).

ம. உந்தல்; கோத. உந்து (தள்ளு); துட. உந்து.

*[உந்து → உந்தல்.]*

**உந்தல்²** *undal,* பெ. (n.) 1. ***உயர்ச்சி;*** height. 2. ***யாழ் நரம்பு தடவுகை;*** thrumming to test the strings of the yāḻ. "நரம்பு முழுதினையுந் தடவித் தள்ள லுந்தல்" (கூர்மபு. கண்ணன் மணம். 146). (செ.அக.). 3. ***ஏறுகை*** (ஆ.அக.); climbing.

*[உ → உந்து → உந்தல்.]*

**உந்தி¹** *undi,* பெ. (n.) 1. ***பேசும்போது வாய் வழிக் காற்றைத் தள்ளுவதாகக் கருதப்படும் கொப்பூழின் உட்பக்கம்; கொப்பூழ்;*** naval. "உந்தி மேல் நான்முகனைப் படைத்தான்" (திவ். பெரியதி. 5,4,1.). 2. ***வயிறு;*** belly, stomach. "உந்தியுறுபசிக்கு" (திருவாலவா. பதி. 1.). 3. ***நீர்ச்சுழி*** (திவா.); whirlpool. 4. ***ஆறு;*** river. "அரும்புறவுந்தி மடந்தையர்" (இரகு. திக்குவி. 267.). 5. ***யாற்றிடைக்குறை;*** small island in a river. "குணகடற் கிவர்தருங் குருஉப்புன லுந்தி" (மதுரைக். 245.). 6. ***நீர்*** (பிங்.); water. 7. ***கடல்;*** sea. "உந்தியுலகத்தில்" (சி.சி. பர. உலோகா. 1). 8. ***தேரின் உருளை;*** car wheel. "உந்தி கணாலுடை யுந்திரதம்" (பாரத. பதின் மூன். 12). 9. ***தேர்த்தட்டு*** (பிங்.); middle loft of a car. 10. ***மகளிர் விளையாட்டுவகை*** (பிங்.); a game of Indian women somewhat akin to the English game of battle dore and shuttlecock. 11. ***யாழ்ப்பத்தல்*** (தொல். சொல். 399, உரை); body of a yāḻ. 12. ***நடு*** (அக.நி.); middle space. 13. ***உயர்ச்சி*** (அக.நி.); height, eminence.

ம. உந்தி.

*[உ → உந்து → உந்தி.]*

**உந்தி²** *undi,* பெ. (n.) 1. ***துணை;*** companion. 2. ***பறப்பவை;*** birds. (செ.அக.).

*[உ → உந்து → உந்தி.]*

**உந்திச்சுழி** *undi-c-culi,* பெ. (n.) 1. ***கொப்பூழ்ச்சுழி;*** curve or involution of the naval. 2. ***நீர்ச்சுழி;*** whirlpool. (செ.அக.).

*[உந்தி + சுழி.]*

**உந்திடம்** *undidam,* பெ. (n.) ***உவ்விடம்;*** yonder place, where the person addressed is. "பொய்குன்ற வேதிய ரோதிடு முந்திடம்" (திருக்கோ. 223.). (செ.அக.).

*[உ → உந்து → இடம்.]*

**உந்திநாளம்** *undi-nālam,* பெ. (n.) ***கொப்பூழ்க் கொடி;*** umbilical cord. "உந்தி நாளத்தை மெல்லவரிந்து" (திருவானைக். கோச்செங். 73.). (செ.அக.).

*[உந்து → உந்தி + நாளம் ]*

**உந்திபற-த்தல்** *undipara-,* 3. செ.கு.வி. (v.i.) ***குழாங் கூடிய மகளிர் உந்தி விளையாட்டாடுதல்;*** to play the game of *unti,* an ancient game, consisting prob. in jumping accompanied by singing. "உந்திபறந்த வொளிளியிழையார்கள்" (திவ். பெரியாழ். 3,9,11.). (செ.அக.).

*[உ → உந்து → உந்தி + பறத்தல்.]*

**உந்திபூத்தோன்** *undi-pūttōṉ,* பெ. (n.) ***திருமால்*** (திவா.); Visṇu, with a lotus flower sprouting from His navel. (செ.அக.)

*[உந்தி + பூத்தோன்.]*

**உந்தியில்வந்தோன்** *undiyil-vandōṉ,* பெ. (n.) ***நான் முகன்*** (பிங்.); Brahma who has sprung from Visṇu's navel lotus. (செ.அக.).

*[உந்தி + இல் + வந்தோன்.]*

**உந்தியிலுதித்தோன்** *undiyiluditōṉ,* பெ. (n.) ***உந்தியில் வந்தோன்*** பார்க்க; see (திவா.) *undiyil-vandōṉ.* (செ.அக.).

*[உந்தி + இல் + உதித்தோன்.]*

**உந்து¹-தல்** *undu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***தள்ளுதல்;*** to push out, thrust forward. "உந்திடவெழுந்து மூழ்கி" (ஞானா. 16,17.). 2. ***வீசியெறிதல்;*** to cast away. "கரிகடேர்த்தொகை.... யள்ளியே யுந்தினன்" (கந்தபு. நகரழி. 23.). 3. ***அம்பு முதலியன விடுதல்;*** to shoot, as an arrow, as a spear. "சரங்கள். வீமனுந்த" (பாரத. புட்ப. 104.). 4. ***செலுத்துதல்;*** to drive as a chariot. "தேரினைத் துரோண னுந்தினான்" (பாரத. நிரைமீ. 86.). 5. ***அனுப்புதல்;*** to despatch, send. "வயிரவி தன்னை யாங்கே யுந்தினன்" (பிரபோத. 24,45.). 6. ***வெளிப்படுத்தல்;*** to produce, cause to appear. "கடல் வண னுந்தியுந்திய நாற்றிதழ்த் தாமரை" (கம்பரா. கிளை. 121.). 7. ***யாழ்நரம்பு தெறித்தல்;*** to thrum, as a string of the *yāḻ.* "வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்" (பொருந. 23.). 8. ***மரமுதலியன கடைதல்;*** to turn in a lathe, to rub, as two sticks together till they ignite. "உந்தவே காட்டாக்கிற்றோன்றி" (சி.போ. 9,3,2.). 9. ***ஆயக்காய் முதலியன உருட்டுதல்;*** to toss, as dice. கவறுந்தினார். (வின்.)

*[உ → உந்து.]*

**உந்து²-தல்** *undu-,* 15. செ.கு.வி. (v.i.) 1. ***எழும்புதல்;*** to rise, flow, as water; to swell, as the sea. "உந்து நீர்க்கங்கை" (கூர்மபு. இராமனவ. 39). 2. ***பெருகுதல்;*** to grow, enlarge, as wisdom. "உந்துசுடர் ஞானத்தை" (சேதுபு. நாட்டு. 3). 3. ***செல்லுதல்;*** to go, move along. "வானுந்து மாமதி (திருக்கோ. 147.). 4. ***தங்குதல்;*** to

crawl, trudge. ''அன்பர்...........உந்தினர் மார்பினால்'' (பெரியபு. திருநா. 358.). 5. ***நீங்குதல்;*** to cease. ''உந்ாத வன்போடு'' (பதினொ. திருத்தொண். 19). 6. ***பொருந்துதல்;*** to be united. ''தானந்தோறு முந்திடுங் கரணம்'' (சி.சி. 4,34 சிவஞா.).

ம. உந்துக, **கோத.** உத; துட. உத், பட. உந்து, *L.* unda, *GK* hunder, *Goth* lato; *Lth.* wandu; *E* water; *OHG.* warar. உந்து > வ. உந்த் (இ.வே) (வமொ 93.).

*[உ → உந்து]*

**உந்து**³ *undu,* பெ. (n.) ***ஏலக்காய்த்தோல்;*** cardamom husk. (j). (செ.அக.).

ம. உந்து.

*[உ → உம் (மேலிருப்பது) → உந்து.]*

**உந்து**⁴ *undu,* இடை (part.). ***பெயரச்சத்திறுதியாகிய 'உம்'மின் திரிபு;*** variant of the ending 'உம்' in rel.pple. ''கூப்பெயர்க்குந்து'' (தொல்.சொல். 294.). (செ.அக.).

*[உம் → உந்து.]*

**உந்து**⁵ *undu,* பெ. (n.) ***ஆவை யழைக்கும் ஒலிக் குறிப்பு;*** onom. term used in calling cows (j). (செ.அக.).

*[உம் - ஒலிக்குறிப்பு. உம் → உந்து]*

**உந்துரம்** *unduram,* பெ. (n.) ***எலி;*** mouse. (ஆ.அக.).

*[உந்து → உந்துரம். உந்துரல் = குடைதல்]*

**உந்துரு** *unduru,* பெ. (n.) 1. ***பெருச்சாளி*** (பிங்.); bandicoot. 2. ***எலி*** (ஆ.அக.); mouse. (செ.அக.).

ம. உந்துரு.

*[உந்து → உந்துரு. உந்துரல் = குடைதல்.]*

**உந்துவண்டி** *unduvandi,* பெ. (n.) ***உந்திக் கொண்டு போவதுபோல் அமைந்த வண்டி*** (சேரநா.); go-cart.

ம. உந்துவண்டி.

*[உந்து + வண்டி.]*

**உந்தூழ்** *undūḷ,* பெ. (n.) ***பெருமூங்கில்;*** large bamboo. ''உரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிளம்'' (குறிஞ்சிப். 65.). (செ.அக.).

*[உ → உந்து → உந்துல் → உந்தூழ். உந்துதல் = பருத்தல்]*

**உந்தெழுச்சி** *undeḷucci,* பெ. (n.) ***கண்ணில் பருத்திக் காயைப்போல் கெட்ட தசை வளரும் கண்ணோய் வகையுளொன்று;*** eye disease. (ஆ.அக.).

*[உந்து + எழுச்சி.]*

**உந்தை** *undai,* பெ. (n.) ***உன் அப்பன்;*** your father. ''தூதர் வந்தன ருந்தை சொல்லோடு'' (கம்பரா. பள்ளி. 2.).

*[உன் + தந்தை - உந்தை.]*

**உப்பக்கம்** *uppakkam,* பெ. (n.) 1. ***உந்தப்பக்கம்;*** yonder, where the person addressed is, or that (intermediate) side. ''உப்பக்க நோக்கி'' (வள்ளுவமா. 21.). 2. ***முதுகு;*** back. ''ஊழையு முப்பக்கங்காண்பர்'' (குறள், 620). 3 ***பின்பக்கம்;*** back or hind side. (செ.அக.).

மறுவ. உப்பால், வெரிந்.

*[உ + பக்கம்.]*

**உப்பங்கழி** *uppaṅkaḻi,* பெ (n.) 1. ***காயல்;*** backwater. 2. ***உப்பளம்*** (வின்.); salt-pan. (W.). (செ.அக.).

*[உப்பு + அம் + கழி.]*

**உப்பங்காற்று** *uppaṅkāṟṟu,* பெ. (n.) ***கடற் காற்று;*** see breeze. (செ.அக.).

*[உப்பு + அம் + காற்று.]*

**உப்பங்கோரை** *uppaṅgōrai,* பெ. (n.) ***உவர் நிலத்தில் முளைப்பதான கைப்புக் கோரை.*** (M.N.A.D. ii,170); a bitter sedge that grows only by the side of salt marshes.

*[உப்பு + அம் + கோரை.]*



உப்பங்கோரை

**உப்பசம்** *uppašam,* பெ. (n.) 1. ***ஈளைநோய்;*** asthma. 2 ***வீக்கம்;*** swelling, as of the abdomen. வயிறு உப்பசமாயிருக்கிறது (உ வ.). (செ.அக.).

தெ. உப்பசமு.

*[உப்பு → உப்பம் (தொ.பெ.). உ → உப்பு (வீங்குதல்) → உப்பசம்.]*

**உப்பட்டம்** *uppaṭṭam,* பெ. (n.) 1. ***உப்புக்குட்டி மரம்;*** white mangrove. 2. ***சிறுவர் விளையாட்டு வகை;*** children's game.

ம. உர்ப்பம்.

*[உப்பு + ஆட்டம் - உப்பாட்டம் → உப்பட்டம். உப்புப் பொதியைச் சுமப்பது போன்ற ஆட்டம்.]*

**உப்பட்டி** *uppaṭṭi,* பெ. (n.) ***அரிக்கட்டு*** (யாழ்ப்.); sheaf.

*[உ → உப்பு → உப்பட்டி. ஒன்றின் மேல் ஒன்றாக வைத்து உயர்த்திக் கட்டும் கட்டு.]*

**உப்பட்டு** *uppaṭṭu,* பெ. (n.) 1. ***போளிப்பணிகாரம்;*** cake made of wheat flour enclosing it boiled with *dhal* and sugar or jaggery. (ஆ.அக.).

*[உள் → உப்பட்டு (உட்பகுதியில் அதாவது நடுவில் இனிப்பு வைத்துச் சுடப்பட்ட பணிகாரம்.)]*

**உப்பந்தரவை** *uppandaravai,* பெ. (n.) ***உவர் நிலம்;*** saline soil. (செ.அக.).

*[உப்பு + அம் + தரவை. தரவை = தரிசுநிலம்.]*

**உப்பம்பருத்தி** *uppam-parutti,* பெ. (n.) ***பருத்தி வகை;*** Indian cotton plant, M.sh. Gossypium herbaceum (G.sm.D.I.i. 226). (செ.அக.).

*[உ → உப்பம் + பருத்தி.]*

**உப்பமை-த்தல்** *uppamai-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உப்பு விளைத்தல்;*** to produce salt. (ஆ.அக.).

*[உப்பு + அமை.]*

**உப்பமைப்போர்** *uppamaippōr,* பெ. (n.) ***உமணர்*** (திவா.); salt manufacturers; dwellers in maritime tracts. (செ.அக.).

மறுவ. உப்பளவர், கழியர்; உப்புச் செய்வோர், உப்பாரவர், அளவர்.*]*

**உப்பர்** *uppar,* பெ. (n.) ***உப்பமைப்போர்*** பார்க்க; see *uppamaippōr.* (செ.அக.).

*[உப்பு → உப்பர்.]*

**உப்பரம்** *upparam,* பெ. (n.) ***வயிற்றுப் பொருமல்;*** flatulent distension of the abdomen, tympanites. (செ.அக.).

தெ. உப்பரமு.

*[உப்பு → உப்பரம்.]*

**உப்பரவர்** *upparavar,* பெ. (n.) 1. ***குள முதலிய அகழுந் தெலுங்கர்;*** a Telugu caste who are usually tank and well diggers, and road-workers, and who ordinarily bear the title *mēstiri* 2. ***குறவருள் ஒரு வகுப்பார்;*** a branch of *Kuṟavās* who deal in *karu-vēppilai* and style themselves Chetties. (செ.அக.).

தெ. உப்பர.

*[உ → உப்பரம் → உப்பரவர்.]*

**உப்பரி** *uppari,* பெ. (n.) 1. ***மிகை; மிகுதி;*** excess. 2. ***மேற்படல்; உயர்தல்;*** heightening.

*[உப்பு → உப்பரி.]*

**உப்பரிகாண்(ணு)-தல்** *uppar-i-kāṇ-,* 12. செ.கு.வி. (v.i.) ***அளவு மிகுந்து காணுதல்;*** to swell, increase in quantity, as old raw rice in boiling. (செ.அக.).

க., பட. உப்பரிசு; தெ. உப்பரின்சு

*[உ → உப்பு → உப்பரி + காண்(ணு)-தல். உப்பரி = மேற்படுதல், மிகுதல். உப்பரி - உபரி எனத் திரிந்தது ]*

**உப்பரிகை**[1] *upparigai,* பெ. (n.) ***மேல்மாடம்;*** upper storey. ''ஆடகப்புரிசை யுப்பரிகை'' (மச்சபு. நைமிசா. 2.).

ம. உப்பரிக்க; க. உப்பரிகெ; தெ. உப்பரிக.

*[உ → உப்பரி → உப்பரிகை. உப்பரி = மேற்படுதல், மேற்கட்டடம்.]*

**உப்பல்** *uppal,* பெ. (n.) ***ஊதிப் பருத்தல்;*** distension, flatulence.

க., தெ., து., பட. உப்பு.

*[உ → உப்பு (உப்புதல்) → உப்பல்.]*

**உப்பளநீலம்** *uppalanīlam,* பெ. (n.) ***ஒருவகை நீலமணி;*** variety of sapphire (S.I.I.ii. 204,63). (செ.அக.).

*[உப்பு → உப்பளம் + நீலம்.]*

**உப்பளம்** *uppaḷam,* பெ. (n.) 1. ***உப்புவிளை நிலம்*** (பிங்.); salt-pans. 2. ***கழிநிலம்*** (பிங்.); saline soil. (செ.அக.).

ம. உப்பளம்; க. உப்பள; குட. உப்பாலெ; தெ. உப்பளமு.

*[உப்பு + அளம். அளம் = செறிவு. உப்புச் செறிந்த நிலம்.]*

**உப்பளவர்** *uppaḷavar,* பெ. (n.) ***நெய்தல் நில மக்கள்;*** dwellers in maritime tracts. (ஆ.அக.).

*[உப்பு + அளம் + அர்.]*

**உப்பளவன்** *uppaḷavaṉ,* பெ. (n.) ***உப்பு விளைப்போன்;*** salt-maker.

ம. உப்பளவன்; க. உப்பார.

*[உப்பு + அள(ம்) + அன்.]*

**உப்பளறு** *uppaḷaṟu,* பெ. (n.) ***களிமண்ணும் உப்புமணலுங் கலந்த களர்நிலம்*** (m.m.); soil containing clay and sand impregnated with alkaline matters, generally found along the coasts (செ.அக.).

*[உப்பு + அளறு - உப்பளறு. அளை (சேறு) → அளறு.]*

**உப்பறுகு** *uppaṟugu,* பெ. (n.) ***உவர் நிலத்துள்ள ஒருவகை யறுகு*** (சங்.அக.); species of Bermuda-grass growing in maritime tracts. (செ.அக.).

*[உப்பு + அறுகு ]*

**உப்பனாறு** *uppaṉāṟu,* பெ. (n.) ***கடலிலிருந்து எதிர்த்துப் பெருகிய உவர்நீருள்ள ஆறு*** (அகவசா. 147.); back-water, regarded as a river of salt water. (செ.அக.).

*[உப்பு → உப்பன் + ஆறு.]*

**உப்பாயம்** *uppāyam,* பெ. (n.) ***உப்புவரி;*** salt tax. (S.I.I.ii, 115.). (செ.அக.).

*[உப்பு + ஆயம்.]*

**உப்பாரக்காரன்** *uppāra-k-kāraṉ,* பெ. (n.) ***சுண்ணாம்பு பூசும் வேலைக்காரன்*** (சங்.அக.); one who plasters a wall, who rubs mortar. (செ.அக.).

*[உப்பு → உப்பாரம் + காரன் உப்பு + அளம் → உப்பளம் → உப்பாளம் → உப்பாரம். உப்புவிளைப்போர் கடற்கிளிஞ்சில் சுண்ணாம்பும் விற்றதால், காலப்போக்கில் சொல் இப்பொருள் பெற்றது.]*

**உப்பால்** *uppāl,* பெ. (n.) 1. ***உந்தப் பக்கம்;*** the side near person addressed, intermediate side. 2. ***மேலிடம்;*** upper of further region. "உப்பாலுயர்ந்த உலகம் புகும்" (நான்மணி. 27.). 3. ***முதுகு;*** back.

*[உ + பால்.]*

**உப்பாறு** *uppāṟu,* பெ. (n.) ***காட்டாறு;*** country stream, usu. dry except in the rainy season. (Tinn.). (செ.அக.).

*[உப்பு + ஆறு. உருப்புதல் → உப்புதல் = உலர்தல், விரைந்தோடி வறண்டு போதல்.]*

**உப்பாணி** *uppāṇi,* பெ. (n.) ***உப்புச் சுமத்தல்*** பார்க்க; see *uppu-c-cumattal.* அவன் உப்பாணி தூக்குகிறான். (செ.அக.).

ம. உப்புத்தூக்குதல், உப்புமூட்டை.

*[உப்பு → உப்பாணி.]*

**உப்பி** *uppi,* பெ. (n.) ***செவ்வகத்தி;*** scarlet, flowered cessabame.

*[உருப்பு → உப்பு → உப்பி. உருப்பு = எரிதல், சிவப்பு.]*

**உப்பிசம்** *uppišam,* பெ. (n.) ***உப்பசம்*** பார்க்க; see *uppašam.*

*[உப்பு → உப்பசம் → உப்பிசம் (கொ.வ.).]*

**உப்பிஞ்சி** *uppiñji,* பெ. (n.) ***இஞ்சிவகை;*** a kind of ginger (S.I.I.ii 299). (செ.அக.).

*[உப்பு + இஞ்சி.]*

**உப்பிட்டது** *uppiṭṭadu,* பெ. (n.) 1. ***ஊறுகாய்;*** pickles. 2. ***உப்பிட்டுப் பாதுகாத்த பண்டம்;*** that which is salted and preserved (செ அக.).

*[உப்பு + இட்டது-உப்பிட்டது.]*

**உப்பிட்டவர்** *uppiṭṭavar,* பெ. (n.) ***உணவளித்தவர்;*** one who offered food, help.

*[உப்பு + இட்டவர்.]*

**உப்பிடு-தல்** *uppiḍu-,* 20. செ.கு.வி. (v.i.) ***உப்பிட்ட உணவளித்தல்;*** to furnish food seasoned with salt. உப்பிட்டவரை உள்ளளவும் நினை. (செ.அக.).

*[உப்பு + இடு.]*

**உப்பிதம்** *uppidam,* பெ. (n.) ***கூத்தின் வகை*** (பிங்.); a kind of dance.

*[உப்பு → உப்பிதம்.]*

**உப்பில்லாப்பேச்சு** *uppillā-p-pēccu,* பெ. (n.) ***பயனற்ற உரையாடல்;*** insipid discourse. (செ.அக.).

*[உப்பு + இல்லா + பேச்சு.]*

**உப்பிலாங்கொடி** *uppilāṅgoḍi,* பெ. (n.) ***இண்டங்கொடி;*** a species of stinking swallow-wort. (செ.அக.).

*[உப்பிலாம் + கொடி.]*



உப்பிலாங்கொடி

**உப்பிலி**[1] *upili,* பெ. (n.) ***உப்பில்லாதது;*** that which is without salt. "உப்பிலிப்புழுக்கல்" (சீவக. 2984.). (செ.அக.).

ம. உப்பில, உப்பிலி.

*[உப்பு + இலி.]*

**உப்பிலி**[2] *uppili,* பெ. (n.) 1. ***புலிதொடக்கி*** (மலை.); tiger-stopper. 2. ***இண்டு;*** species of sensitive tree (W.). 3. ***ஈர்கொல்லிக் கொடி*** (மலை.); a species of stinking swallow-wort.

*[உப்பு + இலி.]*

**உப்பிலி**[3] *uppili,* பெ. (n.) ***ஓருர்;*** name of a village.

*[ஒப்பிலி → உப்பிலி. **ஒப்பிலி** பார்க்க, see oppili.]*

**உப்பிலிகம்** *uppiligam,* பெ. (n.) ***கருப்புச் சோளம்;*** black millet.

*[உருப்பு (வேதல்) → உப்பு → உப்புலிகம். எரிந்து கருத்துப் போனாற் போல் கருநிறம் பெற்றதால் கறுப்புச் சோளம் உப்பிலிகம் எனப்பட்டது.]*

**உப்பிலிடு** *uppiliḍu,* பெ. (n.) ***உப்பிட்ட பொருள்;*** pickles, that are salted. (செ.அக.).

*[உப்பு + இல் + இடு.]*

**உப்பிலிப்பானை** *uppili-p-pāṉai,* பெ. (n.) ***உப்பின்றி உண்ணும் கைம்மை நோன்பு;*** observance in which widows in mourning abstain from salted food. (Tinn.). (செ.அக.).

*[உப்பு + இலி + பானை. பாரனை → பானை.]*

**உப்பிலியப்பன்** *uppiliyappaṉ,* பெ. (n.) ***ஒப்பிலியப்பன்*** பார்க்க; see *oppiliyappaṉ* (ஆ.அக.).

*[நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருவிண்ணகரிற் கோயில் கொண்ட திருமால். ஒப்பிலியப்பன் என்பது, ஒப்பில் லாதவனாகிய திருமாலைக் குறித்தது. ஒப்பு + இலி = ஒப்பிலி → உப்பிலி (கொ.வ.). உப்பிலி + அப்பன் கன்னடநாட்டில் இச்சொல் ஒபிலி, ஒபிலியப்பன் எனத் திரிந்துள்ளது. தெலுங் கில் ஒபிளிகான், ஒபிளிகாடு எனத் திரிந்துள்ளது.]*

**உப்பிலியன்** *uppiliyaṉ*, பெ. (n.) ***உப்பமைக்கும் பணியாளன்;*** member of a caste of salt-workers. (செ.அக.).

**க.** உப்பலிக.

*[உப்பளன் → உப்பிலியன் (கொ.வ.).]*

**உப்பிற்குஉறுதி** *uppiṟku-uṟudi*, பெ. (n.) ***கட்டுக்கொடி;*** a creeper, smilax pseudochina.

*[உப்பிற்கு + உறுதி. மருத்துவப்பயன் கருதியது.]*

**உப்பீண்டுவரி** *uppīnduvari*, பெ. (n.) ***உப்பு நிறைந்த கடல்;*** sea, as full of salt. (ஆ.அக.).

*[உப்பு + ஈண்டு + உவரி.]*

**உப்பு**[1] *uppu*, பெ. (n.) 1. ***கடல் நீரை ஆவியாக்கி உணக்கிய படிக வடிவ உவர்ப்புடைய வெண் சிறுகல்*** (குறள். 1302.); salt, alkali. 2. ***கறியுப்பு, வெடியுப்பு, இந்துப்பு, ஓட்டுப்பு, அமரியுப்பு;*** each of five kinds of salt said to be used by alchemists. 3. ***உவர்ப்பு*** (பிங்.); saltness. 4. ***உவர்க்கடல்;*** sea of salt water. "உப்பினிற் கயல் பொறித்துள பதாகையார்" (இரகு. திக்குவி. 125). 5. ***இனிமை;*** sweetness, deliciousness. "கூடலிற் றோன்றிய வுப்பு" (குறள் 1328.). 6. ***மகளிர் விளையாட்டு வகை*** (திவா.); a game of women.

**ம., க., தெ., து.,** பட., **கொர., இரு., குரும்., குட.** உப்பு; **கை.** உபு; **கோ., து.** உப், **கொலா.** சுப, **நா.** சுப்; **கோண்.** ஓவர்; **பர்.** சுப; **கட.** சுப, சுப்பு; **குரு.** பெக்; **மா.** பெக்; **பிரா.** பே.

*[உ → உப்பு. உப்புதல் = உயர்தல், மேலெழும்பித்தோன்றுதல், படுதல்.]*

*உப்பு வயலில் கடல் நீர் ஆவியான பின் மேல் திரண்ட படிகத் துகளின் திரட்சி நோக்கி உப்பு எனப் பெயர் பெற்றது.*

**உப்பு**[2] *uppu*, பெ (n.) 1. ***அன்பு;*** love. 2. ***எல்லை*** (ஆ.அக.); demarcation; border.

*[உ-உப்பு. உணவில் உப்பு சேர்த்தபின் சுவை மிகுதலின் இனிமைப் பொருள் பெறுவதாயிற்று. இனிமைப் பொருள் அன்புப் பொருளிலும், குறிப்பிட்ட அளவுக்கேற்ப உப்பின் சுவை வரையறை பெறுதலின் எல்லைப் பொருளிலும் விரிந்தது.]*

**உப்பு**[3]**-தல்** *uppu-*, 15. செ.கு.வி. (v.i.) 1. ***பருத்தல்*** (வேதா.சூ. 67, உரை); to become big, as a seed; to bloat, puff up, as the abdomen by wind, from indigestion. 2. ***பொங்குதல்;*** to raise, as leaven. (செ.அக.).

**ம.** உப்புக; **க.** உப்பு; **தெ.** உப்பரின்சு, உப்பு; **கோத., துட.** உப்; **து.** உப்புவி.

*[உ → உப்பு → உப்புதல். உப்புதல் = உயர்தல், பருத்தல், வீங்குதல்.]*

**உப்புக்கசனை** *uppu-k-kašaṉai*, பெ. (n.) ***உப்பூறணி*** பார்க்க. (வின்.); see *uppūraṇi*. (செ.அக.).

*[உப்பு + கசனை. கசி → கசனை.]*

**உப்புக்கட்டி** *uppu-k-katti*, பெ. (n.) 1. ***உப்புக்கல்;*** grain of salt. 2. ***சிறுகட்டுக் கொடி*** (மலை); kind of milky medicinal creeper, useful as a remedy for dysentery. (செ.அக.).

*[உப்பு + கட்டி.]*

**உப்புக்கட்டு**[1]**-தல்** *uppu-k-kattu-*, 12. செ.குன்றாவி. (v.t.) ***குழந்தையை முதுகில் தூக்கி விளையாடுதல்;*** to carry a child on one's back and cry out merrily, 'salt for sale' in a game.

*[உப்பு + கட்டுதல். உப்பு மூட்டையை முதுகிற் சுமந்தவாறு பண்டமாற்று வாணிகம் செய்த பழங்காலச் சூழலில் தோன்றிய சொல்லாட்சி யாதலின் குழந்தையை முதுகில் சுமந்து விளையாடும் விளையாட்டைக் குறிததது.]*

**உப்புக்கட்டு**[2]**-தல்** *uppu-k-kattu-*, 5. செ.கு.வி. (v.i.) ***சடுகுடு விளையாட்டிற்கு மணல் குவித்தல்;*** to make a sand goal in the game of "Paliñjadgudu".

*[உப்பு + கட்டு-தல். உப்புதல் = உயர்தல், உப்புக் கட்டுதல், மணலை உயரக் கட்டுதல்.]*

**உப்புக்கடல்** *uppu-k-kaḍal*, பெ. (n) 1. ***உப்பு மிகுதியான கடல்*** (பிங்.); ring-shaped sea of salt water. 2. ***சாக்கடல்;*** the Salt Sea, the old name for the Dead Sea (விவிலி. ஆதி. 14,3). (செ.அக.).

**ம.** உப்புகடல்.

*[உப்பு + கடல்.]*

**உப்புக்கடலை** *uppu-k-kaḍalai*, பெ. (n.) ***உப்பும் மஞ்சட் பொடியும் தூவி வறுத்த கடலை*** (இ.வ.); parched bengal-gram seasoned with salt and turmeric powder. (செ.அக.).

*[உப்பு + கடலை.]*

**உப்புக்கண்டம்** *uppu-k-kandam*, பெ. (n.) ***உப்பூட்டிக் காயவைத்த இறைச்சித்துண்டு அல்லது மீன்;*** piece of salted meat, or salt fish. .(செ.அக.).

*[உப்பு + கண்டம்.]*

**உப்புக்கந்தம்** *uppu-k-kandam*, பெ. (n.) ***உப்புக் கோடு*** பார்க்க; see *uppu-k-kōḍu*. (செ.அக.).

*[உப்பு + கந்தம்.]*

**உப்புக்கரி-த்தல்** *uppu-k-kari-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***உவர்ப்பு மிகுதல்;*** to have an intensely saline taste. 2. ***உப்புலர்த்தல்;*** to dry salt. (செ.அக.).

*[உப்பு + கரி-த்தல்.]*

**உப்புக்கரிநீர்முள்ளி** *uppu-k-kari-nīrmuḷḷi*, பெ. (n.) ***கழுதை முள்ளி*** (L); holly-leaved bears-breech. (செ.அக.).

*[உப்பு + கரி + நீர்முள்ளி.]*

**உப்புக்கல்** *uppu-k-kal*, பெ. (n.) 1. ***உப்புத்துண்டு;*** lump or pinch of salt. கறிக்கு ஓர் உப்புக்கல் வேண்டும். 2. ***ஒருவகைக் கடற்கல்;*** fine-grained grit stone formed by the induration of the upper surface of the sea bed. (Loc.). (செ.அக.).

*[உப்பு + கல்.]*

**உப்புக்கழி** *uppu-k-kaḻi,* பெ. (n.) ***உப்பங்கழி*** பார்க்க; see *uppangaḻi.* (செ.அக.).

*[உப்பு + கழி ]*

**உப்புக்கறி** *uppu-k-kaṟi,* பெ. (n.) ***உப்பிட்டு உணக்கிய கிழங்கு அல்லது பழத்துண்டுகளின் வறுவல்;*** curry of fruits or tubers salted and fried. (சேரநா.).

*[உப்பு + கறி கறி = மிளகு. மிளகிட்டுச் செய்தது.]*

**உப்புக்காகிதம்** *uppu-k-kāgidam,* பெ. (n) ***மரங்களை மெருகிடுவதற்கு உதவும் ஒருவகைத் தாள்;*** sand paper. ***உப்புத்தாள்*** பார்க்க; see *upputtāl.* (செ.அக.).

*[உப்பு + காகிதம்.]*

**உப்புக்காசு** *uppu-k-kāšu,* பெ. (n.) ***பழைய வரிவகை*** (S.I.I. vii, 41); ancient tax. (செ.அக.).

*[உப்பு + காசு.]*

**உப்புக்கீரை** *uppu-k-kīrai,* பெ. (n.) ***கீரை வகை;*** common Indian saltwort. (செ.அக.).

*[உப்பு + கீரை. உவர்ப்புள்ள கீரை.]*

**உப்புக்குஞ்சம்** *uppu-k-kuñjam,* பெ. (n.) ***கருஞ்சீரகம்;*** black cumin.

*[உப்பு + குஞ்சம்.]*

**உப்புக்குட்டி**[1] *uppu-k-kuṭṭi,* பெ. (n.) 1. ***கடற்கரையி லுள்ள ஒருவகை மரம்;*** white mangrove. (m.m.). 2. ***உப்பு மரவை;*** wooden vessel with a lid, for keeping salt. (செ.அக.).

ம. உப்புகுத்தி.

*[உப்பு + குட்டி. குற்றி → குட்டி (சிறியது).]*

**உப்புக்குட்டி**[2] *uppu-k-kuṭṭi,* பெ. (n.) 1. ***சிறுவர் விளையாட்டுகளுள் ஒன்று;*** game of children. 2. ***உப்புக்கட்டு*** பார்க்க; see *uppu-k-kaṭṭu.*

*[உப்புக்கட்டி → உப்புக்குட்டி.]*

**உப்புக்குத்தி**[1] *uppu-k-kutti,* பெ. (n.) ***ஒரு வகைமீன்;*** a kind of fish.

**உப்புக்குத்தி**[2] *uppu-k-kutti,* பெ. (n.) ***பறவை வகை;*** a kind of bird. (W.). (செ.அக.).

*[உப்பு + குத்தி.]*



உப்புக்குத்தி

**உப்புக்குறவன்** *uppu-k-kuṟavaṉ,* பெ. (n.) ***உப்புவிற்குங் குறச்சாதியான்;*** member of a division of the *Kuṟava* caste, trafficking in salt. (செ.அக.).

*[உப்பு + குறவன்.]*

**உப்புக்குறுதி** *uppu-k-kuṟudi,* பெ. (n.) ***கொடுக்காய்ப் புளி;*** sweet babool.

*[உப்புக்கு + உறுதி.]*

**உப்புக்கூர்-த்தல்** *uppu-k-kūr-,* 2. செ.கு.வி. (v.i.) ***உப்புக் கரித்தல்*** (வின்.), to have a saline taste. (செ.அக.).

*[உப்பு + கூர்-த்தல். கூர்த்தல் = மிகுதல் ]*

**உப்புக்கொள்(ளு)-தல்** *uppu-k-koḷ-,* 13. செ.குன்றாவி. (v.t.) ***உப்புக்கட்டு*** பார்க்க; see *uppu-k-kaṭṭu.* (செ.அக.).

*[உப்பு + கொள்(ளு)-தல்.]*

**உப்புக்கோடு** *uppu-k-kōḍu,* பெ. (n.) ***சதுரக் கோடு கிழித்து ஆடும் கிளித்தட்டு விளையாட்டு;*** a game consisting of running through a diagram of squares marked on the ground (Loc.). (செ.அக.).

*[உப்பு + கோடு.]*

**உப்புகை** *uppugai,* பெ. (n.) ***பருத்தல்; வீங்குதல்;*** enlarging, swelling.

*[உப்பு → உப்புகை.]*

**உப்புச்சரக்கு** *uppu-c-carakku,* பெ. (n.) ***உப்பிட்ட பணிகாரம்;*** salted, fried, savoury cakes. (செ.அக.).

*[உப்பு + சரக்கு.]*

**உப்புச்சாறு** *uppu-c-cāṟu,* பெ. (n.) 1. ***கடல் நீர்;*** sea water. (vaisn.). 2. ***அமுதம்;*** nectar produced at the churning of the ocean. உப்புச்சாறு கிளறுவது எப் போதோ என்று கிடக்கிற தேவசாதி" (ஈடு. 1,3,11.). (செ.அக.).

*[உப்பு + சாறு.]*

**உப்புச்சீடை** *uppu-c-cīḍai,* பெ. (n.) ***உப்புச் சுவையுள்ள சீடைப்பணிகாரம்;*** small balls of pastry fried and salted. (செ.அக.).

*[உப்பு + சீடை.]*

**உப்புச்சுமத்தல்** *uppu-c-cumattal,* பெ. (n.) ***ஒருவகை விளையாட்டில் வென்றவனைத் தோற்றவன் முதுகிற் சுமக்கை;*** carrying the winner on one's back, as a penalty of discomfiture in a game. (செ.அக.).

*[உப்பு + சுமத்தல்.]*

**உப்புச்சுன்னம்** *uppu-c-cuṉṉam,* பெ. (n.) ***மருந்து வகை*** (தமிழரசு.); a kind of medicinal drug. (செ.அக.).

*[உப்பு + சுன்னம்.]*

**உப்புச்சோளம்** *uppu-c-cōḷam,* பெ. (n.) ***சோள வகை*** (விவசா. 3.); a kind of maize. (செ.அக.).

*[உப்பு + சோளம்.]*

**உப்புசம்** *uppušam,* பெ. (n.) 1. ***வீக்கம்;*** swelling. 2. ***உப்பசம்*** பார்க்க; see *uppašam.*

*[உப்பு → உப்புதல் → உப்புசம்.]*

**உப்புடாலி** *uppudāli,* பெ. (n.) ***கடல் கொழிஞ்சிச் செடி;*** a medicinal plant, species of citrus - ruella ringins. (செ.அக.). (கொ.வ.).

*[உப்பு + உடலி – உப்புடலி → உப்புடாலி.]*

**உப்புத்தண்ணீர்** *uppu-t-tannīr,* பெ. (n.) 1 ***உப்புநீர்; கடல் நீர் போல் உப்புள்ள நீர்;*** salt, brackish water, opp. to-நல்ல தண்ணீர். 2. ***உப்பு இட்டுக் கலக்கிய நீர்;*** water in which salt is dissolved. (செ.அக.).

**ம.** உப்புநீர்.

*[உப்பு + நீர் ]*

**உப்புத்தரவை** *uppu-t-taravai,* பெ. (n.) ***உவர் நிலம்;*** saline soil. (W.). (செ.அக.).

**க.** உப்புநெல

*[உப்பு + தரவை.]*

**உப்புத்தரை** *uppu-t-tarai,* பெ. (n.) ***உப்புத் தரவை*** பார்க்க; see *upputtaravai.* (செ.அக.).

*[உப்பு + தரை. தரவை → தரை.]*

**உப்புத்தள்ளல்** *uppu-t-tallal,* பெ. (n.) ***பத்தியத்தில் உப்பு நீக்கல்;*** the removal of the salt from diet. de cleridin.

*[உப்பு + தள்ளல் ]*

**உப்புத்தாள்** *uppu-t-tāḷ,* பெ. (n.) ***சொர சொரப்பாக ஆக்கிய தாள்*** (உப்புக் காகிதம்); sand paper. (loc.). (செ.அக.).

*[உப்பு + தாள்.]*

**உப்புத்திரி** *uppu-t-tiri,* பெ. (n.) *மலங்கழிக்க ஏற்றுந்திரி.* (வின்.); twist dipped in a preparation of salt, to serve as a rectal injection for a child. (W.). (செ.அக.).

*[உப்பு + திரி ]*

**உப்புத்தூக்கு-தல்** *uppu-t-tūkku-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***உப்புக்கட்டு***[1] பார்க்க; see *uppu-k-kattu.* (செ.அக.).

*[உப்பு + தூக்கு-தல்.]*

**உப்புநீக்கி** *uppunīkki,* பெ. (n.) ***காட்டு மருக்கொழுந்து;*** a species of mad's love.

*[உப்பு + நீக்கி.]*

**உப்புநீர்** *uppunīr,* பெ. (n.) ***உப்புத்தண்ணீர்*** பார்க்க; see *uppu-t-tannīr.*

*[உப்பு + நீர்.]*

**உப்புப்படு-தல்** *uppu-p-padu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***உப்புவிளைதல்;*** to form as salt by natural process (W.). 2. ***உப்புத்தன்மையடைதல்;*** to become saline. (செ.அக.).

*[உப்பு + படு-தல்.]*

**உப்புப்பண்டம்** *uppu-p-pandam,* பெ. (n.) ***உப்புச் சுவையுள்ள உணவுப் பண்டம்;*** salted food. (செ.அக.)

*[உப்பு + பண்டம் ]*

**உப்புப்பயிர்** *uppu-p-payir,* பெ. (n.) ***உப்பளங்களின் பாத்திகளிலே கடல் நீரைப் பாய்ச்சுவதால் விளைந்த உப்பு;*** crop of salt. (செ.அக.).

*[உப்பு + பயிர்.]*

**உப்புப்பற்று-தல்** *uppu-p-parru-,* 15. செ.கு.வி. (v.i.) ***உவர்பிடித்தல்;*** to become saline, as land. (செ.அக.).

*[உப்பு + பற்று-தல் ]*

**உப்புப்பாத்தி** *uppu-p-pātti,* பெ. (n.) ***உப்பு விளைதற்கிடமான பாத்தி;*** beds in salt-pans. உப்புப் பாத்தியிலே வெள்ளிய உப்பு விற்கும் அளவர் (மதுரைக். 117, உரை.). (செ.அக.).

**ம.** உப்புப்பாத்தி; **க.** உப்புகட்டே.

*[உப்பு + பாத்தி ]*

**உப்புப்பார்-த்தல்** *uppu-p-pār-,* 11. செ.குன்றாவி. (v.t.) ***சுவைபார்த்தல்;*** to try seasoning, as of curry by the taste. (செ.அக.).

*[உப்பு + பார்-த்தல்.]*

**உப்புப்பால்** *uppu-p-pāl,* பெ. (n.) ***ஈன்றணிமையுள்ள தாயின்பால்;*** colostrum, the first milk secreted in the breasts after childbirth. (செ.அக.).

*[உப்பு + பால்.]*

**உப்புப்புல்** *uppu-p-pul,* பெ. (n.) ***உவர் நிலத்துண்டாகும் புல்;*** grass growing on saline soils. (W.). (செ.அக.).

*[உப்பு + புல் ]*

**உப்புப்பூ-த்தல்** *uppu-p-pū-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உப்புண்டாதல்;*** to form, as salt or a lamina. 2. ***உப்புப்படிதல்;*** to form,a coating salt on any surface. 3. ***உடலிலுப்புப் படர்தல்;*** to form, as concretion on the skin, from perspiration (W.). 4. ***உப்பங்காற்றா லிற்றுப்போதல்;*** to crumble, as masonry because of weathering by a salt atmosphere.

*[உப்பு + பூ-த்தல்.]*

**உப்புப்பொரி-தல்** *uppu-p-pori-,* 4. செ.கு.வி. (v.i.) ***உப்புப்பூ-த்தல்*** பார்க்க; see *uppu-p-pū.* (செ.அக.).

*[உப்பு + பொரி-தல்.]*

**உப்புமண்** *uppu-man,* பெ. (n.) 1. ***உவர்நிலம்;*** saline soil, salt earth. 2. ***உடம்பில் உப்புப் பூத்தல்;*** formation of concretion on the skin, from perspiration. (செ.அக.).

**க.** உப்புமண்ணு.

*[உப்பு + மண்.]*

**உப்புமணி** *uppu-mani,* பெ. (n.) 1. ***உப்புமண்*** பார்க்க; see *uppu-man.* (ஆ.அக.). 2. ***சித்தர்கள் பயன்படுத்திய***

*தாகக் கருதப்படும் கல்லுப்பு மணி;* a string of beads as hard of ivory made of salt consolidated by a peculiar process known to siddhar's.

*[உப்பு + மணி.]*

**உப்புமா** *uppumā,* பெ. (n.) 1. ***ஒருவகைச் சிற்றுண்டி;*** salted confection of flour or meal. 2. ***உடம்பிற் பூக்கும் உப்பு*** (பதார்த்த. 634, உரை.); beriberi, producing a sallow colour all over the body. (செ.அக.).

ம. உப்புமா.

*[உப்பு + மா. மாவு → மா.]*

**உப்புமாந்தம்** *uppu-māndam,* பெ. (n.) ***குழந்தைகளுக்கு வயிறு உப்புசத்தாலுண்டாகும் நோய்;*** puffing of the abdomen, a disease of children. (செ.அக.).

*[உப்பு + மாந்தம். மந்தம் → மாந்தம்.]*

**உப்புமாறு-தல்** *uppu-māṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***ஏமாற்றுதல்;*** to cheat. (செ.அக.).

*[உப்பு + மாறு. பண்டமாற்று வணிகரும் உப்புவிற்கும் உமணரும் உப்பின் கொள்ளளவுக்குச் சமமாக நெல், பயறு போன்ற தவசங்களைப் பெறுவது நாளடைவில் ஏமாற்றுவதாகக் கருதப் பட்டதால் இச்சொல் இப்பொருளுக்குரியதாயிற்று.]*

**உப்புமாறு²-தல்** *uppu-māṟu-,* 5. செ.கு.வி. (v.i.) ***உப்பு விற்றல்;*** to sell salt. "உயிருண்டாகில் உப்பு மாறியுண்ணலாம்" (அஷ்டாதச. பிரபந்த. பக். 71.).

*[உப்பு + மாறு-தல்.]*

**உப்புமிளகி** *uppu-miḷagi,* பெ. (n.) ***ஐந்து மாதத்தில் விளையும் நெல்வகை*** (விவசா. 1.); a kind of paddy; maturing in five months. (செ.அக.).

*[உப்பு + மிளகி. மிளகு → மிளகி.]*

**உப்புமூலிகை** *uppu-mūligai,* பெ. (n.) ***உப்புச் சத்துள்ள மூலிகைகள்;*** the herbaseous plants containing the essence of salt. எருக்கு, துத்தி, குப்பைமேனி, வாழை, முருங்கை, ஊமத்தை, நாயுருவி, தென்னோலை, அறுகு, பிரண்டை, எள், பூவரசு.

*[உப்பு + மூலிகை.]*

**உப்புமெழுகு** *uppu-meḻugu,* பெ. (n.) ***உப்பினால் செய்த மெழுகு;*** medicinal wax-like preparation of salve obtained by special process from the common salt.

*[உப்பு + மெழுகு.]*

**உப்புரிசை** *uppuriśai,* பெ. (n.) ***உப்பரிகை*** (ஆ.அக.); upper storey.

*[உப்பு → உப்புரிகை → உப்புரிசை.]*

**உப்புல்** *uppul,* பெ. (n.) ***செங்கள்ளி;*** red species of rate - spurge.)

*[உருப்பு (சிவப்பு) → உப்பு → உப்புல்.]*

**உப்புவாடி** *uppu-vāḍi,* பெ. (n.) ***உப்புக் கொட்டும் மேடை;*** platform on which salt is heaped up (m.m.). (செ.அக.).

ம. உப்புசாப்ப (உப்பு வைக்கும் அறை.).

*[உப்பு + வாடி. வழங்குதல் = புழங்குதல். வழங்கு → தெ.வாடு (பயன்கொள், புழங்கு.). தெ. வாடு → த. வாடு → வாடி. ஒ.நோ. மரவாடி.]*

**உப்புவாணிகன்** *uppu-vāṇigaṉ,* பெ. (n.) 1. ***உப்பு விற்கும் குடியினன்*** (சூடா.); member of a caste of salt vendors. 2. ***உப்பளவர்*** பார்க்க; see *uppaḷavar.*

*[உப்பு + வாணிகன்.]*

**உப்புவாயு** *uppu-vāyu,* பெ. (n.) ***உப்பங்காற்று*** பார்க்க; see *uppaṅkāṟu.*

*[உப்பு + வாயு.]*

**உப்புறை-த்தல்** *uppuṟai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உப்புச் சுவை காணுதல்;*** to be well flavoured with salt. 2. ***உப்புக் கரித்தல்;*** to be over-flavoured with salt. (செ.அக.).

*[உப்பு + உறை-த்தல்.]*

**உப்பூரிகுடிகிழார்** *uppūrikuḍikiḻār,* பெ. (n.) ***உருத்திரசன்மர் தந்தை;*** father of Uruttirasaṉmar. (ஆ.அக.).

*[உப்பூர் + குடி - உப்பூரிகுடி + கிழார்.]*

**உப்பூறணி** *uppūṟaṇi,* பெ. (n.) 1. ***உப்புச் செறிவு;*** being impregnated with salt, as saline soil. 2. ***உவர்நிலம்*** (ஆ.அக.); saline soil. (செ.அக.).

*[உப்பு + ஊறு + அணி.]*

**உப்பெடுத்தல்** *uppeḍuttal,* பெ. (n.) ***நாட்டுக் கோட்டைச் செட்டியார்களில் மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்கு உப்பும், ஒன்பான் வகைத் தவசமும், திருமண உடன்படிக்கை யெழுத ஓலையும் எடுத்துச் செல்லும் சடங்கு;*** ceremony among Nāttukkōttai chettis in which the bridegroom's party carries to the bride's house a basket containing salt and nine kinds of grain together with a palmyra scroll for writing the marriage contract on. (செ.அக.).

*[உப்பு + எடுத்தல்.]*

**உப்பேறி** *uppēṟi,* பெ. (n.) 1. ***உப்புடன் உசிலை இட்டுப் பொரித்த கிழங்கு அல்லது பழ உணங்கல் கறி;*** curry of chopped fruit or tubers well seasoned with salt, pepper and other condiments and then fried in ghee or oil. 2. ***உப்புக்கறி*** பார்க்க; see *uppu-k-kaṟi.* (செ.அக.).

ம. உப்பேறி.

*[உப்பு + கறி - உப்புக்கறி → உப்பேறி = உப்புச்சுவையூட்டுவதால் பெற்ற பெயர். இது சேர நாட்டுப் பண்டம். வறுத்துப் பேரி, வெள்ளுப் பேரி, சேன உப்பேரி, சீனியுப்பேரி, சக்கயுப் பேரி, சருக்கரையுப்பேரி எனப் பல வகைப்படும்.]*

**உப்பை** *uppai,* பெ. (n.) 1. ***ஓரியற்பெயர்;*** a proper name. 2. ***திருவள்ளுவர் உடன் பிறவிகளுள் ஒருத்தி;*** name of one of the reputed sisters of Tiruvalluvar, the author of the *Kural.* "வயலூற்றுக் காட்டிலுப்பை" (தனிப்பா.). (செ.அக.).

*[உப்பு → உப்பை (உயர்ந்தவள், சிறந்தவள் )]*

**உம்**[1] *um,* இடை. (part.) (அ) 1. ***எண்ணும்மை;*** connective particle implying simple connection as in சேரனும் பாண்டியனும். 2. ***எதிர்மறையும்மை;*** negation, as in மறப்பினு மோத்துக் கொளலாகும். 3 ***சிறப்பும்மை;*** speciality whether of superiority or inferiority as in "குறவருமருளுங்குன்றம்" அல்லது புலையனும் விரும் பாத யாக்கை. 4. ***ஐயவும்மை;*** uncertainty as in அவன் வெல்லினும், வெல்வான். 5. ***எச்சவும்மை;*** something understood, as in சாத்தனும் வந்தான். 6. ***முற்றும்மை;*** universality as in தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார். 7. ***தெரிநிலையும்மை;*** declaration of a conviction as in ஆணுமன்று, பெண்ணுமன்று when speaking of a hermaphrodite. 8. ***ஆக்கவும்மை*** (நன். 425.); in addition to as in பாலுமாயிற்று, which signifies that milk is not only food, but also medicine. (ஆ) 1. ***பலர்பாலொழிந்த படர்க்கை நிகழ்கால எதிர் கால முற்று ஈறு;*** ending of 3rd pers. sing of all genders and of the impers. pl. of verbs of the present as well as the future tense.

**உம்**[2] *um,* இடை. (part.) 1. ***ஏவற்பன்மை ஈறு;*** imp.pl. 2. ***ஒரு வியங்கோள் துணை ஈறு;*** opt. auxiliary. "பழுதுறா வகையிய ற்றவும்" (பிரபோத. 10,16). 3. ***எதிர்காலப் பெயரெச்ச ஈறு;*** fut rel.pple. 4. ***விரைவுப் பொருளைக் காட்டும் வினையெச்ச ஈறு;*** vbl. part. indicating immediate occurrence. "நடக்கலு மாங்கே" (கலித். 39,34.). 5. ***ஓர் அசைநிலை;*** poetic expletive. "காமக்கடல் மன்னுமுண்டே" (குறள் 1164). 6. ***மேலெழுதற் கருத்து ஒலிக்குறிப்புச்சொல்;*** "உம்" எழுந்திரு. (உ வ.). onom. expr. signifying ascending.

**ம., க.** உம்.

*[உ → உம். உம்முதல் = பொருந்துதல், மூடுதல், கவித்தல், முழுமையாக உள்ளடக்கிக் கொள்ளுதல்.]*

**உம்**[3] *um,* இடை. (part.) 1. ***உடன்பாட்டைக் குறித்த இடைச் சொல்;*** an expletive denoting 'yes'. 2. ***மேலும் கேட்பதோர் அவாவினை வெளிப்படுத்துமோர் இடைச்சொல்;*** an expletive expressing the desire to know further.

*[உ → உம் ]*

**உம்கூட்டு-தல்** *um-kūttu-,* 15. செ.கு.வி. (v.i.) ***உம் கொட்டு-தல்*** பார்க்க; see *um-kottu*

**உம்கொட்டு-தல்** *umkottu-* 5. செ.கு.வி (v.i.) 1. ***உம்மொலியிட்டுப் பிறர் கூறுவதைக் கேட்டல்;*** to respond by ejaculating 'um' as in listening to a story that is told. 2. ***இசைவு தெரிவித்தல்;*** to say 'yes', agree without questioning.

**தெ.** ஊகொட்டு; **பட.** ஊங்கட்டு; **ஆத்.** உங்கூ.

*[உம் - இசைவு குறித்த ஒலிக்குறிப்பு. உம் + கொட்டு.]*

**உம்பங்காய்** *umbangāy,* பெ. (n.) ***கொட்டையில்லாப் பணங்காய்;*** palmyra fruit without seed. (சா.அக.).

*[உரும்பு → உம்பு + அம் + காய்.]*

**உம்பர்** *umbar,* பெ. (n.) 1. ***மேலிடம்;*** elevated spot, higher place. "மாடத்தும்பர்" (ஞானா. 9,6). 2. ***உயர்ச்சி*** (திவா.); height, elevation. 3. ***வானம்;*** sky. "உம்பருச்சி யிற்.... கதிர்பரப்பு கடவுள்" (திருவிளை. தண்ணீர். 22.). 4. ***தேவலோகம்;*** celestial world, paradise. "உம்பர்க்கிடந்துண்ண" (நாலடி. 37). 5. ***தேவர்;*** celestials, immortals, gods. "ஒலி கடல் சூழுலகாளு மும்பர்தா மே" (திவ். பெரியதி. 7,8,10). 6. ***பார்ப்பார்;*** Brahmans (W.). - கு.வி.எ. (adv.) 1. ***அப்புறம்;*** yonder, on the farther side of. "ஆறைங்காத நம் மகனாட் டும்பர்" (சிலப். 10,42). 2. ***மேலே;*** over head, aloft. "யான் வருந்தி யும்பரிழைத்த நூல்வலயம்" (பெரியபு. கோச்செங். 5.).

*[உ → உம் → உம்பு → உம்பர்.]*

**ம.** உம்பர் (தேவர்); **வ.** உபரி (இ.வே.); *Z.* upairi; *Goth.* ufar; *OG.* obar, *M.G.* uber; *E.* over; *L.* super; *GK.* huper. உம்பர் என்னுஞ்சொல்லைத் தேவரைக் குறிக்கும் போது உம்பு + அர் என்று பிரிக்கலாம். உப்பர் = மேலே. உப்பரி = மேல், மேலே, மேற்பக்கம், மேனோக்கி, மேற்கொண்டு, அப்பால், அப்புறம். இச்சொல் வடமொழியில், வேரில்லாததும், வேற்றுமைப் படுத் தப் படாததும், குறிப்பு வினை யெச்சமாகவும் (adv) முன் னொட்டாகவும் (Pref) ஆளப் படுவதும் ஆன தனிச்சொல். ஆதலால், தென் சொற்றிரிபு என்பது தெளிவு. இந்தியிலுள்ள ஊப்பர் என்னுஞ்சொல், அம்மொழிக்கு நேர் மூலமான சூரசே னிப் பிராகிருதத்திலும், பெரும்பாலும் உப்பர் என்று வழங்கி யிருத்தல் வேண்டும். அதிலிருந்து இலத்தீனத்திற்குச் சென்று சுப்பெர் (super) என்று திரிந்தது. சொற்களின் உயிர்முதல் இங்ஙனம் சகர மெய்யேறுவது இயல்பே. ஒ.நோ: உதை → சுதை (உதைக்கும் ஆ) உருள் → சுருள். உலவு → சுலவு. உவணம் → சுவணம் உழல் → சுழல். Super என்னும் இலத்தீன் சொல், மேலுள்ள, மேற்பட்ட, மேலை, மேனோக்கிய, மேற் செல்லும், மேற்கொள்ளக்கூடிய, மேனோக்கான, மேலான என்னும் குறிப்புப் பெயரெச்சப் பொருள்களிலும்; மீது, மேல், மேலே, மேலாக, மேனோக்காக, மேனோக்கி, மேலும், மேற் பட்டு, மேற்கொண்டு, அதிகமாக, அப்பால், அப்பாற்பட்டு, அப்புறம் என்னும் குறிப்பு வினையெச்சப் பொருள்களிலும் முன்னொட்டாகவும் அடை சொல்லாகவும் வழங்கும். *Supera-supra, above. superabilis, It* superabile; *OF, E.* superable, Superaddo; *E.* superadd, superbus, *E* superb, Supercilious, *E.* supercilious, with raised eyebrows, Superficies, *E* superfice, Superfluus, *E* Superfluous, Super-humanus; *E* Superhuman, Superior; *It* superiore, *Sp Pg, OF, E.* superior, Supernus, *It., Sp., Pg.* superno; *OF* superne; *E* supern, Superscribo, *E.* superscribe, Supremus, *E.* supreme, Super என்னும் இலத்தீனச் சொல்லின் பகரம் சில கிளைமொழிகளில் வகரமாக மாறுகின்றது. *L* superanus, *It* soprano, sovrano, *Sp Pg* soberano, *MDU* soferein, sov(e)rein, *OF* severain, souverein, *mod, F* souverain, *E* sovereign; *E* soprano - the highest kind of female voice, *Sp* sobrecargo, *E* supercargo, person in merchantship managing sales etc, of cargo Super என்னும் இலத்தீன முன்னொட்டு

பிரெஞ்சிலும் அதன் வழியாக ஆங்கிலத்திலும் Sur என்று தொக்கும் - வழங்கும். (எ.டு.) surplus, surround, surcharge, surveillance. Sur என்பது Sir என்றும் திரியும். (எ.டு.) surloin - sirloin supperloin. Sur என்பது Su என்றும் குறுகும். (எ.டு.) sur(r), sum, upward Super என்னும் இலத்தீனச் சொல் கிரேக்கத்தில் huper என்று திரிந்துள்ளது சகர முதற்சொற்கள் கிரேக்கத்தில் ககர முதலாகத் திரிதல் இயல்பே.

| இலத்தீனம் | கிரேக்கம் | ஆங்கிலம் |
|---|---|---|
| sex | hex | six |
| septem | hepta | seven |
| semi | hemi | same (Goth) |
| similis | homos | sama (ON) |
| somnus | hupnos | (slup) |

ஆங்கிலத்தில் huper என்னும் கிரேக்கச் சொல் hyper என்று திரியும் (எ டு ). hyper bole, hypereltie, hypergamy, hypermetric, hupermetropia, hyperphysical, hypertension, hypertrophy.

உம்பர் என்னும் சொல் இலத்தீனத்திற்கும் அப்பாற்பட்ட செருமானியக் குடும்ப மொழிகளில் கிரேக்கத்திலும் மிகத்திரிந் திருப்பினும், சகர மெய்ம் முதல் கொள்ளாது தமிழ்ச் சொல்லை ஒருபுடை யொத்து uber, up என்று இருவேறு வடிவிலும் அவற்றின் மேலுந்திரிந்தும் வழங்குவது, வரலாற்றுத் தொடர் பில் மிகக் கவனிக்கத்தக்கது *Uber: OHG.* uber (adv) ubin. (prep.); *MHG.* uber; *G.* uber, ober, Goth. ufar (prep. & adv.), *OS* obar; *OMG* obar; *MG.* ober; *OFris.* over, *MDU, MLG, DU.LG.* over; *D.* over; *OE* ofer, *SW.* ofver, *ON.* yfer. உகரத்திற்கு ஒகர ஓகாரமும் பகரத்திற்கு வகரமும் வகரத்திற்கு f உம் இன வெழுத்துகளாதலால் மேற்குறித்த சொல்லெல்லாம் ஒன்றோ டொன்று தொடர்புடையன. above - என்னும் ஆங்கிலச் சொல் a + be + ufan - என்னும் முச்சொல் கூட்டு. அன் (மேல்) on - an - a. பூ > *Skt*bhu-*E*-be பூத்தல், தோன்றுதல், உண்டாதல், உண்டாயிருத்தல் ''பூத்தலிற் பூவாமை நன்று'' (நீதிநெறி. 6.). புகு → பொகு → பொகில் = அரும்பு புகு → பூ உம்பு upa → ufa → uf (ufan ). இங்ஙனம் ''பல செருமானியக் கூட்டுச் சொற்களின் உறுப்பாகத் தமிழ்ச் சொற்கள் உருத்தெரியாது திரிந்து பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. செருமானியம் என்பது தியூத் தானியம் (Teutonic). வட செருமானியம், கீழைச் செருமானியம், மேலைச் செருமானியம் எனச் செருமானியப் பெருங்குடும்பம் முச்சிறு குடும்பங்களாகப் பிரிக்கப்படும். ஆங்கிலம் மேலைச் செருமானியத்தைச் சேர்ந்தது. கோதியம் (Gothic) கீழைச் செருமானியம். காண்டினேவியம் (Scandinavian), வட செருமானியம். பல செருமானியச் சொற்கள் ஐரோப் பாவின் தெற்கில் வழங்கும் இத்தாலியச் சொற்களிலும் கிரேக் கச் சொற்களிலும் தமிழுக்கு மிக நெருக்கமாயிருக்கின்றன. *UP· OE* upp, up, *OFris* up, op, *OL., Fr* up; *Mdu* up, op; *Os* up; *MLG, LG* up, on, upp; *Norw* upp; *MSW* up, op; *SW* upp; *Du.* op; *Da.* Op, *N., Frish* ap; *WFRISH* op; *Goth* iup; *OHG.* uf; *MHG.* uf, ouf; *G* auf.

உம்பு → உப்பு → உப் → உவ். தென்கிழக்கைரோப்பாவை யடுத்த மேலையாசியாவினின்று வந்ததாகத் தெரிகின்ற கீழை யாரியம், ஈரானியம், இந்தியம் என இரு கிளைகளுள்ளது ஈரானியத்தின் முதுநிலை செந்து (Send). புதுநிலை பாரசீகம் (Persian). இந்தியத்தின் முதுநிலை வேதமொழி, புதுநிலை சமற் கிருதம். உம்பர் → உப்பைரி (செந்து) → உப்பரி (வேத மொழி).

இத்தாலியச் சொற்போல் சகரமெய்ம்முதல் பெறாமலும், கிரேக் கச் சொற்போல் முதலாகத் திரியாதும், உகர முதலதாகவே தமிழ்ச் சொற்போலும் ஒருசார் செருமானியத்தை யொத்தும், கீழையாரியச் சொற்கள் வழங்குவது கவனிக்கத்தக்கது. ஆரிய வல்லினம் தமிழ் வல்லினத்தை நோக்கக் கடியனவாதலால் *Upari, upairi* என ஒற்றைப் பகரத்தொடு குறிக்கப்படும் ஆரியச் சொற்கள் தமிழ் ஒலிக்கேற்ப இரட்டைப் பகரத்தோடு குறிப்பிட் டன என அறிக.

குமரி நிலத் தமிழினின்று திரவிடமும், திரவிடத்தினின்று பிராகிருதமும், பிராகிருதத்தினின்று ஆரியமும் திரிந்திருத்த லால் வேதமொழி திரிமொழியேயன்றி தமிழ்போல் இயன் மொழியன்று. ஆதலால், உப்பரி என்னும் வேதமொழிச் சொல் உப்பர் என்னும் தென் சொற்றிரிபே யென்பது தெரிதரு தேற்றம்.

Upariya, to go upwards. Upari sailam gam, to go over the mountain.Sahasram satani upari castaw 1000 and 800 in addition. Upari payah pibet, he must drink milk after wards. Upary upari sarvesam at is that, he stood at the very head of all at, manam tasya upari ksiptva, having thrown himself upon him, mamopari vikaritatih, changed in feeling with regard to me Putrasyopari kruddhah, enraged towards his son Muhūrtad upari, after a minute, Uparikuti, an upper room, upary upari, higher and higher, replatedly, continuously (R.V) இவ்வெடுத்துக் காட்டுகளினின்று, வட மொழி உப்பரிச் சொல்லாட்சி தென்மொழி உம்பர்ச் சொல் லாட்சியை யொத்திருப்பதைக் காணலாம். அம்பர், இம்பர், உம்பர், எம்பர் எனச் சுட்டு வினாச் சொற்கள் மட்டுமின்றி, இடக்கர், இடங்கர் எனப் பிறசொற்களும் ''அர்'' ஈறு பெற்றி ருப்பதால், super, hyper, uber, ufar, over.. .. .. என்பன up, upper. என்னும் பிற்காலச் சொற்போல் உயர்தரச் சொல் (Comparative term) அல்ல. உப்பரி, உப்பைரி என்னும் வடிவுக ளையும் நோக்குக. (செல்வி 77, செப். 21,22.).*]*

**உம்பர்காட்டிளங்கண்ணனார்** *umbar-kāṭṭilan-kaṇṇaṉār,* பெ. (n.) ***கடைச் சங்கமருவிய காலப் புலவர்;*** name of a poet of later 'Sangam age'.

*[உம்பல் → உம்பர் + காடு + இளங்கண்ணன் + ஆர். உம்பல் = யானை.]*

**உம்பர்கோன்** *umbar-kōṉ,* பெ. (n.) ***கடவுள் தலைவர், இந்திரன்;*** Indira, the lord of the celestials. ''உம்பர் கோனு முலகேழும் வந்தீண்டி வணங்கும்'' (திவ். பெரியதி. 5,4,5).

ம. உம்பர்கோன்.

*[உம்பர் + கோன்.]*

**உம்பர்நாடு** *umbar-nāḍu,* பெ. (n.) ***தேவ உலகம்;*** world of the gods, heaven.

*[உம்பர் + நாடு.]*

**உம்பர்நாயகன்** *umbar-nāyagaṉ,* பெ. (n.) ***இந்திரன்;*** Indiran.

*[உம்பர் + நாயகன்.]*

**உம்பரம்** *umbaram,* பெ. (n.) 1. ***மேலுலகம்;*** heaven. 2. ***வானம்;*** sky.

**உம்பராகம்** *umbarāgam,* பெ. (n.) ***ஆத்திமேற் புல்லுருவி;*** parasitic plant found grown on mountain ebony tree.

**உம்பரார்** *umbarār,* பெ. (n.) ***தேவர்;*** celestials. "உம்ப ரார்க்கு முறைப்பருந் தகைய ரானார்". (சீவக. 1678.).

*[உம்பர் + ஆர்.]*

**உம்பரான்**[1] *umbarāṉ,* பெ. (n.) ***தேவருலகத்துப் பெற்றம்; காமதேனு*** (வின்.); cow of the celestial world. (செ.அக.).

*[உம்பர் + ஆன். ஆ → ஆன். (பெற்றம்.)]*

**உம்பரான்**[2] *umbarāṉ,* பெ. (n.) ***உயர்நிலையிலிருப்ப வன்;*** person in high state, one in exalted position. "உவப்பி னும்பரான்" (கந்தபு. மாயைப். 33). (செ.அக.).

*[உம்பர் + ஆன். (ஆ.பா.ஈறு).]*

**உம்பருலகு** *umbarulagu,* பெ. (n.) ***தேவருலகம்;*** world of the Gods. "கற்போர்.. உம்பருலகாள்வர்" (திருவா லவா. பயன்மு. 5). (செ.அக.).

*[உம்பர் + உலகு.]*

**உம்பரூர்** *umbarūr,* பெ. (n.) ***பொன்னாங்காணி;*** an edible plant bearing white flowers. (சா.அக.).

*[உம்பர் + ஊர்.]*

**உம்பல்**[1] *umbal,* பெ. (n.) ***குமிழ்*** (மலை.); coomb teak.

*[உம் → உம்பு → உம்பல்.]*

**உம்பல்**[2] *umbal,* பெ. (n.) 1. ***எழுச்சி*** (பிங்.); rising. 2. ***யானை*** (உயரமான விலங்கு); elephant. "யானைக்க மரரும்பல்" (திருவள்ளுவ. மா. 36). 3. ***வலிமை*** (திவா.); strength.

*[உம் → உம்பு → உம்பல். (வே.க. 32).]*

**உம்பல்**[3] *umbal,* பெ. (n.) ***வழிப்பிறந்தோன்; பின்னோன்;*** descendant. "நல்லிசைச் சென்றோரும்பல்" (மலைபடு. 540).

*[உம்பு → உம்பல். கொடிவழியில் மேற்றொடரும் பிறங்கடை பின்னோனாதலின் உம்பல் எனப்பட்டது. (வே.க. 37).]*

**உம்பளச்செய்** *umbaḷa-c-cey,* பெ. (n.) ***செய்த ஊழியத் துக்காக விடப்பட்ட நிலம்;*** land granted for services rendered. "மடுத்தகுடி அம்பலத்தா ரும்பளச்செய் யவ்வ ளவும்" (சரவண. பணவிடு. 186). (செ.அக.).

*[உம்பளம்[1] + செய்.]*

**உம்பளம்**[1] *umbaḷam,* பெ. (n.) 1. ***மானியநிலம்;*** land granted rent-free for the performance of service. (Loc.). 2. ***பரிசு;*** gift. (ஆ.அக.). (செ.அக.).

ம. உம்பளம்; க. உம்பணி, உம்பழி, உம்பழிகை, உம்புழி, உம்மழி; து. உம்பொளி; தெ. உம்பொளமு, உம்பளமு, உம்பளிக, உம்பன்.

*[உண்பு + அளி - உம்பளி → உம்பளம். உண்பதற்காக அல்லது உணவுப் பொருளுக்காக அளிக்கப்பட்ட இறையிலி நிலம் உம்பளி எனப்பட்டது.]*

**உம்பளம்**[2] *umbaḷam,* பெ. (n.) ***உப்பளம்;*** salt pan. "உம்பளந் தழீஇய வுயர்மண நெடுங்கோட்டு" (மணிமே. 24,27). (செ.அக.).

*[உம்பு + அளம் - உம்பளம். உம்புதல் = மேலெழுதல், பொங்கு தல். அள் → அளம் = ஏதேனும் பொருள் செறியும் இடம். பொரிந்து மேலெழும் இயல்பினால் உப்புக்கு உம்பு எனும் பெயர் தொடக்கத்தில் அமைந்தது பின்னர் உம்பு → உப்பு என வலித்தது ]*

**உம்பன்** *umbaṉ,* பெ. (n.) 1. ***உயர்ந்தோன்;*** pre-eminent being. "உம்பரீச ரும்பன்" (ஞானா. பாயி. 7,4.). 2. ***கடவுள்;*** god. "நீலமேனி உம்பனை" (காஞ்சிப். அந் தர்வே. 32).

*[உம்பு + அன். உம்பு = உயர்வு.]*

**உம்பி** *umbi,* பெ. (n.) ***உன் தம்பி;*** he who was born after you, your younger brother. "உம்பியெம்பியென்று" (திவ். பெரியதி. 5,8,1). (செ.அக.).

*[உம் + பின் - உம்பின் → உம்பி. பின் = பின் பிறந்தவன், தம்பி.]*

**உம்பிடிக்கோல்** *umbiḍi-k-kōl,* பெ. (n.) ***நிலவளவு கோல் வகை;*** a standard measuring rod used for measuring lands. (Rd.). (செ.அக.).

*[உம்பன் → உம்பனி → உம்பிளி → உம்பிடி + கோல்.]*

**உம்பிலாதி** *umbilādi,* பெ. (n.) ***உம்பிலிக்கொடி*** பார்க்க; see *umbili-k-koḍi.* (சா.அக.).

**உம்பிளிக்கை** *umbiḷi-k-kai,* பெ. (n.) ***உம்பளம்*** பார்க்க; see *umbaḷam.*

க. உம்பழிகெ; தெ. உம்பளிக; து. உம்பொளி.

*[உம்பு + அளம் - உம்பளம் → உம்பளக்கை → உம்பிளிக்கை.]*

**உம்பு** *umbu,* கு.வி.எ. (adv.) ***மேலே;*** up a high(er) place, position, degree, amount, value.

*[உ → உம் → உம்பு. (மு.தா. 339).]*

**உம்மங்காய்** *ummaṅgāy,* பெ. (n.) ***கொட்டையில்லாப் பனங்காய்.*** (யாழ்ப்.); seedless palmyra fruit. (செ.அக.).

*[உம் → உம்மி + காய் - உம்மிக்காய் → உம்மக்காய் → உம்மங்காய். உம்மி = மேற்பற்றுள்ளது, உமிபோல்வது, உள்ளீடில்லாதது.]*

**உம்மச்சு**[1] *ummaccu,* பெ. (n.) ***உம்மிசம்*** பார்க்க; see *ummišam.* (செ.அக.).

தெ. ஒம்மத்சு.

**உம்மச்சு**[2] *ummaccu,* பெ. (n.) ***கம்பியிழுக்கும் சட்டம்;*** wire - drawer's plate.

தெ. கம்மத்சு.

*[உம் = கூடுதல், பொருத்துதல். உம் + அச்சு - உம்மச்சு.]*

**உம்மணாமூஞ்சி** *ummaṇā-mūñji,* பெ. (n.) 1. ***தாராளமா கப் பேசத் தெரியாதவன்;*** one who is unable to speak

freely. 2. ஊக்கமில்லாத முகத்தினன்; sullen, sulky person. (Vul.). (செ.அக.).

*[உம் - உதடுகள் மூடிய நிலையில் பேசாமலிருக்கும் ஒலிக் குறிப்பு. உம் → உம்மணம் + மூஞ்சி முகம் → மூஞ்சி.]*

**உம்மம்** *ummam*, பெ. (n.) 1. ***முத்தம்;*** kiss. 2. ***தொங்கல்;*** fringe, tassel. (சேரநா.).

ம. உம்மம், க. உம்மு, மால். சுங்வெ.

*[உம் → உம்மம்]*

**உம்மரப்படி** *ummarappadi*, பெ. (n.) ***வாசற்படி;*** threshold. (சேரநா.).

ம. உம்மரப்படி.

*[உம்பரம் → உம்மரம் + படி.]*

**உம்மரப்பல்** *ummarappal*, பெ. (n.) ***முன்பல்;*** fore-tooth.

ம. உம்மரப்பல்லு.

*[உம்பரம் → உம்மரம் + பல்.]*

**உம்மரம்** *ummaram*, பெ. (n.) 1. ***வாசற்காலின் மேற்ப லகை;*** upper timber of a door-frame. 2. ***வாசற்படி;*** front of a house, door - way threshold. 3. ***வாசற்காலின் கீழ்ப்பலகை;*** lower timber of a door-frame.

ம. உம்மரம்.

*[உ → உம் → உம்மரம். ummara > Skt. umbara.]*

**உம்மளம்** *ummaḷam*, பெ. (n.) ***உப்பளம்;*** salt pan.

*[உப்பு → உம்பு → உம்பளம் → உம்மளம் (கொ.வ.).]*

**உம்மா** *ummā*, பெ. (n.) ***அம்மா;*** mother. Ar. umma.

*[அம்மா → உம்மா (கொ.வ.).]*

**உம்மாச்சி** *ummācci*, பெ. (n.) ***பெண்தெய்வம்;*** Goddess. உம்மாச்சி கும்பிடு (பிரா.வ.).

*[அம்மை → உம்மை + ஆச்சி - உம்மாச்சி. ஆத்தாள் → ஆத்தி → ஆச்சி.]*

**உம்மாண்டி** *ummāṇḍi*, பெ. (n.) 1. ***பூச்சாண்டி;*** bug bear. (J.). 2. ***வெருட்டுஞ் சொல்;*** frightening word. (செ.அக.).

ம. உம்மாக்கி.

*[உம் - அச்சுறுத்தும் ஒலிக்குறிப்புச் சொல். உம் + ஆண்டி - உம்மாண்டி = ஆண்டிக் கோலத்தில் வருபவன். பேசாமல் பதுங்கிவரும் பகைவிலங்கு போன்றவன் என்பது குறிப்புப் பொருள்.]*

**உம்மி** *ummi*, பெ. (n.) ***காய்ந்தது; உலர்ந்தது;*** dried.

*[உல் → உம் → உம்மி.]*

**உம்மிசம்** *ummiśam*, பெ. (n.) ***வயிரக்கல் பதிக்க அமைத்த நகைக் கட்டடம்;*** groove in the framework, of a jewel in which stones are to be set. (Loc.). (செ.அக.).

தெ. ஒம்மத்சு.

*[உம் = பொருத்துதல். உம் → உம்மிதம் → உம்மிசம். (கொ.வ.).]*

**உம்மியம்** *ummiyam*, பெ. (n.) 1. ***பிறவி நஞ்சு*** (சங்.அக.); mineral poison. 2. ***நஞ்சு விளையும் நிலம்.*** (ஆ.அக.); poisonous land. (செ.அக.).

**உம்மு¹-தல்** *ummu-*, 5 செ.கு.வி. (v.i.) ***கூடுதல்; இணைதல்; உடனிருத்தல்; பொருந்துதல்; ஒட்டுதல்; ஒத்தல்;*** to join, fix together, mix, mingle.

*[உ → உம் → உம்மு.]*

ம., க. உம்.

''உம்'' என்னும் சொற்குக் கூடுதற் பொருள் இருத்தலாலேயே அது இன்றும் எண்ணுப் பொருளிடைச் சொல்லாக வழங்குகின்றது. (எ.டு ) அறமும் பொருளும், இன்பமும் வீடும், வந்தும் போயும். எண்ணும்மை இடைச் சொல் பல பொருள்களை அல்லது சொற்களை ஒன்று சேர்த்தல் காண்க. உம்மிடைச் சொற்குக் கூடுதற் பொருளிருப்பதை இருவகைச் சிறப்பும்மைக் கும் பகரமாக (பதிலாக)க் கூட என்னும் சொல் ஆளப்பெறின், பொருள்களை அல்லது சொற்களை ஒன்று சேர்த்தல் காண்க. உம்மிடைச் சொற்குக் கூடுதற் பொருளிருப்பதை, இருவகைச் சிறப்பும்மைக்கும் பகரமாக (பதிலாக)க் கூட என்னும் சொல் ஆளப்பெறின் பொருள் மாறாதிருப்பதாலும் அறியலாம். (எ.டு.) புலவர்க்கும் தெரியாப் பொருள் = புலவர்க்கும் கூடத் தெரியாத பொருள். புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை=புலையன் கூட விரும்பாப் புன்புலால் யாக்கை. யாம், நாம், நீம், தாம் முதலிய மூவிடப் பெயர்களின் பன்மையுணர்த்தும் மகரவொற்றும், உம்மிடைச் சொற் குறிப்பே. (வே.க. 38, த.ம.4.)

**உம்மு²-த்தல்** *ummu-*, 5. செ.கு.வி. (v.i.) ***காய்தல்;*** to become dry.

*[உல் → உம் → உம்மு.]*

**உம்மெனல்** *ummenal*, பெ. (n.) 1. ***உடன்பாடு, சினம் முதலியவற்றின் ஒலிக்குறிப்பு;*** utterance of an interj. sound 'um' expressive of assent, anger or threat. 2. ***ஓர் ஒத்தொலித்தலோசை;*** onom. expr. denoting the sound of bubbling streams, pattering of rain, murmuring of the wind. உம்மென்றெழு மருவித்திரள்'' (தேவா. 244.3). (செ.அக.).

*[உம் + எனல்.]*

**உம்மை¹** *ummai*, பெ. (n.) ***உம்மெனிடைச் சொல்;*** part. உம். ''உம்மை எட்டே'' (நன். 425.). (செ.அக.).

*[உம் → உம்மை.]*

**உம்மை²** *ummai*, பெ. (n.) 1. ***முற்பிறப்பு;*** birth previous to the present one. ''உம்மை வினை வந்துருத்த லொழி யாது'' (மணிமே. 26, 32). 2. ***மறுமை;*** life beyond the grave, existence after the present life. ''உம்மை யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்'' (நாலடி. 58.). (செ.அக.).

*[உ → உம் → உம்மை. ''உம்'' எனும் முன்மைச்சுட்டு காலமுன், இடமுன் என்னும் இருவகையினும் முன்னோக்கும் பின்னோக்கும் கொண்டது. எனவே, முற்பிறப்பும் மறுபிறப்பும் குறித்தது.]*

**உம்மைத்தொகை** *ummai-t-togai,* பெ. (n.) ***'உம்' என்பது தொக்க தொகை.*** (நன். 368. உரை); (Gram.) an elliptical compound in which the conj. part. 'உம்' is understood, as இராப்பகல். (செ.அக.).

*[உம் → உம்மை + தொகை.]*

**உம்மையெஞ்சணி** *ummai-y-eñjaṇi,* பெ. (n.) ***அணி வகையுளொன்று;*** a kind of rhetoric.

*[உம்மை + எஞ்சு + அணி.]*

**உம்வரம்** *umvaram,* பெ. (n.) ***மேல்வாயிற்படி.*** (சங். அக.); upper timber of a door frame. (செ.அக.).

*[உம் = உயர்வு, மேல். உம் + (வாரம்) வரம்.]*

**உமட்டியர்**[1] *umaṭṭiyar,* பெ. (n.) ***உமணக் குலத்துப் பெண் மக்கள்;*** women of the Umaṇ caste. "உமட்டிய ரீன்ற ...புதல்வரொடு" (சிறுபாண். 60). (செ.அக.).

*[உம்மளம் → உம்மளன் → உம்மணன் → உமணன் → உமணத்தி → உமட்டி + அர்.]*

**உமட்டியர்**[2] *umaṭṭiyar,* பெ. (n.) ***நுளைச்சியர்*** (அக.நி.); fisher-women. (செ.அக.).

*[உமணத்தி → உமட்டி + அர். உப்பு விளைப்பவரே மீனவராகவும் இருந்தமையை இச்சொல் காட்டுகிறது.]*

**உமண்** *umaṇ,* பெ. (n.) 1. ***உப்பமைப்போர் குலம்*** (நன். 210. மயிலை.); the caste of salt-makers. 2. ***உப்பு மண்;*** saline soil. 3. ***உப்பு;*** salt. (செ.அக.).

*[உமணன் → உமண். ஒ.நோ. பாணன் → பாண்.]*

**உமண்பகடு** *umaṇ-pagaḍu,* பெ. (n.) ***உப்பு வாணிகரது மூட்டை சுமந்து செல்லும் எருது*** (தொல்.பொருள். 18. உரை); pack-ox carrying salt. (செ.அக.).

*[உமண் + பகடு.]*

**உமணத்தி** *umaṇatti,* பெ. (n.) ***உமணப் பெண்.*** (வின்.); woman of the caste of salt makers. (செ.அக.).

*[உமண் + அத்தி.]*

**உமணத்தியர்** *umaṇattiyar,* பெ. (n.) ***உப்பு விற்றிடும் மகளிர்*** (ஆ.அக.); women of the salt sellers caste.

*[உமண் + அத்தி + அர்.]*

**உமணர்** *umaṇar,* பெ. (n.) ***உமணன்*** பார்க்க. (ஆ.அக.); see *umaṇaṉ.*

*[உமண் + அர்.]*

**உமணன்** *umaṇaṉ,* பெ. (n.) 1. ***உப்பமைக்கும் குலத்தினன்*** (திவா.); member of the ancient caste of salt makers. 2. ***உப்புவாணிகன்;*** dealer in salt. "பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" (பெரும்பாண். 65). (செ.அக.).

*[உம்மளம் → உம்மணம் → உம்மணன் → உமணன்]*

**உமது** *umadu,* பெ. (n.) 1. ***உம்முடைய;*** that which belongs to you, yours. 2. ***உம்மை;*** yourself.

*[உம் + அது - உமது.]*

**உமர்**[1] *umar,* பெ. (n.) ***உம்மவர்;*** your friends and relations. "உமர் கூறுநிதி கொணர்ந்து" (திருக்கோ. 268). (செ.அக.).

*[உம் + அவர் + உம்மவர் → உமர்.]*

**உமர்**[2] *umar,* பெ. (n.) 1. ***குதிர்;*** clay receptacle for grain. (Loc.). 2. ***இகழ்ச்சிச் சொல்;*** a term of contempt. (Tinn.). (செ.அக.).

*[உ → உம் → உமர் = உயரமாய் இருப்பது, உயர்த்துவது போன்று பழித்தல்.]*

**உமரி** *umari,* பெ. (n.) 1. ***ஒரு பூண்டு*** (மலை.); marsh-samphire. 2. ***பவளப்பூண்டு;*** species of glasswort. 3. ***நத்தை;*** snail. (வின்.). (செ.அக.).

ம. உமரி.

*[உம் → உமரி.]*

**உமரிக்காசு** *umari-k-kāsu,* பெ. (n.) ***பலகறை;*** cowry used as money. (செ.அக.).

*[உமரி + காசு.]*

**உமரிக்கீரை** *umari-k-kīrai,* பெ. (n.) ***கோழிப் பசளை;*** sea-blite.

*[உமரி + கீரை.]*

**உமரிச்சாரக்கட்டி** *umari-c-cāra-k-kaṭṭi,* பெ. (n.) ***உமரியுப்பின் கட்டி;*** a lump of salt wort, soda. (சா.அக.).

*[உமரி + சாரம் + கட்டி.]*

**உமரிச்சாரம்** *umari-c-cāram,* பெ. (n.) ***உமரிப் பூண்டினின்று எடுக்கும் சத்து;*** saltwort soda obtained from the plant Umari. (சா.அக.).

*[உமரி + சாரம். சாறு → சாறம் → சாரம்.]*

**உமரிச்சாறு** *umari-c-cāṟu,* பெ. (n.) ***உமரியிலையின் சாறு;*** juice of the leaves of the saltwort plant. (சா.அக.).

*[உமரி + சாறு.]*

**உமரித்தாமிரம்** *umari-t-tāmiram,* பெ. (n.) ***கருஞ் சிற்றகத்தி;*** a black variety of sasbane. (சா.அக.).

*[உமரி + தாமிரம்.]*

**உமரிப்பூடு** *umari-pūḍu,* பெ. (n.) ***உமரி*** பார்க்க; see *umari.* (சா.அக.).

*[உமரி + பூடு. பூண்டு → பூடு.]*

**உமரியுப்பு** *umari-y-uppu,* பெ. (n.) 1. ***உமரிச் செடியைக் கொளுத்திய சாம்பல்;*** ash obtained from burning the plant (marsh-samphire). It is an alkali or saltwort soda and is used as a mordant in medicine. 2. ***அமுரியுப்பு;*** uric salt. (சா.அக.).

*[உமரி + உப்பு.]*

**உமல்** *umal,* பெ. (n.) 1. ***ஓலைப்பை;*** long bag of palmyra leaves or of rushes. (J.). 2. ***ஓலைக் கூடை; மீன் பிடிக்கப் பயன்படுத்தும் பனையோலைக் கூடை;*** basket made of palmyra-leaf. (செ.அக.).

ம. உமல்.

*[உம் → உமல்.]*

**உமலகம்** *umalagam,* பெ. (n.) ***அரிதாரம்;*** orpiment. (W.). (செ.அக.).

*[உமல் → உமலகம்.]*

**உமலிச்சாரம்** *umali-c-cāram,* பெ. (n.) ***உமரிச்சாரம்*** பார்க்க; see *umari-c-cāram.* (சா.அக.).

*[உமலி → சாரம்.]*

**உமற்கடம்** *umaṟkaḍam,* பெ. (n.) ***தருப்பை*** (மலை.); darbha grass. (செ.அக.).

*[உமல் + கடம்.]*

**உமறுப்புலவர்** *umaṟuppulavar,* பெ. (n.) ***சீறாப்புராணம் பாடிய முகம்மதியப் புலவர்;*** Muhammadan Tamil poet patronized by a mussalman patron of learning Cīdakkādi, author of the Cīṟā-p-purāṇam, 17th C. (செ.அக.).

*[உமறு + புலவர்.]*

**உமா** *umā,* பெ. (n.) ***குன்றி*** (மூ.அ.); crabs - eye. (செ.அக.).

*[உம்மி → உமா.]*

**உமாகடம்** *umāgaḍam,* பெ. (n.) ***சணற்கொத்து;*** sun-hemp bundle. (ஆ.அக.).

தெ. உமி

*[உமகடம் → உமாகடம். உமி போன்று உட்சாறற்று வெளிறியது.]*

**உமாதகியரிசி** *umādagiyariśi,* பெ. (n.) ***கருங்குருவை யரிசி;*** rice of a black variety of paddy. (சா.அக.).

*[ஒருகா. உமி + அதக்கு + அரிசி.]*

**உமாதி** *umādi,* பெ. (n.) ***அறிவில்லா-ன்-ள்;*** un-wise person. (ஆ.அக.).

*[உள் + மத்தம் → உன்மத்தம் → உமத்தம் → உமாதம் → உமாதி. உள் → உள்ளம். மத்தம் = சுழற்சி.]*

**உமாதேவி** *umādēvi,* பெ. (n.) ***அறிவும் அருளுமாகிய சிவசத்தி;*** Goddess Pārvati.

*[உமை → உமா + தேவி.]*

**உமாபதிசிவாசாரியார்** *umāpadi-śivācāriyār,* பெ. (n.) ***வழிமுறை*** (சந்தான) ***குரவருள் ஒருவர்;*** a Siva ācārya, author of the Siva-p-pirakāsam and seven other treatises of the 15 Sidhānta-Sāttiram besides several other works like Kōyiṟpurāṇam, 13th c., one of four Santāṉa-kuṟavar.

*[உமை → உமா + பதி + சிவ + ஆசாரியர்.]*

**உமாமகேச்சுரம்** *umāmagēccuram,* பெ. (n.) ***ஒரு நோன்பு;*** religious observance in honour of umāmakecuvaram. உமா மகேச்சுரமென்றொரு தவவிரதம்'' (பிரமோத். உமாம.17). (செ.அக.).

**உமி**[1] *umi,* பெ. (n.) ***நெல்லின் மேல்தொலி;*** husk;chaff. ''நெல்லுக் குமியுண்டு'' (நாலடி. 221).

குட., ம. உமி க. உம்பி; து. உமி, உம்மி; தெ. உமக்க, உமுக, மக; குரு. உம்கு.

*[உம் → உமி. உம் = மேலிடுதல், மூடுதல், கவித்தல்.]*

**உமி**[2]**-த்தல்** *umi-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***பதராதல்;*** to become chaff. 2. ***சாரமறுதல்;*** to become insipid, spoiled (W.). சோறு உமித்துப் போயிற்று. (செ.அக.).

*[உம் → உமி → உமி-த்தல்.]*

**உமி**[3]**-த்தல்** *umi-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***கொப்புளங் கொள்ளுதல்;*** to blister, become sore. ''உள்ளடி யுமித் துமித் தழன்ற'' (சூளா. அரசி. 93). 2. ***பதன் அழிதல்;*** to decay, deteriorate, to lose soundness, as timber. வீட்டு மரங்கள் உக்கியுமித்துப் போயின. (செ.அக.).

*[உம் → உம்மு → உமி. உமித்தல்.]*

**உமி**[4]**-தல்** *umi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***கொப்புளித் தல்;*** to gargle. ''நீராடும்போது... நீந்தா ருமியார்'' (ஆசாரக். 15). 2. ***இதழ்*** (உதடு) ***கூட்டித் துப்புதல்*** (தனிப்பா. 1, 25, 45); to spit.

ம. உமிக்குக; க. உகி, உகழ், உகுழ்; து. உபி (உமிழ் நீர்), உகிபுனி; தெ. உமியு.

*[உம் → உமி → உமிழ் (இதழ் மூடுதல், இதழ் மூடித் துப்புதல்.]*

**உமி**[5]**-தல்** *umi-* 4 செ.குன்றாவி. (v.t.) ***உறிஞ்சுதல்;*** to suck, sip. முலையுமிந்து குடிக்க. (யாழ்ப்.).

*[உம் → உம்மி → உமி.]*

**உமிக்கரப்பான்** *umi-k-karappāṉ,* பெ. (n.) ***குழந்தை கட்கு வரும் கரப்பான் வகை*** (வின்.); a kind of small eruption over the head and body, esp. in children. (செ.அக.).

*[உமி + கரப்பான்.]*

**உமிக்கரி** *umi-k-kari,* பெ. (n.) 1. ***உமி எரித்ததனாலாகிய கரி;*** burnt rice-husk. (used as tooth powder.). (செ.அக.).

ம. உமிக்கரி.

*[உமி + கரி.]*

**உமிக்காடி** *umi-k-kāḍi,* பெ. (n.) ***உமிக்கருக்கு;*** gruel made of barley, sour rice gruel or barley - gruel.

ம. உமிக்காடி.

*[உமி + காடி.]*

**உமிக்காந்தல்** *umi-k-kāndal,* பெ. (n.) ***உமியிலுண்டாகும் தழல்;*** fire of rice husks, fire smouldering in a heap of rice husk. ''உண்ட வயிற்றி லுமிக்காந்த லிட்டதே'' (தமிழ்நா. 227).

ம. உமித்தீ.

*[உமி + காந்தல்.]*

**உமிக்கூர்** *umi-k-kūr,* பெ. (n.) ***உமிமூக்கு;*** point of the rice-husk. (செ.அக.).

*[உமி + கூர்.]*

**உமிச்சட்டி** *umi-c-catti,* பெ. (n.) ***கணப்புச்சட்டி;*** vessel containing rice-husks in which fire is kept alive. (செ.அக.).

*[உமி + சட்டி.]*

**உமிச்சாம்பல்** *umi-c-cāmbal,* பெ. (n.) ***உமி எரிந்துண்டா கும் சாம்பல்;*** ashes obtained from the burning of rice-husks (loc.). (செ.அக.).

*[உமி + சாம்பல்.]*

**உமிச்சிரங்கு** *umi-c-cirangu,* பெ. (n.) ***உமியைப் போன்ற பருக்கள் அல்லது சிறு சிரங்குகள்; நமைச்சிரங்கு*** (யாழ்ப்.); a superficial, troublesome kind of itch, Prurigo (j.). (செ.அக.).

*[உமி + சிரங்கு.]*

**உமிசம்** *umiśam,* பெ. (n.) 1. ***உம்மிசம்;*** groove in the frame work of a jewel in which stones are to be set. 2. ***கணு;*** notch. (செ.அக.).

*[உமி → உமிசம்.]*

**உமித்தவிடு** *umi-t-tavidu,* பெ. (n.) ***உமி கலந்த தவிடு;*** bran mixed with fine or broken husks for feed, coarse bran. (செ.அக.).

*[உமி + தவிடு ]*

**உமிநகம்** *umi-nagam,* பெ. (n.) ***மெல்லிய நகம்;*** finger and toe nails that are very thin like husk (W.). (செ.அக.).

*[உமி + நகம்.]*

**உமிநீர்** *umi-nīr,* பெ. (n.) ***வாயூறு நீர்;*** spittle, saliva.

ம. உமிநீரு, க. உகுள் நீரு, **து.** உம்பி, **தெ.** உம்மி.

*[உமிழ் + நீர் – உமிழ்நீர் → உமிநீர்.]*

**உமிப்புடம்** *umi-p-pudam,* பெ. (n.) ***குழி நிறைய உமியிட்டு எரிக்கும் புடம்*** (சங். அக.); calcination by heating medicinal drugs over a pitful of burning paddy-husk. (செ.அக.).

*[உமி + புடம்.]*

**உமிமூக்கு** *umi-mūkku,* பெ. (n.) ***உமிக்கூர்*** பார்க்க; see *umi-k-kūr.* (செ.அக.).

*[உமி + மூக்கு.]*

**உமியம்** *umiyam,* பெ (n.) 1. ***கனிமநஞ்சு விளையும் நிலம்;*** paddy field. 2. ***செய்நஞ்சு*** (பாடாணம்) ***விளை யும் நிலம்;*** soil or mine from which mineral poison is dug out.

*[உமி + அம்.]*

**உமியல்** *umiyal,* பெ. (n.) ***வசம்பு*** (மலை.); sweet-flag. (செ.அக.).

ம. உமியல்.

*[உம் → உமியல்.]*

**உமியுண்ணி** *umi-y-unni,* பெ. (n.) ***தவிட்டுண்ணி;*** small tick. (செ.அக.).

*[உமி + உண்ணி.]*

**உமிர்** *umir,* பெ. (n.) ***உடல் மயிர்;*** the hair of the body.

*[உம் → உமி → உமிர்.]*

**உமிரி** *umiri,* பெ. (n.) ***உமரி*** பார்க்க; (மலை.); see *umari.*

*[உமரி → உமிரி.]*

**உமிலிசாரம்** *umili-śāram,* பெ. (n.) ***கறிக்கூட்டு*** (பதார்த்த. 1113.); vegetable salt.

*[உமிலி + சாரம் ]*

**உமிவு** *umivu,* பெ. (n.) ***துப்புகை;*** spitting. "உமிவும்... புணரார் பெரியா ரகத்து" (ஆசாரக். 71). (செ.அக.).

*[உமிழ் → உமிழ்வு → உமிவு ]*

**உமிழ்-தல்** *umil* 2. செ.குன்றாவி. (v.t.) 1. ***துப்புதல்;*** to spit. 2. ***கொப்பளித்தல்*** (திவா.); to gargle. 3. ***வாயாலெடுத்தல்;*** to vomit, reject from an overcharged stomach. 4. ***வெளிப்படுத்துதல்;*** to emit, as rays of light, to discharge, as arrows, to send forth, as sparks, to yield, as fragrance, to reveal as news "உள்ளத்தாலுமிழ வேண்டா" (சீவக. 2149). 5. ***தெவிட்டுதல்*** (திவா.); to be satiated. 6. ***சொரிதல்;*** to pour.

ம. உமிழ்க, **க.** உகி, உகுழ், உகழ்; **து.** உம்பியுனி, உகிபுயு; **தெ.** உமியு; **கோண்.** உகியன், உச்சான்; **கொலா., நா.** உச்; **பர்.** உச், உச்ச; **பட.** உகி.

*[உ → உம் → உமி → உமிழ்.]*

**உமிழ்**[2] *umil,* பெ. (n.) ***உமிழ்நீர்*** பார்க்க; see *umil-nīr.*

**உமிழ்நீர்** *umil-nīr,* பெ. (n.) ***வாயூறு நீர்;*** spittle, saliva. (செ.அக.).

ம. உமிழ்நீர்.

*[உமி → உமிழ் + நீர்.]*

**உமிழ்நீர்ப்பெருக்கி** *umilnīr-p-perukki,* பெ. (n.) ***கொடு வேலி;*** Ceylon lead wort.

*[உமிழ் + நீர் + பெருக்கி.]*

**உமிழ்வு** *umilvu,* பெ. (n.) 1. ***துப்புகை;*** spitting. "உமிழ்வோடிருபுலனுஞ் சோரார்" (ஆசாரக். 33.). 2. ***உமிழப்படுவது;*** anything ejected from the mouth as spittle, vomit.(செ.அக.).

*[உமிழ் → உமிழ்வு.]*

**உமை**[1] *umai,* பெ. (n.) 1. ***மஞ்சள்*** (நாநார்த்த.); turmeric. 2. ***புகழ்.*** (நாநார்த்த.); fame. 3. ***ஒளி*** (நாநார்த்த.); brilliance. 4. ***நெல்வகை*** (நாநார்த்த.); a kind of paddy. 5. ***சணல்;*** sunhemp. (pond.).

*[அம் → உம் → உமை.]*

**உமை**[2]**-த்தல்** *umai-,* 2. செ.கு.வி. (v.i.) ***தினவு தின்னு தல்;*** to itch. ''உமைத்துழிச் சொறியப் பெற்றாம்'' (சீவக. 2617.).

**உமை**[3] *umai,* பெ. (n.) ***மலைமகள்;*** Pārvathi, consort of Sivā. ''ஒளி நீறணிந்து வுமையோடும் வெள்ளை விடைமேல்''. (தேவா. 1171,3). (செ.அக.).

*[அம்மை → உம்மை → உமை.]*

**உமைகரநதி** *umaikaranadi,* பெ. (n.) ***மலைமகளின் கையிலிருந்து வருவதாகிய கங்கை*** (பிங்.); Ganges supposed to flow from the hand of Pārvati. (செ.அக.).

*[உமை + கரம் + நதி - உமைகர நதி.]*

**உமைமகன்** *umai-magan,* பெ. (n.) 1. ***யானை முகன்;*** Vināyakā. 2. ***முருகன்;*** Murugan. 3. ***வீரபத்திரன்;*** Vīrabhadra son of Pārvathi. (செ.அக.).

*[உமை + மகன்.]*

**உமையவட்பெற்றோன்** *umaiyavatperron,* பெ. (n.) ***இமவான்*** (பிங்.); Himalaya, father of Pārvathi. (செ.அக.).

*[உமையவள் + பெற்றோன்.]*

**உமையவள்** *umaiyaval,* பெ. (n.) ***பார்வதி;*** Pārvati. ''கொடியி னொல்கிய நுசுப்புடை யுமையவள்'' (கந்தபு. தவங்காண்.8). (செ.அக.).

*[உமை + அவள்.]*

**உமையாள்**[1] *umaiyāl,* பெ. (n.) **உமையவள்** பார்க்க; see *umaiyaval.* ''உமையாள் கணவா'' (திருவாச. 33.1). (செ.அக.).

*[உமை + (அவள்) ஆள்.]*

**உமையாள்**[2] *umaiyāl,* பெ. (n.) 1. ***சவுக்காரம்;*** soap. 2. ***மயிலிறகு;*** feather of pea-cock.

**உய்**[1]**-தல்** *uy-,* 2. செ.கு.வி. (v.i) 1. ***பிழைத்தல்; வாழ்தல்;*** to live, to subsist, have being. ''உண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டி'' (புறநா. 181). 2. ***ஈடேறு தல்;*** to be saved, redeemed. ''தினைத்தனைப் பொழு தும் மறந்துய்வனோ'' (தேவா. 5,1) 3. ***நீங்குதல்;*** to be relieved, as from trouble ''தாவலுய்யுமோ'' (பதிற்றுப். 41.17). 4. ***துன்பத்தினின்று தப்புதல்;*** to eacape as from danger. ''சார்புடைய ராயினு முய்யார்'' (குறள், 900) 5. ***உண்டாக்குதல்;*** to make, prepare. 6. ***வலிதல்;*** to get strong. 7. ***ஆற்றுதல்;*** to engage. 8. ***முற்செல்லுதல்; செலுத்தல்;*** to lead.

ம. உய்யுக.

*[உ → உய் → உய்-தல்.]*

**உய்**[2]**-த்தல்** *uy-,* 4. செ.குன்றாவி. (v.t) 1. ***உய்யச் செய்தல்;*** to ensure salvation. ''உய்த்த வியோமரூபர்'' (சதாசிவ. 29). 2. ***நீக்குதல்;*** to drive away, dispel as darkness. ''பல்விளக் கிருளின் றுன்னற வுய்க்கும்'' (திருக்கோ. 175). (செ.அக.).

*[உ → உய் → உய்-த்தல்.]*

**உய்**[3]**-த்தல்** *uy-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***செலுத்துதல்;*** to direct, guide. ''நன்றின் பாலுய்ப்ப தறிவு'' (குறள், 422). 2. ***படைக்கலம் விடுதல்;*** to discharge, let fly, as an arrow. ''அம்புய்க்கும் போர்'' (கம்பரா. மாரீச. 186). 3. ***அனுப்புதல்;*** to send, despatch. ''பட்டிமை யோலை யுய்ப்பான்'' (திருவிளை. மெய்க்கா. 13). 4. ***நடத்துதல்;*** to conduct, lead, direct. ''உய்த்திடு மிச்சை செய்தி'' (சி.சி., 1, 62, நிரம்ப.) 5. ***கொண்டு போதல்;*** to carry. ''வேட்டுவ ருய்த்தன ரோவென'' (சீவக. 425). 6. ***நுகர்தல்; பட்டறிதல்;*** to enjoy, experience. ''காதல காத லறியாமை யுய்க்கிற்பின்'' (குறள், 440). 7. ***கொடுத்தல்;*** to give. ''மீளியாளர்க்கு மிகவுய்த் தன்று'' (பு.வெ. 3,9, கொளு.). 8 ***அறிவித்தல்;*** to make known, tell, reveal. ''அவ்வழி யரசற் குய்த்தார்க்கு'' (சீவக. 1407). 9. ***ஆணை செலுத்துதல்;*** to rule. ''ஞால முழுது முய்த்திடு மகவு'' (பாரத. சம்பவ. 10). 10. ***குறிப்பித் தல்;*** to mention. 11. ***ஊர்தியில் செல்லுதல்;*** to fly as vehicle. 12. ***அமிழ்த்தல்;*** to press, sink. 13. ***ஈடேறச் செய்தல்;*** to realise. ''உய்யத்த வியோமரூபர்'' (சதா சிவ. 29). மதியைச் செலுத்தி ஆராய்தல், உய்த்தறிதல், உய்த்துணர்தல். உய்த்தலில் பொருண்மை என்னும் தொடர்களை நோக்குக.

ம., க. உய்.

*[உ → உய் → உய்-த்தல்.]*

**உய்**[4] *uy,* இடை. (part). ***ஒலிக்குறிப்பு இடைச்சொல்;*** onomatopoeic expression.

*[உ → உய்.]*

**உய்கதியால்** *uygadiyāl,* பெ. (n.) **உய்தடி** பார்க்க; see *uydadi.* (செ.அக.)

**உய்கை** *uygai,* , பெ. (n.) 1. ***ஈடேறுகை;*** salvation, deliverance. 2. ***துன்பம் நீங்குகை;*** escaping from hardship, relief from distress. ''உய்கை பொருளா வொரு வர்க்கு மோருதவி செய்கை யிலனேல்'' (கந்தபு. காம. 47). (செ.அக.).

*[உ → உய் → உய்கை = உய்தல்.]*

**உய்த்தலில்பொருண்மை** *uyttalilporunmai,* பெ. (n.) ***கருதிய பொருள் தெளிவாகப் புலப்படுமாறு எளிய சொல்லுடைமையாகிய குணம்*** (தண்டி. 21.); (poet.). the merit of transparency of sense achieved by a careful choice of unambiguous simple words, a merit of poetic composition. (செ.அக.).

*[உய்த்தல் + இல் + பொருண்மை.]*

**உய்த்தறி-தல்** *uyttari-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***உய்த்துணர்*** பார்க்க; see *uyttunar.* இப்பொருள் உய்த்தறியத் தக்கது. (செ.அக.).

*[உய்த்து + அறி.]*

**உய்த்துக்கொண்டுஉணர்தல்** uyttu-k-kondu-unardal, பெ. (n.) ***32 உத்திகளுள் ஒன்று. அஃது ஒரு பொருள் சொல்லியக்கால் அதன் மற்றொரு பொருளினையும் யுணர்ந்து கொண்டறியுமாறு தோன்றச்செய்தல்*** (தொல்.பொருள். 656.); a literary method consisting in the use in exposition of such expressions of additional meaning is incorporated with the prime meaning, one of 32 utti.•

*[உய்த்து + கொண்டு + உணர்தல்.]*

**உய்த்துணர்-தல்** *uyttunar-,* 8. செ.குன்றாவி. (v.t.) ***மனத்தைச் செலுத்தி ஆராய்ந்தறிதல்;*** to know by careful investigation. "உய்த்துணர்ந்த வருரைத்த". (சூளா. சீய.37) (செ.அக.).

*[உய்த்து + உணர்-தல் ]*

**உய்த்துணர்மொழி** *uyttunar-moli,* பெ. (n.) ***செய்யுட்குற்றங்களுளொன்று*** (யாப். வி. 525.); (pros). defect in versification. (செ.அக.).

*[உய்த்து + உணர் + மொழி.]*

**உய்த்துணர்வணி** *uyttunar-v-ani,* பெ. (n.) ***ஒரு செயல் முற்றுப் பெறுதற் கிஃதிவ்வாறா மென வூகித்தல்.*** (அபி. சிந்.); informing means and ways to finish a matter.

*[உய்த்து + உணர்வு + அணி. இது வடமொழியில் சம்பாவ னலங்காரம் எனப்படுகிறது.]*

**உய்த்துணர்வு** *uyttunarvu,* , பெ. (n.) 1. ***ஆராய்ந்துணரும் அறிவு;*** knowledge obtained by study, keen research and observation. "உய்த்துணர் வில்லெனி னில்லாகும்" (நீதிநெறி. 5.). 2. ***ஞானம்;*** wisdom. "உய்த்துணர் வென்னும் ஒளி" (திவ். இயற். 3,94). (செ.அக.).

*[உய்த்து + உணர்வு.]*

**உய்த்துணரவைப்பு** *uyttunaravaippu,* பெ. (n.) ***ஓர் உத்தி*** (நன். 14.); (gram). Literary method consisting in the use in exposition of such expressions as would stimulate thought or further enquiry, one of 32 utti. (செ.அக.).

*[உய்த்து + உணர + வைப்பு.]*

**உய்தடி** *uydadi,* பெ. (n.) ***கிளைக்கும் வேலிக்கொம்பு*** (யாழ்ப்.); live hedge stick. (செ.அக.).

*[உய் + தடி.]*

**உய்தி** *uydi,* பெ. (n.) 1. ***ஈடேற்றம்.*** salvation, deliverance. "சார்பறுத் துய்தியும்" (மணிமே. 25,5). 2. ***கழுவாய்;*** remedy, atonement, expiation. "செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென" (புறநா. 34). 3. ***நீங்குகை*** (புறநா. 34. உரை.); ceasing. (செ.அக.).

*[உய் → உய்தி.]*

**உய்மணல்** *uymanal,* பெ. (n.) ***கருமணல்*** (வின்.); black sand. (செ.அக.).

*[உய் + மணல்.]*

**உய்யக்கொண்டார்** *uyya-k-kondār,* பெ. (n.) *1.* ***நாதமுனிகளுக்குப் பின்வந்த மாலியக் குரவர்;*** a Vaisnava ācharyar. 2. ***புண்டரீகாசர்*** பார்க்க; see *Pundarīkāsar.*

*[உய்ய + கொண்டார்.]*

**உய்யக்கொண்டான்**[1] *uyya-k-kondān,* பெ. (n.) ***வாழச் செய்தவன்;*** saviour. (செ.அக.).

*[உய்ய + கொண்டான்.]*

**உய்யக்கொண்டான்**[2] *uyya-k-kondān,* பெ. (n.) ***எருமை முல்லை*** (மூ. அ.); white bracted Jasmine.

*[உய்ய + கொண்டான்.]*

**உய்யப்பிணக்கம்** *uyyappinakkam,* பெ. (n.) ***வாழ்க்கைப் போராட்டம்;*** doldrums of life. (செல்வி. 77. புரட்டாசி. 74).

*[உய்ய + பிணக்கம்.]*

**உய்யவந்ததேவநாயனார்** *uyya-vanda-dēva-nāyanār,* பெ. (n.) 1. ***சிவனியக் கொண்முடிபுகளுள் திருவுந்தியார் நூலை யியற்றியவர்;*** the author of the Tiru-v-untiyār, native of Tiruviyalūr 12th C. 2. ***சிவனியக் கொண்முடிபுகளுள் திருக்களிற்றுப்படியார் இயற்றியவர்;*** author of Thiru-k-kalirru-p-patiyār, native of Tirukkatavūr 12th C.·(செ.அக.).

*[உய்ய + வந்த + தேவன் + நாயனார்.]*

**உய்யாக்கடிப்பான்** *uyyākkadippān* ,பெ. (n.) ***பிழைக்காத படி கடிக்கும் உயிரி; அதாவது கருநாகம்.*** a black cobra the bite of which is sure to bring on death. (சா.அக.).

*[உய்யா + கடிப்பான்.]*

**உய்யானம்** *uyyānam,* பெ. (n.) ***பூங்கா;*** park, pleasure garden. "உய்யானத்திடை யுணர்ந்தோர் செல்லார்" (மணிமே. 3,52). (செ.அக.).

*[உய்யும்வனம் → உய்யுவனம் → உய்யானம். ஒ.நோ.உய்தடி.]*

**உய்வனவு** *uyvanavu,* , பெ. (n.) 1. ***செழிப்பு;*** flourishing, reviving, as a tree. 2. ***பிழைப்பு; வாழ்வு;*** living, subsistence, maintenance. 3. ***ஈடேற்றம்; வீடுபேறு;*** attaining eternal bliss. (செ.அக.).

*[உய் → உய்வனவு. உய்யக்கொண்டான், உய்யவந்த தேவ நாயனர் முதலான பெயர்களில் உய்தல் ஈடேற்றத்தை உணர்த்தும்.]*

**உய்வி-த்தல்** *uyvi-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***பிழைக்கச் செய்தல்;*** to restore one to life. (சா.அக.).

*[உய் → உய்வி (பி.வி.).]*

**உய்விடம்** *uyvidam,* பெ. (n.) ***பிழைக்குமிடம்;*** asylum, place of refuge, shelter. "உய்விட மறியே மாகி" (குறிஞ்சிப். 166.). (செ.அக.).

*[உய்வு + இடம்.]*

**உய்வு** *uyvu,* பெ. (n.) 1. ***உயிர் தப்புகை;*** escaping from danger. "எரியாற் சுடப்படினு முய்வுண்டாம்" (குறள், 896). 2. ***ஈடேற்றம்;*** salvation. "உய்வுபாய மற்றின்மை தேறி" (திவ். திருவாய். 4,3,11). 3. ***கழுவாய்;*** expiation. "உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள், 110). (செ.அக.).

*[உய் → உய்வு.]*

**உயக்கம்** *uyakkam,* பெ. (n.) ***வருத்தம்;*** suffering, distress, trouble. "உண்ணா வுயக்கத்து" (மணிமே. 7,66).

*[உயங்கு → உயக்கம்.]*

**உயங்கு-தல்** *uyangu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***வருந்துதல்;*** to suffer, to be in distress, to be pained in body or mind "உயங்குவன் கிடந்த கிழத்தியை" (தொல். பொருள். 146). 2. ***மெலிதல்;*** to grow thin, become emaciated. "உயங்குசாய் சிறுபுறம்" (அகநா. 19). 3. ***துவளுதல்;*** to be flexible, slender. "உயங்கு செங்கழு நீர்"(திருவாத.பு.மண்சுமந்த. 4.).

*[உய் → உய → உயங்கு.]*

**உயந்து-தல்** *uyandu-,* 3. செ.கு.வி. (v.i.) ***ஏப்பம் விடுதல்*** to belch (சேரநா.).

ம. உயந்துக.

*[உ → உய் → உயந்து (மேலெழும்புதல்).]*

**உயம்** *uyam,* பெ. (n.) ***செலுத்துதல்; தள்ளுதல்;*** driving, pushing.

*[உய் → உயம் (சு.வி. 41.).]*

**உயர்[1]-தல்** *uyar-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***மேலெழுதல்;*** *to rise, as water; to ascend, as a body in the air; to* move towards the meridian, as a heavenly body. "வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலும்" (கந்தபு. பாயி. 63). 2. ***உயர்வுள்ளதாதல்;*** to be high, elevated, tall, lofty. உயர்ந்த மலை. 3. ***வளர்தல்;*** to grow, increase, expand. 'நெல்லுயரக் குடியுயரும்'. 4. ***மேன்மை யுறுதல்;*** to be excellent, exalted, eminent, dignified, superior. "உயர்ந் தவர்க் குதவிய வுதவி" (கம்பரா. வேள். 35) 5. ***நீங்குதல்;*** to vanish, disappear, to be removed. "இனிவரி னுயருமற் பழியென" (கலித். 129,17) (செ.அக.). 6. ***அலை முதலியன மேல் எழும்புதல்;*** to rise as water or waves. 7. ***நீர் பொங்கி மேலே வருதல்;*** to spring, bubble up, gush, flow forth. 8. ***குனிந்து கிடக்கும் தலை, மேலே உயர்தல்;*** to be raised (as head).

ம. உயருக.

*[உ → உய் → உயர்.]*

**உயர்[2]** *uyar,* பெ. (n.) ***உயர்ச்சி;*** greatness, nobility, fame. "உயர்மிக்க" (சீவக. 473).

*[உ → உய் → உயர்.]*

**உயர்[3]-த்தல்** *uyar-,* 2. செ.கு.வி. (v.i.) ***உயர்த்து*** பார்க்க; see *uyarttu.* "மேன் மேலுயர்த்து நிறுப்பானும்" (நாலடி; 248.). (செ.அக.).

*[உ → உயர் → உயர்த்தல்.]*

**உயர்[4]** *uyar,* பெ. (n.) ***குன்றி*** (மலை.); crab's - eye. (செ.அக.).

*[உய → உயர்.]*

**உயர்குடி** *uyarkudi,* பெ. (n.) ***மேலான குடி;*** high caste, noble family. "உயர்குடியுட் பிறப்பி னென்னாம்" (நாலடி. 199).

*[உயர் + குடி.]*

**உயர்குலம்** *uyarkulam,* பெ. (n.) ***உயர்குடி*** பார்க்க; see *uyarkudi.* "ஒழுக்க முயர் குலத்தி னன்று" (நல்வ. 31). (செ.அக.).

*[உயர் + குலம்.]*

**உயர்ச்சி** *uyarcci,* பெ. (n.) 1. ***உயரம்;*** height, elevation, altitude. "மண்டபத்தி னளவு நீளம்...உயர்ச்சி" (பாரத. இராச. 8). 2. ***மேன்மை;*** excellence, superiority, moral worth, valuable trait. (செ.அக.).

ம. உயர்ச்ச.

*[உயர் → உயர்த்தி → உயர்ச்சி.]*

**உயர்சொல்** *uyar-šol,* பெ. (n.) ***உயர்த்திக் கூறுஞ் சொல்;*** honorific expression, term of respect. "உயர்சொற் கிளவி" (தொல். சொல். 27). (செ.அக.).

*[உயர் + சொல்.]*

**உயர்த்தி** *uyartti,* பெ. (n.) ***மேன்மை;*** excellence, superiority. "உயர்த்திக டாழ்த்தியறைதி" (நல்.பாரத. கிருட்டிணார்ச். 83). (செ.அக.).

*[உயர் → உயர்த்தி.]*

**உயர்த்திப்பேசு-தல்** *uyartti-p-pēsu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***புகழ்ந்து கூறுதல்;*** to speak highly, of a person or a thing. 2. ***குரலெடுத்துப் பேசுதல்;*** to raise the voice and speak.

*[உயர்த்தி + பேசு-தல்.]*

**உயர்த்து-தல்** *uyarttu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***உயரச்செய்தல்;*** to lift up, elevate; to build up, as a wall in building. 2. ***அதிகப் படுத்துதல்;*** to raise, as price; to increase, as expenditure. விலையை யுயர்த்தி னான். 3. ***மேனிலைக்குக் கொண்டு வருதல்;*** to promote to higher office, exalt, ennoble. 4. ***மேன்மைப் படுத்துதல்;*** to honour, treat with respect; to praise, magnify. "எப்புன்மையரை மிகவே யுயர்த்தி" (திருவாச. 5,10) 5. ***இசை யெடுத்தல்;*** to raise the voice, as

in singing or speaking. உயர்த்திப் பாடினான். 6. *தூக்குதல்;* to lift, hold up, as a sceptre; to hoist, as a flag. 7. *ஒரு பொருளைக் கொள்ளச் சில ஏமாற்று வேலைகளைக் கையாளுதல்;* to get something by playing a trick, deceive. 8. *திருடுதல்;* to steal, lift.

ம. உயர்த்துக, உய்த்துக; க., தெ. எத்து.

*[உயர் → உயர்த்து.]*

**உயர்திணை** *uyar-tiṇai,* பெ. (n.) 1. *மேற்குலம்;* high caste, noble family. "உயர்திணை யூமன் போல" (குறுந் 224.) 2. *மக்கள் தேவர் நரகரென்னு முத்திறத்தாரைக் குறிக்கும் சொல்* (நன். 261) (Gram). nouns denoting personal class of beings, including men, gods and demons opp. to அஃறிணை.

*[உயர் + திணை (வி.தொ.)]*

ஏனைய உயிரிகள் போலாது மேன்மேலும் உயரும் தன்மைய ராதல் நோக்கி மக்கள் உயர்திணை எனப் பெயர்பெற்றனர்.

**உயர்ந்தவன்** *uyarndavaṉ,* பெ. .(n.) 1. *சிறந்தோன்.* man of rank, man of high character. 2. *நெடியவன்;* man of tall stature. "உயர்ந்தவர் குறளானோர்" (கந்தபு. மார்க். 64).

*[உயர் → உயர்ந்தவன்.]*

**உயர்ந்தோர்** *uyarndōr,* பெ. (n.) 1. *பெரியோர்* (திவா.); the great; the learned, the exalted, as in piety, in virtue, or in austerities. 2. *தேவர்;* celestials "வேள்வி வேட் டனை யுயர்ந்தோ ருவப்ப" (பதிற்றுப். 74). 3. *முனிவர்* (திவா.); sages.

*[உயர் → உயர்ந்தோர்.]*

**உயர்நில்(ற்)-த(ற)ல்** *uyar-nil* 14. செ.கு.வி. (v.i.) *உச்சமாதல்;* to be in a zenith, as a constellation. "அங்கியுயர் நிற்ப" (பரிபா. 11,7). (செ.அக.).

*[உயர் + நில்.]*

**உயர்நிலத்தவர்** *uyar-nilattavar,* பெ. (n.) *தேவர்* (சூடா.); celestials, those whose abode is on high. (செ.அக.).

*[உயர்நிலம் + அத்து + அவர்.]*

**உயர்நிலம்,** *uyar-nilam,* பெ. (n.) 1. *தேவலோகம்;* world of the gods, lit., the higher regions; "உயர்நில மடைந்தான் கொணர்ந்தனன்" (உபதேசகா. உருத்திராக்க. 90.). 2. *மேடு* (பிங்.); mound, hillock, highland. 3. *உப்பரிகை* (வின்.); upper storey in a building. (செ.அக.).

ம. உயர்நிலம்.

*[உயர் + நிலம்.]*

**உயர்நிலை** *uyar-nilai,* பெ. (n.) 1. *மேலான பதவி;* high position. "உயர்நிலை வான்றோய் மாடம்" (பெரும் பாண். 332). 2. *தெய்வத் தன்மை;* godhead, divine nature. "அணங்குசா லுயர்நிலை தழீஇ" (திருமுரு. 289). 3. *உப்பரிகை;* upper storey in a building. (செ.அக.).

ம. உயர்நிலை.

*[உயர் + நிலை ]*

**உயர்நிலையோர்** *uyar-nilaiyōr,* பெ. (n.) *உயர்நிலத்தவர்* பார்க்க (பிங்.); see *uyar-nila-t-tavar.* (செ.அக.).

*[உயர்நிலை + ஓர் ஆர் → ஓர்.]*

**உயர்பு** *uyarbu,* பெ. (n.) 1. *உயரம்.* (சூடா.); height, loftiness, elevation. 2. *உயர்ந்தவிடம்;* mound, rising ground, hillock "கல்லுயர்பேறி" (குறுந். 275). 3. *மேன்மை;* greatness, excellence. 4. *உயர்வானது;* that which is excellent "உயர்பிழி விரண்டுங்கூடி யியங்கிய பிள்ளைப் பேரே யனுலோமன்" (சூடா. 2,60). (செ.அக.).

*[உயர் + பு.]*

**உயர்மிசையவர்** *uyaramisaiyavar,* பெ. (n.) *உயர்நிலத்தவர்* பார்க்க; see *uyarnilattavar* (சீவக. 966). (செ.அக.).

*[உயர் + மிசை + அவர்.]*

**உயர்மொழி** *uyarmoḻi,* பெ. (n.) *உயர்த்துக்கூறும் கூற்று;* compliment, high encomium. "உயர்மொழிக்கிளவியு முரிய" (தொல் பொருள். 240). (செ.அக.).

*[உயர் + மொழி.]*

**உயர்வண்ணத்தி** *uyar-vaṇṇatti,* பெ. (n.) *மருதாணி;* fragrant nail dye

மறுவ. அழவணம். மருதோன்றி. Hindi. mehanti.

*[உயர் + வண்ணத்தி.]*

**உயர்வு**[1] *uyarvu,* பெ. (n.) 1. *உயரம்;* lofty height, elevation. "உயர்வகலந்திண்மை" (குறள், 743). 2. *மேன்மை;* eminence, dignity, greatness. "மாந்தர்த முள்ளத் தனைய துயர்வு" (குறள், 595). 3. *ஏற்றம்;* increase, as of price of commodities. விலை உயர்வாயிருக்கிறது. 4. *உயர்வு நவிற்சியணி* (திவா.); hyperbole.

ம. உயர்வு.

*[உயர் → உயர்வு.]*

**உயர்வு**[2] *uyarvu,* பெ. (n.) *வருத்தம்* (மாறன. 262. மேற். 738); trouble, woe, suffering, affliction. (செ.அக.).

*[உயல் → உயல்வு → உயர்வு.]*

**உயர்வுக்கல்** *uyarvu-k-kal,* பெ. (n.) *வைடூரியம்;* precious stone. It is a variety of chalcedony which in light, gives an effect resembling the pupil of a cat's eye. (சா.அக.).

*[உயர்வு + கல்.]*

**உயர்வுக்கொடி** *uyarvu-k-koḍi,* பெ. (n.) *குன்றிமணி;* crab's eye. (சா.அக.).

*[உயர்வு + கொடி.]*

**உயர்வுசிறப்பும்மை** *uyarvu-śiṟa-p-pummai,* பெ. (n.) *உயர்வு மிகுதியைக் காட்டும் உம்மென்னுஞ் சொல்;*

(Gram.) the particle உம் expressing unquestionable superiority, as in குறவரு மருளுங் குன்றம். (செ.அக.).

*[உயர்வு + சிறப்பு + உம்மை.]*

**உயர்வுநவிற்சியணி** *uyarvu-naviṟci-y-aṇi,* பெ. (n.) ***உயர்த்திச் சொல்லப்படும் அணிவகை*** (அணியி. 13.); hyperbole (செ அக.).

*[உயாவு + நவிற்சி + அணி ]*

**உயர்வுவமை** *uyarvuvamai,* பெ. (n.) ***இயைபின்மை யணி*** (வீரசோ அலங்.14); a figure of speech in which a thing is compared to itself. (செ.அக.).

*[உயர்வு + உவமை.]*

**உயர்வேகி** *uyar-vēgi,* பெ (n) ***கல்மதம்;*** mineral wax bitumen. It is a dark sticky unctuous substance supposed to issue from rocks in hot weather

*[உயர் + வேகி. வெப்பததால் உருகிப் பொங்கிக் கசிவது பழங்கால நீராடுங் குளங்களில நீாக் கசிவைத் தடுக்கத் தரைக்கற்களிடையே பயன்படுத்தப்பட்டது.]*

**உயரங்காட்டு-தல்** *uyarankāttu-,* 5. செ.கு.வி. (v.i.) ***நடை பழகும்போது குழந்தை தடுமாறி நிற்றல்;*** to stand up casually, as a little child does when attempting to walk. (செ.அக.)

*[உயரம் + காட்டு ]*

**உயரம்** *uyaram,* பெ (n.) 1 ***ஆள், மரம் முதலியவற்றின் உயரம்;*** height 2. ***உயர்நிலை;*** elevation, eminence, loftiness. 3 ***உச்சம்*** (வின் ), (Astron.) altitude. (செ அக ).

**ம.** உயரம், **க.,** பட. உத்த, **தெ.** உயர், உசர், **கோத.** உதமன், **குரு.** உத்தலு, குட. ஒதர, **து.** உசர், உயர், *Skt* urdhan.

*[உ → உயர் → உயரம் ]*

**உயராடு** *uyar-ādu,* பெ. (n.) ***வெள்ளாடு;*** goat, supposed to be taller than a sheep. ''உயராட்டுப் பால்'' (தைலவ. தைல. 12). (செ.அக ).

*[உயர் + ஆடு.]*

**உயரி** *uyari,* பெ (n.) ***உயரமானது;*** that which is tall, as a palm tree; tall person (செ அக.).

*[உயா + இ ]*

**உயல்**[1] *uyal,* பெ (n.) 1 ***வாழ்தல்;*** living. 2. ***தப்புதல்;*** escaping. ''உயலாகா ஆழ்த் திறத்த வென்னார்'' (நீதி நெறி. 50). 3. ***உளதாதல்;*** being, existing. ''செல்வ முயற்பால தன்றிக் கெடும்'' (குறள். 437.). (செ.அக.).

*[உய் + தல் - உய்தல் → உய்யல் → உயல் ]*

**உயல்**[2]**(லு)-தல்** *uyal-,* 13. செ.கு வி. (v.i.) 1. ***அசைதல்;*** to wave, shake. ''உயலுங்கோதை'' (பதிற்றுப். 52,17). 2. ***செல்லுதல்; நடத்தல்;*** to go, to walk.

*[உள் → உய் → உயல் → உயலுதல் (வேக 48.).]*

**உயவர்** *uyavar,* பெ. (n.) ***துன்புறுவோர்;*** persons in distress.

*[உயவு + அர். உயவு = அசைவு, துன்பம்.]*

**உயவல்** *uyaval,* பெ. (n.) ***வருத்தம்;*** distress, affliction, pain, suffering. ''சிதாஅ ரோம்பி யுடுத்த வுயவற் பாண'' (புறநா. 69). (செ.அக.).

*[உயவு + அல் ]*

**உயவற்பெண்டிர்** *uyavar-pendir,* பெ. (n.) ***கைம்மை நோன்பினால் வருந்தும் மகளிர்;*** women who suffer under very trying austerities enjoined upon widowhood. ''பாயின்று வதியு முயவற் பெண்டிரே மல்லேம்'' (புறநா. 246). (செ அக.).

*[உயவு → உயவல் + பெண்டிர் ]*

**உயவு**[1]**-தல்** *uyavu-,* 5. செ கு.வி. (v.i.) ***வருந்துதல்;*** to suffer ''உண்டென வுணரா வுயவு நடுவின்'' (பொருந. 38). (செ.அக.)

*[உய் → உய்வு → உயவு ]*

**உயவு**[2]**-தல்** *uyavu-,* 5. செ.கு.வி. (v.i.) ***வண்டிச் சக்கரத்திற்கு மையிடுதல்;*** to apply grease to a cart-wheel ''தஞ்சாகாடேனு முயவாமற் சேறலோவில்'' (பழ 168) (செ அக.).

*[உ → உய் → உய்வு (செலுத்து. உட்புகட்டு) → உயவு.]*

**உயவு**[3] *uyavu,* பெ. (n.) ***வருத்தம்;*** distress, trouble, suffering. ''உயவுநோய் கைம்மிக'' (கலித். 58). (செ அக.).

*[உய → உயவு (வே.க 48)]*

**உயவு**[4] *uyavu,* பெ. (n.) ***உயிர் பிழைக்கச் செய்யும் வழி;*** means of saving life. ''உய்யா வருநோய்க் குயவாகும்'' (கலித் 139). (செ.அக.).

*[உய் → உயவு ]*

**உயவு**[5]**-தல்** *uyavu-,* 5. செ.குன்றாவி, செ.கு.வி. (v.t. & v.i.) ***உசாவுதல்;*** to take counsel, consult. ''வஞ்ச மைந்தரொ டுயவி'' (பாரத சஞ்சய. 2). (செ.அக.).

*[உயவு = அசைதல், வாயசைதல், பேசுதல் உய் → உயவு.]*

**உயவுத்துணை** *uyavu-t-tuṇai,* பெ. (n) ***உசாத்துணை;*** intimate friend. ''சுரஞ்சென் மாக்கட் குயவுத்துணை யாகுங் கல்வரை'' (குறுந் 207). (செ.அக.).

*[உயவு + துணை ]*

**உயவுநெய்** *uyavu-ney,* பெ. (n.) 1. ***சகடத்திற்கு இடும் எண்ணெய்;*** lubricating oil for the wheels of carts, etc. ''அஃ்தா லுயவுநெய் யுட்குளிக்கு மாறு'' (பழ 385.). (செ.அக.).

*[உயவு[2] + நெய் ]*

**உயவை**[1] *uyavai,* பெ. (n.) 1 ***காக்கணம் கொடி;*** *mussell - shell creeper* ''ஊறுநீ ருயவை'' (மலைபடு 136). 2. ***வெண்கருவிளை*** (பிங்.); white - flowered mussel - shell creeper. (செ.அக.).

*[உயவு → உயவை ]*

**உயவை**² *uyavai,* பெ. (n.) 1. ***காடு.*** (பிங்.); jungle. 2. ***காட்டாறு*** (பிங்.); jungle stream. 3. ***செல்லும் வழி;*** path. (செ.அக).

*[உயவு → உயவை.]*

**உயா** *uyā,* பெ. (n.) ***வருத்தம்;*** distress, suffering. "உயாவே யுயங்கல்" (தொல் சொல். 369) (செ.அக.).

*[உய் → உயா. (வே.க. 48.)]*

**உயாவு-தல்** *uyāvu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***கேட்டறிதல்;*** to inquire after. (செ.அக.).

*[உய → உயவு = அசைதல், வாயசைத்தல், பேசுதல். உயவு → உயாவு. உயாவு → உசாவு எனவும் திரியும்.]*

**உயாவுத்துணை** *uyāvu-t-tunai,* பெ (n.) ***உசாத்துணை*** பார்க்க; see *usā-t-tunai.* "உயாவுத் துணையாக வயா வொடும் போகி" (மணிமே. 20.93). (செ.அக.).

*[உயாவு + துணை.]*

**உயிர்**¹**-த்தல்** *uyir-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உயிர் பெற்றெழுதல்;*** to revive, to regain consciousness; to be re-animated. 2. ***தொழிற்படுதல்;*** to be in vigorous functioning activity. "அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம் பொறிகள்" (சி.போ. 3,4.) 3. ***மூச்செறிதல்;*** to breathe hard. "உரைதடுமாறாவுயிர்த்து" (பாரத பதினெட். 173). 4. ***கமழ்தல்;*** to be wafted as fragrance. "உயிர்த்த தாமத்தன" (கம்பரா. நிகும். 114) 5 ***இறந்துபடுதல்;*** to breathe one's last. "உயிர்ப்பது மோம்பி" (சீவக. 1989).

*[உய் → உயிர்-.]*

**உயிர்**²**-த்தல்** *uyir-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***ஈனுதல்;*** to give birth to, bring forth. "குழந்தையை யுயிர்த்தமலடிக் குவமை கொண்டாள்". (கம்பரா உருக்காட். 65). 2. ***மோத்தல்;*** to smell. "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறி யும்" (குறள் 1101). 3. ***கூறுதல்;*** to say, declare "விட்டுயிர்த் தழுங்கினும்" (தொல். பொருள் 111) 4. ***பெருக்குதல்;*** to multiply a number. அம்மூ வாறுமுயி ரொடு முயிர்ப்ப (நேமிநா. 3, உரை) 5. ***வெளிப்படுத்து தல்;*** to emit, send forth. "கொங்குயிர்த்த பூந்தடத் துலாய்" (நைடத. நாட்டுப்.5). (செ.அக.)

**ம.** உயிர், உயிர்க்குக, **க.** உயிர், உசுர்; **குட.** உசிரி (மூச்சு); **து.** உசுரு, **கோத.** உசிர், **துட.** உசிர்; **குரு.** உச்சனா; **மால்.** உசெ; பிரா. உச்ர்

*[உய் → (உயில்) உயிர் உயிர்த்தல். உய் + இல் - உயில் இல் - உடைமைப் பொருளீறு. உய்தலை அல்லது இயங்குத லைத் தன்பாற் கொண்டது.]*

**உயிர்**³ *uyir,* பெ (n.) 1. ***தானாக இயங்காத உடம்பை இயக்கும் அல்லது செலுத்தும் ஆவி*** (திவா.); life of human being, animal or vegetable. 2. ***ஆதன்.*** (ஆன்மா.); soul. "தன்னுயிர் தானறப் பெற்றானை" (குறள். 268). 3. ***உயிரி;*** living being. "எல்லாவுயிருந் தொழும்" (குறள், 260). 4. ***பிறப்போரை*** (சன்மலக்கினம்); (Astro) ascendant, sign of nativity. "உயிர்க்கிரு பாலி னும்" (விதான. சாதக.19). 5. ***தனித்தியங்கும் உயி ரெழுத்து;*** vowel. "உயிரு முடம்புமா முப்பதும்" (நன். 59) 6. ***உயிர்வளி*** (பிராணவாயு); oxygen, one of the vital airs. "வைகரியில்... உயிரணைந்து வந்த மொழி" (சிவப்பிர. 2,20.). 7. ***காற்று*** (பிங்.); wind. 8. ***ஓசை;*** voice, spoken sound. "வள்ளுயிர்த் தெள் விளி" (குறிஞ்சிப். 100). 9. ***ஒரு நாழிகையில் 4320இல் ஒரு கூறு*** (கணக்கதி. பக்.13.); measure of time, 1/4320 of nāḻikai.

**ம.** உயிர், **க.** உசிர், **தெ., பட., து.** உசுரு; **கோத.** உச்ர்; **துட.** உசிர், **குட.** உசிரி; **குரு.** உச்சனா; மால். உசே; **பிரா.** உச்ர்; *E* air; *M.E. eir, ayre; OF* air; *L* aer.

*[உய் → உயிர்]*

**உயிர்ஊது-தல்** *uyir-ūdu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***குழந்தையின் நெற்றியில் ஊதுதல்;*** to blow the forehead of infants.

**க.** உசுரு ஊது

*[உயிர் + ஊது உயிர்ப்பது = உயிர்த்தல், மூச்சு விடுதல். உயிர் - முதனிலைத் தொழிலாகுபெயர்.]*

**உயிர்க்கட்டை** *uyir-k-kattai,* பெ. (n.) ***உடல்;*** (வின்.); body. (செ.அக.).

**க.** உசிர்நெலே.

*[உயிர் + கட்டை.]*

**உயிர்க்கணம்** *uyir-k-kanam,* பெ. (n.) ***உயிரெழுத்துக் கூட்டம்;*** vowels. (செ.அக.).

*[உயிர் + கணம்]*

**உயிர்க்கப்பண்ணல்** *uyirkka-p-pannal,* பெ. (n.) ***உயிர் பிழைக்கச் செய்தல்;*** to reanimate; to bring back to life. (சா.அக.).

*[உயிர்க்க + பண்ணல்.]*

**உயிர்க்கயிறு** *uyir-k-kayiru,* பெ. (n.) 1. ***உறுதியுள்ள கயிறு;*** strong rope or cable. "வடம் போலேயிருக்கிற வாசுகியை வலிய உயிர்க் கயிறாகச் சுற்றி" (திவ். பெரியாழ். 1,6,11, வியா, பக்.135): 2. ***பாம்பு;*** snake. (செ.அக.).

*[உயிர் + கயிறு.]*

**உயிர்க்கழு** *uyir-k-kalu,* பெ. (n.) ***கழுவகை;*** form of stake for impalement designed to prolong the agony. "உயிர்க்கழு வினவா முன்னர்" (திருவாலவா. 38,27). (செ.அக.).

*[உயிர் + கழு.]*

**உயிர்க்காப்பாற்றி** *uyir-k-kāppāṟṟi,* பெ. (n.) ***உயிர் மருந்து;*** elixir of life.

*[உயிர் + காப்பாற்றி.]*

**உயிர்க்கால்** *uyir-k-kāl,* பெ. (n.) ***முதன்மைக்காற்று;*** one of the five vital airs (prana) supposedly controlling the functions of the body. (சா.அக.).

*[உயிர் + கால் கால் = காற்று.]*

**உயிர்க்கிழவன்** *uyir-k-kiḻavaṉ,* பெ. (n.) ***கணவன்;*** husband, considered as the lord of his wife's life. "தன்னுயிர்க் கிழவனை யடைந்து" (திருவிளை. மல யத்.9). (செ.அக.).

*[உயிர் + கிழவன்.]*

**உயிர்க்குயிர்** *uyir-k-kuyir,* பெ. (n.) ***கடவுள்;*** god, who is the soul of the soul. உயிர்க்குயிரா யங்கங்கே நின்றான் கோயில்" (தேவா. 575,4). (செ.அக.).

*[உயிர் + கு + உயிர்.]*

**உயிர்க்குரங்கு** *uyir-k-kuraṅgu,* பெ. (n.) ***எலும்புக்கூடு;*** the skeleton. (சா.அக.).

*[உயிர் + குரங்கு = வளைந்த எலும்புக்கூடு.]*

**உயிர்க்குறடு** *uyir-k-kuṟaḍu,* பெ. (n.) ***எலும்பு;*** bone. (சா.அக.).

*[உயிர் + குறடு.]*

**உயிர்க்கொலை** *uyir-k-kolai,* பெ. (n.) 1. ***உயிர் வாங்குதல்;*** taking of animal or human life "ஊனை விரும்பி யுயிர்க்கொலை யெண்ணுவான்" (சிவதரு. பாவ. 75). 2. ***துன்புறுத்திக் கொல்லல்;*** taking of life by gradual dismemberment of limbs and organs. "நற்கொலையாகக் கொல்ல வொண்ணாது, உயிர்க் கொலையாகக் கொல்ல வேணும்" (ஈடு. 9,9,1). (செ.அக.).

*[உயிர் + கொலை.]*

**உயிர்குடி-த்தல்** *uyir-kuḍi-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உயிரைப்போக்குதல்;*** to devour life, said of blood thirsty demons and malevolent deities. "வானவரை யெல்லாந் தின் றுயிர்குடித்து" (கந்தபு. சூரபன். வதை. 455). (செ.அக.).

*[உயிர் + குடி.]*

**உயிர்கொடுக்குமூலி** *uyir-koḍukku-mūli,* பெ. (n.) 1. ***பிழைக்கச் செய்யும் மூலிகைகள்;*** herbs giving or prolonging life. 2. ***உயிர்தரு மருந்து;*** the philosopher's stone sought for by the alchemists for prolonging life (சா.அக.).

*[உயிர் + கொடுக்கும் + மூலி.]*

**உயிர்ச்சரக்கு** *uyir-c-carakku,* பெ. (n.) 1. ***ஒவ்வொரு சரக்கினுள் ளமைந்த வலிவுள்ள பொருள்;*** the component part in every drug. 2. ***முதன்மைச் சரக்கு;*** main substance in medicine; main drug in a medicine. (சா.அக.).

*[உயிர் + சரக்கு.]*

**உயிர்ச்சூது** *uyir-c-cūdu,* பெ. (n.) ***ஆடு, கோழி முதலிய வற்றைப் போர் பொருத்தி யாடுகை*** (சங். அக.) gambling with living animals as stakes, a term used to denote that kind of gambling involved in cock-fight, ram-fight,etc. (செ.அக.).

*[உயிர் + சூது]*

**உயிர்த்தறுவாய்** *uyir-t-taṟuvāy,* பெ. (n.) ***சிக்கலான நேரம்;*** great emergency, critical moment, extreme danger. (செ அக.).

*[உயிர் + தறுவாய்.]*

**உயிர்த்தன்மை** *uyir-t-taṉmai,* பெ. (n.) ***உயிரோடு கூடிய தன்மை;*** living date. (சா.அக.).

*[உயிர் + தன்மை]*

**உயிர்த்துணை** *uyir-t-tuṇai,* பெ. (n.) 1. ***இக்கட்டான நேரத்தில் உதவுபவன்(ள்);*** friend in need. 2. ***உயிர்த் தோழன்,தோழி;*** intimate friend, dear as life. "ஆருயிர்த் துணையாய் வந்த" (பாரத. இராச. 28). 3. ***மனைவி;*** wife. (செ அக.)

*[உயிர் + துணை]*

**உயிர்த்துணைவன்** *uyir-t-tuṇaivaṉ,* பெ. (n.) 1 ***இக்கட்டான நேரத்தில் உதவுபவன்;*** he who is an intimate friend. "உங்கள் குலத்தனி நாதற்குயிர்த் துணைவன்" (கம்பரா குகப் 25). 2. ***கணவன்;*** husband. (செ.அக.).

*[உயிர் + துணைவன்]*

**உயிர்த்துணைவி** *uyir-t-tuṇaivi,* பெ. (n.) 1 ***கலைமகள்*** (பிங்.), Sarasvati. 2. ***மனைவி;*** wife. (செ.அக.).

க. உசுருவெண்

*[உயிர் + துணைவி.]*

**உயிர்த்தூண்டிற்காரன்** *uyir-t-tūṇḍiṟkāraṉ,* பெ (n) ***ஒரு தீத்தெய்வம்*** (m m), a demon in the temple of the goddess Angālammai, who brings to her the souls of suicides (செ அக.).

*[உயிர் + தூண்டில் + காரன்]*

**உயிர்த்தெழு-தல்** *uyir-t-teḻu* 2. செ.கு.வி (v.i.) 1. ***மயக்கமடைந்தவர் தெளிவு பெற்றெழுதல்;*** to be revived, restored to life. 2 ***செத்தவன் மீட்டும் உயிர் பெற்றெழுதல்;*** to rise from the dead. இயேசு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். (செ.அக.)

*[உயிர்த்து + எழு-தல்]*

**உயிர்த்தோழன்** *uyir-t-tōḻaṉ,* பெ. (n.) ***உற்ற நண்பன்;*** bosom friend, inseparable companion (செ.அக.).

*[உயிர் + தோழன்]*

**உயிர்த்தோழி** *uyir-t-tōḻi,* பெ. (n.) ***பாங்கி;*** woman's trusted female companion. "தன்னுடைய வின்னுயிர்த் தோழியால்" (திவ். இயற்.பெரியதிரும 62). (செ.அக.).

*[உயிர் + தோழி]*

**உயிர்த்தோற்றம்** *uyir-t-tōṟṟam,* பெ. (n.) ***உயிர்களின் பிறவி;*** genesis of life in four classes of living organisms. (செ.அக.).

*[உயிர் + தோற்றம்.]*

**உயிர்தருமருந்து** *uyirtaru-marundu,* பெ. (n.) ***உயிர் நீட்டிக்கும் மருந்து*** (திவா.); elixir of life. (செ.அக.).

*[உயிர் + தரு + மருந்து.]*

**உயிர்நிலை** *uyir-nilai,* பெ. (n.) 1. ***உடம்பு;*** body as the seat of life. ''அன்பின் வழிய துயிர்நிலை'' (குறள் 80). 2. ***ஆதனின் இயல்நிலை;*** nature of soul. ''மெய்யாமுயிர் நிலையும்'' (திவ். திருவாய். தனியன்.). 3. ***உயிர் தங்கும் இடம்;*** seat of life, any vital part of the body. ''நீயுன துயிர்நிலை கூறாய்'' (பாரத. பதினெட். 173). 4. ***உயிர்ப்பு ஒழுங்கு*** (பிராணாயாமம்); regulation of breath 5. ***உட்கருத்து;*** inner meaning. 6. ***ஆண்குறி அல்லது பெண்குறி*** (உ.வ.); genital organs. (செ.அக.).

**க.** உசிர்நெலே.

*[உயிர் + நிலை.]*

**உயிர்நிலைப்புண்** *uyir-nilai-p-puṇ,* பெ. (n.) ***உடம்பின் உயிர்நிலைப் பாகங்களிலேற்படும் புண்;*** wound, injury or sore on a vital part of the body. (சா.அக.).

*[உயிர் + நிலை + புண்.]*

**உயிர்நூல்** *uyir-nūl,* பெ. (n.) ***உயிரோம்பும் முறையைத் தழுவிய நூல்;*** a treatise on protection of life; science of health. (சா.அக.).

*[உயிர் + நூல். ]*

**உயிர்ப்பயிர்கள்** *uyir-p-payirgaḷ,* பெ. (n.) ***எல்லாவகை உயிர்கள்;*** all lives in the animal kingdom; all things with life. (சா.அக.).

*[உயிர் + பயிர்கள்.]*

**உயிர்ப்பலி** *uyir-p-pali* பெ. (n.) 1. ***உயிரையே கொடுக்கும் காணிக்கை;*** sacrifice of life. . 2. ***வீரன் தன் தலையைக் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி.*** (தொல். பொருள்.59 உரை.); warrior beheading himself as an offering to the goddess of war, an ancient custom. 3. ***உயிர்ப்பிச்சை;*** saving a person's life. ''ஒருயிர்ப்பலி நீ வழங் கென்றாள்'' (பிரமோத்.2,16). (செ.அக.).

*[உயிர் + பலி.]*

**உயிர்ப்பலைவு** *uyir-p-palaivu,* பெ. (n.) ***மூச்சினலைவு;*** the wave life motion of respiration. (சா.அக.).

*[உயிர்ப்பு + அலைவு.]*

**உயிர்ப்பழி** *uyir-p-paḻi,* பெ. (n.) ***கொலை செய்தவனைத் தொடரும் பழி*** (வின்.); guilt of murder, vengeance, divine or human, of the foul deed of murder pursuing the murderer to death. (செ.அக.).

*[உயிர் + பழி.]*

**உயிர்ப்பற்று** *uyir-p-paṟṟu,* பெ. (n.) ***உயிரின் தொடர்பு;*** desire for life (சேரநா.).

**க.** உசிர்பத்து

*[உயிர் + பற்று ]*

**உயிர்ப்பன** *uyir-p-paṉa,* பெ. (n.) ***மூச்சுடைய விலங்குகள்;*** breathing animals. (சா.அக.).

*[உயிர்ப்பு + அன் + அ = உயிர்ப்பன. (வி.அ.பெ.).]*

**உயிர்ப்பாங்கி** *uyir-p-pāṅgi,* பெ. (n.) ***தன்னை விட்டு நீங்காத தோழி;*** intimate female friend. (ஆ.அக.).

*[உயிர் + பாங்கி.]*

**உயிர்ப்பி[1]-த்தல்** *uyirppi-,* 1. பி.வி. (caus). 1. ***பிழைக்கச் செய்தல்;*** reviving; restoring to life; reanimating. 2. ***உயிர்கொடுத்தல்;*** giving life. 3. ***இறந்தோரை எழுப்புதல்;*** animating persons apparently dead. (சா.அக.).

**ம.** உயிர்ப்பிக்குக, **க.** உசிரிக்கு.

*[உயிர் → உயிர்ப்பி. (பி.வி.)]*

**உயிர்ப்பிச்சை** *uyir-p-piccai,* பெ. (n.) ***உயிரையளிக்கை;*** gift of life, saving one's life. உயிர்ப்பிச்சை தரவேணுமென்று தெய்வத்தினிடம் வேண்டிக்கொண்டார். (செ.அக.).

*[உயிர் + பிச்சை.]*

**உயிர்ப்பிப்பு** *uyir-p-pippu,* பெ. (n.) ***பிழைப்பித்தல்;*** reviving life. (சா.அக.).

*[உயிர் → உயிர்ப்பி → உயிர்ப்பிப்பு.]*

**உயிர்ப்பு[1]** *uyirppu,* , பெ. (n.) 1. ***உயிர்த்தெழுகை;*** reanimation, resurrection. 2. ***சோர்வு நீங்கிப் புதுவலிவு அடைகை;*** revival. 3. ***மூச்சு;*** breath, respiration. ''ஊனிலுயிர்ப்பை யொடுக்கி'' (தேவா.1173,3). 4. ***தெய்வப்படிமையிலுள்ள தெய்வ ஆற்றலை வருவிக்கை;*** invocation to a deity to come and abide in an idol. 5. ***காற்று;*** wind, air. ''ஒல்லென வீழ்வுறு முயிர்ப்பின் காவலன்'' (கந்தபு. திருவவ.13). 6. ***பெருமூச்சு.*** sighing. ''நெட்டுயிர்ப் போடுற்ற பிணம்'' (நீதிநெறி.31). 7. ***நறுமணம்;*** sweet fragrance. ''உயிர்க்குமெல் லுயிர்ப்பெதி ரோடி'' (பாரத.குருகுல.91) 8. ***இளைப்பாறுகை;*** rest, repose. ''நின்னுயவுநோய்க் குயிர்ப்பாகி' (கலித். 35). 9. ***செயலறவு;*** state of being undone, helplessness when deprived of power or energy. கருத லாராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅ'' (தொல். பொருள்.260.).

**ம.** உயிர்ப்பு.

*[உயிர் → உயிர்ப்பு.]*

**உயிர்ப்பு[2]** *uyirppu,* பெ. (n.) ***ஒரு கால அளவு;*** a measure of time. கணம் வளியுயிர்ப்புத் தோவம்'' (மேருமந்.94). (செ.அக.).

*[உயிர் → உயிர்ப்பு.]*

**உயிர்ப்புவீங்கு-தல்** *uyirppu-vīngu-,* 5. செ.கு வி. (v.i.) ***பெருமூச்சு விடுதல்;*** to heave a deep sigh, fetch a deep breath "உண்ணினைப் போவிநின் றுயிர்ப்பு வீங்கி னாள்" (கம்பரா. மீட்சி.70). (செ அக ).

*[உயிர்ப்பு + வீங்குதல்.]*

**உயிர்ப்புனல்** *uyir-p-puṉal,* பெ. (n.) ***குருதி;*** blood, lit, life-fluid. "புண்ணிடைப் பொழியுயிர்ப்புனல் பொலிந்து வரவும்" (கம்பரா விராதன்.44). (செ.அக.).

*[உயிர் + புனல்.]*

**உயிர்ப்பொறை** *uyir-p-poṟai,* பெ. (n.) ***உடம்பு;*** body, the support of life. "உழந்து விழிபெற்ற தொருயிர்ப் பொறையும்" (கம்பரா.உருக்காட்,65). (செ.அக.).

*[உயிர் + பொறை ]*

**உயிர்பிழை-த்தல்** *uyir-piḻai-,* 4. செ கு.வி (v i.). 1. ***உயிர் வாழ்தல்;*** to live, subsist. 2 ***தப்பிப்பிழைத்தல்;*** to survive, escape with life, live through a time of peril. (செ.அக.).

*[உயிர் + பிழை.]*

**உயிர்போ-தல்** *uyir-pō-,.* 8. செ கு.வி. (v.i.). 1. ***சாதல்;*** to expire, die. 2. ***அறிவு போதல்;*** to become insensible, lose consciousness, faint "உயிர் போயிருந்தான் மாதோ" (சீவக. 2196) (செ அக.)

*[உயிர் + போ ]*

**உயிர்மருந்து** *uyir-marundu,* பெ. (n.) 1 ***வாழ்நாள் நீட்டிக்கும் மருந்து;*** elixir of life. "தெளிந்தவ ருயிர்மருந் தாய்" (திருவாலவா.43,17). 2. ***சோறு;*** food, the sustainer of life; boiled rice."அருந்துயிர் மருந்து முன்னங் கையிற் கொண்டு" (மணிமே.25,160). (செ.அக.).

*[உயிர் + மருந்து.]*

**உயிர்மாய்-த்தல்** *uyir-māy-,.* 2. செ.குன்றாவி. (v.t.) ***கொல்லல்;*** to deprive of life, to kill. (சா.அக.).

*[உயிர் + மாய்-த்தல்.]*

**உயிர்மாற்றல்** *uyir-māṟṟal,* பெ. (n.) 1. ***கொலை செய்தல்;*** murdering. 2. ***தற்கொலை;*** suicide.

*[உயிர் + மாற்றல் ]*

**உயிர்மூலி** *uyir-mūli,* பெ. (n.) ***உயிர்ச்சத்துள்ள மூலி;*** any drug with an active principle. (சா.அக.).

*[உயிர் + மூலி.]*

**உயிர்மெய்** *uyir-mey,* பெ. (n) 1. ***ஒற்று முன்னும் உயிர் பின்னுமா யிணைந்து ஒலிக்கு மெழுத்து;*** consonant -vowel, composed of a consonant and a vowel, in the written character of which the vowel animates the consonantal sound whose articulation always precedes in pronunciation, one of ten cārpeḻuttu. "ஒற்றுமுன் னாய் வரு முயிர்மெய்" (நன்.89). 2. ***உயிருடம்பு;*** a living body. (செ.அக.).

*[உயிர் + மெய்.]*

**உயிர்வாங்கு-தல்** *uyir-vāngu-,.* 5. செ.குன்றாவி (v.t.) ***கொல்லல்;*** to kill. (சா.அக ).

*[உயிர் + வாங்கு ]*

**உயிர்வாழ்-தல்** *uyirvāḻ-,* 2 செ.கு.வி. (v i.) ***உயிருட னிருத்தல்;*** to live. "இரந்து முயிர் வாழ்தல் வேண்டின்" (குறள், 1062). (செ.அக.).

*[உயிர் + வாழ் ]*

**உயிர்வாழ்க்கை** *uyir-vāḻkkai,* பெ. (n.) ***உயிர் வாழ்தல்;*** living (செ.அக ).

*[உயிர் + வாழ்க்கை.]*

**உயிர்விடு-தல்** *uyir-vidu-,* 20. செ.கு வி. (v.i.) 1. ***ஒருவருக்காக அல்லது நற்செயலுக்காக உயிரைத் தானே விடுதல்;*** to lay down one's life for a person or cause "உயிர் விடுவான் வனக்கனல் வளர்த்து" (ஞானவா சித்தன்.24). 2. ***மிகப்பாடுபடுதல்;*** to work hard. (கொ.வ ). (செ.அக.).

க. உசுருபிடு
*[உயிர் + விடு ]*

**உயிர்விளக்கம்** *uyir-viḷakkam,* பெ. (n.) ***ஆதன்*** (ஆன்ம) ***நிலையை அறிகை*** (திருவருள் தலைப்பு. பக்.59); knowledge of the nature of Atmaṉ. (செ.அக.). (செ.அக.).

*[உயிர் + விளக்கம்.]*

**உயிர்வை-த்தல்** *uyir-vai-,* 4. செ.கு.வி (v.i.) 1. ***இறத்தல்;*** to die "அழனிலை யத்தத் தசைந்துயிர் வைப்ப" (பெருங். இலாவாண. 9,129). 2 ***பற்றுவைத்திருத்தல்;*** to have more affection, regard. (செ அக.).

ம. உயிரெடுக்குக.

*[உயிர் + வை ]*

**உயிரடங்கு-தல்** *uyir-aḍangu-,* 5. செ கு.வி. (v i.). 1 ***மூச்சொடுங்குதல்;*** to be in a state of unconsciousness in a swoon, to have one's animation suspended. 2. ***இறந்துபடுதல்;*** to die. (செ.அக.).

*[உயிர் + அடங்கு ]*

**உயிரடை-தல்** *uyir-aḍai-,* 2. செ.கு.வி. (v.i.) ***மயக்கந் தெளிதல்;*** to revive, to be re-animated. (செ.அக.).

*[உயிர் + அடை-தல்.]*

**உயிரவர்** *uyir-avar,* பெ. (n.) ***வாழ்கின்றவர்;*** living persons. (செ.அக ).

ம. உயிரவர், க. உசிரி.
*[உயிர் + அவர் ]*

**உயிரவை** *uyir-avai,* பெ. (n.) ***உயிர்த்தொகுதி;*** the world with all its life. "உயிரவை யொடுங்கி" (சி.சி.1,32). (செ.அக.).

*[உயிர் + அவை.]*

**உயிரளபு** *uyir-alabu* பெ. (n.) ***உயிரளபெடை*** பார்க்க; see *uyir-alabedai,* "உயிரள பெழுமூன்று" (நன்.61). (செ.அக.).

*[உயிர் + அளவு.]*

**உயிரளபெடை** *uyir-alabedai,* பெ. (n.) ***தனக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கும் உயிரெழுத்து.*** (நன்.91, உரை), vowel which sounds with more than its normal quantity, which fact is indicated in writing by placing a short vowel of the class after the long vowel, as in ஓஒதல் வேண்டும், one of šārbeluttu. (செ.அக.)

*[உயிர + அளபெடை.]*

**உயிரிலங்கி** *uyiril-angi,* பெ. (n.) ***உயிர்த்தீ*** பார்க்க. (சூடா); see *uyirttī.* (செ.அக.).

*[உயிர் + இல் + அங்கி. 'இல்' இடப்பொருளில் வந்த ஏழன் உருபு அங்கி = தீ.]*

**உயிரினம்** *uyirinam,* பெ. (n.) 1. ***உயிர் வகைகள்;*** living beings. 2. ***உயிரெழுத்துகள்;*** vowels. (ஆ.அக.).

*[உயிர் + இனம்.]*

**உயிருண்(ணு)-தல்** *uyir-unnu-,* 13. செ.குன்றாவி. (v.t.). 1. ***உயிரைப் போக்குதல்;*** to devour life, kill "பெருங் கூற் றுயிருண்ணு மாறும்" (திரிகடு.88) 2. ***தன்னுணர் விழத்தல்;*** to subjugate a person's will. "இன்பேயருளி யெனையுருக்கி யுயிருண்கின்ற வெம்மானே" (திரு வாச.44,3). (செ.அக.).

*[உயிர் + உண்ணு-தல்.]*

**உயிருதவி** *uyir-udavi,* பெ. (n.) 1. ***இக்கட்டில் உதவுகை;*** aid when life is in danger. 2. ***உயிர்கொடுத்துதவுகை;*** aid by sacrificing one's life. (செ.அக.).

*[உயிர் + உதவி ]*

**உயிரெடு-த்தல்** *uyir-edu-,* 18. செ.குன்றாவி. (v.t.). 1. ***உயிரை வாங்கிவிடுதல்;*** to take away life. 2. ***துன்புறுத் துதல்*** (வின்.); to give great trouble. (செ.அக.).

ம. உயிரு எடுக்குக.
*[உயிர் + எடு.]*

**உயிரெழுத்து** *uyir-eluttu,* பெ. (n.) ***உயிர் போல் தனித்தியங்கக்கூடிய எழுத்து;*** vowel, a sound having life in itself or its written character. மெய் எழுத்துக்கு உயிர் போல இருத்தலால் இப்பெயர் பெற்றன. அவை அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகப் பன்னிரண்டு.

*[உயிர் + எழுத்து.]*

உயிர்த்த அளவிலேயே தோன்றுவது. நா, உதடு போன்ற ஒலிப்புறுப்புகளின் தொடுதல், படுதல், சுருங்கல் போன்ற எவ்வகை முயற்சியினையும் துணைக்கொள்ளாது வாய்திறந்த குரலோசையின் வேறுபாட்டளவிலேயே உயிர்கள் பிறக்கின் றன என்பது புளும்பீல்டின் வரையறை - உயிர்த்த அளவி லேயே தோன்றுவது உயிரெழுத்து என்பது தம் அளவில் தம்மையே சுட்டி நிற்பதைக் காண்க. 'vowels are modifications of voice sound that involve no closure, friction or contact of the tongue or lips' - Bloomfield, L, Language, P 102

**உயிரைவாங்கு-தல்** *uyirai-vāngu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1 ***கொலை செய்தல்;*** to take away life. 2. ***துன்பப்படுத்துதல்;*** to persecute. (செ.அக.)

*[உயிர் + ஐ + வாங்கு-தல் ]*

**உயிரொடுங்கு-தல்** *uyir-odungu-,* 7 செ.கு.வி. (v.i.) 1. ***உயிர் வலுக் குறைதல்;*** to be reduced considerably, as the animating powers before death 2. ***சாதல்;*** to die. (W). 3. ***ஓகத்தில் மூச்சொடுங்கல்;*** suspension of breath in Yoga practice. (சா அக.).

*[உயிர் + ஒடுங்கு ]*

**உயிரொழி-த்தல்** *uyir-oli-,* 18. செ.குன்றாவி. (v.t.) ***கொல்லல்;*** to kill, murder. (ஆ.அக.).

*[உயிர் + ஒழி ]*

**உயிரொளி-த்தல்** *uyir-oli-,* 7 செ.கு.வி. (v.i.) ***உயிர்க்கு இக்கட்டுவந்தது போற் காட்டுதல்;*** to feign great weariness or sickness, in order to gain an object. (J.). (செ அக.).

*[உயிர் + ஒளி ]*

**உயிரொளித்தகள்ளன்** *uyir-olitta-kallan,* பெ. (n.) ***தன் செல்வநிலையை மறைத்துப் பிறரை இரந்து ஏமாற்று வோன்;*** cringing deceiver who, when he is really rich and strong, pretends the contrary state. (செ.அக.).

*[உயிர் + ஒளித்த + கள்ளன்.]*

**உயிரோடிரு-த்தல்** *uyirōdiru-,* 3. செ.குன்றாவி. (v.t.) ***பிழைத்திருத்தல்;*** to survive.

*[உயிர் + ஓடு + இரு. ஓடு - மூன்றன் உருபு.]*

**உர-த்தல்** *ura-,* 3. செ.கு.வி. (v.i.). 1. ***கெட்டியாதல்;*** to become firm, hard, as the soil. "உரத்துத் தரிக்கு மிகுதரணி தானே" (சிவப்பிர.2.27). 2. ***முருடாதல்;*** to become thick, coarse, as paper உரத்த கடுதாசி. 3 ***வலத்தல்;*** to become strong, furious as the wind. உரத்த காற்று. 4. ***எடுப்பாதல்;*** to become loud, as the voice; to become harsh, as a noise. உரத்துப் பேசினான். 5. ***கொந்தளித்தல்;*** to rage, be boisterous as the sea. உரத்த கடல். 6 ***கடுமையாதல்;*** to become sharp, as a contest;to become violent as a controversy. உரத்த தருக்கம். 7. ***மிகுதல்;*** to become powerful, intense, as the hot sun. உரத்த காய்ச்சல்.

ம. உரக்குக, க. ஒரபு (கெட்டி), தெ. உக்கு (கெட்டி).

*[உல் → உரு → உர. உல் = செறிதல், இறுகுதல், மிகுதல், கடுமையாகுதல்.]*

**உரக்க**[1] *urakka,* கு.வி.எ (adv.). ***குரலோங்க;*** loudly, distinctly. உரக்கப் பேசு. (செ.அக.).

ம. உரத்த (சொன்ன).

*[உல் = செறிதல், இறுகல், மிகுதல், கடுமையாதல். உல் → உரு → உர → உரக்க ]*

**உரக்க**[2] *urakka,* கு.வி.எ (adv.). ***உறுதியாக;*** firmly, tightly. 'அவற்றை யுரக்கப் பிடித்துக்கொண்டேன்'. (ஈடு. 10,8,3, வ்யா. பக். 263). (செ.அக ).

ம. உரத்த

*[உல் → உரு → உர → உரக்க.]*

**உரகடல்** *urakadal,* பெ. (n.) 1. ***கொந்தளிக்குங்கடல்.*** (வின் ); boisterous sea, sea generally rough. 2 ***பெருங்கடல்*** (ஆ.அக ); ocean. (செ.அக.).

*[உரு → உர + கடல்.]*

**உரகசீரகம்** *uraga-śīragam,* பெ. (n.) ***காட்டுச் சீரகம்;*** wild cumin-vernonia anthelmintica. (சா.அக.).

*[உரகம + சீரகம் உரகம் = கடுமை.]*

**உரகதம்** *uragadam,* பெ. (n.) ***பாம்பு;*** serpent. "உரகத வாரந் தோற்றாது" (திருவிளை. நரிபரி.85) (செ அக.)

*[உர + கதம் உர = கடுமையான. கதம் = சினம் ]*

**உரகபுரி** *uraga-puri,* பெ (n.) ***தஞ்சை மாவட்டத்திலுள்ள கடல்துறைப் பட்டினம், நாகப்பட்டினம்;*** Nāgapattinam, a seaport town.

*[உரகம + புரி.]*

**உரகம்** *uragam,* பெ. (n.) 1. ***பாம்பு;*** snake. serpent. "உரக மெல்லணையான்" (திவ். பெரியாழ். 4, 4, 4.). 2. ***நாகமல்லிகை.*** (மலை.); ringworm-root.

*[உரம் → உரகம் (சு.வி.48 ) ]*

**உரகமல்லி** *uraga-malli,* பெ. (n.) ***நாகமல்லிகை*** (மலை ); ringworm root. (செ.அக.).

*[உரகம் + மல்லி ]*

**உரகர்**[1] *uragar,* பெ. (n.) ***நாகர்;*** a class of demigods called Nāgās, who are supernatural serpents, the upper half being human in form, one of *patinen-kanam.* "உரகர்பே ருயிர்ப்பினான் மயங்கி" (பாரத.குருகுல. 3. (செ அக.).

*[உரகதம் → உரகம்+அர் ]*

**உரகர்**[2] *uragar,* பெ (n.) ***உரவர்*** பார்க்க; see *uravar* (செ.அக.).

*[உல் → உர் → உர → உரகர் ]*

**உரகவல்லி** *uraga-valli,* பெ. (n.) ***வெற்றிலைக்கொடி;*** betal creeper.

*[உரகம் + வலலி ]*

**உரகவாதம்** *uragavādam,* பெ. (n.) ***உடம்பின் ஒரு பாதியில் வலியேற்பட்டுக் கழுத்தும் வாயும் கோணிக் கண்கள் இமை கொட்டாது துன்புறுத்தும் ஒருவகை ஊதைநோய்.*** (யூகிமு 800); paralysis of one side of the body marked by wryneck, wrymouth and inability to wink - a kind of Hemiplegia. (சா.அக.).

*[உரகம் + வாதம் ]*

**உரகன்** *uragan,* பெ. (n.) ***பாம்பு;*** snake, serpent, "உரகன்வாய் கீண்ட மாதவன் போல" (கல்லா.46).

*[உரகம் → உரகன் ]*

**உரங்கம்** *urangam,* பெ. (n ) ***பாம்பு;*** snake, serpent. உரங்கவெங்கொடி யுயர்த்த காவலன்" (பாரத. பதினான்காம். 115). (செ.அக.).

*[உரகம் → உரங்கம் ]*

**உரங்காட்டு-தல்** *uran-kāttu-,* 5 செ.கு வி. (v.i.) ***அன்பு பாராட்டுதல்;*** to show kindness, love. (செ.அக.).

*[உரம் + காட்டுதல் ]*

**உரங்குத்து-தல்** *uran-kuttu-,* 5. செ கு.வி. (v.i ) ***மரத்தைச் சுற்றி மண்கொட்டிக் கெட்டிப் படுத்தல்;*** to pound and harden the earth around trees newly set. (J). (செ.அக.)

*[உரம் + குத்து ]*

**உரங்கொள்ளு-தல்** *urankollu,* 16 செ.கு.வி. (v.i) 1. ***உக்கிரமாதல்;*** to gain force, blow strong, as the wind, to become boisterous as the sea, to rage, as fever. காய்ச்சல் உரங்கொண்டு காய்கிறது. 2. ***கடினமாதல்;*** to be hardened, obdurate. நெஞ்சுரங்கொண்டவன். (செ அக ).

*[உரம் + கொள்ளுதல் ]*

**உரசு-தல்** *uraśu-,* 10. செ.கு வி (v.i.). 1. ***உராய்தல்;*** to rub against உரசியு முரன்றும் (சிலப் 3,14, உரை) 2. ***உறிஞ்சுதல்;*** to absorb. (ஆ அக ).

ம. உரசுக, க. ஒரசு

*[உர் → உரை → உரைசு → உரசு → உரசு-தல (சு வி 48).]*

**உரஞ்சிவந்தான்** *uranjivandān,* பெ. (n.) ***குதிரைவகை*** (அசுவசா 152), species of horse having red hairs on its chest. (செ.அக.).

*[உரம் + சிவந்தான்.]*

**உரஞ்சு-தல்** *uranju-,.* 15. செ.குன்றாவி. (v.t.). 1. ***துடைத்தல்;*** to rub. 2. ***தேய்த்தல்;*** to scrape.

*[உரசு → உரஞ்சு.]*

**உரஞ்செய்-தல்** *uranjey-,* 7 செ.கு.வி. (v.i.). 1 ***உறுதி கொள்ளுதல்;*** to take effect; to be forceful, as in an argument அவரெடுத்த காரியங்களொன்றும் உரஞ்செய்யவில்லை 2. ***வலியுறுதல்;*** to grow strong. (W).

ம. உரசெய்யுக (சொலலுதல)

*[உரம் + செய்-தல ]*

**உரஞ்சொல்(லு)-தல்** *urañ-jol-,* 13. செ.கு.வி. (v.i.) 1. ***உறுதி கூறுதல்.*** (வின்.), to encourage 2 ***துணையாக நிற்றல்; அருகில் இருத்தல்;*** to support, to back up (சேரநா.)

ம. உரசாகுக

*[உரம் + சொல்லு.]*

**உரட்டுக்கை** *urattukkai,* பெ. (n.) ***இடதுகை;*** left hand. (சென்னை வழக்கு)

*[ஒரட்டு → உரட்டு ஒரட்டு + கை]*

**உரண்டம்** *urandam,* பெ. (n) ***காக்கை*** (அ.க.நி.); crow (செ.அக.).

*[உரள → உரண்டு → உரண்டம் = ஒரு பக்கமாகத் தலை சாய்த்துப பார்ப்பது]*

**உரண்டை** *urandai,* பெ. (n.) ***உரண்டம்*** பார்க்க, see *urandam.*

*[உரண்டு → உரண்டம் → உரண்டை.]*

**உரண்டைவலி** *urandai-vali,* பெ. (n.) ***காக்கை வலி;*** epileptic fits. (சா.அக.).

*[உரண்டை + வலி]*

**உரத்த** *uratta,* கு.பெ.எ. (adj.) 1. ***ஆற்றல் உள்ள; உரம் உள்ள;*** strong, vigorous. 2. ***பெருகிய; தீவிரமான;*** increased, severe, intense. 3 ***பருத்த; மோட்டான;*** loud, coarse, rough. (சேரநா.).

*[உரம் → உரத்த]*

**உரதாரை** *uradārai,* பெ. (n) ***நெஞ்சுக்குழல்;*** canal in the region of the thorax - thoracic duct (சா.அக.).

*[உரம் + தாரை]*

**உரநோய்** *uranōy,* பெ. (n) 1. ***மார்புநோய்;*** chest pain from any cause 2 ***சுளுக்கு;*** sprain (சா.அக.).

*[உரம + நோய்]*

**உரப்பம்** *urappam,* பெ. (n.) ***பெருங்காயம்*** (மலை.); asafoetida (செ.அக.)

*[உர → உரப்பு → உரபபம்]*

**உரப்பல்** *urappal,* பெ. (n.) 1 ***அடரொலி;*** whoop. 2 ***திரட்டோசை*** (பிங்.); roaring sound 3 ***வலுவான பல்;*** strong tooth (சா.அக.).

தெ. ரொப்பு.

*[உர → உரப்பு → உரப்பல்]*

**உரப்பன்** *urappan,* பெ. (n.) 1 ***கரப்பான்;*** tetter, scall, scruf. 2 ***பாக்கு;*** areca-nut. 3. (பாக்கு முதலியவற்றை) ***சீவும் கருவி;*** scraper (esp. for scraping areca-nuts). 4 ***சீவு கருவி;*** curry-comb. (சேரநா.)

ம. உரப்பன

*[உரப்பு → உரப்பன்]*

**உரப்பியடி-த்தல்** *urappi-yadi-,* 4 செ.குன்றாவி. (v.t) ***பேச்சால் வெல்லுதல்;*** to overcome by boisterous talk, to brow beat (செ.அக.)

*[உரப்பு → உரபபி + அடி-த்தல்]*

**உரப்பு[1]-தல்** *urappu-,* 15. செ.கு.வி. (v.i.). 1 ***அதட்டியொலித்தல்;*** to whoop, vociferate inarticulately as in driving cattle or in scaring away birds, beasts, or human beings, to shout so as to menace or intimidate "நின்றுரப்பி" (திவ். இயற். சிறிய. ம 37). 2. ***திரண்டொலித்தல்.*** (பிங்.), to bluster, roar, sound loudly.

*[உர → உரப்பு]*

**உரப்பு[2]-தல்** *urappu-,* 5. செ.குன்றாவி (v.t.). 1 ***அச்சுறுத்துதல்;*** to frighten. "காலனை.. உரப்பிய சேவடியான்" (தேவா. 524,3) 2 ***வடமொழி யெழுத்தின் ஐவருக்கத்திலும் இரண்டாம் எழுத்தை உச்சரித்தல்;*** to sound kh, ch, th, th, ph, the aspirates of hard consonants in Skt ஐந்தன் வருக்கத்திலும் உரப்பியும் எடுத்துங் கனைத்தும் சொல்லப்படும் மூன்றும் (நன்.146, மயிலை), 3. ***உரத்து ஒலிக்கச் செய்தல்;*** to cause to sound loudly. "ஒலி முரசுரப்பினானால்" (தணிகைப்பு. வள்ளி 38) (செ.அக.).

*[உர → உரபபு-]*

**உரப்பு[3]** *urappu,* பெ. (n) ***புகழ்;*** fame

ம. உரப்பு

*[உரம → உரம்பு → உரப்பு]*

**உரப்பு[4]** *urappu,* பெ. (n) 1 ***பேரொலி;*** shout, vociferation, roar "நீங்கா வுரப்பினில் வீழ்வதேபோல்" (கந்தபு. காவிரி 44) 2. ***அதட்டு;*** intimidation, bluster, threat. (செ.அக.).

*[உர → உரப்பு]*

**உரப்பு[5]** *urappu,* பெ (n.) 1 ***கடினம்;*** hardness, as of rice that is not well boiled சோறு உரப்பாயிருக்கிறது 2 ***முருடு;*** coarseness or roughness, as of cloth or paper உரப்பானபுடைவை 3 ***மனத்திண்மை;*** resoluteness, strength, firmness of mind 'உரப்பு எத்தைப்பற்ற வெனில்' (ஈடு, 1, 7, 8) 4 ***ஆற்றல்;*** strength (சேரநா) (செ.அக.)

*[உர → உரப்பு]*

**உரப்பு[6]** *urappu,* பெ (n.) 1. ***உரசல்; தேய்ப்பு;*** the act of rubbing. 2. ***எதிர்ப்பு;*** rivalry. (சேரநா.).

ம. உரப்பு

*[உரை → உர → உரபபு]*

**உரப்புத்தாள்** *urappu-t-tāḷ,* பெ. (n.) ***உப்புத்தாள்;*** sand-paper (சேரநா.)

ம. உரபபு தாள்

*[உரப்பு + தாள்]*

**உரப்புப்பிசின்** *urappu-p-piśin,* பெ. (n) ***மியான்மரிலும்*** (பருமாவிலும்) ***அந்தமான் தீவுகளிலும் 80 அடிக்கு***

***மேல் வளரும் மரவகை;*** an ever green tree growing to a height of 80 ft. or more, a native of Burma and the Andaman Islands (செ அக.).

ம. உரிப்பு

*[உரப்பு + பிசின்.]*

**உரபடி** *ura-padi,* பெ (n) ***வலிமை; திடம்;*** strong physique, roughness, strength, firmness of body. உரபடி யான மனிதன் (யாழ்ப்.) (செ அக.)

*[உரம் + படி ]*

**உரபிடி** *ura-pidi,* பெ (n.) ***உரபடி*** பார்க்க (யாழ்ப்.), see *ura-padi.* (செ.அக.).

*[உர + பிடி ]*

**உரம்**[1] *uram,* , பெ (n) 1 ***வலிமை*** (திவா.); strength 2 ***திண்மை;*** hardness, compactness 3 ***திடம்;*** resolution, fortitude, firmness of mind, strength of will "ஒட்டை மனவ னுரமிலி யென்மரும்" (பரிபா 12,51) 4 ***வைரம்*** (வின்.); solid part of timber, heart of a tree 5 ***எரு;*** manure, fertilizer, as strengthening the soil. நிலத்துக்கு உரம்போட வேணும். (செ.அக.).

ம. உரம். க. ஒப்பு. உர்கு. தெ. உக்கு.

*[உர → உரம் ]*

**உரம்**[2] *uram,* பெ (n.) 1 ***மார்பு;*** chest, breast, bosom. "வாளிவந் துரங்குடைந்து" (கம்பரா மாரீச 93) 2 ***அறிவு*** (பிங்.), wisdom, spiritual, knowledge, clearness of understanding 3 ***ஊக்கம்*** (பிங்.), energy, zeal, spirit 4 ***படையமைப்பின் முன்னணி*** (குறள், 767, உரை), van of an army 5 ***குழந்தைகட்கு விழுஞ் சுளுக்கு வகை;*** infantile sprain உரம் எடுக்க வேண்டும் (செ அக) 6 ***நஞ்சுக்கொடி;*** naval cord. 7 ***மாரடைப்பு;*** disease of the heart marked by thoracic pain suffocation (செ அக).

ம. உரம்

*[உர் → உரம் இனி, உரம = தழுவும் உறுப்பு என்றுமாம உர் → உறு உரம > வ. உரம் (இவே) = மார்பு (வே க 39) ]*

**உரம்**[3] *uram,* பெ (n) ***மதில்*** (பிங்.), rampart. (செ அக)

*[உர → உரம் ]*

**உரம்புகு-தல்** *urampugu-,* 4. செ.கு வி. (v.i) ***விசை யோடு புகுதல்;*** to fierce with force. (ஆ அக.)

*[உரம + புகு ]*

**உரம்விழு-தல்** *uram-vilu-,* 2 செ கு.வி (v.i.) ***விழிப் பின்மையால் குழந்தையைத் தூக்கும்போது சுளுக்கு உண்டாதல்;*** to be sprained; to suffer sprain, from rolling on the ground or from being carelessly lifted up, as an infant by one arm. குழந்தைக்கு உரம் விழுந்திருககிறது (கொ.வ.). (செ.அக).

*[உரம + விழு ]*

**உரமடி-த்தல்** *uram-adi-,* 4 செ கு.வி (v.i) ***எருக்கொணர்ந் திடுதல்;*** to cart manure. (உ.வ.). (செ.அக)

*[உரம் + அடி ]*

**உரமண்** *uraman,* பெ. (n.) 1. ***சத்துள்ள நிலம்;*** rich soil. 2. ***கெட்டியான மண்.*** (வின்); hard ungenial soil (செ.அக).

*[உரம் + மண் ]*

**உரமாயிரு-த்தல்** *uramāyiru-,* 2 செ கு வி (v.i) 1. ***வலுவாயிருத்தல்;*** to be strong. 2 ***சுளுக்குக் கொண் டிருத்தல்;*** to be in a sprained condition (சா.அக.).

*[உரம் + ஆய + இரு ]*

**உரமெடு-த்தல்** *uramedu-,* 18. செ குன்றாவி (v.t.) ***குழந்தையின் சுளுக்கை நீக்குதல்;*** to relieve an infant of the sprain caused by careless handling. (உ வ.). (செ அக)

*[உரம் + எடு ]*

**உரல்**[1] *ural,* பெ (n) 1. ***ஒலித்தல்;*** sound 2 ***இடிக்கும் உரல்;*** mortar, made of wood or stone for pounding or polishing grains "முகைவள்ர் சாந்துரல் முத்தார் மருப்பின் உலக்கை" (கலித் 40) 3 ***இடியப்பந் தேங்குழல் முதலிய பணிகாரம் பிழியும் அச்சு;*** mould for making pastry like vermicelli (செ அக.)

ம. உரல், க. வொரலு, ஒரலு, ஒரள், ஒரளு, ஒள்ளு, தெ. ரோலு, கோத. ஒள்கால் குட. ஒர. து. ஒரளு. பட. ஒரலு.

*[உல் → உர் → உரல் உல் = குததுதல ]*

**உரல்**[2] *ural,* பெ (n) ***சிவப்பு;*** redness

*[உல → உா → உரல் = சிவபபு ]*

**உரல்பலம்** *ural-palam,* பெ (n.) ***செங்கள்ளி;*** red variety of square spurge - Euphorbia antiquorum (ruba). (சா அக)

*[உரல + பலம் உரல = சிவப்பு ]*

**உரல்புரம்** *ural-puram,* பெ (n) ***உரல்களம்; நெல் குத்துகின்ற இடம்;*** mortar - shed, a shed in which paddy is pounded (சேரநா)

ம. உரல்புரம

*[உரல் + புரம ]*

**உரல்வரி** *ural-vari,* பெ (n) ***வரிவகை;*** ancient tax (S.I.I.v 106)

*[உரல + வரி ]*

**உரலடி** *ural-adi,* பெ (n.) ***யானை;*** elephant which has legs like mortars. "கடுக்கை யுரலடிமீ துற்றானும்" (தனிப்பா 1,79,158) (செ அக)

*[உரல + அடி ]*

**உரலாணி** *ural-āni,* பெ (n) 1 ***உலக்கை*** (வின்), pestle, rice-pounder 2 ***உரலின் அடிககிடும் மரத்துண்டு;***

wooden plug inserted in a mortar when the bottom is worn away. உரலாணியிட்டாற்போல (தொல் எழுத்து. 99 உரை) (செ அக.).

*[உரல + ஆணி ]*

**உரலாமணக்கு** *ural-āmanakku,* பெ (n) ***ஆமணக்கு வகை;*** species of castor - plant "உரலாமணக்குக்கு . குன்மமும் போம்" (பதார்த்த.248)

*[உரல் + ஆமணக்கு ]*

**உரலில் துவைத்தல்** *uralil-tuvaittal,* பெ (n) ***உரலி லிட்டு இடித்தல்;*** bruising or pounding in a mortar (சா அக )

*[உரலில் + துவைததல ]*

**உரலிலை** *ural-ilai,* பெ. (n) ***உலகுய்யக் கொட்டான்*** பார்கக (பெரியமாட் ); see *ulaguyyak-kottān*

*[உரல் + இலை ]*

**உரவக்காடு** *urava-k-kādu,* பெ (n) ***மலையில் நிலையா கச் செய்யும் வேளாண்மை*** (G.S.A.D. 333); permanent hill cultivation, dist fr. புனக்காடு. (செ அக.).

*[உரவம் + காடு ]*

**உரவண்டு** *uravaṇḍu,* பெ (n.) ***ஒரு கொடிய வண்டு;*** a poisonous beetle. (செ அக.)

*[உரம் + வண்டு ]*

**உரவம்** *uravam,* பெ. (n.) 1 ***வலிமை;*** strength, force, firmness. "உரவ முள்ள தொருழை யின்னுரி" (தேவா. 344,8) (செ அக ) 2 ***மலை;*** mountain.

ம. உரவம், க. ஒர்பு, தெ. உக்கு.

*[உர → உரவு → உரவம் ]*

**உரவர்** *uravar,* பெ. (n.) ***சமணர்*** (யாழ்.அக.); Jains. (செ.அக ).

*[உர → உரவர் = மனவலிமை மிக்கவர்.]*

**உரவல்** *uraval,* பெ. (n) ***உலாவல்;*** wandering, roaming. (ஆ அக.)

*[உலவல → உரவல் ]*

**உரவன்** *uravaṉ,* , பெ (n.) 1. ***வலியோன்;*** strong man. 2 ***அறிஞன்;*** learned man, man of knowledge "உரவரு மடவரு மறிவு தெரிந்தெண்ணி" (பதிற்றுப். 71,25). (செ.அக.). 3 ***அருகன்*** (ஆ.அக.); Arhat.

*[உரவு → உரவன்]*

**உரவியன்** *uraviyaṉ,* பெ. (n.) ***வலியோன்;*** strong man. "முன்கை உரவியரா யிருப்பார்" (திவ். திருப்பா.3, வ்யா.63) (செ அக.).

*[உர → உரவு → உரவியன் ]*

**உரவிழுக்கு** *uraviḻukku,* பெ. (n.) ***மார்புக்கேடு;*** deformity of the chest. (சா.அக.).

*[உரவு + இழுக்கு.]*

**உரவு[1]-தல்** *uravu-,* 5 செ கு வி (v.i.) ***வலியுறுதல்;*** to become vigorous, get strong "வாசிகள் புனலுண் டுரவாவிடில்" (பாரத பதினான் 51). (செ அக.)

*[உரம → உரவு ]*

**உரவு[2]-தல்** *uravu,-* செ கு வி (v.i) ***உலாவுதல்;*** to be in constant motion, as the sea, a river "உரவுநீ ரழுவத் தோடுகலம்" (பெரும்பாண். 350)

ம. உரவுக

*[உல் → உல → உலவு → உரவு → உரவு-தல ]*

**உரவு[3]** *uravu,* பெ. (n) 1 ***வலிமை;*** strength, firmness. "உரவுச்சினந் திருகிய" (புறநா 25,3) 2 ***நெஞ்சுரம்;*** strength of mind or will "உரவுசான் முனிவோர்களுக்கு" (சேதுபு காசிப 43) 3 ***மிகுகை;*** increasing, heightening "உரவுக் கதிர்தெறூஉ முருப்பவி ரமயத்து" (குறிஞ் சிப்.45) 4. ***நஞ்சு;*** poison. "உரவுநீர்ப் பொய்கை நாகங் காய்ந்ததும்" (திவ் திருவாய். 6, 4, 1). 5. ***கடல்;*** sea. (செ.அக.).

*[உரம் → உரவு ]*

**உரவுநீர்** *uravunīr,* பெ (n) 1. ***கடல்;*** sea, being water in motion "உரவுநீர்ப்பரப்பினூர்" (சிலப். 4,79). 2. ***யாறு;*** river, torrent "ஊரங்கணநீ ருரவுநீர் சேர்ந்தக் கால்" (நாலடி, 175). (செ.அக ).

*[உரவு + நீர் ]*

**உரவோன்** *uravōṉ,* பெ (n.) 1 ***வலியோன்;*** strongman. "ஒருதா மாகிய வுரவோ ரும்பல்" (புறநா 18,4) 2 ***ஊக்கமுடையோன்;*** person of spirit, of enthusiasm "சிதைவிடத் தொல்கா ருரவோர்" (குறள், 597.). 3. ***மூத்தோன்.*** (திவா ), senior, elder. (செ.அக ).

*[உரவு → உரவோன்.]*

**உரளி** *urali,* பெ. (n.) ***ஒருவகைப்பூண்டு;*** plant. (சா.அக )

*[உரள் → உரளி ]*

**உரற்கட்டை** *urarkattai,* பெ. (n) 1. ***உரற்குரிய மரக் கட்டை;*** wooden block for a mortar. 2. ***உரல்;*** mortar formed from a block or wood. (செ.அக.).

*[உரல் + கட்டை ]*

**உரற்களம்** *urarkalam,* பெ. (n.) ***அறிஞர் கூடிப் பேசுமி டம்;*** place where wise men hold their debates. "உரற்களத்து மட்டிலும்... நோக்கார்" (ஆசாரக்.100). (செ.அக.).

*[உரன் + களம் ]*

**உரற்குழி** *urar-kuli,* பெ. (n) 1. ***உரலிற் குற்றுங்குழி;*** hollow of a mortar 2. ***குற்றுதற்குத் தரையில் அமைத்த குழி;*** mortar sunk in a floor, hole in the floor for pounding rice. "இடுப்பொடிந்த கோழிக்கு உரற்குழியே கைலாசம்". (செ.அக.).

ம. உரல்குழி.

*[உரல் + குழி.]*

**உரற்குற்றி** *urar-kurri*, பெ (n) ***உரற்கட்டை*** பார்க்க; see *urarkattai*. (செ அக).

*[உரல + குறறி ]*

**உரற்பணை** *urar-panai*, பெ (n) ***தீட்டும்போது அரிசி சிந்தாதவாறு உரலின் மேல் வைக்குங்கூடு;*** cylindrical ring of wicker work placed over the mortar so that rice may not spill in pounding (செ அக )

*[உரல + பணை ]*

**உரற்பெட்டி** *urar-petti*, பெ (n) ***அரிசி சிந்தாதபடி வைக்கும் உரலின் வாய்க்கூடு;*** circular basket or earthen ring placed around the mouth of a mortar for keeping the grain within when pounding it. (செ.அக.)

ம. உரல பெட்டி

*[உரல + பெடடி ]*



உரற்பெட்டி

**உரற்று-தல்** *urarru-*, 5 செ கு வி. (v.i.) ***முழங்குதல்;*** to resound, to roar, as an elephant, to roll, as thunder. யானை யுரற்றொலி யோசையும்'' (சீவக 865) (செ அக.).

***[உரறு → உரறறு ]***

**உரறு-தல்** *uraru-*, 5. செ.கு வி (v.i.) ***முழங்குதல்;*** to resound, reverberate, roar; ''உருமுரறு கருவிய பெரு மலை பிற்பட'' (மலைபடு. 357).

***[உரு → உர → உரலு → உரறு ]***

**உரன்¹** *uran*, பெ. (n) 1. ***திண்மை;*** strength of will, self-control. ''உரனென்னுந் தோட்டியான்'' (குறள், 24). 2. ***பற்றுக்கோடு;*** support, prop ''ஊரன்மன் னுரனல்லன்'' (கலித் 68) 3. ***வெற்றி;*** victory ''உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்'' (குறள், 1263) 4. ***அறிவு;*** knowledge ''உரியதாகுந் தோழிகண் ணுரனே'' (தொல். பொருள் 239).

*[உரம் → உரன்.]*

**உரன்²** *uran*, பெ. (n) 1 ***மார்பு;*** breast. ''உரன்சிங்கநாதங் கிடந்தசைய'' (திருவிளை.உலவாக்.7). 2. ***உள்ளமிகுதி*** (திவா ); impulse, zeal. (செ.அக.)

***[உரம் → உரன் ]***

**உரனர்** *uranar*, பெ (n) ***மனவலியுடையோர்;*** persons of strong will ''உரனர்.. புந்தியாற்றடுப்பர்'' (ஞானவா உபசாந் 66) (செ அக.)

*[உரம் → உரன் → உரனர் ]*

**உராய்-தல்** *uräy*, 2 செ கு வி (v.i) ***உரிஞ்சுதல்*** (பிங் ), to rub, as an animal against a tree, as two branches together (செ அக.)

*[உரை → உராய ]*

**உராய்ஞ்சு-தல்** *uräyñju-*, 8 செ.கு வி. (v.i) ***பொருத்தித் தேய்த்தல்;*** to rub

**உராய்வு** *uräyvu*, பெ (n.) 1 ***தேய்மானம்; உராய்ந்து போதல்;*** rubbing, wearing away 2 ***உராய்ந்த பகுதி;*** a bruise

ம. உரவு

*[உரை → உராய் → உராய்வு ]*

**உரால்** *uräl*, பெ (n) ***ஓடுகை;*** running as a horse, ''குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிநிமிர்ந்து'' (மதுரைக் 387) (செ அக )

*[உல் → உலவு → உரவு → உரால ]*

**உராவு¹-தல்** *urävu-*, 5 செ கு வி (v.i) 1 ***பரவுதல்;*** to move away, spread 2 ***பரத்தல்;*** to spread over, extend ''நிறை கடன் முகந்துராய'' (பரிபா 6,1) 3 ***இடம் விட்டுப் பெயர்தல்;*** to move from its place, to be dislodged ''பொன்னசும்பாடி யளைந்துராய'' (சீவக 37) 4 ***செல்லுதல்;*** to go, pass ''காலென்னக் கடிதுராய்'' (மதுரைக 125) (செ அக )

**உராவு²-தல்** *urävu-*, 5. செ கு வி (v.i) ***வலியடைதல்;*** to become strong, to grow powerful ''உராவி விழுங்கப் பட்டது''. (ஞானவா புகண் 93) (செ அக )

*[உரவு → உராவு ]*

**உரி¹-தல்** *uri-*, 4 செ.குன்றாவி (v.t) 1 ***ஆடை களைதல்;*** to strip off, as clothes ''உரிநத கூறை யுருவத்தொடு'' (தேவா 1011,10) 2 ***தானே எடுத்துக் கொள்ளல்*** (அபகரித்தல்), to deprive of, rob அவன் சொத்தையெலலாம் உரிந்து விட்டான் (உ வ ) (செ அக ) 3 ***இடம் பெயர்தல்; பரவுதல்;*** to shift, spread,

*[உல் → உரு → உரி.]*

**உரி²-தல்** *uri-*, 4. செ.கு.வி. (v.i) ***தோல் முதலியவை கழலுதல்;*** to peel, as skin, bark. (செ.அக.)

ம. உரி

*[உல் → உரு → உரி ]*

**உரி³-த்தல்** *uri-*, 4 செ குன்றாவி (v.t) 1 ***தோல், பட்டை முதலியவற்றைக் கழற்றுதல்;*** to slough off, as a serpent its skin, to flay, excoriate; tc strip off, as bark ''உரித்திடு

முழுவைவன்றோல" (கந்தபு ததீசியு 127) (செ அக ) 2 *பரவுதல்;* to spread

*[உல → உரு → உரி ]*

**உரி**[4] *uri,* பெ (n) 1 *மரம் முதலியவற்றினின்று உரிந்து வரும் தோல்;* rind, peel, skin stripped off "பேழ்வயிற் றரவுரி" (கமபரா சித்திர 4) 2 *பட்டை;* bark "உடுப் பன மரவுரி தழைகள" (தணிகைப்பு நாட 47) (செ அக )

*[உல் → உரு → உரி ]*

**உரி**[5] *uri,* பெ (n) *உரிச்சொல்* பார்கக, see *uri-c-col* "இடையுரி யடுத்து நான்குமாம்" (நன 270) (செ அக )

*[உரு → உரி ]*

**உரி**[6] *uri,* பெ (n) *அரைநாழி;* a measure of capacity = 1/2 measure "உரிவருகாலை" (தொல் எழுத்து 240) (செ அக )

*[உரு → உரி ]*

**உரி**[7] *uri,* பெ (n) 1 *சிவப்பு நிறம்;* red colour 2 *கொத்துமல்லி* பார்க்க (மலை ), see *kottumalli* (செ அக )

*[உரு → உரி ]*

**உரிக்குட்டி** *urikkutti,* பெ (n) 1 *கடல்மீன் வகை;* brownish grey suckerfish 2 *கடல் மீன் வகை;* light brown, suckerfish (செ அக ).

*[உரம → உரி + குட்டி ]*



உரிககுட்டி

**உரிச்சீர்** *uri-c-cir,* பெ (n) *மூவசைச்சீர்* (யாப 12 ) foot of three asai (செ அக )

*[உரி + சீர ]*

**உரிச்சொல்** *uri-c-col,* பெ (n) 1 *பெயரெச்சம், வினையெச்சம் போனறவற்றிற்கு அடியாக விளங்கும தமிழின் நால்வகைச் சொற்களுள் ஒன்று* (நன 442), (Gram) one of a few indeclinables which always have the force of adjective or adverb, one of four parts of speech in Tamil 2 *திரிசொல்* பார்கக, see *tiri-sol*

*[உரி + சொல ]*

பொருளால புடைபெயரும சொல உரிச சொலலாயிறறு

**உரிச்சொற்பனுவல்** *uri-c-cor-panuval,* பெ (n) *நிகண்டு நூல்;* lexicon, nigandu "பிஙகல முதலான உரிசசொற பனுவல்களுள்" (நன் 459, மயிலை)

*[உரி + சொல + பனுவல ]*

**உரிச்சொன்னிகண்டு** *uri-c-connigandu,* பெ (n) *காங் கேயர் இயற்றிய வெண்பாவினா லமைந்த ஒரு நிகண்டு நூல்;* name of a lexicon compiled by Kāngēyar in venbā metre (செ அக )

*[உரி + சொல + நிகணடு ]*

**உரிசூறைகொள்(ளு)-தல்** *uri-sūraikol-,* 13 செ குன் றாவி (vt) *ஆடையைப் பிடுங்கிக்கொள்ளல்;* to strip off a person's clothes by force. "உரிசூறை கொண்டு போனவனை" (ஈடு, 7, 3, 4) (செ அக )

*[உரி + சூறை + கொள ]*

**உரிசை** *urisai,* பெ (n) *சுவை;* taste, relish. "கைப்புப் புளிப்புரிசை" (சினேந்.244) (செ அக )

*[உரி → உரிசை ]*

**உரிஞ்சல்** *uriñjal,* பெ (n) *உராய்கை;* rubbing, chafing "போமதக்குன் றுரிஞ்சலின்" (இரகு. தேனு 88). (செ.அக )

*[உரிஞசு → உரிஞசல ]*

**உரிஞ்சு**[1]**-தல்** *uriñju-,* 5 செ.கு.வி (vi) *உராய்தல்.* (பிங் ), to rub oneself, to rub, as beasts, to rub against one another, as trees

*[உரை → உரி → உரிஞசு ]*

**உரிஞ்சு**[2]**-தல்** *uriñju-,* 5 செ குன்றாவி. (vt) 1. *தேய்த் தல்;* to wear away by rubbing; to grind away, as sandal, to scrape, triturate "நறுங்குறடுரிஞ்சிய தேய்வை" (திருமுரு 33) 2 *பூசுதல்;* to rub on, smear, anoint, as with oil, soap, aromatics "ஊடுமின்னனா ருரிஞசி யாடினார்" (சீவக 2418). (செ.அக )

*[உரி → உரிஞசு ]*

**உரிஞ்சு**[3]**-தல்** *uriñju-,* 5 செ குன்றாவி. (vt) *உள்ளிழுத் துக் கொளளுதல்;* to sip, suck up

*[உறிஞசு → உரிஞசு (கொ வ )]*

**உரிஞு -தல்** *uriñu-,* 5 செ கு வி (vi.) *உரிஞ்சுதல்;* to rub "உரிஞுகன் னடுவோர்" (தணிகைப்பு அகத 497) (செ அக )

*[உரி → உரிஞு ]*

**உரித்தாளி** *urittāli,* பெ (n) *உரித்தானவன்* பார்க்க; see *urittānavan,* (செ.அக )

*[உரித்து + ஆளி.]*

**உரித்தானவன்** *urittāṉavaṉ*, பெ. (n.) 1 ***சொத்துக் குரியவன்;*** proprietor, owner, heir. (கொ வ.). 2. ***தக்கோன்;*** suitable, worthy person. 3. ***நண்பன்;*** friend. (செ.அக.).

*[உரித்து + ஆனவன்.]*

**உரித்திரம்** *urittiram*, பெ. (n.) 1. ***மஞ்சள்*** (மலை.); turmeric. 2 ***மரமஞ்சள்*** (மலை.); tree turmeric. (செ.அக.).

**உரித்து** *urittu*, பெ. (n.) 1. ***உரியது;*** that for which one has a claim. 2. ***உரிமை*** (திவா.); right, proprietorship 3. ***உற்ற நட்பு:*** intimacy, affection, tender regard அவனுக்கு உரித்துள்ளவன். (உ.வ.) (செ அக.).

*[உரி → உரித்து ]*

**உரித்துவை-த்தல்** *urittuvai-*, செ.குன்றாவி. (v.t.) 1. ***வெளிப்படுத்தி வைத்தல்;*** to disclose, reveal, make known "கீழே உரித்து வைத்தாரிறே அவர்கள் ஸ்வரூபத்தை" (ஈடு, 3, 9, 2) 2. ***நேரொப்பாதல்;*** to resemble completely. இந்தப் பிள்ளை தகப்பனை உரித்து வைத்திருக்கிறது. (உ வ.). (செ அக.).

*[உரிதது + வை.]*

**உரிது** *uridu*, பெ. (n.) ***உரிமையானது;*** that which is related. "உரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையின்" (சிலப்.2.40) (செ அக ).

*[உரித்து → உரிது ]*

**உரிப்பொருட்டலைவன்** *uri-p-poruttalaivaṉ*, பெ. (n.) ***களவித் தலைவன்;*** (Akap.) male lover in an erotic appropriate to the special uri-p-porul. "உரிப்பொருட்டலைவன் ஒருவனே யானவாறும் (தொல்.பொருள். 55, உரை). (செ அக )

*[உரி + பொருள் + தலைவன் ]*

**உரிப்பொருள்** *uri-p-porul*, பெ. (n) ***ஐந்திணைகட்கு உரியனவான புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல்களும் அவற்றின் நிமித்தங்களும்.*** (நம்பியகப் 25), (Akap) that distinctive erotic mood in love appropriate to each of the five tracts of land. (செ அக ).

*[உரி + பொருள்.]*

நிலத்திற்கு ஏற்பப் புடை பெயரும் பண்பு உரிப்பொருள் எனப்பட்டது

**உரிமை** *urimai*, பெ. (n.) 1. ***உரித்தாந் தன்மை;*** ownership, proprietorship. 2. ***உரித்தான சொத்து;*** that which is owned. "உரியா ருரிமை யடக்கம்" (நாலடி,170) 3 ***உரிமைநாட்டுதல்;*** claim for right of possession. "உரிமை மைந்தரைப் பெறுகின்றது" (கம்பரா. அயோத் மந்திரப். 63.) 4 ***மனைவி;*** wife "அரசனுரிமையோ டப்பொழில் புகுந்து" (மணிமே 25,1) 5 ***அடிமை;*** slave, dependant, acquisition. 6. ***அடிமைத் தொழில்;*** the services of a bondservant. 'எந்தமக் குரிமை செய்யென" (திவ். பெரியதி 2, 3, 6). 7. ***கடமை;*** duty, obligation "உரிமைதன்னை.. ஆற்ற" (கந்தபு.பட்டாபி.14) 8 ***குணம்*** (திவா.); disposition, nature, quality. 9. ***அன்பு;*** love, affection, tender regard "உரிமையோடொருவ னோக்கினான்" (பாரத குருகுல. 58) 10. ***நட்பு பற்றிய உரிமை;*** privilege of intimacy, liberty on the ground of friendship. நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையாற் செய்வன (குறள், 802, உரை). 11. ***உரிமை;*** liberty. "மீண்டுமுரிமையின் றெய்த" (பாரத. சூது 278).

*[உரி → உரிமை (சு வி 69 )]*

**உரிமைக்கஞ்சி** *urimai-k-kañji*, பெ. (n.) 1. ***இறக்குந் தறுவாயி லுள்ளவனுக்குக் கடைசியாக இனத்தார் வார்க்கும் கஞ்சி;*** conjee poured into the mouth of a dying person as the last token of love and respect (J.). 2 ***ஒருவர் இறந்தவன்று அவருடைய சுற்றத்தார்க்குப் படைக்கும் உணவு*** (வின் ); food served to the relations of a person on the day of his death by the members of his family (செ.அக.).

*[உரிமை + கஞ்சி ]*

**உரிமைக்கட்டு** *urimai-k-kattu*, பெ. (n.) 1. ***திருமணத்திற் குரிய இனமுறைத் தொடர்பு*** (வின்.); consanguinity that allows marriage between the two. 2. ***இனக்கட்டுப் பாடு;*** preservation of one's rights as a relative. (செ.அக.).

*[உரிமை + கட்டு ]*

**உரிமைக்கடன்** *urimai-k-kadaṉ*, பெ (n.) 1 ***உரிமை பற்றிச் செய்யுங் கடமை;*** obligation, as that of a son to support his parents. 2 ***பிணக்கடமை;*** duties and obligations of near relations to perform funeral rites and to show respect to a deceased person (செ அக.).

*[உரிமை + கடன் ]*

**உரிமைக்கலியாணம்** *urimai-k-kaliyāṉam*, பெ. (n.) ***உரிமைத் திருமணம்*** பார்க்க; see *urimai-t-tirumaṉam*

*[உரிமை + கலியாணம் ]*

**உரிமைக்காணி** *urimai-k-kāṇi*, பெ. (n.) ***உரிமையாற் கிடைத்த நிலம்;*** inherited land (செ.அக.)

*[உரிமை + காணி ]*

**உரிமைக்காரர்** *urimai-k-kārar*, பெ (n.) 1. ***உரிமைக் காரன்*** பார்க்க, see *urimai-k-kāraṉ* 2 ***மதுரை முதலிய இடங்களில் வாழும் தப்பட்டை அடிக்கும் இனத்தைச் சார்ந்த பழந்தமிழர்*** (ஆதி திராவிடர்), an Adidravidar drum-beating professional caste living in places like Madurai etc.

*[உரிமை + காரர்.]*

**உரிமைக்காரன்** *urimai-k-kāraṉ*, பெ. (n.) 1. ***சொத்துக் குரிமை யானவன்;*** heir, claimant to a property. 2.

*பொறுப்பு ஏற்றற்குரிய இனத்தான்;* responsible relative, natural guardian (W). (செ.அக).

*[உரிமை + காரன]*

**உரிமை கொண்டாடு-தல்** *urimai-kondādu-,* 5 செ கு வி (vi) *உறவுமுறை கொண்டாடுதல்;* to claim kinship or friendship (செ அக)

*[உரிமை + கொண்டாடு]*

**உரிமைச்சுற்றம்** *urimai-c-cuṟṟam,* பெ (n) *அடிமைத் திரள்;* retinue of slaves "உரிமைச்சுற்றமொடு ஒரு தனி புணர்க்க" (சிலப். 2,88) (செ அக)

*[உரிமை + சுற்றம்]*

**உரிமைச்சோறு** *urimai-c-cōṟu,* பெ (n) *உரிமைக் கஞ்சி* பார்க்க (வின்), see *urimai-k-kañji* (செ அக).

*[உரிமை + சோறு]*

**உரிமைசெப்பு-தல்** *urimai-šeppu-,* 15. செ.கு வி. (vi) *மணம் பேசுதல்;* to negotiate a marriage "துறைவற் குரிமை செப்பினர்" (குறுந்.351). (செ அக)

*[உரிமை + செப்பு]*

**உரிமைசெய்-தல்** *urimaišey-,* 1 செ.கு வி (vi) 1. *கடமை செலுத்தல்* (வின்); to discharge one's duties 2. *அடிமைத் தொழில் செய்தல்;* to do the duties of a servant. "எந்தமக் குரிமை செய்யெனத் தரியாது" (திவ் பெரியதி 2, 3, 6). 3 *சாச்சடங்கு நடத்துதல்* (வின்); to perform obsequies. (செ.அக)

*[உரிமை + செய்]*

**உரிமைத்தத்துவம்** *urimai-t-tattuvam,* பெ (n) 1 *இறந்தவருடைய சொத்தைக் காக்க முறைமன்றத் தலைவரிடம் பெறும் அதிகாரம்;* right of letters of administration to the estate of a deceased person. 2 *வைத்துக் காப்பாற்றும் உரிமை;* right of guardianship as of a minor or a person of unsound mind. (செ.அக.).

*[உரிமை + Skt tatva > தத்துவம்]*

**உரிமைத்திருமணம்** *urimai-t-tirumaṇam,* பெ (n) *இனத் திற்செய்யும் மணம்;* marriage within the prescribed degrees of consanguinity

*[உரிமை + திருமணம்]*

**உரிமைப்பங்கு** *urimai-p-pangu,* பெ. (n.) *உரிமை வழியாய் வரும் பங்கு;* hereditary heirship (ஆ அக).

*[உரிமை + பங்கு]*

**உரிமைப்படை** *urimai-p-padai,* பெ (n.) *கூலிப் படை* (சுக்கிரநீதி 303); paid soldiers, mercenaries

*[உரிமை + படை]*

**உரிமைப்பள்ளி** *urimai-p-palli,* பெ (n) *உரிமை மகளிர் இருப்பிடம்;* queen's apartments "உரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையும்" (சிலப். 27,19) (செ அக)

*[உரிமை + பள்ளி]*

**உரிமைப்பாடு** *urimai-p-pādu,* பெ (n) *உரிய கடமை* (வின்); obligation, duty. (செ.அக.).

*[உரிமை + பாடு]*

**உரிமைப்பிள்ளை** *urimai-p-pillai,* பெ. (n.) *வளர்ப்பு மகன்* (வின்.); adopted child, who is entitled to the property of the adopter.(செ அக.)

*[உரிமை + பிள்ளை]*

**உரிமைப்பெண்** *urimai-p-peṇ,* பெ (n.) 1. *திருமணம் செய்தற்குரிய முறைமையுடையவள்* (வின்); girl in the proper degree of consanguinity to be taken in marriage 2. *உரிமை பற்றித் திருமணம் செய்யப்படும் பெண்* (GTpDi, 94); girl married because of her relationship to the bridegroom, opp.to பெருமைப்பெண். (செ அக.)

*[உரிமை + பெண்]*

**உரிமைபாராட்டு-தல்** *urimai-pārāttu-,* 5. செ.கு.வி. (v.i.) *உரிமை கொண்டாடு* பார்க்க; see *urimaikondādu.* (செ அக.)

*[உரிமை + பாராட்டு]*

**உரிமைமண்** *urimaimaṇ,* பெ (n) *பிணத்தை இடும் குழியில் இனத்தார் போடும் மண்;* earth thrown into the grave by near relatives of the deceased, at a funeral. (செ.அக.).

*[உரிமை + மண்]*

**உரிமைமாநகர்** *urimai-mānagar,* பெ. (n.) *உவளகம்.* (அந்தப்புரம்); harem in a king's palace; zanana. "ஒன்னலர் நுழையா வுரிமை மாநகர்" (பெருங்.உஞ் சைக் 35, 4) (செ.அக.).

*[உரிமை + மா + நகர்]*

**உரிமையாட்சி** *urimai-y-ātci,* பெ. (n.) *சொத்தின் உரிமையைத் துய்த்தல்* (வின்.); possession or right of possession of property devolving on an heir. (செ.அக.).

*[உரிமை + ஆட்சி]*

**உரிமையாளி** *urimai-y-āli,* பெ. (n.) *சொந்தக்காரன்;* owner. (ஆ.அக.)

*[உரிமை + ஆளி]*

**உரிமையிடம்** *urimai-y-idam,* பெ (n) *வீட்டில் மனைவி வாழும் பகுதி;* wife's apartment பள்ளியம்பலம உரிமை யிடம கூத்தப பள்ளி யென இவறறுள நீங்கி (இறை.21, உரை) (செ அக.).

*[உரிமை + இடம்.]*

**உரிமையில்** *urimai-y-il,* பெ (n) *உரிமை மாநகர்* பார்க்க; see *urimai-mānagar.* "ஒழுகுவனண் மாதோ உரிமையின் மறைந்தென்" (பெருங்க மகத 14, 296) (செ அக.)

*[உரிமை + இல்]*

**உரிமையெடு-த்தல்** *urimai-y-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) ***உரிமை பெறுதல்*** (வின்.); to take possession of one's share, as of an inheritance or of produce. (செ.அக.).

*[உரிமை + எடு]*

**உரிமைவழி** *urimai-vaḻi*, பெ. (n.) 1 ***தொடர்பு முறை;*** consanguinity, lineage 2. ***கொடிவழி உரிமை;*** ancestral inheritance. (செ.அக.).

*[உரிமை + வழி]*

**உரிமைவிடு-தல்** *urimai-viḍu-*, 20. செ.கு.வி. (v.i.) 1. ***உரிமை அளித்தல்*** (வின்.); to set free, manumit, as a slave 2 ***உரிமையை விட்டு விடுதல்;*** to give up one's right (செ.அக.)

*[உரிமை + விடு]*

**உரியசை** *uri-y-asai*, பெ. (n.) ***நேர்பு நிரைபசைகள்*** (தொல். பொருள் 318), particular kinds of metrical syllables. (செ.அக.).

*[உரி + அசை]*

**உரியடி**[1] *uri-y-aḍi*, பெ. (n.) ***உரிச்சீரான் வருமடி;*** metrical syllabus of uri-c-cīr.

*[உரி + அடி உரிச்சீரா லானது உரியடி]*

'மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கனுள நேரிறு நானகும் வெள்ளை, அலலன பாவினுள வஞ்சியின பாற்பட்டனவே' மூன்று அசையான் ஆகிய சீர் உரிச்சீர் அஃது எட்டு வகைப்ப டும் அவற்றுள் நேரசை இறுதியாகிய நான்கும் வெண்பா உரிசசீா, அவை அல்லனவாகிய நிரையசை இறுதியாகிய நானகும பா வகையுள் வஞ்சிபபாவின் பகுதியாய் வஞ்சி உரிச்சீா எனப்படும (யாப விருத் 12)

**உரியப்பம்** *uri-y-appam*, பெ. (n.) ***ஒருவகை அப்பம்;*** a kind of cake

ம. உறியப்பம்.

*[உரி + அப்பம்]*

**உரியர்** *uriyar*, பெ. (n.) 1 ***உடையவர்கள்;*** possessor. 2 ***அறிஞர்;*** wisemen. (ஆ.அக.)

*[உரி + அர்]*

**உரியவர்** *uri-y-avar*, பெ. (n.) ***உரிமையுள்ளவர்;*** those who have rights.

*[உரி + அவர்.]*

**உரியவள்** *uri-y-avaḷ*, பெ. (n.) ***உரித்தானவள்; மனைவி;*** wife.

*[உரி + அவள்]*

**உரியவன்** *uri-y-avaṉ*, பெ. (n.) 1 ***உரிமையுள்ளவன்;*** one who has rights, heir. 2. ***அதிகாரி;*** one who is worthy, qualified 3 ***உறவினன்*** (பிங்.), relative 4 ***கணவன்;*** husband. (செ.அக.).

ம. உரியன

*[உரி + அவன்]*

**உரியள்** *uriyaḷ*, பெ. (n.) ***உரியவள்*** பார்க்க; see *uri-y-avaḷ*. (ஆ.அக.).

**உரியன்** *uriyaṉ*, பெ. (n.) ***உரியவன்*** பார்க்க; see *uri-y-avaṉ*.

**உரியார்** *uriyār*, பெ. (n.) ***உரியவர்*** பார்க்க; see *uri-y-avar*.

*[உரியவர் → உரியார்.]*

**உரியாழாக்கு** *uri-y-āḻākku*, பெ. (n.) ***அரையே அரைக் காற் படி;*** 5/8 of measure.

*[உரி + ஆழாக்கு உரியும ஆழாக்கும்]*

**உரியாள்** *uriyāḷ*, பெ. (n.) ***உரியவள்*** பார்க்க; see *uri-y-avaḷ*

*[உரியவள் → உரியாள்]*

**உரியுழக்கு** *uri-y-uḻakku*, பெ. (n.) ***முக்காற்படி;*** 3/4 of measure. (சா.அக.).

*[உரி + உழககு உரியும் உழக்கும்]*

**உரியோர்** *uriyōr*, பெ. (n.) ***உரியவர்*** பார்க்க; see *uri-y-avar*.

*[உரியவர் → உரியார் → உரியோர்.]*

**உரியோள்** *uriyōḷ*, பெ. (n.) ***உரியவள்*** பார்க்க; see uri-y-avaḷ.

*[உரியவள் → உரியாள் → உரியோள்]*

**உரியோன்** *uriyōṉ*, பெ. (n.) ***உரியவன்*** பார்க்க; see *uri-y-avaṉ* (செ.அக.)

*[உரியவன → உரியான் → உரியோன்]*

**உரிவலை** *uri-valai*, பெ. (n.) ***சிறிய மீன்களைப் பிடிக்கப் பயன்படுத்தும் ஒருவகை வலை;*** a kind of fishing-net (சேரநா.).

ம. உரிவல

*[உரி + வலை]*

**உரிவை** *urivai*, பெ. (n.) 1 ***தோல்;*** skin, hide, peel, rind "காரானை யீருரிவைப் போர்வை யானை" (தேவா 13, 8) 2 ***உரிக்கை;*** stripping, peeling off, flaying "மதகரி யுரிவை செய்தவர்" (தேவா 578, 3) (செ.அக.)

ம. உரி

*[உரி → உரிவை]*

**உரு**[1]**-த்தல்** *uru-*, 4 செ.கு.வி. (v.i.) 1 ***பெருஞ்சினங் கொள்ளுதல்;*** to get angry, to be provoked, to exhibit signs of anger "ஒருபக லெல்லா முருததெழுந்து" (கலித் 39, 23) 2 ***அழலுதல்;*** to burn, smart "ஆக முருப்ப நூறி" (புறநா 25,10) 3 ***முதிர்தல்;*** to become ripe, mature "பண்டையூழ்வினை யுருத்தென்" (சிலப் 16,217).

*[உல → உா → உரு]*

**உரு**[2]**-த்தல்** *uru-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1 ***வெருளுதல்;*** to be angry with "ஒள்வாட்டானை யுருத்தெழுந்தன்று".

(பு வெ 3,2) 2 ***ஒத்தல்;*** to bear likeness to, resemble "நின்புக ழுருவின கை" (பரிபா 3,32)

*[உா → உரு → உரு-த்தல ]*

**உரு³-த்தல்** *uru-*, 4 செ கு வி. (v.i) 1. ***தோன்றுதல்;*** to appear, come into existence "உம்மை வினைவந் துருத்த லொழியாதெனும்" (மணிமே. 26,32) 2 ***முளைத்தல்*** (திவா ); to sprout, shoot up 3. ***உரு வெடுத்தல்;*** to take shape, assume a form "அறமுருத் தனையான்" (அரிசமய பரகால 91) 4 ***சுரத்தல்;*** to issue forth, flow up, well, as a spring "உருத்துருத் தமுதூற்றிருந்து" (உபதேசகா. அயமுகி. 16)

*[உல → உர் → உரு.]*

**உரு⁴-த்தல்** *uru-*, 4. செ.கு.வி. (v.i.) ***மிகுதல்*** (சூடா.), to increase. (செ.அக ).

*[உல = தோன்றுதல, மிகுதல். உல் → உர் → உரு ]*

**உரு⁵** *uru*, பெ (n.) ***மான்;*** deer. "கானிடை யுருவைச் சுடுசரந் துரந்து" (திவ் பெரியதி. 1, 4, 2).

*[உரு = அழகு. அழகுடைய மான ]*

**உரு⁶** *uru*, பெ. (n.) 1. ***அச்சம்;*** fear "உருவுட்காகும்" (தொல். சொல். 302). 2 ***அட்டை*** (பிங்.); leech. (செ.அக.)

*[உல் → உர் → உரு = வெப்பம், அச்சம்.]*

**உரு⁷** *uru*, பெ. (n.) 1. ***வடிவு;*** form, shape, figure. "அறறே தவத்திற் குரு" (குறள், 261). 2. ***வடி வழகு;*** beauty of form, loveliness, attractiveness. "உருவுடைக் கன்னியரைப் போல" (நாலடி, 274). 3. ***உடல்;*** body "உருவினி னிறைந்து நின்று" (சி.சி. 4,17). 4 ***சிலை;*** idol "தேவதார்ச்சனை தாம் பண் ணல்போ லுருப்பல பரப்பி" (பிரபோத 11,12) 5. ***உருவமுள்ளது;*** that which appears in outline. "உருவுயி ரென்னின்" (சி சி 4.9). 6 ***உளியாற் செய்த ஓவிய வேலை;*** decorative work in wood carved with the chisel சிற்றுளிகள் சென்று செத்தின உருக்க ளழுந்தின . குறடு (சிறுபாண் 252, உரை) 7 ***தோணி;*** schooner, sloop, small vessel ஐந்து உரு வருகிறது (உ வ.). 8 ***தாலி முதலியவற்றிற் கோக்கும் உரு;*** gold bead or other ornament strung on either side of the marriage badge தாலியுரு (உ.வ.) 9 ***கரு*** (வின்); embryo.

ம. உரு. *Skt rūpam.*

*[உல் (தோன்றுதல்) → உர் → உரு.]*

**உரு⁸** *uru*, பெ. (n.) 1. ***பலமுறை செய்யும் வழிபாடு;*** repetition of a prayer, an incantation or a lesson. 2. ***இசைப்பாட்டு;*** music, song, musical composition. "தாளத்தின் வழியுருவெடுத்து" (உத்தரரா. சீதை 25).

*[உல் → உர் → உரு ]*

**உரு⁹** *uru-*, பெ. (n) ***நிறம்;*** colour. "பல்வேறுருவின் வனப்பமை கோதை" (குறிஞ்சிப். 103).

*[உல் → உர் → உரு ]*

**உருக்கங்காட்டு-தல்** *urukkankāttu-*, 5. செ கு வி (v.i) ***அன்பு காட்டுதல்;*** to show kindness, love (செ அக.).

*[உருத்தல் = வெப்பமுறல், வெய்துறல், மனம உருகுதல உரு → உருககம + காட்டு ]*

**உருக்கம்** *urukkam*, பெ (n) 1 ***மனநெகிழ்ச்சி;*** melting of heart, tenderness, sympathy 2 ***இரக்கம்;*** compassion, mercy, pity "உருக்கமிலவ் வசுரக் குலம்" (இரகு மாலையீ.113) 3 ***அன்பு;*** love, as to a deity, a friend, or a child. "உருக்கத்திற் கரத்தேந்தி" (விநாயகபு. 75,121) (செ.அக.)

ம. உருக்கம்.

*[உல் → உர் → உரு → உருக்கம் ]*

**உருக்கரக்கடை** *uru-k-karakkadai*, பெ (n) ***உருக்கரக்கு*** பார்க்க; see *urukkarakku.*

*[உருக்கு + அரக்கு + அடை ]*

**உருக்கரக்கு** *urukkarakku*, பெ (n) ***நெருப்பிலுருக்கிச் செய்த அரக்கு;*** seed-lac melted and formed into thin cakes, shellac. (சா.அக.).

*[உருக்கு + அரக்கு ]*

**உருக்கரம்** *urukkaram*, பெ. (n.) ***வெண்காரம்;*** borax. (சா.அக.)

*[உரு + காரம் = உருக்காரம் → உருக்கரம்.]*

**உருக்கல்¹** *urukkal*, பெ. (n.) 1. ***கோயில் கட்டியவ ருடைய உரு;*** (Arch.) small statue in stone of a benefactor who built a temple. 2. ***போரில் இறந்த வீரனது உருச்செதுக்கிய கல், வீரக்கல்;*** stone effigy of a hero who died in a battle. (செ.அக.).

*[உரு + கல் ]*

**உருக்கல்²** *urukkal*, பெ. (n.) 1. ***செங்கல்;*** brick. 2. ***உருகின கல், அதாவது சிட்டம்;*** over heated brick or over burnt brick in kilns. (சா அக.).

*[உரு + கல்.]*

**உருக்கன்** *urukkan*, பெ. (n.) ***உடலை வாட்டும் நோய்*** (யாழ்ப்.); wasting disease, of men or of plantains. (செ.அக.).

*[உருக்கு → உருக்கன்.]*

**உருக்கனடி-த்தல்** *urukkanadi-*, 4. செ குன்றாவி (v.t.) 1. ***கருகச்செய்தல்*** (யாழ்ப் ); to blight, as disease, esp. in plantains. 2. ***உடம்பை இளைக்கச் செய்தல்;*** to reduce to leanness; to cause to emaciate (சா.அக.).

*[உருக்கல் → உருக்கன் + அடி.]*

**உருக்காங்கட்டி** *urukkānkatti*, பெ. (n.) ***உருக்காங்கல்*** பார்க்க; see *urukkānkal* (செ.அக.).

*[உருக்கு + ஆம் + கட்டி = உருக்காங்கட்டி.]*

**உருக்காங்கல்** *urukkānkal,* பெ (n) ***உருகிப்போன செங்கல்;*** overburnt brick (செ அக.).

*[உருக்கு + ஆம + கல் ]*

**உருக்காட்டி** *uru-k-kātti-,* பெ. (n.) ***கண்ணாடி;*** mirror. (செ.அக.).

*[உரு + காட்டி ]*

**உருக்காட்டு-தல்** *urukkāttu-,* 5. செ கு வி (v.i) ***உரு வெளியாகத் தோன்றுதல்;*** to appear as a hallucination, a visionary object. ''மாயவன்வந் துருக்காட்டுகின்றான்'' (திவ்.நாச். 12, 3)

*[உரு + காட்டு.]*

**உருக்கி** *urukki,* பெ (n) 1 ***உருகச் செய்வது;*** that which induces melting 2 ***இளைக்கச் செய்வது;*** that which causes one to be reduced, said of a disease or a medicine bringing about such a condition 3 ***மாழை வகைகளை உருக்குபவன்;*** one who melts metals 4. ***உருகிப்போன செங்கல்*** overburnt brick

*[உருக்கு → உருக்கி ]*

**உருக்கிச்சாய்-த்தல்** *urukki-c-cāy-,* 4. செ குன்றாவி (v.t) 1 ***மாழைகளை*** (உலோகங்களை) ***நீண்ட கட்டி யாக உருக்குதல்*** (வின்.); to cast or run metals in bars, or in mass, further use 2 ***வேதியியல் முறையில் மாழைகளை யுருக்கி மருந்தினங்களி லூற்றல்;*** (In Alchemy) pouring a melted metal into a liquid medicine as a method of its purification (சா அக.).

*[உருக்கி + சாய்.]*

**உருக்கியூற்றல்** *urukki-y-ūrral,* பெ. (n.) ***உருகிய மாழை களைப் பொதுவாகச் சாய்த்தல்;*** an ordinary process of casting (சா.அக ).

*[உருக்கி + ஊற்றல்.]*

**உருக்கிவார்-த்தல்** *urukki-vār-* 4. செ.குன்றாவி. (v.t.) ***உருக்கின மாழைகளைக் கருவில் வார்த்தல்;*** to cast, found, run, as a metal (செ.அக.).

*[உருக்கி + வார் ]*

**உருக்கினம்** *urukkinam,* பெ. (n.) 1 ***உருக்குச் சரக்கு;*** that which facilitates the fusion of metals, as borax. 2. ***மைநஞ்சு;*** mineral poison. 3. ***தேன்;*** honey. 4. ***மெழுகு*** wax (சா.அக ).

*[உருக்கு → உருக்கினம்.]*

**உருக்கு[1]-தல்** *urukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***இளகிவிழச் செய்தல்;*** to melt with heat, as metals or congealed substances; to dissolve, liquefy, fuse ''தீயிடை யுருக்குதன் முயன்றான்'' (கந்தபு மார்க்க 131) 2. ***மனம் நெகிழ்த்துதல்;*** to soften, as feelings, to melt, as one's heart எம்பிரானாமஞ்சொல்லி யுருக் கினன்'' (கம்பரா. உருக்காட். 27). 3. ***மெலியச் செய் தல்;*** to reduce, emaciate, as the body. அந்த நோய் உடம்பை உருக்கிவிட்டது 4 ***அழித்தல்*** (திவா.); to destroy. 5 ***வருத்துதல்;*** to afflict, distress

**க.** உக்கு (உருக்கப்பட்ட பொருள்), **ம.** உருக்குக, **குரு.** உர்.

*[உருகு → உருக்கு உருக்கு-தல் (செலவி.80, துலை 53) ]*

**உருக்கு[2]** *urukku,* பெ (n.) 1 ***எஃகு*** (சூடா ), steel. 2 ***உருக்கின பொருள்;*** anything melted, product of liquefaction ''செப்புருக்கனைய'' (கம்பரா கார்கா.91). (செ அக )

**ம.** உருக்கு, **தெ.** உக்கு, **க.** உர்கு, உக்கு, **கோத.** உக், **குட.** உககீ, **து** எரக

*[உருகு → உருககு*

பழங்காலத்தில் இந்தியாவில் செய்யப்பட்ட எஃகு, உக்கு எனப்பட்டதால அது மேலை நாட்டு மொழிகளில wook எனவும், wootz எனவும் திரிந்தது. Wootz-steel made in India, from ancient time, by fusing iron with carbonaceous matter (for wook Ka ukku) (chamber). A kind of steel made in India - misprint for 'wook' on exact rendering of Kannada 'ukku' - steel.*]*

**உருக்கு[3]** *urukku,* பெ. (n) 1. ***வெள்ளி;*** silver. 2 ***வெள்ளிப்பணம்;*** silver coin 3. ***வெண்மை;*** whiteness.

**தெ.** ருக்கு, ரூக்க = ரொக்கம்

*[உருகு → உருகது ]*

**உருக்குக்குகை** *urukku-k-kugai,* பெ. (n) 1 ***மாழைக ளையும் மற்றச் சரக்குகளையும் அதிகமாக உருக்க வேண்டிப் பயன்படுத்துமொரு பெரிய மூசை;*** a big and strong crucible used for melting metals and other substances requiring higher temperature 2 ***மிகு நெருப் பைத் தாங்குவதற் கேற்ற சரக்குகளைப் பயன்படுத்திச் செய்த வச்சிர மூசை;*** a crucible specially made of heat resisting substances and fire-proof materials, so as to withstand great heat or higher temperature. (சா.அக.).

*[உருக்கு + குகை ]*

**உருக்குக்குநண்பன்** *urukku-k-ku-nanban,* பெ. (n.) ***வெள்ளை யாமணக்கு;*** a white of castor plant. (சா அக.).

*[உருக்கு + கு + நண்பன் ]*

**உருக்குகாரம்** *urukku-kāram,* பெ. (n.) 1 ***வெண்காரம்*** (வின்.); borax. 2 ***உருக்குச் சரக்கு;*** anything which promotes melting or fusion.

*[உருக்கு + காரம்.]*

**உருக்குகை** *urukkugai,* பெ (n) ***உருக்குதல்;*** the act of melting. (சா.அக.).

*[உருக்கு → உருக்குகை.]*

**உருக்குச்சட்டம்** *urukku-c-cattam,* பெ. (n.) ***வார்த்த இரும்பு;*** iron which has been cast into moulds - cast iron. (சா அக.).

*[உருக்கு + சட்டம் ]*

**உருக்குச்சரக்கு** *urukku-c-carakku,* பெ (n) ***வெண் காரம்;*** borax (சா அக.)

*[உருக்கு + சரக்கு]*

**உருக்குச்சுண்ணம்** *urukku-c-cunnam,* பெ (n) ***எஃகைக் கொண்டு புடமிட்டெடுத்த சுண்ணம்;*** alkali preparation containing iron and insoluble calcium carbonate as chief ingredients - A kind of ferrous carbonate (சா அக.)

*[உருக்கு + சுண்ணம]*

**உருக்குச்செங்கல்** *urukku-c-cengal,* பெ (n) ***உருக்காங் கல்*** பார்க்க; see *urukkāngal*

*[உருக்கு + செங்கல்]*

**உருக்குத்தட்டார்** *urukku-t-tattār,* பெ (n) ***பொற்கொல் லர்.*** (சிலப் 5, 31, உரை), goldsmiths (செ அக.)

*[உருக்கு + தட்டார்]*

**உருக்குத்து-தல்** *uru-k-kuttu-,* 5 செ குன்றாவி (v.t.) 1 ***உருவம் அமைய வார்ப்படம் வார்த்தல்*** (நெடுநல் 57, உரை), to cast in a mould. 2 ***அம்மை குத்துதல்;*** to vaccinate (செ அக.)

*[உரு + குத்து]*

**உருக்குநெய்யம்** *urukku-neyyam,* பெ (n) 1 ***வெண்ணெய், கோழிமுட்டைக்கரு முதலிய பொருள்களி னின்றும் இறக்கும் எண்ணெய்;*** oil extracted from butter, the yolk of fowl's eggs, etc 2. ***எஃகை யுருக்கும் எண்ணெய்;*** universal solvent for melting steel (சா அக.)

*[உருக்கு + நெய்யம்.]*

**உருக்குப்பாறை** *urukku-p-pārai,* பெ. (n.) ***உட்சூட்டினா லிளகி மொத்தையாகத் திரண்ட கற்பாறை;*** (In Geology) massive rocks called also plutonic or igneous rocks which are believed to have undergone fusion They lie beneath all the other rocks or have some times been forced up through them from beneath They were once in a melted state and on cooling at the surface, formed the original crust of the globe (சா.அக.).

*[உருக்கு + பாறை]*

**உருக்குமண்** *urukku-man,* பெ. (n.) ***உருக்கு மணல்*** பார்க்க, see *urukku-manal.* (செ அக.).

*[உருக்கு + மண்.]*

**உருக்குமணல்** *urukku-manal,* பெ. (n.) ***இரும்புக்கனிமம் அடங்கிய மணல்*** (வின்.); iron ore, iron-sand. (சா.அக.).

*[உருக்கு + மணல்.]*

**உருக்குமணி** *urukku-mani,* பெ. (n) ***காதணிவகை*** (வின்.), solid globules or gold soldered together around a ring and worn by women as ear-drops. (செ.அக.).

ம. உருக்குமணி

*[உருக்கு + மணி]*

**உருக்குமம்** *urukkumam,* பெ (n) 1 ***பொன்*** (சங் அக.), gold 2 ***உருக்கு*** (நாநார்த்த.), steel

*[உருக்கு → உருக்குமம்]*

**உருக்குமுகம்** *urukku-mugam,* பெ (n) ***உருகிவரும் சமயம்;*** the stage at which fusion or melting takes place - melting point (சா அக.).

*[உருக்கு + முகம]*

**உருக்குமுறை** *urukku-murai,* பெ (n) ***முறியாதபடி சரியான பதமாய் உருக்கியெடுத்தல்;*** melting in consistence with the principle of melting process (சா.அக.)

*[உருக்கு + முறை]*

**உருக்குருக்கு** *urukkurukku,* பெ (n) ***கருப்பூரவகை*** (சிலப் 14, 109 உரை), variety of camphor. (செ அக.)

*[உருக்கு + உருக்கு]*

**உருக்குலை-தல்** *uru-k-kulai-,* 2. செ.கு வி (v.i.) 1. ***முன்னுருவம் அழிதல்;*** to become dismembered, to be disunited, as parts of a lock, a house, to become loose deranged, disorganized 2 ***உடல் மெலிதல்;*** to be emaciated, as the body by illness. (செ.அக.)

*[உரு + குலை-தல்]*

**உருக்குவளை** *urukku-valai,* பெ. (n.) ***மெருகாணி*** (சங் அக.), instrument for polishing the precious metals. (செ.அக.).

*[உருக்கு + வளை]*

**உருக்கூட்டு-தல்** *uru-k-kūttu-,* 7. செ.குன்றாவி (v.t.) ***ஒன்றாக்குதல்; ஒன்று கூட்டுதல்;*** to collect, amass, accumulate (சேரநா.)

ம. உருக்கூட்டுக.

*[உரு + கூட்டு.]*

**உருக்கெண்ணெய்** *uru-k-kenney,* பெ. (n) ***உருக்கி வடித்த எண்ணெய்;*** oil prepared by boiling coconut-milk (சேரநா.)

ம. உருக்கெண்ண

*[உருக்கு + எண்ணெய்]*

**உருக்கொடு-த்தல்** *uru-k-kodu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***ஏவி விடுதல்;*** to instigate, set on. 2. ***கொடுமை செய்யத் தூண்டுதல்;*** to incite to evil deeds. 3. ***அறிவுரைத்தல்;*** to give advice. (செ.அக.).

*[உரு + கொடு]*

**உருக்கொள்(ளு)-தல்** *uru-k-kol(lu)-*, 16. செ.கு.வி. (v.i.) 1 ***வடிவெடுத்தல்;*** to take shape. 2 ***கருவிலுருவாதல்*** (வின்); to be conceived in the womb 3 ***ஒழுங்கான வளர்ச்சிடையதல்;*** to attain normal development. 4. ***ஆத்திரங் கொள்ளுதல்*** (யாழ்ப்.); to be possessed as by a spirit for uttering oracles. (செ.அக.).

*[உரு + கொள்.]*

**உருகு-தல்** *urugu-*, 9 செ.கு.வி (v.i) 1. ***வெப்பத்தால் இளகுதல்;*** to dissolve with heat; to melt, liquefy, to be fused 2 ***மனநெகிழ்தல்;*** to become tender, to melt, as the heart, to be kind, to commisserate, to sympathize, to glow with love "பூண்முலையார் மனமுருக" (பு.வெ. 9.41, கொளு.). 3 ***மெலிதல்;*** to be emaciated. "அந்த நோயால் உடம்பு உருகிவிட்டது" (செ.அக.).

ம. உருகு

*[உரு → உருகு.]*

**உருகுநிலையம்** *urugu-nilaiyam*, பெ. (n.) ***உருகும் நிலை;*** the state at which a substance changes from solid to liquid, melting point. (சா.அக.)

*[உருகு + நிலையம்.]*

**உருகுபதம்** *urugu-padam*, பெ. (n) ***இளகுதற்குரிய பக்குவம்;*** softness of condition, melting state. "உருகு பதத்திலே வளைந்தவை" (ஈடு 1, 4, 3). (செ.அக.)

*[உருகு + பதம.]*

**உருகுமயம்** *urugumayam*, பெ. (n.) ***உருகும் பதம்;*** melting point. (சா.அக.).

*[உருகு + மயம்.]*

**உருகுமுப்பு** *urugum-uppu*, பெ. (n.) ***கட்டுப்பு;*** fusible salt prepared out of common salt by a special process; a consolidated salt usually melting when exposed to heat. It is opposed to உருகாவுப்பு. (சா.அக.).

*[உருகும் + உப்பு ]*

**உருகை** *urugai*, பெ. (n) 1. ***புல்லூரி;*** a parasitic plant. 2. ***அறுகம்புல்;*** harialligrass. (சா.அக ).

*[உரு → உருகை.]*

**உருங்கு-தல்** *urungu-*, 5. செ குன்றாவி. (v.t.) 1 ***உண்ணுதல்;*** to eat. "அரவினுட லுயிருருங் குவணம்" (பரிபா. 4,42). 2 ***தேய்தல்;*** to wear away 3 ***உராய்தல்;*** to rub (சேரநா.).

ம. உருங்நுக

*[உல் → உா → உரு → உருங்கு = தேய்த்தல் சிறிது சிறிதாகப் பறித்து அல்லது குறைத்துண்ணுதல் ]*

**உருசி** *uruši*, பெ. (n) 1 ***சுவை;*** taste. 2 ***இனிமை*** pleasantness 3 ***விருப்பம்;*** disire.

*[உருசு → உருசி.]*

**உருசிதட்டு-தல்** *urušitattu-*, 5. செ.கு.வி. (v.i.) ***சுவை தோன்றுதல்;*** to be sweet, pleasant to the taste. (செ.அக.).

*[உருசி + தட்டு.]*

**உருசிபார்-த்தல்** *urušipār-*, 4 செ.குன்றாவி. (v.t.) ***சுவைத்தறிதல்;*** to taste, examine, ascertain as the nature of a thing by tasting it. (செ.அக.)

*[உருசி + பார் ]*

**உருசு-தல்** *urušu-*, 5 செ குன்றாவி. (v.t.) ***உறிஞ்சுதல்; சிறிது சிறிதாகக் காற்றை உள்ளிழுப்பதன் வாயிலாக நீர்ம உண்பொருளை நாவில் சுவைத்தவாறே மென் மெல விழுங்குதல்;*** to suck

*[உ → உல் → உரு = தோன்றுதல, மேலெழுப்புதல் உருசு = மேலெழச் செய் உருபபுதல், உருசுதல் ஆகிய இரு வினைக ளும் காற்றை உறிஞ்சுவதன் வாயிலாக உணவுப் பொருளை மேலெழுப்பி வாயக்குள் விழச் செயயும உருபபு, உருசு என்பன பிறவினைகள உரு, உரும்பு இரண்டும் தன்வினை கள. உரு → உருந்து → உருத்து → உருச்சு → உருசு எனத் திரிந்ததால் இது திரிபுப் பிறவினை, உருப்பு இயல்புப் பிற வினை ]*

**உருட்சி** *urutci*, பெ. (n.) 1. ***உருளுகை;*** revolving, as a wheel 2. ***திரட்சி;*** rotundity, globularity உருட்சிக்கு நீட்சி. (செ அக.).

*[உருள் + சி = உருட்சி*

*உரு = மேலெழுப்பு உருள் = மேலெழும்பும் செய்கை மீண்டும் மேலெழும்பும் செய்கையைக் குறித்த போது சுழற்சிப் பொருள்களும் சுழலும் வட்டமும், உருண்டை, கோளம், சக்கரம் ஆகியவற்றையும் குறிக்கும் ]*

**உருட்டிக்காய்** *urutti-k-kāy*, பெ (n.) ***பெருந்தும்மட்டி;*** callous leaved bryonia. (செ அக )

*[உருள் → உருட்டு → உருட்டி + காய்.]*

**உருட்டித்தை-த்தல்** *urutti-t-tai-*, 4 செ.குன்றாவி (v.t) ***துணியைச் சுருட்டித் தைத்தல்;*** to roll, and sew a border, a kind of hemming (செ அக.).

*[உருள் → உருட்டு → உருட்டி + தை-த்தல் ]*

**உருட்டிப்பார்-த்தல்** *urutti-p-pār-*, 4 செ குன்றாவி. (v.t.) 1 ***விழியை உருட்டிப் பார்த்தல்;*** staring after rolling the eyes 2 ***கண்சிமிட்டாது விழியை உருட்டி உற்றுப் பார்த்தலாகிய ஒரு சாக்குறி;*** a symptom of death in which the dying person rolls his eyes and stares at or looks intently 3. ***மண்டையோட்டுப் பகுதியால் விழியையுருட்டிக் கீழாகச் சொருகி, மேற்புருவம் வளையமிட்டுக் காணுதல்;*** peculiar expression of the eyes in meaning it is due to downward rolling of the eye ball and retraction of the upper lid - post basic stare. (சா அக.)

*[உருட்டி + பார் ]*

**உருட்டிப்போடு-தல்** *urutti-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. ***பேச்சால் மருட்டி வெல்லுதல்;*** to defeat by argument, by a display of skill or by sophistry, to overcome in games அவர்களைப் பேச்சில் உருட்டிப் போட்டான். (இ.வ.) 2. ***அழித்து விடுதல்;*** to bring to ruin, as a family. வஞ்சகமே அந்தக் குடியை யுருட்டிப் போட்டது. (உ.வ.) 3. ***சாகச் செய்தல்;*** to cause to die அந்தக் குழந்தை பிறந்து தாயை யுருட்டிப் போட்டது. (செ.அக.).

*[உருட்டி + போடு ]*

**உருட்டிவிடு-தல்** *urutti-vidu-,* 18. செ.குன்றாவி (v.t.) ***உருட்டிப்போடு*** பார்க்க; see *urutti-p-pōḍu* (செ.அக.).

*[உருட்டு → உருட்டி → விடு.]*

**உருட்டு[1]-தல்** *uruttu-,* 5 செ.குன்றாவி (v.t.) 1 ***உருளச் செய்தல்;*** to roll, as a ball or wheel, as a barrow; to bowl, turn about, revolve, as a thing on a plane, to throw, as dice, to whirl, as a discus "அறக்கதிராழி திறப்பட வுருட்டி" (மணிமே. 5,76). 2. ***உருண்டையாகச் செய்தல்;*** to form, as clay or other substances into balls or globules. முருடீர்ந்துருட்டற்கு (கம்பரா மாரீசன். 139) 3. ***வருத்துதல்;*** to afflict, cause pain, to vex. "உய்ந்து போம்வழி யுருட்டுவா னொருவனை" (சூளா. முத். 9). 4 ***இசை நரம்பை வருடுதல்*** (கூர்மபு. கண்ணன் 147); to play upon a stringed musical instrument with pressure of fingers, as lute springs 5 ***விளையாட்டில் வெல்லுதல்;*** to overcome in athletic exercises of games. 6 ***ஒலியின் வேறுபாட்டால் மருட்டுதல்;*** impose and confound as by hard sounding verbiage. கடபடமென் றுருட்டுதற்கோ" (தாயு. நின்ற 3). (செ.அக )

ம. உருட்டுக, **க.,** பட. உருடு, **கோத.** உர்ண, **துட.** ஊட், குட. உரிட், உரிக். **து.** உருண்டு, **தெ.** உரலு, **குவி.** டுபலி.

*[உருள் → உருட்டு → உருட்டு-தல் ]*

**உருட்டு[2]** *uruttu,* பெ. (n.) 1. ***உருட்டுகை;*** rolling, revolving in a plane, turning of a wheel, whirling உன்னை ஓர் உருட்டு உருட்டிவிடவா? 2 ***சக்கரம்;*** wheel of a car உருட்டோட வோடிய தேர் (குலோத் கோ. 212) 3. ***திரட்சி;*** roundness, globularity உருட்டான வடிவம். 4. ***கட்டடவளைவு;*** (Arch.) moulding 5. ***வெருட்டு;*** terrifying, frightening, intimidation உன்னுடைய உருட்டுக்கு அஞ்ச மாட்டேன் (கொ.வ ) 6 ***புரளும் குரலிசை*** (உ.வ ), (mus) quavering note. 7 ***விரலணிவகை.*** (உ வ ); ring for the fingers or toes i.e மெட்டி. 8 ***சரிவு;*** slope. மலையுருட்டாயிருப்பதால், விழிப்புடன் இறங்க வேண்டும் 9. ***ஏமாற்றுகை;*** fraud. பொய்யும் புரட்டும் உருட்டும் திருட்டும் 10. ***கைம்மரம்;*** rafter. 11. ***ஒருவகை வெண்கல ஏனம்;*** a kind of brass vessel.

**ம., க.** உருட்டு

*[உருள் → உருட்டு.]*

**உருட்டுக்காரன்** *uruttu-k-kāran,* பெ. (n) ***புரட்டன்;*** deceiver, tricker.

*[உருட்டு + காரன் ]*

**உருட்டுப்புரட்டு** *uruttu-p-purattu,* பெ. (n) ***வஞ்சகச் செயல்;*** tricks and frauds. (செ.அக )

*[உருட்டு + புரட்டு ]*

**உருட்டுமோதிரம்** *uruttu-mōdiram,* பெ. (n.) ***விரலணி வகை*** (இ.வ.); plain gold-ring. (செ.அக.).

ம. உருட்டுமோதிரம்

*[உருட்டு + மோதிரம் ]*

**உருட்டுவண்ணம்** *uruttu-vannam,* பெ (n) ***அராகந் தொடுத்துவருஞ் சந்தம்;*** variety of rhythm effected by using short syllables in quick succession, as free rolling on "உருட்டு வண்ண மராகந்தொடுக்கும்" (தொல். பொருள் 544). (செ.அக.).

*[உருட்டு + வண்ணம் ]*

**உருடை** *urudai,* பெ. (n.) 1. ***வண்டி;*** cart "உருடை யூடுதிரியும்" (சேதுபு முத்தீர். 42). 2 ***சக்கரம்;*** wheel. (செ அக )

*[உருள் → உருடை (ரோடை → ரோதை) ]*

*L* rota, a wheel, *L* roto, a cause to turn round like a wheel, to whirl round, swing round, *L* rotula, a little wheel, *L.* rotunde, roundly, *L* rotunditos, roundness, rotundity (plin ), *L* rotundo, to round, make round, *L* rotund us round, circular, spherical, இவற்றினின்று பின்வருமாறு ஆங்கிலச் சொற்கள் தோன்றித் திரிந்துள்ளன *E* rota, list of persons acting, or duties to be done, in rotation, *E* rotary, acting by rotation, *E* rotate, v move round axis or centre, revolve, adj wheel-shaped, *E* rotation, rotating, recurrence, recurrent series or period, regular succession in office, in by, rotation, *E* rotator, muscle that rotates a limb etc, *E* rotifer, wheel animalcule, member of class rotifer with rotatory organs used in swimming, *E* rotograph, print of Ms page etc got by sensitized roll, *E* rotor, rotary part of machine, *E* rotund, a circular, round, rotundate, *E* rotunda, building of circular ground plan, esp one with dome,

*Roll* என்னும் ஆங்கிலச்சொல் 'உருள்' என்பதை ஒத்திருக்கின்றது ஆயின், அதை rotula அல்லது rotilla என்னும் இலத்தீன் குறுமைப் பொருட் சொல்லினின்று திரிக்கின்றனர் மேலையறிஞர்கள் இது வட்ட வழித் திரிபு L rotulus தமிழில 'இல்' என்பது ஒரு குறுமைப் பொருட்பின்னொட்டென்பது இங்குக் கவனிக்கத்தக்கது

(எ-டு ) குடி (வீடு) → குடில் (குடிசை.) (ஒ.நோ ) விட்டி → விட்டில் தொட்டி → தொட்டில் (சிறு ஆடுகட்டில்.) இன்று ஏணையென்று தவறாக வழங்குகின்றது

*E* roll, n cylinder formed by turning flexible fabric such as paper or cloth over and over upon itself without folding, v move or send or go in same direction by turning over on axis often with aid of gravitation *ME & OF* rolle, role, *E* roller, cylinder of wood, stone, metal etc, *E* role, actor's part, one's function, F role = roll, *E* roly-poly, pudding made of sheet of paste covered with

jam etc formed into roll, and boiled Round என்னும் ஆங்கிலச் சொல்லும் உருண்டை என்பதை ஒத்திருக்கின்றது. *E* round, n round object, v invest with, assume, round shape. a spherical or circular or cylindrical or approaching these forms, adv with more or less circular motion, *ME* round *OF* rund, *E* roundel, small disc, *E* roundelay, short simple song with refrain, *E* rounder, one complete run of player through all the bases arranged in a round, *E* roundly, adv in thorough going manner, *E* rondeau, *F* rondel, a poem with opening words used twice as refrain, *E* rondel, special form of rondeau, *ME* rond *OF* round, *E* rondo, *It & F* rondeau, *E* rondure, round outline or object; *F* rondeur, round

தமிழில் உகர முதல் மூல வேர்ச்சொல் க ச த ந ப ம என்னும் ஆறு சொல் முதல் மெய்யெழுத்துகளொடுங் கூடி, ஆறுவழி வேர்களை அல்லது வழியடிகளைப பிறப்பிக்கின்றது. இங்ஙனமே 'உருள்' என்ற சொல்லும் பிறப்பிக்கின்றது உருள் ஒ நோ *E* Whirl, swing round and round, revolve, *ON* hvirfla, rotate, *E* whorl, ring of leaves, one turn of a spiral, disc on spindle, *ME* wharwyl whorail

குருள் → குருளுதல் = சுருளுதல், சுருளாதல். "குரண்டவார் குழல்" (திருவிசை திருவா 1 3) ஒ நோ *MDu* krul, *G* Krollen, *LG Du, E Fris* krullen to curl, *E* curl, சுருள் - *E* swirl, eddy Sec Norw svirla, *Du* Zwirrelen, to whirl, *G* Schwirrlen, to totter (செல்வி 77 துலை, 123-125)

**உருண்டுபோ-தல்** *urundupō-*, 8. செ கு.வி. (v.i.) ***சாதல்;*** to die, said in cursing or in mentioning in a disrespectful way (செ.அக ).

*[உருள் → உருண்டு + போ.]*

**உருண்டை** *urundai*, பெ. (n) 1. ***உண்டை;*** ball, bowl, globe, anything round, as a pill. 2 ***கவளம்;*** mouthful of food in the shape of a ball. 3. ***திரட்சி;*** roundness, globularity 4 ***உலகம்;*** world "அண்டைப்பகுதியின் உண்டைப் பிறக்கம்" (திருவாச திருவண்டப்.1), 5 ***கூட்டம்;*** crowd. கோவுண்டை கோட்டாற்ற ழிவித்த கோன் (பரிபா. 6.36 உரை).

உருண்டையான பொருள் உண்டை எனப்பட்டது பொரியுண்டை, சோற்றுண்டை, வெல்லவுண்டை, மண்ணுண்டை, வில்லுண்டை, கஞ்சாவுண்டை முதலியன

**ம.** உருண்ட, **க., பட.,** **து.** உண்டெ, **தெ.** உண்ட; **குரு.** உருடெ, **கோத.** உண்டய; **துட.** உடய, **கோண.** உன்தா.

*[உருள் → உருண்டை.]*

**உருணி[1]** *uruni*, பெ. (n.) ***உருளுந் தன்மையுடையது;*** that which has capacity to roll.

*[உருளி → உருணி.]*

**உருணி[2]** *uruni*, பெ. (n) 1. ***எலும்புத் தட்டு;*** pan of bone. 2 ***மாங்காய்ப்பிஞ்சு;*** tender mango (சேரநா.).

ம. உருணி.

*[உருள் → உருளி → உருணி.]*

**உருத்தரி-த்தல்** *uruttari-*, 4. செ.கு.வி (v.i.) ***வடிவங் கொள்ளுதல்;*** to take shape, as an embryo. ***உருக்கொளல்*** பார்க்க; see *urukkol̤al.* (செ.அக.).

*[உரு + தரி ]*

**உருத்திரங்கண்ணன்** *uruttirankannan*, பெ. (n ) ***பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப்படையை யாத்த கடைக் கழகப் புலவர்;*** name of a sangam poet who authored the 'Perumbānāṟṟu-p-paḍai'.

*[உருத்திரம் + கண் + அன் ]*

**உருத்திரசருமன்** *uruttiraśaruman*, பெ (n.) ***இறையனார கப்பொருளுரை கேட்டவரும் அகநானூறு தொகுத்த வருமாகிய ஒரு புலவர்;*** name of a dumb poet in Madura who acted as arbitrator on the commentaries of the Iraiyanāraga-p-porul, and who was himself the compiler of the Aga-nānūru (செ.அக.).

*[உருத்திரன் + சருமன் ]*

**உருத்திரசோலை** *uruttiraśōlai*, பெ. (n ) ***காஞ்சியிலுள்ளதும் தன்னை அடைந்தவர்களின் பிறப்பினையழிக்க வல்லதாகக் கருதப்படுவதுமான ஒரு சோலை;*** a grove in kāñji, entry into which is supposed to free one from future births. "சுரர்கள் உருத்திரசோலை" (பெரியபு திருக்குறிப்பு. 84). (செ.அக )

*[உருத்திரம + சோலை ]*

**உருத்திரபசுபதி நாயனார்** *uruttira-paśupadi-nāyanār*, பெ (n) ***அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்;*** a canonized Śaiva Saint, one of 63 (பெரியபு )

*[உருத்திரம் + பசு + பதி + நாயனார் ]*

**உருத்திரம்[1]** *uruttiram*, பெ (n.) 1. ***பெருஞ்சினம்;*** fury, violent anger. 2. ***வெகுளிச்சுவை*** (தண்டி 69 ); (Poet) sentiment of wrath, fury.

**க., து.** ருத்ர, **தெ.** ருத்ரமு, *Skt* roudra, *OE* wreth, *OS* writh; *OHG* reid, *ON* reigher, *E* wrath, wroth

*[உல் → உரு (தீ) → உருத்தல் → உருத்திரம*

உருத்திரம = பெருஞ்சினம் உருத்திரம், வ (ருதர ) 'திரம்' ஒரு தொழிற்பண்பீறு ஒ நோ மாததல் = அளததல் மா + திரம் - மாத்திரம் (அளவு ) அவன் எனக்கு எம்மாத்திரம்? என்னும் வழககை நோக்குக மானம் (மா + அனம) எனனும் அளவுப் பொதுப் பெயரையும், மா, மானம, ஒருமா, இருமா, மாகாணி முதலிய அளவுச் சிறப்புப் பெயர்களையும், மேலை வடார்க்காடு அம்பேதகர் மாவட்டததில படி எனனும முகத்தல ளவைப் பெயர் மானம் எனறு வழங்குதலையும் நோக்குக மாத்தல் எனனும் வினைசசொல பணடே வழககிறநதது திரம் → திரை மா + திரை - மாத்திரை = அளவு, எழுத்தொலிக்குங் கால அளவு, உண்ணும் மருந்தளவு சினம தீயொததலால தீ பற்றிய சொறகள் எலலாம சினத்தையும் குறிககும்

உரு → *உருததிரம உருததிரம் > வ ரௌதர* (Roudra) = வெகுளி ஒ நோ *E* wroth, *N* anger, *OE* Wreth thu, As and *On* Wraedo, *ME* wrathu, *E* sroth, adj angry, *OE* wrath, *OS* wreth, *OHG* reid, *ON* reither

கீற்றும் (Skeat) கிளெய்னும் (klein) இச்சொற்களை reid (twisted) என்னும் மூலத்தினின்று திரிக்கின்றனர் அது அவர்கள் தென் சொல்லை அறியாததனாலும் இருக்கலாம் (வ மொ வ 94 ) ]

**உருத்திரம்**[2]. *uruttiram,* பெ. (n.) 1 ***மஞ்சள்*** (வின்.); turmeric 2. ***மரமஞ்சள்*** (சங்.அக.); tree turmeric. (செ.அக.)

**உருத்திரன்** *uruttiran,* பெ. (n.) 1. ***சிவன்*** (திவா ); Śiva. 2. ***பதினொரு உருத்திரருளொருவன்*** (திவா ); Ruttiran one of ēkātaca ruttirar 3 ***அழற்கடவுள்;*** Agni "உருத்திர னென்னுநாமம் செந்தீப் பண்ணவன் றனக்குமாமால்" (கந்தபு ததீசிப். 45). 4 ***சிவகணத்தோன்;*** attendant of Śiva (கந்தபு ததீசிப். 45). 5. ***கடுஞ்சினத்தான்;*** ferocious visage

*[உருத்திரம → உருத்திரன் > Skt rudra*

*சிவன் நெருபபின் தன்மையும, அழிப்புத் தொழிலும் உடைய வனாதலின உருத்திரன் எனபபட்டான (ஒ மொ 25). தமிழ ரின் முத்தொழிலோனான சிவன ஆரியரின் முததிரு மேனிய ருள் (திரிமூர்த்திகளுள்) ஒருவனான அழிப்புத் தொழிலோ னாக்கப்பட்டபின. ஆரியக் கடுங்காற்றுத் தெய்வமாகிய ருத்ர (உருத்திரன்) அழிபபுத தொழிலொப்புமை பற்றிச் சிவனோடு இணைக்கப்பட்டான். ருத்ர ஆரியத் தெய்வமாயினும், தமிழ்த் திரி சொல்லாலேயே குறிக்கப்பட்டான் என அறிக.]*

**உருத்திரி-தல்** *uruttiri-,* 4. செ.கு வி. (v.i.) 1 ***உருமாறு தல்;*** to be metamorphosed, changed in form. 2 ***மாறுவேடங்கொள்ளுதல்;*** to wear a mask, assume a disguise. "உருத்திரிந்து தனித்து வந்து" (திருவிளை. விடையிலச் 7) (செ.அக.).

ம. உருத்திரியுக

*[உரு + திரி-தல்.]*

**உருநாட்டு** *urunāttu,* பெ. (n.) 1. ***படிமம்; சிலை;*** idol. (J.). 2. ***ஓவியம்;*** picture (யாழ்.அக.).

*[உரு + நாட்டு.]*

**உருப்படி** *uruppadi,* பெ. (n.) 1. ***கணக்கிடக்கூடிய பொருள்;*** item, piece, any article admitting of counting, unit. "நித்யம் ஏழுருப்படி பணியாரம்" (கோயிலொ 69.). 2. ***பயன்படும் பொருள்;*** article of value, useful thing உருப்படியாக என்னிடம் ஒன்றுமில்லை (உ.வ.). 3. ***இசைப்பாட்டு;*** piece of music. அவனுக்கு நூறு உருப்படி பாடம் உண்டு (செ.அக.).

*[உரு → உருப்படி.]*

**உருப்படியா-தல்** *uruppadiyā-,* 6. செ.கு.வி. (v.i.) ***உருவாதல்;*** to take a tangible shape, come to something. (Colloq.). அந்தக் காரியம் உருப்படியாகாமற் போயிற்று. (செ.அக.).

ம. உருப்பிடிக்குக.

*[உருப்படி + ஆதல்.]*

**உருப்படியாய்** *uruppadiyāy,* கு வி.எ. (adv.) ***யாதொரு அங்கப்பழுதுமின்றி;*** soundly, wholly, unhurt, without any injury to any part of the body. உருப்படியாய் வந்து சேர்ந்தான் (செ அக )

*[உரு → உருப்படி + ஆய்.]*

**உருப்படு-தல்** *uruppadu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***உருவாதல்;*** to be formed, shaped. 2 ***சீர்ப்படுதல்;*** to improve in body, mind or morals, to rise to a position. 3. ***மருந்தைப் புடமிட்டு நிறைவாக்கல்;*** completing the preparation of a medicine by calcining it.

*[உரு + படு ]*

**உருப்பம்**[1] *uruppam,* பெ. (n.) 1. ***வெப்பம்;*** heat, as of the sun, temperature. "கனலும்... வந்துகுடிகொண் டவணுறைந்தன வுருப்பமெழ" (அரிச்.பு விவா.104) 2. ***நெருப்பு;*** fire. 3. ***வெப்பமிக்க நண்பகல்;*** midday.

ம. உருப்பம

*[உல → உரு → உருப்பம்.]*

**உருப்பம்**[2] *uruppam,* பெ. (n.) ***உருப்பு*** பார்க்க. (பிங்.); see *uruppu.* (செ.அக.).

*[உல் → உரு → உருப்பம் ]*

**உருப்பாத்தி** *uruppātti,* பெ. (n.) ***கடல் மீன் வகை;*** flathead brownfish. (செ.அக.)

*[உரு + பாத்தி - உருப்பாத்தி ]*

**உருப்பிடி-த்தல்** *uruppidi-,* 4. செ.குன்றாவி. (v.i.) ***படம் பிடித்தல்;*** to take a photograph. (செ.அக ).

*[உரு + பிடி-த்தல்.]*

**உருப்பிணி** *uruppini,* பெ. (n.) ***கண்ணன் மனைவி*** (திவ். திருவாய். 7,10,6). Krishna's consort.

*[உரு → உருப்பு → உருப்பிணி (வெண்ணிறத்தவள்).]*

**உருப்பு**[1] *uruppu,* பெ. (n.) 1. ***வெப்பம்;*** heat. "கன்மிசை உருப்பிறக் கனைதுளி சிதறென" (கலித். 16.7). 2. ***சினத்தீ;*** anger, heated emotion. "உருப்பற நிரப்பினை யாதலின்" (பதிற்றுப். 50. 16). 3. ***கொடுமை;*** cruelty. "உருப்பில் சுற்றமோ டிருந்தோற் குறுதி" (பெரும்பாண். 447). (செ.அக.).

ம. உருப்பம்; க. உருபு.

*[உல் → உரு → உருப்பு.]*

**உருப்பு**[2] *uruppu,* பெ. (n.) ***மிகுதி*** (திவா.); abundance, increase. (செ.அக.).

*[உல் → உரு → உருப்பு.]*

**உருப்பு**[3] *uruppu,* பெ. (n.) 1. ***துயரம்;*** grief. 2. ***அடுக்களை;*** kitchen. (செ.அக.).

*[உரு → உருப்பு.]*

**உருப்பெயர்-த்தல்** *uruppeyar-,* 4. செ.குன்றாவி. (v.i.) ***ஒரு சொல்லைப் பிறமொழியெழுத்தில் எழுதுதல்;*** to transliterate (mod.). (செ.அக.).

*[உரு + பெயர்-த்தல்.]*

**உருப்போடு-தல்** *uruppōdu-*, 19 செ குன்றாவி. (v.t.) 1. ***மந்திரத்தைப் பலமுறை சொல்லுதல்;*** to repeat mantras a number of times 2. ***மனப்பாடம் பண்ணுதல்;*** to repeat so as to commit to memory. (செ அக )

**ம.** உருவிக்குக.

*[உரு + போடு-தல ]*

**உருபு**[1] *urubu*, பெ (n.) 1 ***வடிவம்;*** form, shape (தொல், சொல் 24, சேனா) 2 ***நிறம்;*** colour "உருபுகிளர் வண்ணம் கொண்ட" (பதிற்றுப் 52,30) 3 ***வேற்றுமை முதலியவற்றைக் காட்டும் இடைச்சொல்*** (தொல் சொல். 69.); (Gram.) particle such as case endings, etc. (செ.அக.)

*[உரு → உருவு → உருபு]*

**உருபு**[2] *urubu*, பெ (n.) ***நோய்*** (அக. நி.); malady (செ அக )

*[உல் → உரு (வெப்பம், நோய் ) → உருபு ]*

**உருபுப்புணர்ச்சி** *urubu-p-punarcci*, பெ (n.) ***வேற்றுமை யுருபு புணர்ந்து வருவது;*** function with case ending

*[உருபு + புணர்ச்சி ]*

**உருபுமயக்கம்** *urubu-mayakkam*, பெ. (n) 1. ***ஒரு வேற்றுமையுருபு பிறிதொரு வேற்றுமை உருபின் பொருள் கொண்டு நிற்றல்;*** (Gram ) use of the ending of one case for that of another, as the dat ending கு for the loc இன் in the sense of the latter. சிலையினாற்கு, உருபு மயக்கம் (சீவக 1889, உரை) 2 ***ஒரு வேற் றுமைக்குள் ஒருருபு வேறொருருபோடு மயங்குகை;*** use of one ending of a case in the sense connoted by another ending of the same case, as அறத்தான் வருவதேயின்பம் (குறள். 39) for அறத்தோடு வருவதே இன்பம்.

*[உருபு + மயக்கம்.]*

**உரும்** *urum*, பெ. (n.) 1. ***இடி;*** thunder. "உருமுற்ற பாம்பின்" (சீவக.27). 2. ***அச்சம்*** (தொல். சொல் 365); fear; dread, alarm. 3. ***சினம்*** anger. 4. ***நெருப்பு;*** fire. (செ.அக.).

**தெ.** உருமு

*[உல் → உரு → உரும். உரு = வெப்பம், அனல், இடி.]*

**உரும்பு** *urumbu*, பெ. (n.) ***கொதிப்பு;*** ire, exasperation. "உரும்பில் கூற்றத் தன்னநின்" (பதிற்றுப். 26. 13).

*[உரு → உரும் → உரும்பு ]*

**உருமகாலம்** *urumakālam*, பெ. (n.) 1. ***கோடைக்காலம்*** (வின்.); hot weather. 2. ***நடுப்பகல்;*** midday. (சா.அக.).

*[உரும் → உரும → காலம்.]*

**உருமணி** *urumaṇi*, பெ. (n.) 1. ***கருவிழி*** (யாழ். அக.); pupil of the eye. 2. ***அடிவயிற்றிலுள்ள ஓர் உயிர்ப்பகுதி;*** mortal spot in the abdomen (சேரநா.).

**ம.** உருமணி.

*[உல் → உரு + மணி.]*

**உருமத்துக்குவிடு-தல்** *urumattukkuvidu-*, 20. செ கு வி (v.i.) ***நண்பகல் வேலை நிறுத்தல்;*** to cease at noon, as from study from labour (செ அக.).

*[உருமம் + அத்துக்கு + விடு ]*

**உருமம்** *urumam*, பெ. (n.) 1 ***வெப்பம்*** (பிங்.); heat as of the sun, of the atmosphere, sultriness, closeness. 2 ***நடுப்பகல்;*** noon, noon-day "உருமத்திற் கதிரே" (சேதுபு இராமனருச் 218). (செ அக.)

*[உல் → உரு → உரும் → உருமம ]*

**உருமலைவாரி** *urumalai-vāri*, பெ (n.) ***மாழை*** (உலோக) ***மணல்;*** sand containing metal (W ). (செ.அக )

*[உரு + மலை + வாரி ]*

**உருமவிடுதி** *urumavidudi*, பெ. (n) ***நண்பகலில் வேலை நிறுத்துகை;*** midday recess. (J.). (செ.அக ).

*[உரும → உருமம் + விடுதி விடுதி = விடுபபு, ஓயவு ]*

**உருமவேளை** *uruma-vēlai*, பெ (n.) ***உச்சிப்பொழுது;*** noon (சா அக.).

*[உருமம + வேளை ]*

**உருமாற்றம்** *urumāṟṟam*, பெ (n.) 1 ***உருவம் வேறுப டல்;*** change of shape or form 2 ***விலங்குகள் அல்லது பூண்டுகளிலாவது அவற்றின் பகுதிகளிலாவது ஏற்ப டும் வேறுபாடு;*** change of form in animals or plants or in their parts during life 3 ***உடலமைப்புமாறி வேற்றுருக் கொளல்;*** (in Biology or Morphology) the modification of organs or structure in form and function. 4. ***இக்கோளகத்தின்*** (பிரபஞ்சத்தின்) ***காரணமாக மாயையின் வல்லமையால் ஒன்று மற்றொன்றாக மாறுதல்;*** (In Evolution ) the secular change from a simple or rudimentary condition to one that is more complex and of a higher order 5. ***வேதியியலின்படி ஒரு பொருளின் உரு வேறுபடுதல்;*** in chemistry, the change of a compound into a new form, chemical change 6. ***மாந்தர் உருவத்தை மாற்றி வேற்றுருவங் கொள்ளு தல்;*** (In psychology) the change of human body into a quite different one as desired, by enchantment or other supernatural means, metamorphosis. 7. ***நிறம், தோற்றம் முதலியன மாறுதல்;*** change of colour, appearance etc. என்ன இப்படி உருமாறி விட்டீர்களே (உ.வ.).

*[உரு + மாற்றம்.]*

**உருமாறு-தல்** *urumāṟu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***வேற்று ருக் கொள்ளுதல்;*** to change one's shape, disguise oneself "வாசி வணிகர் போலவே யேசிலா வுருமாறி னார்" (திருவாத. பு. குதிரையிட்ட. 2) 2. ***தோற்றம் வேறாதல்;*** to become changed in appearance, as by disease. (செ.அக.).

**ம.** உருவழியுக (மறைத்தல்).

*[உரு + மாறு.]*

**உருமாறுமூலி** *urumāṟumūli*, பெ. (n.) ***தொட்டாற் சிணுங்கி;*** humble plant; touch me not - mimosapudica.

It is so called from its leaves mimicking sensibility by folding themselves at the slightest touch (சா அக.)

*[உரு + மாறு + மூலி]*

**உருமானம்** *urumāṉam,* பெ. (n.) 1. ***உருவம்;*** figure, shape. 2. ***முற்றினது;*** anything ripe or full grown.

*[உரு + மானம்]*

**உருமி-த்தல்** *urumi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***வெப்பமாதல்;*** to be hot, sultry, close, as the weather (W.) 2. ***மனவெப்பமடைதல்;*** to grow excited in mind (சா அக.)

*[உரும → உருமி → உருமி-த்தல்]*

**உருமு[1]-தல்** *urumu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***உரப்புதல்;*** to thunder, roar "உருமிநக்கு" (கந்தபு அசுரேந் 35) 2. ***முறுமுறுத்தல்;*** to growl, grumble (செ.அக.)

தெ. உருமு

*[உரும் - அச்சம. உருமுதல் = அச்சமுண்டாக உரத்து ஒலித்தல்]*

**உருமு[2]** *urumu,* பெ. (n.) ***உரும்*** பார்க்க, (பிங்.), see *urum* (செ.அக.)

*[உரும → உருமு]*

**உருமுக்குரல்** *urumukkural,* பெ. (n.) ***இடியோசை;*** noise of thunder (செ.அக.)

*[உரும → உருமு + குரல்]*

**உருமேறு** *urumēṟu,* பெ. (n.) ***பேரிடி;*** thunderbolt "அச்சொற் றத்தஞ் செவிக்குரு மேறாகக் கலங்கு மரவன் னார்" (பாரத திரௌ 32) (செ.அக.).

*[உரு → உரும் + ஏறு]*

**உருமேனி** *urumēṉi,* பெ. (n.) ***சிவன், உயிர்கள் தங்கண் ணாற் காணும்படியெடுக்கும் வடிவம்;*** invisible form of god. "உருமேனிதரித்துக் கொண்ட தென்றலும்" (சி.சி. 55) (செ.அக.).

*[உரு + மேனி]*

**உருமை** *urumai,* பெ. (n.) ***உப்புவிளையும் நிலம்;*** saline soil.

*[உரும் → உருமை. உருமை = வெப்பத்தால் ஆவியாகி நிற்கும் உப்பு வயல்.]*

**உருவ** *uruva,* கு.வி.எ. (adv.) 1. ***நன்றாக;*** thoroughly, fully, carefully. "புயவலிமை நீயுருவ நோக்கையா" (கம்பரா. குலமுறை. 26). 2. ***திரும்பத் திரும்ப;*** again and again "பின்னையும் விட மாட்டாளே, இங்ஙனேயுரு வச் சொல்லு மித்தனை" (ஈடு. 10,3,4). (செ.அக.).

*[உல் → உரு → உருவ (வே.க. 9).]*

**உருவகப்படுத்து-தல்** *uruvagappaḍuttu-,* 5. செ.குன் றாவி. (v.t.) ***உவமேயத்தை உவமானத்தோடு பொருந் தக் கூறுதல்;*** to speak metaphorically, (செ.அக.).

*[உரு → உருவு → உருவகம் + படுத்து.]*

**உருவகம்[1]** *uruvagam,* பெ. (n.) ***உவமத்தைப் பொரு ளுடன் வேறுபாடின்றிப் பொருந்தக் கூறும் அணி*** (தண்டி 34), figure of speech in which the uvameyam or the thing compared is represented as identical with the uvamāṉam or the object of comparison, metaphor (செ.அக.)

*[உரு → உருவு → உருவகம]*

**உருவகம்[2]** *uruvagam,* பெ. (n.) ***நாடகம்*** (நாநார்த்த.) drama (செ.அக.)

*[உரு → உருவு → உருவகம.]*

**உருவகவணி** *uruvagavaṇi,* பெ. (n.) ***உருவகம்[1]*** பார்க்க; see *uruvagam*

*[உருவகம + அணி]*

**உருவங்காட்டி** *uruvaṅkāṭṭi,* பெ. (n.) ***கண்ணாடி*** (பிங்.); mirror (செ.அக.)

*[உருவம + காட்டி]*

**உருவத்திருமேனி** *uruvattirumēṉi* பெ. (n.) ***வடிவுடைய வராகக் கருதப்படும் கடவுள்*** (சீகாழி கோ பக். 88); god, as assuming form or shape (செ.அக.).

*[உருவம + திருமேனி]*

**உருவப்பரப்பு** *uruva-p-parappu,* பெ. (n.) ***கடவுளின் மேன்மையான எண் குணங்கள்;*** the eight characteristics of the Supreme Being "தன்னுருவப் பரப்பையெல் லாம் கொடுபுகுந்து பதிப்பன்" (சி.சி. 9,12). (செ.அக.).

*[உருவம் + பரப்பு]*

**உருவப்பொம்மை** *uruva-p-pommai,* பெ. (n.) ***வைக் கோல் போன்ற பொருள்களால் செய்யப்படும் உருத் தோற்றம்;*** effigy

*[உருவம் + பொம்மை]*

ஒருவரை மதிப்புக்குறைவு செய்ய நேரும்போது அவரது உருவப் பொமமையைப் பிணம் போலக் கருதித் தெருத்தோ றும் இழுத்துவந்து ஒபபாரி வைத்து எரிப்பது வழக்கம்.

**உருவம்** *uruvam,* பெ. (n.) 1. ***வடிவம்.*** shape, visible form, figure. "சோதியாய்த் தோன்றுமுருவமே" (திரு வாச. 22,9). 2. ***உடல்;*** body. "உருவமு முயிருமாகி" (தேவா 1028.3) 3. ***அழகு;*** beauty. "உருவப்பூணி னாய்" (நைடத தேவியைக். 3) 4. ***நிறம்;*** colour, hue. "உருவப் பல்பூத் தூஉய்" (திருமுருகு. 241). 5. ***புனைவு*** (வேடம்), disguise, assumed form. "வலியினி லைமையான் வல்லுருவம்" (குறள். 273) 6. ***கவறு;*** die used in gaming 'முன்னாயம் பத்துருவம் பெற்றவன் மனம்போல்" (கலித். 136); 7. ***மந்திரவுரு;*** repetition of mantras. "நின்றிரண் டுருவ மோதி" (சீவக 1289) 8. ***படிமை;*** image made of clay or fashioned of brick, idol, statue 9. ***ஐந்தளை*** (கந்தங்)***களுளொன்று;*** bodily form, one of pañcakantam. "ஓங்கியவுருவமோடும்" (சி.சி பர. சௌத்.30).

ம. உருவம்.

*[உரு → உருவு → உருவம் → உருவம் > Skt rūpa.]*

**உருவமெடு-த்தல்** *uruvamedu, 4.* செ.கு.வி. (v.i.) ***வடிவங் கொள்ளுதல்*** to assume a form, as a deity. (செ.அக.).

*[உருவம் + எடு-த்தல்.]*

**உருவரை** *uruvarai,* பெ. (n.) ***செழிப்புள்ள நிலம்*** (சூடா.); fertile soil, productive land. (செ.அக.).

*[உரு + வரை. வரை → வரைப்பு = பகுதி, நிலம்.]*

**உருவல்** *uruval,* பெ. (n.) ***காதணி வகை;*** kind of ear - drops. (செ.அக.).

*[உரு → (உருக்கு) உருவல்.]*

**உருவழி-தல்** *uruvali-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உருவம் வேறாதல்;*** to become disfigured by disease, to be deformed. 2. ***முழுதுஞ் சிதைதல்;*** to be entirely ruined. 3. ***கரு கலைதல்;*** to abort. 4. ***மறைதல்;*** to disappear. (சேரநா.) (செ.அக.).

ம. உருவழியுக.

*[உரு + அழி-தல்.]*

**உருவறை** *uruvarai,* பெ. (n.) ***உடலழகற்றவன்-வள்-து;*** one who has bodily defects. "உருவறைக் கோபாலர்" (திவ். பெரியாழ். 3,8,2 வ்யா. பக். 740) (செ.அக.).

*[உரு + அறை. அறை = அறுபட்டவன், குறைபட்டவன்.]*

**உருவா-தல்** *uruvā-,* 6. செ.கு.வி. (v.i.) 1. ***வடிவுறுதல்;*** to assume a form, take shape. 2. ***சீர்ப்படுதல்;*** to become sound, to improve, to be reformed. (செ.அக.).

ம. உருவிக்குக.

*[உரு + ஆ(கு).]*

**உருவாக்கு-தல்** *uruvākku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***உருவமுடையதாகச் செய்தல்;*** to shape, fashion, mould. 2. ***சீர்ப்படுத்துதல்;*** to repair, reform, improve.

ம. உருவாக்குக.

*[உரு + ஆக்கு.]*

**உருவாணி** *uruvāṇi* பெ. (n.) 1. ***அச்சாணி;*** axle bolt, linch pin. "தேரகத் தூடுரு வாணியின்" (உபதேசகா. சிவத்துரோ. 411). 2. ***மெலிந்த வுடல்;*** emaciated body, body which is all skin and bone only. (J.) (செ. அக.).

*[உருவு + ஆள். ஆள் → ஆண் → ஆணி.]*

**உருவாணிபற்று-தல்** *uruvāṇiparru-,* 5. செ.கு.வி. (v.i.) ***மெலிவடைதல்;*** to grow lean, to be emaciated. (செ.அக.).

*[உருவாணி + பற்று.]*

**உருவாரம்**[1] *uruvāram,* பெ. (n.) 1. ***வெள்ளரி*** (பிங்.); mottled melon. (செ.அக.).

ம. உருவாரம்.

*[உரு + வாரம் - உருவாரம்.]*

**உருவாரம்**[2] *uruvāram,* பெ. (n.) 1. ***நிழலுருவம்; உருவப்படிவம்;*** image. கோவிலில் உருவாரம் செய்து வைத்திருக்கிறார்கள் (இ.வ.). 2. ***கொடும்பாவி;*** effigy. (செ.அக.).

ம. உருவாரம்.

*[உரு → உருவாரம்.]*

**உருவி**[1] *uruvi,* பெ. (n.) 1. ***நாயுருவி;*** plant growing in hedges and thicket. "எள்ளிரதம் படியுருவி" (தைலவ. தைல. 103). 2. ***புல்லுருவி;*** honey suckle mistletoe. 3. ***முள்ளி;*** Indian night shade. (செ.அக.).

ம. உருவி.

*[உரு → உருவு → உருவி.]*

**உருவி**[2] *uruvi,* பெ. (n.) ***உலகம்;*** wide earth. "பாருருவி நீரெரிகால்" (திவ். திருநெடுந். 2). (செ.அக.).

*[உரு → உருவு → உருவி. உரு = தோற்றம், படைப்பு.]*

**உருவி**[3] *uruvi,* பெ. (n.) ***பாட்டுடைத் தலைவன்;*** hero extolled by name in a poem, dist. fr. aruvi. "உருவியாகிய வொருபெருங் கிழவனை" (யாப்.வி.பக்.525). (செ.அக.).

*[உரு → உருவு → உருவி.]*

**உருவிடு-தல்** *uruvidu-,* 18. செ.குன்றாவி. (v.t.) ***மந்திரத்தை உருப்போடுதல்;*** to repeat (as a mantra), learn by note, repeat so as to commit to memory. (செ.அக.).

ம. உருவிடுக.

*[உரு + இடு.]*

**உருவிப்பாய்தல்** *uruvippāydal,* பெ. (n.) ***வேகமாகத் துளைத்துக் கொண்டு செல்லல்;*** piercing through rapidly. (சா.அக.).

*[உருவி + பாய்தல்.]*

**உருவியழு-தல்** *uruviyalu-,* 1. செ.கு.வி. (v.i.) ***விம்மியழுதல்;*** to weep and sob. (செ.அக.).

*[உருவி + அழு. உருவி = மூச்சு உருவி, மூச்சு வாங்கி.]*

**உருவியுப்பு** *uruviyuppu,* பெ. (n.) ***நாயுருவி யுப்பு;*** medicinal salt made from achyranthes aspera. (செ.அக.).

*[உருவி + உப்பு.]*

**உருவில்** *uruvil,* பெ. (n.) ***உருவிலாளன்*** பார்க்க; see *uruilāḷan*

*[உருவு + இல்.]*

**உருவிலாளன்** *uruvilāḷaṉ,* பெ. (n.). ***காமன்;*** kāmā, who has no corporal body. "மீனவிலோதனத் துருவிலாளன்" (மணிமே. 5.6). (செ.அக.).

*[உருவு + இல் + ஆளன்.]*

**உருவிலாளி** *uruvilāḷi,* பெ. (n.) ***உருவிலாளன்*** பார்க்க; see *uruvilāḷaṉ.* "உருவிலாளி உடல் பொடித்த வொருவர்" (திருவிளை. வளையல். 35). (செ.அக.).

*[உருவு + இல் + ஆளி.]*

**உருவிலி** *uruvili,* பெ. (n.) ***உருவிலாளன்*** பார்க்க. (பிங்.); see *uruvilāḷaṉ.* (செ.அக.).

*[உருவு + இலி.]*

**உருவிழ-த்தல்** *uruvila-,* 2. செ.குன்றாவி. (v.i.) ***வடிவமிழ-த்தல்*** பார்க்க; see *vaḍivamiḷa-.*

*[உருவு + இழ.]*

**உருவு[1]-தல்** *uruvu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***உறைகழித்தல்;*** to unsheath, as a sword. "வாளுரீஇ யினானே" (*சீவக.* 2247). 2. ***கையாற் பொருள் வரும்படி உருவுதல்;*** to strip, as beads from a string, as leaves from a twig, "அடகுரீஇ" (*சீவக.* 2625). 3. ***சுளுக்கு முதலிய வற்றைப் போக்கத் தடவுதல்;*** to massage, draw the hand down over a sprained part of the body. 4. ***கயிற்றுச் சுருக்கை யுருவுதல்;*** to loosen or tighten a noose. 5. ***ஊடுருவிச்செல்லுதல்;*** to pierce through, penetrate, as an arrow, a needle, "உலக மூடுருவுஞ் செம்பெருமானே" (திருவாச. 28.2).

ம. உருவுக; க. ஒரெ, தெ. ஒரி (பறித்தல்).

*[உல் → உரு → உருவு.]*

**உருவு[2]-தல்** *uruvu-*, 7. செ.கு.வி. (v.i.) 1. ***தப்பித்துக் கொள்ளுதல்;*** to escape, to give the slip. பையன் உருவிவிட்டான். 2. ***துளைத்தல்*** (ஆ.அக.); to pierce. (செ.அக.).

**உருவு[3]** *uruvu*, பெ. (n.) ***உருவம்*** பார்க்க; see *uruvam.* "உருவு நுகர்ச்சி... யைங்கந்த மாவன" (மணிமே. 30,189) (செ.அக.).

ம. உருவு.

*[உரு → உருவு.]*

**உருவுகயிறு** *uruvu-kayiṟu*, பெ. (n.) ***மாடு கட்டுங் கயிறு;*** stall rope for tying an ox. (செ.அக.).

*[உரு → உருவு + கயிறு.]*

**உருவுகை** *uruvugai*, பெ. (n.) ***சுளுக்குப் பாய்ந்த விடத்தை விரல்களினாலமுத்தி மெதுவாய் உருவுதல்;*** a gentle movement of the affected part by someone else pressing with the fingers and drawing the hand down a number of times, passive movement. (சா.அக.).

*[உருவு → உருவுகை (உருவுதல்).]*

**உருவுசுருக்கு** *uruvu-śurukku*, பெ. (n.) ***முடிச்சு*** (அக.நி.); slip-knot, noose. (செ.அக.).

*[உரு → உருவு + சுருக்கு.]*

**உருவுடம்பு** *uru-v-uḍambu*, பெ. (n.) ***கண்ணுக்குப் புலனாகும் உடம்பு;*** physical (matter) body.

*[உரு + உடம்பு.]*

**உருவுதடம்** *uruvu-taḍam*, பெ. (n.) ***உருவுசுருக்கு*** பார்க்க; see *uruvu-śurukku.* (செ.அக.).

*[உரு → உருவு + தடம்.]*

**உருவுதிரை** *uruvu-tirai*, பெ. (n.) ***திரைவகை*** (*சீவக.* 2471, உரை); stage curtain. (செ.அக.).

*[உரு → உருவு + திரை.]*

**உருவுபற்றல்** *uruvu-paṟṟal*, பெ. (n.) ***கருப்பையிலுள்ள பிண்டத்துக்கு உறுப்புகள் உண்டாதல்;*** formation of organs in a foetus in the womb; development of the product of conception, gestation (சா.அக.).

*[உருவு + பற்றல்.]*

**உருவுவமம்** *uru-v-uvamam*, பெ. (n.) ***வண்ணம் பற்றி வரும் ஒப்புமை*** (தொல். பொருள். 276, உரை); (poet) comparison based on colour, as in gold like body. பொன்மேனி. (செ.அக.).

*[உருவு + உவமம்.]*

**உருவுள்ளு** *uruvuḷḷu*, பெ. (n.) ***கொள்;*** horsegram.

க. உருளி, உள்ளி; தெ. உறுவுறு, உறுவுலு.

*[உரு + உள்ளு. உருளி → உள்ளி → உள்ளு. உருளி என்னும் தமிழ்ச்சொல்லும் உள்ளி என்னும் திரிபும் சேர்ந்து தெலுங்கில் பெற்ற வடிவம் உருவுள்ளி. இது விலக்கத்தக்கது.]*

**உருவெடு-த்தல்** *uruveḍu-*, 4. செ.கு.வி. (v.i.) ***வடிவமெடுத்தல்;*** to take a body, as a soul; assume a form, as a deity, to represent a character, as in a drama. (செ.அக.).

*[உரு + எடு.]*

**உருவெடுத்தல்** *uruveḍuttal*, பெ. (n.) ***திரு உருவத்தை ஊர்வலமாகக் கொண்டு வருதல்;*** taking out an idol or image in procession (சேரநா.).

ம. உருவெடுப்பு.

*[உரு + எடுத்தல்.]*

**உருவெடுப்பு** *uruveḍuppu*, பெ. (n.) 1. ***நேர்ச்சிக்கடன் செலுத்தற் பொருட்டுச் சுடுமண் உருவம் செய்தல்;*** to fulfill a vow making clay images. 2. ***குறித்த உருவில் அல்லது வடிவில் பதுமை செய்தல்;*** making image in particular shape. 3. ***குறித்த வடிவமுடைய உயிராய்ப் பிறப்பெடுத்தல்;*** incarnation.

*[உருவு + எடுப்பு.]*

**உருவெழுத்து** *uru-v-eḻuttu*, பெ. (n.) ***வரிவடிவுள்ள எழுத்து*** (யாப். வி.535); letters of an alphabet, as having forms.

*[உரு + எழுத்து.]*

**உருவெளி** *uruveḷi*, பெ. (n.) ***உருவெளித்தோற்றம்*** பார்க்க; see *uruveḷittōṟṟam.* "உருவெளி யருகு தோன்ற வுற்றன னிறைவ னென்னா" (தணிகைப்பு. வள்ளி. 245). (செ.அக.).

*[உரு + வெளி.]*

**உருவெளிக்காட்சி** *uruveḷi-k-kāṭci*, பெ. (n.) ***உருவெளித் தோற்றம்*** பார்க்க; see *uruveḷi-t-tōṟṟam.* (செ.அக.).

*[உரு + வெளி + காட்சி.]*

**உருவெளித்தோற்றம்** *uru-veḷittōṟṟam*, பெ. (n.) ***இடைவிடா நினைப்பினால் தான் விரும்பியது எதிரிலுள்ளது போலத் தோன்றும் போலித் தோற்றம்;*** imaginary appearance of a person or thing, visionary object, hallucination usu. applied, to the supposed sight of absent lovers. (செ.அக.).

*[உரு + வெளி + தோற்றம்.]*

**உருவெளிப்பாடு** *uru-veḷi-p-pāḍu,* பெ. (n.) ***உருவெளித் தோற்றம்*** பார்க்க; see *uruveḷittōṟṟam.* (செ.அக.).

*[உரு + வெளி + பாடு.]*

**உருவெளி மயக்கம்** *uru-veḷi-mayakkam,* பெ. (n.) ***உடம்பின் நரம்புகளின் ஆற்றல் குறைவால் பல வகையான உருவங்கள் புலனுக்குத் தோன்றல்;*** disease due to nervous weakness, in which a variety of strange images float before the mind. (சா.அக.).

*[உரு + வெளி + மயக்கம்.]*

**உருவேற்று-தல்** *uruvēṟṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***மந்திரத்தைப் பலமுறை உருவேற்றுதல்;*** to repeat mantras. "எட்டெழுத்தாலுரு வேற்றலார்" (சேதுபு. சேது பல. 114). 2. ***நெட்டுருப் பண்ணுதல்;*** to repeat or rehearse a lesson frequently in order to learn it by heart. 3. ***ஆத்திரமேற்றுதல்;*** to cause a spirit to possess some one for uttering oracles or for ascertaining future events. (W.). 4. ***முறையற்ற தீயறிவூட்டுதல்;*** to give evil advice, usu. taking the form of a persuasive talk. (colloq.). (செ.அக.).

*[உரு + ஏற்று.]*

**உருவேறு-தல்** *uru-vēṟu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***மந்திரவுரு அதிகமாதல்;*** to increase in number as repetition of mantras. 'உருவேறத் திருவேறும்'. 2. ***வெறி யுணர்வு மிகுதிப்படல்;*** to be possessed by a spirit for the utterance of oracles. (W.) 3. ***கடுஞ்சீற்றம் கொள்ளுதல்*** (மூர்க்கமிகுதல்); to become furious. (W.) 4. ***நிலை தளர்தல்;*** to fall into a fit. (செ.அக.).

*[உரு + ஏறு.]*

**உருவை** *uruvai,* பெ. (n.) 1. ***சூரை*** (மலை.); oblique leaved jujube. 2. ***முள்ளி;*** Indian night shade. (செ.அக.).

*[உரு → உருவை.]*

**உருவொளி** *uru-voḷi,* பெ. (n.) ***கண்ணாடி முதலியவற்றில் காணும் நிழல்;*** mirror images etc.

*[உரு + ஒளி.]*

**உருவோட்டம்** *uru-vōṭṭam,* பெ. (n.) ***கப்பலோட்டம்;*** sailing. (சேரநா.).

ம. உருவோட்டம்.

*[உரு + ஓட்டம்.]*

**உருள்[1](ளு)-தல்** *uruḷ-,* 16. செ.கு.வி. (v.i.) 1. ***தொடர்ந்து புரளுதல்;*** to turn about, as dice; to roll, tumble over and over, revolve on a plane, as a wheel; to spin, whirl round, as discus. "திண்வரை யுருள் கிலேன்" (திருவாச. 539). 2. ***உருண்டு திரளுதல்;*** to become round, to grow globular. அரத்தக் கட்டியு ருண்டு வருகிறது. 3. ***அழிதல்;*** to perish, die, as in battle or by an epidemic, to become extinct. "உலகெலா முருளுமின்றென" (சீவக. 2452). 4. ***செல்லுதல்;*** to go, proceed. "நூல்வழி யுருள்விலா மனத்தவர்க்கு" (சூளா. முத்தி 13). 5. (சக்கரம்) ***உருண்டு செல்லுதல்;*** to roll on. "உருள் பெருந்தேர்க்கு அச்சாணி யன்னா ருடைத்து" (குறள். 66).

ம. உருள்; க. உருள், உருளி, உருளு; கு. உரிட்; து. உருளு; தெ. உரலு; குவி., பட. உருளு; *E.* roll; *OF.* rolle; *D.* rotulus.

*[உல் → உரு → உருள்.]*

**உருள்[2]** *uruḷ,* பெ. (n.) 1. ***தேர்ச்சக்கரம்;*** car wheel. "உருள் பூந்தண்டார்" (திருமுரு. 11). 2. ***வண்டி*** (திவா.); wheeled vehicle, cart. 3. ***நாண்மீன்*** (உரோகிணி); the fourth nakṣatra. 4. ***வட்டம்;*** circle (ஆ.அக.) 5. ***கவறு*** (சூதாட்டம்); gambling. (செ.அக.).

*[உரு → உருள்.]*

**உருள்வண்டு** *uruḷ-vaṇḍu,* பெ. (n.) ***பீவண்டு;*** dung beetle, scarab. "உருள் வண்டினந் துர்மலத்தை நாடும்" (குமரேச.சத. 83). (செ.அக.).

*[உருள் + வண்டு.]*

**உருளரிசி** *uruḷ-arisi,* பெ. (n.) ***உருண்டையான கொத்து மல்லி*** (திவா.); coriander seed. (செ.அக.).

*[உருள் + அரிசி.]*

**உருளாயம்** *uruḷ-āyam,* பெ. (n.) ***கவறாட்டத்தால் வரும் ஆதாயம்;*** gains from playing dice. "உருளாய மோவாது கூறின்" (குறள், 933). (செ.அக.).

*[உருள் + ஆயம்.]*

**உருளி** *uruḷi,* பெ. (n.) 1. ***உருளை;*** wheel of a vehicle. "வல்வா யுருளி கதுமென மண்ட" (பதிற்றுப். 27,11). 2. ***வட்டம்;*** circle. "உருளிமாமதி" (சீவக. 532). 3. ***எலும்புப் பொருத்து;*** ball and socket joint, enarthrosis. 4. ***ஒருவகை வெண்கல ஏனம்;*** small vessel of bell-metal that is circular in shape 5. ***திரிகையின் மேற்கல்;*** upper mill stone, as the one that turns on the lower stationary one. 6. ***கொள்; காணம்;*** horsegram. (செ.அக.).

ம. உருளி; க., து. உருளி.

*[உருள் → உருளி.]*

**உருளிபுரள்(ளு)-தல்** *uruḷi-puraḷ-,* 6. செ.கு.வி. (v.i.) ***எலும்புப் பொருத்து விலகுதல்;*** to be dislocated, as a joint. (செ.அக.).

*[உருளி + புரள்-தல்.]*

**உருளிபெயர்-தல்** *uruḷi-peyar-,* 4. செ.கு.வி. (v.i.) ***உருளிபுரள்-தல்*** பார்க்க; see *uruḷi-puraḷ.*

*[உருளி + பெயர்.]*

**உருளை[1]** *uruḷai,* பெ. (n.) 1. ***சக்கரம்;*** wheel of a vehicle. "சகடிரு சக்கர வுருளைக ளுய்க்கவே" (பாரத. வேத்திர. 50). 2. ***உருண்டை;*** anything that rolls or turns, as a ball or a wheel. 3. ***உருளைக்கிழங்கு;*** potato.

ம. உருள; க. உரளி; தெ. உர்ளி, கோத. உண்டாய்; கோண். உள்தா; பட. உண்டெ; *L* rota, wheel.

*[உருள் → உருளை.]*

**உருளை**² *uruḷai*, பெ. (n.) 1. ***வைரவகை;*** (S.I.I.ii, 78); a kind of diamond. 2. ***பிட்டம்;*** hip-joint of a bull. 3. *முட்டை* (வை.மூ.); egg. 4. ***வெள்ளை நஞ்சு*** (பாடாணம்) (வை.மூ.); white oxide of arsenic. (செ.அக.).

*[உருள் → உருளை.]*

**உருளைக்கல்** *uruḷai-k-kal*, பெ. (n.) ***பரற்கல்;*** pebble.

*[உருளை + கல்.]*

**உருளைக்கிழங்கு** *uruḷai-k-kiḻaṅgu*, பெ. (n.) 1. ***கிழங்கு வகை;*** potato, tuber of solanum tuberosum. 2. ***செடிவகை;*** potato-plant.

*[உருளை + கிழங்கு.]*

**உருளைப்பிரண்டை** *uruḷai-piraṇḍai*, பெ. (n.) ***கோப் பிரண்டை;*** a long round and smooth creeper of vitis. (zenus.). (சா.அக.).

*[உருளை + பிரண்டை.]*

**உரை**¹**-தல்** *urai-*, 3. செ.கு.வி. (v.i.) 1. ***தேய்தல்;*** to be reduced in to a powder or paste; to wear away by attrition; to be indented or effaced by rubbing. (W.) 2. ***வீணாதல்;*** to prove abortive. (W.) காரிய மெல்லா முரைந்து போயிற்று.

க. ஒரெ; ம. உர; தெ. ஒரயு.

*[உல் → உல் → உர → உரை.]*

**உரை**²**-த்தல்** *urai-*, 3. செ.குன்றாவி. (v.t.) 1. ***தேய்த்தல்;*** to rub in to a paste, wear away by rubbing, grate. "வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே" (கலித். 115). 2. ***மருந்திழைத்தல்;*** to rub in to a nice powder, or paste to levigate or titrate. 3. ***மாற்றறியத் தேய்த்தல்*** (திவ். பெரியாழ். 5,4,5); to test to the touchstone, as valuable metals like gold. 4. ***பூசுதல்;*** to smear, daub. "உரைக்கு நானமும்" (சீவக. 831) 5. ***மெருகிடுதல்;*** to polish. "ஒடவைத்துரைத்த" (ஈடு 3,1,2). (செ.அக.).

தெ ஒரச்சு; க. ஒரே; ம. உர; து. உரெ.

*[உர → உரை-த்தல்.]*

**உரை**³**-த்தல்** *urai-*, 3. செ.குன்றாவி. (v.t.) 1. ***சொல்லு தல்;*** to tell, speak. 2. ***ஒலித்தல்;*** to sound.

ம. உர; க. ஒரே.

*[உர → உரை.]*

**உரை**⁴ *urai*, பெ. (n.) 1. ***தேய்வு*** (சூடா.); rubbing, friction, attrition. 2. ***துணிவு;*** courage. 3. ***உயர்ச்சி;*** excellence. (செ.அக.);

க. ஒரெ; ம. உர; தெ. ஒர.

*[உர → உரை.]*

**உரை**⁵ *urai-*, பெ. (n.) 1. ***மாற்று;*** fineness of gold or silver as tested on the touchstone. "உரைகுறைபடாது" (அழகர்கல. 55). 2. ***பொன்*** (திவா.); gold. (செ.அக.).

*[உர → உரை.]*

**உரை**⁶ *urai*, பெ. (n.) 1. ***உரைக்கை;*** speaking, utterance. "உரைமேற் கொண்டு" (திவ். இயற். 1,2,5). 2. ***சொல்*** (திவா.); word, expression, saying. 3. ***உரைவளம்;*** explanation, interpretation, commentary, exposition, gloss. "உரையாமோ நூலிற்கு நன்கு" (நாலடி, 319). 4. ***எழுத்தொலி*** (பிங்.); sound of a letter. 5. ***புகழ்;*** fame, reputation. "உரைசால் பத்தினிக்கு" (சிலப்.பதி. 56). 6. ***மறைமொழி அளவை*** (ஆகமப் பிரமாணம்) (சி.சி. அளவை, 1); sacred writings, holy writ. 7. ***முழக்கம்;*** roar, loud noise. "குன்றங் குமுறியவுரை" (பரிபா. 8.35). 8. ***பிறருக்குக் கேட்கும்படி சொல்லும் மந்திர முறை*** (சைவச. பொது. 151); mantra recited aloud.

ம. உர; க. ஒரெ. குட. ஒரட்; தெ. ஒர. வெதெ. பர். உர் (முனகுதல்.); கோண். ரொான்சானா (அழைத்தல்.); *L* oris, the mouth, oro, to speak; *E* oral, oration, oracle etc.

*[உல் → உர → உரை.]*

**உரைக்கிழத்தி** *urai-k-kiḻatti*, பெ. (n.) ***கலைமகள்*** (திருக்காளத்.பு.பதி.3); Sarasvati, the deity over speech, the goddess of learning. (செ.அக.).

*[உரை + கிழத்தி.]*

**உரைக்கோள்** *urai-k-kōḷ*, பெ. (n.) ***உரையாசிரியனின் கருத்து;*** interpretation given to the text by a commentator. (W.) (செ.அக.).

*[உரை⁶ + கோள்.]*

**உரைகட்டு-தல்** *uraikaṭṭu-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***உரை செய்தல்;*** to comment on a work. (W.) (செ.அக.).

*[உரை⁶ + கட்டு.]*

**உரைகல்** *urai-kal*, பெ. (n.) 1. ***பொன், வெள்ளி யுரைக்கும் கல்;*** touchstone, used in testing the particular quality of the fineness of precious metals. "பொன்னைக் கொண்டுரைகல் மீதே" (திவ். பெரியாழ். 5,4,5) 2. ***மருந்துரைக்குஞ் சிறுகல்;*** small stone for rubbing pills and other forms of medicine into powder. (செ.அக.).

ம. உரகல்லு; க., து. ஒரெகல்; தெ. ஒரெகல்லு; கொலா., நா. ரொகல்.

*[உரை⁵ + கல்.]*



உரைகல்

**உரைகலங்கு-தல்** *uraikalaṅgu-*, 15. செ.கு.வி. (v.i.) ***பேச்சுத்தடுமாறுதல்;*** to be confused in speech. "சிந்தை தூயோனுரை கலங்க" (பாரத. புட்ப.20).

*[உரை⁵ + கலங்கு.]*

**உரைகாரன்** *urai-kāraṉ*, பெ. (n.) ***உரையாசிரியன்*** (நன். 51); commentator. (செ.அக.).

*[உரை⁵ + காரன்.]*

**உரைகோள்** *uraikōḷ*, பெ. (n.) ***நூலுக்குச் செய்யும் உரையில் சொல்லப்படுவன;*** the contents, description in a commentary.

*[உரை + கோள்.]*

**உரைகோளாளன்** *urai-kōḷāḷaṉ*, பெ. (n.) ***சொல்லும் உரையை எளிதிலறிய வல்லவன்;*** he who can easily grasp what is taught. "உரை கோளாளற் குரைப்பது நூலே". (நன். 37). (செ.அக.).

*[உரை⁵ + கோள் + ஆளன்.]*

**உரைச்சூத்திரம்** *urai-c-cūttiram*, பெ. (n.) ***உரைநூற்பா*** பார்க்க; see *urai-nūṟpā*.

*[உரை⁵ + சூத்திரம்.]*

*Skt.* Sūtra > த. சூத்திரம்.

**உரைச்செய்யுள்** *urai-c-ceyyuḷ*, பெ. (n.) ***கட்டுரை;*** prose composition. "வார்த்திகப் பொழிப்பென்பது உரைச் செய் யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படும்" (சி.போ. பா.) (செ.அக.).

*[உரை⁵ + செய்யுள்.]*

**உரைசல்** *uraišal*, பெ. (n.) ***உராய்கை;*** rubbing against, friction. (செ.அக.).

ம. உரசல்.

*[உரை¹ → உரைதல் → உரைசல்.]*

**உரைசு¹-தல்** *uraišu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***உரிஞ்சுதல்;*** to rub against, as a post; to chafe. 2. ***தேய்தல்;*** to wear away by use, as a seat, as one's feet by walking.

*[உரை⁵ → உரைசு.]*

**உரைசு²-தல்** *uraišu-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***தேய்த்தல்;*** to rub hard, scour, scrape, scratch as with the head of a nail, clean off or waste away by rubbing. (செ.அக.).

ம. உரசுக; க. ஒரசு; தெ. ஒரசு.

*[உரை → உரைத்து → உரைச்சு → உரைசு. ஒ. நோ. உரை¹.]*

**உரைசெய்¹-தல்** *urai-šey-*, 1. செ.குன்றாவி. (v.t.) ***சொல்லுதல்;*** to speak, talk. "இருந்தவாற்றை யுரை செய்தான்" (திருவாய். நூற்.99). (செ.அக.).

ம. உரசெய்யுக.

*[உரை⁵ + செய்.]*

**உரைசெய்³-தல்** *urai-šey-*, 1. செ.கு.வி. (v.i.) ***உரை*** (விளக்கவுரை) ***செய்தல்;*** to write a commentary.

*[உரை⁵ + செய்.]*

**உரைசொல்லல்** *urai-šollal*, பெ. (n.) ***இறந்தார் முன்பு மாரடித்துக் கொண்டு பெண்கள் புலம்பிக் கற்பனையாகப் பாட்டுச் சொல்லுதல்;*** mournful singing by the females lamenting at the funeral with rhythmic breast beating for the departed soul;. (சா.அக.).

*[உரை⁵ + சொல்லல்.]*

**உரைஞ்சு-தல்** *uraiñju-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***உரைசுதல்;*** to rub. ஆனையு மானையு முதுகுரைஞ்ச இடையி லிருந்து கொசுகு நசுங்குகிறது. (செ.அக.).

*[உரை → உரைந்து → உரைஞ்சு.]*

**உரைத்தாமென்றல்** *uraittām-eṉṟal*, பெ. (n.) ***ஓர் உத்தி*** (நன். 14.); (Gram.) drawing attention to a subject that has already been explained, one of 32 utti. (செ.அக.).

*[உரை⁵ → உரைத்தாம் + என்றல்.]*

**உரைத்துமென்றல்** *uraittum-eṉṟal*, பெ. (n.) ***ஓர் உத்தி*** (நன். 14.); (Gram) hint thrown out to suggest that the explanation of an item may be looked for in a subsequent place, one of 32 utti. (செ.அக.).

*[உரைத்தும் + என்றல்.]*

**உரைநடை** *urai-naḍai*, பெ. (n.) ***யாப்பமைதிக்குட்படாது இயல்பாக அமையும் எழுத்து நடை;*** prose style. (செ.அக.).

*[உரை⁵ + நடை.]*

**உரைநயம்** *urai-nayam*, பெ. (n.) ***உரையின் இனிமை;*** excellence of the exposition on a work. (செ.அக.).

*[உரை⁵ + நயம்.]*

**உரைநூல்** *urai-nūl*, பெ. (n.) 1. ***உரையாகிய நூல்;*** commentary, as a recognized work possessing literary merit and forming part of literature. 2. ***உரைபெற்ற நூல்;*** a work on which a commentary has been written. (W.) (செ.அக.).

*[உரை⁵ + நூல்.]*

**உரைநூற்பா** *urai-nūṟpā*, பெ. (n.) ***உரையிடையே உரைகாரரியற்றிய யாப்புப் பாவகை*** (இலக். கொத். 25); aphoristic rule composed by the commentator in the course of his commentary on a work in order to furnish additional information.

*[உரை⁶ + நூற்பா.]*

**உரைப்பாட்டு** *urai-p-pāṭṭu*, பெ. (n.) ***கட்டுரைநடை*** (சிலப். பதி.60, உரை); rhetorical prose. (செ.அக.).

*[உரை⁶ + பாட்டு.]*

**உரைப்பு** *uraippu*, பெ. (n.) 1. ***தேய்ப்பு;*** rubbing. 2. ***மாற்றறிய உரைக்கை;*** assaying, testing the quality of fineness of precious metals. (செ்.அக.).

*[உரை⁵ → உரைப்பு.]*

**உரைப்பொருள்** *urai-p-poruḷ*, பெ. (n.) 1. ***உரைக்கப் படும் பொருள்;*** core subject or content of the text. "மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய" (சிலப்.27-55). 2. ***விரித்துரைக்கும் மெய்யுரை*** (திவா.); commentary which seeks to give the real meaning of the text. (செ.அக.).

*[உரை⁶ + பொருள்.]*

**உரைபாடம்** *urai-pāḍam*, பெ. (n.) ***மூலமும் உரையும்*** (வின்.); text with commentary. (செ.அக.).

*[உரை⁶ + பாடம்.]*

**உரைபெறுகட்டுரை** *uraiperu-kaṭṭurai*, பெ. (n.) ***காப்பி யங்களில் உரைநடையி லமைந்த தொடர்*** (சிலப்.); rhetorical prose, in an epic poem. (செ.அக.).

*[உரை⁶ + பெறு + கட்டுரை.]*

**உரைமானம்** *uraimāṉam*, பெ. (n.) ***தேய்ப்பு;*** rubbing. (செ.அக.).

ம. உரமானம்.

*[உரை¹ + மானம். 'மானம்' சொல்லாக்க ஈறு.]*

**உரைமுடிவு** *urai-muḍivu*, பெ. (n.) ***நயனிடு, முறை வழங்குதற்கான தீர்வுரை;*** decision arrived at after hearing both parties to a suit; considered judgment. "உரைமுடிவு காணா னிளைமையோன்" (பழ. 6). (செ.அக.).

*[உரை⁶ + முடிவு.]*

**உரைமெழுகு** *urai-meḻugu*, பெ. (n.) ***உரைத்த பொன் வெள்ளிகளை ஒற்றும் மெழுகு;*** darkish kind of wax, used by goldsmiths as well as by assayers in cash bazaars to take up the dust falling from precious metals that are tested on the touchstone. (செ.அக.).

*[உரை⁵ + மெழுகு.]*

**உரையசை** *urai-y-aśai-*, பெ. (n.) ***தன்னாற்றலைப் பெரும்பான்மையுமிழந்து சிறிது பொருளுணர்த்தி வரும் இடைச்சொல்*** (தொல். சொல். 279, உரை.); word which has lost much of its original signification and is almost an expletive as 'ஆங்க'. (செ.அக.).

*[உரை⁶ + அசை.]*

**உரையசைக்கிளவி** *urai-y-aśai-k-kiḷavi*, பெ. (n.) ***ஒருவனை எதிர்முகமாக்குஞ் சொல்*** (தொல். எழுத். 34); word used in inviting attention, as கேள், i.e. listen in கேண்மியா. (செ.அக.).

*[உரை⁶ + அசை + கிளவி.]*

**உரையல்** *uraiyal*, பெ. (n.) ***சொல்லுகை;*** narrating, relating. "கனவின் றலையிட் டுரையல்" (கலித். 92,57). (செ.அக.).

ம. உரய்பு.

*[உரை⁶ + அல்.]*

**உரையளவை** *urai-y-aḷavai*, பெ. (n.) ***முறைமை அளவை*** (ஆகமப் பிரமாணம்) (சி. சி. அளவை, 2.சிவஞா.); proof from the sāstrās. (செ.அக.).

*[உரை + அளவை.]*

**உரையறிகருவி** *urai-y-aṟi-karuvi*, பெ. (n.) 1. ***உரைகல்*** (திவா.); touch stone. 2. ***மாற்றறிவிக்கும் ஆணி;*** touch needle. (W.) (செ.அக.).

*[உரை⁵ + அறி + கருவி.]*

**உரையன்** *uraiyaṉ*, பெ. (n.) ***'செப்பினஞ் செலினே' எனும் குறுந்தொகைப் பாவைப் பாடிய சங்க மருவிய தமிழ்ப் புலவருள் ஒருவர்;*** a poet of later Sangam age.

*[உரை⁶ + அன்.]*

**உரையனுமானம்** *urai-y-aṉumāṉam*, பெ. (n.) ***உரை யுய்த்துணர்வு*** பார்க்க; see *urai-y-uyttuṇarvu.*

**உரையாசிரியர்** *urai-y-āśiriyar*, பெ. (n.) 1. ***உரையாசிரி யன்*** பார்க்க; see *urai-y-āśiriyaṉ.* 2. ***இளம்பூரணர்;*** Iḷampūraṇar the first commentator of Tolkāppiyam. "உரையா சிரியரும்... விரிப்புழி" (தொல். சொல். 2. சேனா.).

*[உரை⁶ + ஆசிரியர்.]*

**உரையாசிரியன்** *urai-y-āśiriyaṉ*, பெ. (n.) ***உரைகாரன்*** (இலக். கொத்.6); comentator. (செ.அக.).

*[உரை⁶ + ஆசிரியன்.]*

**உரையாடு-தல்** *urai-y-āḍu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***சொல்லுதல்;*** to say, tell. "பணிந்த சொல்லுரை யாடி னன்" (பிரபுலிங். இட்டலிங். 42). 2. ***கலந்து பேசுதல்;*** to converse. (செ.அக.).

*[உரை³ + ஆடு.]*

**உரையாணி** *urai-y-āṇi*, பெ. (n.) ***மாற்றறிவிக்கும் ஆணி;*** touch-needle. "சிவஞானசித்தி சிவாகமார்த்தங்களுக் கெல்லாம் உரையாணி" (சிவசம. 33). (செ.அக.).

*[உரை⁵ + ஆணி.]*

**உரையிடு-தல்** *urai-y-iḍu-*, 20. செ.கு.வி. (v.i.) 1. ***நூற்கு உரை செய்தல்;*** to annotate. 2. ***சொற்போர் செய்தல்;*** to enter into controversy, to debate. "ஒருவர்க் கொருவ ருரையிடு மவ்வோலை" (தெய்வச். விறலிவிடு. 99).

*[உரை[6] + இடு.]*

**உரையிலக்கணம்** *urai-y-ilakkaṇam*, பெ. (n.) ***பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள் தொகுத்துரை,*** (உதாரணம்). ***வினா, விடை, சிறப்பு*** (விசேடம்), ***விரிவு, அதிகாரம், துணிவு, பயன் ஆகியவை ஆசிரிய உரை*** (வசனம்) ***க்கு வேண்டுமிலக்கணம்;*** the contents of commentary.

*[உரை[6] + இலக்கணம்.]*

**உரையிற்கொள்(ளு)-தல்** *uraiyiṟ-koḷ(ḷu)-*, 10. செ. குன்றாவி (v.t.) ***மூலத்திற் சொல்லப்படாததை உரையிற் சேர்த்துக் கொள்ளுதல்*** (மாறன 275, உரை.): to make additional statements in a commentary about a subject mentioned in the text. (செ.அக.).

*[உரை[6] + இல் + கொள்]*

**உரையிற்கோடல்** *uraiyiṟ-kōḍal*, பெ (n.) ***மூலத்திற் சொல்லாதவற்றையும் உரையிற் கொள்ளும் ஒரு நூலுத்தி*** (இறை 27, உரை); an accepted canon of exegesis which permits of addtions being made to the subject-matter of a text by the commentator in the course of his exposition, one of 32 utti. (செ.அக.).

*[உரை[6] + இல் + கோடல்.]*

**உரையுய்த்துணர்வு** *urai-y-uyttuṇarvu*, பெ. (n.) ***நூலிற் சொல்லியது கொண்டு, சொல்லாததையும் ஒப்புமை பற்றியறியும் உய்த்துணர்வு*** (சி சி அளவை, 12. சிவஞா.); inference by analogy of things that are not specifically mentioned in the sāstrās from those that are mentioned there in.

*[உரை[6] + உய்த்துணர்வு.]*

**உரையுரைத்தல்** *urai-y-uraittal*, தொ.பெ. (vbl.n.) 1. ***பயனுரைத்தல், மெய்யுரைத்தல், பிரித்துரைத்தல் அன்றியும் பதவுரையுரைத்தலின் பெயர்;*** name of the branches of the commentary 2. ***பொழிப்புத்திரட்டல்;*** compiling the commentary description.

*[உரை[3] + உரைத்தல்.]*

**உரையேடு** *uraiyēḍu*, பெ. (n.) ***உரைபாடம்*** பார்க்க; (W.), see *urai-pāḍam.*

*[உரை[6] + ஏடு]*

**உரைவன்மை** *urai-vaṉmai*, பெ. (n.) ***பேச்சுவன்மை;*** eloquence, oratorical power.

*[உரை[6] + வன்மை.]*

**உல்[1]** *ul*, பெ. (n.) ***முன்மை;*** frontness.

*[ஊ → உ → உல்.]*

**உல்[2]** *ul*, 14. செ.கு.வி. (v.i.) 1. ***முன்னுறுதல்; முற்படுதல்;*** to move forward, go forward. 2. ***மேற் செல்லுதல்; உயர்தல்;*** to go up. 3. ***விரைதல்;*** to go fast, hasten. 4. ***மிகுதிப்படுதல்;*** to become excess.

*[ஊ → உ → உல்.]*

**உல்[3]** *ul*, 14. செ.கு.வி. (v.i.) 1. ***தோன்றுதல்;*** to originate, appear. உல்லரி (தளிர்), உரு (உருவம்). 2. ***முளைத்தல்;*** to sprout. 3. ***மென்மைப்படுதல்;*** to become thin. 4. ***பெரிதாதல்;*** to grow big.

*[ஊ → உ → உல்]*

**உல்[4]** *ul*, 14. செ.கு.வி. (v.i) 1. ***நெருங்குதல்;*** to go near, approach. 2. ***தொடுதல்;*** to touch. 3. ***உராய்தல்;*** to rub. 4. ***வலிதாதல்;*** to become strong.

*[ஊ → உ → உல்.]*

**உல்[5]** *ul*, 14. செ.கு.வி (v.i.) 1. ***எரிதல்;*** to burn. 2. ***வருந்துதல்; துன்பப்படுதல்;*** to feel extreme pain or agony.

*[ஊ → உ → உல்.]*

**உல்[6]** *ul*, 14. செ.கு.வி. (v.i.) 1. ***உள்ளொடுங்குதல்.*** to become lean, emaciate. 2. ***காய்தல்;*** to dry. 3. ***சிறிதாதல்;*** to become small in size. 4 ***கீழிறங்குதல்;*** to get down 5. ***கீழே தங்குதல்;*** to set beneath. 6. ***உள்ளடங்குதல்.*** to be inside.

*[ஊ → உ → உல்.]*

**உல்[7]** *ul*, 14. செ.கு.வி. (v.i.) 1. ***வளைதல்;*** to bend. 2. ***சுற்றுதல்; உலாவுதல்;*** to go round. 3. ***சுற்றி வருதல்; வட்டமாகச் சுழலல்;*** to rotate.

*[ஊ → உ → உல்.]*

**உல்[8]** *ul*, 9. செ.குன்றாவி. (v.t.) 1. ***குத்துதல்;*** to pierce. 2. ***துளைத்தல்;*** to make hole. 3. ***அழித்தல்; கெடுத்தல்;*** to decay, ruin.

*[ஊ → உ → உல்.]*

**உல்[9]** *ul*, 14. செ.கு.வி. (v.i.) 1. ***ஊடுருவுதல்;*** to penetrate. 2. ***ஊடுருவிவெளிப்படுதல்;*** to penetrate and come out otherside.

*[ஊ → உ → உல்.]*

**உல்[10]** *ul*, பெ. (n.) 1. ***தேங்காயுரிக்கும் கருவி;*** sharp stick or iron to peel coconuts. 2. ***கழு;*** impaling stake.

*[உ → உல் (குத்தல் கருத்து ) உல் = குத்தியுரிக்கும் கருவி.]*

**உல்[11]** *ul*, பெ. (n.) 1 ***குத்தியெடுப்பதற்குப் பயன்பட்ட பழங்காலக் கற்கோடரி;*** hand-axe of stone. 2 ***கல்;*** stone.

*[உ → உல்.]*

**உல்கு[1]** *ulgu*, பெ. (n.) ***சுங்கவிறை;*** toll, custom, duty. "உறுபொருளு முல்குபொருளும்" (குறள், 756).

*[உல் = பொருந்துதல், செறிதல், கொடுத்தல் உல் → உல்கு]*

**உல்குசெய்-தல்** *ulgu-sey-,* 4. செ.கு.வி. (v.i.) ***சுங்கங் கொள்ளுதல்*** (பட்டினப். 125); to levy a duty.

*[உல்கு + செய்.]*

**உல்கூட்டுஞ்சரக்கு** *ulkūttuñcarakku,* பெ. (n.) ***சுங்கந் தரும் பண்டம்*** (T.A.S.ii, 82.); merchandise from which customs are derived. (செ.அக.).

*[உல்கு + ஊட்டும் + சரக்கு ]*

**உல்லங் கருவாடு** *ullaṅ-karuvāḍu,* பெ. (n.) ***காயவைத்துப் பதப்படுத்திய உல்லமீன்;*** the salted sable fish. (சா.அக.).

*[உல்லம் + கருவாடு.]*

**உல்லடைப்பு** *ulaldaippu,* பெ. (n.) ***மரத்தால் ஆற்றுக்கு அணையிடுகை;*** damming a river with stockade (pond.). (செ அக.)

*[உல் + அடைப்பு.]*

**உல்லம்** *ullam,* பெ. (n.) 1. ***மீன்வகை;*** hilsa, silvery-shot with gold and purple clupea ilisha. 2. ***கடல் மீன்வகை;*** sea-fish, silvery shot with yellow and purple, clupea toli 3. ***வாசற்கால்;*** frame of a door. (சேரநா.) (செ.அக.).

ம. உல்லம். தெ. உல்லாகு.

*[உல் → உல்லம் ]*



உல்லம்

**உல்லரி.** *ullari,* பெ. (n.) ***தளிர்*** (அக.நி.); shoot bud.

ம. உல்லரி;

*[உல்³ → உல்லரி உல்லரி > Skt vallari.]*

**உல்லாகம்** *ullāgam,* பெ. (n.) ***நோய்நீங்கி உடல்நலம் தேறுதல்;*** health and strength after disease or from sickness- convalescence. (சா.அக.).

*[உல்லாயம் → உல்லாகம்.]*

**உல்லாசம்** *ullāsam,* பெ. (n.) 1. ***உள்ளக்களிப்பு;*** mirth, gaiety "உல்லாச நிராகுல" (கந்தரனு 2.) 2. ***அத்தவாளம்;*** shawl, upper garment. "உயர்ந்த தலைப்பாகை உல்லாச வல்லவட்டு சபையடக்கிப் பேசி வரும் சமத்தரோ உன் மாமன்" (நாட். பா.). 3. ***இறுமாப்பு;*** pride. (செ.அக.).

ம., து. ஒல்லி; க. ஒல்லி, தெ. ஒல்லெ, ஒல்லிய (an upper cloth)

*[உல்லாத்தம் → உல்லாசம்.]*

**உல்லாடி** *ullāḍi,* பெ. (n.) ***ஒல்லியான ஆள்*** (யாழ். அக.); thin, gaunt person.

ம. ஒல்லாடி.

*[உல்³ → உல்லி → உல்லாடி.]*

**உல்லாயம்** *ullāyam,* பெ (n.) ***நிரம்பா மென்மொழி*** (திவா.); babble, prattle, stammering; imperfect utterence, as of children, of birds. (செ.அக.).

*[உல்லாத்தம் → உல்லாசம் → உல்லாயம்.]*

**உல்லி**¹ *ulli,* பெ. (n.) 1. ***மெலிந்த ஆள்*** (யாழ்.அக.); thin person.

ம. ஒல்லி.

*[உல்³ → உல்லி ]*

**உல்லி**² *ulli,* பெ. (n.) 1. ***வெங்காயப்பூ;*** onion flower. 2. ***தலை;*** head. (ஆ.அக.).

*[உல் → உல்லி.]*

**உல்லி**³ *ulli,* பெ. (n.) ***மதில்,*** (அக.நி.); high wall, fort. (செ.அக.).

*[உ → உல்³ → உல்லி = உயரமானது.]*

**உல்லியக்கூலி** *ulliya-k-kūli,* பெ. (n.) ***வரிவகை*** (S.I.I.ii. 252); ancient tax.

*[உல்லியம் + கூலி.]*

**உல்லியநூல்** *ulliya-nūl,* பெ. (n.) ***நீர்நிலைகளை உண்டாக்க நிலத்தை அகழ்வதற்குமுன் நிலத்தடி ஊற்றுக் கால்களைத் தெரிந்து கொள்ள உதவும் நூல்;*** the branch of science relating to the secrets of the nature of the soil to determine the springs or sources for purposes of digging out wells and tanks of water supply.

*[உலலியம் + நூல்.]*

**உல்லியம்** *ulliyam,* பெ. (n.) 1. ***இறைகிணறு;*** well. (W). 2. ***நிலத்தடியிலுள்ள ஊற்றுக்கால்களைத் தெரிந்து கொள்ளும் கலை;*** the art of finding out the sources of springs under the earth. (சா.அக.).

*[உல் → உல்லியம் = கிணறு. உல் = குத்துதல்.]*

**உல்லியர்** *ulliyar,* பெ. (n.) ***கூவநூலோர்*** (திவா.); persons reputed to be skilled in determining suitable places for digging wells. (செ.அக.).

*[உல் → உல்லியர் ]*

**உல்லு** *ullu,* பெ. (n.) ***கோட்டான்;*** rock horned owl.

*Hindi,* ullu, *E* owl

*[உல் → உல்லு = மரத்தைப்பற்றிக் கொண்டிருப்பது.]*

**உல்லேற்று-தல்** *ullēru-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***கழுவேற்றுதல்*** (யாழ்ப்.); to impale. (செ.அக.).

*[உல் → உழு = கழுமுனை. உல் + ஏற்று-தல்.]*

**உல-த்தல்** *ula-*, 3. செ.கு.வி. (v.i.) 1. ***குறைதல்;*** to become diminished; to be spent, wasted. ''உலவாக் கோட்டை'' (திருவாலவா. 50, 13). 2. ***அழிதல்;*** to be devoid of, to be ruined. ''நட்புலந்தவரால்'' (பாரத. நச்சு. 33). 3. ***சாதல்;*** to die, pass away. ''உலந்தவன் றாரொடு பொங்கி'' (பு.வெ. 10, சிறப்பிற்பொது. 4). 4. ***கழிதல்;*** to terminate, expire, ''உலந்த பிறவியை.. காட்_'' (மணிமே. 25, 13.5). 5. ***நீங்குதல்;*** to leave, be away from. 6. ***முடிவு பெறுதல்;*** to be full, complete, perfect. ''எங்குலக்க வோதுவனே'' (திவ் திருவாய் 3. 1, 5). 7. ***எரிதல்;*** to glow. 8. ***காய்தல்;*** to wither.

ம. உலக்குக

*[உ → உல் → உல]*

**உலக்கை**[1] *ulakkai*, பெ. (n.) ***அழிவு;*** end, ruin, disaster, death. ''பொருப் புலக்கையுற் றலமர வரிந்தவன்'' (பாரத. பதினெட். 5). (ஆ.அக.).

*[உல் → உல (குத்துதல், அழித்தல்) → உலக்கு → உலக்கை.]*

**உலக்கை**[2] *ulakkai*, பெ (n) 1. ***இடிமரம்; கூலம் முதலியன குற்றும் உருண்டு நீண்ட கருவி;*** pestle. ''மிளகெறி யுலக்கையின்'' (பதிற்றுப். 41). 2. ***ஒரு படைக்கலம்;*** iron bar shaped like a pestle and used as a weapon in ancient warfare. ''உலக்கை சூலம் வேல்'' (கந்தபு சதமுகன். 15). 3. ***முக்கோல்*** (பிங்.); 22nd nakṣatra.

ம. உலக்க, **க.** ஒலகெ, ஒனகெ, ஒனிகெ; **கோத.** எல்க்; **துப.** வல்க், குட. ஒலகெ; **தெ.** ரோகலி, **கொலா.** ரொகால், ரோக; **நா.** ரோகல்; **கோண்.** ராகால், பட. ஒணகெ.

*[உல்[8] → உல → உலக்கு (குத்துதல், இடித்தல்.). → உலக்கை.]*

**உலக்கை**[3] *ulakkai*, பெ. (n.) ***வெருகன் கிழங்கு*** (தைலவ. தைல 84); bulbous root of the long - rooted arum. (செ.அக.).

*[உல்[6] → உல → உலக்கை ]*

**உலக்கை**[4] *ulakkai*, பெ. (n.) ***கடல்*** (அகநி.); sea. (செ.அக.).

*[உல் → உல → (எழுதல், பொங்குதல்.) → உலக்கை.]*

**உலக்கைக்கணை** *ulakkai-k-kaṇai*, பெ. (n.) 1 ***உலக் கைப்பூண்;*** ferrule on the pestle 2. ***தேய்ந்துபோன உலக்கை நுனி;*** worn-out end of a pestle. (J.). (செ.அக.).

*[உலக்கை + கணை ]*

**உலக்கைக்கழுந்து** *ulakkai-k-kaḻundu*, பெ. (n.) ***உலக் கைப் பிடி;*** end of a pestle inserted into the mortise, tenon. (செ அக.)

*[உலக்கை + கழுந்து ]*

**உலக்கைக்கனி** *ulakkai-k-kaṉi*, பெ. (n.) ***தேங்காய்;*** cocoanut - cocod nucifera. (சா.அக.).

*[உலக்கை + கனி.]*

**உலக்கைக்கொழுந்து** *ulakkai-k-koḻundu*, பெ. (n.) ***அறிவுக் குறையுள்ளவன்;*** stupid fellow, whose wit is as blunt as the tenon of a pestle, or who is such a simpleton as to believe that the pestle is a sprout from the mortar-root. உலக்கைக் கொழுந்தும் குந்தாணி வேரும்

*[உலக்கை + கொழுந்து.]*

**உலக்கைசாத்து-தல்** *ulakkai-šāttu-*, 5. செ குன்றாவி. (v.t.) ***அடிக்கடி சொல்லிச் சொல்லி அறிவுறுத்துதல்;*** to din a thing several times into a person's ears so as to make him comparehend it ''இச்செய்தியை அவனிடம் உலக்கை சாத்த வேண்டியதாயிற்று (கோ வ.).

*[உலக்கை + சாத்து ]*

**உலக்கைசார்த்து-தல்** *ulakkai-cārttu-*, 5. செ.குன்றாவி. (v.t.) ***அழித்தல்;*** to ruin, destroy. (W ) (செ.அக.).

*[உலக்கை + சார்த்து.]*

**உலக்கைப்பாட்டு** *ulakkai-p-pāttu*, பெ. (n.) ***வள்ளைப் பாட்டு*** (திவா.); species of poetical composition in which the poet feigns women pounding grain and singing the praises of a hero. பறவைப் பேடுகள் உலக்கைப் பாட்டால் கண்ணுறங்குகின்ற (வள்ளுவமா. 5. உரை). (செ.அக.).

*[உலக்கை + பாட்டு.]*

**உலக்கைப்பாலை** *ulakkai-p-pālai*, பெ. (n.) ***பாலை மரவகை;*** wedge-leaved ape flower, m.tr., Mimusops hexandra. (L). (செ.அக.).

*[உலக்கை + பாலை.]*

**உலக்கைப்பிடங்கு** *ulakkai-p-pidaṅgu*, பெ. (n.) ***உலக் கைக்கணை*** பார்க்க; see *ulakkai-k-kaṇai*. (செ.அக.).

*[உலக்கை + பிடங்கு.]*

**உலக்கையாணி** *ulakkai-y-āṇi*, பெ. (n.) ***பூட்டினடு வாணி;*** pin of a lock which passes into the hole of the key. (W.) (செ.அக.).

*[உலக்கை + ஆணி.]*

**உலக்கைவள்ளி** *ulakkai-valli*, பெ. (n) ***உலக்கை போல் நீண்ட வள்ளிக் கிழங்கு;*** a long and thick sweet potato, resembling a pestle - Dioscoria sativa. (சா.அக.).

*[உலக்கை + வள்ளி ]*

**உலகஅறிவு** *ulaga-aṟivu*, பெ. (n.) 1. ***உலகத்தைப் பற்றிய அறிவு;*** wisdom of the world. 2. ***கருவி நூலறிவு;*** secular knowledge.

*[உலகம் + அறிவு.]*

**உலகத்தார்** *ulagattār*, பெ. (n.) 1 ***உலகிலுள்ளோர்;*** people of the world. 2. ***உயர்ந்தோர்;*** great men, men of eminence.

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான்" (குறள். 850). 3 ***உலகப் பற்றுடையார்;*** worldly persons.

**உலகநடை** *ulaga-naḍai,* பெ. (n.) 1. ***உலகத்தாரொழுக்கம்;*** fashion, custom, usage. உலகநடை வேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றி (குறள். 22, அதி. அவ.). 2. ***உலக வழக்கு;*** colloquial language. (W.) பரிமேலழகர், உலகநடையாவது ஒப்புரவு செய்தல், புறந்தருதல், பிழைத்தன பொறுத்தல் என்றிவை முதலாயின என்பர் (குறள். 572. பரிமே. உரை)

*[உலகம் + நடை.]*

**உலகநீதி** *ulaga-nīdi,* பெ. (n.) 1. ***உலகநடை;*** customs and usages of the world. 2. ***அன்றாட வாழ்வில் மேற்கொள்ளப்பட வேண்டிய ஒழுக்கங்களைச் சொல்லும் ஒரு அறநூல்;*** name of a well-known popular work on every day ethics mentioning categorically the "don'ts" or things to be guarded against in one's conduct in life.

*[உலகம் + நீதி Skt. nīti > த. நீதி.]*

**உலகநூல்** *ulaga-nūl,* பெ. (n.) ***உலகநடை நூல்;*** secular literature, book dealing with the subject matter of knowledge relating to the world dist. fr அறிவுநூல். "உலகநூ லோதுவ தெல்லாம்" (நாலடி. 140). (செ. அக.).

*[உலகம் + நூல்.]*

**உலகநோன்பிகள்** *ulaganōnbigaḷ,* பெ. (n.) ***சமண புத்த மதங்களில் இல்லறத்தார்;*** householders among Jains or Buddhists. "உலகநோன்பிக ளொருங்குட னிட்ட" (சிலப். 10,24). (செ.அக.).

*[உலகம் + நோன்பிகள் ]*

**உலகநோன்பு** *ulaga-nōnbu,* பெ. (n.) ***துறவாது நோன்பு காக்கை;*** observances of religious rites by householders among Buddhists and Jains. "உலக நோன்பி னுயர்ந் தோய்" (மணிமே. 5,99).

*[உலகம் + நோன்பு.]*

**உலகப்பற்று** *ulaga-p-paṟṟu,* பெ. (n.) ***உலகில் வாழ வேண்டும் என்னும் ஆசை;*** attachment to the world. (செ.அக.).

*[உலகம் + பற்று.]*

**உலகப்புரட்டன்** *ulaga-p-puraṭṭan,* பெ. (n.) ***பெருமோசக்காரன்;*** great rogue, one who turns the world upside down, well-known cheat.

*[உலகம் + புரட்டன்.]*

**உலகபுராணம்** *ulaga-purāṇam,* பெ. (n.) ***ஒரு பழைய தொன்மம்;*** an ancient Purana. "அலகை சான்ற வுலகபுராணமும்" (பெருங். உஞ்சைக். 32,2). (செ.அக.).

*[உலகம் + புராணம்.]*

**உலகம்** *ulagam,* பெ. (n.) 1. ***ஞாலம்.*** (பிங்.); earth. 2. ***உலகப்பொது*** (திவ். திருவாய் 6,10,1); any world. 3 ***நிலப்பகுதி;*** country, territory, region "மாயோன் மேய காடுறை உலகமும்" (தொல் பொருள் 5). 4. ***வானம்*** (பிங்.); sky, etherial regions 5 ***திசை*** (திவா.); point of the compass. 6. ***மக்கட்டொகுதி.*** (தொல் சொல். 57, சேனா ); inhabitants of the world, mankind in general 7. ***நன்மக்கள்;*** the excellent, the good "உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்" (திருமுரு. 124) 8 ***உயிரினங்கள்;*** created beings "உலக முவப்ப வல னேர்பு திரிதரு". (திருமுரு 1). 9 ***உயர்குணம்*** (பிங்.), lofty character. "ஒழுக்கநடையே யுலகம தாகும்" (மாற. 320) 10. ***வழக்கம்;*** usage, custom.

ம. உலகம், க. லோக, தெ. லோகமு, பட. ஒலக.

*[உலகு → உலகம் ]*

உலகம் என்னுஞ் சொல்லிலுள்ள 'அம்' ஈறு பெருமைப் பொருட் பின்னொட்டு (aug. suf ) ஒ நோ. கம்பு (stick) → கம்பம் (pillar), நிலை (stand) → நிலையம் (station), மதி (moon) → மதியம் (fullmoon), விளக்கு (lamp) → விளக்கம் (light-house), அரங்கு → அரங்கம், கடுகு → கடுகம், குண்டு → குண்டம், குன்று → குன்றம், சங்கு → சங்கம், துண்டு → துண்டம், நகர் → நகரம், முத்து → முத்தம் முதலிய பல சொற்களில் அம்மீறு தன் பெருமைப் பொருளையிழந்துள்ளது. இங்ஙனமே உலகம் என்பதும் குடும்பு → குடும்பம் என்பதிலோ, அம்மீறு தன் சிறப்புப் பொருளை யிழந்ததுமின்றி, அதற்கு நேர்மாறான சிறுமைப் பொருளையுந் தருகின்றது குடும்பம் என்பது, சிறிதும் பெரிதுமான ஒரு தனிக்குடும்பத்தையே குறிக்கும் போது, குடும்பு என்பது பல குடும்பஞ் சேர்ந்த சேரியை அல்லது ஊர்ப் பகுதியைக் குறிக்கின்றது. (உத்தர மேரூர்க் கல்வெட்டைப் பார்க்க.) பாண்டியராட்சியும் பண்டைப் பைந் தமிழ்க் கழகமும் இன்மையே, இத்தகைய வழுவழக்கிற்குக் கரணியம். மொழி வரலாற்றையும் சொல்லமைப்பையும் அறியாத அல்லது பிறழவுணர்ந்த தமிழ்ப்புலவர் சிலர், உலகம் என்னுஞ் சொல்லின் கடைக்குறையே உலகு என்னும் வடிவென்று கொள்வர் "பகவன் முதற்றே யுலகு" (குறள் 1), "நீரின் றமையா துலகெனின்" (குறள். 20), "வகைதெரிவான் கட்டே யுலகு" (குறள். 27), "பெருமை பிறங்கிற் றுலகு" (குறள். 23), "உலகவாம் பேரறிவாளன் திரு" (குறள் 215), "என்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள். 211) எனச் செய்யுள் வழக்கிலும்; உலகளவு, உலகியல், உலகாளி, உலகழிவு என உலக வழக்கிலும் உலகு என்னுஞ் சொல் உலகம் என்னும் வடிவு போன்றே பெரு வழக்காய் வழங்குதலையும் சொல்லமைதி யொன்றுங் குறையாதிருத்தலையும் நோக்குக. "உலகு" என்பதன் விரித்தலே "உலகம்". "உலகம்" என்னும் சொல்வடிவு, வடமொழியில் 'லோக' என்றும், சூரசேனிப் பிராகிருத வழிவந்த இந்தியில் 'லோக்' என்றும் திரியும் உலக சவை → லோக்ஸபா தமிழுக்கு அடுத்து வடபால் வழங்குவதால் வடகு (வடுகு.) என்று பெயர்பெற்ற தெலுங்கில், உலகம் என்னும் தமிழ்ச் சொல் லோகமு என்று திரிந்துள்ளது. இது தெலுங்கியல்பென்பது, உரல் → (தெ.) ரோலு என்னும் திரிபால் அறியப்படும். பிற்காலச் சேண் வடமொழியாகிய சமற்கிருதத்தில் லோகமு என்னுந் தெலுங்க வடிவு ஈறு கெட்டு 'லோக' என்றாயிற்று. இங்ஙனம் ஈறு கெடுவது சமற்கிருத வியல்பே.

ஒ நோ அம்பலம் → அம்பல அரங்கம் → ரங்க. கடுகம் → கடுக காலம் → கால குடும்பம் → குடும்ப சகடம் → சகட சங்கம் → சங்க தண்டம் → தண்ட தானம் → தான திடம் → த்ருட நகரம் → நகர நாகரிகம் → நாகரிக நாகம் → நாக நாடகம் → நாடக நீலம் → நீல நீரம் → நீர பக்கம் → பக்ஷ பாகம் → பாக பூதம் → பூத (பெரும்பேய்) மங்கலம் → மங்கல மண்டபம் → மண்டப மண்டலம் → மண்டல. மீனம் → மீன முகம → முக மாதம் → மாஸ வாலம் → வால

இவையும் இவை போன்ற பிறவும் வடமொழி யென்னும் சமற்கிருதத்திற்கு இன்றியமையாதனவாயிருப்பதால், வட மொழியாளர் தமிழரின் பேதைமையைப் பெரிதும் பயன்ப டுத்தி, சமற்கிருதம தேவ மொழியாதலால், அதிலுள்ள சொற்க ளெல்லாம் அதற்குரியனவே யென்றும், தமிழே சமற்கிருதத்தி னின்று தனக்கின்றியமையாத அடிப்படைச் சொற்களை யெல் லாம் கடன் கொண்டுள்ள தென்றும், தொன்றுதொட்டுத் துணிச் சலுடன் ஏமாற்றி வந்திருககின்றனர் சமற்கிருதம் தேவமொழி யென்பது, பிராமணன் நிலத்தேவன் (பூசுரன்) என்பதையே முற்றுந் தழுவிய தென்றும், சமற்கிருதச் சொற்களில் ஐந்திலிருப குதி தூய தமிழென்றும் அறிதல் வேண்டும்

கடன்கொண்ட தமிழ்ச் சொற்களையெல்லாம் சமற்கிருதச் சொல்லென்று காட்டற்கு, பொருந்தப் பொய்த்தலாகவும் பொருந்தாப் பொய்த்தலாகவும் குறிக்கோட் சொற்பிறப்பிய லையே (Tendentious Etymology) வடமொழியாளர் கையாண்டு வந்திருக்கின்றனர் லோக் என்னும் சொலலிற்கு அவர் கூறும் பொருட்கரணியம், 'பார்க்கப் படுவது' என்பதே. 'லோக்' என்னும் ஆரியச் சொல்லிற்குப் 'பார்' (look) என்பது பொருள். ஆதலால், அதை மூலமாகக் கொண்டு அங்ஙனங கூறினர். அசசொல் *look என்னும ஆங்கிலச் சொல்லொடு தொடர்புடை யது, OE* locian, *OS* locon, *OHG* luogen, *WG* lok.

'லோக்' என்னும் ஆரியச் சொல் 'நோககு' என்னும் தென் சொல்லின் திரிபே நகர (னகர) லகரங்கள் ஒன்றோடொன்று மயங்கும் நோக்கு என்பது இந்தியில் 'தேக்' என்று திரிந்துள் ளது உலகு (உலகம்) என்னுஞ் சொல்லிற்கு, உருண்டையா னது அல்லது சுற்றிவருவது என்னும் பொருள் பொருந்துமா அல்லது பார்க்கப்படுவது என்னும் பொருள் பொருந்துமா என்று அறிஞர் கண்டு கொள்க. உலகம் என்னும் சொல் பொதுமக்களைக் குறிப்பது பெருவழக்கு எ-டு. உலகம் என்ன சொல்லும்? ஒ.நோ. *L* vulgus (volgus), the people, common people, the great multitude, the public *L* vulgaris *E* vulgar, Characteristic of the common people

**உலகமலையாமை** *ulaga-malaiyāmai*, பெ. (n.) ***நூலழகி லுளொன்று*** (நன். 13); conformity of one's opinions with those held by the good and great so that there is no variance, one of ten nūl-aḻagu.

*[உலகம் + மலையாமை ]*

**உலகமலைவு** *ulaga-malaivu*, பெ. (n.) ***நூற்குற்றங்களு ளொன்று*** (தண்டி. 119, உரை); (poet) non-conformity with the opinions of the good and great, one of ten nūṟ-kuṟṟam.

*[உலகம் + மலைவு.]*

**உலகமளந்தான்** *ulagamaḷandān*, பெ. (n.) ***திருமால்;*** Viṣṇu, who measured the world with His feet in His incarnation as a dwarf. ''உலகமளந்தானே தாலேலோ'' (திவ். பெரியாழ். .1,3,2).

*[உலகம் + அளந்தான்.]*

**உலகமன்னவன்** *ulaga-mannavan*, பெ. (n.) ***மன்னர் மன்னன்;*** world ruler, emperor ''உலக மன்னவன் வாழ்கென் றேத்தி'' (சிலப். 28.7).

*[உலகம + மன்னவன் ]*

**உலகமீன்றாள்** *ulagam-īnṟāḷ*, பெ. (n.) ***மலைமகள்;*** Goddess Pārvathi. ''வந்திடுமுலக மீன்றாள் வதுவையஞ் சாலை நண்ணி'' (கந்தபு திருக்கல். 67).

*[உலகம் + ஈன்றாள ]*

**உலகமுண்டோன்** *ulagam-uṇḍōn*, பெ. (n) ***ஊழிக்கால இறுதியில் உலகத்தை உண்டு வயிற்றுள் அடக்கிக் காத்த திருமால்*** (பிங்.); Viṣṇu who swallowed the world and preserved it in His stomach at the great deluge. ''உம்மை அதனில் உலகமுண்டோன்றன் மகன்'' (கந் தபு. வள்ளி. 119) (செ அக.).

*[உலகம் + உண்டோன்.]*

**உலகர்** *ulagar*, பெ (n.) 1. ***உலகத்தார்;*** people of the world ''உலகர் சேருறுதிப்பயன்'' (சிவதத்துவ.7; சங். அக.) 2. ***பாண்டியர்*** (அக நி.); the pāndyās

ம. லோகர்

*[உலகம் → உலகர்.]*

**உலகவழக்கம்** *ulaga-vaḻakkam*, பெ. (n.) ***உல கொழுங்கு;*** custom or usage of the world. (செ.அக.).

*[உலகம் + வழககம் ]*

**உலகவழக்கு** *ulaga-vaḻakku*, பெ. (n.) 1. ***உலக வழக்குச் சொல்*** (நன். 267 விருத் ); words in common speech or popular words, dist. fr செய்யுள் வழக்கு i e, words used in the language of poetry. 2. ***உலக வழக்கம்*** பார்க்க; see *ulaga-vaḻakkam*. (செ.அக.).

*[உலகம் +வழக்கு.]*

**உலகவறவி** *ulaga-v-aṟavi*, பெ. (n.) ***எல்லாக் குலத்தவ ரும் வந்து தங்குதற்கு உரிய அறச்சாலை;*** any big charitable institution or rest-house established for the benefit of all castes and classes. ''புலர்புகத் திறந்த பகுவாய் வாயிலுலக வறவி'' (மணிமே. 7,93).

*[உலகம் + அறவி.]*

**உலகவறிவு** *ulaga-v-aṟivu*, பெ. (n.) ***பொதுஅறிவு;*** knowledge of the world. (செ.அக.).

*[உலகம் + அறிவு.]*

**உலகவிடைகழி** *ulaga-v-iḍai-kaḻi*, பெ. (n.) ***மக்கள் கடந்து செல்லற்குரிய பெருவாயில்;*** public passage, as the gateway of a city. ''உலகவிடைகழி யொருங் குடனீங்கி'' (சிலப். 10, 27). (செ.அக.).

*[உலகம் + இடைகழி.]*

**உலகளந்தோன்** *ulagaḷandōn*, பெ. (n.) ***உலகமளந்தான்*** பார்க்க (திவா.); see *ulaga-maḷandān*. (செ.அக.).

*[உலகு + அளந்தோன்.]*

**உலகளவு** *ulagaḷavu,* பெ. (n) ***நாட்டின் நிலவளவு;*** (I.M.P.Ct. 326); survey of the country (செ.அக.).

*[உலகு + அளவு]*

**உலகாசாரம்** *ulagācāram,* பெ. (n.) ***உலக வழக்கம்*** பார்க்க; see *ulaga-vaḻakkam.* (செ.அக.).

*[உலகம் + ஆசாரம் Skt ācāra > த. ஆசாரம்]*

**உலகாள்வோன்** *ulagāḷvōṉ,* பெ. (n.) 1. ***இறைவன்;*** God, Lord. 2 ***அரசன்;*** King

*[உலகு + ஆள்வோன்]*

**உலகியல்** *ulagiyal,* பெ (n.) 1. ***உலக வழக்கம்;*** custom of the world. 2 ***உலகமுறைமை;*** order of the world. 3 ***உலகநடை*** (சீவக. 245 உரை); universal code of morals.

*[உலகு + இயல்.]*

**உலகியல்வழக்கு** *ulagiyal-vaḻakku,* பெ (n.) ***உலகவழக்கம்*** (தொல். பொருள். 53); actual usage of the world, dist fr. நாடகவழக்கு i.e., stage usage. (செ.அக.).

*[உலகு + இயல் + வழக்கு]*

**உலகியற்கை** *ulagiyaṟkai,* பெ. (n.) ***உலகியல்*** பார்க்க; see *ulagiyal* "இவையென்ன வுலகியற்கை" (திவ். திரு வாய். 4.9.1).

*[உலகு + இயற்கை]*

**உலகியற்சொல்** *ulagiyaṟ-sol,* பெ. (n.) ***உலகவழக்கிலே வழங்குஞ்சொல்.*** (கலித்.1,உரை); world of daily usage. (செ.அக.).

*[உலகு + இயல் → உலகியல் + சொல்.]*

**உலகின்பொது** *ulagiṉ-podu,* பெ. (n.) 1. ***இடம்*** (தலம்); place. 2. ***நாடு;*** country. 3. ***நானிலம்;*** world. 4. ***பொழில்;*** grove.

*[உலகு + இன் + பொது.]*

**உலகு** *ulagu,* பெ. (n.) 1. ***உலகம்;*** world. 2. ***மக்கள்;*** people.

ம. உலகு. க. லோக; தெ. லோகமு. *H.* log. *Skt.* loka. *L.* vulgus the people *E.* Vulgar. used by the common people.

*[உல் → உலவு → உலகு]*

**உலகுடையபெருமாள்** *ulaguḍaiya-perumāḷ,* பெ. (n.) ***அரசன்*** (M.E.R. 211 of 1927-8); King. (செ.அக.).

*[உலகு + உடைய + பெருமாள்.]*

**உலகுண்டவன்** *ulaguṇḍavaṉ,* பெ. (n.) ***உலகமுண்டோன்*** பார்க்க; see *ulagamuṇḍōṉ.*

*[உலகு + உண்டவன்.]*

**உலகுண்டோன்** *ulaguṇḍōṉ,* பெ. (n.) ***உலகமுண்டோன்*** பார்க்க; see *ulagam-uṇḍōṉ.*

*[உலகு + உண்டோன்.]*

**உலகுய்யக்கொட்டான்** *ulaguyya-k-koṭṭāṉ,* பெ (n.) ***ஒருவகை மருந்துப் பச்சிலை*** (பெரிய மாட். 15-A); a medicinal herb. (செ அக.).

*[உலகு + உய்ய + கொட்டான் கொற்றான் → கொட்டான் (கொ.வ)]*

**உலகோர்** *ulagōr,* பெ. (n.) ***உலகர்*** பார்க்க; see *ulagar.*

*[உலகு → உலகர் → உலகோர்.]*

**உலங்கலம்** *ulaṅgalam,* பெ. (n.) ***கல் ஏனம்;*** vessel of stone.

*[உல்³ → உல்லம் + கலம் - உல்லங்கலம் → உலங்கலம்.]*

**உலங்கு¹** *ulaṅgu,* பெ. (n.) ***கொதுகு;*** gnat, mosquito, Culicidae. (செ.அக.). "கலுழ னுலங்கின்மே லுருத் தென்ன" (கம்பரா பஞ்சசே. 2).

*[அலம் → உலம். உலம் → உலங்கு.]*

**உலங்கு²** *ulaṅgu,* பெ. (n.) ***உலம்*** பார்க்க; see *ulam.* (செ.அக).

**உலட்டை** *ulaṭṭai,* பெ. (n.) ***உலுட்டை*** பார்க்க; see *uluṭṭai.*

**உலண்டங்கொல்லி** *ulaṇḍaṅ-kolli,* பெ. (n.) ***புழுக் கொல்லி;*** plant whose medicinal effects counteract the poision of worms, bees etc.- aristolochia indica. (சா.அக.).

*[உலண்டம் + கொல்லி.]*

**உலண்டம்** *ulaṇḍam,* பெ. (n.) ***வண்டு;*** beetle. (ஆ.அக.).

*[உல் → உலண்டம்.]*

**உலப்படி** *ulappaḍi,* பெ. (n.) ***உலைப்பானையின் மேல்மூடி;*** lid of the cooking pot.

*[உலை + படி - உலைப்படி → உலப்படி.]*

**உலப்பல்** *ulappal,* பெ. (n.) ***கலப்புக் கட்டோசை*** (பிங்.); combined noise of many sounds, hubbub, clamour. (செ.அக.).

ம. உலப்பர்; க. உலிவு, உலிப, உலிபு, உலுபு; குட. ஒலி; தெ. உலிவு, உலியு.

*[உலப்பு → உலப்பல்.]*

**உலப்பு¹** *ulappu,* பெ. (n.) 1. ***அழிவு;*** wasting, perishing. "உலப்பிலின்பமோடு" (மணிமே. 6.111). 2. ***குறைவு;*** defect, deficiency. "உலப்புறா தெவையு மீவோர்" (கந் தபு. திருவவ.9) 3. ***சாவு;*** death. "உலப்பினைக் கடக்கு மாறு" (காஞ்சிப்பு. மணிக. 5). 4. ***காய்ச்சுதல்;*** boiling.

*[உல → உலப்பு.]*

**உலப்பு²** *ulappu,* பெ. (n.) 1. ***அளவு;*** limit, measure. "மிடைந்தவ ருலப்பிலர்" (கம்பரா. உருக்கா. 23). 2. ***உதவுகை;*** assistance, help. "ஒல்கிடத் துலப்பிலா வுணர்விலார்" (கலித். 25).

*[உல் → உலப்பு.]*

**உலப்பெண்ணெய்** *ulappenney,* பெ. (n.) ***காய்ச்சிய குளியலெண்ணெய்;*** boiled oil used for oil bath. oil.

ம. உலப்பெண்ண.

*[உலப்பு (காய்ச்சிய) + எண்ணெய்.]*

**உலப்பேறி** *ulappēri,* பெ. (n.) ***திருத்தப்பட்ட நிலம்;*** permanently improved lands. (G.Tn.D.i., 294). (செ.அக.).

*[உல → உலப்பு + ஏறி.]*

**உலம்**[1] *ulam,* பெ. (n.) 1. ***உருண்டு திரண்ட கல்;*** roundstone, large pebble. "உலஞ்செய்த... தோளான்" (சீவக. 2915). 2. ***திரட்சி;*** roundness. "உலங்கொள் சங்கத் தார்கலி" (தேவா. 112, 8). (செ.அக.).

ம. உலம், *SKt.* upala.

*[உல்[11] → உலம்.]*

**உலம்**[2] *ulam,* பெ. (n.) 1. ***வலிமை;*** strength. 2. ***அச்சக்குறிப்பு;*** manifesting symptom of fear. 3. ***துன்பம்;*** grief. 4. ***பிணம்;*** corpse. 5. ***பட்டாடை;*** silk cloth. 6. ***வாசல்;*** doorway. 7. ***அகலம்;*** breadth. 8. ***நீர்;*** water. (செ.அக.).

*[உல் → உலம்]*

**உலம்**[3] *ulam,* பெ. (n.) 1. ***ஒலித்தல், ஓசை;*** sound. 2. ***உலவை, காற்று;*** wind.

*[உல் → உலம்.]*

**உலம்பல்** *ulambal,* பெ. (n.) ***ஆரவாரம்*** (பிங்.); roar of many sounds. (செ.அக.).

ம. உலம்புக (ஒலியெழுப்புதல்.); **மால்.** ஒல்கெ (அழு.); குட. ஒலி (மணியோசை.).

*[உல் → உல → உலம்பு → உலம்பல்.]*

**உலம்பு-தல்** *ulambu-,* 15. செ.கு.வி. (v.i.) 1. ***பேரொலி செய்தல்;*** to make a loud noise, cryout, roar, thunder. "யாளிநின் றுலம்புமே" (சீவக. 1900). 2. ***அலப்புதல்;*** prate, chatter. "ஒல்காதார் வாய்விட் டுலம்புப" (நீதிநெறி. 72).

ம. உலம்புக; **க.** உலி; **தெ.** உலியு.

*[உல் → உல → உலமு → உலம்பு → உலம்பு-தல்.]*

**உலம்வா(வரு)-தல்** *ulam-vā(varu)-,* 18. செ.கு.வி. (v.i.) ***நெஞ்சு உழலுதல்;*** to be perturbed in mind, confused. "உயிர்க்கு முசாஅ முலம்வரும்" (கலித். 145,4.).

ம. உலயுக.

*[உல்[7] → உல → உலம் + வா-தல்.]*

**உலமரல்** *ulamaral,* பெ. (n.) 1. ***துன்பம்*** (சூடா.); suffering. 2 ***அச்சக்குறி காட்டுகை*** (சூடா.); manifesting symptoms of fear. 3. ***உழலுதல்;*** afflicting 4. ***சுழலுதல்;*** stirring. (செ.அக.).

*[உலம்வரல் → உலமரல்.]*

**உலமரு-தல்** *ulamaru-,* 18. செ.கு.வி. (v.i.) ***உலம்வா (வரு)-தல்*** பார்க்க; see *ulam-vā (varu)-,* "புலம்பியா முலமர" (கலித். 83,2.). (செ.அக.).

ம. உலர்.

*[உலம் + வரு-தல் = உலம்வரு-தல் → உலமரு-தல்.]*

**உலர்-தல்** *ular-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***காய்தல்;*** to become dry, to wither, to be parched up. 2. ***வாடுதல்;*** to pine away, as from grief, disease or hunger; to flag, droop. "உலர்ந்து போனே னுடையானே" (திருவாச. 32.1.). (செ.அக.).

ம. உலருக.

*[உல்[6] → உல → உலல் → உலர்.]*

**உலர்ச்சி** *ularcci,* பெ. (n.) 1. ***காய்வு;*** dryness, withered state, aridity. 2. ***வாட்டம்;*** emaciated condition of the system occasioned by travel, hunger or disease; weariness of the mind. (செ.அக.).

ம. உலர்ச்ச.

*[உலர் → உலர்ச்சி.]*

**உலர்த்தற்பாடு** *ularttarpāḍu,* பெ. (n.) ***உலர்த்தப்பட்ட நிலைமை;*** condition of being fully dried, as groundnut kernels ready for crushing, opp. to ஈரப்பாடு. (செ.அக.).

*[உலர் → உலர்த்தல் + பாடு.]*

**உலர்த்தி** *ulartti,* பெ. (n.) ***உலர்ச்சி*** பார்க்க; see *ularcci.* (செ.அக.)

**உலர்த்து-தல்** *ulārttu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***ஈரம் புலர்த்துதல்;*** to dry, air, desiccate. "நனைந்த வான்றுகி லுலர்த்திய" (சேதுபு. கந்த. 41.) (செ.அக.).

ம. உலர்த்துக.

*[உலர் → உலர்த்து.]*

**உலர்ப்பெலி** *ularppeli,* பெ. (n.) ***ஓர் எலி;*** species of rat (W.). (செ.அக.).

*[உலர் → உலர்ப்பு + எலி.]*

**உலர்மரம்** *ular-maram,* பெ. (n.) 1. ***வானம்;*** sky. (ஆ.அக.). 2. ***பட்டுப்போன மரம்;*** lifeless or decayed tree. (சா.அக.).

*[உலர் + மரம்.]*

**உலர்வு** *ularvu,* பெ. (n.) ***உலர்ச்சி;*** dried state, withered condition.

*[உலர் → உலர்வு.]*

**உலரி** *ulari,* பெ. (n.) ***நன்னீர் மீன்;*** fresh-water fish. (செ.அக.).

*[உல் → உலரி]*

**உலவக்காரன்** *ulava-k-kāraṉ,* பெ. (n.) ***மற்றவரோடு பழக நாணுபவன்;*** he who is shy with strangers. (J.). (செ.அக.).

*[உல → உலவை + காரன்]*

**உலவம்** *ulavam,* பெ. (n.) 1. ***பிறர் முன்பு ஏற்படும் மனக்கூச்சம்;*** bashfulness, shyness, diffidence before strangers. கடன் கேட்க உலவமாயிருக்கிறது (வின்.). 2. ***இவறன்மை; கருமித்தனம்*** (சங்.அக.); miserliness. 3. ***இலவ மரம்;*** silk cotton. (செ.அக.).

*[உல் → உல → உலபு → உலவம்.]*

**உலவமரம்** *ulavamaram,* பெ. (n.) ***இலவமரம்;*** silk cotton tree.

*[உல் → உலவம் + மரம்.]*

**உலவல்** *ulaval,* பெ. (n.) 1. ***துறந்தோன்*** (அக.நி.); ascetic. 2. ***குறைதல்*** (ஆ.அக.); diminishing, shrinking. (செ.அக.).

*[உல → உலவல்.]*

**உலவாக்கிழி** *ulavā-k-kiḻi,* பெ. (n.) ***எடுக்கவெடுக்கக் குறைபடாப் பொன்முடிப்பு;*** inexhaustible quantity of gold tied up in a cloth-bag "கன்னி நாடன் தனக்கு இசைந்தபடியால் உலவாக்கிழி கொடுத்த படியை அறிந்தபடி பகர்வாம்" (திருவிளை. உலவாக்.1).

*[உல → உலவு → உலவா + கிழி.]*

**உலவாநில்(ற்)-த(ற)ல்** *ulavānil(r)-,* 16. செ.கு.வி. (v.i.) ***பரத்தல்;*** to spread. "இன்பவெள்ளம் உலவா நிற்கும்." (தாயு. நின்ற. 2).

*[உலவா + நிற்றல் உலவா என்பது செய்யா என்னும் வாய் பாட்டு வினையெச்சம். உலவா = உலந்து நிற்றல், பரவுதல்.]*

**உலவி-த்தல்** *ulavi-,* 4. செ.கு.வி. (v.i.) ***கூசியொழுகுதல்;*** to be bashful in eating, to evince diffidence in accepting favours or gifts, to be backward in coming into company. (J.). உலவியாமற் சாப்பிடும். (செ.அக.).

*[உல் → உலவு → உலவி-த்தல்.]*

**உலவிபொன்** *ulavipoṉ,* பெ. (n.) ***தூய தங்கம்;*** pure gold. "உலவிபொன் இருபதின் கழஞ்சு பொன்னுக்கும்" (S.I.I.v.281). (செ.அக.).

*[உல் → உலவி + பொன். உலவி = காய்ச்சிய.]*

**உலவு-தல்** *ulavu-,* 5. செ.கு.வி. (v.i.) ***திரிதல்;*** to go around. "ஒருங்குதிரை யுலவுசடை" (திருவாச. 38,1). (செ.அக.).

ம. உலவுக.

*[உலம் → உலவு → உலவு-தல்.]*

**உலவை**[1] *ulavai,* பெ (n.) 1. ***தழை;*** green twig with leaves upon it 'ஈயுலவையி னோப்பி" (இரகு. தேனு. 35) 2. ***மரக்கொம்பு;*** branch of tree, bough. "இலைதீந்த வுலவையால்" (கலித். 11). 3. ***மரச்செறிவு*** (பிங்.); grove. 4. ***விலங்கின் கொம்பு;*** horn, tusk. "யானைத் தரள நீளுலவை" (காஞ்சிப்பு. கழுவா. 397). 5. ***குடைவேல்*** (சூடா.); umbrella thorn babool, buffalo thorn cutch. 6. ***ஒடை*** பார்க்க (மலை.); oval-leaved wheel creeper. 7. ***வள்ளிக்கொடி*** (அக.நி.); sweet potato creeper; panicled-bindweed. 8. ***கிலுகிலுப்பை*** (மலை.); rattlewort. 9. ***இளந்தளிர்;*** tender leaves. "அலங்க லுலவையேறி பொய்யேன்" (குறுந்.79).

*[உல் → உலவை. (வே க. 16.55.]*

**உலவை**[2] *ulavai,* பெ. (n.) 1. ***காற்று*** (திவா.); wind. 2. ***வாதைநோய்;*** rheumatism, gout, paralysis. "வழுத்துல வைக் குலமுழுதும்" (தைலவ, தைல.88). 3. ***வற்றிய கிளை;*** dried branch. (செ.அக.).

*[உலவு → உலவை.]*

**உலவை**[3] *ulavai,* பெ. (n.) ***குலவையிடல்;*** a type of sound made by women during functions.

*[உல → உலவை]*

**உலவை**[4] *ulavai,* பெ. (n.) ***அவா*** (அக.நி.); desire. (செ.அக.).

*[உல் → உல (மிகுதல், பெருகுதல்) → உலவை.]*

**உலவையான்** *ulavaiyāṉ,* பெ. (n.) ***காற்றுத் தேவன்;*** Vāyu, the god of wind. "அண்டரும் உலவையானை அவுணர்மாத் தலைவன் பாரா." (கந்தபு. அரசு.7). (செ.அக.).

*[உலவை → உலவையான்.]*

**உலறல்** *ulaṟal,* பெ. (n.) ***கடுஞ்சீற்றம்*** (பெருங்கோபம்.) (திவா.); fierce anger, rage.

*[உல → உலறு → உலறல்.]*

**உலறு**[1]**-தல்** *ulaṟu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***வற்றுதல்*** (அகநா. 19.) to dry up, wither. 2. ***சிதைதல்;*** to be injured, to be spoiled, worn out as clothes. "உலக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும்" (நாலடி. 141). 3. ***பொலிவழிதல்;*** to become rough, shaggy, brush. "கண்ணு முகமு முலறி" (சீவக. 2966). (செ.அக.).

*[உல் → உல → உலறு.]*

**உலறு**[2]**-தல்** *ulaṟu-,* 5. செ.கு.வி. (v.i.) ***உரை தடுமாறு தல்;*** to howl, scream; to babble, as in a rapture. "அலறிடே னுலறிடே னாவி சோரேன்" (திருவாச. 5,22). (செ.அக.).

ம. உலறுக.

*[உல → உலறு.]*

**உலா** *ulā,* பெ. (n.) 1. ***அரசன் தலைநகரைச் சுற்றி வரும் உலா;*** procession. "போந்தானுலா" (சங்கர. உலா). 2. ***பேதை முதலிய எழு பருவப் பெண்களும் கண்டு மயங்கும்படி தலைவன் உலாவருதலைக் கலிவெண்பாவால் கூறுவது;*** poem in kaliveṇpā metre

which describes how women of the seven *magaḷir paruvam* are love-striken at the sight of a hero as they see him coming along in procession. ''கலிவெண்பா வுலாவாம்'' (வெண்பாப். செய். 27). 3. ***மக்கள் காற்றாடச் சுற்றி வரல்;*** walking.

*[உலவு → உலா.]*

**உலாங்கு-தல்** *ulāṅgu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***அசைதல்;*** to move. 2. ***தள்ளாடுதல்;*** to stagger.

*[உலவு → உலா → உலாங்கு.]*

**உலாஞ்சு-தல்** *ulāñju-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***அசைந்தாடுதல்;*** to move, work about, as the head. கப்பல் உலாஞ்சுகிறது. 2. ***தலைசுற்றுதல்;*** to be giddy, dizzy, to suffer swimming in the head. 3. ***தள்ளாடுதல்;*** to stagger as sway in walking. (செ.அக.).

*[உலாங்கு → உலாஞ்சு.]*

**உலாத்து[1]-தல்** *ulāttu-*, 6. செ.கு.வி. (v.i.) 1. ***உலாவச் செய்தல்;*** to take out for a walk, as a child; to lead about, as a horse. 2. ***பரவச் செய்தல்;*** to spread out, extend on all sides. வேட்டியை யுலாத்திக் கொண்டு போகிறான் (உ.வ.). 3. ***அசைத்தாட்டுதல்;*** to cause to shake (செ.அக.) கொண்டையுலாத்தி - கொண்டையை ஆட்டும் பறவை. 4. ***சிறுநடை கொள்ளல்;*** to walk taken by a patient in convalescent state.

ம. உலாத்துக.

*[உலா → உலாத்து → உலாத்து-தல்.]*

**உலாத்து[2]** *ulāttu*, பெ. (n.) 1. ***உலாவுகை;*** walking up and down for amusement, display or exercise moving to and fro. 2. ***சுற்றுதல்;*** wandering, revolving. (செ.அக.).

*[உல → உலா → உலாத்து.]*

**உலாத்துக்கட்டை** *ulāttu-k-kaṭṭai*, பெ. (n.) ***கதவுக் குடுமி; கதவு நின்றாடுஞ் சுழியாணி;*** shutter turns. (W.). (செ.அக.).

*[உலாத்து + கட்டை.]*



உலாத்துக்கட்டை

**உலாத்துக்கதவு** *ulāttu-k-kadavu*, பெ. (n.) ***பிணையற் கதவு*** (யாழ். அக.); folding door. (செ.அக.).

*[உலாத்து + கதவு.]*

**உலாத்துகண்டன்** *ulāttu-kaṇḍaṉ*, பெ. (n.) ***ஓணான்;*** a kind of lizard. (சா.அக.).

*[உலாத்து + கண்டன்.]*

**உலாப்புறுத்து-தல்** *ulāppuṟuttu-*, 6. செ.குன்றாவி. (v.t.) ***அழித்தல்;*** to destroy. ''நாளுலாப்புறுத்தும் வாள்வலி'' (பெருங். உஞ்சைக். 56, 252).

*[உலாப்பு + உறுத்து.]*

**உலாப்போ-தல்** *ulāppō-*, 8. செ.கு.வி. (v.i.) ***வலம் வருதல்;*** to go in procession. (செ.அக.).

*[உலா + போ.]*

**உலாம்** *ulām*, இடை. (part.) ***ஒருவமச்சொல்;*** word used as a sign of comparison. ''வேயுலாந் தோளினார்'' (சீவக. 1581) (செ.அக.).

*[உல் (பொருத்துதல்) → உல → உலாம்.]*

**உலாமடல்** *ulāmaḍal*, பெ. (n.) ***ஒரு பெண்ணைக் கனவிற் புணர்ந்தோன் விழித்தபின் அவள் பொருட்டு மடலூர்வேன் எனக் கலி வெண்பாவால் பாடப்படும் ஒரு சிற்றிலக்கியம்;*** poem in kali-veṇpā metre, in which a man who has beheld an unknown woman in a dream vows to possess her in reality or die by riding a palmyra stem. கனவில் ஒருத்தியைக் கண்டு புணர்ந்தோன் நனவில் அவள் பொருட்டாக நானே ஊர்வன் மடல் என்றுரைப்பது உலாமடல் (இலக். வி. 857). (செ.அக.).

*[உலா + மடல்.]*

**உலாவல்** *ulāval*, பெ. (n.) ***பொழுது கழித்து விளையாடல்;*** playing after the stipulated period.

*[உலா → உலாவல்.]*

**உலாவரிசி** *ulāvarisi*, பெ. (n.) ***வெட்பாலையரிசி;*** blue dyeing rosebay.

*[உல் → உலாவல் + அரிசி.]*

**உலாவா(வரு)-தல்** *ulāvā(varu)-*, 18. செ.கு.வி. (v.i.) 1. ***அங்குமிங்கும் அலைதல்;*** to wander about. ''கராமுலாவரு பைந்தடமும்'' (பாரத. நாடு 8). 2. ***வீதிவலம் வருதல்;*** to move in procession. ''வீதிதோறூர்ந் துலாவருமால்'' (இரகு. நாட்டுப். 13). 3. ***அசைதல்;*** to wave as a flag ''உலாவரு பதாகையி னீட்டம்'' (கந்தபு.யுத்த. முதனாட். 53). (செ.அக.).

*[உலா + வரு ]*

**உலாவு[1]-தல்** *ulāvu-*, 6. செ.கு.வி. (v.i.) 1. ***அலைதல்;*** to move about, walk or ride for recreation take a jaunt, a stroll or a ramble ''நிலவுலாவிய நீர்மலி வேணியன்'' (பெரியபு. பாயி. 1). 2. ***வீதிவலம் வருதல்;*** to go in procession, parade the streets, as festal processions.

3. ***இயங்குதல்; வீசுதல்;*** to move, stir. ''வந்துலாய்த் துயர்செய்யும் வாடை'' (பு.வெ. 8,16, கொளு.). 4. ***பரவுதல்;*** to spread over, as a flood. ''உயிரென வுலாய தன்றே'' (கம்பரா. ஆற்றுப். 20) (செ.அக.).

ம. உலாவுக; தெ. ஒலயு; பட. ஒலாத்து.

*[உலவு → உலாவு.]*

**உலாவு²-தல்** *ulāvu-,* 6. செ.குன்றாவி. (v.t.) ***சுற்றிக்கட்டுதல்;*** to surround, encircle as a garment. ''தூசுலாய்க் கிடந்த'' (சீவக. 550).

*[உல் → உலவு → உலாவு]*

**உலாவுகாட்சை** *ulāvu-kāṭṣai,* பெ. (n.) ***வரிவகை*** (S.I.I.v.330.) tax. (செ.அக.).

ம. உலாவு காழ்ச்ச.

*[உலாவு + காட்சை. காட்சி → காட்சை. (கொ.வ.)]*

**உலிமணி** *ulimaṇi,* பெ. (n.) ***நாயுருவி*** (மலை.); a plant growing in hedges and thickets. (செ.அக.).

*[உல் → உலி + மணி.]*



உலிமணி

**உலு** *ulu,* பெ. (n.) ***தினை முதலியவற்றின் பதர்;*** chaff of inferior grains (J.). (செ.அக.).

*[உல் → உலு = உலுக்குவதனால் அல்லது குத்துவதனால் நீங்கும் பதர்.]*

**உலுக்கல்** *ulukkal,* தொ.பெ. (vbl.) 1. ***குலுக்கல்;*** shaking.

*[உல் → உலுக்கு → உலுககல்.]*

**உலுக்கு¹-தல்** *ulukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***குலுக்குதல்;*** to shake, as a tree.

ம. உலுக்கு; க. உலுகு; குட. ஒலிப், ஒலிச்; தெ. உலுகு, உலுக்கு.

*[உல் → உலு → உலுக்கு.]*

**உலுக்கு²-தல்** *ulukku-,* 7. செ.கு.வி. (v.i.) ***நடுங்குதல்;*** to tremble, as in an earthquake.

*[உலு → உலுக்கு.]*

**உலுக்குமரம்** *ulukkumaram,* பெ. (n.) ***நெம்பு கட்டை;*** lever (W.). (செ.அக.).

*[உலு → உலுக்கு + மரம்.]*

**உலுட்டை** *uluṭṭai,* பெ. (n.) ***சொட்டைப்பேச்சு; பயனில் சொல்*** (யாழ்ப்.); slanderous talk.

*[உல் → உலு → உலுட்டை = உலுத்துப்போனது, பயனற்றது.]*

**உலுத்தத்தனம்** *ulutta-t-taṉam,* பெ. (n.) ***ஈயாக் குணம்;*** niggardliness, stinginess. (செ.அக.).

*[உல் → உலு = வெப்பம், கொடுமை. உல் → உலு → உலுத்தன் + தனம்.]*

**உலுத்தம்** *uluttam,* பெ. (n.) ***உலுத்தத்தனம்*** பார்க்க; see *ulutta-t-taṉam.* (செ.அக.).

*[உல் → உலு → உலுத்தம்.]*

**உலுத்தன்** *uluttaṉ,* பெ. (n.) 1. ***ஈயாதவன்;*** niggard, miser, close-fisted person. ''இல்லையென்றே சொலு முலுத்தன்'' (அறப். சத. 38). 2. ***வாங்கின கடனைக் கொடாதவன்*** (ஆ.அக.); debtor, who disinclines to repay debt.

ம. உலுத்தன்.

*[உல் → உலு → உலுத்தன். இச்சொல் வடதிரவிட நடுவண் மொழிகளில் உலுத்தன் → லுத்தன் → லுத்தா → லுச்சா எனத் திரிந்து வழங்குகிறது.]*

**உலுத்து-தல்** *uluttu-,* 8. செ.குன்றாவி. (v.t.) ***உலுப்பு-தல்*** பார்க்க; see *uluppu-,*

*[உலு → உலுத்து → உலுத்து-தல் = உதிர்த்தல். உலு → உது → உதுர் → உதிர் → உதிர்த்தல் எனவும் திரிபுறும்.]*

**உலுப்பு-தல்** *uluppu-,* 8. செ.குன்றாவி. (v.t.) 1. ***உதிர்த்தல்*** (யாழ்ப்.); to shake off, cause to shed, as fruits or leaves from a tree. 2. ***அசைத்தல்;*** to shake. (செ.அக.).

*[உல் → உலு → உலுப்பு → உலுப்பு-தல். இக்காலத்தில் உலுப்பு → உதுப்பு → உசுப்பு எனத் திரிபுற்றன. உலுப்பிவிடு, உதுப்பி விடு, உசுப்பிவிடு என்னும் கூட்டு வினைகளும் உருப்பெற்றன. நகர முன்னொழுத்துப்பேறு பெற்று நுதுப்பு என்னும் வினையும் அக்காலத்தில் உருப்பெற்றது.]*

**உலுப்பை** *uluppai,* பெ. (n.) 1. ***அதிகாரிகள் பெரியோர் முதலியோர்க்கு மதிப்புரவாக அனுப்பும் உணவுப் பண்டங்கள்;*** presents of fruits, articles of food etc., offered to great personages; supplies gratuitously given to officials on tour by people or subordinates. ''உம்பர் கோன் வைத்த வுலுப்பையென'' (வருணகுலா. 219). 2. ***பை;*** bag. 3. ***சிறுகாய்;*** unripe fruit in common (சா.அக.). 4. ***கோயில் முதலியவற்றிற்கு அனுப்பும் காணிக்கை.*** (த.சொ.அக.); presentation to temple etc.

*[உல் → உலு → உலுப்பை, உலுப்புதல் = உதிர்த்தல், உதிர்த்துத் திரட்டிய தவசம். தவசம் உதிர்க்காமல் அரிதாள் கட்டுகளையே வழங்கும் வழக்கமும் இருந்ததால், உதிர்த்த தவசம் மட்டும் வழங்குவதை வேறுபடுத்திக் கூறுவதும் இன்றியமையாத தாயிற்று.]*

**உலுப்பைகட்டு-தல்** *uluppaikattu-,* 15. செ.கு.வி. (v.i.) ***பெரியோர் அருள் பெறுவதற்காகப் பரிசுப்பொருள் அனுப்புதல்*** (ஆ.அக.); to send presentation to revered persons to get blessings.

*[உலுப்பை + கட்டு.]*

**உலுப்பைகொடு-த்தல்** *uluppai-kodu-,* 4. செ.கு.வி. (v.i.) ***தம் கீழ்ப் பணியாற்றுபவர்களுக்குப் படிகொடுத்தல்;*** to give supplies to an inferior or dependent (W.).

*[உலுப்பை + கொடு ]*

**உலூகம்**[1] *ulūgam,* பெ. (n.) ***கோட்டான்*** (பிங்.); rock horned owl. (செ.அக.).

*Hindi.* ullu.

*[உல் → உல்லு → உல்லுகம் → உலூகம். **உல்லு** பார்க்க; see ullu.]*

**உலூகம்**[2] *ulūgam,* பெ. (n.) 1. ***உரல்*** (அக.நி.); mortar. 2. ***குங்கிலியம்;*** konkani resin (செ.அக.).

*[உலங்கலம் → உலூகம்.]*

**உலூகலம்** *ulūgalam,* பெ. (n.) 1. ***உரல்;*** wooden mortar. "உலூகலமுடன்றவழ்ந்தவன்" (பாரத. உலூகன்.5). 2. ***குங்கிலியம்*** (மலை.); resin.

*[உலங்கலம் → உலூகலம். உல் = குத்துதல்.*

**உலை**[1]**-தல்** *ulai-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***நிலைகுலைதல்;*** to be disordered, as one's affairs; to become deranged, unsettled, loose; to degenerate in morals or character; to be overripe, as fruit. "உலையாமுயற்சி" (நீதிநெறி. 51.). 2. ***அழிதல்.*** (திவா.); to perish; to be ruined, as houses, land or crops. 3. ***அஞ்சுதல்...*** (திவா.); to be afraid, to be agitated in mind.. 4. ***கலைந்து போதல்;*** to be dispersed, as an assembly; put to rout, as an army. "ஒன்னாத் தெவ்வ ருலைவிடத்து" (பெரும்பாண். 491.) 5. ***அலைதல்;*** to wander about. "உலகஞ்சுற்றி... உலையவிட்டாயெனின்" (தாயு. சுகவாரி, 6.). 6. ***சோறு கெடுதல்;*** to spoil, as of boiled rice etc.

*[உல் → உலை → உலை-தல்.]*

**உலை**[2]**-த்தல்** *ulai-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***கெடுத்தல்;*** to ruin, injure. காரியத்தை உலைத்துவிடாதே. 2. ***கலைத்தல்;*** to throw into disorder, derange, unhinge, unsettle. 'சான்றாளியை உலைத்து விட்டான்'. 3. ***அலைத்தல்;*** to harass as a demon. பேய் அவனை உலைத்துப் போட்டது. (செ.அக.).

*[உல் → உலை → உலை-த்தல்.]*

**உலை**[3] *ulai,* பெ. (n.) 1. ***நெருப்புள்ள அடுப்பு;*** fire place for cooking, oven. (W.) 2. ***கொல்லனுலை;*** smith's forge or furnace. "கொல்ல னுலையூதுந் தீயேபோல்" (நாலடி. 298). 3. ***சோறு சமைத்தற்காகக் கொதிக்க வைக்கும் நீர்;*** pot of water set over the fire for boiling rice. "உலைப்பெய்து அடுவது போலுந் துயர்" (நாலடி. 114). 4. ***மனநடுக்கம்;*** flurry, excitement, agitation of the mind. "உலைதருமலின மொன்ற தொழித்திடுஞ் சுத்தமொன்றே" (ஞானவா. வைரா. 26). (செ.அக.).

ம. உல, க., பட. ஒலெ, **கோத.** எல்கால், **துட.** வல், **குவி.** கொல்லு

*[உல் → உலை.]*

**உலைக்களம்** *ulai-k-kaḷam,* பெ. (n.) ***கொல்லனுலைக் கூடம்*** (பிங்.); smith's forge. (செ.அக.).

*[உலை + களம் ]*

**உலைக்குழல்** *ulai-k-kuḻal,* பெ. (n.) ***துருத்தி;*** blow-pipe, the bellows of a forge.

*[உலை + குழல்.]*

**உலைக்குறடு** *ulai-k-kuṟaḍu,* பெ. (n.) ***உலை முகத்திலிரும்பு தூக்குங் குறடு*** (வின்.); smith's tongs. (செ.அக.).

*[உலை + குறடு.]*

**உலைகட்டு-தல்** *ulai-kaṭṭu-,* 15. செ.கு.வி. (v.i.) ***பொங்கற்பானைக்கு மாவிலை செருகிய கயிறு கட்டுதல்;*** to decorate the top of a pot with mango leaves and set it on the fire with water for boiling rice for a sacred meal. (செ.அக.).

*[உலை + கட்டு.]*

**உலைகொதி-த்தல்** *ulai-kodi-,* 4. செ.கு.வி. (v.i.) ***சோறு சமைத்தற்குரிய நீர் கொதிப்புறுதல்;*** to boil, as water in a pot, when rice should be put in for cooking. (செ.அக.).

*[உலை + கொதி-த்தல்.]*

**உலைச்சல்** *ulaiccal,* பெ. (n.) ***அலைகை;*** trouble, vexation, harassment. அதிலே மெத்த உலைச்சல் (செ.அக.).

*[உலை → உலைத்தல் → உலைச்சல்.]*

**உலைத்தண்ணீர்** *ulai-t-taṇṇīr,* பெ. (n.) 1. ***காய்ந்த இரும்பைத் தோய்க்கும் நீர்;*** water used by the smith at his forge for dipping hot iron. (W.) 2. ***சோறு சமைத்தற்குக் கொதிக்க வைக்கும் நீர்;*** water in a pot. set over the fire for boiling rice. (செ.அக.).

*[உலை + தண்ணீர்.]*

**உலைத்துருத்தி** *ulai-t-turutti,* பெ. (n.) 1. ***கொல்லுலையிலுள்ள நெருப்பூதுந் துருத்தி*** (திவா.); smith's bellows. (செ.அக.).

*[உலை + துருத்தி.]*

**உலைந்தபழம்** *ulainda-paḻam,* பெ. (n.) ***அளிந்தபழம்*** (வின்.); overripe fruit. (செ.அக.).

*[உலைந்த + பழம்.]*

**உலைநீர்** *ulai-nīr,* பெ. (n.) ***உலைத்தண்ணீர்*** பார்க்க; see *ulai-t-taṇṇīr.* (செ.அக.).

*[உல் → உலை + நீர்.]*

**உலைப்பாடு** *ulai-p-pāḍu,* பெ. (n.) ***மிக்க நடுக்கம்;*** great excitement. "உலைப்பாடே படத்தழுவி" (தேவா. 1109,8). (செ அக.).

*[உல் → உலை + பாடு]*

**உலைப்பு**[1] *ulaippu,* பெ. (n.) 1. ***வருந்துகை*** (திவா.); troubling, vexing, harassing. 2. ***முறியடிக்கை;*** putting to rout. (W.) (செ.அக.).

*[உல் → உலை² → உலைப்பு.]*

**உலைப்பு**[2] *ulaippu,* பெ. (n.) ***அழிவு;*** destruction, eradication, extirpation. "உலைப்புறுவன வதினுவந்து தோய்நர்க்கே" (தணிகைப்பு. அகத்.29). (செ.அக.).

*[உலை → உலைப்பு.]*

**உலைமுகம்** *ulai-mugam,* பெ. (n.) 1. ***கொல்லனுலை யிடம்;*** central part of a smith's forge. (W.) 2. ***கொல்லனுலை வாயில்;*** the fire in the furnace in the smith's workshop. (செ.அக.).

*[உல் → உலை + முகம்.]*

**உலைமூக்கு** *ulai-mūkku,* பெ. (n.) ***கொல்லுலையில் துருத்தி வைக்கும் துளை*** (பிங்.); hole in a forge in which the bellows are inserted. (செ.அக.).

*[உல் → உலை + மூக்கு.]*

**உலைமூட்டு-தல்** *ulai-mūṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ***உலை வைத்து நெருப்புமூட்டுதல்;*** to set a pot of water over the fire for cooking. 'உலை மூட்டினா லுண்டுலகு'. 2. ***மூன்று கற்களை வைத்து உலை கூட்டுதல்;*** to put three stones together to form an ulai. (செ.அக.).

க. ஒலெ கொத்திசு (நெருப்பு மூட்டுதல்).

*[உலை + மூட்டு.]*

**உலைமூடி** *ulai-mūḍi,* பெ. (n.) ***உலைப்பானையின் மேல்மூடி;*** lid placed over a pot of water set on the fire. ஊர்வாயை மூட வுலைமூடி யில்லை.(உ.வ.).

*[உல் → உலை + மூடி. மூடு → மூடி.]*

**உலையேற்று-தல்** *ulai-y-ēṟṟu-,* 6. செ.கு.வி. (v.i.) ***சமையல் செய்வதற்கு உலைப்பானையை அடுப்பில் வைத்தல்;*** to set a pot of water on the fire for boiling rice. "தமக்கென் றுலையேற்றார்" (ஆசாரக். 40). (செ.அக.).

*[உலை + ஏற்று.]*

**உலைவு** *ulaivu,* பெ. (n.) 1. ***நடுக்கம்*** (சூடா.); tremor, trembling. 2. ***கலக்கம்;*** tribulation, uneasiness. "உலைவுறு சைசவத்துடன்" (ஞானவா. வைராக். 88.). 3. ***அழிவு;*** ruin, destruction. 4. ***தோல்வி;*** rout, defeat. "தெவ்வ ருலைவிடத் தார்த்து" (பெரும்பாண். 419) 5. ***அலைவு;*** agitation, trouble, vexation. (W.) 6. ***வறுமை;*** poverty, indigence. "உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி" (புறநா 150.4). 7. ***ஊக்கக் குறைவு;*** languor, weariness. "உலைவின்றித் தாழா துஞற்றுபவர்" (குறள். 620). (செ.அக.).

ம. உலவு. க. உலெக; தெ. உலுகு.

*[உல் → உலை → உலைவு.]*

**உலைவை-த்தல்** *ulai-vai-,* 4. செ.கு.வி. (v.i.) ***உலை யேற்று*** பார்க்க; see *ulai-y-ēṟu.*

*[உலை + வை.]*

**உலொட்டை** *uloṭṭai,* பெ. (n.) ***சொட்டைப் பேச்சு*** (யாழ். அக.); slanderous talk. அந்த லொட்டைப் பேச்செல் லாம் எனக்குப் பிடிக்காது (கொங். வ.).

*[உலுட்டை → உலொட்டை = உருள்கின்ற, பிறழ்கின்ற பேச்சு, நிலையில்லாத பேச்சு, பொய்யுரை.]*

**உலொடலொடெனல்** *uloḍa-loḍenal,* பெ. (n.) ***ஒரு வகை யொலிக்குறிப்பு;*** onom. expr. signifies rattling sound. (ஆ.அக.).

*[உலுடல் + உலுடல் + எனல் - லொடலொட எனல் எனத் திரிந்தது. உலுடல் → உலுட்டை + பேச்சு. இது இக்காலத்தில் லொடலொட்டைப்பேச்சு எனத் திரிபுற்றது.]*

**உலொடுக்கு** *uloḍukku,* பெ. (n.) 1. ***ஒலிக்குறிப்பு;*** onom. expr. signifies rattling sound. 2. ***வெறுப்பு;*** disgust. (ஆ அக.).

*[உலொடு → உலொடுக்கு. 'உலொடு' ஓர் ஒலிக்குறிப்பு. நொடுக்கு பார்க்க; see noḍukku.]*

**உவ்** *uv,* சு. பெ. (pron.) ***உவை;*** they, those things in between or above. "உவ்வு மெய்வயி னோயு நீயே" (பரிபா. 2. 58).

க. உவ. (இடைப்பட்ட நிலையில் இருப்போன்.)

*[உ → உவ்.]*

**உவ்வி** *uvvi,* பெ. (n.) 1. ***வரிவகை*** (T.A.S.iii, 32); a customary due. (செ.அக.). 2. ***தலை;*** head. (சா.அக.).

*[உ → உவ்வி.]*

**உவ்விடம்** *uvvidam,* பெ. (n.) ***அவ்விடத்திற்கும் இவ் விடத்திற்கும் இடைப்பட்டது;*** intermediate place, in between proximity and distance.

*[உ → உவ் + இடம்.]*

**உவ்வு**[1]**-தல்** *uvvu-,* 6. செ.கு.வி. (v.t.) ***விரும்புதல்;*** to like, desire.

*[உ → உவ் → உவ்வு. (பொருந்து.).]*

**உவ்வு**[2]**-தல்** *uvvu-,* 6 செ.கு.வி. (v.i.) 1. ***முளைத்தல்;*** to sprout. 2. ***தழைத்தல்;*** to foliate.

*[உவ் → உவ்வு.]*

**உவ்வு**[3] *uvvu,* பெ. (n.) 1. ***தவம்*** (யாழ்.அக.); **penance** (செ.அக.). 2. ***வெள்ளுவா அல்லது காருவா;*** **full moon** or new moon. (சேரநா.).

ம. உவ்வு.

*[உவவு → உவ்வு = நிறைவு, மகிழ்வு.]*

**உவ[1]-த்தல்** *uva-*, 3. செ.கு.வி. (v.i.) 1. ***மகிழ்தல்*** (திருமுருகு.1); to be glad, to rejoice, to be delighted. 2. ***பிரியமுடையதாதல்;*** to be pleased with, to approve of, like. அவருக்கு வந்த செய்கை. 3. ***உள்ளத்தாற் பொருந்துதல்;*** to be agreed. 4. ***பொருந்துதல்;*** to be joined. 5. ***ஒத்தல்;*** to be resembled.

ம. உவக்கு, க., கோத. ஒக், ஒக்ய (புணர்தலின் மிகுவிருப்பம்.), தெ. உவ்வி, உவ்வாயி (மகிழ்ச்சி).

*[உவ்வு → உவ → உவ-த்தல்.]*

**உவ[2]-த்தல்** *uva-*, 3. செ.குன்றாவி. (v.t.) ***விரும்புதல்;*** to be pleased with, to approve of, like.

*[உவ்வு[1] → உவ.]*

**உவக்காண்** *uva-k-kāṇ* இடை. (int.) ***உங்கே பார்;*** behold, see where you are. "உவக்காண்.. வரிக்கச்சினனே" (ஐங்குறு. 206).

*[உவ் → உவ + காண்.]*

**உவகை** *uvagai*, பெ. (n.) 1. ***மகிழ்ச்சி;*** joy, gladness, delight. "நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்தின்" (குறள், 304). 2. ***அன்பு;*** love, fondness. "அச்சமு முவகையு மெச்ச மின்றி" (தொல். பொருள். 91). 3. ***காமம்;*** sexual desire; amorous passion. "உவகை யாசையா லுள்ளழிந்து" (பாரத. வேத். 11). 4. ***இன்பச் சுவை*** (சிருங்கார ரசம்.) (திருக்கோ.1. உரை); sentiment of love.

ம. உவ்வி; தெ. உவ்வி, உவ்வாயி.

*[உவ் → உவ்வு → உவ → உவகை.]*

**உவகைக்கண்ணீர்** *uvagai-k-kaṇṇīr*, பெ. (n.) ***மகிழ்ச்சிக் கண்ணீர்;*** tears of joy. "அழுகைக் கண்ணீர் போல உவகைக் கண்ணீர் வீழ்வதுண்டு" (தொல். பொருள். 253. உரை).

*[உவ → உவகை + கண்ணீர்.]*

**உவகைக்கலுழ்ச்சி** *uvagai-k-kaluḻcci*, பெ. (n.) ***வாட்புண் மிகுந்த கணவனைக் கண்டு மனைவி மகிழ்ச்சிக் கண்ணீர் சிந்தும் புறத்துறை.*** (பு வெ 7,25); (puṟap.) theme of a wife's shedding tears of exultation on seeing her warrior husband lying sorely wounded by the sword in battle. (செ.அக.).

*[உவ → உவகை + கலுழ்ச்சி ]*

**உவகைச்சொல்** *uvagai-c-col*, பெ. (n.) ***முகமன்;*** kind and polite words, as to a visitor; congratulation, felicitation (W.)

*[உவ → உவகை + சொல்.]*

**உவகைப்பறை** *uvagai-p-paṟai*, பெ. (n.) ***மகிழ்ச்சியைக் குறிக்கும் பறை*** (திவா.); drum used to be beaten on occasions of joy.

*[உவ → உவகை + பறை.]*

**உவச்சக்காணி** *uvacca-k-kāṇi*, பெ. (n.) ***உவச்சனுக்குக் கோயிற் கொட்டூழியத்திற்காக விடப்படும் மானியம்*** (கல்வெட்டு); lands granted rent-free to a person of the uvaccan caste for service as a temple drummer (Insc.).

*[உவச்சு + காணி. உவச்சுத்தொழில் செய்வோர்க்காகத் தரப்பட்ட காணி.]*

**உவச்சவரி** *uvaccavari*, பெ. (n.) ***உவச்சரிடமிருந்து வாங்கும் வரி*** (S.I.I.i, 81); tax collected from uvaccar.

*[உவச்சு + வரி ]*

**உவச்சன்** *uvaccaṉ*, பெ. (n.) 1. ***பூசகக் குடியினன்*** (நன். 144. மயிலை.); member of a caste of temple drummers and pūjāris of Kāḷi. 2. ***ஆசிரியன்;*** teacher. 3. ***மத்தளம் கொட்டியவாறு பாடியாடும் கூத்தன்;*** dancer who beats drum and sings simultaneously.

ம. உவச்சன் க. ஒவச, ஒச.

*[உவச்சு → உவச்சன். உவச்சு = மத்தளம். மத்தளம் கொட்டியவாறு ஆடிக்கொண்டே பாடும் பாணர் இனத்தினன். வயிரியர் என்னும் கூத்தர் குலத்தினன்.]*

**உவச்சு** *uvaccu*, பெ. (n.) ***மத்தளம்;*** drum. "உவச்சும் பறையும் கொட்டக் கடவதல்லன்" (S.I.I.vii. 450). (செ.அக.).

*[உவ → உவச்சு = மகிழ்ச்சியை மிகுவிக்கும் பறை.]*

**உவட்சி** *uvaṭci*, பெ. (n.) 1. ***துவளுகை;*** flexibility. 2. ***அசைப்பு*** (ஆ.அ.க ), litheness.

*[உவள் + சி - உவட்சி. உவள் = துவளுதல்; தளர்ந்து அசைதலும், ஆடுதலுமாம் ]*

**உவட்டி-த்தல்** *uvaṭṭi-*, 4. செ.குன்றாவி. (v.t.) ***அருவருத்தல்;*** to nauseate, loathe. (J)

*[உவள் → உவட்டு → உவட்டி → உவட்டித்தல்.]*

**உவட்டிப்பு** *uvaṭṭippu*, பெ. (n.) ***உவட்டி*** பார்க்க; see *uvaṭṭi*. (செ.அக ).

*[உவள் → உவட்டு → உவட்டி → உவட்டிப்பு.]*

**உவட்டு[1]-தல்** *uvaṭṭu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. ***வெறுப்புறுதல்;*** to loathe abominate, recoil from. "மாய வாழ்க்கையி லூனமே யிருத்தலென் றுவட்டினோர்களும்" (அருட்பா, குடும்ப. 18). 2. ***தெவிட்டுதல்;*** to satiate, surfeit. "உவட்டாத பேரின்பமான சுகவாரியினை" (தாயு. சின்மயா. 2). 3. ***மிகுதல்;*** to increase. மயலுவட்டி... கதமொடு பிளிறும்" (கல்லா. 20.37). 4. ***புரளுதல்*** (ஆ.அக.); to roll.

ம. உவட்டுக, க. உகி (துப்பு), ஒகெ (மேலெழு); து. உச்சியுனி (துப்பு), தெ. உமியு (துப்பு), உகி (துப்பு).

*[உவள் → உவட்டு. உவள் = தவறுதல், அசைதல், தளர்த்தல், வெறுப்புறல்.]*

**உவட்டு²** *uvattu,* பெ. (n.) 1. ***குமட்டுகை (வின்.);*** nausea. 2. ***பெருக்கு;*** increasing, overflowing as from a fountain. ''மதநதி யுவட்டின்'' (கல்லா. கணபதி.). (செ.அக.).

*[உவள் → உவட்டு.]*

**உவட்டுமண்** *uvattuman,* பெ. (n.) ***சவுட்டு மண்;*** fuller's earth. i.e. soil impregnated with soda. (செ.அக.).

*[உவள் → உவட்டு + மண் உவள் = உவர்ப்பு.]*

**உவட்டெடு-த்தல்** *uvattedu-,* 4. செ.கு.வி. (v.i.) ***பெருக் கெடுத்தல்.*** to swell, as a river. ''உவட்டெடுத் தொழு கருவி'' (தணிகைப்பு. வீராட்ட. 76). (செ.அக.).

*[உவள் → உவட்டு = பொங்குதல், மிகுதல், பெருக்கெடுத்தல். உவட்டு + எடு.]*

**உவடு** *uvadu,* பெ. (n.) ***உவட்டுநிலம்*** பார்க்க; see *uvattunilam.*

*[உவள் → உவடு. இச்சொல் திரவிட மொழியில் சவடு → சவுடு எனவும் சவள் → சவுளு எனவும் திரிந்துவிட்டது.]*

**உவண்** *uvan,* கு.வி.எ. (adv.) ***மேலிடம்.*** (சீவக. 2853); upper-place, place above. (செ.அக.).

*[உவள் → உவண் ]*

**உவணக்கொடியோன்** *uvana-k-kodiyōn,* பெ. (n.) ***திரு மால்;*** Visnu, who has the white-headed kite on his banner.

*[உவண் → உவணம் + கொடியோன்.]*

**உவணம்** *uvanam,* பெ. (n.) 1. ***கருடன்;*** white-headed kite. ''சிறையுவண மூர்ந்தாய்'' (திவ். இயற். 1,22). 2. ***கழுகு*** (திவா.); vulture. 3. ***உயர்ச்சி;*** excellence. (செ.அக.).

*[உவண் → உவணம் = உயரத்தில் பறப்பது.]*

**உவணமுயர்த்தோன்** *uvanamuyarttōn,* பெ. (n.) ***உவ ணக்கொடியோன்*** பார்க்க; see *uvana-k-kodiyōn.*

*[உவணம் + உயர்த்தோன்.]*

**உவணர்** *uvanar,* பெ. (n.) ***கருடர்;*** garudas, a race of demigods. ''உவணரோ டியக்கர்'' (கந்தபு. அயனைச் சிறைநீ. 2). (செ.அக.).

*[உவணம் → உவணர் ]*

**உவணவூர்தி** *uvana-vūrdi,* பெ. (n.) ***உவணக் கொடி யோன்*** பார்க்க. (தணிகைப்பு. அகத். 370); see *uvana--k-kodiyōn.* (செ.அக ).

*[உவணம் + ஊர்தி.]*

**உவணன்** *uvanan,* பெ. (n.) ***கருடன்*** (தி.வா.); white-headed kite. (செ.அக.).

*[உவணம் → உவணன்.]*

**உவணி** *uvani,* பெ. (n.) ***வாள்*** (தி.வா.); sword.

ம. உவணி.

*[உவள் → உவளி → உவணி.]*

**உவணை** *uvanai,* பெ. (n.) ***மேலுலகம்;*** svarga, the celestial region. ''ஆகநீத் துவணைமே லுறைந்தான்'' (சேதுபு. விதூம. 54). (செ.அக.).

*[உவண் → உவணை.]*

**உவதி** *uvadi,* பெ. (n.) ***இளம்பெண்;*** young woman. (செ.அக.).

*[உவ்வு → உவவு = நிறைவு. உவவி → உவதி. நிறைபருவம் எய்தியவள். உவதி → Skt. yuvati.]*

**உவதை** *uvadai,* பெ. (n.) ***பேரருவி*** (சூடா.); high waterfall. (செ.அக.).

*[உவ்வு → உவவு = நிறைவு. உவவு → உவதை = நிறைந்து பெருகும் ஆறு.]*

**உவப்பு¹** *uvappu,* பெ. (n.) 1. ***மகிழ்ச்சி*** (தொல். சொல். 306); joy, delight, rapture. 2. ***பொலிவு*** (திவா.); prosperity, luxuriance, fertility 3. ***விருப்பம்;*** desire, wish. ''உவப்பொடு தவப்பாரதையி னிவர்ந்தன்றி'' (வைராக். தீப. 18). 4. ***அன்பு;*** love, affection. (சேரநா.) (செ.அக.).

*[உவ்வு → உவ → உவப்பு.]*

**உவப்பு²** *uvappu,* பெ. (n.) ***உயரம்*** (பிங்.); height. (செ.அக.).

ம. உவப்பு

*[உ = உயரம். உ → உவ → உவப்பு.]*

**உவமச்சொல்** *uvama-c-col,* பெ. (n.) ***உவமவுருபு*** பார்க்க. (சீவக. 2490, உரை.); see *uvama-v-urubu.* (செ.அக.).

*[உவ் → உவ்வு → உவ → உவமம் + சொல் ]*

**உவமத்தொகை** *uvama-t-togai,* பெ. (n.) ***உவமைத் தொகை*** பார்க்க; see *uvamai-t-togai.* (செ.அக.).

*[உவ்வு → உவ → உவமம் + தொகை ]*

**உவமப்பொரு** *uvama-p-poru,* பெ. (n.) ***ஒன்றை ஒப்பா கக் கூறும் உவமை*** (தொல். சொல். 78, உரை.); comparison based on exact likeness, opp. to உறழ்பொரு. (செ.அக.).

*[உவமம் + பொரு. பொரு = ஒப்பு.]*

**உவமப்போலி** *uvama-p-pōli,* பெ. (n.) ***உள்ளுறையுவ மம்*** (தொல். பொருள் 299); a variety of simile. (செ.அக.).

*[உவமம் + போலி.]*

**உவமம்** *uvamam,* பெ. (n.) ***உவமை*** (தொல். பொருள். 276); comparison. (செ.அக.).

*[உவ → உவமம்.]*

**உவமவளவை** *uvama-v-aḷavai,* பெ. (n.) ***ஒப்பளவை*** (குறள். 253, உரை.); (Log.) analogy recognition of likeness, one of six *piramāṇam.* (செ.அக.).

*[உவமம் + அளவை.]*

**உவமவாசகம்** *uvamavāšagam,* பெ. (n.) ***உவமவுருபு*** பார்க்க. (சீவக. 10, உரை.); see *uvama-v-urubu.* (செ.அக.)

*[உவமம் + வாசகம்.]*

**உவமவுருபு** *uvama-v-urubu,* பெ. (n.) ***உவமையைக் குறிக்கும் உருபு.*** (தொல். பொருள். 286, உரை); sign of comparison. (செ.அக.).

*[உவமம் + உருபு.]*

**உவமன்**[1] *uvamaṉ,* பெ. (n.) ***ஊமன்;*** dumb person. "உரைத்தக்கா லுவமனே யொக்கும்" (தேவா. 351, 1). (செ.அக.).

*[உவமன் → ஊமன். பிறர் பேசக் கேட்டுத் தான் பேச இயலாமை யால் நகைமுகம் காட்டி உவந்து இருப்பவன்.]*

**உவமன்**[2] *uvamaṉ,* பெ. (n.) ***உவமை;*** comparison. "உவமனி லிறந்தன" (திருவாச. 5, 39). (செ.அக.).

*[உவமை → உவமன்.]*

**உவமானம்** *uvamāṉam,* பெ. (n.) ***உவமம்*** பார்க்க; see *uvamam.* "மருவுநே ருவமானம் வகுத்திட" (சேதுபு. இராமதீ. 36).

*[உவமை → உவமானம்.]*

**உவமானி-த்தல்** *uvamāṉi-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உவமி-த்தல்*** பார்க்க; see *uvami-.* (செ.அக.).

*[உவ → உவமானம் → உவமானி → உவமானி-த்தல்.* (வே.க. 39)*]*

**உவமி-த்தல்** *uvami-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***ஒப்புக்கூறு தல்*** (கந்தரல. 9); to liken, compare. (செ.அக.).

*[உவமை → உவமி (வ.மொ.வ. 96.). ஒ.நோ: ஒருமை → ஒருமி.]*

**உவமியம்** *uvamiyam,* பெ. (n.) ***உவமிக்கப்படும் பொருள்;*** thing that is compared with.

*[உவ → உவமி → உவமியம்]*

**உவமேயப்பொருள்** *uvamēya-p-poruḷ,* பெ. (n.) ***உவமி யம்*** பார்க்க (சி.போ. பாயி. சிற்.); see *uvamiyam.* (செ.அக.).

*[உவமியம → உவமேயம் + பொருள்.]*

**உவமேயம்** *uvamēyam,* பெ. (n.) ***உவமியம்*** பார்க்க; see *uvamiyam.*

*[உவமியம் → உவமேயம்]*

**உவமை** *uvamai,* பெ. (n) 1. ***ஒப்பு*** (தி வா.); resemblance, similarity. 2. ***உவமையணி*** (தண்டி. 29.); simile. 3. ***ஒட்டணியாகக் கூறப்படும் அறநெறிகள்;*** parable. (chr.). (செ.அக.).

*[உ → உவ் → உவ → உவமை]*

மகிழ்ச்சிக்கு விருப்பமும் விருப்பத்திற்கு மனப் பொருத்தமுங் காரணமாம். நாட, விழைய, வீழ என்னும் உவம உருபுகள் விருப்பக் கருத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. உவமை என்னும் சொல் விருப்பப் பொருளை உணர்த்துவது மட்டுமின்றி ஒப்புமைப் பொருளை இயல்பாகக் கொண்டும் உள்ளது. உவமித்தல் = ஒப்பாக்குதல், ஒப்பாகக் கொள்ளுதல், ஒப்பிடுதல். ஆளப் பெற்ற வடிவம் உவமம் என்பதே. உவமை என்னுஞ் சொல் வடமொழியில் உபமா என்று திரியும். அதை உப + மா என்று பிரித்து இருசொற் கூட்டாக்கி, ஒத்த அளவு என்று பொருள் கூறுவர் உப = உடன். மா = அளவு தமிழில். உவமை என்பது 'உவ' என்னும் முதனிலையும் 'மை' என்னும் ஈறுங்கொண்ட ஒரு சொல்லே. இருக்கு வேதத்தில், உபமா என்பது கூட்டுச்சொல்லாயிருந்து முன் சொல்லிற் பொருள் சிறந்து, அளத்தல், பங்கிடுதல், அளித்தல் என்று பொருள்பட்ட தாகத் தெரிகின்றது. சதபத பிரமாணம், மகாபாரதம் முதலிய பின்னூல்களில் அது தமிழ்த் தொடர்பினால் ஒப்புமைப் பொருள் பெற்றுவிட்டது. ஒப்பு, ஒப்புப் பொருள் என இருகூறு கொண்டது உவமை என்னும் அணி. ஒப்பு உவமம் என்றும் ஒப்புப்பொருள் என்றும் தமிழிற் சொல்லப் பெறும் வடமொழி யாளர் பிற்காலத்தில் பிரமாண(ம்) பிரமேய(ம்) என்னும் முறையில் உவமத்துக்கும் பொருளுக்கும் உபமான உபமேய என்னும் சொல்லிணையை ஆக்கிக் கொண்டனர் இதிலும் மான என்பது, அளவு குறித்த மானம் என்னும் தென் சொல்லே (வ.மொ.வ. 96).

**உவமைத்தொகை** *uvamai-t-togai,* பெ. (n.) ***உவமை யுருபு தொக்க தொகை;*** (Gram.) elliptical compound in which the sign of comparison is understood, as in மதிமுகம். (செ.அக.).

*[உவமை + தொகை.]*

**உவமையணி** *uvamai-y-aṇi,* பெ. (n.) ***இரண்டு பொருள் களுக்கிடையே ஒப்புமையை விளங்கச் சொல்லும் அணிவகை;*** simile.

*[உவமை + அணி.]*

**உவமையாகுபெயர்** *uvamai-y-āgupeyar,* பெ. (n.) ***உவமையான பொருளின் பெயர் உரிய பொருளுக்கு ஆகிவருவது*** (நன் 290. உரை); a figure of speech in which the thing compared stands for the subject of comparison as in மயில் வந்தாள். (செ அக.).

**உவமையின்மை** *uvamai-y-iṉmai,* பெ. (n.) ***இறைவன் எண்குணத்தொன்று*** (பிங்.); incomparableness, transcendence, one of Iṟaivaṉ - eṇkuṇam. (செ.அக.).

*[உவமை + இன்மை.]*

**உவர்**[1]**-த்தல்** *uvar-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***உப்புக்கரித்தல்;*** to taste saltish, to brackish, as a mineral salt. 2. ***துவர்த்தல்*** (சங்.அக.); to taste astringent. (செ.அக.).

*[உவள் → உவர்.]*

**உவர்**[2]**-த்தல்** *uvar-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***அருவருத்தல்;*** to dislike, abhor, feel aversion to, loathe.

*[உவள் → உவர்.]*

**உவர்**[3] *uvar,* பெ. (n.) 1. ***உப்புச்சுவை;*** saltishness, brackishness, the taste of any kind of salt, acid or alkaline substance. "உவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்" (நாலடி. 263) 2. ***உப்பு;*** salt. "கறிக்கு வேண்டுமுவர் முதலமைந்த நல்கி" (கந்தபு. வில்வல.வதை. 17). 3. ***களர்நிலம்;*** brackish soil. 4. ***உழைமண்;*** fuller's earth, crude carbonate of soda. "உவரு மாப்பியு முறுத்து" (காஞ்சிப்பு. கழுவாய்ப். 268) 5. ***கடல்;*** sea. "வரை நிரை கிடந்த திரையுவர் புகுந்து" (கல்லா. 15,22). 6. ***இனிமை;*** pleasantness. "வீங்குவர்க் கவவினீங்கல் செல்லேம்" (நற். 52). (செ அக ).

ம. உவர்; **க.** ஒகர், **து.** உகரு, **தெ.** ஒகரு, வகரு; **கொண்.** உவ்வோரிக; **கோண்.** சௌவ்வர், **கூ.** சாரு; **குவி.** காரு.

*[உவள் → உவர்.]*

**உவர்க்கடல்** *uvar-k-kaḍal,* பெ. (n.) ***உப்புக் கடல்;*** salt sea. "உவர்க்கடலன்ன செல்வருமுளரே" (நன். 268, மயிலை.). (செ.அக.).

ம. உவர்கடல்.

*[உவர் + கடல் ]*

**உவர்க்கம்** *uvarkkam,* பெ. (n.) ***கடற்கரை;*** seashore. "உவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்பன்" (திணைமாலை. 62). (செ.அக.).

*[உவர் + அகம்-உவரகம் → உவர்க்கம் (கொ.வ.)]*

**உவர்க்கல்** *uvar-k-kal,* பெ. (n.) ***சவர்க்காரம்;*** a hard concretion found in the soil of fuller's earth.

*[உவர் + கல்.]*

**உவர்க்களம்** *uvar-k-kaḷam,* பெ. (n.) 1. ***களர் நிலம்*** (பிங்.); saltish land. 2. ***உப்பளம்*** (திவா.); salt-pans, land where salt is formed. (செ.அக.).

*[உவர் + களம்.]*

**உவர்க்காரம்**[1] *uvar-k-kāram,* பெ. (n.) ***உவர்நிலம்*** பார்க்க; see *uvar-nilam.* (செ.அக.).

**உவர்க்காரம்**[2] *uvar-k-kāram,* பெ. (n.) ***சவர்க்காரம்*** (வின்.); soap.

ம. உவர்காரம்.

*[உவர் + காரம்.]*

**உவர்காலி** *uvar-kāli,* பெ. (n.) ***உப்புநீரில் கிடக்கும் விருப்பமுள்ள, எருமை அல்லது மாடு;*** buffalo, cows that prefer to lie in salt water.

ம. உவர்காலி.

*[உவர் + காலி.]*

**உவர்ச்சங்கம்** *uvar-c-caṅgam,* பெ. (n.) ***முட்சங்கு*** (மலை.); mistletoe berry thorn. (செ.அக.).

**உவர்ச்சாரநீர்** *uvar-c-cāranīr,* பெ. (n.) ***பூ நீறு;*** the essence or the salt derived from the soil of fuller's earth.

*[உவர்ச்சாரம் + நீர்.]*

**உவர்ச்சாரம்** *uvar-c-cāram,* பெ. (n.) ***உவருப்பு;*** fuller's earth. (செ.அக.).

*[உவர்க்காரம் - உவர்ச்சாரம்.]*

**உவர்த்தரை** *uvar-t-tarai,* பெ. (n.) ***களர் நிலம்*** (பிங்.); saline soil.

*[உவர் + தரை.]*

**உவர்நிலம்** *uvar-nilam,* பெ. (n.) ***உவர்த்தரை*** பார்க்க; see *uvar-t-tarai.* (செ.அக.).

ம. உவர்நிலம்.

*[உவர் + நிலம்.]*

**உவர்நீர்** *uvar-nīr,* பெ. (n.) ***உப்புநீர்*** (பிங்.); salt water, brackish water. (செ.அக.).

*[உவர் + நீர். உவர் → உவர்ப்பு → உப்பு.]*

**உவர்ப்பில்லாமை** *uvarppillāmai,* பெ. (n.) ***கைப்பில் லாமை;*** freshness as opposed to saltness in water. (செ.அக.).

*[உவர்ப்பு + இல்லாமை.]*

**உவர்ப்பு**[1] *uvarppu,* பெ. (n.) 1. ***உப்புச்சுவை;*** saltishness. 2. ***துவர்ப்பு;*** astringency. (W.) 3. ***இகழ்ச்சி*** (சூடா.); insult, contempt. 4. ***வெறுப்பு;*** dislike, aversion. "இவற்றி னுவர்ப்புத் தோன்றி" (சி.போ.பா. அவையடக்கம், பாசுபதம்). 5. ***அவாவின்மை*** (திவா.); absence of desire, suppression of passion. (செ.அக.).

ம. உவர்ப்பு; **க., து.** ஒகர், **தெ.** ஒகரு.

*[உவர் → உவர்ப்பு.]*

**உவர்ப்பு**[2] *uvarppu,* பெ. (n.) ***உயிரால் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளுள் இனி நுகரக் கிடந்த வினை களின் பயன்கள்*** (குறள். 350. உரை); that portion of *karma* that still remains to be experienced. (செ.அக.).

*[உவர் → உவர்ப்பு.]*

**உவர்மண்** *uvar-maṇ,* பெ. (n.) 1. ***களர்நிலம்;*** saline-soil. 2. ***உழைமண்;*** fuller's earth, crude carbonate of soda. (செ.அக.).

ம. உவர்மண்ணு.

*[உவள் → உவர் + மண்.]*

**உவர்மண்ணுப்பு** *uvar-maṇṇuppu,* பெ. (n.) ***உவர்மண் நிலத்திலுள்ள*** (சோடா) ***உப்பு;*** carbonate of soda found in fuller's soil. (செ.அக.).

*[உவர்மண் + உப்பு.]*

**உவரகம்** *uvaragam,* பெ. (n.) ***உவர்மண்*** (அக.நி.); saline earth.

*[உவர் → உவரகம்.]*

**உவராகம்** *uva-rāgam,* பெ. (n.) ***கோள் மறைப்பு*** (கிரகணம்); eclipse of the sun or moon. "உவராக மாயிரத்துக் கொப்பாம்" (சேதுபு. சேதுபல. 78).

*[உவவு + அறுகம் = உவவறுகம் - உவறாகம் → உவராகம். (கொ.வ.)]*

**உவரி**[1] *uvari,* பெ. (n.) 1. ***உப்புநீர்;*** brackish water. "மலைசார்ந்து முப்பீண்டுவரி பிறத்தலால்" (நாலடி, 245). 2. ***சிறுநீர்*** (பிங்.); urine. 3 ***கடல்;*** sea. "உலகுசூ ழுவரி" (கம்பரா. ஊர்தே. 15).

ம. உவரி

*[உவர் → உவரி.]*

**உவரி**[2] *uvari,* பெ. (n.) ***மகளிர் விளையாட்டு;*** women's game (செ.அக.).

*[உவர் → உவரி = கடற்கரை மணலில் விளையாடும் விளையாட டாகலாம்.]*

**உவரிக்கெண்டை** *uvari-k-kendai,* பெ. (n.) ***மீன்வகையு ளொன்று*** (ஆ அக.); a kind of fish.

*[உவரி + கெண்டை.]*



உவரிக்கெண்டை

**உவரிநீர்** *uvari-nīr,* பெ. (n.) ***கடல் நீர்;*** sea-water, salt-water.

ம. உவர்வெள்ளம்.

*[உவர் → உவரி + நீர்.]*

**உவருப்பு** *uvaruppu,* பெ. (n.) ***பூ நீருப்பு; வழலையுப்பு;*** an efflorescent salt collected from the soil of fuller's earth much valued in the Tamil medical science. (செ.அக.).

ம. உவருப்பு.

*[உவர் + உப்பு.]*

**உவரை** *uvarai,* பெ. (n.) ***பயிர் எழும்பிய விளைநிலம்*** (ஆ. அக.); cultivated land with crop.

*[உவர் → உவரை.]*

**உவல்**[1] *uval,* பெ. (n.) ***பள்ளம்;*** depression.

*[உவ் → உவ → உவல்.]*

**உவல்**[2] *uval,* பெ. (n.) 1. ***தழை;*** twigs and sprays. "பாசுவ லிட்ட புன்காற் பந்தர்." (புறநா. 262) 2. ***சருகு;*** dried leaves. "கானவ ஹுவல்சுடு கமழ்புகை" (நற். 282). (செ.அக.).

*[உவ்வு → உவ்வல் → உவல்.]*

**உவலை**[1] *uvalai,* பெ. (n.) 1. ***தழை;*** twigs and sprays. "உவலை சூடி யுருத்துவரு மலிர்நிறை" (பதிற்றுப். 28,12). 2. ***சருகு*** (அகநா. 21); dried leaves 3 ***இழிவு;*** meanness. "சிறு மனிச ருவலை யாக்கை." (திவ். திரு வாய். 1, 5, 8). 4. ***பொய்*** (ஆ அக.); falsehood, lie. "உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்" (திரு வாச. திருத்தாள் 17). (செ.அக.).

*[உவல் → உவலை.]*

**உவலை**[2] *uvalai,* பெ. (n.) ***ஓட்டை;*** hole, hallow.

*[உல் → உவ் → உவலை ]*

**உவலைக்கூவல்** *uvalai-k-kūval,* பெ. (n.) ***தழைமூடிய கிணறு;*** well covered by plants.

*[உவலை + கூவல்.]*

**உவவனம்** *uva-vanam,* பெ. (n.) ***பூங்கா;*** grove, park. "உவவன மருங்கினவ் வுரைசா றெய்வதம்" (மணிமே. பதி. 45). (செ.அக.).

*[உவ்வு → உவவு (மகிழ்வு) → உவ + வனம் ]*

**உவவு**[1] *uvavu,* பெ. (n.) 1. ***உவகை, உவப்பு;*** joy, love, desire, great pleasure, fondness. 2. ***கொடை;*** charity, liberality. 3. ***மிகுமகிழ்ச்சி;*** gladness. (சேரநா.).

ம. உவவி, உவ்வாயி

*[உவ்வு → உவ → உவவு.]*

**உவவு**[2] *uvavu,* பெ. (n.) 1. ***மிகு உவப்பு;*** great pleasure, gladness. "உவவுபொன் றருகென." (விநாயகபு. 54.12) 2. ***உவா;*** full moon and new moon. "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறநா. 3.1). 3. ***தவம்*** (பிங்.); religious austerity. (செ.அக.).

ம. உவவு.

*[உவ்வு → உவ → உவவு.]*

**உவள்**[1] *uval,* சு.பெ. (demons pron.) ***முன் நிற்பவள்;*** she who is yonder. "படையுவள் கண் காண்மின்" (பரிபா. 11,123). (செ.அக.).

க. உவள்.

*[உ → உவள்.]*

**உவள்(ளு)**[2]**-தல்** *uval-,* 15. செ.கு.வி. (v.i.) 1. ***துவளு தல்*** (குடா.); to quiver; be unable to support a weight, as the poplar or the asp. 2. ***அதிர்தல்;*** to quake, as the earth. "கடல் நில முவளுற" (பிரமோத். 4,46). 3. ***பரத்தல்;*** to spread, extend in all directions. "உவள்தரு மறையினொடு" (கம்பரா. திருவவ. 127). (செ.அக.).

*[உவ → உவள்.]*

**உவளகம்** *uvalagam,* பெ. (n.) 1. ***அரண்மனையின் உட்புறம்;*** zenana, interior part of a mansion set apart for women. "உவளகந் தனதாக வொடுங்கினான்" (சீவக. 243). 2. ***சிறைச்சாலை;*** prison. "பல்லமரரை யுவளகந் தன்னி லிருத்தினாயென" (கந்தபு. அவைபுகு. 98). 3.

*ஒருபக்கம்* (சீவக. 243 உரை); one side. 4. ***மதில்*** (திவா.); rampart. 5 ***மனைவாயில்*** (பிங்.); gateway, entrance 6 ***இடைச்சேரி*** (பிங்.), hamlet of herds men 7 ***பள்ளம்*** (பிங்.); hollow depression in the ground 8. ***நீர்நிலை*** (பிங்.); tank, lake 9 ***அகழி;*** trench, fosse. ''உவளகங் கண்ணுற்றுவர்க் கடலி தென'' (குமர. பிர திருவாரு. 32). 10. ***அகலம்*** (பிங்.); expanse, wideness. 11. ***உப்பளம்*** (பிங்.); salt-pan. 12. ***பிரிகை*** (பிங்.), separating, parting. (செ அக.).

*[உவல் → உவள் → உவளகம் (வேக 91)]*

**உவளம்** *uvaḷam,* பெ (n) 1. ***சோறு;*** boiled rice. 2. ***யானைக் கவளம்;*** elephant fodder. (செ.அக.).

*[உவல் → உவள் → உவளம். உவல் = தழை, உணவு]*

**உவளி-த்தல்** *uvaḷi-,* 4. செ.குன்றாவி (v.t.) ***தூய்மை செய்தல்*** (பிங்.); to cleanse, purify. (செ அக.).

*[உவல் → உவள் → உவளி-த்தல் = தழைகளால் தரையைக் கூட்டித் துப்புரவு செய்தல்.]*

**உவற்று-தல்** *uvaṟṟu-,* 6 செ.குன்றாவி. (v.t.) ***சுரக்கச் செய்தல்;*** to cause to swell up, to flow. ''ஒண்செங் குருதி யுவற்றியுண் டருந்துபு'' (அகநா. 3).

*[உவறு → உவற்று → உவற்று-தல்.]*

**உவறு-தல்** *uvaṟu-,* 6. செ.கு.வி. (v.i.) ***சுரத்தல்;*** to spring up, well up ''உவறுநீ ருழக்கி'' (சீவக. 966).

*[உவல் → உவறு.]*

**உவன்** *uvaṉ,* சு.பெ. (demons.pron.). 1. ***முன்நிற்பவன்;*** he who is yonder. ''பார்த்தானுவன்'' (பரிபா. 12,55). 2. ***நடுவர்;*** he who takes an intermediate position; arbitrator. ''பிராப்தமென்று உவரருளிச் செய்ததற்கு'' (ரஹஸ்ய. 262). (செ.அக.).

*[உ → உவன்.]*

**உவன்றி** *uvaṉṟi,* பெ. (n.) ***நீர்நிலை;*** fountain-head, head of water. 'வாய்த்தலைக்கும் உவன்றிக்குமாகப் பங்கொன் றும்' (S.I.I.ii. 220).

*[உவல் → உவன்றி.]*

**உவன்றிசெய்¹-தல்** *uvaṉṟi-šey-,* 1. செ.குன்றாவி. (v.t.) ***நீர்நிலையுண்டாக்குதல்;*** to make or construct a head of water. (S.I.I.ii. 521).

*[உவன்றி + செய்.]*

**உவனி-த்தல்** *uvaṉi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***தூய்மை செய்தல்*** (பிங்.; Ms.); to clean, as the bow before shooting. 2. ***எய்யத் தொடங்குதல்;*** to begin to shoot an arrow from the bow. ''வில்லன்றே யுவனிப்பாரும்'' (சீவக. 2179). 3. ***ஈரமாதல்;*** to grow moist when exposed to dew; to become damp, as the ground, clothes, furniture. (J.) (செ.அக.).

*[உவல் → உவலி → உவனி.]*

**உவனிப்பு** *uvaṉippu,* பெ. (n.) ***ஈரம்;*** moisture, dampness, humidity. (J.) (செ.அக.).

*[உவல் → உவலிப்பு → உவனிப்பு.]*

**உவா¹** *uvā,* பெ (n.) 1 ***இளமை;*** youthfulness, juvenility. ''வந்தன வெண்ணரை போயிற் றுவா'' (திருநூற். 95). 2 ***இளையோன்*** (பிங்.); young man, youth, lad. 3. ***முழுநிலவு;*** fullmoon. ''உவாமதி கிடக்குங் குண்டு கடல்'' (கல்லா. 41,25). 4. ***காருவா;*** new moon. ''பூரணை யுவாவென் றளவு சேர்திதி'' (பிரமோத். 18,18)

*[உவவு → உவா]*

**உவா²** *uvā,* பெ (n) 1 ***கடல்*** (பிங்.); sea. 2. ***யானை;*** elephant that is 60 years old. ''உவாவணி யூர்ந்தாயு நீ'' (கலித். 97). 3. ***உகாமரம்*** (L), sand paper-tree.

*[உவவு → உவா.]*

**உவாஏர்** *uvā-ēr,* பெ. (n.) 1. ***உழவுத்தொழில் தொடங்கு வதற்கு அடையாளமாகிய பொன்னேர் கட்டுதல்;*** first ploughing of the land. 2. ***பொன்னேர் கட்டுவதற்குத் தரும் கொடை;*** a gift for first ploughing. (மரக்காணம் கல்வெட்டு).

*[உவா = முழுநிலா. உவா + ஏர். முழுநிலா நாளில் பூட்டும் பொன்னேர்.]*

**உவாத்தேக்கு** *uvā-t-tēkku,* பெ. (n.) ***உகாமரம்;*** sand paper - tree.

*[உகா → உவா + தேக்கு.]*

**உவாந்தம்** *uvāndam,* பெ. (n.) 1. ***காருவா;*** new moon, conjuction of sun and moon. 2. ***வெள்ளுவா;*** full moon, opposition of sun and moon.

*[உவா + அந்தம். 'அந்தம்' சொல்லாக்க ஈறு.]*

**உவாமதி** *uvā-madi,* பெ. (n.) ***வெள்ளுவா;*** full moon. ''உவாமதி யுடலுரிஞ்சுதலால்'' (நைடத. நகர. 8). (செ.அக.).

*[உவவு → உவா + மதி.]*

**உவாவறுதி** *uvā-v-aṟudi,* பெ. (n.) காருவா, ***வெள்ளுவாக் களின் முடிவு;*** end of the new or full moon when, if there is an eclipse, religious duties are to be performed. (W.) (செ.அக.).

*[உவா + அறுதி.]*

**உவாவு-தல்** *uvāvu-,* 6. செ.குன்றாவி. (v.t.) ***நிறைதல்;*** to fill in. ''பெருமண்ணுவாவும் பேராப் பல்படை'' (பெருங். உஞ்சைக். 58, 106.). (செ.அக.).

*[உவவு → உவாவு.]*

**உவி¹-தல்** *uvi-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***வற்றுதல்;*** to boil away, as water in a pot of rice. 2. ***சாதல்;*** to die in great numbers as in war or pestilence. அம்மையினால் வெகுசனம் உவிந்து போயிற்று. (செ.அக.).

*[உல் → உள் → உவ் → உவி = வெதுப்புதல், சூடேற்றுதல், அவித்தல்.]*

**உவி²-த்தல்** *uvi-,* 18. செ குன்றாவி. (v.t.) ***அவித்தல்;*** to boil. ''சாந்த விறகி னுவித்த புன்கம்'' (புறநா. 168.11). (செ.அக.).

*[உல் → உள் → உவ் → உவி = வேகச் செய்தல்.]*

**உவியல்** *uviyal,* பெ. (n.) ***சமைத்த கறி;*** boiled dish ''நெடுவாளைப் பல்லுவியல்'' (புறநா. 395). (செ. அக.).

*[உல் → உள் → உவ் → உவி (வேகச் செய்தல்) → உவியல்.]*

**உவை** *uvai,* சு.பெ. (demons. pron.) ***உங்குள்ளவை*** (திவ். திருவாய் 1,1,4); they or those things that are near you, or yonder, at a distance not far off. (செ.அக.).

*[உவ் → உவ → உவை. (மு.தா 32)]*

**உழ¹-த்தல்** *ula-,* 3 செ.கு.வி. (v.i.) 1. ***வருந்துதல்;*** to suffer; to experience sorrow, pain, trouble or fatigue. ''அருந்துத லின்றி யடைகட லுழந்தோன்'' (மணிமே. 16, 74). 2. ***பழகுதல்*** (சீவக. 597); to be accomplished, as in an art. 3. ***முயற்சி செய்தல்;*** to try, make an effort. ''செயற்றலை நின் றுழப்பவர்கள்'' (தணிகைப்பு. நாட்டு. 130). (சா.அக.).

*[உலை → உழை → உழை-த்தல் → உழ-த்தல்]*

**உழ²-த்தல்** *ula-,* 3. செ.குன்றாவி. (v.t.) ***வெல்லுதல்;*** to conquer. ''பாடகச் சீறடி பரற்பகை யுழவா'' (சிலப். 10,52)

*[உலை → உழை → உழ.]*

**உழக்கால்** *ulakkāl,* பெ. (n.) ***உழவுக்கோல்;*** ox-goad.

*[உழவுகோல் → உழவுக்கோல் → உழக்கால். (கொ வ)]*

**உழக்காழாக்கு** *ulak-k-ālākku,* பெ. (n.) ***காலேயரைக்காற் படி;*** 3/8 of a measure. (சா.அக.).

*[உழக்கு + ஆழாக்கு.]*

**உழக்கு¹-தல்** *ulakku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***கலக்குதல்;*** to disturb, stir up. ''பேரகழியி னுழக்கிய கரிகள்'' (நைடத. நகர. 2). 2. ***மிதித்தல்;*** to trample down, tread upon. ''அவரைக் கழலவுழக்கி'' (கலித். 106,18). 3. ***கொன்றுதிரிதல்;*** to ravage, devastate. ''சினஞ் சிறந்து களனுழக்கவும்'' (மதுரைக். 48). 4. ***உழுதல்*** (பிங்.); to plough. (செ.அக.).

*[உழ → உழக்கு.]*

**உழக்கு²-தல்** *ulakku-,* 7. செ.கு.வி. (v.i.) 1. ***விளையாடு தல்;*** to play. ''உரவுத்திரை யுழக்கியும்'' (பட்டினப். 101). 2. ***பழகுதல்*** (நாநார்த்த.); to be used or accustomed to.

*[உழ → உழக்கு.]*

**உழக்கு³** *ulakku,* பெ. (n.) 1. ***காற்படி;*** measure of capacity, 2 *ollocks* = 1/4 of a measure. ''உழக்கேயுண்டு படைத்தீட்டி'' (தேவா. 1154,4). 2. ***கவறிட் டுருட்டும் உழக்கு;*** dice box. ''பவள வுழக்கிற் கோதை புரள'' (சீவக. 927). (செ.அக.).

ம. உழக்கு.

*[உழ → உழக்கு உழக்குதல் = ஆழ்த்தி மூகந்தெடுத்தல்.]*

**உழக்குருட்டு-தல்** *ulakkuruttu-,* 15. செ.கு.வி. (v.i.) ***கவறாடுதல்*** (சூதாடுதல்); to indulge in gambling at dice. (Loc.). (செ.அக.).

*[உழக்கு + உருட்டு-தல்.]*

**உழக்கோல்** *ula-k-kōl,* பெ. (n.) ***தாற்றுக்கோல்;*** goad used to drive oxen when ploughing, oxgoad. இல்லை யாகில் உழக்கோலாலே தகர்க்கிறோம். (ஈடு 6,4,5). (செ.அக.).

*[உழவு + கோல் - உழக்கோல்.]*

**உழச்சாரம்** *ulaccāram,* பெ. (n.) ***சவுட்டுப்பு;*** impure carbonate of soda. (சா.அக.).

*[உழல் + காரம் - உழக்காரம் → உழச்சாரம்.]*

**உழச்சியர்** *ulacciyar,* பெ. (n.) ***மருதநிலப் பெண்கள்;*** women of agricultural tract.

*[உழத்தி → உழச்சி + அர்.]*

**உழத்தி** *ulatti,* பெ (n.) ***உழவர்குடிப் பெண்*** (தொல். பொருள். 20, உரை); woman of the ulavan, i.e ploughman caste. (செ.அக.).

*[உழு → உழவன → உழத்தி]*

**உழத்திப்பாட்டு** *ulatti-p-pāttu,* பெ. (n.) ***உழவுச் செய்தி களைக் கூறும் ஒரு சிற்றிலக்கியம்*** (பன்னிருபா. 333); species of agricultural poem. (செ.அக.).

*[உழத்தி + பாட்டு]*

**உழப்பம்¹** *ulappam,* பெ. (n.) ***வேலை;*** work. (S.I.I.vii. 47). (செ.அக.).

*[உழு → உழப்பம் = உழவு வேலை.]*

**உழப்பம்²** *ulappam,* பெ. (n.) ***குழப்பம்;*** confusion. (Loc.). (செ.அக.).

*[உலப்பு → உலப்பம் → உழப்பம்.]*

**உழப்பறையர்** *ulapparaiyar,* பெ (n.) ***உழுது வாழும் பறையர்;*** a sub-division of Paraiyas who earn their livelihood by serving as ploughmen ''உழப்பறைய ரிருக்கும் கீழைச் சேரியும்'' (S.I.I.ii.). (செ.அக.)

*[உழு + பறையர் = உழுபறையர் → உழப்பறையர்.]*

**உழப்பன்** *ulappan,* பெ. (n.) ***போலியாக அறம் பேசு வோன்;*** quibbler (J.). (செ.அக.).

*[உலப்பு → உலப்பன் → உழப்பன்.]*

**உழப்பு¹-தல்** *ulappu-,* 6. செ.குன்றாவி. (v.t.) 1. ***சொற்களால் மழுப்புதல்;*** to confuse, disconcert, embroil, mix altogether, nonplus. ''உழப்பிப்போட்டாய் குறியைக் குழப்பிப் போட்டாய்'' (குற்றா. குற 73,2). 2. ***போலியாக எதிராடல்;*** to sophisticate. 3. ***காலங்கடத் துதல்;*** to delay, protract. ''பரிசி லுழப்புங் குரிசிலை''

(பன்னிருபா. 353). 4 ***பழக்குதல்*** (யாழ். அக.); to practise (செ.அக.).

*[உலப்பு → உழப்பு.]*

**உழப்பு²** *ulappu*, பெ (n.) 1. ***வருத்தம்;*** suffering. "சென்ற தேஎத் துழப்புநனி விளக்கி" (தொல் பொருள் 146). 2 ***மனக் கலக்கம்;*** mental disquiet. "உள்ளமறி வாயுழப் பறிவாய்" (தாயு பராபரக் 33). 3 ***முயற்சி*** (திவா ), effort, close application, exertion. 4. ***பழக்கம்;*** practice, habit. "உறுபடை யுழப்பினை யுணர்வுறாததோர் சிறு வரை" (கந்தபு சிங்க. 210) 5 ***வலிமை*** (சூடா ), strength. 6. ***கைத்தொழில்;*** handicraft. (செ அக.).

ம. உழப்பு

*[உலப்பு → உழப்பு ]*

**உழப்பெருது** *ulapperudu*, பெ. (n) ***உழுமெருது;*** team oxen "உழப்பெருது பொன்றப் புடைத்துழுது" (சீவக 2783).

*[உழு → உழப்பு + எருது.]*

**உழபுலவஞ்சி** *ulapulavañji*, பெ. (n.) ***பகைவர் நாட்டைச் சுட்டெரித்தலைக் கூறும் புறத்துறை*** (பு.வெ. 3,14); theme of describing the setting fire to an enemy's country.

*[உல் → உல (= எரிதல், எரித்தல) உழ + புலம் + வஞ்சி=உழபுல வஞ்சி ]*

**உழம்பல்** *ulambal*, பெ. (n.) ***குமுறல்;*** uttering indistinct sounds. (சா.அக.).

*[உலம்பு → உழம்பு → உழம்பல் ]*

**உழம்பு-தல்** *ulambu-*, 6. செ கு.வி. (v.t.) 1 ***பலவோசை கலந்தொலித்தல்*** (திவா ), to make a confused hullabloo of many noises. 2 ***குழம்புதல்;*** to be disturbed, disconcerted, thrown into disorder. (W.) (செ அக.)

*[உலப்பு → உழப்பு → உழம்பு.]*

**உழமண்** *ula-man-*, பெ. (n.) ***உழைமண்*** பார்க்க; see *ulaiman*. (செ அக ).

*[உழைமண் → உழமண் ]*

**உழமண்காரம்** *ula-mankāram*, பெ. (n.) ***உவர் மண்காரம்;*** a solution prepared from fuller's earth - mortant. (சா அக.).

*[உழைமண் → உழமண் + காரம்.]*

**உழமண்ணுப்பு** *ula-mannuppu*, பெ. (n.) ***உவர் மண்ணி லிருந் தெடுக்கு முப்பு;*** an impure carbonate of soda. (சா.அக ).

*[உழை → உழ + மண் + உப்பு.]*

**உழல்(லு)-தல்** *ulal(lu)-*, 13. செ.கு.வி. (v.i.) 1. ***அசைதல்;*** to oscillate, swing, to be in motion. "சிறுகாற்றுழலும்" (கல்லா கண.) 2 ***சுழலுதல்*** (பிங்.); to whirl, revolve. 3. ***அலைதல்;*** to wander, roam about. "ஆட்பார்த் துழலு மருளில் கூற்றுண்மை யால்" (நாலடி, 20) 4. ***நிலை கெடுதல்;*** to lose condition or status, become poor (Loc) அந்தக் குடி உழன்று போயிற்று 5 ***துன்புறுதல்;*** to suffer]

*[உல → உள → உழ → உழ → உழல → உழல்(லு)-தல் ]*

**உழல்மான்** *ulalmān*, பெ (n) ***ஒருவகை மான்;*** a kind of deer. (சேரநா.)

ம. உழலமான, உழமான்

*[உழை → உழல் + மான் ]*

**உழலல்** *ulalal*, பெ (n.) 1 ***மனஞ்சுழலல்;*** restlessness of mind 2 ***வருத்தம்;*** being in a state of suffering and distress, as the soul is in connection with birth. 3 ***பிறந்திளைத்தல்;*** the sufferings undergone in the evolution in the births.

*[உலல → உழல் → உழலல் ]*

**உழலாத்தி** *ulātti*, பெ. (n) ***ஊழலாத்தி*** பார்க்க; see *ūlalātti* (சா அக )

*[ஊழல் → உழல் + ஆத்தி ]*

**உழலை¹** *ulalai*, பெ (n.) 1. ***செக்கு முதலியவற்றின் உழலைமரம்;*** cylindrical beam of wood, in an oil or sugarcane press, by the revolution of which the oil or juice is expressed (W ). 2 ***குறுக்குமரம்;*** horizontal bar of wood in a doorway or across a road "உழலை மரத்தைப் போற்றொட்டன" (கலித் 106) 3. ***கணைய மரம்;*** cross bar. "வேழம்.. உழலையும் பாய்ந்திறுத்து" (பு.வெ. 12, வென்றிப். 8). 4. ***உழலைமரம்*** பார்க்க; see *ulalaimaram* 5. ***மிகுந்த நீர்வேட்கை*** (தைலவ. தைல. 58); great thirst (செ.அக.)

*[உழல் → உழலை ]*

**உழலை²** *ulalai*, பெ (n) ***வெப்புறுத்தம்;*** burning sensation, heat "உழலை சேர் காட்டு வேனிற்கு" (விருத் தாசலபு. சிவபூசாவிதி 6).

*[உழல் → உழலை ]*

**உழலைக்கழிச்சல்** *ulalai-k-kaliccal*, பெ. (n.) ***வயிற் றுளைச்சல் வகை;*** a kind of dysentery, accompanied by thirst. பித்தசுரம் மற்றும் உழலைக் கழிச்சல் விடும் (தஞ்.சரசு. 111,81). (செ.அக.).

*[உழல் → உழலை + கழிச்சல்.]*

**உழலைத்தடி** *ulalai-t-tadi*, பெ. (n.) ***உழலை*** பார்க்க; see *ulalai*. உழலைத் தடி கோத்தாற் போலே யிருக்கிற எலும்புகள் (ஈடு.). (செ.அக.).

*[உழல் → உழலை + தடி ]*

**உழலைப்படு-தல்** *ulalai-p-padu-*, 20. செ.குன்றாவி. (vt.) 1. ***பகலவன் வெப்பக் கொடுமையினால் தாக்கப் படுதல்;*** to be affected by sun-stroke, to be scorched with great heat. 2. ***நீர் வேட்கையால் வருந்துதல்;*** to be tormented with thirst.

*[உழல் → உழலை + படு.]*

**உழலைப்பிணி** *u̱lalai-p-pini,* பெ (n.) ***நா வறட்சி, கடுநீர்வேட்கை முதலிய குணங்களோடு கூடிய நோய்;*** any disease attended with parched tongue and intense thirst. (சா.அக.).

*[உழல் → உழலை + பிணி ]*

**உழலைமரம்** *u̱lalai-maram,* பெ. (n.) ***மாட்டின் கழுத்துக் கட்டை;*** block of wood suspended from the neck of a cow to prevent it from straying.

*[உழலை + மரம்.]*

**உழலைமாடு** *u̱lalai-mādu,* பெ. (n.) ***ஓடிப்போகாதபடி கழுத்தில் உழலை மரங்கட்டியுள்ள மாடு;*** cow from whose neck a block of wood is suspended so as to impede its running and thus prevent its straying away. (செ.அக.).

*[உழல் → உழலை + மாடு.]*

**உழவட்டம்** *u̱lavattam,* பெ. (n.) ***பெருக்கற் கணக்கு வகை;*** a process in multiplication (t.c.m. 2, ii, 473) (செ.அக.).

*[உழலை + வட்டம் = உழலைவட்டம் → உழவட்டம் ]*

**உழவடை[1]-த்தல்** *u̱lavadai-,* 2 செ.கு.வி (v.i.) ***உழுவதற்காக நிலத்தை ஒப்படைத்தல்;*** to make over to another a piece of land for purposes of cultivation (W.) (செ.அக ).

*[உழவு + அடை ]*

**உழவடை[2]** *u̱lavadai,* பெ. (n.) ***நிலத்தின் உரிமை;*** right of cultivating land. (செ.அக.).

*[உழவு + அடை.]*

**உழவணிகம்** *u̱la-vanigam,* பெ. (n.) ***பொன்னாங்காணி;*** edible plant bearing yellow flowers - Illecerbrum senssile. (சா.அக.).

**உழவன்** *u̱lavan,* பெ. (n.) 1. ***உழுபவன்;*** ploughman, agriculturist. ''பயந்த விளைநிலமுள்ளு முழவன்'' (நாலடி, 356). 2. ***மருதநிலக் களமன்*** (தொல். பொருள். 20, உரை); member of the ploughing class in an agricultural tract. 3. ***ஏர்மாடு;*** ploughing ox. (செ.அக.).

ம. உழவன்.

*[உழவு + அன்.]*

**உழவன்பாம்பு** *u̱lavan-pāmbu,* பெ. (n.) ***ஒரு வகைப் பாம்பு;*** a kind of snake.



உழவன் பாம்பு

**உழவாரக்குருவி** *u̱lavāra-k-kuruvi,* பெ. (n.) ***ஒருவகைக் குருவி;*** a kind of bird.



உழவாரக்குருவி

**உழவாரப்படை** *u̱lavāra-p-padai,* பெ (n.) ***உழவாரம்*** பார்க்க; see *u̱lavāram.* ''உழவாரப் படை கையிலுடையான்'' (பதினொ. திருநாவுக். 2) (செ.அக.).

*[உழு → உழவு + ஆர் + அ + படை. படை = கருவி. ஆர் + அ = ஆர = பொருந்த, சார்ந்த ]*

**உழவாரம்** *u̱lavāram,* பெ. (n.) ***புற்செதுக்குங் கருவி;*** small hoe for weeding or cutting grass, weeding - spade. ''கையிற்றிகழு முழவாரமுடன்'' (பெரியபு. திருநாவு. 77) (செ.அக.).

ம. உழவாரம்

*[உழு → உழவு + ஆரம். உழவுத்தொழிலுக்குத் துணைபுரியும், களையெடுக்கும் கருவி.]*



உழவாரம்

**உழவிடை** *ulavidai,* பெ. (n.) ***உழவுநீக்கம்;*** cessation from ploughing. (W.) (சா.அக.).

*[உழவு + இடை. இடை = இடைவெளி, ஓய்வு, ஒழிவு.]*

**உழவீரம்** *ulavīram,* பெ. (n.) ***உழுதற்குத் தக்க ஈரம்;*** condition of the ground when it has as much moisture as is needed for ploughing. (செ.அக.).

*[உழவு + ஈரம்.]*

**உழவு**[1] *ulavu,* பெ. (n.) 1. ***உழுகை;*** ploughing. "உழந்து முழவே தலை" (குறள் 1031). 2 ***வேளாண்மை;*** agriculture, husbandry. "உழவின் மிக்க ஊதியமில்லை" (பழ.).

ம. உழவு; **க.** உழ், உழமெ, உழல். **கோத.** உக், **துட.** உழ்வ்; **குட.** ஊள், **து.** உர, ஊடுனி, **தெ.** துக்கி.

*[உழு → உழ → உழவு ]*

பழநார்வீசி *(Old Norse),* ஆங்கிலோ சாக்சன் *என்ற மொழிக ளில், முறையே,* erfidhi, earfodh என்ற சொற்கள் முதலாவது உழவைக் குறித்துப் பின்பு உழைப்பைக் குறித்தன வென்றும், இலத்தீனில் ars, artis என்ற சொற்கள் முதலாவது உழவைக் குறித்துப் பின்பு கலைப்பொதுப் பெயராயிற்றென்றும் அச் சொற்கட்கு மூலம் art (to plough) என்றும் முதலாவது கற்பிக்கப்பட்ட கலை உழவேயென்றும் மாக்சு முல்லர் கூறியி ருத்தல் காண்க. (ஒ மொ 168, 170)

**உழவு**[2] *ulavu,* பெ. (n.) ***உடலுழைப்பு;*** bodily exertion. "மெய்யதுழவி னெதிர்புனன் மாறாடி" (பரிபா. 10, 103). (செ.அக.).

*[உழு → உழவு ]*

**உழவுகட்டி** *ulavu-katti,* பெ. (n.) ***உழவிற்பெயரும் மண்கட்டி;*** clods in a ploughed field. (செ.அக.).

*[உழவு + கட்டி.]*

**உழவுகட்டு-தல்** *ulavu-kattu-,* பெ. (n.) 5. செ.கு.வி. (v.i.) ***முதற்சால் போதல்;*** to take the lead in ploughing so as to mark the course, as done by the head team. (J.). (செ அக.).

*[உழவு + கட்டு.]*

**உழவுகாடு** *ulavu-kādu,* பெ. (n.) ***உழவுக்கேற்ற நிலம்*** (G.Sm.D.I, ii, 43.); lands that can be ploughed and brought under cultivation opp, to கொத்துக்காடு. (செ.அக.).

*[உழவு + காடு ]*

**உழவுகாணியாட்சி** *ulavu-kāni-y-ātci,* பெ. (n.) ***நிலத்தை உழுது பயிர்செய்யும் உரிமை*** (I.M.P.NA.154.); sole right to plough and cultivate a land. (செ.அக.).

ம. உழவொற்றி

*[உழவு + காணியாட்சி.]*

**உழவுகுடி** *ulavu-kudi,* பெ. (n.) ***உழுகுடி*** பார்க்க; see *ulukudi.* 'உழவுகுடி கைவினைக்கும் காசாயக் குடியிற் கொள்ளும் ' (S.I.I.v. 95.). (செ.அக.).

*[உழவு + குடி.]*

**உழவுகுண்டை** *ulavu-kundai,* பெ. (n.) ***உழவுமாடு;*** ox trained to the plough. (செ.அக.).

*[உழவு + குண்டை ]*

**உழவுகோல்** *ulavu-kōl,* பெ. (n.) 1. ***தாற்றுக்கோல்*** (சங். அக.); ox - goad. 2 ***குதிரை தூண்டுங் கருவி;*** horse-whip, a goad used (for driving oxen) when ploughing. கையும் உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் (ஈடு, 7,4,5). (செ.அக.).

*[உழவு + கோல்.]*

**உழவுசால்** *ulavu-šāl,* பெ. (n.) ***படைச்சால்;*** furrow. "உழவு சாலணி வீதி தோறூர்ந்து" (இரகு. நாட்டுப். 13).(செ.அக.).

ம. உழவுசால்

*[உழவு + சால்.]*

**உழவுபாட்டம்** *ulavu-pāttam,* பெ. (n.) ***ஒருவகை நில வுடைமை;*** name of a land-tenure. (சேரநா.).

ம. உழவுபாட்டம்.

*[உழவு + பாட்டம் ]*

**உழவுமழை** *ulavu-malai,* பெ. (n.) ***உழுதற்கு வேண்டிய பருவமழை;*** rain in sufficient quantity, to moisten the ground, and at the proper season, for ploughing and sowing. (செ.அக.).

*[உழவு + மழை.]*

**உழவெருது** *ulaverudu,* பெ. (n.) ***உழுங்காளை;*** ploughing ox.

*[உழவு + எருது.]*

**உழவை** *ulavai,* பெ. (n.) ***ஒருவகை மீன்;*** a green sea-fish, a brown fresh water fish.

ம. உழவ.

*[உளுவை → உழுவை → உழவை. **உளுவை** பார்க்க; see uluvai.]*

**உழவோன்** *uḻavōṉ*, பெ. (n.) ***உழவன்;*** ploughman. (செ.அக.).

*[உழவு → உழவோன்.]*

**உழற்சி** *uḻaṟci*, பெ. (n.) 1. ***சுழற்சி;*** whirling, revolving. 2. ***அலைகை;*** roaming, wandering. 3. ***வருத்தம்;*** suffering, distress. (செ.அக.).

*[உழல் → உழற்சி ]*

**உழற்றல்** *uḻaṟṟal*, பெ. (n.) ***நீர்வேட்கை;*** thirst. எனக்கு உழற்றலாயிருக்கிறது. (வின்.).

*[உழல் → உழற்றல்.]*

**உழற்றி**[1] *uḻaṟṟi*, பெ. (n.) 1. ***சுழற்சி;*** rolling, twisting, writhing with pain. 2. ***கடுநீர்வேட்கை;*** great thirst. (செ.அக.).

*[உழல் → உழற்று → உழற்றி.]*

**உழற்றி**[2] *uḻaṟṟi*, பெ. (n) ***வருத்தம்;*** affliction. "பிள் ளையை இழந்தாளாக நினைத்துப் பயப்பட்ட உழற்றி யாலே" (திவ். பெரியாழ். 1,2,4 வ்யா, பக். 27). (செ.அக.).

*[உழல் → உழறு → உழற்று → உழற்றி.]*

**உழற்று**[1]**-தல்** *uḻaṟṟu-*, 6. செ.குன்றாவி. (v.t.) 1. ***அலையச் செய்தல்;*** to drive to and fro, cause to wander. என்னை யவமே யுழற்றி (திருக்கோ. 100, உரை, அவ.). 2. ***சுழற்றுதல்;*** to twist, whirl about. 3. ***வருத்தத்தோடு கழித்தல்;*** to pass tediously, as time. (J.). (செ.அக.).

ம. உழற்றுக.

*[உழறு → உழற்று.]*

**உழற்று**[2]**-தல்** *uḻaṟṟu-*, 6 செ.கு.வி. (v.i.) ***கைகால் நோவாற் புரளுதல்;*** to writhe, move the arms and legs about on account of pain.

*[உழறு → உழற்று.]*

**உழற்று**[3] *uḻaṟṟu*, பெ. (n.) ***சுழற்சி;*** whirling, revolving. "மாயை யுழற்றினிற்படு வம்பனேனை" (திருப்பு. 1052). (செ.அக.).

ம. உழற்று.

*[உழறு → உழற்று.]*

**உழறு**[1]**-தல்** *uḻaṟu-*, 6. செ.கு.வி. (v.i.) ***கலங்குதல்;*** to be disturbed. "என்னைக் கண்டுழறா நெகிழ்ந்தாய்" (திவ். பெருமாள். 6,8). (செ.அக.).

ம. உழறுக.

*[உழல் → உழறு-தல்.]*

**உழறு**[2]**-தல்** *uḻaṟu-*, 5. செ கு.வி. (v.i.) 1. ***அலைதல்;*** to move about. "உழறலர் ஞானச்சுடர் விளக்காய்" (திவ். இயற். திருவிருத். 58). 2. ***அளைதல்;*** to mix with, play about. "திருத்துழாயிலே புக்குழறி" (திவ் இயற். திருவிருத். 74, பெரியவாச்.). 3. ***உருக்காட்டுதல்;*** to show oneself. "உழறு மேலுலகிறும்" (தக்கயாகப். 32). (செ.அக.).

*[உழல் → உழறு → உழறு-தல்.]*

**உழன்றறு-த்தல்** *uḻaṉṟaṟu-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***கடிய வேலை செய்தல்;*** to labour hard, strive with might and main. 2. ***பழகித்தேர்தல்;*** to become skilful or dexterous by practice. (செ.அக.).

*[உழன்று + அறு.]*

**உழன்றி** *uḻaṉṟi*, பெ. (n.) ***மாட்டின் கழுத்தில் மாட்டுங் கட்டை*** (சங். அக.); stick fastened under a cow's neck with a hole for the tether to play in, neck piece to prevent an ox from turning its head. (செ.அக.).

*[உழல் → உழன்றி.]*

**உழன்றுவரு-தல்** *uḻaṉṟuvaru-*, 18. செ.கு.வி. (v.i.) ***களைப்புறல்;*** to grow tired or fatigued. (சா.அக.).

*[உழல் → உழன்று + வரு ]*

**உழாஅன்** *uḻāaṉ*, பெ. (n.) ***உழவன்*** (தொல். சொல். 137, உரை); cultivator. (செ.அக.).

*[உழவு → உழா + அன்.]*

*[உழு + அன் - உழுவன் → உழவன் என இடையில் வகர உடம்படு மெய் பெற்றுப் புணர்வது போல, உடம்படுமெய் பெறாமல் உயிரளபெடை போல் உழா + அன் உழாஅன் எனப் புணர்வதும் உண்டு. ஒ. நோ. கிழவன் → கிழாஅன்.]*

**உழால்** *uḻāl*, பெ. (n.) 1. ***உழுகை;*** ploughing. 2. ***கிண்டுதல்;*** scratching, probing, as bees the flowers. "உழாலிற் பொலிவண்டு" (தணிகைப்பு. வள்ளி. 59). (செ அக.).

*[உழ → உழல் → உழால்.]*

**உழி**[1]**-தல்** *uḻi-*, 2. செ.கு.வி. (v.i.) 1. ***அலைதல்;*** wander about. "உழிதலை யொழிந்துள ருமையுந் தாமுமே" (தேவா. 553,10). 2. ***வளைதல்;*** to bend. (செ.அக.).

*[உல் → உள் → உளி → உழி → உழி-தல்.]*

**உழி**[2] *uḻi*, பெ. (n.) 1. ***இடம்;*** place, site. "செல்வுழிச் செல்கயான்" (நன். 163, விருத்.). 2. ***பக்கம்*** (திவா.); side. 3. ***அகலம்; பரப்பு;*** width, area. (செ.அக.).

*[உள் → உளி → உழி ]*

**உழி**[3] *uḻi*, ***இடை.*** (part.) ***ஓர் ஏழனுருபு*** (நன். 302.); a loc. ending.

*[உள் → உளி → உழி.]*

**உழி**[4] *uḻi* கு.வி.எ. (adv.) ***அளவில்;*** when, while. "மகிழ்ந்துழி" (சிலப். 1,42).

*[உள்[1] → உளி → உழி. இடப்பொருள் குறித்த பெயர்ச்சொல் இடைச்சொல்லாயிற்று.]*

**உழிஞ்சில்** *ulĩñjil,* பெ. (n.) 1. ***வாகை;*** sirissa. "பொரி யரை யுழிஞ்சிலும்" (சிலப். 11,76). 2. ***உன்னம்*** (திவா.); short tree with golden flowers and small leaves, the withering of which was considered a bad omen as it was believed to foreshadow trouble. (செ.அக.).

*[உழி → உழிஞ்சில்.]*

**உழிஞ்சில்வாகை** *ulĩñjil-vāgai,* பெ. (n.) ***உழிஞ்சில்*** பார்க்க; see *ulĩñjil.* (சா.அக.).

**உழிஞை** *uliñai,* பெ. (n.) 1. ***கொற்றான்*** (புறநா. 50, உரை); balloon vine, s.cl., Cardiospermum halicacabum. 2. ***சிறுபூளை*** (திவா.); a common wayside weed, Aerua lanata. 3 ***பகையரண் வளைப்போர் சூடும் மாலை;*** chaplet, balloon vine garland worn by soldiers when storming a fort "உழிஞை முடிபுனைந்து" (பு வெ. 6.1) 4. ***உழிஞைத் திணை*** பார்க்க (தொல். பொருள். 64); see *uliñai-t-tiņai.* (செ.அக ).

ம. உழிஞ்ஞ

*[உழி → உழிஞை.]*

**உழிஞைத்திணை** *uliñai-t-tinai,* பெ. (n.) ***பகையரண் வளைத்தலையுணர்த்துந் திணை*** (தொல். பொருள். 65), theme describing the laying siege to a fort.

*[உழி → உழிஞை + திணை.]*

**உழிஞைமாலை** *uliñai-mālai,* பெ. (n.) ***ஒரு சிற்றிலக்கி யம்*** (தொன். 283, உரை); poem which describes the storming of a fort. (செ.அக.).

*[உழிஞை + மாலை.]*

**உழிஞையிலக்கணம்** *uliñai-y-ilakkaṇam,* பெ. (n.) ***வேற்று வேந்தனுடைய அரணை வென்ற வேந்தன் வளைத்தல்;*** literary theme of besieging a fort.

*[உழிஞை + இலக்கணம்.]*

**உழிதா(தரு)-தல்** *ulitā(taru)-,* 18. செ.கு.வி. (v.t.) 1. ***அலைதல்;*** to wander about, move to and fro. "உன்மத்த மேற்கொண்டுழிதருமே" (திருவாச. 5,7). 2. ***அங்கு மிங்கு மலைதல்;*** to wander from place to place. "மண்மேல். . உழிதரக் கண்டோம்" (திவ். திருவாய் 5,2,1.). (செ.அக.).

*[உழிதரு → உழிதா.]*

**உழு[1]-தல்** *ulu-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. ***நிலத்தைக் கிளைத்தல்;*** to dig up, root up, as pigs. "உழுது மாநிலத் தேனமாகி" (தேவா. 929.9.). 2. ***நிலத்தை ஏரால் துன்னுதல்;*** to plough "உழவருழுபடைக்கு" (நாலடி, 178). 3. ***கிண்டுதல்;*** to scratch, incise, as bees in a flower. "அறுகா லுழுமலர்" (இரகு தசரத. 95). 4. ***மயிரைக் கோதுதல்;*** to arrange or adjust, as the hair with the fingers. "உகிரி னுழுதாங் கணிந்தாரே" (சீவக. 2692).

ம. உழுக; க. உழு; கோத. உக்; துட. உழ்வ்; குட. ஊழு. ஊலு, ஊள், து. ஊடுனி; தெ. துன்னு, துனு; நா. உர்; கொலா. உர், குவி. ருயிலி, லூனை, கூ. முவ, ருவ, கோண். உரான, உழன, பர். உழ், உர்; குரு. உயினா, உய்னா; மால். உசெ.

*[உல் → உளு → உழு.]*

**உழு[2]-தல்** *ulu-,* 1 செ.குன்றாவி. (v.t.) ***உகளுதல்*** (அக.நி.); to leap.

*[உல் → உளு → உழு.]*

**உழு[3]-த்தல்** *ulu-,* 2. செ கு.வி. (v.i.) ***பதனழிதல்;*** to decay, rot, putrefy. "உழுக்குமுன் விதத்தை யுண்டு" (சிவதரு. சிவதருமம. 7). (செ.அக.).

*[உள் → உளு → உளு-த்தல் → உழு-த்தல்.]*

**உழு[4]** *ulu,* பெ. (n.) 1. ***மென்மை;*** softness. 2. ***வழவழப்பு;*** slippery soft surface

*[இல் → உல் → உள் → உளு → உழு.]*

**உழு[5]** *ulu,* பெ. (n.) ***பிள்ளைப்பூச்சி*** (வின்.); mud gryllus. (செ.அக.).

*[இல் → உல் → உளு → உழு.]*

**உழுகு** *ulugu,* பெ. (n.) ***ஒழுகு*** பார்க்க; see *olugu.* (செ.அக.).

*[ஒழுகு → உழுகு.]*

**உழுகுடி** *ulukuḍi,* பெ. (n.) ***உழுது பயிர் செய்வோன்.*** (S.I.I.V. 264.); ryot. (செ.அக.).

ம. உழுகுடி.

*[உழு + குடி ]*

**உழுகை** *ulugai,* பெ. (n.) ***உழுதல்;*** ploughing.

*[உழு → உழுகை.]*

**உழுத்தம்பொடி** *uluttampoḍi,* பெ. (n.) ***உழுத்தமா*** பார்க்க. (சீவக. 2736, உரை); see *uluttamā.* (செ.அக.).

*[உள் → உளு → உளுந்து → உழுந்து → உழுத்தம் + பொடி ]*

**உழுத்தமா** *uluttamā,* பெ. (n.) ***உழுந்தின்மா;*** blackgram flour used for cakes. (செ.அக.).

*[உழுந்து + மா - உழுந்துமா → உழுத்தமா.]*

**உழுத்து** *uluttu,* பெ. (n.) ***ஓர் அணிகலன்;*** ancient ornament "முத்தின் உழுத்து ஒன்றிற் கட்டின வயிரமூன் றும்" (S I I II, 430). (செ.அக.).

*[உழுந்து → உழுத்து நெருங்கக்கட்டிய மாலை.]*

**உழுதான்குடி** *uḷudāṉkuḍi,* பெ. (n.) ***பழைய வரிவகை;*** tax "இறைகுடிமை உழுதான் குடி உட்பட மற்றெப்பேர்ப் பட்டனவும்" (S.I.I.V. 141). (செ.அக.).

*[உழு → உழுதான் + குடி ]*

**உழுதுண்பான்காணி** *uḷudunbāṉkāṇi,* பெ. (n.) ***வரியில் லாது பயன்கொள்ளும் நிலம்,*** (P.T.L.); land held free of rent (செ அக.).

*[உழுது + உண்பான் + காணி.]*

**உழுதுண்போர்** *uḷudunbōr,* பெ. (n.) ***வேளாளரில் தாமே பயிரிட்டுண்ணும் ஒருவகையாளர்*** (தொல் பொருள் 30, உரை); a division of the Vēḷāḷās who themselves cultivate the land, dist. fr. உழுவித்துண்போர். (செ.அக.).

*[உழுது + உண்போர் ]*

**உழுதூண்** *uḷudūṇ,* பெ. (n) ***பயிர் செய்து வாழ்தல்;*** living by cultivating the land. "வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது" (தொல். பொருள். 635). (செ.அக.).

*[உழுது + ஊண் ]*

**உழுந்து** *uḷundu,* பெ. (n.) ***பயறுவகை;*** black-gram, Phaseolus mungo glaber. "நெய்யொடு மயக்கிய வுழுந் துநூற் றன்ன" (ஐங்குறு. 211). (செ அக.).

மறுவ. மாடம், உளுந்து.

ம. உழுன்னு க. உத்து; தெ. உத்துலு.

*[இல் → உல் → உள் → உளு → உழு → உழுந்து = மென்மை அல்லது வழவழப்பானது.]*

**உழுந்துசோறு** *uḷundu-šōṟu,* பெ. (n.) ***உழுந்துணா*** பார்க்க; see *uḷunduṇā.*

*ம. உழுந்து சோறு.*

*[உழுந்து + சோறு.]*

**உழுந்துணா** *uḷunduṇā,* பெ. (n.) ***உழுந்தம் பயற்றொடு கலந்தட்ட சோறு*** (பதார்த்த. 1408); preparation of food made of rice mixed with bruised black-gram and boiled together.

ம. உழுந்து சோறு.

*[உழுந்து + உணா. உணவு → உணா.]*

**உழுநர்** *uḷunar,* பெ. (n.) ***உழவர்;*** ploughmen. "கழனியுளு ழுநர் வெள்ளமே" (சீவக. 44). (செ.அக.).

*[உழு + நர்.]*

**உழுநிலம்** *uḷunilam,* பெ. (n.) ***உழுதற்குரிய நிலம்;*** cultivable land, arable land. (செ.அக.).

ம. உழுநிலம்.

*[உழு + நிலம்.]*

**உழுநூல்** *uḷunūl,* பெ. (n.) ***இழைநூல்; பட்டுநூல்;*** silk-thread. (செ.அக.).

**ம. உழுநூல்.**

***[உழு[4] + நூல்.]***

**உழுபடை** *uḷu-paḍai,* பெ. (n.) ***கலப்பை;*** plough. "உழுபடை யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே" (புறநா. 35.25).

*[உழு + படை ]*

**உழுபடைச்சால்** *uḷu-paḍai-c-cāl,* பெ. (n.) 1. ***கலப்பை;*** plough 2. ***உழவுச்சால்;*** furrow.

*[உழு + படை + சால் ]*

**உழுமகன்** *uḷu-magaṉ,* பெ. (n.) ***உழவன்;*** plough-man. "உழுமகற்குக் கேடினுரை" (சிறுபஞ். 50). (செ.அக.).

*[உழு + மகன் ]*

**உழுமுளை** *uḷu-muḷai,* பெ. (n.) ***உழுமுனை*** பார்க்க; see *uḷu-muṉai.*

*[உழு + முளை ]*

**உழுமுனை** *uḷu-muṉai,* பெ. (n.) ***கலப்பைக் கூர்;*** plough - share. (Loc.). (செ.அக.).

*[உழு + முனை.]*



உழுமுனை

**உழுவம்** *uḷuvam,* பெ. (n.) ***எறும்பு;*** ant. (W). (செ.அக.).

*[ஒழுகு → ஒழுகம் → உழுகம் → உழுவம்.]*

**உழுவல்[1]** *uḷuval,* பெ. (n.) 1. ***குணம்*** (திவா.); quality, temper, disposition characteristic of a person or thing. 2. ***அன்பு;*** love. "பழுத்த-வுழுவலமரர்" (விநாயகபு. 72,54).

க. உழ்கெ.

*[உல் → உழு → உழுவல்.]*

**உழுவல்[2]** *uḷuval,* பெ. (n.) 1. ***முறை*** (நாநார்த்த.); order, regularity. 2. ***எழுமை*** (அக.நி.); seven successive births. 3. ***புணர்ச்சி*** (அ.க.நி.); sexual union. (செ.அக.).

*[உழு + அல்.]*

**உழுவலன்பு** *uḷuval-aṉbu,* பெ. (n.) ***எழுமையும் தொடர்ந்த அன்பு*** (தொல்.பொருள். 125, உரை); love, esp. sexual love persevered in with constancy through seven successive births. (செ.அக.).

*[உழுவல் + அன்பு.]*

**உழுவளைப்பு** *ul̤u-valaippu,* பெ. (n.) ***உழவின்-சால் வளைவு;*** turnings in ploughing. (W.) (செ.அக.).

*[உழு + வளைப்பு ]*

**உழுவன்பு** *ul̤uvaṉbu,* பெ. (n.) ***உழுவலன்பு*** பார்க்க; see *ul̤ūval-aṉbu.*

*[உழுவல் + அன்பு - உழுவலன்பு → உழுவன்பு.]*

**உழுவாங்கோல்** *ul̤uvāṉ-gōl,* பெ. (n.) ***உழவெருதைத் தூண்டுங்கோல்;*** goad for driving cattle when ploughing. (Loc.) (செ.அக.).

*[உழு + ஆம் + கோல் ]*

**உழுவித்துண்போர்** *ul̤uvittuṇbōr,* பெ. (n.) ***வேளாளருள் பிறரைக் கொண்டு பயிர் செய்வித்துண்ணும் ஒரு வகையார்*** (தொல். பொருள். 30, உரை); a division of the Vēlālās who are owners of the land but who cause it to be cultivated by others, dist.fr. உழுதுண்போர். (செ.அக.).

*[உழு → உழுவித்து + உண்போர்.]*

**உழுவை**[1] *ul̤uvai,* பெ. (n.) 1. ***புலி;*** tiger. "உழுவை... இருந்த தொத்தான்" (சீவக. 2469). 2. ***ஒருவகை மீன்*** (சூடா.); green seafish, Gobius ornatus 3. ***நல்லதண் ணுழுவை;*** brown fresh - water fish. 4. ***குண்டல வுழுவை;*** a yellowish fish, found in fresh and back waters. 5. ***தும்பிலி;*** sea fish. (செ.அக.).

ம. உழுவ.

*[உல் → உலு = எரித்தல், அழித்தல், கொல்லுதல், விழுங்குதல். உலு → உழு → உழுவை.]*

**உழுவை**[2] *ul̤uvai,* பெ. (n.) ***பெருமை*** (அக.நி.) grandeur. (செ.அக.).

*[உல் → உழு → உழுவை. உல் = உயர்வு.]*

**உழை**[1]**-த்தல்** *ul̤ai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***முயற்சி செய்தல்;*** to labour hard, toil, drudge. "உழைத்தாலுறுதி யுண்டோதான்" (திருவாச. 33,1). 2. ***வருந்துதல்;*** to suffer hardship, to be afflicted. "வலையிற் பட்டுழைக் கின்றேற்கு" (திவ். திருமாலை, 36). (செ.அக.).

ம. உழ.

*[உல் → உலை → உழை → உழை-த்தல் ]*

**உழை**[2]**-த்தல்** *ul̤ai-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***ஈட்டுதல்;*** to earn. (J.). அவன் மாதம் பத்து உரூபா உழைக்கிறான்.

*[உல் → உலை → உழை → உழை-த்தல்.]*

**உழை**[3] *ul̤ai,* பெ. (n.) 1. ***பூவிதழ்;*** petal of a flower. "வாலுழை யெருக்கமும்" (கல்லா. 19). 2. ***மான்;*** deer. "உழையாடு கரதலமொன்று டையான்" (தேவா. 234,7). 3. ***ஆன்*** (நாநார்த்த.); cow.

ம. உழ.

*[உழு[4] → உழை.]*

**உழை**[4] *ul̤ai,* பெ. (n.) 1 ***இடம்;*** place. "உழைதங்கட் சென்றார்க்கு" (நாலடி.167) 2. ***நடுவண்*** (மத்திம) ***சுரம்*** (திவா.), fourth note of the gamut. 3. ***யாழினொரு நரம்பு*** (பிங்.); a string of the yāḻ.

*[உள் → உளி → உளை → உழை ]*

**உழை**[5] *ul̤ai,* இடை. (part.) ***ஓர் ஏழனுருபு*** (நன். 302); a loc. ending.

*[உள் → உளி → உளை → உழை.]*

**உழை**[6] *ul̤ai,* கு.வி.எ. (adv ) 1. ***பக்கத்தில்;*** by the side of. "நங் கேள்வ ருழைவந்தார்" (பு.வெ. 10,3).

*[உள் → உளி → உளை → உழை ]*

**உழை**[7] *ul̤ai,* பெ. (n.) 1. ***கதிரவன் மனைவியருள் ஒருத்தி;*** one of the wives of Sūrya. "உருக்கொள் சாயையு முழையும்" (பாரத. சம்பவ. 34). 2. ***வைகறை*** (சங். அக.); dawn. 3. ***வாணாசுரன் மகள்*** (சிலப், 6, 54, உரை); name of the daughter of Bāṇā. (செ.அக.).

*[உல் → உலை → (வெப்பம், வைகறை) → உழை.]*

**உழைக்கலம்** *ul̤aikkalam,* பெ. (n.) ***பொன் வெள்ளி முதலியவற்றாற் செய்த ஆளும் ஏனங்கள்;*** collective term for various vessels of gold and silver which royalty takes into camp. "உயர்ந்தவுழைக் கலத்து" (பெருங். உஞ்சைக். 38, 129). (செ.அக.).

*[உல் → உலை (சூடேற்றி உருக்குதல் ) → உழை + கலம்.]*

**உழைச்சுற்றாளன்** *ul̤ai-c-cuṟṟāḷaṉ,* பெ. (n.) ***பக்கத்தில் நின்று ஏவல் கேட்போன்;*** personal attendant. "உழைச்சுற்றாளரைப் புகுத்துமின்" (பெருங். உஞ்சைக். 33,14.). (செ.அக.).

*[உள் → உழு → உழை + சுற்றாளன்.*

**உழைச்செல்வான்** *ul̤ai-c-celvāṉ,* பெ. (n.) ***நோயாளிக் குப் பக்கத்திலிருந்து மருந்து முதலியன கொடுப்ப வன்*** (குறள், 950); one who has the care of a sick person as an attendant. (செ.அக.).

*[உழை + செல்வான்.]*

**உழைஞர்** *ul̤aiñar,* பெ. (n.) ***பக்கத்தில் நிற்கும் ஏவலாளர்;*** attendants.

*[உழை + நர் - உழைநர் → உழைஞர்.]*

**உழைத்துக்கொடு-த்தல்** *ul̤aittu-k-koḍu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***ஊதியம் பெற்றுக் கடன் முதலியன தீர்த்தல்;*** to earn and pay off, as one's debts. (J.). 2. ***பெற்றோர் முதலியவரைப் பேணுதல்;*** to support, as one's parents. (J.). 3. ***வீணாக உழைத்தல்.*** to labour in vain. (W.).

*[உழை → உழைத்து + கொடு ]*

**உழைப்பறி**[1]**-த்தல்** *ul̤ai-p-paṟi-,* 4. செ.கு.வி. (v.i.) ***வருந்தி முயலுதல்;*** to struggle, labour under difficulties (W.) (செ.அக.).

*[உழை + பறி ]*

**உழைப்பறி²-த்தல்** *ul̤ai-p-paṟi-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***சேற்றிலுழலுதல்;*** to wallow, flounder, roll in mire or in anything filthy. (W.) (செ.அக.).

*[உழை + பறி.]*

**உழைப்பாளி** *ul̤aippāḷi,* பெ. (n.) ***முயற்சி செய்வோன்-ள்;*** industrious person, one who takes great pains. (செ.அக.).

மறுவ. கருவாளி, பாட்டாளி

*[உழைப்பு + ஆளி.]*

**உழைப்பு** *ul̤aippu,* பெ. (n.) 1. ***உழைப்பு;*** toil, industry, diligence. 2. ***முயற்சி;*** effort, active endeavour, exertion. 3. ***ஊதியம் பெறுதல்;*** earnings, gain, acquisition. (J.) 4. ***சுறுசுறுப்பு;*** diligence. (செ.அக.).

*[உழை → உழைப்பு.]*

**உழைப்பேறு-தல்** *ul̤aippēṟu-,* 5. செ.கு.வி. (v.i.) ***செய்த் திருத்தமடைதல்;*** to improve in productivity, as the soil. (செ.அக.).

*[உழைப்பு + ஏறு.]*

**உழைமண்** *ul̤ai-maṇ,* பெ. (n.) ***உழமண்*** (மூ.அ.); fuller's earth. (செ.அக.).

*[உழை + மண்.]*

**உழையர்** *ul̤aiyar,* பெ. (n.) 1. ***பக்கத்தவர்*** (ஐங்குறு. 12, உரை.); neighbours. 2. ***அமைச்சர்*** (சூடா.); King's counsellors. 3. ***ஏவலாளர்;*** attendants. "உழையரோடி யரசுவா வருகவென்ன" (சூளா. கலியா. 100). (செ.அக.).

*[உழை → உழையர்.]*

**உழையவர்** *ul̤aiyavar,* பெ. (n.) ***உழையர்*** பார்க்க; see *ul̤aiyar.* "இளங்கோவென் றுழையவர் கூற" (சீவக. 2864). (செ.அக.).

*[உழை + அவர்.]*

**உழையன்** *ul̤aiyaṉ,* பெ. (n.) ***பித்த நோயாளி;*** any person suffering from the effects of biliousness or other similar disease due to the aggravated condition of bile in the system. (சா.அக.).

*[உழை + அன்.]*

**உழையாளன்** *ul̤ai-y-āḷaṉ,* பெ. (n.) ***வேலைக்காரன்;*** attendant. "உரைசெய்தா ரரசர்க் குழையாளரே" (யசோ தர. iii, 48). (செ.அக.).

*[உழை + ஆளன்.]*

**உழையிருந்தான்** *ul̤ai-y-irundāṉ,* பெ. (n.) ***அமைச்சன்;*** minister of state, companion of the king. "உறுதி யுழையிருந்தான் கூறல் கடன்" (குறள், 638). (செ.அக.).

*[உழை + இருந்தான்.]*

**உழையோர்** *ul̤aiyōr,* பெ. (n.) 1. ***உழையர்*** பார்க்க; see *ul̤aiyar.* "உலகமன்னவ னுழையோ ராங்குளர்" (மணிமே. 3,46). 2. ***அமைச்சர்களின் நட்பாளர்*** (பிங்.); friends of the counsellors. (செ.அக.).

*[உழை → உழையோர் ]*

**உழைவலி** *ul̤ai-vali,* பெ. (n.) ***பக்கவலி;*** pain on the sides. (சா.அக.).

*[உழை + வலி ]*

**உழைவு** *ul̤aivu,* பெ. (n.) ***யாழின் உள்ளோசை*** (திவா.); secondary sound of a string of yāḻ. (செ.அக.).

*[உழை → உழைவு.]*

**உள்¹**, *uḷ.* 1. ***இருத்தற் பொருள் குறிக்கும் குறிப்பு வினைப்பகுதி;*** base of a tenseless verb meaning. (1) 'to be', as in உள்ளேன். "I am". (2) ***உடைமைப் பொருள் குறிக்குங் குறிப்பு வினைப்பகுதி;*** to have. யான் பொருள் உள்ளேன் (செ.அக.). 2. ***வீடு;*** house.

**க.,** **ம.** உள் ம. கேளியே உள்ளு (கேள்விப்பாடாகத்தான் உள்ளது), கணடிட்டில்ல (கண்டதில்லை).

*[உ → உல் → உள். உல் = பொருந்துதல், இருத்தல். பொருத்தி யுள்ளது, உள்ளது. இச்சொல் சேரநாடாகிய மலையாள நாட்டில் மட்டும் வழக்கிலுள்ளது சோழ, பாண்டிய நாடுகளில் வழக்கில் இல்லை ]*

**உள்²** *uḷ,* பெ. (n.) 1. ***உள்ளிடம்;*** inside, interior of a place. 2. ***மந்தணமானது;*** that which is private, secret, esoteric. உட்பூசை புறப்பூசைகள் 3. ***மனம்;*** mind, heart. "தலைகொடு வந்தானுண் மலிய" (பு.வெ. 4,12, கொளு.). 4. ***மனவெழுச்சி;*** cheer, highspirits. "உப்பிலி வெந்தைதின் றுள்ளற்று வாழ்பவே" (நாலடி, 289). 5. ***இடம்*** (திவா.); place.

*[உ → உல் → உள்.]*

**உள்³** *uḷ,* இடை. (part). 1. ***ஏழனுருபு;*** a loc. ending. "செத்தாருள் வைக்கப்படும்" (குறள், 214). 2. ***தொழிற் பெயர் ஈறு*** (நன். 140, உரை); a vbl. noun ending, as in விக்குள்.

ம. உள்; **க.** உள், ஒள்; **கோத., துட.** உள்; **குட.** ஒளி; **து.** உள, ஒள; **தெ.** உல்லுமு, லோ(உள்), **கொலா.** லோபல்; **நா.** லோப்; **பர்.** ஒபெ; **கட.** உலெ; **பிரா., கோண்.** ரோன்; **குர்.** உலா, **மால்.** உலெ.

*[உ → உல் → உள்.]*

**உள்⁴** *uḷ,* பெ. (n.) ***உள்ளான்²*** பார்க்க; see *uḷḷāṉ* "உள்ளு மூரலும்" (சிலப். 10.117).

*[உல் → உள்.]*

**உள்⁵** *uḷ,* பெ. (n.) 1. ***மேன்மை;*** superiority. உள்மனமும் இடமும் மேலும் (ஈடு. 1,3,10). 2. ***மேல்;*** on, up.

*[உ → உல் → உள்.]*

**உள்கடுப்பு** *ul̥kaḍuppu,* பெ. (n.) 1. ***உள்வலி;*** internal pain. 2. ***உள்ளழற்சி;*** internal irritation or inflammation. (சா.அக.).

*[உள் + கடுப்பு.]*

**உள்கரு** *ul̥karu,* பெ. (n.) ***உட்கரு*** பார்க்க; see *uṭkaru.*

**உள்கு[1]-தல்** *ul̥gu-,* 6. செ.குன்றாவி. (v.t.) ***உள்ளு*** பார்க்க; see *ul̥l̥u.* ''நின்றனையுள்கி யுள்ள முருகும் பெருங்காதல் ''. (திருவாச. 5,56). (செ.அக.).

*[உள் + கு.]*

**உள்கு[2]-தல்** *ul̥gu-,* 2. செ.கு.வி. (v.i.) ***உள்ளழிதல்;*** to be disheartened, dispirited. ''சிந்தையுள்கி'' (இரகு. அய னுதய. 20). (செ.அக.).

*[உல் → உள் + கு. (வே.க. 79.)]*

**உள்குருந்து** *ul̥-kurundu,* பெ. (n.) ***குருத்து போல் மென்மையாக உள்ள மனம்;*** the soft mind (சேரநா.).

ம. உள்குருந்து.

*[உள் + குருந்து.]*

**உள்படு-தல்** *ul̥-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***மன மொப்பி நடத்தல்;*** to engage in or take to willingly. ''கருமமு முள்படா'' (நாலடி, 250). 2. ***அறிதல்;*** to know understand. ''ஒன்றிய சுடர்நிலை யுள்படுவோரும் '' (பரிபா. 19,47). (செ.அக.).

*[உள் + படு.]*

**உள்பற்று** *ul̥-paṟṟu,* பெ. (n.) 1. ***வரவு;*** income. 2. ***விளைச்சல்*** (உற்பத்தி.); harvest.

*[உள் + பற்று. → பற்று = வரவு.]*

**உள்பாடன்** *ul̥-pāḍaṉ,* பெ. (n.) ***கோயிற்பணிகளுள் ஒன்று;*** an office in the temple. (T.A.S. iii, 166.) (செ.அக.).

*[உள்படு → உள்பாடு + அன்.]*

**உள்பொருள்** *ul̥-porul̥,* பெ. (n.) ***உள்ள பொருள்;*** reality, that which is, opp. to இல்பொருள். ''உள் பொருளெனப் பட்ட பிரபஞ்சம்'' (சி.போ. 1, 2, சிற்.).

ம. உள்பொருள்.

*[உள் + பொருள், 'உள்' இருத்தல் பொருள்படும் வினைச் சொல்லாதலின் உட்பொருள் எனத் திரியாதாயிற்று. உள் பொருள்-வினைத் தொகை.]*

**உள்மருந்து** *ul̥-marundu,* பெ. (n.) ***உள்ளுக்குக் கொள் ளும் மருந்து;*** medicine taken internally, opp.to வெளிம ருந்து. (செ.அக.).

*[உள் + மருந்து.]*

**உள்மனை** *ul̥-maṉai,* பெ. (n.) ***ஊர்க்குடியிருப்பு மனை;*** house site within a village, opp. to புறமனை. (C.G.). (செ.அக.).

*[உள் + மனை.]*

**உள்மானம்** *ul̥-māṉam,* பெ. (n.) ***சிற்றெல்லை;*** inferior limit. ''இந்த அஸ்தைர்யத்திலும் உள்மானம் புறமான மொழிய நித்யராயிருப்பா ரொருவருமில்லை'' (திவ். திருச்சந். 66, வ்யா. பக். 191). (செ.அக.).

*[உள் + மானம்.]*

**உள்வட்டம்** *ul̥-vaṭṭam,* பெ. (n.) ***நாணயமாற்றிற் பெறும் ஊதியம்;*** agio, premium in exchange of coins or other money for difference in value. (W.) (செ.அக.).

*[உள் + வட்டம்.]*

**உள்வணக்கம்** *ul̥-vaṇakkam,* பெ. (n.) ***உள்மன வழி பாடு;*** worship in spirit. (செ.அக.).

*[உள் + வணக்கம்.]*

**உள்வந்தை** *ul̥-vandai,* பெ. (n.) ***உள்ளுறுப்புகளிலுண் டாகும் தூக்குணி;*** internal parasites.

*[உள் + வந்தை.]*

**உள்வயிரம்** *ul̥-vayiram,* பெ. (n.) 1. ***அகக்காழ்;*** firmness of wood in the centre of an exogenous tree, core of a tree. 2. ***செற்றம்;*** malice, internal hatred. (செ.அக.).

*[உள் + வயிரம்.]*

**உள்வயிரிப்பு** *ul̥-vayirippu,* பெ. (n.) 1. ***புண்ணின் உரத்த உட்பாகம்;*** internal hardness of a boil (W.) 2. ***கை யிருப்பு;*** property possessed, money in hand. (J.) (செ.அக.).

*[உள் + வயிரிப்பு.]*

**உள்வரி[1]** *ul̥-vari,* பெ. (n.) ***மாற்றுப்புனைவு;*** disguise. ''உள்வரிக் கொண்ட... மணிமேகலை'' (மணிமே. 19, 29). (செ.அக.).

*[உள் + வரி. வரி = வரைதல். மேற்கொள்ளல், புனைதல். உ → உள்[5] = மேல்]*

**உள்வரி[2]** *ul̥vari,* பெ. (n.) ***சிற்றாயம்;*** petty tax or cess. ''உள்வரி உடையார் திருவேகம்ப முடையாற்கு... இறுப் பதாக'' (S.I.iv, 284). (செ.அக.).

ம. உள்வரி.

*[உள் + வரி. உள் = குறைவு, சிறிது.]*

**உள்வலி** *ul̥-vali,* பெ. (n.) 1. ***புண்புரை முதலியவைகளி னுட்பக்கத்தில் காணும் வலி;*** inward pain as in an abscess etc. 2. ***உள்ளுறுப்பின் வலி;*** pain in the internal organ. (சா.அக.).

*[உள் + வலி.]*

**உள்வழக்கு** *ul̥-val̥akku,* பெ. (n.) ***உள்ளதையுள்ள தென்கை;*** assertion of that which is or exists. ''உள்வழக்குளதுண்டென்கை'' (சி.சி.பர. சௌத் 10.). (செ.அக.).

*[உள் + வழக்கு. உள்ளதாகிய வழக்கு, உண்மையைச் சொல்லு தல்.]*

**உள்வளையல்** *ul-valaiyal,* பெ. (n.) ***உள்வளைவு*** பார்க்க; see *ulvalaivu.*

*[உள் + வளையல் வளையல் = வளைவு ]*

**உள்வளைவு** *ul-valaivu,* பெ. (n.) ***உட்கவிவு;*** inward curvature, concavity. (செ.அக.).

*[உள் + வளைவு.]*

**உள்வறட்சி** *ul-varatci,* பெ. (n.) 1. ***உடம்பினுள்ளுறுப்புகள் தாக்கப்படுவதா லேற்படும் ஒருவகை இசிவு;*** apoplexy arising from the affection of internal organs. 2. ***இருமலினாலும், வெட்டைச் சூட்டினாலு முண்டாகும் வறட்சி;*** dryness due to cough as experienced in asthma, consumption, venereal heat etc. (சா.அக.).

*[உள் + வறட்சி.]*

**உள்வாங்கு-தல்** *ul-vāngu-,* 5. செ குன்றாவி (v.t.) 1. ***உள்ளுக்கிழுத்தல்;*** to draw in, as the head; to withdraw; to absorb, as moisture. 2. ***படைத்தல்;*** to create. ''ஒருநான்று நீயுயர்த்தி யுள்வாங்கி'' (திவ். இயற். 4, 5) (செ அக.).

*[உள் + வாங்கு.]*

**உள்வாய்** *ul-vāy,* பெ. (n.) 1. ***வாயினுட்புறம்;*** inner-part of the mouth. ''பிள்ளை யுள்வாய்ச் செரீஇய'' (குறுந். 92.). 2 ***ஏரியினுட்பக்கம்;*** inside of a lake. (செ.அக.)

*[உள் + வாய்.]*

**உள்வாயில்** *ul-vāyil,* பெ. (n.) ***வீட்டின் வெளிவாயிலை அடுத்து உள்ளே இருக்கும் வாயில்;*** inner door.

*[உள் + வாயில்.]*

**உள்வாரம்** *ul-vāram,* பெ. (n.) 1. ***உள்மனச் சார்பு;*** secret leaning, inclination. 2. ***மேல்வாரம்;*** owner's share in the produce of a field. (செ.அக.).

*[உள் + வாரம்.]*

**உள்விழு¹-தல்** *ul-vilu-,* 2. செ.கு.வி. (v.i.) ***உள்ளாதல்;*** to fall in with, join a party.

*[உள் + விழு ]*

**உள்விழு²-தல்** *ul-vilu-,* 2. செ குன்றாவி. (v.t.) ***பயன் கருதி நண்பராதல்;*** to assume the appearance of friendship for a sinister object, to pretend kindness.

*[உள் + விழு.]*

**உள்வினை** *ul-vinai,* பெ. (n.) 1. ***உட்பகை;*** malice, evil in the heart long cherished. (W.) 2. ***ஊழ்வினை;*** inherited fate. (செ.அக.).

*[உள் + வினை.]*

**உள்வீக்கம்** *ul-vīkkam,* பெ. (n.) ***உடம்பினுள் உண்டாகும் வீக்கம்;*** internal swelling. (சா.அக.).

*[உள் + வீக்கம்.]*

**உள்வீடு** *ul-vīdu,* பெ. (n.) ***உள்ளின் உள்ளறை;*** room within a room, closet. (செ.அக.).

*[உள் + வீடு.]*

**உள்வீழ்-தல்** *ul-vīl-,* 2. செ.கு.வி. (v.i.) ***குறைதல்;*** to decrease, diminish, retrench, reduce. ''வழங்குவ துள் வீழ்ந்தக் கண்ணும்'' (குறள், 955).

*[உள் + வீழ் ]*

**உள்வெட்டு** *ul-vettu,* பெ. (n.) 1. ***உரையாணியின் உள்வெட்டுக்குறி;*** marks on a testing piece of gold, for trying the fineness of other pieces, from eight degrees and upwards 2. ***உயர்ந்த மாற்றுப் பொன்;*** gold of a high degree of fineness. 3. ***மரத்தின் உட்பகுதிப் பலகை;*** inner boards or planks from a log exclusive of the slabs. (செ அக ).

ம. உள்வெட்டு.

*[உள் + வெட்டு.]*

**உள்வெண்டயம்** *ul-vendayam,* பெ. (n.) 1. ***அரசரேறும் குதிரைக்குக் காலில் அணிவிக்கும் பித்தளைக் கழல்;*** tinkling ring of brass put as an ornament on the feet of horses mounted by kings. 2. ***பொதிமாட்டின் முதுகில் வைக்கும் அணை;*** pad placed between a load and the back of a pack-ox. (செ.அக.).

*[உள் + வெண்டயம்.]*

**உள்வெதுப்பு** *ul-veduppu,* பெ (n) 1. ***உள்வெக்கை;*** internal heat. 2. ***மனவெறுப்பு;*** displeasure, dissatisfaction, vexation of mind. ''அவன் பரமபதத்தில் உள் வெதுப்போடே போலே காணுமிருப்பது'' (ஈடு, 4,10,2). (செ.அக.).

*[உள் + வெதுப்பு.]*

**உள்ள** *ulla,* பெ.எ. (adj.) 1. ***இருக்கிற;*** who is, which is. அங்கே உள்ள மனிதன். 2. ***உண்மையான;*** true, actual, உள்ள செய்தி இது. (செ அக.).

ம. உள்ள, **க.** உள்ள, **கோத.** ஒன்; **துட.** ஒள்த், ஒள், **குட.** உள்ள, **து.** உள்ள, உள், உண்டு, **கொலா.** அனு, **நா.** அனுட்; **பிரா.** அன்னிங்க்.

*[உள் + அ - உள்ள.]*

**உள்ளக்கருத்து** *ulla-k-karuttu,* பெ. (n.) ***உண்ணோக்கம்;*** secret thought or intention that is not clearly evident from one's words. ''உள்ளக் கருத்தை யொழித்தேகுதி யென்றான்'' (நள. சுயம்வர. 159). (செ.அக.).

*[உள்ளம் + கருத்து]*

**உள்ளக்களிப்பு** *ulla-k-kalippu,* பெ. (n.) ***மனமகிழ்ச்சி*** (திவா.); heartfelt joy, delectation. (செ.அக.).

*[உள்ளம் + களிப்பு ]*

**உள்ளக்குறிப்பு** *ulla-k-kurippu,* பெ. (n.) ***உள்ளக்கருத்து*** பார்க்க; see *ulla-k-karuttu.* (செ.அக.)

*[உள்ளம + குறிப்பு.]*

**உள்ளகம்** *ullagam,* பெ. (n.) ***நெஞ்சு;*** mind, heart. ''உள்ளகங் கனல'' (அகநா. 19). (செ.அக.).

ம. உள்ளகம்.

*[உள் + அகம் - உள்ளகம்.]*

**உள்ளங்கால்** *ullan-gāl,* பெ (n) ***உள்ளடி;*** sole of the foot, opp to புறங்கால். ''உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற'' (தனிப்பா. 1,6,119). (செ.அக.).

**ம.** உள்ளங்கால்.

*[உள் + அம். + கால். அம் - சாரியை ]*

**உள்ளங்கை** *ullangai,* பெ. (n.) ***அகங்கை;*** palm of the hand opp. to புறங்கை. ''உலகினை யுள்ளங்கைக் கொண்டு'' (சூளா அரசி. 18)

**ம.** உள்ளங்கை, **க.** ஒளகை, ஒளகெய், **தெ.** லோசெயி.

*[உள் + அம் + கை. அம் - சாரியை ]*

**உள்ளங்கைநெல்லிக்கனி** *ullan-gainelli-k-kani,* பெ. (n.) ***உள்ளேயுள்ள நிறத்தையே புறத்திலும் காட்டும் நெல்லிக்கனியைப் போல் தெளிவாகவும் உறுதியாகவும் அறிந்திருப்பது;*** anything that is as clear and certain as the *nelli* fruit which is transparent as a crystal for clarity.

*[உள்ளகம் + காண் + நெல்லி + கனி உள்ளகங்காண என்பது உள்ளங்கை எனத் திரிபுற்றது. புறத்தே உள்ள நிறத் தோற்றத்தை உள்ளேயும் பெற்றிருப்பதால் இக்கனி இப்பெயர் பெற்றது ]*

**உள்ளங்கைவரிகை** *ullangai-varigai,* பெ (n.) ***உள்ளங்கையிலமைந்த வரிகள்;*** the lineaments on the palm of the hand from which is predicted fortune etc (செ.அக.).

*[உள் + அங்கை + வரிகை. வரிகை வடபுல மொழிகளில் ரேகா எனத் திரிந்தது.]*

**உள்ளடக்கம்** *ul-l-adakkam,* பெ. (n.) 1 ***எண்ணங்களை வெளிவிடாமை;*** reservedness, reticence, uncommunicativeness. 2. ***அடக்கி வைத்த பொருள்;*** hidden resources, content. (செ.அக.).

**உள்ளடக்கு-தல்** *ul-l-adakku-,* 5. செ கு.வி. (v.i) 1. ***உட்படச் செய்தல்;*** to enclose, shut in, shut up, in a place. 2 ***மறைத்தல்;*** to conceal, keep secret. ''அறிவினை யுள்ளடக்கி'' (நாலடி 196) (செ.அக.).

*[உள் + அடக்கு ]*

**உள்ளடங்கு-தல்** *ul-l-adangu-,* 15. செ கு வி. (v.i) ***உட்படுதல்;*** to be shut in, included. (செ.அக ).

*[உள் + அடங்கு ]*

**உள்ளடி** *ul-l-adi,* பெ. (n.) 1. ***உள்ளங்கால்;*** sole of the foot, opp. to புறவடி. ''உள்ளடி யூசிபாய. வீழ்ந்தார் '' (சீவக. 2768) 2 ***அண்மை;*** nearness, vicinity, neighbourhood. (J.) 3. ***நெருங்கிய சுற்றம்;*** own relations, own circle. (J.) 4. ***கமுக்கம்*** (இரகசியம்), that which is secret (W.) (செ.அக.).

**ம.** உள்ளடி

*[உள் + அடி - உள்ளடி = உள்ளத்தின் அடியில் பதிந்த கமுக்கமான செய்தி உள்ளுக்குள் நெருங்கிய உறவு.]*

**உள்ளடிக்குள்** *ul-l-adikkul,* கு.வி எ (adv) ***வீட்டிலுள்ளவர்க்குள்ளே*** (கமுக்கமாகப் பேசிக்கொள்வது), at home, within doors, spoken in cases of theft or mischief. (செ.அக.).

*[உள்ளடி + கு + உள்.]*

**உள்ளடிநிலம்** *ul-l-adinilam,* பெ. (n.) ***ஏரியை அடுத்துள்ள நிலம்;*** land next to a tank or lake. (செ.வ.). (செ.அக )

*[உள் + அடி + நிலம் ]*

**உள்ளடை** *ulladai,* பெ. (n) ***உள்ளீடாக இடப்படும் பொருள்;*** that which is placed inside as in a trinket or jewel. ''உடைமணியில் உள்ளடை விழுந்துசப்திக்கையாலும்'' (திவ். பெரியாழ் 2,10,5, வ்யாக் 495.). (செ அக.)

*[உள + அடை ]*

**உள்ளத்தம்** *ullattam,* பெ (n.) ***கருத்துப்பொருள்;*** meaning. (ஆ.அக ).

*[உள + அத்தம் ]*

**உள்ளதன்இன்மை** *ulladan-inmai,* பெ (n.) ***உள்ளதை இல்லை எனல்;*** relative negation as in "we do not find the elephant in the stable" ''ஆனையைப் பந்தியிற் கண்டிலமென் றாற்போலும் அபாவம்'' (சி.சி. அளவை 1 மறைஞா ).

*[உள்ளதன + இன்மை.]*

**உள்ளதனபாவம்** *ulladan-apāvam,* பெ. (n.) ***உள்ளதன் இன்மை*** பார்க்க; see *ulladan-inmai.*

**உள்ளது** *ulladu,* பெ (n.) 1. ***உள்பொருள்*** (சி.போ. 1,1,1 சிற் ), that which exists, which is prevalent or present. 2. ***மெய்;*** truth, that which is true ''ஆவதுள்ளதேயைய'' (கம்பரா வனம்புகு. 33). 3 ***விதிக்கப்பட்டது;*** that which is destined ''உள்ளதொழிய வொருவர்க் கொருவர் சுகம்'' (நல்வ. 6) 4. ***ஆதன்;*** soul, spirit. ''உள்ளது மில்லது மல்லதவனுரு'' (திவ். திருவாய். 1,2,4 ) (செ அக.)

**ம.** உள்ளது, **க.** உள்ளது, உள்ளிது, **தெ.** உன்னதி

*[உள → உள்ள + து ]*

**உள்ளந்தண்டு** *ullan-dandu,* பெ. (n.) ***கழுத்தெலும்பு;*** bone of the neck (cervical vertebrae.) ''உள்ளந்தண்டற... ஊட்டியு மரியா நின்றார்'' (பெரியபு. அரிவா. 17). (செ.அக.)

*[உள் + அம் + தண்டு ]*

**உள்ளந்தம்** *ullandam,* பெ. (n.) ***உள்நம்பகம்;*** close confidence.

*[உள → உள்ளநதம்.]*

**உள்ளந்தாள்** *ullan-dāl,* பெ. (n) ***உள்ளங்கால்;*** sole of the foot, opp to. புறந்தாள் ''உள்ளந்தாணின் றுச்சியளவும்'' (திருவாச 5,21). (செ அக.).

*[உள் + அம் + தாள.]*

**உள்ளநிகழ்ச்சி** *ulla-nigalcci*, பெ (n.) ***மனக்கருத்து;*** intention, thought. "கேண்மனெனாவுள்ள நிகழ்ச்சி யுணர்த்தினனால்" (பிரபோத. 4.16). (செ.அக.)

*[உள்ளம் + நிகழ்ச்சி.]*

**உள்ளநெறி** *ulla-neṟi*, பெ. (n) ***நிகழ்ச்சி அளவை;*** mode of reasoning. "மீட்சியழிவறி, வெய்தியுண்டாநெறி யென்றிவைதம்மால்" (மணிமே. 27,55). (செ.அக.).

*[உள்ள + நெறி.]*

**உள்ளநோய்** *ulla-nōy*, பெ. (n.) ***மனநோய்;*** distress of mind, mental pain, anguish. "உள்ளநோய் வேண்டா வுயிர்க்கு" (சிறுபஞ்.62). (செ.அக.)

*[உள்ளம் + நோய்]*

**உள்ளப்புணர்ச்சி** *ulla-p-punarcci*, பெ. (n.) ***தலைவனும் தலைவியும் உள்ளத்தாற் கூடுங்கூட்டம்;*** union of lovers, in mind, dist. fr. மெய்யுறுபுணர்ச்சி "முன்ன ருள்ளப் புணர்ச்சி யுரியதாகும்" (இலக். வி. 404) (செ அக.).

*[உள்ளம் + புணர்ச்சி.]*

**உள்ளபடி**[1] *ullapadi*, பெ. (n.) ***உண்மை;*** truth. உள்ளபடி சொல்லவா" (தனிப்பா.). (செ.அக.).

*[உள்ள + படி படி = நிலைமை, இருப்பு, நடப்பு.]*

**உள்ளபடி**[2] *ullapadi*, கு.வி.எ. (adv.) 1. ***உண்மையாக;*** truly, indeed. "உள்ளபடி யாமூர் முதலி... இங்கிருக்க" (தனிப்பா. 1,60,119). 2. ***தக்கவளவு;*** in due measure அவனுக்கு உள்ளபடி கிடைக்கும். (இ.வ.).

*[உள்ள + படி படி = தன்மை.]*

**உள்ளபிள்ளை** *ullapillai*, பெ. (n.) ***பணக்காரப் பிள்ளை;*** child of rich parents, opp. to வறியபிள்ளை. (செ.அக.).

*[உள்ள + பிள்ளை.]*

**உள்ளம்**[1] *ullam*, பெ. (n.) 1. ***மனம்;*** mind, heart. "உள்ளத்தா லுள்ளலுந் தீதே" (குறள், 282). 2. ***கருத்து;*** thought, intention, purpose. "என்னுங்கட் குள்ளம்" (சீவக 2347). 3. ***ஊக்கம்;*** energy, zeal, fervour. "உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ" (குறள், 798) 4. ***அறிவியல்;*** consciousness, intellect or thought. "உள்ள முறுவிக்க வுறுமிடனாகும்" (மணிமே. 30,87) 5. ***மனச் சான்று;*** conscience. "உள்ளத்தாற் பொய்யா தொழு கின்" (குறள், 294). 6. ***ஆதன்;*** soul. "ஐம்பொறியை யாண்டங் கரசாயுள நிற்ப" (சி.போ. 5,1,1).

ம. உள்ளம்; **க.** உள், ஒள்; **கோத.** துட. உள்; **குட.** ஒளி, **து.** உள், **தெ.** உல்லமு, **கொலா.** லோபல்; **நா.** லோபல்; **பர்.** ஒலெக் (வீடு). **கோண்.** லொன்; **கட.** உலெ. உல்லென் (வீடு ). **குரு.** உலா (உள்ளறை.); **மால்.** உலெ, **பிரா.** உரா (வீடு.)

*[உள → உள்ளம்.]*

**உள்ளம்**[2] *ullam*, பெ. (n.) ***உண்மை;*** truth.

*[உள் → உள்ளம் ]*

**உள்ளம்**[3] *ullam*, பெ. (n) ***உல்லமீன்வகை;*** a sea-fish, silvery shot with yellow and purple. (செ.அக.).

*[உலலம் → உள்ளம (கொ.வ.)]*

**உள்ளம்மி** *ullammi*, பெ (n) ***மருந்தரைக்கப் பயன்படும் ஆழமாயுள்ள குழி அம்மி;*** a vessel made of granite stone with an oval shaped cavity, in which ingredients are pounded. (சா.அக.).

*[உள் → அமமி ]*

**உள்ளமட்டும்** *ulla-mattum*. கு.வி.எ. (adv.) ***இருக்கிற வரையிலும்;*** as long as (anything) lasts. (சா.அக.).

*[உளள + மடடும ]*

**உள்ளமிகுதி** *ulla-migudi*, பெ. (n.) ***உள்ளக்கிளர்ச்சி*** (திவா ); zeal, enthusiasm. (செ.அக.).

*[உளளம் + மிகுதி ]*

**உள்ளமுடையான்** *ulla-mudaiyāṉ*, பெ (n.) ***வானநூல் பயிற்சியைக் குறிக்கும் பட்டப்பெயர்;*** common title of certain astrol works, as சூடாமணியுள்ளமுடையான், வீரமேசுவரவுள்ளமுடையான். (செ.அக.)

*[உள்ளம + உடையான் உள்ளம் = உண்மை உள்ளமுடையான் = வானநூல் தொடர்பான பல உண்மைகளை உடைமையாக் கிக் கொண்ட நூல் ]*

**உள்ளமை** *ulla-mai*, பெ. (n.) ***உண்மை;*** truth, sincerity. (J) உளுமை சொல்லு (இ.வ.) (செ.அக.).

*[உள் → உள்ளமை (உண்மை); இது யாழ்ப்பாண வழக்கு. தமிழகத்திலும் கலலாத மக்கள் உளுமை எனக் குறிப்பிடுவா ]*

**உள்ளரங்கம்** *ul-l-arangam*, பெ. (n.) 1. ***அகத்தில் வைப்பது; கமுக்கமானது;*** that which is secret, opp. to வெளியரங்கம். 2. ***மறைவான செய்தி;*** secret, private matter.

*[உள் + அரங்கம் ]*

*வீட்டில் உள்ளறையில் உட்கார்ந்து யாருக்கும் வெளிப்படாமல் பேசப்படும கமுக்கமான உரையாடல் அல்லது கூற்று. யாருக் கும் சொலலாமல் உள்மனத்தில் இருத்திக கொள்ள வேண்டிய அருஞ்செய்தி*

*[உள் + அரங்கம் ]*

**உள்ளரங்கு** *ul-l-arangu*, பெ (n) ***மனையின் உள்ளறை;*** room in the interior of a house. "உள்ளரங்கிலே நின்றுபசாரச் சொல்லாலுருக்கத் தொடங்கினான்." (தெய்வச். விறலிவிடு. 204). (செ.அக.).

*[உள் + அரங்கு.]*

**உள்ளல்**[1] *ullal*, பெ. (n.) ***கருத்து*** (திவா.); intention, thought. (செ அக.).

*[உள் → உள்ளல் = நினைவு, கருத்து, எண்ணல்.]*

**உள்ளல்**[2] *ullal*, பெ. (n.) ***உள்ளான்;*** common snipe. "வாளைமீனுள்ள றலைப்படலும்" (திரிகடு.7). (செ.அக.).

*[உள் → உள்ளல். உள்ளான் பார்க்க, see ullāṉ.]*

**உள்ளலார்** *ullalār,* பெ (n.) ***பகைவர்;*** enemies "உள்ள லார் புரநீறெழ" (பெரியபு சேக் 33) (செ.அக.).

*[உள + அல் + ஆர் அல் (எ ம )]*

**உள்ளவன்** *ullavan,* பெ. (n) 1. ***உடையவன்;*** he who has. 2 ***பொருளுடையவன்;*** moneyed man, rich person (செ.அக ).

ம. உளளவன்

*[உள்ள + அவன் ]*

**உள்ளவாறு**[1] *ullavāru,* பெ. (n.) ***உண்மை;*** that which is actual, true, right "உள்ளவாறெனக் குரைசெய்ம்மின்" (தேவா. 385, 2 ) (செ அக.).

*[உள்ள + ஆறு ஆறு = நெறி ]*

**உள்ளவாறு**[2] *ullavāru,* கு.வி எ. (adv.) ***உள்ளபடி;*** truly, rightly, actually

*[உளள + ஆறு ஆறு = வகை ]*

**உள்ளழலை** *ul-l-alalai,* பெ (n.) ***உடம்பினுட் கொதிப்பு;*** internal heat in the system (சா அக.).

*[உள் + அழலை ]*

**உள்ளழற்சி** *ul-l-alarci,* பெ (n.) ***உடம்பினுள் ளேற்படும் வேக்காடு;*** inflammation of the internal organ of the body as in tuberculosis. (சா.அக.).

*[உள் + அழறசி ]*

**உள்ளழி-தல்** *ul-l-ali-,* 2. செ.கு.வி (v.i ) ***மனமழிதல்;*** to lose heart. "அகவாயி லின்றிக்கே யிருக்கை யன்றிக்கே யுள்ளழியா நின்றாள்" (ஈடு. 4,2,1). (செ.அக ).

*[உள் (உள்ளம) + அழி-தல் ]*

**உள்ளவறிவு** *ulla-varivu,* பெ. (n.) ***உள்ளுணர்வு, உள்ம னம்;*** (Buddh ) consciousness, intellect, thought-faculty "உருவு. . உள்ளவ றிவிவை யைங்கந்த மாவன" (மணிமே. 30, 190).

*[உள்ளம் + அறிவு ]*

**உள்ளறிவு** *ullarivu,* பெ. (n.) ***உள்ளவறிவு*** பார்க்க; see *ulla-varivu.*

*[உள் + அறிவு ]*

**உள்ளளவும்** *ullalavum,* கு.வி.எ. (adv.) ***உள்ளமட்டும்;*** as long as (anything) lasts "வேதமுள்ளளவும் வேதகீத முள்ளளவும்" (இராமநா. யுத்த. 10). (செ.அக.).

*[உள்ள + அளவும்.]*

**உள்ளறை** *ul-l-arai,* பெ. (n.) 1. ***உள்வீடு;*** inner room, closet 2 ***பெட்டியின் அறை;*** division in a drawer or box, pigeonhole (செ.அக ) 3 ***மூலவறை*** (கருப்பக்கிரு கம்); sanctum sanctorum in a temple. 4. ***உடம்பினுட் பகுதிகள்;*** internal cavities of the body. (சா அக.).

ம. உள்ளற

*[உள + அறை ]*

**உள்ளன்** *ullan,* பெ (n) 1. ***உள்ளிருக்கும் ஆள்;*** one of the party or family, domestic உள்ளனும் கள்ளனுமாய் இருக்கிறான் 2 ***உற்றவன்;*** near acquaintance. 3 ***போரடிக்கும் தலைமாடு;*** head or middle ox in the team for threshing grain (W ) (செ.அக ).

*[உள → உள்ளன் ]*

**உள்ளா-தல்** *ul-l-ā-,* 6. செ கு வி. (v.i ) 1 ***வயப்படுதல்;*** to submit 2 ***உட்படுதல்;*** to be involved as in suffering. துன்பத்திற்குள்ளானான் 3 ***உடன்படுதல்;*** to become privy to an affair. (W ) (செ அக )

*[உள் + ஆகு - உள்ளாகு → உளளா-தல் ஆகுதல் → ஆதல் ]*

**உள்ளாக்கு-தல்** *ul-l-ākku-,* 5 செ குன்றாவி (v.t) ***உட்படச்செய்தல்;*** to cause to submit, to bring into one's party or association, to cause to be involved, as in suffering. (செ.அக )

*[உள் + ஆககு.]*

**உள்ளாடு-தல்** *ul-l-ādu-,* 5 செ கு வி. (v.i ) ***உளவறிய உள்ளே பயிலுதல்;*** to have intimate intercourse with an enemy in order to effect ulterior object (W.).

*[உள் + ஆடு.]*

**உள்ளாடுபகைவன்** *ul-l-ādu-pagaivan,* பெ (n.) ***உட் பகைவன்;*** enemy in the camp, snake in the grass, treacherous companion (W )

*[உள் + ஆடு + பகைவன் ]*

**உள்ளாடை** *ul-l-ādai-,* பெ. (n.) ***மகளிருள்ளுடை;*** woman's undergarment, chemise. (W.) (செ.அக.).

ம. உள்ளாடை.

*[உள் + ஆடை ]*

**உள்ளாந்தம்** *ul-l-āndam,* பெ. (n.) ***உள்ளந்தம்*** பார்க்க; see *ullandam*

*[உள்ளநதம் → உள்ளாந்தம் ]*

**உள்ளாந்தரம்** *ul-l-āndaram,* பெ (n.) 1 ***நடுவாயிருப்பது;*** medial. 2. ***உள்நம்பகம்;*** close confidence. (செ.அக ).

*[உள் → உள்ளநதம் → உள்ளாந்தரம் ]*

**உள்ளாப்பு** *ul-l-āppu,* பெ. (n.) ***உட்கருத்து;*** idea. 2. ***கமுக்கம், மறைவான செய்தி;*** secret.

*[உள் → உளளாப்பு.]*

**உள்ளாய்தம்** *ul-l-āydam,* பெ. (n.) 1. ***தடிக்குளடங்கிய கத்தி;*** sword-cane. 2. ***உடம்பினுள் ஊறுவைக்காகப் பயன்படுத்தும் கருவி;*** any instrument set up for internal use in surgery

*[உள் + ஆய்தம் - உள்ளாய்தம்.]*

**உள்ளார்** *ullār,* பெ (n.) 1. ***இருப்போர்;*** those who are present இங்குள்ளார்க்குத் தெரிந்த செய்தி (உ.வ.). 2 ***உடையவர்;*** those who possess, as money. "ஒண்புய முள்ளார்" (கந்தபு சகத்திர 6) (செ அக.).

# உள்ளான் குருவி வகை





கோரையுள்ளான்


கீறியுள்ளான்


கோழியுள்ளான்


காட்டு உள்ளான்


துடுப்பு உள்ளான்


மாறியுள்ளான்


பதுங்கையுள்ளான்


வாலாட்டியுள்ளான்


மயில் உள்ளான்


மூக்கு உள்ளான்


கட்டித்தலை உள்ளான்

தடிமூக்கு உள்ளான்

*[உள் = உளளார் உள - இரு உள்ளார - இருப்பவா உளளவர் = செலவம உளளவர் உளளவா → உளளார் தானே இருத்தலும் தனபால பிறிதொனறை இருததிக கொளளலும (உள ) அடிவினையின பொருளாகும அடிவினை செய் வினையிலும செயபபாடடு வினையிலும பொருளால புடை பெயரும ]*

**உள்ளார்**[2] *ullār*, பெ (n) **பகைவர்** (சூடா ). foes, enemies, as those who do not care or regard others

*[உளளாதவா → உள்ளாதார் → உள்ளார் ]*

**உள்ளால்** *ul-l-āl*, கு வி எ (adv) 1 **உள்ளாலை** பார்க்க, see *ullālai* "சிந்தையுள்ளால்" (தேவா 319)

*[உள் + (ஆலை ) ஆல் ]*

**உள்ளாலயம்** *ul-l-ālayam*, பெ (n.) **இதயம்;** heart. (சா அக )

*[உள் + ஆலயம் ]*

**உள்ளாலை** *ullālai*, கு.வி எ. (adv.) 1. **உட்பக்கம்;** inside "கடிசேர் நாற்றத்துள்ளாலை இன்பதுன்பக் கழிநேர்மை" (திவ். திருவாய் 8,8,2).

ம. உள்ளால

*[உள் + ஆலை ஆலை = சுற்று, சுற்றுப்பக்கம், பக்கம் ]*

**உள்ளாள்** *ul-l-āl*, பெ. (n.) 1 **வீட்டின் உறுப்பினன்;** member of a family or party, domestic. 2 **உளவறிவோன்-ள்,** traitor in the guise of a friend, spy. அவனுக்கு உள்ளாள் இருக்கிறான் (வின்.). (செ.அக.).

ம. உள்ளாள்

*[உள் + ஆள்.]*

**உள்ளாளம்**[1] *ul-l-ālam*, பெ (n.) **உடம்பசையாமல் உள்ளடக்கமாகப் பாடும் பாட்டு;** mode of singing without any motion of the features or limbs, in imitation of the Gandharvās. கந்தருவ ருள்ளாளப் பாடலுணர் (சீவக 658, உரை).

*[உள் + ஆளம் பண்ணின் திறத்தைப் புறத்தசைவால் புலப்படுத் தாமல் ஓசையளவாகவே உள்ளுக்குள் ஆளுதல் ]*

**உள்ளாளம்**[2] *ul-l-ālam*, பெ. (n.) **கூத்தின் வேறுபாடு** (பிங்.) kind of dance. (செ அக.).

*[உள் + ஆளம். கூத்தாடுபவன் பாடாமல், உறுப்பசைவுகளை மெய்ப்பாடு தோன்றக் காட்ட, அதற்குரிய பண்ணசைவுகளை உள்ளாளமாகப் பாடிக்காட்டுதல இது இக்காலப் பரத நாட்டிய மாயிற்று.]*

**உள்ளாளனம்** *ullālanam*, பெ. (n.) **உள்ளாளம்**[2] பார்க்க; see *ullālam*[2]. (செ.அக ).

*[உள்ளாளம் → உள்ளாளனம் ]*

**உள்ளாளுங்கள்ளாளும்** *ullālun-kallālum*, பெ. (n.) **இரு புறத்துக்கு மிணங்கிக் கள்ளமாய் நிற்பவன்;** a treacherous person.

*[உள் + ஆள் + உம் + கள் + ஆள் + உம். கள் = கள்ளம் ]*

**உள்ளான்**[1] *ullān*, பெ (n) **உள்ளன்** பார்க்க; see *ullan* (செ அக )

*[உளளன → உள்ளான ]*

**உள்ளான்**[2] *ullān*, பெ (n) **நீருள் மூழ்கிச் செல்லும் பறவை;** common snipe, gallinago media, of which there are many varieties "உள்ளானும் வலியானு மெண் ணிக்கொண்டு" (குற்றா குற 85,1).



உள்ளான

**இதன் இனம்:** கோரையுள்ளான், கீறியுளளான, வாலாட்டியுள் ளான், தடிமூக்கு உளளான், துடுப்பு உள்ளான், மாறியுளளான், பதுங்கையுளளான், கோழியுள்ளான், மயில் உள்ளான, சிவப்பு மூக்கு உள்ளான், காட்டு உள்ளான், கடடித்தலை உள்ளான், கொசு உளளான்

தெ. உள்லமு, **க.** உலலங்கி

*[உள் → உள்ளான் நீருள் மூழ்கும் இயல்புபற்றி உள்ளான் (உளளே செலவது ) எனப்பட்டது ]*

**உள்ளான்**[3] *ullān*, பெ. (n.) **பூச்சிவகை;** insect. (நெல்லை.) (செ.அக.).

*[உள → உள்ளான் ]*

**உள்ளி**[1] *ulli*, பெ. (n.) **கருதுவது, கருத்து;** that which is considered, thought.

*[உள்ளுதல் = கருதுதல், உள் → உள்ளி, 'இ' வி முத ஈறு ]*

**உள்ளி**[2] *ulli*, பெ (n) **வெண்காயம்** (பிங்.), onion, allium cepa. 2 **வெள்ளைப்பூண்டு** (மூ.அ ); garlic. **உள்ளில்** பார்க்க; see *ullil*. (செ அக.).

**ம.** உள்ளி, **க.** உள்ளி, உரளி, உர்ளி, **கோத.** உள்ய், **துட.** ஊண்ய், **து.** உல்லி, உள்ளி, **தெ.** உல்லி, **கோண.** உல்லீ, **கொலா.** உல்லி, **பர்.** உல்லி, **குவி.** ஊலலி, உல்லி

*[உள் + இல் - உள்ளில் → உள்ளி (உள்ளே ஒன்றும் இலலாதது )]*

**உள்ளிக்கோளம்** *ulli-k-kōlam*, பெ (n.) **கழுத்தின் கீழ் மார்பறையுள் திரண்டு காணும் கோளம்;** a two-lobed body in the neck and the thorax of an infant - thymus gland

*[உள் + கோளம்.]*

**உள்ளிட்டம்** *ullittam* பெ. (n.) ***இழப்பு;*** loss, ஏற்ற உள்ளிட்டம் வாராமல் காத்து நோக்கக் கடவராகவும் (புது. கல் 475).(செ.அக ).

**மறுவ.** இழப்பு, போக்கு, போகு

*[உள் → உள்ளிடு = உள்ளேகுழிதல், சரிதல், இழந்துபோதல், உள்ளிடு → உள்ளிட்டம் = உட்குழிந்து போனது, ஒன்று மில்லாமற் போனது, குறைவு பட்டுப் போனது பொருள் இழப்பு ]*

**உள்ளிட்டார்** *ullittār,* பெ. (n.) 1. ***கூட்டாளிகள்.*** partners concerned in the same bargain, co-partners in land, co-heirs. சாத்தனையும் அவனுள்ளிட்டாரையும் சேர்ந்த காணி 2. ***முதலானவர்;*** all the rest, 'and company'. "செத்தன ரெழுவர் சிங்கசேனனை யுள்ளிட் டாரே" (பாரத. பதினே 100). (செ.அக.).

*[உள் → உள்ளிடு → உள்ளிட்டார்.]*

**உள்ளிடு-தல்** *ullidu-,* 18. செ.குன்றாவி. (v.t.) ***உள்ளடக்குதல்;*** to include, comprise. "உரையாசிரியரை உள்ளிட்டோ ரெல்லாரும்" (தொல்.விருத். 45). (செ.அக.).

*[உள் + இடு.]*

**உள்ளிடை** *ullidai,* பெ. (n.) 1. ***உள்ளிடம்;*** inner space. "உள்ளிடை யடுத்த கோட்டத்து" (இரகு. தசரத. 51). 2. ***மந்தணம்;*** private affair, secret, உள்ளிடை பார்க்க வந்து நிற்கிறான் (வின்.). 3 ***இடுப்பின் உட்பக்கம்;*** pelvis, inside the hip. (செ.அக.).

ம. உள்ளிட.

*[உள் + இடை ]*

**உள்ளிடையானவன்** *ullidaiyānavan,* பெ. (n.) ***இனத்தான்;*** one of our fold or party. (W.) (செ.அக.).

*[உள்ளிடை + ஆனவன்.]*

**உள்ளித்திரி** *ullittiri,* பெ. (n.) ***உள்ளிப்பூண்டின் உள்ளிருக்கும் பகுதி;*** clove of garlic. (செ.அக.).

*[உள்ளி + திரி.]*

**உள்ளிப்பல்** *ulli-p-pal,* பெ. (n.) ***உள்ளித்திரி*** பார்க்க; see *ullittiri* (செ.அக.).

*[உள்ளி + பல் ]*

**உள்ளிப்பூடு** *ulli-p-pūdu,* பெ. (n.) ***உள்ளிப்பூண்டு*** பார்க்க; see *ulli-p-pūndu.*

*[உள்ளி + (பூண்டு.) பூடு.]*

**உள்ளிப்பூண்டு** *ulli-p-pūndu,* பெ. (n.) ***உள்ளி;*** garlic or onion. (செ.அக.)

*[உள்ளி + பூண்டு. பீள் → பூள் → பூண் → பூண்டு ]*

**உள்ளியாமணக்கு** *ulli-yāmanakku,* பெ. (n.) ***ஒருவகை யாமணக்கு;*** a variety of castor plant - ricinus communis. (சா.அக ).

*[உள்ளி + ஆமணக்கு.]*

**உள்ளியெண்ணெய்** *ulliyenney,* பெ (n.) 1. ***உள்ளியாமணக்கெண்ணெய்;*** oil extracted from a variety of castor seeds 2 ***வெள்ளைப் பூண்டு எண்ணெய்;*** oil obtained from garlic (சா.அக.)

*[உள்ளி + எண்ணெய்.]*

**உள்ளிருப்பு** *ulliruppu,* பெ. (n.) 1. ***வைப்புநிதி;*** reserve cash. 2. ***கருவூலக்காவல்;*** watching the treasury. (செ.அக.).

ம. உள்ளிருப்பு.

*[உள் + இருப்பு.]*

**உள்ளில்**[1] *ullil,* பெ. (n.) ***உள்ளிடம்; உட்பக்கம்;*** inside.

*[உள் + இல் = உள்ளில் ]*

**உள்ளில்**[2] *ullil,* பெ. (n.) 1. ***வெங்காயம்;*** onion. 2. ***வெள்ளைப்பூண்டு;*** garlic.

*[உள் + இல் உள்ளில் = உள்ளே ஒன்றும் இல்லாதது. உள்ளில் → உள்ளி என மருவியது.]*

**உள்ளில்நோய்** *ullil-nōy,* பெ. (n.) ***உடம்பினுள்ளிருக்கும் நோய்;*** internal disease. (சா.அக.).

*[உள்ளில் + நோய் ]*

**உள்ளிவிழவு** *ullivilavu,* பெ. (n.) ***பண்டைக்காலத்துக் கருவூரில் நிகழ்ந்த திருவிழா;*** name of a festival in Karuvūr, the ancient Cēra capital "கொங்கர் மணியரை யாத்து மறுகினாடு முள்ளி விழவினன்ன" (அகநா. 368).

*[உள்ளி + விழவு உள்ளியை (வெங்காயம் ) ஒத்த வெண்கல மணிகளை இடுப்பில் கட்டிக்கொண்டு ஆடும் விழா ஆகலாம்.]*

**உள்ளிவிழா** *ullivilā,* பெ. (n.) ***உள்ளிவிழவு*** பார்க்க; see *ullivilavu.* அவை மதுரையாவணி யவிட்டமே உறையூர்ப் பங்குனி யுத்தரமே கருவூர் உள்ளி விழாவே யென் றிவை போல்வன (இறை. 16, உரை). (செ.அக.).

*[உள்ளி + விழா ]*

**உள்ளிழிச்சு-தல்** *ulliliccu-,* 6. செ.குன்றாவி. (v.t.) ***உட்கொள்ளுதல்;*** to gulp, to swallow. ஸாரஸ்யத்தாலே உள்ளிழிச்சவும் மாட்டாதே உமிழவும் மாட்டாதே நடுவே நாக்கடியிலே வைத்திருக்கிற படியைச் சொல்லு தல் (திவ். திருநெடுந். 11, வ்யா.). (செ.அக.).

*[உள் + இழிச்சு.]*

**உள்ளினர்** *ullinar,* பெ. (n.) ***அணுக்கமானவர்*** (திரு வருட்.2, பக். 43); intimate friends. (செ.அக.).

*[உள் = உள்ளினர். உள் = மனம் ]*

**உள்ளீடு** *ullīdu* (n.) 1 ***உள்ளிருக்குஞ்சத்து;*** that which is within, as the kernel in a nut. அறிவென்னுமுள்ளீ டின்மையின், மக்கட் பதடியென்றார் (குறள், 196. உரை). 2. ***உள்ளான கருத்து;*** inner meaning, inherent substance. "அவ்வெழுத்தினுள்ளீடு மறிவித்து" (காஞ்சிப். கடவுள்.18). 3. ***உடன்படிக்கை;*** bond (W.). 4.

*மந்தணம்;* secret. உள்ளீட்டுக்காரியம் (வின்.). 5. ***உள்ளே இடப்பட்டது.*** (ஆ.அக.); that which is kept inside (செ.அக.). 6 ***இனிப்பு போன்ற பணியாரங்களில் உள்ளிடும் பொருள்.*** the essential inclosed in a cake.

*[உள் + ஈடு. இடு → ஈடு ]*

**உள்ளு[1]-தல்** *ullu-*, 6 செ குன்றாவி (v.t.) 1. ***நினைதல்;*** to think of, remember. "ஒருதிசை யொருவனை யுள்ளி" (புறநா 121) 2 ***ஆராய்தல்;*** to revolve in the mind, investigate "உள்ளப்படுவன வுள்ளி" (திருக்கோ. 87). 3 ***நன்கு மதித்தல்;*** to honour, esteem. "வேந்தன்கணூறெய்தி யுள்ளப் படும்" (குறள், 665) 4. ***திரும்ப நினைத்தல்;*** to recollect "உள்ளினே னென்றேன்மற றென் மறந்தீ ரென்றென்னைப் புல்லாள் புலத்தக் கனள்" (குறள், 1316) 5 ***இடைவிடாது நினைத்தல்;*** to think without ceasing. (செ.அக.).

*[உள் → உள்ளு]*

**உள்ளு[2]** *ullu*, பெ. (n.) ***நினைவு, கருத்து;*** thought, idea.

*[உள் → உள்ளு ]*

**உள்ளு[3]** *ullu*, பெ. (n.) ***உள்ளான்;*** common snipe. "உள்ளு மூரலும் புள்ளும் புதாவும்" (சிலப். 10, 117.). (செ. அக.).

ம. உள்ளி

*[உள் → உள்ளு* ***உள்ளான்*** *பார்க்க; see ullān.]*

**உள்ளுக்குக்கொடு-த்தல்** *ullukku-k-kodu-*, 4. செ.குன்றாவி. (v.t) ***உண்ணும்படி மருந்து கொடுத்தல்;*** to administer internally, as medicine.

*[உள் → உள்ளுக்கு + கொடு.]*

**உள்ளுச்செல்(லு)-தல்** *ullu-c-cel-*, 13 செ குன்றாவி. (v.t.) 1 ***நினைவோடுதல்;*** to pursue in thought. ஸர்வஜ்ஞனானவனை உணர்த்த வேண்டியிறே உள்ளுச்செல்லுகிறது (திவ். திருப்பா. 21.வ்யா.).

*[உள் → உள்ளு + செல்.]*

**உள்ளுடன்** *ul-l-udan*, பெ. (n.) 1. ***பணிகாரத்தினுள்ளீடு;*** ingredients inclosed in the interior of a cake or tart 2. ***உட்கிடக்கை;*** matter within, hidden meaning. (செ.அக.).

*[உள் + உடன்.]*

**உள்ளுடுப்பு** *ulluduppu*, பெ. (n.) ***உள்ளாடை;*** inner garment.

ம. உள்ளுடுப்பு

*[உள் + உடுப்பு.]*

**உள்ளுடை[1]-தல்** *ulludai-*, 2. செ கு.வி. (v.i) 1. ***மனமுறிதல்;*** to be heart broken, sorely grieved. "பிணிக்குள்ளுடைந்தேன்" (மறைசை. 63). 2. ***முழுதுஞ்சிதைதல்;*** to be destroyed utterly. "ஊக்கித் தாங்கொண்ட விரதங்களுள்ளுடைய" (நாலடி. 57). (செ.அக.).

*[உள் + உடைதல்.]*

**உள்ளுடை[2]** *ulludai*, பெ. (n.) 1. ***கோவணம்.*** (சா.அக.); inner garment worn by man; strip of cloth used as man's fore-lap to cover nudity. 2. ***உட்சட்டை;*** shirt, inner garment. (செ.அக.).

*[உள் + உடை.]*

**உள்ளுணர்ச்சி** *ullunarcci*, பெ. (n.) ***உள்ளுணர்வு; அறிவு;*** inner consciousness, awakening of the mind, knowledge

ம. உள்ளுணர்ச்சி

*[உள் → உணர்ச்சி.]*

**உள்ளுப்புடை** *ullu-p-pudai*, பெ. (n.) ***உட்டுளை*** (பதிற்றுப். 47.5. உரை) hole in a pipe, spout. (செ அக.).

*[உள் → உள்ளு + புடை = உள்ளுப்புடை புழை → புடை ]*

**உள்ளுயிர்** *ul-l-uyir*, பெ. (n.) ***உள் ஆதனாகிய கடவுள்;*** God, who is the inmost life of all creation. (செ.அக.).

*[உள் + உயிர் ]*

**உள்ளுயிர்க்குன்று** *ul-l-uyir-k-kunru*, பெ. (n.) ***நத்தை;*** snail. (W.) (செ.அக.).

*[உள் + உயிர்ககுந்து = உள்ளுயிர்க்குந்து உயிர்க்குந்து = உயிர்ப்பது, மூச்சுவிடுவது உயிர்க்குன்று (கொ வ ) ]*

**உள்ளுருக்கி** *ullurukki*, பெ. (n.) ***கணைநோய்*** (இங்.வை ); wasting disease of childhood, tabes mesenterica. (செ.அக.).

*[உள் + உருக்கி ]*

**உள்ளுருகு-தல்** *ul-l-urugu-*, 5. செ.கு.வி. (v.i.) ***மனங்கரைதல்;*** to melt, as the heart. "உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி" (தாயு.பொருள். 10). (செ.அக ).

*[உள் + உருகு ]*

**உள்ளுலவு** *ul-l-ulavu*, பெ. (n.) ***சிற்றொடுவை*** பார்க்க; see *cirroduvai*.

*[உள் + உலவு ]*

**உள்ளுளவு** *ullulavu*, பெ. (n.) ***உடந்தை;*** collusion. "உள்ளுளவான கடைக்காரர்கள்" (மதி.களஞ். 1,9). (செ.அக.).

*[உள் + உளவு.]*

**உள்ளுறப்பு** *ullurappu*, பெ. (n.) ***நெஞ்சுரம்;*** firmness of mind.

மறுவ. துணிவு, உரம்; ம. உள்ளுறப்பு.

*[உள் + உறப்பு ]*

**உள்ளுறு-தல்** *ulluru-*, 4. செ.கு.வி. (v.i.) ***உள்ளிருத்தல், உட்படுதல்;*** to be in, concerned in, involved. (செ.அக.).

*[உள் + உறு.]*

**உள்ளுறு²-த்தல்** *ul-l-uṟu-,* 4. செ குன்றாவி. (v.t.) 1. ***உட்செலுத்துதல்;*** to thrust in, insert, instil, as principles "மட்பெருங் குகையினின் மருந்தையுள் ளுறுத்தான்" (கந்தபு மார்க். 132). 2 ***உட்கருதுதல்;*** to consider, think about. "உள்ளுறுத் திதனோ டொத்துப் பொருண் முடிகென" (தொல். பொருள். 48) 3. ***உள்ளிடுதல்;*** to include, comprise. "தோழி யுள்ளுறுத்த வாயில்" (தொல். பொருள். 149). (செ.அக.).

*[உள + உறு ]*

**உள்ளுறுப்பு** *ulluṟuppu,* பெ. (n.) ***உடம்பின் உள்ளே இருக்கும் உறுப்புகள்;*** the internal organs of the body

*[உள + உறுப்பு ]*

**உள்ளுறை¹** *ul-l-uṟai,* பெ. (n.) 1 ***உட்கருத்து;*** inward thought, real opinion, the thing intended உன் உள்ளுறை எது? (வின்.). 2. ***மறைபொருள்;*** hidden meaning. இப்பாட்டிற்கு உள்ளுறை யாது? 3. ***ஆசுகவிக்குக் கொடுக்குந் தலைப்பு;*** subject matter proposed for composing a verse *impromptu.* "ஒருவன் நேர் கொடுத்த வுள்ளுறைக் கப்போது உரைப்பதனை யாசென்றார்" (வெண்பாப். செய் 2). 4. ***பொருளடக்கம்;*** contents, as of a book 5. ***உள்ளுறையுவமம்*** பார்க்க; see *ulluṟai-y-uvamam* "உள்ளுறை தெய்வமொழிந்ததை நில னெனக் கொள்ளும்" (தொல். பொருள். 47). (செ.அக.)

குறிப்பால் புலப்படுத்தும் கருத்து உள்ளுறை எனப்படும் அன்புணர்வை மட்டும் புலப்படுத்திக் காட்டும் குறிப்பு இறைச்சி என வேறு பிரிதத்துக் காட்டப்படும் "அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டலும்" (தொல் பொருள். 231) என்றார் தொல்காப்பியர் உள்ளுறையின் பாற்பட்ட குறிப்பு தெய்வ மல்லாத கருப்பொருள்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு வரும்

*[உள + உறை ]*

**உள்ளுறை²** *ul-l-uṟai,* பெ. (n.) 1. ***உட்புகட்டும் மருந்து;*** any medicine given to be taken internally. 2 ***புண்புரை களுக்கு உள்ளே புகட்டும் மருந்து;*** any medicine which is inserted into cavities of sores.

*[உள் + உறை ]*

**உள்ளுறையுவமம்** *ulluṟai-y-uvamam,* பெ. (n.) ***வெளிப்ப டையானன்றிக் குறிப்பாற் பொருளைப் புலப்படுத்தும் உவமம்;*** indirect suggestion by which an author who does not propose to explicitly state his idea, endeavours, however, to present it through the skilful employment of such telling comparisons as would help people to infer there from that he actually intended to convey, opp. to ஏனையுவமம்.

*[உள் + உறை + உவமம்.]*

**உள்ளூர்** *ullūr,* பெ (n.) 1. ***ஊர்நாடு;*** heart of a town, interior of a village. 2. ***சொந்தவூர்;*** own town, home "உள்ளூ ரிருந்துயிர் கொன்னே கழியாது" (நாலடி 286) (செ அக.).

*[உள் + ஊர் ]*

**உள்ளூர்ச்சரக்கு** *ullūr-c-carakku,* பெ (n) 1 ***உள் நாட்டு மருந்துச்சரக்கு;*** local product, indigenous drugs. 2. ***சொந்த ஊரில் விளையும் பொருள்;*** local product. (செ அக.).

*[உள் + ஊர் + சரக்கு ]*

**உள்ளெரிச்சல்** *ul-l-ericcal,* பெ. (n.) ***பொறாமை;*** envy, jealousy. (செ.அக.).

*[உள் + எரிச்சல்.]*

**உள்ளெரிவு** *ul-l-erivu,* பெ. (n.) ***உள்ளழற்சி;*** inflammation of the internal organs.

*[உள் + எரிவு ]*

**உள்ளே** *ullē,* கு.வி.எ. (adv.) ***உள்ளாக; அகத்த;*** inside.

ம. உள்ளே.

*[உள் + ஏ - உள்ளே ]*

**உள்ளேபோடு-தல்** *ullē-pōdu-,* 19. செ.குன்றாவி. (v.t.) ***தன்வயப்படுத்துதல்;*** to get into one's power, bring over to one's interests. (W.) (செ.அக.).

*[உள்ளே + போடு ]*

**உள்ளேயிறக்கு-தல்** *ullē-y-iṟakku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***விழுங்குதல்;*** to swallow. 2. ***உள்ளே புகும்படி செய்தல்;*** to let in. (சா அக.).

*[உள → உள்ளே + இறக்கு.]*

**உள்ளொடுக்கம்** *ul-l-odukkam,* பெ. (n.) ***தன்னடக்கம்;*** self control (செ.அக.).

*[உள் + ஒடுக்கம் ]*

**உள்ளொலி** *ul-l-oli,* பெ. (n.) ***உள்ளோசை*** பார்க்க; see *ullōsai.*

*[உள் + ஒலி ]*

**உள்ளொற்று-தல்** *ulloṟṟu-,* 15. செ.கு.வி. (v.i.) ***உண் ணிகழ்ச்சியை உய்த்துணர்தல்;*** to discern a thing that is hidden from public view. "உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவர்" (குறள். 927) (செ.அக.)

*[உள் + ஒற்று ]*

**உள்ளோக்காளம்** *ul-l-ōkkālam,* பெ. (n.) ***குமட்டல்;*** inclination to vomit.

*[உள் + ஓக்காளம் ]*

**உள்ளோசை** *ul-l-ōsai,* பெ. (n.) 1. ***உள்ளொலி*** (பிங்.); internal sound unheard by others, as the beating of the heart 2 ***மெல்லோசை*** (திவா ), low note, as of a lute (செ அக )

*[உள் + ஓசை ]*

ஞெளிர், தெளிா, நரலவு, நுழைவு, நுணுக்கம், முரல், முரலவு, விழைவு முதலியவற்றின் உள்ளாளம் உள்ளோசை எனப்படும

**உளகன்** *ulagaṉ,* பெ. (n) ***உள்ளானவன்;*** one who is subjected to, enthralled "பல்வினைக்கே யுளகரெல் லாம்" (திருநூற் 61)

*[உள் → உள்கன → உளகன ]*

**உளகு**[1] *ulagu,* பெ (n) ***உட்டுளையுள்ள யாழின் தண்டு;*** stem of the *yāḻ* "உளகு புரையு முன்கை யவளோடும்" (சேதுபு தருமகுத். 22). (செ.அக.).

*[உள → உளகு ]*

**உளகு**[2] *ulagu,* பெ (n.) ***சிற்றூர்வொழுகு; விலைமதிப்புக் குறிப்பேடு;*** standard rate, as for assessment, register or detailed account of the lands in a village. (C.G.) (செ அக.).

*[ஒழுங்கு → ஒழுகு → ஔகு → உளகு (கொ வ ) ஒழுகு* பார்க்க, see *oḻugu]*

**உளதா-தல்** *uladā-,* 18. செ கு வி. (v.i.) 1. ***உண்டாதல்;*** to originate; come into being. "இலதுகாரிய முதலுளதாகு மென்னில்" (சி சி. 1,7). 2. ***இருத்தல்;*** to exist (செ.அக ).

*[உளது + (ஆகுதல்.). ஆ-தல் ]*

**உளது** *uladu,* பெ (n) 1. ***இருப்பது;*** that which is. 2. ***மெய்ம்மை;*** truth "இலையெனினுளதே சொல்" (வைராக்.சத 27). (செ.அக.).

ம. உளது

*[உள்ளது → உளது ]*

**உளப்படு**[1]**-தல்** *ula-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) ***இசை தல்;*** to agree (W.) (செ.அக.).

*[உள்ளம் → உளம் + படு ]*

**உளப்படு**[2]**-தல்** *ula-p-paḍu-,* 20. செ.கு வி. (vi.) 1. ***உள்ளடங்குதல்;*** to be included. "அன்னென் கிளவி யுளப்பட" (தொல் எழுத் 119). 2. ***உரியதாதல்;*** to be proper, fitting, appropriate. "மன்னவற் குளப்படு கடன் முறையுதவி" (கந்தபு திருநாட். 25). (செ.அக.).

*[உள் → உள + படு ]*

**உளப்படுத்து**[1]**-தல்** *ula-p-paḍuttu-,* 5. செ குன்றாவி (v.t.) 1 ***மனத்துட் கொள்ளுதல்;*** to bear in mind, keep in remembrance. "ஈதுளப்படுத்திருத்திர் நீர்" (உபதே சகா சூராதி. 90).

*[உள் → உளம் + படுத்து ]*

**உளப்படுத்து**[2]**-தல்** *ula-p-paḍuttu-,* 5. செ.குன்றாவி (v.t ) ***உட்படுத்துதல்*** (வின் ); to include, cause to agree

*[உள் + படுதது ]*

**உளப்பறி-தல்** *ula-p-paṟi-,* 4. செ கு வி (v.i.) ***உளவறி*** பார்க்க; see *ulavaṟi* (செ.அக )

*[உள்ளாப்பு → உளபபு + அறி. (கொ.வ.)]*

**உளப்பாட்டுத்தன்மை** *ulappāṭṭu-t-taṉmai,* பெ (n) ***முன்னிலை, படர்க்கையிடத்தாரைத் தனித்தனியே னும் சேர்த்தேனும் உடன்கூட்டுந் தன்மையிடம்*** (நன். 332 விருத் ). (Gram ) Ist pers pl which of necessity must include the 2nd pers or 3rd pers. or both. (செ.அக.).

*[உள → உளப்படு → உளப்பாடு → உளப்பாட்டு + தன்மை.]*

**உளப்பாட்டுமுன்னிலை** *ulappāṭṭu-muṉṉilai,* பெ (n) ***படர்க்கையிடத்தாரை உடன் கூட்டும் முன்னிலை;*** (Gram ) 2nd pers which includes also the 3rd pers. (செ.அக ).

*[உளப்பாட்டு + முன்னிலை ]*

**உளப்பாடு**[1] *ula-p-pāḍu,* பெ. (n.) 1 ***எண்ணம்;*** object, intention, purpose. "முயற்சியும் உளப்பாடுமின்றி" (திருகோ 14, உரை) 2 ***மனத்துயர்;*** mental suffering, sorrow, grief "உளப்பா டுணர்பவர் யாவர்" (தாயு. ஆரணம், 6). (செ.அக.).

*[உளம் + படு - உளப்படு → உளப்பாடு ]*

**உளப்பாடு**[2] *ula-p-pāḍu,* பெ (n.) ***உட்படுத்துகை;*** including, enclosing உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. (செ.அக )

*[உள் + படு - உளபபடு → உளப்பாடு ]*

**உளப்பு** *ulappu,* பெ. (n) ***நடுக்கம்;*** trembling, shaking. "தன்னுளப்பருந் தகைமை தன்னால்" (கம்பரா. இராவ ணன்களங் 15). (செ.அக.).

*[உள+பு → உளப்பு.]*

**உளம்** *ulam,* பெ. (n.) 1 ***உள்ளிருக்கும் மனம்;*** mind, heart. 2. ***மார்பு;*** breast. "நரிமா வுளங்கிழித்த வம்பினில்" (நாலடி. 152). 3. ***எண்ணம்;*** thought. (செ.அக.).

ம. உளம்.

*[உள் → உள்ளம் → உளம்.]*

**உளம்பு**[1]**-தல்** *ulambu-,* 6. செ குன்றாவி (v.t ) 1 ***அலைத்தல்;*** to stir up, beat up, as game "கைம்மா வுளம்புநர்" (கலித். 23). 2. ***புதரைத் தட்டி வேட்டை விலங்கைக் கிளப்புதல்;*** to drive out the animals from thicket in hunting.

*[உல் → உள → உள → உளம்பு ]*

**உளம்பு**[2]**-தல்** *ulambu-,* 15 செ கு வி (v.i ) ***ஒலி எழுப்புதல்;*** to make a noise, to howl "குறுநரியுளம்பும்" (அகநா 94)

*[உல் → உள் → உள → உளம்பு ]*

**உளமை** *ulamai,* பெ (n.) ***உண்மை;*** truth reality. "உளமை யுணரா தொடுங்கி" (பு வெ. 10. காஞ்சி. 5) (செ அக ).

ம. உளமை

*[உள → உளமை ]*

**உளர்**[1]**-தல்** *ular-*, 5. செ குன்றாவி. (v.t.) 1 ***கோதுதல்;*** to adjust, smooth out, as birds their feathers. ''கதுப் புளரி''. (குறுந் 82). 2. ***தலை மயிர் ஆற்றுதல்;*** to spread out and draw the fingers through, as in drying wet hair. ''கூந்தலுளர'' (கலித். 105) 3 ***அசைத்தல்;*** to shake, cause to move or fly about. ''விரைவளர் கூந்தல் வரைவளி யுளர'' (புறநா. 133,4) 4 ***சிதறுதல்;*** to scatter, throw about, strew ''கனைத்துவண் டுளர்ந்த தார்க் காளைசீவ கன்னரோ'' (சீவக 707) 5 ***தடவுதல்;*** to draw the fingers over, as a bow string ''வல்வின்ஞா ணுளர்தீயே'' (கலித். 7) 6 ***யாழ் முதலியன இசைத்தல்;*** to thrum, as a *yāḻ*; to play, as an instrument ''மென்மொழி மேவல ரின்னரம் புளர'' (திருமுரு. 142) 7. ***கலக்குதல்;*** to disturb, ruffle, stir up, as fish the water of a pool. ''சேலங் குளர்வயற் சேலூர்'' (இறை. 2. பக்.41).

*[உல் → உள் → உள → உளர் ]*

**உளர்**[2]**-தல்** *ular-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***காலம் கடத்துதல்;*** to delay ''அவனை யுளரா தழிக்க''' (விநாயகபு 52,18). 2. ***அசைதல்;*** to stir, move ''நீருளர் பூந்தா மரைப் போது'' (கலித் 112). 3. ***சுழலுதல்;*** to whirl, whiffle, as wind (W.) 4. ***உறுதியற்றாடுதல்;*** to be loose, as a pin or a screw.

*[உல் → உள் → உளர் → உளர்-தல்.]*

**உளர்**[3] *ular*, பெ. (n.) ***உடந்தை*** (யாழ்.அக.); accomplice.

*[உள் → உளர்.]*

**உளர்ச்சி** *ularcci*, பெ. (n.) 1. ***சுழற்சி;*** whirling. 2. ***உளர்ப்பு;*** shaking.

*[உல் → உள் → உள → உளர் → உளர்ச்சி.]*

**உளர்ப்பு** *ularppu*, பெ. (n.) ***அலைக்கை;*** stirring, shaking, agitating. ''விரலுளர்ப்பவிழ்ந்த'' (திருமுரு 198). (செ அக.).

*[உளர் → உளர்ப்பு.]*

**உளர்வு**[1] *ularvu*, பெ. (n.) 1. ***அசைகை;*** moving 2. ***யாழ்வாசிக்கை;*** playing a *yāḻ*. ''கையுளர்வின் யாழிசை கொண்ட வினவண்டு'' (கலித். 131,8). 3 ***சுழலுகை;*** whirling, whiffling, turning (W.). (செ அக ).

*[உல் → உள் → உள → உளர் → உளர்வு.]*

**உளர்வு**[2] *ularvu*, பெ. (n.) ***பேரொலி;*** loud noise.

*[உல் → உள் → உள → உளர் → உளர்வு ]*

**உளவறி-தல்** *ulavaṟi-*, 2. செ கு வி (v.i.) ***துப்பறிதல்;*** to spy out the secrets of a person, family or state, for some sinister object. (செ.அக.).

*[உளவு + அறி-தல் ]*

**உளவன்** *ulavaṉ*, பெ. (n.) ***துப்பாள்;*** spy, he who is in the secret, secret agent. ''உளவனில்லாம லூரழியாது'' (குமரே. சத. 91). (செ.அக.).

து. உளவு, க., தெ. ஒலவு

*[உளவு → உளவன் ]*

**உளவாடம்** *ulavādam*, பெ. (n.) ***முன்பணம்;*** advance of money. (செ.அக.).

*[உள்ளவடம் → உளவடம் → உளவாடம் உள்ளவடம் = உள்ளதாகிய பொருளை முனபணமாக இடுதல் ]*

**உளவாள்** *ulavāl*, பெ (n.) ***துப்பாள்;*** spy, male or female. (செ அக.)

*[உளவு + ஆள.]*

**உளவாளி** *ulavāli*, பெ. (n.) 1. ***உளவாள்.*** (தாசில்.நா.); spy, informer. 2. ***உளவு*** பார்க்க; see *ulavu*. (செ.அக.).

*[உளவு + ஆள் + இ ]*

**உளவு**[1] *ulavu*, பெ. (n.) 1. ***மந்தணம்;*** secrecy, privacy. ''உளவி லேயெனக் குள்ள வாறுணர்த்தின்'' (தாயு. எனக்கென. 19). 2. ***உள்ளாராயும் துப்பு;*** secret, internal affair espied or ascertained by an emissary in disguise to be afterwards disclosed to others. 3. ***வேவு;*** spying, prying, espionage. ''கண்ணிற்கண்ட வுளவு'' (கம்பரா. பிணிவீ. 116). 4. ***ஒற்றன்;*** spy, informer 5 ***வழி;*** means, method, expedient ''ஊழை யகற்ற வுளவறியாப் பொய்யனிவன்'' (அருட்பா, 11, எழுத்தறி. 24). 6. ***உள்ளதன்மை;*** real nature. ''உளவறிந்தெல்லா நின் செய லாமென'' (தாயு. எனக்கென. 2).

ம., து. உளவு, க., தெ. ஒளவு.

*[உள் → உளவு ]*

**உளவு**[2] *ulavu*, பெ. (n.) ***உளவன்*** பார்க்க; see *ulavaṉ*. (செ.அக.).

*[உள் → உளவு.]*

**உளவுகாரன்** *ulavu-kāraṉ*, பெ. (n.) ***உளவன்*** பார்க்க; see *ulavaṉ*. (செ.அக.).

*[உளவு + காரன் ]*

**உளறல்** *ularal*, பெ. (n ) 1 ***பேரொலி*** (பிங்.); shouting, clamour, sound of many voices. 2. ***குழறுபடையான மொழி;*** incoherent speaking. (செ.அக.).

*[உளறு → உளறல் ]*

**உளறு-தல்** *ularu-*, 10. செ கு வி. (v.i.) 1. ***ஆரவாரித்தல்*** (பிங் ); to roar, shout, vociferate 2. ***கண்டபடி பிதற்றுதல்;*** to clamour without sense, utter unmeaning vociferations, speak incoherently as through fear, talk blatantly. ''பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுள றும்'' (தாயு. பராபர. 336). (செ.அக.).

ம. உளறுக. க. ஒளறு, தெ. ஊல் (நரி ஊளையிடல்); பட. ஊவலிக்கு (ஊளையிடல் ).

*[உளர்தல் = அசைத்தல், நடுங்குதல், ஒலித்தல். உளர் → உளறு.]*

**உளறுபடி** *ularu-padi*, பெ. (n.) ***உளறுபடை*** பார்க்க; see *ularu-padai*. (செ.அக.).

*[உளறு + படு = உளறுபடு → உளறுபடை. → உளறுபடி.]*

**உளறுபடை** *ular̠u-padai*, பெ. (n) ***பேச்சிற் குழறுகை;*** incoherence in speaking (செ.அக.)

*[உளறு + படு = உளறுபடு → உளறுபடை ]*

**உளறுவாயன்** *ular̠u-vāyan*, பெ. (n.) ***பிதற்றுவோன்;*** babbler, he that chatters ஊமைக் குளறுவாயன் உற்பாத பிண்டம். (செ அக.).

*[உளறு + வாய் + அன் ]*

**உளி**[1] *uli*, பெ (n) 1 ***தச்சுக்கருவிகளுளொன்று;*** chisel "கூருளி குயின்ற வீரிலை" (நெடுநல் 119) 2 ***கணிச்சி*** (திவா ): battle-axe. 3 ***சித்திரிக்குங்கருவி;*** burin, engraver's tool (W) 4 ***நகஞ்சீவி;*** barber's instrument for paring nails. (J) 5 ***கூர்மை;*** sharpness (செ அக.).

ம., க., து. உளி. தெ. உலி. கோத., துட. உளய்

*[உள் → உளி = உளளே செலவது, வெட்டுவது ]*

**உளி**[2] *uli*, பெ. (n.) ***இடம்*** (பிங்.); place. (செ.அக.).

*[உள் → உளி.]*

**உளி**[3] *uli*, இடை (part.) 1. ***ஓர் ஏழனுருபு.*** (திருமுரு. 95); in or at, a loc. ending 2 ***மூன்றாம் வேற்றுமைப் பொருள்படும் இடைச்சொல்*** (குறள் 545, உரை), by or along, a particle having the force of an instr. ending. 3 ***ஒரு முதனிலைப் பொருளீறு*** (மலைபடு. 153. உரை), an expletive suff. (செ.அக.).

*[உள → உளி உள் = இடம்.]*

**உளிக்குத்து** *uli-k-kuttu*, பெ. (n.) ***முட்டியாற் குத்துங் குத்து*** (நெல்லை.); fisticuff. (செ.அக.).

*[உளி + குத்து. உளி குத்தினாற்போல் ஆழப்பதியும் குத்து.]*

**உளிக்கொம்பு** *uli-k-kombu*, பெ (n.) ***விலங்கின் அடிக் கொம்பு;*** stump of a horn. (செ.அக.).

*[உளி + கொம்பு = உளிக்கொம்பு = அடிப்பக்கம் பருத்த கொம்பு ]*

**உளிகை** *uligai*, பெ. (n.) ***ஐங்காய மென்னும் ஐம்மலம்;*** the five evils attached to the soul. (சா.அக.).

*[உள் → உளிகை (உள்ளிருப்பது).]*

**உளிஞை** *uliñai*, பெ. (n.) 1. ***கோபுரவாயில்;*** entrance of a fort. 2. ***படை;*** army.

*[உள் → உளி → உளிஞை.]*

**உளித்தலைக்கோல்** *uli-t-talai-k-kōl*, பெ. (n) ***இருப்புப் பாரை;*** crowbar. "எயின்சேரியி னுள்ளமாத ருளித்த லைக் கோல்கொடு" (கந்தபு. வள்ளி. 28). (செ அக ).

*[உளி + தலை + கோல். உளியை அல்லது கூர்மையுள்ள இரும்பைத் தலையிற் செருகிய மரக்கோல் ]*

**உளிப்பாரை** *uli-p-pārai*, பெ. (n) ***உளித் தலைக்கோல்*** பார்க்க. (யாழ்.அக.); see *uli-t-talai-k-kōl*. (செ அக.).

*[உளி + பாரை. பாரை = நீண்டது.]*

**உளியம்** *uliyam*, பெ (n) ***கரடி;*** bear "நாளுலா வெழுந்த கோள்வ லுளியம்" (அகநா 81) (செ அக.).

ம. உளியம்

*[உளி → உளியம உளிபோனற கூரிய உகிர்களை உடையது.]*

**உளிவை-த்தல்** *ulivai-*, 4 செ கு.வி (v.i.) ***மரத்தை உளியிட்டுப்பிளத்தல்*** (யாழ் அக.); to split wood with an iron tool (செ அக )

*[உளி + வை ]*

**உளு**[1]**-த்தல்** *ulu-*, 4 செ கு வி. (v.i) ***மர முதலியவை புழுவால் அரிக்கப்பட்டுக் கெடுதல்;*** to be worm eaten, as wood, to be eaten out by insects, as grain, as seeds. (செ அக )

*[உள் → உளு → உளுத்தல் உளு = உட்செல்.]*

**உளு**[2] *ulu*, பெ. (n.) 1 ***உள்ளே துளைத்துச் செல்லும் புழு;*** wood-worm, wood-borer, wood-fretter "விண் ணுளு வுண்டென" (சீவக 1899) 2. ***உளுத்தது;*** that which is rotten. "மிளகுளு வுண்பான் புகல்" (பழ. 23). (செ.அக.)

ம. உளு. உளும்பு, க. உபுளு (ஒருவகை அட்டை), து. உபுளு; தெ. உலுமு, கூ. லூபென்

*[உள் → உளு = உள்ளே துளைத்துச் செல்வது.]*

**உளுக்கா-த்தல்** *ulukkā-*, 4 செ கு வி (v.i) 1 ***உள் ளொடுங்குதல்; ஓரிடத்தில் இருத்தல்;*** to sit down. "சோளேந்திரசிங்கனை யுளுக்காக்கப் பண்ணுகிறேன்" (ஈடு 6,4,9) 2 ***சுவர் முதலியவை கீழிறங்குதல்;*** to sink as a wall. (W ) (செ அக.).

*[உளுக்கு + ஆர்-த்தல் - உளுக்கார்-த்தல் → உளுக்கா-த்தல்.]*

**உளுக்காரு-தல்** *ulukkāru-*, 9. செ.கு.வி. (v.i.) ***உளுக்கா*** பார்க்க; see *ulukkā* (செ.அக.).

*[உள் → உள்கு → உளுகு → உளுக்கு = உள்ளொடுங்க, உயராமல் கீழே தாழ்ந்திரு உளுக்கு + ஆர் + உ. தாழ்ந்திருத் தலை எய்து உகரம் ஏவலொருமையீறு ]*

**உளுக்கு**[1]**-தல்** *ulukku-*, 15. செ கு.வி. (v.i.) 1. ***சுளுக்கு தல்;*** to be sprained, dislocated. 2. ***நெளிதல்;*** to writhe. "நிலமுது குளுக்கிக் கீழுற" (கம்பரா. கார்முக. 10). (செ.அக.).

ம., உளுக்கு., க., தெ. ஊலு (அழுகுதல்.); து. உள்கு.

*[உள் → உளுக்கு = உள்ளசைதல்.]*

**உளுக்கு**[2]**-தல்** *ulukku-*, 5. செ குன்றாவி. (v.t.) ***மெருகிடு தல்;*** to polish or streak metallic articles. (W.).

*[உள் → உளுக்கு.]*

**உளுக்கு**[3]**-தல்** *ulukku*, பெ. (n.) ***சுளுக்கு;*** sprain, dislocation. (செ.அக.).

ம. உளுக்கல்; தெ. இலுகு; க. உளுகுகு; து. உள்கு.

*[உல் → உலு → உலுக்கு → உளுக்கு = உள்ளிசைப்பு.]*

**உளுத்தம்பயறு** *uluttam-payaṟu,* பெ (n.) ***உளுந்து*** பார்க்க, see *ulundu* (சா அக.)

*[உளுந்து → உளுத்து + பயறு - உளுத்தம்பயிறு ]*

**உளுத்தமா** *uluttamā,* பெ (n.) ***உளுந்து மாவு;*** the flour of black-gram

ம. உளுதத மாவு

*[உளுந்து → உளுத்தம் + மாவு - உளுத்தமாவு → உளுத்தமா ]*

**உளுத்தவெலும்பு** *ulutta-v-elumbu,* பெ (n.) ***அரித்த வெலும்பு;*** gangrenuous eating of a bone - caries. (சா அக.)

*[உலு → உளுத்த + எலும்பு ]*

**உளுத்திரம்** *uluttiram,* பெ (n.) ***மஞ்சள்;*** turmeric. (சா அக.)

*[உளு → உளுத்து → உளுத்திரம் ]*

**உளுத்துப்போ-தல்** *uluttu-p-pō-,* 8. செ.குன்றா வி. (v.i.) 1 ***புழு வரித்தல்;*** to be eaten up by worm 2. ***வெடிப்பி னால் உளுத்தல்;*** to be corroded by salt-petre (சா அக.).

*[உளு → உளுதது + போ ]*

**உளுந்து** *ulundu,* பெ (n.) ***பயறுவகை;*** black-gram (செ அக.)

*[உள் → உளு = உள்ளொடுங்குதல், தாழ்தல் உளு → உளுந்து = உயரமாகாமல் தாழ்ந்து குட்டையாய் வளரும் செடி உள்ளொடுங்கித் தாழ்ந்து பற்றிக் கொள்ளும் இயல்பால் உடும்பு → உடும்பு எனப் பெயர் பெற்றமை ஒப்பு நோக்குக ]*

**உளுந்துச்செடி** *ulundu-c-cedi,* பெ (n.) ***உளுந்து விளையும் செடி;*** plant of black-gram, phaseolus radiatus (சா அக.)

*[உளுந்து + செடி ]*

**உளுந்தூர்ச்சக்கரம்** *ulundūr-c-cakkaram,* பெ. (n.) ***பழைய நாணய வகை.*** (பணவிடு 145); an ancient coin, probably after a place ulundūr (செ அக.)

*[உளுநதூா + சககரம் ]*

**உளுப்பு**[1] *uluppu,* பெ (n.) 1. ***உளுக்கை;*** condition of being worm - eaten (W.) 2. ***உளுத்தமரம்*** (திவ் பெரியாழ் 3,7,3 ஸ்வா வ்யா.); worm-eaten tree (செ அக.)

ம. உளுப்பு

*[உள → உளு → உளுப்பு.]*

**உளுப்பு**[2] *uluppu,* பெ (n.) ***நாணம்; கூச்சம்;*** shame, shame-facedness (சேரநா.)

ம. உளுப்பு

*[உள் → உளு → உளுப்பு ]*

**உளுப்புத்தாவு-தல்** *uluppu-t-tāvu-,* 8 செ.கு வி (v.i.) ***உளுக்கத் தொடங்குதல்;*** to be attacked by a pest, as a crop (W.) (செ அக.)

*[உளுபபு + தாவு ]*

**உளுவாய்** *uluvāy,* பெ. (n.) ***வெந்தயம்;*** fenugreek. (சா அக.)

*[உள் → உளு + வாய உளு - சிறியது 'வாய' சொல்லாக்க ஈறு ]*

**உளுவை** *uluvai,* பெ (n.) 1 ***உழுவைமீன்;*** a sea-fish, green with brown spots, gobius ornatus 2 ***ஆற்றுமீன் வகை;*** a fresh water-fish, variable, generally fawn-coloured with spots, gobius, giuris. 3 ***கடல் மீன்வகை*** (பாலவா 1085), a sea-fish, brownish gray, saurida tumbil (செ அக.)

**உளுவைகள்**

| ஆற்றுளுவைகள் | கடலுளுவைகள் |
|---|---|
| 1 வெள்ளுளுவை<br>2 கல்லுளுவை<br>3 கோரையுளுவை | 1. மண்ணுளுவை<br>2 குண்டலவுளுவை |

*[உளு + வாய் - உளுவாய → உளுவை ]*



உளுவை

**உளை**[1]**-தல்** *ulai-,* 2 செ கு வி (v.i.) 1. ***குடைச்சல் நோவடைதல்;*** to ache or suffer pain in the limbs, as from weariness, cold, rheumatism கால் உளைகிறது. 2. ***வயிறுளைதல்;*** to suffer griping pain, as with dysentery 3 ***பேறுகால வேதனைப்படுதல்;*** to travail. 4 ***மனம் வருந்துதல்;*** to suffer in mind, to be in distress; to touch deeply "உளையச் சொன்னான்" (கம்பரா கையடை 10) 5 ***அழிதல்;*** to perish; to be destroyed "உளையா வலியொல்க" (தேவா 570.8). 6 ***தோற்றல்;*** to be defeated, vanquished. "சுடருக் குளைந்து" (திவ். இயற் திருவிருத் 69) 7 ***சிதறிப்போ தல்;*** to disperse, scatter, to be diffused "காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளை" (பதிற்றுப். 41.25).

*[உள → உளு → உளை ]*

## உளுவை மீன் வகை





வெள்ளுளுவை



ஊசிக்கணவாய்



கல்லுளுவை



கோரையுளுவை



ஊசிக்கழுத்தி



மண்ணுளுவை

**உளை²-த்தல்** *ulai-*, 2 செ குன்றாவி. (v.t) 1 ***வருத்து தல்;*** to afflict torment, make sorrowful "மாலையென் னுயி ருளைப்பதும்" (கல்லா 70,31) 2 ***வெறுத்தல்;*** to dislike "உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க" (பு வெ 12. இருபாற். 14) (செ அக).

*[உள் → உளு → உளை]*

**உளை³-த்தல்** *ulai-*, 2 செ கு வி (v.i) 1 ***ஒலித்தல்;*** to sound, roar "கடலுளைப்பதும்" (கம்பரா. நட்புக் 45) 2 ***ஊளையிடுதல்;*** to howl, as a jackal. "உலப்பி லின்பமோ டுளைக்கு மோதையும்" (மணிமே 6,111) 3 ***யாழ் ஒலித்தல்*** (திவா): sound of a harp. 4 ***சிந்துதல்;*** over flowing. 5. ***தடவுதல்;*** shampooing (செ.அக.)

*[உள → உளை (உள்ளசைவு) = ஒலித்தல]*

**உளை⁴-த்தல்** *ulai-*, 12 செ குன்றாவி (v.t) ***அழைத்தல்;*** to call, invite (செ அக.).

**து.** ஒளெப்பு

*[உள் → உளை]*

**உளை⁵** *ulai*, பெ (n) ***எழுத்திலாவோசை*** (நாநார்த்த.). (திவா), inarticulate sound. (செ அக.).

*[உளு → உளை = உள்ளீடாகிய எழுத்திலாத ஓசை. எழுத் தினமையின பொருளுமில்லை எனபதாம்]*

**உளை⁶** *ulai*, பெ (n) ***குழைந்த சேற்று நிலம்;*** marsh land. "கரா முளை உழையிற்போக" (பிரமோத் 6,20)

*[உள → உளை - உட்குடைவுள்ளது, செறிவில்லாதது நெகிழும் தனமையுடையது]*

**உளை⁷** *ulai*, பெ. (n.) 1. ***குதிரை, அரிமா போன்றவற்றின் பிடரி மயிர்;*** mane, esp of a horse or lion 2. ***ஆண்களின் கூந்தல்;*** man's hair "உளைபசுங்கொடி யின் வீக்கி" (இரகு தேனுவ. 34) 3 ***தலை;*** head; upper part "மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ" (புறநா 22,21) 4 ***குதிரையின் தலையாட்டம் என் னும் அணி;*** hair plume on a horse's head "பரியுடை நன்மான் பொங்குளை யன்ன". (ஐங்குறு. 13).

**க.** ஒளெ

*[உள் → உளை = அசைதல்.]*

**உளை⁸** *ulai*, பெ (n.) 1. ***பொன்னிறம்;*** golden colour 2 ***விடியற்காலம்;*** dawn. 3. ***மான்;*** deer.

**க.** உளை, **து.** உளெ.

*[உல → உள் → உளை உல் = எரிதல், சிவப்பு.]*

**உளைக்கால்** *ulai-k-kāl*, பெ. (n.) ***மயிர்க்கால்;*** roots of hair (colloq). (செ.அக.).

*[உள் → உளை (உள்ளார்ந்த அடிப்பகுதி) + கால்.]*

**உளைக்குதல்** *ulaikkudal*, பெ (n) ***மார்பு, கை, கால் முதலியன குடைச்சலெடுத்தல்;*** suffering from pain in the breast and the limbs. (சா.அக.)

*[உள் → உளை (உள்ளசைவு.)]*

**உளைச்சல்** *ulaiccal*, பெ. (n.) ***நோதல்;*** pain. (செ.அக.).

**ம.** உளச்சில

*[உள் → உளை → உளைச்சல் (மு தா 314)]*

**உளைந்துபேசு-தல்** *ulaindu-pēsu-*, 5 செ கு வி (v.i.) ***மனம் நொந்து பேசுதல்;*** to express anguish from revolving in mind an injury received. (W.) (செ.அக.).

*[உள் → உளை → உளைந்து + பேசு]*

**உளைப்பு¹** *ulaippu*, பெ (n) ***உளைவு*** பார்க்க; see *ulaivu* "நாக்குளெழு மருப்ப முளைப்புழலை" (தைலவ. தைல 140) (செ.அக).

*[உள் → உளை → உளைப்பு]*

**உளைமயிர்** *ulai-mayir*, பெ. (n.) ***பிடரிமயிர்;*** mane. 'திருமேனியும் உளைமயிருமாய் நின்றநிலை" (ஈடு. 1,9,2) (செ.அக).

*[உள் → உளை = (உள்ளசைவு) அசைதல் உளை + மயிர்]*

**உளைமாந்தம்** *ulai-māndam*, பெ. (n.) ***குழந்தைகளுக் குண்டாகு மொருவகை மாந்த நோய்;*** disease in children arising chiefly from indigestion. (சா அக).

*[உளை + (மந்தம) மாந்தம்]*

**உளைமாந்தை¹** *ulai-māndai*, பெ (n) ***உட்புண்;*** internal abscess (W) (செ அக)

*[உள் → உளை + மாந்தை]*

**உளைவு** *ulaivu*, பெ. (n) 1 ***வயிற்றுளைவு;*** griping pain in the stomach. 2 ***குடைச்சனோவு;*** intense pain in the limbs, as from rheumatism, weariness or cold. (செ அக).

**ம.** உளவு.

*[உள → உளை + உளைவு.]*

**உளைவுக்கண்** *ulaivu-k-kan*, பெ. (n) ***கண்மணியுள் உளைந்து வலிக்கு மொருவகைக் கண்நோய்;*** inflammation of the iris-iritis. (சா.அக.).

*[உள் → உளை → உளைவு + கண்]*

**உளைவெடு-த்தல்** *ulaivedu-*, 4. செ கு.வி (v.i) ***நோவுண்டாதல்;*** to be attacked with griping pain. (செ அக).

*[உள் → உளை → உளைவு + எடு-த்தல்]*

**உற்கட்டிசம்** *urkattidam*, பெ. (n) ***இருக்கை வகை*** (சிலப். 8,25, உரை.); a posture of sitting, one nine tiritaravillā-v-irukkai

**உற்கை** *urkai*, பெ. (n.) ***விண்வீழ் கொள்ளி; எரிமீன்;*** meteor "இழிந்தவா னுற்கை யென்ன" (பாரத. இரண்டா 9).

*[உல் + கை - உற்கை. உல் = எரிதல்]*

**உற்றது** *urradu*, பெ. (n) 1. ***நிகழ்ந்த செயல்;*** that which has happened, event, occurrence "உற்றதெல்லாஞ் சொன்னபின்" (கம்பரா. கைகேசி 5). 2 ***உண்மை;*** truth, fact, what has actually happened. உற்றது சொன் னால் அற்றது பொருந்தும். (செ.அக.).

*[உறு → உற்றது.]*

**உற்றதுரைத்தல்** *urraduraittal,* பெ (n) ***ஒன்றைச் செய்வாயா என்று வினவியவனுக்குத் தனக்கு நேர்ந் துள்ளதைக் கூறும் முகத்தான் மறுப்பதைத் தெரிவிக் கும் விடை*** (நன் 386 உரை); an indirect way of replying in the negative in answer to a question, which consists in the person questioned mentioning as a fact which precludes his answering in the affirmative, as to say 'I am ill' in reply to question "will you do this?" (செ அக )

*[உற்றது + உரைத்தல் ]*

**உற்றபடி** *urra-padi,* பெ (n.) ***நிகழ்ந்தவாறு;*** lit, how a thing has actually happened, hence, truth. ''உற்றபடி... உரைத்தான்'' (பாரத. சடாசுரன். 23) (செ.அக.).

*[உறு → உற்ற + படி ]*

**உற்றவன்** *urravan,* பெ (n) 1 ***சுற்றத்தான்*** (சூடா.); relation 2 ***நண்பன்;*** friend, one who can be trusted 3. ***நோயாளி;*** patient, sick person. ''உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று'' (குறள், 950). (செ.அக.).

ம. உற்றுவன்

*[உறு → உற்ற + அவன்.]*

**உற்றவிடம்** *urra-v-idam,* பெ. (n.) 1. ***துன்பக்காலம்;*** time of distress, hour of trail ''உற்றவிடத்தி லுயிர்வழங் குந் தன்மையோர்'' (வாக்குண். 6). 2. ***நட்பான இடம்;*** place where intimate friends are.

*[உற்ற + இடம.]*

**உற்றளவு** *urralavu,* பெ (n) 1 ***சரியளவு;*** accurate measurement (W.) 2 ***உள் அளவு;*** inside measurement, depth, as of a beam 3 ***உண்மைச் செய்தி;*** real state of things, authentic news (W ) (செ அக.).

*[உறு → உற்ற + அளவு ]*

**உற்றறி-தல்** *urran-,* 2. செ.குன்றாவி (v.t.) 1 ***தொட்டறி தல்;*** to feel by touch, to make observation by the sense of touch ''ஒன்றறி வதுவே யுற்றறிவதுவே'' (தொல் பொருள் 582) 2. ***பயின்றறிதல்;*** to learn by experience (W ) (செ அக.)

*[உற்று + அறி-தல் ]*

**உற்றறிவு** *urarivu,* பெ (n) 1 ***தொடு உணர்வு;*** sensation of touch. 2. ***மெய்யறிவு; நுண்ணறிவு;*** true knowledge, the knowledge of Atman, spiritual knowledge. (செ.அக.)

ம. உற்றறிவு

*[உற்று + அறிவு.]*

**உற்றாண்மை** *urranmai,* பெ. (n) ***நெருங்கியவுரிமை;*** interest among near relatives and friends, intimate friendship, attachment. (W.)

*[உறு + ஆண்மை ]*

**உற்றாண்மைபேசு-தல்** *urranmai-pēsu-,* 10. செ.கு.வி (v.i.) ***பரிந்துபேசுதல்;*** to speak for, as a near relative or friend interested in one's welfare. (W ) (செ அக.).

*[உறு + ஆண்மை + பேசு.]*

**உற்றார்** *urrār,* பெ (n.) 1. ***சுற்றத்தார்;*** relatives. ''உற்றாரை யான்வேண்டேன்'' (திருவாச 39,3). 2. ***நண்பர்;*** friends 3 ***மிக்கவர்;*** those who excel. ''ஓதலுற்றா ருற்று'' (திருக்கோ. 309). (செ அக.).

ம. உற்றார்

*[உறு → (உற்று) உற்றார் ]*

**உற்றாருறவினர்** *urrār-uravinar,* பெ. (n.) ***அரத்தக் கலப்புடைய உறவினர்;*** kith and kin. (செ.அக.).

*[உற்றார் + உறவினர்.]*

**உற்றான்** *urrān,* பெ (n.) 1. ***கணவன்;*** husband ''உற்றார்க்குரியார் பொற்றொடி மகளிர்'' (இறை 14,94) 2. ***உறவினன்;*** relative. (செ.அக.)

*[உறு → உற்றான்.]*

**உற்றிடம்** *urridam,* பெ. (n.) ***துன்பக்காலம்;*** time of trouble or distress. உற்றிடத்துதவுதல். (உ.வ.).

*[உறு + இடம் ]*

**உற்று** *urru,* இடை (part ) 1. ***ஓர் உவமச்சொல்.*** a sign of comparison. ''தோளுற்றொர் தெய்வம்'' (சீவக. 10). 2. ***உணர்ச்சியாய்ப் பரிவு கொண்டு;*** intimately, affectionately, kindly 3 ***நிறைந்து, உடன்;*** full of, with. 4. ***எச்சரிக்கையாய், மனமாழ்ந்து;*** carefully, attentively, deeply. (சேர.நா.)

ம. உற்று

*[உறு → உற்று.]*

**உற்றுக்கேள்-(ட்)த(ட)ல்** *urru-k-kel-,* 11. செ.குன் றாவி (v.t.) ***கூர்ந்து கேட்டல்;*** to listen attentively. (செ.அக.)

*[உறு → உற்று + கேள்.]*

**உற்றுநோக்கு-தல்** *urru-nokku-,* 5. செ.குன்றாவி (v.t.) ***கவனித்துப்பார்த்தல்;*** to look steadfastly. ''உற்று நோக் குழி'' (காஞ்சிப்பு நகரே. 198). 2. ***கூர்ந்தாராய்தல்;*** to examine minutely; to scrutinize carefully. (செ.அக.).

ம. உற்றுநோக்குக

*[உறு → உற்று + நோக்கு.]*

**உற்றுப்பார்-த்தல்** *urru-p-pār-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உற்றுநோக்கு*** பார்க்க, see *urrunokku.* (செ.அக.).

*[உறு → உற்று + பார்.]*

**உற்றுழி** *urruli,* கு வி.எ (adv) 1 ***துன்புறு காலத்தில்;*** at the time of imminent danger ''உற்றுழி யல்லது சொல்ல லின்மையின்'' (தொல். பொருள். 208). (செ.அக ).

*[உறு → உற்று + உழி.]*

**உற்றோர்** *urrōr,* பெ. (n.) ***உற்றார்*** பார்க்க; see *urār.* "உற்றோ ரெல்லாம் உறவின ரல்லர்" (நறுந்) (செ அக.)

ம. உற்றோர்

*[உறு → உற்றார் → உற்றோா.]*

**உற[1]** *ura,* கு.வி எ. (adv.) 1 ***அண்மையில்;*** near, nigh. "ஒல்கியுற நின்றான்" (சீவக. 2014).

*[உறு → உற ]*

**உற[2]** *ura,* இடை. (part.) ***ஓர் உவம உருபு;*** sign of comparison. "முந்துறக் காண்டல்" (தஞ்சைவா. 35, தலைப்பு).

*[உறு → உற ]*

**உற[3]-த்தல்** *ura-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. ***கிள்ளியெடுத்தல்;*** to nip, pinch off, tear open "பொறகை நகத்தாலுறக்கும்" (காளத் உலா, 460) 2. ***பிளத்தல்;*** to split with force, cleave, rend, rive "உகிர்களா லுறக்கும்" (கம்பரா. இரணி 138) 3. ***அழுத்துதல்;*** to squeeze out, as juice உறந்துபிழி (வின்). 4. ***உறிஞ்சுதல்;*** to suck in. இரத்தத்தை உறந்து போட்டது (இவ) 5 ***ஒட்டக் கறத்தல்;*** to milk to the last drop. கன்றுக்கு விடாமல் பாலை உறந்து விட்டான் (இவ). 6 ***முற்றுங்கவர்தல்;*** to drain to the last farthing. அவன் சொத்துகளை யெல்லாம் உறந்து போட்டான் (இவ). 7. ***பிழிதல்;*** pressing out the juice as from leaves, flowers etc 8. ***பிதுக்கல்;*** pressing out the pulp from any grain as in shelling peas etc.

*[உல் → உறு → உற ]*

**உற[4]-த்தல்** *ura-,* 3. செகு.வி (v.i.) 1 ***சிறிதாதல்;*** to be very small, minute, as capable of being nipped. "உறக்குமால் வித்தினுள்ளால்" (காஞ்சிப்பு. கச்சிமயா. 22). 2. ***செறிதல்;*** to crowd, to be close together. "உறந்த விஞ்சி" (தொல் சொல். 347). (செ அக.).

ம. உறக்குக, தெ. உறு

*[உல் → உறு → உற ]*

**உறக்கப்பாட்டு** *urakka-p-pāttu,* பெ. (n.) ***குழந்தைகளைத் தூங்கவைக்கும் பாட்டு; தாலாட்டுப் பாட்டு;*** a cradle-song, lullaby. (சேரநா.).

ம. உறக்குபாட்டு.

*[உறு → உறக்கம் + பாட்டு.]*

**உறக்கம்** *urakkam,* பெ. (n.) 1. ***தூக்கம்*** (திவ் திருப்பா. 12); sleep, slumber, drowsiness. 2. ***சோர்வு;*** weariness, lassitude. 3. ***நடுக்கம்;*** suspension of the faculties by sleep or otherwise. 4. ***மயக்கம்;*** fainting. 5. ***இறப்பு;*** death. (செ.அக.).

ம. உறக்கம், க. ஒரகு. ஒரங்கு; கை. ஒர்க்; துட. வர்க்; குட. ஒரகி, து., பட. ஒரகு, தெ. ஒரகு, பர். ஒர்க்.

*[உறங்கு → உறக்கம்.]*

**உறக்கமருந்து** *urakka-marundu,* பெ. (n.) ***தூக்கமருந்து; உறக்கம் வரும் மருந்து;*** medicine to induce sleep, sleeping - draught. (சேரநா)

ம. உறக்க மருநது

*[உறக்கம் + மருந்து.]*

**உறக்காய்ச்சல்** *ura-k-kāyccal,* பெ. (n.) ***மருந்தின் சத்து இறங்கும்படி காய்ச்சல்;*** boiling a drug in water for extracting its essence. (சா அக.).

*[உறு → உற + காய்ச்சு + அல்]*

**உறக்கு[1]-தல்** *urakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***தூங்கச்செய்தல்;*** to put to sleep, as a child (W.) 2. ***இமையை மூடச்செய்தல்;*** to weigh down the eyelids, as in sleep நித்திரை கண்ணை உறக்குகின்றது (இ.வ.). 3. ***அழித்தல்;*** to destroy, ruin. (W.) என் குடியை உறக்கிப் போட்டான் (இவ.) (செ.அக.).

ம. உறக்கு, பட. ஒரகுசு.

*[உறங்கு → உறக்கு.]*

**உறக்கு[2]** *urakku,* பெ. (n.) ***உறக்கம்*** பார்க்க; see *urakkam* "உறக்கெனு மோடை யானை" (சீவக. 3075). (செ.அக.)

*[உறங்கு → உறக்கு ]*

**உறக்குத்து[1]** *ura-k-kuttu,* பெ. (n.) ***மரங்களில், தவசங்களில் உண்டாகும் புழுக்குத்து;*** damage caused (to timber or corns) by worms (சேரநா.).

ம. உறக்குத்து

*[உறு → உற + குத்து ]*

**உறக்குத்து[2]-தல்** *urakkuttu-,* 6. செ.குன்றாவி. (v.t.) 1. தவசம், மரம் முதலியவற்றைப் புழுக்குத்துதல்; to be worm-eaten (as wood etc.); to be eaten by insects. (சேரநா.).

ம. உறக்குத்துக

*[உறு → உற + குத்து.]*

**உறகு-தல்** *uragu-,* 4. செ.கு.வி. (v.i.) ***ஒடுங்கித் தூங்குதல்;*** to sleep. "பறவை யரையாவுறகல்" (திவ். பெரியாழ். 5,2,9).

க., பட. ஒரகு.

*[உறங்கு → உறகு.]*

**உறங்காப்புளி** *urangā-p-puli,* பெ. (n.) ***இரவில் இலை குவியாத புளிய மரம்;*** species of tamarind tree whose leaves do not fold up at night. (செ.அக.).

*[உறங்காத + புளி.]*

**உறங்காப்புளியன்** *urangā-p-puliyan,* பெ. (n.) ***ஒரு சிறுதெய்வம்;*** an inferior deity. "உன்னி வளர்ந்த உறங்காப் புளியனென்னும்" (பஞ்ச. திருமுக. 736). (செ.அக.).

*[உறங்காத → உறங்கா + புளியன்.]*

**உறங்கி** *urangi,* பெ (n) ***புளியமரம்*** (சங் அக.), tamarind tree (செ அக )

*[உறங்கு → உறங்கி இரவில் இலைகள் குவிந்து - உறங்கி யிருப்பதால உறங்கி ]*

**உறங்கு-தல்** *urangu-,* 15 செ கு வி (v.i.) 1 ***தூங்குதல்*** (குறள், 339), to sleep, slumber. 2 ***தூக்க மயக்கமுறு தல்;*** to feel drowsy, as on account of a tedious journey, disease, or want of food 3. ***ஒடுக்கநிலையடை தல்;*** to become closed, to droop, as flowers or leaves by the absence of the sun ''தண்டலைக் காவுறங்கின'' (தமிழ்நா 132). 4 ***சோர்தல்;*** to be weary 5 ***தங்குதல்;*** to dwell, abide, reside. ''தாமரை யுறங்குஞ் செய்யாள்'' (கம்பரா. நாட்டுப் 6)

**து.** ஒரங்கு, ஒரகுனி, **தெ.** ஒரகு, **கோண்.** வீரனகு, **பர்.** ஓக், **ம.** உறங்ஙக, **எர.,** **பட.** ஒரகு, **க.** ஒரகு, ஒரங்கு, **துட.** வொரக், **கோத.** ஓர்க், **குரும்.** வொகினெ, **குட.** வரகு, ஓர்

*[உற → உறங்கு ]*

**உறங்குசுறா** *urangu-šurā,* பெ (n.) ***சுறா மீனின் ஒரு வகை;*** a kind of shark.

*[உறங்கு + சுறா ]*



உறங்குசுறா

**உறங்கொட்டாமை** *urangottāmai,* பெ. (n.) ***தூக்கம் பிடியாமை;*** sleeplessness. (சா அக ).

*[உறக்கம் + ஒட்டாமை - உறக்கொட்டாமை → உறங்கொட் டாமை ]*

**உறட்டல்** *urattal,* பெ (n.) ***வறட்சி;*** sterility.

*[உறட்டு → உறட்டல் ]*

**உறட்டலன்** *urattalan,* பெ. (n.) ***உடல் வற்றியவன்;*** slim, thin, lank person, emaciated person.

*[உறன் → உறட்டவன் → உறட்டலன் ]*

**உறட்டற்களி**[1] *urattarkali,* பெ. (n.) ***வறண்ட களிமண் தரை;*** sterile, clayey soil (W.). (செ.அக.).

*[உறணடல → உறட்டல + களி.]*

**உறட்டி** *uratti,* பெ (n.) 1 ***வறண்டது;*** that which is dried. 2. ***அப்பம்;*** a kind of cake.

*[உல் → உர் → உரட்டு → உறட்டு → உறட்டி = வெப்பம் மிகுதல், சுடுதல், காய்தல் ]*

**உறட்டு**[1]**-தல்** *urattu-,* 6 செ குன்றாவி (v t) ***வறட்டுதல்;*** to dry, reduce, cause to wither, emaciate (W.)

*[உல் → உர் → உரட்டு → உறட்டு ]*

**உறட்டு**[2] *urattu,* பெ. (n.) ***கரம்பை நிலம்;*** rugged uneven ground as dried mud which hurts the feet. (J ) (செ அக.)

*[உறணடு → உறட்டு ]*

**உறட்டுக்கண்** *urattu-k-kan,* பெ (n) ***ஓரக்கண்;*** squint eye (Loc ).

*[உல் → உர் → உரு → உறல் → உறள் → உறட்டு + கண் உறடடு = தீய, கொடிய, வளைந்த ]*

**உறட்டுக்கை** *urattu-k-kai,* பெ. (n.) ***இடக்கை;*** left hand. (செ அக.).

**ம.** எடங்கை

*[உறள் - மாறான, மாறுபட்ட உறட்டு + கை. ஒரட்டாங்கை, ஒட்டாங்கை என்பன கொச்சை வழக்கு ]*

**உறட்டை** *urattai,* பெ (n ) ***கெட்ட நாற்றம்;*** bad offensive smell, stench, as of a carcass, of bugs (J ) (செ அக )

*[உறள் → உறட்டு → உறட்டை = வெப்பம் அல்லது வெயில் படுதலால் பரவும் முடைநாற்றம் ]*

**உறட்டையடி-த்தல்** *urattai-y-adi-,* 4. செ.கு வி. (v i.) ***கெட்ட நாற்றம் வீசுதல்;*** to smell offensively (J.) (செ அக.).

*[உறள் → உறட்டு → உறட்டை + அடி ]*

**உறட்டைவீசு-தல்** *urattai-višu,* 10. செ.கு.வி. (v i.) ***உறட்டையடி*** பார்க்க, see *urattai-y-adi* (செ.அக ).

*[உறள் → உறட்டு → உறட்டை + வீசு ]*

**உறண்டல் மண்** *urandal-man,* பெ. (n.) ***வறள் மண்;*** dried soil

*[உறண்டல் + மண் ]*

**உறண்டற்களி** *urandar-kali,* பெ (n.) ***உறட்டற்களி*** பார்க்க; see *urattarkali*

*[உறண்டல் + களி ]*

**உறண்டு-தல்** *urandu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***வறளுதல்;*** to become reduced, emaciated, by journeying, by want of sufficient food, by disease (J ). சாப்பாடில் லாமல் உறண்டிப் போனான் (இ வ.). (செ.அக.).

*[உறள் → உறண்டு → உறண்டு-தல் = வெம்பிக் காய்தல், மெலிதல் ]*

**உறண்டை** *urandai,* பெ. (n) 1. ***தொல்லை தருதல்;*** annoying, harassing, mischievous or offensive sport, as pinching, pushing. 2 ***முரட்டுத்தனம்;*** sourness or coarseness of disposition. 3. ***கெட்ட நாற்றம்;*** rank smell, as of bugs, of fish, or rancid ghee. (செ அக.)

*[உறள் → உறண்டு → உறண்டை.]*

**உறண்டைக்கு நிற்றல்** *urandaikku-nirral,* பெ. (n.) ***முரணுகை;*** disagreeing, dissenting (W.). (செ அக.).

*[உறண்டை + கு + நிற்றல் ]*

**உறண்டையடி-த்தல்** *urandai-y-adi-,* 4 செ கு.வி. (v.i.) ***உறட்டையடி-த்தல்*** பார்க்க; see *urattai-y-adi*

*[உறண்டை + அடி ]*

**உறண்டையாடு-தல்** *urandai-y-ādu-,* 5. செ கு வி (v.i.) ***அலைக்கழித்தல்;*** to annoy, harass (W.) (செ அக.).

*[உறண்டை + ஆடு ]*

**உறண்டையிடு-தல்** *urandai-y-idu-,* செ குன்றாவி (v.t.) ***உறண்டையாடு*** பார்க்க; see *urandai-y-ādu* (செ அக )

*[உறண்டை + இடு ]*

**உறந்தி** *urandi,* பெ (n.) ***உறங்கி*** பார்க்க; see *urangi* (சா அக )

*[உறங்கி → உறந்தி (கொ வ )]*

**உறந்தை** *urandai,* பெ. (n) ***உறையூர்;*** uraiyūr in Tiruchirāpalli an ancient capital of the Cōla kingdom "சோழ ருறந்தை யவையத்து" (புறநா. 39). (செ அக )

*[உறு → உறை → உறைநதை → உறந்தை உறை = தங்கு, வாழ்நதிரு ]*

**உறப்பு**[1] *urappu,* பெ (n) ***செறிவு;*** denseness, thickness, closeness "விறப்பு முறப்பும் வெறிப்புஞ் செறிவே" (தொல் சொல் 347).

*[உறு → உற → உறபபு ]*

**உறப்பு**[2] *urappu,* பெ. (n.) ***பிளப்பு*** (நாநார்த்த ); cleavage. (செ அக.).

*[உறு → உற → உறப்பு ]*

**உறமுறையார்** *ura-muraiyār,* பெ. (n.) ***உறவின்முறையார்*** பார்க்க, see *uravinmuraiyār.* (செ.அக.).

*[உறவு + முறையார் = உறவுமுறையார் → உறமுறையார் (கொ வ ) ]*

**உறல்** *ural,* பெ. (n.) 1. ***அடைகை;*** being near, coming, drawing near, approaching. "உறற்பால வூட்டா கழியு மெனின்" (குறள். 378). 2. ***உறவு; உறவின் முறை;*** relationship "உறன்முறையா னுட்பகை தோன்றின்" (குறள், 885). 3. ***தொடுகை;*** tactile sense, a property of the skin "நாற்றத் தோற்றச் சுவையொலி யுறலாகி நின்ற" (திவ். திருவாய். 3,6,6). (செ அக.)

*[உறு → உறல்.]*

**உறவன்**[1] *uravan,* பெ. (n.) ***உறவுடையான்*** (சங். அக.); relation. (செ அக.).

ம. உறவன்

*[உறவு + அன்.]*

**உறவன்**[2] *uravan,* பெ. (n) ***ஒருவகைப் பட்டு;*** a kind of silk. (சேரநா )

ம. உறவன்

*[உறு → உறவு → உறவன் ]*

**உறவாக்கி** *uravākki,* பெ (n) 1 ***இயைதல் படும்படி செய்யும் மருந்துச் சரக்குகள்;*** drugs or medicine acting as chemical agents 2 ***இயைபுறும் பொருள்;*** that which induces chemical combination 3 ***மருந்துகளை இயை விப்போன்;*** a pharmaceutical chemist 4 ***மாழைகளை வாத முறையின்படி கலக்கச் செய்து இயைபுறுத்தி மாற்றமடையச் செய்வோன்;*** (In alchemy) one who practises the obsolete art which aims at the transmutation of metals, alchemist. (சா அக ).

*[உறவு + ஆககி ]*

**உறவாக்கு-தல்** *uravākku-,* 5 செ குன்றாவி (v.t) ***அமைதி செய்தல்;*** to reconcile, conciliate (J.). (செ அக )

*[உறவு + ஆக்கு ]*

**உறவாடு-தல்** *uravādu-,* 5 செ கு வி (v.i) 1 ***உறவு கொண்டாடுதல்;*** to be on terms intimacy with one's relations 2 ***நட்புப் பாராட்டுதல்;*** to be friends with "தம்பலவாயொடு பேசிக் கொண்டுறவாடி" (திருப்பு 581) (செ.அக )

*[உறவு + ஆடு ]*

**உறவாளி** *uravāli,* பெ. (n.) ***உறவினன்;*** relation. (செ அக.)

*[உறவு + ஆள + இ ]*

**உறவி**[1] *uravi,* பெ (n) 1. ***உயிர்*** (பிங்.); life, soul. 2 ***உறவு*** (திவா ), relationship. 3 ***இவ்வுலகத் தொடர்பு*** (திவா ), worldly attachment 4 ***எறும்பு;*** ant "உறவி யோம்பி யொதுஙகியும்" (சீவக 3119) 5 ***ஒருவகைப் பூச்சி;*** a moth varrat port. 6. ***மலைமுருங்கை*** (மலை.); wild drumstick tree, prickly sesban.

ம. உறவி, க. ஒர, தெ. உறு

*[உறு → உறவி = உறவு கொண்டு நெருங்கி வாழும் இயல் புடைய எறும்புகள் ]*

**உறவி** *uravi,* பெ. (n) 1. ***நீரூற்று*** (பிங்.); spring, fountain. 2 ***கிணறு*** (பிங்.), well.

*[உல் → உறு → உறவி உறு = மிகுதல், நீரூறுதல் ]*

**உறவி**[3] *uravi,* பெ. (n.) ***உலைக்களம்*** (பிங்.); smith's forge.

*[உல் → உறு → உறவி ]*

**உறவிடம்** *uravidam,* பெ. (n.) ***மூலம்;*** source, origin.

*[உறு → உற + இடம் ]*

**உறவின்முறையார்** *uravin-muraiyār,* பெ. (n.) ***உறவினர்;*** relations. "உறவின் முறையார்கள் பகையும்" (குமரே. சத. 22). (செ.அக.).

*[உறவு + இன் + முறை + ஆர். உறவுத் தொடர்புகளால் முறைப்படி நெருங்கி வாழும் இயல்பினர் ஒரம்பர என இச்சொல் மருவி வழங்குவது கடுங்கொச்சை வழக்கு இன் சாரியை.]*

**உறவு**[1] *uravu,* பெ. (n.) 1. ***உறுகை;*** entering upon, commencing. "யானையோ டாட லுறவு" (பழ. 16). 2. ***சுற்றம்;*** relation, relationship "உருவே யென்னுறவே யென்னூனே" (தேவா. 482,1). 3. ***நட்பு;*** friendship, love, intimacy. "ஒருவே னொடுநீ யுறவாக லையோ" (கம்பரா. கடிமண. 14). 4. ***விருப்பம்;*** desire. "தலைவ னைக் காணவுறவினளாம்" (இறை. களவி. 11. உரை) 5. ***உலகப்பற்று*** (திவா.); worldly attachment, opp. to துறவு. (செ.அக.).

ம. உறவு; க. ஒலுவு.

*[உறு → உறவு.]*

**உறவுகல-த்தல்** *uravu-kala-,* 3. செ.கு.வி. (v.i.) 1. ***திருமணத்தினால் புதிய தொடர்பு ஏற்படுதல்;*** to form new relationship by intermarriage. 2. ***தொடர்பு பாராட்டு தல்;*** to be friends. "காகமுறவு கலந்துண்ணக் கண்டீர்" (தாயு. காடுங்கரையும், 3). (செ.அக.).

*[உறவு + கல-]*

**உறவுகூடு-தல்** *uravu-kūḍu-,* 5. செ.கு.வி. (v.i.) ***நட்பா தல்;*** to become friends, to grow intimate. (W.). (செ.அக.).

*[உறவு + கூடு]*

**உறவுமுரி-தல்** *uravu-muri-,* 4. செ.கு.வி. (v.i.) ***நட்புக் கெடுதல்;*** to cease to be friends, become disunited. (W.). (செ.அக.).

*[உறவு + முரி]*

**உறவுமுறை** *uravu-murai,* பெ. (n.) ***சுற்றம்;*** relationship, kinship. உறவுமுறையாராம் இத்தனையோ வேண்டுவது (ஈடு. 5,6,7). (செ.அக.).

*[உறவு + முறை.]*

**உறவுமுறையார்** *uravu-muraiyār,* பெ. (n.) ***உறவுமுறை*** பார்க்க; see *uravu-murai.*

*[உறவு + முறை + ஆர்]*

**உறவெடு-த்தல்** *uraveḍu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***ஊறிவருதல்;*** to ooz out. 2. ***உண்டாதல்;*** to orginate, form. (சேரநா.).

ம. உறவெடுக்குக.

*[உறவு + எடு.]*

**உறவோர்** *uravōr,* பெ. (n.) 1. ***சுற்றத்தோர்;*** relation. 2. ***சிறந்தோர்;*** persons of eminence.. 3. ***சூழ்ந்தோர்;*** companion. 4. ***குடியிலிறந்தோர் பெயர்;*** deceased name in a family 5. ***நண்பர்;*** friends.

*[உறவு + (ஆர்) ஓர்]*

**உறழ்**[1]**-தல்** *uraḻ-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***வேறுபடல்;*** to admit of option, in combination of words, as to whether a letter undergoes any change or remains unchanged. "கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்" (நன். 217). 2. ***திரிதல்;*** to change, vary. "உறழ்ச்சி வாரத்து" (தொல். எழுத். 102). 3. ***எதிராதல்;*** to be contrasted. "உறழுங் கிளவி" (தொல். பொருள். 238).

*[உறு → உறன் → உறழ்.]*

**உறழ்**[2]**-தல்** *uraḻ-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ***செறிதல்*** (திவா.); to be close, dense, crowded. 2. ***ஒன்றனான் ஒன்று மிகுதல்;*** to be compared with.

*[உறு → உறள் → உறழ்]*

**உறழ்**[3]**-தல்** *uraḻ-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***இடையிடுதல்*** (திவா.); to interfere. 2. ***வீணையில் அல்லது யாழில் ஒரு நரம்பைவிட்டு ஒரு நரம்பைத் தெறித்தல்;*** to change, as the string in playing a *vīṇā.* "வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்" (பொருந. 23). 3. ***பெருக்குதல்;*** to multiply. "இருநான்குருபு முறழ்தர" (நன். 240). 4. ***ஒத்தல்;*** to resemble. "துப்புறழொண்டளிர்" (ஐங்குறு. 273).

*[உறு → உற → உறழ். உற = மிகுதல், அதிகரித்தல், நெருக்கம் மிகுதல் உறழ் = மிகச்செய்தல், அதிகரிக்கச்செய்தல்.]*

**உறழ்கலி** *uraḻ-kali,* பெ. (n.) ***கலிப்பா வகை;*** a variety of Kali verse in which statement and response alternate. "கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும் போக்கின்றாக லுறழ்கலிக் கியல்பே" (தொல். பொருள். 468). (செ.அக.).

*[உறழ் + கலி.]*

**உறழ்குறி-த்தல்** *uraḻ-kuri-,* 4. செ.கு.வி. (v.i.) ***சொற்போர் செய்யக் கருதுதல்;*** to intend to engage in a disputation. "உறழ்குறித்தெடுத்த... கொடியும்" (பட்டினப். 171). (செ.அக.).

*[உறழ் + குறி.]*

**உறழ்ச்சி** *uraḻcci,* பெ. (n.) 1. ***மாறுபாடு;*** rivalry, competition. "சுண்ண வுறழ்ச்சியுள் வெல்வது" (சீவக. 879). 2. ***திரிகை;*** changing. "உறழ்ச்சிவாரத்து" (தொல். எழுத். 102) 3. ***வேறுபாடு*** (நன். 123, மயிலை.); (Gram.) admission of an option in the combination of words in regard to a letter undergoing a change or remaining unchanged.. 4. ***யாப்பில் குறுகிய நெடிய அசைகள் அல்லது எண்கள் பல இணைத்து வரும் இணைப்பு*** (யாப். வி. 95, 471.); all possible combinations of certain given numbers, or of the short and the long syllables in metre. (செ.அக.).

*[உறழ் → உறழ்த்தி → உறழ்ச்சி.]*

**உறழ்ப்பு** *uralppu*, பெ. (n.) 1. ***பண்வகை*** (காந்தார பஞ்சமம்) (பிங்.); a specific melody - type. 2. ***நெருக்கம்;*** denseness, closeness. (செ.அக.).

*[உறு → உற → உறழ் → உறழ்ப்பு.]*

**உறழ்பொரு** *ural-poru*, பெ. (n.) ***உவமையினும் பொருளை மிகுத்துக் கூறும் ஒப்பு*** (தொல். சொல். 78. உரை); comparison of degree, opp. to உவமப் பொரு. (செ.அக.).

*[உறழ் + பொரு.]*

**உறழ்பொருள்** *ural-porul*, பெ. (n.) ***ஒப்பு மாறுபடக்கூறுவது*** (தொல். சொல். 16, சேனா.); that which is compared with another. (செ.அக.)

*[உறழ் + பொருள்]*

**உறழ்வு** *uralvu*, பெ. (n) 1 ***உறழ்ச்சி***[3] பார்க்க; see *uralcci-*, "அல்வழி யவற்றோ டுறழ்வும்" (நன். 227). 2. ***பகை*** (திவா.); enmity, hostility. 3. ***போர்*** (திவா.); battle. 4. ***இடையீடு*** (திவா.); obstacle, impediment. 5. ***ஒப்பு;*** resemblance, likeness "ஐந்துவாளியே யுறழ் வென" (பாரத. சூது 77). 6. ***செறிவு.*** (திவா.); closeness denseness, as of a forest. 7. ***உணர்வு*** (திவா.); perception. 8. ***காலம்*** (சூடா.); time. (செ.அக.).

*[உறழ் → உறழ்வு]*

**உறழ** *urala*, இடை. (part.) ***உவமையுருபு;*** sign of comparison. "என்ன வுறழத் தகைய நோக்கொடு" (தொல். பொருள். 287). (செ.அக.).

*[உறு → உறழ் + அ.]*

**உறள்** *ural*, பெ. (n.) 1. ***ஒருவகை ஈ;*** a kind of bee. 2. ***ஒருவகைப் புழு;*** wood-worm. 3. ***தீப்பொறி;*** a spark. 4. ***ஓரினமீன்;*** a kind of fish. (சேரநா.).

ம. உறள்

*[உல் → உறு → உறல் → உறள். உல் = குத்துதல்.]*

**உறன்முறை** *uran-murai*, பெ. (n.) ***உறவுமுறை*** பார்க்க; see *uravu-murai*. "உறன் முறையா னுட்பகை தோன்றின் " (குறள், 885). (செ.அக.).

*[உறு → உற → உறவு + இன் + முறை → உறவின்முறை → உறன்முறை.]*

**உறாதவன்** *urādavan*, பெ. (n.) ***நொதுமலன்;*** one who is neither friend nor foe, neutral. "உறாஅதவர் போற் சொலினும்" (குறள், 1096). (செ.அக.).

*[உறு → உறாத + அவன்]*

**உறாமை** *urāmai*, பெ. (n.) ***மதியாமை;*** cavalier act. "ஒருவரை மதியா துறாமைகள் செய்தும்" (தேவா. 1115,1). (செ.அக.).

*[உறு → உறா + மை]*

**உறார்** *urār*, பெ. (n.) ***பகைவர்;*** foes. "உறாரிலாவகை" (விநாயகபு. 22,44). (செ.அக.).

*[உறு + ஆர்]*

**உறாவரை** *urāvarai*, பெ. (n.) ***முற்றூட்டு;*** land or property in full possession. "இதெந்தை யுறாவரை" (திருக்கோ. 252). (செ.அக.).

*[உறு + ஆவரை. ஆவரை = எல்லை.]*

**உறாவு-தல்** *urāvu-*, 7. செ.கு.வி. (v.i.) 1. ***சோர்தல்;*** to be weary, exhausted; to faint. இவள் பரிஸரத்தி லுள்ளவையிறே உறாவிக் கிடப்பன (ஈடு, 6,8,4). (செ.அக.).

*[உறத்தல் = மிகுதல், சோர்வு, உறவு → உறாவு.]*

**உறி**[1]**-தல்** *uri-*, 2. செ.குன்றாவி. (v.t.) ***உறிஞ்சுதல்;*** to snuff up, sip up. (செ.அக.).

க. உறி.

*[உறு → உறி = உறச்செய், பெறச்செய், நுகரச்செய்.]*

**உறி**[2] *uri*, பெ. (n.) ***பண்டம் வைக்கும் பொருட்டுத் தொங்கவிடும் உறி;*** hoop or a network of rope for placing pots, and suspended by a cord from the roof of a house, from the hand, or from the end of a pole carried on the shoulder. (செ.அக.). 2. ***ஏணை;*** children's hummock.

ம. உரி; க. உட்டி, ஒட்டி, உரி; **கோத.** உர்ய; **து.** உரிகச்செ(சிறு மணி), **தெ.** உட்டி.

*[உறு → உறி. உறு = பொருந்து. உறி = பொருந்துமிடம்.]*

**உறிக்கா** *uri-k-kā*, பெ. (n.) ***இரு பக்கத்திலும் உறிதொங்கிய காவடி;*** balancing pole used by pilgrims for carrying burdens. "உறிக்கா வூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்" (பெரும்பாண். 171). (செ.அக.)

*[உறி + கா.கா → காவடி = காவுகின்ற (சுமக்கின்ற) வடி (தடி.).]*

**உறிச்சமணர்** *uri-c-camaṇar*, பெ. (n.) ***சமணமுனிவரி லொருசாரார்;*** ascetics of the Jaina sect who sit in swings that they may not tread upon and thus destroy insect life. (செ அக.).

*[உறி + சமணர். உறியில் அமர்ந்த சமணர்.]*

**உறிஞ்சு-தல்** *urinju-*, 10. செ.குன்றாவி. (v.t.) 1. ***வாயால் உள்ளிழுத்தல்;*** to sip, suck up, draw into the mouth, as in tasting liquids. "நன்குறிஞ்சிப் பேய்த்தநஞ் சுவைத்தார்" (அஷ்டப். திருவே. மாலை, 41 ) 2. ***மூக்கால் உறிஞ்சுதல்;*** to snuff up, sniff, draw in sharply through the nose. "மூக்குறிஞ்சி முலையுணாயே" (திவ் பெரியாழ். 2,2,2). 3. ***உள்ளேயிழுத்தல்;*** to suck up, take in, absorb, as a sponge. மழைநீரைப் பூமி உறிஞ்சி விட்டது (உ.வ.). (செ.அக.).

ம. உறிஞ்சுக.

*[உல் → உறு → உறி → உறிஞ் → உறிஞ்சு உரிஞு கொற்றா, நாகா, மாடா எனவரும் இலக்கண மேற்கோள்களில் றகரம் ரகரமாகத் திரிந்தது.]*

**உறிஞ்சுப்பு** *urinjuppu,* பெ. (n.) ***மூக்கால் முகரும் ஒரு வகையுப்பு;*** volatile salt used as a stimulant - smelling salt. (சா அக )

*[உறிஞ்சு + உப்பு.]*

**உறியடி** *uṟ-y-aḍi,* பெ. (n) ***கண்ணன் பிள்ளைப் பருவத்தில் உறிவெண்ணெ யெடுத்ததைக் கொண் டாடும் திருநாள்;*** annual festival in Āvani corresponding to August-September in which herdsmen break pots suspended in networks of rope, to commemorate the mythological story of Sri Krishna stealing butter during His childhood. (செ.அக.).

ம. உறியடி.

*[உறி + அடி ]*

**உறியடுக்குச்சட்டி** *uṟ-y-aḍukku-c-catti,* பெ. (n.) ***உறி யில் வைக்கப்படும் அடுக்குப்பானை;*** a number of small kitchen utensils placed one over the other and suspended from the roof in a net work of rope. (W.) (செ.அக.).

*[உறி + அடுக்கு + சட்டி.]*



உறியடுக்குச்சட்டி

**உறிவலை** *uṟ-valai,* பெ. (n.) 1. ***சிறிய மீன்களைப் பிடிக்கப் பயன்படுத்தும் ஒருவகை வலை;*** a kind of fishing-net.

ம. உறிவல

*[உறி + வலை.]*

**உறு[1]-தல்** *uṟu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***இருத்தல்;*** to be, exist. 2 ***நேர்தல்;*** to happen, occur, befall, as good or evil. ''மெய்த்திரு வந்துற்றாலும்'' (நள சுயம். 5). 3. ***தங்குதல்;*** to dwell, reside. 4 ***நன்மையாதல்;*** to be desirable, useful, worthy of choice ''இரவாமை கோடியுறும்'' (குறள். 1061) 5. ***உறுதியாதல்;*** to be permanent, lasting, stable. ''வேல்வா யுயிர் வழங்கும் வாழ்க்கையுறும்'' (பு.வெ. 2.13) 6 ***மனத்தில் நிகழ் தல்;*** to pass in one's mind. ''நினக்குறுவது சொல்லுதி'' (கம்பரா கும்பக 325). 7. ***மிகுதல்;*** to be numerous ''பல்லெலாம் உறத்தோன்றும் பகுவாயாள்'' (கம்பரா. சூர்ப்ப 138) 8 ***சார்ந்திருத்தல்;*** to be attached. ''அங்குற்றே னல்லேன்'' (திவ். திருவாய் 5,8,2). 9. ***பொருத்துதல்;*** to join, associate with. ''நீலுறு மணிசெய் மாடம்'' (இரகு. நகரப். 42) 10 ***படுதல்;*** to touch, come in, contact with. ''நெருப்புற்ற போல'' (சீவக. 2339). 11. ***ஓரிடம் அடைதல்;*** to move towards a point. ''எங்குற்றா யென்ற போதா லிங்குற்றே னென்கண் டாயே'' (தேவா. 1190.8).

*[உல் → உறு.]*

**உறு-தல்** *uṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***வருந்துதல்*** (பழ. 226); to suffer. 2. ***பழுதுபடுதல்*** (குறள், 662); to be infructuous, damaged, spoiled.

*[உல் → உறு ]*

**உறு[3]-தல்** *uṟu-,* 4. செ.குன்றாவி (v.t) 1. ***தொடுதல்;*** to perceive by touch. ''கண்டு கேட் டுண்டுயிர்த் துற்றறி யும்'' (குறள், 1101). 2. ***அன்பு கொள்ளுதல்;*** to love. ''யாமுற்றா லுறாஅதவர்'' (குறள், 1245) 3. ***ஒத்தல்;*** to resemble ''உண்டுபொழி லிமையவர்க ளுலக முறுவதுவே'' (சீவக. 1780). 4. ***தொடங்குதல்;*** to begin, commence, start, usu. with a vbl. noun. ''யான் மொழியலுற்றேன்'' (கம்பரா நாட்டுப்.1) 5. ***அடைதல்;*** to approach, gain access to, each. 6. ***நுகர்தல்;*** to enjoy. ''உற்றலாற் கயவர்தேறார்'' (தேவா. 523, 8.). 7. ***நினைத்தல்;*** to think. ''வில்லு மல்ல திழைக்க லுறாள்'' (திவ் பெரியாழ். 3,7,8).

ம. உறுக க.உறு, ஊறு; துட. உர்வ்; து. உந்துனி; தெ. உறு.

*[உல் → உறு → உறு-தல் (வேக. 40,41,42 ]*

**உறு[4]-த்தல்** *uṟu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***அடைவித் தல்,*** to cause to move towards a point. 2. ***சேர்வித்தல்;*** to cause to join.

*[உல் → உறு ]*

**உறு[5]-த்தல்** *uṟu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***துன்புறுத்து தல்;*** to cause to suffer. 2. ***முள்போல் குத்துதல்;*** to pierce. 3. ***மிகச் சினத்தல்;*** to have wrath.

*[உல் → உறு ]*

**உறு[6]** *uṟu* பெ.எ. (adj.) மிக்க; much, abundant, copious. ''உறு.... மிகுதி செய்யும் பொருள்'' (தொல். சொல். 301). (செ.அக.).

ம. உறு, க. உறு, உறை, து. உறுபு, உறும்பி; தெ. றவு.

*[உல் → உறு ]*

**உறுக்காட்டம்** *uṟukkāṭṭam,* பெ. (n.) 1. ***அதட்டுகை;*** rebuking, threatening, reprimanding. 2. ***அதிகாரஞ் செலுத்துகை;*** command, exercise of authority. (செ.அக.).

*[உறுக்கு + ஆட்டு. ஆட்டு → ஆட்டம்.]*

**உறுக்காட்டியம்**[1] *uṟukkāṭṭiyam,* பெ. (n.) ***உறுக்காட்டம்*** பார்க்க, see *uṟukkāṭṭam.* (செ.அக.). அவனுடைய உறுக்காட்டியத்தைப் பார் (வின்.).

*[உறுக்கு + ஆட்டு. ஆட்டு → ஆட்டியம்.]*

**உறுக்கு**[1]**-தல்** *uṟukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***அதட்டுதல்;*** to menace, threaten. "தஞ்சொலாற்றின் வந்திடாவிடி லுறுக்கி வளாரினா லடித்து" (சி.சி. 2,16). 2. ***சினத்தல்;*** to address with harshness, severity, anger உறுக்கிக் கட்டுவிப்பாரைப் போலே (ஈடு. 7,1,1.). 3. ***தண்டித்தல்;*** to punish. "காலனைத் தானலற யுறுக்கிய சேவடியான்" (தேவா. 524,4.). 4 ***தாண்டுதல்*** (பிங்.); to jump, leap over. (செ.அக.).

ம. உறுக்குக

*[உல் → உறு → உறுக்கு.]*

**உறுக்கு**[2] *uṟukku,* பெ. (n.) ***அதட்டுகை;*** threatening. "உறுக்குறு சொல்லர்" (கம்பரா. பஞ்சசேனா. 66). (செ.அக.)

*[உல → உறு → உறுக்கு.]*

**உறுகண்** *uṟu-kaṇ,* பெ. (n.) 1. ***வருத்தம்;*** suffering, affliction, distress. "உறுகணோம்பல்" (தொல் பொருள். 239). 2 ***நோய்*** (பிங்.); disease. 3. ***ஏழ்மை*** (சூடா.); poverty, want. 4. ***அச்சம்*** (சூடா.); fear. (செ.அக.).

*[உல் → உறு + கண் (சொல்லாக்க ஈறு).]*

**உறுகண்ணாளர்** *uṟukaṇṇāḷar,* பெ. (n.) ***நோயாளிகள்;*** patients. (சா.அக.).

*[உறுகண் + ஆள் + அர்.]*

**உறுகணாளன்** *uṟukaṇ-āḷaṉ,* பெ. (n.) 1. ***வறுமையன்;*** poor, destitute, indigent person. "உறுகணாளரிற் கடைகழிந்து" (சிலப். 10,48.). 2. ***தீவினையாளன்.*** (சிலப். 10,48 உரை); one who suffers the inevitable effects of the sins he had committed in previous births. (செ.அக.).

*[உறு + கண் + ஆளன்.]*

**உறுகிழாத்தி** *uṟukiḻātti,* பெ. (n.) ***மீன்வகை;*** a kind of fish. "உறுகிழாத்தி காலை மாலை" (பறாளை. பள்ளு.75). (செ.அக.).

*[உறு + கிழாத்தி.]*

**உறுகுங்கனலி** *uṟuguṅkaṉali,* பெ. (n.) ***பிரண்டை;*** square stalked vine-vitis quadrangularis. (சா.அக.).

*[உறுகும் + கனலி.]*

**உறுகோள்** *uṟu-kōḷ,* பெ. (n.) ***நிகழ்வு;*** happening, event. "ஒரு மூவேங்கலந்த காலைக் குளங்கோடு மென்றிதுவு முறுகோளே" (கம்பரா. சூர்ப்ப. 140). (செ.அக.).

*[உறுகொள் → உறுகோள் = நிகழ்வு கொண்டது, நிகழ்ச்சி.]*

**உறுசுவை** *uṟu-šuvai,* பெ. (n.) ***ஒரு செய்யுள் அணிவகை*** (மாறன். 235), figure of speech in which a particular object is described as being superior in sweetness to a series of several sweet objects.

**உறுசூது** *uṟu-šūdu,* பெ. (n.) ***ஏய்ப்பு; ஏய்த்தல்;*** deceit. (ஆ.அக.).

*[உறு + சூது.]*

**உறுத்தல்**[1] *uṟuttal,* பெ. (n.) 1. ***மிகுக்கை*** (பிங்.); increasing 2. ***ஒற்றுகை*** (திவா.), bringing into contact, clapping. (செ அக.).

*[உவ → உறு → உறுத்து → உறுத்தல்.]*

**உறுத்தல்**[2] *uṟuttal,* பெ (n.) 1. ***கண்ணில் தூசு முதலியன படிதலால் ஏற்படும் தவிப்பு;*** irritation, uncomfortable sensation caused by dust etc., falling in the eye. 2. ***ஏற்படுதல்;*** happening. 3 ***தாக்கல்;*** offending. 4. ***அழுத்துதல்;*** pressure, instigation.

*[உறு → உறுத்தல்.]*

**உறுத்தா(தரு)-தல்** *uṟuttā-,* 15. செ.குன்றாவி. (v.t.) ***நெருக்குதல்;*** to crowd, constrict. "ஒரியவுறுத்தர" (பரிபா. 6,37). (செ.அக.).

*[உறு + தரு = உறுத்தரு → உறுத்தா.]*

**உறுத்து-தல்** *uṟuttu-,* 5. செ குன்றாவி. (v.t.) 1. ***உண்டாக்குதல்;*** to cause to be, to originate. "அறவரே தோழரிவர்க்கஞ் ருறுத்தல்" (தணிகைப்பு. அகத். 234). 2. ***அமைத்தல்;*** to put up, as the saddle on a horse, to fit up. "புரவி பண்ணுறுத் திடுவார்" (நைடத சுயம். 58). 3. ***அடைவித்தல்;*** to arrange to get, cause to obtain "கொடிச்சியை யிலைவேல் இளவற்கும் கானத் தம்ம முந்துபுக்குறுத்துவன்" (தணிகைப்பு. விநா. காப்.) 4. ***ஒற்றுதல்*** (திவா ) to bring in contact, clap together 5. ***பதித்தல்;*** to insert, encase. 6. ***மனத்தமுந்தச் செய்தல்;*** to strongly impress upon the mind அச்செய்தியை உறுத்திப் பேசினான் (இ.வ.). 7. ***அழுத்துதல்;*** to cause smarting, as a thorn in the flesh; to produce irritation, as dust in the eye, to press uncomfortably, as a rough or uneven surface on one sitting or lying down. "முள்ளுறுத்தி" (சேதுபு அனும. 12.). 8. ***மனத்தை வருத்துதல்;*** to cause pain of mind, afflict, rankle, as by a sarcastic remark. அவன் கூறிய சொல் என்னை உறுத்துகிறது (உ.வ.). 9. ***மிகுத்தல்;*** to increase "இல் வலியுறுத்தல்" (தொல். பொருள் 263). 10. ***விரித்தல்;*** to spread out, open. "முடங்கத ளுறுத்த முகிழ்நகை யெய்தியும்" (கல்லா. 12). 11. ***சினந்து சீறுதல்;*** to huff with anger, swell with rage. "உறவுறுத் தின ரொட்டலர்" (பிரபுலிங். சித்த. 12).

ம. உறுத்துக.

*[உல் → உறு → உறுத்து.]*

**உறுத்தை** *uṟuttai,* பெ. (n.) ***அணில்;*** squirrel. (W). (செ அக.).

ம. உறுத்த; க. உடுதெ, தெ. உறுத.

*[உறு → உறுத்தை. உறு = விரைவு ]*

**உறுதி** *uṟudi,* பெ. (n.) 1 ***திடம்;*** firmness, strength, stability. 2. ***வல்லமை;*** power, energy, force. "இருவருந்த முறுதியி னின்றா ரென்னில்" (சி.சி 1,35). 3 ***திண்ணம்;*** certainty, assurance 4. ***மாந்தர்க்குரிய குறிக்கோள்;*** aims of mankind, objects of human pursuit, four in number viz., அறம், பொருள், இன்பம், வீடு மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரா னெடுக்கப்பட்ட பொருள் (குறள், உரைப்பாயிரம்); 5. ***உறுதி வாக்கு;*** positive declaration "ஆண்டவன் புகலுறுதியு மாண்மை யுங் கேட்டு" (பாரத. புட்ப. 47) 6. ***செய்யத்தக்கது;*** appropriate thing to do, suitable action. "வீடுதலுறுதி யென்றே விளம்பி" (கந்தபு. சூர. வதை. 64) 7 ***நன்மை;*** good, benefit. "புத்தேளாவதே யுறுதியென் றான்" (சீவக. 1235). 8. ***மந்திரம்;*** mantiram, as that which is efficacious "பொய்கையு முட்பட வுரைத்தன னுறுதிநோக்கினான்" (சீவக 1216). 9. ***பற்றுக்கோடு;*** support, prop "உலகுக்கோ ருறுதி தன்னை" (தேவா. 481,5). 10. ***அறிவுரை;*** moral or religious advice (W.). 11. ***ஊதியம்; வருவாய்;*** profit, benefit "கேட்டினுமுண் டோருறுதி" (குறள், 796). 12. ***கல்வி*** (திவா.), learning. 13. ***ஆட்சி ஆவணம்*** (பத்திரம்.); bond, title deed. 14. ***விடாப்பிடி;*** stubbornness, pertinacity (W.).

ம. உறுதி; க. உரிதி, உறும்பு; தெ. உரிதி, *L* verus, true, *O.Fr* verai, *Fr* verai; *Ger* wahr; *A.S.* voer; *E* very, real in agreat degree, verity, truth

*[உறு → உறுதி.]*

**உறுதிக்கட்டுரை** *uṟudi-k-katturai,* பெ. (n.) ***இடித்துக் கூறுகை*** (பிங்.); admonition, remonstrance. (செ.அக.).

*[உறுதி + கட்டுரை.]*

**உறுதிச்சீட்டு** *uṟudi-c-cīṭṭu,* பெ. (n.) ***உறுதிப்படுத்தும் ஆவணம்;*** written contract, bond. (செ.அக.).

*[உறுதி + சீட்டு.]*

**உறுதிச்சொல்** *uṟudi-c-col,* பெ. (n.) 1. ***உறுதிமொழி;*** assurance. 2. ***தக்க அறிவுரை*** word of advice, good counsel. 3. ***இடித்துரை;*** admonition. (செ.அக.).

*[உறுதி + சொல்.]*

**உறுதிப்படு-தல்** *uṟudi-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. ***நிலைப்படுதல்;*** to be firmly established, to be assured. 2. ***திடப்படுதல்;*** to be confirmed, as a member in a church. (செ.அக.).

*[உறுதி + படு.]*

**உறுதிப்படுத்து-தல்** *uṟudi-p-paḍuttu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***நிலைப்படுத்துதல்;*** to confirm, corroborate, establish. (செ.அக.).

*[உறுதி + படுத்து.]*

**உறுதிப்பத்திரம்** *uṟudi-p-pattiram,* பெ. (n.) 1. ***உறுதிச் சீட்டு*** பார்க்க; see *uṟudi-c-cīttu.* (செ.அக.).

ம. உறபபுபத்ரம் *Skt* patra.

*[உறுதி + பத்திரம் ]*

**உறுதிப்பாடு** *uṟudi-p-pāḍu,* பெ. (n.) 1. ***நிலைப்படுகை;*** confirmation. 2. ***வாக்குறுதி;*** pledge, promise. (செ.அக.).

*[உறுதி + பாடு.]*

**உறுதிப்பொருள்** *uṟudi-p-poruḷ,* பெ. (n.) 1. ***உறுதி*** பார்க்க, see *uṟudi* 2. ***கடவுள்;*** god (W.). 3. ***காட்சி*** (ஆ.அக.); wisdom. (செ.அக.).

*[உறுதி + பொருள் ]*

**உறுதிபண்ணு-தல்** *uṟudi-paṇṇu-,* 12. செ.குன்றாவி. (v.t.) ***நிலைப்படுத்துதல்;*** to corroborate, confirm. (செ.அக ).

*[உறுதி + பண்ணு ]*

**உறுதிபூசுதல்** *uṟudi-pūśudal,* பெ. (n.) ***திடப்படுத்துகை;*** sacrament of confirmation. (செ.அக.).

*[உறுதி + பூசுதல்.]*

**உறுதிமுடி-த்தல்** *uṟudi-muḍi-,* 4. செ.கு.வி. (v.i.) ***ஆவணம் எழுதிக் கொடுத்தல்;*** to execute a title deed or bond. (J.) (செ.அக.).

*[உறுதி + முடி ]*

**உறுதிமொழி** *uṟudi-moḻi,* பெ. (n.) 1. ***உறுதிச்சொல்*** பார்க்க; see *uṟudi-c-col.* 2. ***உறுதி மொழியாகச் சொல்லும் சொற்கள்;*** statement made on oath, solemn affirmation before a magistrate or a judge. (செ.அக.).

*[உறுதி + மொழி ]*

**உறுதியோர்** *uṟudiyōr,* பெ. (n.) ***தூதர்*** (பிங்.); messengers of state, confidential emissaries. (செ.அக.).

*[உறுதி + (ஆர்) ஓர்.]*

**உறுதுணை** *uṟu-tuṇai,* பெ. (n.) ***உற்றதுணை;*** faithful friend, boon companion. "உறுதுணை யாவர் போலும்" (தேவா. 476,3.). (செ.அக.).

*[உறு + துணை.]*

**உறுநர்** *uṟunar,* பெ. (n.) ***உறுநன்*** பார்க்க; see *uṟunaṉ.*

**உறுநன்** *uṟunaṉ,* பெ. (n.) ***சேர்ந்தவன்;*** votary, he who seeks protection, follower. "உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்" (திருமுரு. 4.). (செ.அக.).

*[உறு → உறுநன்.]*

**உறுப்படக்கி** *uṟuppaḍakki,* பெ. (n.) ***ஆமை*** (பிங்.); tortoise, turtle, so called from its being able to draw in its limbs. (செ.அக.).

*[உறுப்பு + அடக்கி. உறுப்புகளை உள்ளடக்கிக் கொள்வது.]*

**உறுப்பணங்கெட்டவன்** *uṟuppaṇaṅkeṭṭavaṉ,* பெ. (n.) 1. ***உடற்குறையினன்;*** ill shaped, maimed, ugly person. 2. ***மூடன்;*** foolish fellow. (செ.அக.).

*[உறுப்பு + இனம் + கெட்டவன். உறுப்பனம் என்பது கொச்சை வழக்கு ]*

**உறுப்பற்றவன்** *uruppaṟṟavaṉ,* பெ. (n.) 1. ***உறுப்புக் குறையன்;*** ill-formed, deformed person. 2. ***ஒழுக்கமில் லாதவன்;*** ill-bred person (W.). (செ.அக.).

*[உறுப்பு + அற்றவன் ]*

**உறுப்பறை** *upupparai,* பெ. (n.) 1. ***உறுப்புக்குறையன்;*** deformed person. "ஆதுல ரந்தக ருறுப்பறைக ளாதர்" (பிங் 3 35). 2. ***உறுப்புக்குறை;*** dismembering the limbs "உறுப்பறை குடிகோள்" (தொல். பொருள். 258). (செ.அக.).

*[உறுப்பு + அறை.]*

**உறுப்பா** *uruppā,* பெ. (n.) ***கப்பல் செய்வதற்குப் பயன்படும் மரவகை*** (மூ.அ.); a tree, the timber of which is used instead of teak in ship-building. (செ.அக.).

*[ஒருகா. உறு + பால். பால் = பாலைமரம். உறு + பால் - உறுப்பால் → உறுப்பா ]*

**உறுப்பிசைக்குறி** *uruppišai-k-kuri,* பெ. (n.) ***படிக்கை யில் ஒரு மாத்திரைக்காலம் நிறுத்துவதற்கு அடையா ளமாக இடுங்குறி*** (பாலபா. பக். 170); the sign comma. (செ.அக.).

*[உறுப்பு + இசை + குறி. இசைத்தல் = ஒலித்தல்.]*

**உறுப்பில்பிண்டம்** *uruppil-pindam,* பெ. (n.) ***கருவில் வடிவுறுமுன் சிதைந்த தசைப்பிண்டம்;*** aborted embryo. "சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்" (புறநா. 28). (செ.அக.).

*[உறுப்பு + இல் + பிண்டம்.]*

**உறுப்பினர்** *uruppinar,* பெ. (n.) ***உறுப்பினன் என்பதன் பன்மை;*** pl. of uruppinan.

**உறுப்பினன்** *uruppinan,* பெ. (n.) 1. ***குழுவில் அல்லது நிறுவனத்தில் பங்கேற்கும் உரிமை பெற்றவன்;*** member of an association or institution. 2. ***தெரிந்தெடுக் கப்பட்ட நிகராளி;*** elected or selected candidate for an assembly or forum.

*[உறுப்பு → உறுப்பினன்.]*

**உறுப்பு**[1] *uruppu,* பெ. (n.) 1. ***உறுப்புகள்*** (சூடா.); limb, member of body. 2. ***பாகம்;*** division, as of an army; part of whole, component part, department, section. "உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை" (குறள், 761). 3. ***உடம்பு;*** body. "உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் (குறள். 993). 4. ***மெய்யெழுத்து;*** consonant. "மூன்றனு றுப் பழிவும்" (நன். 190) 5. ***பாலை யாழ்த் திறம்*** (திவா.); secondary melody type of the pālai class. 6. ***மரக்கொம்பு*** (திவா.); bough, branch. 7. ***உறுப் பமைதி;*** just proportion symmetry of form. அவன் உறுப்புள்ளவன் (வின்.). 8. ***மேல்வரிச் சட்டம்;*** copy of single letters set for a child to imitate. 9. ***நில ஆவணம்;*** title deed, as of land. "அந்தக் காணிக் கோருறுப்பு மில்லை (இ.வ.). (செ.அக.).

ம. உறுப்பு.

*[உறு → உறுப்பு.]*

**உறுப்பு**[2] *uruppu,* பெ. (n.) 1. ***அதிகம்*** (நாநார்த்த.); excess, abundance. 2. ***நெருக்கம்;*** denseness. (செ.அக.).

*[உறு → உறுப்பு.]*

**உறுப்புக்கழலை** *uruppu-k-kalalai,* பெ. (n.) ***உடம்பில் தோன்றும் கொப்புளம்;*** tumour arising in any of the organ or organs of the body. (செ.அக.).

*[உறுப்பு + கழலை ]*

**உறுப்புக்குறை** *uruppu-k-kurai,* பெ. (n.) ***உறுப்புக்குறை பாடு;*** maimedness, body defect, deformity. (செ.அக.).

*[உறுப்பு + குறை.]*

**உறுப்புக்கேடு** *uruppu-k-kēdu,* பெ. (n.) ***உடற்குறை;*** deformity in limb. (pond.). (செ.அக.).

*[உறுப்பு + கேடு.]*

**உறுப்புத்தள்ளுகை** *uruppu-t-tallugai,* பெ. (n.) ***அண்டு தள்ளுகை;*** prolapsus ani. (Loc.).

*[உறுப்பு + தள்ளுகை.]*

**உறுப்புத்தோல்** *uruppu-t-tōl,* பெ. (n.) ***மான் தோல்;*** deer-skin, a piece of which, according to the *šāstrās,* the Brahmachāri should fasten to his sacred thread. "உறுப்புத்தோலும் வெண்ணெய் பூசின உடம்புமான யஜமான வேஷத் தோடே" (ஈடு, 4,8,4). (செ.அக.).

*[உறுப்பு + தோல். உறுப்பு = அடையாளம்.]*

**உறுப்புநூல்** *uruppu-nūl,* பெ. (n.) ***உறுப்பு நலங்கூறும் பனுவல்;*** science dealing with the characteristics of human form and features. "நல்லவென வுறுப்பு நூலா ருரைக்கு நல நிரம்பி" (பெரியபு. காரைக். 6). (செ.அக.).

*[உறுப்பு + நூல்.]*

**உறுப்புமயக்கம்** *uruppu-mayakkam,* பெ. (n.) ***உறுப்புக் குறை எட்டினொன்று;*** one of the deformities. (செ.அக.).

*[உறுப்பு + மயக்கம்.]*

**உறுப்புள்ளவன்** *uruppullavan,* பெ. (n.) 1. ***உறுப்பு நலமுடையவன்;*** beautiful, well-formed man. 2. ***திற முடையவன்;*** man of enterprising character qualified for business. 3. ***ஒழுக்கமுள்ளவன்;*** man of good conduct, virtuous person. (செ.அக.).

*[உறுப்பு + உள்ளவன்.]*

**உறுபாதை** *urupādai,* பெ. (n.) ***வரிவகை.*** (S.I.I. vii, 214); a tax. (செ.அக.).

*[உறு + பாதை.]*

**உறுபு** *urubu,* பெ. (n.) ***பாலையாழ்த்திறம்*** (வின்.); musical mode of the pālai class. (செ.அக.).

**உறுபூசல்** *uṟu-pūśal,* பெ. (n.) ***கைகலந்த போர்;*** hard scuffle, hand to hand fight. "பேரணி உறுபூச லானவாறே" (ஈடு. 9,9,2). (செ.அக.).

*[உறு + பூசல்.]*

**உறுபொருள்** *uṟu-poruḷ,* பெ. (n.) ***உடையாரில்லாமையால் ஒருவனுக்குக் கிடைக்கும் பொருள்;*** unclaimed property which a man appropriates to himself. "உறுபொருளும் உல்கு பொருளும்" (குறள், 756). (செ.அக.).

*[உறு + பொருள்.]*

**உறும்பு**[1] *uṟumbu,* பெ. (n.) ***உலர்ந்த கரம்பை மண்ணின் கூரிய சிறுகட்டி;*** small piece of dried clay with a sharp edge. (செ.அக.).

*[உறு → உறும்பு = நடந்தால் பாதத்தை உறுத்துவது.]*

**உறும்பு**[2]**-தல்** *uṟumbu-,* 5. செ.கு.வி. (v.t.) ***உறுமு*** பார்க்க; see *uṟumu.* (செ.அக.).

ம. உறும்புக; க. ஒறலு, து. உறல், ஒரல்.

*[உறு → உறுமு → உறும்பு.]*

**உறுமாலை** *uṟumālai,* பெ. (n.) ***மேலே போட்டுக்கொள்ளும் துண்டுவகை;*** upper garment. "நற்பொரு ளுலா வெண்ணி லுறுமாலை" (திருவேங். சத. 29.). (செ.அக.).

ம. உறுமால்; *U.* rumā, rūmāl; *Pers.* rūmāl

*[உறு + மாலை ]*

**உறுமி** *uṟumi,* பெ. (n.) ***ஒருவகைத் தோற்கருவி*** (சங். அக.); a kind of drum . (செ.அக.).

ம. உறுமி.

*[உறும் → உறுமி. உறும் ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*



உறுமி

**உறுமியடி-த்தல்** *uṟumi-y-aḍi-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***குறுந்தடியால் ஒலி யுண்டாகுமாறு உறுமியைத் தேய்த்தடித்தல்;*** to alternately rub and beat on one side of uṟumi with a curved stick in order to produce a characteristic humming sound. (செ.அக.).

*[உறும் → உறுமி + அடி-த்தல்.]*

**உறுமு-தல்** *uṟumu-,* 10. செ.கு.வி. (v.i.) 1. ***உறுமென்று ஒலித்தல்;*** to growl, as a wild beast; to grunt, as a pig; to rumble, as thunder; to sound, as the uṟumi drum. 2. ***முறுமுறுத்தல்;*** to murmur angrily. "இல்லத் துறுமி நெடிது மிராஅர்" (ஆசாரக் 81). 3. ***எழும்புதல்*** (திவா.); to rise; to be stirred up. (செ.அக.).

ம. உறுமுக, க. ஒரல் (கீச்சிடுதல்); தெ. உறுமு; பர். உறும்பில் (இடி.), கூ. ரும்பு.

*[உறும் → உறுமு.]*

**உறுமை** *uṟumai,* பெ. (n.) ***உறுமி*** பார்க்க; see *uṟumi.* "கம்பலி யுறுமை தக்கை" (கம்பரா. பிரமாத்திர. 5). (செ.அக.).

*[உறும் → உறுமை. உறும் ஒலிக்குறிப்பு இடைச்சொல்.]*

**உறுவது** *uṟuvadu,* பெ. (n.) 1 ***நிகழ்வது;*** that which happens. "உறுவதொன்று முணர்கலாது" (பாரத வாரணா. 81). 2. ***ஊதியம்;*** that which accrues; gain. "உறுவதும்.. பேதைக ளோர்கிலரே" (திருநூற். 13). 3. ***ஒப்பது;*** that which resembles "இமையவர்களுலக முறுவதுவே" (சீவக 1780). 4. ***தகுவது;*** that which is proper. "உறுவதாவது . குடக்கூத்தனுக் காட்செய் வதே" (திவ் திருவாய். 4,10,10). (செ.அக.).

*[உறு → உறுவது ]*

**உறுவதுகூறல்** *uṟuvadu-kūṟal,* பெ (n.) ***ஒன்றைச் செய்வாயா என்று வினாவியவிடத்து நேர்வதுகூறு முகத்தான் மறுப்பதைக் தெரிவிக்கும் விடைவகை*** (நன். 386 உரை), form of indirect negative reply consisting in the person questioned stating what would happen to him if he were to answer 'yes' as for e.g., when a person who is asked a question like 'Will you do this" replies, 'My health will be affected'.

*[உறுவது + கூறல் ]*

**உறுவதுதெரிதல்** *uṟuvadu-teridal,* பெ (n.) ***பின்வருவன அறிதல் என்னும் வணிகர் குணம்*** (திவா ); foresight in regard to the future state of the market, a quality or character in merchants. (செ.அக.).

*[உறுவது + தெரிதல் ]*

**உறுவர்** *uṟuvar,* பெ. (n.) ***உறுவரர்*** பார்க்க; see *uṟuvarar.]*

**உறுவரர்** *uṟuvarar,* பெ. (n.) ***தேவர்;*** celestials. "உறுவரர் பலிசெல" (சீவக. 119.). (செ.அக.).

*[உறுவர் (மிக்கவர்) + அர் ]*

**உறுவல்** *uṟuval,* பெ. (n) ***துன்பம்;*** suffering, affliction, distress. "பெண்பா றன்னுறுவ நீர்ப்பான்" (கம்பரா. சடாயு. 183). (செ.அக.).

*[உறு → உறுவல் ]*

**உறுவலி** *uṟu-vali,* பெ. (n.) ***மிக்க வலியுடையோன்;*** lit. great strength, man of great strength. "உறுவலி தாக்கினானே" (சீவக. 2282.). (செ அக ).

*[உறு + வலி அன்மொழித்தொகை.]*

**உறுவன்**[1] *uṟuvaṉ*, பெ. (n.) 1. ***மிக்கோன்;*** great one, lord, master. "உறுவனோ டியானுற்ற நற்றிறம்" (சிலப். 9,53). 2. ***முனிவன்;*** sage, saint. "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" (நாலடி. 104). 3. ***அடைந்தோன்;*** new arrival, guest. "உறுவரார வோம்பாதுண்டு" (பதிற் றுப். 43,19). 4. ***அருகன்*** (பிங்.); Arhat. (செ.அக.).

*[உறு → உறுவன் (மிக்கோன்.) ]*

**உறுவன்**[2] *uṟuvaṉ*, பெ (n.) 1. ***பெரியோன்;*** great man, elder. "உறுவருஞ் சிறுவரு மூழ்மாறுய்க்கும்" (புறநா 381). 2. ***எதிர்த்து நிற்போன்;*** opponent. "துப்புறுவர் புறம்பெற் றிசினே" (புறநா 11). (செ அக.).

*[உறு → உறுவன். உறு = பெரிது. உறுவன் = பெரியோன்.]*

**உறுவாவரிசி** *uṟuvā-v-arisi*, பெ. (n.) ***அறுவகை யரிசியு ளொன்று.*** (சங். அக.); one of *aṟuvakai-y-arisi;* rice (செ.அக ).

*[உறவு → உறுவா + அரிசி ]*

**உறுவி-த்தல்** *uṟuvi-*, 4. செ குன்றாவி. (v.t.) ***நுகர்வித்தல்;*** to cause to experience, as pleasure or pain "பலமுறுவிப் பான் வேண்டும்" (சி.சி. 2,21 ). (செ.அக.).

*[உறு → உறுவி.]*

**உறை**[1] *uṟai*, 1. ***பெருமை*** (பிங்.); greatness; excellence. 2. ***உயரம்*** (பிங்.) height. 3. ***நீளம்*** (திவா.); length 4. ***பொருள்*** (பிங்.), wealth 5. ***வெண்கலம்.*** (பிங்.); bell metal. 6 ***பேரளவுக்கு அடையாளமாக*** (சங்கேத மாக) ***விடுஞ் சிற்றளவுக் குறி;*** units used as symbols for hundreds or thousands "உறையிடவும் போதார்" (கம்பரா உருக்காட். 117). 7 ***மிகக் குறைவானது;*** that which is exceedingly low, as price. "உறைவிற்குலா நுதலாள் விலை" (திருக்கோ. 266) 8 ***60 மரக்கால் கொண்ட ஓரளவு;*** a measure of grain 9. ***துன்பம்*** (பிங் ), affliction, distress. (செ அக.).

*[உறு → உறை ]*

**உறை**[2]**-தல்** *uṟai-*, 2 செ.கு வி. (v.i.) 1. ***இறுகுதல்;*** to thicken, curdle; to coagulate, congeal, freeze. "குடப்பா லுறையா" (சிலப் ஆய்ச்சி. 1. உரைப்பாட்டுமடை ). 2 ***செறிதல்*** (வின்.); to be close, dense, as tress in a forest. 3. ***கட்டியாதல்;*** to thicken. 4 ***வாழ்தல்;*** to reside, dwell உம்ப ருறைவார் பதி (நாலடி, 137). 5 ***ஒழுகுதல்;*** to live, conduct oneself, "உலகத்தோ டவ்வ துறைவ தறிவு" (குறள், 426 ) (செ அக )

ம. உறயுக, குட. ஒரெ, து. உர்குனி, கோண். உர்ரானா

*[உறு → உறை → உறை-தல் ]*

**உறை**[3]**-த்தல்** *uṟai-*, 2 செ கு வி. (v.i.) 1 ***துளித்தல்;*** to drop, as the rain; to form, as the dew "தெண்பனி யுறைக்குங்கால்" (கலித் 15) 2 ***உதிர்தல்;*** to fall down, as pollen from flowers "தாதுறைக்கும் பொன் னறை" (கலித் 39,32) 3 ***சுவையுறைத்தல்;*** to be pungent, biting, sharp. "உப்புறைத்தன மேகமுகுத்தநீர்" (கம்பரா. சேதுபந். 60). 4. ***சுடுதல்;*** to scorch, as the sun. இன்றைக்கு வெயிலுறைக்கிறது. 5. ***தாக்கிப் பயன் விளைத்தல்;*** to produce effect, as words of advice, to sting, as a rebuke or sarcasm. "ஆற்றவும் துனக்குறைக்குங் கண்டாய்" (திவ். நாய்ச். 1,9). 6. ***முள் முதலியன உறுத்துதல்;*** to prick, as a thorn. "பாத மெல்லிய வுறைக்கும்." (கம்பரா.கோல. 24). 7. ***ஊன்று தல்;*** to become firm, steadfast, decided, as the mind. "புந்திநின் றுறைக்க" (கைவல். சந் 5). 8. ***மோதுதல்;*** to beat upon, as wind. "ஆடை வளியுறைப்பப் போகார்" (ஆசாரக் 37). 9 ***மிகுதல்;*** to increase grow. "யானை யிருஞ் சினமுறைக்கும்" (ஐங்குறு. 352). (செ.அக.).

*[உறு → உறை → உறை-த்தல்.]*

**உறை**[4]**-த்தல்** *uṟai-*, 2. செ.குன்றாவி. (v.t.) 1 ***அதட்டுதல்*** (பிங்.); to rebuke authoritatively. 2. ***அமுக்குதல்;*** to press down "முதுகுறைப்பப் பொறையாற்றும்" (குமர. பிர. மதுரைக். 17). 3. ***ஒத்தல்;*** to resemble. "இலக்கு முத்துறைக்கு மெயிறு" (ஐங்குறு. 18.5).

*[உறு → உறை.]*

**உறை**[5] *uṟai*, பெ. (n.) 1. ***இருப்பிடம்;*** place of residence, town, apropriate or customary place for a person or thing உறையிலேயிருக்கிறார் (வின்.) 2. ***வாணாள்;*** lifetime. "வேந்தனுறை கடுகி யொல்லைக் கெடும்" (குறள், 564) 3 ***படைக்கலக்கூடு;*** sheath, scabbard, case "உறைகழித்திலங்குவாள்" (சீவக 656) 4 ***தூசு முதலியன படாதவாறு மூடுகின்ற ஆடையுறை;*** cover; e.g. pilow - case "செந்துகி லுறையின் மூடி" (சூளா கல்யா 180). 5. ***பண்டம் செய்யும் கூடு*** (வின் ), receptacle for grain, a kind of sack. 6 ***கிணற்றுறை;*** burnt clay curb, used for the construction of well. 7. ***போர்வை*** (பிங்.); upper garment, cloak, shaw. 8. ***காணிக்கைப் பொருள்;*** offering. "நாணாளுநறையு நறுஞ் சாந்துங் கோதையும்" (பரிபா. 16,52). 9 ***பாம்பின் நச்சுப்பை*** (வின் ); the poison bag of the snake. (செ அக.).

ம. உற, க. ஒரெ, கோத., நா., குட. ஒரெ. து. ஒரெ. உதெ. தெ. ஒர, பர். ஒர.

*[உறு → உறை.]*

**உறை**[6] *uṟai*, பெ (n.) 1. ***வீடு;*** house. 2. ***மனைவி;*** wife.

பிராகு. உறா (வீடு ); பாசு. உறா (மனைவி)

*[உறை என்னும் முதனிலை இருமடி ஆகுபெயராய் வீட்டையும் மும்மடி ஆகு பெயராய் மனைவியையும் குறித்தது ]*

**உறை**[7] *uṟai*, பெ (n) 1. ***ஒழுகல்*** (திவா ); leaking. 2 ***நீர் முதலியவற்றின் துளி*** (திவா ); drop of water or other liquid. 3 ***மழை;*** rain "உறைகோடி யொல்லாது வானம்பெயல்" (குறள், 559). 4 ***மழைக்காலம்;*** rainy season "நாளாலுறையெதிர்ந்து" (திணைமாலை 1). 5. ***உறைமோர்;*** reserve of curds for curdling milk.

''உறையமை தீந்தயிர்'' (பெரும்பாண்; 158). 6. ***காரம்*** (திவா.); pungency, corrosiveness. 7. ***ஆடையழுக் ககற்றும் உவர்நீர்*** (திவா.); washerman's lye. 8. ***மருந்து;*** medicine. கயற்கண் செய்த வுறைமலி யுய்யாநோய்'' (சிலப். 7,8). 9. ***உணவு*** (பிங்.); food. ''உறைவள ருனிலாய வுயிர்'' (தேவா. 212,6). 10. ***ஆலங்கட்டி;*** hail stone. (செ.அக.).

*[உறு → உறை]*

**உறை**[8] *urai,* பெ. (n.) 1. ***கிணற்றடியில் வைக்கும் மரவளையம்;*** circular frame work of wood over which a well is built. 2. ***பொன்*** (நாநார்த்த.); gold. (செ.அக.).

*[உறு → உறை]*

**உறை**[9] *urai,* பெ. (n.) 1. ***அவரை மேற்றொலி; அவரைக்காய் பொட்டு;*** sheath of the beans. 2. ***உமி;*** husk.

இருள. உறை; *L.* eris (husk); *On.* ax; *Goth* ahs; *OHG.* ahir, *Os* ahar, *OF* ear.

*[உறு → உறை]*

**உறை**[10] *urai,* பெ. (n.) ***காது;*** ear.

ஆத். உரெ, *E.* ear; *OE* ëare; *OS; OHG.* ora; *ON.* eyra; *Goth.* auso; *L.* auris; *G* ous.

*[உறை = அவரைக்காயின் மேற்றொலி. அவரைக்காயின் மேற் றொலி அல்லது உலர்ந்த பொட்டு காதின் வடிவை ஒத்திருத்த லில் ஆகுபெயராகிக் காதைக் குறிக்கும் சொல்லாயிற்று.]*

**உறைக்கப்பார்-த்தல்** *uraikka-p-pār-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***உற்றுநோக்குதல்;*** to look at intently. (செ.அக.).

*[உறை → உறைக்க + பார்.]*

**உறைக்கிணறு** *urai-k-kinaru,* பெ. (n.) ***சுடுமண்ணுறை யிட்ட கிணறு;*** well formed of burnt clay curbs placed one upon another. ''உறைக்கிணற்றுப் புறச்சேரி'' (பட்டி னப். 76). (செ.அக.).

*[உறை + கிணறு.]*

**உறைக்குமிலை** *uraikkum-ilai,* பெ. (n.) ***வெற்றிலை;*** betal leaf, it is so called from its leaf being pungent. (சா.அக.).

*[உறைக்கும் + இலை.]*

**உறைகாய்** *urai-kāy,* பெ. (n.) ***செங்காய்;*** unripe fruit. (செ.அக.).

*[உறு → உறை + காய்.]*

**உறைகாரன்** *urai-kāran,* பெ. (n.) ***படைக்கல உறை செய்பவன், காரோடன்*** (சிலப். 5,32, உரை); sheath maker. (செ.அக.).

*[உறை + காரன்.]*

**உறைகாலம்**[1] *urai-kālam,* பெ. (n.) ***வாணாள்;*** (வின்.). lifetime. (செ.அக.).

*[உறை + காலம்.]*

**உறைகாலம்**[2] *urai-kālam,* பெ. (n.) ***மழைக்காலம்*** (வின்.); rainy season. (செ.அக.).

*[உறை + காலம்.]*

**உறைகுத்து-தல்** *urai-kuttu-,* 10. செ.கு.வி. (v.i.) ***பாலுக் குப் பிரைகுத்துதல்;*** to pour a small quantity of curd into milk to curdle it.(செ.அக.).]

**உறைகோடு-தல்** *urai-kōdu-,* 5. செ.கு.வி. (v.i.) ***பருவ மழை பெய்யா தொழிதல்.*** to fall, as rain, in its season. ''உறை கோடி ஒல்லாது வானம் பெயல்'' (குறள். 559). (செ.அக.).

*[உறு → உறை + கோடு.]*

**உறைச்சாலை** *urai-c-cālai,* பெ. (n.) ***மருந்துச்சாலை;*** dispensary, hospital. ''பல்லுறைச் சாலைகளும்'' (தைலவ. பாயி. 12). (செ.அக.).

*[உறை + சாலை.]*

**உறைத்தயிர்** *urai-t-tayir,* பெ. (n.) ***கட்டித்தயிர், உறைந்த தயிர்;*** curd.

ம. உறதைரு.

*[உறை + தயிர்.]*

**உறைத்தல்** *uraittal,* பெ. (n.) ***அதட்டுகை*** (பிங்;); reproving, rebuking. (செ.அக.).

*[உறு → உறை.]*

**உறைத்துளி** *urai-t-tuli,* பெ. (n.) ***மழைத்துளி;*** raindrop. (ஆ.அக.).

*[உறை + துளி.]*

**உறைநாழி** *urai-nāli,* பெ. (n.) ***வெட்டியான் மானியம்;*** share of the village watchman in ancient times. ''உறை நாழி வெட்டி... உள்ளிட்ட அனைத்துவற்கமும்'' (S.I.I.ii, 247,8). (செ.அக.).

*[உறை + நாழி. உறை = தங்கிப் பணியாற்றுதல். நாழி = அளந்து தரும் கூலி.]*

**உறைநீர்** *urainīr,* பெ. (n.) 1. ***காரமான நீர்;*** any alkaline liquid. 2. ***பனிநீர்;*** dew-water. 3. ***உறைந்த நீர்;*** frozen water such as ice. 4 ***மருந்து நீர்;*** solution of medicine. (சா.அக.).

ம. உறநீர் (கஞ்சிநீர்).

*[உறை + நீர்.]*

**உறைப்பன்** *uraippan,* பெ. (n.) ***வலுவுள்ளவன்;*** strong, powerful man. ''ஒருப்படுத்த வுறைப்பனூர்'' (திவ். பெரி யாழ். 4,8,2). (செ.அக.).

*[உறை → உறைப்பன்.]*

**உறைப்பு** *uraippu,* பெ. (n.) 1. ***சுவைக்கூர்மை;*** sharpness of taste. 2. ***காரம்;*** pungency 3. ***ஊற்றம்;*** firmness, steadfastness. ''சேஷித்வ வுறைப்புத் தோற்ற இருக்கிற வனை'' (ஈடு. 2,5,8.). 4. ***வாய்ப்பு;*** opportunity, a

favourable time. "அங்குள்ளம் கூடக் கூடிற்றாகில் நல்லுறைப்பே" (திவ். திருவாய். 8,8,8). 5. *கொடுமை;* severity, sternness, harshness. "உறைப்புடைய விராவணன்" (தேவா. 45,10). 6 *அழுத்தம்;* impressiveness, positiveness. "உறைப்பான பேச்சு" (வின்.) 7. *அல்லல்;* painful sensation of body or painful feeling of mind 8. *மழைபெய்கை;* falling of rain. "உறைப்பருங் காலத்தும்" (நாலடி. 184) 9. *தாக்குகை;* blowing. "கல்லக வுறைப்பின் வீழ" (கந்தபு. நகரழி. 70.). (செ.அக ).

ம. உறப்பு, க. ஒரபு; தெ. ஒறபு.

*[உறு → உறை → உறைப்பு.]*

உறைப்பு என்னும் பண்புப்பெயர் விதந்து சுட்டுவது காரத்தையே உறைக்கும் பொருளைச் சுள்ளென்றிருக்கிறது என்பர். காரத்தை எரிச்சல் என்று கூறுவர் இதனால் உறைத்தலைச் சுடுதலோடொப்பக் கொண்டமை புலனாம் (மு தா. 166).*]*

**உறைப்புக்காட்டு-தல்** *uraippu-k-kāṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) *காரமாதல்;* to be pungent. (செ.அக.).

*[உறை → உறைப்பு + காட்டு ]*

**உறைபதி** *urai-padi,* பெ. (n.) ***உறைவிடம்*** பார்க்க; see *uraiviḍam.* "நாணுக் குறைபதி" (குறள், 1015). (செ.அக.).

*[உறை + பதி ]*

**உறைபனி** *urai-pani,* பெ. (n.) ***இறுகிய பனி;*** hoar frost. (செ.அக.).

*[உறை + பனி.]*

**உறைபோ-தல்** *urai-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ***உறையிட முடியா தொழிதல்;*** to exceed computation; to be too numerous even for numbering by symbols; "அம்பண வளவை விரிந்துறை போகிய" (பதிற்றுப் 66,8). (செ.அக.).

*[உறை + போ.]*

**உறைமருந்து** *urai-marundu,* பெ. (n.) *குழந்தைகளுக்கு முழுக்காட்டியவுடன் தேன் அல்லது முலைப்பாலில் இழைத்து மாந்தம் அணுகாதபடி கொடுக்கும் ஒரு வகைக் காரமான மாத்திரை;* pungent pill administered to children by mothers as a home-remedy immediately after a bath as a preventive against indigestion etc.

*[உறை + மருந்து.]*

**உறைமழை** *urai-malai,* பெ. (n.) ***ஆலங்கட்டி;*** hail-stone. (சா.அக.).

*[உறை + மழை.]*

**உறைமோர்** *urai-mōr,* பெ. (n.) *பாலிலிடும் பிரைமோர்;* sour butter-milk used for curdling milk. (செ.அக.).

*[உறு → உறை + மோர்.]*

**உறையல்** *uraiyal,* பெ. (n) ***பிணக்கு.*** (அ.க.நி.); quarrel. (செ.அக.).

*[உறை + அல் (தொ.பெ ஈறு).]*

**உறையாணி** *urai-y-āṇi,* பெ. (n.) ***பொன், வெள்ளி இவற்றை மாற்றறிவதற்காகப் பயன்படுத்தப்படும் பொன், வெள்ளிகளாற் செய்த ஆணிகள்;*** touch needles made of gold or silver. (சா.அக.).

*[உரை + ஆணி = உரையாணி → உறையாணி (கொ.வ.).]*

**உறையிடு-தல்** *urai-y-iḍu-,* 18. செ குன்றாவி (v.t.) *பேரளவைக் குறிப்பதற்குச் சிற்றளவுக்குறியமைத்துக் கொள்ளுதல்;* to put down a particular mark or symbol to stand for a number, in numbering, measuring a weighing as 1 for 100. "உறையிடத் தேய்ந்திடும் இவ்வந்தி வானத்து உடுக்குலமே" (அட்டப். திருவேங்கடத்தந். 34). (செ.அக.).

*[உறை + இடு ]*

**உறையுதிரம்** *urai-y-udiram,* பெ. (n.) 1. ***உறைந்த அரத்தம்;*** blood clot, gore. 2. ***செங்குருதிக் கட்டி;*** blood clot, containing red-corpuscles-cruor. (சா.அக.).

*[உறை + உதிரம் ]*

**உறையுள்** *urai-y-uḷ,* பெ. (n.) 1. ***உறைகை;*** living, residing, abiding "உறையுண் முனியும்" (புறநா. 96). 2. ***தங்குமிடம்;*** abode, resting place. "உறையுளுங் கோட்டமுங் காப்பாய்" (மணிமே. 6,137). 3. ***வீடு*** (திவா ), house, residence. 4. ***ஊர்*** (திவா ), village, town. 5. ***நாடு*** (சூடா.); district, land province. 6. ***மாந்தர் துயிலுமிடம்*** (திவா.); sleeping place; dormitory. 7. ***உகம்;*** age, aeon. (செ.அக.).

*[உறை + உள்.]*

**உறையூர்**[1] *urai-y-ūr,* பெ. (n) ***சோழநாட்டின் பழைய தலைநகருள் ஒன்று*** (சிலப். 10.242.); name of an ancient Cōḷa capital, now a suburb of Tiruchirāpaḷḷi. (செ.அக.).

ம. உறையூர்.

*[உறை + ஊர்.]*

**உறையூர்**[2] *urai-y-ūr,* பெ. (n.) ***மருதநிலத்தூர்;*** village in an agricultural tract. (அக.நி.). (செ.அக.).

*[உறை + ஊர். உறை = நீர்.]*

**உறையூர்**[3] *urai-y-ūr,* பெ. (n.) ***கருப்பை;*** womb being dwelling for the infant.

*[உறை + ஊர்.]*

**உறைவி** *uraivi,* பெ. (n.) ***உறைபவள்;*** woman resident. "நோயுழந் துறைவி" (குறுந். 400). (செ.அக.).

*[உறை → உறைவி.]*

**உறைவிடம்** *uṟaiviḍam*, பெ. (n.) 1. ***இருக்குமிடம்;*** dwelling-place, residence "அன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கி" (சிலப். 11,9). 2 ***பொருட்கிடங்கு; கொட்டில்*** (திவா.); godown (செ.அக.)

*[உறை + இடம்.]*

**உறைவு**[1] *uṟaivu*, பெ. (n.) 1. ***தங்குகை;*** abiding. "உடங்குறைவு தானுங்கருதி வந்தான்" (தணிகைப்பு களவு. 558). 2. ***இருக்குமிடம்;*** dwelling-place, abode. (செ.அக.).

*[உறை → உறைவு ]*

**உறைவு**[2] *uṟaivu*, பெ. (n) ***பிரைமோர்;*** butter milk used for curdling milk. *(Pond.)*. (செ.அக.).

*[உறை → உறைவு]*

**உன்**[1] *uṉ-*, 4. செ.கு.வி. (v.i.) ***உண்ணு-தல்*** பார்க்க; see *uṉu-*,

**உன்**[2] *uṉ*, பெ. (n.) ***நீ என்பதன் வேற்றுமையடி;*** oblique form of the second pers. pron. 'thee'.

*[நுன் → உன்.]*

**உன்**[3] *uṉ*, பெ. (n.) ***உயர்வு; மேன்மை;*** greatness, gloriousness.

*[உ → உல் → உன்]*

**உன்**[4] *uṉ*, பெ. (n.) ***நெருக்கம்;*** closeness.

*[உல் → உன்.]*

**உன்மணி** *uṉmaṇi*, பெ. (n.) ***உயர்ந்த மணி;*** superior gem.

*[உல் → உன் + மணி.]*

**உன்னநிலை** *uṉṉa-nilai*, பெ. (n.) 1. ***போர் தொடங்கு முன் உன்னமரத்தால் நிமித்தமறியும் புறத்துறை*** (தொல். பொருள். 60, உரை); (Puṟap.) theme of invoking an uṉṉam tree for omens before a battle. 2. ***உன்னம்*** பார்க்க; see *uṉṉam*. உன்னநிலையேயுணருங் காலை (சிலப். 3,18, உரை). (செ.அக.).

*[உன் → உன்னு → உன்ன + நிலை. உன்னுதல் = நீளநினைத்தல், ஆழ்ந்து சிந்தித்தல்.]*

**உன்னம்**[6] *uṉṉam*, பெ. (n.) 1. ***கருத்து*** (திவா.); thought, object, intention. 2. ***ஊழ்கம்;*** contemplation. "அகத்தியான் பள்ளியை யுன்னஞ் செய்த" (தேவா. 847.2). 3. ***மனம்*** (திவா); mind. 4. ***குறியாகக் கொள்ளும் ஒரு மரம்*** (தொல். பொருள். 60, உரை); a small tree with golden flowers and small leaves which, in ancient times, was invoked for omens before warriors proceeded to battle. 5. ***கற்பனை;*** imagination.

ம. உன்னம்; **க.** உன்னிசு (நினைத்தல்.); **கோத.** உன்ப, உனிப (குறி.); **துட.** உன்ய (நினைத்.); **தெ.** உங்கிசு (பார், ஏற்றுக் கொள்.); **குவி.** ஒன்பினை (நினை.); **பிரா.** கன்னிங் (பார்.).

*[உல் → உன் → உன்னு → உன்னம்]*

**உன்னம்**[7] *uṉṉam*, பெ. (n) 1 ***ஓதிமப் பறவை வகை*** (திவா). kind of swan 2. ***தசை கிழிக்குங் கருவி*** (வின்), pincers for tearing off flesh 3. ***சிறுவிரலும் பெருவிரலும் தம்முட்கூட மற்றை மூன்று விரல்களும் விட்டு நிமிரும் இணையா வினைக்கை*** (சிலப் 3,18); (Nāṭya) a gesture with one hand, in which the thumb and the little finger are kept united and the other three fingers are held upright. (செ.அக.).

*[உ → உல் → உன் → உன்னம் ]*

**உன்னயம்** *uṉṉayam*, பெ. (n.) 1. ***குதிரையிலக்கண நூல்களு ளொன்று;*** a treatise on hippology. "உன்னய முதலாம் புரவிநூல்" (பாரத. நாடுக. 21). (செ.அக.). 2. ***உயர்த்துதல்;*** raising, lifting up.

*[உன்னம் → உன்னயம்.]*

**உன்னல்** *uṉṉal*, பெ. (n.) 1. ***கருதுகை*** (பிங்.); thinking. "உன்னல் காலே ஊன்றல் அரையே முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே" (உரை நூற்பா). 2. ***மனம்*** (பிங்.); mind.

ம. உன்னல்

*[உன் → உன்னு → உன்னல்.]*

**உன்னலர்** *uṉṉalar*, பெ. (n.) ***பகைவர்;*** enemies, lit, those who are unmindful. (செ.அக.).

*[உன் → உன்னு + அல் + அர் "அல்" எ ம.இ நி.]*

**உன்னாகங்கொடி** *uṉṉāgaṅ-koḍi*, பெ. (n.) ***பெரு முசுட்டை;*** many-flowered bindweed (L). (செ.அக.).

*[உன் + நாகம் + கொடி ]*

**உன்னாயங்கொடி** *uṉṉāyankoḍi*, பெ. (n.) 1. ***கொடி வகை;*** elliptic-leaved silverweed. 2. ***கொடிவகை;*** bristly heart-leaved silverweed. (செ.அக.).

*[உன்னாகன் → உன்னாயன் + கொடி.]*

**உன்னாயம்** *uṉṉāyam*, பெ (n.) ***உயர்வு;*** height. (ஆ.அக.).

*[உன்[3] + நயம் - உன்னயம் → உன்னாயம். 'நயம்' சொல்லாக்க ஈறு.]*

**உன்னாலகம்** *uṉṉālagam*, பெ. (n.) ***பின் தொடரி;*** a plant causing bewilderment. It is opposed to முன் றொடரி. (செ.அக.).

*[உன் + நாலகம்.]*

**உன்னி**[1]**-த்தல்** *uṉṉi-*, 4. செ.கு.வி (v.i.) 1. ***எண்ணுதல்;*** to think, consider. 2. ***உயர்தல்;*** to climb up.

ம. உன்னிக்குக, **க.** உன்னிசு, உன்னுக

*[உன் → உன்னி → உன்னி-த்தல் ]*

**உன்னி**[2] *uṉṉi*, பெ. (n.) ***ஊழ்குதற்குரிய*** (தியானித்தற் குரிய.) ***பொருள்;*** that which is fit to be meditated

upon. "ஞால முன்னியைக் காண்டு நாங்கூரிலே" (திவ் பெரியதி. 10,1,3).

*[உன் + இ]*

**உன்னி**³ *unni*, பெ. (n.) 1. ***குதிரை;*** horse. "உன்னிவாய்ப் பொன் கறித்திட" (இரகு நகர. 51.). 2. ***அழிஞ்சில்*** (மூ.அ ); sage-leaved alangium. 3 ***செடிவகை;*** Indian lantana (செ அக.).

*[உல் → உன் → உன்னு = முன்னோக்கிச் செலுத்துதல், விரைதல் உன்னு → உன்னி ]*

**உன்னிப்பு** *unnippu*, பெ. (n.) 1. ***கவனிப்பு;*** intentness. உன்னிப்பாய்க் கேட்கிறான் (உ.வ.). 2. ***அறிவுக்கூர்மை;*** acuteness of mind, discernment 3 ***ஊகிப்பு;*** guess 4 ***குறிப்பு;*** unerring sign by which a place or person is known (W ). இருட்டிலும் உன்னிப்பாக எடுத்துவிட்டான் (உ.வ.). 5. ***முயற்சி*** (வின் ); exertion, effort 6. ***உயரம்;*** height. உன்னிப்பான மலை. 7. ***கண்ணியம்;*** dignity. உன்னிப்பான பேச்சு (வின்.). (செ.அக.).

*[உல் → உன்னு → உன்னிப்பு ]*

**உன்னியம்** *unniyam*, பெ. (n.) ***சொந்தம்;*** that which is ours, on our side. (W.). (செ.அக.).

*[உல் → உன் → உன்னியம்.]*

**உன்னியர்** *unniyar*, பெ. (n.) ***சுற்றத்தார்;*** relations (W.). (செ.அக.).

*[உல் → உன் → உன்னியர்.]*

இச்சொல் வன்னியர் எனத்திரிந்து உழவருள் ஒரு சாராரைக் குறித்தது. ஒ.நோ ஒக்கல் → ஒக்கலியர் ]

**உன்னியன்** *unniyan*, பெ. (n.) ***உரிமையன், சொந்தக் காரன்;*** relative.

*[உன்னியம் → உன்னியன் (வேக. 39.).]*

**உன்னு-தல்** *unnu-*, 11. செ.கு.வி. (v.i.) ***பேசவாய் கூட்டுதல்;*** to be on the point of speaking, as having words on the tongue பேசவுன்னுகிறான். (இ வ ).

*[உல் → உன் → உன்னு ]*

**உன்னு**²**-தல்** *unnu-*, 12. செ.குன்றாவி. (v.t.) ***கருதுதல்; ஊழ்குதல்*** (தியானம்); to think, consider. "உன்னலே தியானம்" (கந்தபு. திருநகர. 81).

ம. உன்னுக, க. உன்னிசு, **கோத.** உன்ய **துட.** உன்ய, **தெ.** உங்கிசு, **குவி.** ஒன்பினை, பிரா. கன்னிங்க்

*[உல் → உன் → உன்னு → உன்னு-தல் ]*

**உன்னு**³**-தல்** *unnu-* 11 செ.கு வி (v.i.) 1. ***எழும்புதல்;*** to rise. குதிரை யுன்னிப் பாய்ந்தது (உ.வ.). 2. ***முன்னங் கால் விரலை யூன்றி நிமிர்தல்;*** to be on tiptoe

*[உல் → உன் → உன்னு.]*

**உன்னு**⁴**-தல்** *unnu-* 12. செ குன்றாவி (v.t.) 1. ***இழுத்தல்;*** to pull. (W.). 2. ***ஊஞ்சலுந்துதல்;*** to propel (L.). (செ.அக.).

**தெ.** உங்கு.

*[உல் → உன் → உன்னு.]*

**உன்னு**⁵ *unnu-*, பெ. (n.) 1. ***விரைந்தெழும்புகை;*** spring, jump. அவன் இரண்டு உன்னிலே வந்துவிடுவான் (இ.வ.). 2. ***இழுக்கை;*** effort, tug, impulse. எருது இரண்டு உன்னிலே கயிற்றை இழுத்துப் போடும். (இ.வ.). (செ.அக.).

*[உல் → உன் → உன்னு.]*

**உன்னு**⁶ *unnu*, பெ. (n.) ***சடைச்சி*** பார்க்க; see *śaḍaicci* (L) (செ.அக.).

*[உல் → உன் → உன்னு ]*

**உனகன்** *unagan*, பெ. (n.) ***இழிந்தவன்;*** low, mean person. "உனகனா யரக்கனோடி யெடுத்தலும்" (தேவா, 1198,1).

*[உலகன் → உனகன்.]*

**ஊ**[1] ū, 1. ***ஆறாமுயிரெழுத்து; உயிர் முயற்சியாற் பிறக்கும் எழுத்துகளுள் வாயைத் திறத்தலோடு இதழ் குவிவாற் பிறக்கும் ஒரு நெட்டுயிர்;*** sixth letter and vowel of the Tamil alphabet, the close back tense rounded vowel in Tamil

*[உ → ஊ.]*

**ஊ**[2] ū, இடை. (part.) 1. ***முன்மைச்சுட்டு;*** frontal demonstrative. 2. ***இடைமைச்சுட்டு;*** intermediate demonstrative.

*[ஊ - சுட்டெழுத்தாகமட்டுமன்றிச் சுட்டுச்சொல்லாகவும் வழங்கியது. "நெட்டெழுத்தேழே ஓரெழுத்தொருமொழி" (தொல் எழுத் 43).]*

**ஊ**[3] ū, சு.பெ. (pron) ***நீ என்னும் முன்னிலை ஒருமைப்பெயர்;*** you, second pers sing.

*[ஊன் → ஊ (மறைந்துபோன தமிழ்ச்சொல்).]*

முது பண்டைக்காலத்தில் ஆன் ஈன் ஊன் என்பன மூவிட ஒருமைச் சுட்டுப்பெயர்களாக இருந்தன ஆன் → நான் என்றும், ஊன் → நூன் → நீன் → நீ என்றும் திரிந்தன.

**ஊன்** *பார்க்க, see ūn*

**ஊ**[4] ū, பெ. (n) ***கைக்கிளையென்னும் இசையின் எழுத்து*** (திவா.); symbol representing the third note of the gamut, usu ga

*[உ → ஊ (இருமாத்திரை நெட்டுயிர்) சரிகமபதநி என்னும் ஏழு சுரங்களின் மூன்றாம் எழுத்து 'க'வுக்கு நிகரான பண்டைய இசையெழுத்துக் குறியீடு.]*

**ஊ**[5] ū, பெ. (n) 1. ***தசை*** (தொல்.எழுத்.269); flesh, meat 2. ***நலமின்மை;*** illness (சேரநா )

ம. ஊ, **கோத.** ஊ (எயிர்), **க.** ஊஞ்ச; **குவி.** ஊயு; **பிரா.** கூ.

*[ஊன் → ஊ.]*

**ஊ**[6] ū, பெ. (n) ***ஊண், உணவு*** (நாநார்த்த ); food (செ.அக ).

*ஊண் → ஊ (கடைக்குறை) = உணவு.]*

**ஊ**[7] ū, இடை. (part ) ***இறந்தகால வினையெச்ச ஈறு;*** ending of past vbl pple செய்யூ, காணூஉ.

*[உ → ஊ இறநதகால வினையெசச ஈறாகிய உகரம் நெடிலாகிச் செய் → செய்யு → செய்யூ எனத் தொடர் இறந்தகாலம குறித்தது. தகர எழுத்துப்பேறு பெறும்போது, செய் → செய்து எனத் திரிந்து இறந்த காலம் மட்டும் சுட்டும் ]*

**ஊ** ū, இடை (part ) ***நோவு குறித்த ஒலிக்குறிப்பு இடைச்சொல்;*** expression of pain or shivering ஊ! வலிக்கிறது; 'ஊ' வென்று நடுங்குகிறான். (இ.வ.).

*[ஊ - ஒலிக்குறிப்பு ]*

**ஊக்கப்பாடு** *ūkka-p-pāḍu,* பெ. (n ) ***ஊக்கங்கொள்கை;*** zeal, fervour. "குன்றா நன்றியு மூக்கப்பாடும்" (திருவிளை.நகரப்.57). (செ அக.).

*[ஊக்கம் + பாடு.]*

**ஊக்கம்** *ūkkam,* பெ. (n ) 1. ***மனக்கிளர்ச்சி*** (குறள்.382); impulse, ardour, zeal 2. ***முயற்சி;*** exertion, effort. "ஊக்க வேர்பூட்டி" (சீவக.962) 3. ***வலிமை;*** strength, power, force "ஊக்கமுடையா னொடுக்கம்" (குறள். 486). 4. ***வினைமேற் கொண்ட எண்ணம்;*** firm persuasion, conviction "இடஞ் சிறிதென்னு மூக்கந் துரப்ப" (புறநா.8,3). 5 ***உயர்ச்சி*** (சூடா.); height, elevation, hugeness 6. ***மிகுதி*** (பிங்.); abundance 7 ***உண்மை*** (திவா.); truth. (செ.அக.). 8. ***உள்ளத்தின் மிகுதி*** (ஆ.அக.); enthusiasm. 9. ***மனத்தாற்றல்;*** will power

**ம.** ஊக்கம, **க.** உர்க்கு, உக்கு; **தெ.** உக்கு.

*[ஊக்கு → ஊக்கம் ]*

**ஊக்கல்** *ūkkal,* பெ. (n.) 1 ***முயலுகை;*** putting forth effort "என்று நன்றூக்க லந்தண ருள்ளம்" (நான்மணி. 86). 2 ***மிகுதி*** (சூடா ); abundance (செ அக ). 3. ***எழுப்பல்;*** raising 4 ***ஏறுதல்;*** climbing 5 ***தளர்த்தல்;*** relaxing 6 ***அசைத்தல்;*** shaking, moving 7 ***அதிகப்படுத்துதல்;*** enhancing, boosting 8 ***உள்ளத்தை உந்துவித்தல் அல்லது ஒருவினையின் மேற்செலுத்தல்*** (சு வி.41); encouraging, inspiring

*[ஊக்கு → ஊக்கல்.]*

**ஊக்கலர்** *ūkkalar,* பெ. (n) ***முயற்சியுடையவர்;*** persons of energy, of spirit, of pluck "உயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மின்". (மதுரைக் 743). (செ.அக.).

*[ஊக்கு → ஊக்கல் → ஊக்கலர் ]*

**ஊக்கிறாக்குருவி** *ūkkiṟā-k-kuruvi,* பெ (n) ***ஒரு வகைக் குருவி;*** a kind of sparrow (சா அக ).

*[ஊக்கு → ஊக்கணம் + குருவி - ஊக்கணாங்குருவி → ஊக்கராங்குருவி → ஊக்கிறாக்குருவி (கொ.வ ). ஊக்குணா (நிலப்பனை) மரத்தில் வாழும் குருவியாகலாம்.]*

**ஊக்கு**[1]**-தல்** *ūkku-,* 5 செ குன்றாவி (v.t.) 1 ***ஆட்டுதல்;*** to swing, shake "ஐய சிறிதென்னை யூக்கி யெனக்கூற" (கலித் 37) 2. ***நெகிழ்த்துதல்;*** to loosen, as one's hold "கைகளை யூக்கப் பசந்தது நுதல்" (குறள்.1238). 3. ***தப்புதல்;*** to miss the mark "ஊக்கருங் கணையினர்" (மதுரைக் 647) 4 ***ஊக்கமூட்டுதல்;*** to encourage, motivate, prompt. அந்தக் காரியத்தில் அவனை ஊக்கினார். 5. ***முயலுதல்;*** to make an effort, act with energy "நீணெறி யூக்கினா னுவவுறு மதியி னொண்மையான்" (சீவக 1409) 6 ***கற்பித்தல்;*** to teach, instruct.

"விஞ்சைகளிரண்டும் . ஊக்கினன்" (கம்ப ரா.தாடகை.18). 7 **நினைத்தல்;** to consider, ruminate (செ.அக). 8. **அசைத்தல்** (ஆ.அக); to move, stir up

ம. ஊக்குக, க. உய், ஒய, து. உச்சாலு; தெ., பட. ஊகு.

*[ஊகு → ஊங்கு → ஊக்கு]*

**ஊக்கு²-தல்** *ūkku-*, 5. செகுன்றாவி (vt) 1 **ஏறுதல், இவர்தல்;** to ride 2 **நோக்குதல்;** to look at, to perceive. (செ.அக). 3 **உள்ளத்தை முற்செலுத்துதல்;** to impel.

*[ஊங்கு → ஊக்கு → ஊக்குதல் (சு.வி.41)]*

ஆரிய மொழிகளிலும் முறசெலவும் ஊக்கலும் பற்றிய சொற்கள் சில ஊகாரச் சுட்டடியாய்ப் பிறந்துள்ளன.

*OFr* ussier, *Fr* huissier, *E* usher, to walk before, *L* urgeo, *E* urge, to drive, to press. *Sans* urja, U = ஊ, உ

**ஊக்கு³** *ūkku*, பெ (n) 1. **ஊக்கம்;** zeal, spirit "ஊக்கொடு பரலென வுருமுப் பற்றுமால்" (கந்தபு திருப்பர 11). (செ அக) 2 **எழுப்புதல்;** arousal, awakening 3 **கற்பித்தல்;** briefing 4 **சிந்தித்தல்;** thinking

ம. ஊக்கு

*[ஊங்கு → ஊக்கு. (சு வி 41)]*

**ஊக்குணா** *ūkkuṇā*,. பெ. (n) **நிலப்பனை** (சித் அக.), moosly root (செ.அக)

*[ஒருகா ஊக்கு¹ + உணா]*

**ஊகதன்** *ūgadaṉ*, பெ (n) **முருங்கை;** drumstick.

*[ஊகு¹ + ஊகதன்.]*

**ஊகம்¹** *ūgam*, பெ. (n) 1 **ஊகம்புல்;** broomstick-grass "ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்" (பெரும் பாண் 122) 2 **கருங்குரங்கு;** black monkey "பைங்கணூகம் பாம்பு பிடித்தன்ன" (சிறுபாண்.221). 3 **பெண் குரங்கு;** female monkey

க. ஊக

*[1 ஊகு → ஊகம் 2 உலுமம் → உலுகம் → ஊகம் உலுமம் = கரியமயிர்]*

**ஊகம்²** *ūgam*, பெ (n) 1 **உய்த்துணர்தல்;** inference, conjecture, guess "ஊகமனுபவம் வசனமூன்றுக்கும்" (தாயு எங்குநிறை 3) 2. **கருத்து** (சூடா), thought, consideration, deliberation 3 **உத்தி;** skill, discernment "ஊக முளதேற் சிறுவருரையுங் கொள்க" (ஞானவா முமுட் 27). 4 **அறிவு;** knowledge

*[உல் → ஊல் → ஊகு → ஊகம்]*

**ஊகம்³** *ūgam*, பெ (n) **படை வகுப்பு;** military array, squadron "ஊகவான் படையுலப்ப" (கந்தபு சூரனகர்புரி.1)

*[உகு → ஊகு → ஊகம்]*

**ஊகம்⁴** *ūgam*, பெ. (n) **புலி.** (அக.நி.); tiger

*[உகு → ஊகு → ஊகம். உகுத்தல் = அழித்தல், கொல்லுதல். ஊகம் = கொலலும் தன்மை வாய்ந்த புலி.]*

**ஊகனம்** *ūgaṉam*, பெ. (n) 1. **காரணங் காட்டுகை;** reasoning 2. **ஊகம்;** inference, deduction 3. **துணிபு;** conclusion (செ.அக.).

*[ஊகம் → ஊகனம் (கொ.வ).]*

**ஊகனி** *ūgaṉi*, பெ. (n) **துடைப்பம்** (வின்.); broom (செ அக).

*[ஊகை → ஊகனி]*

**ஊகாமுள்** *ūgā-muḷ*, பெ. (n) **ஊகம்புல்லின் முள்;** spiny thorn of broomstick grass (செ அக).

க. ஊகு

*[ஊகை → ஊகா + முள்.]*

**ஊகி¹-த்தல்** *ūgi-*, 4 செ குன்றாவி (vt) 1 **முன்னதாகக் கருதுதல்;** to conjecture, guess, infer 2 **கலந்தாய்தல்;** to consider, deliberate (செ அக). 3 **இட்டுக்கட்டுதல்** (ஆ அக), to imagine

*[உல் (கூர்மை) → ஊல் → ஊ → ஊகு → ஊகி (சு வி 41)]*

**ஊகி²** *ūgi*, பெ. (n) **நுண்ணறிவுடையோன்-ள்;** intelligent, discerning person (செ அக)

*[ஊகம் → ஊகி]*

**ஊகிமொழி** *ūgi-moḻi*, பெ (n) **செய்கை** (சைகை) **காட்டிப் பேசும்மொழி** (Pond), language by signs (செ அக)

*[ஊகி + மொழி]*

**ஊகு¹-தல்** *ūgu-*, 7. செ.கு வி. (v.i.) 1 **அசைதல்;** to move 2. **ஊசலாடுதல்;** to swing; 3. **நீளுதல்;** to lengthen.

க. ஊகு

*[ஊ → ஊகு.]*

**ஊகு²** *ūgu*, பெ (n) 1 **கூர்மை;** sharpness 2 **நுண்ணறிவு;** intellect

*[உ → உல (கூர்மை) → ஊல் → ஊகு.]*

**ஊகுமுள்** *ūgu-muḷ*, பெ (n) 1 **சுணை;** prickles or sharp points as on certain leaves 2 **துடைப்பம் முள்;** thorn of broom-stick grass (சா அக.)

*[உ → உல் (கூர்மை) → ஊல் → ஊகு + முள்]*

**ஊகூ** *ūgū*, பெ (n) 1 **கந்தருவர் எனப்படும் யாழோருள் ஒருவன்;** Huhu, a Gandharva, associated with Hāhā ஆகாவு மூகூவும் 2 **சிந்துவெளி முத்திரையில் காணப்படும் இயற்பெயர்;** proper name in the Indus seal No 2803

*[ஊஊ → ஊகூ]*

ஆஆ (ஆகா) எனவும் ஊஊ (ஊகூ) எனவும் பெயரிட்டுக் கொளவது தொன்முது கால மரபு சிந்துவெளி முத்திரைகளிலும் ஆஆ, ஊஊ என்னும் இயற்பெயர்கள் காணப்படுகின்றன

**ஊகை**[1] *ūgai,* பெ. (n.) ***கல்வி;*** learning, erudition wisdom, (செ அக ).

*[ஊகு[2] → ஊகை.]*

**ஊகை**[2] *ūgai,* பெ. (n.) ***ஊகம்***[1] பார்க்க; see *ūgam.*[1]

**ஊங்கண்** *ūṅgaṇ,* வி.எ. (adv.) 1. ***உவ்விடத்து*** (தொல்.எழுத்.114); yonder, where you are 2. ***முற்காலத்தில்;*** in former time "ஊங்க ணோங்கிய. வுரவோன் றன்னை." (மணி.21,181).

*[ஊங்கு → ஊங்கண். (வே.க 29).]*

**ஊங்கணோர்** *ūṅgaṇōr,* பெ (n.) ***முன்னுள்ளோர்;*** those who lived in former times ancestors "தூங்கெயி லெறிந்த நின் னூங்க ணோர் நினையின்" (புறநா.39). (செ.அக.).

*[ஊங்கண் → ஊங்கணோர்.]*

**ஊங்கனூர்** *ūṅgaṉūr,* பெ (n) ***சேரநாட்டின் கடற்கரை யூர்;*** ancient city on the seashore of Chēra land.

*[ஊங்கண் + ஊர். (முன்னுள்ள ஊர்). இவ்வூரில் சேரன் கடப்ப மரத்தை வெட்டினான் எனக் கூறப்படுகிறது (அபி சிந் ).]*

**ஊங்காரப்பறவை** *ūṅgāra-p-paṟavai,* பெ. (n.) ***பறவை வகைகளுள் ஒன்று;*** a species of bird

*[ஊங்காரம் + பறவை ஊங்காரம் - ஒப்புதல் காட்டும் ஒலிக்கு றிப்பு ]*

**ஊங்கு**[1] *ūṅgu,* வி.எ. (adv ) 1. ***முன்னிலையிடம், உவ்விடம்;*** yonder, where you are "ஊறுகட மாவுற லூங்கெலாம்" (கம்பரா வரைக்காட் 60) 2. ***முன்பு;*** in former times. "உணரா வூங்கே" (குறுந் 297).

*[ஊ → ஊங்கு ]*

**ஊங்கு**[2] *ūṅgu,* பெ. (n.) 1 ***மிகுதி*** (சூடா.); superiority, greatness 2. ***மேம்பட்டது;*** that which is lofty "கல்வியி னூங்கில்லை". (நீதிநெறி.2).

*[உங்கு → ஊங்கு. (வே க 29).]*

**ஊங்கு**[3]**-தல்** *ūṅgu-,* 5.செ.கு.வி. (v.i.) ***ஆடுதல்;*** to swing. "பூங்க ணாய மூக்க வூங்காள்" (நற்.90). (செ.அக.).

தெ. ஊகு.

*[ஊ → ஊகு → ஊங்கு ]*

**ஊங்கொட்டு-தல்** *ū-ṉ-koṭṭu-,* 5.செ கு.வி (v.i.) ***பிறர் சொல்வதைத் தொடர்ந்து கேட்பதற்கும், சரி என்று ஒப்புவதற்கும் அடையாளமாக 'ஊ' என்று சொல்லுதல்;*** to respond by ejaculating 'um' as in listening to a story that is to say 'yes', agree without questioning. (செ அக.).

ம., க. ஊம்; தெ. ஊ.

*[உம் → ஊம் + கொட்டுதல்.]*

**ஊச்சில்** *ūccil,* பெ. (n.) ***தசை நோய்;*** morbid state of a muscle, myalgia. (செ அக.).

*[ஊன் → ஊச்சு → ஊச்சில்.]*

**ஊச்சு**[1]**-தல்** *ūccu-,* 5 செ குன்றாவி (v.t.) ***உறிஞ்சுதல்;*** to absorb "கள்ளத்தி னூச்சுஞ் சுரம்" (ஐந்.ஐம்.38).

*[உறிஞ்சு → ஊஞ்சு → ஊச்சு.]*

**ஊச்சு**[2] *ūccu,* பெ. (n) ***அச்சம்*** (அக.நி.); fear.

*[ஊசு → ஊச்சு ]*

**ஊசகம்** *ūšagam,* பெ. (n.) 1. ***உப்பு;*** salt. 2. ***மிளகு;*** pepper. 3 ***விடியற்காலம்;*** day-break.

*[ஊசல் = புலர்தல், உலர்தல். ஊசு → ஊசகம்.]*

**ஊசணம்** *ūšaṇam,* பெ (n) 1. ***மிளகு;*** black-pepper 2. ***திப்பிலி;*** long-pepper (சா.அக.).

*[ஊசு → ஊசணம் ஊசகம் பார்க்க; see ūšagam ]*

**ஊசநாற்றம்** *ūšanāṟṟam,* பெ (n.) ***ஊசல் நாற்றம்;*** foul smell

*[ஊ → ஊள் → ஊசு → ஊசல் + நாற்றம் ]*

**ஊசம்** *ūšam,* பெ (n) 1. ***உவர்மண் பூமி;*** salt-ground 2. ***சவர்க்கார நிலம்;*** soil impregnated with soda or saline particles 3. ***துளை;*** cleft or a hole (சா.அக.).

*[உவல் → ஊவல் → ஊசல் → ஊசம்.]*

**ஊசமன்** *ūšamaṉ,* பெ. (n) ***ஆவி;*** vapour, (சா.அக.).

*[உல் → ஊல் → ஊசு → ஊசமன்.]*

**ஊசரக்கல்** *ūšarakkal,* பெ. (n) ***சுக்கான் கல்;*** lime-stone (சா.அக.).

*[ஊசு → ஊசரம் + கல்.]*

**ஊசரம்** *ūšaram,* பெ. (n) 1. ***உவர்த்தரை;*** brackish, sterile land. 2. ***உவர்மண்;*** washerman's or fuller's earth (செ அக ) 3 ***பூவழலை*** (ஆ.அக.); saline soil.

*[உவல் → ஊவல் → ஊயல் → ஊசல் → ஊசலம் → ஊசரம்.]*

**ஊசல்** *ūšal,* பெ (n) 1 ***அசைவு;*** moving to and fro "பூங்குழை யூசற் பொறை சால் காதின்" (பொருந.30). 2 ***ஊஞ்சல்;*** swing "ஊசலூர்ந்தாட" (கலித் 37). 3 ***ஒருவகைச் சிற்றிலக்கியம்;*** swing-song, a poem in praise, composed of verses in agaval viruttam or kali-t-tāḻišai metre, purporting to be sung when moving a swing on which is seated the idol or the person 4 ***கலம்பக உறுப்புகளுளொன்று;*** member or component part of Kalambagam (இலக் வி 812) 5. ***மனத்தடு மாற்றம்;*** trepidation, perturbation, fear "ஊசனீங்கினர்" (கம்பரா நாகபா 130). (செ அக.)

ம. ஊஞ்சல; து. உச்சலு. தெ. உய்யல. க. உய்யாலெ. உயயால; *L* Oscillum, a swing, *E* Oscillate, to swing.

*[உந்து → உந்தல் → உஞ்சல் → ஊஞ்சல் → ஊசல்.]*

**ஊசல்**[2] *ūsal,* பெ. (n) 1 ***பதனழிந்தது;*** that which is fetid, that which has become stale, rank "குணத்ரயத் தொடு தடுமாறு மூசலை" (திருப்பு.532). 2. ***இவறுதல்;*** miserliness, stinginess, prob fig from fetidness

*[உல் → ஊல் → ஊள் → ஊளல் → ஊசல்]*

**ஊசல் வரி** *ūsal-vari,* பெ (n) ***ஊஞ்சற் பாட்டு*** (சிலப்.291.); song to accompany swinging (செ அக.)

*[ஊஞ்சல் → ஊசல + வரி]*

**ஊசலாங்கொடி** *ūsalāṅgodi,* பெ. (n) ***சகுண்டைக் கொடி;*** creeping plant (unidentified)

*[ஊசல் + ஆம் + கொடி.]*

**ஊசலாட்டம்** *ūsal-āttam,* பெ. (n) 1. ***ஊஞ்சலாடுகை;*** swinging. 2. ***போக்குவரத்து;*** going backward and forward (W)

*[ஊஞ்சல் → ஊசல் + ஆட்டம்.]*

**ஊசலாட்டு** *ūsal-āttu,* பெ (n) ***ஊசலாட்டம்*** பார்க்க; see *ūsalāttam*

*[ஊஞ்சல் → ஊசல் + ஆட்டு]*

**ஊசலாடு-தல்** *ūsal-ādu-,* 5.செ.குவி. (vi) 1. ***ஊஞ்சலாடு தல்;*** to swing. "பொன்னூ சலாடாமோ" (திருவாச 16,1). 2. ***அசைதல்;*** to move to and fro "ஊசலாடு பைங்கமுகு" (சீவக.68) 3. ***போக்குவரத்தாயிருத்தல்*** (வின்); to frequent, come and go (செ.அக.). 4. ***உலவித் திரிதல்*** (ஆ.அக.); to wander, roam.

*[ஊசல் + ஆடு.]*

**ஊசலி** *ūsali,* பெ. (n) ***ஊசலாங்கொடி*** பார்க்க; see *ūsalāṅgodi.* (சா.அக.).

*[ஊசல் → ஊசலி.]*

**ஊசற்கறி** *ūsarkari,* பெ. (n.) ***பதனழிந்த கறி;*** old curry grown stale and nauseous (சா.அக.).

*[ஊசல் + கறி.]*

**ஊசற்சீர்** *ūsar-šīr,* பெ. (n) ***ஊசல்வரி*** பார்க்க; see *ūsal-vari* "நாம் பாடுஞ் சேயுய ரூசற்சீர்" (கலித்.131). (செ.அக.).

*[ஊசல் + சீர்.]*

**ஊசற்பயற்றுக்காரி** *ūsar-payarru-k-kāri,* பெ. (n.) ***வறுமைமிக்க கிழவி;*** destitute old woman. Lit., she that strives to make a living out of stale or spoiled preparation of pulse (செ.அக.).

*[ஊசல் + பயறு + காரி. பயறுகளை வேக வைத்து விற்றுவாழும் பெண்.]*

**ஊசற்பருவம்** *ūsar-paruvam,* பெ. (n) ***பெண்பாற்பிள் ளைத் தமிழ்ப் பருவங்களுளொன்று;*** one of ten paruvams which describes the stage of childhood in which a girl delights in being swung on a swing. (செ.அக).

*[ஊசல் + பருவம்.]*

**ஊசா** *ūsā,* பெ (n) ***மூக்குத்திக்கொடி.*** (வின்); blunt-leaved hogweed (செ அக)

*[ஊசு → ஊசா.]*

**ஊசாட்டம்** *ūsāttam,* பெ. (n) 1. ***ஊசலாட்டம்*** பார்க்க; see *ūsalāttam* 2. ***களவு;*** theft. 3. ***விரைவு;*** speed.

*[ஊசல் + ஆட்டம்.]*

**ஊசாம்பி** *ūsāmbi,* பெ. (n) ***பருமனானவன்;*** bulky stupid man. (சேரநா.).

*[ஊது → ஊதாம்பி → ஊசாம்பி]*

**ஊசாலி** *ūsāli,* பெ. (n) ***ஊற்றால், மீன்பிடி கூடை;*** pointed basket fish trap (செ அக.).

*[ஊசு = கூர்மூக்கு. ஊசு → ஊசாலி. கூம்புவடிவ மீன்கூடை.]*



ஊசாலி

**ஊசான்** *ūsān,* பெ. (n) ***நெட்டையாக வளர்ந்து மெலிந்தவன்;*** tall slender person (சேரநா.).

*[ஊசல் → ஊசலான் → ஊசான். ஊசல் = நீட்சி, மெலிவு.]*

**ஊசி**[1] *ūsi,* பெ. (n) 1 ***தையலூசி*** (பிங்.); sewing-needle. 2. ***எழுத்தாணி;*** iron style for writing on palmyra leaves. "பொன்னோலை செம்பொனூசியா லெழுதி" (சீவக. 369). 3. ***துலாக்கோலின் முள்;*** needle of a balance, magnetic needle 4 ***சூரியக் கடிகாரத்தின் முள்*** (வின்.), pointer of a dial 5. ***நிரைக்கழு;*** spike put up to protect gates and walls "பெய ரூசியும்" (சிலப் 15, 213). 6. ***அடியொட்டி;*** instrument with spikes to pierce the feet "உள்ளடி யூசிபாய" (சீவக 2768) 7. ***குண்டூசி;*** pin 8. ***குயவர் மட்கலத்தை அறுக்குங் கருவி;*** potter's instrument used for fashioning clay. 9. ***கூர்மை;*** sharpness, pointedness "குவிமுகி மூசிவெண் டோடு" (பதிற்றுப்.70,7). 10. ***சிறுமை;*** slenderness, thinness, lightness ஊசித்தொண்டை. (செ.அக.).

ம. ஊசி, க. சூசி; பட. குஞ்சி.

*[உளி → உசி → ஊசி (வே.க.87-88).]*

**ஊசி²** *ūši*, பெ. (n) ***வடக்கு;*** north "பாசிச் செல்லா தூசித்துன்னாது" (புறநா 229). (செ.அக )

*[உடு + தி → உடுதி → உடுசி (வடகோடி உடுமண்டலத்திசை) உடுசி → ஊசி. இனி, உடு → உடுக்கு → உடக்கு → வடக்கு என்பதும் வடகோடி உடுமண்டலத்திசை சுட்டியது காண்க ]*

**த.** உடுசி > *Skt* udici

**ஊசிக்கண்** *ūši-k-kan*, பெ. (n) ***சிறுகண்;*** small eyes ஊசிக் கண்ணிலே ஆகாசம் பார்த்ததுபோல் (இ வ ), (செ.அக ).

*[ஊசி = சிறியது. ஊசி + கண் வடபுலத்தில் சகரச் சேர்ப்பால் ஊசி → சூசி எனத் திரிந்தது ]*

**ஊசிக்கணவாய்** *ūši-k-kanavāy*, பெ. (n) ***மீன்வகை*** (வின்.); a species of cuttle fish. (செ.அக ).

**ம.** ஊசியுடத்தேடு.

*[ஊசி (சிறுமை) + கணவாய் ]*

**ஊசிக்கப்பல்** *ūšikkappal*, பெ. (n.) ***புகையிலை வகை;*** indigenous variety of tobacco (செ.அக )

*[ஊசி + கப்பல். கப்பல் = கப்பல் வழிவந்த சரக்கு ]*

**ஊசிக்கழுத்தி** *ūši-k-kaḻutti*, பெ. (n) ***கொக்கு மீன்;*** marine fish, long-nosed yellowish green. (செ அக.).

**ம.** ஊசிமீன்

*[ஊசி + கழுத்தி.]*

**ஊசிக்களா** *ūši-k-kaḷā*, பெ. (n.) ***முள்ளுக்களாச் செடி.*** (L ), fascicled-leaved spinous barberry (செ.அக.)

*[ஊசி + களா ]*

**ஊசிக்காது** *ūši-k-kādu*, பெ. (n) 1. ***ஊசித்துளை;*** eye of a needle 2. ***நுனித் தறியுஞ் செவிப்புலன்;*** sharp ear, acuteness of hearing. (செ.அக.).

*[ஊசி + காது.]*

**ஊசிக்காய்** *ūši-k-kāy*, பெ. (n.) ***தேங்காய் வகை;*** a species of coconut (செ.அக ).

*[ஊசி + காய்.]*

**ஊசிக்கார்** *ūši-k-kār*, பெ. (n) ***மூன்று மாதத்திற் பயிராகும் நெல் வகை;*** a kind of paddy sown in May and reaped in July (செ.அக.)

*[ஊசி + கார்.]*

**ஊசிக்கால்** *ūši-k-kāl*, பெ. (n.) ***நடுக்குத்துக்கால்*** (வின்.); king post. (செ.அக.).

*[ஊசி + கால்.]*

**ஊசிக்குத்தல்** *ūši-k-kuttal*, பெ. (n.) ***உடம்பினுள் ஊசியின் வழியாக மருந்து புகட்டல்;*** throwing or introducing a liquid medicine within the body by a needle-injection

*[ஊசி + குத்தல்.]*

**ஊசிக்குத்தாளை** *ūši-k-kuttālai*, பெ. (n.) ***நெல்வகை;*** a variety of paddy (செ அக.).

*[ஊசி + குத்தாளை ]*

**ஊசிக்குறண்டி** *ūši-k-kuraṇdi*, பெ. (n.) ***முட் குறண்டி;*** thorny shrub (சா அக ).

*[ஊசி + குறண்டி ]*

**ஊசிக்கூடு** *ūši-k-kūdu*, பெ (n.) ***ஊசி வைக்குங்கூடு;*** needle-case (செ.அக ).

*[ஊசி + கூடு.]*

**ஊசிச்சம்பா** *ūši-c-cambā*, பெ (n) ***சம்பா நெல்வகை;*** a variety of cambā paddy, yielding a slender kernel (செ அக.).

*[ஊசி + சம்பா.]*

**ஊசித்தகரை** *ūši-t-tagarai*, பெ. (n.) ***அவரை வகை.*** (L), shrubby bean (செ அக.).

*[ஊசி + தகரை ]*

**ஊசித்தூறல்** *ūši-t-tūṟal*, பெ. (n ) ***சிறுமழை;*** light drizzle. (செ அக ).

*[ஊசி + தூறல்.]*

**ஊசித்தொண்டை** *ūši-t-toṇḍai*, பெ. (n) ***சிறு தொண்டை;*** slender, narrow throat ஊசித் தொண்டையும் தாழி வயிறும் (இ வ.).

*[ஊசி + தொண்டை.]*

**ஊசிநரம்பு** *uši-narambu*, பெ. (n) ***காதிலுள்ள ஊசியைப் போன்றவோர் நரம்பு, கேள்வி நரம்பு;*** auditory nerve - acusticus (சா.அக ).

*[ஊசி + நரம்பு.]*

**ஊசிநீர்** *ūšinīr*, பெ. (n.) 1. ***மூத்திரம்;*** urine "தொடுத்திடுவாய் தங்கள்தங்கள் ஊசிநீரில் அடுத்திடு வாய் நடுநீர்ச்சூ டாறுமுன்னே" (சா.அக.) 2. ***மழை நீர்;*** rain water 3. ***வாய்நீர்;*** saliva. (சா.அக ). 4. ***பிறப்பு உறுப்பு;*** genital organ உசுநீர் (கொங்.வ.).

*[ஊசு + நீர் - ஊசுநீர் → ஊசிநீர்.]*

**ஊசிப்பலகை** *ūši-p-palagai*, பெ. (n) ***வலை பின்னும் ஊசி;*** needle for making nets (செ.அக.).

*[ஊசி + பலகை.]*

**ஊசிப்பார்வை** *ūši-p-pārvai*, பெ. (n) ***பார்வை;*** acuteness or clearness of vision-acuity (சா.அக.).

*[ஊசி + பார்வை.]*

**ஊசிப்பாலை** *ūši-p-pālai*, பெ. (n.) ***கொடிவகை*** (L.); needle-leaved swallow-wort (செ.அக.).

*[ஊசி + பாலை.]*

**ஊசிப்புல்** *ūši-p-pul*, பெ. (n.) ***ஊசியைப்போன்ற புல்;*** needle-shaped grass (சா.அக.).

*[ஊசி + புல்.]*

**ஊசிப்புழு** *ūši-p-pulu,* பெ (n) ***புழு வகை;*** worm of the shape of a needle, brought out of the ground by a light drizzle on a sunny day (செ.அக.).

*[ஊசி + புழு]*

**ஊசிப்போ-தல்** *ūši-p-pō-,* பெ. (n) ***ஊசல் நாற்றமடித்தல்;*** becoming putrified from being kept long; becoming stale and nauseous. (சா.அக).

*[ஊசி + போதல்.]*

**ஊசி மல்லிகை** *ūši-malligai,* பெ. (n) ***முல்லைக்கொடி வகை*** (L), eared jasmine

*[ஊசி + மல்லிகை.]*

**ஊசிமிளகாய்** *ūši-milagāy,* பெ. (n) ***கொச்சி மிளகாய்;*** bird pepper, very fiery. (செ.அக.).

*[ஊசி + மிளகாய்.]*

**ஊசிமிளிரை** *ūši-milirai* பெ. (n.) ***காசி யாளி;*** a species of oleander with yellow flowers. (சா.அக.).

*[ஊசி + மிளிரை.]*

**ஊசி மீன்** *ūši-mīn,* பெ. (n.) ***ஊசிக்கழுத்தி*** பார்க்க; see *ūši-k-kalutti.*

*[ஊசி + மீன்.]*

**ஊசிமுல்லை** *ūši-mullai,* பெ. (n.) ***ஊசிமல்லிகை*** (பிங்.); eared jasmine. (செ.அக.).

*[ஊசி + முல்லை.]*

**ஊசிமுறி** *ūši-muri,* பெ. (n) ***இடைக்காடரியற்றிய ஒரு நூல்.*** (யாப் வி.95,பக் 375); poem by Iḍai-k-kādar, not extant

*[ஊசி + முறி.]*

**ஊசிமுனை** *ūši-munai,* பெ. (n.) ***ஊசி நுனி;*** needle's point.

*[ஊசி + முனை.]*

**ஊசிமுனையளவு** *ūši-munai-yalavu,* பெ. (n) ***மிகச் சிறிய அளவு;*** extremely small size or quantity. (சா.அக.).

*[ஊசி + முனை + அளவு]*

**ஊசியாவரை** *ūši-y-āvarai,* பெ. (n.) ***வெள்ளை யாவரை;*** Italian senna. (சா.அக.).

*[ஊசி + ஆவரை.]*

**ஊசியுப்பு** *ūši-yuppu,* பெ. (n.) ***வெடியுப்பு;*** nitre-potassium nitrate. (சா.அக.).

*[ஊசி + உப்பு.]*

**ஊசியேற்றல்** *ūši-yērral,* பெ. (n.) ***ஊசியை உடம்பினுட் பாய்ச்சி மருந்தேற்றல்;*** injecting medicines into the system by means of a needle (சா.அக.).

*[ஊசி + ஏற்றல்.]*

**ஊசியோட்டல்** *ūši-y-ōttal,* பெ. (n.) ***ஊசியேற்றல்*** பார்க்க; see *ūši-yērral* (சா.அக.).

*[ஊசி + ஓட்டல்]*

**ஊசியோடு-தல்** *ūši-y-ōdu-,* 5.செ.கு.வி. (vi) ***ஊசித் தையல் செல்லுதல்;*** to pass the needle through in sewing (செ அக.).

*[ஊசி + ஓடு.]*

**ஊசிவண்ணம்** *ūši-vannam,* பெ. (n) ***ஒருவகைப் புடவை;*** a kind of saree. (செ.அக.).

*[ஊசி + வண்ணம்]*

**ஊசிவாசி** *ūši-vāši,* பெ. (n) ***தட்டார், தையற்காரர் ஆகியோரிடமிருந்து அரசு பெறும் வரி;*** tax collected from goldsmiths and tailors 'தட்டார் பெறால் ஊசிவாசி' (S I I vii 820)

*[ஊசி + வாசி வாசி = வரி.]*

**ஊசிவாணம்** *ūši-vānam,* பெ. (n.) ***ஊசிவண்ணம்*** பார்க்க; see *ūši-vannam*

*[ஊசிவண்ணம் → ஊசிவாணம்.]*

**ஊசிவெடி** *ūši-vedi,* பெ. (n.) ***சிறிய வெடிவகை;*** a kind of small-sized crackers (செ.அக.).

*[ஊசி + வெடி]*

**ஊசு[1]-தல்** *ūsu-,* 7.செ.கு.வி. (vi) 1 ***அழுகுதல்;*** to decay, become fetid, rotten, to putrefy, as a corpse. "ஊசிடு மிடும்பை யாகிய உடம்பு" (திருப்பு). 2. ***சுவை கெடுதல்;*** to become stale, sour, rank insipid, as food by keeping "மாசி லோதனம்... ஊசு மேலினியென் செய்வது" (திருவாலவா.6,4).

**ம., க. ஊசு, து. ஊசு**

*[உல் → ஊல் → ஊள் → ஊழ் → ஊய் → ஊசு. ஊழ்த்தல் = முற்றுதல், முதிர்தல், பதனழிதல், அழுகுதல், கெடுதல், நாறுதல்]*

**ஊசு[2]-தல்** *ūsu-,* 5 செ குன்றாவி. (v.t) ***சீவுதல்;*** to shave, cut off in slices, pare off "கணிச்சி போல் கோடுசி" (கலித்.101-8).

*[உய் → ஊய் → ஊசு = செலுத்துதல், போக்குதல், நீக்குதல், சீவுதல்]*

**ஊசு[3]** *ūsu,* பெ. (n) ***குசு;*** emission of wind from the anus.

**க., து., பட. ஊசு**

*[ஊள் → ஊழ் → ஊய் → ஊசு = பதனழிந்த நாற்றம்.]*

**ஊசெனல்** *ūšenal,* பெ. (n) ***இளைப்பாறற் குறிப்பு;*** onom expr. of relief in sitting down to rest. ஊசென்று உட்கார நேரங்கிடையாது (செ.அக.).

*[ஊசு + எனல். ஊசு - பெருக மூச்சுவிடும் இளைப்பாறல் ஒலிக் குறிப்புச்சொல். ஓடிக் களைத்த நாய் ஊசுஊசு என்று மூச்சு வாங்குகிறது (உ.வ.).]*

**ஊஞ்சல்** *ūñjal*, பெ. (n) 1. ***ஊசல்*** (திவா.); swing. 2. ***ஊசற்பாட்டு;*** song to accompany swinging திருமணத்தில் ஊஞ்சல் பாடுகிறார்கள் (இ.வ.).

**ம.** ஊஞ்சல், ஊஞ்சால்; **க.** உய்யல், ஊய்யல், உய்யாலு, உய்யலு, உவாலெ, உவ்வாலெ; **து.** உச்சால், உய்யால், உச்சாலு, உய்யாலு, **தெ.** உய்யலி, உயலி, ஊஞ்சால், உய்யல, ஊக, உயால, உய்யால; **கொலா.** ஊசெ, **நா.** ஊசெ; **பர்.** ஊசல்; **கோண்.** ஊகாக.

*[ஊக்கு → ஊஞ்சு → ஊஞ்சல். ஊக்குதல் = முன்னே தள்ளுதல். "ஐயசிறிதென்னை ஊக்கி" (கலித்.3).]*

**ஊஞ்சல் கட்டில்** *ūñjal-kattil*, பெ. (n) ***ஊஞ்சல்போல் ஆடும் வண்ணம் அமைந்த கட்டில்;*** swinging cot. (சேரநா.).

**ம.** ஊஞ்சால் கட்டில்.

*[ஊஞ்சல் + கட்டில்.]*

**ஊஞ்சற்பாட்டு** *ūñjar-pāttu*, பெ. (n) ***ஊஞ்சலாடும் போது பாடும் பாட்டு;*** song sung in swinging, as an idol, or as the bride and bridegroom seated on a swing at wedding (செ.அக.)

**ம.** ஊஞ்சால் பாட்டு.

*[ஊஞ்சல் + பாட்டு.]*

**ஊஞ்சற்பாலம்** *ūñjar-pālam*, பெ. (n) ***சங்கிலியால் பிணைத்து ஊஞ்சல்போல் அமைத்துள்ள பாலம்;*** suspension-bridge (சேரநா.).

**ம.** ஊஞ்சால் பாலம்.

*[ஊஞ்சல் + பாலம்.]*

**ஊஞ்சற்பிசின்** *ūñjar-pisin*, பெ. (n.) ***உசில மரத்தின் பிசின்;*** gum of the usilam tree. (சா.அக.).

*[ஊஞ்சல் + பிசின்.]*

**ஊட்டம்** *ūttam*, பெ. (n.) 1. ***உண்பிக்கை;*** feeding 2. ***உணவு;*** food, refreshment "ஊட்டமின்றித் துறந்தா லொக்குமே" (திவ்.நாச் 1,9) 3 ***செழிப்பு;*** fertility of land, fatness of a person, opp to வாட்டம். இந்தக் குழந்தை ஊட்டமாயிருக்கிறது (செ.அக.) 4. ***சோற்றுப் படையல்;*** giving a feast (சேரநா.).

**ம.** ஊட்டம்.

*[ஊட்டு → ஊட்டம்.]*

**ஊட்டல்** *ūttal*, பெ. (n) 1. ***உண்பித்தல்;*** nursing by forcing food into the mouth as in children or patients 2. *பால் கொடுத்தல்;* breast feeding 3. *பால் பருகுதல்;* the act of sucking in milk 4. ***இன்பதுன்பங்களை உறுத்தல்;*** (In Philosophy) causing to experience joys and sufferings as the fruits of action in former births 5. ***பிழைப்பூட்டல்;*** restoring to life (சா.அக.).

**ம.** ஊட்டல்; **க.** ஊடு; **து.** ஊட.

*[ஊட்டு → ஊட்டல்.]*

**ஊட்டவிடு-தல்** *ūttavidu-*, 18.செ.குன்றாவி. (v.t.) ***கன்றை அல்லது குட்டியைப் பால் குடிக்கவிடுதல்;*** to let the young of an animal suck (சா.அக.).

*[ஊட்டு → ஊட்ட (வி.எ.) + விடு.]*

**ஊட்டாக்குழந்தை** *ūttā-k-kulandai*, பெ. (n.) 1. ***நோய் வருத்தத்தால் பாலுண்ணாக் குழந்தை;*** child which does not suckle owing to suffering from disease or pain 2. ***பால் மறந்த குழந்தை;*** child which has passed through the stage of suckling 3 ***ஊட்டி வளர்க்காத குழந்தை;*** child not brought up by artificial feeding or by a wet nurse (சா.அக.).

*[ஊட்டாத → ஊட்டா + குழந்தை.]*

**ஊட்டி[1]-த்தல்** *ūtti-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***தாளியடித்தல்;*** to level a field with a harrow

*[ஊட்டு → ஊட்டி. (இருமடிப்பிறவினை) ஊட்டித்தல் = பள்ளத்திற்கு மேட்டு மண்ணைத் தள்ளிச் சமனுறச் செய்தல்.]*

**ஊட்டி[2]** *ūtti*, பெ. (n) 1 ***ஊட்டும் உணவு;*** food. "வரபலம் புஜபலம் ஊட்டியாக வளர்த்த சரீரமானது" (ஈடு.2,6,6). 2 ***பறவை விலங்குகளினுணவு*** (திவா.); food of birds and beasts 3 ***வளர்ப்பு விலங்குகளுக்குத் தீனியிட்டு வைக்கும் தொட்டி அல்லது கழுநீர் வைக்கும் தாழி;*** a vessel or big earthern pot meant for providing cattle-feed.

*[உண் → ஊண் → ஊட்டு → ஊட்டி.]*

**ஊட்டி[3]** *ūtti*, பெ. (n) 1 குழந்தைகட்குப் பாலூட்டும் ***சங்கு;*** feeding conch 2. ***சங்கு போன்ற குரல்வளை;*** Adam's apple "கழுத்தி னோடே ஊட்டியும் அரியாநின் றார்," (பெரியபு.அரிவா.17). 3. ***மழை*** (அக.நி.); rain, lit. that which feeds. (செ.அக.). 4. ***ஊட்டப்படும் பன்றி;*** pig.

**ம.** ஊட்டி.

*[ஊட்டு → ஊட்டி.]*

**ஊட்டி[4]** *ūtti*, பெ. (n.) ***நீலகிரி மாவட்டத்தின் தலைநகரான உதகமண்டலம்;*** Ooty, the headquarters of Nilgiri district.

*[ஒற்றைக்கு + நின்றான் + மன்று - ஒத்தைக்கமந்து - உதகமண்டு - உதகமண்டலம் > E Ooty> த. ஊட்டி.]*

**ஊட்டி[5]** *ūtti*, பெ. (n.) 1. ***ஊட்டப்பட்ட நிறம்;*** paint or colour. 2. ***செவ்வண்ணத்தால் வரைந்த ஓவியம்;*** picture drawn with red-ochre "ஊட்டியன்ன ஒண்டளிர்ச் செயலை" (குறுந்.68-5).

**ஊட்டிக்குற்றி** *ūtti-k-kurri*, பெ. (n.) ***குரல்வளை*** (யாழ்ப்.); Adam's apple. (செ.அக.).

*[ஊட்டி + குற்றி. குற்றி = சிறியது.]*

**ஊட்டியார்** *ūttiyār*, பெ. (n.) ***தம் பாடலுள் 'ஊட்டி' என்ற சொல் அமைந்ததனால் பெயர்பெற்ற கடைச்***

*சங்க காலத்துத் தமிழ்ப் புலவர்;* poet of Sangam age who is named as such because the word ūtti' appears in one of his poems.

*[ஊட்டி + ஆர்.]*

**ஊட்டிரம்** *ūttiram,* பெ. (n) ***தேட் கொடுக்கி*** (மூ.அக.); Indian turnsole (செ.அக ).

*[ஊட்டி → ஊட்டிரம்]*

**ஊட்டு** *ūttu,* பெ (n) 1. ***குழந்தைக்கு உணவு செலுத்தல்;*** feeding child 2. ***உணவு;*** food 3 ***குழந்தை அல்லது நோயாளிக்குக் கொடுக்கும் கவளம்;*** morsel of food given to a child or to a patient. (சா.அக ).

ம. ஊட்டு, க. ஊட்ட, ஊடெ, து. ஊட.

*[உண் → ஊண் → ஊட்டு ]*

**ஊட்டு[1]-தல்** *ūttu-,* செ குன்றாவி. (v.t) 1 ***உண்ணும்படி உணவைப் பிறர் வாயிலே யிடுதல்;*** to put small quantity of food into the mouth, as of a child, of a sick person, as of a token of affection "பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும்" (கலித் 11). 2 ***உண்ணச் செய்தல்;*** to coax and make one eat one's food, as a mother, her child, to entertain, as a guest "ஊற்றுப் பெருக்கா லுலகூட்டும்" (நல்வ 9) 3 ***புகட்டுதல்;*** to instil, infuse அறிவூட்டினான் (உ.வ.) 4 ***வண்ண மேற்றுதல்;*** to dye "அரக்கார்ந்த பஞ்சி கொண் டூட்டினும்" (நாலடி.396) 5 ***நுகரச்செய்தல்;*** to cause, to experience, as the fruits of one's actions "உறற்பால ஊட்டா கழியு மெனின்" (குறள்.378). 6. ***கன்று அல்லது குட்டி பால்குடித்தல்;*** to suck as a calf or a kid இரண்டாட்டில் ஊட்டின குட்டியானான் 7. ***விருந்திடல்;*** to give a feast (செ அக ).

ம. ஊட்டுக, க. ஊடிசு, ஊடு; கோத. உண்க்ச்; தெ. ஊடு (கால்நடைக்கு நீர்கொடுத்தல்), கொலா. உணிப், ஊர்ன், உர்ன்; நா. ஊர்ன்.

*[ஊட்டுதல் = உட்கொளச்செய்தல் உண் (த.வி ) → ஊடு (பி.வி ) → ஊட்டு (செயப் வி.) ஒ நோ வாடு → வாட்டு, கூடு → கூட்டு தொடு → தோண்டு.]*

**ஊட்டு[2]** *ūttu,* பெ. (n) 1. ***உண்பிக்கை;*** feeding "ஊட்டயர்வார்" (சீவக 926) 2 ***உணவு;*** food "தரணி பெல்லா மூன்புக்க வேற்காளிக் கூட்டாம் காண்" (திருவாச.12,14). 3 ***ஊட்டுங் கவளம்;*** morsel given to a child or a sick person. (W) (செ அக ).

க., து. ஊட; ம. ஊட்ட

*[உண் → ஊண் → ஊடு → ஊட்டு.]*

**ஊட்டுக்கன்று** *ūttu-k-kanru,* பெ. (n.) ***பால்குடிக்குங் கன்று;*** sucking calf.

*(ஊட்டு + கன்று.]*

**ஊட்டுக்குழந்தை** *ūttu-k-kuḷandai,* பெ (n) 1 ***பாலுண்ணும் குழந்தை;*** sucking child 2 ***செவிலித்தாயால் ஊட்டப்பட்ட குழந்தை;*** child feeding at the breast of a wet nurse. (சா.அக.).

*[ஊட்டு + குழந்தை.]*

**ஊட்டுந்தாய்** *ūttun-tāy,* பெ. (n.) ***ஐவகைத் தாயாருளொருத்தி*** (பிங்.); foster-mother, one of ai-vagai-t-tāyar.

மறுவ. முலைத்தாய், வளர்ப்புத்தாய்.

*[ஊட்டு → ஊட்டும் + தாய்.]*

**ஊட்டுப்புரை** *ūttu-p-purai,* பெ. (n) ***கேரள நாட்டில் ஏழையர்க்கு உணவளிக்குஞ் சாலை;*** rest-house in the Kerala country in S India where the poor are given free feeding. (செ.அக.).

ம. ஊட்டுபுர.

*[ஊட்டு + புரை.]*

**ஊட்டுமற-த்தல்** *ūttumara,* 3 செ குன்றாவி (vt) ***கன்று பால் குடி மறத்தல்;*** to make the calf to forget milk.

*[ஊட்டு + மற-.]*

**ஊட்டுவான்** *ūttuvān,* பெ. (n.) ***சமையற்காரன்;*** one who prepares food, cook "அவர் பாலூட்டுவான் றனை விட்டார்" (பெரியபு திருநாவுக்.55).

*[ஊட்டு + ஆன் - ஊட்டுவான் (சமைத்து உணவளிப்பவன்).]*

†**ஊட்டெழுத்து** *ūtteḷuttu,* பெ. (n.) ***எழுத்துகளை மின்னணுச் சிப்பத்தில் பதிவிக்கும் ஒளிப்படத் தட்டச்சு;*** electronic type-setter.

*[ஊட்டு + எழுத்து.]*

எழுத்துக்களை ஒளிப்பதிவுச் சிப்பத்தில் ஊட்டுதலான் தோன்றிய படைப்புச்சொல்.

**ஊடகம்** *ūdagam,* பெ. (n.) ***கடல்மீன் வகை;*** marine fish silvery. (செ.அக.).

ம. ஊடவம்

*[ஊடு → ஊடகம்.]*



ஊடகம்

**ஊடணம்** *ūḍaṇam,* பெ. (n.) 1. ***சுக்கு;*** dried ginger. 2. ***மிளகு;*** pepper. 3. ***மிளகுக்கொடி;*** pepper creeper

*[ஊடு + அணம்.]*

**ஊடணை** *ūḍaṇai,* பெ. (n.) ***திப்பிலி;*** long pepper. (சா.அக.).

*[ஊடு + அணை.]*

**ஊடம்** *ūḍam,* பெ (n.) 1. ***உவர் மண்;*** saline soil 2. ***விடியற்காலம்;*** dawn.

*[ஊடு + அம்.]*

**ஊடரக்கல்** *ūḍara-k-kal,* பெ. (n.) ***சுக்கான் கல்;*** lime-stone (சா.அக.).

*[ஊடு → ஊடரம் + கல்.]*

**ஊடரம்** *ūḍaram,* பெ. (n.) ***பூவழலை;*** saline soil. (சா.அக.).

*[ஊடு → ஊடரம். ஊடு = வெப்பம், வெதும்பல்.]*

**ஊடல்**[1] *ūḍal,* பெ. (n) 1. ***மருதத்திணையினுரிப் பொருள்களுள் ஒன்றாகிய புலவி;*** love quarrel, between husband and wife, arising from jealousy. appropriate to the agricultural tracts, one of five uri-p-porul (நம்பியகப்.25) (செ.அக.). 2. ***பிணக்கு;*** disaccord. 3. ***வெறுப்பு;*** dislike. 4. ***கணவன் மனைவி இருவரிடைத் தோன்றும் உரையாடாத மென்சினம்;*** domestic disharmony between husband and wife.

*[ஊடு → ஊடல்.]*

**ஊடல்**[2] *ūḍal,* பெ. (n.) ***மர நிழல்;*** shade of a tree. (செ.அக.).

*[ஊழ் → ஊடு → ஊடல்.]*

**ஊடல்விரி** *ūḍalviri,* பெ. (n) ***வெள்ளணி யணிந்து விடுத்துழித் தலைவன் வாயில் வேண்டன் முதலாகப் பாங்கி தலைவனை, அன்பிலை, கொடியை யென்றிகழ்தல் ஈறாகியவை;*** theme of agam classification of esoteric poem, in which the conversation leading to love quarrel between the hero and heroine groups is elaborately narrated

*[ஊடல் + விரி.]*

**ஊடலுவகை** *ūḍal-uvagai,* பெ. (n.) ***புலவியின்பின் கூடலால் நிகழும் மகிழ்ச்சி;*** pleasure derived from reunion after sulking, from temporary variance and huff between husband and wife (குறள்.133,அதி.).

*[ஊடல் + உவகை.]*

**ஊடலொழித்தல்** *ūḍaloḻittal,* தொ.பெ. (vbl n) ***பிணக்குத் தீர்த்தல்;*** husband removing the feigned dislike of a wife for the purpose of reunion. (சா.அக.).

*[ஊடல் + ஒழித்தல்.]*

**ஊடறு**[1]**-த்தல்** *ūḍaṟu-,* 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஊடுருவுதல்;*** to cut through, cleave, sunder, pierce, as an arrow; to force one's way through. 2. ***வழக்குத் தீர்த்தல்;*** to decide between parties, settle amicably. (W).

*[ஊடு + அறு - ஊடறு-.]*

**ஊடறு**[2]**-த்தல்** *ūḍaṟu-,* 4.செ.குன்றாவி. (v.t.) ***இடையில் அடைத்தல்*** (ஈடு.1,4,4); to dam, to obstruct in the middle.

*[ஊடு + அறு.]*

**ஊடன்** *ūḍaṉ,* பெ. (n) ***மீன்வகை;*** fresh water fish. (செ.அக.).

*[ஊடு → ஊடன்.]*



ஊடன்

**ஊடாட்டம்** *ūḍāṭṭam,* பெ (n) 1 ***பல்காற் பயிலுகை;*** frequent communion, intercourse. 2. ***பழக்கம்;*** intimacy

ம. ஊடாட்டம்.

*[ஊடாடு → ஊடாட்டம்.]*

**ஊடாடு-தல்** *ūḍāḍu-,* 5.செ.கு.வி. (v.i) 1. ***நடுவே திரிதல்;*** to move about, go among. "ஊடாடு பனிவாடாய்" (திவ்.திருவாய் 1,4,9). 2. ***பலகாற் பயிலுதல்;*** to frequent, move about very often "தேன் கொண் டூடாடுங் கூந்தல்" (கம்பரா.மாரீசன்.79). 3. ***கலந்து பழகுதல்;*** to be familiar, to get into close intimacy "சீதையென்னு மான்கொண்மூடாடும் வண்ணம்" (கம்பரா.மாரீசன்.79). 4. ***கலத்தல்;*** to come in contact, get in touch "கையெழுத்தோ டூடாடாமறை" (குற்றா. தல.திரிகூட.34). 5. ***பெரு முயற்சி செய்தல்;*** to make supreme effort அவன் அதுநிறைவேற மிகவும் ஊடாடுகிறான். (இ.வ.) (செ.அக.). 6. ***கல்வி பயிலுதல்*** (ஆ.அக.); to gain knowledge.

ம. ஊடாடுக; க. ஒடாடு; தெ. ஊடாடு.

*[ஊடு + ஆடு - ஊடாடு.]*

**ஊடாளன்** *ūḍāḷaṉ,* பெ. (n.) 1. ***ஒற்றன்;*** spy 2. ***இருவர் அல்லது இருசாரார்க் கிடையில் கருத்து ஊடாட்டத் திற்கு உதவும் நடுவன்;*** mediator.

*[ஊடு + ஆளன்.]*

**ஊடான்** *ūdāṉ,* பெ. (n.) 1. ***ஊடக மீன்;*** fish, silvery, Gerres filamentosus 2. ***கடல் மீன்வகை;*** marine fish, pristipoma furcatum (செ.அக.).

*[ஊடன் → ஊடான். ஊடன் பார்க்க; see ūdaṉ ]*

**ஊடு[1]-தல்** *ūḍu-,* 5 செ.கு.வி (vi) 1. ***புலத்தல்;*** to feign displeasure, as a wife of her husband or vice versa in order to enhance his or her affection "ஊடுதல் காமத்திற்கின்பம்" (குறள் 1330). 2. ***பிணங்குதல்;*** to be impatient, to show resentment, "செறுத்தோ றுடைப்பி னுஞ் செம்புனலோ டூடார்" (நாலடி 222)

*[உள் → உடு → ஊடு. வாய் திறந்து பேசாமல் உள்ளத்தின் உளைச்சல்களைக் குறிப்பால் புலப்படுத்துதல் நாளடைவில் சொல்லாடிப் புலப்படுத்தலும் ஊடுதலாயிற்று. ஊடுதல் = (உள்ளத்தின்) உளைச்சல் ]*

**ஊடு[2]-தல்** *ūḍu-,* 5.செ.கு.வி. (v.i.) ***உண்ணுதல்;*** to eat பன்றி வள்ளிக்கிழங்கை ஊட்டிவிட்டது. (இ.வ.).

*[உள் → உண் → ஊடு (உட்கொள்).]*

**ஊடு[3]** *ūḍu,* பெ. (n.) 1. ***நடு;*** middle, that which comes between "ஊடாடு பனிவாடாய்" (திவ்.திரு வாய்.1,4,9). 2. ***இடை;*** waist. 3 ***நெசவின் தார்நூல்*** (வின்.); woof, thread woven across the warp. (செ.அக.).

ம. ஊடு; க. உடு; கோத. ஊட்; து. ஊடு.

*[உள் → உடு → ஊடு ]*

**ஊடு[4]** *ūḍu,* பெ. (n) ***துளை, வழி;*** hole.

*[உடு → ஊடு (வே க.73).]*

**ஊடு[5]** *ūḍu,* பெ (n) ***குறுவையும் ஒட்டடையுங் கலந்து விதைத்துச் செய்யும் விளைச்சல்*** (GTj D1,93 ); simultaneous cultivation of kuṟuvai and ottatai paddy in the same field

*[உடு → ஊடு (கலப்பு).]*

**ஊடுசாகுபடி** *ūḍu-cāgupaḍi,* பெ. (n.) ***இருவகைத் தவசங்களைக் கலந்து பயிரிடுகை;*** cultivating by mixing two kinds of grain in a seed bed and planting the seedlings indiscriminately. (G.II. 1,93). (செ.அக.).

*[ஊடு + சாகுபடி.]*

**ஊடுசெல்(லு)-தல்** *ūḍu-cel,* 13.செ.கு.வி. (v.i.) 1. ***நடுவிற்போதல்;*** to pass through, the centre. "உடைகப்பல் கப்பலாய்த் திரையாழி யூடுசெலுமோ" (தாயு.சுகவா.11). 2. ***இடையே போதல்;*** to enter in between.

*[ஊடு + செல்.]*

**ஊடுதட்டி** *ūḍutaṭṭi,* பெ. (n.) ***இடைத்தரகன்; இடையில் நின்று மாறுகொண்ட இருவரை ஏய்த்துச் செல்பவன்;*** go between, intermediary cheating both the conflicting parties.

*[ஊடு + தட்டி.]*

**ஊடுதட்டு** *ūḍutaṭṭu,* பெ. (n.) ***இருவர் காரியத்தின் இடையிற் புகுந்து பெற்ற வருவாய்;*** snatching away something as gain, often illegally, as by interfering while two people are quarrelling amongst themselves

*[ஊடு + தட்டு. தட்டு = தட்டிச்செல்லுதல், பறித்துச்செல்லுதல்.]*

**ஊடுதல்** *ūḍudal,* பெ. (n) ***கலவியிற் பிணங்குதல்;*** feigning displeasure in sexual affair as a wife does with her husband chiefly with a view to increase his affection. (சா.அக.).

*[உள் → உடு → ஊடுதல ]*

**ஊடுதாக்கு[1]-தல்** *ūḍu-tākku-,* 7.செ.கு.வி. (v.i.) ***பின்னிடாமல் எதிர்த்து நிற்றல்;*** to oppose with firmness, stand resolutely.

*[ஊடு + தாக்கு ]*

**ஊடுதாக்கு[2]-தல்** *ūḍu-tākku,* 5.செ.குன்றாவி (v.t.) ***இரண்டு பொருள்களின் வலிமையை யொப்பிடுதல்;*** to compare two things with regard to their relative strength (செ.அக.).

*[ஊடு + தாக்கு.]*

**ஊடுபற்று-தல்** *ūḍu-paṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ***விளக்கு உள்ளே பற்றி யெரிதல்*** (வின்.); to burn whithin the hollow or bowl of an open lamp, as the wick when the oil is out (செ.அக.).

*[ஊடு + பற்று.]*

**ஊடுபாட்டு** *ūḍupāṭṭu,* பெ. (n.) 1. ***பழக்கம் அறிந்திருத்தல்;*** custom, habit, familiarity 2. ***அறிவு;*** knowledge (சேரநா.).

ம. ஊடுபாட்டு.

*[ஊடு + பாட்டு.]*

**ஊடுபோக்கு[1]-தல்** *ūḍu-pōkku-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***இடையே போகச் செய்தல்;*** to run through, cause to pass through 2. ***வழக்குத் தீர்த்தல்;*** to decide between parties, settle amicably (செ அக ). 3. ***ஊடுருவச் செய்தல்;*** to penetrate (ஆ.அக.).

ம. ஊடு போக்கு.

*[ஊடு + போக்கு.]*

**ஊடுபோக்கு[2]** *ūḍu-pōkku,* பெ. (n.) 1. ***ஊடு செல்லுகை;*** passing through, as a jungle, a crowd ஆளிகன் ஊடுபோக்கற நிமிர்த்து (திருக்கோ.151,உரை.) 2. ***ஒரு பழைய வரி;*** ancient tax "ஊடுபோக்கும்......... கோக்கொள்ளப் பெறாதே" (S.I.I.ii,509).

*[ஊடு + போக்கு.]*

**ஊடுருவிப்பாய்-தல்** *ūḍuruvi-p-pāy-,* 2. செ.கு.வி. (v.i.) ***நடுவினுள் வேகமாய் முழுவதையும்***

***துளைத்துச் செல்லல்;*** passing through anything forcibly and rapidly inter-penetrating (சா அக.)

*[ஊடு + உருவி + பாய்]*

**ஊடுருவு-தல்** *ūduru-*, 5 செ கு வி (vi) 1. ***இடையுருவிச் செல்லுதல்;*** to penetrate, pierce, as weapons "நெற்றிதொறு மோரொரு வடிக்கணை யூடுருவ." (பாரத இரண்டாம்போ 26).

ம. ஊடுருவுக.

*[ஊடு + உருவு.]*

**ஊடுவெளி** *ūduveli*, பெ. (n) ***இடைவெளி;*** space in between, gap.

*[ஊடு + வெளி.]*

**ஊடுளைச்சல்** *ūdulaiccal*, பெ (n.) ***மாதவிடாய்களுக்கிடையே காணும் வலி;*** pain occurring between the menstrual periods - midpain. (சா.அக )

*[ஊடு + உளைச்சல்]*

**ஊடூடே** *ūdūdē*, வி.எ. (adv) 1 ***இங்குமங்கும், இடையிடையே;*** off and on, irregularly, interspersed 2. ***அப்போதைக்கப்போது;*** there and then 3. ***அடிக்கடி;*** frequently

*[உடு → ஊடு + ஏ.]*

**ஊடேவிழு-தல்** *ūdēvilu-*, 2.செ கு வி (vi) ***நடுவிற்புகுதல்;*** to come between, rush into the midst, interfere

*[ஊடு + ஏ + விழு.]*

**ஊடை** *ūdai*, பெ. (n) 1 ***ஆடையின் குறுக்கிழை*** (வின்.); woof (செ அக.) 2. ***நூற்றார்;*** garland of fibres 3 ***உண்டை;*** ball of thread.

*[ஊடு → ஊடை]*

**ஊடைமா** *ūdaimā*, பெ. (n) ***தேட்கொடுக்கி;*** scorpion plant or scorpion sting (சா அக )

*[ஊடு → ஊடை + மா.]*

**ஊடையம்** *ūdaiyam*, பெ (n) ***நீரரண்*** (வின்.), ditch round a fort or a camp (செ அக ).

மறுவ. அகழி, அகழ்ப்பு, அகப்பா

*[ஊடு → ஊடையம்]*

**ஊண்** *ūn*, பெ (n) ***உண்கை;*** eating. "பாத்தூண் மரீஇயவனை" (குறள்.227) 2 ***உணவு;*** food. "உடை செல்வமூ ணொளிகல்வி" (குறள் 939) 3. ***ஆன்மாவின் இன்பதுன்பப் பட்டறிவு;*** experience of joys and sorrows by the soul, as the inevitable fruits of karma "ஊணொழியா துன்னின்" (சிவப்பிர.19) (செ.அக.).

ம. ஊண், ஊணு, க. ஊட, உணிசு; கோத., துட. ஊண்; து. உணசு, ஒணசு

*[உண் → ஊண்.]*

**ஊண்சாலை** *ūn-sālai*, பெ (n) ***ஊட்டுப்புரை;*** choultry where food is distributed gratis (செ அக.).

*[உண் → ஊண் + சாலை]*

**ஊண்டழல்** *ūndalal*, பெ (n) ***பசியழல்;*** power of digesting food, lit food-fire "ஊண்டழல் வெறுக்கும் வணண மூட்டுவம்" (பிரபுலிங். ஆரோகண.40) (செ அக ).

*[ஊண் + தழல்.]*

**ஊண்பாக்கு** *ūn-pākku*, பெ (n) ***உண்டபின் தின்னும் வெற்றிலை பாக்கு;*** betel and nut taken after a meal, dist fr வெறும் பாக்கு (வீண் பாக்கு) ஊண்பாக்கொழிய வீண்பாக்காகாது. (பழ.).

*[ஊண் + பாக்கு]*

**ஊண்பித்தை** *ūn-pittai*, பெ. (n) ***ஓர் பெண்பாற் புலவர்;*** a poetess

*[ஊண் + பித்தை பித்தை = சிறுமி, பெண்.]*

குறுந்தொகையில் 232ஆம் பாடலைப் பாடிய ஊண்பித்தை யார் உணவுபடைகும் பணிப்பெண்ணாக வாழ்ந்தவராக லாம் புல் → புத்து → பித்து என்னும் சொற்கள் இளமை, மென்மை, புதுமை, அழகு என்று பொருளால் விரிவன துளுமொழியில் 'புத்து' இன்றும் பெண்பாற் பெயராக வழங்குகிறது புல் → புது → புதல் → புதல்வன். புல் → புது → புத்து → புத்தன்(மகன்) த புத்து → புத்தன் *Skt* putra

கன்னடத்தில புத்து → புட்டு — புட்ட என்பன இளமையும அழகும குறித்து வழஙகுவன. புல் → புள் → பிள் → பிள்ளை என்பன இளமைப்பெயர்கள் புத்தை → பித்தை

**ஊணம்** *ūnam*, பெ (n) ***ஒரு நாடு;*** name of the country of the Huns. "ஊண நாட்டோரூரின்" (ஞானவா காதிக.7).

*[அவுண் → ஊண் → ஊணம். ஊணம் = அவுணர்வாழ்வகம]*

**ஊணன்**[1] *ūnan*, பெ. (n.) ***ஊண நாட்டான்;*** Hun, barbarian (செ.அக.).

*[அவுணன் → ஊணன்.]*

**ஊணன்**[2] *ūnan*, பெ (n) ***மிக வுண்போன்;*** glutton ஊணன் கருமமிழந்தான் (வின்.) (செ.அக.).

ம. ஊணன்.

*[ஊண் + அன்.]*

**ஊணா** *ūnā*, பெ. (n.) ***சடைச்சி மரம்*** (L), common Indian linder. (செ.அக.).

*[ஊள் → ஊண் → ஊணா.]*

**ஊணாட்டம்** *ūnāttam*, பெ. (n.) ***பல்லாங்குழியில் ஆடும் ஓர் ஆட்டம்;*** a kind of game. (சேரநா.).

*[ஊண் + ஆட்டம்.]*

**ஊணாளி** *ūnāli*, பெ. (n.) ***அதிகமாக உண்பவன்;*** glutton, great eater. (சேரநா.).

*[ஊண் + ஆளி.]*

**ஊணி**[1] *ūni*, பெ. (n.) ***உணவுகொள்பவன்;*** one who eats. "காளவிட மூண்" (திருப்பு.69). (செ.அக.).

ம. ஊணி; க. உணி.

*[ஊண் → ஊணி.]*

**ஊணி**[2] *ūni*, பெ. (n) ***பாவாற்றுதற்கு ஊன்றும் கவர்க் கால்;*** weaver's stand for the threads of the woof

*[ஊண் → ஊணி.]*

**ஊணிக்கம்பு** *ūni-k-kambu*, பெ. (n.) 1. ***மொட்டை வண்டியின் இரு பக்கத்திலும் ஊன்றப்பட்ட முளைக் கம்புகள்*** (நெல்லை); stakes on the sides of an open country cart 2. ***பாவாற்றுதற்கு ஊன்றும் கவர்க்கால்;*** weaver's stand for the threads of the woof

*[ஊன்றி + கம்பு - ஊன்றிக்கம்பு → ஊணிக்கம்பு.]*

**ஊணு-தல்** *ūnu-*, 13.செ.குன்றாவி. (vt.) ***உணவு கொடுத்துப் பேணுதல்;*** to feed and nourish. "உழலை யாக்கையை யூணுமுணர்விலீர்" (தேவா.588.6)

*[உண் → ஊண் + உ - ஊணு.]*

'உண்' என்னும் தன்வினை 'ஊண்' என நெடுமுதலாகிப் பிறவினையாகும் பெற்றியுடையதாயினும் முதனிலை திரிந்த தொழிற்பெயராகிய 'ஊண்' என்பதனின்றும் வேறுபடுத்த 'ஊணு' என உகர ஈறுபெற்றுப் பிறவினை ஏவலாகி "ஊட்டு" எனப்பொருள் தந்துநின்றது.

**ஊத்தங்காய்** *ūttan-gāy*, பெ. (n.) ***புதைத்துப் பழுக்க வைத்த காய்;*** green unripe fruit buried to ripen, as plantains Loc (செ.அக.).

*[ஊழ்த்தல் = புதைத்தல். ஊழ்த்தம் → ஊத்தம் + காய்.]*

**ஊத்தட்டம்** *ūttāttam*, பெ (n) ***மாழைகளை யுருக்க வைக்குந் தழல்;*** fire for melting metal (செ.அக.)

*[ஊது → ஊத்து → ஊத்தட்டம்.]*

**ஊத்தப்பம்** *ūttappam*, பெ. (n) ***பருத்த தோசை வகை;*** thick rice-flour cake (செ.அக.).

ம ஊததப்பம

*[ஊற்று → ஊத்து + அப்பம்.]*

**ஊத்தம்** *ūttam*, பெ. (n) 1. ***வீக்கம்;*** swelling, puffing up of the limbs or body அவன் உடம்பு ஊத்தமாயிருக்கிறது. (இ.வ.). 2. ***காய்களைப் பழுக்கவைக்கும் புதைப்பு;*** burying of green unripe fruits to ripen. (செ.அக)

*[ஊது → ஊத்து → ஊத்தம்.]*

**ஊத்தமுறை** *ūtta-murai*, பெ. (n.) ***ஊது திட்டம்*** பார்க்க; see *ūdu-tittam*.

**ஊத்தல்** *ūttal*, பெ. (n.) ***பித்தளை;*** brass. (சா.அக.).

*[ஊற்று → ஊற்றல் → ஊத்தல். காய்ச்சி உருக்கிவார்த்த கலப்பு மாழையாதலின் இப்பெயர் பெற்றது.]*

**ஊத்தாம்பிள்ளை** *ūttām-pillai*, பெ. (n.) 1 ***பேழை;*** container 2. ***மூத்திரப்பை*** (இங்.வைத்.43); bladder (செ.அக.).

*[உத்து → உத்தாம் → ஊத்தாம் + பிள்ளை.]*

**ஊத்து** *ūttu*, பெ (n) 1. ***ஊதுகை;*** blowing a musical instrument ஓர் ஊத்து ஊதினான் (உ.வ.). 2. ***காகளத் தின் ஒலி;*** sound of a wind instrument "பெரிய திருநாளாய்ச் செல்லும்படி பண்ணினால் புறம்பு ஊத் தும் சுவடு மற்றுக் கிடக்கவும் வேணுமா?" (திவ் திருநெ டுந்.8.வியா.). 3. ***உடம்பு ஊதிப்பருத்தல்*** (சங்.அக.); swelling of body 4. ***ஊதல்;*** whistle (Tinn.).

ம. ஊத்த; க. ஊது; து. ஊதுனி

*[ஊது → ஊத்து.]*

**ஊத்தை** *ūttai*, பெ (n) 1 ***அழுக்கு;*** dirt, impurity, filth, excrement, that which is ceremonially unclean, as catamenia. "ஊத்தைக் குழியி லமுதம் பாய்வது போல்" (திவ்.பெரியாழ்.4,6,10) (செ அக ) 2 ***ஊன், ஊனீர்;*** water oozing from flesh 3 ***மாதவிலக்கு நீர்;*** menstrual blood - catamenia 4. ***பல்லழுக்கு;*** foul matter which collects on the teeth ordinarily, a composed accumulation about the teeth in sickness - scordes 5 ***புலால்;*** meat "ஊத்தைச் சடலத்தை உப்பிருந்த பாண்டத்தை." 6. ***நாற்றம்;*** stench

ம. ஊத்த

*[ஊழ் → ஊழ்த்தை → ஊத்தை ]*

**ஊத்தைகழல்(லு)-தல்** *ūttai-k-kalal*, 13.செ கு வி. (vi) 1. ***அழுக்கு வெளியேறுதல்*** (வின்.); to come off as dirt from a vessel (செ அக ). 2. ***ஊத்தை கழலுதல்;*** to remove foul matter.

*[ஊழ்த்தை → ஊத்தை + கழல்.]*

**ஊத்தைச்சீலை** *ūttai-c-cīlai*, பெ. (n.) 1. ***அழுக்குச் சீலை;*** dirty cloth or clothes. 2. ***விலக்குச்சீலை;*** sanitary towel or napkin.

*[ஊத்தை + சீலை.]*

**ஊத்தை நாறி** *ūttai-nāri*, பெ. (n.) 1. ***பீநாறி*** (மூ.அ.); fetid tree 2. ***முடைநாற்றம் உடையவள்;*** dirty woman or a woman ceremonially unclean, said of a woman as a low term of abuse (சா.அக.).

*[ஊத்தை + நாறி.]*

**ஊத்தைப்பல்** *ūttai-p-pal*, பெ. (n.) 1. ***அழுக்குச் சேர்ந்த பல்;*** dirty tooth 2. ***ஊன் படிந்த பல்;*** tooth with the dark brown foul matter collected on it in low fevers - scordes. 3. ***சீழ்வடியும் பல்;*** tooth with a discharge of pus as in pyorrhoea. (சா.அக.).

*[ஊத்தை + பல்.]*

**ஊத்தைப்பல்லன்** *ūttai-p-pallan,* பெ. (n) ***தூய்மையற்ற பற்களுடையவன்;*** one with unclean teeth (செ.அக).

*[ஊத்தை + பல்லன்]*

**ஊத்தைப்பாட்டம்** *ūttai-p-pāttam,* பெ. (n) ***வரி வகை;*** tax (S II V.330). (செ.அக)

ம. ஊத்தப்பாட்டம்.

*[ஊத்தை + பாட்டம்.]*

**ஊத்தைப்பாண்டம்** *ūttai-p-pāndam,* பெ. (n) 1 ***ஊத்தை யுடம்பு;*** body, full of filth, called contemptuously by renunciative moralizers. 2. ***நாற்றம் வீசும் உடம்பு;*** body emitting a fetid smell (சா.அக).

*[ஊத்தை + பாண்டம்.]*

**ஊத்தைப்பிணம்** *ūttai-p-pinam,* பெ. (n) 1. ***நாறிய பிணம்*** (வின்.); putrid corpse, decomposed carcass (செ.அக) 2. ***அழுக்குடம்பு;*** filthy body (சா.அக.)

*[ஊத்தை + பிணம்]*

**ஊத்தையட்டு-தல்** *ūttai-y-attu-,* 5 செ கு.வி. (v.i.) ***ஊனமுறுதல்;*** to sustain dishonour, suffer disgrace "கோழிப் போரில் ஊத்தையட்டாமல்" (S.II ii 251). (செ.அக)

*[ஊத்தை + அட்டு.]*

**ஊத்தையெடு-த்தல்** *ūttai-y-edu-,* 4.செ.கு வி. (v.i) ***அழுக்ககற்றுதல்*** (யாழ்ப்), to remove tarnish from jewels, stain from silk or other cloth (செ.அக.).

*[ஊததை + எடு]*

**ஊத்தைவாசல்** *ūttai-vāšal,* பெ (n.) ***பெண் நோனி;*** vagina from its serving as a passage for the discharge of menses (சா அக.)

*[ஊத்தை + வாசல்]*

**ஊதடைப்பான்** *ūdadaippān,* பெ. (n) ***மாட்டுநோய் வகை;*** disease, among cattle (மாட்டுவை சிந் பக்.25). (செ.அக.).

*[ஊது + அடைப்பான்.]*

**ஊதம்** *ūdam,* பெ. (n.) ***யானைக்கூட்டம்;*** herd of elephants "உலவை நீள்வனத் தூதமே யொத்தது" (கம்பரா வரைக்.7). (செ அக.).

*[ஊ → ஊது → ஊதம் (பெருக்கம்).]*

**ஊதல்**[1] *ūdal,* பெ (n) 1. ***குளிர்க்காற்று;*** cold wind ஊதலடிக்கிறது (உ வ.) 2 ***வீக்கம்;*** swelling. 3. ***ஆரவாரம்*** (வின்); great noise 4. ***ஊதைநோய்;*** rheumatism ஊதலினம். (தைலவ தைல 130) 5 ***மிகுதி;*** fullness. "இருமலீளை யென்றிவை யூதலாக்கை" (தேவா 996.8). 6. ***குழந்தைகள் ஊதுங் கருவி;*** toy trumpet, small pipe ஓர் ஊதல் வாங்கிக்கொடு (உ.வ.). (செ.அக.).

*[ஊது → ஊதல்.]*

**ஊதல்**[2] *ūdal,* பெ. (n) ***கருநீலப் படர்கொடி;*** dark blue creeper

*[ஊது → ஊதல்]*

**ஊதல் போடுகை** *ūdal-pōdugai,* பெ (n) 1. ***புகைபோட்டுப் பழுக்கச் செய்கை;*** fumigation for ripening unripe fruits as plantains 2. ***பெருச்சாளி போன்றவை பொந்தினின்று வெளியேறப் புகை மூட்டுகை;*** fumigation, so as to expose the hole of rodents as bandicoots, to smoke, and so force them to run away (செ.அக.).

*[ஊது → ஊதல் + போடுகை.]*

**ஊதற்காற்று** *ūdar-kārru,* பெ. (n.) ***பனிக்காலத்துக் குளிர்க்காற்று;*** cold biting wind of the dewy season. (செ.அக).

*[ஊதல் + காற்று. ஊதல் = பெருகுதல், மிகுதல், குளிரை மிகுவிக்கும் காற்று]*

**ஊதற்கொடி** *ūdar-kodi,* பெ. (n.) ***கொடிவகை*** (L.), dark-blue creeper. (செ.அக.).

*[ஊதல் + கொடி.]*

**ஊதன்** *ūdan,* பெ. (n) ***ஆண்பாற் பெயர்;*** name of a person ஆதனுக்குக் கொடுத்தாலென்ன ஊதனுக்குக் கொடுத்தாலென்ன. (கொங்.வ)

க. ஊதன்

*[ஊ → ஊது → ஊதன் (பருத்த தோற்ற முள்ளவன்).]*

**ஊதா** *ūdā,* பெ (n) 1 ***செம்மை கலந்த நீலநிறம்;*** purple, violet (செ அக). 2. ***செம்மை கலந்த கருநிறம்*** (ஆ அக); reddish black

ம. ஊதா

*[ஊது → ஊதல் → ஊதா.]*

ஊதல் என்னும் கொடியின் நிறம் ஊதா என வழங்கலாயிற்று. **ஊதற்கொடி** பார்க்க, see *ūdar-kodi*

**ஊதா இறுங்கு** *ūdā-irungu,* பெ. (n) ***சோள வகை*** (விவசா 3); a kind of maize

*[ஊதல் → ஊதா + இறுங்கு.]*

**ஊதாக்கத்திரி** *ūdā-k-kattiri,* பெ (n) ***கத்திரி வகை;*** New York - purple brinjal. Solanum melongena Americana. (செ.அக.).

*[ஊதல் → ஊதா + கத்திரி]*

**ஊதாங்குச்சி** *ūdāṅ-kucci,* பெ. (n.) ***நெருப்பூதுங் குழாய்;*** blow-pipe (Loc) (செ.அக.).

*[ஊது + ஆம் + குச்சி.]*

**ஊதாங்குழல்** *ūdāṅ-kulal,* பெ. (n.) ***ஊதாங்குச்சி*** பார்க்க; see *ūdāṅ-kucci* (செ.அக.).

*[ஊது + ஆம் + குழல்.]*

**ஊதாசி** *ūdāši,* பெ. (n) ***ஊதாரி*** பார்க்க; see *ūdāri.*

**ஊதாப்பூ** *ūdā-p-pū*, பெ. (n) ***மரவகை*** (L); medium membranous lance to obovate accuminate or cuspidate leaved jungle geranium (செ.அக.).

*[ஊதா + பூ.]*

†**ஊதாம்பி** *ūdāmbi*, பெ. (n) ***காற்றூதிச் சிறுவர் விளையாடும் காற்று முட்டை;*** balloon.

*[ஊது + ஆம் + பை - ஊதாம்பை → ஊதாம்பி.]*

†**ஊதாம்பை** *ūdāmpai*, பெ (n) ***ஊர்திச் சக்கரங்களில் வட்டையினுள் உள்ள காற்றுப்பை;*** tube in the tyre of a vehicle

*[ஊது + ஆம் + பை. 'ஆம்' சொற்சாரியை. படைத். இரா. மதிவாணன் 1988]*

**ஊதாமுள்ளி** *ūdā-mulli*, ***செம்முள்ளி*** (L); crested purple, nail dye.

*[ஊதாய் → ஊதா + முள்ளி.]*

**ஊதாய்** *ūdāy*, பெ (n) ***செம்மை கலந்த நீலநிற ஊமத்தம்பூ;*** purple blue datura

*[ஊதல் → ஊதாய் ]*

**ஊதாரி**[1] *ūdāri*, பெ. (n.) ***வீண்செலவுக்காரன்;*** spendthrift, prodigal, squanderer. "கொடையிலாத ஊதாரி" (திருப்பு.) (செ.அக.).

ம. ஊதாரி.

*[ஊதுதல் = பறக்கச் செய்தல், வீணடித்தல். ஊது + ஆளி - ஊதாளி → ஊதாரி (துகளை ஊதித் துடைத்தாற்போல் செல்வத்தை வாரி இறைத்துக் கழிப்பவன்.) ]*

ஊதாரிபடுதல் = கேடுறுதல். "உடலூ தாரிபட் டொழிய" (திருப்பு.904). ஊதாரி என்னுஞ் சொல், உதார என்னும் வடசொல்லினின்று திரிந்ததாகச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலி காட்டியிருப்பது உண்மைக்கு மாறானதும் முற்றும் பொருத்தமற்றதுமாம் உதார எனனும் வடசொல ஈகைத் தன்மையைக் குறிப்பதாகும் ஊதாரி என்னும தென் சொல்லே அழிப்பாளியைக் குறிப்பதாகும் அழிப்பாளி வீண் செலவு செய்பவனேயன்றி அளிப்பாளியல்லன் (வே.க 98).

**ஊதாரி**[2] *ūdāri*, பெ. (n) ***பயனிலி;*** worthless person. "ஊதாரியாய் நானழியா வண்ணம்" (பாடுது.63,பந்து).

*[ஊது + ஆளி - ஊதாளி → ஊதாரி. ஊதுதல் = பறக்கச் செய்தல், வீணடித்தல்.]*

**ஊதாரித்தனம்** *ūdārittaṉam*, பெ (n) 1. ***அழிப்பு;*** wasting, destruction. 2. ***வீண்செலவு;*** wasteful, immoderate spending (ஆ அக.).

*[ஊதாரி + தனம்.]*

**ஊதாரிபடு-தல்** *ūdāri-paḍu-*, 20.செ.கு.வி. (v.i.) ***கேடுறுதல்;*** to become damaged, spoiled, impaired, blighted. "உடலூதாரி பட்டொழிய" (திருப்பு 904).

*[ஊது + ஆர் + இ - ஊதாரி + படு. ஊது = பறக்கச்செய்தல், போகச் செய்தல், இழத்தல், அழிவுறல், கேடு. ஆர் = ஆர்தல். இகரம் - தொ.பெ.ஈறு.]*

**ஊதாவல்லி** *ūdāvalli*, பெ. (n) 1 ***நீலச் செவ்வாம்பற் கொடி;*** purple Indian water lily 2 ***நீலவல்லி; இது நீலப்பூக்களையுடைய ஓர் பூங்கொடி;*** blue Indian water lily or Star flower lily It is a perennial creeper with blue flowers, flowering all round the year. (சா.அக.).

மறுவ. ஊதற்கொடி, ஊதல்.

*[ஊதாய் → ஊதா + வல்லி.]*

**ஊதிகை** *ūdigai*, பெ. (n) ***முல்லைக்கொடி*** (மூ.அக.); eared jasmine, jasimum auriculatum (செ.அக.).

*[ஊது → ஊதிகை. (பெருகிப் படரும் கொடி)]*

**ஊதிப்பார்-த்தல்** *ūdi-p-pār-*, 4.செ குன்றாவி (v.t.) 1. ***புடமிட்டு நோக்குதல்;*** to test by blowing, as a goldsmith (செ.அக ). 2 ***மந்திரித்தல்*** (வின் ); to attempt a cure by enchantment consisting in part of blowing into the patient's body

*[ஊதி + பார்-.]*

**ஊதிப்போடு-தல்** *ūdi-p-pōdu-*, 19 செ.குன்றாவி. (v.t.) ***எளிதில் வெல்லுதல்;*** to overcome easily, overthrow without the least difficulty (செ.அக.)

*[ஊதி + போடு ஊது = வாயால் ஊதிப் பறக்கச் செய்தல். ஊதிப்போடுதல் = பகைவரைப் பறந்தோடச்செய்தல், வெல்லுதல் ]*

**ஊதியம்** *ūdiyam*, பெ. (n.) 1. ***மேல் வருவாய், ஆதாயம்;*** profit, gain. "முதலிலார்க்கூதிய மில்லை" (குறள்.449). 2. ***பயன்;*** benefit, advantage "ஊதியங்கருதியவொரு திறத்தானும்" (தொல்.பொருள்.41). 3. ***கல்வி*** (திவா.); learning, erudition (செ அக.)

*[ஊது → ஊதியம் ஊது = பெருக்கம், மிகுதி.]*

**ஊதியிரு-த்தல்** *ūdiyiru-*, 3.செ.கு.வி. (v.i.) 1. ***வீங்கியிருத்தல்;*** to be in a swollen condition. 2. ***பருத்திருத்தல்;*** to be stout or bloated (சா.அக.).

*[ஊதி + இரு.]*

**ஊதியொடுக்கம்** *ūdiyoḍukkam*, பெ. (n.) ***மூச்சு;*** breathing, respiration. (சா.அக.).

*[ஊதி + ஒடுக்கம்.]*

**ஊதில்** *ūdil*, பெ (n) 1. ***பாம்பாட்டிகள் ஊதுங் குழல்;*** a kind of musical pipe, used by snake charmers. 2. ***குழந்தைகள் ஊதுங்கருவி;*** toy pipe for children (Tinn ). (செ.அக.)

*[ஊது → ஊதில். 'இல்' சொல்லாக்க ஈறு.]*

**ஊதிலி** *ūdili*, பெ. (n.) ***ஊதில்*** பார்க்க; see *ūdil*.

*[ஊதில் + இ. இகரம் ஒருமைசுறித்த ஈறு.]*

**ஊதின பொன்** *ūdiṉa-poṉ*, பெ. (n.) ***புடமிட்ட பொன்;*** refined gold (சா.அக.).

*[ஊது + இன் + அ - ஊதின + பொன் 'இன்' சாரியை. 'அ' பெ.எ.ஈறு.]*

**ஊதினமரம்** *ūdiṉa-maram,* பெ. (n) ***வண்டு துளைத்த மரம்;*** tree pierced by beetle. (சா.அக.).

*[ஊது + இன் + அ - ஊதின + மரம். 'இன் சாரியை. 'அ' பெ.எ.ஈறு.]*

**ஊதின வெள்ளி** *ūdiṉa-veḷḷi,* பெ (n) ***நெருப்பிலிட்டுக் கலப்பின்றி ஊதியெடுத்த சொக்க வெள்ளி;*** wrought silver, purified silver (சா.அக).

*[ஊது + இன் + அ - ஊதின + வெள்ளி. 'இன் சாரியை. 'அ' பெ.எ.ஈறு]*

**ஊது[1]-தல்** *ūdu-,* 5.செ.குன்றாவி. (vt) 1. ***குழல் முதலியன ஊதுதல்;*** to blow, as a wind instrument "ஊதுகின்ற குழலோசை" (திவ்.பெரியாழ் 3,6,1). 2. ***தீ எரிய ஊதுதல்;*** to blow, as a fire, to kindle a blaze 3 ***விளக்கு முதலியன அவிய ஊதுதல்;*** to blow out, as a lamp "ஊழித்தீ யவிய ஊதுவான்" (கம்பரா கும்பக.311). 4. ***நோவு தீர ஊதுதல்;*** to blow, breathe upon, in order to allay pain 5 ***துளைத்தல்;*** to gnaw through and bore holes, as a beetle, to injure by drilling through, as a moth வண்டூதின மரம் 6 ***பொன்னைப் புடம் போடுதல்;*** to refine with fire, as gold ஊதின பொன். 7. ***நுகர்தல்;*** to feed on, as bees honey "பாய்ந்தூதிப்படர்தீர்ந்து" (கலித் 66) 8 ***சூடாற்ற ஊதுதல்;*** to blow over to cool a liquid 9 ***துகள் நீக்க ஊதுதல்;*** to blow chaff away 10 ***ஊத்தாம்பை ஊதுதல்;*** to blow pipe 11. ***காய்களை மூட்டம்போட்டு ஊதிப் பழுக்க வைத்தல்;*** fumingation to ripen unripe fruit 12 ***நோயாளி உடம்பிற்குள் ஊதி மந்திரித்தல்;*** to blow on a patient's body to cure by enchantment. 13 ***உடல் வீங்குதல்;*** swelling

*[உல் → ஊல் → ஊது]*

**ஊது[2]-தல்** *ūdu-,* 7 செ கு வி. (vi) 1. ***வண்டு முதலிய ஒலித்தல்;*** to hum, as bees or beetles, in getting out honey from flowers "சேவடிக்கே சென்றூதாய் கோத் தும்பீ" (திருவாச 10,1). 2 ***வீங்குதல்;*** to swell, as the stomach after eating; to be inflated "ஊதியூதி வயிறுள்ளனவெல்லாம்." (சூளா.சுயம் 15) 3. ***துருத்தி யாற் காற்றெழுப்புதல்;*** to blow with bellows with a blow-pipe "ஊதுலைக் குருகி னுயிர்த்து" (மணி.2,43). (செ.அக.).

**ம.** ஊதுக; **க.** ஊது, ஊதலு, ஊதிகெ; **கோத.** ஊத, **கொலா.** ஊந்த்; **நா.** ஊந்த், **கட.** ஊந்த; **கோண்.** உக் காரை, உதானா; **கூய்.** ஊகுடி; **பர்.** ஊத், **குவி.** ஊகலி.

*[உல் → ஊல் → ஊது.]*

**ஊது[3]** *ūdu,* பெ (n) ***ஊதுகுழல்;*** trumpet, esp. toy trumpet (செ அக.).

*[உல் → ஊல் → ஊது (மு.தொ பெ.).]*

**ஊதுகட்டி** *ūdu-katti,* பெ. (n) ***சொக்கவெள்ளி;*** silver of the purest kind. (செ.அக.).

**ம.** ஊதுகட்டி.

*[ஊது + கட்டி. ஊதுதல் = ஊதி உருக்குதல். உருக்கியுருக்கித் தூய்மை செய்த சொக்கவெள்ளி]*

**ஊதுகலம்** *ūdu-kalam,* பெ. (n) ***உரல்;*** vessel used for pounding grains for removing husk - mortar. (சா.அக.).

*[ஊது + கலம்.]*

**ஊதுகாமாலை** *ūdu-kāmālai,* பெ. (n.) ***காமாலை நோய்வகை;*** jaundice with dropsy. "ஊதுகாமாலை சோகை" (திருப்பு.790) (செ.அக.).

*[ஊது + காமாலை]*

**ஊதுகுழல்** *ūdu-kuḻal,* பெ. (n) 1. ***ஊதும் இசைக்குழல்;*** musical pipe 2. ***நெருப்பூதுங்குழாய்;*** blow pipe (செ.அக).

*[ஊது + குழல்.]*

**ஊதுகொம்பு** *ūdu-kombu,* பெ. (n.) ***கொம்பு இசைக் கருவி*** (திவா.); horn, used as a trumpet.

*[ஊது + கொம்பு]*



ஊதுகொம்பு

**ஊதுமாக்கூழ்** *ūdu-mā-k-kūḻ,* பெ. (n) ***ஒருவகை யுணவு;*** a kind of pasty pudding (செ.அக.).

*[ஊது + மாவு + கூழ்.]*

**ஊதுமுகம்** *ūdu-mugam,* பெ. (n) 1. ***மாழைகளை யுருக்கும் உலைவாயில்;*** forge, melting furnace 2 ***உருகி நிற்கும் நிலைமை;*** state of fusion 3 ***வீங்கிய முகம்;*** swollen or bloated face. 4 ***பருத்த முகம்;*** bloated face (சா அக.).

*[ஊது + முகம்]*

**ஊதுவத்தி** *ūdu-vatti,* பெ. (n) ***நறுமணச் சரக்குத் தீற்றிய குச்சி;*** incense stick, joss stick (செ.அக).

**ம., க., பட.** ஊதுபத்தி; *Skt* vartti (a wick)

*[ஊது + வத்தி ஊது = பெருகுதல், பரவுதல் வல் = கல். வல்லி → வன்னி = கற்களை உரசுவதால் உண்டான தீ வத்தி = தீப்பற்றக்கூடியது.]*

**ஊதுவத்திநோய்** *ūduvatti-nōy,* பெ. (n) *நெற்பயிருக்கு உண்டாகும் நோய் வகை;* disease of paddy crops (Loc)

*[ஊதுவத்தி + நோய்.]*

**ஊதுவாரம்** *ūduvāram,* பெ. (n.) 1. *வெள்ளி* (மூ.அ.); silver 2. *வெள்ளிமீன்;* Venus 3. *வெள்ளிக்கிழமை;* Friday In plain language, meltable day of the week, the Tamil word velli connoting the metal silver as well as the Planet Venus, a periphrastic method of denoting silver. (செ அக.).

*[ஊது + வாரம். ஊது = ஊதி உருக்கிய வெள்ளி. ஊதுவாரம் = உருக்கிய வெள்ளியைப்போல் ஒளிரும் வெள்ளி மீன், அம்மீன் பெயரிலமைந்த வெள்ளிக்கிழமை.]*

**ஊதுவிரியன்** *ūdu-viriyan,* பெ. (n) *தீண்டுவதனால் உடம்பை வீங்கச் செய்யும் ஒருவகை விரியன் பாம்பு;* a kind of viper, whose bite causes swelling of the whole body (செ.அக.).

*[ஊது + விரியன்.]*

**ஊதுவெள்ளி** *ūdu-velli,* பெ. (n.) *ஊதுகட்டி* பார்க்க; see *ūdu-katti.*

*[ஊது + வெள்ளி.]*

**ஊதுளை** *ūdulai,* பெ. (n) *நீர்நிலைகளின் ஓரங்களில் விளையுமோர் வகைப் பூண்டு;* plant found growing generally at the margins of places where water remains stagnant (சா.அக.).

*[ஒது → ஒதம் (நீர்). ஒதம் → ஒதுள் → ஒதுளை → ஊதுளை = நீர்க்கால் பகுதிகளில் வளரும் பூண்டு.]*

**ஊதை** *ūdai,* பெ. (n) 1. *காற்று* (திவா.); wind, gale. 2. *வாடைக்காற்று;* cold wind "பனிப்புலர்பாடி...... ஊதையூர் தர" (பரிபா.11,84). 3. *வளி நோய்;* rheumatism. "தலைவலி பன்னமைச்ச லூதை" (தைலவ. தைல.7).

*[ஊ → ஊது → ஊதை (வீசுவது). ஊதை > வ. வாத. வடமொழியாளர் வா என்பதை மூலமாகக்கொள்வர் அது "ஊ" என்பதன் திரிபே. (வ.மொ.வ 97,வே க.96).]*

**ஊதைக்காற்று** *ūdai-k-kāṟu,* பெ. (n.) *ஊதற்காற்று* பார்க்க; see *ūdar-kāṟu.*

*[ஊதை + காற்று.]*

**ஊப்பம்**[1] *ūppam,* பெ. (n) 1. *உயர்ச்சி, எழுச்சி;* height, elevation 2. *தலையற்ற நெடுந்தோற்றம்;* headless appearance.

*[உ → உப்பம் → ஊப்பம்.]*

**ஊப்பம்**[2] *ūppam,* பெ. (n.) *வெப்பம்;* heat.

*[உல் → உலுப்பம் → ஊப்பம்.]*

**ஊப்பு**[1]**-தல்** *ūppu-,* 5.செ.குன்றாவி. (vt.) *உறிஞ்சுதல், உறுப்புதல், பருகுதல், உட்கொளல்;* to suck.

*[உறும்பு → உறுப்பு → ஊப்பு.]*

**ஊப்பு**[2] *ūppu,* பெ. (n.) *ஊப்பம்*[2] பார்க்க; see *ūppam*[2].

**ஊப்பை** *ūppai,* பெ. (n) *பன்றியைப்போல் தின்னுகை;* gluttony, as of a pig (Tinn) (செ.அக.).

*[ஊ → ஊப்பு → ஊப்பை.]*

**ஊபம்** *ūbam,* பெ. (n) 1. *போரின் அணி;* battle array 2. *குறைத்தலையுடல்;* headless trunk.

*[ஊப்பம் → ஊபம்.]*

**ஊபு**[1]**-தல்** *ūbu-,* 7.செ.கு.வி. (vi.) 1. *ஊதுதல்;* to blow 2. *சூடேற்றுதல்;* to heat.

*[உல் → உலுப்பு → ஊபு (கொ.வ.).]*

**ஊபு**[2] *ūbu,* பெ. (n.) 1. *வீச்சு;* blow, stroke. 2. *கதிர் நுனி;* tip of the corn 3. *வெப்பம்;* heat.

*[உல் → உலுப்பு → ஊப்பு → ஊபு (கொ வ.).]*

**ஊம்** *ūm,* பெ. (n) 1. *ஊமை;* (onom.) dumbness, from its being the ordinary ejaculation of a dumb person "ஊமுஞ் செவிடும்" (மணி.12,97) (செ அக.). 2. *செயற்பாடின்மை;* inactiveness 3. *பயனின்மை;* uselessness 4. *தீங்கு;* evil

ம. ஊம; க. ஊமெ.

*[உம் → ஊம். 'உம்' பேசாமலிருக்கும் குறிப்பிடைச்சொல்.]*

**ஊம்பு-தல்** *ūmbu-,* 5 செ.குன்றாவி. (vt.) *சப்புதல்;* to suck "விழிகட்பேய் புண்ணளைந்து கையூம்பப் போர் மணலூர் வென்றதே." (Insc.செந் பத்.6,11) (செ.அக.).

ம. ஊம்பு.

*[உறும்பு → உறுப்பு → ஊப்பு → ஊம்பு.]*

**ஊமச்சி** *ūmacci,* பெ (n) 1. *மூங்கைப்பெண்;* dumb woman, she who is dumb 2. *ஒருவகை நத்தை;* roman snail, Helix Pomatia. 3. *மட்டி;* common cockle codium edule (செ.அக.).

*[ஊம் → ஊமத்தி → ஊமச்சி.]*

**ஊமணாமூஞ்சி** *ūmanā-mūñji,* பெ. (n) 1. *பொலிவற்ற முகமுள்ளவன்-ள்;* stupid, sullen, pouting person, one with an ugly or forbidding countenance 2. *பேசுந்திறமில்லாதவன்;* one who is unable to speak with ease (செ.அக.)

*[உம் → உம்மணம் + மூஞ்சி. முகம் → மூஞ்சி (கொ.வ.).]*

**ஊமணி** *ūmaṇi,* பெ. (n.) *ஆட்டின் கழுத்தில் தொங்கும் இரட்டைத் தொங்குவால் தசைக்காம்பு;* a kind of wattle or excrescense under the neck of goats and sheep

மறுவ. அதர்.

*[ஊன் → ஊ + மணி. ஊன் = தசை.]*

**ஊமனை**[1] *ūmanai,* பெ. (n) *பேசுந்திறமற்றவன்;* one unable to speak freely.

*[உம் → ஊம் + அணை. (சொல்லாக்க ஈறு).]*

**ஊமணை**[2] *ūmaṉai,* பெ. (n) *அழகற்றது;* that which is defective, misshappen, clumsily made (செ அக ).

*[உம் → ஊம் + அணை - ஊமணை = பொலிவு வெளிப்படாதது ]*

**ஊமணைச்சட்டி** *ūmaṉai-c-catti,* பெ. (n) *சூளையில் நன்றாய் வேகாத சட்டி* (யாழ்ப்.); half baked earthen pot, misshappen and easily broken (செ அக ).

*[உம் → ஊம் + அணை - ஊமணை + சட்டி - ஊமணைச்சட்டி = வேகும் செயலுறாதது.]*

**ஊமணைச்சி** *ūmaṉaicci,* பெ. (n.) *அழகற்றவள்* (யாழ்ப்.); she who is ugly. (செ.அக.).

*[ஊமணை → ஊமணைச்சி.]*

**ஊமணையன்** *ūmaṉaiyaṉ,* பெ. (n) *அழகற்றவன்* (யாழ்ப்.); he who is ugly (செ.அக ).

*[ஊமணை + அன் ]*

**ஊமணையுரல்** *ūmaṉi-y-ural,* பெ. (n) *நடுப்பாகம் ஒழுங்காய்ச் செய்யப்படாத உரல்* (வின் ); mortar that is not well formed in its waist. (செ.அக.).

*[ஊமணை + உரல்.]*

**ஊமத்தங்கூகை** *ūmattaṅ-kūgai,* பெ. (n) *கோட்டான் வகை;* a species of a very large size owl (W.). (செ.அக.).

*[ஊமத்தம் + கூகை.]*

**ஊமத்தஞ்செடி** *ūmattañ-šedi,* பெ. (n.) *ஊமத்தை* பார்க்க; see *ūmattai*

*[ஊமத்தம் + செடி.]*

**ஊமத்தம்** *ūmattam,* பெ. (n) *ஊமத்தை* பார்க்க; see *ūmattai*

*[ஊமத்தை → ஊமத்தம் ]*

**ஊமத்தை** *ūmattai,* பெ. (n) 1. *செடி வகை* (திவா.); thorn-apple 2 *வெள்ளூமத்தை* (திவா ); white flowered thorn-apple 3. *கருவூமத்தை;* purple stramony (செ.அக.).

**ஊமத்தையின் வகைகள்:** 1. வெள்ளூமத்தை, 2. கருவூமத்தை, 3. அடுக்கூமத்தை, 4. பேயூமத்தை, 5 மருளூமத்தை, 6. பொன்னூமத்தை, 7. நீல ஊமத்தை

**ம.** ஊமத்தன்.

*[உன்மத்தம் → ஊமத்தை. (மு.தா.196).]*

**ஊமத்தைக்கூடு** *ūmattai-k-kūḍu,* பெ. (n) *கிளிஞ்சல்;* bivalve shell (சா.அக.).

*[ஊமத்தை + கூடு.]*

**ஊமல்** *ūmal,* பெ. (n) *கிழங்கு கழிந்த பனங்கொட்டை* (யாழ்ப்.); dried hollow shell of the palymyra seed after it has been put into the ground and has struck root (செ.அக.).

*[உம் → ஊம் + அல் - ஊமல் = காய்ந்தது. உலர்ந்தது.]*

**ஊமற்கச்சி** *ūmaṟ-kacci,* பெ (n) *உலர்ந்த பனங்கொட்டையின் பாதி;* half of a dried palmyra nut. (W) (செ அக )

*[ஊமல் + கச்சி.]*

**ஊமற்கரி** *ūmaṟ-kari,* பெ (n) *பனங்கொட்டைக்கரி* (யாழ்ப்.); charcoal made of palmyra nuts, used by blacksmiths. (செ.அக.).

*[ஊமல் + கரி.]*

**ஊமன்** *ūmaṉ,* பெ. (n) 1 *ஊமையன்;* dumb man "ஊமன் கண்ட கனா" (திரிகடு.7). 2. *கூகை;* owl 3. *பெருங்கோட்டான்;* a kind of big owl. "சிறுகூகை யுட்கவிழிக்க வூமன் வெருட்ட" (பதினொ.காரைக். மூத்த.2,3) (செ.அக.).

**ம.** ஊமன், **க.** ஊமெ.

*[ஊம் → ஊமன்.]*

**ஊமன் குரங்கு** *ūmaṉ-kurangu,* பெ. (n.) *ஓர் இனக் குரங்கு;* a variety of monkey (சேரநா.).

*[ஊம் + அன் → ஊமன் + குரங்கு.]*

**ஊமாண்டி** *ūmāṇḍi,* பெ. (n) 1. *பூச்சாண்டி;* bugbear 2. *பிள்ளை விளையாட்டுவகை;* play among children, to frighten each other (W.) (செ.அக ).

*[ஊ + ஆண்டி ]*

**ஊமாண்டிகாட்டு-தல்** *ūmāṇḍi-kāttu,* 5.செ.கு.வி (vi) *பிள்ளைகளை அச்சமுறுத்துதல்* (யாழ்ப்.); to frighten children with a bugbear (செ.அக.)

*[ஊம் + ஆண்டி + காட்டு.]*

**ஊமிள்** *ūmiḷ,* பெ. (n.) *சிறு பூளை* (மலை.); common way side weed. (செ.அக.).

*[ஊம் + இல் = ஊமில் → ஊமிள்.]*

**ஊமுட்டை** *ūmuttai,* பெ. (n.) *கெட்ட முட்டை;* rotten egg

*[ஊழ் முட்டை → ஊமுட்டை (மு.தா.313).]*

**ஊமெனல்** *ūm-eṉal,* பெ. (n.) *இசைவு, கவனங்களின் குறிப்பு;* onom expr signifying assent, attentiveness (செ.அக.).

*[உம் + எனல் - உம்மெனல் → ஊமெனல்.]*

**ஊமை**[1] *ūmai,* பெ. (n.) 1. *மூங்கைத்தன்மை;* dumbness. "கூன் செவிடூமை" (திருவிளை.எல்லாம்.10). 2. *வாயிலி;* dumb person. "உன்மகடா னூமையோ" (திவ்.திருப்பா.9). 3. *ஒலிக்குறைவு;* dullness of sound, as in a coin that has no proper ring ஊமைப்பணம். 4. *ஒரு இசைக்கருவி;* ancient war drum. "ஊமை சகடையோ டார்த்த வன்றே." (கம்பரா.பிரமாத்.5). 5. *கீரி* (அக நி ), mongoose (செ.அக.). 6. *வாய்பேசாமல் அமைதியாய் இருப்பவன்;* one who is silent. 7. *இளைய அம்மா;* step-mother. (சேரநா.).



ஊதுவிரியன்



ஊமத்தை






ஊளாமீன்



ஊற்றுப்பறி

ம. ஊம; க., பட. ஊமெ.

*[ஊம் → ஊமை (சு.வி.99)]*

**ஊமை**² *ūmai,* பெ. (n) 1. ***சிப்பி;*** conch (நாமதீப) 2. ***ஊமச்சி;*** roman snail (நாமதீப) 3. ***மெய்யெழுத்து;*** consonant "ஊமை வியஞ்சன மெய்" (பேரகத் 27) (செ.அக.). 4. ***கிளிஞ்சல்;*** bi-valve shell 5. ***மூன்று மாதத்திய கருப்பிண்டம்;*** foetus three months old (சா அக)

*[ஊமை = உள்ளீடற்றது, சிப்பி, கிளிஞ்சல். உரு = கரு உரு → உரும் → ஊம் → ஊமை = கருப்பிண்டம்]*

**ஊமைக்கட்டி** *ūmai-k-katti,* பெ. (n.) 1. ***முகங்கொள்ளாத சிலந்திக்கட்டி;*** blind boil, boil that does not gather to a head 2. ***கூகைக்கட்டி*** (வின்); mumps (செ.அக.)

*[ஊமை + கட்டி]*

**ஊமைக்கடுப்பு** *ūmai-k-kaduppu,* பெ. (n) ***ஊமை வலி;*** dull pain. (சா அக).

*[ஊமை + கடுப்பு.]*

**ஊமைக்கணவாய்** *ūmai-k-kanavāy,* பெ. (n) ***மீன்வகை*** (வின்); a species of cuttlefish (செ.அக.).

*[ஊமை + கணவாய்.]*



ஊமைக்கணவாய்

**ஊமைக்காடை** *ūmai-k-kādai,* பெ. (n.) ***ஒருவகைக் காடை;*** slow quail that does not rise at once - Coturnix textilis (சா.அக.).

*[ஊமை + காடை.]*

**ஊமைக்காய்** *ūmai-k-kāy,* பெ (n.) 1 ***பருப்பற்ற காய்;*** fruit that does not have seed, as a withered palmyra fruit (Loc) (செ.அக). 2. ***தசைப் பற்றில்லாத காய்;*** any fruit without pulp or kernal inside, c.f. a tender cor onut (சா.அக).

*[ஊமை + காய்.]*

**ஊமைக்காய்ச்சல்** *ūmai-k-kāyccal,* பெ. (n) ***வெளிக் காட்டாத காய்ச்சல்;*** latent or masked fever, dumb ague (சா.அக)

*[ஊமை + காய்ச்சல்.]*

**ஊமைக்காயம்** *ūmai-k-kāyam,* பெ (n) ***முரட்டடியால் வெளிக்குக் காயந்தெரியாது உண்டான உள்வீக்கம்;*** internal injury from blows that do not produce any visible wound on the skin (செ.அக.).

*[ஊமை + காயம்]*

**ஊமைக்கிளாத்தி** *ūmai-k-kilātti,* பெ. (n) ***கடல்மீன் வகை;*** trigger-fish, buff in colour (செ அக.)

*[ஊமை + கிளாத்தி.]*



ஊமைக்கிளாத்தி

**ஊமைக்கூறன்** *ūmai-k-kūṟaṉ,* பெ. (n) ***ஊமையன் பேச்சு;*** inarticulate sounds uttered by a dumb person. ஊமைக் கூறனாகக் கூப்பிடுவது (ஈடு 2,1,3) (செ.அக.).

*[ஊமை + கூறன்.]*

**ஊமைக்கோட்டான்** *ūmai-k-kōṭṭāṉ,* பெ. (n) 1. ***கோட்டான்;*** large species of owl 2. ***பேசத் தெரியாமல் விழிப்பவன்;*** one who merely stares or blinks and gives no answer, like an owl. (செ.அக.).

*[ஊமை + கோட்டான்.]*

**ஊமைக்கோட்டான் வெயில்** *ūmai-k-kōṭṭāṉ-veyil,* பெ. (n) ***மேகமூட்டத்தில் உறைக்கும் வெயில்;*** clouded but scorching sunshine (செ.அக.).

*[ஊமை + கோட்டான் + வெயில்.]*

**ஊமைச்சி** *ūmaicci,* பெ (n) 1 ***ஊமைப்பெண்;*** dumb woman 2. ***கடல்மீன்வகை;*** trunk-fish, light brown, ostracion cornutus 3. ***நத்தை வகை*** (வின்.); cockle, cardium edule. (செ.அக.).

*[ஊமை → ஊமைத்தி → ஊமச்சி.]*

**ஊமைச்சொறி** *ūmai-c-coṟi,* பெ. (n.) ***சொறி வகை;*** skin marked by violent itching, prurigo. (செ.அக.).

*[ஊமை + சொறி.]*

**ஊமைத்தசும்பு** *ūmai-t-taśumbu,* பெ. (n) ***வாயில்லாத குடம்;*** earthen pot which is without a mouth, but is porous to absorb water ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி மாணாக் கர்க்கு நிறைதலின் (திருமுரு 112,உரை) (செ அக ).

*[ஊமை + தசும்பு ]*

**ஊமைத்தனம்** *ūmai-t-tanam,* பெ (n) 1. ***பேச முடியாமை;*** muteness, inability to speak, mutism 2 ***ஊமையாயிருத்தல்;*** state of being dumb - dumbness 3 ***அமைதி காக்கும் தன்மை;*** observance of silence 4. ***உரையாடாமை;*** reservedness in speech - taciturnity 5. ***உடம்பினுள் காயம் அடைவதால் பேசுந்தன்மையை இழத்தல்;*** loss of the power of speech due to a central lesion - Aphemia. (சா.அக.).

*[ஊமை + தனம் ]*

**ஊமைத்தேங்காய்** *ūmai-t-tēṅgāy,* பெ (n) 1 ***நீராடாத் தேங்காய்;*** coconut in which the milk does not sound when shaken 2 ***உள்ளே ஒன்றுமில்லாத தேங்காய்;*** coconut that is useless, having no kernel (செ அக )

ம. ஊமைதேங்ங

*[ஊமை + தேங்காய் ]*

**ஊமைப்பூச்சி** *ūmai-p-pūcci,* பெ. (n) ***அட்டை;*** leech (சா அக.).

*[ஊமை + பூச்சி ]*

**ஊமைமணி** *ūmai-maṇi,* பெ (n) ***நாக்கில்லாத மணி;*** tongueless bell "ஊமைமணியாட்டுகினு மோசை ஒழிந்தாற்போல்" (ஒழிவி துறவு 9)

*[ஊமை + மணி ]*

**ஊமைமரம்** *ūmai-maram,* பெ (n) ***மலை வேம்பு;*** hill-neem - Melia semperriren (சா அக ).

*[ஊமை + மரம் ]*

**ஊமையடி** *ūmai-y-adi,* பெ (n) ***குருதிக்காய முண்டாக் காத அடி;*** contused wound, bruise (Tinn ). (செ அக )

ம. ஊமையடி

*[ஊமை + அடி ]*

**ஊமையறுவாள்** *ūmai-y-aṟuvāḷ,* பெ. (n) ***முட்டை;*** egg (சா.அக )

*[ஊமை + அறுவாள் கற்காலத்துக் கறகோடரி போன்ற வடிவொப்புமை யுடையதாக முட்டையின் தோற்றம் காணப் படுதலின் ஒருசார் ஒப்புமை கருதி இட்ட பெயராகலாம் ]*

**ஊமையன்** *ūmaiyan,* பெ (n) ***மூங்கையன்;*** dumb, speechless man (செ.அக.).

*[ஊமை + அன் - ஊமையன் ]*

**ஊமையாமொழி** *ūmaiyā-moḻi,* பெ (n) ***அசையா மந்திரம்*** (திருமந் 1611), the ajapā mantra

*[ஊமை + ஆ + மொழி.]*

**ஊமையெழுத்து** *ūmai-y-eḻuttu,* பெ. (n.) 1. ***மெய்யெழுத்து;*** consonant, being mute 2 ***ஓம் என்னும் உள்ளகமான மந்திர எழுத்து;*** the mystic syllable ōm "மறை நான்கின் முதற்கிடந்த ஊமையெழுத்து" (குற்றா தல.திரிகூடமலை.34). (செ அக ).

*[ஊமை + எழுத்து.]*

**ஊமை விளையாட்டு** *ūmai-viḷaiyāṭṭu,* பெ. (n.) ***பிள்ளை விளையாட்டு வகை;*** play among children in which they imitate a dumb person (செ.அக )

*[ஊமை + விளையாட்டு ]*

**ஊமை வீக்கம்** *ūmai-vīkkam,* பெ. (n) ***அடியினால் வெளிக்குக் காயந் தெரியாது உண்டாகும் வீக்கம்;*** contusion, swelling on account of a bruise (செ அக )

ம. ஊமை வீக்கம்

*[ஊமை + வீக்கம் ]*

**ஊமை வெயில்** *ūmai-veyil,* பெ. (n) ***ஊமைக்கோட்டான் வெயில்*** பார்க்க, see *ūmai-k-kōṭṭāṉ veyil*

ம. ஊமை வெயில

*[ஊமை + வெயில் ]*

**ஊய்-தல்** *ūy-,* 2 செ கு வி (vi) ***பதனழிதல்;*** to become overripe, to deterioate, to decay (யாழ் அக ). (செ.அக.).

*[உல் → ஊல் → ஊழ் → ஊய் ]*

**ஊய்ந்துபோ-தல்** *ūyndu-pō-,* 6.செ குன்றாவி. (v.t) ***பெருவாரி நோயாலிறத்தல்;*** to die in plague or pestilence (சா அக )

*[ஊய் → ஊய்ந்து + போ.]*

**ஊயல்** *ūyal,* பெ. (n) ***ஊஞ்சல்;*** swing

தெ. உய்யால

*[உந்தல் → உஞ்சல் → ஊஞ்சல் → ஊசல் → ஊயல் (சு.வி 40) ]*

**ஊர்¹-தல்** *ūr-,* 2 செ கு வி. (vi.) 1 ***அடர்தல்;*** to come to close quarters "வெஞ்சம மூர்ந்தமரு முக்கி" (சிலப் 27,28,அரும் ) 2. ***நகர்தல்;*** to move slowly, to creep as a infant, to crawl, as a snake "நந்தூரும் புனனாட்டின்" (பாரத கிருட்டிண.11). 3 ***பரவுதல்;*** to spread, circulate, as blood, to extend over a surface, as spots on the skin "இவக்காணென் மேனி பசப்பூர்வது" (குறள் 1185). 4 ***வடிதல்;*** to flow, as juice from the sugarcane "கரும்பூர்ந்த சாறுபோல்" (நாலடி.34) 5. ***கழலுதல்;*** to unloosen, to be relaxed "அவிர்தொடி யிறையூர" (கலித் 100). 6. ***சுற்றி வருதல்;*** to go round

*[உல் → ஊல் → ஊர் ]*

**ஊர்²-தல்** *ūr-,* 2.செ.குன்றாவி. (vt) 1. ***ஏறுதல்;*** to mount "பாசடும்பு பரியவூர் பிழிபு . வந்தன்று .... தேர்" (ஐங்குறு.101) 2. ***ஏறிநடத்துதல்;*** to ride, as a horse, to drive as a vehicle "சிவிகை பொறுத்தானோ டூர்ந்தானிடை" (குறள்.37). (செ.அக ).

ம. ஊருக; க. உரிக, உச்சு; துட. உச்த். தெ. ஊடு; நா. உயப்; கொலா. உட்பேங், ஊர்பேங்; குரு. உர்னா.

*[உல் → ஊல் → ஊர்]*

**ஊர்$^{3}$-தல்** *ūr-*, 2.செ குன்றாவி. (vt) 1. ***நிலைகொள்ளுதல், ஊன்றுதல்;*** to set firmly, to plant 2. ***உட்கொள், உறிஞ்சு;*** to suck "ஊர்த்துயி ருன்னை யுண்ண" (சீவக 2286). (செ அக)

க. ஊர். து. ஊரு (நிலைகொள், ஊன்று)

*[உல் = பொருந்துதல், தங்குதல். உல் → ஊல் → ஊர். ஊல் + து - ஊன்று எனச் சொல்லாக்கம் பெறுதலை ஒப்புநோக்குக.]*

**ஊர்$^{4}$** *ūr*, பெ. (n) 1. ***ஊர்கை;*** going, riding "ஊருடைத் திண் புரவி யுலைத்தனள்" (சேதுபு தேவி 43) 2 ***வாழும் ஊர்;*** village, town, city (தொல் பொருள் 37) 3 ***இடம்;*** place "ஒரூரிரண்ட ஃகமாயிற் றென்று" (சீவக.2087) 4 ***ஊரிலுள்ளார்;*** resident population "ஊரு மயலுஞ் சேரியோரும்" (இலக்.வி.563) 5 ***திங்கள், பகலவனைச் சூழும் பரிவேடம்;*** halo round the sun or moon "செங்கதிர் தங்குவதோ ருருற்றது" (கம்பரா சரபங் 9). (செ.அக) 6. ***வட்டம்;*** circle

ம. ஊரு. கை. உர். இரு. ஊரு, க., பட. ஊரு, ஊர், துட. ஊர், கோத. ஊா, குட. ஊரு, ஊரி, து. ஊரு; தெ. ஊரு, நா. ஊர், கொலா. ஊர். *Heb* ār, *IR*, *Bab* er, *Assyrian* uri, *Acadian* uri, *Pkt* ūr

*[உ → உல் → ஊல் → ஊர். ஊர்தல் = தங்குதல், ஓரிடத்தில் நிலைகொள்ளல், குடியேறுதல்]*

"ஊர்தியிற் கொண்டு போகப்படும் கூண்டு, குடில், அல்லது வீடு, வீட்டுத்தொகுதி ஊர் எனப்பட்டது (ஒ நோ) நகர்தல் = மெல்லசெல்லல்" என்றும "இன்றும் நாடோடிகள் (nomads) மாடு, குதிரை முதலியவற்றின்மேல் தங்கள குடிலைககொணடு போவதையும், சில இடங்களில ஒரே வீட்டிலிருநது ஒ்றறையூா எனப்படுவதையும் காணக" (சு வி 41) என்றும பாவாணர் கூறியிருப்பினும் தங்குதல் நிலைகொள்ளல் (உல் → ஊல் → ஊர் → ஊருதல) என்னும வேர்மூலமே பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது ஊர் எனனும் வினையடி, ஆகுபெயராய் வண்டியை அல்லது ஊர்தியைக் குறிப்பதில்லை என்பதும் கவனிக்கத் தக்கது.

**ஊர்க்கணக்கன்** *ūr-k-kaṇakkaṉ*, பெ. (n) ***ஊர்க்கணக்கு பதவி மேற்கொள்பவன்*** (கிராமக் கணக்கன்); village accountant

ம. ஊர்க்கணக்கன்; க. ஊருக்கரண; தெ. ஊர்க்கரணம்.

*[ஊர் + கணக்கன்.]*

**ஊர்க்கணக்கு** *ūr-k-kaṇakku*, பெ. (n.) ***ஊர்க்கணக்கன் பதவி;*** post or appointment of a village-accountant.

ம. ஊர்கணக்கு.

*[ஊர் + கணக்கு.]*

**ஊர்க்கதை** *ūr-k-kadai*, பெ (n) 1. ***ஊர்ப்பேச்சு;*** rumour, country talk 2. ***வம்பு;*** gossip (செ.அக.).

*[ஊர் + கதை.]*

**ஊர்க்கலகம்** *ūr-k-kalagam*, பெ. (n) 1. ***ஊரிலுண்டாகுங் கலகம்;*** village quarrel. 2. ***நாட்டுக்குழப்பம்;*** insurrection (செ.அக.).

*[ஊர் + கலகம்]*

**ஊர்க்கலாபம்** *ūr-k-kalābam*, பெ. (n) ***மக்கட்குளுண்டாகுங் கலகம்;*** revolt civil disorder (W)

*[ஊர் + கலாபம். கலகம் → கலாபம்]*

**ஊர்க்கழஞ்சி$^{1}$** *ūr-k-kaḻañji*, பெ. (n) ***மக்கட்குளுண்டாகுங் கலகம்*** (வின்.); insurrection (செ.அக.).

*[ஊர் + கழஞ்சி கலாம் → கலஞ்சி → கழஞ்சி (கொ வ).]*

**ஊர்க்கழஞ்சி$^{2}$** *ūr-k-kaḻañji*, பெ. (n) ***ஊர்க்கழஞ்சு*** பார்க்க; see *ūr-k-kaḻañju* (T A S I, 165)

**ஊர்க்கழஞ்சு** *ūr-k-kaḻañju*, பெ. (n) ***ஒரு பழைய வரி வகை;*** ancient tax (செ.அக) (S I I ii, 425)

ம. ஊர்கழஞ்சு

*[ஊர் + கழஞ்சு]*

**ஊர்க்கள்ளி** *ūr-k-kaḷḷi*, பெ (n) ***ஓர்வகைக் கள்ளி அதாவது கொம்புக் கள்ளி;*** any spurge, of the Eupborbia genus grown near a village or in a country, but it generally refers to the creeper kalli - sarcostemma intermedium

*[ஊர் + கள்ளி. (வி தொ.)]*

**ஊர்க்கற்செம்மை** *ūr-k-kaṟ-cemmai*, பெ (n) ***புடமிட்ட நிலை;*** refinement as of gold (I m P cg 1027) (செ அக)

*[உருக்கல் → ஊர்க்கல் (கொ.வ.) ஊர்க்கல் + செம்மை.]*

**ஊர்க்காரம்** *ūrkkāram*, பெ. (n) ***உவர்க்காரம்;*** fuller's earth (சா.அக.).

*[உவர் → ஊர் + காரம்]*

**ஊர்க்காவல்** *ūr-k-kāval*, பெ. (n) ***ஊரைக் காப்பவன்; தலையாரி*** (I N P Tj 76), village watchman.

க. ஊர்க்காவலிக.

*[ஊர் + காவல்]*

**ஊர்க்குருவி** *ūr-k-kuruvi*, பெ. (n.) ***அடைக்கலான்*** (திவா); house - sparrow, passer domesticus (திவா.).

ம. ஊர்க் குருவி; க. ஊரு குப்பி, தெ. ஊருகுவ்வ; பட. குப்பிசி.

*[ஊர் + குருவி.]*



ஊர்க்குருவி

**ஊர்க்குறவர்** *ūr-k-kuravar,* பெ (n) ***திரியும் வழக்கத் தைவிட்டு ஓர் ஊரிலிருந்து வாழும் குறவர்;*** section of the Kurava caste who have given up their nomadic life and have settled themselves in villages

*[ஊர் + குறவர்.]*

**ஊர்க்கூட்டம்** *ūr-k-kūttam,* பெ. (n) ***ஊரிலுள்ளோர் கூடுங்கூட்டம்;*** village crowd, gathering of people (செ அக.)

ம. ஊர்க்கூட்டம்

*[ஊர் + கூட்டம்]*

**ஊர்க்கூடு-தல்** *ūr-k--kūdu-,* 5 செ.கு வி. (vi) ***ஊரார் திரளுதல்;*** to throng in a body, as all the villagers for any common purpose ஊர் கூடிச் செக்குத் தள்ளுதல் போல (பழ ). (செ.அக.).

*[ஊர் + கூடு]*

**ஊர்க்கூரம்** *ūr-k-kūram,* பெ. (n) *பாகற்காய்;* bitter-fruit-Mimordica charantia (சா.அக ).

*[ஊர் + கூரம்]*

கூலம் = தவசம் கூழ் = தவசம், தவசத்தால் செய்த உணவு தெலுங்கில் கூழ் → கூழம் + காய - கூழங்காய் → கூரகாய் = காய்கறிகளைக் குறிக்கும் இங்கு கூரம், காய்கறி குறித்துப் பின்னர், காய் வகைக்குப் பொதுப்பெயராயிற்று

**ஊர்கொலை** *ūr-kolai,* பெ (n) ***பகைமேற்செல்வோர் நிரை கொள்ளுமுன் நிரைகாவலரைக் கொல்லும் புறத்துறை;*** literary theme depicting the slaughter of herdsmen by the enemy before capturing the cows "முற்றியவூர் கொலை" (தொல்.பொருள்.58)

*[ஊர் + கொலை.]*

**ஊர்கொள்(ளு)-தல்** *ūr-kol-,* 16 செ கு வி. (vi) 1. ***சுற்றுவட்டங் கொள்ளுதல்*** (திருக்கோ 262,உரை); to have a halo as the sun or moon 2. ***குறைவின்றி மண்டலமாக ஒளிபரத்தல்*** (திருக்கோ.262,உரை); to shine in its fulness, as the moon.

*[ஊர் + கொள்.]*

**ஊர்கொள்ளை** *ūr-kollai,* பெ. (n) 1. ***ஊரில் நடக்குங் கொள்ளை;*** robbery in a town by a gang of robbers, dacoity 2 ***அதிகாரிக்கொள்ளை;*** extortion by the headman of a village (W). (செ.அக.) 3. ***கொள்ளை நோய்;*** epidemic

*[ஊர் + கொள்ளை.]*

**ஊர்கோலம்** *ūr-kōlam,* பெ (n.) ***ஊர்வலம் வருகை;*** procession on festive occasions (செ.அக.).

*[ஊர் + கோலம் கோலம் = அழகு, அழகிய காட்சி.]*

**ஊர்கோள்** *ūr-kōl,* பெ. (n.) ***ஒளிவட்டம்;*** halo round the sun or moon "கூட்டமுற் கதிரையூர்கோள் வளைத்த வா" (சீவக.1136).

*[ஊர் + கோள் கொள் → கோள்.]*

**ஊர்ச்சோறு** *ūrccōru,* பெ. (n) ***ஊரார்க்குக் கொடுக்கும் விருந்து;*** feast given to the villagers

ம. ஊருச்சோறு

*[ஊர் + சோறு.]*

**ஊர்த்தலைமை** *ūr-t-talaimai,* பெ. (n) ***நாட்டாண்மை;*** office of village chief, position of the accredited headman of a caste or guild community (செ.அக.)

*[ஊர் + தலைமை]*

**ஊர்த்தலையாரி** *ūr-t-talai-y-āri,* பெ. (n) ***ஊர்க் காவற்காரன்;*** village watchman (தாசில்.நா.).

*[ஊர் + தலையாரி தலையாள் → தலையாளி → தலையாரி]*

**ஊர்த்தலைவன்** *ūr-t-talaivan,* பெ. (n) ***ஊரின் தலைவன்;*** headman of a village

ம. ஊர்த்தலைவன

*[ஊர் + தலைவன்]*

**ஊர்தண்டம்** *ūr-tandam,* பெ (n) ***ஊரின்மேல் சுமத்தும் தண்டம்;*** collection of community fine, fine imposed on a village (சேரநா.)

ம. ஊர்த்தண்டம்

*[ஊர் + தண்டம்]*

**ஊர்தா(தரு)-தல்** *ūrtā-,* 2.செ கு.வி (vi) 1. ***ஊர்தல்;*** to move slowly, crawl 2. ***வீசுதல்*** (பரிபா.11,84); to blow, as the wind 3 ***மிகுதல்;*** to abound, to overpower. "ஒன்றிய வேட்கை யூர்தர" (மாறன.560,உதா)

*[ஊர் + (தரு)தா.]*

**ஊர்தி** *ūrdi,* பெ (n) 1 ***ஏறிச்செல்லும் விலங்கு, பறவை, வண்டி முதலியன;*** vehicle, conveyance in general 2 ***ஆருடம்;*** that which has risen, that which has ascended "ஊர்தி குடையுதய மூன்றில்" (சினேந்.158). (செ அக ).

*[ஊர் → ஊர்தி. (வே.க.33).]*

**ஊர்நத்தம்** *ūr-nattam,* பெ. (n) 1. ***ஊரில் வீடுகள் கட்டுவதற்காக விடப்பட்டிருக்கும் இடம்;*** site set apart for building purposes in a village. (செ.அக.). 2. ***சிற்றூர்;*** hamlet or a village (Insc). 3. ***குடியிருப்பு;*** group of homesteads in a village (Loc).

*[ஊர் + நத்தம். நந்து → நந்தம் → நத்தம்.]*

**ஊர்நாவு** *ūr-nāvu,* பெ. (n) ***ஊரிலுள்ளோரது நா, மக்கள் பேச்சு;*** village-gossip. (சேரநா.)

ம. ஊர்ண்ணாவு

*[ஊர் + நாவு. நா → நாவு.]*

**ஊர்நேரிசை** *ūr-nēr-isai,* பெ. (n) ***தலைவனது ஊரை நேரிசை வெண்பாவாற் சிறப்பிக்கும் சிற்றிலக்கிய வகை*** (இலக் வி 830,உரை); poem, containing 50, 70, or 90 nēriśai-venpā verses written in eulogy of the town or place of residence of the hero.

*[ஊர் + நேரிசை]*

**ஊர்ப்பகை** *ūr-p-pagai,* பெ. (n.) ***ஊரிலுள்ளாரோடு கொள்ளும் எதிருணர்வு*** (விரோதம்); enmity with the local residents of a place (செ.அக.).

ம. ஊர்ப்பக

*[ஊர் + பகை]*

**ஊர்ப்பட்டது** *ūr-p-pattadu,* பெ. (n) ***மிகுந்தது;*** great quantity, much (செ.அக.).

*[ஊர் + பட்டது. படுதல் = தோன்றுதல், உண்டாதல்.]*

**ஊர்ப்பட்டி** *ūr-p-patti,* பெ. (n.) 1. ***ஊரில் சுற்றும் நாய்;*** stray dog. 2. ***நாட்டு நாய்;*** native dog. (சேரநா.).

ம. ஊர்ப்பட்டி.

*[ஊர் + பட்டி. பள் → படு → பட்டி = கிடப்பது, ஓரிடத்திருப்பது.]*

**ஊர்ப்பழி** *ūr-p-pali,* பெ. (n.) ***ஊர்நிந்தை;*** public censure, displeasure of the people in a village (செ.அக.).

ம. ஊரபபழி.

*[ஊர் + பழி.]*

**ஊர்ப்பள்ளி** *ūr-p-palli,* ***வேடர்களுக்கென்றே ஊரில் கட்டப்பட்ட கட்டடம்;*** exclusive building for the hunters of a parish (சேரநா.).

ம. ஊர்ப்பள்ளி.

*[ஊர் + பள்ளி.]*

**ஊர்ப்பன்றி** *ūr-p-panri,* பெ. (n.) ***நாட்டுப்பன்றி;*** village pig. "உழுத வுழுத்தஞ்செய் யூர்ப்பன்றி மேய" (முத் தொள்.), (செ.அக.).

ம. ஊர்ப்பன்னி.

*[ஊர் + பன்றி.]*

**ஊர்ப்பாக்கு** *ūr-p-pākku,* பெ. (n) ***திருமணவழைப்புக் காக வைக்கும் வெற்றிலைப்பாக்கு;*** distribution of pan supari among the residents of a place as in an invitation to a wedding (Loc.). (செ.அக.).

*[ஊர் + பாக்கு.]*

**ஊர்ப்பாடு** *ūr-p-pādu,* பெ. (n.) ***பிறருடைய செயல்;*** others' affairs, matters which concern other folk. (செ.அக.).

*[ஊர் + பாடு.]*

**ஊர்ப்பு** *ūrppu,* பெ. (n.) ***உரிமை, பங்கு;*** share, claim, right (சேரநா.).

ம. ஊர்ப்பு.

*[ஊர் → ஊர்ப்பு (தாயஉரிமை).]*

**ஊர்ப்புரட்டு** *ūr-p-purattu,* பெ (n.) ***பெரும் பொய்;*** utter false-hood. (W.). (செ.அக.).

*[ஊர் + புரட்டு.]*

**ஊர்ப்புரளி** *ūr-p-purali,* பெ. (n.) 1. ***ஊர்க்குழப்பம்;*** tumult, insurrection, general commotion 2. ***ஊர்ப்புரட்டு*** பார்க்க; see *ūr-p-purattu.* (செ.அக.).

*[ஊர் + புரளி.]*

**ஊர்ப்புல்** *ūr-p-pul,* பெ. (n.) ***கோரை வகை;*** creeping grass, Papyrus pangorei. (மூ.அக.), (செ.அக.).

*[ஊர் + புல்.]*

**ஊர்ப்புள்** *ūr-p-pul,* பெ. (n) ***ஊர்க்குருவி*** (சூடா.); house sparrow, passer domesticus (செ.அக.).

ம. ஊர்க்குருவி; க. ஊரு குப்பி.

*[ஊர் + புள்.]*

**ஊர்மணியம்** *ūr-maniyam,* பெ (n.) 1. ***சிற்றூர் மேற் பார்வை;*** superintendance of a village 2. ***சிற்றூரை மேற்பார்ப்பவன்;*** supervision of a village (செ.அக.).

*[ஊர் + மணியம்]*

**ஊர் மன்றம்** *ūr-manram,* பெ. (n.) ***ஊர்மன்று*** பார்க்க; see *ūr-manru.*

*[ஊர் + மன்றம்]*

**ஊர்மன்று** *ūr-manru,* பெ. (n.) ***ஊர்ப் பொதுவிடம்;*** place for public gathering in a village, usu situated under a tree (செ.அக.).

*[ஊர் + மன்று.]*

**ஊர்மானியம்** *ūr-māniyam,* பெ. (n.) ***ஊர்ப் பொதுவூழி யத்துக்காக விடப்பட்ட மானிய நிலம்;*** lands in a village exempted from taxes and set apart for enjoyment by those who perform common village duties (செ.அக.).

*[ஊர் + மானியம். மானம் → மானியம் (பெருமதிப்பு கருதி அளிக்கப்படும் கொடை).]*

**ஊர்மி** *ūrmi,* பெ. (n.) ***அலை*** (விசாரசந்.344); wave. (செ.அக.).

*[ஊர் → ஊர்மி. ஊர்ந்து மேல் வருவது.]*

**ஊர்முகம்** *ūr-mugam,* பெ. (n.) ***படைகள் பொருமிடம்;*** battle-field, prob because it was the open ground in front of a village ''ஊர்முகத் திறாஅலியரோ பெருமநின் றானை'' (பதிற்றுப்.40,1).

*[ஊர் + முகம்.]*

**ஊர்வரப்பன்** *ūr-varappan,* பெ. (n.) ***வெள்ளரி;*** cucumber (மூ.அ.)

*[ஊர் + வரம்பு. வரம்பு → வரப்பு → வரப்பன். (வரப்பில் ஊர்ந்து படரும் கொடி).]*

**ஊர்வரை** *ūr-varai,* பெ. (n.) ***யானை;*** elephant. ''பொன்னூர் வரைதனில்'' (சிவக்.பிரபந்த.கோட்டீச்சுர.241) (செ.அக.).

*[ஊர் + வரை. வரை = மலை. ஊர்ந்து செல்லத்தக்க மலை போன்ற யானை ]*

**ஊர்வலம்** *ūr-valam,* பெ. (n) ***ஊர்கோலம்;*** procession on festive occasions around a town or village, keeping the village always to one's right side (செ.அக.).

*[ஊர் + வலம் ஊரை வலமாக வருதல்.]*

**ஊர்வன** *ūrvana,* பெ (n) ***ஊரும் பூச்சிகள்;*** reptiles, creeping things ''ஊர்வன நடப்பன பறப்பன'' (தாயு பரிபூ.2), (செ.அக.)

ம. ஊர்வ.

*[ஊர் → ஊர்வன ]*

**ஊர்வாயில்** *ūr-vāyil,* பெ. (n) ***ஊரின் பெரிய வாயில்;*** entrance of a village

க. ஊரு புாகிலு

*[ஊர் + வாயில்.]*

**ஊர்வாரி** *ūr-vāri,* பெ (n) ***ஊர்க் கழிவுநீர்க்கால்;*** public drain of a town or village ஊர்வாரி நீரிலே உடம்பு தூய்மை பெறுதற்குக் குளித்துத் திளைத்ததனோடொக்கும் (பழ 98,உரை ).

*[ஊர் + வாரி வார் = நீர் வாரி = நீரோடும் கால்வாய் ]*

**ஊர் வாரியம்** *ūr-vāriyam,* பெ. (n) ***ஊர்மன்றம்;*** village committee (I M P N A 40).(செ.அக.)

ம. ஊர்வ்வாரியர்

*[ஊர் + வாரியம் ]*

**ஊர்வாருகம்** *ūr-vārugam,* பெ. (n.) ***வெள்ளரி*** (நாமதீப); cucumber. (செ.அக.).

*[ஊர் + வாருகம். வாருகம் = கொடி படரும் கொடி.]*

**ஊர்விருத்தம்** *ūr-viruttam,* பெ. (n) ***தலைவனூரை மண்டிலச்*** (விருத்தச்) ***செய்யுள் பத்தினாற் சிறப்பிக்கும் சிற்றிலக்கிய வகை;*** eulogistic poem describing the town of the hero in ten viruttam verses (இலக்.வி.853) (செ.அக ).

*[ஊர் + விருத்தம்.]*

**ஊர்வெண்பா** *ūr-venbā,* பெ (n) ***தலைவனூரை வெண்பாப் பத்தினாற் சிறப்பிக்கும் சிற்றிலக்கிய வகை*** (வெண்பாப்.செய்யு.22); eulogistic poem describing the town of the hero, in the venbā verses

*[ஊர் + வெண்பா.]*

**ஊரகம்** *ūragam,* பெ (n) 1. ***ஊரின் நடு;*** centre of a village, a village 2. ***காஞ்சியிலுள்ள நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று;*** one of the 108 sacred places situated in Kāñchipuram

ம. ஊரகம், க. ஊரிக.

*[ஊர் + அகம்.]*

**ஊரகமல்லி** *ūragamalli,* பெ. (n.) ***நாகமல்லி;*** snake jasmine.

*[ஊரகம் + மல்லி.]*

**ஊரடி**[1] *ūradi,* பெ. (n) 1. ***ஊரவர் வரையறை செய்யும் அளவு;*** limit of villagers (கருநா.) 2 ***ஊரை யொட்டிய விடம்;*** place adjacent to a village

க. ஊரடி.

*[ஊர் + அடி.]*

**ஊரடி**[2] *ūradi,* பெ. (n) ***ஊரின் அடியவன், அடிமை;*** village servant, slave (சேரநா.)

ம. ஊரடி.

*[ஊர் + அடி ]*

**ஊரடி வயல்** *ūradi-vayal,* பெ. (n) ***ஊரொடு சேர்ந்திருக்கும் வயல்;*** rice lands adjoining a village (சேரநா.).

ம. ஊரடி வயல்

*[ஊர் + அடி - ஊரடி + வயல்.]*

**ஊரதிசயங்காட்டி** *ūr-adiśayan-kātti,* பெ. (n) ***ஊரில் வியப்பாக உள்ளவற்றை யெல்லாம் அங்குப் புதிதாக வருபவர்க்குக் காட்டுபவன்;*** cicerone, guide. (செ.அக.).

*[ஊர் + அதிசயம் + காட்டி.]*

**ஊரப்பார்-த்தல்** *ūra-p-pār-,* 4.செ குன்றாவி. (v.t.) ***நஞ்சு போக்குதல்;*** to put in motion, to cause to move or pass away as poison, by a magician. (செ.அக.).

*[ஊர் → ஊர + பார். ஊர்தல் = நகர்தல், நீங்குதல்.]*

**ஊரம்** *ūram,* பெ. (n.) ***செடி வகை;*** country-mallow, (சேரநா.).

ம. ஊரம், ஆத். ஊர (மரம்)

*[ஊர் + அம் - ஊரம் (உயரமானது).]*

**ஊரம்மை** *ūrammai,* பெ. (n) ***ஊர்த்தெய்வம்;*** village goddess (சேரநா.).

ம. ஊரம்ம; க. ஊருதேவம்ம.

*[ஊர் + அம்மை அம்மை = அம்மன்.]*

**ஊரமை** *ūramai,* பெ. (n.) ***சிற்றூர்ப் பொதுப் பணிகளை மேற்பார்த்தல்;*** administration of a village. ''ஊரமை செய்யும் வாரியப் பெருமக்களோடு'' (S.I.I.i.117) (செ அக.)

*[ஊர் + ஆண்மை - ஊராண்மை → ஊராமை → ஊரமை.]*

**ஊரயன்** *ūrayaṉ,* பெ. (n.) ***பொறாமை கொண்டவன்;*** envious person (சேரநா.).

ம. ஊரயன்.

*[ஊர் → ஊரல் → ஊரலன் → ஊரயன்.]*

**ஊரரிசி** *ūrariśi,* பெ. (n.) ***மலை நெல்லின் அரிசி;*** rice obtained from wild paddy (சேரநா.)

ம. ஊரரி.

*[வரை → வார் → ஊர் + அரிசி]*

**ஊரல்**[1] *ūral,* பெ (n) 1. ***ஊர்வது;*** creeping thing (W) 2. ***கிளிஞ்சில்*** (பிங்.); shell-fish 3. ***குளுவைப் பறவை;*** water-bird ''உள்ளு மூரலும்'' (சிலப்.10,17) 4 ***தினவு;*** itching sensation. 5. ***தேமல் வகை;*** eruptive patch on the skin. 6. ***படர் தாமரை நோய்;*** ringworm, tinea circinata.

ம. ஊரல்.

*[ஊர் + அல் - ஊரல் அல் (தொ.பெ ஈறு.).]*

**ஊரல்**[2] *ūral,* பெ (n.) ***பசுமை;*** greenness, moistness, as of a vegetable

ம. ஊரல்

*[ஊர் → ஊரல் = படரும் பசுங்கொடி, கொடியின் பசுமை நிறம்.]*

**ஊரல்**[3] *ūral,* பெ. (n) ***பிடித்து இழுத்தல்;*** drawing out or pulling out, extraction (சேரநா.).

ம. ஊரல்.

*[ஊர் → ஊரல்]*

**ஊரவர்** *ūravar,* பெ. (n.) ***ஊரார்;*** inhabitants of a village or town ''ஊரவர் கெளவை யெருவாக'' (குறள்.1147). (செ அக.).

ம. ஊராங்கள்

*[ஊர் + அவர்.]*

**ஊரவியன்** *ūraviyaṉ,* பெ. (n) ***வணிகன்;*** merchant ***ஊரவையன்*** பார்க்க; see *ūravaiyaṉ.*

ம. ஊரவ்யன்.

*[ஊர் + அவையன் - ஊரவையன் → ஊரவியன் (கொ.வ.).]*

**ஊரழிபூசல்** *ūr-aḻi-pūśal,* பெ. (n.) ***ஊரைக் கொள்ளை யிட்டழிக்கும் போர்;*** war in which the whole village is looted. 'ஊரழி பூசல் போலே திருமேனியின் நிறமானது எல்லாவற்றையுங்கூடக் கொண்டு வந்து என்னெஞ்சைக் கொள்ளை கொண்டது' (திவ்.அமலனாதி.9.வியா. பக் 99). (செ அக.)

*[ஊர் + அழி + பூசல்.]*

**ஊரற்சொறி** *ūraṟ-coṟi,* பெ. (n) ***மிக்க தினவையுண் டாக்கும் ஓர் வகைச்சொறி;*** skin disease marked by small purple spots and intense itching

*[ஊரல் + சொறி]*

**ஊரற்பரி** *ūraṟ-pari,* பெ (n) 1 ***சேம்பு;*** garden plant with vesculent seeds and roots 2. ***நீர்ச்சேம்பு;*** another variety of 'sēmbu'

*[ஊரல் + பரி]*

**ஊரற்புண்** *ūraṟ-puṇ,* பெ. (n) ***ஆறாப்புண்;*** raw wound, unhealed wound (W) (செ.அக.)

*[ஊரல் + புண்]*

**ஊரறுகு** *ūraṟugu,* பெ. (n) ***அறுகு வகை*** (தஞ்சை சரசு iv 144), a kind of grass (செ.அக.).

*[ஊர் + அறுகு.]*

**ஊரன்** *ūraṉ,* பெ (n) 1 ***மருதநிலத் தலைவன்;*** chief of an agricultural tract ''தண்டுறை யூரனை'' (ஐங் குறு.88). 2 ***சுந்தரமூர்த்தி*** நாயனார் (தேவா 1242,10); St Sundarar (செ அக). 3. ***செல்வக் குடியினன்;*** man of wealthy family

*[ஊர் + அன் - ஊரன் மருதநிலத்து நகரங்களே ஊர்கள் எனச் சிறப்பாகக் குறிக்கப்படுதலின் கோட்டையும் மதிலும் ஊர் கொண்டதே (சூழ்ந்ததே) ஊராயிற்று எனவும் கருதலாம். ஊரன் = கோட்டையூரினன்.]*

**ஊரா** *ūrā,* பெ. (n) ***ஊர்ப்பெற்றம்;*** village cow ''ஊராமிலைக்கக் குருட்டா மிலைக்கும்'' (திவ் இயற். திருவிருத் 94) (செ அக)

*[ஊர் + ஆ]*

**ஊராட்சி** *ūr-āṭci,* பெ. (n) 1. ***ஊராளுகை;*** administration of a village 2 ***ஒரு பழைய வரி;*** ancient tax ''நாடாட்சி யும் ஊராட்சியும் ... எவ்வகைப்பட்டதும்'' (S.I.I ii, 509)

ம. ஊராச்சி.

*[ஊர் + ஆட்சி.]*

**ஊராண்மை** *ūrāṇmai,* பெ. (n) 1 ***ஊரையாளுந் தன்மை;*** commanding influence in a locality. 2. ***ஈயும் தன்மை;*** generosity, benignity ''ஒன்றுற்றக்கா லூராண்மை மற்றதன் எஃகு'' (குறள்.773). 3. ***மிக்க செயல்;*** great, wonderful performance 4 ***பகைமேற் செல்லுகை;*** military expedition (செ.அக.).

ம. ஊராண்ம.

*[ஊர் + ஆண்மை. ஆள் - (ஆளுமை) - ஆண்மை]*

**ஊராண்மைக்காரன்** *ūrāṇmaikkāraṉ,* பெ. (n.) ***கோயில் தக்கார்;*** trustee of a temple (சேரநா.).

ம. ஊராண்மைக்காரன்.

*[ஊர் + ஆண்மை + காரன். காரன் - உடைமை அல்லது உரிமை குறித்த சொல்லாக்க ஈறு.]*

**ஊராநற்றேர்** *ūrā-naṟṟēr,* பெ (n) ***வானூர்தி;*** aerial car, so called because it does not run on the ground "ஊரா நற்றே ரோவியப்படுத்து" (மணி 6 39), (செ அக.).

*[ஊர் + ஆ + நல் + தேர் - ஊராநற்றேர். ஊரா = நிலத்தில் ஓட்டிச் செல்லப்படாத 'ஆ' எ ம இ நி.]*

**ஊராமை** *ūr-āmai,* பெ (n) ***மகளிர்க்குக் கருப்பையிலுண் டாகுங் கட்டி; ஆமையைப் போல் ஊரும் கட்டி;*** tumour developing in the uterous and having a sensation of crawling like the tortoise

**மறுவ.** கெண்டைக்கட்டி, வல்லைக்கட்டி.

*[ஊர் + ஆமை ]*

**ஊரார்** *ūrār,* பெ. (n) 1. ***ஊரவர்;*** inhabitants of a village or town "மறைபெற லூரார்க் கரி தன்றால்" (குறள்.1180) 2 ***பிறர்;*** others, strangers, those who are not one's own people 'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன்பிள்ளை தானே வளரும்' (பழ.) (செ.அக.).

**ம.** ஊரார்

*[ஊர் + அவர் - ஊரவர் → ஊரார் ]*

**ஊராள்** *ūrāḷ,* பெ (n) 1. ***ஊரவன்;*** villager 2. ***கோயில் தக்கார்;*** temple trustee 3 ***புதியவன்;*** stranger

**க.** ஊராளு. **ம.** ஊராள்.

*[ஊர் + ஆள் ]*

**ஊராளன்** *ūr-āḷaṉ,* பெ (n) ***ஊராட்சி செய்யும் ஓர் அதிகாரி;*** official who superintends the village affairs (T A S iv i 10). (செ அக.)

*[ஊர் + ஆளன் ]*

**ஊராளி**[1] *ūrāḷi,* பெ (n) ***மதுரை, திருநெல்வேலியி லுள்ள உழவரின் ஒரு வகையினர்;*** name of a sect of agriculturists who inhabit Madurai and Tirunelvēli districts

*[ஊர் + ஆளி - ஊராளி. ஊராளும் தலைவராயிருந்து உழவரா னவராயிருக்கலாம் ]*

**ஊராளி**[2] *ūrāḷi,* பெ. (n) ***ஊர்த்தலைவன்;*** headman of a village இவர் ஊராளிக் கவுண்டரின் மகன் (கொங்.வ.).

**ம.** ஊராளன

*[ஊர் + ஆளி. ஆள் → ஆளி ]*

**ஊராளி**[3] *ūrāḷi,* பெ. (n) ***வரிக்கூத்து வகை;*** a kind of 'vari-k-kūttu' dance

*[ஊர் + ஆளி ]*

ஊர் மக்களை விழாக் காலங்களில் மகிழ்விப்பதற்காக ஊராளி யால் நடத்தப்படும் வரிக்கூத்து

**ஊரான்** *ūrāṉ,* பெ. (n) ***ஊர்க்காரன்;*** inhabitant of a village or town

**ம.** ஊரான்.

*[ஊர் + அவன் - ஊரவன் → ஊரான்.]*

**ஊரி**[1] *ūri,* பெ. (n) 1. ***புல்லுருவி;*** species of Loranthus. "உயர்மர முளைத்த வூரிபோல" (கல்லா.38). 2. ***சங்கு*** (அக நி.), conch 3 ***மேகம்*** (அக.நி.); cloud. 4. ***இளமை;*** youth, juvenility (செ.அக.).

*[ஊர் → ஊரி.]*

**ஊரி**[2] *ūri,* பெ (n) 1. ***நத்தை வகை;*** a kind of a snail (Pond) 2. ***ஊர்ந்து செல்லும் உயிர் வகைகள்;*** reptile.

*[ஊர் → ஊரி ]*

**ஊரிடுவரிப்பாடு** *ūr-iḍu-varippāḍu,* பெ. (n.) ***சிற்றூரார் விதித்துக் கொண்ட நிலவரி*** (S I I iii 14); land cess assessed by the village (செ அக.).

*[ஊர் + இடு + வரி + பாடு ]*

**ஊரிருக்கை** *ūr-irukkai,* பெ (n) ***ஊரைச் சார்ந்த இடம்;*** land adjoining a village 'ஊரும் ஊரிருக்கையும்' (S.I I (iii)-19)

*[ஊர் + இருக்கை.]*

**ஊரிலி கம்பலை** *ūri-ili-kambalai,* பெ. (n) ***ஊர்க்கல கம்;*** village quarrel, tumult, civil disorder (W)

*[ஊர் → ஊரில் + கம்பலை ஊரில் → ஊரிலி எனத்திரிந்தது கொச்சைத்திரிபு.]*

**ஊரின்னிசை** *ūr-iṉṉišai,* பெ. (n) ***தலைவனூரை இன்னிசை வெண்பாக்களாற் சிறப்பிக்கும் சிற்றிலக் கிய வகை*** (இலக் வி 825); eulogistic poem describing the town of the hero in 50, 70, or 90 iṉṉišai-venbā verses.(செ அக )

*[ஊர் + இன்னிசை ]*

**ஊரு**[1]**-தல்** *ūru-,* 7 செ.கு வி (v i) ***நிலைகொள்ளுதல்;*** to set firm.

**க., து.** ஊரு

*[உல் → ஊல் → ஊர் → ஊரு. பார் → பாரு எனத்திரிந்தாற் போன்ற கொச்சை வழக்கு ஊல் → ஊன்று எனத்திரிவதே சொல் வளர்ச்சி மரபாயினும் மக்கள் பேச்சு வழக்கில் 'ஊரு' எனத்திரிந்தது ]*

**ஊரு**[2] *ūru,* பெ. (n) ***அச்சம்;*** fear. (ஆ.அக.).

*[உரு = அச்சம் உரு → ஊரு.]*

**ஊருகட்டி** *ūru-katti,* பெ. (n) ***ஊர்மன்றம் கூடுவதற்கு மரத்தைச் சுற்றி யமைக்குந் திண்ணை.*** (R T.), raised platform round a tree in a village, where the villagers asemble (செ அக )

*[ஊர் → ஊரு + கட்டி. ஊர்தல் - வளைதல், சுற்றுதல். கட்டி = கட்டப்பட்டது, திண்ணை.]*

**ஊருகால்** *ūru-kāl,* பெ. (n.) 1. ***நத்தை;*** snail. 2. ***சங்கு;*** conch (செ.அக.).

**ம.** ஊருகால்

[ஊர் → ஊரு → ஊருகு → ஊருகல் → ஊருகால் ஊருகால் = வளைந்த வடிவுடையது]

**ஊருடை** *ūrudai,* பெ (n) **உருடை** பார்க்க; see *urudai*

[உருள் → உருடை → ஊருடை]

**ஊருடையான்** *ūrudaiyāṉ,* பெ. (n) **ஊர்க்கணக்கன்;** village accountant who has the records of lands (வின்) (செ அக)

[ஊர் + உடையான்]

**ஊருணி** *ūr-uṇi,* பெ. (n.) **ஊராருண்ணு நீர்நிலை;** public drinking water tank in a village or town. "ஊருணி நீர் நிறைந்தற்றே" (குறள்.215) (செ.அக.).

[ஊர் + உணி உண்ணி → உணி]

**ஊருப்பு** *ūruppu,* பெ. (n.) **சோற்றுப்பு;** common salt (சா.அக).

[உவர் + உப்பு → உவருப்பு → ஊருப்பு]

**ஊருவாரக்கொடி** *ūruvāra-k-kodi,* பெ (n) **வெள்ளரி;** mottled melan (சித் அக.) (செ அக)

[உருவாரம் + கொடி - உருவாரக்கொடி → ஊருவாரக்கொடி.]

**ஊருவாள்** *ūruvāḷ,* பெ. (n) **ஒரு வகை வாள்;** a kind of sword

ம. ஊருவாள்

[ஒருகா உர + வாள் - உரவாள் → ஊரவாள் → ஊருவாள்]

**ஊரெட்டு** *ūr-eṭṭu,* பெ (n) **வரி வகை;** tax (SII ii,52) (செ அக)

[ஊர் + அட்டு - ஊரட்டு → ஊரெட்டு அட்டுதல் = கொடுத்தல்]

**ஊரெழுச்சி** *ūr-eḻucci,* பெ (n) 1 **ஊர் திரண்டெழுகை;** raising or gathering together of the citizens of a place, as for presenting complaints or making other representation to the authorities (J) 2. **ஊர்க்கலகம்;** riot, insurrection (W) (செ.அக.)

[ஊர் + எழுச்சி]

**ஊரெறி-தல்** *ūr-eṟi-,* 2 செ.கு வி. (v i) **ஊர்க் கொள்ளையிடுதல்** (இறை 1 பக் 18), to sack a village. (செ அக)

[ஊர் + எறி-தல்]

**ஊரெறிபறை** *ūr-eṟi-paṟai,* பெ. (n.) **பாலை நிலத்துப் பறை;** drum used to be beaten by people of the arid tracks in their plundering expeditions (இறை 1.பக் 18)

[ஊர் + எறி + பறை.]

**ஊரேறு** *ūrēṟu,* பெ. (n) 1 **ஊர்ப்பன்றி;** country pig, domesticated pig 2 **ஊர்க்காளை, பொலிகாளை;** bull (uncastrated)

[ஊர் + ஏறு.]

**ஊரை** *ūrai,* பெ. (n) **மலை நெல்** (நாமதீப); mountain paddy (செ அக.).

[தோரை → தூரை → ஊரை.]

**ஊல்[1]-தல்** *ūl-,* 13.செ.கு.வி. (v i) 1 **பொருந்துதல், நிலைகொள்ளல்;** to join, to set firm. 2. **முதிர்தல்;** to ripen

[உல் → ஊல்.]

**ஊல்[2]-தல்** *ūl-,* 13 செ.கு வி. (v.i) 1. **வேகுதல்;** to boil 2 **கெடுதல், அழிதல்;** to decay

[உல் → ஊல்]

**ஊழ்[1]-தல்** *ūḻ-,* 2 செ கு வி (vi) **முதிர்தல்;** to grow old "பெரும்பாம் பூழ்ந்து தோலுரிப்பன போல்" (சீவக 1560). (செ அக).

[உல் → ஊல் → ஊழ்.]

**ஊழ்[2]-த்தல்** *ūḻ-,* 2 செ கு வி. (v i) 1. **முதிர்தல்;** to grow old, pass the prime of life "காந்த ளூழ்த்துச் சொரிவபோல்" (சீவக 1742) 2 **உட்குலைதல், பதனழிதல்;** to decay, as flesh, as fruits, to become putrid, to be spoiled, to rot, to fade "அருவிதந்த பழம். . ஊழ்த்து" (மலைபடு 174,180) 3. **நாறுதல்** (பிங்.); to stink 4 **விரிதல், மலர்தல்;** to blossom "நனையூழ்த்த செருந்தி" (கலித் 26). (செ அக).

[ஊள → ஊழ் ஊழ்த்தல் (வே க 92)]

**ஊழ்[3]-த்தல்** *ūḻ-,* 2 செ குன்றாவி (v t) 1 **நினைத்தல்** (நாமதீப), to think 2 **மூடுதல்** (நாமதீப.), to cover 3 **சிந்துதல்** (நாமதீப), to spill (செ அக.).

[உல் → ஊல் → ஊழ்]

**ஊழ்[4]-த்தல்** *ūḻ-,* 2 செ கு வி (v i) **உதிர்தல்;** to fall off (நாநார்த்த)

[உல் → ஊல் → ஊழ்]

**ஊழ்[5]** *ūḻ,* பெ (n) 1. **பழமை;** that which is pristine, of long date "ஊழ்படு காதலானை" (சீவக 1452) 2. **பழவினை;** karma "ஊழிற் பெருவலி யாவுள" (குறள் 380) 3 **பழவினைப்பயன்;** fruit of karma, fruit of deeds committed in a former birth or births 4 **முறைமை;** rule, established usage, long standing custom "ஊழிற்றா கநின் செய்கை" (புறநா 29) 5 **குணம்;** disposition, temperament (திவா) 6 **முதிர்வு;** maturity, "பயம்புக் கூழுற் றலமரும்" (மலைபடு 133). 7 **முடிவு;** end, completion, termination "ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி" (மணி 30,118) 8 **மலர்ச்சி;** blossoming. "முதிரிணரூழ் கொண்ட . . வேங்கை" (கலித் 44-4). 9. **திருக்குறளின் ஓர் அதிகாரம்;** name of a chapter in Tirukkuṟaḷ (செ.அக.).

[உல் → ஊல் → ஊழ்]

**ஊழ்[6]** *ūḻ-,* பெ (n) 1 **வெம்மை;** heat, being angry. 2 **பகைமை;** hatred, enmity, malice (பிங்.). 3. **வெயில்;** sunshine. 4. **கதிரவன்;** Sun "பொங்கூ ழொளி நிகர் வெங்கை புரேசர்" (வெங்கைக்கோ.90). (செ.அக)

[உல் = சுடு, வெயில், கொதிப்பு. உல் → ஊல் → ஊழ்]

**ஊழ்கு-தல்** *ūḻku-,* 5 செ.குன்றாவி (vt) ***அடிமனம் ஒன்றித்தல், மனமொருங்கு குவிதல்;*** to meditate "புனிதன் பங்கய மூழ்கி" (கோயிற்பு பாயி 17) (செ அக )

*[உல் → உள் → உழு → ஊழ ]*

**ஊழ்த்தசை** *ūḻ-t-tašai,* பெ. (n) ***புலால்;*** flesh (பிங் ) (செ அக ).

*[உல் → ஊள் → ஊழ் + தசை ]*

**ஊழ்த்தல்**[1] *ūḻttal,* பெ (n) 1. ***இறைச்சி;*** flesh 2 ***முடைநாற்றம்;*** stench (பிங் ). 3 ***நிரையம்*** (நரகம்); hell (பிங் ) (செ அக.)

*[உல் → ஊள் → ஊழ் → ஊழ்த்தல் ]*

**ஊழ்த்தல்**[2] *ūḻttal,* பெ (n) ***முதிர் பருவம், விளை பருவம்*** (சூடா ); opportunity, seasonable time (செ.அக.).

*[உல் → ஊள் → ஊழ் ]*

**ஊழ்த்தனோய்** *ūḻttanōy,* பெ (n) ***ஆட்டின் ஈரல் நோய்;*** rot, fatal distemper of sheep (கால்.வி )

*[உல் → ஊள் → ஊழ் → உழத்தல் + நோய் ]*

**ஊழ்த்துணை** *ūḻ-t-tuṇai,* பெ (n) ***மனைவி;*** wife, as one's destined helpmate (W ) (செ அக.)

*[உல் → ஊள் → ஊழ் + துணை ]*

**ஊழ்பாடு** *ūḻ-pāḍu,* பெ (n) ***முடிவுபடுகை;*** coming to an end "நின்மிதி யின்றி யூழ் பாடின்றி" (மணி 30,37). (செ அக )

*[ஊழ் + பாடு படு → பாடு ]*

**ஊழ்முறை** *ūḻ-muṟai,* பெ (n) ***வினைப்பயன் முறை;*** order of experiences resulting from Karma in previous births (செ அக )

*[ஊழ + முறை ]*

**ஊழ்மை** *ūḻmai,* பெ (n) ***முறைமை;*** established rule, regulation "ஊழ்மையிற் கண்ணபிரான் கழல் வாழ்த்துமின்" (திவ் திருவாய் 4,6,9) (செ அக )

*[ஊழ் → ஊழ்மை ]*

**ஊழ்வலி** *ūḻvali,* பெ (n) 1 ***முதிர்ந்த நோய், பழைய வலி;*** long standing or chronic pain 2 ***முன்வினை வன்மை;*** inevitability of Karma or the result of actions in the previous birth (சா அக )

*[ஊழ் + வலி ]*

**ஊழ்வினை** *ūḻ-viṉai,* பெ (n) 1 ***பழவினை;*** deed done by a soul in former birth, considered as the cause of the present life with all its fortunes "யாரே யூழ்வினை தீர்க்கிற்பார்" (இரகு தேனு 35) 2 ***உழுவலன்பு;*** attachment continued from birth to birth "இஃதூழ்வினையா லுள்ளஞ்சுடு மாலென்ன" (சீவக 1670) (செ அக )

*[ஊழ் + வினை ]*

**ஊழ்வினைப்பயன்** *ūḻ-viṉai-p-payaṉ,* பெ (n) ***கரும பலன்;*** fruit of deeds in previous births (செ.அக.).

*[ஊழ் + வினை + பயன் ]*

**ஊழகம்** *ūḻagam,* பெ (n) ***விடியற்காலை;*** dawn, morning twilight (சா அக )

*[ஊழ் → ஊழகம்.]*

**ஊழம்**[1] *ūḻam,* பெ (n) ***வைகறை;*** dawn (யாழ்.அக.)

*[ஊழ் → ஊழம் ஊழ்தல் = முதிர்தல், விடிதல் ]*

**ஊழம்**[2] *ūḻam,* பெ. (n) 1 ***முறை, தவணை, நேரம்;*** time, turn 2. ***சேவை, பணி;*** service turn (of duty) 3 ***பட்டறிவு;*** experience

ம. ஊழம்

*[ஊழ் → ஊழம் ]*

**ஊழல்**[1] *ūḻal,* பெ (n) ***அறநெறிக்கும் சட்டத்திற்கும் புறம்பான செய்கைகள்;*** malpractice, moral turpitude, corruption

*[ஊழ் + அல் (எ ம.இ.நி ) - ஊழல் = முறையற்றது ]*

**ஊழல்**[2] *ūḻal,* பெ (n) 1 ***அருவருக்கத்தக்கது, அளறு, சேறு முதலியன;*** dirt, mud, mire, that which is putrid, nasty as excrement (W ) 2 ***நிரையம்;*** hell (சூடா ) 3 ***கெட்டது;*** that which is decayed, spoiled, bad in quality 4 ***தாறுமாறு;*** slovenliness ஊழற்குடித்தனம் (செ அக ) 5 ***குலைவு;*** degradation 6 ***உலைவு;*** deterioration 7 ***நாற்றம்;*** stench 8 ***கேடு;*** impairment 9 ***பாடு;*** trauma 10. ***தளர்ச்சி, தளர்ந்த தசை;*** depravity, weariness

ம. ஊழல், தெ. ஊம்பி

*[ஊள் → ஊழ → ஊழல் அல் = தொ பெ ா று ஊழ்த்தல் - கெடுதல் ]*

**ஊழல் நாற்றம்** *ūḻal-nāṟṟam,* பெ. (n) ***கெட்ட வீச்சு;*** putrified or rotten smell, a term usually used for rancid ghee (சா அக )

*[ஊழல் + நாற்றம் ]*

**ஊழல் நாறி** *ūḻal-nāṟi,* பெ. (n) 1 ***மாதவிடாய்ப் பெண்;*** woman in her menses 2. ***நாற்ற வுடம்புள்ள பெண்;*** woman with a stinking body (சா.அக ).

*[ஊழ் → ஊழல் + நாறி நாறு → நாறி ]*

**ஊழல் மூக்கு** *ūḻal-mūkku,* பெ. (n) ***தொடர்ந்து சளி வடியும் மூக்கு;*** running nose, the free discharge of a thin nasal mucous - Rhinorrhea (சா அக )

*[ஊழல் + மூக்கு ]*

**ஊழலி[1]-த்தல்** *ūḻali-,* 4 செ கு வி (vi) 1. ***பதனழிதல்;*** to become spoiled 2 ***மெலிதல்;*** to break down, as the constitution by disease, to grow thin ஊழலித்த நண்டு. 3 ***சோர்தல்;*** to be dispirited ஊழலித்த மனம். (இ வ )

*[ஊழ் → ஊழல் → ஊழலி-த்தல் ]*

**ஊழலி²-த்தல்** *ūlali-*, 4 செ குன்றாவி. (vt) ***அருவருத்தல்;*** to loathe, to be disgusted with. (செ அக.).

*[ஊழ் → ஊழலி ]*

**ஊழலிப்பு** *ūlalippu*, பெ (n) ***பதனழிவு;*** the state of being rotton, putrefaction. (சா.அக )

*[ஊழல் → ஊழலிப்பு.]*

**ஊழலுடம்பு** *ūlaludambu*, பெ (n) 1. ***நாற்ற வுடம்பு;*** stikning body 2 *அழுக்கு நிறைந்த வுடம்பு;* body full of filth 3 *பருத்துத் தளர்ந்த உடம்பு;* fat and slack body hanging loose for want of firmness, a body with sluggish muscles (சா அக )

*[ஊழ் → ஊழல் + உடம்பு ]*

**ஊழற்சதை** *ūlar-šadai* பெ (n) 1 ***உடம்பு பருத்துத் தளர்வதனால் தொங்கும் தசை;*** flesh hanging loose owing to flabby nature 2 *புன் புலால்;* proud flesh 3. *நாற்றமுள்ள தசை;* rotten flesh. 4. ***ஊழற்றசை*** பார்க்க; see *ūlarrašai.*

*[ஊழல் + சதை. தசை → சதை (இலக்கணப்போலி) ]*

**ஊழறுத்தல்** *ūlaruttal*, பெ (n) 1 *வினைப்பயனை நீக்குதல்;* renunciation of Karma 2 *உடம்பிலுள்ள மாசுகளை அகற்றல்;* removing filth and obnoxious matter from the system 3 *புண்புலால் சீழ் முதலியவை களைப் புண்புரைகளினின்று வெளிப்படுத்தல்;* removal of purulent and putrid matter from an ulcer, abscess, etc.

*[ஊழ் + அறுத்தல் ]*

**ஊழறுதல்** *ūlarudal* பெ (n) 1 ***ஊழ்வினைப்பயன் நீங்குதல்;*** liberation from karma 2 ***உடம்பினின்று அழிந்த நாற்றமுள்ள பொருள்கள் அகலல்;*** (In medicine) discharge of foul matter from the body (சா அக)

*[ஊழ் + அறுதல் ]*

**ஊழனாற்றம்** *ūlanārram*, பெ. (n) ***தீநாற்றம்;*** offensive odour மோர் ஊழனாற்றமடிக்கிறது (செ அக.).

*[ஊழல் + நாற்றம்.]*

**ஊழனிலம்** *ūlanilam*, பெ. (n) ***சேற்று நிலம்;*** miry, muddy land (செ.அக.)

ம ஊழனிலம்.

*[ஊழல் + நிலம்.]*

**ஊழான்** *ūlān*, பெ. (n) 1. ***வெட்டுக்கிளி;*** grasshopper 2 ***மண்புழு;*** earthworm (சேரநா.).

ம. ஊழான்

*[உழு → உழான் → ஊழான் ]*

**ஊழி** *ūli*, பெ. (n) 1. ***கடற்கோளால் உலகம் முடியுங் காலம்;*** time of universal deluge and destruction of all things, end of the world (சீவக.1157). 2 ***உகம்;*** aeon. "பண்டை யூழியிற் பாங்மலி யுற்றதே" (சீவக.2581). 3 ***நெடுங்காலம்;*** very long time "ஊழிவாழ் கென்று" (பு வெ 8,7) 4. ***வாழ்நாள்;*** life-time "அன்ன வாக நின்னூழி" (புறநா 135). 5 ***உலகம்;*** world. "ஊழியேழான வொருவா போற்றி" (தேவா.1160,8). 6. முறை; fate "நல்லூழிச் செல்வம் போல்" (கலித் 130) 7 *முறைமை;* regular order "தீந்தேனூழி வாய்சுகொண்ட தொகுமபாடலும்" (சீவக 2974) 8 ***கேடு, அழிவு;*** destruction (செ அக )

ம. ஊழி

*[ஊழ் → ஊழி ]*

**ஊழிக்காய்ச்சல்** *ūli-k-kāyccal*, பெ. (n) ***ஊரையே பற்றி நிற்கும் தொற்றுக்காய்ச்சல்;*** epidemic fever, pestilence, an acute infectious epidemic fever or disease spreading throughout vast area (செ அக ).

*[ஊழ் → ஊழி + காய்ச்சல் ]*

**ஊழிக்காரம்** *ūli-k-kāram*, பெ (n) ***இதளியம்*** (இரசம்); mercury - Hydrargyrum (சா அக )

*[ஊழி + காரம் ]*

**ஊழிக்கால்** *ūli-k-kāl*, பெ. (n) ***ஊழிக்காற்று*** பார்க்க; see *ūli-k-kārru* "ஊழிக்காலு மாற்றலா திரியல் போன" (கந்தபு.கடல்பாய் 3). (செ அக )

*[ஊழ் → ஊழி + கால் ]*

**ஊழிக்காலம்** *ūli-k-kālam*, பெ (n) ***உலகத்தின் எல்லை.*** (சீவக 274,உரை ). end of the ages (செ அக )

*[ஊழ் → ஊழி + காலம் ]*

**ஊழிக்காற்று** *ūli-k-kārru*, பெ. (n) 1. ***உலக முடிவிலுண் டாகுங் காற்று;*** destructive wind that prevails at the end of the world 2 ***நச்சுக்காற்று;*** poisonous vapour that causes epidemic diseases and pestilence (W ) (செ அக )

*[ஊழ் → ஊழி + காற்று ]*

**ஊழித்தீ** *ūli-t-tī*, பெ. (n.) 1. ***வடவைத்தீ*** (பிங்.); submarine fire 2 ***கொடுந்தீ;*** destructive fire 3. ***காட்டுத்தீ;*** wild fire

*[ஊழி + தீ ]*

**ஊழிநாள்** *ūli-nāl*, பெ. (n) ***உலக முடிவு நாள்;*** period of termination of earthy life (ஆ அக )

*[ஊழி + நாள் ]*

**ஊழிநோய்** *ūli-nōy*, பெ. (n) ***தொற்றுநோய்;*** pestilence, supposed to be induced by a malignant demon (W), (செ.அக )

*[ஊழ் → ஊழி + நோய் ]*

**ஊழிமுதல்வன்** *ūli-mudalvan*, பெ. (n) ***கடவுள்;*** God, He who is eternal. "ஊழிமுதல்வன் உருவம் போல்" (திவ்.திருப்பா.4) (செ.அக.).

*[ஊழ் → ஊழி + முதல்வன்.]*

**ஊழியக்காரன்** *ūḻiya-k-kāraṉ*, பெ (n) 1. ***அடியான்;*** slave 2 ***வேலைக்காரன்;*** servant, a drudge "விரி கருவியாறாறு மிவனேவறலை கொண்ட வீறூழியக்காரர்" (திருப்போ சந் பிள்ளை.அம் புலி.6), (செ.அக.).

ம. ஊழியக்காரன்

*[ஊழியம் + காரன்.]*

**ஊழியம்**[1] *ūḻiyam*, பெ (n) 1 ***தொண்டு;*** service due to a deity, a guru, or a superior by birth, natural obligation, obligation of a slave to his master "மங்கையர்க் கூழியஞ் செய்வது" (திருப்பு.548). 2 ***சிறைப்பட்டோர் செய்யும் வேலை;*** duty of convict labour (செ அக ). 3. ***தொழில்;*** business 4 ***அரசுப்பணி, படைப்பணி;*** govt or military service

ம. ஊழியம, க. ஊழிகெ, தெ. ஊடிகமு

*[உழு → உழ → உழை → ஊழை → ஊழையம் → ஊழியம் (சு வி 47).]*

**ஊழியம்**[2] *ūḻiyam*, பெ (n) ***கூலி;*** wage (Rt) (செ.அக.).

*[உழு → உழ → உழை → ஊழை → ஊழையம் → ஊழியம் ]*

**ஊழியமறியல்** *ūḻiya-maṟiyal*, பெ (n) ***கடுங்காவல்;*** rigorous imprisonment (J) (செ.அக.)

*[ஊழியம் + மறி + அல் ]*

**ஊழியமானியம்** *ūḻiya-māṉiyam*, பெ. (n) ***பொதுமக்கள் சேவைக்காகக் கொடையாக விடப்பட்டநிலம்*** (RT), land granted rent-free for the performance of public service (செ அக.)

ம. ஊழியமானியம்

*[ஊழியம் + மானியம் ]*

**ஊழியன்** *ūḻiyaṉ*, பெ (n) 1 ***ஊழியம் செய்பவன்;*** employee, worker 2 ***பணியாள், வேலைக்காரன்;*** servant

ம. ஊழியன்

*[ஊழ் → ஊழியம் → ஊழியன். ஊழ் = முற்றுதல், செய்தல்.]*

**ஊழியான்** *ūḻiyāṉ*, பெ (n) 1 ***நெடுங்கால வாழ்க்கையுடையோன்;*** one who lives long life "ஊழியா ரெளிதினிற் கரசுதந் துதவுவார" (கம்பரா நட்புக் கோ 4) 2 ***அழிவுக் காலத்தும் அழியாமலிருக்குங் கடவுள்*** (தேவா 270 5), God, one who will survive final destruction of the world (செ அக )

*[ஊழி → ஊழியான்.]*

**ஊழில்** *ūḻil*, பெ. (n.) ***அருவருப்புறு சேறு*** (பிங்.); filthy mire. (செ.அக.).

*[ஊழ் → ஊழில். (வே.க.92).]*

**ஊழிலை** *ūḻ-ilai*, பெ (n) ***இலைச்சருகு;*** dead, dry leaves "கோடை தூற்றக் கூடிய வூழிலை" (ஞானா 28,12) (செ.அக )

*[ஊழ் + இலை ]*

**ஊழுறு-தல்** *ūḻ-uṟu-*, 4 செ குன்றாவி (vt) ***குடைதல்;*** to scoop out "காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்." (சிலப் 6,137,அரும் ), (செ அக.).

*[ஊழ் + உறுதல் ]*

**ஊழூழிக்காலம்** *ūḻūḻi-k-kālam*, பெ (n) 1 ***நெடுங்காலம்;*** duration without end, eternity 2 ***நீடூழிக் காலம்;*** longest period imaginable (சா அக )

*[ஊழ் + ஊழி + காலம் - ஊழூழிக்காலம் ]*

**ஊழை** *ūḻai*, பெ (n) ***பித்தம்*** (பிங் ); bile

*[ஊழ் → ஊழை.]*

**ஊழைக்காய்ச்சல்** *ūḻai-k-kāyccal*, பெ. (n) ***பித்தக்காய்ச்சல்;*** fever arising from the deranged condition of the bile, billious fever (சா.அக.)

*[ஊழை + காய்ச்சல்.]*

**ஊழைக்குருத்து** *ūḻai-k-kuruttu*, பெ (n) ***துளசி*** (பச் மூ ), sacred basil (செ.அக )

*[உழை → ஊழை + குருத்து ]*

**ஊளல்** *ūḷal*, பெ. (n) ***உள்ளான்மீன்*** பார்க்க; see *uḷḷāṉ mīṉ*

*[உள்ளான் → உள்ளன் → உள்ளல் → ஊளல்.]*

**ஊளன்** *ūḷaṉ*, பெ. (n) 1. ***நரி*** (பிங் ); jackal, fox (செ அக ) 2 ***விரகன்*** (தந்திரக்காரன்), cunning man, trickster (சேரநா )

ம. ஊளன, க. ஊள், ஊளு (ஊளையிடுதல்). தெ. ஊல (ஊளையிடுதல்)

*[ஊள் → ஊளை → ஊளன் ]*

**ஊளா** *ūḷā*, பெ (n) ***நெடுவாய் மீன்;*** carnivorous marine fish, dark leaden colour-Sphyraena acutipinnies (செ அக )

ம. ஊளாவு

*[ஊள் → ஊளவு → ஊளா.]*

**ஊளான்** *ūḷāṉ*, பெ. (n) 1. ***கடல் மீன் வகை;*** sea-bream, greyish silvery fish. (செ.அக.). 2. ***நரி;*** jackal. (ஆ.அக.).

*[ஊள் → ஊளான்.]*



ஊளான மீன

**ஊளி**[1] *ūḷi*, பெ (n) 1 ***இரைச்சல்*** (பரிபா 7,4,4), sound 2 ***பசி;*** hunger "ஊளி பெயழலுக முணட ஓணே" (திவ் திருவாய் 7,4,4 பன்னீ ) (செ அக )

ம. ஊளி, க. ஊள, ஊளவெ, கோத. ஒளாட, தெ. ஊல, ஊன, பிரா. ஊலிக. (ஊளையிடுதல)

*[உல் → உலி → ஒலி உல் → உலி → ஊலி → ஊளி ]*

**ஊளி**[2] *ūḷi*, பெ (n) ***ஊளா மீன்;*** carnivourous marine fish (யாழ் அக )

*[ஊளா → ஊளி ]*

**ஊளை**[1] *ūḷai*, பெ (n) ***நாய், நரி முதலியவை இடும் கூக்குரல்;*** howl of a dog or jackal, bleat of a sheep when diseased, cry of a person in anguish, applied contemptuously "ஊளைப் பெருநரி வெவ்விய ஊளை " (தணிகைப்பு களவு 617)

ம. ஒளி, க. ஊள, தெ. ஊள

*[உல் → ஊல் → ஊள் → ஊளை ]*

**ஊளை**[2] *ūḷai*, பெ (n) ***தீ நாற்றம்;*** offensive smell ஊளைமோர் (செ அக )

*[ஊள் → ஊளை ]*

**ஊளை**[3] *ūḷai*, பெ (n) 1 ***தொள்வு, தொய்வு;*** weariness, exhaustion 2 ***உலைவு;*** wandering 3 ***பதனழிவு;*** rottenness 4 ***பதனழிந்த மோர்;*** spoiled buttermilk 5 ***காதுச்சீழ்;*** purulent or mucopurulent of ear

*[உள் → ஊள் → ஊ... (வே க 92) ]*

**ஊளைக்காது** *ūḷai-k-kādu*, பெ (n) ***சீழ்வடியுங்காது;*** purulent or mucopurulent discharge from the ear, Otorrhoea (செ அக.).

*[ஊளை + காது ]*

**ஊளைச்சதை** *ūḷai-c-cadai*, பெ. (n) ***ஊழற்சதை*** பார்க்க; see *ūḻar-šadai.*

*[ஊளை + சதை. தசை → சதை.]*

**ஊளைமூக்கன்** *ūḷai-mūkkan*, பெ (n) ***சளி வடியும் மூக்கன்;*** snotty fellow

*[ஊளை + மூக்கன் ]*

**ஊளைமூக்கு** *ūḷai-mūkku*, பெ (n) ***சளிபிடித்த மூக்கு;*** running nose (செ அக )

*[ஊளை + மூக்கு ]*

**ஊளையிடு-தல்** *ūḷai-y-idu-*, 20 செ கு வி (v t) ***நாய் நரி முதலியவை கூக்குரலிடுதல்;*** to howl as jackal or dog "முதிர்நரிக ளூளையிடின்" (சூத எக்கி பூ 46,20). (செ அக )

பட. ஊவலிகு, க. ஊளிடு

*[ஊளை + இடு ]*

**ஊற்காரம்** *ūrkāram*, பெ (n) ***கக்கலெடுத்தல்*** (நாமதீப), vomitting (செ அக )

*[ஊக்காளம் → ஊககாரம → ஊறகாரம (கொ வ ) ]*

**ஊற்றக்காரன்** *ūṟṟa-k-kāran*, பெ (n) 1 ***வலிமை பொருந்தியவன்;*** strong and arrogant man 2 ***தந்திரக் காரன்;*** clever man 3 ***செல்வந்தன்;*** wealthy man (சேரநா )

ம. ஊறறககாரன

*[ஊறறம் + காரன ]*

**ஊற்றங்கால்** *ūṟṟan-gāl*, பெ (n) ***வயல் முதலியவைக ளில் நீர் வடியுங்கால்;*** water channel in fields (ஆ அக )

*[ஊற்று → ஊறறம் + கால ]*

**ஊற்றங்கோல்** *ūṟṟan-gōl*, பெ (n) ***ஊன்றுகோல்;*** staff to lean on "ஒல்லையுயிர்க் கூற்றங்கோலாகி" (சிறு பஞ் 57) (செ அக )

*[ஊன்று → ஊன்றம் + கோல் - ஊன்றம்கோல் → ஊற்றங்கோல் ]*

**ஊற்றப்பம்** *ūṟṟappam*, பெ (n) ***ஒருவகை ஆப்பம்;*** a kind of cake

ம. ஊறறபபம்

*[ஊற்று + அப்பம். மொத்தமாக அல்லது பருமனாக வார்த்த அப்பம ]*

**ஊற்றம்**[1] *ūṟṟam*, பெ (n) 1 ***பற்றுக்கோடு;*** walking stick, crutch, prop "உண்முதற் பொருட்கெலா மூற்ற மாவன" (கம்பரா.கிளை 74) 2 ***உறுதியாயிருக்கை;*** stability, immobility 3 ***வலிமை;*** strength, power "ஊற்ற முடையாய்" (திவ் திருப்பா 21) 4 ***மனவெழுச்சி;*** ardour, eagerness "ஊற்றமொடு பறித்தார்" (சேதுபு திருநா 42). 5. ***மேம்பாடு;*** greatness, eminence 6. ***பழக்கம்;*** training, practice "படையூற்றமிலன்" (கம்பரா.கையடை.12) (செ அக ).

ம. ஊற்றம; க. ஊத, து. உத (கனம்), தெ. ஊத, ஊதமு.

*[ஊன்று → ஊற்றம் (வே க.91).]*

**ஊற்றம்**[2] *ūṟṟam,* பெ. (n.) 1. ***இடையூறு;*** hindrance. "மெல்லடியா ரொடு மூற்ற மஞ்சா" (திருவிளை.திருமணப்.34). 2. ***கேடு;*** harm, injury "மேல் வருமூற்ற முணர் கில்லாய்" (கந்தபு.மார்க்.248) 3. ***தொடு உணர்வு;*** sensation of touch. "தழுவுவா ரூற்றங் காணாள்" (திருவிளை.திருமணப் 131). (செ.அக.).

*[ஊறு → ஊற்றம் ]*

**ஊற்றருகி** *ūṟṟarugi,* பெ. (n) ***நீர்*** (சங்.அக.); water (செ.அக.).

*[ஊற்று + அருகி.]*

**ஊற்றல்** *ūṟṟal,* பெ. (n.) 1. ***ஊற்றுதல்;*** the act of pouring 2. ***நீர் முதலிய ஊறி வருதல்*** (ஆ.அக.); welling up or oozing water etc. as from spring

*[ஊற்று → ஊற்றல் ]*

**ஊற்றவாக்கு** *ūṟṟavākku,* பெ. (n.) ***பெருமை சொல்லு தல், தற்புகழ்ச்சி;*** boasting, braggadocio

ம. ஊற்றவாக்கு.

*[உறு → ஊற்று → ஊற்ற + வாக்கு உறு = மிகுதி ]*

**ஊற்றறிவு** *ūṟṟaṟivu,* பெ (n.) ***தொடுவுணர்ச்சி;*** sense of touch. (சா.அக.).

*[ஊற்று + அறிவு. உற்றறிவு → ஊற்றறிவு.]*

**ஊற்றன்** *ūṟṟaṉ,* பெ. (n) ***ஊற்றமுள்ளவன், வலிமையன்;*** mighty one. (சேரநா.).

ம. ஊற்றன்.

*[ஊற்றம் → ஊற்றன்.]*

**ஊற்றாணி** *ūṟṟāṇi,* பெ. (n.) ***கலப்பையுறுப்பி னொன்று;*** nail which fastens the plough-beam to the plough. "கலப்பை யூற்றாணி யுளதாயி னுலகுநிலை குலையாதே" (ஏரெழு.5).

**ஊட்டாணி** பார்க்க; see *ūṭṭāṇi*

*[ஊட்டு + ஆணி - ஊட்டாணி → ஊற்றாணி (கொ.வ.).]*

கலப்பையில் கா என்னும் இரும்புப்பட்டை செருகுதற்கு இடும் கொண்டி,ஊட்டாணி எனப்படும். இதனை ஊற்றாணி என ஆண்டிருப்பது கொச்சை வழக்கு.

**ஊற்றாம்பெட்டி** *ūṟṟām-petti,* பெ (n) 1. ***ஊற்றுப் பெட்டி*** பார்க்க; see *ūṟṟu-p-petti.* 2. ***சிறுநீர் ஊறும் பை;*** urinary bladder

*[ஊற்று + ஆம் + பெட்டி.]*

**ஊற்றால்** *ūṟṟāl,* பெ. (n) 1. ***மீன்பறி;*** wicker basket for catching fish (W.) 2. ***கோழிக்குஞ்சுகளை யடைக் குங் கூடை;*** wicker basket for covering chickens (W.). 3. ***உருள்.*** (உரோகிணி) (பிங்.); 4th nakṣatra, whose shape resembles a fish basket net.

*[உறு → உற்று → உற்றால் → ஊற்றால் ]*

**ஊற்றால்கவி-த்தல்** *ūṟṟāl-kavi-,* 4.செ.கு.வி. (v.i.) ***மீன் பிடிக்கப் பறியை மூடுதல்;*** to set a wicker basket for catching fish (W ). (செ.அக.).

*[ஊற்று + ஆல் + கவி.]*

**ஊற்றிரு-த்தல்** *ūṟṟiru-,* 3.செ.கு.வி. (v.i) ***தொழும்பு கொண்டிருத்தல்;*** to be devoted "இத்தலை ஊற்றிருக்க வேணும்" (ஈடு). (செ அக.).

*[ஊற்று + இரு.]*

**ஊற்றிறை-த்தல்** *ūṟṟiṟai-,* 4. செ.கு.வி. (v.i) ***ஊற்றிலுள்ள நீரை யிறைத்துத் தூய நீர் ஊறச் செய்தல்;*** to scoop and throw out the water of a spring in the bed of a river until it becomes pure. (செ.அக.).

*[ஊற்று + இறை.]*

**ஊற்றின எண்ணெய்** *ūṟṟiṉa-eṇṇey,* பெ (n) ***ஆமணக் கெண்ணெய்;*** castor-oil obtained by boiling the seeds, dist fr ஆட்டின எண்ணெய், which is cold-drawn. (செ.அக ).

**கைபிழி எண்ணெய்** பார்க்க; see *kaipiḷi eṇṇey.*

*[ஊற்று → ஊற்றின + எண்ணெய்.]*

**ஊற்று**[1]**-தல்** *ūṟṟu-,* 5.செ குன்றாவி (v.t) 1. ***வார்த்தல்;*** to pour out, cause to flow, spill "ஒழிவுறக் கடத்தினீ ரூற்றி" (சேதுபு.கந்தமா.87) 2. ***எண்ணெய் வடித்தல்;*** to extract, as oil from the castor seeds by boiling them. கொட்டை முத்தினின்று எண்ணெய் ஊற்றுவார்கள். 3. ***வெளியே விடுதல்;*** to pour out, cast away as useless, empty or clean as a vessel of its contents. "கங்கை புடை யூற்றுஞ் சடையான்" (கம்பரா.கையிடை.12). (செ.அக.).

ம. ஊத்து.

*[ஊறு → ஊற்று → ஊற்று-தல் (வே.க 91).]*

**ஊற்று**[2] *ūṟṟu,* பெ (n) 1. ***சுரக்கை;*** flowing, gushing forth, as blood from an artery, milk from the udder, pouring of rut from a must elephant. "ஊற்றிருந்த மும்மதத் தோடையானை" (சீவக 152). 2. ***நீரூற்று;*** spring, fountain "வல்லூற் றுவரில் கிணற்றின்கண்" (நாலடி.263). 3. ***கசிவு;*** moisture oozing from the ground. "ஊற்றுடை நெடுவரை" (சீவக.278). (செ.அக.).

நா. ஊற், கொண். ஊசா; கூ. உற்ப; ம. ஊற்று; தெ. ஊட; கொலா. ஊர் (ஒழுகும் வீடு); து. ஊடி, உ, க. ஊடெ, ஒரதே, ஒரவு; துட. ஊற்.

*[ஊறு → ஊற்று.]*

**ஊற்று**[3] *ūṟṟu,* பெ. (n.) 1. ***ஊன்றுகோல்;*** staff. 2. ***பற்றுக்கோடு;*** prop, support "உடம்புயிர்க் கூற்றாக." (கலித்.146). (செ.அக.).

*[ஊன்று → ஊற்று.]*

**ஊற்றுக்கண்**[1] *ūṟṟu-k-kaṇ*, பெ. (n.) ***ஊற்றுத்துறை;*** orifice of a spring. (செ.அக.).

*[ஊறு → ஊற்று + கண். கண் = இடம், துளை.]*

**ஊற்றுக்கண்**[2] *ūṟṟu-k-kaṇ*, பெ. (n) ***கண்களினின்று எப்போதும் நீர் வடிந்து கொண்டிருக்கும் மாட்டு நோய் வகை*** (பெரியமாட்.15); disease in cattle, in which water flows from the eyes (செ.அக.).

*[ஊறு → ஊற்று + கண்.]*

**ஊற்றுக்களம்** *ūṟṟu-k-kaḷam*, பெ. (n) ***பலரும் வந்து சேர்தலையுடைய இடம்;*** common meeting place "கதழ்விடைக் காரியை யூற்றுக் களத்தே யடங்கக் கொண்டு" (கலித் 103)

*[ஊன்று + களம் - ஊன்றுகளம் → ஊற்றுக்களம்.]*

**ஊற்றுக்கால்** *ūṟṟu-k-kāl*, பெ. (n.) ***ஊற்றினின்று பெருகி வருங்கால்;*** channel for irrigation issuing from a spring. (C.G)

*[ஊறு → ஊற்று + கால்.]*

**ஊற்றுக்குழி** *ūṟṟu-k-kuḻi*, பெ. (n) 1. ***ஊற்றுள்ள பள்ளம்;*** spring pool (W) (செ அக.) 2. ***ஒரூர்;*** name of a village (ஆ.அக )

ம. உறுறுக்குழி.

*[ஊறு → ஊற்று + குழி.]*

**ஊற்றுக்கோல்** *ūṟṟu-k-kōl*, பெ. (n) ***ஊன்றுகோல்;*** staff "இழுக்கலுடையுழி யூற்றுக் கோலற்றே" (குறள் 415). (செ.அக )

*[ஊன்று + கோல் - ஊன்றுகோல் → ஊற்றுக்கோல்.]*

**ஊற்றுண்(ணு)-தல்** *ūṟṟuṇ-*, 12 செ.கு.வி (vi) 1. ***நீர் ஒழுகி வடிதல்;*** to leak out. (W ).(செ.அக ) 2. ***சாதல்;*** to die (ஆ.அக ).

*[ஊற்று + உண்.]*

**ஊற்றுத்துலை** *ūṟṟu-t-tulai*, பெ. (n) ***நீர்நிலை;*** reservoir. (pond ).(செ.அக )

*[ஊறு → ஊற்று + துலை ]*

**ஊற்றுத்தோண்டு-தல்** *ūṟṟu-t-tōṇḍu-*, 5.செ.கு.வி. (vi) ***ஊற்றுண்டாகத் தோண்டுதல்;*** to scoop out the sand for a spring in the bed of a river, dig out a spring in the bottom of a well. (செ.அக.).

*[ஊற்று + தோண்டு.]*

**ஊற்றுநீர்** *ūṟṟu-nīr*, பெ. (n) ***ஊறுநீர்;*** inflowing water from a spring. "இறைப்பவர்க் கூற்றுநீர் போல மிகும்." (குறள் 1161). (செ அக ).

*[ஊறு → ஊற்று + நீர்.]*

**ஊற்றுப்பட்டை** *ūṟṟu-p-paṭṭai*, பெ. (n) ***ஊற்றுநீரிறைக் கும்பட்டை;*** scoop for throwing out water from artificial springs in river beds.

*[ஊறு → ஊற்று + பட்டை.]*

**ஊற்றுப்பறி** *ūṟṟu-p-paṟi*, பெ. (n) ***மடு முதலியவற்றில் மீன் பிடிக்குங் கருவி;*** wicker basket for catching fish in tanks and ponds (செ அக )

*[ஊற்று + பறி.]*

**ஊற்றுப்பூ** *ūṟṟu-p-pū*, பெ. (n) ***தேங்காய்ப் பிண்ணாக்கு*** (யாழ்ப்.); residuum of the kernel of the coconut after the oil has been expressed therefrom, dist fr. பிழிந்த பூ. (செ.அக.).

*[ஊறு → ஊற்று + பூ ]*

**ஊற்றுப்பெட்டி** *ūṟṟu-p-peṭṭi*, பெ. (n) ***எண்ணெயூற்றுங் கூடை;*** basket in which seeds, kernals, etc, are put for expressing oil (J).(செ.அக.).

*[ஊற்று + பெட்டி ]*

**ஊற்றுப்பெயர்-தல்** *ūṟṟu-p-peyar-*, 2.செ.கு.வி. (v.i) ***ஊற்றுண்டாதல்;*** to flow from a spring, as water into a well (W).(செ அக.).

*[ஊற்று + பெயர்.]*

**ஊற்றுப்போடு-தல்** *ūṟṟu-p-pōḍu-*, 20.செ கு.வி. (vi) ***ஆற்றில் ஊற்றுக் குழி தோண்டுதல்;*** to scoop out a hollow for fresh water in the bed of a river.(செ.அக.).

*[ஊற்று + போடு ]*

**ஊற்றுமரம்** *ūṟṟu-maram*, பெ. (n.) 1. ***எண்ணெயூற்றும் மரம்;*** a kind of oil-press 2. ***செக்குலக்கை;*** cylindrical shaft in an oil-press. (செ.அக.).

*[ஊற்று + மரம்.]*

**ஊற்றெடு-த்தல்** *ūṟṟeḍu-*, 4.செ கு வி (vi) 1. ***ஊற்றுத் தோன்றுதல்;*** to flow from a spring, as water into a well. 2 ***ஊற்றுத்தோண்டுதல்;*** to scoop out a spring (செ அக.).

*[ஊற்று + எடு-த்தல்.]*

**ஊற்றெண்ணெய்** *ūṟṟeṇṇey*, பெ. (n) ***வடித்த எண் ணெய்;*** oil extracted by pressing or pounding the seeds (வின்.) (செ.அக.).

*[ஊற்று + எண்ணெய் ]*

**ஊற்றெழு-தல்** *ūṟṟeḻu-*, 2.செ.கு.வி. (v.i.) ***ஊற்றுப்பெயர்*** பார்க்க; see *ūṟṟu-p-peyar.* "ஊற்றெழு மிருகவுள்" (கல்லா 4.).(செ.அக.).

*[ஊற்று + எழு.]*

**ஊற்றை** *ūṟṟai*, பெ. (n.) ***அழுக்கு;*** filth "ஊற்றைச் சடலத்தை யுண்டென் றிறுமாந்து" (பட்டினத்துப். பக்.257).(செ.அக.).

*[ஊழ் → ஊழ்த்தை → ஊத்தை → ஊற்றை (கொ.வ.).]*

**ஊறணி** *ūṟaṇi*, பெ. (n) 1. ***ஊற்று*** (யாழ்.அக.); spring. 2. ***கசிவு நிலம்*** (யாழ் அக.); good, moist land where water oozes out 3. ***சேற்றுநிலம்*** (சங்.அக.); wet marshy

land. 4. *வருவாய்* (சங்.அக.); income, source of income. (செ.அக.).

*[ஊறு + அணி - ஊறணி]*

**ஊறல்**[1] *ūṟal,* பெ (n) 1. *ஊறுகை;* oozing, percolation, discharge ஊறற் கடுதாசி. 2. *நீரூற்று;* small spring, spring water "சிற்றூறல் ஒண்ணீரு மாகி விடும்" (வாக் குண்.12) 3. *சாறு;* juice, extracted by squeezing "கரும்பினூறல் கண்டாய் கலந்தார்க்கவன்" (தேவா 369,1) 4 *மருந்தின் சாரம்;* tincture, infusion. (வின்.) 5. *மாழைக்கலப்பு* (வின்.); faint mixture of an inferior metal with a more precious one. 6. *வருவாய், செல்வம்;* income, acquisition, property. 7. *களிம்பு* (வின்); slight amount of verdigris. 8. *நீர்வற்றாப் பசுமை* (வின்), greenness, moisture, as of a vegetable (செ.அக.)

ம. ஊறல்.

*[ஊறு → ஊறல்]*

**ஊறல்**[2] *ūṟal,* பெ (n.) *கிணறு;* well (Pudu Insc 1094). (செ.அக.).

*[ஊறு → ஊறல்.]*

**ஊறல்**[3] *ūṟal,* பெ. (n) *சாராயம் காய்ச்சுதற்காகப் பானையிலிட்டு ஊற வைக்கும் பொருள்கள்.* ingredients of arrack before distillation

*[ஊறு → ஊறல்]*

**ஊறல்சாரல்** *ūṟal-šāral,* பெ (n) *ஒரு வயலின் வரப்பிலிருந்து உள்ளூறிப் பக்கத்து வயலில் கசிந்து வரும் ஊறல்நீர்;* water oozing through embankment of fields

*[ஊறு → ஊறல் + சாரல்.]*

**ஊறல் தெறித்தல்** *ūṟal-teṟittal,* பெ (n) 1 *களிம்பற்றுப் போதல்;* being deprived of rust or verdigris 2. *உடம்பின் தினவு அல்லது நமைச்சல் நீங்குதல்;* to be cured of itching sensation (சா அக).

*[ஊறு → ஊறல + தெறித்தல்]*

**ஊறல்பாறை** *ūṟal-pāṟai,* பெ. (n.) *படிவியற் படுகைப் பாறை;* sedimentary rock. (சேரநா.)

ம. ஊறல்பாற.

*[ஊறல் + பாறை]*

**ஊறல் மண்** *ūṟal maṇ,* பெ (n) *வண்டலாகப் படிந்த மண்;* sedimentary soil (சேரநா)

ம. ஊறல் மண்ணு.

*[ஊறு → ஊறல் + மண்]*

**ஊறவை-த்தல்** *ūṟa-vai-,* 4.செ.குன்றாவி. (v.t.) *நீரிற் பதம் பெறச் செய்தல்;* to steep, soak, pickle. (செ.அக).

*[ஊறு → ஊற + வை.]*

**ஊறற்பதம்** *ūṟaṟ-padam,* பெ. (n.) 1. *பச்சைப் பதம்;* anything softened with moisture or by soaking 2. *முழுதும் ஊறிய பதம்;* condition in which anything is completly soaked (சா.அக.).

*[ஊறல் + பதம்.]*

**ஊறற்பாக்கு** *ūṟaṟ-pākku,* பெ. (n.) *நீரில் ஊறிய பாக்கு;* areca nut soaked to render it fit for use. (செ.அக.).

*[ஊறல் + பாக்கு.]*

**ஊறாமை** *ūṟāmai,* பெ. (n.) *கசியாமை;* not oozing as blood from sores or ulcers (சா.அக.).

*[ஊறு + ஆ + மை.'ஆ' (எ.ம இ.நி.).]*

**ஊறு**[1]**-தல்** *ūṟu-,* 5.செ.கு.வி. (v.i) 1. *நீரூறுதல்;* (குறள்.396); to spring, flow, as water in a well, to issue 2. *கசிதல்;* to ooze, percolate (W.) 3. *ஊறுகாய்ப் பதமாதல்;* to soak, to be steeped, pickled 4. *பால் முதலியன சுரத்தல்;* to gather, as milk in the breast, as toddy in palm flowers 5 *மை முதலியன ஊறுதல்;* to run, to spread, as ink on flimsy paper, to keep, as moisture around a spring or in a river bank. 6. *காயத்தில் ஊன் வளர்தல்* (வின்); to form, as new flesh in a sore, to heal 7 *மெலிந்தவுடல் தேறுதல்;* to increase, as flesh in a person wasted by disease, to improve by slow degrees 8. *பெருகுதல்;* to increase அவனுக்குச் செல்வம் ஊறுகிறது. 9. *வாயூறுதல்;* to water, as the mouth. "கனிகாண்டொறு மூறுமேயெயினூறுமே" (சூளா சுயம் 66). (செ.அக.).

ம. ஊறுக. க., து. ஊறு. தெ. ஊறு.

*[உல் → உறு → ஊறு உறுதல் = மிகுதல், அதிகரித்தல்]*

**ஊறு**[2] *ūṟu,* பெ. (n) 1. *உறுகை;* joining, approaching. "பருந்தூறளப்ப" (பதிற்றுப்.51 32). 2. *தொடு உணர்வு;* sense of touch "சுவையொளி யூறோசை" (குறள்.27). 3. *இடையூறு* (திவா.); obstacle, hindrance, obstruction. 4 *துன்பம்;* evil, blight. "ஊறுசெய் நெஞ்சம்" (நாலடி.379) 5 *கொலை;* killing, murder "ஊறுதான் செயக் கூடுறாது" (கந்தபு சூரனமைச்.115) 6. *அழிவு;* ruin, destruction "இருவினைக் கூறு காண்கிலாது" (கம்பரா. வாலிவதைப்.22). 7. *உடம்பு;* body "அரவூறு சுலாய்." (திவ் திருவாய் 7,4,2). 8. *புண்;* scar, wound, hurt, injury inflicted by violence "ஊறறியா மெய் யாக்கை யொடு" (புறநா 167,6). 9. *வல்லூறு;* royal falcon. "பறவையை யூறுகொண்டெழச் சிரற்றின பார்ப்பினில்" (கம்பரா.கும்ப.268) (செ அக.).

ம. ஊறு

*[உறு → ஊறு.]*

**ஊறுகறி** *ūṟu-kaṟi,* பெ. (n.) *ஊறுகாய்* (பெரும்பாண். 310,உரை.) பார்க்க; see *ūṟugāy.*

*[ஊறு + கறி. கறி = காய்கறி]*

**ஊறுகாய்** *ūṟu-gāy,* பெ. (n.) ***உப்பிட்டு ஊறவைத்த காய்*** (பதார்த்த.1378); pickled vegetable or fruit (செ.அக.).

ம. ஊறுகாய்; தெ. ஊருகாய; க. உப்பினகாயி.

*[ஊறு + காய்.]*

**ஊறுகோள்** *ūṟu-kōḷ,* பெ. (n) 1. ***காயம்;*** injury, wound. 2. ***கொலை;*** murder. (செ.அக.).

*[உறு → ஊறு + கோள். ஊறு = துன்பம். கொள் → கோள் (நேர்ச்சி.).]*

**ஊறுதல்** *ūṟudal,* பெ. (n.) 1. ***நீர்க்கசிவு;*** oozing of water as from a boil or a wound 2. ***தண்ணீரில் போட்டு வைத்தல்;*** to retain steeped in any fluid as is done to greens in pickless 3 ***புண்ணில் தசை வளர்தல்;*** formation of a new layer of flesh over a healing wound 4. ***மெலிந்த உடம்பில் அரத்தம் சேருதல்;*** increase of blood in a convalascent's body 5. ***சதை பிடித்தல்;*** picking up or putting on flesh. 7. ***பெருகுதல்;*** increasing

*[உறு → ஊறு → ஊறுதல்.]*

**ஊறுநீர்** *ūṟunīr,* பெ. (n) 1. ***புண்ணிலிருந்து கசியும் நீர்;*** thin serous fluid oozing from a sore or from a wound - Ichor. 2. ***நிலத்தில் ஊறும் நீர்;*** water springing from earth. 3. ***உமிழ்நீர்;*** saliva.

*[ஊறு + நீர்.]*

**ஊறுபாடு** *ūṟubāḍu,* பெ. (n.) 1. ***தாக்குதல்;*** beating, butting 2. ***ஆயுதங்களாற் காயமுண்டாக்குகை*** (பிங்.); wounding of which there are four methods viz குத்தல், வெட்டல், எய்தல், எறிதல். 3. ***புண்படுதல்;*** having wound 4. ***புண்;*** wound, sore 5. ***துன்பம்;*** trouble, distress. "ஊறுபாடில்லை யுயிர்க்கு" (குறள்.945). 6. ***இடையூறு;*** obstacle, obstruction, hindrance "மரலை தாழகலத் தூறு பாடற வந்தரத் தளிகவர்ந் துண்ப" (திருவிளை.தருமிக்.56).

*[உறு → ஊறு + பாடு.]*

**ஊறுபுண்** *ūṟu-puṇ,* பெ. (n.) ***ஆறிவரும் புண்*** (வின்.); wound that is healing (செ.அக.).

*[ஊறு + புண். ஊறுதல் = மேலிடல், நலமாதல்.]*

**ஊறெண்ணெய்** *ūṟenney,* பெ. (n.) ***உச்சியிலூறு மெண்ணெய்;*** oil placed upon the head for purposes of health (திவ் திருப்பா.17, வ்யா.பக்.164) (செ.அக.).

*[ஊறு + எண்ணெய்.]*

**ஊறை** *ūṟai,* பெ. (n) ***சவ்வரிசி*** (L.); sago fern palm. (செ.அக.).

*[உறை → ஊறை.]*

**ஊன்**[1] *ūṉ,* பெ. (n) 1. ***தசை;*** flesh, muscle. "ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து" (தேவா.29,1). 2. ***உண் ணும் இறைச்சி;*** meat, animal food. "ஊனமுதம் விருப்புற்று" (திருவாச.15,3). 3. ***உடல்;*** body "ஊனைக் குறித்த வுயிரெல்லாம்" (குறள்.1013). (செ.அக.).

ம. ஊன்; க. ஊறு, ஊக்கு (எயிர்); கோத. ஊ (எயிர்); துட. ஊர்; தெ. ஊகுரு; குவி. ஊயு.

*[உல் → ஊல் → ஊன். உல் = பொருந்தியிருப்பது, பற்றியிருப்பது. உல் → ஊல் = எலும்பைப் பற்றியிருப்பது. ஊல் → ஊன். ஒ.நோ: ஊன்றுதல் = பற்றுதல், நிலைகொள்ளுதல்.]*

**ஊன்**[2] *ūṉ,* பெ. (n.) ***புலால் வெட்டும் அடிக்கட்டை, அடிக் குறடு;*** block of wood on which butchers mince meat

*[ஊண் → ஊன் (ஆகுபெயர்) இது ஊனம் என்றும் வழங்கும்.]*

**ஊன்**[3] *ūṉ,* பெ. (n) ***நீ*** (முன்னிலை யொருமைப் பெயர்); you

*[ஊ → ஊன். ஊ - முன்மைச்சுட்டு, னகரமெய் ஒருமை குறித்த ஈறு.]*

ஊன், ஊம் என்னும் முன்னிலைப் பெயர்கள், நூன், நூம் என்று நகர மெய்ம் முதல் பெற்று, பின்னர் நீன், நீம் எனத் திரிந்தன

நூன், நூம் என்பன, வட திரவிடத்துள் ஒருவகையான சூரசேனிப் பிராகிருதத்தில் தூன், தூம் என்று திரிந்து இன்று அதன் வழிப்பட்ட இந்தியில் தூ, தும் என்று வழங்குகின்றன.

தூ (நீ) என்னும் இந்தி வடிவமே இயல்பாகவும் குறுகியும் மேலையாரிய மொழிகளில் வழங்குகின்றன.

*OE, OS* thu; *OHG* dū, *ON* thu, *Goth,* thu, *E* thou

**ஊன்கணார்** *ūṉ-kaṇār,* பெ. (n) ***மானிடர்;*** men who have the physical eye only. "கழனி யாக்கமு மூன்கணார்க் குரைப்பரிது" (சீவக.54). (செ.அக.).

*[ஊன் + கண் + ஆர். கண்ணார் → கணார்.]*

**ஊன்செய்கோட்டம்** *ūṉ-cey-kōṭṭam,* பெ. (n.) ***உடல்;*** body as a structure formed of flesh. "ஊன்செய் கோட்டக்கு..... வள்ளுரமே சுமந்து.... புறஞ்செய்கின் றார்." (சீவக.1552). (செ.அக.).

*[ஊன் + செய் + கோட்டம்.]*

**ஊன்தள்ளல்** *ūṉ-taḷḷal,* பெ. (n) ***ஊன்றள்ளல்*** பார்க்க; see *ūṉṟallal.*

**ஊன்வலி** *ūṉvali,* பெ. (n.) ***உடம்பின் வலிமை*** (நீலகேசி.486,உரைமேற்கோள்); bodily vigour. (செ.அக.).

*[ஊன் + வலி.]*

**ஊன்விலைஞர்** *ūṉ-vilaiñar,* பெ. (n.) ***ஊன்விற்போர்*** (திவா.); meat sellers. (செ அக.).

*[ஊன் + விலைஞர்.]*

**ஊன்றக்கட்டு-தல்** *ūṉṟa-k-kaṭṭu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***வலிமைபடுத்துதல்;*** to edify, strengthen. 2. ***புண்கா யம் முதலியவற்றை உறுதியாய்க் கட்டுதல்;*** to

bandage firmly as is done to wound, injury, fracture etc. (சா.அக.)

*[ஊன்று → ஊன்ற + கட்டு.]*

**ஊன்றள்ளு-தல்** *ūṉṟallu-*, 15.செ கு.வி. (vi) 1. ***ஊன் வளர்தல்;*** to be formed as proud flesh 2. ***புலாலுண் டலை விலக்குதல்*** (வின்.); to abstain from meat (செ அக.).

*[ஊன் + தள்ளு-தல்.]*

**ஊன்றி** *ūṉṟi*, பெ (n.) ***பாம்பு வகை*** (அக.நி.); a kind of snake (செ.அக.).

*[ஊன்று → ஊன்றி.]*

**ஊன்றிக்கேள்(ட்)-த(ட)ல்** *ūṉṟi-k-kēl-*, 11.செ.குன்றாவி. (vt) 1 ***அழுத்தி வினாவுதல்;*** to interrogate with attention, press for an answer 2 ***உற்றுக்கேட்டல்;*** to hear attentively (செ அக.).

*[ஊன்று → ஊன்றி + கேள்.]*

**ஊன்றிக்கொள்(ளு)-தல்** *ūṉṟi-k-kol-*, 7.செ.குன்றாவி (vt) ***நிலை பெறுதல்;*** to gain a firm footing, as in an office, to establish oneself somewhere. (செ.அக.).

*[ஊன்று → ஊன்றி + கொள்.]*

**ஊன்றிச்சொல்(லு)-தல்** *ūṉṟi-c-col*, 8.செ குன்றாவி. (vt.) 1 ***தெளிவாய்ப் பேசுதல்;*** to speak distinctly, articulate. 2 ***உறுதியாய்ச் சொல்லுதல்;*** to speak emphatically, stress, assert.

*[ஊன்று → ஊன்றி + சொல்.]*

**ஊன்றித்தாங்கு-தல்** *ūṉṟi-t-tāṅgu-*, 5.செ.குன்றாவி. (vt) ***கோலை யூன்றித் தோணியைத் தள்ளுதல்*** (வின்), to press on the pole either in stopping or in pushing a boat (செ அக.)

*[ஊன்று → ஊன்றி + தாங்கு.]*

**ஊன்றிநட-த்தல்** *ūṉṟi-naḍa-*, 3.செ.கு.வி. (v.i.) 1. ***உறுதியாய் நடத்தல்;*** to walk firmly so as to quicken one's gait 2. ***காலைப் பதிய வைத்து நடத்தல்;*** to walk cautiously, as on slippery ground, or as one regaining the use of his legs. (செ.அக.).

*[ஊன்று → ஊன்றி + நட.]*

**ஊன்றிநில்(ற்)-த(ற)(ல்)** *ūṉṟi-nil-*, 14.செ.கு.வி. (v.i.) ***உறுதியாயிருத்தல்;*** to hold fast, as by an opinion, be firm காரியத்தில் ஊன்றி நிற்கிறான். (செ.அக.).

*[ஊன்று → ஊன்றி + நில்.]*

**ஊன்றிப்படி-த்தல்** *ūṉṟi-p-paḍi-*, 4.செ குன்றாவி. (v.t.) 1. ***கருத்தாய்ப் படித்தல்;*** to read attentively 2. ***நிறுத்தி வாசித்தல்*** (வின்.); to read with proper intonation or emphasis (செ.அக.).

*[ஊன்று → ஊன்றி + படி.]*

**ஊன்றிப்பாட்டம்** *ūṉṟi-p-pāṭṭam*, பெ. (n) ***ஓர் வரி வகை;*** old tax.

ம. ஊன்னிப்பாட்டம்.

*[ஊன்று → ஊன்றி + பாட்டம்]*

**ஊன்றிப்பார்-த்தல்** *ūṉṟi-p-pār-*, 4.செ குன்றாவி. (vt) 1 ***உற்று நோக்குதல்;*** to look at steadfastly or intently 2. ***ஆராய்ந்து பார்த்தல்;*** to consider carefully, fix the mind intently upon 3 ***அழுத்திப் பார்த்தல்;*** to feel, try, press, in order to test, as a fruit

*[ஊன்று → ஊன்றி + பார்.]*

**ஊன்றிப்பெய்-தல்** *ūṉṟi-p-pey-*, 1.செ.கு.வி. (v.i.) ***விடாமல் ஓங்கிப் பெய்தல்;*** to pour incessantly, as rain மழையூன்றிப் பெய்கின்றது. (செ.அக).

*[ஊன்று → ஊன்றி + பெய்.]*

**ஊன்று¹-தல்** *ūṉṟu-*, 5.செ.கு.வி. (vi) 1. ***நிலைபெறு தல்;*** to be fixed, settled, gain a firm footing, become established, strike root "கற்பினிற் றிரித லின்றி யூன்றுக." (சீவக 604). 2. ***சென்று தங்குதல்;*** to stop in a place. "புகை... விசும்பி னூன்றுஞ் சூளை" (புறநா 228,3).

*[உல் → ஊல் + று - ஊன்று.]*

**ஊன்று²-தல்** *ūṉṟu-*, 5.செ குன்றாவி. (vt) 1. ***அழுந்த வைத்தல்;*** to fix, place firmly, as a pole in fixing a boat. "முன்னொரு கோலூன்றி" (திவ்.பெரியதி. 1,3,2). 2. ***பள்ளத்தில் அல்லது குழியில் நடுதல்;*** to plant, set firmly in the ground, as a post "காலூன்றிய கவிகிடுகின்" (பட்டினப் 167). 3 ***நிலைநிறுத்துதல்;*** to establish, as fame, position "புதையம்பிற் பட்டுப்பா டூன்றுங் களிறு" (குறள்.597). 4 ***துணையாகப் பற்று தல்;*** to lean upon, recline or depend on, as a staff, a person. "கைதருவார் தமையூன்றி" (பெரியபு.திருநாவு. 61). 5. ***தாங்குதல்;*** to support "துன்பந் துடைத் தூன்றுந் தூண்" (குறள்.615). 6. ***தீர்மானித்தல்;*** to determine, decide. "ஊன்றியில் விரண்டினுள்ளு முறுதிநீ யுரைத்திடென்ன" (சீவக.1235). 7. ***அமுக்குதல்;*** to press down, bear down with pressure. "உடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றி" (பெரும்பாண்.200). 8. ***தள்ளுதல்*** (திவா.); to push, propel. 9. ***உறுத்துதல்;*** to hurt, to cause smarting, irritation "அல்லி யூன்றிடு மென்றஞ்சி யரவிந்தந் துறந்தாட்கு" (கம்பரா. நாடவி 42). 10. ***குத்துதல்;*** to drive in as a spear. "மருப்பதனா லூன்றிப் பிளந்திரு கூறுசெய்து" (கூர்மபு. அந்தசா.80).

ம. ஊன்னுக; க. ஊறு, ஊர்; கோத. ஊத்; துட. ஊன்; குட. ஊர்; து. ஊரணி, ஊன்துனி, ஊடுனி, ஊடபுனி, ஊண்டுனி; தெ. ஊட், ஊனு, ஊஞ்சு; கூ. உக; பர். உத்; கட. உண்டுப் குர். ஊத்னா.

*[உவல் (உவன்று) → ஊன்று.]*

**ஊன்று**[3] *ūṉṟu*, பெ. (n) *சார்பு;* prop, support "தனியோங் கார மூன்றற.... மேலுற்று நின்றது" (ஞானவா உத்தால கன்.41). (செ.அக.)

ம. ஊன்னு; க. ஊடு; து. ஊரு, ஊது; தெ. ஊக, ஊதமு

*[உவல் → உவன்று → ஊன்று.]*

**ஊன்றுகட்டு** *ūṉṟu-kaṭṭu*, பெ (n) *ஊன்றும்படி கட்டிய விறகு கட்டு;* bundle of firewood placed on end, when offered for sale "விறகு வெட்டி யூன்றுகட்டாக் கட்டி" (திருவாலவா 54 24) (செ அக )

*[உவல் → உவன்று → ஊன்று + கட்டு.]*

**ஊன்றுகாரன்** *ūṉṟukāraṉ*, பெ. (n) *படகோட்டி;* one who propels a boat with a pole.

ம. ஊன்னுகாரன்

*[ஊன்று + காரன். ஊன்று = ஊன்றும் துடுப்பு ]*

**ஊன்றுகால்** *ūṉṟu-kāl*, பெ. (n) *ஊன்றுகோல்* பார்க்க; see *ūṉṟukōl.*

ம. ஊன்னுகால்

**ஊன்றுகால் செடி** *ūṉṟu-kāl-šedi*, பெ (n.) *கழுதைத் தும்பை;* donkey toombay, Indian borage - Trichodesma Indicum alias Borago indica (சா அக.).

*[ஊன்று + கால் + செடி.]*

**ஊன்றுகோல்** *ūṉṟu-kōl*, பெ. (n) *பற்றுக்கோடு;* staff, walking stick, support, whether for body or mind. "ஊன்றுகோலெனக் காவதொன் றருளாய்" (தேவா. 1110,4)

ம. ஊன்னுகோல்; க. ஊறுகோலு, து. ஊறுகோலு; தெ. ஊதகோல.

*[உவல் → உவன்று → ஊன்று + கோல்.]*

**ஊன்றுவலை** *ūṉṟu-valai*, பெ. (n) *ஊன்று குச்சியுடன் சேர்த்துக் கட்டிய வலை;* a kind of fishing net tied to stakes

ம. ஊன்னிவல.

*[ஊன்று + வலை.]*

**ஊனக்கண்**[1] *ūṉa-k-kaṇ*, பெ. (n.) *கட்பொறி;* physical eye. opp.to ஞானக்கண். "ஊனக்க ணிரண்டு மூடி" (ஞானவா.சுக்கிர.37). (செ.அக.).

*[ஊன் + அ + கண்.]*

**ஊனக்கண்**[2] *ūṉa-k-kaṇ*, பெ. (n.) 1. *மெய்யறிவு;* soul's intellingence as being defective. "ஊனக்கண் பாசமுணரா பதியை" (சி.போ.9,1). (செ.அக.). 2. *பொட்டைக்கண்;* defective eye.

*[உல் → உலம் = கெடுதல், எரிதல், அழிதல். உலம் → ஊலம் → ஊனம். ஊன் = தானாக அழுகும் இயல்புடையது. ஊனம் + கண்.]*

**ஊனக்கால்** *ūṉa-k-kāl*, பெ. (n) 1. *குறைந்த கால்;* short leg, short distorted limb. 2. *பிறவி நொண்டி;* disabled leg; a deformity of the foot generally of a congenital origin - club-foot. (சா.அக ).

*[ஊனம் + கால்.]*

**ஊனகத்தண்டு** *ūṉaga-t-taṇḍu*, பெ. (n.) *கருவண்டு* (வின்.); black beetle. (செ அக.).

*[ஊன் + அகத்து + வண்டு ஊனில் அல்லது புண்ணில் மொய்க்கும் வண்டு ]*

**ஊனகாரகன்** *ūṉa-kāragaṉ*, பெ. (n.) *இழிதொழில் செய்விப்போன்;* one who causes vile actions to be done by others "ஊனமாயினகள் செய்யு மூனகாரகர்க ளேலும்" (திவ்.திருமாலை.41). (செ.அக.).

*[ஊனம் + காரகன் ]*

**ஊனஞ்சவ்வு** *ūṉañcavvu*, பெ. (n) *ஊன் வழியும் சவ்வு;* membrane secreting scrum - serous mebrane (சா.அக.).

*[ஊனம் + சவ்வு.]*

**ஊனப்படு-தல்** *ūṉa-p-paḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. *குற்றப்படுதல்;* to be hurt 2. *துன்பப் படுதல்;* to be grieved (சேரநா.).

ம. ஊனப்பெடுக

*[ஊனம் + படு.]*

**ஊனம்**[1] *ūṉam*, பெ. (n) 1. *குறைவு;* defect, deficiency, as of a member; flaw. "அந்நாளுறு சிலை தானூன முளது" (கம்பரா பரசுரா.25) 2. *குற்றம்;* fault "ஊன மில் காலன்றன்னை" (ஞானவா.சுக்கிர 32). 3 *பழி;* calumny, slander "கேள்வற் கூனமும் பரிவு மஞ்சி" (சீவக 1530) 4. *தீமை;* evil, injury "ஊனமாயினகள் செய்யும்" (திவ் திருமாலை.41). 5 *அழிவு;* destruction. "ஊனம்பி னுறவே வேண்டும்" (சி.சி.2,21). (செ.அக.).

ம. ஊன.

*[ஊன் → ஊனம்.]*

**ஊனம்**[2] *ūṉam*, பெ. (n.) 1. *ஊனமர்குறடு* பார்க்க; see ūṉamar-kuraḍu "ஊனத்தழித்த வானிணக் கொழுங் குறை" (பதிற்றுப்.21) (செ.அக.) 2 *ஊன்;* flesh 3. *கொழுப்பு;* fat. 4. *பிணம்* (பிங்.); corpse, carcass.

*[ஊன் → ஊனம். ஊன் வெட்டுதலால் மேற்புறம் சிதைவுற்ற அடிக்குறடு.]*

**ஊனம்**[3] *ūṉam*, பெ. (n.) *ஆந்தை;* owl. (செ.அக.).

*[ஊம் → ஊமம் → ஊனம் ]*

**ஊனம்**[4] *ūṉam*, பெ. (n.) *ஊனீர்* பார்க்க; see *ūṉīr.*

*[ஊன் → ஊனம்.]*

**ஊனமர்குறடு** *ūṉ-amar-kuṟaḍu,* பெ. (n.) ***இறைச்சி கொத்தும் பட்டடை மரம்*** (சீவக.2281); block of wood on which butchers mince meat (செ.அக.)

*[ஊன் + அமர் + குறடு.]*

**ஊனமா-தல்** *ūṉam-ā-,* 8.செ.குன்றாவி. (v.t) 1. ***நொண்டியாதல்;*** to be crippled. 2. ***பழுதுறல்;*** to be maimed. 3. ***அங்கம் பழுதாதல்;*** to be defective of any organ in the body. (சா.அக.).

*[ஊனம் + ஆ + தல்.]*

**ஊனவன்** *ūṉavaṉ,* பெ. (n.) ***மனிதன்;*** man, he who is in the flesh. "ஊனவருயிரி னோடும்" (தேவா.1050,5). (செ.அக.).

*[ஊன் + அவன்.]*

**ஊனவாளி** *ūṉavāḷi,* பெ. (n) ***குறைபாடுள்ளவன்;*** maimed or lame person. (சா.அக.).

*[ஊனம் + ஆளி ]*

**ஊனன்** *ūṉaṉ,* பெ. (n) 1. ***உடற்குறைபாடுள்ளவன்;*** one who is defective in some member, one who has a physical imperfection (செ.அக.) 2. ***முடவன்;*** lame person. 3. ***ஊனாங்கொடி;*** creeper-convol-vulus racemosus.

*[ஊனம் → ஊனன்.]*

**ஊனாம்பல்** *ūṉ-āmbal,* பெ. (n.) ***ஆம்பல் வகை*** (மூ.அக.); a kind of water lily (செ.அக.).

*[ஊன் + ஆம்பல்.]*

**ஊனாயம்**[1] *ūṉāyam,* பெ. (n.) ***பிழை*** (சங்.அக.); mistake. (செ.அக.).

*[ஊனம் → ஊனாயம்.]*

**ஊனாயம்**[2] *ūṉāyam,* பெ. (n.) ***விரகு*** (தந்திரம்) (வின்.); trick. (செ.அக.).

*[உன்னயம் → ஊனாயம்.]*

**ஊனான்** *ūṉāṉ,* பெ. (n.) 1. ***உன்னாயங் கொடி;*** elliptic leaved silver-weed. 2. ***பெருமுசுட்டை;*** (தைலவ. தைல.102); many-flowered bind weed.

*[உன்னாயம் → ஊனாயம் → ஊனான்.]*

**ஊனி** *ūṉi,* பெ. (n.) ***மாந்த உடம்பினன்;*** one who has corporeal existence "விரவ லாகா ஊனிகளா யுள்ளார்." (தேவா.982,10). (செ.அக.).

*[ஊன் + இ.]*

**ஊனின்பூடு** *ūṉiṉ-pūḍu,* பெ. (n.) ***சிறுபூளை;*** wooly caper -`Achyranthe lanata.

*[ஊன் + இன் + பூடு.]*

**ஊனீர்** *ūṉīr,* பெ. (n.) 1. ***தசையினின்று வடியும் நீர்;*** water oozing from flesh. 2. ***குருதியின் மேல் வடியும் நீர்;*** serum, a thin watery transparent liquid separated from blood - serum.

*[ஊன் + நீர்.]*

**ஊனுடம்பு** *ūṉuḍambu,* பெ. (n.) ***தசையினாலான வுடம்பு;*** body composed of flesh.

*[ஊன் + உடம்பு.]*

**ஊனுருக்கி** *ūṉ-urukki,* பெ. (n.) ***ஈளை நோய்;*** tuberculosis, consumption, as a wasting diease. (செ.அக.).

*[ஊன் + உருக்கி.]*

**ஊனேறி** *ūṉ-ēṟi,* பெ. (n.) ***கருப்பம்*** (சங்.அக.); embryo. (செ.அக.).

*[ஊன் + ஏறி.]*

**ஊனொட்டி** *ūṉoṭṭi,* பெ. (n.) 1. ***உடும்பு;*** iguana. 2. ***உடும்பிறைச்சி*** (சங்.அக.); flesh bengalensis. (செ.அக.)

*[ஊன் + ஒட்டி. உடம்பு ஒட்டிக்கொள்வது.]*

# எ

**எ**[1] **e, தமிழ் வண்ணமாலையில் ஏழாம் உயிரெழுத்தாகிய இதழ் குவியா முன்னண்ண உயிர்க்குறில்;** seventh letter and vowel of the Tamil alphabet, the half-close front lax unrounded vowel in Tamil.

*[இ → எ.]*

இகரச்சுட்டு வேர்முதலானபோது வேரடித்திரிபுகளால் பெற்ற திரிபு வடிவமே எகரம் இகரவேர்முதற்பொருள்களை எகர வேர்முதலும் பெறும். ஆ, ஈ, ஊ எனும் நெடில் முச்சுட்டுகளே அ, இ, உ எனும் குறில் முச்சுட்டுகளானவாறு ஏகார ஓகார நெடில்கள எகர ஒகரங்களாகக் குறுகவில்லை எகர ஒகரங்கள் ஏகார ஓகாரங்களாக நீட்சியும் பெறவில்லை இவற்றின் குறில்நெடில் தோற்றங்கள் ஒன்றற்கொன்று தொடர்பற்றவை இவற்றின் விளக்கம் சொற்பிறப்பு நெறிமுறைகளில் காண்க

அசையெழுத்துககாலத தொன்முது தமிழில் இரு உயிர்கருறில் இணைந்து நெட்டுயிர் வடிவம பெற்றதால ஏகார ஓகாரங்கள் இஅ(ஏ) எனவும் உஅ(ஓ) எனவும் எழுதப்பட்டன ஈரெழுத்துக்கு ஒருவடிவம் தந்து நெடிலாககியபின எகர ஒகரக் குறிலெழுத்தை எழுதுவதறகுத் தனியெழுத்து படைககாமல் ஏகார ஓகார நெட்டெழுத்தின் மேல் மெய்யெழுத்தைப்போல் புள்ளியிட்டுக குறிலாக்கினர். இதனாற்றான் தொலகாப்பியர்

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"
எகர ஒகரத் தியறகையு மற்றே" (தொல் எழுத்.15,16)

என நூறபா யாத்தார் என்க

**எ**[2] **e, ஏழென்னும் எண்ணின் குறி;** symbol for the number 7 in Tamil Arithmetic (செ அக.).

*[எ - தமிழ் எண்களில் ஏழுக்குரிய வரிவடிவம்.]*

**எ**[3] **e,** இடை (part.) **ஓர் அகவினா;** interrog. base of the interrg pron "எவன் கொல்யான்" (குறள் 1225). - பெ.எ. (pron adj ) ஒரு புறவினா; interrog prefix before a noun, meaning what, which எக்கொற்றன் (நன்.67.உரை.). (செ அக.)

ம., க., து., தெ., பட. எ.

*[ஆ → யா → ஏ → எ ]*

**எ**[4] **e,** பெ (n) **ஐம்பறவைகளுள் கோழியைக் குறிக்கும் எழுத்து.** (பிங்.): letter representing the cock, in pañja-patci.(astrol).(செ அக.)

*[சே → ஏ → எ. சே - உயிரினங்களுள் ஆண்பாற்குறித்த சொல். ஒ.நோ. சேய் = ஆண் குழந்தை.]*

**எஃகம்** *ekkam,* பெ (n) 1. **கூர்மை;** sharpness, pointedness "எஃகவேற் புங்கவன்" (கந்தபு அவைய 12). 2. **உருக்காய்தப் பொது.** (சூடா ); any weapon made of steel 3 **வாள்;** sword "எஃகம் புலியுறை கழிப்ப" (பதிற்றுப்.19). 4 **கைவேல்;** lance "புலவு வாயெஃகம்" (பெரும்பாண் 119) 5 **சக்கரம்.** (திவா.); discus 6 **எறியீட்டி.** (பிண்டிபாலம்), javelin 7. **வேல்.** (சூலம்.) (கம்பரா மந்தரை 11); trident. (செ.அக.).

ம. எக்கண்டம்.

*[எய் → எய்கு → எஃகு + அம் - எஃகம். 'அம்' சொல்லாக்க ஈறு, எஃகம் = தாக்கும் படைக்கலம், கூரிய முனையுடைய கருவி ]*

**எஃகல்** *ekkal,* பெ. (n.) 1. **நொய்தாக்கல்;** pulverizing. 2. **மேலே வாங்குதல்;** drawing upwards 3. **எதிர் தாக்குதல்;** opposing 4. **அவிழ்தல்;** loosening 5. **ஏறுதல்;** climbing

*[எஃகு → எஃகல் = தாக்குதல், வலிமை அழித்தல்.]*

**எஃகா-தல்** *ek-kā-,* 6.செ குன்றாவி. (vt) **உருக்காக மாறுதல்;** to turn into steel acierate.

*[எஃகு + ஆ ]*

**எஃகு**[1]**-தல்** *ekku-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1 **பன்னுதல்;** to pull with fingers, as cotton எஃகின பஞ்சு போல (பதிற்றுப் 55,14,உரை.) 2 **ஆராய்தல்;** to search for, as the true meaning of a passage, to sift, scrutinize வழுக் களைந்த எஃகிய இலக்கணங்களை (தொல் நூன் மரபு 1,உரை ). 3 **எட்டுதல்;** to reach up, stretch one self in reaching for a thing அவனை எஃகிப்பிடி. (உ வ.).

*[இழு → எழு → எழுகு → எஃகு.]*

**எஃகு**[2]**-தல்** *ekku-,* 7 செ கு வி. (v i ) 1. **நெகிழ்தல்;** to be yielding, pliable.(w ) 2 **அவிழ்தல்;** to become unfastened, unclasped, loosened 3. **வளைவு நிமிர்தல்;** to spring back, rebound, as a bent bow வளைந்த வில் எஃகிற்று (உ வ.) 4. **தாழ்ந் தெழும்புதல்;** to lift, carry, as a well sweep. துலா அதனைக் கொண்டெஃகிற்று 5. **ஏறுதல்** (திவா ), to climb, mount, get up 6 **உருகுதல்;** to melt 7 **வயிற்றுப் பக்கத்தை மேலெழும்பச் செய்தல்;** lift up the abdomen 8. **பஞ்சை மேலெழச் செய்தல்;** to draw the cotton up

ம. எகருக, க. எக்கு, எகரு, துட. பிடெக்; து. எக்கு, எககல் யுனி, தெ. எக்கு, எக்கின்க, எகரு எகயு, குவி. என்கலி; கூ. எகசி, எனகசி *Gael* lag, feeble, *A S* las, feeble, *Goth* lasivs, weak, *Ice* las, weakness, *E* less *Celt-w* lag, loose, *Gr* lagares, slack, *L* lacus, loose, *E* lag, slack, lak, loose

*[எலகு → எஃகு (வே க 20).]*

**எஃகு**[3] *ekku-,* பெ. (n ) 1 **கூர்மை;** edge, pointedness, keenness "ஒன்றுற்றக்கா லூராண்மை மற்றத னெஃகு" (குறள் 773). 2. **மதிநுட்பம்;** acuteness of intellect, mental acumen "இகலில ரெஃகுடையார் தம்முட்குழீஇ" (நாலடி 137). 3 **உருக்கு.** (சூடா ), steel 4 **போர்க்கருவி.** (பிங்.), weapon in general 5 **வேல்;** lance "எஃகொடு வாண்மாறுழக்கி" (பரிபா 10,109) (செ.அக )

*[என்கு → எஃகு.]*

**எஃகுகோல்** *ekku-kōl,* பெ. (n) ***பஞ்சு கொட்டும் வில்*** (வின்); bow for ginning cotton (செ.அக.).

*[எஃகு + கோல்.]*

**எஃகுச் செவி** *ekku-c-cevi,* பெ. (n) ***நுட்பமான செவிப்புலன்;*** acute hearing, sharp ears எஃகுச் செவியும் நுண்ணுணர்வு முடையார் (திருமுருகு 140,உரை.). (செ.அக.).

*[எஃகு + செவி.]*

**எஃகுபடு-தல்** *ekkupadu-,* 20.செ கு.வி (vi) ***இளகின நிலையை யடைதல்;*** to melt, to soften உருகக் காய்ச்சி யெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலையினையும் (சிலப்.15,210,உரை.).

*[எஃகு + படு]*

**எஃகுவெட்டிரும்பு** *ekku-vettirumbu,* பெ (n) ***ஒரு வகையான இரும்புளி*** (C.E.M.), cold chisel (செ.அக.).

*[எஃகு + வெட்டு + இரும்பு]*

**எஃகுறு-தல்** *ekkuru-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***அறுக்கப்படுதல்;*** to be sawn through. "எஃகுற்றிருவேறாகிய .. மாவினறுவடி" (அகநா 29). 2. ***பின்னப்படுதல்;*** to be pulled thinly with the fingers, as cotton "எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன" (அகநா.217).

*[எஃகு + உறு-தல்.]*

**எக்கச்சக்கம்** *ekka-c-cakkam,* பெ. (n.) 1. ***தாறுமாறு;*** confusion, muddle, disorder. எக்கச்சக்கமாய்ப் பேசுகிறார். 2 ***ஒழுங்கின்மை;*** unevenness, irregularity 3. ***இசகுபிசகு;*** fix, awkward, predicament எக்கச்சக்கமாய் அகப்பட்டுக் கொண்டான்.

**ம.** எக்கச்சக்கம்; **க.** எககசக்க, **து.** எக்கச்சக்க **தெ.** எகக சக்கெடு.

*[இழுக்கு → எக்கு + சக்கம் - எக்கச்சக்கம். சக்கம் - எதுகை குறித்த இணைமொழி]*

**எக்கடமை** *ekkadamai,* பெ (n) ***வரிவகை*** (புது. கல் 513); tax

*[ஏர் + கடமை - எக்கடமை]*

**எக்கண்டம்** *ekkandam,* பெ (n) 1. ***முழுக் கூறு;*** whole, not made up of parts or pieces, as a monolith உடல் எக்கண்டமாய் வீங்கி விட்டது (இ வ) 2 ***கண்ணோட்டமின்மை;*** unmindfulness, absence of courtesy, roughness, lack of consideration அவன் எக்கண்டம் பண்ணுகிறான் (இ வ). (செ அக)

*[ஒரு + கண்டம் - ஒருக்கண்டம் → ஒக்கண்டம் → எக்கண்டம் (முழுமையான ஒரே தொகுதி)]*

**எக்கண்டவலி** *ekkandavali,* பெ (n) ***உடம்பு முழுமையும் ஏற்படும் வலி;*** pain all over the body (சா.அக)

*[எக்கண்டம் + வலி]*

**எக்கண்ட வீக்கம்** *ekkandavīkkam,* பெ. (n) ***உடம்பு முழுமையும் பரவிய வீக்கம்;*** swelling extending all over the body (சா.அக.).

*[எக்கண்டம் + வீக்கம்]*

**எக்கம்**[1] *ekkam,* பெ (n) ***சுரையாழ்*** (ஏகதந்திரி) ***என்னும் இசைக் கருவி;*** one-stringed musical instrument. "தண்ணுமை எக்கம் மத்தளி தாழ்பீலி" (திவ்.பெரியாழ் 3,4,1). (செ அக)

*[ஒருக்கம் → ஒக்கம் → எக்கம்.]*

**எக்கம்**[2] *ekkam,* பெ. (n) 1 ***தாளம்*** (திவ்.திருப்பள்ளி. 9,வியா.பக் 41); cymbal 2. ***ஒருதலைப் பறை வகை*** (திவ்.பெரியாழ்.3,4,1,ஸ்வா.); a kind of single-headed drum.

*[ஒருக்கம் → ஒக்கம் → எக்கம்]*

**எக்கமத்தளி** *ekka-mattali,* பெ. (n) ***ஒரு வகை முழவு*** (திவ் பெரியாழ் 3,4,1,வியா); a kind of drum. (செ.அக.)

*[எக்கம் + மத்தளி.]*

**எக்கர்**[1] *ekkar,* பெ. (n) 1. ***இடுமணல்;*** sandy place, sand heaped up as by the waves "எக்கர் மணலினும் பலரே." (மலைபடு 556). 2 ***மணற்குன்று;*** sand hill. "மட்டறல் நல்யாற்று எக்கா ஏறி" (புறநா 177). 3. ***நுண்மணல்;*** fine sand

*[எக்கல் → எக்கர்]*

**எக்கர்**[2] *ekkar,* பெ. (n) ***வேளாண்கருவிகள்;*** agricultural implements, apparatus for ploughing (சேரநா)

**ம.** எக்கரு.

*[ஏர்க்கலம் → ஏக்கல் → எக்கர்]*

**எக்கர்**[3] *ekkar,* பெ. (n) 1 ***சொரிதல்;*** pouring 2 ***ஏறுதல்;*** climbing, ascending 3 ***குவிதல்;*** dumping, heaping

*[எக்கல் → எக்கர்]*

**எக்கர்**[4] *ekkar,* பெ (n) ***இறுமாப்புடையவர்;*** proud, haughty persons, "எக்கராம மண்கையருக்கு" (தேவா 859,11). (செ அக).

*[எக்கல் → எக்கர்]*

**எக்கர்**[5] *ekkar,* பெ (n) ***அவையல் கிளவி*** (பிங்.); vulgar expression or word not fit to be used in decent society (செ அக)

*[இடக்கர் → எக்கர் (கொ.வ.).]*

**எக்கரணம்** *ekkaranam,* பெ. (n) ***எருத்தின் உரப்பொலி;*** bellowing of a bull when about to attack another

*[எ → எக்கு → எக்கரணம் எ - ஒலிக்குறிப்பு]*

**எக்கல்** *ekkal,* பெ. (n.) 1. ***மணல்மேடு;*** sand hill "கடலெக் கலி னுண்மணலிற் பலர்" (திவ்.திருவாய்.4,1,4). 2. ***நெருக்கம்*** (பிங்.); closeness, denseness (செ.அக.).

ம. எக்கல்; தெ. எக்கலி (ஆற்றால் கொண்டு செல்லும் மணல்).

*[எ → எக்கு → எக்கல் = மேலெழும்புதல், உயர்தல், மேடாதல், உயரமாய்க் குவிந்த மணற்குன்று.]*

**எக்கல்** *ekkal,* பெ (n) 1 ***வயிற்றை மேலுக்கிழுத்தல்;*** drawing up of the stomach or of the belly, contracting the belly. 2. ***மேலுக்கேறச் செய்தல்;*** causing to rise up. 3. ***வற்றல்;*** contracting. (செ.அக.).

*[எ → எக்கு → எக்கல்.]*

**எக்கலாதேவி** *ekkalādēvi,* பெ. (n.) 1. ***ஒரு சிறு தெய்வம்;*** minor goddess (சரபேந்திர.குறவஞ்சி 55,13) 2. ***செவ்வாமணக்கு;*** red caster plant.

**எக்கழுத்தம்** *ekkaluttam,* பெ. (n.) ***இறுமாப்பு;*** pride; arrogance. (ஆ.அக.).

*[ஏ + கழுத்து + அம் - ஏக்கழுத்தம் → எக்கழுத்தம் (நிமிர்ந்த தலை, இறுமாப்பு).]*

**எக்கழுத்தல்** *ekkaluttal,* பெ. (n) ***எக்கழுத்தம்*** பார்க்க; (ஆ அக.); see *ekkaluttam.*

**எக்களி[1]-த்தல்** *ekkali-,* 4.செ.கு.வி. (v.i.) ***பெருகமகிழ் தல்;*** to be overjoyed. "எக்களித்து வாழ்கின்றேன் யான்" (அருட்பா.சிவநேச.78). (செ.அக.).

ம. எக்களிக்குக; க. எக்கு (முன்னங்காலால் நிற்றல்); து. எக்கல்யுனி (உடம்பை நீட்டுதல்); தெ. எக்கு; கூ. எகசி; குவி. என்கலி.

*[ஏ → எ + களித்தல். ஏ = உயர்வு, மிகுதி.]*

**எக்களி[2]-த்தல்** *ekkali-,* 4.செ.கு.வி. (v.i.) ***குமட்டுதல்;*** to nauseate, retch.

ம. எக்களிக்குக; க. அக்களிரு; தெ. அக்களின்சு; மால். அகெலெ.

*[ஒக்களி → ஏக்களி → எக்களி.]*

**எக்களிப்பு** *ekkalippu,* பெ. (n.) ***செருக்கோடு கூடிய மிகு மகிழ்ச்சி;*** excessive joy tinged with conceit. "எக்களிப் பாயவன் பக்கற் குரங்கிற்கு மென்னோ டெதிர்க்க லாச்சே." (இராமநா.உயுத்.31).

ம. எக்களிப்பு; க. அக்களிசு; தெ. வெக்கலமு (மிகுதி).

*[எக்களி → எக்களிப்பு.]*

**எக்காளம்[1]** *ekkālam,* பெ. (n.) 1. ***ஓர் இசைக்குழலாகிய ஊதுகருவி;*** trumpet, a kind of clarinet 2. ***தாளக்கருவி;*** a kind of cymbal.

ம. எக்காளம்; க. கெக்காளெ; தெ. கெக்காள.

*[ஏ + காளம் - ஏக்காளம் → எக்காளம். ஏ = உயர்வு, நீட்சி. ஏக்காளம் = நீண்டகாளம் என்னும் இசைக்குழல் 2. தாளம் = காய்ச்சி உருக்கிச் செய்த தாளம்.]*

**எக்காளம்[2]** *ekkālam,* பெ. (n.) 1. ***செருக்கு;*** pride. 2. ***இகழ்ச்சி;*** mockery.

*[எக்களிப்பு → எக்காளம்.]*

**எக்காளை** *ekkālai,* பெ. (n) ***வெண்கலக் கருவி*** (அபி.சிந் ); a kind of cymbal. (செ.அக ).

*[ஏ → எ + காளம் - எக்காளம் → எக்காளை. எக்காளம் - 2 பார்க்க, see ekkālam - 2]*

**எக்கி** *ekki,* பெ. (n) ***நீர் முதலியன பீச்சங் கருவி;*** syringe, squirt "நீரெக்கி யாவையும்" (பரிபா.19,12). (செ.அக ).

*[எஃகு → எக்கு → எக்கி.]*

**எக்கிடு-தல்** *ekkiḍu-,* 20.செ.கு.வி. (vi) ***தாராளமாகக் கொடுத்தல்;*** to be profuse or liberal, as in giving alms or presents.

*[ஏ → எக்கு + இடு - எக்கிடு = மிகுத்துக் கொடுத்தல்.]*

**எக்கு[1]-தல்** *ekku-,* 7.செ.கு.வி. (vi) 1. ***குவிதல்;*** to be heaped up, as sand on the shore. 2. ***மேலெழும்புதல்;*** to rise, go up. "எடுத்தவே யெக்கி" (பரிபா.16,45).

*[ஏ → எ → எக்கு.]*

**எக்கு[2]-தல்** *ekku-,* 5.செ.குன்றாவி. (vt.) 1. ***தாக்கி யூடுருவுதல்;*** to force through, as one's way in a crowd. "கூட்டத்தை எக்கிக் கொண்டு வந்துவிட்டான். 2. ***உள்ளிழுத்தல்;*** to contract the abdominal muscles, as beggars do to show hunger, as persons while dressing round the waist, as a cow in refusing to give milk. "எக்கும் வயிறு" (திருக்காளத்.4,31,110). 3. ***மேலே செல்ல விடுதல்;*** to squirt, throw up, as water. "நீரெக்குவோரும்" (பரிபா.11,57). 5. ***எட்டுதல்*** (வின்.); to stand on tip-toe. (செ.அக.).

ம. எக்குக; க. எக்கு, எகரு; துட. பிடெக்; து. எக்கு, எக்கல்யுணி; தெ. எக்கு, எக்கின்சு, எகுரு, எகயு, அக்கலின்சு; கூ. எகசி, என்கசி, குவி. என்கலி.

*[ஏ → எ → எக்கு. எக்குதல் = மேலெழும்புதல், பீறிட்டெழுதல், உயர்தல்.]*

**எக்குத்தக்கு** *ekku-t-takku,* பெ. (n.) ***எக்கச்சக்கம்;*** awkward predicament (Madr.). (செ.அக.).

*[இழுக்கு → எக்கு + தக்கு.]*

**எக்குத்தப்பு** *ekku-t-tappu,* பெ. (n.) ***எக்குத்தக்கு*** பார்க்க; see *ekku-t-takku.* (கொங்.வ.). (செ.அக.).

*[இழுக்கு → எக்கு + தப்பு.]*

**எக்கே** *ekkē,* இடை. (int.) ***வருத்தக் குறிப்பு;*** exclamation of sorrow. "எக்கே யிதுவென்" (திவ்.பெரியதி.10,8,8). (செ.அக.).

*[அக்கை → அக்கே → எக்கே (கொ.வ.) அம்மே, அன்னே என்றாற் போன்ற விளியிடைச்சொல்.]*

**எகத்தாளம்** *egattālam,* பெ. (n) *எகத்தாளி* பார்க்க; see *egattāli.*

க. எகதாள.

*[இகழ் → இகழ்த்தல் → இகழ்த்தாளம் → க. எகத்தாளம். → த. எகத்தாளம் ]*

**எகத்தாளி** *egattāli,* பெ. (n.) *எள்ளி நகையாடுதல்;* mockery, jest, ridicule

க. எகதாளி, எக்கதாளி; தெ. கெதாளி,

*[இகழ் → இகழ்தல் → இகழ்த்தல் → இகழ்த்தாளம் → இகழ்த்தாளி → எகத்தாளி ]*

**எகரம்** *egaram,* பெ. (n.) *ஏழாம் உயிர் எழுத்தாகிய 'எ';* seventh short vowel of Tamil alphabet.

*[எ + கரம். 'கரம்' எழுத்துச் சாரியை.]*

**எகனை** *eganai,* பெ. (n) 1. *எதுகை;* rhyme in Tamil. 2. *பொருத்தம்;* concord, harmony, agreement.

*[எதுகை → எகனை.]*

**எகனை மொகனை** *eganai-maganai,* பெ. (n.) *எதுகை, மோனை;* rhyme in Tamil. "எகனை மொகனையாப் பேசுகிறான்" (உ.வ.).

[எதுகை + மோனை - எதுகை மோனை - எதுகை ஒலிஇயைபு கருதி எகனை மொகனை எனத் திரிந்தது. (கொ வ ).]

**எகிர்** *egir,* பெ. (n.) *எயிறு;* gums. (கொ.வ.).

ம. எகிறு; தெ. இகறு, சிகுறு.

*[எயிறு → எகிர் ]*

**எகிர்க்கொழுப்பு** *egir-k-koluppu,* பெ. (n) *பல்லீற்றின் வீக்கம்;* swelling of the gums (செ.அக.).

*[எயிறு → எகிர் (கொ.வ.) + கொழுப்பு.]*

**எகிரு-தல்** *egiru-,* 3.செ.கு.வி. (v.i.) *துள்ளுதல்;* to cut capers; to leap; to bounce. "சிரசுதா னெகிரி... வீழ்ந்து" (கோவ.கதை.6).

தெ. எகுரு; க. எகரு.

*[எ → எக்கு + உறு - எக்குறு → எகுறு → எகிரு (கொ.வ.) ]*

**எகின்** *egin,* பெ. (n) 1. *அன்னம்* (ஆ.அக.); swan. "மடலவிழ் மரைமாட் டெகினென" (சிவப்.பிரபந். சோணசைல.5). 2. *கவரிமா* (சூடா.); yak. 3. *புளிமா* (சூடா ); Indian hog-palm. 4. *புளியமரம்* (சூடா.); tamarind. 5. *அழிஞ்சில்* (மூ.அ.); sage-leaved alangium. 6. *செம்மரம்* (மூ.அ.); marking-mut tree. (செ.அக.).

*[எழின் → எகின் உகின் → எகின்.]*

**எகினத்திலை** *eginattilai,* பெ. (n.) *புளியிலை;* leaf of the tamarind tree. (சா.அக.).

*[எகின் + அத்து + இலை. எகின் = புளி. 'அத்து' சாரியை.]*

**எகினம்**[1] *eginam,* பெ. (n.) *எகின்* பார்க்க; see *egin.*

*[உகின் → உகினம் → எகினம் (மு.தா.68).]*

**எகினம்**[2] *eginam,* பெ (n) 1 *நாய்;* dog (திவா ). 2. *நீர் நாய்* (சூடா.); otter (செ.அக.).

*[எயின் → எகின் → எகினம் எயின் = வேடன், வேட்டைநாய் ]*

**எகினன்** *eginan,* பெ (n) *நான்முகன்;* Brahmā, who rides on a swan "எகினனை யுதவிய கருமுகில்" (திருப்பு.609). (செ.அக.).

*[எகின் + அன்.]*

**எங்கண்** *e-ṅ-gan,* கு.வி.எ. (adv.) *எவ்விடம்;* which place "எங்கணேகுதி" (கந்தபு.பானுகோ.136).

*[எங்கு → எங்கண் ]*

**எங்கணும்** *e-ṅ-gan-um,* கு.வி.எ. (adv) *எங்கும்;* everywhere "உலக மெங்கணும் வியக்குறும்" (கம்பரா. தாடகை.26). (செ.அக.).

ம. எங்ஙானும்

*[எங்கண் + உம்.]*

**எங்கள்** *eṅgal,* கு.வி எ. (adj ) *யாங்கள்* (நாங்கள்) *என்பதன் வேற்றுமையடி, யுருபை யேற்கும்போது அடையும் வடிவம்;* oblique form of 1st pers.pl occurs before case-endings "எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்" (தேவா 410,7). (செ.அக.)

ம. எங்கள்; க. நாவு, ஆம், எம், துட. எம்; கோத. எம; குட., பட. எங்க, து. எங்குளெ; தெ. ஏமு, மேமு; கொலா. அம்; நா. ஆம்; கோண். அம்மட், அம்மாட்; கு. ஆமு. ஆஞ்ஞு; குரு. எம், ஏம்; மால். எம், ஏம்.

*[யாம் → எம் + கள் - எங்கள். இனி, யாம் + கள் - யாங்கள் → எங்கள் என்றுமாம்.]*

**எங்களாழ்வான்** *engalālvān,* பெ. (n.) *திருவெள்ளறைச் சோழியர்* (அபி.சிந்.); name of a sect of choliars belonging to Tiruvellarai

*[எங்கள் + ஆழ்வான்.]*

**எங்கித்தை** *eṅgittai,* கு.வி.எ. (adv.) *எவ்விடத்தில்;* in whatever place "எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தா லும்." (சி.சி.10,6). (செ.அக.).

*[எங்குற்றை → எங்குத்தை → எங்கித்தை. (வே.க.104).]*

**எங்கு** *eṅgu, எவ்விடம்;* where. "எங்குப்போ யுய்கேன்" (திவ்.பெருமாள்.5,5).

ம. எங்ஙு; க. எத்த, எல்லி; கோத. எய், எத்; துட. எத், ஏல்; குட., பட. எல்லி; து. ஒளு, ஓள்ப; தெ. எந்து, எக்கட, எட, ஏட, எசட, எகடு, எசொடு; கொலா. எத்தின்; நா. எத்தின்; பர். எதொட், எத்தொல்; கூ. எம்பெ; குவி. இம்பிய; கட. ஏட்; குரு. எகேர், எகோ, ஒவோ, எகய்யா; மால். இக், இகெனொ; பிரா. அராங், அராடேக்.

*[எ + கண் - எக்கண் → எங்கண்.]*

**எங்கும்** *eṅgum,* கு.வி.எ. (adv.) *எவ்விடத்தும்;* everywhere, in all directions. "எங்கும் போய்க் கரைகாணாது" (திவ்.பெருமாள்.5,5).

ம. எங்ஙும், க., பட. எல்லியு; தெ. எக்கட.

*[எங்கு + உம்.]*

**எங்குற்றை** *engurrai,* கு வி எ (adv) ***எவ்விடம்;*** which place

*[எங்கு → எங்குற்றை]*

**எங்கே** *engē,* கு வி.எ. (adv) 1 ***எங்கு*** பார்க்க; see *engu.* "எங்கே காண்கே வீன்றுழா யம்மான்றன்னை" (திவ்.திருவாய்.8,5,11). (செ.அக.). 2. ***எவ்விடம்*** (ஆ.அக.); whither, where, to which place

ம. எங்ஙே, க., பட. எல்லி, தெ. எககட

*[எங்கு + ஏ. 'ஏ' பிரிநிலைப் பொருளில் வந்த இடைச்சொல்]*

**எங்கை** *engai,* பெ (n.) ***என் தங்கை;*** my younger sister. (திருக்கோ.373,உரை.).(செ அக.).

*[என் + கை - எங்கை. கை = சிறுமை, இளமை இளையபெண்]*

**எங்கைச்சி** *engaicci,* பெ. (n) ***எங்கை*** பார்க்க; see *engai.* (செ.அக.).

*[என் + கை + அச்சி - எங்கைச்சி.]*

**எங்ஙன்** *eṅṅan,* கு.வி.எ. (adv) 1. ***எங்ஙனம்*** பார்க்க; see *eṅṅanam.* "இவைகளும்மை யணையா தகல்வ தெங்ஙன்" (சிவதரு.சுவர்க்கநா.94). (செ.அக.). 2. ***எங்கே;*** where. (ஆ அக).

*[எங்கண் → எங்கணம் → எங்கணம் → எங்ஙணம் → எங்ஙன்]*

**எங்ஙனம்** *e-ṅ-ṅan-am,* கு வி.எ (adv) 1. ***எவ்வாறு;*** how, in what manner "எங்ஙனம் மறந்து வாழ்கேன்" (திவ்.திருமாலை.23). 2. ***எவ்விடம்;*** where, to what place. "சிறுவர்க ளெங்ஙனம் போயினார்" (கந்தபு.தக் கன்மக.52). (செ.அக.). 3. ***எத்தன்மை*** (ஆ.அக.); what manner.

ம. எங்ஙனெ; க. எந்த; பட. எத்தெ; துட. எகிசு; கோத. என்ம், யேகெ; குரு. யெத்தெ; குட. யென்னனெ, என்னனெ; து. யென்ச, எஞ்ச, தெ. எட்லு, கொலா. எனன்; நா. எனன். பர். என்தி; குவி. இனகி; மால். இக்னா; பிரா. அமா.

*[எங்கண் → எங்கணம் → எங்ஙணம் → எங்ஙன்.]*

**எங்ஙனே** *e-ṅ-ṅan-ē,* கு.வி.எ. (adv.) ***எங்ஙனம்*** பார்க்க; see *eṅṅanam* "எங்ஙனே நீர் முனிவது" (திருவாய் மொழி நூ.45). (செ.அக.).

ம. எங்ஙனே.

*[எங்ஙன் + ஏ.]*

**எச்சம்**[1] *eccam,* பெ. (n.) 1. ***மிச்சம்;*** remainder, remnant, residue. "வினை பகை யென்றிரண்டி னெச்சம்" (குறள்.674). 2. ***பிறங்கடை*** (சந்ததி); posterity, offspring. "ஆக்கம்... எச்சத்திற் கேமாப்புடைத்து" (குறள்.112). 3. ***மகன்;*** son. 4. ***எச்சில்;*** orts, remains of food, spittle, whatever has come in contact with the mouth, as defiling. 5. ***பறவை முதலியவற்றின் கழிவு;*** dung of birds, lizards, etc "குரண்டமொன் றெச்ச நீங்குதலும்" (நல்.பாரத.கௌசி.10). 6. ***நறுமணப் பொருள்*** (சிலப்.14,108,உரை.); aromatic substance. 7. ***குறைவு*** (சூடா.); deficiency, defect, lack. 8. ***பிறப்பிலே வரும் குறை;*** deformity at birth of which eight types are mentioned, viz, சிதடு, உறுப்பில் பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் "எண்பேரெச்சம்" (புறநா 28). 9 ***எச்சக்குறிப்பு;*** inference "எச்சமென் பது வெள்ளவேதுவினான் மழை நிகழ்வுரைத்தல்". (மணி 27,53) 10. (இலக்.) ***தொக்குநிற்பது;*** ellipsis "பெயர் . குறிப்புந் தந்த மெச்சங் கொள்ளும்" (நன் 360) 11 ***உருபுகளும் முற்றுகளும் முடியும் பெயரும் வினையும்;*** noun or verb that completes the sense of case-endings, participles and finite verbs "எச்சப் பெயர் வினை யெய்துமீற்றினும்" (நன்.357).

ம. எச்சம்; க. எரும்பு (கழிச்சல்), தெ. எருவு.

*[எஞ்சு → எச்சு → எச்சம்.]*

**எச்சம்**[2] *eccam,* எச் (parti) ***பெயரெச்ச வினையெச்சங் கள்;*** relative or verbal participle "ஈரெச்சம்" (நன்.356).

ம. எச்சம்.

*[எஞ்சு → எச்சு → எச்சம்.]*

**எச்சம்**[3] *eccam,* பெ. (n.) ***செயல்*** (யாழ் அக.); work

*[இய → இயத்தம் → எத்தம் → எச்சம். இய = செல், நட. இயத்தம் = நடப்பு, செயல்.]*

**எச்சமிடு-தல்** *eccam-iḍu-,* 20.செ.கு.வி. (v.i.) ***பறவை கள் மலங்கழித்தல்;*** to drop excrement, as birds (செ.அக.).

*[எஞ்சு → எச்சு → எச்சம் + இடு]*

**எச்சரி-த்தல்** *eccari-,* 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***முன்னறி வித்து எச்சரிக்கை செய்தல்;*** to caution, warn, forewarn. (செ.அக.). 2. ***அறிவுரை கூறுதல்;*** to instruct, admonish. 3. ***விழிக்கப் பண்ணுதல்*** (ஆ.அக.); to awaken.

க. எச்சரிக, து. எச்சரி; தெ. எச்சரின்க.

*[எழு + தரு + கை - எழுதருகை = விழித்திருத்தல், விழிப்பாயி ருத்தல். எழுதருகை → எழ்தருகை → எழ்சரிகை → எச்சரிக்கை → எச்சரி.]*

எழுதரு என்னும் செந்தமிழ்ச் சொல் எழ்தரு என்னும் திசைச் சொல்லாகிப் பின்னர் எச்சரி எனத்திரவிடத் திரிபுற்றது. இத னைத் திரவிட மரூஉச்சொல் எனலாம்.

**எச்சரிக்கை** *eccarikkai,* பெ. (n.) 1. ***விழிப்புணர்வு;*** caution, circumspection, vigilance. அவன் எச்சரிக்கை யுள்ளவன். 2. ***முன்னறிவிப்பு;*** prior notice, warning. பொது மக்களுக்கு எச்சரிக்கை கொடுத்தார்கள். 3. ***அரசர் போன்ற உயர்பேராளர் அவைக்கு வருதலைய றிவித்துத் தக்க மதிப்புரவு காட்டுமாறு அறிவுறுத்தும் சொல்;*** exclamatory word enjoining care, silence, uttered in advance on the approach of a king, or any exalted personage; attention, called for in an assembly or court. "மன்னவர்க ளெச்சரிக்கை பேச" (இராமநா.பா லகா.18). 4. ***எச்சரிக்கை என்னும் சொல்லில் முடியும் தெய்வப்பாடல்;*** hymn sung before an idol, each of the verses of which ends in this word. 5. ***கருத்து;*** conception. 6. ***ஒரு சிற்றிலக்கியம்;*** a class of literary genre.

க. எழுதருவிகெ, எச்சரெ, தெ. எச்சரிக

[எழுதருதல் > க. எழுதருவிகை → எழ்தரிகெ > தெ. எச்சரிக > த. எச்சரிக்கை விழிப்பாயிருத்தல் என்று பொருள்படும் எழுதருதல் என்னும் தமிழ்ச் சொல் கன்னட மொழிவழியாகத் தெலுங்கில் எச்சரிக்கை எனத் திரிந்து தமிழில் வழக்கூன்றியது.]

**எச்சரிப்பு** *eccarippu*, பெ. (n) 1. ***முன்னறிவிப்பு;*** caution, forewarning (செ.அக.). 2. ***ஓர் பாட்டு;*** a kind of song (ஆ அக.).

*[எச்சரி → எச்சரிப்பு.]*

**எச்சவாய்** *ecca-vāy*, பெ. (n) ***மலவாய்*** (வின்.); anus

ம. எச்சவாய்.

*[எச்சம் + வாய்]*

**எச்சவும்மை** *ecca-v-ummai*, பெ (n) ***விடுபட்டசெய்தியை உய்த்துணர வைக்கும் 'உம்' என்னும் இடைச்சொல்;*** particle 'um' suggestive of something to be understood. சாத்தனும் வந்தான்.

*[எச்சம் + உம்மை - எச்சவும்மை. எஞ்சிய பொருளுணர்த்தும உம் என்னும் இடைச்சொல்]*

**எச்சில்** *eccil*, பெ. (n.) 1. ***உமிழ்நீர்;*** saliva, spittle 2. ***உமிழ்நீர்பட்டுத் தூய்மை அறுவது*** (அசுத்தமாவது); anything defiled by contact with the mouth 3. ***தூய்மை இல்லாதது*** (அசுத்தமானது), anything defiled அவனிடமிருந்து எனவாய் எச்சிலாயிற்று. 4 ***உண்டு கழித்த மிச்சில்;*** orts, refuse of food, leavings "நாய் பிற ரெச்சிற் கிமையாது பார்த்திருக்கும்" (நாலடி.345). 5. ***உடற்கழிவுகள்*** (ஆசாரக் 8); excretions from the body, as faeces, urine, semen

ம. எச்சில், க. எஞ்சல்; கோத. எச்ல், துட. இசில், குட. எச்சி; து. எஞ்சல், தெ. என்கிலி, எங்கிலி, கோண். எஞ்சு, எங்கூல், குரு. எங்நீரை.

*[எஞ்சல் → எஞ்சில் → எச்சில்.]*

**எச்சில் கழி-த்தல்** *eccil-kali-*, 4 செ கு.வி. (vi) ***எச்சிலிடத்தைத் தூய்மை செய்தல்*** (வின்); to clean the spot where one has taken food (ஆ அக.)

*[எஞ்சல் → எஞ்சில் → எச்சில் + கழி]*

**எச்சிலன்** *eccilan*, பெ. (n) ***இவறன், ஈயாதவன்*** (யாழ்.அக); miser (ஆ அக).

*[எச்சில் + அன்]*

**எச்சிலாக்கு-தல்** *eccil-ākku-*, 5.செ குன்றாவி (vt) ***உண்ணும் போது எச்சில் படச் செய்தல்;*** to defile food or anything else either by bringing it into contact with the mouth or by touching it with the hand that has already come into contact with the mouth.

க. எஞ்சலிசு

*[எச்சில் + ஆக்கு]*

**எச்சிலிடு-தல்** *eccil-idu-*, 20 செ கு வி (vi) ***உண்டவிடத்தைச் சாணமிட்டு மெழுகுதல்;*** to clean the place where food has been eaten, by smearing cowdung and water

*[எச்சில் + இடு]*

**எச்சிலிலை** *eccil-ilai*, பெ (n) ***உணவு உண்ணப்பட்ட இலை;*** leaf-plate from which food has been eaten.

க. எஞ்சலெலெ

*[எச்சில் + இலை]*

**எச்சிலூண்** *eccilūn*, பெ. (n) ***உண்டு மிஞ்சிய வுணவு;*** refuse or remains of food. (சா.அக.).

*[எச்சில் + ஊண்]*

**எச்சிலூறல்** *eccil-ūral*, பெ. (n.) ***எச்சில் வாயி லூறுதல்;*** secretion of saliva (செ.அக.).

*[எச்சில் + ஊறல்.]*

**எச்சிலெடு-த்தல்** *eccil-edu-*, 4 செ கு.வி (vi) ***எச்சிலிலையை யகற்றுதல்;*** to remove the leaf-plate after one has eaten from it

*[எச்சில் + எடு]*

**எச்சிற்கல்லை** *eccir-kallai*, பெ (n) ***உண்ட தையலிலைக்கலம்;*** plate of leaves sewn together from which food has been eaten

*[எச்சில் + கல்லை]*

**எச்சிற்குழி** *eccir-kuli*, பெ. (n.) ***எச்சிலிலையிடும் பள்ளம்;*** pit in the backyard of a house for throwing used leaf-plates.

ம. எச்சில குழி, க. எஞ்சலுருணி, தெ. எங்கிலி குந்த.

*[எச்சில் + குழி]*

**எச்சிற்படு[1]-த்தல்** *eccir-padu-*, 18 செ குன்றாவி (vt) 1 ***எச்சிலாக்கு*** பார்க்க; see *eccil-ākku-* 2 ***புண்படுத்தல்;*** to cause a sore, to injure "இரும்பெச்சிற் படுத்த மார்பா" (சீவக 2353) 3. ***கன்னிமை கெடுதல்;*** to deprive a damsel of her virginity, either by force or with her consent (W)

*[எச்சில் + படு]*

**எச்சிற்படு[2]-தல்** *eccir-padu-*, 20.செ.கு.வி. (vi) ***உமிழ்நீர்பட்டுத் தூய்மை கெடுதல்;*** to become defiled, as food by contact with the mouth.

*[எச்சில் + படு]*

**எச்சு[1]** *eccu*, பெ. (n) ***குறை;*** defect. "எச்சுநாட்டங் கொடு" (இரகு.குறைகூ.29).

*[எஞ்சு → எச்சு]*

**எச்சு[2]** *eccu*, பெ. (n) 1. ***மிகுதி;*** excess, increase. 2. (இசை) ***உயர்ந்த இசை;*** high pitch, (in music) opp to தக்கு. அவன் எச்சிலே பாடுகிறான்.

ம., க., தெ., பட. எச்சு

*[எஞ்சு → எச்சு எஞ்சு = மிகுதல்.]*

**எச்சு³-தல்** *eccu-*, 5.செ குன்றாவி. (vt) ***வணங்குதல்;*** to worship. "பெருமானை யெச்சுமடியார்கட் கில்லையி டர் தானே". (தேவா.410,10).

*[ஏத்து → எத்து → எச்சு.]*

**எச்சோறு** *eccōṟu*, பெ. (n) ***எற்சோறு*** பார்க்க; see *eṟcōṟu* (IMP Sm 2)

*[எற்சோறு → எச்சோறு.]*

**எசப்பு** *esappu*, பெ (n) ***பொருள் விற்பனையில் இருதரத்தாரையும் இசைவிக்கும் முயற்சி; தரவாளித் தொழில், தரவு;*** brokerage

*[இசை → இசைப்பு → எசப்பு ]*

**எசப்புச் செலவு** *esappu-c-celavu*, பெ. (n) ***தரகு கொடுத்தற்குப் பிடிக்குஞ் செலவு;*** brokerage expenses in business (Loc ).

*[இசைப்பு → எசப்பு + செலவு.]*

**எசர்** *esar*, பெ. (n) ***உலைநீர்;*** water in a pot set over the fire for boiling rice (இ.வ.).

க. எசர், தெ. எசரு; பட. எசரு

*[பெயல் → பெசர் → எசர். (கொ வ.).]*

**எசர்கட்டு-தல்** *esar-kattu-*, 5.செ.குன்றாவி. (vt) ***உலை நீர் வைத்தல்*** (இ.வ ), to keep a pot of water over the fire for boiling rice.

*[எசர் + கட்டு. எசர் கட்டுதல் என்னும் திசைச்சொல்லாட்சி தமிழுக்குத் தேவையில்லாதது.]*

**எசலாட்டம்** *esalāttam*, பெ. (n) ***இகலாட்டம்*** பார்க்க; see *igalāttam*.

*[இகலாட்டம் → எகலாட்டம் → எசலாட்டம்.]*

**எசெலி** *esali*, பெ. (n) ***முரணுகை;*** contradicting.

*[இகலி → எகலி → எசலி. (கொ.வ.).]*

**எஞ்சல்¹** *eñjal*, பெ (n) 1 ***குறை;*** defect, blemish "எஞ்சலி லமரர் குலமுதல்" (திவ்.திருவாய்.3,6,9). 2. ***சுருங்குதல்;*** contracting, shrinking, 3 ***அற்றொழிகை;*** extinction "வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள் 44). (செ அக ).

க. எஞ்சல், தெ. எங்கிலி; கோண். யெங்குல்; மால். எங்கே.

*[இஞ்சு → எஞ்சு → எஞ்சல்.]*

**எஞ்சல்²** *eñjal*, பெ. (n) 1. ***மிஞ்சுதல், அதிகரித்தல், மிகுதல்;*** exceeding, expanding 2 ***மீதியாதல்;*** remaining (சா அக.)

*[எ → எச்சு → எஞ்சு → எஞ்சல்.]*

**எஞ்சலார்** *eñjalār*, பெ. (n) ***புதியவர்;*** strangers "எஞ்சலார் சொன்ன தெவன்வாழி தோழி" (சிலப்.18,24).

*[எஞ்சு + அல் - எஞ்சல்² + ஆர். எஞ்சல் = மிகுதல், செருக்கு.]*

**எஞ்சலி-த்தல்** *eñjali-*, 4.செ குன்றாவி. (vt) ***எஞ்சல், குறைவு செய்தல்;*** to bring discredit upon, to cause degradation, as of a person, to cause discomfiture. "படைக்கடலா லமரேசனை யெஞ்சலித்திட" (ஞானவா. தாமவியாள 21)

*[எஞ்சல் = எஞ்சலி ]*

**எஞ்சாமை** *eñjāmai*, பெ. (n.) ***முழுமை;*** entirety, totality.

*[எஞ்சு + ஆ + மை - எஞ்சாமை. 'ஆ' - எ.ம.இ நி. "மை" - பண்புப் பெயரீறு ]*

**எஞ்சிநில்(ற்)-த(ற)ல்** *eñji-nil-*, 14.செ கு.வி (v.i) 1. ***தொக்குநிற்றல்;*** to be elliptical, as a word "சொல்லென் னும் முதனிலை மாத்திரை தன்னுள்ளேயே எஞ்சிநிற்ற லல்லது" (தொல்.சொல்:441,உரை.) 2. ***ஒழிந்து நிற் றல்;*** to remain, to be left உணர்த்துதற்கு இடமின்றி எஞ்சிநின்ற சொல்லிலக்கணங்களை. (தொல்.சொல். 397,உரை.).

*[எஞ்சு → எஞ்சி + நில் ]*

**எஞ்சியசொல்லினெய்தக்கூறல்** *eñjiya-šollin-eyda-k-kūṟal*, பெ. (n) ***சொன்னவற்றால் சொல்லாதனவற்றை யும் உய்த்தறியுமாறு கூறுகையாகிய ஓர் உத்தி.*** (நன்.14); (Gram) stating a fact in such a way as to suggest by inference other things not specifically mentioned One of 32 Utti.

*[எஞ்சிய + சொல்லின் + எய்த + கூறல் ]*

**எஞ்சு¹-தல்** *eñju-*, 15 செ.கு வி (vi.) 1. ***குறைதல்;*** to lack, diminish, to be deficient "எஞ்சா வின்னரு ளுண்டுளி கொள்ள" (திருவாச.3,76). 2. ***கெடுதல்;*** to be spoiled, injured, marred "வகையெழில் வனப்பெஞ் ச" (கலித் 17,13). 3 ***ஒழிதல்*** (குறள்.382); to cease 4 ***(இலக.) தொக்குநிற்றல்;*** to be elliptical, as a word-to "சொல்லளவல்ல தெஞ்சு தலின்றே" (தொல். சொல் 441) 5 ***செய்யாதொழிதல்;*** to refrain "இறுதி பயப்பினும் எஞ்சாது" (குறள் 690)

*[இஞ்சு → எஞ்சு. இஞ்சுதல் = உறிஞ்சுதல், உள்ளிழுத்தல், குறைதல், கெடுதல்.]*

**எஞ்சு²-தல்** *eñju-*, 15.செ.கு.வி. (v.i) 1 ***மீதியாதல்;*** to remain, to be left behind, to survive. "எஞ்சினா ரிவ்வுலகத்தில்" (நாலடி.21). 2. ***கடத்தல்;*** to transgress, go beyond, overstep "இரக்கு வாரே னெஞ்சிக் கூறேன்" (பதிற்றுப்.61,11).

*[எ → எச்சு (உயர்தல், மிகுதல், மீதியாதல்).]*

**எஞ்சு³-தல்** *eñju-*, 5.செ.குன்றாவி. (v.t) ***தனக்குப்பின் உரிமையாக வைத்தல்;*** to leave behind, as to one's

heir "நின் பெருஞ் செல்வம் யார்க்கெஞ்சுவையே" (புறநா.213).

*[எஞ்சு[2] → எஞ்சு[3]]*

**எஞ்ஞான்றும்** *eññānṟum*, கு.வி எ. (adv) ***எக்காலமும்;*** always, ever "வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள் 44).

*[எ + ஞான்று + உம்]*

**எட்கசி** *et-kaši*, பெ. (n) ***எள்ளாற் செய்யப்பட்டதோர் உணவு, எள்ளுருண்டை*** (சிலப்.12,37,உரை); cake prepared with sesame seed

*[எள் + கசி]*

**எட்கசிவு** *et-kašivu*, பெ. (n.) ***எட்கசி*** பார்க்க. (சிலப். 5-68,உரை.); see *etkaši*

*[எள் + கசிவு.]*

**எட்கடை** *eṭkaḍai*, பெ. (n.) ***எட்கிடை*** பார்க்க; see *et-kiḍai*

*[எள் + கிடை - எட்கிடை → எட்கடை.]*

**எட்கிடை** *eṭ-kiḍai*, பெ (n) ***எள்ளளவு இடம்;*** space occupied by a sesame seed. "எட்கிடை... மாத்திரை வெளிவிட் டிழைநூல்சுற்றி" (கடம்ப.பு.இல்லாசங்கிரக. 476).

*[எள் + கிடை. கிடை = கிடத்தற்குரிய இடம்.]*

எட்கிடை, எள்ளிடை, எட்பகவு, எள்ளளவு என்னும் சொற்கள் மிகக குறுகிய அடிப்படை நீட்டலளவு குறித்தவை

**எட்கோது** *et-kōdu*, பெ (n) ***எள்ளின் மேற்றோல்*** (சங் அக.); sesame husk

*[எள் + கோது]*

**எட்சத்து** *et-cattu*, பெ. (n.) ***நல்லெண்ணெய்*** (தைலவ. தைல 134); oil extracted from sesame

*[எள் + சத்து.]*

**எட்சோறு** *etcōṟu*, பெ. (n) ***எள்ளிட்டு ஆக்கிய சோறு*** (யாழ் அக.); boiled rice mixed with powdered sesame seeds

ம. எள்ச்சோறு

*[எள் + சோறு]*

**எட்ட** *etta*, கு வி எ. (adv) ***சேய்மையாக;*** far off further away, out of the way எட்டநில் (உ.வ.).

*[எ → எட்டு → எட்ட. ஏ → எ (உயரம், நீட்சி, தொலைவு).]*

**எட்டக்கட்டு-தல்** *etta-k-kattu-*, 5.செ கு வி (vi) ***நெருங்கி வாராதிருத்தல்;*** to keep away, hold off மழை எட்டக் கட்டிவிட்டது (இ.வ.).

*[எட்ட + கட்டு]*

**எட்டக்கரம்** *ettakkaram*, பெ (n) 1 ***திருமால் வழிபாட டிற்கான எட்டெழுத்தாலாகிய மந்திரம்;*** mantra or prayer of eight syllables in honour of Visṇu. "அரங்க னெட்டக்கரமே" (அஷ்டப் திருவரங்கத்தந்.27). 2. ***எட்டெழுத்து*** பார்க்க; see *etteluttu*.

*[எட்டு + அக்கரம்.]*

**எட்டடிச்சுவடன்** *ettaḍi-c-cuvadaṉ*, பெ. (n.) ***எட்டடி விரியன்*** பார்க்க; see *ettaḍi-viriyaṉ*

ம. எட்டடிச்சுவடன்.

*[எட்டு + அடி + சுவடன்.]*

**எட்டடிப்பறவை** *ettaḍi-p-paṟavai*, பெ. (n.) ***சிம்புள்;*** fabled eight-footed bird "எட்டடிப் பறவை மூக்கிடை யுரிஞ்சிடும்" (சேதுபு.கந்த.58).

*[எட்டு + அடி + பறவை - எட்டடிப்பறவை. தொன்முது காலத்தில் எட்டடி நீளமுள்ள கொடிய பறவை இருந்திருக்க லாம் எட்டடியை எட்டு கால்களாகப் பிற்காலத்தார் பிறழக் கருதி எண்காற்புள் எனப் புதுச்சொல் படைத்தது ஒவ்வாத கற்பனையாகும்]*

**எட்டடிமான்** *ettadimāṉ*, பெ. (n.) ***எண்கால் வருடை*** பார்க்க; see *enkāl-varuḍai*.

ம. எட்டடிமான்.

*[எட்டு + அடி + மான்.]*

**எட்டடிவிரியன்** *ettaḍi-viriyaṉ*, பெ. (n) ***விரியன் பாம்பு வகை;*** a viper

ம. எட்டடிவிரியன்.

*[எட்டு + அடி + விரியன் கடித்ததும் எட்டடி போதற்கு முன் ஆளைக் கொன்றுவிடும் நச்சுத் தன்மை வாய்ந்தது என்று கருதப்பட்டதால் பெற்றபெயர் என்பர் எட்டடி நீளம் குறித்த தாகலாம்.]*



எட்டடிவிரியன் பாம்பு

**எட்டம்[1]** *ettam*, பெ. (n) 1. ***உயரம், தொலைவு*** (யாழ் அக.); height, distance 2. ***நீளம்;*** length. "பின்பு கொண்டுவந்திணைக்க எட்டம் போராமையாலே" (ஈடு.4,1,5)

க. எத்தர, E height.

*[ஏண் → எட்டு + எட்டம்.]*

**எட்டம்**[2] *ettam*, பெ. (n) ***அடைதற் கெளிதாந்தன்மை;*** accessibility

*[அண் → அட்டு → எட்டு → எட்டம்]*

**எட்டம்பற்று-தல்** *ettam-parru-*, 5.செ.குன்றாவி. (vt) ***கிடைத்தல்*** (யாழ்.அக.); to be available (செ.அக.).

*[எட்டம் + பற்று]*

**எட்டமன்** *ettaman*, பெ (n) ***திருநெல்வேலி மாவட்டம் எட்டையபுரத்து நிலக்கிழாரின் பட்டப்பெயர்;*** title of the Zamindars of Ettaiyapuram in the Tinnevelly District "குமார வெட்டமனைச் சேர" (தனிப்பா.1,317,7)

*[எட்டயபுரம் → எட்டம் → எட்டமன்.]*

**எட்டர்** *ettar*, பெ (n) ***அரசனுக்கு நாழிகைக் கணக்குக் கூறும் மங்கலப்பாடகர்*** (திவா ); panegyrists in ancient royal households whose duty it was to tell the hours to the king

*[ஏடு → ஏட்டர் → எட்டர்.]*

**எட்டவிடு-தல்** *etta-vidu-*, 18 செ.குன்றாவி (vt) 1. ***பிறரைக் கொண்டு செய்தி தெரிவித்தல்;*** to communicate, inform அவனுக்கு இந்தச் செய்தியை எட்டவிடு. 2. ***பரப்புதல்;*** to spread over "எட்டவிட்ட விடுமண லெக்கர்" (தேவா.360,8).

*[எட்ட + விடு.]*

**எட்டன்**[1] *ettan*, பெ. (n) ***எட்டமன்*** பார்க்க; see *ettaman*. "வேங்கடேசுரெட்டன்" (தனிப்பா.1,314,1).

[எட்டமன் → எட்டன்.]

**எட்டன்**[2] *ettan*, பெ. (n) ***மூடன்*** (இ.வ.); boor, fool

**க.** எட்ட; **தெ.** எட்டெ.

*[இழுதை → எழுதை → எட்டன்.]*

**எட்டன்மட்டம்** *ettan-mattam*, பெ. (n.) (இசை) ***தாள வகை*** (சிலப்.3,16.உரை.); time-measure in music.

*[எட்டன் + மட்டம்]*

**எட்டாக்கை** *ettā-k-kai*, பெ. (n) ***தொலைவான இடம்;*** distant place, place out of reach. அவன் எட்டாக்கையில் இருக்கிறான். (இ.வ.).

*[எட்டு + ஆ + கை - எட்டாக்கை. 'ஆ' - எ.ம இ நி]*

**எட்டாம்** *ettām*, கு.பெ.எ. (adj) ***எட்டின், எட்டாவது எண்ணின்;*** the eighth.

**ம.** எட்டாம்.

*[எட்டு + ஆம்.]*

**எட்டாமாறல்** *ettāmāral*, பெ. (n.) ***எட்டாங்காய்ச்சல்*** பார்க்க (சா.அக.); see *ettan-kāyccal*.

**எட்டாமிடம்** *ettāmidam*, பெ. (n.) ***கோள்களின் எட்டாம் இடம்;*** eighth house of the Zodiac. (சேரநா.).

**ம.** எட்டாமிடம்.

*[எட்டு + ஆம் + இடம்.]*

**எட்டாமுட்டி** *ettā-mutti*, பெ. (n) ***அகலக் குறைவு*** (மதி.க.1,76); insufficient width. இந்த வேட்டி, உயரமாக இருக்கும் அவருக்கு எட்டாமுட்டியாக இருக்கிறது. (உ வ.)

*[எட்டு + ஆ + முட்டி - எட்டாமுட்டி. 'ஆ' எ.ம இ நி. முட்டு → முட்டி (குறைவானது)]*

**எட்டி**[1] *etti*, பெ (n) ***நச்சுவித்துகளைக் கொண்டமரம்;*** strychnos nux-vomica, strychnine-tree m tr. "எட்டி பழுத்தென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன?" (பழ.).

**ம.** எட்டி, **க.** இட்டி, இட்டங்கி, இட்டெ, ஈடங்கி.

*[இள் → இட்டு → இட்டி → எட்டி.]*

காஞ்சிரங்காயை எட்டிககாய் எனப் பொருள் கொண்டு எட்டியைக் காஞ்சிரமரம எனப் பிறழப் பொருள் கொள்வது தவறு. இரண்டும் வெவவேறு மரங்கள

**எட்டி**[2] *etti*, பெ (n) ***எண்வகைப் பண்புகளால் சிறந்த வணிகனுக்கு அரசன் வழங்கும் மதிப்புரவு விருது;*** title of distinction conferred on persons of the merchant community encouraging their eight noble qualities "எட்டி சாயல னிருந்தோன் றனது" (சிலப் அடைக்கல 193).

**ம.** எட்டி, பிரா. செட்டி; மரா., குச். சேட்.

*[எண் → எட்டு → எட்டி = எட்டுவகை உயர்பண்புகள் கொண்ட வணிகன், நேர்மையும் வாய்மையும் வாய்ந்தவன்]*

நாடடின் பொருளியல் வாழ்க்கைக்குக் குலைவு நேரா வண்ணம் நேர்மையாக வாணிகத் தொழில் நடைபெறுவதற்காகப் பண்டுதொட்டே தமிழ்வேந்தர் வணிகர்க்கு 'எட்டி' என்னும் பட்டம் தந்து, எட்டிப்பூ எனும் பொற்பூச்சூட்டி, எடடிப்புரவு என்னும் நிலக்கொடை யளித்துப் பாராட்டினர். இதனை வாகைத் திணையின் உட்பிரிவாக "எட்டு வகை நுதலிய அவையத்தானும்" என்று தொல்காப்பியர் குறிபபிடுகிறார் அரசனின் எண்பேராயத்தில் சிறந்த வணிகரும் இடம் பெறறிருந்தனர்

"அழுக்கா றிலாமை யவாவின்மை தூய்மை
ஒழுக்கம் குடிப்பிறப்பு வாய்மை இழுக்காத
நற்புலமை யோடு நடுவு நிலைமையே
கற்புடைய எட்டுறுப்புக் காண்" (வீரசோ.பொரு 19,உரை )

மேற்கண்ட எட்டுப் பண்புகளும் அரசனின் பேரவையில் இடம் பெறுவார்க்கு வேண்டிய (அவையமுல்லைத் துறைக்குரிய) நற்பண்புகளாம்

**எட்டி**[3] *etti*, பெ. (n) 1. ***வணிகக் குலத்துப் பெண்கள் பெறும்பட்டம்;*** title taken by the wife, or daughter of a vaiśya on whom the title of etti has been conferred "எட்டி காவிதிப் பட்டந்தாங்கிய மயிலியன்மாதர்" (பெருங்.இலாவா.3,144). 2. ***வணிகக்குலம்*** (திவா.); vaiśya caste.

**ம.** எட்டி; *Pkt.* sētti.

*[எட்டு → எட்டி.]*

எட்டிப்பட்டம் பெற்ற வணிகர் குலத்தாரும் மகளிரும் அப்பெயராலேயே அழைக்கப்பட்டனர். இது வடபுல மொழிகளில் சேட் என்றும்,தென்னக மொழிகளில் செட்டி எனவும் திரிந்தது.

**எட்டிக் கசப்பு** *etti-k-kašappu,* பெ. (n) *மிகக் கசப்பு;* extreme bitterness (சா அக.)

*[எட்டி + கசப்பு]*

**எட்டிக்காய்** *etti-k-kāy,* பெ (n) *எட்டி மரத்தின் காய். இது உருண்டையாகவும் மென்மையாகவும் சிறிய ஆப்பிள் பழமளவுள்ளதாயுமிருக்கும்;* berry of the nux-vomica tree It is round smooth, and about the size of a small apple (சா.அக).

*[எட்டி + காய்]*

**எட்டிநோக்கு-தல்** *etti-nōkku-,* 7.செ.கு.வி. (v.i) 1. *அண்ணாந்து பார்த்தல்;* to look up. "இஃதிட்டோ ளார்கொலென் றெட்டி நோக்கினன்" (பெருங். நரவாண 8,82). 2. *தாவிப்பார்த்தல்;* to stretch oneself and see

*[எட்டி + நோக்கு]*

**எட்டிப்பழம்** *etti-p-palam,* பெ. (n.) *எட்டிமரத்தின் பழம்;* etti fruit (சா.அக.).

*[எட்டி + பழம்]*

**எட்டிப்புரவு** *etti-p-puravu,* பெ (n.) *வாணிகத்தாற் சிறந்தோர்க்கு அரசன் கொடுத்த நிலம்* (நன் 158, மயிலை.); land presented by the king to eminent merchants

*[எட்டி + புரவு.]*

**எட்டிப்பூ** *etti-p-pū,* பெ (n) *எட்டிப் பட்டம் பெற்ற வணிகர்க்கு அரசர் கொடுக்கும் பொற்பூ;* golden flower gifted by a king to the distinguished member of the vaišya community on whom the title of etti has been conferred "எட்டிப்பூப்பெற்று" (மணிமே 22-115).

**ம.** எட்டிப்பூ

*[எட்டி + பூ.]*

**எட்டி மரம்** *etti-maram,* பெ (n) *கைப்புத் தன்மையுள்ள மரம்;* strychnine tree, nux-vomica

**க.** இட்டி.

*[எட்டி + மரம்]*



எட்டி மரம்

**எட்டில்பத்தில்** *ettil-pattil,* கு வி எ. (adv) 1. *எட்டு அல்லது பத்து நாளில்;* in eight or ten days 2. *இடையிடையே* (யாழ் அக); now and then, occasionally.

*[எட்டில் + பத்தில்]*

**எட்டு¹-தல்** *ettu-,* 5.செ.கு.வி. (vi) 1. *ஒன்றையடைய நெருங்குதல்;* to reach up to. "பிறையை யெட்டினன் பிடித்து" (கம்பரா சித்திர 22) 2. *கிட்டுதல்;* to come within reach, approach கைக்கு எட்டினது வாய்க்கு எட்டவில்லை. 3. *அகப்படுதல்;* to be attained, realised, gained "முன்னம் பார் .. முடிவதேடவு மெட்டா" (பாரத அருச்சுனன்றீர்.18). 4. *புலப்படுதல்;* to be with mental grasp, within the powers of comprehension. "எண்ணுதற்கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி" (திருவாச.1,22). 5. *நீர் கழுத்துக்கு மேற்படாதிருத்தல்* (யாழ்ப்), to be so shallow, as water, as not to submerge one 6. *தாவிப் பாய்தல்;* to spring, leap up or forward. "எட்டின வயவரியென" (இரகு.திக்குவி.89). 7. *விலகுதல்;* to go out of reach, move away from "எட்டியன்ன மிரிந்துபறக்க" (அரிச்.பு.நாட்டு.51). 8. *நீளம் போதியதாதல்;* to be sufficient in length so as to reach, as a rope, the water in a well கிணற்றுக்கு இந்தக் கயிறு எட்டாது.

**ம.** எட்டு. **க.** எண்டு.

*[அண் → அட்டு → எட்டு]*

**எட்டு²** *ettu,* பெ. (n) 1. எட்டு என்னும் எண்ணுப்பெயர், ஏழின்மேல் ஒன்று; number eight. 2. *'அ' என்னும் எண்ணுக்குறியீட்டுக்குரிய தமிழ் எண்ணுப் பெயர்;* name of the eigth numerical number 'அ' in Tamil

மறுவ. எண், எள்

**ம.** எட்டு; **க.** எண்ட்டு; **து.** எண்ம; **தெ.** எனிமிதி; **துட.** ஓட்; படே. எட்டு, யெட்டு; குட. எட்டீ; **கொலா.** எண்மதி, எனுந்தி, என்மிதி; **கோண்.** அட்மூர், அட்முல், என்மிதி, பர்., **கூ.** அட், குரு., மால். ஆட்; **கோத.** எட்; குரும்., **இரு.** யெட்டு; பிரா. கச்ட், மபு. அட்; **கைத்.** யெட்; எடு. யெட்டு; **செஞ்.** அட்.

*Nep* (Thulungya). yen *Afri* (Nubi) eddo; *Tib* (Tharu, kuswar) ath; *Sinh* atai, *Nep* (pakya) ath. *Jap* yats, yatsu, hachi. *L* octo; *Goth* ahtan, *Gk* okto, *G* acht, *OHG* ahto, *Dut* acht, *Iri* hocht; *Sp* ocho, *F* hurt, *OF* eahta, *E* eight, *Circ* yid; *It Port* otto; *Norw.* atte *Port* oito, *Rum* opt, *Swed* atta, *Dan otte; Esp* ok, *Beng.* ashto; *Skt.* asta, *Pkt, pali.* atta, Punj, *Sind.* at; *Mitum Naga* aachet; *Kash., Ass, Hind* āt; *Guj., Mar., Ori.* āti

*[எள் → எண் + து - எட்டு 'து' சொல்லாக்க ஈறு]*

தொன்முது காலத்தில் எள், நெல், விரல், சாண், முழம், கோல், காவதம், என்னும் நீட்டலளவைகளுக்குப் புலப்பாடான அடிப் படைச் சிற்றளவாக எள் கருதப்பட்டது. 8 கடுகு - 1 எள், 8 எள் - 1 நெல் என அளவைகள் கூறப்பட்டன. எள்ளளவு என்பதே எல்லாருக்கும் எளிதில் விளங்கும் வகையில் பார்த் தறியக் கூடிய மிகச்சிறிய நீட்டலளவையாக இருந்தது. எள் ளைக் குறித்த சொல்லே 8 என்னும் எண்ணைக் குறிக்கும் பெயராயிற்று.

இச்சொல் உலகமொழிகளில் ஊடாடிய போது க, ச, த, ந, ப என்னும் முன்னொட்டுகளைப்பெற்று ஐவகை அடிநிலைத்திரிபுகளையும், ள, ர என்னும் இருவகை ஈறுகளாலுற்ற முடிநிலைத்திரிபுகளையும் பெற்றுள்ளது

**எள → எண் → கெண்:** முதல்வகை அடிநிலைத்திரிபுற்றவை *O Egy* hmn, *Tib* gzud, gye, gsed, *Sikk* kāke, *Bula* gye, *Fin* kahdeksan, *Siam* (karen) ko, kho

**எள் → எண் → செண்:** இரண்டாம வகை அடிநிலைத்திரிபுற்றவை. *Burm* shyet, shyêt, *Egy* (cop) smn, *Turk* sekiz, *Heb* schmonah, *Basq* zortsı

**எள் → எண்ம் → தெண்ம்:** மூன்றாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை *Naga* the, thetha, *Ara* tsamaniya, tarnan, *Iraq* thaman; *Anna*, *Viet* tam, *Afri* (Berber) tam, *Indon* (Baoli) (ad) dasa *Malay* dalāpan, *Indone* detapan, *shant* tet

**எள் → எண்ம் → நெண்ம்:** நான்காம் வகை அடிநிலைத்திரிபுற்றவை *Afri* (Swahili) nane, *Mongol* nemen, *Hung* nyolc

**எள் → எண்ம் → பெண்ம்.** ஐந்தாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை. *Chine* (Nank) pāh, (peking) pa, (cant) pet, (shang)peh *Siam* pet, *Thai* paed, *Laos* pet, *Chine* (Mand) baa, *Tib* (Gyami) pa, *Nep* (Murmi) pre

**எள் → ளெ → லெ.** முதல்வகை முடிநிலைத்திரிபுற்றவை.

**எள் → ளெ → லெ → ரெ·** இரண்டாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை. *Georg* rua, *Tib* (Horpa) Rhi-ce, *Burm* rhach, nyat.

**எள் → எண் → எட்டு → டு → உ** மூன்றாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை. *Poli* uusman, *Jawa* woolu, *Russ* vosgian, vosem, *Serbo* Osam, *Czeeh* osm

**கூட்டுச்சொல்லாக வழங்குவன:**

எட்டு என்னும் எணணுப்பெயரை ஐந்தொடு மூன்று கூட்டியும் பத்திலிருந்து இரணடைக் கழித்தும் கூட்டுச்சொல்லாகப் பழங்குடி மக்களுள் சிலர் வழங்கியுள்ளனர் அமெரிக்கப பழங்குடிகளுள் அசுதெக்கு வகையினரும் நகுவாத்தி வகையினரும ஐந்தும் மூன்றும் கூட்டி எட்டினை வழங்கினர்.

*Amen* (astec)· shew-w-ieye (5 + 3) (Nahumti): chik-w-eyi (5 + 3)

பாசுக்கு, காக்கேசிய பின்னிசு வகையினர் பத்திலிருந்து இரண்டைக் கழித்து எட்டினை வ்ழங்கினர்

Basq Zor-tyi - - (இரண்டு குறைந்த பத்து).
Canc. Or-atsı - (இரண்டு குறைந்த பத்து).
Finn. Kah-deksan - (இரண்டு குறைந்த பத்து).

**எட்டு[3]** *ettu*, பெ. (n.) ***இறந்தவர்களுக்கு எட்டாநாளிற் செய்யும் கருமம்;*** ceremony performed in honour of a deceased on the eighth day after his death.

*[எள் → (எண் + து) எண்டு → எட்டு. தொன்முது காலத்தில் எள் உணவாகக் கருதப்பட்டது. இறந்தார்க்கு எட்டாம் நாளில் எள்ளும் நீரும் படைப்பதும் தெளிப்பதும் 'எட்டு' எனப்பட்டது. எள் + து - எட்டு என்னும் சொல்லுக்கு எள்ளை உண் என்று பொருளிருப்பதை ஒப்பு நோக்குக.]*

**எட்டு[4]** *ettu*, பெ. (n) ***உயரம்;*** height

*[அண் → அடடு → எட்டு]*

**எட்டு[5]** *ettu*, பெ (n) ***அடிவைப்பு;*** step இரண்டு எட்டில் அங்குப் போய் விடுவேன் (உ.வ)

*[எடு → எட்டு = காலின் எடுப்பு, அடிவைப்பு]*

**எட்டுக்கண்விட்டெறி-தல்** *ettu-k-kan-vitten*, 2.செ.கு வி (v.i) ***எங்குந் தன் அதிகாரஞ் செல்லுதல்;*** to exercise authority everywhere as of one had eight eyes, to have very wide influence

*[எட்டு + கண் + விட்டு + எறி எட்டுக்கண் = எண்திசைக்கண்.]*

**எட்டுக்காற்பூச்சி** *ettu-k-kāṟ-pūcci*, பெ. (n) ***சிலந்திப் பூச்சி;*** spider, so called because it has eight legs

ம. எட்டுகாலன், எட்டுகாலி

*[எட்டு + கால் + பூச்சி]*

**எட்டுக்கொண்டார்** *ettu-k-kondār*, பெ. (n) ***எண் தோன்றலாகிய (அட்டமூர்த்தமுடைய) சிவபெருமான்.*** Śiva, as having attamūrttam "எட்டுக் கொண்டார் தமை" (திருவுந்தி.24).

*[எட்டு + கொண்டார்.]*

**எட்டுச்சார்** *ettu-c-cār*, பெ. (n) ***இரண்டு கட்டாயுள்ள சதுர வீடு*** (யாழ்ப்.); two four-square houses connected together

*[எட்டு + சார்.]*

**எட்டுச்செய்-தல்** *ettu-c-cey-*, 1.செ கு.வி. (vi) ***சில வகுப்பாரிடையே ஒருவர் இறந்த எட்டாம் நாளில் செய்யும் சிறப்புச் சடங்கு;*** to perform special ceremonies on the eighth day after a person's death, among certain castes

*[எட்டு + செய்.]*

**எட்டுணை** *ettunai*, பெ. (n.) ***எள்ளளவு;*** size of a single grain of sesame of the size or weight of a sesamum seed, very little

ம. எள்ளளவு.

*[எள் + துணை]*

**எட்டுத்திக்கு** *ettu-t-tikku*, பெ. (n.) ***எண் திசை;*** eight directions, viz., the four cardinal points and the four between them.

ம. எட்டு திக்கு.

*[எட்டு + திக்கு. திசை → திக்கு.]*

**எட்டுத்தொகை** *ettu-t-togai*, பெ. (n.) ***ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தொகுக்கப்பட்ட நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய எட்டுத் தொகுப்பு நூல்கள்;*** eight anthologies of the Sangam period. "இத்திறத்த வெட்டுத்தொகை" (தனிப்பா.).

*[எட்டு + தொகை.]*

**எட்டெட்டு** *ettettu,* பெ (n) ***எட்டின் மடங்கு;*** eight multiplied by eight i.e 64 (ஆ அக).

மறுவ. எண்ணெண்

ம. எட்டெட்டு, க. எண்ட்டெண்ட்டு

*[எட்டு + எட்டு - எட்டெட்டு]*

**எட்பகவு** *et-pagavu,* பெ (n) 1. ***எள்ளளவு என்னும் மிகச் சிறு நீட்டலளவு;*** very small linear measure 2. ***மிகச்சிறுமை;*** very little, tiny "எட்பகவன்ன சிறுமைத்தே ஆயினும" (குறள் 889).

*[எள் + பகவு - எட்பகவு = எள்ளளவு]*

**எட்பாகு** *et-pāgu,* பெ. (n) ***எள்ளுப்பாகு;*** sweet paste made of sesame seeds

*[எள் + பாகு]*

**எட்பூ** *et-pū,* பெ (n) ***எள் செடியின்பூ;*** flower of the plant sesamum Indicum

ம. எள்ப்பூவு

*[எள் + பூ.]*

**எடார்** *edār,* பெ. (n) ***பரந்தவெளி, வெளியிடம்;*** plain, open field.

தெ. எடாரி.

*[இடை → இடார் → எடார்.]*

**எடார்வெளி** *edār-veli,* பெ. (n.) ***வெட்டவெளி;*** vacant forlorn land. காடுவெட்டி அந்த இடமெல்லாம் எடார் வெளியாகிவிட்டது (இ.வ.).

*[எடார் + வெளி.]*

**எடு¹-த்தல்** *edu-,* 4 செ கு வி. (v.i) 1. ***உயர்த்துதல்;*** to take up, raise "பாண்டிலெடுத்த பஃறாமரை" (திருக்கோ.249). 2. ***தூக்கிப் பிடித்தல்;*** to hold up எடுக்கப்பட்ட குடைநிழலிலே (கலித்.9,உரை). 3. ***மேற் கொள்ளுதல்;*** to undertake, take in hand. அந்தச் செயலை எடுத்திருக்கிறேன் 4. ***திரட்டுதல்;*** to recruit "சிலசேனையெடுத் தெழுதிக் கொள்கென்றான்" (திருவிளை.மெய்க்கா.5) 5 ***தெரிந்தெடுத்தல்;*** to select, choose "எடுத்தணி கையே நின்வளை யார்ப்ப" (திருக்கோ.352) 6 ***விலைக்கு வாங்குதல்;*** to buy, as in a bazaar, to purchase, as in auction 7 ***நீக்குதல்;*** to remove take off வண்ணான் ஆடையிலழுக்கெடுப்பான். 8. ***வாயுட்கொள்ளுதல்;*** to take into the mouth, as fish the bait "தூண்டிலெடுத்த வரால்" (திருக்கோ 249). 9. ***எடுத்து வளர்த்தல்;*** to bring up. "ஆண்டிலெடுத்தவரா மிவர்" (திருக்கோ 249) 10. ***வாயிலெடுத்தல்;*** to vomit சாப்பிட்டதெல்லாம் எடுத்துவிட்டான். 11 ***தனக்கென எடுத்துக் கொள்ளுதல்;*** to take to one's self

ம. எடுக்குக, க. எத்து, எர்பு, தெ., பட. எதது; எரு. யெடுக; கோத. எட்வ், துட. ஓட், குட. எடி, எடிப், து. எர்புனி; கொலா. எத, நா. எத்த. பர். எதிப், கோண். அத்தானா, குரு. யெத்த, பிரா. கேபிங்

*[உல் → எல் → எள் → எடு. எடு = மேலெடு, தூக்கு, வெளிப்படுத்து நீக்கு]*

மேலையாரிய மொழிகளில் பெருக வழங்குகின்ற educate, elate, erect, eructate, heave, heaven .. முதலிய சொற்களெல்லாம், எகர, ஏகார அடியாய்ப்பிறந்த எழல் அல்லது எடுப்புப் பொருளை உணர்த்துவனவே

ஒ நோ சுவரெடு - to errect a wall எகரம் அல்லது எடுத்தல் என்னுஞ்சொல் எடுப்பாக (உயரமாக) வளர்த்தல், வெளியே எடுத்தல், வெளியே எடுத்து நடதத்ல், வெளியே என்னுங்கருத்துகளை முறையே தழுவும் ஒ நோ· *L* educo; *E* educate, to bring up; to draw out the mental powers of, as a child. *L* educo, *E* educe, to draw out; *L* educo, duco(aphesis) to lead, *L* e ex; *Gr* ec ex, *E* ex, out, out of

**எடு²-த்தல்** *edu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***சுமத்தல்;*** to bear, carry, hold "நிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கை" (மதுரைக்.215). 2 ***நிறுத்துதல்;*** to weigh (in a balance). 3. ***உண்டாக்குதல்;*** to produce, cause "கௌவை யெடுப்பவள்போல்" (கலித்.109). 4. ***கட்டுதல்;*** to build, raise up, as a wall "உதிரநீராற் சுவரெடுத்து" (தேவா.838)

ம. எடுக்குக, கூ. எத (குழந்தையை இடுப்பில் வைத்தல்); குவி. எதலி, தெகலி (தோளில் வைத்துத்தூக்குதல்).

*[உல் → எல் → எள் → எடு. எல் = சுமத்தல், நிறுத்துதல், உண்டாக்குதல்.]*

**எடு³-த்தல்** *edu-,* 4 செ குன்றாவி. (v.t.) 1. ***உரத்துச் சொல்லுதல்;*** to utter in a high pitch of voice. "எடுத்தல் படுத்த னலித லுழப்பின்" (நன்.88). 2. ***குரலெடுத்துப் பாடுதல்;*** to sing in a loud voice. "கொடிச்சிய ரெடுத்த வின்குறிஞ்சி" (கம்பரா.சித்திர.24) 3. ***மேம்படுத்துரைத்தல்;*** to speak highly "மழைதரு மிவளென .. நங்கையையெடுத்தலும்" (மணி.22,94). 4. ***எடுத்துக் காட்டுதல்;*** to adduce, as an argument உண்மையையெடுத்துச் சொன்னான். 5. ***குறிப்பிடுதல்;*** to bring in, introduce, as one's name. அவன் பெயரை யெடுத்தால் பொங்கிக் கொண்டு வருகிறது.

*[உல் → எல் → எள் → எடு. உல் = உரத்துச்சொல்லுதல், பாடுதல் மேம்படுத்துரைத்தல்.]*

**எடு⁴-த்தல்** *edu-,* 20 செ கு.வி. (v.i) 1. ***புடைபருத்தல்;*** to be inflated, as a monkey's cheeks "மந்தி கவுளெடுக்கச் சுவைத்து" (காசிக்.காசிப் 49). 2. ***மேல்நோக்கியிருத்தல்;*** to be high, as the forehead, to be prominent, as the nose or ear. எடுத்த செவி (பெரும்பாண்.80, உரை.). 3. ***பொருந்துதல்;*** to be associated with "மல்லெடுத்த தோள்" (பாரத பதினெட்.25). 4. ***மேலெழுந்துவருதல்*** (படையெடுத்தல்); to invade 'எடுத்து வந்து...... வீரபாண்டியனை முடித்தலை கொண்டு' (S.1.1 iii 214) 5. ***தகுதியாதல்;*** to be fit, proper.

*[உல் → எல் → எள் → எடு. உல் = பருத்தல், மேல்நோக்கியிருத்தல், மேலெழுந்துவருதல்.]*

**எடுக்கல்** *edu-k-kal,* பெ. (n) 1. ***தூக்குகை;*** lifting "எடுக்கல் செல்லா துழப்பவன் போல" (கலித்.38). 2. ***அளவிட்டறிகை;*** conceiving, comprehending "ஞானங்களா லெடுக்க லெழாத வெந்தாய்" (திவ்.திருவாய்.2,3,5)

*[எடு → எடுக்கல்.]*

**எடுகூலி** *edu-küli,* பெ. (n) ***சுமைகூலி;*** porterage, hire for carrying a burden. அவனுக்கு எடுகூலி கட்டாது.

*[எடு + கூலி]*

**எடுகூறு** *edu-küru,* பெ. (n) ***பங்கு பிரித்தல்*** (சுக்கிர நீதி.12); partition, a part to be set aside, a surplus (taken by any one beyond his actual share) (சேரநா.).

ம. எடுகூறு.

*[எடு + கூறு]*

**எடுத்தகை** *eduttakai,* பெ. (n) 1. ***ஓங்கியகை;*** raised hand 2. ***அதிகாரம்;*** power அவனுக்கு அவ்வளவு எடுத்தகையா? (இ வ.)

க. எத்துகை, எத்து கெய்

*[எடு → எடுத்த + கை]*

**எடுத்தடிமடக்கு** *eduttadi-madakku,* பெ. (n) 1. ***ஒருவர் சொன்னதைக் கொண்டே மறுக்கை;*** confuting a person by using his own arguments 2. ***முன்சென்று தடுக்கை;*** forestalling a person in word or action in order to thwart him 3 ***இடையிற் றடுத்துப் பேசுகை;*** interrupting one while he is speaking 4. ***அஞ்சவேண்டிய தற்கு அஞ்சாமை;*** rashness 5. ***விரைவு*** *(யாழ் அக ). suddenness*

*[எடு + எடுத்து + அடிமடக்கு]*

**எடுத்தடிவை-த்தல்** *eduttadi-vai-,* 4 செ.கு வி. (vi) 1. ***அடிபெயர்த்து நடத்தல்;*** to raise the foot and step forward, as a child or a feeble person. 2. ***பாதத்தைத் தூக்கி வைத்தல்;*** raising and planting of the foot slowly as do debilitated or sick persons. 3. ***தளர் நடையாய் நடத்தல்;*** taking a leisurely, light walk (சா.அக.).

*[எடுத்து + அடி + வை.]*

**எடுத்தபடி** *edutta-padi,* கு.வி எ. (adv.) 1. ***உடனே;*** immediately, at once, promptly எடுத்தபடி வா. (இ.வ.). 2. ***முன்னணியமின்றி;*** extemporaneously, without previous preparation

ம. எடுத்தபடி.

*[எடுத்த + படி. படி = நிலை.]*

**எடுத்தமொழி** *edutta-moli,* பெ. (n.) 1. ***எடுத்துக்காட்டு;*** illustration, example (Logic) "ஏதுக்களாலு மெடுத்தமொழியாலும்" (தேவா.1178,5). 2. ***உயர்த்திய குரலில் பிறரை அடக்கிப் பேசும் பேச்சு;*** authoritative or dictative terms

*[எடு + எடுத்த + மொழி.]*

**எடுத்தமொழியினெய்தவைத்தல்** *eduttamoliyin-e-yda-vaittal,* பெ (n) (இலக்) ***தான்கூறும் இலக்கியத் திலே இலக்கணமமைந்திருப்பதைக் காட்டுதலாகிய ஓர் உத்தி*** (நன்.14); (Gram) adducing examples from the very work under discussion to illustrate the application of a rule, one of 32 utti

*[எடுத்த மொழியின் + எய்தவைத்தல்.]*

**எடுத்தல்** *eduttal,* பெ. (n) 1. ***நிறுத்தலளவு;*** weight measurement by balance. "எண்ணலெடுத்தல்" (நன்.368) 2. ***எடுத்தலோசை;*** acute accent, sharp tone "எடுத்தல் படுத்த லலித லுழப்பின்" (நன்.88). 3. ***வெளியிலெடுத்தல்;*** to bring out.

*[எடு → எடுத்தல்]*

**எடுத்தலளவை** *eduttal-alavai,* பெ. (n.) ***நிறை*** (நன்.290,விருத்.); weight in a scale.

*[எடுத்தல் + அளவை]*

**எடுத்தலளவையாகுபெயர்** *eduttal-alavai-yāgu-peyar,* பெ (n) ***அளவையாகுபெயர் வகை*** (நன்.290,உரை.); metonymy, in which weight is used for the article weighed, one of four kinds of alavai-y-āgu-peyar

*[எடுத்தல் + அளவை + ஆகுபெயர்.]*

**எடுத்தலோசை** *eduttal-ōsai,* பெ. (n.) ***உயர்த்துக்கூறும் ஓசை;*** acute accent, sharp tone முற்படக் கிளந்தவென எடுத்தலோசையாற் கூறவே (தொல்.பொருள்.1, உரை.)

*[எடுத்தல் + ஓசை]*

**எடுத்தளவு** *eduttalavu,* பெ. (n) ***ஒரு பழையவரி*** (S 1.1.i.103); ancient village cess.

*[எடு → எடுத்து + அளவு]*

**எடுத்தன்** *eduttan,* பெ (n) ***எருது, பொதிமாடு*** (யாழ். அக.); pack ox.

*[எடு → எடுத்தன். எடுத்தல் = சுமத்தல்.]*

**எடுத்தாட்சி** *eduttātci,* பெ. (n.) ***பயன்படுத்தம், வழக்கு;*** usage

*[எடு → எடுத்து + ஆட்சி - எடுத்தாட்சி (எடுத்தாளுதல், பயன்படுத்துதல்).]*

**எடுத்தாள்(ளு)-தல்** *eduttāl-,* 10.செ.குன்றாவி. (v.t) 1. ***வழங்குதல்;*** to use, as utensils; தேநீர் அருந்தகண்ணாடி குவளையை எடுத்தாளுகிறார். 2. ***மேற்கோள் காட்டு தல்;*** to quote as an expression. இவர் திருக்குறளை அடிக்கடி எடுத்தாளுகிறார்.

*[எடுத்து + ஆள்.]*

**எடுத்தியல்கிளவி** *eduttiyal-kilavi,* பெ. (n.) ***மேற்கோள் காட்டுதல்;*** illustration ''எடுத்தியல் கிளவியோ டேதுக் காட்டி'' (பெருங்.உஞ்சை.35,143).

*[எடுத்து + இயல் + கிளவி ]*

**எடுத்து** *eduttu,* பெ (n) ***சுமை*** (யாழ்.அக.); burden

*[எடு → எடுத்து ]*

**எடுத்துக்கட்டல்** *eduttu-k-kattal,* பெ (n) 1. ***தாங்கிப் பேசுதல், சார்பாக நின்று கூறுதல்;*** support, buttress அவனுக்காக இவன் எடுத்துக்கட்டிப் பேசுகிறான் (உ.வ ) 2. ***உயர்த்திக் கட்டுதல்;*** to bind or tie up at a considerable height

*[எடுத்து + கட்டல் ]*

**எடுத்துக்கட்டி**[1] *eduttu-k-katti,* பெ. (n) 1. ***கட்டடவகை*** (E), (Arch ) structure raised above the surrounding buildings எதிரிலிச்சோழன் திருவெடுத்துக்கட்டிலே தன் மிசெய்து (S I I vi 492) 2 ***உயரமாகக் கட்டப்பட்ட இடம்;*** high or raised structure. 3 ***ஆடையை வரிந்து கட்டுதல்*** (சேரநா): to tighten the dress around the waist

ம. எடுத்துக்கெட்டி

*[எடு → எடுத்து + கட்டி.]*

**எடுத்துக்கட்டி**[2] *eduttu-k-katti,* பெ. (n) 1. ***சுவரின் தலை வரிக்கட்டு;*** coping, covering course of a wall. 2. ***கைப்பிடிச் சுவர்*** (i m p Pd 163); parapet wall

*[எடுத்து + கட்டி ]*

**எடுத்துக்கட்டி உழுதல்** *eduttu-k-katti-uludal,* பெ. (n) ***ஆழமில்லாமல் உழுவது;*** ploughing at surface level

*[எடுத்து + கட்டி + உழுதல் ]*

**எடுத்துக்கட்டிப்பந்தல்** *eduttu-k-katti-p-pandal,* பெ (n) ***பந்தல் வகை;*** a kind of pandal.

*[எடுத்து + கட்டி + பந்தல் ]*

**எடுத்துக்கட்டு**[1]**-தல்** *eduttu-k-kattu-,* 5.செ.கு.வி (v.i) 1. ***உயரத்துக்கட்டுதல்;*** to raise to a higher level ''தளவரிசை மட்டத்துக்கு மேலேயும் எடுத்துக்கட்டி'' (கோயிலொ.3) 2 ***இல்லாத செயலைத் தொடுத்தல்*** (j), to fabricate, invent 3 ***தாலியை யறுத்துக் கட்டுதல்;*** to remarry, as a widow

*[எடுத்து + கட்டு ]*

**எடுத்துக்கட்டு**[2] *eduttu-k-kattu,* பெ. (n) 1. ***கட்டுக்கதை*** (யாழ்ப் ); fable 2 ***புதுப்புனைவு*** (வின் ); invention, coining as of a word 3 ***பின்னின மயிரைச் சுருட்டிக்கட்டும் கட்டு;*** coil of braided hair on the back or top of the head

*[எடுத்து + கட்டு ]*

**எடுத்துக்காட்டல்** *eduttu-k-kāttal,* பெ. (n) 1 ***சான்று காட்டுகையாகிய ஓர் உத்தி*** (நன் 14); citing examples for rules laid down or opinions expressed, one of 32, utti. 2. ***நோயுற்ற காலத்தில் குணம் குறி முதலியவை களை வெளிப்படையாகக் காட்டுதல்;*** indicating or exhibiting symtoms prominently when suffering an ailment. (சா அக )

*[எடுத்து + காட்டல்.]*

**எடுத்துக்காட்டு** *eduttu-k-kāttu,* பெ. (n) 1. ***மேற்கோள்;*** citation, quotation 2. ***சான்று;*** example, illustration ''தீயவெடுத்துக் காட்டாவன'' (மணி.29,325).

*[எடுத்து + காட்டு ]*

**எடுத்துக்காட்டுவமை** *eduttu-k-kāttuvamai,* பெ. (n) ***உவமை பொருள் என்னும் இரண்டும் தனித்தனி ஒவ்வொரு தொடராய் உவமஉருபு இன்றி வரும் அணி;*** figure of speech containing a statement in a sentence, with an illustration forming another sentence, the two sentences standing contiguously without any sign of comparison between them

*[எடுதது + காட்டு + உவமை.]*

**எடுத்துக்காட்டுவமையணி** *eduttu-k-kāttuvamaiyani,* பெ. (n) ***எடுத்துக்காட்டுவமை*** பார்க்க; see *eduttu-k-kāttuvamai* (ஆ அக.)

*[எடுத்து + காட்டு + உவமை + அணி.]*

**எடுத்துக்காரர்** *eduttu-k-kārar,* பெ. (n) ***பொதிமாட்டுக் காரர்*** (யாழ்ப்.); those who rear or drive pack cattle.

*[எடுத்து + காரர். எடுத்து = சுமை, பொதி.]*

**எடுத்துக்கொட்டி** *eduttu-k-kotti,* பெ (n) ***ஒரு வகை நெல்லாயம்*** (s i i 89), tax paid in kind, esp paddy

*[எடுத்து + கொட்டி ]*

**எடுத்துக்கொள்(ளு)-தல்** *eduttu-k-kol-,* 13.செ.குன்றாவி (v t) 1 ***ஏற்றுக்கொள்ளுதல்;*** to accept, admit, approve 2 ***தூக்கிக் கொள்ளுதல்;*** to take up குழந்தையை எடுத்துக்கொள் 3 ***தத்தெடுத்தல்;*** to adopt as a child அந்தப் பணக்காரர் ஒரு பிள்ளையை எடுத்துக் கொண்டிருக்கிறார். 4 ***இறப்பு வாயிலாகக் கடவுள் அழைத்துக் கொள்ளுதல்;*** (Chr ) to take into Himself by death, as God என் பிள்ளையைக் கர்த்தர் எடுத்துக் கொண்டார் (இ வ.).

தெ. எத்து கொனு.

*[எடுத்து + கொள்.]*

**எடுத்துக்கொள்ளல்** *eduttu-k-kollal,* பெ (n) ***உட்கொள்ளல், அருந்தல்;*** taking in, eating இவர் இரண்டு நாளாய் உணவெடுத்துக் கொள்ளவில்லை. (இ.வ.).

*[எடுத்து + கொள்ளல்.]*

**எடுத்துக்கோடல்** *eduttu-k-kōdal,* பெ. (n.) ***தொடக்கம்*** (தொல் சொல் 397,சேனா.); beginning.

*[எடுத்து + கோடல் ]*

**எடுத்துக்கோள்** *eduttu-k-kōl*, 1. ***சான்று;*** example "எடுத்துக் கோளும் வாய்ந்தன்று" (ஞானா.51,15). 2. ***எடுத்துக்கோள்வரி*** பார்க்க; see *eduttu-k-kōlvari* "எடுத்துக்கோளை யிசைக்குங் காலை" (சிலப். 8,108,உரை.)

*[எடுத்து + கோள்.]*

**எடுத்துக்கோள்வரி** *eduttu-k-kōl-vari*, பெ. (n) ***கையற வெய்தி வீழ்தலைக் கண்டு பிறர் எடுத்துக்கொள் ளும்படி நடிக்கும் நடம்;*** theatrical action of swooning in extreme anguish in order to be lifted up by others "அடுத்தடுத்தவர்முன் மயங்கிய மயக்க மெடுத்தவர் தீர்த்த வெடுத்துக் கோள்வரியும்" (சிலப் 8,108).

*[எடுத்து + கோள் + வரி.]*

**எடுத்துச்செலவு** *eduttu-c-celavu*, பெ. (n) ***படையெ டுத்துச் செல்லுகை;*** leading forth an army with a view to invasion "மண்ணசை வேட்கையால் எடுத்துச் செலவு புரிந்த வேந்தன்மேல்" (தொல். பொருள்.புறத் 1,இளம்பூ.).

*[எடுத்து + செலவு ]*

**எடுத்துச்சொல்(லு)-தல்** *eduttu-c-col-*, 8 செ குன் றாவி. (v t) 1. ***விளக்கமாகக் கூறுதல்;*** to explain clearly. 2. ***சிறப்பித்துக் கூறுதல்;*** to extol, eulogize 3. ***அறிவுரை சொல்லுதல்;*** to advise.

ம. எடுத்து பரயுக.

*[எடுத்து + சொல் ]*

**எடுத்துத்தொடு-த்தல்** *eduttu-t-todu-*, 17 செ குன் றாவி (vt) 1. ***இல்லாததைக் கட்டிக்கூறுதல்;*** to fabricate, concoct 2 ***பொய் வழக்குப் பிணைத்தல்;*** to invent, as a cause of quarrel or litigation

ம. எடுத்து நடத்துக

*[எடுத்து + தொடு ]*

**எடுத்துநிலை** *eduttu-nilai*, பெ. (n) ***போயினதை மீட்டும் நிலை நிறுத்துகை;*** rehabilitation "எடுத்து நிலையரிதென வேதுக் காட்டி" (பெருங்.மகத.19,89).

*[எடுத்து + நிலை ]*

**எடுத்துப்பிடி-த்தல்** *eduttu-p-pidi-*, 4.செ.குன்றாவி. (vt) 1. ***தூக்கிப்பிடித்தல்;*** lifting and holding aloft 2 ***குற்றத்தைப் பெரிதாக்கித் தூற்றுதல்;*** to hold up and expose to view, as little faults 3. ***திடப்படுத்துதல்;*** to encourage, strengthen, establish

*[எடுத்து + பிடி.]*

**எடுத்துப்பேசு-தல்** *eduttu-p-pēsu-*, 5 செ குன்றாவி. (v.t) 1. ***உரத்துப்பேசுதல்;*** talking loudly 2. ***மற்றவர் வழக்கினை வழக்கறிஞன் எடுத்துப்பேசுதல்;*** to speak as an advocate, pleading on behalf of a person. 3. ***ஒரு செய்தியைக் குறித்துப் பேசுதல்;*** to treat of, speak on a subject 4 ***புகழ்ந்து கூறுதல்;*** to praise, commonly one who is absent 5. ***பிறர் குற்றங்களைச் சுட்டிக்காட்டித் தூற்றுதல்;*** to make open rebuke pointing the mistakes or faults one by one.

ம. எடுத்துப்பரயுக.

*[எடுத்து + பேசு.]*

**எடுத்துப்போடு[1]-தல்** *eduttu-p-pōdu-*, 14 செ குன் றாவி. (vt) 1. ***நீக்கி விடுதல்;*** to deprive of office, turn out of situation, remove அவன் பெயரைப் பட்டியி னின்று எடுத்துப்போடு (உ வ). 2 ***திடுக்கிடச் செய் தல்;*** to startle அந்தக் கடுஞ்செய்தி என்னை எடுத்துப் போட்டது

*[எடுத்து + போடு.]*

**எடுத்துப்போடு[2]-தல்** *eduttu-p-pōdu-*, 20.செ கு வி. (vi) ***விலாப் புடைக்க மூச்சு வாங்குதல்;*** to alternate contraction and relaxation, as of intercoastal muscles in children affected with sparm குழந்தைக்கு விலா வெடுத்துப்போடுகிறது (உ.வ.). (சா.அக ).

*[எடுத்து + போடு ]*

**எடுத்துமொழி-தல்** *eduttu-moli-*, 2.செ குன்றாவி. (vt.) ***விளங்கச் சொல்லுதல்;*** to explain clearly "இருந்தவற் கெல்லா மெடுத்து மொழிந்தான்" (சீவக.518).

*[எடுத்து + மொழி ]*

**எடுத்துரை-த்தல்** *edutturai-*, 4.செ.குன்றாவி. (vt.) ***எடுத்துமொழி-தல்*** பார்க்க; see *eduttumoli-*. "விழும நிலை யெடுத்துரைப்பினும்" (தொல் பொருள்.39).

*[எடுத்து + உரை ]*

**எடுத்துரைமலைவு** *edutturai-malaivu*, பெ. (n) ***செய் யுட் குற்றங்களுள் ஒன்று*** (யாப்.வி.525); rhet. defect in poetry (செ அக ).

*[எடுத்து + உரை + மலைவு.]*

**எடுத்துவளர்-த்தல்** *eduttu-valar-*, 4.செ.குன்றாவி. (vt) ***பிறர் குழந்தையை ஊட்டி வளர்த்தல்;*** to bring up, as a destitute child

ம. எடுத்து வளர்த்துக.

*[எடுத்து + வளர்.]*

**எடுத்துவாலன்** *eduttuvālan*, பெ. (n.) ***நீண்ட வாலுள்ள குருவி;*** long tail bird



எடுத்துவாலன்

**எடுத்துவிடல்** *eduttu-vidal,* பெ. (n) 1. ***வேரோடு களைதல்;*** (lit) rooting out or eradicating 2. ***நோயைக் கொஞ்சமேனு மில்லாமல் குணப்படுத்தல்;*** (in medicine) curing a disease. (சா.அக.).

*[எடுத்து + விடல்.]*

**எடுத்துவிடு-தல்** *eduttu-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***படையெடுத்தல்;*** to lead a compaign, conduct on expedition "காங்கேயன் தெற்கே யெடுத்துவிட்ட போது" (திவ்.கண்ணிநுண் 3,வியா.). 2 ***படை நீங்கு தல்*** (பு.வெ.6,30,உரை); to withdraw.

*[எடுத்து + விடு.]*

**எடுத்தெறி-தல்** *edutteri-,* 2 செ குன்றாவி. (v.t.) 1 ***பறை முழக்குதல்;*** to beat, as a drum 2. ***பொருட்படுத் தாமை;*** to disregard one's advice or commands நான் சொன்னதை அவன் எடுத்தெறிந்துவிட்டான். (உ.வ.).

ம. எடுத்தெறியுக.

*[எடுத்து + எறி]*

**எடுத்தேத்து** *edutēttu,* பெ. (n.) ***புகழ்ச்சி;*** praise, eulogy "கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்" (நாலடி.163).

*[எடுத்து + ஏத்து.]*

**எடுத்தேற்றம்** *eduttērram,* பெ. (n.) ***குறிப்பின்மை*** (வின்.); random chance.

*[எடுத்து + ஏற்றம்]*

**எடுத்தேற்றி** *eduttērri,* பெ. (n) 1. ***பொருட்படுத்தாமை;*** disregard, அவன் என்னை எடுத்தேற்றியாய்ப் பேசினான். (இ.வ.). 2. ***இணக்கமின்மை*** (வின்.); discrepancy, discord

*[எடுத்து + ஏற்றி]*

**எடுத்தேறி** *eduttēri,* பெ. (n.) ***மிகுமுயற்சி;*** over effort மெனக்கெட்டு இதுக்கென்றே எடுத்தேறிப் போகணும் அங்கெ. (இ.வ.).

*[எடுத்து + ஏறி.]*

**எடுத்தேறு** *eduttēru,* பெ. (n.) ***எடுத்தெறிகை;*** beating as of a drum "எடுத்தே றேய கடிப்புடை யதிரும்" (பதிற்றுப்.84).

*[எடுத்து + ஏறு]*

**எடுத்தோத்து** *eduttōttu,* பெ. (n) 1. ***எடுத்து ஓதுகை;*** exposition "எடுத்தோத்துரையின்" (பெருங்.மகத.15,11). 2 ***எடுத்துக்கூறும் நெறி;*** expositive statement 'இந்நூலுள் எடுத்தோத்தே இலேசேயென்று இவற்றான் முடியாது நின்றனவெல்லாம்' (இறை.59,உரை.).

*[எடுத்து + ஒத்து.]*

**எடுப்பார்கைப்பிள்ளை** *eduppār-kai-p-pillai,* பெ. (n.) ***யாவர்க்கும் வசப்படக்கூடியவன்;*** simpleton, one who is easily guided by others, as an infant in arms.

*[எடுப்பார் + கை + பிள்ளை.]*

**எடுப்பார் பிடிப்பார்** *eduppār-pidippār,* பெ. (n.) ***நோயாளிக்குத் துணையாளர்;*** persons attending or waiting upon a patient 'எடுப்பார் பிடிப்பாரிருந்தால் இளைப்புங் களைப்பு மெத்த வுண்டு' (சா.அக.).

*[எடுப்பார் + பிடிப்பார்]*

**எடுப்பானவன்** *eduppānavan,* பெ. (n) 1. ***தோற்றப் பொலிவுள்ளவன்;*** conspicuous personality 2. ***இடம் பக்காரன்*** (வின்.); one who lives above his rank or circumstances 3. ***செருக்கன்;*** haughty man.

*[எடுப்பு + ஆனவன்.]*

**எடுப்பு**[1] *eduppu,* பெ. (n) ***இசைக்கிளை ஐந்தனு ளொன்று*** (பெரியபு.ஆனாய.26,உரை.); one of five iśai-k-kilai.

ம. எடுப்பு.

*[எடு → எடுப்பு.]*

**எடுப்பு**[2] *eduppu,* பெ. (n) 1. ***உயரம்;*** elevation வீடு எடுப்பாயிருக்கிறது (உ.வ.). 2. ***ஏற்றம்;*** superiority. "ஈடும் எடுப்புமி லீசன்" (திவ்.திருவாய்.1,6,3). 3. ***கண்டெடுக்கும் புதையல்;*** buried treasure 'இவன் எடுப்பெடுத்தான்' (ஈடு.8,1,3). 4. ***வழிமுறை;*** device, plan, scheme அவன் நல்ல எடுப்பு எடுத்தான் (இ.வ.). 5. ***தொடங்கின செயல்;*** undertaking எடுத்த எடுப்பு விடான். (இ.வ.). 6. ***இறுமாப்பு;*** pride எடுப்பாய்ப் பேசுகிறவன். 7. ***மேட்டிமை;*** high pretention, style of living above one's rank or circumstances எடுப்பானவன் அவன் (உ.வ.). 8. ***பழிப்பு;*** abusive language, censure. 9. ***நால்வகையான தாளத் தொடக்கமுறை;*** time when the song is begun as compared with the time when tālam begins, of four kinds. 10. ***விளைநிலப்பரப்பு;*** plot of cultivated land. 11. ***தத்து;*** adoption.

ம. எடுப்பு.

*[எடு → எடுப்பு.]*

கிழங்கெடுத்தல், முள்ளெடுத்தல் முதலிய வழக்குகள் வெளிப்படுத்தற் பொருளைக் குறித்தல் காண்க. Cf, E, Gr epi, *Sans* ap, *L* ob, on. ஆங்கிலத்தில் Elevate, erect, edify, educate, elicit போன்ற சொறகளும், E, ex-, முதலிய முனனொட்டுகளும், ஏகார முதனிலையைக் கொண்டு மேற்படுத்தல் எடுத்தல் வெளிப்படுத்தல முதலிய பொருள்களை உணர்த்தல காண்க (சு.வி.81).

**எடுப்பு**[3]**-தல்** *eduppu-,* 5.செ குன்றாவி. (v.t.) 1. ***துயிலெழுப்புதல்;*** to awake, rouse from sleep. "ஊர்துயிலெடுப்பி" (சிலப்.4 79). 2. ***இசை யெழுப்புதல்;*** to raise, produce, as harmonious sounds from an instrument. "மகரவீணைத் தெள்விளி யெடுப்பி" (சீவக.608). 3. ***போக்குதல்;*** to dispel, drive away, banish. "அரவம் வந்தெடுப்புமே" (கலித்.70).

*[எழுப்பு → எடுப்பு.]*

எடுப்புச்சாப்பாடு *eduppu-c-cāppādu,* பெ. (n) 1. ***உணவகத்திலிருந்து வீட்டிற்கு எடுத்துவரும் உணவு;*** meal taken from a hotel to the residence of a person (Mod.) 2. ***எடுப்புச் சோறு*** பார்க்க; see *eduppu-c-cōṟu*

*[எடுப்பு + சாப்பாடு]*

எடுப்புச்சாய்ப்பு *eduppu-c-cāyppu,* பெ. (n) 1. ***ஒப்புரவான நடை;*** gentle and obliging behaviour consistent with one's dignity 2. ***உயர்வு தாழ்வு;*** ups and downs.

*[எடுப்பு + சாய்ப்பு]*

எடுப்புச்சாய்வு *eduppu-c-cāyvu,* பெ. (n.) ***எடுப்புச் சாய்ப்பு*** பார்க்க; see *eduppu-c-cāyppu.* (ஆ.அக.)

*[எடுப்பு + சாய்வு]*

எடுப்புச்சீட்டு *eduppu-c-cīṭṭu,* பெ. (n) 1. ***குலுக்குச் சீட்டு;*** chit fund conducted on the lottery system (Tinn.) 2. ***ஏலச்சீட்டு;*** chit fund conducted on the auction system. (Madr.) (செ.அக.).

*[எடுப்பு + சீட்டு]*

எடுப்புச்சோறு *eduppu-c-cōṟu,* பெ. (n) ***விருந்திற்கு வரவியலாத உறவினருக்கு அனுப்பும் உணவு*** (Tinn.), meal sent to a relative who is unable to attend a special dinner.

*[எடு → எடுப்பு + சோறு.]*

எடுப்புண்(ணு)-தல் *eduppun-,* 12.செ.கு.வி (vi) ***எடுபடுதல்;*** to be taken up, absorbed, engrossed "அவன் வைலட்சண்யத்திலே யெடுப்புண்டு பின்பற்றித் திரிகிற இவளை" (திவ் பெரியாழ்.3,7,5,வ்யா, பக்.713).

*[எடுப்பு + உண்]*

எடுப்புத் தண்ணீர் *eduppu-t-tannīr,* பெ. (n) ***நடவு செய்த பின் விடப்படும் முதல் தண்ணீர்;*** first watering after transplanting in the field

*[எடுப்பு + தண்ணீர்.]*

எடுப்புத்தேர் *eduppu-t-tēr,* பெ. (n) ***சுமந்து செல்லப்படும் தேர்*** (வின்); portable car for the conveyance of an idol on men's shoulders

*[எடுப்பு + தேர்]*

எடுப்புப் பிள்ளை *eduppu-p-pillai,* பெ. (n) 1. ***கமுக்கமாக மாற்றி வைக்கப்பட்ட பிள்ளை;*** child substituted by trick in place of the geniune child 2. ***கண்டெடுத்த பிள்ளை;*** child found witnout a parent or anyone to take care for it, foundling. 3. ***கைவிடப்பட்ட பிள்ளை;*** child left wihout resources - destitute child. 4. ***வாங்கி வளர்த்த பிள்ளை;*** child received in adoption and treated as one's own child - adopted child. (சா.அக.).

*[எடுப்பு + பிள்ளை.]*

எடுப்புழவு *eduppuḻavu,* பெ. (n) ***மானாவாரியில் விதைப்பதற்கு முன்பு உழும் உழவு;*** preseasonal ploughing of the rainfed arable land. "எட்டு உழவு போட்டாலும் ஒரு எடுப்பொழவு போடுறதுக்குக் காணாது" (சொலவம்).

*[எடுப்பு + உழவு]*

எடுப்பெடு-த்தல் *eduppedu-,* 4 செ.கு.வி (vi) 1. ***ஒரு வழிவகை மேற்கொள்ளுதல்;*** to contrive a way, devise a plan 2. ***படையெடுத்துப் பொருதல்;*** to lead an army and fight "எடுப்பெடுத்துய்ய வென்னா" (சீவக.450). 3. ***அரியதை முயலுதல்*** (யாழ்); to attempt the impossible 4. ***செருக்குக் கொள்ளுதல்;*** to put on airs

*[எடுப்பு + எடு]*

எடுபட்ட *edupatta,* பெ.எ. (adj.) ***அழிந்துபோன, தொலைந்த;*** lost, destroyed, removed எடுபட்ட சிறுக்கி (வசவு). அந்தக் கூட்டம் எடுபட்டுப் போச்சி. (வட்.வழ சொல்லக.)

எடுபட்டவன் *edu-pattavan,* பெ. (n) ***ஒழுக்கக் கேட்டால் கூட்டத்திலிருந்து விலக்கப்பட்டவன்*** (இ.வ); one who has been expelled from society for violation of its rules, outcaste

*[எடு + பட்டவன்]*

எடுபடு¹-தல் *edu-padu-,* 20 செ.கு.வி. (vi) 1. ***நீக்கப்படுதல்;*** to be taken out, be abolished 2. ***நிலைபெயர்தல்*** (வின்), to be detached, displaced, dislodged. குடியெல்லாம் எடுபட்டுப் போயிற்று (இ.வ). 3. ***அதிர்தல்;*** to be stirred அவள் பேச்சினால் அயலெல்லா மெடுபடுகின்றது (இ.வ) 4. ***வழக்கில் தோற்றுப் போதல்;*** to be overcome in argument, refuted உன்னால் நான் எடுபட்டுப் போவேனோ? 5. ***விற்றழிதல்;*** to be spent, sold out வந்த சரக்கெல்லாம் எடுபட்டுவிட்டன. 6. ***கைக்கொள்ளப்படுதல்.;*** to be taken over வண்டியிலிருந்து சரக்கெல்லாம் எடுபட்டு விட்டன. 7. ***மேம்படுதல்;*** to be exalted or elevated. அவன் பணத்தினால் எடுபடுகிறான். (இ.வ.).

ம. எடுபெடுக; தெ. எடுபடு (பிரித்தல்).

*[எடு + படு.]*

எடுபடு²-தல் *edu-padu-,* 20 செ.கு.வி (vi) 1. ***திக்கற்றுப் போதல்;*** to become destitute 2. ***முறைதவறுதல்;*** to violate the rules of conduct (செ.அக.)

ம. எடுபெடுக; தெ. எடபடு (to separate)

*[எடு + படு.]*

எடுபாடு¹ *edu-pādu,* பெ. (n.) 1. ***குலைவு;*** degeneration 2. ***நிலையின்மை;*** instability.

*[எடு + பாடு.]*

எடுபாடு² *edu-pādu,* பெ. (n) 1. ***புகழ்ச்சி, சீர்மை;*** renown, eminence, notoriety 2. ***நிமிர்வு;*** uprightness. 3. ***பகட்டு;*** gaiety in dress, ostentation, as in a woman.

*[எழு → எடு + பாடு]*

**எடுபிடி** *edu-pidi,* பெ. (n) 1 ***முயற்சி.***(சங் அக.); great activity 2. ***விருது;*** appendage 3. ***மதிப்பு;*** respect 4 ***துணைப் பணியாளர்;*** attendants

ம. எடுபிடீன்னு

*[எடு + பிடி.]*

**எடுவு-தல்** *eduvu-,* 5.செ குன்றாவி. (v.t.) ***எடுத்தல்;*** to hold up "வரைகுடை யெடுவிய நெடியவர்" (திவ் பெரி யதி.8,7,3)

*[எடு + உ → எடுவு ]*

**எடை[1]** *edai,* பெ (n) 1 ***துயிலெழுப்புதல்;*** rousing one from sleep "துயிலெடைநிலை" (தொல் பொ ருள்.91) 2. ***மிகுதல்;*** lengthening, increasing அள பெடை (இலக்.).

*[ஏ → ஏல் → எல் → எள் → எடு → எடை ]*

**எடை[2]** *edai,* பெ (n) 1 ***நிறுக்கை.***(வின்.); weighing 2. ***நிறையளவு;*** standard weight 3 ***25 பலங்கொண்ட நிறுத்தலளவு;*** measure of weight = 25 palams 4 ***விறகின் நிறையளவு*** (c g), weight for weighing firewood = 54 lbs

ம. எட, க., தெ. எத்து

*[எடு → எடை ]*

**எடைக்கட்டு** *edai-k-kattu-,* பெ (n) ***நிறுக்கப்படும் பொருளுக்கு அதைத்தாங்கும் கலத்தின் கழிவு நிறை;*** allowance made for the weight of a receptacle before weighing its contents

*[எடை + கட்டு ]*

**எடைக்கெடை** *edai-k-kedai,* பெ (n) ***நிறைக்கு நிறை.*** (வின் ), like weight, even weight

*[எடை + கு + எடை ]*

**எடைகட்டு[1]-தல்** *edaikattu-,* 5.செ.கு வி (v.i) ***பாலில் நீர்சேர்த்தல்;*** to dilute milk with water இன்று பாலில் எவ்வளவு எடைகட்டப் போகிறீர் (மதுரை வ.).

மறுவ. எடைபோடுதல் (சென்னை.வ ).

*[எடை + கட்டு. எடை = அளவு ]*

பாலின் அளவுக்குச சமமாக நீா கலக்கும முறை எடை கட்டுதல் எனப்பட்டது பாலின அளவுகு இரண்டு எடை கட்டு, மூனறெடை கட்டு என்பன முறையே, இருமடங்கு, மும்மடங்கு எனப் பொருளபடும்

**எடைகட்டு[2]-தல்** *edai-kattu-,* 5 செ குன்றாவி. (v t) 1. ***நிறுத்தல்;*** to weigh 2. ***நிறுக்கும் பொருளின் அடிக்க லத்தினை நிறுத்துக் கொண்டு எடை போடுதல்;*** to allow for the weight of the receptacle while weighing the contents with the receptacle

*[எடை + கட்டு ]*

**எடைபாகம்** *edaipāgam,* பெ. (n) 1 ***நிறுத்தலின் முறை;*** the process of weighing 2. ***இராம தேவர் செய்தவோர் ஊத*** (வாத) ***நூல்;*** treatise on alchemy in Tamil compiled by Ramadēva, a Siddhā (சா அக )

*[எடை + பாகம் ]*

**எடைபோடு-தல்** *edai-pōdu-,* 20 செ கு வி. (v i ) 1 ***பொருள்களை எடையிடுதல்;*** to weigh as measure 2. ***பாலில் நீர் கலத்தல்;*** to dilute milk with water பாலில் எடைபோட்டாயா? (சென்னை.வ )

*[எடை + போடு ]*

**எடைவரி** *edai-vari,* பெ (n) ***எடைகல்லின்மேல் வாங்கப்படும் பழைய அரசிறை.***(கல்வெட்டு); ancient tax on weights

ம. எடவரி

*[எடை + வரி ]*

**எடைவாய்[1]** *edai-vāy,* பெ (n) ***எடைவரி*** பார்க்க; see *edaivari*

*[எடை + வாய் ]*

**எடைவாய்[2]** *edai-vāy,* பெ (n ) ***எடையின் அளவுக்குறி;*** mark or number on measure of weights (ஆ அக ).

*[எடை + வாய் ]*

**எண்[1]** *en,* பெ (n.) 1. ***இலக்கம்*** (சூடா ); number, digit "ஒன்று முதலெட்டீறா மெண்ணுள்" (நன் உபி ரீற்.36) 2 ***கணக்கு;*** mathematics "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" (குறள் 393) 3 ***கணியநூல்*** (சோதிடநூல்); astronomy including astrology "கற் பங்கை சந்தங்கா லெண்கண்" (மணி 27-100).

ம., க. எண்

*[இல் (குத்துதல், பொத்துதல்) → இள் (இழுத்தல், கோடிழுத்தல்) → எள் → எண் = மேலிருந்து கீழ்நோக்கி இழுக்கும் கோடு, கோடுகளின் எண்ணிக்கை, எண்ணிக்கைக் குரிய இலக்கம் ]*

கோடுகளை எண்ணுவதும், கூட்டுவதும், கழிப்பதும், வகுப்ப தும், பெருக்குவதுமாகிய செய்கை நினைவுத்திறனைக கூட்டி ஆராய்ந்து சிநதிககும ஆற்றலை நலகுவதால், எண்ணிககை யைக குறிதத 'எண்' என்னும பெயாசசொல எண்ணிபபார்த்தல (சிந்தித்தல்) எனனும் ஏவல் வினையுமாயிற்று, கணககு, கணியநூல் ஆகியவறறையும் குறிததது

தொனமுது காலத்தில் விரலால் கிடையாகவோ, நெடுககா கவோ கோடு கிழிப்பதே, எணணிககையைக் குறிபபதாக இருந்தது பிறகு புள்ளிகளிட்டும எணணினா மொழியின எழுத்துகளையே எண்களைக் குறிககும குறியீடுகளாகவும் பணடையோர் ஆண்டுள்ளனா எழுத்தைக் கற்பித்த ஆசிரி யரே எண்களையும் (கணககு) கறபிததால், அவரைக் கணக்கா யர் எனறு அழைத்தனர் எணகளாகப் பயன்படுத்தப்பட்டிருநத தமிழ் எழுத்துகளே இன்றைய 1-முதல் 10 வரையிலான இலக்கக் குறியீடுகளாகியுள்ளன

| க | உ | ங | ச | ரு | சா | எ | அ | கூ | ய |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |

இவை, முற்றிலும் தமிழ் எழுததுகளின திரிபு என்பதும், வணிகர் வாயிலாக அரேபியாவில் அறிமுகமானதால், அராபிய எண

கள் எனத்தவறாக வழங்கின என்பதும், அறியத்தக்கன. தமிழ்க் ககரம் 2000 ஆண்டுகளுக்கு முன்பு + என எழுதப்பட்டதால் அதில் பக்கக் கோடுகளிழந்து ஒன்றைக்குறிக்கு (1) குறியீடா யிற்று. இவ்வாறே ஏனையவற்றையும் பழந்தமிழ் எழுத்து வடிவங்களுடன் பொருத்திக் காண்க.

**எண்**[2] *eṇ*, பெ. (n.) 1. ***கணக்கிடுகை*** (சீவக.2353, உரை.); calculation, computation. 2. ***எண்ணம்;*** thought; imagination; intention. ''எண்பிறக் கொழிய விறந்தோய் நின்னடி'' (மணி.11,65). 3. ***சூழ்ச்சி*** (ஆலோசனை); deliberation; counsel. ''எண்சேர்ந்த நெஞ்சத்து'' (குறள். 910). 4. ***அறிவு;*** knowledge. "தொக்கிருந் தெண்ணினா னெண்ணப்படும்'' (நான்மணி.77). 5. ***மனம்;*** mind. ''கலைவலோ ரெண்சுழன்று'' (பாரத.நிவாத.125). 6. ***மதிப்பு;*** esteem. "வீரனை யெண்பெறக் கொணர்வாயென" (பாரத.அருச்.தவ.168). 7. ***வரையறை*** (தொல்.எழுத். 308,உரை.); limit. 8. ***ஏரணம்*** (தருக்கம்); logic. ஏரணங்காணெனென்பர் எண்ணர் (திருக்கோ.நூற்சிறப். உரை.). 9. ***மாற்று;*** fineness of gold or silver as tested by the touchstone. ''எண்ணில்பொன்'' (சீவக.72). 10. ***மந்திரம்;*** mantras. ''பல்பச்சிலையா லெண்ணுண்டு சாத்த'' (பட்டினத்.திருப்பா.பொது.5). 11. ***கலிப்பா உறுப்புகளுள் ஒன்றான அம்போதரங்கம்*** (தொல். பொருள்.452,உரை.); one of the component parts of kali verse.

ம. எண்; க. எணிகெ.

*[எண்ணு → எண். எண்ணு-தல் பார்க்க.]*

**எண்**[3] *eṇ*, பெ. (n.) ***உணவு;*** food. ''எண்ணெனுணவுப் பெயர்'' (தொல்.எழுத்.308).

து. எண்மெ.

*[எள் → எண்.]*

பழங்காலத்தில் எள்ளும் நீருமே உணவாகக் கருதப்பட்டன. இறந்தார்க்கு எட்டாம் நாளில் எள்ளும் நீரும் படைப்பர். கடற்செலவின் போது பலநாள் கெடாத எள்ளுருண்டைக ளையே உணவாக எடுத்துச் செல்வது மரபு.

**எண்**[4] *eṇ*, பெ. (n.) ***எட்டு;*** eight.

ம. எண்; க. எண்ட்டு; து. எண்மொ.

*[எள் → எண். எள் பார்க்க; see eḷ.]*

**எண்**[5] *eṇ*, பெ. (n.) 1. ***வலிமை*** (அக.நி.); strength. 2. ***அறிவு;*** knowledge. 3. ***உண்மை;*** truth.

*[ஏண் → எண்.]*

**எண்**[6] *eṇ*, பெ. (n.) ***எளிமை;*** simplicity, ease.

*[இள் → எள் = எண். இள் = இழிவு, தாழ்வு.]*

**எண்கலையர்** *eṇ-kalaiyar*, பெ. (n.) ***கோயிலுக்குவிடப் பட்ட மாதர், தேவரடியார்*** (அக.நி.); dancing girls attached to a temple, as knowing the 64 kalai. (செ.அக.).

*[எண் + எண் - எண்ணெண் → எண் + கலை + ஆர். எண்ணெண் (8x 8) = 64.]*

**எண்கனப்பூடு** *eṇ-kaṉappūḍu*, பெ. (n.) ***வெங்காயப் பூடு*** (சா.அக.); onion plant.

*[எண் + கனம் + பூடு. எண்கனம் = எட்டடுக்கு.]*

**எண்காற்பறவை** *eṇ-kāṟpaṟavai*, பெ. (n.) ***எண்காற்புள்*** பார்க்க; see *eṇ-kāṟpuḷ.*

*[எட்டு + கால் + பறவை.]*

**எண்காற்புள்** *eṇ-kāṟ-puḷ*, பெ. (n.) ***அரிமாவையும் கொல்லும் வலிமை சான்றதாகக் கருதப்பட்ட*** (சரபம் என்றழைக்கப்பட்ட) ***பறவை;*** fabulous bird capable of killing the lion.

*[எண் + கால் + புள்.]*

இப்பறவைக்கு முற்காலத்தில் எட்டடிப்பறவை என்று பெய ரிருந்தது. எட்டடி நீளமுள்ள பறவை யென்பதை அறியாமல் பிற்காலத்தில் அடியைப்பாதம் என்று பிறழவுணர்ந்து எண்காற் புள் எனப் புதுச் சொல்லைப் படைத்துக் கொண்டனர் போலும்.

**எண்கு** *eṇgu*, பெ. (n.) ***கரடி;*** bear. ''எண்குதன் பிணவோ டிருந்தது போல'' (மணி.16,88).

தெ. எலுகு.

*[இல் → இள் → இண் → இண்கு → எண்கு. எண்கு = கரியது, கரடி.]*



எண்கு

**எண்குணத்தான்** *eṇ-guṇattāṉ*, பெ. (n.) 1. ***கடவுள்;*** God, who has eight attributes. ''எண்குணத்தான் றாளை வணங்காத் தலை'' (குறள்.9). 2. ***அருகன்;*** Arhat. 3. ***சிவன்;*** Lord Śiva. (செ.அக.).

*[எண் (எட்டு) + குணத்தான்.]*

**எண்குணம்** *eṇ-guṇam*, பெ. (n.) ***அருகனெண்குணம்;*** *eight attributes of God.*

*[எண் (எட்டு) + குணம்.]*

**எண்குணன்** *eṇ-guṇaṉ*, பெ. (n.) 1. ***அருகன்*** (திவா.); Arhat. 2. ***சிவன்*** (பிங்.); Śiva.

*[எண் (எட்டு) + குணம்.]*

**எண்குற்றம்** *en-kurram,* பெ (n) *அறிவை மறைக்கும் ஆனால் அருகனை அணுகாத எண்வகைக் குறைகள்;* eight impediments or karmas which obscure one's knowledge and intuition as a cloud obscures the sun, but from which an Arhat is free

*[எண் (எட்டு) + குற்றம் ]*

உண்மை மறைப்பு, மெய்யுணர்வு மறைப்பு, இன்ப துன்ப நுகர்விப்பு, ஆன்மாவை மயக்குதல், வாணாள் வரையறுப்பு, வாழ்நிலை (கதி) வரையறுப்பு, மறுபிறப்புக்கு மூலம், இடையூறு ஆகியவற்றுக்கு வித்தான செயற்பாடுகளை எண்வகைக் குற்றங்களாகச் (தரிசனாவரணீயம், ஞானாவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம்) சமணசமயத்தார் கூறுவர்

**எண்கோணம்** *en-kōnam,* பெ (n) *எட்டுமூலைகளையுடைய பரப்புருவம்;* octagon

ம. எண்கோணம்

*[எண் (எட்டு) + கோணம் ]*

**எண் கோவை** *en-kōvai,* பெ. (n.) *காஞ்சி யென்னும் அரையணி* (சூடா.), waist ornament

*[எண் + கோவை ]*

**எண்சாணுடம்பு** *en-šānudambu,* பெ. (n) *மாந்த உடல்;* human body of eight span, in height when measured by one's own hand

*[எண் (எட்டு) + சாண் + உடம்பு.]*

**எண்சிறப்புள்ளோன்** *en-širappullōn,* பெ (n) *அருகன்* (சூடா.), Arhat, recipient of eight kinds of honour

*[எண் (எட்டு) + சிறப்பு + உள்ளோன் ]*

**எண்சுவடி** *en-šuvadi,* பெ (n) *பெருக்கல்வாய்பாட்டு நூல்;* book of multiplication tables

ம. எண்சுவடி.

*[எண் + சுவடி.]*

**எண்செய்யுள்** *en-ceyyul,* பெ. (n.) *எண்ணாற் பெயர் பெறும் நூல்;* treatise named after number

*[எண் + செய்யுள் ]*

**எண்டிக்கு** *endikku,* பெ. (n) *எட்டுத்திக்கு* பார்க்க; see *ettu-t-tikku*

*[எண் + திக்கு.]*

**எண்டிசை** *en-dišai,* பெ. (n) *எட்டுத்திக்கு* பார்க்க; see *ettu-t-tikku*

ம. எண்டிச.

*[எண் + திசை.]*

**எண்டோளன்** *en-tōlan,* பெ. (n) *எட்டுத்தோள் கொண்ட சிவன்* (பிங்.); Šiva, who has eight shoulders. "எண்டோள் ஈசற்கு எழுபது மாடஞ்செய்தோன்" (திவ்ய-திருமங்கை.)

*[எண் + தோள் + அன்.]*

**எண்டோளி** *en-dōli,* பெ. (n.) *கொற்றவை, காளி* (திவா.); kāḷi, Durga.

*[எண் + தோள் + இ ]*

**எண்ணக்குறிப்பு** *enna-k-kurippu,* 1 *நோக்கம்;* motive, object, intention, design. 2. *உள்ளாசை;* internal desire aspiration (செ.அக.).

*[எண்ணம் + குறிப்பு.]*

**எண்ணங்குலை-தல்** *ennan-kulai-,* 4 செ கு வி. (v.i.) 1. *மனம் கலங்குதல்* (வின்.), to be perplexed in mind 2 *எண்ணம் வீணாதல்;* to be disconcerted in a plan, thwarted in one's expectation 3. *மதிப்புக் கெடுதல்* (வின்.); to lose reputation.

*[எண்ணம் + குலை.]*

**எண்ணங்கொண்டிரு-த்தல்** *ennan-kondiru-,* 3 செ கு வி (v.i.) 1. *நோக்கங் கொண்டிருத்தல்; to intend, purpose 2. நம்பி எதிர்பார்த்தல்,* (வின்.); to entertain hope 3 *மனத்தில் கனவு காணல்;* to build castles in the air 4. *கவலைப்படுதல்* (வின்.); to be anxious, deeply concerned 5. *சிந்தித்தல்* (வின்.); to muse, ponder, ruminate.

*[எண்ணம் + கொண்டு + இரு ]*

**எண்ணப்படு-தல்** *enna-p-padu,* 20.செ.கு.வி. (v.i.) 1. *கணிக்கப்படுதல்;* to be counted, reckoned. 2. *மதிக்கப் படுதல்;* to be esteemed, respected

ம. எண்ணப்பெடுக

*[எண் → எண்ண + படு ]*

**எண்ணம்** *ennam,* பெ (n) 1. *நினைப்பு;* conception, thought, idea "எண்ணந்தடுமாறி" (திருவாச.5,25). 2. *கருத்து;* intention, idea 3. *நாடிய பொருள்;* end, goal "எண்ணியா ரெண்ண மிழப்பர்" (குறள் 494). 4 *மதிப்புரவு;* respect, reverence யாராயினும் அவனுக்கு எண்ணமில்லை (உ வ ). 5 *மதிப்பீடு;* estimation 6 *சூழ்ச்சி* (பிங்.); deliberation; counsel 7 *கவலை;* care, anxiety "எண்ணமிக்கான்" (பெரியபு தடுத்தாட்.54). 8 *நம்பி எதிர்பார்க்கை* (வின்.); hope, expectation 9 *எண்ணிக்கை;* number 10 *கணக்கு;* mathematics

ம. எண்ணம், க. எணிதெ, எண்ணிகெ; துட. ஒண, ஒணம்; குட. எண்ண், து. எண்ணிகெ, எணிகெ, எணெ, எங்கெ, தெ. எனனு, எணிக; பர். எச (எண்), எசவாச், குவி. எசிகீனை.

*[எண் → எண்ணம்.]*

**எண்ணர்** *ennar,* பெ. (n) 1. *கணிதர்;* mathematicians, astronomers 2. *ஏரணர்;* logicians. "ஏரணங் காணென்ப ரெண்ணர்" (திருக்கோ.நூற்சிறப்பு.சங்.அக.). 3. *அமைச்சர்* (பிங்.); king's ministers, counsellors

*[எண் + அர் ]*

**எண்ணல்** *ennal*, பெ. (n) 1. ***கருத்து*** (திவா.); purpose, intention 2. ***கணக்கிடுகை*** (பிங் ); counting 3. ***எண்ணலளவை;*** computation 4. ***கருத்தாய்வு;*** deliberation "நீயே பேரெண்ணலையே" (புறநா.138,6).

*[எண் + அல் ]*

**எண்ணலங்காரம்** *en-n-alangāram*, பெ (n) ***எண்கள் முறையே வரும் ஓர் அணி*** (சி.சி.விநாயக.காப்பு. சிவஞா.); figure of speech, use of terms of number in succession

*[எண்ணல் + அலங்காரம்.]*

**எண்ணலர்** *ennalar*, பெ. (n) ***எண்ணார்*** பார்க்க; see *ennār.*

ம. எண்ணலர்.

*[எண் + அல் + அர்.]*

**எண்ணலளவு** *ennal-alavu*, பெ. (n.) ***எண்ணலளவை*** பார்க்க, see *ennal-alavai.*

*[எண்ணல் + அளவு ]*

**எண்ணலளவை** *ennal-alavai*, பெ. (n) ***இலக்கத்தால் எண்ணுமளவு*** (நன் 290,உரை.); computation, one of four alavai. "எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் எனும் நான்களவையும்" (நன் 368).

*[எண்ணல் + அளவை.]*

**எண்ணவி** *en-n-avi*, பெ. (n.) ***நல்லெண்ணெய்;*** gingili oil. "எண்ணவியரை" (தைலவ.தைல.45).

*[எண் + அவி. எண் = எள். எண்ணவி = எள்ளை அவித்து எடுத்த நெய்மம் ]*

**எண்ணாட்டிங்கள்** *ennāttingal*, பெ. (n) ***எட்டாம் நாள் வளர்பிறைநிலவு;*** crescent moon eight days old. "எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரை...... சிறு குளம்" (புறநா.118).

*[எண் (எட்டு) + நாள் + திங்கள்.]*

**எண்ணாதவன்** *ennādavan*, பெ. (n) 1. ***ஆராய்ச்சி யில்லாதவன்;*** thoughtless man. 2. ***எதையும் பொருட் படுத்தாதவன்*** (கொ.வ.); one who shows no concern, who does not care (செ.அக.).

*[எண் + ஆ + த + அவன். ('ஆ' எ.ம.இ.நி.) எண்ணாதவன் (வினையா.பெ.).]*

**எண்ணாப்பு** *ennāppu*, பெ. (n.) ***இறுமாப்பு*** (நேமிநா.59, உரை.); arrogance, pride. (செ.அக.).

*[எண் + ஆப்பு.]*

**எண்ணாமை** *ennāmai*, பெ. (n) ***மதியாமை;*** disrespect.

*[எண் + ஆ + மை. 'ஆ' எ.ம.இ நி.]*

**எண்ணாயிரம்** *ennāyiram*, பெ. (n.) 1. ***எட்டாயிரம்;*** eight thousand, 8000. 2. ***ஊர்ப்பெயர்;*** place name

ம. எண்ணாயிரம்.

*[எண் + ஆயிரம்.]*

**எண்ணாயிரத்தார்** *en-n-āyirattār*, பெ. (n) ***எண்ணாயிரவர்*** பார்க்க; see *en-n-āyiravar.*

*[எண் + ஆயிரத்தார் ]*

**எண்ணாயிரவர்** *en-n-āyiravar*, பெ. (n) 1. ***சமணரி லொரு தொகுதியார்;*** body of 8,000 jains, who disputed with Sambandhar "எண்பெருங் குன்றத்தெண் ணாயிரவரு மேறினார்கள்" (பெரியபு. திருஞா 855).

*[எண் (எட்டு) + ஆயிரவர்.]*

**எண்ணார்** *ennār*, பெ. (n) ***பகைவர்;*** foes, enemies, those who are supercilious "எண்ணா ரெயில்கண் மூன்றும்" (தேவா.45,2).

*[எண் + ஆ + அர். 'ஆ' (எ.ம இ நி ).]*

**எண்ணாழி** *ennāli*, பெ (n.) ***எட்டு நாழி;*** measure of eight nālis

ம. எண்ணாழி.

*[எண் + நாழி.]*

**எண்ணான்** *ennān*, பெ. (n.) ***உழுந்து;*** black gram.

*[இல் → இள் → எண் → எண்ணான். இள் = கருமை ]*

**எண்ணிக்கை**[1] *ennikkai*, பெ. (n.) 1. ***கணக்கிடுகை;*** numbering 'இந்த எண்ணிக்கையாகிய கால்களால்.' (சங். அக.,திருநெல் பு.சிவபுண்.11). 2. ***மதிப்பு;*** esteem, reverence

ம. எண்ணிக்க; க., து. எண்ணிகெ, தெ. என்னிக.

*[எண் → எண்ணிக்கை. 'கை' பெயரீறு.]*

**எண்ணிக்கை**[2] *ennikkai*, பெ. (n) ***விழிப்புணர்வு, எச்சரிக்கை*** (யாழ்.அக.); caution.

*[எண்ணுதல் = கருதுதல், ஆராய்தல், எண்ணு → எண்ணுகை → எண்ணிக்கை = விழிப்புணர்வு.]*

**எண்ணிடு-தல்** *en-n-idu-*, 18.செ குன்றாவி (vt) 1. ***கணக்கிடுதல்;*** to count, calculate 2. ***வரிசையில் எண் குறித்தல்;*** to allot a number in a series

*[எண் + இடு ]*

**எண்ணிடைச்சொல்** *en-n-idai-c-col*, பெ. (n) ***எண்ணுப்பொருளைக் காட்டும் இடைச்சொல்*** (நன் 429, விருத்.), particle signifying addition or of enumeration "பொய்படும் ஒன்றோ புனை பூணும்" (குறள் 836). இதில் "ஒன்றோ" என்பது எண்ணிடைச்சொல்

*[எண் + இடை + சொல்.]*

**எண்ணியற்பெயர்** *en-n-iyarpeyar*, பெ (n) ***எண்ணாகிய இயல்பு பற்றிவரும் உயர்திணைப் பெயர்*** (தொல்.சொல்.165); (Gram.) noun formed of a numeral மூவர், ஐவர், நூற்றுவர்.

*[எண் + இயல் + பெயர்.]*

**எண்ணியார்** *enniyār,* பெ. (n.) ***நோக்கங்கொண்டவர்;*** designing, scheming persons "எண்ணியாரெண்ண மிழப்பர்" (குறள்.494).

*[எண் → எண்ணி + அவர் - எண்ணியவர் → எண்ணியார்]*

**எண்ணிலார்** *ennilār,* பெ (n) ***எண்ணார்*** பார்க்க, see *ennār.* "எண்ணிலா ரெயின் மூன்று மெரித்த" (தேவா. 221,4).

*[எண் (எண்ணுதல்) + இல் + ஆர் 'இல்' - எ ம இ நி]*

**எண்ணிலி** *en-n-ili,* பெ (n) ***எண்ணிலடங்காதது;*** that which is beyond computation "எண்ணிலி யாகிய சித்திகள் வந்து" (திருவாச 49,5).

*[எண் + இலி. இல் → இலி, எ.ம கு வி.ச.பெ]*

**எண்ணிறந்த** *en-n-iranda,* கு.வி.எ. (adj) ***எண்ணமுடியாத;*** innumerable. "எண்ணிறந்த வமணர்களும்" (தேவா.575,10).

*[எண் + இறந்த]*

**எண்ணின் வகுப்பு** *ennin-vaguppu,* பெ (n) *ஒன்று முதல் 36 இடங் கொண்ட எண்வரையுள்ள வாய்பாடு (வின்.), numeration table, extending from one to 36 digits.*

*[எண் + இன் + வகுப்பு]*

**எண்ணீர்** *ennīr,* பெ (n) ***எள்ளும் நீரும்;*** water with sesame seeds, offered to the dead as libation "எண்ணீரா லெனினுமிறந்தோர்கட னல்க" (கூர்மபு.உத்.21,15).

ம. எண்ணீர்.

*[எள் + நீர் (உம்மைத்தொகை)]*

**எண்ணு-தல்** *ennu-,* 12 செ குன்றாவி (v t) 1 ***நினைத்தல்*** (பிங்): to think, to ruminate 2 ***ஆராய்தல்;*** to consider, ponder on, weigh mentally "எண்ணித் துணிக கருமம்" (குறள் 467) 3. ***தீர்மானித்தல்*** (பிங்.); to resolve upon, decide, determine 4. ***மதித்தல்;*** to esteem, respect "வெயிலோன் மகற்கு முட னெண்ணத்தகுந் திறலினான்" (பாரத பதினெட் 4). 5. ***உன்னித்தல்;*** to guess, conjecture, surmise 6 ***வழிபடல்;*** to meditate upon "எண்ணி யஞ்செழுத்து மாறி" (சிவப்பிர. உண்மை 47) 7 ***கணக்கிடுதல்;*** to count, reckon "அன்ன கேள்வ ரனேகரை யெண்ணினான்" (உபதே சகா.அயமுகி 59) 8 ***மதிப்பிடுதல்;*** to value "எண்ணற்கரிய முடிவேந்தர்" (பாரத.இராச 32). 9. ***துய்த்தல்;*** to enjoy "எண்ணான் சிவனசத்தை" (சி போ.5,2,1).

ம. எண்ணுக, க. எண்ணு. எணிகெ, துட. ஒண், குட. எண்ண்; து. எண்ணுனி. தெ. என்னு; பர். எத சாத், குவி. எசிகீனை, கூ. இன்பெ, நா. யன்னேர்; குரு. ஆன்னா.

*[எண் = எண்ணுதல், நினைத்தல், ஆராய்தல். எள்ளுக்கு எண் என்று பெயர் "8 எள் கொண்டது 1 நெல்" என்னும் நீட்டலளவைக்கு எள (எண்) அடிப்படை அளவாக இருந்ததால் இதுவே கணக்கிடுதல், ஆராய்தல் பொருள்களில் வளர்ந்தது]*

**எண்ணுப்பெயர்** *ennu-p-peyar,* பெ (n) ***ஒன்றுமுதலாகிய மேல்வாயிலக்கங்களுக்கும் அரை, கால் போன்ற கீழ்வாயிலக்கங்களுக்கும் வழங்கிவரும் பெயர்.*** name for numerical and fractional digits "எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும்" (தொல்.எழுத்.419).

*[எண் + பெயர் - எண்ணுப்பெயர் (எண்களின் பெயர்.).]*

ஒன்று முதல் பத்து வரையிலான இலக்கங்களுக்குப் பெயராக வரும எணணுப்பெயர்களும் அவற்றின் ஒருபொருள் குறித்த பல சொற்களாக வரும் எண்ணுப்பெயாகளும் உலகமொழிகள் பெரும்பாலானவற்றில் ஒருசீராக ஊடாடியிருப்பதை அந்தந்த எண்ணுபபெயா விளக்கங்களில் காண்க

**எண்ணும்மை** *en-n-ummai,* பெ (n) ***எண்ணுப் பொருளில் வரும் "உம்" என்னும் இடைச்சொல்;*** particle 'um' used in the sense of computation

*[எண் + உம்மை.]*

**எண்ணும்மைத்தொகை** *en-n-umai-t-togai,* பெ. (n) ***எண்ணலும்மை தொக்கு வருதல்;*** elliptical compound in which the computation part. 'um' is understood இராப்பகல் (ஆ அக ).

*[எண் + உம்மை + தொகை.]*

**எண்ணுவண்ணம்** *ennu-vannam,* பெ (n) ***எண்ணிடைச்சொல் பயின்றுவரும் வண்ணக்குழிப்பு*** (சந்தம்); (Pros ) rhythm produced bythe frequent use of the enumerative particle. e.g. 'உம்' "எண்ணுவண்ண மெண்ணுப்பயிலும்" (தொல்.பொருள்.540).

*[எண்ணு + வண்ணம்.]*

**எண்ணுறுத்தல்** *en-n-uruttal,* பெ. (n) ***உறுதிப்படுத்துகை*** (சங் அக ); confirming, establishing

*[எண் + உறுத்தல்]*

**எண்ணூல்** *ennūl,* பெ. (n) ***கணக்கு நூல்;*** mathematics. "பன்னுமெண்ணூன் முக்கந்தம் பலவு முறையி னோதினனால்" (காஞ்சிப்பு.சனற்கு.40).

*[எண் + நூல்]*

**எண்ணூறு** *ennūru,* பெ. (n.) ***எட்டு நூறுகள்;*** eight hundreds "இம்மென்னும் முன்னே எழுநூறு மெண்ணூறும்" (தனிப்.).

ம. எண்ணூறு; க. எண்ட்டுநூறு; கூ. எட்நூறி; து. யெண்மனூது; தெ. எனம நூறு, எனமன்னூறு.

*[எண் + நூறு.]*

**எண்ணெட்டு** *en-n-ettu,* பெ. (n.) ***அறுபத்து நான்கு;*** eight eights, i e., sixty four, dist. fr. *'evvettu'.*

*[எண் + எட்டு.]*

**எண்ணெய்** *enney,* பெ. (n.) 1. ***நல்லெண்ணெய்;*** gingili oil. 2. ***எண்ணெய்ப்பொது, நெய்மம்;*** common name for oil. 3. ***எண்ணெய் தரும் ஒரு மரவகை;*** Malabar wood-oil tree, having oil in the pores of the wood, 1. tr. Dipterocar-pus indicus. (L).

ம. எண்ண; தெ., கொலா. நூனெ; கை. யன; எரு. வன்ன; கோத. எண், எண்ணெ; க., து., இரு., துட., பட., குட. எண்ணெ.

நெய்ப்பொரு ளெல்லாவற்றுள்ளும் ஆவின் அல்லது எருமை யின் நெய் ஊட்டமான உணவிற் குரியதாய்த் தலைசிறந்ததாத லால், நெய்யென்னும் பொதுப் பெயரே சிறப்புப் பெயரா யிற்று. முதன் முதலாக எள்ளின் நெய்யைக் குறித்த எண்ணெய் என்னுஞ்சொல், மிகப் பெருவழக்காய் வழங்கியதால் நாளடை வில் தன் சிறப்புப் பொருளை யிழந்து, நெய்யல்லாத நெய்மப் பொருள்களின் பொதுப் பெயராயிற்று. அதனால் தன் பழம் பொருளைக் குறித்தற்கு 'நல்' என்னும் அடைபெற்றது. இத னால், நெய்க்கு அடுத்துச் சிறந்தது நல்லெண்ணெய் என்பது பெறப்படும். ''வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக் குக் கொடு'' என்பது பழமொழி. (செல்வி.74.பிப்.).

''எண்ணெய் முந்துதோ திரிமுந்துதோ'' என்றும் ஒரு பழ மொழி வழங்குகிறது. அகல்விளக்கு, திரி முதலில் தீர்ந்து அவியுமோ! எண்ணெய் முதலில் வறண்டு அவியுமோ! என்று பார்த்தமட்டில் திட்டமாகச் சொல்லமுடியாத நிலையைச் சாக் காட்டு வாயிலில் தவிக்கும் படுகிழட்டுப் பருவமெய்திய மூதாளத்துணைவர்க்குப் பொருத்தி உவமையாக்கிப் பேசுவது உலக வழக்கு.

**எண்ணெய்க்கசடு** *enney-k-kaśadu,* பெ. (n.) *எண் ணெய் மண்டி;* dregs of oil.

*[எண்ணெய் + கசடு.]*

**எண்ணெய்க்காரன்** *enney-k-kāran,* பெ. (n.) *எண் ணெய் விற்பவன்;* oil-monger.

ம. எண்ணக்காரன்; க. எண்ணெகார.

*[எண்ணெய் + காரன்.]*

**எண்ணெய்க்குத்தி** *enney-k-kutti,* பெ. (n.) *சிறிய எண்ணெய்ச் சாடி;* small oil jar. (இ.வ.).

ம. எண்ணக்குற்றி; க. எண்ணெ கடிகெ; பட. எண்ணெமான.

*[எண்ணெய் + குத்தி. குற்றி → குத்தி.]*

**எண்ணெய்ச்சாணை** *enney-c-cāṇai,* பெ. (n.) *எண் ணெய் பூசிய ஒருவகைச் சாணைக்கல்;* stone prepared for sharpening knife etc. by oiling.

ம. எண்ணச்சாண.

*[எண்ணெய் + சாணை.]*

**எண்ணெய்ச்சாயப்படம்** *enney-c-cāya-p-padam,* பெ. (n.) *எண்ணெய் வண்ணப்படம்;* oil painting.

ம. எண்ணச் சாயப்படம்.

*[எண்ணெய் + சாயம் + படம்.]*

**எண்ணெய்ச்சாயம்** *enney-c-cāyam,* பெ. (n.) 1. *எண்ணெயாற் செய்யப்பட்ட வண்ணம்* (ராட்.); oil paint. 2. *எண்ணெயிற்றோய்த்தேற்றுவண்ணம்* (கொ.வ.); colouring substance used in dying a cloth red after soaking it in oil.

ம. எண்ணச்சாயம்.

*[எண்ணெய் + சாயம்.' சாயம் = நிழல், நிறம்.]*

**எண்ணெய்ச்சிக்கல்** *enney-c-cikkal,* பெ. (n.) 1. *எண்ணெய் வயிற்றில் தங்குதலா லுண்டாகும் செரி யாமை* (கொ.வ.); indigestion caused by unassimilated oily food. 2. *எண்ணெய் மயிரினின்று நீங்காமையாலா கும் சிக்கல்* (வின்); greasy, clotted state of the hair. 3. *எண்ணெய் நாற்றம்* (வின்.); oil odour, as obnoxious. 4. *ஆடையிற்பற்றின எண்ணெயழுக்கு;* oily, stained condition of cloth.

ம. எண்ணச்சிக்கல்.

*[எண்ணெய் + சிக்கல்.]*

**எண்ணெய்ச்சுண்டு** *enney-c-cundu,* பெ. (n.) *எண் ணெய்க் கசடு* (வின்.); dregs of oil.

*[எண்ணெய் + சுண்டு.]*

**எண்ணெய்த்தண்டு** *enney-t-tandu,* பெ. (n.) *எண் ணெய் பெய்துவைக்கும் குழாய்;* bamboo tube in which oil is kept. ''முருகுலா மெண்ணெய்த்தண்டும்'' (காஞ்சிப்பு.திருக்கண்.36).

*[எண்ணெய் + தண்டு.]*

**எண்ணெய்த்தருவை** *enney-t-taruvai,* பெ. (n.) *ஒருவ கைப் புல்;* a kind of grass.

ம. எண்ணக்கடகல்.

*[எண்ணெய் + தருவை. தருவை = தருப்பைப்புல்.]*

**எண்ணெய்தேய்த்துக்கொள்(ளு)-தல்** *enney-tëyttu-k-kol/-,* 12.செ.கு.வி. (v.i.) *உடம்பு முழுவதும் எண்ணெய் தேய்த்துக் குளித்தல்;* to smear one's head as well as body and limbs with gingili oil immediately before a bath.

*[எண்ணெய் + தேய்த்து + கொள்.]*

**எண்ணெய்ப்பற்று** *enney-p-parru,* பெ. (n.) *எண் ணெய்ச்சிக்கு* (இ.வ.); adherence of oil or unctuous matter to hair or clothes; greasy substance in food.

*[எண்ணெய் + பற்று.]*

**எண்ணெய்ப்பனையன்** *enney-p-panaiyan,* பெ. (n.) *பனைவிரியன் பாம்பு* (இ.வ.); krait, a small venomous snake, oily in appearance, Bungarus carulens.

*[எண்ணெய் + பனையன்.]*



எண்ணெய்ப்பனையன்

**எண்ணெய்ப்பிசுக்கு** *enney-p-pišukku,* பெ. (n.) ***எண்ணெய்ப்பற்று;*** adherence of oil to hair or clothes.

*[எண்ணெய் + பிசுக்கு.]*

**எண்ணெய்ப்பிணக்கு** *ennney-p-pinakku,* பெ. (n.) ***எண்ணெய் தேய்த்துக் குளித்ததனால் வரும் காய்ச்சல்*** (இ.வ.); fever caused by oil-bath.

*[எண்ணெய் + பிணக்கு]*

**எண்ணெய்ப்புல்லிடு-தல்** *enney-p-pull-idu-,* 18.செ.குன்றாவி. (v.t.) ***நெசவுபாவுக்கு எண்ணெயிடுதல்*** (யாழ்.அக.); to apply oil to the warp, in weaving.

*[எண்ணெய் + புல் + இடு. புல்லிடல் = நன்கு தடவுதல்.]*

**எண்ணெய்மணி** *enney-mani,* பெ. (n) ***கழுத்திலணியும் ஒரு வகை மணி*** (சங்.அக.); kind of plain bead used in necklaces

*[எண்ணெய் + மணி.]*

**எண்ணெய்மரம்** *enney-maram,* பெ. (n) 1. ***மலையாளத்தில் வளருமோர் எண்ணெய்மரம்*** (சா.அக.); tree usually growing in the western ranges of Kerala. 2. ***வழுக்குமரம்;*** slippery post especially for sport event on festival occasion.

*[எண்ணெய் + மரம்.]*

**எண்ணெய் முறித்தல்** *enney-murittal,* பெ. (n.) ***பழுக்கக் காய்ச்சிய இருப்புக் கரண்டியி லிட்டாவது, இரும்பைப் பழுக்கக் காய்ச்சி எண்ணெயில் தோய்த்தாவது, எண்ணெயின் நீர்க்கலப்பு முதலிய குற்றங்களை நீக்கல்;*** removing the admixture of water or other bad qualities in oil, by pouring it into a well-heated large spoon or small vessel made of iron or by dipping into it a piece of red hot iron. (சா.அக.).

*[எண்ணெய் + முறித்தல்]*

**எண்ணெய்மெழுகு** *enney-melugu,* பெ. (n) 1. ***உறைந்த இலுப்பெண்ணெய் அல்லது தேங்காய் எண்ணெய்;*** vegetable wax, it is a term used for solidified coconut oil or iluppai oil 2. ***ஒரு வகை மெழுகு*** (M.M.), solidified oil, vegetable wax.

ம. எண்ணக்கூடி

*[எண்ணெய் + மெழுகு.]*

**எண்ணெய்வடி-த்தல்** *enney-vadi-,* 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***எண்ணெயூற்றுதல்;*** to express oil by boiling oleaginous seeds 2. ***எண்ணெயைத் தெளிவித்து இறுத்தல்;*** to filter oil from impurities.

*[எண்ணெய் + வடி.]*

**எண்ணெய்வழுக்கு** *enney-valukku,* பெ. (n.) 1. ***எண்ணெய்சிக்கு;*** oleaginousness, greasiness. 2. ***எண்ணெய் பிசுக்கு;*** sleekiness, glossiness, oily brightness.

*[எண்ணெய் + வழுக்கு]*

**எண்ணெய் விளக்கு** *enney-vilakku,* பெ. (n) ***எண்ணெயில் எரியும் விளக்கு;*** oil-lamp.

ம. எண்ணவிளக்கு

*[எண்ணெய் + விளக்கு]*

**எண்ணெழுத்து** *enneluttu,* பெ. (n.) 1. ***எண்ணும் எழுத்தும்;*** number and alphabet 2. ***இலக்கம்;*** the written form of a letter used as digit. "எண்ணெழுத்து இகழேல்" (ஆத்திசூடி.).

*[எண் + எழுத்து.]*

**எண்ணேகாரம்** *en-n-ēgāram,* பெ. (n.) *ஏ⁴-3* பார்க்க; see *ē⁴-3.* "எண்ணேகாரம் இடையிட்டுக் கொளினும்" (நன்.).

*[எண் + ஏகாரம்.]*

**எண்ணைப்பந்தம்** *ennai-p-pandam,* பெ. (n.) 1. ***எண்ணெயிட்டு எரிக்கும் தீப்பந்தம்;*** torch. 2. ***வரி வகை;*** tax. (S.i.i vii.69). (செ.அக.).

*[எண்ணெய் + பந்தம்.]*

**எண்ணோகாரம்** *en-n-ōgāram,* பெ. (n) ***எண்ணுப்பொருளில் வரும் ஓகாரவிடைச்சொல்;*** computative particle 'Ō'. எண்ணோகாரம். (நன்.இடை.4.இராமநுச கவிராயருரை).

*[எண் + ஓகாரம்.]*

**எண்படு-தல்** *en-padu-,* 20.செ.கு.வி. (vi) ***அகப்படுதல்*** (யாழ்.அக.); to be obtainable, available (செ.அக.).

*[எண்⁵ + படு - எண்படு. எண் = எளிமை எண்படல் = எளிதாய்க் கிடைத்தல்.]*

**எண்பதம்¹** *en-padam,* பெ. (n.) ***எளியசெவ்வி;*** easy accessibility "எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்" (குறள்.548).

*[எள் + பதம்]*

**எண்பதம்²** *en-padam,* பெ. (n.) ***எட்டுவகையான தவசம்;*** eight kinds of millet.

*[எண் + பதம். பதம் = பயிர், தவசம், உணவு. நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, கேழ்வரகு, துவரை என்பன எண்வகைக் கூலங்களாம்.]*

**எண்பது** *en-padu,* பெ. (n.) ***80 என்னும் எண்;*** number 80. "எண்பது கோடி நினைந்து எண்ணுவன" (ஔவையார்.).

ம. என்பது; க., பட. எம்பத்து; துட. எட்டபொத்த; கொலா. எம்பத்; குட. எம்பதி; து. யென்ப, எண்ப; தெ. எனுபதி, எனபதி, எனுபதி, எனபய், என்பதி.

*[எண் + (பத்து) பது.]*

**எண்பி-த்தல்** *enbi-,* 4.செ.குன்றாவி. (v.t.) ***மெய்ப்பித்தல்*** (யாழ்ப்.); to prove, show, substantiate.

மறுவ. மூதலித்தல், மெய்ப்பித்தல், நிறுவுதல்;
தெ. எனிபின்க.

*[ஏ → ஏண் → எண் → எண்பி (பி.வி.) ஏ (ஏண்) = உயர்வு, எண் = எடுத்துநிறுத்துதல், எண்பி = நிலைநாட்டுதல்.]*

**எண்பெருந்துணைவர்** *en-perun-tunaivar,* பெ. (n) ***அரசருக்குரிய எட்டுவகை ஆயத்தார்.*** (திவா.); the eight groups of attendants necessary for a monarch

*[எண் + பெரும் + துணைவர் ]*

அரசர்க்கு உசாத் துணையாக இருந்த கரணத்தியலவர், கருமகாரர், பொன்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர் யானைமறவர், இவுளிமறவர் என்னும் எணவகை ஆயத்தார் எண் பெருநதுணைவர் எனப்பட்டனர்

**எண்பெற்றி** *enperri,* பெ. (n) 1 ***எண் குணம் வாய்ந்தோன்;*** one possessing eight qualities - Šiva 2 ***எட்டுப்பிள்ளை பெற்றவள்;*** woman who has borne eight children - octipara (சா அக.)

*[எண் (எட்டு) + பெற்றி ]*

**எண்பேராயம்** *enpēr-āyam,* பெ (n) ***எண்பெருந்துணைவர்*** பார்க்க, see *enperuntunaivar* "ஐம்பெருங் குழுவு மெண்பேராயமும்" (மணி 1,17)

*[எண் (எட்டு) + பேராயம் ]*

**எண்மதி** *enmadi,* பெ. (n) ***எண்ணாட்டிங்கள்*** (பரிபா.1,1,37) பார்க்க, see *ennāttingal*

*[எண் (எட்டு) + மதி மதி = நிலவு ]*

**எண்மயம்** *enmayam,* பெ (n) ***எண்செருக்கு*** பார்க்க, see *enšerukku* "முடந் திரித்தெண் மயத்து நின்றார்" (திருநூற் 62) (செ.அக )

*[எண + மயம். மயல் → மயம் ]*

**எண்மர்**[1] *enmar,* பெ (n) ***கணக்கியல் வல்லுநர்*** (யாழ் அக ), mathematicians (செ அக )

*[எண் + மர். எண் → எண்ணுதல், ஆராய்தல், கணக்கிடுதல் 'நர்', 'மர்' என்பன பலர்பாலீறுகள் ]*

**எண்மர்**[2] *en-mar,* பெ (n) ***எட்டுப்பேர்;*** eight persons "மாதிரங் காக்கு மெண்மர்க்கும்" (கம்பரா பிணிவீ 44).

**ம.** எண்மர், எண்வர், **க.** எண்பர், **தெ.** எனமண்டுரு, **கொலா.** என்மாதொ, என்மாடர்.

*[எண் (எட்டு) + மர்.]*

**எண்மானம்** *en-mānam,* பெ (n.) ***எண்ணை எழுத்தாலெழுதுகை.***(Mod ), (Arith ) notation

*[எண் + மானம் ]*

**எண்மை**[1] *enmai,* பெ (n) ***மதிப்புரவு.*** (யாழ் அக.); honour (செ.அக )

*[எண் = எண்ணப்படுதல், மதிக்கப்படுதல் எண் + மை - எண்மை (மதிக்கற்பாடு) ]*

**எண்மை**[2] *enmai,* பெ (n) 1 ***எளிமை;*** easiness, as of acquisition "எண்மைக்காலத்து" (தொல் பொருள். 150) 2. ***தாழ்மை;*** lowness of rank or condition, position of inferiority "எண்மையா ருலகினில்" (கம்பரா சடாயுவுயிர் 5).

*[எண் → எண்மை (எளிமை).]*

**எண்மையவன்** *enmaiyavan,* பெ (n) ***எளியவன்;*** poor person

*[எண்மை + அவன் ]*

**எண்வகுப்பு** *envaguppu,* பெ. (n) ***ஒன்று முதல் முப்பத்தாறு இடம் (தானம்) வரை வருவது;*** numerical classification (ஆ அக ).

*[எண் + வகுப்பு ]*

**எண்வகைவிடை** *en-vagai-vidai,* பெ (n) ***சுட்டு விடை, மறைவிடை, நேர்விடை, ஏவல்விடை, வினாவிடை, உற்றதுரைத்தல்விடை, உறுவதுகூறல் விடை, இனமொழிவிடை என எட்டுவகையான விடை.***(நன் 386), eight forms of answering questions

*[எண் (எட்டு) + வகை + விடை ]*

**எத்தன்** *ettan,* பெ (n) 1. ***ஏமாற்றுவோன்;*** he who is a cheat, impostor 2 ***விரகுள்ளவன்;*** scheming, wily person, trickster "வினைப் பற்றறுக்கு மெத்தர்களோ பெறுவார்" (திருநூற் 4)

*[இயை → ஏய் → ஏய்த்தல் → எத்தல் → எத்தன்.]*

**எத்தனம்** *ettanam,* பெ (n) 1 ***முயற்சி;*** effort, attempt, exertion 2 ***ஏற்பாடு;*** preparation, readiness 3 ***கருவி.*** (வின் ), implement, instrument, utensil, tool

*[ஏந்து → ஏந்தல் → ஏந்தனம் → ஏத்தனம் → எத்தனம் (கொ வ )]*

**எத்தனி-த்தல்** *ettani-,* 4.செ.குன்றாவி (v t) ***முயலுதல்;*** to try, set about, attempt

*[ஏல் → ஏந்து = மேலெழும்பு, முயல, முன்னேறு ஏந்து → ஏந்தல் → ஏத்தல் → எந்தன் → எத்தனி (கொ வ )]*

**எத்தனை** *e-t-tanai,* கு.பெ.எ (adj) 1 ***எவ்வளவு;*** how many, how much, what measure, what degree "எத்தனை காலமும" (திவ் பெரியாழ் 5,3,8). 2 ***பல;*** many "எத்தனை பகலும் பழுதுபோயொழிந்தன" (திவ் பெரியதி 1,1,2).

**ம.** எததன, எத்ர, **இரு.** யெததனி, **க.** எனிது, எனித்து, எனிசு, எசுடு, **பட.** ஏசக, **கோத.** எநதல், எந்திக், **துட.** எத, எத்க், **குரு.** யெசக, **குட.** எசசெ, எசசகி, **து.** எது, **தெ.** எந்த, **கொலா.** எததெ, **நா.** எனகெல், எத்தெக, **பர்.** எங்கொட், **கட்.** எங்கெர், **கோண்.** பசரோட, **கூ.** எசெ, **குவி.** எசர, **மால்.** இகொன்

*[எ = வினாச்சொல் எத்துணை → எத்தனை ]*

**எத்தாப்பு** *ettāppu,* பெ. (n) ***மேலாடை*** (திவ்.திருவிருத் 12,அப்பு அரும் ); vesture, garment. எத்தாப்பு. (நெல்லை ).

*[ஏ → ஏத்து (மேல்) → எத்து + ஆப்பு - எத்தாப்பு = மேலிடுவது ]*

**எத்தி** *etti,* பெ (n) ***ஏமாற்றுபவள்;*** she who is a cheat "இசையெழுப்பு மெத்திகள்." (திருப்பு ).

*[ஏய்த்தல் → எத்தல் → எத்தி ]*

**எத்தித்தடி** *ettittadi,* பெ. (n) ***நீர் இறைக்கும் பாசன முள்ள நிலம்;*** wet land

*[ஏற்றம் → ஏத்தம் + தடி - ஏத்தத்தடி → எத்தித்தடி. தடி = நீர்கோத்த நிலம், நன்செய்.]*

**எத்து[1]-தல்** *ettu-,* 5.செ குன்றாவி. (v.t.) ***ஏய்த்தல், ஏமாற்றல்;*** to inveigle, lure, cheat, seduce, defraud "நேசித்தாரையு மெத்தி வடிப்பவர்" (திருப்பு.403)

*[ஏய்த்தல் → எத்துதல்.]*

**எத்து[2]** *ettu,* பெ. (n) ***ஏமாற்று;*** inveigling, cheating, fraud seduction, deception "எத்தோ நின்னன்புடைமை" (திரு வாச.7,3).

*[ஏய் → எய்த்து → எத்து ]*

**எத்துக்கள்ளி** *ettu-k-kalli,* பெ. (n.) ***ஏமாற்றுபவள்;*** woman who inveigles. "பேச்சிலெத்துக்கள்ளி" (தனிப்பா 11,16,35).

*[எத்து + கள்ளி.]*

**எத்தும்** *ettum,* கு.வி.எ. (adv) ***எவ்வகையாலும்;*** by all means "எத்துந் தமதுரை தேறி நின்றேனை" (தஞ் சைவா 26)

*[எனைத்தும் → எத்தும் (கொ.வ.).]*

**எத்துவாதம்** *ettu-vādam,* பெ. (n.) 1. ***ஏமாற்றுப் பேச்சு*** (சங்.அக.); deceptive speech 2. ***எதிர்ப்பேச்சு*** (வின் ); contradiction. 3. ***குதர்க்கப் பேச்சு;*** argument devoid of logic

*[எத்து + வாதம் ]*

**எத்துவாளி** *ettu-v-āli,* பெ. (n.) ***ஏமாற்றுபவன்;*** cheat (Tinn )

*[எத்து + ஆள் + இ.]*

**எதாகிலும்** *edāgilum,* கு வி.எ (adv ) ***ஏதாகிலும்;*** whatever may be, something or other.

*[ஏது + ஆகிலும் - ஏதாகிலும் → எதாகிலும் ]*

**எதாச்சும்** *edāccum,* கு வி எ (adv ) ***என்னமாவது, ஏதாவது;*** whatever may be "ஏதாச்சும் இருக்குமா சாப்பிட?" (வட் வழக் சொல்லக ).

*[ஏது + (ஆவது) ஆச்சும் (கொ வ ) ]*

**எதிர்[1]-தல்** *edir-,* 4.செ கு வி. (v.i ) 1. ***தோன்றுதல்;*** to appear "எதிாநலப் பூங்கொடி" (சீவக 2115) 2. ***நிகழ்தல்;*** to happen, befall "இனி யெதிரா சன்மங்கள்" (அஷ்டப் நூற்றெட் காப்பு.3) 3 ***முன்னாதல்;*** to precede "பனியெதிர் பருவமும்" (தொல் பொருள் 7) 4. ***மலர்தல்*** (திவா.); to blossom 5. ***மாறுபடுதல்;*** to be opposed, be at variance "செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்து" (புறநா.6,11) 6. ***எதிர்காலத்து வருதல்;*** to come to pass in future "எதிர்வநல்ல வல்லவையடாது" (இரகு குறைகூ.1) 7 ***தம்மிற் கூடுதல்;*** to join together. "போரெதிர்ந்தேற்றார்" (பரிபா. 18,1) 8 ***அறம்செய்தல்;*** to be hospitable "துறவோர்க் கெதிர்தலும்" (சிலப் 16,72) - 4.செ.குன்றாவி. (vt) 1. ***எதிர்த்தல்;*** to oppose, confront "விண்ணுளோர் எதிர்ந்த போதும்" (பாரத.சூத.21). 2 ***பெறுதல்;*** to receive "சென்றுபய னெதிர" (தொல் பொருள்.91). 3. ***கொடுத்தல்;*** to give "உலகெல்லா மெதிரும் பலியுண வாகவும்" (தேவா.1025,4). 4. ***சந்தித்தல்;*** to meet "தானினி தெதிர்ந்த தானத் தருகே," (பெருங்.மகத.8, 38) 5 ***பொருந்துதல்;*** to rest on, hover over, as clouds "காரெதிரிய கடற்றானை," (பு.வெ.4,10). 6. ***ஏற்றுக்கொள்ளுதல்;*** to accept, submit to "அடிய டைந் தேவ லெதிராது" (பு வெ.6,32).

ம. எதிருக; க. எதிரிசு; தெ. எதிரின்சு.

*[அது → அதுல் → அதுர் → எதர் → எதிர்தல். அது → அதுக்குதல், அதக்குதல், அடக்குதல் என்பன தன்பாற் கைக் கொளல் பெறுதல், பொருளாதல் காண்க. அதுல்தல், அதர் தல் என்பன வழக்கிழந்தன அதுர் → எதரி எனத் திரிந்தது.]*

**எதிர்[2]-த்தல்** *edir-,* 4 செ குன்றாவி (vt) 1 ***இகலித் தாக்குதல்;*** to encounter, oppose, withstand, resist "இத்திறமாகிய படையோ டெப்படி நாஞ்சிற் படை கொண் டெதிர்ப்ப தென்றான்" (பாரத பதினெட்.15). 2. ***தடுத்தல்;*** to prevent, hinder

ம. எதிர்க்கருக, க. இதிர், இதரு, இதுரு, எதரு, எதிர், எதுர்; கோத. எத்ய்ர். து. எதுரு; தெ. எதுரு

*[உது → உதுல் → இதுல் → எதுல் → எதிர். எதிர் = நேர்படல், எதிரிடல், மோதுதல், போரிடுதல்.]*

**எதிர்[3]** *edir,* பெ. (n) 1. ***முன்னுள்ளது;*** that which is opposite, over against, in front, before 2 ***கைம்மாறு;*** gratitude, return "சூலையினுக் கெதிர்செய்குறை யென் கொல்" (பெரியபு திருநாவுக் 73). 3. ***வருங்காலம்;*** future tense "எதிரது தழீஇய வெச்சவும்மை". 4. ***இலக்கு;*** target, aim "மற்றெதிர் பெறாமையின் வெளி போகி" (இரகு திக்குவி.169). - கு வி எ (adv) ***முன்;*** infront of "என்வில்வலிகண்டு போவென் றெதிர்வந் தான்" (திவ்.பெரியாழ்.3,9,2).

தெ., து. எதுரு. க. எதிர்

*[உது → உதுல் → இதுல் → எதுல் → எதுர் → எதிர். உதுல் = முன்னுள்ளது ]*

**எதிர்[4]** *edir,* பெ. (n) 1. ***முரண்;*** obstacle, that which is contrary, adverse, hostile "எதிரெல்ல நின் வாய்ச் சொல்" (கலி 96) 2. ***போர்*** (பிங்.); battle, war. 3. ***எதிரிடையானது;*** rival "காமக் கடற்கெதிர்ந்து நிறை யாம் வரம்பினி நிற்பதன்றால்" (தஞ்சைவா.14). 4. ***ஒப்பு;*** similitude. "உமக்காரெதி ரெம்பெருமான்" (தேவா.613,4).

தெ., து. எதுரு. க. எதிர். ம. எதிர்

*[உது → உதுல் → இதுல் → எதுல் → எதுர் → எதிர்.]*

**எதிர்க்கட்சி** *eidr-k-katci,* பெ. (n.) *மாற்றுக்கட்சி;* rival party, opposite side.

ம. எதிர்க்கச்சி.

*[எதிர் + கட்சி.]*

**எதிர்க்கடை** *edir-k-kaḍai,* பெ. (n.) 1. *எதிர்ப்பு* (இ.வ.); opposition 2 *எதிர் பாகம்;* opposite side (சேரநா.) (செ அக.).

ம. எதிர்கட

*[எதிர் + கடை 'கடை' பெயரீறு]*

**எதிர்க்கதவு** *edir-k-kadavu,* பெ. (n) *ஆடுகதவு* (பாண்டி ); folding door, double door (செ அக ).

*[எதிர் + கதவு.]*

**எதிர்க்கரி** *edir-k-kari,* பெ (n) 1. *மாறான சான்று* (வின் ); counter evidence. 2. *எதிர் வழக்காளனின் சான்று* (இ.வ ); defence witness. (செ.அக.).

*[எதிர் + கரி.]*

**எதிர்க்களி-த்தல்** *edir-k-kaḷi-,* 4 செ.கு.வி. (vi.) *எதிர்க் கெடு* பார்க்க; see *edir-k-keḍu.*

*[எதிர் + களி-த்தல் ]*

**எதிர்க்காற்று** *edir-k-kāṟu,* பெ. (n ) *நேரெதிர் அடிக்குங் காற்று;* direct current of air moving through an inclosed space - draught. (செ.அக.).

*[எதிர் + காற்று ]*

**எதிர்க்குறி** *edir-k-kuṟi,* பெ. (n.) 1. *மாறுபாடான குறி;* contra-indication 2. *தீக்குறி;* counter-symptom, bad or unfavourable symptom. (சா அக.).

*[எதிர் + குறி ]*

**எதிர்க்கெடு-த்தல்** *edir-k-keḍu-,* 4.செ கு.வி. (vi) 1. *குமட்டுதல்;* to nauseate, turn the stomach. 2. *உண்ட ஊண் திரும்பி மேல் வருதல்;* to retch (இ.வ.).

*[எதிரக்கு → எதிர்க்கு + எடுத்தல்.]*

**எதிர்க்கை**[1] *edir-k-kai,* பெ. (n.) *மேற்கூரையின் எதிர் மரம்* (வின்.); slanting timber forming a continuous line with the ridge and uniting in an angle formed by the slanting hip, rafters on either end of a hipped or bungalow roof.

*[எதிர் + கை.]*

**எதிர்க்கை**[2] *edir-k-kai,* பெ. (n.) *எதிர்த்து நிற்கை;* opposition.

*[எதிர் → எதிர்க்கை. கை (தொ.பெ.ஈறு.).]*

**எதிர்க்கொத்தளம்** *edir-k-kottaḷam,* பெ. (n.) *கொத்தளத் துக்கு முன்னுள்ள காப்புச் சுவர்;* protecting wall in front of the rampart. (pond.).

*[எதிர் + கொத்தளம்.]*

**எதிர்கட்சி** *edir-katci,* பெ. (n.) 1. *முன்பக்கம்;* front side 2 *எதிர்வரிசை;* opposite line 3 *குடியரசு அமைப் பில் ஆளுங்கட்சிக்கு எதிரான கட்சி;* opposite party formed against the ruling party in a democratic country.

*[எதிர் + கட்சி ]*

**எதிர்கழறு-தல்** *edir-kaḻaṟu-,* 7.செ.கு.வி. (vi.) 1. *மாறுகூறுதல்;* to answer back 2. *ஒத்தல்;* to resemble. "இடியெதிர்கழறும்" (பரிபா.2,37).

*[எதிர் + கழறு ]*

**எதிர்காலம்** *edir-kālam,* பெ. (n ) *வருங்காலம்* (திவா.); future

*[எதிர் + காலம் ]*

**எதிர்காலவுணர்ச்சி** *edir-kāla-v-unarcci,* பெ. (n ) *பின் வருவதை யுணர்கை;* fore-knowledge

*[எதிர் + காலம் + உணர்ச்சி ]*

**எதிர்காற்று** *edir-kāṟu,* பெ. (n.) *எதிர்த்தடிக்குங் காற்று;* contrary wind

*[எதிர் + காற்று.]*

**எதிர்குதிர்** *edir-kudir,* பெ. (n.) *மறுதலை;* obverse. (redupl of எதிர்) "எதிர்குதி ராகின் றதிர்ப்பு" (பரிபா.8-21).

*[எதிர் + குதிர்.]*

**எதிர்கொண்டெடு-த்தல்** *edirkondeḍu-,* 4.செ.குன் றாவி. (v.t.) *எதிரெடுத்தல்* பார்க்க; see *edireḍu-.* (சா.அக.).

*[எதிர்கொண்டு + எடு-த்தல்.]*

**எதிர்கொள்(ளு)-தல்** *edir-koḷ-,* 7.செ குன்றாவி. (vt) 1 *வரவேற்றல்;* to advance or go towards a guest or great person to meet, welcome or receive him "வேனில் விழவெதிர்கொள்ளும்" (கலித்.36) 2. *ஏற்றல், கொள்ளுதல்;* to accept. "எஞ்சா லெதிர் கொண்டு" (பு வெ.9 32)

ம. எதிரேல்க்குக; தெ. எதிர்கொனு; க. எதிர்கொள்ளு.

*[எதிர் + கொள்ளு ]*

**எதிர்கொள்பாடி** *edirkolpādi,* பெ (n ) *சோழ நாட்டிற் காவிரிக்கு வடகரையில் சிவன் கோயிலுள்ள இடம்;* name of a Siva shrine on northern bank of river Kāvēri

*[எதிர் + கொள் + பாடி.]*

**எதிர்கோள்** *edir-kōḷ,* பெ. (n ) *எதிர்கொள்ளுகை;* ceremonious or complimentary greeting, welcoming, meeting and receiving. "அரசை யெதிர்கோ ளெண்ணி" (கம்பரா.திருவவ 59).

தெ. எதுர்கோளு.

*[எதிர் + கோள்.]*

**எதிர்ச்சாட்சி** *edir-c-cāṭci,* பெ. (n.) *எதிர்க்கரி* பார்க்க; see *edir-k-kari.*

*[எதிர் + சாட்சி.]*

**எதிர்ச்சி** *edircci,* பெ (n) ***எதிர்க்கை;*** act of opposing

*[எதிர் → எதிர்த்தல் → எதிர்ச்சி ]*

**எதிர்ச்சீட்டு** *edir-c-cittu,* பெ. (n) ***எதிரிடைமுறி;*** counter document containing the corresponding obligations of the executant of it.

**க.** எதிர்சீட்டு

*[எதிர் + சீட்டு ]*

**எதிர்ச்சுவர்** *edir-c-cuvar,* பெ. (n.) ***முன்பக்கச்சுவர்;*** face wall (C.E.M)

*[எதிர் + சுவர் ]*

**எதிர்ச்செட்டு** *edir-c-cettu,* பெ. (n) 1. ***போட்டி வணிகம்*** (வின்); competition in trade 2. ***வாங்கி விற்கும் வணிகம்*** (யாழ்ப்.); trading at second hand, buying and selling again directly at a small profit

*[எதிர் + செட்டு ]*

**எதிர்ச்செறி-த்தல்** *edir-c-ceṟi-,* 2.செ குன்றாவி. (vt) ***வெள்ளத்திற்கு எதிராக அணை போடுதல்;*** to dam up, as a flood "பெருக்காற்றை எதிர்ச் செறிக்க மாட்டா தாப் போலே" (திவ் திருநெடுந் 21,வ்யா,பக்.160).

*[எதிர் + செறி-த்தல் ]*

**எதிர்சம்பாவனை** *edir-cambāvaṉai,* பெ. (n) ***எதிர் மொய்*** பார்க்க, see *edir moy*

*[எதிர் + சம்பாவனை.]*

**எதிர்செய்குறை** *edir-šeykuṟai,* பெ. (n) ***கைம்மாறு;*** recompense

*[எதிர் + செய் + குறை.]*

**எதிர்செலவு** *edir-celavu,* பெ. (n) ***வரவேற்க முன்னெ முந்து செல்கை;*** courteous advance to welcome anyone. "இருக்கை யெழலும் எதிர்செலவும்" (நாலடி.143).

*[எதிர் + செலவு ]*

**எதிர்சோழகம்** *edir-cōḻagam,* பெ. (n) ***நேர் தெற்கிலி ருந்து வீசும் காற்று*** (யாழ்ப்.); wind that blows directly from the south

*[எதிர் + சோழகம்.]*

**எதிர்த்தட்டு** *edir-t-tattu,* பெ. (n) 1. ***எதிர்ப்பக்கத்துத் துலாத்தட்டு;*** opposite scale-pan in a balance "எழு கின்ற ஞாயிறொத்தான் குலதீப னெதிர்த்தட்டிலே" (தமிழ்நா.124) 2. ***எதிரிடை;*** that which is contrary, opposite "தாரித்ரியமும் அதற்கு எதிர்த்தட்டான ஐஸ்வரியமும்" (ஈடு.6,3,1).

*[எதிர் + தட்டு.]*

**எதிர்த்தலை** *edir-t-talai,* பெ. (n) ***எதிரிடை;*** opposite. "நட்பும் அதற்கு எதிர்த்தலையான பகையும்" (ஈடு.9,1,1).

**ம.** எதிர்த்தலை (an enemy).

*[எதிர் + தலை.]*

**எதிர்த்தாக்கு** *edir-t-tākku,* பெ. (n.) ***தற்காப்பின் பொருட்டுத்தாக்குகை;*** counter attack in self-defence (Pond)

*[எதிர் + தாக்கு ]*

**எதிர்த்துத்தா-(தரு)-தல்** *edirttu-t-tā-,* 15.செ.குன்றாவி. (vt) ***ஒத்துக்கொடுத்தல்;*** to compensate, make up for. தோற்றுப்படில் நாங்களெதிர்த்துத் தரக்கடவோம். (SII 104)

*[எதிர்த்து + தரு-தல் ]*

**எதிர்த்துப்பேசு-தல்** *edirttu-p-pēšu-,* 5 செ.குன்றாவி (vt) ***மாறு செல்லுதல்*** (Law), to dispute, controvert, object, to plead against - 5. செ கு.வி. (vi) ***அடங்காமற் பேசுதல்;*** to retort, speak disobediently.

*[எதிர்த்து + பேசு ]*

**எதிர்ந்தோர்** *edirndōr,* பெ. (n) ***பகைவர்*** (திவா.); adversaries, opponents, combatants

*[எதிர் → எதிர்ந்தோர் ]*

**எதிர்நடை**[1] *edir-naḍai,* பெ. (n.) ***மூலத்தின்படி;*** counter part of a document இப்பிரதி எதிர்நடை பார்த்தெழுதி னது (செ அக )

*[எதிர் + நடை ]*

**எதிர்நடை**[2] *edir-naḍai,* பெ. (n) ***மாறுபட்ட ஒழுக்கம்*** (வின்.); acting perversely, taking an opposite course

*[எதிர் + நடை ]*

**எதிர்நடைக்கணக்கு** *edir-naḍai-k-kaṇakku,* பெ. (n.) ***கூட்டாளிகளின் தனிக்கணக்கு*** (வின்.); register or account kept separately by each partner in a joint concern in order that the account maintained by everyone of them may be examined by the other partners.

*[எதிர்நடை + கணக்கு.]*

**எதிர்நிரனிறை** *edir-niraṉiṟai,* பெ. (n.) ***முறைமாறி வரும் நிரனிறை*** (நன் 414,உரை.); reversed sequence, a syntactical arrangement of a series of predicates in an order which is the reverse of that in which their respective nominatives stand.

*[எதிர் + நிரல் + நிரை.]*

**எதிர்நில்**[1]**-தல்** *edirnil-,* 14.செ கு வி. (v.i) 1. ***மாறுபட்டு நிற்றல்*** (வின்.); to be perverse, contumacious 2. ***முன்னிற்றல்;*** to stand before. "காகமானவை... ஒரு கல்லின்முன் னெதிர் நிற்குமோ" (தாயு.எங்கு.6).

*[எதிர் + நில்.]*

**எதிர்நில்**[2]**-தல்** *edirnil-,* 14.செ.குன்றாவி. (v.t.) ***எதிர்த்து நிற்றல்;*** to resist, withstand, oppose.

*[உது → இது → எதுல் → எதுர் → எதிர் + நில்.]*

**எதிர்நிலை¹** *edir-nilai*, பெ. (n) ***இகலிநிற்கை*** (வின்.); resistance, opposition

*[எதிர் + நிலை. நிலை = நிற்றல்.]*

**எதிர்நிலை²** *edir-nilai*, பெ. (n.) ***கண்ணாடி*** (சங்.அக.); mirror

*[எதிர் + நிலை. நிலை = நிலைகொண்டது ]*

**எதிர்நீச்சு** *edir-niccu*, பெ (n) 1 ***வெள்ளப்போக்கிற்கு எதிராக நீந்துகை;*** swimming against the current 2 ***செயற்கரிய. செய்கை;*** accomplishing a very difficult task

*[எதிர் + நீச்சு.]*

**எதிர்நூல்** *edir-nul*, பெ. (n) ***தன்கருத்தை நிலைநாட்டிப் பிறர்கருத்தை மறுக்கும் நூல்*** (இறை.1,பக் 12), refutatory work, one of four broad divisions of literary attempts, work containing fresh material and defending its own doctrines against those of others

*[எதிர் + நூல் ]*

**எதிர்நோக்கு-தல்** *edirnökku-*, 5 செ.குன்றாவி (vt) 1 ***நேரே பார்த்தல்;*** to face 2. ***முன்பக்கம் பார்த்தல்;*** to look forward 3. ***எதிர்பார்த்தல்;*** to expect, envisage

ம. எதிர் நோக்குக

*[எதிர் + நோக்கு ]*

**எதிர்ப்படு¹-தல்** *edir-p-padu-*, 20.செ.கு.வி. (vi) ***முன் தோன்றுதல்;*** to appear "ஈசனெதிர்ப்படு மாயிடிலே" (திருவாச.49,3) - 18.செ குன்றாவி. (vt) ***சந்தித்தல்;*** to meet, encounter. "எதிர்ப்பட்டாற் பின்னை விடுமோ விறல்மீன்" (பாரத பதினேழாம்.143).

ம. எதர்பெடுக; க. எதுருபீளு; து. எதுரு. தெ. எதுருபடு

*[எதிர் + படு.]*

**எதிர்ப்படு²-தல்** *edir-p-padu-*, 18 செ.குன்றாவி. (vt) ***ஒப்பாதல்;*** to resemble "பண்ணெதிர்ப்படுமொழிக்கு" (இரகு.இரகுவுற் 10).

*[எதிர் + படு.]*

**எதிர்ப்பாடு** *edir-p-pādu*, பெ. (n) ***சந்திக்கை*** (ஐங்குறு. 275,உரை ); meeting, encounter, juxtaposition

*[எதிர் + (படு) பாடு.]*

**எதிர்ப்பாய்ச்சல்** *edir-p-pāyccal*, பெ. (n) 1. ***எதிரான நீரோட்டம்;*** counter-current 2. ***எதிராகப் பாய்கை;*** leaping in contrary direction, reverse flow (செ.அக.).

*[எதிர் + பாய்ச்சல்.]*

**எதிர்ப்பாய்ஞ்சான்** *edir-p-pāyñjān*, பெ. (n) ***தண்ணீர் ஓட்டத்திற்கு எதிராகப் பாய்ந்தோடு மீன்;*** fish rushing or swimming against the current of water (சா.அக.).

*[எதிர் + (பாய்ந்தான்) பாஞ்சான் (கொ.வ.).]*

**எதிர்ப்பு¹** *edirppu*, பெ. (n) ***குறி;*** omen portent, augery, foretoken.

*[எதிர் → எதிர்ப்பு ]*

**எதிர்ப்பு²** *edirppu*, பெ. (n) 1. ***அலைப்பு;*** resistance. 2 ***இலக்கு;*** aim 3. ***எதிர்மொழி;*** contradiction 4. ***வருங்காலம்;*** future 5. ***தடுப்பு;*** obstruction (ஆ அக ).

ம. எதிரப்பு, க. எதுர், எதிர், எதுரு; து. எதுரு, தெ. எதுரு

*[எதிர் → எதிர்ப்பு ]*

**எதிர்ப்பு³** *edirppu*, பெ. (n) ***வாங்கிய அளவே திருப்பிக் கொடுப்பது;*** exact return of things borrowed. "மாறெதிர்ப்பை பெறாஅமையின்" (புறநா.333,11).

*[எதிர் → எதிர்ப்பு.]*

**எதிர்ப்பெண்** *edirppen*, பெ (n) ***ஒரு வீட்டிற்குப்பெண் கொடுத்து அங்கிருந்து தம் வீட்டிற்குப் பெண் எடுப்பது*** (கருநா ); exchange of brides between two families.

க. எதுருதெண்ணு.

*[எதிர் + பெண் ]*

**எதிர்பார்-த்தல்** *edir-pār-*, 4 செ.குன்றாவி. (vt.) 1. ***ஒன்றை நோக்கி யிருத்தல்;*** to expect, look forward to envisage 2. ***வரவு பார்த்திருத்தல்;*** to await, the arrival, as one expected 3 ***பிறருதவி நோக்குதல்;*** to look up to others for help அவன் பிறர் கையை எதிர்பார்ப்பவன் (உ.வ.).

ம. எதிரநோக்குக, க. எதுருநோடு.

*[எதிர் + பார்.]*

**எதிர்பொழுது** *edir-poludu*, பெ. (n) 1. ***இனிவருங்காலம்;*** hereafter, time to come, future 2. ***எதிர்காலம்;*** future tense. "ஐம்பாலெதிர்பொழுது" (நன்.144).

*[எதிர் + பொழுது.]*

**எதிர்மறுப்பு** *edir-maruppu*, பெ. (n) ***முன்னொடு பின் முரணக் கூறுகை*** (யாழ்.அக.); contradictory statement.

ம. எதிர்மொழி.

*[எதிர் + மறுப்பு.]*

**எதிர்மறை** *edir-marai*, பெ. (n.) ***எதிர்மறுப்பு;*** negative. "எதிர்மறை மும்மையு மேற்கும்" (நன்.145).

*[எதிர் + மறை.]*

**எதிர்மறையிடைநிலை** *edir-marai-y-idainilai*, பெ. (n.) ***எதிர்மறைப் பொருளைக் காட்டும் அல், ஆ, இல் ஆகிய இடைநிலைகள்;*** (Gram ) negative sign, in the middle of a word

*[எதிர்மறை + இடை + நிலை.]*

**எதிர்மறையிலக்கணை** *edir-marai-y-ilakkanai*, பெ. (n.) ***எதிர்மறைப் பொருளைக் குறிப்பால் உணர்த்துவது;***

irony, cynicism, parody, using language hinting a meaning contrary to the literal sense, abuse of terms

*[எதிர்மறை + இலக்கணை.]*

**எதிர்மறையும்மை** *edir-marai-y-ummai,* பெ. (n.) ***எதிர்மறைப் பொருள்தரும் 'உம்' இடைச்சொல்;*** negative part 'um'.

*[எதிர்மறை + உம்மை ]*

**எதிர்மறையெச்சம்** *edirmaraiyeccam,* பெ. (n.) ***எதிர் மறுப்பைக் காட்டுமெச்சம்;*** adjective denoting negation காணாத கண் (உ.வ.).

*[எதிர்மறை + எச்சம்.]*

**எதிர்மறைவினை** *edir-marai-vinai,* பெ. (n.) ***உடன்பாட் டுக் கெதிராக மறுத்து வரும் வினை;*** negative verb. (எ கா.) வந்திலன், செல்லான், காணலன்.

*[எதிர்மறை + வினை.]*

**எதிர்மீன்** *edir-min,* பெ. (n.) ***நீர்ப்பாய்ச்சலை எதிர்த்துச் செல்லும் மீன்;*** fish that swims against the current.

*[எதிர் + மீன் ]*

**எதிர்முகம்**[1] *edir-mugam,* பெ. (n.) 1. ***நேரெதிர்;*** confronting position, as face to face 2. ***முன்னிலை*** (வின்.), presence, confrontation

*[எதிர் + முகம்.]*

**எதிர்முகம்**[2] *edir-mugam,* பெ. (n.) ***மாறுபாடு*** (வின்.); opposition, polarity, reverse.

*[எதிர் + முகம் ]*

**எதிர்முகவேற்றுமை** *edir-muga vērrumai,* பெ. (n.) ***விளி வேற்றுமை;*** vocative case "ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை" (தொல்.சொல்74,சேனா.).

*[எதிர் + முகம் + வேற்றுமை ]*

**எதிர்முழி** *edir-muli,* கு வி எ. (adv) ***நேருக்குநேராய்;*** (vul ) face to face

*[எதிர் + விழி. விழி → முழி (கொ.வ.).]*

**எதிர்முறி** *edir-muri,* பெ. (n.) ***எதிர்ச்சீட்டு*** பார்க்க; see *edirccittu*

*[எதிர் + முறி.]*

**எதிர்மூச்சுப்போடுகை** *edir-mūccu-p-pōdugai,* பெ. (n.) ***எதிர்நின்று மூச்சு வாங்க நெற்குத்துகை;*** puffing, while husking கூலியுங் கொடுத்து எதிர்மூச்சும் போட வேண் டுமா? (பழ )

*[எதிர் + மூச்சு + போடுகை.]*

**எதிர்மை** *edirmai,* பெ. (n) ***எதிர்காலத்தில் நிகழ்கை;*** happening in future "அஃதெதிர்மை பொருளென" (பெருங் நரவாண.1,119).

*[எதிர் → எதிர்மை.]*

**எதிர்மொய்** *edirmoy,* பெ. (n.) ***திருமணம் முதலிய காலங்களில் செய்யப்பட்ட சீர்க்கு மாற்றாகச் செய் யப்படும் அன்பளிப்பு;*** complimentary gift of courtesy to the brides party by those of the bridegroom or vice versa on marriage occasions in return for gifts received (செ.அக.).

*[எதிர் + மொய்.]*

**எதிர்மொழி** *edir-moli,* பெ. (n) 1. ***மறுமொழி*** (பிங்.); response, answer, reply. 2. ***மறுப்புரை;*** rejoinder, counter-argument, retaliation, rebuttal "எதிர்மொழி யுண்டாமா கிற் சொல்லுவீரே" (பாரத.சூது.243).

ம. எதிர்மொழி; க. எதுருமாது.

*[எதிர் + மொழி.]*

**எதிர்வட்டி** *edir-vatti,* பெ. (n.) ***செலுத்தும் மூலத் தொகைக் கேற்பக் கழிக்கும் வட்டி*** (C.G); counter interest, as on payments made before due date.

*[எதிர் + வட்டி.]*

**எதிர்வனன்** *edirvanan,* பெ. (n) ***ஏற்றுக்கொள்பவன்;*** recipient. "இன்பம் பெருக வெதிர்வனன் விரும்பி" (பெருங்.வத்தவ.10,11).

*[எதிர் + வ் + அன் + அன். வ் - எகா.இ நி. 'அன்' சாரியை அன் (ஆ பா.ஏறு).]*

**எதிர்வாதம்** *edir-vādam,* பெ. (n) 1. ***எதிர்வழக்காளியின் பேச்சு;*** reply, argument for the defence. 2. ***மாறுபடக் கூறுகை;*** objection எதைச் சொன்னாலும் எதிர்வாதம் பண்ணுகிறான். (உ.வ.).

ம. எதிர்வாதம்.

*[எதிர் + வாதம். வாள் = பேசுதல். வாள் → வாளம் → வாதம் (கொ.வ.) ]*

**எதிர்வாதி** *edir-vādi,* பெ. (n) 1. ***எதிர் வழக்காளி;*** defendant, respondent, accused 2. ***தன்பக்கத்துக்கே எதிராக வாதிப்பவன்*** (நன் 384, மயிலை.); he who pleads for the side opposite to one's own 3 ***எதிர்க்கட்சி பேசுவோன்;*** opponent, one who attacks a thesis, antagonist, rival அறிவினால் வரும் வினா, எதிர்வாதியா லும் ஆசிரியனாலும் வரும் (நன்.384, மயிலை.).

ம. எதிர்வாதி.

*[எதிர் + வாதி வாள் = பேசுதல். வாள் → வாளம் → வாதம் (கொ.வ.) - வாதி.]*

**எதிர்வாய்** *edir-vāy,* பெ. (n.) ***ஏரியின் உள்ளக முன் வாய்;*** foreshore of a lake.

*[எதிர் + வாய்.]*

**எதிர்வார்த்தை** *edir-vārttai,* பெ. (n.) ***பகரம், விடை;*** reply, retort. சங்கத்தார்க்கு ஒருபோதும் எதிர்வார்த்தை சொல்லார்களே (தமிழ்றி.32).

ம. எதிர்வா.

*[எதிர் + வார்த்தை. எதிர்மொழி பார்க்க; see edirmoli ]*

**எதிர்வழிக்கெண்டைப்பச்சை** *edirvili-k-kendai-p-paccai,* பெ. (n) ***இருமீன்கள் ஒன்றையொன்று பார்ப்பது போற் குத்தும் பச்சைக்குறி;*** tattoo mark like that of two carps facing each other.

*[எதிர் + வழி + கெண்டை + பச்சை.]*

**எதிர்விற்பனை** *edir-virpanai,* பெ. (n.) ***போட்டி வாணிகம்;*** competition in trade (Pond.).

*[எதிர் + விற்பனை ]*

**எதிர்வினை** *edir-vinai,* பெ. (n) ***எதிர்காலத்துச் செயல்;*** future events "கணியெனைக் கூறிய எதிர்வினை யெல்லா மெஞ்சா தெய்தி" (பெருங்.உஞ்சைக் 36,211). (செ.அக.)

*[எதிர் + வினை.]*

**எதிர்வினை விலக்கு** *edir-vinai-vilakku,* பெ. (n.) ***அணிவகையுளொன்று; அஃது எதிர்கால இடையூற்றைக் காட்டி மறுப்பது;*** figure of speech. (ஆ.அக.).

*[எதிர் + வினை + விலக்கு.]*

**எதிர்வு** *edirvu,* பெ. (n) 1. ***எதிர்ப்படுகை;*** meeting, confronting. 2. ***எதிர்காலம்*** (தொல் சொல்.202); future tense 3. ***நிகழ்ச்சி*** (W ), happening, contingence.

*[எதிர் → எதிர்வு ]*

**எதிர்வெட்டு** *edir-vettu,* பெ. (n.) ***மறுதலை;*** opposition, contradiction, retaliation அவன் எப்போதும் எதிர்வெட்டாய்ப் பேசுகிறான் (இ.வ ).

*[எதிர் + வெட்டு.]*

**எதிர** *edira,* இடை (part) ***ஓர் உவமவுருபு*** (தண்டி 33); adverbial particle of comparison.

*[எதிர் → எதிர ]*

**எதிரடையோலை** *edir-adai-y-ōlai,* பெ. (n) ***அடையோலை எழுதித் தருபவருக்குக் கொடுக்கும் சான்றுச் சீட்டு;*** deed of authority given by the lessor to the lessee 'நிலக்கூலிக்கும் விதை முதலுக்கும் எதிரடையோலை காட்டினபடியாலும்' (S i i.vii,385).

*[எதிர் + அடை + ஓலை.]*

**எதிரதுதழீஇயவெச்சவும்மை** *ediradu-taliya-veccavummai,* பெ (n) ***எஞ்சிய செயலை விளக்கி யெதிர்காலத்தைத் தழுவி நிற்கு மும்மை;*** adverbial particle of anticipatory reference (ஆ.அக.).

*[எதிர் + அது + தழுவிய (தழீஇய) + எச்ச + உம்மை.]*

**எதிரதுதழுவு-தல்** *ediradu-taluvu-,* 5.செ.குன்றாவி. (vt) ***வரக்கடவதனையுங் குறித்து நிற்றல்;*** to bear anticipatory reference "எதிரது தழீஇய வெச்சவும்மை" (நன் )

*[எதிர் + அது + தழுவு.]*

**எதிரதுபோற்றல்** *ediradu-pōrral,* பெ (n.) ***முன்னில்லா தனவாயினும் தற்கால வழக்காயின் அவற்றைக் கொள்ளும் ஓர் உத்தி*** (நன்.14); (Gram), adoption of modern usage One of 32 utti

*[எதிர் + அது - எதிரது + போற்றல்.]*

**எதிரதுபோற்று-தல்** *ediradu-pōrru-,* 5.செ.குன்றாவி. (vt) ***எதிரதுதழுவு*** பார்க்க; see *ediradu-taluvu-.*

*[எதிர் + அது + போற்று.]*

**எதிரம்புகோ-த்தல்** *edir-ambu-kō-,* 4.செ.கு.வி. (v.i.) ***எதிர்த்துநிற்றல்*** (குருபரம் ஆறா.5); lit to place the arrow against the bowstring, against a similar act of the opponent, to stand in opposition, to cross swords.

*[எதிர் + அம்பு + கோ-த்தல் ]*

**எதிரல்** *ediral,* பெ (n) ***எதிர்த்தல்;*** opposing. (ஆ.அக.).

*[எதிர் + அல்.]*

**எதிரழற்சி** *edir-alarci,* பெ. (n) ***எதிர்ப்புண்டாக்கும் மருந்து;*** irritant medicine.

*[எதிர் + அழற்சி.]*

**எதிரா** *edirā,* பெ. (n) ***வரும் ஆண்டு;*** next year. "எதிராக்குப் போவோம் அங்கே" (வட்.வழக். சொல்லக )

*[எதிர் + ஆண்டு - எதிராண்டு → எதிரா. (கொ.வ.).]*

**எதிராப்பு** *edir-āppu,* பெ. (n) ***கழலாதபடி வைக்கும் ஆப்பு;*** side wedge driven in to hold fast the main wedge

*[எதிர் + ஆப்பு.]*

**எதிராமாண்டு** *edirām-āndu,* பெ. (n.) ***எதிர்வரும் ஆண்டு*** (S i i 93); next, succeeding year.

*[எதிர் + ஆம் + ஆண்டு.]*

**எதிராள்** *edirāl,* பெ. (n.) ***எதிராளி*** (சேரநா.); opponent, enemy.

ம. எதிராள்.

*[எதிர் + ஆள்.]*

**எதிராளி** *edir-āli,* பெ. (n.) 1. ***பகைவன்;*** enemy, adversary "துர்க்குணமில்லா தவர்க் கெதிராளியேது." (குமரேச.80). 2 ***எதிர்வழக்காளி;*** defendant, accused. 3. ***போட்டி போடுபவன்;*** competitor.

ம. எதிராளி, **க.** எதுராள்; **கோத.** எத்ய்ர்; **தெ.** எதிரி.

*[எதிர் + (ஆள்) ஆளி.]*

**எதிரி** *ediri,* பெ. (n.) ***எதிராளி*** பார்க்க; see *edirāli.* "எதிரிசாபமுந்துணிந்துவிழவே" (பாரத.பத்தாம்.31).

**க.** எதுரி; **தெ.** எதிரி; **ம.** எதிரி; **கோத.** எத்ய்ர்.

*[எதிர் → எதிரி.]*

**எதிரிடல்** *ediridal,* பெ. (n.) ***எதிரிடு-தல்*** பார்க்க; see *ediridu-.*

*[எதிர் + இடல்.]*

**எதிரிடு-தல்** *edir-iḍu-*, 18.செ.குன்றாவி. (v.t) 1. ***எதிர்ப்படுதல்;*** to meet, encounter. 2. ***எதிர்த்தல்;*** to oppose in battle 3. ***மாறுபடுதல்;*** to be opposed; to be at variance. 'அனந்தர க்ஷணத்திலே எதிரிடா நிற்பார் கள்' (ஈடு.1,3,10).

**ம.** எதிரிடுக; **க.** எதுரிசு, எதுரிடு; **தெ.** எதிரின்சு.

*[எதிர் + இடு.]*

**எதிரிடை**[1] *edir-iḍai,* பெ. (n) 1. ***எதிர்ச்செயல்;*** opposition, counter-action 2. ***போட்டி;*** rivalry, competition. 3. ***சமமாயிருப்பது;*** that which is equal. அவனுக்கு எதிரிடையில்லை. (இ வ.).

**ம.** எதிரிட; **க.** எதுரு சீட்டு.

*[எதிர் + இடை.]*

**எதிரிடை**[2] *edir-iḍai,* பெ. (n.) ***எதிரிடைச்சீட்டு*** பார்க்க, see *ediriḍaiccīṭṭu.*

*[எதிர் + இடை.]*

**எதிரிடைகட்டு-தல்** *edir-iḍai-kaṭṭu-,* 5.செ.குன்றாவி. (v.t) 1. ***போட்டி போடுதல்;*** to vie with, compete with. 2. ***பகை கொள்ளுதல்*** (யாழ்ப்.); to oppose, resist, antagonize

*[எதிர் + இடை - எதிரிடை + கட்டு.]*

**எதிரிடைச்சீட்டு** *edir-iḍai-c-cīṭṭu,* பெ. (n.) ***எதிர்ச்சீட்டு*** பார்க்க; see *edir-c-cīṭṭu.*

*[எதிரிடை + சீட்டு ]*

**எதிரிடைமுறி** *edir-iḍai-muṛi,* பெ. (n.) ***எதிரிடைச்சீட்டு*** பார்க்க; see *ediriḍaiccīṭṭu.*

*[எதிரிடை + முறி.]*

**எதிரிலி** *edir-ili,* பெ. (n) ***எதிரில்லாதவன்;*** the unrivalled, usu. a title of kings எதிரிலி சோழவேந்தன். (Insc.)

*[எதிர் + இலி.]*

**எதிருக்கெடு-த்தல்** *ediru-k-keḍu-,* 4.செ.கு.வி. (v.i.) ***எதிர்க்கெடு*** பார்க்க; see *edir-k-keḍu.*

*[எதிருக்கு + எடு.]*

**எதிருத்தரம்** *edir-uttaram,* பெ. (n.) ***மறுமொழி;*** *rejoinder, counter statement.*

*[எதிர் + உத்தரம்.]*

**எதிருரை-த்தல்** *edir-urai-,* 4.செ.குன்றாவி. (v.t) ***எதிர்த்துப் பேசுதல்;*** to oppose, contradict, speak against. - 4.செ.கு.வி. (v.i.) ***பொருதற் குறுதியாய் எதிர்நிற்றல்;*** to take a firm; stand for making an attack. "சேனையுடன் மீண்டு மெதிருன்றாமல்" (பாரத.பதினேழாம்.163).

*[எதிர் + உரை.]*

**எதிரெடு-த்தல்** *edir-eḍu-,* 4.செ.குன்றாவி. (v.t) 1. ***வாயாலெடுத்தல்;*** to vomit "குமட்டி யெதிரே யெடுக்கும்" (மீனாட்.பிள்ளை.காப்பு.6) 2. ***எதிர்க்கெடு-த்தல்*** பார்க்க; see *edirkkeḍu*

*[எதிர் + எடு.]*

**எதிரேவல்** *edir-ēval,* பெ. (n.) 1. ***ஏவலையெடுக்கச் செய்யுந் தொழில்*** (வின்.); counteracting sorcery. 2. ***ஒருவன் செய்த ஏவலின் பொருட்டு மாறாக அவன் மீது ஏவுகை;*** retaliatory sorcery.

*[எதிர் + ஏவல் ]*

**எதிரேற்றம்** *edir-ēṟṟam,* பெ. (n.) ***வெள்ளப் பெருக்குக்கு எதிரேறிச் செல்லுகை;*** against the current. "எதிரேற் றங் கொண்ட பாடல்" (சேதுபு.திருநா.5).

*[எதிர் + ஏற்றம்.]*

**எதிரேற்றல்**[1] *edir-ēṟṟal,* பெ. (n.) ***எதிர்கொள்ளுகை;*** advancing towards a party to welcome them.

*[எதிர் + ஏற்றல்.]*

**எதிரேற்றல்**[2] *edir-ēṟṟal,* பெ. (n.) 1. ***எதிர்த்து நிற்கை;*** attacking, opposing, resisting 2. ***பிறன்மேல் வருவதை முன்னின்று தானேற்கை;*** interposing and receiving on one's own person, as the weapons discharged against another by a foe.

*[எதிர் + ஏற்றல்.]*

**எதிரேறு** *edir-ēṟu,* பெ. (n.) ***வலிமை;*** strength, power. "எங்க ளெதிரேறழிய" (பெரியபு.திருநா.121).

*[எதிர் + ஏறு ]*

**எதிரொலி**[1]**-த்தல்** *edir-oli-,* 4.செ.கு.வி. (v.in) ***மாறியொலி செய்தல்;*** to echo, reverberate "நீடுகுன் றெதிரொலிக்கவே" (பாரத.வேத்திர.10).

*[எதிர் + ஒலி.]*

**எதிரொலி**[2] *edir-oli,* பெ. (n) ***மாறியொலித்தல்;*** echo, reverberation of sound "இவனுமப் பொழு தெதிரொலி யென" (பாரத.பதின்மூ.88).

*[எதிர் + ஒலி.]*

**எதிளை** *edilai,* பெ. (n) ***புளியமரம்*** (சங்.அக.); tamarind tree.

*[எகின் → எகிள் → எதிள் → எதிளை (கொ வ.).]*

**எது** *edu,* வினாபெ. (inter pron.) ***யாது;*** which thing.

**ம.** எது, **க.** ஆவுது, எ,ஏ, **கோத.** எத், **துட.** எத்; **குட.** எதி, **து.** ஒவு, வா, **தெ.** எதி, ஏதி, **கொலா.** எத்; **நா.,** **பர்.** ஏத், ஏதி, **கட.** ஏன, **கோண்.** ஏம், **கூ.** எகத், **குர்.** என்த்ர, எக்தா, **மால்.** இதைத்ரு, **பிரா.** அரா, அராத், **பட.** ஏது, யாவது

*[உ → எ → ஏ → ஏல் → ஏன். ஏல் → ஏய் → ஏய்து → ஏய்ந்து → ஏந்து. எந்து → எது. (முடிநிலைத் திரிபு). ஒ.நோ. வேய் → வேய்ந்து → வேந்து. எந்து → என் → என்ன (அடிநிலைத் திரிபு) ஏய் - ஏய்ந்து - ஏய்ந்து - வேய்த்து. வேத்து → வாத் → வாட் (what) என மேலை-யாரியத்தில் திரிந்ததாகல் வேண்டும்.]*

**எதுக்களி-த்தல்** *edukkali-*, 4.செ.கு.வி. (v.i.) *சாப்பிட்ட சோறு மீண்டும் சிறிது வாய்க்கு வருதல்;* bringing back food from stomach to mouth (வட் வழக்.சொல்லக.)

*[எது → எதுக்குளி → எதுக்களி.]*

**எதுகை** *edugai*, பெ. (n) 1. *எதுகைத்தொடை* பார்க்க; see *edugai-t-todai.* "இரண்டாம் .... எழுத்தொன்றி னெதுகை" (காரிகை,உறுப்.16). 2. *பொருத்தம்.* (வின்.); agreement, consonance.

ம. எதுக.

*[எதிர்கை → எதுகை (த.வ.50).]*

**எதுகைத்தொடை** *edugai-t-todai*, பெ. (n) *செய்யுளின் வரிகளில் இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.* (இலக்.வி.723); (Pros.) concatenation in which the second letters of the lines of a verse or of some feet of the same line are either the same or corresponding assonant letters, a kind of 'rhyming' one of five *todai.*

*[எதுகை + தொடை.]*

**எதுகைப்பா** *edugaippā*, பெ. (n) *தேரையர் செய்தவோர் தமிழ்நூல்;* Tamil treatise on medicine compiled by Therayar, a great native physician. (சா.அக.).

*[எதுகை + பா.]*

**எதுவடம்** *edu-vaḍam*, பெ. (n.) *எருதுகளை நுகத்தோடு பிணைக்கும் கயிறு, பூட்டாந்தும்பு.*(Rd.); rope which fastens the yoke to the pole

*[எதிர்வடம் → எதுவடம் (கொ.வ.).]*



எதுவடம்

**எதோள்** *edōḷ*, கு.வி.எ. (adv.) *எவ்விடம்.* (தொல். எழுத். 398. உரை.); where. எதோட்கொண்டான்.

*[எதா → எதோ → எதோள் (வே.க.103).]*

**எதோளி** *edōḷi*, கு.வி.எ. (adv.) *எதோள்* பார்க்க; see *edōḷ.* (தொல்.எழுத்.159,உரை.) எதோளிக்கொண்டான்.

*[எதா → எதோ → எதோள் → எதோளி. (வே.க.103).]*

**எந்த** *enda*, கு.வினா எ (inter.adj.) *எத்தகு, என்ன;* which, what "எந்த வெந்த வெஞ்சாயகம்.... கொடுத்தார்" (பாரத.பதினெட்.30).

ம., க., து. எ; தெ. ஏ.

*[எந்து → எந்த.]*

**எந்திரக்கிணறு** *endira-k-kiṇaṟu*, பெ. (n) *நீரையிறைக்கும் பொறியையுடைய கிணறு;* well that is provided with a contrivance for lifting water "எந்திரக்கிணறு மிடுங்கற் குன்றமும்" (மணி.19,112).

*[இயந்திரம் → எந்திரம் + கிணறு.]*

**எந்திரநாழிகை** *endiranāḻigai*, பெ. (n) *ஒருவகை நீர்வீசுங் கருவி;* machine which throws out water in sprays "எந்திர நாழிகை யென்றிவை பிறவும்." (பெருங்.உஞ்சைக்.41,18).

*[இயந்திரம் → எந்திரம் + நாழிகை.]*

**எந்திரப்பொருப்பு** *endira-p-poruppu*, பெ. (n.) *பல்வகைப் பொறிகளமைந்த செய்குன்று;* artificial mound or hillock on which are mounted various kinds of machines. "எண்ணரும் பல்பொறி யெந்திரப் பொருப்பும்" (பெருங் நரவாண.9,28).

*[இயந்திரம் → எந்திரம் + பொருப்பு.]*

**எந்திரம்** *endiram*, பெ. (n.) 1. *எந்திரப் பொறி;* machine. 2. *கரும்பு ஆலை;* sugar-cane press. "கரும்பெறிந்து கண்ணுடைக்கு மெந்திரம்" (சீவக.1614). 3. *செக்கு;* oil-press "எந்திரத்திற் கலந்ததிலம்" (ஞானவா.புசுண்.77) 4 *தேர்ச்சக்கரம்;* chariot wheel "எந்திரத் தேரர் சூழ்ந்தார்" (கம்பரா.அட்ச.10). 5 *குயவன் சக்கரம்;* potter's wheel "கட சக்கர ரெந்திரமெனச் சுழல்" (காஞ்சிப்பு.காப்பு). 6. *மதிற்பொறி;* engine or other machinery of war mounted over the battlements of a fort "எந்திரப் படுபுழை" (புறநா.177,5). 7. *தீக்கடைக்கோல்* (வின்.), sticks for producing fire by drilling 8. *மந்திர சக்கரம்;* mystical diagram, written on a palmyra leaf or drawn on metal and worn as (எந்திரம்) a charm of amulet. அவளுக்கு எந்திரமெழுதிக் கட்டினார்கள். (உ.வ.).

ம. எந்திரம்; க., து. யன்தர; தெ. யன்த்ரமு.

*[இய = இயங்குதல். இய → இயங்கு → இயந்தி → இயந்திரம் → எந்திரம். இயந்திரம் பார்க்க; see iyandiram.]*

**எந்திரயெண்ணெய்** *endirayeṇṇey*, பெ. (n) 1. *எள், வேர்க்கடலை போன்றவை களினின்று செக்கு முதலிய இயந்திரங்களைக் கொண்டெடுக்கும் நெய்மம்* (தைலம்); oil in general, extracted from the oil seeds such as gingelly, ground nut etc with the aid of oil presses, oil machines etc 2. *இயந்திரங்களின் உதவியைக்கொண்டு மூலிகைச் சரக்கு, மூலிகைச் சத்து முதலியவைகளினின்று வடிக்கும் மருந்தெண்ணெய்;* (In medicine) medicated oils or ointments prepared from drugs or their essentials with the aid of oil machines (சா.அக.).

*[இயந்திரம் → எந்திரம் + எண்ணெய்.]*

**எந்திரவாவி** *endira-vāvi,* பெ (n.) ***இயந்திரத்தால் நீர் வரவும் போகவும் அமைக்கப்பட்ட நீர்நிலை;*** tank provided with machinery for filling and emptying water "எந்திர வாவியி லிளைஞரு மகளிரும்... ஆடிய" (மணி.28,7).

*[இயந்திரம் → எந்திரம் + வாவி ]*

**எந்திரவில்** *endira-vil,* பெ. (n) ***தானே எய்யும் விற்பொறி*** (சிலப்.15,207,உரை.); self-shooting bow, crossbow

*[இயந்திரம் → எந்திரம் + வில் ]*

**எந்திரவூசல்** *endira-v-ūśal,* பெ (n) ***பிறராட்டாத நிலையிலும் தானேயாடும் பொறியமைந்த ஊசல்;*** swing that swings automatically

*[இயந்திரம் → எந்திரம் + ஊசல் ]*

**எந்திரவூர்தி** *endira-v-ūrdi,* பெ. (n) ***பொறியமைப்பால் தானே இயங்கும் இயங்கி;*** vehicle propelled by machinery "எந்தரவூர்தி யியற்றுமி னென்றான்" (சீவக 234).

*[இயந்திரம் → எந்திரம் + ஊர்தி ]*

**எந்திரவெழினி** *endira-v-eḻini,* பெ. (n) ***முறைப்படி எழவும் விழவுங்கூடிய திரை;*** curtain worked by machinery. "பூம்பட்டெந்திர வெழினி வீழ்த்தார்" (சீவக.740).

*[இயந்திரம் → எந்திரம் + எழினி ]*

**எந்திரன்** *endiraṉ,* பெ. (n) ***தேர்*** (யாழ்.அக.); car.

*[இயந்திரம் → எந்திரன் (கொ வ.).]*

**எந்திரி[1]-த்தல்** *endiri-,* 4.செ கு வி. (v i) ***மந்திரச் சக்கரம் வரைதல்;*** to draw a mystical diagram "எந்திரித்த விருக்கைதனில்" (கந்தபு சிங்கமு.228).

*[இயந்திரி → எந்திரி ]*

**எந்திரி** *endiri,* பெ (n.) ***தோல் அல்லது மரப்பாவையை ஆட்டுவிப்போன்;*** one who pulls the wires that move the puppets in a puppet-play, wire-puller. அரங்கினு ளாட்டுவிக்கு மெந்திரி யிழந்த பாவை யெனவும் (பிரபோத.38,7).

**மறுவ.** பொம்மலாட்டக்காரன், கில்லாடி.

*[இயந்திரம் → எந்திரம் → எந்திரி.]*

**எந்து** *endu,* கு.வி.எ. (adv) 1. ***எப்படி;*** how. "செயலெலாம் வழிமற்றெந்தோ" (தணிகைப்பு.பிரம.4). 2. ***என்ன;*** what "அதெந்துவே யென்றருளாயே" (திருவாச.29).

**ம., க., தெ.** எந்து.

*[என்னது → எந்து (வே.க.105).]*

உகரச சுட்டடி திரவிடக் கிளை மொழிகளில் எது, ஏது, யாது, யாவது, எந்து, என்ன, எனப் பல் வகையாகத் திரிந்த பின் தமிழில வழக்கொழிந்த எந்து என்னும் சொல், தமிழ்க்கிளை மொழி வழக்கில் எனனது → எந்து எனப் புதிதாகத் திரிந்த திரிபு எனப் பாவாணா கருதினார்

'எந்து' தமிழில் பெருகிய வழக்கன்று உ - சுட்டுச் சொல்லடி காலவெள்ளததில் எகரச்சுட்டடியாக மாறி 'எது' என்னும் முடிநிலைத் திரிபாகவும் 'என்ன' என்னும் அடிநிலைத் திரிபாகவும் திரிந்தவகை **எது** என்னும் சொல்லின் கீழ் விளக்கப்பட்டுள்ளது

**எந்தை[1]** *endai,* பெ (n) 1. ***என் தந்தை;*** my father, our father, also used courteously in addressing an elder "எந்தை தந்தை" (திவ்.திருப்பல்.6) 2. ***என் தமையன்;*** my elder brother. "எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ" (கலித் 108). 3. ***என் தலைவன்;*** my master, lord. "எந்தையொடு கிடந்தா ரெம் புன்றலைப் புதல்வர்" (புறநா.19,13).

*[என் + அந்தை - என்னந்தை → எந்தை. ஒ.நோ. நும் + அந்தை → நும்மந்தை → நுந்தை. அத்தன் → அத்தை → அந்தை = அப்பன், தந்தை தந்தையை அந்தை என விளிப்பது இடவழக்கு. இது மதிப்புரவு ஆண்பாற் பெயரீறாகப் பண்டுதொட்டே வழக்கூன்றியது ஒ.நோ: கண்ணன் + அத்தன் - கண்ணத்தன் → கண்ணச்சன் எனச் சேரநாட்டிலும், கண்ணத்தன் → கண்ணந்தை எனத் தமிழகத்திலும் வழங்கும்.]*

**எந்தைபெயரன்** *endai-peyaraṉ,* பெ. (n.) ***என் தந்தை பெயர் பூண்ட என் மகன்;*** my son, who is named after my father, a term, used by a father to denote his son who usu is named after the grandfather. "எந்தை பெயரனையாங் கொள்வோம்" (கலித்.81).

*[எந்தை + பெயர் + அன் ]*

**எப்படி** *e-p-padi,* கு.வி.எ. (adv.) ***எவ்வாறு;*** how, in what way or manner "எப்படி யூரா மிலைக்கக் குருட்டா மிலைக்கும்" (திவ்.இயற்.திருவிருத்.94).

**ம.** எப்படி.

*[எ + படி.]*

**எப்புறம்** *eppuṟam,* கு.வி.எ. (adv.) ***எந்தப்புறம்;*** which side. (சேரநா.).

**ம.** எப்புறம்.

*[எ + புறம்.]*

**எப்பேர்ப்பட்ட** *ep-pēr-p-paṭṭa,* கு.பெ.எ. (adj.) ***எத்தகைய;*** of whatsoever kind. "எவ்வகையான மற்றும் எப்பேர்ப்பட்ட உபாதிகளும்' (S.1.1.i.104).

**ம.** எப்பேர்ப்பெட்ட.

*[எ + (பெயர்) பேர் + பட்ட.]*

**எப்பொருட்குமிறையோன்** *epporuṭkumiṟaiyōṉ,* பெ. (n) 1. ***கொழுநன்;*** husband 2. ***தலைவன்;*** leader. 3. ***மன்னன்;*** king 4. ***கடவுள்;*** God.

*[எ + பொருள் + கு + உம் + இறையோன்.]*

**எப்பொழுது** *e-p-polutu*, கு.வி.எ. (adv.) ***எக்காலம்;*** when, at what time

ம. எப்போழ், எப்போள், எப்பொழுது; **க.** எந்து; **துட.** எத்பொக; **கோத.** எல்; **குட.** எக்க; **து.** ஏபொ, ஏப, **தெ.** எப்புடு, எபுடு; **கொலா.** எப்புட், எபுட், **நா.** எகுட்; **பர்.** எதொட், எத்தெல், **கட.** எச்சேல், எசெல், **கோண்.** புப்போட், புச்கெ; **கூ.** எசெக; **கொண்.** எசன்; **குரு.** எகாகெ; **மால்.** இகொஸ்னோ, **பட.** ஏருவ

*[எ + பொழுது]*

**எப்பொழுதும்** *e-p-poludum*, கு.வி.எ. (adv.) ***எந்நேரமும்;*** always, at all times "யானெப்பொழுது முண்ணு மருந்து" (திருக்கோ.300).

ம. எப்பொழும், **தெ.** யெப்படிகின்னி.

*[எ + பொழுதும்]*

**எப்போது** *e-p-pōdu*, கு.வி.எ. (adv.) ***எப்பொழுது*** பார்க்க, see *eppoḷudu*

*[எ + (பொழுது) போது.]*

**எப்போதும்** *e-p-pōdum*, கு.வி.எ. (adv.) ***எப்பொழுதும்*** பார்க்க; see *eppoḷudum*. "எப்போது மீதேசொல் லென்னெஞ்சே" (திவ் இயற்.பெரியதிருவ 87).

ம. எபபோதும்

*[எ + பொழுது + உம். பொழுது → போது.]*

**எப்போதைக்கும்** *e-p-pōdaikkum*, கு.வி.எ. (adv.) ***எப்பொழுதும்*** பார்க்க; see *eppoḷudum*.

*[எ + (பொழுது) பொழுதைக்கும் பொழுது → போது.]*

**எப்போழ்து** *e-p-pōḷdu*, கு.வி.எ. (adv.) ***எப்பொழுது*** பார்க்க; see *eppoḷudu*.

*ம. எப்போள்.*

*[எ + (பொழுது) போழ்து.]*

**எம்** *em*, சு.பெ. (pron.) ***'யாம்' என்பதன் வேற்றுமையடி;*** the oblique of first pers pl pron "yām"

ம. எம்

*[ஏம் → எம். (சு.வி.88).]*

**எம்பர்** *embar* பெ. (n.) ***எவ்விடம்;*** which place, where.

*[எ → எம் → எம்பர். ஒ.நோ, இ → இம்பர்.]*

**எம்பரும்** *embar-um*, கு.வி.எ. (adv.) ***எவ்விடத்தும்;*** everywhere "வெம்பர லழுவத் தெம்பரு மின்மையின்" (பெருங்.நரவாண 2,13).

*[எம் → எம்பர் + உம்]*

**எம்பி** *embi*, பெ. (n.) ***என் தம்பி;*** my younger brother. "எம்பியை யீங்குப் பெற்றேன்" (சீவக.1760).

*[என் + பின் - எம்பின் → எம்பி.]*

**எம்பிராட்டி** *embirāṭṭi*, பெ. (n.) ***எங்கள் தலைவி;*** our lady "எம்பிராட்டி திருவடிமேற் பொன்னஞ்சிலம்பில்" (திருவாச.திருவெம்.16).

ம. எம்பிராட்டி.

*[எம் + (பெருமாட்டி) பிராட்டி.]*

**எம்பிரான்** *embirāṉ*, பெ. (n.) 1. ***ஆண்டவன்;*** God "எம்பிரானே யென்னை யாள்வாய்" (திவ்.பெரியதி. 10,3,2). 2. ***எங்கள் தலைவன்;*** our lord (செ அக.).

ம. எம்பிரான்

*[எம் + (பெருமான்) பிரான்.]*

**எம்பின்** *empiṉ*, பெ. (n.) ***தம்பி;*** my younger brother

*[எம் + பின் - எம்பின் (எமக்குப் பின்னால் பிறந்தவன், தம்பி) இச்சொல்வழக்கிழந்தது. எம்பின் → எம்பி எனக் கடைக்குறைந்தது.]*

**எம்பு**[1]**-தல்** *embu-*, 7.செ.கு.வி. (v.i.) ***மேலெழுதல் அல்லது துள்ளுதல்;*** to rise, spring up ஓர் எம்பு எம்பினான் (கொ.வ.).

*[எழும்பு → எம்பு (இடைக்குறை).]*

**எம்பு**[2] *empu*, பெ. (n.) 1. ***எழும்புகை;*** rising. 2. ***நிமிர்த்துதல்;*** straightening

ம. எம்பேறு.

*[எ → எம்பு (சு.வி.81).]*

**எம்புகம்** *embugam* பெ. (n.) ***நிலக்கடம்பு*** பார்க்க; see *nila-k-kadambu*

*[எம்பு → எம்புகம்.]*

**எம்புட்டு** *embuṭṭu*, பெ. (n.) ***எவ்வளவு;*** how much. எம்புட்டு திமிர் உனக்கு (வட்.வழ சொல்லக.).

*[எ + மட்டு - எம்மட்டு - எம்புட்டு (கொ.வ.). இக்கொச்சை வழக்கு விலக்கத்தக்கது.]*

**எம்பெருமாட்டி** *emperumāṭṭi*, பெ. (n.) ***எங்கள் தலைவி;*** my leader (female). "எம்பெருமாட்டி யசோதாய் எழுந்திராய்" (திருப்பாவை.).

*[எம் + பெருமாட்டி.]*

**எம்பெருமான்** *em-perumāṉ*, பெ. (n.) 1. ***எம்பிரான்*** பார்க்க; see *empirāṉ*. "எம்பெருமானே யெம்மை யொளித்தியோ" (சீவக.294). 2. ***என் தலைவன்;*** my master, my lord 3. ***கடவுள்;*** God.

ம. எம்பெருமான்.

*[எம் + பெருமான்.]*

**எம்பெருமான்வெட்டு** *emperumāṉ-veṭṭu*, பெ. (n.) ***பழைய நாணயவகை*** (பணவிடு.134); ancient coin.

*[எம்பெருமான் + வெட்டு.]*

**எம்பெருமானார்** *em-perumāṉār*, பெ. (n.) ***இராமாநுசர்;*** Rāmānujāchārya. "ஆளவந்தார்க் கன்பா மெம்பெருமானார்க்கு" (அஷ்டப்.ஊசல்.18).

*[எம் + பெருமான் + ஆர்.]*

**எம்போகி** *empōgi*, பெ. (n) ***ஏதிலி, புகலிலி, பிறநாட்டான்;*** refugee, foreigner, destitute. "ஏழை எம்போகி இனிமே வாழ முடியாது" (வட்.வழ சொல்லக.).

*[ஏமம் + போக்கி - ஏமம்போக்கி → ஏம்போகி → எம்போகி. ஏமம்போகி = பாதுகாப்பு இழந்தவன்.]*

**எம்மட்டு** *emmattu*, கு.வி.எ (adv) 1 ***எவ்வளவு;*** how much 2. ***எம்மாத்திரம்;*** how far (ஆ அக ).

*[எம் + மட்டு மா = மாத்திரை மா → மாத்து → மாட்டு - மட்டு = அளவு ]*

**எம்மனை** *em-m-aṉai*, பெ. (n) ***எம் அன்னை, எம் தாய்;*** our mother "தீம்பாலூட்டு மெம்மனை வாராள்" (பெருங்.உஞ்சைக்.33,169).

*[எம் + அன்னை - எம்மன்னை → எம்மனை.]*

**எம்மனோர்** *em-m-aṉōr*, பெ (n) 1. ***எம்மை யொத்தவர்;*** those like ourselves, our party "எம்மனோரிவட் பிறவலர்மாதோ" (புறநா 210) 2. ***நாங்கள்;*** we "மம்மர் நெஞ்சத் தெம்மனோர்க் கொருதலை" (புறநா.53).

*[எம் + அன்னோர். அன்னோர் → அனோர்.]*

**எம்மாத்திரம்** *emmāttiram*, கு.வி.எ. (adv) ***எவ்வளவு;*** how much.

*[எம் + மாத்திரம்.]*

**எம்மாதிரி** *emmādiri*, பெ. (n) ***எதுபோல்;*** of which kind

ம. எம்மாதிரி

*[எம் + (மாத்திரி) மாதிரி மாதிரி = அளவினது, அளவால் ஒத்திருப்பது.]*

**எம்மான்**[1] *em-māṉ*, பெ. (n) ***என் மகன்;*** my son "எம்மானே தோன்றினா யென்னை யொளித்தியோ" (சீவக 1801)

*[எம் + மகன் - எம்மகன் → எம்மான்.]*

**எம்மான்**[2] *em-māṉ*, பெ. (n) 1 ***எம் இறைவன்;*** our lord. "எந்தையே யெம்மானே யென்றென் றேங்கி" (தாயு ஆகார.6). 2. ***எம் தந்தை;*** our father. "எம்மானெம்மனை யென்றனக் கெட்டனைச் சார்வாகார்" (தேவா.322,3).

ம. எம்மான்

*[எம் + பெருமான் - எம்பெருமான் → எம்பிரான் → எம்மான் (தொகுத்தல் திரிபு).]*

**எம்முன்** *em-muṉ*, பெ. (n) ***என் தமையன்;*** my elder brother. "எம்முன் யாண்டையான்" (கம்பரா. பள்ளி.89).

*[என் + முன் - எம்முன்.]*

**எம்மை**[1] *emmai*, பெ (n) 1 ***எப்பிறப்பு;*** which birth, in metempsychosis "எம்மைக் கிதமாகவிஃ தெண்ணினை" (கம்பரா.சடாயுவுயிர்.99). 2. ***எவ்வுலகம்;*** what world "எம்மை யுலகத்தும் யான்காணேன்" (நாலடி.132).

*[எம் + ஐ. ஐ = வேற்றுமை உருபு.]*

**எம்மை**[2] *em-m-ai*, பெ. (n) 1. ***எந்தலைவன்;*** our lord, our master. "நிறையெம்மை" (அறநெறிச்.206). 2. ***எங்களை;*** us (ஆ.அக.) (செ அக.).

*[எம் + ஐ ஐ = தலைவன்.]*

**எம்மையும்** *emmaiyum*, பெ. (n) 1. ***எங்களையும்;*** including us 2 ***எப் பிறப்பும்;*** all births

*[எம் + ஐ + உம் ]*

**எம்மையோர்** *emmaiyōr*, பெ. (n) ***எம்மவர்;*** our party, those connected with us. "எம்மையோ ரனைவரும்" (கம்பரா.சடாயுவுயிர்.48)

*[எம் + அவர் - எம்மவர் → எம்மவோர் → எம்மையோர் (ஈற்றுத் திரிபு).]*

**எம்மோர்** *emmōr*, பெ. (n) ***எம்முடையவர்;*** my fellows, our friends

*[எம் + அவர் - எம்மவர் → எம்மோர்.]*

**எம்மோன்** *emmōṉ*, பெ. (n) ***எம்முடைய தலைவன்;*** our master "எம்மோன்... ... குறவர் பெருமகன்," (புறநா.157).

ம. எம்மோன்.

*[எம் + அவன் - எம்மவன் → எம்மோன்.]*

**எமகாதகன்** *ema-kādagaṉ*, பெ. (n) ***பெருந்திறல் படைத்தவன்;*** stalwart, astute man, scheming person, able even to kill yama

*[எமன் + காதகன். காதுதல் = பொருதல், சினத்தல். காதுகன் → காதகன் ]*

**எமதருமன்** *emadarumaṉ*, பெ. (n.) ***இயமன்;*** Yama, in his office as judge of souls "எமதருமனும் பகடுமேய்க் கியாய்" (தாயு சிற்சு.10).

*[எமன் + தருமன். Skt dharma > த. தருமம்.]*

**எமர்** *emar*, பெ (n.) ***எம்மவர், எமது சுற்றத்தார்;*** our relatives; our friends "எமரேழெழு பிறப்பும்" (திவ்.திருவாய்.2,7,1).

*[எம் + அவர் - எம்மவர் → எமர்.]*

**எமரங்கள்** *emaraṅgaḷ*, பெ. (n) ***எமர்*** பார்க்க; see *emar*. "இற்பூட்டிப் போயினா ரெமரங்கள்." (திருவிளை. விருத்தகு.20).

*[எமர் → எமரம் + கள்.]*

**எமரன்** *emaraṉ*, பெ. (n.) ***எமன்***[1] பார்க்க; see *emaṉ*[1] "எமர னாயி னிறைகொடுத் தகல்க" (பெருங்.உஞ்சைக்.37,201).

*[இயமன் → எமன் + அரசன் - எமராசன் → எமரன்.]*

**எமராசன்** *ema-rāsaṉ*, பெ. (n.) *எமன்²* பார்க்க; see *emaṉ*.

*[எமன் + அரசன் - எமனரசன் → எமராசன்.]*

**எமன்¹** *emaṉ*, பெ. (n) *எம்மைச் சேர்ந்தவன்* (நன்.275, மயிலை); he who is one of us, he who is for us

*[எம் + அவன் - எம்மவன் → எம்மன் → எமன்]*

**எமன்²** *emaṉ*, பெ. (n.) *இறப்புக் கடவுள்:* Yama, god of death

ம. எமன்

*[இய → இயமன் → ஏமன் → எமன். இய = செலுத்துதல், கடவுதல், இயமன் = ஊழின் வண்ணம் செலுத்துபவன். உயிர்களைப் பற்றிச் செல்பவன்]*

**எமி¹** *emi*, பெ. (n) *தனிமை;* solitude. "எமியேந்துணிந்த வேமஞ்சா லருவினை" (குறிஞ்சிப் 32).

*[எம் → எமி = யான் மட்டும் தனித்திருக்கும் நிலை. என் → எம் → எமி.]*

**எமி²** *emi*, பெ. (n) *கூடியிருப்போன்* (திவா); one in company with others "எமியை யிருந்தர சாள்வது கண்டவென் கண்க ளினைந்தழியத் தமியை யிருந்தானை" (தணிகைப்பு சீபரி.563)

*[அம் → அமி → எமி = கூடியிருத்தல். அம்முதல் = கூடுதல்.]*

**எமுனை** *emuṉai*, பெ (n.) *யமுனை யாறு;* river Jamna. "சாலுமயத் தெமுனை" (தணிகைப்பு.அகத்.489).

**எய்¹-தல்** *ey-*, 1.செ.குன்றாவி. (v.t) *அம்பெய்தல்;* to discharge arrows "மின்னுங் கணையா லிவனெய்திட" (பாரத.சம்பவ.49).

ம எய்யுக, **க.** ஏய், எசெ, இசு, எச்செ, எசு; **கோத.** எய், இய், இசிவ், இச், **துட.** எவ்; **து.** எய்யுளி, ஈபுளி; **தெ.** ஏயு, எகுசு, **பர்.** எய், எய்க், **கோண்.** எசுனா, **குரு.** இனசனி, **மால்.** இன்கெ

*[இய் → எய் → எய-தல். (வே க.52,53)]*

**எய்²** *ey*, பெ. (n.) *முள்ளம்பன்றி;* porcupine "எய்ம்முள் ளன்ன பரூஉமயிர்" (நற்.98).

**ம., க.** எய்; **து.** எயி; **தெ.** ஏது.

*[எய் = முள், முள்ளுடைய பன்றி.]*

**எய்³** *ey*, பெ. (n) 1. *அம்பு;* arrow. "இவளாகத் தெய்யே றுண்டவாறெவன்" (திருவிளை.பழியஞ்.24). 2. *வேடன்;* hunter 3. *வேடர்குலம்;* hunters' community

*[இல் → இய் → எய். எய் = முள், அம்பு, அம்பினையுடைய வேடன், வேடகுலம். இச்சொல் எய் → எயது → யது எனத்திரிந்து வடபுலத்து மன்னர் மரபைக் குறித்த சொல்லாயிற்று.]*

**எய்⁴** *ey*, பெ. (n.) *வறுமை;* poverty. "எய்யுரையான்" (ஏலா.33).

*[எள் = எளிமை, வறுமை. எள் → எய்.]*

**எய்⁵-த்தல்** *ey-*, 1.செ.கு.வி. (v.i.) *காலூன்றி நிற்கும்படி நீர் ஆழமில்லாதிருத்தல்;* to be within one's depth.

*[எள் → எய். எள் = எளிமையாதல்.]*

**எய்⁶-த்தல்** *ey-*, 1.செ.கு.வி. (v.i.) 1. *இளைத்தல்;* to grow weary by exertion; to fail on strength as in battle; to flag as from want of food. "எய்த்த மெய்யெ னெய்யே னாகி" (பொருந 68). 2. *மெய் வருந்துதல்;* to take pains, exert onself "எய்யாமை யெல்லா வறமுந் தரும்" (குறள் 296) 3 குறைவுறுதல், to be deficient "எய்த் தெழு பிறையினை வளைவின் றாகநேர் வைத்துளதெனின்" (இரகு யாகப்.8) - 1.செ.குன்றாவி (v.t) *அறிதல்;* to know, understand "நொந்தவென் றெய்த்தடிச் சிலம்பிரங்கும்" (சீவக.2683). 2. *மெலிதல்;* to grow weak and thin for want of food.

*[இள் → இளை → எய் → எய்த்தல். (வே.க.21,53).]*

**எய்த** *eyda*, கு.வி.எ. (adv) 1. *நன்குபொருந்த;* carefully, well, adequately "எனநினைத் தெய்த நோக்கி" (கம்பரா. உருக்கா.28). 2. *நிரம்ப;* very much, abundantly, profusely "எய்த .. தம்மைப் புகழ்தல்" (பழ.65).

*[இய் → இயை → இயைத → எய்த]*

**எய்து-தல்** *eydu-*, 10 செ.கு வி. (v.i.) 1. *அணுகுதல்;* to approach "நெடியோ யெய்த வந்தனம்" (புறநா.10). 2. *அடைதல்;* to obtain, attain "ஏமவைக லெய்தின்றாலுலகே" (குறுந்.கடவுள்.வாழ்த்து.). 3. *சேர்தல்;* to reach, as a place "தூநிறக் கங்கையாள் சூழலெய்தினான்". (பாரத.குருகுல.34). 4. *பணிதல்;* reverse, surrender. "இளங்கொடியே யெய்தும்" (தஞ்சையா 386) 5. *நீங்குதல்;* to leave, depart "எய்த லில்லாத் திருவின்" (தஞ்சைவா 386). - 10.செ கு வி. (v.i) 1. *பொருந்துதல்;* to be adapted, be suitable "காலத்தோடெய்த வுணர்ந்து செயல்" (குறள் 516). 2 *நிகழ்தல், தேர்தல்;* to happen, occur. "எட்டி குமர னெய்திய துரைப்போன்" (மணி.4,64) 3. *உண்டாதல்;* to appear, become, crop up "மாசெனக் கெய்தவும்" (கம்பரா சிறப் 6). 4. *போதியதாதல்,* to be sufficient, adequate "சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணி" (ஐந்.ஐம்.38).

**ம.** எய்துக; **க.** அய்து, **துட.** இச, **குட.** எத்த, **து.** எத்தாவுனி, எத்தாடுனி; **தெ.** எயிது, எது; **கொலா.** எந்த், **பர்.** ஏத், ஏய், எயிபிப்; **கோண்.** எனாவா; **கூ.** எப; **குவி.** எசலி.

*[இய → எய் → எய்து → எய்துதல்.]*

**எய்ப்பன்றி** *ey-p-paṉṟi*, பெ. (n) *முள்ளம்பன்றி;* porcupine. எய்ப்பன்றி முதுகுபோலும் (பெரும்பாண் 88, உரை).

**தெ.** எதுபந்தி; **து.** எலிபஞ்சி; **ம.** எய்பன்னி; **க.** ஏது கூந்தி; **குட.** எப்பந்தி; **பட.** இப்பந்தி.

*[இல் → இய் → எய் + பன்றி. எய் = முள்]*

**எய்ப்பாடி** *eyppāḍi*, பெ. (n.) *வேடரூர்;* hunter's village.

*[எய் + பாடி]*

**எய்ப்பில்வைப்பு** *eyppil-vaippu,* பெ. (n.) ***தான் தளர்ந் தும் பிறரைத் தாங்குவது*** (யாழ் அக.); that which, though itself feeble, is a source of strength and support to other things

*[எய்ப்பில் + வைப்பு ]*

**எய்ப்பினில்வைப்பு** *eyppinil-vaippu,* பெ (n) ***எய்ப்பில் வைப்பு*** பார்க்க; see *eyppil-vaippu* "நல்லடியார் மனத் தெய்ப்பினில் வைப்பை" (தேவா 818,2)

*[எய்ப்பு + இன் + இல் + வைப்பு.]*

**எய்ப்பு** *eyppu,* பெ. (n) 1. ***இளைப்பு;*** weariness, languor. "எய்ப்பானார்க் கின்புறு தேனளித்து" (தேவா.189,3). 2 ***வறுமைக்காலம்;*** time of adversity. "எய்ப்பினில் வைப்பென்பது" (பழ.358). 3. ***தளர்ச்சி;*** weakness

*[எய் → எய்ப்பு ]*

**எய்ப்போத்து** *ey-p-pōttu,* பெ (n) ***ஆண்முள்ளம்பன்றி;*** male porcupine "கற்கந்தும் எய்ப்போத்தும் .... அனை யார்" (இறை 2,உரை,பக்.27).

*[எய் + போத்து ]*

**எய்ம்மான்** *ey-m-māṉ,* பெ. (n) ***எய்ப்பன்றி;*** porcupine. "எயினர் தந்த வெய்ம்மா னெறிதசை" (புறநா.177,13).

*[எய் + மான். மா = விலங்கு. 'ன்' சொல்லாக்க ஈறு ]*

**எய்யாமை** *eyyāmai,* பெ. (n.) ***அறியாமை*** (தொல். சொல் 342); ignorance

*[இய் → எய் → எய்யாமை (வே.க.53).]*

**எயம்** *eyam,* பெ. (n) ***ஏலம்;*** cardamom. (சா.அக.).

*[ஏலம் → ஏயம் → எயம் (கொ.வ )]*

**எயில்** *eyil,* பெ. (n) 1 ***மதில்;*** fortress, wall, fortification "திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி" (மணி.6,22) 2. ***ஊர், நகரம்*** (திவா.), town, city

ம. எயில்

*[எய் + இல் எய்யும் ஏப்புழைகள் உள்ள இருப்பிடம். எய் → எய்தல். இல் = இருப்பிடம் ]*

**எயில்காத்தல்** *eyil-kāttal,* பெ. (n) ***அகத்தோன் உள்ளி ருந்து கோட்டையைக் காத்து நிற்றலைக் கூறும் புறத்துறை*** (தொல் பொருள் 67,உரை ), theme which treats of the defence of a fortress by its owner (செ.அக.).

*[எயில் + காத்தல் ]*

**எயிற்றம்பு** *eyiṟṟambu,* பெ. (n) ***அலகம்பு;*** arrow tipped with a spear-head "எயிற்றம்பு மூழ்கலின்" (சீவக 780).

*[எயிறு + அம்பு ]*

**எயிற்றழற்சி** *eyiṟṟalarci,* பெ. (n) ***பல்லுக் கேற்படும் நோய்;*** inflammation of a tooth - Odontitis (சா.அக.).

*[எயிறு + அழற்சி.]*

**எயிற்றி** *eyiṟṟi,* பெ. (n.) ***எயினக்குடிப் பெண்;*** woman of the Eyiṉ caste. "கருங்க ணெயிற்றி" (புறநா.181).

*[எயின் + தி - எயிற்றி ]*

**எயிற்றியர்** *eyiṟṟiyar,* பெ. (n.) ***எயிற்றி*** பார்க்க; see *eyiṟṟi.*

**எயிற்றுப்புண்** *eyiṟṟuppuṇ,* பெ. (n) ***பல்லீற்றி லுண்டா கும் புண்;*** sore of the gum as the result of an abscess or an ulcer - gum-boil (சா.அக.).

*[எயிறு + புண் ]*

**எயிறலை-த்தல்** *eyiṟ-alai,* 4.செ.கு வி. (v.i ) ***சினத்தாற் பல்லைக் கடித்தல்;*** to gnash the teeth in anger "ஆவனகூறி னெயிறலைப்பான்" (நீதிநெறி.3).

*[எயிறு + அலை.]*

**எயிறு** *eyiṟu,* பெ (n) 1. ***பல்;*** tooth. "முல்லையலைக்கு மெயிற்றாய்" (நாலடி.287). 2 ***பல்லின் விளிம்பு*** (பிங்.); the gums 3 ***யானை, காட்டுப் பன்றிகளின் வாய்க்கோடு;*** tusk of the elephant, or the wild hog, "கேழலா யிளையெனுந் திருவினை யேந்தி னானரோ ... ஒரெயிற்றினுள்" (கம்பரா கிளை.119).

ம. எயிறு, எகிறு. பட. எமறு, தெ. இகறு. சிகுறு.

*[எய் = குத்துதல், பிளத்தல், கடித்தல் எய் → எயிறு ]*

**எயிறுதின்(னு)-தல்** *eyiṟu-tiṉ-,* 13 செ.கு.வி. (v.i.) ***வெகுளியால் பல்லைக் கடித்தல்;*** to gnash the teeth in anger "எயிறுதின்று வைது" (பாரத நிவாத.115).

*[எயிறு + தின் ]*

**எயின்** *eyiṉ,* பெ. (n.) ***வேடர்குலம்;*** hunting tribe of the desert tract "எயினிடு கடனிது" (சிலப்.12 பா டல் 18, அணிமுடி).

*[எய் → எய்நன் → எயினன் → எயின் = எயின் குடியினர். எயினர் → ஏனர் → ஏனாதியர் என ஆந்திரத்திலும், ஜெயின் என வடபுலத்திலும் குடிப்பெயர் திரிபுற்றனர் என்பர் ]*

**எயின்சேரி** *eyiṉ-cēri,* பெ (n) ***வேட்டுவர் ஊர்;*** village inhabited by the hunting tribes "எயின்சேரியினுள்ள மாதர்" (கந்தபு.வள்ளி 28)

*[எயின் + சேரி ]*

**எயினச் சேரி** *eyiṉa-c-cēri,* பெ. (n.) ***எயின்சேரி*** பார்க்க (நன்.212,விருத் ); see *eyiṉ-cēri.*

*[எயின் + அ + சேரி ]*

**எயினன்** *eyiṉaṉ,* பெ (n.) ***வேடன்;*** hunter, inhabitant of the desert tract. "கொடுவிலெயினர் குறும்பில்" (பெரும்பாண்.129).

*[எய் + நன் - எய்நன் → எயினன் (வே.க.53) ]*

**எரங்காடு[1]** *eraṅ-kāḍu,* பெ. (n) ***பாழ்நிலம்*** (இ.வ.); barren land

*[எல் → எரு + எரி = எரிநிறம், சிவப்பு எரி + அம் + காடு - எரங்காடு. எரி = செந்நிலப்பாங்கான மேட்டுக்கரம்பு ]*

**எரங்காடு**[2] *eran-kāḍu*, பெ. (n) *பருத்தி விளைதற்குரிய செழித்த புன்செய் நிலம்;* fertile land of red loam soil, fertile black cotton soil

*[எல் → எரு + அம் - எருவம் = செந்நிலம் எருவம் + காடு (வே க.60).]*

**எரல்** *eral*, பெ. (n) *கடற்சிப்பி;* sea-shell (சா.அக.).

*[ஈரல் → ஏரல் (பிளவுண்டது).]*

**எரி**[1]**-தல்** *eri-*, 4 செ கு வி (vi) 1. *தீமூளல், சொலித்தல்;* to flame, ignite "எரியுந் தீயோடு" (திவ் திரு வாய் 3,6,5) 2. *ஒளிர்தல்;* to glow, shine "எரியுஞ் செம்பொன் மணிமுடி" (சூளா.மந்தி 6) 3. *எரிச்சலுண்டாதல்;* to burn, as a sore, as fever, to smart, to suffer pain, to feel pangs, as the stomach from hunger கண்ணெரிகின்றது (உ.வ.). 4 *பொறாமை கொள்ளுதல்;* to be envious, jealous. அவனைப் பார்த்து இவன் வயிறு எரிகிறான் (உ.வ.). 5 *மனம் வருந்துதல்;* to experience a painful emotion அதைப் பார்க்கும்போது மனம் எரிகிறது. 6. *சினம் கொள்ளுதல்;* to be angry, indignant எரிந்து விழாதே (உ வ.) 7 *முதிர்தல்;* to become old "எரிகின்ற மூப்பினாலும்" (கம்பரா. மருத்து.17). 8. *மிகுதல்;* to go on increasing.

**ம.** எரி; **க.** உரி, குட. எரி, **து.** எரி, **தெ.** ஏர்பு; **கோண்.** அர்சி, எரக (சுரம்); **கூ.** ஏர்ப.

*[உல் → அல் → எல் → எரி. உல் = வெப்பம், சூடு, நெருப்பு எரிதல் = தீ உண்டாதல், அழல் மண்டுதல்.]*

**எரி**[2]**-த்தல்** *eri-*, 4.செ.குன்றாவி. (vt) 1. *தீயால் வெந்தழியச் செய்தல்;* to burn, consume by fire, scorch "புரமூன் றெரித்தவா" (திருவாச 13,6). 2. *விளக்கு, பந்தம் முதலியன எரிதல்;* to keep burning, as a lamp or torch. "வீட்டுக்கெரித்த விளக்கு" (தமிழ்நா.237) 3. *மருந்து முதலியன புடமிடுதல்;* to sublimate, calcine, as metals, to reduce to powder by fire for making medicine எரிமருந்து (இ வ ). 4 *அழற்றுதல்;* to inflame, as a sore, to cause to burn, as poison அந்த மருந்து உடம்பை எரிக்கிறது 5. *செரிக்கச் செய்தல்;* to digest இந்த மருந்து உண்டதையெல்லாம் எரிக்கும் (உ.வ.)

**தெ.** எரியின்சு; **ம.** எரி; **க.** உரிசு.

*[எல் → எரி → எரி-த்தல்.]*

**எரி**[3] *eri*, பெ. (n) 1 *ஒளிர்வழி;* glowing light, brightness "எரிகொள் செந்நாயிறு". (திவ்.இயற்.திருவிருத் 82). 2. *நெருப்பு;* fire "எரியாற் சுடப்படினும்" (குறள்.896). 3. *நெருப்புக்கடவுள்;* agni, god of fire. "காவக மெரிக்கு நல்கிய.... சிலையினான்" (பாகவத.1,6,22). 4. *அளறு* (திவா.); hell. 5. *மூன்றாம் நாண் மீன், ஆரல்* (கார்த்திகை); third nakṣatra. "எரிசடையெழில்வேழம்" (பரிபா.11,2). 6. *ஏழாவது நாண் மீன், கழை* (புனர்பூசம்.) (பிங் ), seventh nakṣatra 7. *பதினெட்டாவது நாண் மீன், தழல்* (கேட்டை.) (பிங்.); 18th nakṣatra. 8. *கந்தகம்;* sulphur, brimstone "பூதமெரியேல மிலவம்" (தைலவ.தைல. 135) 9. *விடையோரை* (பரிபா.11,2,உரை.); taurus of the Zodiac

**ம., து.** எரி.

*[எல் → எரி (செல்வி.77, திசம் 178).]*

**எரி**[4] *eri*, பெ. (n) 1 *சிவப்புநிறம்;* red colour. 2 *சிவப்பு நிறமுள்ள பொருள்;* anything red in colour

*[எல் → எரி.]*

**எரி**[5] *eri*, பெ. (n) 1. *வால் நாண்மீன் வகை* (புறநா.395); comet 2 *கொடிவேலி* (பச்.மூ.); Ceylon leadwort. 3. *தீக்கடைகோல்;* "சமிதையுடன் மேலெரிகொண்டு" (பெரியபு.சண்.27); fire-drill

**ம.** எரி.

*[எல் → எரி.]*

**எரிக்கொடி** *eri-k-kodi*, பெ. (n.) *நெருப்பின் கொழுந்து,* flame of fire. "எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போல" (ஐங்குறு.353).

*[எரி + கொடி ]*

**எரிகடுப்பு** *erikaḍuppu*, பெ. (n) *எரிச்சலை யுண்டாக்கு மோர் வகை வலி;* pain marked by burning sensation, irritation

*[எரி + கடுப்பு ]*

**எரிகண்** *erikan* பெ. (n) 1. *நச்சுக்கண்;* evil eye 2. *எரிச்சலை யுண்டாக்கு மோர் வகைக் கண்ணோய்;* eye disease accompanied by burning sensation 3. *தீக்கண்;* fiery eye (of Siva) (சேரநா.).

**ம.** எரி கண்ணு; **க.** உரிகண்.

*[எரி + கண் ]*

**எரிகதிர்** *eri-kadir*, பெ. (n.) 1. *கதிரவன்* (திவா.); Sun. 2. *செங்கதிர்;* red rays of the Sun.

*[எரி + கதிர்.]*

**எரிகரும்பு** *eri-karumbu*, பெ. (n.) *அடுப்புவிறகு;* firewood, "எங்கள் மடத்துக் கெரிகரும்புகொள்வது" (தனிப்பா.1,76,149).

*[எரி + கரும்பு.]*

**எரிகல்** *erikal*, பெ. (n.) 1. *கந்தகம்;* brim stone 2. *எரியுந் தன்மையுள்ள ஒருவகைக்கல்;* stone with exordinary qualities.

*[எரி + கல்.]*

**எரிகள்** *erikal*, பெ. (n) 1. *எரிச்சல் உண்டாக்கும் கள், மிகவும் புளித்த கள்;* fermented toddy.

**ம.** எரிகள்ளு.

*[எரி + கள்.]*

**எரிகனல்** *erikaṉal,* பெ. (n) ***தீக்கனல்;*** glowing coal, burning splinter, fire brand (சேரநா.).

ம. எரிகனல், க. உரிகெண்டெ.

*[எரி + கனல்.]*

**எரிகுஞ்சி** *eri-kuñji,* பெ. (n) ***செம்மயிர்*** (வின்.); red hair, of the colour of red flame

*[எரி[4] + குஞ்சி ]*

**எரிகுடல்** *eri-kuḍal,* பெ. (n) ***மிகுபசி*** (யாழ்ப்.) canine appetite, morbidly voracious appetite.

ம. எரிகுடல்

*[எரி + குடல்.]*

**எரிகுடலன்** *eir-kuḍalaṉ,* பெ. (n.) ***மிக்க பசியையுடையவன்*** (யாழ்ப்.); he who is always craving for food.

*[எரி + குடல் + அன் ]*

**எரிகொள்ளி** *eri-koḷḷi,* பெ. (n) ***கடைக்கொள்ளி;*** firebrand. எரிகொள்ளி எரிந்துவீழவும் (புறநா.41, உரை.). (செ.அக.).

ம. எரிகொள்ளி

**எரிச்சல்** *ericcal,* பெ. (n) 1. ***எரிக்கை;*** burning, heating செத்தை எரிச்சலுக்குதவும் (உ.வ.). 2. ***அழற்சி;*** burning sensation கண்ணெரிச்சல் 3 ***உறைப்பு*** (வின்.); acridity, pungency, as of some kind of fruits 4. ***சினம்;*** anger, fury. அயோக்கியனைக் கண்டால் அவனுக்கு எரிச்சல் அதிகம். 5. ***பொறாமை;*** envy, jealousy "மனத்தெரிச்சலாலே" (இராம.நா அயோத்.5). 7. ***பெருங்காயம்;*** asafoetida 8 ***வேகை;*** boiling 9. ***வெறுப்பு;*** disgust

ம. எரிச்சல்; குட. எரிவி; தெ. ஏர்பு.

*[எல் → எரி → எரிச்சல்]*

**எரிச்சற்படு-தல்** *ericcaṟ-paḍu-,* 20.செ.கு.வி. (v.i) ***பொறாமைப்படுதல்;*** to be envious, jealous.

*[எரிச்சல் + படு ]*

**எரிசினக்கொற்றவை** *ericiṉa-k-koṟṟavai,* பெ. (n.) ***கடுஞ்சீற்றமுடைய காளி;*** Durga, goddess of rage.

*[எரி + சினம் + கொற்றவை.]*

எரிசினக் கொற்றவை என்னும் பெயரை வடமொழியாளர் ரௌத்ர துர்காதேவி என மொழி பெயர்த்துக் கொண்டனர்.

**எரிசினம்** *ericiṉam,* பெ. (n.) ***கடுஞ்சீற்றம்;*** rage, fury

*[எரி + சினம்.]*

**எரிசுடர்** *eri-śuḍar,* பெ. (n.) 1. ***சொலிக்கும் நெருப்பு;*** fire which has burst out into flames. - கு.வி.எ. (adv.) ***மிக்கவொளி,*** immense illumination. "பருமணியெரிசுடர் பரப்பி" (கந்தபு.நகரழி.37). 3. ***விளக்கு;*** lamp.

*[எரி + சுடர்.]*

**எரிசுரை** *eriśurai,* பெ. (n.) ***சூடான சாராயம்;*** ardent spirit. (சா.அக.).

*[எரி + சுரை.]*

**எரிதூவு-தல்** *eri-tūvu-,* 5.செ.கு.வி. (v.i.) ***தீப்பற்றுதல்;*** to take fire. "ஒக்க முப்புர மோங்கெரி தூவ" (தேவா. 485,5) (செ அக.)

*[எரி + தூவு ]*

**எரிந்துவிழு-தல்** *erindu-viḻu-,* 2.செ.கு.வி. (v.i) 1. ***சீற்றம் காட்டுதல்;*** to wax hot and burst into a temper 2 ***சினந்து பேசுதல்;*** to talk angrily, fall foul of. (செ அக.).

*[எரி → எரிந்து + விழு.]*

**எரிநகை** *eri-nagai,* பெ (n) ***வெட்சிமலர்;*** name of the ixora flower. "எரிநகை யிடையிடு பிழைத்த நறுந்தார்" (பரிபா.13,59). (செ.அக.).

**எரிநாள்** *eri-nāḷ,* பெ (n) ***ஆரல் நாண்மீன்*** (கார்த்திகை நட்சத்திரம்) (பிங்.); third nakṣatra (செ.அக.).

*[எரி + நாள் நாள் = நாண்மீன்.]*

**எரிநோய்** *eri-nōy,* பெ. (n) ***ஆட்டுநோய்வகை*** (M.cm D (1887),249), contagious disease of sheep. (செ.அக ).

*[எரி + நோய் ]*

**எரிப்பு** *erippu,* பெ. (n) 1. ***எரிக்கை;*** burning. 2. ***கார்ப்புச் சுவை;*** pungency 3. ***பொறாமை;*** envy, jealousy 4. ***நெஞ்செரிப்பு*** (w.); burning sensation in the throat. (செ.அக ).

*[எரி → எரிப்பு.]*

**எரிப்புமா** *erippu-mā,* பெ. (n.) ***உறைப்புள்ள ஒரு வகை மாம்பழம்*** (இ.வ.); a variety of mango that is pungent to the taste

ம. எரிநாடன்.

*[எரி → எரிப்பு + மா.]*

**எரிப்புறம்** *eri-p-puṟam,* பெ. (n) ***நிரயம்*** (வின்.); hell.

*[எரி + புறம்.]*

**எரிப்பூ** *eri-p-pū,* பெ. (n.) ***எரிபோலும் நிறமுள்ள பூ;*** flower that has the hue of fire. "எரிப்பூம் பழனம்" (புறநா.249).

*[எரி + பூ.]*

**எரிபிடாரி** *eri-piḍāri,* பெ. (n.) 1. ***கடுஞ்சினமுடைய காளி தெய்வம், கொற்றவை;*** enraged, furious female goddess 2. ***எரிச்சலுடையவள்;*** peevish, fretful woman, spoken disparagingly.

*[எரி + பிடாரி. பிடாரி = கொல்பவள்.]*

**எரிபுழுகு** *eripuḻugu,* பெ. (n) ***நறுமணப் பொருள்*** (சவ்வாது.); substance taken from the anal glands of the civet - cats, It is a perfume. (சா.அக.).

*[எரி + புழுகு. இது இக்காலத்தில் புனுகு என வழங்கப்படுகிறது.]*

**எரிபுளி** *eri-puḷi,* பெ. (n) ***கூட்டுக்கறிவகை*** (இ வ ), hot curry of which buttermilk is one of the incredients

ம. எரிபுளி

*[எரி + புளி. உள் → புள் → புளி.]*

**எரிபொத்து-தல்** *eri-pottu-,* 10 செ கு வி (v i) ***அழல் மூட்டுதல்;*** to ignite, light a flame "கனையெரி பொத்தி" (மணி 2,42)

*[எரி + பொதது பொல் → பொள் → பொய் → பொய்த்து → பொத்து = அடித்தல், தேய்த்தல், கடைதல். எரிபொத்துதல் = தீ கடைதல், எரிமூட்டுதல் ]*

**எரிபொழுது** *eri-poḻudu,* பெ (n) ***செவ்வானப்பொழுது;*** rosy sunset (w )

*[எரி + பொழுது பொல் → பொழுது = ஒளியுள்ளது, இருள் விடிந்து புலரும் நேரம், ஒளி காணும் நேரம் ]*

**எரிபொறி** *eri-poṟi,* பெ. (n) 1. ***தீப்பொறி;*** spark of fire 2. ***மிகுந்த சூடு;*** scorching heat (சேரநா ).

ம. எரிபொரி

*[எரி + பொறி.]*

**எரிமணி** *eri-maṇi,* பெ (n.) ***ஒளிர்வுள்ள மணி;*** sparkling jewel, bright gem (கூர்மபு அட்டமூ 2).

*[எரி + மணி ]*

**எரிமருந்தன்** *eri-marundaṉ,* பெ (n) ***வெடிமருந்து செய்பவன்;*** manufacturer of gun powder (Insc ) (செ அக )

*[எரி + மருந்தன்.]*

**எரிமருந்து** *eri-marundu,* பெ. (n) 1. ***புடமிட் டெடுத்த மருந்து;*** calcined medicine 2. ***உறைப்பான மருந்து;*** medicine pungent or corrosive 3. ***அடுப்பி லிட்டு எரித்த எண்ணெய் முதலிய மருந்துகள்;*** medicated oils and medicines prepared by heating on an oven. 4 ***செய்நஞ்சு;*** poisons or poisonous compounds 5 ***உள்ளுக்குச் சாப்பிட அழற்சியையும் அல்லது வெளியிற் பூச எரிச்சலையும் உண்டாக்கும் மருந்து;*** medicine causing inflammation when taken internally or burning sensation when applied externally. 6 ***வெடிமருந்து;*** gun powder. (சா.அக.).

*[எரி + மருந்து ]*

**எரிமலர்** *eri-malar,* பெ. (n) 1. ***முருக்குமலர்;*** flower of the Indian Coral-tree "எரிமலர்ப் பவளச் செவ்வாய்" (சீவக.662). 2 ***செந்தாமரை;*** red lotus "செல்வ னெரிமலர்ச் சேவடியை" (சீவக 2741).

ம. எரிமலர்.

*[எரி + மலர்.]*

**எரிமலை** *eri-malai,* பெ. (n) ***கல்லும் மண்ணும் கலந்துருகிப் பொங்கித் தீப்பற்றி எரியும் மலை;*** mountain with a burning hole in which stones and mud are converted into a molten state called lava and thrown out - volcano

ம. எரிமலை

*[எரி + மலை ]*

**எரியம்பு** *eriyambu,* பெ (n) ***தீயுமிழும் அம்பு;*** fiery arrow (சேரநா.)

ம. எரியம்பு

*[எரி + அம்பு - எரியம்பு. இதனை வடமொழியாளர் அக்கினி யததிரம் என்பர் ]*

**எரியல்** *eriyal* பெ (n) 1 ***எரிவு;*** burning 2 ***ஒளிர்கை;*** shining 3 ***எரிந்தது*** (யாழ்ப ); that which is burnt, as charred food at the bottom of a vessel in cooking

*[எரி → எரியல் ]*

**எரியாடி** *eri-y-āḍi,* பெ (n) 1 ***அழலை யேந்தியாடுபவ னாகிய சிவன்;*** Śiva, who dances with flaming fire in hand "எரியாடி தென்றில்லை" (திருக்கோ 127). 2. ***வற்றல் மிளகு;*** pepper. (சேரநா.)

ம. எரியாடி

*[எரி + ஆடி.]*

**எரியாணிவெயில்** *eriyāṇiveyil,* பெ (n) ***நெருப்புப் போல் மிகு சூடாக இருக்கும் வெயில்;*** burning or scorching sunshine (சேரநா.).

ம. எரியாணிவெயில்

*[எரியாணி + வெயில். எரியாணி = நெருப்பிலிட்ட இரும்பு ஆணி ]*

**எரியிடு-தல்** *eri-yiḍu-,* 20 செ.கு வி. (v i) 1. ***எரியவைத் தல்;*** to cause to burn 2 ***தீமூட்டுதல்;*** to set fire

*[எரி + இடு ]*

**எரியீசல்** *eriyīsal,* பெ. (n.) ***ஒரு வகைச் சிறிய ஈ;*** a kind of small fly (சேரநா.).

ம. எரியீச்ச.

*[எரி + ஈசல்.]*

**எரியூட்டு-தல்** *eri-y-ūṭṭu-,* 5.செ.குன்றாவி. (v t.) ***தீக் கொளுத்துதல்;*** to set fire to. இலங்கை யெரியூட்டு படலம் (கம்பரா ).

ம. எரியிக்குக.

*[எரி + ஊட்டு-தல் ]*

**எரியெண்ணெய்** *eriyeṇṇey,* பெ. (n) 1. ***அடுப்பி லிட்டு எரித்துக் காய்ச்சி வடித்த மருந்தெண்ணெய்;*** medicated oil prepared by boiling oil on an oven. 2. ***காய்ச்சிய எண்ணெய்;*** heated oil. 3. ***எரிச்சலை யுண்டாக்குமோர் மருந்தெண்ணெய்;*** medicated oil causing irritation or burning sensation 4. ***கரண்டியிலிட் டுக் காய்ச்சிச் சோற்றிலே ஊற்றும் முக்கூட்டெண் ணெய்;*** mixture of ghee, castor oil and sesame oil,

burnt in a ladle and poured on food (செ அக) (சா அக).

ம. எரியெண்ண

[எரி + எண்ணெய]

**எரியோம்பு-தல்** *eri-y-ōmbu-,* 7.செ கு.வி (vi) *தீவேள்வி செய்தல்;* to make offerings in the consecrated fire "கற்றாங்கெரியோம்பி" (தேவா.1 1)

[எரி + ஓம்பு]

**எரியோன்** *eriyōn,* பெ. (n) *தீக்கடவுள்;* Agni the god of fire "ஒள்ளெரியோனு மொளித்தான்" (கம்பரா.இலங் கையெரி.64)

[எரி → எரியன் → எரியோன்.]

**எரிவந்தம்** *erivandam,* பெ (n) 1 *எரிச்சல்;* burning sensation 2 *எரிவு;* blistering heat 3 *எரிச்சலை யுண்டாக்குமோர் நோய்;* any disease such as carbuncle, biliousness etc accompanied by burning sensation. 4 *சினம்;* anger, wrath, rage. (செ அக.) (சா.அக.).

[எரிவருதல் → எரிவா → எரிவந்தம்]

**எரிவனம்** *eri-vanam,* பெ (n) *சுடுகாடு;* cremation ground (திவா.)

[எரி + வனம்]

**எரிவிழி-த்தல்** *eri-vili-,* 4 செ.குன்றாவி. (vt) *சினந்து பார்த்தல்;* to glare at fiercely with blazing eyes "தானவனை அரியுருவமாகி யெரிவிழித்து" (திவ் இயற் பெரியதிரும 100)

[எரி + விழி]

**எரிவிளக்குறு-த்தல்** *eri-vilakkuru-,* 4.செ குன்றாவி (vt) *தலைவிளக் கெரித்துத் தண்டித்தல்;* to punish a condemned culprit by compelling him to go around the town with a burning lamp over his head "எரிவிளக் குறுக்கு நம்மை" (சீவக 1162).

[எரி + விளக்கு + உறு]

**எரிவு** *erivu,* பெ (n) 1 *எரிகை;* burning 2 *உடற் சுடுதல்;* heat in the system, burning, as of the eyes, hands, feet, etc 3. *பொறாமை;* envy, jealousy "எரிவி னாற் சொன்னா ரேனும்" (தேவா 758,9) 4 *சினம்;* wrath "இழந்தா னெரிவினா லீர்ந்து" (திவ் பெரி யாழ் 1,2,4) 5 *அழற்சி;* inflammation (சா அக)

ம. எரிவு, க. உரி, குட. எரிவி, து. எரி; தெ. எர்வு, பர். எரிப்; கோண். ஏரினானா, கூ. ஏர்ப

[எரி → எரிவு.]

**எரு** *eru,* பெ. (n) 1 *உரம்;* animal or vegetable manure "பிடித்தெருவும் வேண்டாது" (குறள்.1037). 2. *எரு முட்டை* பார்க்க, see *erumuttai* 3 *மலம்;* excrement "எருவாய் கருவாய் தனிலே" (திருப்பு.774). 4 *எருது;* bull (சா அக) 5. *சாணம்;* dung,as of a cow

ம. எரு. க. எருவு; தெ. எருவு.

[இய → இயல் → எல் → எரு (வெளிப்படுவது)]

**எருக்கங்கொழுக்கட்டை** *erukkankolukkattai,* பெ. (n) *பிசைந்த அரிசிமாவை மூன்று அங்குல நீளமாக அடைதட்டி, சருக்கரையும் திருகின தேங்காயும் வெந்த பருப்பும் கலந்து அல்லது பயற்றை மட்டும் அதனுள் வைத்து மடித்து அவித்த ஓர் வகைப் பலகாரம்;* a pastry or tart, backed in steam The rice flour is doughed into a paste, pressed flat and then expanded in to a thin sheet about three inches in diametre Baked dholl or other grains mixed with cocoanut and sugar is placed on it, covered and then steamed

[எருக்கன் + கொழுக்கட்டை]

**எருக்கங்கோல்** *erukkankōl,* பெ. (n) *மருந்து அல்லது மருந்துச் சரக்குகளை வறுப்பதற்காகப் பயன்படுத் தும் எருக்கஞ்செடியின் கொம்பு;* a twig of the madar plant used for roasting medicine or other drugs (சா.அக)

[எருக்கன் + கோல்.]

**எருக்கட்டு[1]-தல்** *eru-k-kattu,* 5 செ குன்றாவி. (vt) 1 *கிடைவைத்தல்;* to fold sheep, herd cattle for manure, keep cattle penned in a field that they might manure it 2. *சாணஞ்சேர்த்தல்* (வின்.), to collect dung

[எரு + கட்டு-தல்]

**எருக்கட்டு[2]** *eru-k-kattu,* பெ. (n) 1 *உரத்திற்காகக் கிடைவைக்கை;* folding of sheep and herding of cattle for manure 2 *கிடைவைத்த கொல்லை;* land thus manured 3 *எருக்களம்;* manure store, dung hill (ஆ.அக) (செ அக.).

[எரு + கட்டு]

**எருக்கம்** *erukkam,* பெ. (n) *எருக்கு* பார்க்க; see *erukku.* (சா.அக).

**எருக்கம்பஞ்சு** *erukkam-pañju,* பெ. (n) *எருக்கங்காய் முற்றி வெடிப்பதனால் அதனின் றெழும்பிப் பறக் கும் பஞ்சு;* fine silky floss which surrounds the seeds of the madar plant French cotton.

[எருக்கம் + பஞ்சு]

**எருக்கம்பால்** *erukkampāl,* பெ. (n.) *எருக்கின் பால்; இது மருந்தாகப் பயன்படுகிறது;* milk of madar plant.

[எருக்கம் + பால்]

**எருக்கல்** *erukkal,* தொ.பெ. (vbl.n) 1. *கொல்லல்;* killing 2. *வெட்டல்;* hewing or cutting (சா.அக.)

[உல் → எல் → எருக்கு → எருக்கல்.]

**எருக்கழித்துக்கொடு-த்தல்** *eru-k-kalittu-k-kodu-,* 4.செ கு வி (vi.) *வைக்கோலில் சாணியிட்டுக்கொ டுத்து மாட்டு விற்பனையை உறுதிப்படுத்துதல்*

(இ.வ.); to confirm a contract for the sale of cattle, the vendor taking a small quantity of straw in hand, putting some cowdung on it and presenting it to the purchaser

[எரு + கழித்து + கொடு]

**எருக்களம்** *eru-k-kaļam,* பெ (n) ***எருவிடுமிடம்;*** site set apart for a dung hill (செ அக.)

[எரு + களம்]

**எருக்கிலைமணி** *erukkilai-mani,* பெ (n) ***பரவமகளிர் அணியும் கழுத்தணி வகை;*** necklace worn by Parava women (செ அக.)

[எருக்கு + இலை + மணி]

**எருக்கிலைமாலை** *erukkilai-mālai,* பெ (n) ***எருக்கிலைமணி*** பார்க்க, see *erukkilaimani* (செ அக.)

**எருக்கு**[1] *erukku,* பெ (n) ***செடிவகை;*** yarcum, madar, m sh calotropis gigantea "எருக்கின் முகிழ்நோக்கும்" (தணிகைப்பு களவு 274) (செல்வி 77,திச 178).

வ. அர்க்க ம. எரிக்க

[எரு → எருக்கு]

**எருக்கு**[2]**-தல்** *erukku,* 5 செ குன்றாவி (v.t) 1 ***கொல்லுதல்;*** kill (திவா.) 2 ***வருத்துதல்;*** to harass, trouble "படிறெருக்கி" (கலித் 81) 3 ***வெட்டுதல்;*** to cut, hew "பைம்புத லெருக்கி" (முல்லைப் 25) 4 ***தாக்குதல்;*** to beat "வீதிதோ றெருக்கி முரசறைந்த காலை" (சீவக 609) 5 ***அடித்தல்;*** to strike as a bush "பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கி" (பெரும்பாண 112) 6 ***அழித்தல்;*** to destroy "நாடுகெட வெருக்கி" (பதிற்றுப் 83,7) 7 ***சுமத்துதல்;*** to lay a burden upon (வின்.) 8 ***தாக்கி ஒலியெழச் செய்தல்;*** produce sound on a musical instrument of percussion "இன்னிசை முரச மியமர மெருக்க" (பெருங் நரவாண 6,63)

[உல் → எல → எரு → எருக்கு]

**எருக்கு**[3] *erukku,* பெ (n) ***துன்பம்;*** harm "தூதர்தம்முயிர்க் கெருக்கிடை யெய்தினு மெண்ணற் பாலரோ" (புரூரவ போர்புரி 6)

[உல் → எல் → எரு → எருக்கு]

**எருக்கும்பி** *erukkumbi,* பெ (n) ***குப்பைமேடு;*** dung-hill, mixen (சா அக.)

[எரு + கும்பி]

**எருக்குரல்** *erukkural,* பெ (n) ***தாக்குதலாலுண்டாகும் ஒலி;*** sound produced by beating, as a drum "இன்கட் பம்பை யெருக்குர லுறீஇ" (பெருங் மகத 26,36).

[உல் → எல் → எருக்கு + குரல்]

**எருக்கொடு-த்தல்** *eru-k-kodu-,* 4.செ.கு.வி. (vi) ***எருக்கழித்துக்கொடு*** பார்க்க; see *erukkalittukkodu.* (இ.வ.).

[எரு + கொடு]

**எருகு-தல்** *erugu-,* 7 செ கு வி (vi) ***மாடு கழிதல்;*** to have loose motions, used with reference to cattle மாடு எருகியிருக்கிறது (இ வ.).

ம. எருகுக, க. எரும்பு, எரு, தெ. எருகு; கொலா. எர்ங்கு; நா. எராங்கு. குரு. எர்கானா, மால். எர்கெ. எர்க்த்ரெ.

[எல் → எரு → எருகு]

**எருச்சாட்டி** *eru-c-cātti,* பெ (n.) ***எருவிட்ட நிலம்;*** land not manured during the present year, having been enriched previously (யாழ் அக.).

[எரு + சாட்டி சாடு → சாட்டு → சாட்டி (இடப்பட்டது).]

**எருச்சாம்பல்** *eru-c-cāmbal,* பெ. (n) ***எருமுட்டைச் சாம்பல்;*** ashes of cowdung fuel.

[எரு + சாம்பல்]

**எருத்தடி** *eruttadi,* பெ. (n) ***ஈற்றயலடி;*** (Pros) penultimate line of a verse "குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்." (தொல் பொருள் 428)

[எருத்து + அடி. எரு → எருகுதல் = கழித்தல், நீங்குதல், போதல் எருகு → எருத்து = கழிந்த, நீங்கிய எருத்தடி = ஈறு நீங்கிய, இறுதியடி நீங்கிய, ஈற்றயலடி]

**எருத்தம்** *eruttam,* பெ (n) 1. ***கழுத்து;*** neck "எருத்த மீடங்கோட்டி" (சீவக.1658) 2. ***பிடர்;*** nape, back of the neck "யானை யெருத்தம் பொலிய" (நாலடி 3). 3 ***தரவு*** (வீரசோ யாப்.11,உரை) பார்க்க; see *taravu,* member of kali verse 4. ***ஈற்றயல்*** (காரிகை செய்.10, உரை), penultimate

ம. எருத்தம், தெ. அற்று.

[ஏ → ஏர் → எருத்து → எருத்தம் ஏர் = உயர்தல். எருத்து - உயர்ந்து நிற்கும் பகுதி, கழுத்து, பிடரி]

**எருத்தன்** *eruttan,* பெ (n) ***காளைபோல் வலியவன்;*** man who is as strong as a bull "மலையைக் கையா லெருத்தனை யெடுத்தவாறே" (தேவா.)

[எருத்து → எருத்தன்]

**எருத்து** *eruttu,* பெ (n) ***கழுத்து;*** neck "எருத்துவலிய இரலை" (கலித்.5) 2 ***தரவு*** (தொல் பொருள் 444,உரை) பார்க்க, see *taravu,* member of kali verse 3 ***ஈற்றயல்*** (தொல் பொருள் 428); penultimate "எருத்தடி நைந்தும்"

ம. எருத்தம. தெ. அாரு

[ஏ → ஏர் → எருத்து]

**எருத்துத்திமில்** *eruttu-t-timil,* பெ (n) ***மாட்டின் முசப்பு, மேற்புறம், மாட்டின் முன்னங்கால்களுக்கு மேல் இருக்கும் உருண்டை வடிவான கொண்டை;*** hump of a bull

[எருது + திமில்]

**எருத்துப்புரை** *eruttu-p-purai,* பெ. (n) ***மாட்டுக் கொட்டில்.*** (Tinn), ox-stall

ம. எருத்தில்

[எருது + புரை]

**எருத்துப்பூட்டு** *eruttu-p-pūttu,* பெ. (n) ***நல்லநாளில் முதலில் ஏர்பூட்டி உழுதல்*** (யாழ்ப்.), first ploughing on an auspicious day

*[எருது + பூட்டு]*

**எருத்துமாடு** *eruttu-mādu,* பெ (n) 1 ***எருது;*** (நன் 183, உரை), bull, ox 2 ***பொதிமாடு;*** pack-bullock (Loc)

*[எருது → எருத்து + மாடு]*

**எருதடி-த்தல்** *erudadi-,* 4 செ குன்றாவி (vt) 1 ***உழுதல்;*** to plough 2 ***சூடடித்தல்;*** to thrash out grain by marking cattle tread over the stalks

*[எருது + அடி]*

**எருது[1]** *erudu,* பெ (n) 1 ***காளைமாடு;*** bull, ox, steer "நல்லெருது முயலும்" (பதிற்றுப் 27,13) 2 ***விடையோரை;*** Taurus, second sign of the zodiac (சங் அக)

ம. எருது. க., பட. எத்து. கோத. எத. துட. எசுத். குட. எத்தி. து. எரு. தெ. எதது. கொலா. எட. நா. கெட். குரு. அட்டோ

*[ஏர் (கலப்பை) → ஏர்து → எருது]*

**எருது[2]** *erudu,* பெ (n) ***இறால்;*** prawn

*[எரி → எரிது → எருது எரி = செந்நிறம் எருது = செம்மீன், இறால்]*

**எருதுகட்டி** *erudu-katti,* பெ (n) ***ஏறுதழுவுதலில்*** (சல்லிக்கட்டில்) ***எருதை மடக்குவோன்;*** bull-fighting champion

*[எருது + கட்டி கட்டி = அடக்கியாளபவன்]*

**எருதுகட்டு** *erudu-kattu,* பெ (n) ***ஏறுதழுவுதல் போட்டி;*** bull-fighting festival (இ வ)

*[எருது + கட்டி]*

**எருதுப்பித்து** *eruduppittu,* பெ (n) ***எருதின் ஈரலிலுருவாகும் பித்தம்;*** bitter fluid secreted by the liver of the ox - ox-gall (சா அக)

*[எருது + பித்து]*

**எருதுமறி-த்தல்** *erudu-mari-,* 2 செ குன்றாவி. (vt) ***எருதுபொலிதல*** (யாழ்ப்); to cover a cow, as a bull (யாழ்ப்)

*[எருது + மறி]*

**எருதுரப்பல்** *erudurappal,* பெ (n) 1 ***எருதை அதட்டியோட்டுதல்;*** driving cattles by making sound 2 ***எருதைப்போல் ஒலியிடல்;*** making sound like ox

*[எருது + உரப்பல]*

**எருந்தி** *erundi,* பெ. (n) 1 ***இப்பி*** (மூ அ), a kind of small shell 2 ***சங்கு;*** conch 3 ***ஒரு நறுமணச்செடி;*** fragrant plant Pavonia

*[இரி → இரிந்தி → எரிந்தி → எருந்தி]*

**எருந்து[1]** *erundu,* பெ. (n.) ***உரல்;*** mortar. (செ.அக)

*[இல் → எல் → எருந்து]*

**எருந்து[2]** *erundu,* பெ (n) ***கிளிஞ்சில்;*** bivalve shell fish, as mussels, oysters "முத்தம் ... எருந்தின் வயிற்ற கத்தடக்கி" (சிறுபாண் 58).

ம. எருந்து

*[இரி → இரிநது → இர்து → எருந்து]*

**எருப்புழு** *eruppulu,* பெ (n) ***சாணிப் புழு;*** muck-worm (சா அக)

*[எரு + புழு]*

**எருப்போடு-தல்** *eru-p-pōdu-,* 20.செ கு.வி. (vi) 1 ***உரமிடுதல்;*** to manure land 2 ***மாடு சாணமிடுதல்;*** to pass excrement

*[எரு + போடு]*

**எருமணம்[1]** *eru-manam,* பெ (n) ***செங்குவளை;*** red Indian water-lily, Nymphaea lotus rubra (பிங்)

*[எருமணி → எருமணம]*

**எருமணம்[2]** *erumanam,* பெ. (n) ***சாணிநாற்றம்;*** smell of cow-dung (சா அக).

*[எரு + மணம்]*

**எருமணி** *erumani,* பெ. (n) ***செங்குவளை;*** that which emits the smell of cow dung i e red Indian water lily (சா அக).

*[எரு + மணி மணி = மணப்பது, மணம் வீசுவது]*

**எருமன்றம்** *eru-manram,* பெ (n) ***மாடுகள் கூடுமிடம்;*** open gathering place for cattle "ஆயர்பாடியி லெருமன்றத்து" (சிலப் 17,உரைப்பாட்டு).

*[எரு + மன்றம்]*

**எருமாடு** *erumādu,* பெ (n) ***பிடரி, கழுத்தின் பின் பகுதி;*** back of the neck (சேரநா)

ம. எருமாடு

*[எரு + மாடு எரு = எருத்து (கழுத்து) மாடு = பக்கம்]*

**எருமுட்டை** *eru-muttai,* பெ (n) ***வறட்டி;*** dried cow-dung-cake used as fuel "எருமுட்டை பிட்கி னுதிர்ந்திடும்" (பட்டினத் திருப்பா பொது 51).

*[எரு + முட்டை முட்டு → முட்டை = உருணடையானது]*

**எருமை** *erumai,* பெ (n) 1 ***பாலதரும் விலங்கினங்களுள் ஒன்று;*** buffalo "குவிமுலை படர்மருப் பெருமை" (சீவக 2102) 2 ***எருமை மறம்*** பார்க்க, see *erumai maram* theme of unyielding resistance "ஒருவனொருவனை புடைபடை புக்குக் கூழைதாங்கிய வெருமையும்" (தொல்.பொருள் 72) 3 ***எமன்;*** Yama, who rides on a buffalo "எருமையிருந்தோட்டி யெள்ளீயுங் காளை" (பரிபா 8,86).



எக்காளம்






எருக்கு



எந்திரம் (திரிகைக்கல்)



எருமைச்சுறா

ம. எரும; தெ. எனுமு, க., படை. எமமெ, து. எர்மெ, Skt Heramba

[இர் → இரு → இருமை → எருமை இரு = கருமை]

**எருமைக்கடா** *erumai-k-kadā,* பெ. (n) ***ஆணெருமை;*** he-buffalo

[எருமை + கடா]

**எருமைக்கற்றாழை** *erumai-k-kaṟṟālai,* பெ (n.) ***மலைக் கற்றாழை*** பார்க்க, see *malai-k-kaṟṟālai*

[எருமை + கற்றாழை]

**எருமைக்காஞ்சொறி** *erumai-k-kāñjoṟi,* பெ (n) ***பெருங்காஞ்சொறி*** பார்க்க, see *perunkāñjoṟi* climbing nettle-mercury (மலை).

[எருமை + காஞ்சொறி]

**எருமைக்காளை** *erumai-k-kālai,* பெ. (n) ***நெல்வகை*** (A), a kind of paddy

[எருமை + காளை]

**எருமைக்குழவி** *erumai-k-kuḻavi,* பெ (n) ***எருமைக் கன்று;*** calf of buffalo (தொல் பொருள்.575)

[எருமை + குழவி]

**எருமைக் கொற்றான்** *erumai-k-koṟṟān,* பெ (n) ***கொடிவகை;*** parasitic leafless plant, S cl, cassytha filiformis

ம. எருமவள்ளி

[எருமை + கொற்றான்]

**எருமைக்கோரை** *erumaikkōrai,* பெ (n) ***எருமை தின்னுமோர் வகைப் பெருங்கோரை;*** large species of reed eaten by buffaloes - Saccherum spontaneum (சா அக.).

[எருமை + கோரை.]

**எருமைச்சுறா** *erumaiccuṟā,* பெ. (n) ***பெரிய கருப்புச் சுறாமீன்;*** black shark - Carcharias menisorrah (சா அக.)

**எருமைப்புல்** *erumaippul,* பெ (n) ***ஒருவகைப் புல்;*** a kind of grass growing in rice fields (சேரநா).

ம. எருமப்புல.

[எருமை + புல்.]

**எருமைப்பொன்** *erumai-p-poṉ,* பெ. (n) ***வரிவகை*** (S I I vi,155), tax (செ.அக).

[எருமை + பொன்]

**எருமைப்போத்து** *erumai-p-pōttu,* பெ (n) ***எருமைக் கடா;*** he-buffalo (தொல் பொருள்.596). (செ.அக.).

[எருமை + போத்து]

**எருமைமறம்** *erumai-maṟam,* பெ. (n) ***மறவன் ஒருவன் தன் படை முதுகிடவும் பகைவர் படையைத் தான் ஒருவனே அஞ்சாது எதிர்த்து நிற்கும் புறத்துறை*** (பு வெ 7,13); theme of a hero's taking a firm and bold stand in the battlefield against very heavy odds, like an unyielding buffalo, even after his army had retreated and fled

[எருமை + மறம் - எருமைமறம். அஞ்சாது தனித்து நின்று தாக்கும் எருமைபோன்ற நெஞ்சத் துணிவு எருமை மறம் எனப்பட்டது]

**எருமைமுல்லை** *erumai-mullai,* பெ. (n) ***முல்லைக் கொடிவகை;*** white-bracted jasmine, m. cl, jasminum rottlerianum (செ அக)

[எருமை + முல்லை.]

**எருமைமுல்லைத்தீவு** *erumai-mullai-t-tīvu,* பெ (n) ***யாழ்ப்பாணத்தின் பழைய பெயர்*** (வின்); ancient name of Jaffna, from the flower erumai-mullai found there

[எருமை + முல்லை + தீவு]

**எருமைமுள்** *erumaimuḷ,* பெ. (n) ***வெள்ளை முள் வேல்;*** buffalo thorn (சா.அக.)

[எருமை + முள்]

**எருமையின்றிசை** *erumaiyiṉṟiśai,* பெ. (n) ***தெற்குத் திசை;*** south, as being Yama's quarter. "ஆகநனைந்தி டாவகை யெருமையின்றிசையி னீள்வடிவுற்று" (சேதுபு.சங்கதீ.10).

[எருமை + இன் + திசை. 'இன்' ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு]

**எருமைவெளியனார்** *erumai-veḷiyaṉār,* பெ. (n) ***குதிரைமறம் பாடிய கடைக்கழகப் புலவர்;*** poet of Sangam age

[எருமைவெளி + அன் - எருமைவெளியன். எருமைவெளி என்னும் ஊரினராகலாம். மந்தைவெளி என்றும் ஊர்ப்பெயர் உள்ளதை ஒப்பு நோக்குக.]

**எருவட்டி** *eruvatti,* பெ (n) ***எருவறட்டி*** பார்க்க; see *eruvaratti*

**எருவடை-த்தல்** *eru-vaḍai-,* 4.செ குன்றாவி. (v i) ***எருவுக்காக ஆடுமாடுகளை அடையச் செய்தல்;*** to fold sheep, herd cattle for manure

[எரு + அடை.]

**எருவண்டு** *eru-vaṇḍu,* பெ. (n) ***வண்டுவகை;*** a kind of beetle (pond.)

[எரு + வண்டு]

**எருவறட்டி** *eru-varatti,* பெ (n.) ***எருமுட்டை;*** cake of cowdung, used as fuel (வின்.).

[எரு + வறட்டி - எருவறட்டி வறள் → வறட்டி.]

**எருவாரம்** *eru-vāram,* பெ (n) ***எருவுரமிட்டதற்குக் கொடுக்குந் தவசப்பங்கு;*** share of the produce assigned to those who provide manure for the land.

[எரு + வாரம்]

**எருவு** *eruvu,* பெ. (n) *எரு* பார்க்க; see *eru*

**ம.** எருவ, **தெ.** எருவு, **க.** எரும்பு

*[எரு → எருவு]*

**எருவை** *eruvai,* பெ (n) 1. ***தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து;*** a kind of kite, whose head is white and body brown "விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப" (புறநா 64,4) 2 ***கழுகு;*** eagle 'எருவை குருதி பிணங்கவருந் தோற்றம்' (களவழி 20) 3 ***குருதி*** (திவா), blood 4 ***பஞ்சாய்க் கோரை;*** species of cyperus "எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை" (குறிஞ்சிப்.63) 5 ***கோரைக்கிழங்கு;*** straight sedge tuber "மட்பனை யெருவை தொட்டி" (தைலவ தைல 94) 6 ***கொருக்கச்சி;*** European bamboo reed (குறிஞ்சிப்.68,உரை.) 7. ***செம்பு;*** copper "எருவை யுருக்கினாலன்ன குருதி" (கம்பரா கும்பக 248)

**ம.** எருவ

*[உல் → எல் → எரு → எருவை. எருவை = சிவந்திருப்பது]*

**எல்**[1] *el,* பெ (n) 1 ***நெருப்பு;*** fire 2 ***கதிரவன்;*** sun "எற்படக் கண்போன் மலர்ந்த" (திருமுரு 74) 3 ***ஒளி;*** lusture, splendour, light "எல்லே யிலக்கம்" (தொல் சொல் 271) 4 ***வெயில்*** (பிங்), sunshine 5 ***பகல்;*** day time "எல்லடிப் படுத்த கலலாக் காட்சி" (புறநா 170) 6 ***நாள்*** (பிங்); day of 24 hours 7. ***பெருமை;*** vehemence, strength

ம. எல **தெ.** எலமு பர் நெந்தி **கோண்.** எததி, அததி (வெயிலின வெப்பம்)

*[உல் → எல்]*

**எல்**[2] *el,* பெ (n) 1 ***கதிரவன் மறைவு;*** sunset 2 ***இரவு;*** night "எல்லிற் கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல்" (நாலடி 8) - இடை (int) ***இகழ்மொழி*** (பிங்); ejaculation of contempt

*[இல் → எல்]*

**எல்கை** *elgai,* பெ (n) ***எல்லை;*** border, limit எல்கை (கல்வெட்டு) "எல்கைகைவிட்டுக் கடக்கப்போன தனாலே." (கல்வெட்டு)

**ம.** எல்க

*[எல் → எல்லை = விளிம்பு, ஓரம், வரம்பு, வரப்பு எல்லை கைவிட்டுச்சென்றான் என்னும் வழக்கு மீதூர்ந்த பகுதிகளில் எல்லைகை விட்டு - எல்கைவிட்டு எனத்திரிந்தது அத்திரிபால் எல்லை + கை → எல்கை என மருவி வழங்கலாயிற்று]*

**எல்ல** *ella,* பெ. (n) ***எல்லா*** பார்க்க, see *ellā* (தொல் பொருள் 220,உரை). (செ அக).

*[எல்லா → எல்ல]*

**எல்லப்பநாவலர்** *ellappa-nāvalar,* பெ (n) ***அருணாசல புராணம் முதலிய நூல்களை யியற்றிய புலவர்;*** author of Arunācala-purānam and other works in Tamil (செ.அக)

*[எல்லப்பன் + நாவலர்.]*

**எல்லம்** *ellam,* பெ (n) ***இஞ்சி;*** ginger. (மலை).

**தெ.** அலலமு

*[அல்லம் → எல்லம்]*

**எல்லம்மன்** *ellamman,* பெ (n) ***தீயவிளைவுகளின்போது மீனவர்களாலும் மற்றும் நச்சுப் பாம்பினால் கடிபடுபவராலும் வணங்கப்படும் ஒரு சிற்றூர்த் தெய் தெய்வம்*** (இ வ), village goddess, invoked by fishermen when in danger and by anyone bitten by a poisonous serpent

**தெ.** எல்லம்ம

*[எல் → எல்லை எல்லையம்மன் → எல்லம்மன்]*

**எல்லம்மா** *ellammā,* பெ (n) ***எல்லம்மன்*** பார்க்க; see *ellamman*

*[எல்லையம்மன் → எல்லம்மன் → எல்லம்மா]*

**எல்லரி** *ellari,* பெ (n) ***பறைவகை;*** a kind of drum "கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி" (மலை படு 10)

*[ஒல் → எல → எல்லரி]*

**எல்லவரும்** *ellavarum,* பெ (n.) ***எல்லாரும்;*** all persons "நாமெல்லவரும்" (கந்தபு தேவர்புலம்புறு.19)

**தெ.** எலலரு, **க.** எல்லரு, எல்லவரு.

*[எல்லை + அவர் - எல்லவர் + உம் + எல்லவரும் நாட் டெல்லை அலலது ஊரெல்லைக்குட்பட்ட அனைவரும்]*

**எல்லவன்** *ellavan,* பெ. (n) 1. ***கதிரவன்;*** sun. "எல்லவன் வீழுமுன்னம்" (பாரத பதினெட்.119). 2. ***திங்கள்;*** moon (அக நி.).

**ம.** எல்லவன்

*[எல்[1] → எல்லவன்]*

**எல்லா** *ellā,* பெ (n) 1. ***ஒரு விளிப்பெயர்;*** here, you (தொல் பொருள் 220 உரை) 2 ***தோழி முன்னிலைப் பெயர்*** (சூடா 2,42), word used in addressing a woman friend "கடை மணியின் குரல் காண்பென் காண் எல்லா" (சிலப்.20,3)

**ம., துட., பட.** எல்லா, **க., குட., தெ.** எல்ல, **கோத.** எல், எலம்; பிரா. குல், *Eng* all.

*[இல் - இளமைக் கருத்துவேர். இல் → எல் → எல்லா → எலா → எல்லா = தோழன், தோழி.]*

ஆங்கில நண்பரைக் காணுமபோது மகிழ்ச்சி விளியாக ஆளும் உறலோ (உறலலோ) என்னுஞ்சொல், எல்லா என்னும் தென் சொல்லோடு தொடர்புடையதே

hallo, halloa, int, n, and v i Int, calling attention or expr. surprise., informal greeting, (n and v i) the cry 'hallo' var of earlier Hollo, halloo, int inciting dogs to the chase, calling attention or expressing surprise, (n) the cry 'halloo' (perh) var of Hollo, (v i and t) Cry 'hallooi', exp to doggs, urge on (dogs etc) with shouts, shout (t and i) to attract attention

hallow, v t and i chase with shouts, incite with shouts, shout to incite dogs etc (ME) halowen prok f OF halloer, hello, n, and v i hallo holla, int calling attention of f F hola hollo, int calling attention, (n) the cry 'hollo' (conn w ) HOLLA hallo, hollow, holla, holloa, v i and t shout (i and t) call to hounds (as prec ) hullo, hulloa, int used to call attention, express surprise or answer call esp on telephone, of HALLO

நூற்றுக்கணக்கான அடிப்படை ஆங்கிலச் சொற்கள், தென் சொல்லும் தென்சொற்றிரிபுமாயிருப்பதால எல்லா என்னும் இருபாற் பொது விளிச்சொல் ஆங்கிலத்தில் வழங்கி வருதல் பற்றி ஐயுறுதற்கு எள்ளளவும் இடமில்லை (செல்வி 78, சூன்.500,501)

**எல்லாம்** *ellām*, பெ (n) 1 *முழுதும்* (திருக்கோ 351, உரை ), whole 2 ***அனைவர், அவை என்னும் பொருளிலும் வரும்;*** all, personal as well as impersonal அவர்கள் எல்லாம் போனார்கள், அவை எல்லாம் போயின "நல்லவை எல்லாம் தீயவாம் (குறள் 375)

ம. எல்லாம், க. எலலா, துட. பெலெ, யெல்லமதி, கோத. எல்ம, பட. எல்லா, குட. எலல, து. எலல, தெ. எலல.

*[எல்லவும் → எல்லாம் எல்லை + அவை - எல்லையவை → எல்லவை + உம் - எல்லவையும் → எல்லாம் எல்லவை = எல்லைக்குட்பட்ட அனைத்தும் ]*

**எல்லார்** *ellār*, பெ (n) *தேவர்;* Devas of Hindu mythology "பனிவௌனத் தெல்லார் கண்ணும்" (சீவக.364) (வே க 58)

ம. எல்லாா

*[எல் → எல்லார் எல்லவரும் பார்க்க ]*

**எல்லாரும்** *ellār-um*, பெ (n) *யாவரும்;* all persons "எல்லாரும் எல்லீரும் என்பவற்றும்மை" (நன் 246)

ம. எல்லாரும், எல்லாவரும, க. எலலரும்; கோத. எலம், குட. எல்ல, தெ. எல்லரு

*[எல்லவரும் → எல்லாரும்.]*

**எல்லாவோ** *ellāvō*, பெ. (n) ***தோழி;*** lady friend "எல்லாவோ காதலற் காண்கிலேன்" (சிலப் 18,11-12)

*[எல்லா → எல்லாவோ ]*

**எல்லி**[1] *elli*, பெ. (n) 1 ***கதிரவன்*** (பிங் ); sun 2 ***பகல்;*** day time "இரவோ டெல்லியு மேத்துவார்" (தேவா.344,8).

*[உல் → எல் → எல்லி = அழலோன், கதிரவன் ]*

**எல்லி**[2] *elli*, பெ (n) 1 *இரவு;* night "எல்லியிது காலையிது" (சீவக.1877). 2. *இருள்;* darkness "நீரரை யெல்லி யியங்கன்மினே" (இறை 30,உதா 217)

*[இல் → இல்லி → எல்லி = இருள். இல்லி = கருமை, இருள் ]*

**எல்லிப்பகை** *elli-p-pagai*, பெ. (n) 1. *கதிரவன்;* sun, enemy of night (சங் அக ). 2. ***வெளிச்சம்;*** light as the enemy of darkness or the night

*[இல்லி → எல்லி + பகை இல்லி = இரவு.]*

**எல்லிமனை** *elli-manai*, பெ (n) *தாமரை;* lotus, fancied as the wife of the sun "பிரம்பெல்லிமனை முக்கருணை " (தைலவ தைல 135).

*[எல் → எல்லி (கதிரவன்) + மனை மனை = மனைவி ]*

**எல்லியறிவன்** *elli-y-arivan*, பெ (n) ***கோழிச்சேவல்;*** cock-which knows the watches of the night (செ அக ).

*[எல்லி + அறிவன் அறிவன் - அறிபவன் ]*

**எல்லிருள்** *el-l-irul*, பெ (n) ***இராவிருள்;*** darkness of night 2 ***விடியற்காலத்திருள்;*** darkness preceding the dawn "எல்லிருள் விஞ்சையோதி" (சீவக 1747)

மறுவ. நள்ளிருள், செறியிருள், குமரியிருள், பேரிருள்.

*[எல் + இருள் ]*

**எல்லினான்** *ellinān*, பெ (n) ***எல்லோன்*** பார்க்க, see *ellōn* "புயங்க முண்டுமிழ்ந்த வெல்லினா னென" (கந் தபு அக்கினி 223) (வே க 58)

*[எல்லி → எல்லினன் → எல்லினான் ]*

**எல்லீரும்** *ellīr-um*, பெ (n) ***எல்லா நீங்களும்;*** you all "எல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்" (தொல் சொல் 166) "எல்லாரும் எல்லீரும்" (நன 246)

ம. எலலீரும், க. எல்லரும்

*[எல்லா + நீரும் - எல்லாநீரும் → எல்லீரும் ]*

**எல்லு-தல்** *ellu-*, 13 செ கு.வி. (v i ) ***ஒளிமங்குதல்;*** to become dim as the sun "எல்லு மெல்லின்று ஞமலியு மிளைத்தன" (குறுந் 179).

*[இல் → எல் ]*

**எல்லெண்** *el-l-en*, பெ. (n) ***பன்னிரண்டு;*** number 12, representing the number of Atittar. "காட்டசைசத்தி யெல்லெண்" (தைலவ தைல.69)

*[எல் + எண் எல் = கதிரவன் பன்னிரு சூரியர்கள் இருப்பதாகக் கருதப்படும் தொன்ம வழக்கு பற்றுக்கோடாக **எல்லெண்** பன்னிரண்டு என்னும் எண்ணைக் குறித்தது வடமொழியாளர் துவாதசசூரியர் என்பர் ]*

**எல்லெனல்** *el-lenal*, பெ. (n) ***ஓர் ஒலிக்குறிப்பு*** (பிங் ), onom expression

*[எல் + எனல் ]*

**எல்லே** *ellē*, இடை. (int) 1. ***தோழியை விளிக்கும் முன்னிலைச் சொல்;*** here you, used in addressing a woman-friend "எல்லே ....தோழி" (திவ்.திரு வாய் 5,3,5). 2 ***ஓர் வியப்பு விரக்கச் சொல்;*** exclamation of wonder or pity "ஏதிலே னரங்கற் கெல்லே" (திவ்.திருமாலை.26). - கு.வி.எ. (adv.) 1. ***வெளியாக;*** openly, clearly "எல்லேமற் றெம்பெருமாற் கின்றிவளு மின்னாளோ" (சீவக.2957). 2. ***வெளியே*** (சீவக.653, உரை.), outside.

*[எல் → எல்லே.]*

**எல்லேம்** *ellēm,* பெ. (n.) ***எல்லேமும்*** பார்க்க; see *ellēmum.*

**எல்லேமும்** *ellēm-um,* பெ. (n.) ***எல்லா நாங்களும்;*** we all, all of us.

*[எல்லா + நாமும் - எல்லேமும்.]*

**எல்லேலெனல்** *ellēl-eṉal,* பெ. (n.) ***எல்லெனல்*** பார்க்க (பிங்); see *elleṉal.*

*[எல் + எல் + எனல்.]*

**எல்லேளெனல்** *ellēḷ-eṉal,* பெ. (n.) ***எல்லேலெனல்*** (திவா.) பார்க்க; see *ellēleṉal.*

**எல்லை**[1] *ellai,* பெ. (n.) 1. ***நடப்பட்ட எல்லைக்கல்;*** stone fixed up to show the boundary limits 2. ***வரம்பு;*** limit, border. "எல்லைக் கணின்றார்" (குறள்.306). 3. ***அளவை*** (திவா.); measure, extent 4. ***முடிவு;*** end, goal, extremity, death (கலித்.129,உரை.). 5. ***கூப்பிடு தொலைவு;*** distance within reach of voice (திவா.) 6. ***தறுவாய்;*** specified time, period "கூறிய வெல்லை யில்" (கம்பரா.வீபீட.97). 7. ***இடம்;*** place, spot, locality. "அதற்கடுத்த வெல்லை யாமீண்டு" (கந்தபு.ஏம கூட.30). 8. ***ஐந்தாம் வேற்றுமைப் பொருள்களுள் ஒன்று;*** ablative case. "எல்லையின்னு மதுவும் பெயர் கொளும்" (நன்.319).

ம. எல்ல; க. எல்லே; துட. எல்ய; து. எல்ல; தெ. எல்ல, எல்லே.

*[இல் → எல் → எல்லை. இல் = குத்துதல், நடுதல்.]*

**எல்லை**[2] *ellai,* பெ. (n) 1. ***கதிரவன்*** (திவா.); sun 2. ***பகல்;*** daytime "எல்லையு மிரவுந்துயி றுறந்து" (கலித்.123). 3. ***நாள்*** (சூடா.); day of 24 hours

*[எல் → எல்லை.]*

**எல்லைக்கட்டு**[1]**-தல்** *ellai-k-kaṭṭu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1 ***கட்டுப்படுத்துதல்;*** to limit, restrain, circumscribe. 2. ***வரையறுத்தல்;*** to determine, decide 3. ***வழக்குத் தீர்த்தல்;*** to settle matters of dispute.

*[எல்லை + கட்டு.]*

**எல்லைக்கட்டு**[2] *ellai-k-kaṭṭu,* பெ. (n.) 1. ***வரம்பு;*** boundary, demarcation 2. ***கட்டுப்பாடு;*** restraint, circumscription

ம. எல்லத்தல

*[எல்லை + கட்டு ]*

**எல்லைக்கட்டு**[3] *ellai-k-kaṭṭu,* பெ. (n.) ***வரிகட்டுதல், இறைக்கட்டுதல்*** (யாழ்.அக.); payment of taxes (செ.அக.).

*[எல்லை + கட்டு.]*

**எல்லைக்கல்** *ellai-k-kal,* பெ. (n.) ***எல்லை யறிய நிறுத்துங் கல்;*** stone fixed up to show the boundary limits. "எல்லைக்கல்லி னிறீஇ" (மீனாட்.பிள்ளைத்.38).

*[எல்லை + கல்.]*

**எல்லைக்கறுப்பன்** *ellai-k-kaṟuppaṉ,* பெ. (n.) ***ஒரு ஊர்த் தேவதை;*** village deity, who guards the boundary of the village.

ம. எல்லக்கல்லுசாமி.

*[எல்லை + கருப்பன்.]*

**எல்லைக்கால்** *ellai-k-kāl,* பெ. (n.) ***எல்லைக் கல்*** (யாழ்.அக.); boundary stone.

*[எல்லை + கால். கால் = கம்பு, கல்.]*

**எல்லைக்காவல்** *ellai-k-kāval,* பெ. (n.) ***ஊரெல்லையிற் காக்கும் வயற்காவல்*** (வின்.); watch-shed, to mark the division of one field from another.

*[எல்லை + காவல்.]*

**எல்லைக்குறிப்பு** *ellai-k-kuṟippu,* பெ. (n.) 1. ***எல்லைய டையாளம்;*** boundary-mark. 2. ***வழியளவைக் காட் டும் குறி;*** milestone, mile-post

*[எல்லை + குறிப்பு ]*

**எல்லைக்கெட்டநேரம்** *ellai-k-keṭṭanēram,* பெ. (n) ***ஒவ்வாத நேரம்;*** unsuitable time. (ஆ.அக.).

*[எல்லை + கெட்ட + நேரம்.]*

**எல்லைக்கேடு** *ellai-k-kēḍu,* பெ. (n.) 1. ***சமயமொவ் வாமை;*** unsuitableness in regard to time. 2. ***இடமொவ் வாமை;*** unsuitableness, inconvenience in regard to place.

*[எல்லை + கேடு.]*

**எல்லைகட-த்தல்** *ellai-kaḍa-,* 3.செ.கு.வி (v.i.) 1. ***வரம்பு மீறுதல்;*** to tresspass 2 ***நேர்மை தவறுதல், எல்லை மீறுதல்;*** to exceed limits, transgress. 3. ***அளவிறத்தல்;*** to be beyond all measure.

*[எல்லை + கட.]*

**எல்லைகுறி-த்தல்** *ellai-kuṟi-,* 4.செ.கு.வி. (v.i.) ***வரம் பேற்படுத்துதல்;*** to mark limits, set boundaries

*[எல்லை + குறி ]*

**எல்லைத்தரிசு** *ellai-t-tarišu,* பெ. (n) ***ஊரோரங்களி லுள்ள கரம்பு நிலம்*** (CG), waste land, generally on the outskirts of a village

*[எல்லை + தரிசு.]*

**எல்லைத்தீ** *ellai-t-tī,* பெ. (n.) ***ஊழித்தீ;*** fire that destroys all things at the close of an age.

*[எல்லை + தீ.]*

**எல்லைப்படுத்து-தல்** *ellai-p-paduttu-,* 5.செ.குன்றாவி. (v.t) 1 ***எல்லை கட்டுதல்;*** to settle a boundary 2. ***முடிவுபடுத்துதல்*** (வின்.); to settle matters, decide, finish, terminate.

*[எல்லை + படுத்து.]*

**எல்லைப்பத்திரம்** *ellai-p-pattiram,* பெ. (n) ***எல்லைவ ழக்குத் தீர்த்தெழுதும் ஆவணம்*** (சங்.அக.); written agreement, setting forth the terms of settlement of a boundary dispute.

*[எல்லை + பத்திரம்.]*

**எல்லைப்பிடாரி** *ellai-p-pidāri,* பெ. (n.) ***எல்லையம் மன்;*** female deity believed to preside over spots where roads meet (வின்.)

*[எல்லை + பிடாரி.]*

**எல்லைப்பூசல்** *ellai-p-pūšal,* பெ. (n.) ***எல்லையைப் பற்றிய வழக்கு;*** boundary dispute. (செ.அக.).

*[எல்லை + பூசல்.]*

**எல்லைப்பொருள்** *ellai-p-porul,* பெ. (n) ***ஒரு பொருளி னது திசையளவைக் குறிப்பதற்கு எல்லையாய் நிற் கும் பொருள்*** (ஆ அக.), object located to indicate extent and/or boundary.

*[எல்லை + பொருள்]*

**எல்லைமால்** *ellai-māl,* பெ. (n) ***நான்கெல்லை*** (CG), four boundaries of a piece of land

*[எல்லை + மால், மாத்தல் = அளத்தல். மா → மால் = அளவு.]*

**எல்லைமானம்** *ellai-mānam,* பெ. (n) 1. ***எல்லை;*** boundary limit, circuit (யாழ்.அக.). 2. ***அளவு;*** measure, extent

*[எல்லை + மானம். மாத்தல் = அளத்தல். மா → மால் → மான் + அம்]*

**எல்லையம்மன்** *ellaiyamman,* பெ. (n) ***ஊரெல்லையில் இருக்கும் காவல் தெய்வம்;*** guardian deity at the boundary of a village

*[எல்லை + அம்மன்.]*

**எல்லையோடல்** *ellaiyōdal,* பெ. (n) ***எல்லையைச் சுற்றிவரல்;*** running through the boundary. (ஆ.அக).

*[எல்லை + ஓடல்.]*

**எல்லையோடி** *ellai-y-ōdi,* பெ. (n.) ***ஊர்த் தெய்வத்தின் கோயிலின் முன்னே சில வழிபாட்டுமுறைகளைச் செய்து பிறகு எல்லையைக்காட்டி வழக்கைத் தீர்ப் போன்.*** (இ.வ); boundary runner, a village officer, whose testimony in case of boundary disputes is accepted by the disputants, when he shows the boundary line by running round it after having been solemnly sworn to discharge his duty as almost a divine arbitrator by being required to go through certain awe-inspiring ceremonies before the shrine of the village deity (செ.அக.).

*[எல்லை + ஓடி.]*

**எல்லையோடு-தல்** *ellai-y-ōdu-,* 5.செ.கு.வி. (v.i.) ***எல்லையைச் சுற்றிவருதல்*** (வின்.); to march around the bounds of a village or district, a religious ceremony performed by some of the Hindu sects.

*[எல்லை + ஓடு.]*

**எல்லைவிருத்தி** *ellai-virutti,* பெ. (n.) ***ஊரெல்லையைக் காக்கும் காவற்பணி.*** (Rd.M.331); office of protecting village boundaries, held hereditarily and carrying with it certain emoluments.

*[எல்லை + விருத்தி.]*

**எல்லோ** *ellō,* இடை. (int.) ***ஓர் வியப்பு,இரக்கச்சொல்;*** exclamation expressive of surprise or pity. (செல்வி.78, சூன்.497).

*[எல்லா → எல்லோ.]*

**எல்லோமும்** *ellōm-um,* பெ. (n.) ***எல்லாமும்*** பார்க்க; see *ellām-um.*

*[எல்லாமும் → எல்லோமும்.]*

**எல்லோரும்** *ellōrum,* பெ. (n.) ***அனைவரும்;*** all. (ஆ அக.).

*[எல்லாரும் → எல்லோரும்.]*

**எல்லோன்**[1] *ellōn,* பெ. (n) ***கதிரவன்*** (பின்.); sun.

*[எல் → எல்லோன்.]*

†**எல்லோன்**[2] *ellōn,* பெ. (n) ***பன்னிரண்டு எனும் எண்ணிக்கை;*** dozen

மறுவ. எல்லெண்.

*[எல் → எல்லோன் (படைத். பாவாணர்).]*

பன்னிரு சூரியர் உண்டு எனும் கருத்தின்படி சூரியனைக் குறிக்கும் எல் என்னும் சொல்லிலிருந்து பன்னிரண்டு என்னும் எண்ணை(dozen)க்குறிக்க எல்லோன் என்னும் சொல்லைப் பாவாணர் படைத்திட்டுக்கொண்டார்.

**எல்வளி** *el-vali,* பெ. (n.) ***பெருங்காற்று;*** furious winds. "எல்வளியலைக்கும்" (அகநா.77).

*[எல் + வளி]*

**எல்வை** *elvai,* பெ. (n.) ***எல்லை*** பார்க்க; see *ellai.* "அல்வழி நடக்குமெல்லை" (உபதேசகா.சிவபுண் ணிய.375).

*[எல்கை → எல்வை.]*

**எல** *ela,* பெ (n.) ***அன்பொடு விளிக்குஞ்சொல்,*** கெழுதகைப் பொதுச் சொல்; word of endearment.

*[எல் → எல.]*

*'எல' என்பதையும் இதன் திரிபான சில சொற்களையும் பற்றிக். கிற்றல் கன்னட அகரமுதலி பின்வருமாறு கூறகின்றது.*

**க.** எல (ela) - உடன்படுதலைக் குறிக்கும் ஓர் இடைச்சொல்.
**க.** எலகெ (elage) - பெண்டிரை விளிக்கும் சொல்.
**க.** எலவோ - வலிமிகக வியப்பிடைச் சொல
**க.** எலா - நண்பரை அல்லது நெருங்கிப் பழகியவரை விளிக்குஞ்சொல்.

க. எலெ, - எலே - எலா.
க. எலெகெ (lege) - பழகிய பெண்டிரை விளிக்குஞ்சொல்.
க. எலோ, எலோ - எலா (செல்வி78,சூன்.497).

எலே என்பது ஆணையும் எலா என்பது பெண்ணையும் குறிக்க வழங்கிய கெழுதகைப் பொதுச்சொல்.

**எலவோ** *elavō,* இடை. (int) ***மகிழ்ச்சி, துயரம், வியப்பு ஆகியவற்றைக் குறிக்கும் கெழுதகைப் பொதுச் சொல்;*** word of endearment expressing happiness, grief and surprise

*[எல்லா → எல → எலவோ.]*

எல்லா, எலா, எலவோ என்னும் கெழுதகைப் பொதுச் சொற்கள் தமிழில் தொன்முதுகால முதலே வழக்கூன்றியவை. இருக்குவேத பாடலொன்றில் திராவிடர்களின் ஓலைச் சுவடிக ளுக்குப் பகைவர் தீயிட்டபோது எலவோ! எலவோ! என அவர்கள் வருந்தி அழுததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**எலா** *elā,* இடை. (int) ***நண்பினரை விளிக்கும் ஒரு விளிப்பெயர்;*** here, you! used in addressing a person in a familiar and friendly manner (தொல்.பொ 220. உரை.)

க. எலா

*[எல்லா → எலா.]*

**எலி**[1] *eli,* பெ. (n) 1. ***தவசம், கொட்டை, வேர் முதலியவற்றைக் கடிக்கும் தன்மையுள்ள சிறிய உடலமைப்புள்ள விலங்கு;*** rat, mus rattus, "எலிப் பகை நாக முயிர்ப்பக் கெடும்" (குறள்.763). 2 ***பெருச் சாளி;*** bandicoot. "வாரணத்தை....யெலியிழுத்துப் போகின்ற தென்." (தனிப்பா.1,32,61).

ம. எலி; க. எலி, இலி; குட. எலி; து. எலி, இலி; தெ. எலுக, எலிக; எரு. எணி, கோத. எய்ச், துட. இல்ல, கொலா. எல்க; நா. எல்கு, பர். எல், கட. சிலேல், கூ. ஒட்ரி, குவி. ஒல்லலி, பிரா. கல், கோண். அல்லிக, எல்லி; பட. இலி.

*[இல் → இலி → எலி. இல் = குத்துதல், குடைதல்]*

**எலிக்காதிலை** *elikkādilai,* பெ. (n.) ***எலிக்காது*** பார்க்க; see *elikkādu.* (சா அக.).

*[எலி + காது + இலை.]*

**எலிக்காது** *elikkādu,* பெ. (n) ***எலிச்செவி போன்று வளரும் கிளைகளையுடைய ஓர் பயிர்*** (M N); plant whose leaves resemble rats, ears-Ipomaea reniformis.

*[எலி + காது.]*

**எலிச்செவி** *eliccevi,* பெ (n) ***எலிச்செவி போன்ற இலைகள் உள்ள ஒரு மருந்துச் செடி;*** plant Evolvulus emarginatus or Salvinia Cucullata

ம. எலிச்செவி, க. இலிகிவி; து. எலிகெம்பி, தெ. எலிச்செவி, எலுகசெவி.

*[எலி + செவி.]*

**எலிச்செவிக்கள்ளி** *eliccevi-k-kalli,* பெ. (n) ***கள்ளி வகை*** (தைலவ.தைல.125,உரை.); a kind of sedge

ம. எலிச்செவியன்; க. இலிகிவி; து. எலிகெபி; தெ. எலிச் செவி.

*[எலி + செவி + கள்ளி.]*

**எலித்திசை** *eli-t-tiśai,* பெ. (n.) (கணியம்) ***வடமேற்கு திசை*** (வின்.); North-west, opp. to pūnai-t-tiśai. (செ.அக.).

*[எலி + திசை.]*

**எலித்துன்** *eli-t-tun,* பெ. (n.) ***எலிதோண்டிய பொந்து;*** hole made by rat. (செ.அக.).

*[எலி + துன். துன்னுதல் = குடைதல், உழுதல், வளைதோண்டு தல். பொந்து செய்தல்.]*

**எலிப்பகை** *eli-p-pagai,* பெ. (n) 1. ***பூனை;*** cat. 2. ***எலியின் எதிர்ப்பாற்றல்;*** attacking capacity of the rat. "எலிப்பகை நாகம் உயிர்ப்பக்கெடும்" (குறள்.763).

*[எலி + பகை.]*

**எலிப்பயல்** *eli-p-payal,* பெ. (n) ***சிறிய பையன்;*** little boy.

*[எலி + (பையல்) பயல்.]*

**எலிப்பயறு** *elippayaru,* பெ. (n) 1. ***ஓர்வகைக் காட்டுப் பயறு;*** a wild variety of pulse - Gly cine triloba. 2. ***வயற்காடுகளில் முளைக்கும் வயற் பயறு;*** pulse found grown in fields and hedges and known as rat-pulse or rat-gram-phasecous trilobus. (சா.அக.).

*[எலி + பயறு.]*

**எலிப்புலி** *eli-p-puli,* பெ. (n.) ***பூனை;*** cat. "ஈப்புலியோ டெலிப்புலியாய் வடிவங் கொண்டு" (தனிப்பா. 1,86,169).

*[எலி + புலி]*

**எலிப்புற்று** *elippuru,* பெ (n) ***எலிவளை;*** rat hole.

*[எலி + புற்று]*

**எலிப்பூழி** *elippūli,* பெ. (n) ***எலிவளையினின்று வெளியே தள்ளும் மண்;*** sand thrown out by a rat from a rat-hole. (சேரநா.).

ம. எலிப்பூழி.

*[எலி + பூழி.]*

**எலிப்பொந்து** *eli-p-pondu,* பெ. (n). ***எலிவளை;*** rat-hole.

ம. எலிப்பளம்.

*[எலி + பொந்து.]*

**எலிப்பொறி** *eli-p-pori,* பெ. (n.) 1. ***எலியைப் பிடிக்கும் எந்திரம்;*** rat-trap. 2 ***எலிப்பிடுக்கன்*** பார்க்க; see *elippidukkan.*

ம. எலிக்கணி, எலிப்பொறி.

*[எலி + பொறி.]*

# ஐங்கனி



எலிக்காதிலை



மாதுளை



ஏலரிசிமணி






கொளுஞ்சி



ஏழிலைப்பாலை



நாரத்தை



எலுமிச்சை



தமரத்தை



எலிப்பொறி

**எலி மருந்து** *elimarundu,* பெ. (n) ***எலியைக் கொல்வ தற்கிடு மருந்து;*** any medicine intended for killing rats. (சா.அக.).

*[எலி + மருந்து.]*

**எலிமயிர்க்கம்பளம்** *eli-mayir-k-kampaḷam,* பெ. (n.) ***எலிமயிரினாற் செய்யப்பட்ட கம்பளி*** (சீவக.2686, உரை.); blanket made of rats' fur.

*[எலி + மயிர் + கம்பளம்.]*

**எலிமுள்ளு** *elimullu,* பெ. (n.) ***இராவணன் மீசைப்புல்;*** water-pink, a seashore grass, spinifex squarrosus.

**எலியளை** *eli-y-aḷai,* பெ. (n) ***எலிவளை*** (வின்.); rats' hole.

ம. எலியள.

*[எலி + வளை - எலிவளை → எலியளை.]*

**எலியன்** *eliyan,* பெ. (n.) ***பொடியன்*** (இ.வ.); little boy.

*[எலி → எலியன்.]*

**எலியாமணக்கு** *eli-y-āmaṇakku,* பெ. (n.) ***காட்டா மணக்கு;*** (பதார்த்த.249); glauosus-leaved physic-nut.

ம. எலியாவணக்கு.

*[எலி + ஆமணக்கு.]*

**எலியிடுக்கி** *eli-y-iḍukki,* பெ. (n.) ***எலிபிடிக்கும் பொறி;*** rat-trap.

*[எலி + இடுக்கி.]*

**எலியெலும்பன்** *eli-y-elumban,* பெ. (n.) ***வலிமையில் லாதவன்;*** weak man, he who is as weak as a rat. "இல்லெலி யெலும்பனான சம்சாரி" (ஈடு.4,9,8).

*[எலி + எலும்பு + அன்.]*

**எலியோடி** *eli-y-ōḍi,* பெ. (n.) ***கூரையின் நடுமுகட்டிலே வைக்கும் உருட்டுமரம்*** (வின்.); thin timber on the top of a ceiling ridge-pole.

ம. எலியோடி.

*[எலி + ஓடி ]*

**எலிவளை** *eli-vaḷai,* பெ. (n) ***எலிப்பொந்து*** பார்க்க; see *eli-p-pondu.*

**எலிவாலரம்** *elivālaram,* பெ. (n.) ***எலி வாலைப் போன்ற அரம்;*** instrument, rat's tail file (சா.அக.)

*[எலி + வால் + அரம்.]*

**எலிவெடி** *elivedi,* பெ. (n.) ***வெடிவகை;*** a kind of rocket. (சேரநா.).

ம. எலிவெடி.

*[எலி + வெடி.]*

**எலிவெள்ளை நஞ்சு** *elivellainañju,* பெ. (n) ***எலிகள் புணருங் காலத்தில் சிதறும் விள்ளு மாந்தர் உடம் பில் படுவதால் ஏற்படும் நஞ்சு*** (விஷம்); இதனால் புண், குளிர்காய்ச்சல், மயக்கம், போன்ற நோய்கள் உண்டாகும்; diseases due to the poisonous effects of the seminal fluid (spilt during the coition of rats) coming in contact with the humanbody and the symtoms are - ulcers, swelling, ague, swoon, fever etc. (சா.அக.).

*[எலி + வெள்ளை + நஞ்சு.]*

**எலினன்** *elinan,* பெ. (n.) ***கள்;*** toddy; (சா.அக.).

*[எலு = பிஞ்சு. எலுவின் வடிநீர் எலுவெனப்பட்டது. எலு → எலுனன் → எலினன்.]*

**எலு**[1] *elu,* பெ. (n.) ***கரடி*** (பிங்.); bear.

தெ. எலுகு.

*[எல் = கருப்பு. எல் → எலு.]*

**எலு**[2] *elu,* பெ. (n.) ***பிஞ்சு*** (பிங்.); green fruit that is just being formed from the blossom.

*[இல் → இலு → எலு = பிஞ்சு.]*

**எலு**[3] *elu,* பெ. (n.) ***தோழமை;*** (யாழ்.அக.); friendship.

*[எல்லா → எலா . எலு.]*

**எலும்பன்** *elumban,* பெ. (n) ***எலும்புபோன்று மெலிந்த வன்;*** one who is almost a skeleton, emaciated man.

ம. எலும்பன்.

*[எல் → எலு → எலும்பு + அன்.]*

**எலும்பி**[1] *elumbi,* பெ. (n.) ***எலும்பு தோன்ற மெலிந்த வள்;*** emaciated woman.

*[எலும்பு + இ.]*

**எலும்பிலி** *elumbili,* பெ. (n.) 1. ***புழுமுதலிய எலும்பில் லாத உயிரிகள்;*** worm, or any creature that has no bones. 2. ***மரவகை*** (யாழ்.அக.); tree.

*[எலும்பு + இலி. இல்வி → இலி.]*

**எலும்பு** *elumbu,* பெ. (n) ***உடம்பின் தோற்றம், உறுதிக்குக் காரணமான வன்மையான மரச்சட்டம்***

*போன்ற பொருள்;* bone ''நரம்போ டெலும்பணிந்து'' (திருவாச 12,11).

ம. எலும்பு; த. எலு, எலும்பு, எழுவு; கோத. எல்ன்; துட. எலின்; குட. எலிம்பி, து. எலு; தெ. எம்மு, எம்கே, எமுக, பட. இலு.

*[எல் = வெண்மை. எல் → எலு → எலும்ம → எலும்பு ]*

மேலையாரிய மொழிகளிலும் 'எல்' எனுஞ்சொல் வெண்மைப் பொருளில் வழங்கி வருகிறது

எல்பு - *L* albus, white, *LL* alba,
*E* alb, white vestment reaching to feet, worn by priests. *OE*, *ME* albe
*E* albata, white meta *L* albata, whitened *Port.* albino, white Negro
*E* albite, white or soda fieldspar
*E* album, book of white sheets for insertion of autographs, photographs, etc.
*E* albumen, white of egg
*E* albuminuria, presence of albumen in the urine.
*E* albumum, recently formed white wood in exogamous, trees (செல்வி 77,திச 177).

**எலும்புக்கண்** *elumbu-k-kan,* பெ. (n.) ***எலும்பின் கண்ணறைகள்;*** bone-cells. (சா.அக.).

*[எலும்பு + கண்.]*

**எலும்புக் கூடு** *elumbu-k-kūḍu,* பெ. (n) ***உடம்பினில் தசை நீங்கிய எலும்பின் கோப்பு;*** the hard or bony frame work of an animal separated from the flesh and fixed together in their natural position--skeleton. (சா.அக.).

*[எலும்பு + கூடு.]*

**எலுமிச்சம்புல்** *elumiccampul,* பெ. (n) ***ஓர்வகைப் புல்;*** lemon grass - Andropagon schoenanthus. (சா.அக.).

*[எலுமிச்சம் + புல்.]*

**எலுமிச்சை** *elumiccai,* பெ. (n) 1. ***ஒரு மரம்;*** sour lime, citrus medica acida. 2. ***எலுமிச்சம்பழம்;*** fruit of the sour-lime-tree 3 ***தித்திப்பெலுமிச்சை;*** sweet lime. 4. ***எலுமிச்சை வகை;*** Bergamotte orange, citrus aurantium beggamia.

ம. எருமிச்சி நாரகம்; பட. இலிமிசிகெ; க. இலிமிஞ்சி; கோத. இல்மிச்; துட. இன்மிச்; *Skt.* laknea

*[எல் → எலு = பிஞ்சு, காய். எலு → எலுமு → எலுமுத்தெ → எலுமித்தெ → எலுமிச்செ, எலுமித்தது = காய்த்தன்மையுடைது. ஏனைய பழங்களைப் போல் பழம் எனும் நொய்த்த தன்மையடையாமலும் மேற்றோல் வாடாமலும் இருப்பது.]*

**எலுமிச்சை வகைகள்**: 1 **பெரிய எலுமிச்சை**; large lime or giant lemon - Citrus medica limon - Citrus medica limonum (medico-limonum). 2. **கொடியெலுமிச்சை**; creeper lime-Citrus acida 3. மலையெலுமிச்சை; mountain lime Citrus rutucea 4. **தித்திப்பு எலுமிச்சை**; sweet lime-citrus media-lumia alias C.limetta Used the orange 5. **காட்டெலுமிச்சை**; Indian wild or bitter lime - Atalantia monophylla alias racemosa 6. **பணிலா எலுமிச்சை**; musk or manilla lime, Triphasia trifoliata alias Limonia trijoliata 7. **நாயெலுமிச்சை**; dog wood apple - limonia acidissima 8 **ஆனையெலுமிச்சை**; title from its size Same as sour lime in No 1 9 **கோடையெலுமிச்சை**; Pondicherry lemon-Citra medica (typica) 10 **எருமை யெலுமிச்சை**; buffallo lime - same as No 12 11 பிள்ளையார் எலுமிச்சை **அதாவது** பெரிய எலுமிச்சை; Ganapathi's lime, same as No 1 12. **சம்பீர வெலுமிச்சை இதுவே கிச்சிலி**; loose jacket lime - Citrus anranti vum nobilis (jambhiri) (சா.அக )

**எலுமிச்சை வெற்றிலை** *elumiccai veṟṟilai,* பெ. (n.) ***கற்பூர வெற்றிலை;*** betel leaf with the fragrance of the lime fruit (சா.அக )

*[எலுமிச்சை + வெற்றிலை ]*

**எலுவர்** *eluvar,* பெ. (n) ***தோழர்;*** men-friend. ''எலுவ! சிறாஅர் ஏமுறு நண்ப!'' (குறுந்.129).

*[எலுவன் → எலுவ. எலு = பிஞ்சு, இளமை. எலுவ = இளையவனே.]*

**எலுவல்** *eluval,* பெ. (n) ***தோழன்;*** man friend ''அரவெழுதிய கொடியுமுடையவ னெலுவலும்'' (பாரத பதினாறாம்.28) (செ.அக.).

*[எலுவன் → எலுவல். எலு = பிஞ்சு, இளமை. எலுவல் = இளமையன்.]*

**எலுவன்** *eluvan,* பெ. (n) ***எலுவல்*** பார்க்க; see ***eluval.*** (செ.அக.).

*[எலுவ → எலுவன் ]*

**எலுவி** *eluvi,* பெ (n) ***தோழி.*** (தொல் பொருள் 26,32,உரை ), lady companion

*[எலுவன் → எலுவி. எலு = பிஞ்சு, இளமை. எலுவி = இளமையள்.]*

**எலுவை** *eluvai,* பெ. (n) ***தோழி;*** lady companion. ''உனக்கெலுவை யாகுவதெ னெண்ணம்'' (பாரத.நாடு கரந்.33). (செல்வி.சூன்.78,பக்.497).

*[எலுவன் → எலுவை. எலு = பிஞ்சு. இளமை. எலுவை = இளமையுடையளாய், இளமைக்குணமான அன்பும் ஆர்வமும், நட்பும் வளர்க்கும் தன்மையள்.]*

**எலே** *elē,* இடை. (part) ***விளியிடைச்சொல்;*** vocative particle of endearment. எலே! இங்கே வாலே. (நெல்லை).

*[எல்லா → எலே.]*

**எவ்** *ev,* வி சு.பெ. (inter.pron) ***எவை;*** what, which things. எவ்வேந்தன்? (உ.வ.).

தெ. எவி; ம. எவ்.

*[எ → எவ். எ - வினாக்குறிப்பு.]*

**எவ்வண்ணம்** *evvannam,* பெ. (n.) ***எவ்வாறு, எப்படி;*** how, in which manner.

ம. எவ்வண்ணம்.

*[எவ் + வண்ணம்.]*

**எவ்வது** *evvadu,* கு வி எ. (adv) 1. ***எவ்விதம்;*** How? in what manner. "எவ்வ துறைவ துலகம்" (குறள்.426). 2. ***யாதொருவாறு;*** whatsoever. (செ.அக.).

*[எவ் + அது - எவ்வது.]*

**எவ்வநோய்** *evvanōy,* பெ. (n.) ***தீராத நோய்;*** incurable disease

*[எவ்வம் + நோய்]*

**எவ்வம்**[1] *evvam,* பெ (n.) 1. ***துன்பம்;*** affliction, distress "கூர்ந்தவெவ்வம்விட" (புறநா 393) 2. ***ஒன்றானுந் தீராத நோய்*** (குறள்.1241,உரை ); incurability, persistence, as of a disease (குறள்.1241,உரை.) 3 ***இளிவரவு;*** inferiority, degradation, wretchedness "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்" (குறள் 223) 4 ***ஏய்த்தல்;*** deceitfulness, guile "எவ்வ மாகவந் தெய்தி" (பெரியபு. திருநாவு.83). 5. ***வெறுப்பு;*** dislike, aversion. "எவ்வந் தீர்ந் திருந்தாள்" (சீவக.874) (செ.அக ). 6. ***குற்றம்;*** fault (ஆ.அக.). 7. ***நாட்பட்ட நோய்;*** chronic illness (சா.அக.).

*[அவ்வு → எவ்வு → எவ்வம்]*

**எவ்வம்**[2] *evvam,* பெ. (n) ***மானம்;*** self-respect "என்கணிடரினும் பெரிதா லெவ்வம்" (பு.வெ.11,பெண் பாற்.7).

*[ஏ → ஏவம் → எவ்வம்.]*

**எவ்வரும்** *evvar-um,* வி.சு.பெ (inter pron) ***யாரும்;*** anyone "ஆங்கவை யெவ்வரும் பெறுகிலா" (கந்தபு மாயையுப.14).

*[எவரும் → எவ்வரும். வகரமெய் மிகைத் தோன்றல் திரிபு.]*

**எவ்வழி** *evvaḻi,* வி சு பெ (inter pron) 1 ***எந்த வழி;*** which way, wither. 2. ***எப்படி;*** how. "எவ்வழி நல்லவர் ஆடவர்" (புறநா.187).

ம. எவ்வழி.

*[எவ் + வழி.]*

**எவ்வளவு** *e-v-v-aḷavu,* கு.வி.எ. (adj) ***எம்மட்டு;*** how much, how far, how long. கிணறு எவ்வளவு ஆழம்? எவ்வளவு நாளாகும்? (உ.வ.).

*[எவ் + அளவு - எவ்வளவு.]*

**எவ்வாறு** *e-v-v-āṟu,* கு.வி.எ. (adv.) ***எப்படி;*** in what manner, how? விழா எவ்வாறு நிகழ்ந்தது? (உ.வ.).

*[எவ் + ஆறு - எவ்வாறு. ஆறு = வழி.]*

**எவ்வி** *evvi,* பெ. (n.) ***வேளிர் குறுநில மன்னர்களு ளொருவனான வேள் எவ்வி;*** one of the chieftains of Tamil Nadu known as Vēḷ Evvi. (செ.அக.). "எவ்வி தொல்குடிப் படீஇயர்" (புறநா.202-14).

*[எவ்வுதல் = எய்தல், எவ்வி = அம்பு எய்தலில் வல்லவன்.]*

**எவ்விடம்** *evviḍam,* பெ. (n) ***எந்தவிடம்;*** which place, where (ஆ அக.).

ம. எவ்விடம், க. எல்லி, தெ. எக்கட; குரு. எக்கய்ய; மால். இகோ. இகடி. இக். பிரா. அராடேக்.

*[எவ் + இடம் - எவ்விடம்]*

**எவ்வு**[1]**-தல்** *evvu-,* 5.செ குன்றாவி. (vt) ***செலுத்துதல்;*** to discharge, as a missile or an arrow

*[ஏவு → எவ்வு.]*

**எவ்வு**[2]**-தல்** *evvu-,* 7 செ கு.வி. (vi) ***எழும்புதல்;*** to rise, spring up. "தீக்கணை மேருவைக் கால்வளைத் தெவ்வினான்" (கம்பரா.ஊர்தே 177).

*[ஏவு - எவ்வு]*

**எவ்வு**[3]**-தல்** *evvu-,* 7 செ கு.வி. (vi) ***துன்பமிழைத்தல்;*** to bother, to tease "எவ்வுஞ் சிலையுடை" (திவ்.பெரியாழ்.3,2,5).

*[அவ்வு → எவ்வு]*

**எவ்வெட்டு** *e-v-v-eṭṭu,* பெ. (n.) ***தனித்தனி எட்டு;*** eight each

ம. எவ்வெட்டு.

*[எட்டு + எட்டு - எவ்வெட்டு]*

எட்டெட்டு, எண்ணெண் என்று அடுக்கிவரின் எட்டின் பெருக்கலாகிய எட்டு எனப் பொருள் தந்து பெருக்கற்பலனாகிய, 64ஐக் குறிக்கும் எட்டு எட்டாகப் பகிர்ந்தளிக்கும் பொருளில் எவ்வெட்டு என மருவிப் புணர்ந்து கூட்டுச் சொல்லாகும்.

**எவ்வெலாம்** *e-v-v-elam,* பெ. (n.) ***உள்ளவெல்லாம்;*** whatever there be "எவ்வெலாவண்டத் துறைதரு மருத்தும்" (கந்தபு சூரனர.11).

*[எல்லாம் + எல்லாம் - எல்லெல்லாம் → எவ்வெல்லாம் ஒ.நோ. எவ்வெட்டு.]*

**எவ்வெவர்** *e-v-v-evar,* பெ (n) ***எவரெவர்;*** whosoever "எவ்வெவர்க்கு மிறைவற்கு நல்கியே" (கந்தபு திருவிளை.123).

*[எவர் + எவர் - எவரெவர் → எவ்வெவர்.]*

**எவ்வெவை** *e-v-v-evai,* பெ. (n.) ***எவையெவை;*** whatsoever things

*[எவை + எவை - எவையெவை → எவ்வெவை.]*

**எவ்வேழு** *e-v-v-ēḻu,* பெ. (n.) ***தனித்தனி ஏழு;*** seven each.

*[ஏழு + ஏழு - எவ்வேழு.]*

ஏழேழு என்றடுக்கி வரின் அவற்றின் பெருக்கற்பலனாகிய 49ஐக் குறிக்கும். ஏழு ஏழாகப் பகிர்ந்தளிக்கும் பொருளில் எவ்வேழு-எவ்வேழ் என மருவிப் புணர்ந்து கூட்டுச் சொல்லாகும்.

**எவ்வை**[1] *evvai,* பெ. (n.) ***கவலை;*** care, anxiety. ''எவ்வையில்லா வள்ளியம்மை கவ்வைமன தாகும்.'' (வள்ளி.கதை.ms.) (செ.அக.).

*[அவ்வு → எவ்வு → எவ்வை.]*

**எவ்வை**[2] *evvai,* பெ. (n.) ***எம் தங்கை;*** our younger sister. ''எவ்வைக் கெவன்பெரி தளிக்கு மென்ப'' (ஐங்குறு.89) (செ.அக.).

*[எம் + அவ்வை - எம்மவ்வை → எவ்வை.]*

**எவண்** *evaṇ,* சு.வி.எ. (adv.) 1. ***எவ்விடம்;*** where. ''எவண் படர்ந்தனனென'' (காஞ்சிப்பு.கழுவாய்.91). 2. ***எப்படி;*** how. ஒன்றுபலபோல நின்றியல் பெவணெனின் (ஞானா.56,35).

*[எவ் + அண் - எவண். அண் = இடம்.]*

**எவர்** *evar,* வி.சு.பெ (inter pron.) ***யாவர்;*** who. இங்கு வந்தார் எவர்? (உ.வ.).

ம. எவர்.

*[ஏவர் → எவர் (ஒ.மொ.304).]*

**எவரும்** *evar-um,* பெ. (n) ***யாரும்;*** everyone, anyone. ''இன்னோ ரெவருஞ் சிவனேயென் றிரங்க லோடும்'' (கந்தபு.திருக்கல்.49).

*[எவர் + உம்.]*

**எவள்** *evaḷ* வி.சு.பெ. (inter pron) ***யாவள்;*** what woman, which woman.

ம. எவள்; க. யாவளு, ஆவள்; கோத. எவள்; குட. எவ; தெ. ஏதி; கொலா. எத், கூ. அனரி, அனை; குவி. அம்பயி, அம்பது; குரு. எக்நா; மால். இகிர், இகு; பட. எவ.

*[ஏவல் → எவள் (வ.மொ.304)]*

**எவற்று** *evaṟṟu,* வி.சு.பெ (inter pron.) ***எது*** (யாழ்.அக.); what, which.

ம. எவற்ற (எப்பொருள்); *E* what.

*[எவன் + து - எவற்று.]*

**எவன்**[1] *evaṉ,* வி சு.பெ. (inter pron) ***யாவன்;*** which man, suff pers. masc (வினாப்பெயர்).

ம. எவன்; க. ஆவம், யாவனு, ஆவெ; கோத. எவ்ன்; துட. எந்த்; குட. ஏவென்; து. ஏரு, ஏரணெ, தெ. எவடு, எவ்வடு; கொலா. எம்; கூ. அனென்சு; குவி. அம்பசி; குரு. நே; மால். நெரெ; பிரா. தேர், தே; பட. எம.

*[ஏவன் → எவன் (ஒ.மொ.304).]*

**எவன்**[2] *evaṉ,* வி.பெ (inter pron ) ***யாது, யாவை;*** what, used in both numbers. - கு.வி.எ. (adv ) 1. ***எவ்வெண்ணம்;*** how? in what manner? ''அருளோனாவதை யெவனோ'' (ஞானா.46,6). 2. ***ஏன்;*** why - இடை. (part.) ***வியப்பு இரக்கச்சொல்*** (சூடா.); an exclamation of wonder or pity. ''துப்பின் எவன் ஆவர்'' (குறள்.1165).

*[ஏவன் → எவன்.]*

**எவா அரிசி** *evā ariśi,* பெ. (n.) ***எவா தவசம்*** (பார்லி); husked seed of barley called pearl barley - Hordeum decorticatum. (சா.அக.).

*[ஐயவி → ஏவி → எவா + அரிசி. இது உருண்டையாயும், நடுவில் பிளப்புள்ளதாயுமிருக்கும்; **ஐயவி அரிசி** பார்க்க; **see** aiyaviyarśi ]*

**எவை** *evai,* வி.சு.வி.பெ. (inter.pron.) ***யாவை;*** which things.

ம. எவ; து. யாவ, தாவ; கோத. எத்; துட. ஏனாம்; குட. ஏவு, ஏதி; து. தாவ, தாதவ; தெ. ஏதி, ஏவி; கொலா. எத், எதவ்; கொண், ஏவ்; கூ. அனை; மால். இந்ர; பட. எவெ.

*[ஏ + அவை = ஏவை → எவை.]*

**எழல்**[1] *eḻal,* பெ. (n.) ***துயரம்***[1] *(யாழ்.அக.);* grief.

ம. ஏழல், அழல்.

*[அழல் → எழல்.]*

**எழல்**[2] *eḻal,* பெ. (n.) 1. ***கிளர்ச்சி;*** enthusiasm, elation. ''அமரை வேட்டுவந் தெழலுறு மனத்தினர்'' (கம்பரா. கரன்வ.43). 2. ***புறப்படுகை;*** starting, departing. ''சோதனை புரிவாரிற் றுண்ணென வெழலுற்றான்'' (கந்தபு.தவங்கா.1). 3. ***தோன்றுகை;*** originating, emanating. ''அங்கதிலையை வந்தெழலும்'' (கந்தபு. திருநகர.72). (செ.அக ).

ம. ஏழல்; க. ஏழிகெ, ஏழ்கெ; து. எர் கெல், எழகெ; தெ. லேயுட.

*[எழு + அல் - எழல்.]*

**எழவாங்கு-தல்** *eḻa-vāṅgu-,* 7.செ.கு.வி. (v i) ***தொலை விற்போதல்;*** to go to a distance. ''முகங்காட்டாதே எழவாங்கி யிருக்கை'' (ஈடு.4,7,2).

*[எழ + வாங்கு.]*

**எழாநிலை** *eḻā-nilai,* பெ. (n) ***யானை கட்டுங் கூடம்;*** stable for elephant. ''எழாநிலை புகாஅ வினங்கடிசீற் றத்து... ... களிறு'' (பெருங்.உஞ்சைக்.38,91).

*[எழாத + நிலை - எழாநிலை.]*

**எழாயிரம்** *eḻāyiram,* பெ. (n) ***7000 என்னும் எண்*** (தொல்.எழுத்.391,உரை.); the number 7000.

*[ஏழு + ஆயிரம் - ஏழாயிரம் → எழாயிரம்.]*

**எழால்**[1] *eḻāl,* பெ. (n) 1. ***வல்லூறென்னும் பறவை;*** a kind of bird ''குடுமி யெழாலொடு கொண்டு கிழக் கிழிய'' (பதிற்றுப்.36,10). 2. ***யாழெழுமின்னிசை;*** musical notes of the yāḻ ''ஏழாலை யன்னசொ லேந்திழை மாதரார்'' (கந்தபு திருக்கல்.15). 3. ***யாழ்;*** stringed musical instrument known as yāḻ. ''பயனுடை யெழாற் கோடியர் தலைவ'' (பொருந.56). 4. ***மக்கள் மிடற் றிசை;*** human voice. ''களம்படு மெழாலினோடு'' (திருவிளை.தருமிக்கு.76). 5. ***மயில்;*** peacock. (செ அக.).

*[எழு → எழா → எழால். எழால் = உயரப் பறக்கும் பறவை. எழால் → எடாகை → டேகை என்பன கொச்சை வழக்கு. எழால் = எடுத்த குரலோசை. எழால் = உயரம் மிகுந்து எடுப்பான தோற்றமுடைய யானை.]*

**எழால்**[2] *eḻāl*, பெ. (n.) ***மாட்டுக் கொட்டிலின் அடைப்புப் படல்;*** door of bars as of a cowshed. (சேரநா.).

ம. எழால்.

*[எழு → எழுவு → எழா → எழால்.]*

**எழில்**[1] *eḻil*, பெ. (n.) 1. ***ஒளி;*** brightness, lustre. 2. ***வண்ணம்*** (வின்.); colour, colouring, paint. 3. ***அழகு;*** beauty, comeliness, gracefulness "எழுதெழி லம்பலம்" (பரிபா.18,28) 4 ***தோற்றப்பொலிவு;*** imposing appearance "நுண்மாணுழைபுல மில்லா னெழினலம்" (குறள்.407).

*[எல் = ஒளி. எல் → எழ் + இல் - எழில். 'இல்' சொல்லாக்க ஈறு.]*

**எழில்**[2] *eḻil*, பெ. (n.) 1. ***இளமை*** (சூடா.); youth. (சூடா.). 2. ***பருமம்;*** bigness, bulkiness. "எழிற்கலை புலிப்பாற் பட்டென" (புறநா.23). 3. ***வலி*** (பிங்.); strength 4. ***திறமை;*** ability 5. ***உயர்ச்சி;*** height, loftiness, elevation. "பகட்டெழின் மார்பின்" (புறநா.13). 6. ***குறிப்பு;*** hint. எழிலறியாதவன் (வின்.). 7. ***வெல்லும் சொல்*** (சாதுரிய மொழி); witticism, epigram.

ம. எழில், க., து. எட்ட, மால். ஏடு.

*[எல் → எழு → எழில்]*

**எழில்காட்டு-தல்** *eḻil-kāttu-*, 5.செ.கு.வி. (v.i.) ***குறிப்புக் காட்டுதல்*** (வின்.); to give an inkling, to hint.

*[எழில் + காட்டு.]*

**எழில்சொல்லு-தல்** *eḻil-collu-*, 8.செ.குன்றாவி. (v.t.) ***குறிப்பிற் சொல்லுதல்*** (வின்.); to hint by words, allude to. (செ அக.).

*[எழில் + சொல்லு]*

**எழில்பிடி-த்தல்** *eḻil-piḍi-*, 4.செ குன்றாவி. (v.t.) ***நறுமணத்தால் கவரப்படுதல்*** (யாழ்.அக.); to be attracted by smell (யாழ் அக) (செ அக).

*[எழில் + பிடி.]*

**எழிலறிதல்** *eḻilaṟidal*, தொ.பெ. (vbl.n.) ***குறிப்பறிதல்;*** having an inkling, knowing the hint (ஆ.அக.).

*[எழில் + அறிதல்.]*

**எழிலி** *eḻili*, பெ. (n.) ***மேகம்;*** cloud "எழிலி தானல்கா தாகி விடின்" (குறள்.17).

ம. எழிலி.

*[எழு → எழுலி → எழிலி. எழு = மேலெழும்புதல். எழிலி = உயர எழும்பிச்செல்லும் மேகம்.]*

**எழிற்கை** *eḻiṟ-kai*, பெ. (n.) ***ஆடலின்போது அழகுபெறக்காட்டும் கை;*** graceful gesture of the hand in dancing. "பிண்டியும் பிணையலு மெழிற்கையுந் தொழிற் கையும்" (சிலப்.3,18).

*[எழில் + கை - எழிற்கை. பொலிவு தோன்றக் காட்டும் கை எழிற்கை எனப்பட்டது]*

**எழினி**[1] *eḻiṉi*, பெ. (n.) ***உறை;*** cover, case. "வீணை யொன்றினை ... எழினியை நீக்கி" (சீவக.716)

*[இழு → எழு - எழினி]*

**எழினி**[2] *eḻiṉi*, பெ. (n.) ***கடைவள்ளல்கள் எழுவருள் ஒருவன்*** (புறநா.158); chief noted for philanthrophy, one of seven philanthrophists.

ம. எழினி.

*[எழு → எழுனி → எழினி. எழு = உயர்ச்சி. எழினி = நெடியவன், உயர்ந்தவன், மேலோன்.]*

**எழுனி**[3] *eḻiṉi*, பெ. (n) 1. ***எழுகை;*** rising. 2. ***இடுதிரை;*** curtain. "பொருமுகப் பளிங்கி னெழினி வீழ்த்து" (மணிமே.5:3).

*L* elate, lofty; *E* elate, to raise, elation, pride.

*[எழு → எழுனி. எழு = எழுச்சி (சு.வி.76).]*

**எழு**[1]**-தல்** *eḻu-*, 2.செ.கு.வி. (v.i.) 1. ***எழுந்திருத்தல்;*** to rise, as from a seat or bed 2. ***மேல் எழும்புதல்;*** to ascend, as a heavenly body, to rise by one's own power, as a bird; to ascend, by buoyancy,, as a balloon 3. ***தோன்றுதல்;*** to appear, arise, originate "அமிழ்தெழுக்கடைமின்" (கம்பரா.அகலி.21). 4. ***புறப்படுதல்;*** to start, as from a dwelling. "எம்பெரு முதல்வ நீ யெழுதியால்" (கந்தபு.சரவண.4). 5. ***தொழிலுறுதல்;*** to function. "காலுமெழா" (திவ்.பெரியாழ்.5,3,5). 6. ***மனங்கிளர்தல்;*** to be excited, roused. "ஒள்வாட் டானை யுருத்தெழுந்தன்று" (பு.வெ.3,2). 7. ***மிகுதல்;*** to increase, swell "எழு மரவக் கடற்றானையான்" (பு.வெ.7,6). 8. ***வளர்தல்;*** to grow, increase in stature, as a tree; to rise, as a building; to swell, as breasts. "எழுகிளை மகிழ்ந்து" (சீவக.330). 9. ***உயிர்பெற்றெழுதல்;*** to become resuscitated, return to life. "அந்நிலை யெழும்வகை யருள்செய் தானரோ" (கந்தபு.திரு விளை.78). 10. ***துயிலெழுதல்;*** to awake "அரியின் இனமெழுந்தன" (கந்தபு குமார.59). 11. ***பரவுதல்;*** to spread, as fame or rumour "நாமத் தன்மை நன்கனம் படியெழ" (பரிபா.15,25). 12. ***தொடங்குதல்;*** begin, commence. "இன்னாமை வேண்டி னிரவெழுக" (நான் மணி.17).

ம. எழுக. க. எழ், ஏழ், ஏழு; கோத. எட்வி; துட. நட்; குட. ஏள்; து. எர்குனி; தெ. எக்குட, லேச்சு; கொலா. லெசு; நா. லேப், மால். இலெ; பட. எல்லு.

*[ஏ → ஏழ் → ஏழு → எழு - எழுதல். (சு.வி.76).]*

**எழு**[2] *eḻu*, பெ. (n) 1. ***தூண்*** (திவா.); column, pillar. 2. ***கதவை உள்வாயிற்படியிலே தடுக்கும் மரம், (அஃது) கணையமரம்;*** cross-bar of wood set to a door. "ஊடெழுப் போக்கி" (பெருங்.உஞ்சைக்.49,3). 3. ***படைக்கலவகை*** (திவா.); weapon.

ம. எழு.

*[ஏழ் → எழு.]*

**எழு**[3] *e̤lu,* பெ. (n) *எஃகு;* Steel (சா.அக.)

*[எழுகு → எழு.]*

**எழு**[4] *e̤lu,* கு.பெ.எ. (adj.) *ஏழு;* numeral seven. "எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்" (குறள்,107)

*[ஏழு → எழு. கூட்டுச் சொல்லின் முன்னுறுப்பாகும் நெடுமுதல் எண்ணுப்பெயர்கள் குறுமுதலாகும் என்னும் சொற்பிறப்பு நெறி முறைப்படி ஏழு → எழு எனக்குறுகியது.]*

**எழுக்காம்பு** *e̤lukkāmbu,* பெ. (n.) *உருக்குலக்கை;* pestle made of steel. (சா.அக.).

*[எழு = எஃகு. எழு + காம்பு.]*

**எழுகடல்** *e̤lukaḍal,* பெ. (n.) *ஏழுகடல்* (கந்தபு.அண்ட கோச.20); seven concentric seas of the terrestrial sphere.

*[ஏழு + கடல் - ஏழுகடல் → எழுகடல்.]*

உப்புக்கடல், கருப்பஞ் சாற்றுக்கடல், கட்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், நன்னீர்க்கடல்

**எழுகளம்**[1] *e̤lu-kaḷam,* பெ. (n) *ஆண்டு அறுவடை முடிவு;* conclusion of the annual harvest. (தஞ்.).

*[எழு + களம். எழுதல் = புறப்படுதல், பயன்பாடுநிறைவுற்று வெளியேறுதல்.]*

**எழுகளம்**[2] *e̤lu-kaḷam,* பெ. (n.) *போர்க்களம்;* battle-field. (ஈடு.).

*[எழு = எழுதல், போருக்கு எழுதல். எழு + களம் - எழுகளம் (வினைத்தொகை).]*

**எழுகு** *e̤luku,* பெ. (n.) *எஃகு, உருக்கு;* steel. (சா.அக.).

*[எஃகு → எய்கு → எழுகு.]*

**எழுகுபொடி** *e̤lugupoḍi,* பெ. (n.) *எஃகுப்பொடி* பார்க்க; see *ekkuppoḍi*

*[எஃகு → எழுகு + பொடி. எஃகு → எய்கு → எழுகு எனத்திரிந்தது கொச்சைத் திரிபு.]*

**எழுகுவெட்டிரும்பு** *e̤lugu-veṭṭirumbu,* பெ. (n) *எஃகு வெட்டிரும்பு* பார்க்க; see *ekkuveṭṭirumbu.*

*[எஃகு → எய்கு → எழுகு + வெட்டு + இரும்பு.]*

**எழுகூற்றிருக்கை** *e̤lu-kūṟṟirukkai,* பெ. (n) *ஒன்றுமுதல் ஏழுவரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவி வகை.* (மாறன.297-299). verse in the composition of which the numerals one to seven occur first in the ascending order and then in the descending order

*[எழு + கூறு + இருக்கை.]*

**எழுச்சி**[1] *e̤lucci,* பெ. (n) 1. *எழுகை;* rising, ascent, elevation "தண்பிறை யெழுச்சிகண்ட சலநிதி யெனவே" (பாரத சம்பவ.69) 2. *புறப்பாடு;* starting, as of an idol, in procession. "அரன தெழுச்சிக்கு" (கோயிற்பு திரு விழா.41). 3. *பள்ளி யெழுச்சிப்பாட்டு;* song sung at dawn to rouse from sleep "படரிருட் கழித் தெழுச்சி பாடுவார்கள்" (சேதுபு.முத்தீர்த்த.37). 4. *தோற்றம்;* origin, birth, appearance "மீண்டெழுச்சி வியனிலத் தில்லையால்" (சேதுபு.சேதச.52). 5. *தொடக்கம்;* beginning. "இறுமுறை யெழுச்சியி னெய்துவதெல்லாம்" (சீவக.333). 6. *காதுநோய்வகை;* inflammation of the ear, otitis, esp., Meatus, auditorius, externus 7. *எழுச்சிக் கண்நோய்* (வின்.) பார்க்க; see *e̤lucci-k-kaṇṇōy.* 8. *முயற்சி;* effort, activity.

ம. எழிச்சி; க. எழிகெ, எழ்கெ; து. எர்கெ, எர்கெலு.

*[எழு → எழுச்சி.]*

**எழுச்சி**[2] *e̤lucci,* பெ. (n.) *தோற்றப்பொலிவு;* physical charm.

*[எழு → எழுச்சி.]*

**எழுச்சிக்கண்நோய்** *e̤lucci-k-kaṇṇōy,* பெ. (n.) *கண் கூச்ச முண்டாக்கும் நோய்.* (இங்.வை.362); inflammation of the eyes causing sensitiveness to light. (செ.அக.).

*[எழுச்சி + கண் + நோய்.]*

**எழுச்சிகொட்டு-தல்** *e̤lucci-koṭṭu-,* 5.செ.கு.வி. (v.i.) *புறப்பாட்டுக்குரிய இசைக் கருவிகளை முழக்குதல்;* to sound the appropriate musical instruments to herald the starting, as of an idol or a king in procession "வருகிறாரென்று எழுச்சி கொட்டா திருக்க" (திவ்.திரு நெடுந்.21,வியா.பக்.182).

*[எழுச்சி + கொட்டு-தல்.]*

**எழுச்சிபாடுவான்** *e̤lucci-pāḍuvāṉ,* பெ. (n.) *திருப் பள்ளி யெழுச்சி பாடுவோன்;* one who sings at dawn to awaken a prince, or any great personage. "எழுச்சிபாடு வார்கள் பாடல்கேட்டு" (சேதுபு.முத்தீர்த்த.37).

*[எழுச்சி + பாடு + ஆன்.]*

**எழுச்சிமுரசம்** *e̤lucci-murašam,* பெ. (n) 1. *பள்ளியெ ழுச்சி முரசம்;* drum beaten at dawn to awaken a king or commandant or to rouse a garrison. 2. *புறப் பாட்டு முரசம்;* drum beaten just before the starting of the procession of an idol

*[எழுச்சி + முரசம்.]*

**எழுஞாயிறு** *e̤lu-ñāyiṟu,* பெ. (n.) 1. *ஞாயிறு புறப்பாடு;* rising sun 2. *ஞாயிறு தோன்றும்போது உண்டாகி மறையும் வரையுமுள்ள தலைநோய்* (சீவரட்.); headache which begins at sunrise and continues till sunset. (செ.அக.).

*[எழு + ஞாயிறு.]*

**எழுத்தச்சன்** *e̤luttaccaṉ,* பெ. (n.) *மலையாள மொழி யின் எழுத்தை யுருவாக்கிய புலவர்;* poet who designed the script for Malayalam language.

*[எழுத்து + அச்சன் - எழுத்தச்சன். அத்தன் → அச்சன்.]*

**எழுத்தச்சு** *e̤luttaccu-,* பெ. (n) *அச்சிட உதவும் எழுத்தமைந்த உரு* (இராட்.); letter-type.

**எழுத்தடை-த்தல்** *eluttaḍai-,* 4.செ.குன்றாவி. (v.t) *மந்திரங்களின் எழுத்துகளை அவ்வவற்றிற்குரிய சக்கரங்களி னறைக்குட் பொருந்த எழுதுதல்;* to enclose the letters of a mantra or stanza within a diagram.

*[எழுத்து + அடை.]*

**எழுத்ததிகாரம்** *eluttadigāram,* பெ. (n.) (இலக்.) *எழுத்திலக்கணம் கூறும் பகுதி;* orthography. (செ.அக.).

*[எழுத்து + அதிகாரம்.]*

**எழுத்தந்தாதி** *eluttandādi,* பெ. (n.) *எழுத்தீறு தொடங்கி* பார்க்க; see *eluttīṟu-todaṅgi.*

**எழுத்தம்மை** *eluttammai,* பெ. (n) *ஆசிரியை, எழுத்து கற்பிக்கும் பெண்;* woman-teacher (சேரநா.).

ம. எழுத்தமம

*[எழுத்து + அம்மை - எழுத்தம்மை.]*

**எழுத்தலிசை** *eluttal-isai,* பெ. (n) *எழுத்தோசையாகாத இருமல், தும்மல் முதலியவை;* sounds not reducible to writing as a cough, sneeze, etc., inarticulate sounds "எழுத்த லிசையினை" (இலக்.வி.755).

*[எழுத்து + அல் + இசை. எழுத்தலிசை. 'அல்' எ.ம.இ.நி.]*

**எழுத்தறிவு** *eluttaṟivu,* பெ (n) *எழுதவும் படிக்கவும் பழகும் பயிற்சி* (வின்.); art of reading and writing.

*[எழுத்து + அறிவு.]*

**எழுத்தன்** *eluttan,* பெ. (n) *எழுதுபவன், எழுத்துக்காரன்;* writer, scribe. (சேரநா.).

ம. எழுத்தன்.

*[எழுத்து + அன் - எழுத்தன்.]*

**எழுத்தாணி** *eluttāṇi,* பெ. (n.) 1. *ஓலையிலெழுதுதற்குரிய இருப்பாணி;* stylus for writing on palmyra leaf "அங்கூரெழுத்தாணி தன்கோடாக" (பாரத தற்சிறப் புப்.1). 2. *எழுத்தாணி போன்ற பூவுள்ள ஒருவகைப் பூண்டு* (பதார்த்த.312); style plant, having a style-like flower.

ம. எழுத்தாணி.

*[எழுத்து + ஆணி.]*

**எழுத்தாணிக்கள்ளன்** *eluttāṇi-k-kaḷḷan,* பெ. (n.) *கள்ளக் கணக்கு எழுதுவோன்;* one who fabricates accounts. "எழுத்தாணிக்கள்ளர் பிரட்டெல்லா முன்காரணமே" (சரவண.பணவிடு.160).

*[எழுத்தாணி + கள்ளன்.]*

**எழுத்தாணிக்குருவி** *eluttāṇi-k-kuruvi,* பெ. (n.) *மரங்கொத்திக் குருவி* (இ.வ.); wood-pecker.

*[எழுத்தாணி + குருவி]*



எழுத்தாணிக்குருவி

**எழுத்தாளன்** *eluttāḷan,* பெ (n) 1. *புலவன்;* scholar, savant மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் (குறுந்.90, குறிப்பு). 2. *எழுதுவோன்* (வின்.); writer, clerk. 3. *தமிழில் இலக்கியப் படைப்புகளை இயற்றுபவன்;* creative writer.

ம. எழுத்தாசானி.

*[எழுத்து + ஆளன் - எழுத்தாளன் (மொழித்திறம் கைவரப் பெற்றதால் எழுத்தாளும் உரம் பெற்றவன்).]*

**எழுத்தானந்தம்** *eluttāṉandam,* பெ. (n.) *பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்தளபெழப் பாடுவதாகிய செய்யுட் குற்றம்* (யாப்.வி.96,பக்.518); (Pros.) use of alabedai in the name of a hero, believed to portend evil, a fault in versification

*[எழுத்து + ஆனந்தம் (குற்றம்).]*

**எழுத்திடு-தல்** *eluttiḍu-,* 20.செ.கு.வி. (v.i) *கைச்சாத்திடுதல்;* to put one's signature. "எழுத்திட்டுத் தாருங்கோள்" (ஈடு.5,10,4).

*[எழுத்து + இடு.]*

**எழுத்தியல்** *eluttiyal,* பெ. (n.) *எழுத்தினகத் திலக்கணத்தைக் கூறும் பகுதி;* section of orthography which treats about the sounds of speech, their classification etc.

*[எழுத்து + இயல்.]*

**எழுத்திலக்கணம்** *eluttilakkaṇam,* பெ. (n.) *எழுத்தின் இலக்கணம் கூறும் பகுதி;* section of the traditional grammar dealing with the alphabets. "எழுத்திலக்கணத் துச் சந்தியொடு" (தண்டி.114).

*[எழுத்து + இலக்கணம்.]*

**எழுத்திலாவோசை** *eluttilā-v-ōsai,* பெ. (n.) *எழுத்தலிசை* (திவா.) பார்க்க; see *eluttalisai.*

*[எழுத்து + இலா + ஓசை.]*

**எழுத்தின்கிழத்தி** *eluttin-kilatti*, பெ. (n) ***கலைமகள்*** (பிங்.); Sarasvati the goddess of letters.

*[எழுத்து + இன் + கிழத்தி.]*

**எழுத்தீறுதொடங்கி** *eluttiru-todangi*, பெ. (n.) ***செய்யுளில் ஓரடியின் ஈற்றெழுத்து அடுத்த அடியின் முதலெழுத்தாக வரத்தொடுப்பது*** (யாப் வி.52); concatenation in the letter at the end of a line of verse begins the next line.

*[எழுத்து + ஈறு + தொடங்கி வடமொழியாளர் இதனை எழுத்தந்தாதி என்பர்]*

**எழுத்து**[1] *eluttu*, பெ (n.) 1. ***ஓவியம்;*** painting, picture, drawing "இன்னபல பல வெழுத்து நிலை மண்டபம்" (பரிபா 19,53) 2. ***ஓவிய வடிவில் எழுதப்பட்ட உருவெழுத்து;*** pictograph 3 ***ஒருகோட்டு ஓவியமாக எழுதிச் சுருக்கப்பட்ட அசையெழுத்து;*** syllabic type of writing known as logo-syllabic and morpho-syllabic.

*[இழு → இழுது → எழுது → எழுத்து. எழுதுதல் = ஓவியம் வரைதல். எழுத்து[2] பார்க்க; see eluttu[2]]*

**எழுத்து**[2] *eluttu*, பெ. (n) 1 ***சொல்லின் அகவுறுப்பாகிய ஒலியனைக் கட்புலனாக வரைந்து காட்டும் வரிவடிவம்;*** letter, character representing phoneme or basic sound used in speech "எழுத்துப் பிரிந்திசைத்தல்" (தொல்.சொல் 201). 2. ***மொழியின் வண்ண மாலைக்குரிய குறுங்கணக்கு எனப்படும் முதலெழுத்துகள் அல்லது நெடுங்கணக்கு எனப்படும் மொத்த எழுத்துகளின் வரிவடிவத் தொகுப்பு;*** alphabet, set of letters used in a language "எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி" (தொல் எழுத் பாயி.5)

*[இழு → எழு → எழுது → எழுத்து எழுது - ஓவியம் வரைதல். இழு - கோடிழுத்தல். எழுத்து - படவெழுத்து, அசையெழுத்து, முதலெழுத்து போன்றன வரைதல்]*

எழுத்துகளை முத்திரைகளாகச் செய்து பதித்த காலத்தில் எழுது என்னும் சொல்லுக்கு அழுந்துதல், அழுத்துதல் பொருள்கள் தோன்றின. அழுந்துதல் - "இருவர் நெற்றியு மெழுதின சிலகணை" (பாரத 13,89) அழுத்துதல் - "தொழுது தாளினைச் செய்யபஞ் செழுதினும்" (பாரத.சம்பவ.8)

முந்து தமிழின் தொடக்கக் காலத்தில் படவெழுத்தும் (pictographic) அதனினின்றும் தலைக்கழகக் காலத்திய அசையெழுத்தும் (syllabic) அதனினின்றும இரண்டாம் தமிழ்க்கழக இறுதிக்காலத்தில் முப்பது முதலெழுத்துகளாகிய மூலத்தமிழ் அகரநிரற்குறியீட்டு எழுத்துகளும் தோன்றியனவாகக் கொள்ளலாம்.

**எழுத்துக்குள் உருவங்கள்:**

உலகில் பேசப்படும் சற்றொப்ப 3000 மொழிகளுள் 198 மொழிகளே வரிவடிவங்கள் கொண்டுள்ளன. வரிவடிவங்கள் அனைத்தும் படவெழுத்துகளிலிருந்து உருவானவை. தமிழில் படவெழுத்துகள் இருந்தன என்பதற்கும், அவையே கருத்தெழுத்தாகவும் அசையெழுத்தாகவும் இன்றைய வரியெழுத்தாகவும் வளர்ந்தன என்பதறகும், இலக்கணச் சான்றுகளும் கல்வெட்டுச் சான்றுகளும் கிடைத்துள்ளன.

எழுத்துகளையும் உருவங்களையும் புடைப்புச் சிற்ப வடிவில் செதுக்கி (பள்ளமும் மேடுமாக) எழுதுவதற்குப் பயன்பட்ட மாவுக்கல்லுக்கு 'எழுதுகல்' என்றே பழங்காலத்தில் பெயரிருந்தது. சிந்துவெளி முத்திரைகள் பெரும்பாலும் மாவுக்கல்லால் செய்யப்பட்டவை

தமிழ், தொடக்க காலத்தில் சீனம் எகுபது மொழிகளைப் போல் படவெழுத்துகளில் எழுதப்பட்டது என்பதற்கு 'எழுத்து' என்னும் சொல்லே சான்றாகின்றது. 'எழுதுதல்' பழங்காலத்தில் ஓவியம் வரைதலையே குறித்தது.

'கடவுள் எழுதவோர் கல்தாரானெனின்' என்னும் சிலப்பதிகார வரியில்'எழுதுதல்' ஓவியம் வரைதலையே குறித்தது ஓவியந் தீட்டிய மண்டபம் 'எழுத்துநிலை மண்டபம்' எனப்பட்டது பாறை, சுவர், துணி ஆகியவற்றின் மீது ஓவியம் வரைந்த கோலெழுத்துக் காலம் முந்தியது உருவங்களைச் செதுக்கியும் கீறியும் வரைந்த கண்ணெழுத்துக் காலம் பிந்தியது சிந்துவெளி நாகரிக அழிபாடுகளில் கண்ணெழுத்துகள் கிடைக்கின்றன ஓவிய உருவெழுத்துகள் கிடைக்கவிலலை பன்னிரண்டு உருவங்கள் மட்டும் படவெழுத்து முறையின் எச்சங்களாகச் சிந்துவெளி எழுத்துகளில் நிலைத்துள்ளன. இதிலிருந்து சிந்துவெளி நாகரிகக காலத்துக்கு முனபே தமிழில் படவெழுத்து முறை தோன்றி நிலவியது என அறியலாம்.

படிங்களாக வரையப்பட்ட உருவ வடிவங்களே பிற்காலத்தில் எழுத்து வடிவங்களாக மாறியுள்ளன. இதன் வண்ணம், உலகில் எம் மொழி எழுத்தாயினும் ஒவ்வோர் எழுத்தும் ஓர் உருவத்தின் படத்தை உள்ளடக்கியிருக்கிறது அந்த உருவம் கண்ணுக்குப் புலப்படும் நிலைத்திணை, இயங்குதிணைப் பொருள்களில் ஒன்றாயிருக்கும். செமித்திய மொழியில் எழுத்துகளின் பெயர்கள் உயிரிகள் அல்லது பொருள்களின் பெயர்களாகவே அமைந்திருப்பது இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது. அம்மொழியில் 'B' என்னும் வடிவம் வீட்டைக் குறிக்கும். வீட்டின் வடிவமாக அமைந்திருக்கும் எழுத்தும், வீடு (Beth beta) என்றே பெயரிடப்பட்டுள்ளது கிரேக்கரும் செமித்தியரிடமிருந்து இதனைக் கடனாகப் பெற்றனர். இது மேலையாரிய மொழிகளில் 'பி' (B) எனக் குறுகியது 'A' என்னும் ஆங்கிலவெழுத்து மாட்டின் தலையையும் கொம்பையும் குறிப்பது 'L' என்னும் ஒலிப்புக்குரிய 'எகுபதிய' எழுத்து முன்னாளில் 'படுத்திருக்கும் அரிமா' (Lion) வடிவமாக எழுதப்பட்டதும். எகுபதிய மொழியில் இதற்கு 'லியோ' என்று பெயர்.

பழந்தமிழிலும் எகுபதிய மொழியிலும் வல்லூறு (Falcon) வடிவமே அகர ஒலிப்பினைக் குறிப்பதாக இருந்தது. எகுபதிய மொழியில் இதற்கு 'ஆசோம்' என்று பெயர். எகுபதியர் 'நான்' எனப்பொருள்படும் சொல்லுக்கு மாந்தரின் இருகால் வடிவத்தைக் குறியீடாகக் குறித்தனர். சிந்துவெளி எழுத்து முறையில் இருகால் (II) வடிவம் 'நான்' என்னும் பொருளிலிருந்து பிறகு 'ந' என்னும் ஓசைக்குரிய அசையெழுத்துக் குறியீடாகி விட்டது. பின்னாளில் அது ஐரோப்பிய மொழிகளில் I என்ற எழுத்தாக மாறிவிட்டது. எகுபதியர், பொனீசியர், கிரேக்கர் ஆகிய மூவரும் 'D' என்ற எழுத்தை வீட்டின் கதவு வடிவமாக எழுதினர் தேனைக்குறிக்கும் 'Honey' என்னும் சொல்லின் முன்னெழுத்தான 'H' முதலில் தேன் கூட்டின் வடிவமாகவும், பின்னர் 'H' என்றும் எழுதப்பட்டது.

'M' என்னும் எழுதது தொடக்க காலததில ஆந்தையின தலைவ டிவாக எழுதபபடடது செமித்தியா, நீரின் அலை வடிவில 'M' எழுத்தையும மீன் வடிவததில 'N' எழுததையும எழுதினா ஏனெனில அமமொழியில் 'மேம' தணணீரையும, 'நூன' மீனையும குறிததன செமிததிய மொழியில் 'பே' வாய் எனப்பொருளபடடதால் 'P' எழுதது வடிவம் வாயின் படமாக வரையபபட்டது பொனீசியா, எகுபதியர், கிரேக்கர் ஆகிய மூவரும ஊசியின் துளை வடிவில 'q' எனனும எழுததை எழுதினா 'U' எனபது இலத்தீன மொழியின் 'V' சோந்து 'W' ஆயிறறு இது எகுபதிய மொழியில 'பறவைக குஞ்சின' வடிவமாக எழுதபபடடது

ஐரோபபிய மொழிகள் கிரேக்கச் சொற்களைக் கடன் வாங்கிய பொழுது கிரேக்கத்தின் வாயிலாகச் செமித்திய எகுபதிய படவெழுத்துக்களின் சுருக்கமாகிய எழுத்தின் வரிவடிவங்கள் மேலையாரிய மொழிகளில இடமபெறறன

சீனா இதுகாறும் படவெழுத்துகளைப் பின்பற்றுகின்றனா உலகப்பெருமொழிகளில் உள்ள அடிப்படைச் சொற்களின் எண்ணிக்கையை விட, சீன மொழியில சொறகளின எண ணிக்கை குறைவாக இருந்தாலும் படவெழுத்துகளின எண ணிக்கை மிகுதியாக இருக்கிறது 40,000 படவெழுததுகளைக கொணட சீன மொழி, சிந்துவெளித் தமிழைபபோல் அசையெ ழுத்து நிலையை யெயதாததால், வரியெழுததாக வளர முடிய வில்லை ஆயின, தமிழ் மொழி எழுதது வடிவின் நான்கு நிலைகளையும் படிப்படியாக வளாததுக்கொண்டிருக்கிறது

## தமிழின் உருவெழுத்து நிலை:

தமிழின் அனைத்து ஒலிப்புகளுக்கும் கூடாகவிருந்த உருவங் கள் சிந்துவெளி எழுததுகளால் புலனாகின்றன சிந்துவெளி எழுத்தில் 12 உருவெழுத்துகள் உருவங்களையே தெளிவாகக் காட்டுகின்றன ஏனையவை அவற்றுக்குரிய உரு வடிவ மைப்பை உள்ளடக்கிய வரிவடிவங்களாக உளளன

சிந்துவெளி எழுத்தில அகரம ஆணின வடிவமாகவும், வல லூறு என்னும் பறவை வடிவமாகவும் பிறகு வலலூற்றின் இரு சிறகுகள மட்டும குறிப்பாகப் புலனாகும வகையில் மேற் கோள் குறிபோன்றும் எழுதப்படடது 'ஆகார' வடிவம் மாட்டின் தலையாகவும், 'இ' கரம் ஆந்தையின் வடிவமாகவும், ஈகாரம வண்டு, ஈ, தேனீ ஆகியவற்றின் வடிவமாகவும் 'உகரம்' காக்கையின் வடிவமாகவும், தளிரின் வடிவமாகவும் எழுதபபட்டன என்று கருத இடந்தருகின்றது எகரம் கோழி யின வடிவமாகவும், ஏணியின் வடிவமாகவும் 'ஏகாரம்' மான் அலலது அமபின் வடிவமாகவும் 'ஐ' கையின வடிவமாகவும் 'ஒகரம' மயிலின் வடிவமாகவும் மயில் தோகையின வடிவமா கவும் 'ஓகாரம்' யாழின வடிவமாகவும எழுதப்பட்டிருக்கலாம் ஐந்து குறில் எழுத்துகளும ஐம்பறவைகளைக் (பஞ்சபட்சி) குறிப்பது உருவ எழுத்துகளைக் குறிப்பனவாகக் கருத இடந்த ருகிறது

தொன்முது தமிழில் 'க' கரம் கலயத்தின் வடிவமாகவும 'சகரம்' சேல் மீனின் வடிவமாகவும் 'டகரம்' சதுர அல்லது நீள்சதுரத துணியின் வடிவமாகவும் 'தகரம்' மழைத்தாரையின் வடிவமாகவும் ண, ன, ந, ஆகியன நாறகால் விலங்கு, நான்கு கால்கள, நாய், நான் என்பவறறின் குறியீடாகிய மாந்தனின் கால் அல்லது இருகோடுகள், தேன்கூடு போன்ற பலவடிவங்க ளாக இடந்தோறும் வேறுபடும் பாங்கினைக் கொண்டிருந்தன

'பகரம்' கவித்து வைதத மட்பாண்ட வடிவமாகவும் மகரம மலை, மயில, ஆகியவற்றின வடிவமாகவும 'யகரம' யா மரத்தின் வடிவமாகவும், 'லகரம', 'செல' (கறையான்) வடிவமாகவும 'ழகரம்' தலைபருத்த புழுவின் வடிவமாகவும் 'ளகரம' கரடியின (உளியம்) வடிவமாகவும், தோலால செயத நீர்ப்பையின வடிவமாகவும 'றகரம' ஆறறின் வடிவமாகவும எழுதபபடடன எனபதறகு வரலாற்றுபபடிமுறைககு ஒதத உருத்திரிபுகள சானறாகின்றன மேறகணட உருவங்களைச சிந்துவெளி எழுத்துகளுடன ஒப்பிட்டுக் காணபோர்க்கு இவ வுண்மை தெறறெனப புலபபடும்

## தமிழி (தமிழ்பிராமி) - தமிழ்ப் புலவர்களின் படைப்பு:

தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழ் எழுததுகள் உயி ரும் உடம்புமாக முப்பது என்று வரையறை செய்யப்பட்டன இது யாரால் வரையறுககப்படடது, எக்காலத்தில் இது நிகழ்ந் தது, எங்கே முதன்முதல செயற்பாடுற்றது என்னும் வினாக்க ளுக்கு விடைகாண்பது இன்றியமையாதது ஆகும்.

தொல்காப்பியர் தம் இலககண நூலை நூன்மரபு எனத் தொடங்கி மரபியலில் முடித்திருக்கிறார் "என்மனார், என்ம னார் புலவர்" எனனும கூறறுகள் தொலகாபபியததில் இடம் பெறறுள்ளதால தொலகாபபியருககு வெகுகாலததுக்கு முன்பே புலவா பெருமககள எழுததுகளை உயிரெழுதது மெயயெழுதது என வகைபபடுததியமை தெளிவாகிறது தமிழ் எழுத்துகளைச் சீர்திருத்தி முப்பதாக்கியவர்கள் தமிழ்ப்புலவர் களே என்பதைத் தொல்காப்பியத்தால் உறுதிப்படுத்திக் கொள்ள முடிகிறது

தொல்காப்பியர் காலத்திய தமிழ எழுத்துக்கு இக்காலத்தார் தமிழி என்று பெயரிட்டுளளனர்

இதனை வடபுலத்தா 'பிராமி' என்றனர்

'பிரம்மம' எனனும் சொல்லிலிருந்து 'பிராமி' என்னும் சொல் தோன்றியது இதற்கு முதலாவது, தலைமையானது, அடிப்ப டையானது, மூலமானது, சிறநதது எனறு பொருள பிரம முகூர்ததம், பிரம குலம் (முதறசாதி - பார்ப்பனச்சாதி), பிரமசரியம (முதல ஒழுகலாறு, பிரமசரியம், கிருகத்தம், வானபிரத்தம், சனனியாசம என்னும நான்கு நிலைகளுள் முதல் ஆசிரமத்தைப் பினபற்றுதல்) என்னும் சொற்களை நோக்குக.

பிராமி - முதலில் தோன்றிய எழுதது என்பதே இதன் சரியான வேர்வழிப் பொருள் புலவர்களின் எழுத்து என்றிதனைக் கூறுவது வரலாறறுபபொருள் வரலாற்று ஆய்வாளரும் கல் வெட்டு வல்லுநருமான அறிஞர் பலர் Indian Paleography என்னும் நூலில் பிராமி என்பதற்குப புலவர் எழுதது என விளக்கம் தந்திருக்கின்றனர் இதிலிருந்து பிராமி எனபபடும் தமிழி எழுதது தமிழ்க கழகத்துப் புலவர்களால் புதிதாகத் திருத்தியமைக்கப்படடது எனத் தெரிகிறது சென்னைப் பல்க லைக்கழகத் தமிழகராதியில் பிராமி என்பதற்கு சமறகிருதத் திற்கு அமைக்கப்படட எழுத்து எனத தரப்பட்டுள்ள விளக்கம் முற்றிலும் தவறானது சமற்கிருதம் எழுதப்படாத மொழி, அதை முதன் முதலில எழுதத் தொடங்கியபோது தமிழ் மொழியினமைப்பை முற்றிலும நோக்கி உயிரெழுத்து மெய் யெழுத்து என வகைப்படுத்திக் கொண்டனர் மேலையாரிய மொழிகளில் இத்தகைய வகைப்பாடு இல்லை

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகர் கல்வெட்டுகளில் காணப்பட்ட எழுத்துக்கு நாளடைவில், பிராமி எனப் பெயரிட்டனர். இது முற்றிலும் தமிழுக்குரிய எழுத்து வடிவம் என்று அவர்களுக்குத் தெரியாது. பிராமி எழுத்து தமிழ், பிராகிருதம், பாலி ஆகிய மூன்று மொழிகளை எழுதுவதற்கு அக்காலத்தில் பயன்பட்ட பொது எழுத்து எனினும் இது தமிழுக்கென்றே அமைந்த மூல வரிவடிவம். பிராமி எழுத்தில் அமைந்த கல்வெட்டுகள் அசோகர் காலத்துக்கும் முன்னதாகத் தமிழகத்தில் பொறிக்கப்பட்டுள்ளன.

பட்டிப்புரோலு அழகர்மலை, கொங்கா புளியங்குளம் போன்ற இடங்களில் கி.மு. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமி கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவற்றிற்குத் 'தமிழி எழுத்துகள்' எனப்பெயரிடப்பட்டுள்ளது.

இந்தியாவில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் மிகவும் பழமையானவை தமிழ்நாட்டில் கிடைத்துள்ள பிராமி கல்வெட்டுகளே. இந்தியா முழுமைக்கும் ஒரே எழுத்து வடிவமாகக் கையாளப்பட்டது, பிராமி ஒன்றே. அது தெற்கிலிருந்து வடக்குப் பகுதிகளுக்குப் பரவியுள்ளது என்று உறுதிப்படுகிறது. பாலி பிராகிருத மொழிகள் வேறு எழுத்து அமைத்துக் கொள்ளவில்லை. சமற்கிருத மொழியினரும் வேறு வழியின்றி இதனையே எழுத்து வடிவாகக்கொள்ள நேர்ந்தது. வருக்க எழுத்துக்களை மட்டும் புதிதாகச் சேர்த்துக் கொண்டனர்.

இந்தியா முழுவதும் ஒரே எழுத்து வடிவமாகத் திகழ்ந்த இந்த எழுத்துவடிவத்தை 'பிராமி' என்று சொல்லாமல், 'தமிழ் எழுத்து' என்று சொல்வதே முறையானது என்று தொல்பொருள் ஆய்வுத்துறையில் ஓய்வு பெற்ற அதிகாரியும் தொல்லெழுத்து ஆய்வில் வல்லுநருமான அறிஞர் சீனிவாசன் வெளிப்படத் தெரிவித்துள்ளார்.

கி.மு. முதலிரு நூற்றாண்டுகளில் வாழ்ந்த சாதவாகன அரசர்களுள் வசிட்டி மகன் சதகன்னி வெளியிட்ட இருமொழி நாணயத்தில் ஒரு பக்கத்தில் தமிழிலும் மறுபக்கத்தில் பிராகிருத மொழியிலும் அவன் பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் இருமொழிக்கும் பிராமி எழுத்து வடிவம் ஒன்றாகவே உள்ளது. மௌரிய மன்னர்களுக்கு முன்பு மகத நாட்டாண்ட நந்தர் வெளியிட்ட காசுகளில் சிந்துவெளி எழுத்துகளில் நந்தன் எனப்பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

யாழ்ப்பாணத்துக்கு அருகில் நடந்த அகழ்வாய்வில் பேராசிரியர் இந்திரபாலர் கண்டெடுத்த முத்திரையொன்றில் 'தீவு கோ' என்னும் பெயர் மேலே சிந்துவெளி எழுத்திலும் கீழே பிராமி எழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. மேற்கண்ட மூன்று சான்றுகளிலிருந்து சிந்துவெளி எழுத்துக்குப் பிறகு பிராமி தோன்றியது என்பதும் ஈழத்தில் இருவகை எழுத்தும் (பழைய சிந்துவெளி எழுத்தும் புதிய தமிழி [பிராமி] எழுத்தும்) ஒரே காலத்தில் புழக்கத்தில் இருந்தன என்பதும் வெளிப்படுகின்றன. சிந்துவெளி எழுத்திலிருந்து பிராமி எழுத்து வளர்ந்திருக்கிறது என்பதை அறிஞர் பலரும் ஒப்புக்கொள்கின்றனர்.

பழைய சிந்துவெளி எழுத்து முறை உருவெழுத்திலிருந்து சுருக்கப் பெற்ற அசையெழுத்து. இது பொதுமக்களே கண்டறிந்த எழுத்து. இதனைத் திருத்தியமைக்கும் எண்ணம் கற்றவர்களிடையில்தான் தோன்றமுடியும். அதனையும் கல்வியில் சிறந்த புலவர் குழுவே செய்திருக்க முடியும். பாலி பிராகிருத மொழிகள் தோன்றுவதற்கு முன் எழுத்து வடிவிலிருந்த ஒரே மொழி தமிழ். தமிழ்ச் சங்கம் மதுரையில் நன்கு இயங்கிய காலத்தில் தமிழ்ப்புலவர்களே தமிழின் எழுத்து வடிவத்தை முப்பதாகத் திருத்திப்படைத்தனர் என்பதற்குப் பின்வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் சான்றாகின்றன.

''மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்''
(தொல் எழுத் 15).
''எகர ஒகரத் தியற்கையும் அற்றே''
(தொல் எழுத் 14).

இந்நூற்பாக்களிலிருந்து முன்பு தலைமேல் புள்ளி பெறாத எழுத்துகளைத் திருத்தியமைத்த பின் புள்ளிபெறலாயின என்று அறிய முடிகிறது. தமிழி எழுத்துகளுக்குத் தாயான சிந்துவெளி அசையெழுத்துகளும் உருவெழுத்துகளும் புள்ளி பெறவில்லை.

சிந்துவெளி அசையெழுத்தில் மெய்யெழுத்துக்கு என்று தனிக் குறியீடு இல்லை. உயிர்மெய்யெழுத்துக்கான ஒரே குறியீடு மெய்யிரட்டித்த மெய்ம்மயக்கத்துக்கும், உயிர்மெய்க்கும், மெய்யெழுத்துக்கும் ஆக மூன்று ஒலிப்புகளுக்கும் பொதுவான அசையெழுத்தாக இருந்தது.

க், க, க்க - இம்மூன்றுக்கும் ஒரே குறியீடு சிந்துவெளி எழுத்தில் காணப்படுகிறது. இதுபோன்றவையே ஏனையவும்.

குறில் நெடிலை மாத்திரை அளவுகோலால் வேறுபடுத்தியதால் முக்குறில்களைத் துணைக்குறியீடு சேர்த்து நெடிலாக்கியது போல எகர ஒகரக்குறியீடுகளை வேறுபடுத்த முடியவில்லை. புதிதாக வகுத்த இலக்கணக் கட்டமைப்பின் வண்ணம் இ + அ - ஏ, உ + அ ஓ என இருவேறு குறில் இணைந்து தனி நெடில்களாகி அதன் பின்னர் அவற்றின் குறிலை எகர ஒகரக் குறில்களாக்கினர் என்னும் கருத்தின் வண்ணம் ஏகாரத்திற்கு 'இஅ' என இரண்டெழுத்தாக எழுதிக் காட்டாமல், 'ஏ' என ஒரே எழுத்தாக எழுதி அதன் தலைமேல் புள்ளியிட்டுக் குறிலாக்குவது (உயிர்மெய் மேல புள்ளியிட்டு ½ மாத்திரை மெய்யெழுத்தாகக் குறைந்தது போல) எளிதாகத் தெரிந்தது.

எழுத்துகளுக்கு ½ மாத்திரை முதல், இரு மாத்திரை வரை அளவு வகுத்த தமிழ்ப்புலவர்கள் இசைத்துறையில் வல்லவராய் இருந்திருத்தல் வேண்டும் என்பதும், பாடல்களுக்குத் தாளம் வகுத்துப் பண்ணமைக்கும் உத்திக்கு உதவும் பொருட்டே எழுத்துகளைக் குறில் நெடில் எனவும், குற்றியலுகரம், குற்றியலிகரம், மகரக் குறுக்கம் எனவும், வல்லினம், மெல்லினம், இடையினம் எனவும் பிரித்தனர் என்பதும் தெரிகிறது.

சிந்துவெளி அசையெழுத்திலிருந்துதான் தமிழ் எழுத்துகள் வடிவமைக்கப்பட்டன என்பதற்குச் சான்றாகத் தமிழ் எழுத்துகளின் வண்ண மாலையில் முதலெழுத்துகள் முப்பதுடன் 216 உயிர்மெய்யெழுத்துகளின் வடிவம் (எழுதும் வேறுபாடு கருதி) செயற்கைத் தேவையாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

உயிர்மெய் எழுத்து உண்மையில் எழுத்து என்னும் பெயருக்குப் பொருத்தமானதன்று. உயிர்மெய் எழுத்தை **'அசையெழுத்து'** என்று சொல்ல வேண்டுமேயன்றி எழுத்து எனக் கூறுவது தவறு.

உயிரெழுத்து மெய்யெழுத்து ஆகிய இரண்டே **எழுத்து** எனப்படும்.

(1) உயிர் (அ,ஆ), மெய் (க்,ங்) - தமிழில் உள்ள முப்பது முதலெழுத்துகள் - Open syllable (வெளிப்படை எழுத்து) - Phoneme.

(2) உயிர்மெய் க,ங - அகத்திணைந்த அசையெழுத்து -Closed syllable

(3) உயிர் மெய - இல, உயிர்மெய் மெய் - கல புறத்திணைந்த அசையெழுத்து - Compound syllable

மேற்காட்டப் பெற்ற மூவகை எழுத்தமைதிகளில் முதலாவ தொன்றே எழுத்து எனப்படுவது இறுதியிரண்டும் செய்யு ளுக்கு உறுபபாகும் அசைகள். இவற்றை அசையெழுதது என்றே கூறுதல் வேண்டும் சிநதுவெளி முத்திரைகளில் பயின்றுள்ளவை அனைத்தும் அசையெழுத்துகளே செய்யு ளுக்கு உறுப்பாகும் அசையெழுத்துகளிலிருந்து முதலெழுத்து களாக வடிவமைததுளளவர்கள தமிழப் புலவாகளாதலின் தமிழி எழுதது பிறகால மக்களால புலவர் எழுதது (பிராமி) என்றழைக்கபபட்டது வடபுலததாரால முதலில் தோன்றிய எழுத்து என அறிமுகப்படுததபபட்டது தமிழி எழுத்தினை அடிப்படையாகக கொணடு சமண முனிவர்களும், பௌத்தர்க ளும் பலவேறு மொழிகளுக்குப புதிதாக எழுத்துகளை மாற்றி யமைததுக் கொடுத்தனர் தேவநாகரி எழுததும் இவ்வாறு தோன்றிய புதிய எழுத்தமைதிகளுள் ஒன்றாகும் உயிரெழுத்து வேறுபாடுகளைக் குறிக்கும் அடையாளங்கள் ஏறத்தாழ இந் திய மொழிகளில ஒரு சீராக அமைநதிருப்பதே இதறகுச் சான்றாகும் தமிழில் அமைந்தவாறே உயிரெழுத்து வேறுபாட் டுக்குறிகள் இந்திய மொழிகளில் அமைந்துள்ளன என்பதைப் பின்வரும் சான்றுகளால ஒடபிட்டுத தெளியலாம

1 ஆகார நெடிலுக்கு மெய்யெழுத்தின வலப்பக்கம் கோடிமுத் தல்
2 இகர ஒலிபபுககு மெயயெழுத்தின் தலைமேல் வலமாகக் கோடிடல்
3 உகர ஒலிப்புககு மெய்யெழுத்தின் கீழ் அல்லது கீழ் வலத்தில் கோடிடல.
4. எகர ஒகர ஒலிப்புகளுககு மெயயெழுத்தின் இடது மேலாக அல்லது மேறபுறத்து இடது சாயவாகக் கோடிமுத்தல்
5. ஐகார ஔகார வேறுபாடுகளை மெய்யெழுத்தின இடப்பக் கத்தில் அல்லது மேற்புறததில் குறியீட்டுக்கோடுகளால் புலப்படுததல்

மேற்கணட உயிரெழுதது வேறுபாட்டு ஒலிப்புக்குறியீடுகள் மெயயெழுததுடன சோததெழுதும முறை. சிந்துவெளி எழுத துக்காலம் முதற சிறபபாகத தமிழிலும், குறிப்பாக அனைதது இந்திய மொழிகளிலும பின்பற்றபபட்டு வநதிருப்பது புலனாகி றது

''ஔகார இறுவாயப
பன்னீரெழுதது உயிரென மொழிப'' (தொல் எழுத் 8)
''னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப'' (தொல்.எழுத்.9)

மேற்கணட நூறபாக்களில் 'உயிரென மொழிப' 'மெய்யென மொழிப' எனக் கூறப்பட்டிருப்பதிலிருந்து உயிரென்றும், மெய்யென்றும் வேறுபடுத்தும் இயல்பு அதற்கு முன்பிருந்த சிந்துவெளிக்கால எழுத்தில் அறவே இல்லை என்று தெரிகிறது.

'மெய்யோடியையினும் உயிரியல் திரியா' (தொல்.எழுத்.10) என்று தொல்காப்பியர் கூறுகிறார் இக்கருத்து சிந்துவெளி எழுத்தில் பின்பற்றப்படவில்லை. அவர்கள் மெய்க்கும் உயிர் மெய்க்கும் மெய்ம் மயக்கத்துக்கும் ஒரே எழுத்து வடிவத்தை (அசையெழுத்து)க் கொண்டிருந்தனர். அதிலிருந்து தமிழ்ப் புலவர்கள் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பு தமிழ் எழுத்தை உயிர், மெய், உயிர்மெய் எனப்பாகுபடுத்தியதை அறிய முடிகிறது.

தமிழில் முதலெழுத்துகளைச் சீரமைத்தவர்கள் தொல்காப்பியர் காலத்துக்குச் சற்று முந்தியவர்களாக இருந்திருந்தால் அவர்க ளுடைய பெயரைத் தொல்காப்பியர் குறித்திருப்பார் சிந்து வெளி எழுத்தின் இறுதிக்காலம் கி.மு 1750 எனக் கூறப்படுகி றது. தொல்காப்பியரின் காலம் கி மு. 700. பிராகிருத மொழி வளர்ச்சியடைந்த காலம் கி மு.1000. தொல்காப்பியர் குறிப்பி டும் வடசொல் என்பது பிராகிருதச் சொல்லே. இதில் பிராகி ருத வடிவமுற்றுத் தமிழில் புகுந்த சமற்கிருதச் சொல்லும் அடங்கும். எனவே கி மு 1000க்கும் 1750க்கும் இடைப்பட்ட காலத்தில் சற்றொப்பக் கி மு 1500 ஆண்டளவில் சிந்துவெளி அசையெழுத்திலிருந்து தமிழ் முதலெழுத்துகள் 'தமிழி' வடி வும் பெற்றன எனக் கருத முடிகிறது

பிராமி எழுத்துக்குத் தமிழர்கள் முன்பே பெயர் வைத்திருந்தார் களா, என்பது அனைவரும் தொடுக்கும் வினா. சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே தமிழ் எழுத்துக்குக் கண்ணெழுத்து (சிலம்பு.26 70) என்றும் கோலெழுத்து என்றும் பெயரிட்டிருந் தார்கள் எழுதப்படும் பரப்பில் கீறல் விழாமல் மையில் அல்லது வண்ணத்தில் தோய்த்து, தோல, துணி, ஆகியவற்றின் மீது எழுதுவது கோலெழுத்து, எழுதப்படும் பரப்பில் கீறல் அல்லது பள்ளம விழுமாறு குழித்து எழுதுவது கண்ணெழுத்து. தமிழைத் தவிர அககாலத்தில உளநாட்டில் வேறெழுத்து முறையின்மையின் இதறகுத் தமிழ் எழுத்து என்று பெயரிட நேரவிலலை தமிழர்கள பெயரிடாததால் பிறமொழியாளர் பிராமி எனப் பெயரிட்டு வழங்கினர் தமிழினததார்க்குத் தனித்த பெயரிலலாதபோது பிறர் நமமைத திராவிடர் என அழைத்தது போன்றது இது தமிழில் பிறமொழிச் சொல் புகுந்தால நம் வரலாறே நமக்கு ஐயம் விளைவிக்கும் என்ப தற்கு இது நலல சான்றாகும

**உலகமுழுவதும் முதுபண்டைக் காலத்தில் நிலவிய தொல் லெழுத்துகளைத் (epigraph) தொல்லெழுத்தியலார் ஆறுவ கையாகப் பிரித்து ஆய்கின்றனர்.**

1. படவெழுத்துமுறை: உருவப்படங்கள் அல்லது பொருள் களின் தெளிவான வெளிப்பாடு



படவெழுத்துமுறை

2. **கருத்தெழுத்து முறை:** பொருளைக் குறித்த உன்னிப்புகள் கருத்தியலுருக்கள் ஆகியவற்றைப் புலப்படுத்தல் - குறியீடு கள் வாயிலாக
வியப்பு
பெரிய... பெரிய மலை
சிறிய... சிறிய ஆறு
(இரண்டு கால்கள்) நான்



கருத்தெழுத்து முறை

3. **ஒலிகொள்வடிவம்:** ஒலியின் வரைகோட்டுக் குறியீடுகள், இவை மரபு வழிப்பட்ட கருத்துருக்களிலிருந்து பொருள்க ளுக்கு மாற்றாக வழங்கப்பட்ட ஒலிக்குறியீடுகள், இன் னொரு வகையில் கூறினால் ஓவிய ஒலியெழுத்துப் புதிர். (அ) மீன் - மீனவன் - அரசன், கொடியில் மீன் சின்னம் உடையவன்

**ஓவிய எழுத்துப் புதிர்:** (ஆ) சிறப்பும் குறிப்புப் பொருளும் உடைய எழுத்தாக்கம் - புதிய முறையில் விளக்குதல்.



ஓவிய எழுத்துப் புதிர்

4. **சொற்குறியீடுகள்:** முழுச் சொற்களுக்குக் குறியீடுகள் அமைத்தல்



சொற்குறியீடுகள்

5. **அசைநிலைக் குறியீடுகள்:** சொல்லின் அசைகளோ கூறு களோ குறியீடுகளாகக் காட்டப்பெறல்.




அசைநிலைக் குறியீடுகள்

6. **அகர நிரற் குறியீடுகள்:** சொல்லாக்கத்திற்கு அடிப்படை யான மூல ஒலியன்களைத் தனித்தனியாக எழுதிக் காட்டும் வரி வடிவம் அல்லது அடிப்படை எழுத்துகள். (உயிரெழுத் துகள், மெய்யெழுத்துகள்).




அகர நிரற் குறியீடுகள்

பிராமி என்னும் தமிழி எழுத்து நேர்கோடுகளால் ஆகியது இதனைச் சற்று வளைத்து எழுதிய வடிவமே வடடெழுத்தா யிற்று. கி மு மூன்றாம் நூற்றாண்டளவில் சமணமுனிவாகளால் இந்தியாவில் பதினெட்டு மொழிகளுக்கும் பதினெட்டு வகை எழுததுகள் உருப்பெற்றிருநததைச் சமவயங்க சுத்த என்னும் சமணநூல் குறிப்பிடுகிறது கல்வெட்டுகளைத் தொடக்கக் காலத்தில் பிராகிருத சமறகிருத மொழிகளில் வெளியிட்ட பல்லவர் காலத்திலும் அதற்கடுத்த விசயநகர மனனா காலத்தி லும் கிரந்த எழுத்து தோனறியது வடசொற்களைத தமிழில் கலந்து எழுதும் ஒரே நோக்கததிற்காகக கிருத எழுத்துகள புகுத்தப்பட்டன, இவை தமிழ்நாட்டில் தோன்றிய எழுத்துகக ளில் ஆந்திர சாதவாகனவரை யடுத்து ஆட்சிக்கு வந்த இக்குவாகு மன்னர்கள் நாகாாச்சுனா அமராவதி போன்ற இடங்களில் முதன்முதல் கிரந்த எழுத்தைப் பயன்படுத்தியிருக் கின்றனர் கிரந்த எழுத்து என்பதற்கு நூலில எழுதப்பட்ட எழுத்து என்று பெயர் இதனைத் தமிழ் மக்கள் பயன்படுத்த வில்லை

யாபபருங்கல உரையில (இறுதி நூறபா விளககத்தில),

''உருவே உணர்வே ஒலியே தனிமையென
இருவகை எழுததும ஈரிரண் டாகும்''

என்று உரையாசிரியர் மேற்கோள் காட்டியிருக்கிறார்

**உருவெழுத்து:**
காணபபட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன கைவினை போல
எழுதப் படுவது உருவெழுத் தாகும்

**உணர்வெழுத்து:**
கொண்டவோர் குறியால் கொண்ட வதனை
உணடென நுணர்வது உணர்வெழுத்தாகும்

**ஒலியெழுத்து**
இசைப்படு புளளின் எழாஅல போலச்
செவிபுல னாவது ஒலியெழுத் தாகும்

**தன்மையெழுத்து**
முதற்கா ரணமும் துணைக்கா ரணமும்
துணைககா ரணததொடு தொடரிய வுணர்வும்
அவற்றொடு புணாநத வகத்தெழு வளியின்
மிடற்றுப பிறந்திசைபபது தன்மையெழுத்தே

நிகண்டாசிரியர்களின காலத்தில் இநநால்வகை எழுத்துகள் வடிவு, பெயர், தன்மை, முடிவு எழுததுகளாகவும் வகைப்படுத் தப்பட்டன

யாப்பருங்கல விருத்தியுரையில் பதினைந்துவகை எழுத்துகள் குறிப்பிடப்படுகின்றன

1. **ஆய எழுத்து:** அ,க,ச,ட,த,ப,ய வணிக முத்திரை எழுதது, ஆயம் - வரிப்பணம்
2. **ஒரை எழுத்து:** அ,ச,ல,வ,ர,ங,ய
3. **நாளெழுத்து:** நளி (கார்த்திகை) முதலிய நாண்மீன் எழுத்துகள்
4. **தன்மையெழுத்து:** பிறப்பியல்பு (சாதி) குறித்தல்
5. **நீட்டொலி எழுத்து (தாபம்):** வேதம் ஓதுங்கால் நீட்டிப் படிககும் ஒலிக்குறியீடுகள்
6. **உக்கிரவெழுத்து** (உச்சாடணம்) மந்திரக் குறியீடுகள்
7. **முத்திறவெழுத்து:** சித்திரம் காருடம் முதலியன.
8. **நால்வகையெழுத்து:** பாகியல் முதலியன (யானைப்பா கர் ஒலிப்புக் குறியீடு போல்வன)
9. **நாற்கதியெழுத்து:** புத்தேளிர், மாந்தர், அசுரர், நிரயர் (நரகர்) ஆகியோர்க்குரிய குறியீடுகள்.
10. **ஒளியெழுத்து:** கனிமம் (தாது) முதலிய மாழை (உலோ கம்) எழுதது பச்சிலை பிழிநதுவிட்ட பின எழுத்தின் வடிவஙகள தெளிவாகப பலபபடும்
11. **குறிப்பெழுத்து**[1] (சஙகேதம்) குறிபபால பொருள்தரு வன கலி முதலியனவும
12. **குறிப்பெழுத்து**[2]: குறிப்பால் பொருள்தரும் மாகூடையம் முதலியனவும
13. **பதின்மூன்றெழுத்து:** பார்ப்பன வழககாகிய வடமொ ழிச் சிறபபெழுத்துக் குறியீடுகள்
14. **கட்டுரையெழுத்து:** அகரநிரல எழுத்து, வண்ணமாலை எழுதது
15. **வடிவெழுத்து:** வசசிர முதலியன

பௌத்தர்களும சுந்தருவ எழுதது, நாகர் எழுத்து, இயக்கா எழுத்து, கினனரா எழுதது, கருடர் எழுத்து என ஐவகை எழுததுகளாககுறிபபிடுகினறனா காலபபோக்கில திரிந்தன வும் பணடுதொடடே காககபபடடவையுமான எழுததுவகை மைகளை இவை காடடுகினறன எனலாம

**எழுத்து**[3] *eluttu,* பெ (n) 1 ***எழுதப்பட்ட குறிப்பு;*** written statement உனக்குப் பணம் கொடுக்க முதலாளி எழுத்து வேண்டும் 2 ***தலையெழுத்து;*** fancied letters on the skull. ''எழுத்தை யழுத்து மெழுத் தறியாரே'' (திருமந் 2721). 3. ***எழுத்திலக்கணம் மொழியிலக்க. ணம்;*** grammar ''எண்ணென்ப வேனை எழுத்தென்ப'' (குறள் 392) 4 ***கல்வி;*** letter, science, learning. ''எழுத் தெனு மிமையா வுள்ளக்கண் டிறந்திட்டான்'' (இரகு.இர குவுற் 37). 5 ***கையெழுத்து;*** signature ''சுந்தரமாற னென்றே மருவிய வெழுத்துமிட்டான்'' (திருவா லவா 4,27). 6 ***ஆதாரச்சீட்டு;*** bond, written engagement ஓர் எழுத்துமில்லாமல் பணங்கொடுத்தான் (உ.வ ) 8 ***பெயர்ப்பதிவு;*** entry, enrolment 9 ***மடல்*** (கடிதம்), letter, written message (அபி சிந் ) 10 ***கையிலுள்ள கோடுகள், கைவரி*** (ரேகை), lines in the palm of the hand ''இலமென மலரா னெழுத்துடை யங்கையின்'' (பெருங் வத்தவ 10-107).

ம. எழுதது, **கோத.** என்தி, குட. எளிதி

*[எழுது → எழுத்து. எழுத்து எழுதப்படுவது எழுத்துக் கலையினால் வளர்ந்த கல்வி, கல்விச் செல்வத்தை வழங்கும் மொழியின் கட்டமைப்புக்கான எழுத்திலக்கணம் ]*

**எழுத்துக்ககப்படு-தல்** *eluttukkagappadu-,* 20 செ கு வி (v.i.) ***தீயூழின் பயனை நுகரநேர்தல்;*** to suffer one's fate, as a widow, அவள் எழுததுக்ககப்பட்டுக் கொண்டாள். (உ வ )

*[எழுத்து + கு - எழுத்துக்கு + அகப்படு.]*

**எழுத்துக்காரன்** *eluttu-k-kāran,* பெ (n) 1 ***நல்லெழுத் துடையோன்;*** chirographer, calligrapher 2 ***எழுத்தா ளன்;*** writer, scribe, clerk, copyist, amanuensis 3 ***சித்திரமெழுதுவோன்;*** painter, limner

ம. எழுத்துக்காரன

*[எழுத்து + காரன் ]*

**எழுத்துக்குத்து** *eḻuttu-k-kuttu,* பெ. (n) *எழுத்துமூலமானசான்றுரைப்போர்;* written evidence, documentary proof (Tinn)

ம. எழுத்து குத்து.

*[எழுத்து + குத்து]*

**எழுத்துக்குற்றம்** *eḻuttu-k-kuṟṟam,* பெ. (n) 1. *எழுத்திலக்கணவழு;* orthographical error. 2. *நச்செழுத்துவரப் பாடுங் குற்றம்* (யாழ்.அக.); fault in versification due to the use of inauspicious letters

*[எழுத்து + குற்றம்.]*

**எழுத்துக்கூட்டு-தல்** *eḻuttu-k-kūṭṭu-,* 5.செ.குன்றாவி. (vt) *எழுத்துகளைத் தனித்தனியே ஒலித்துச் சொல்லைக் கூறுதல்;* to spell, as a word, to pronounce in order the individual orthographical units of a word and then pronounce the word as completed, dist fr reading the word-unit straight off.

*[எழுத்து + கூட்டு ]*

**எழுத்துச்சாரியை** *eḻuttu-c-cāriyai,* பெ (n) 1. *எழுத்துகளைச் சொல்லுகையிற் சேர்க்கப்படுகின்ற சாரியைச் சொற்கள்;* (Gram) term used in designating a letter of the alphabet கரம், காரம், கான். 2. *ஒரெழுத்தாயுள்ள சாரியை;* single letter functioning as euphonic augment 'கலனே தூணி' (நன்.252,மயிலை.).

*[எழுத்து + சாரியை.]*

**எழுத்துச்சிற்றாடை** *eḻuttu-c-ciṟṟāḍai,* பெ. (n) *சித்திர வேலைப்பாடமைந்த சிற்றாடை வகை* (திவ்.பெரியாழ்.1,3,8,வ்யா.பக்.64,அரும்.); embroidered with pictures painted in it.

*[எழுத்து + சிற்றாடை.]*

**எழுத்துச்சீலை** *eḻuttu-c-cīlai,* பெ. (n) *சித்திரந்தீட்டிய சீலை* (வின் ); chintz, clothe with pictures.

*[எழுத்து + சீலை ]*

**எழுத்துச்சுருக்கம்** *eḻuttu-c-curukkam,* பெ (n) *சொல்லினெழுத்துச் சுருங்குவதற்காக இடையிற் சிறுகோடிட்டு முதலிறுதி எழுத்துகளை யெழுதுகை* (யாழ்.அக.); contraction of words or phrases by the use of hyphens or dots in place of the omitted letters in the middle as இ-ள். (இதன் பொருள்), எ-று (என்றவாறு).

*[எழுத்து + சுருக்கம்.]*

**எழுத்துப்படி-தல்** *eḻuttu-p-paḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *கையெழுத்து ஒரு நிலைப்படுதல்;* to become settled, as the hand-writing

*[எழுத்து + படி ]*

**எழுத்துப்பள்ளி** *eḻuttuppaḷḷi,* பெ. (n) *எழுத்து கற்பிற்கும் பள்ளி;* village-school. (சேரநா.).

ம. எழுத்து பள்ளி.

*[எழுத்து + பள்ளி - எழுத்துப்பள்ளி.]*

**எழுத்துப்பானை** *eḻuttu-p-pāṉai,* பெ. (n) *பொங்கற் பானையோடு மாப்பிள்ளை வீட்டுக்குப் பெண்வீட்டார் அனுப்புஞ் சித்திரமெழுதிய பானை* (நாஞ்.); painted pot, usually sent by the bride's people to her father-in-law's house along with poṅgarpāṉai

*[எழுத்து + பானை - எழுத்துப் பானை. இதனைக் கோலப் பானை எனபர்.]*

**எழுத்துப்பிழை** *eḻuttu-p-piḻai,* பெ. (n) *எழுத்துக் குற்றம்;* error in lettering, spelling mistake

*[எழுத்து + பிழை.]*

**எழுத்துப்புடைவை** *eḻuttu-p-puḍavai,* பெ (n.) *சித்திர மெழுதிய சேலை* (யாழ்.); printed saree, designed with pictures

*[எழுத்து + புடைவை.]*

**எழுத்துப்புள்** *eḻuttuppuḷ,* பெ. (n.) *உயிரெழுத்துக்குரியவாகக் கணியத்தில்* (சோதிடத்திற்.) *கூறப்படும் பறவைகள்;* birds representing vowels

*[எழுத்து + புள்.]*

**எழுத்துப்பெட்டி** *eḻuttu-p-peṭṭi,* பெ. (n) 1. *அஞ்சற் பெட்டி;* letter box, post box. 2. *எழுதியவைகளை வைக்கும் பெட்டி;* box for keeping letters, documents etc in (சேரநா.).

ம. எழுததுபெட்டி.

*[எழுத்து + பெட்டி.]*

**எழுத்துப்பேறு** *eḻuttuppēṟu,* பெ. (n.) *சொற்புணர்ச்சியில் இடையில் தோன்றும் எழுத்து;* augment occurring in the middle of a word

*[எழுத்து + பேறு - எழுத்துப்பேறு. பெறு → பேறு.]*

**எழுத்துப்பொருத்தம்** *eḻuttu-p-poruttam,* பெ. (n) 1. (செய்யுள்) *ஒரு காப்பியத்தின் தொடக்கச் செய்யுளின் முதன்மொழி ஒற்றெழுத்துட்பட மூன்றைந்து ஏழொன்பதென்னும் எழுத்துகளுள் ஏதேனும் ஒன்றைப் பெற்றுவருவதாகிய செய்யுண் முதன்மொழிப் பொருத்த வகை* (வெண்பாப் முதன்.4,தலைப்பு); rule of propriety which enjoins that the word commencing a poem should consist of three, five, seven or nine letters including the mute consonants and not of four, six or eight, one of ten ceyyun-mudaṉ-moḻi-p-poruttam. 2. *பிறந்த நாண்மீனுக்* (நட்சத்திரம்) *குரிய முதலெழுத்தில் தொடங்கப் பெயரிடுதல்* (வின்.); choosing such a name for a child, as begins with one of the letters ascribed in astrology to the nakṣatra under which the child was born.

*[எழுத்து + பொருத்தம்.]*

**எழுத்துமறைவேளை** *eḻuttu-maṟai-vēḷai,* பெ. (n.) *மாலைப்போது;* dusk of the evening, which blurs written characters

*[எழுத்து + மறை + வேளை.]*

**எழுத்துமாலை** *eluttumālai*, பெ (n) *கா, காவி, காவிரி போன்று, ஒருபொருள் பயப்பதோர் சொற்கூறி அச் சொல்லோடு ஒரோ ரெழுத்தாகக் கூட்ட வேறு வேறு பொருள் பயக்கும் சித்திரப்பாடல்;* verse composed with a play on words, a word by gradual addition of letters becoming different words with different meanings as in கம், நகம், கநகம், கோகநகம் or கா, காவி, காவிரி.

*[எழுத்து + மாலை - எழுத்துமாலை. இதனை வடநூலார் எழுத்து வருத்தனம் என்பர்.]*

**எழுத்துவாங்கு-தல்** *eluttu-vāngu-*, 7 செ.கு.வி. (vi) 1. *அடிமையாதற்கு அறிகுறியாக ஆண்டான்பெயரை மார்பிலே யெழுதிக் கொள்ளுதல்;* to imprint one's lord's name on one's breast, in token of becoming his slave "தேவசாதியானது எழுத்து வாங்கும்படியாக வாயிற்று, தோளுந் தோண்மாலையுமாய் . . . . . கடைந் தபடி" (ஈடு 1,3,11). 2. *கையெழுத்து வாங்குதல்;* to take one's signature or receipt

*[எழுத்து + வாங்கு]*

**எழுத்துவாசனை** *eluttu-vāsanai*, பெ. (n) *எழுத்தறிவு* பார்க்க, see *eluttarivu*

*[எழுத்து + வாசனை]*

**எழுத்துவெட்டுதல்** *eluttu-vettudal*, பெ (n) *கல், ஏனம்* (பாத்திரம்) *முதலியவற்றில் எழுத்துச் செதுக்குகை.* (CEM), engraving letters in stone, metal plates, domestic utensils etc.

*[எழுத்து + வெட்டு.]*

**எழுத்துவேலை** *eluttu-vēlai*, பெ. (n) 1. *எழுதுதல்; பெயர்த்தெழுதுதல், படியெடுத்தல் ஆகிய வேலை;* writing, transcribing, copying as an employment. 2. *சீலைச்சித்திரத் தொழில்;* chintz-painting

*[எழுத்து + வேலை.]*

**எழுத்தூசி** *eluttūsi*, பெ. (n) *எழுத்தாணி* பார்க்க; see *eluttāni* "மையெழுத் தூசியின்... எழுத்திட்டாள்" (சீவக 1769).

*[எழுத்து + ஊசி.]*

**எழுத்தெண்ணிப்படி-த்தல்** *eluttenni-p-padi-*, 4.செ குன்றாவி. (vt) *ஒன்றும்விடாது கற்றல்;* to study a book so carefully as to obtain a thorough grasp of its contents தொல்காப்பிய முதலிய நூல்களை எழுத் தெண்ணிப்படித்த சுவாமிநாத மூர்த்தியா! (இலக்.கொத். சரித் பக்.4).

*[எழுத்து + எண்ணி + படி.]*

**எழுதகம்** *eludagam*, பெ. (n) (கட்ட.) 1. *சிற்பவேலை வகை;* cornice work. 2. *தூணினடிக்கல்;* ornamental stone base for a pillar. (LOC).

*[எழுது → எழுதகம்.]*

**எழுதரு-தல்** *eludaru-*, 8.செ.கு.வி. (vi) *எழும்புதல்;* to rise, stand.

*[எழு + தரு]*

**எழுதாக்கிளவி** *eludā-k-kilavi*, பெ. (n.) *திருமறை;* The Vedas, as unwritten and handed down orally.

*[எழுதாத + கிளவி - எழுதாக்கிளவி (எழுதாதசொல், எழுதாத மொழி.]*

**எழுதாமறை** *eludāmarai*, பெ. (n.) *எழுதாக்கிளவி* பார்க்க; see *eludākkilavi*.

*[எழுதாத + மறை]*

**எழுதிக்கொடு-த்தல்** *eludi-k-kodu-*, 4.செ.குன்றாவி. (vt) *எழுத்து மூலமாகத் துணை செய்தல்* (ஆதரவு கொடுத்தல்), to grant in writing, to write and deliver, as a voucher, an agreement a contract. "திருக்கண்களுக் காயிற்று அநந்யார்கமாக எழுதிக்கொடுத்தது" (ஈடு.7,3,3).

*[எழுதி + கொடு.]*

**எழுதிக்கொள்(ளு)-தல்** *eludi-k-kol-*, 7.செ.குன்றாவி. (vt) 1. *பதிவு செய்தல்;* to enrol. "புதிதாக வின்னமுநீ சிலசேனை யெடுத்தெழுதிக் கொள்கென்றான்" (திரு விளை மெய்க்கா 5). 2. *அடிமையாக்குதல்;* to make one a bondslave by registration "இவ்வொப்பனை யழகாலே எழுதிக்கொள்வது அனந்த வைநதேயாதி களை யாயிற்று" (ஈடு.2,3,9). 3. *எழுத்து மூலமாக விண்ணப்பித்தல்;* to make a written submission to, petition, a great person.

*[எழுதி + கொள்.]*

**எழுதிவை-த்தல்** *eludi-vai-*, 4.செ.குன்றாவி. (v.t) *பதிவு* (சாசனம்) *செய்துவைத்தல்;* to register, write and keep for a memorandum, write and leave behind for the use of others, as a will

*[எழுதி + வை.]*

**எழுது[1]-தல்** *eludu-*, 5.செ.குன்றாவி. (v.t) *பூசுதல்;* to gild. "செம்பொனா லெழுதி வேய்ந்த" (தேவா.6,8).

*[இழு → எழு → எழுது.]*

**எழுது[2]-தல்** *eludu-*, 10.செ.கு.வி. (v.i) *அழுந்திப் பதிதல்;* to become indented by pressure. "இருவர் நெற்றியு மெழுதின சிலகணை" (பாரத.பதின்மூன்.89).

*[இழு → எழு → எழுது.]*

**எழுது[3]-தல்** *eludu-*, 5.செ குன்றாவி. (v.t.) 1. *ஓவியம் வரைதல்;* to paint, draw. "எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோல்" (குறள்.1285). 2. *பாவைமுதலியன செய்வித்தல்;* to produce by art, to sculpture, as an image. 3. *எழுத்துவரைதல்;* to write 4. *இயற்றுதல்;* to write as author, to compose. அவன் ஒரு நூல் எழுதியுள்ளான். 5. *நெறியேற்படுத்தல்;* to foreordain,

presdestine as Brahmā by writing on the head. ''இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி விட்ட சிவனும்'' (தனிப்பா.1,119,1).

ம. எழுதுக; கோத. எள்தி; குட. எளித்.

*[இழு → எழு → எழுது.]*

**எழுதுகல்** *eḷudukal,* பெ. (n.) ***பெயர்பொறித்த முத்திரை கள் செய்யப் பயன்பட்ட மாவுக்கல்;*** grey soft stone now used for making domestic utensils - potstone. but originally used for making seals by carving or scratching the surface inscribing proper names in ancient days since Indus civilisation.



எழுதுகல்

*[எழுது + கல் - எழுதுகல் = எழுதுவதற்கு அல்லது முத்திரை பதிப்பதற்குப் பயன்பட்ட மாவுக்கல்.]*

**எழுதுகொடி** *eḷudu-kodi,* பெ. (n.) ***முலைமேல் எழுதுந் தொய்யில்;*** outline of creeping plant drawn in sandal paste on a woman's bosom, as an adornment. முலை மேலே எழுதுகொடியாக எழுதி (சீவக.850,உரை.).

*[எழுது + கொடி - எழுதுகொடி = ஓவியமாக வரைந்த கொடி.]*

**எழுதுகோல்** *eḷudu-kōl,* பெ. (n.) 1. ***ஓவியம் வரையும் கோல்*** (திவா.); painter's brush, pencil. 2. ***எழுத்து வரையுங்கோல்*** (பிரபுலிங்.துதி.16); writing reed.

ம. எழுத்து கோல்.

*[எழுது + கோல்.]*

**எழுதுநாணல்** *eḷudunāṇal,* பெ. (n.) ***சீவி மைதொட் டெழுதுவதற்குப் பயன்படுத்தப்படும் ஓர் வகை கொறுக்கை, நாணல்;*** pen grass or pen reed which grows to 6-10 ft. high and smooth and erect.

*[எழுது + நாணல்.]*

**எழுதுபடம்** *eḷudu-paḍam,* பெ. (n.) ***திரையோவியம்;*** picture, painting on a canvas, paper or board. (செ.அக.).

*[எழுது + படம்.]*

**எழுதுபொருள்** *eḷuduporuḷ,* பெ. (n.) ***எழுதுவதற்குப் பயன்படும் பொருள்கள்;*** writing-materials, stationery.

*[எழுது + பொருள்.]*

**எழுதுவரிக்கோலம்** *eḷudu-vari-k-kōlam,* பெ. (n.) ***மகளி ராகத்து எழுதுங் கோலம்*** (சிலப்.5,226,அரும்.); adornment of the breasts, as eḷudu-koḍi.

*[எழுது + வரி + கோலம். எழுதுதல் = வரைதல், வண்ணம் பூசுதல். வரி = புனைவு, ஒப்பனை. வண்ணம் பூசி உடை அணிகல ஒப்பனை செய்த கோலம்.]*

**எழுதுவரிகோலம்** *eḷudu-vari-kōlam,* பெ. (n.) ***எழுதுவ ரிக்கோலம்*** பார்க்க; see *eḷuduvarikkōlam.* ''எழுதுவரி கோல முழுமெய் முறீஇ'' (சிலப்.5,226).

*[எழுது + வரி + கோலம்.]*

**எழுதுவோன்** *eḷuduvōṉ,* பெ. (n.) ***எழுத்துக்காரன்*** பார்க்க; see *eḷuttukkāraṉ.*

*[எழுது → எழுதுபவன் → எழுதுவோன்.]*

**எழுந்தருள்(ளு)-தல்** *eḷundaruḷ-,* 15.செ.கு.வி. (v.i.) 1. ***வருதல்;*** to come; arrive. ''எங்குநின் றிவண்மற றெழுந்தருளியது.'' (பாரத.நாடுகரந்.12). 2. ***புறப்படு தல்;*** to go forth, start. ''வினதைமுன் பயந்த யானமீதெ ழுந்தருளி வந்து'' (பாரத.குருகுல.30). 3. ***ஆவியுள்ளு றுத்தல்,*** (வின்.); to take abode, as a deity in an idol on consecration.

ம. எழுந்நருளுக.

*[எழு → எழுந்து + அருள்.]*

**எழுந்தருள்படி** *eḷundaruḷ-paḍi,* பெ. (n.) 1. ***கடவுள் புறப்பாடு*** (வின்.); procession of idols. 2. ***பெரியோர் வருகை*** (யாழ்ப்.); arrival of the great.

ம. எழுந்நருளத்து.

*[எழு → எழுந்து → அருள் + படி.]*

**எழுந்தருளியிரு-த்தல்** *eḷundaruḷi-y-iru-,* 3.செ.கு.வி. (v.i.) 1. ***குடிகொண்டருளுதல்;*** to take one's abode as God. 2. ***வீற்றிருத்தல்;*** to be seated, said to or of the great and exalted personages. இங்கு எழுந்தருளியி ருக்க.

*[எழு → எழுந்து + அருளி + இரு.]*

**எழுந்தருளுந்திருமேனி** *eḷundaruḷun-tirumēṉi,* பெ. (n.) ***எழுந்தருளுநாயகர்*** பார்க்க; see *eḷundaruḷunāyagar.* 'எழுந்தருளுந் திருமேனி திருவிழா எழுந்தருளப் புக்க வாறே. (S.I.I.ii,127)'.

*[எழு → எழுந்து + அருளும் + திருமேனி.]*

**எழுந்தருளுநாயகர்** *eḷundaruḷu-nāyagar,* பெ. (n.) ***விழாத் திருமேனி*** (வின்.); festival idol of a temple carried about in processions.

*[எழு → எழுந்து + அருளும் + நாயகர்.]*

**எழுந்திரு-த்தல்** *e/undiru,* 3.செ.கு.வி (vi) ***எழுதல்;*** to rise from one's seat, to get up "முனிவரெல்லாம் வந்தபோது மன்னவ னெழுந்திருந்து" (அரிச்.பு. விவா.37).

*[எழு → எழுந்து + இரு ]*

**எழுந்திருப்பு** *e/undiruppu,* பெ. (n) ***எழுந்து நிற்கை;*** rising from seat, getting up "கால்வாய்த்தொழுவு சமய மெழுந்திருப்பு" (ஆசாரக்.63)

*[எழுநது + இருப்பு ]*

**எழுந்தேற்றம்** *e/undēṟṟam,* பெ (n) 1 ***இறுமாப்பு*** (வின்.); pride, arrogance 2 ***துணிவு*** (வின் ), rashness, presumptuousness 3 ***பலிபீடத்தில் நற்கருணை உயர்த்தப்படுகை*** (R.C), exposition, as of the host and the chalice in mass 4 ***கடவுள் புறப்பாடு;*** procession, as of an idol in a Hindu temple, or the carrying of the Eucharist or an image by Roman Catholics (செ அக.).

**ம.** எழுந்நேற்றம்

*[எழுந்து + ஏற்றம் ]*

**எழுநகரம்** *e/u-nagaram,* பெ. (n) ***இந்தியாவிலுள்ள ஏழு திருநகர்கள்;*** seven sacred cities of India "புவிதன்னின் மேலவாய் வீடருள்கின்ற வெழு நகரத் துள் " (கந்தபு திருநகரப் 75) (செ அக.). காசி, காஞ்சி, அயோத்தி, மதுரை, அவந்தி, துவாரகை, மாயை.

*[ஏழுநகரம் → எழுநகரம ]*

**எழுநிலைமாடம்** *e/u-nilai-mādam,* பெ (n) ***ஏழடுக்கு மாளிகை;*** palace seven stories high "இன்னகிலாவி விம்மு மெழுநிலை மாடஞ்சேர்ந்தும்" (சீவக 2840) "எழுநிலை மாடத்து இடைநிலத்திருந்து" (சிலப்பு காா் 2 13).

**ம.** எழுநிலமாடம்

*[ஏழுநிலை → எழுநிலை + மாடம்.]*

**எழுநூறு** *e/u-nūṟu,* பெ. (n) ***ஏழுநூறுகள்;*** seven hundreds (செ அக )

**ம.** எழுநூறு, **க.** ஏழ்நூறு, ஏழுநூறு, எள்நூறு, **குட.** என்நுரி; **தெ.** ஏடு நூறு, ஏடுநூடலு, ஏண்நூறு

*[ஏழு + நூறு - ஏழுநூறு → எழுநூறு ]*

**எழுப்பம்** *e/uppam,* பெ (n) 1. ***எழுகை;*** rising, getting up 2 ***உயர்வு;*** growth, height, elevation (செ அக.).

*[எழு → எழுப்பம் ]*

**எழுப்பல்** *e/uppal,* பெ. (n) ***எழுப்புதல்;*** rousing or awakening from sleep; the act of awakening (சா.அக.).

*[எழுப்பு → எழுப்பல்.]*

**எழுப்பு[1]-தல்** *e/uppu-,* 5.செ குன்றாவி (vt) 1 ***எழும்பச் செய்தல்;*** to cause or help to rise, to erect, as a building 2 ***துயிலெழுப்புதல்;*** to awake, rouse "நாளை நாளேயெழுப்புவ னென்றலும்" (திருவாச.7,6). 3. ***உயிர்பெற்றெழச் செய்தல்;*** to raise from the dead, resuscitate, restore of life. "மெய்க்குக னெழுப்புத லும்" (கந்தபு திருவிளை.79). 4 ***ஊக்கமுண்டாக்கு தல்;*** to excite, stimulate, inspire. 5. ***கலகமுதலியன மூட்டுதல்;*** to instigate, to inflame, as the passions 6 ***ஓசையெழுப்புதல்;*** to raise, as the voice in speaking or singing, to call forth, as melody, from an instrument "சங்குக ளெழுப்பிய நாதம்" (பாரத பதி னெட் 24).

*[எழு → எழுப்பு ]*

**எழுப்பு[2]** *e/uppu,* பெ. (n.) ***எழுப்புகை*** (வின் ); rousing, waking

*[எழு → எழுப்பு ]*

**எழுப்பு[3]** *e/uppu,* பெ. (n) ***மகிழ்ச்சி;*** zeal, enthusiasm (Pond )

*[எழு → எழுப்பு ]*

**எழுபது** *e/u-padu,* பெ. (n.) ***ஏழுபத்துகளையுடைய எண்ணிக்கை;*** seventy as seven tens "எழுபது கோடி யுறும்" (குறள் 639)

**ம.** எழுபது, **க.** எப்பத்து, ஏழ்பத்து; **கோத.** எள்பத்; **குட.** எளுபதி, **து.** எள்ப, ஏள்ப, எர்ப; **தெ.** டெப்பதி, டெப்பை; **பட.** எளவத்து.

*[ஏழு + பத்து - எழுபது.]*

**எழுபிறப்பு** *e/upiṟappu,* பெ. (n.) ***ஏழுவகையான பிறவி*** (பிங் ): seven kinds of births, in metempsychosis தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ் வன, நிலைத்திணை (தாவரம்) என்பன எழுபிறப்புகளா கும் "எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்" (குறள் 107)

*[ஏழு + பிறப்பு - ஏழுபிறப்பு → எழுபிறப்பு.]*

**எழுபோது** *e/u-pōdu,* பெ. (n) ***கதிரவன் தோன்றும் நேரம்;*** time of sun rise "பட்டபோ தெழுபோ தறியாள்" (திவ்.திருவாய்.2,4,9) (செ.அக.).

*[எழு + போது பொழுது → போது.]*

**எழும்பல்** *e/umbal,* பெ (n) ***நிலவளவை முதலியன பற்றிய கைக்குறிப்பேடு*** (யாழ்.அக.); hand-book of land-register (செ.அக.).

*[எழு → எழும்பல்.]*

**எழும்பு-தல்** *e/umbu-,* 7.செ.கு.வி. (v.i.) ***எழு*** பார்க்க; see *e/u.*

**ம.** எழும்புக; **க.** எழ்பு; **கோத.** எட்வ; **துட.** ஓட்; **குட.** ஏள்; **து.** எர்கனி; **தெ.** லே, லேக; **கூ.** டேஞ்ஜ; **பிரா.** தேகிங்க்.

*[எழு → எழுப்பு. எழும்புதல்.]*

**எழுமதம்[1]** *e/u-madam,* பெ. (n) ***நூலாசிரியருக்குரிய எழுவகைக் கொள்கை.*** (நன்.11); seven kinds of attitude of an author towards a certain subject அவையே, உடன்படல், மறுத்தல், பிறர்தம் மதமேற் கொண்டு

களைவு, தாஅனாட்டித் தனாதுநிறுப்பு, இருவர்மாறுகோ ளொருதலை துணிவு, பிறர்நூற்குற்றங்காட்டல், பிறிதொ டுபடாஅன்றன் மதங்கொளல் ஆகியன. (நன்னூல்) (செ.அக.)

*[ஏழு + மதம் - ஏழு மதம் → எழுமதம்]*

**எழுமலை** *elu-malai,* பெ. (n.) ***கதிரவன் காலையில் தோன்றும் மலை;*** Eastern Mountain from behind which the sun is supposed to rise. "எழுமலை விழுமலை புடைமணியாக" (கல்லா.19) (செ.அக.).

ம. எழிமல.

*[எழு + மலை.]*

**எழுமாழை** *elumālai,* பெ. (n) ***தங்கம், வெள்ளி, தாமிரம், இரும்பு, ஈயம், பித்தளை*** (தாமிரமும் துத்த நாகமும் சேர்ந்தது), ***வெண்கலம்*** (தாமிரமும் தகரமும் சேர்ந்தது) ***போன்ற 'ஏழு மாழைகள்''*** (உலோகங்கள்); seven metals viz the five ordinary metals such as gold, copper, iron and lead, together with the two mixed metals viz bronze or bell metal (a mixture of copper and tin) and tarah (a mixture of copper and zinc) (சா.அக ).

*[ஏழு + மாழை = ஏழுமாழை → எழுமாழை.]*

**எழுமீன்** *elu-mīn,* பெ. (n) ***முதன்மையான ஏழு விண்மீன்கள்;*** seven principal stars of ursa major, Charle's Wain "கைதொழு மரபி னெழுமீன்போல" (நற் 231) (செ.அக.).

ம. எழுமீன்.

*[ஏழு + மீன் - ஏழு மீன் → எழுமீன்]*

**எழுமுடி** *elu-mudi,* பெ (n) ***வெல்லப்பட்ட ஏழரசர் முடியாற் செய்த சேரன்மாலை;*** Cēra's necklace fashioned out of the crowns of seven conquered kings. எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து" (பதிற் றுப்.14,11) (செ.அக.).

ம. எழுமுடி.

*[ஏழு + முடி - ஏழுமுடி → எழுமுடி]*

**எழுமுரசு** *elu-murašu,* பெ. (n) ***அரசனது செலவை யறிவிக்கும் முரசு;*** drum beaten to announce the starting of a king on a journey "எழுக வான்பயண மென்றங் கெழுமுர சியம்புவித்தார்" (கோயிற்பு. இரணிய.116) (செ அக.)

ம. எழுபற.

*[எழு + முரசு]*

**எழுமை**[1] *elumai,* பெ. (n) ***உயர்ச்சி*** (திவா.); height.

ம. எழும, க. ஏழிகெ, ஏழ்கெ, ஏழ்விகெ; து. எர்கெ, எர்கெலு.

*[ஏ → எல் → எழு → எழுமை]*

**எழுமை**[2] *elumai,* பெ (n) 1. ***ஏழுமுறை பிறக்கும் பிறப்பு;*** seven successive births "கல்வி யொருவற் கெழுமையு மேமாப்புடைத்து" (குறள் 398). 2 ***ஏழுவகையான பிறப்பு;*** seven kinds of births in transmigration. "எழுமையுந் தான்புக் கழுந்து மளறு" (குறள்.835).

ம. எழும.

*[ஏழு → எழு + மை.]*

**எழுவகையளவை** *elu-vagai-y-alavai,* பெ. (n) ***நிறுத்த ளத்தல், பெய்தளத்தல், சார்த்தியளத்தல், நீட்டியளத் தல், தெறித்தளத்தல், தேங்கமுகந்தளத்தல், எண்ணி யளத்தல் ஆகிய ஏழுவகையான அளவை முறைகள்*** (தொல்.எழுத்.7,உரை); seven ways of measuring. (செ.அக.).

*[ஏழு + வகை + அளவை.]*

**எழுவாய்**[1] *eluvāy,* பெ. (n.) 1. ***தோற்றம்;*** beginning, origin, source. "எழுவா யிறுவா யிலாதன" (தேவா. 292,5) 2. ***முதல்;*** first. "எழுவாயுகத்தி லொரு சிலம்பி" (சீகாளத் பு.சீகாள 1). 3. ***முதல் வேற்றுமை;*** nominative case "எழுவாயுருபு திரிபில் பெயரே" (நன் 295). 4. ***கருத்தன்;*** (Gram.) subject (செ.அக.).

*[எழு + வாய் - எழுவாய் (தோன்றுதல்)]*

**எழுவாய்**[2] *eluvāi,* பெ. (n) 1. ***கட்டியின் முகம்;*** point of an abscess 2. ***கிளம்புமிடம்;*** place wherefrom anything rises 3. ***சீழ் எழுமிடம்;*** the place from which the pus of an abscess approaches the surface. (சா.அக.).

*[எழு + வாய்.]*

**எழுவாயெழுஞ்சனி** *eluvāy-eluñjani,* பெ. (n) ***பத்தா வது நாண்மீன், கொடுநுகம்.*** (மகம்) (திவா.); 10th nakṣatra (செ அக.).

*[எழுவாய் + எழும் + சனி.]*

**எழுவான்** *eluvān,* பெ. (n.) ***கிழக்குத்திசை;*** The East as the place of sun rise opp to படுவான் எழுவான் தொடங்கிப் படுவான் மட்டும். (செ.அக.).

*[எழு → எழுவான்]*

**எழுவு-தல்** *eluvu,* 5 செ.குன்றாவி. (vt) 1. ***எழச்செய் தல்;*** to cause to rise, raise "எழுவுஞ் சீப்பு" (சிலப் 15,215). 2. ***ஓசை யெழுப்புதல்;*** to produce or call forth sound. "எழுவும் முரசு" (சூளா.கலியாண. 248). 3 ***இசைக் கருவி யினின்று ஒலியெழச் செய்தல்;*** to produce musical note. சாத்தியா மெழூஉம் (சேனா.உரை).

*[எழு → எழுவு. எழுவுதல்.]*

**எள்**[1] *el,* பெ (n) 1. ***எண்ணெய்தரும் சிறு கறுப்புநிற மற்றும் வெண்மை நிறமுமுடைய விதை வகை;*** sesame, a plant cultivated for the oil obtained from its seed, Sesamum Indicum "எட்பகவன்ன சிறுமைத்தே" (குறள்.889). 2. ***எட்டு கடுகு விதைகளின் நீளமுள்ள தும் எள்ளளவு எனப்படுவதுமாகிய மிகச்சிறிய நீட்ட லளவு;*** small linear measure 3. ***எட்டு கடுகுவிதைக ளின் எடையுடைய ஒரு சிற்றளவு*** (வின்.); a weight of 8 mustard seeds

ம. எள்; க. எள், எள்ளு; கோத. எண்; குட. எள்ளி; து. எண்மெ; மறுவ. நூ. நுவல்.

எள்ளின் வகைகைள்:
1 காரெள் (Black gingili)
2. சிவப்பெள் (Red gingili)
3. வெள்ளையெள் (White gingili)
4 காட்டெள் (wild gingili)
5 மயிலெள் (Peacock gingili)
6 பேயெள் (Bitter gingili)
7. காட்டுமயிலெள் (Wild peacock gingili)
8. மலையெள் (Hill gingili)
9. சிற்றெள் (Small variety gingili).

*[இல் → இள் → எள்]*

இல் = குத்தல், பிளத்தல், வேர்ச்சொல். இள் → எள் = இருபகுப்பாக நடுவில் குழிந்து காணப்படும் எள்ளின் காய்; எட்காயின் உள் விதது. எள இயற்கையாக விளைந்த புன் செய்ப் பயிராதலின் முந்து தமிழ்ச் சொல்லாயிற்று, அளவுப் பெயருமாயிற்று.

**எள்[2]** *el,* பெ. (n) ***இகழ்ச்சி;*** reproach, censure, condemnation. "எள்ளுறிய கருமம் நேர்ந்தா ளிவள்" (கம்பரா.நகர்நீ.109).

ம. எள்ளு; க. எள், எள்ளு; குட. எள்ளி; து. எண்மெ; தெ. தெலிக, நுவ்வுலு.

*[இள் → எள்]*

**எள்கு[1]-தல்** *elgu,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***இகழ்தல்;*** to despise, slight "எள்கலின்றி... ஈசனைவழிபாடு செய் வாள்" (தேவா 1049,10). 2. ***அஞ்சுதல்;*** to fear. "எண்டிசை யோரு மெள்க" (சீவக.1749). 3. ***ஏய்த்தல்;*** to deceive "ஓர் பாலகன்வந் தென்மகளை யெள்கி" (திவ் பெரியாழ்.3,7,4).

*[எள் → எள்கு. எள்ளுதல்.]*

**எள்கு[2]-தல்** *elgu-,* 7.செ.கு.வி. (v.i.) 1. ***கூசுதல்;*** to be bashful, to hesitate 'பழிவந்து மூடுமென்றெள்குதுமே' (திருக்கோ 92) 2. ***வருந்துதல்;*** to be in difficulty. "செங்களம் பற்றிநின் றெள்கு புன்மாலை" (திவ்.இயற். திருவிருத்.77).

*[இல் → எல் → எள் → எள்கு]*

**எள்நெய்** *elney,* பெ. (n) ***எள்ளிலிருந்து வடித்தெடுக் கும் நல்லெண்ணெய்;*** gingili oil (சா.அக.)

தெ. நூனெ; ம. எள்ளெண்ண; க. எள்ளெண்ணெ.

*[எள் + நெய்]*

**எள்ள** *ella,* இடை. (part) ***ஓர் உவமவுருபு;*** adverbial word of comparison. "எள்ளவிழைய... பயனிலையுவ மம்" (தொல்.பொருள்.289). (வே.க.20).

*[எள் → எள்ள.]*

**எள்ளல்** *ellal,* பெ. (n) ***இகழ்ச்சி, குறைவாய் மதிப்பி டல்;*** reproach, laughing to scorn "எள்ளலிளமை பேதைமை மடனென்று... நகைநான்கென்ப" (தொல். பொருள்.252).

*[எள் → எள்ளு → எள்ளல்]*

**எள்ளளவு** *ellalavu,* பெ. (n) ***சிறிது, எள்ளின் அளவு;*** of the size of weight of a sesamum seed, very little.

மறுவ. எள்ளிடை, எள்கிடை, எட்பகவு;
ம. எள்ளளவு; க. எள்ளத்டு

*[எள் + அளவு.]*

**எள்ளளவும்** *el-l-alavum,* கு.வி.எ. (adv.) ***சிறிதளவும்;*** not even a little, not even as much as a sesamum seed. "யானெனுமகந்தைதா னெள்ளளவு மாறவிலை" (தாயு. ஆனந்த.9).

*[எள் + அளவு + உம்.]*

**எள்ளற்பாடு** *ellar-pādu,* பெ. (n.) ***இகழ்ச்சி;*** scorn, reproach "எள்ளற்பா டுள்ளிட் டெல்லாம்" (சீவக. 2799).

*[எள்ளல் + பாடு.]*

**எள்ளிடை** *el-l-idai,* பெ. (n.) ***எள்விதையளவு;*** merest trifle

ம. எள்ளிட.

*[எள் + இடை. இடை = அளவு.]*

**எள்ளு[1]-தல்** *ellu-,* 6.செ.குன்றாவி. (v.t) 1. ***இகழ்தல்;*** to ignore, disregard "உருவுகண் டெள்ளாமை வேண்டும்" (குறள் 667). 2 ***இகழ்ந்து நகைத்தல்*** (திவா.); to ridicule, deride, laugh at 3. ***ஒப்பாதல்;*** to be equal, similar எழிலிவான மெள்ளினன் றரூஉம். (தொல்.பொருள்.289,உரை).

ம. எள்ளுக.

*[எள் → எள்ளு.]*

**எள்ளு[2]-தல்** *ellu,* 6.செ.குன்றாவி. (v.t.) ***தள்ளுதல்*** (யாழ்.அக.); to omit, discard

ம. எள்ளுக

*[இள் → எள் → எள்ளு.]*

**எள்ளுண்டை** *ellundai,* பெ. (n.) ***எள்ளுருண்டை*** பார்க்க; see *ellurundai.*

ம. எள்ளுண்டை, க. எள்ளுண்டெ.

*[எள்ளுருண்டை → எள்ளுண்டை.]*

**எள்ளுந்தண்ணீருமிறை-த்தல்** *ellun-tannirum-irai-,* 4.செ குன்றாவி (v.t.) ***நீத்தார்கடனிறுத்தல்;*** to offer water with sesame seeds on sacrificial grass to the spirits of the dead

ம. எள்ளுநீர்.

*[எள்ளும் + தண்ணீரும் + இறை.]*

**எள்ளுநர்** *ellunar,* பெ. (n) ***இகழ்பவர்;*** scorners, revilers "எள்ளுநர்கள் சாய" (சீவக.847).

[எள் → எள்ளு → எள்ளுநு + அர் - எள்ளுநர் பழங்காலத்தில் ஏவல் வினைகள் பொரு → பொருது → பொருநு எனவும் வழங்கியதால் பொருநு + அர் - பொருநர் எனத் திரிந்தமை ஒப்பு நோக்கற்பாலது ]

**எள்ளுப்பிண்ணாக்கு** *ellu-p-pinnākku,* பெ (n) ***எண்ணெயாடி எடுத்த எட்கோது;*** oil cake of pressed sesame

ம. எண்ணின்பிண்ணாக்கு

[எள்ளு + பிண்ணாக்கு. பிள் → பிண்டு = பிழிதல். பிண்டாக்கு → பிண்ணாக்கு ]

**எள்ளுப்பு** *elluppu,* பெ. (n.) ***எள்ளுச் செடியை எரித்து அதனின் றெடுத்த வுப்பு;*** salt extracted from the ash derived from burning the sesamum plant (சா.அக.).

[எள் + உப்பு.]

**எள்ளுப்பேத்தி** *elluppētti,* பெ (n) ***மகன்வழிப் பிறந்த பேத்தி;*** great grand child, i.e. son's daughter

[எள்ளு + பேத்தி - எள்ளுப்பேத்தி ]

இறந்தார்க்கு எள்ளும் நீரும் தெளிக்கும் உரிமை மகனுக்கும் மகன் வயிற்றுப் பிறந்த பிள்ளைகளுக்குமே உண்டு என்னும் மரபு தோன்றியபின் தோன்றிய சொல்லாட்சி இது கொள்ளுப் பேத்தி என்பதன் எதிர்ச்சொல்

**எள்ளுப்பேரன்** *elluppēran,* பெ. (n.) ***மகன்வழிப் பிறந்த பேரன்;*** great grand child, i.e. son's son

[எள்ளு + பேரன் - எள்ளுப்பேரன்.]

இறந்தார்க்கு எள்ளும் நீரும் தெளிக்கும் உரிமை மகனுக்கும் மகன் வயிற்றுப் பிறந்த பிள்ளைகளுக்குமே உண்டு என்னும் மரபு தோன்றியபின் தோன்றிய சொல்லாட்சி இது. கொள்ளுப் பேரன என்பதன் எதிர்ச்சொல்

**எள்ளுருண்டை** *el-l-urundai,* பெ. (n) ***எள்ளும் வெல்லமும் கலந்து செய்யப்படும் சிற்றுண்டி;*** pastry balls made of sesame and jaggery. "இடியவலோ டெள்ளுருண்டை" (பதினொ.கபி.மூத்.3).

[எள் + உருண்டை.]

**எள்ளுரை** *el-l-urai,* பெ. (n) ***இகழ்ச்சியுரை;*** disrespectful, disparaging speech "இதுதக் கென்போர்க் கெள்ளு ரையாயது." (மணி.18,10).

[எள் + உரை.]

**எள்ளேறு** *ellēru,* பெ. (n.) ***எள் விதைப்பு;*** sowing of sesame seeds

ம. எள்ளேறு.

[எள் + ஏறு - எள்ளேறு. விதை எள்ளை உழுதநிலத்தில் ஏற்றுதல், எள் விதைத்தல்.]

**எள்ளோரை** *el-l-ōrai,* பெ. (n.) ***எள்ளிட்ட அரிசிப் பொங்கல்;*** cooked rice mixed with sesame powder.

[எள் + ஓரை - எள்ளோரை.]

**எளி[1]-தல்** *eli-,* 4 செ கு வி. (v.i) ***எளிமையடைதல்;*** to become feeble, low spirited "பொருதிறல் வன்மைய திலனாயெளிந்தான்" (கந்தபு அக்கினிமுகா.90).

[இளி → எளி - எளிதல் ]

**எளி[2]-த்தல்** *eli-,* 2 செ.குன்றாவி. (v.t) ***தாழ்த்திக் கூறுதல்;*** to cry down, disparage. "எளித்த லேத்தல்" (தொல்.பொருள்.207).

[இளி → எளி → எளித்தல் ]

**எளிஞர்** *eliñar,* பெ. (n) ***எளியவர்;*** the destitute, the poor

[எளி + அர் - எளியர் → எளிஞர் ]

**எளிதரவு** *elidaravu,* பெ. (n) 1. ***தாழ்மை;*** lowness, humility 2. ***ஏழ்மை;*** indigence, poverty

[இளி → எளி → எளிதரவு ]

**எளிதா(தரு)தல்** *eli-dā-,* 15 செ.குன்றாவி. (v.t) ***எளிமையாகத் தருதல்;*** to give easily "தாளையே தரமறிகி லாதெமக்கெளிதரு சிவப்பிரகாசற்கு" (வைராக்.சத.2).

[எளி + தரு ]

**எளிது** *elidu,* பெ. (n.) 1. ***எளிமையானது*** (வள்ளுவமா 24); that which is easy of execution, or of acquisition 2. ***தாழ்ந்தது;*** that which is low, despicable, trifling

ம. எளுது; கோத. எள்; துட. எளவ்.

[இளி → எளி → எளிது ]

**எளிமை** *elimai,* பெ. (n) 1. ***எளிமை;*** ease, facility, condition of being easy to effect, or to acquire. "அவர்பாடிய வெளிமை" (பெரியபு திருநாவுக்.275). 2. ***தாழ்வு;*** despicableness, meanness, lowness of rank, or circumstances or character "இமையவர் தலைவனேயு மெளிமையி னேவல் செய்யும்" (கம்பரா. சூர்ப்ப.42) 3. வறுமை; poverty. அவன் மிக்க எளிமை யான நிலையி லிருக்கிறான். 4. ***வலியின்மை;*** weakness. "எளியள் பெண்ணென் றிரங்காதே" (கம்பரா.மிதிலைக்.68). 5. ***தளர்வு*** (பிங்); faintness, depression of spirit. 6. ***அடிமை நிலை*** (அக.நி.); slavery.

ம. எளிம, க. எளித; துட. ஏள்ய (ஏழை); து. எல்லி, எல்ய; தெ. எல்லிதமு.

[எளி + மை - எளிமை.]

**எளிய** *eliya,* கு.பெ.எ. (adj.) 1. ***தாழ்ந்த, பயன் இல்லாத, குறைந்த;*** low, small, insiginificant எளிய விலை. 2. ***உதவியற்ற;*** unhelpful. 3. ***மெலிந்த;*** weak. 4. ***பணிந்த;*** humble.

ம. எளிய.

[எளி + அ - எளிய.]

**எளியர்** *eliyar,* பெ. (n.) ***எளியன்*** பார்க்க; see *eliyan.* (ஆ.அக.).

[எளி + அவர் - எளியவர் → எளியர்.]

**எளியவன்** *eliyavan*, பெ. (n) ***எளியன்*** பார்க்க; see *eliyan* "சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினோன்" (கம்பரா.பள்ளி.111).

ம. எளியவன்.

*[எளி + அவன்.]*

**எளியன்** *eliyan*, பெ. (n) 1. ***வறியவன்*** (திவா.); poor man 2. ***பண்பில் தாழ்ந்தவன்;*** mean man. 3. ***தாழ்ந்த குலத்தான்;*** man of low caste. 4. ***எளிதாய் அடையப்படுபவன்;*** man of easy access "காட்சிக் கெளியன்" (குறள்.386).

ம. எளியன்.

*[எள் → எளி → எளியன் (வே.க.21).]*

**எளியார்** *eliyār*, பெ (n) ***வறியவர்;*** poor men.

*[எளியவர் → எளியார்.]*

**எளியான்** *eliyān*, பெ. (n) ***எளியன்*** பார்க்க; see *eliyan*.

ம. எளியான்.

**எளியோன்** *eliyōn*, பெ. (n) ***எளியன்*** பார்க்க; see *eliyan*.

ம. எளியோன்.

*[எளியான் → எளியோன்.]*

**எளிவா(வரு)-தல்** *eli-vā-*, 18.செ.கு.வி. (v.i) ***எளிமையாதல்;*** to be easy of approach "எளிவந்த எந்தைபிரான்" (திருவாச 6,15) 2. ***எளிதில் கிடைத்தல்;*** to be obtained easily 3 ***இழிவடைதல்;*** to be low, undignified, abject "இடுசோறு தின்றுயிர்சுமந்து தோளெளி வரும்படியிருந்த பாவியரும்" (பாரத.கிருட் 123).

*[எளி + வரு.]*

**எளிவு** *elivu*, பெ. (n.) ***இயல்பு*** (சௌலப்பியம்); unaffected ease, graceful simplicity, accessibility, approachableness "உரலினோ டிணைந்திருந் தேங்கிய வெளிவே" (திவ்.திருவாய்.1,3,1).

*[எளி → எளிவு ]*

**எளுமை** *elumai*, பெ. (n) ***எளிமை*** (தொல்.பொருள்.76, உரை.) பார்க்க; see *elimai*.

*[எளிமை → எளுமை (கொ.வ.).]*

**எற்செய்வான்** *er-ceyvān*, பெ. (n.) ***பகலாக்கும் கதிரவன்;*** sun, lit., day-maker. "எற்செய்வான் மறைந்தனனே" (சிலப்.7,40).

*[எல் + செய்வான்.]*

**எற்சோறு[1]** *er-cōru*, பெ. (n.) ***பழைய காலத்திலிருந்த ஒரு வரி;*** ancient village cess. (S.I.I i,103)

*[எல் + சோறு - எற்சோறு. எல் → எல்லி (இரவு). இராச் சோறு வழங்க வாங்கப்பட்ட வரியாகலாம்.]*

**எற்சோறு[2]** *ercōru*, பெ. (n) ***திருக்கோயில்களில் உச்சியம்போதில் அடியார் கட்களிக்கும் உணவு;*** (S.I.I viii 85); noon meal provided gratis in temple

*[எல் + சோறு. எல் = பகல்.]*

**எற்பாடு** *erpādu*, பெ. (n) 1 ***பகல் 20 நாழிகைமுதல் 30 நாழிகை வரை, பிற்பகல்*** (தொல்.பொருள்.8, உரை), period between 2 to 6 p.m., afternoon 2 ***காலைப்பொழுது;*** sunrise, morning (தொல் விருத் 38)

*[எல் + பாடு படு · பாடு (மு.தி.தொ.பெ.).]*

**எற்புச்சட்டகம்** *erpu-c-cattagam*, பெ. (n) ***எலும்புக் கூட்டினாலாகிய உடல்;*** cage made of bones. i.e. body (இறை.1,உரை 9)

*[எற்பு + சட்டகம் ]*

**எற்றம்** *erram*, பெ. (n.) ***மனத்துணிபு;*** determination, decision "எற்றமிலாட்டியென்னே முற்றா ளென்று" (கலித்.144)

*[ஏற்று → ஏற்றம் → எற்றம்.]*

**எற்றல்** *erral*, பெ (n) 1 ***அறுத்தல்;*** cutting 2. ***குத்தல்;*** stabbing 3. ***கொல்லல்;*** killing 4 ***வெட்டல்;*** cutting asunder, hewing 5. ***அடித்தல்;*** act of beating (சா.அக.).

*[எற்று → எற்றல்.]*

**எற்றற்கொட்டு** *erarkottu*, பெ. (n.) ***இறைமரக் கொட்டு;*** basket used in well sweep

*[ஏற்றம் → ஏற்றல் → எற்றல் + கொட்டு.]*

**எற்றற்பட்டை** *errar-pattai*, பெ. (n) ***இறைகூடை*** (யாழ்ப் ); basket with which water is baled by four or six persons.

*[ஏற்றல் + பட்டை - ஏற்றல்பட்டை → எற்றற்பட்டை ]*

**எற்றன்மரம்** *erran-maram*, பெ. (n) ***நீரிறைக்குங் கருவி வகை*** (யாழ்ப்.); a kind of oblong trough with a long handle, supported by three posts used to bale water in irrigation

*[ஏற்றல் + மரம் - ஏற்றன்மரம் → எற்றன் மரம்.]*

**எற்றி-த்தல்** *erri-*, 4.செ.கு.வி. (v.i.) ***இரங்குதல்*** (திவா.); to take pity, have compassion.

*[எற்று → எற்றி.]*

**எற்று[1]-தல்** *erru-*, 5 செ.குன்றாவி. (v.t) 1. ***அடித்தல்;*** to strike, cuff, hit with the fist "எற்றிய வயிற்றன்" (கம்பரா.மாரீசன்.63) 2. ***உதைத்தல்;*** to kick. 3. ***மோதுதல்;*** to butt, as an elephant, to dash against, as the waves of the sea. "எற்று தெண்டிரை" (தேவா. 92,2). 4. ***எறிதல்;*** to throw out, as water from a vessel. நீரெற்றும் மரம் 5. ***வெட்டுதல்;*** to cut, cleave, rend. "எற்றாமமுவும்" (கலித்.85). 6. ***குத்துதல்*** (திவா.); to pierce, stab. 7. ***கொல்லுதல்*** (திவா.); to kill. 8. ***நீக்குதல்;*** to cast away, get rid of. "எற்றுவமே பாச

மெலாம் யாம்'' (சைவச.பாயி.7). 9. ***நூல் தெறித்தல்;*** to snap, as a carpenter's line for making a board. ''எற்றுநூல்போன்று'' (நைடத.சந்திரோ.33). 10. ***எழுப்புதல்*** (திவா.); to raise.

ம. எற்றுக.

*[எறு → (எறி) → எற்று.]*

**எற்று²-தல்** *eṟu-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***எடுத்தல்;*** to lift, take. ''எற்றி வயவ ரெறிய நுதல்பிளந்து'' (களவழி.23).

*[எறு → எற்று.]*

**எற்று³-தல்** *eṟu-,* 10.செ.கு.வி. (v.i.) 1. ***நீங்குதல்;*** to cease. ''இடைக்கொட்கி னெற்றா விழுமந்தரும்'' (குறள்.663). 2. ***இரங்குதல்;*** to feel compassion ''எற்றிய காதலினா லிசைத்தாள்.'' (தஞ்சைவா.224).

ம. எற்றுக.

*[இல் → எல் → எறு → எற்று.]*

**எற்று⁴** *eṟu,* பெ. (n.) ***உதைத்தல், அடித்தல், தள்ளுதல்;*** kicking, hitting, pushing, attacking. பந்தைக் காலால் ஓர் எற்று எற்றினான். (உ.வ.).

ம. எற்று; க. ஏடு, எட்டு; கோத. எய்ரல்; துட. எர்ய; து. எட்டுனி; தெ. ஏடு.

*[ஏறு + எற்று.]*

**எற்று⁵** *eṟu-,* வி.பெ. (inter.pron) ***எத்தன்மைத்து;*** of what sort (is it)? tenseless finite verb of impers, sing. int. - இடை. (part.) ***வியப்பு,இரக்கக் குறிப்பு;*** exclamation of pity or wonder.

*[எல் + து - எற்று.]*

**எற்றுண்(ணு)-தல்** *eṟuṇ-(ṇu),* 12.செ.கு.வி. (v.i) ***எறியப்படுதல்;*** to be tossed about இருவினை யெனுந்திரையி னெற்றுண்டு. (தாயு.தேசோ.2).

*[எல் + து - எற்று + உண்.]*

**எற்றுநூல்** *eṟu-nūl,* பெ. (n) ***மரமறுக்கப் போடும் நூல்;*** carpenter's line for marking a board. ''உயிர்போழ்தற் கெற்றுநூல்போன் றிருந்தது.'' (நைடத.சந்திரோ.33).

ம. எற்று நூல்.

*[எற்று + நூல் - எற்றுநூல் (தெறிக்கும்நூல்). எற்றுதல் = கரி அல்லது மை தடவிய நூலைக் கோடு விழுவதற்காக மரத்தின் மேல் விசைத்துத் தெறித்தல்.]*

**எற்றுப்பணிக்கன்** *eṟu-p-paṇikkaṉ,* பெ. (n.) ***சலவைத் தொழிலாளி;*** washerman (சேரநா.).

ம. எற்றுபணிக்கன்.

*[எற்று + பணிக்கன் - எற்றுப்பணிக்கன். எற்று = அடித்தல், துவைத்தல். பணிக்கன் = பணியாளன்.]*

**எற்றே** *eṟṟē,* இடை. (int.) ***எற்று³*** பார்க்க; see *eṟu³* ''கற்றவெலாம் எற்றே இவர்க்கு நாமென்று'' (நீதிநெறிவி.).

*[என் + து - எற்று + ஏ - எற்றே. ஏகாரம் வினாவிடைச்சொல்.]*

**எற்றை** *eṟṟai,* வி.பெ. (inter pron.) ***என்று;*** when. (யாழ்.அக.).

*[என்று + ஐ = என்றை → எற்றை.]*

**எற்றைக்கும்** *eṟṟaikkum,* கு.வி.எ. (adv.) ***எப்பொழுதும், என்றென்றைக்கும்;*** for all time, for ever. ''எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும்'' (திவ் திருப்பா.29).

*[என்று → என்றைக்கு + உம் - என்றைக்கும் → எற்றைக்கும்.]*

**எற்றோ** *eṟṟō,* இடை. (int.) ***எற்று³*** பார்க்க; see *eṟu.³* ''பெருநகையா பெற்றாளென்(று) எற்றோமற் றெற்றோ மற் றெற்று'' (தனிப்பா.1,109,49).

*[எற்று + ஓ - எற்றோ.]*

**எற்றோற்றம்** *eṟṟōṟṟam,* பெ. (n) ***எழுஞாயிறு;*** sunrise. (சா.அக.).

*[எல் + தோற்றம் - எற்றோற்றம். எல் = ஞாயிறு, கதிரவன்.]*

**எறட்டு-தல்** *eṟaṭṭu,* 5.செ.குன்றாவி. (v.t.) ***வீசியிறைத்தல்;*** to radiate, cast forth. ''சந்திரனுடைய கிரணங்களானவை நெருப்பை யெறட்டிச்சுட'' (திவ்.பெரியதி. 8,5,3,வ்யா.).

*[இறை → இறட்டு → எறட்டு.]*

**எறவன்** *eṟavaṉ,* பெ. (n.) ***ஒருவகைநெல்;*** a kind of paddy. (சேரநா.).

ம. எறவன்.

*[எறவன் = எரங்காட்டில் விளையும் நெல்.]*

**எறி¹-தல்** *eṟi-,* 2.செ.குன்றாவி. (v.t.) ***வீசியெறிதல்;*** throw, cast, fling, discharge, hurl. ''கல்லெறிந் தன்ன'' (நாலடி.66). 2. ***வெட்டுதல்;*** to hack, cut into pieces ''எறிந்து களம்படுத்த வேந்துவேள்'' (புறநா.19,12). 3. ***அறுத்தல்;*** to chop, as mutton. ''எறிக திற்றி'' (பதிற்றுப்.18,2) 4. ***முறித்தல்;*** to shiver into pieces, smash ''கதவெறியாச் சிவந்துராஅய்'' (புறநா.4,10). 5. ***பறித்தல்;*** to pick, as flowers. ''எறியார் பூங்கொன்றையினோடும்'' (தேவா.189,5). 6. ***அழித்தல்;*** to destroy. ''குறும்பெறிந்தன்று'' (பு.வெ.1,8). 7. ***அடித்தல்;*** to beat, as a drum ''சிறுவரை நின்றே யெறிப பறையினை'' (நாலடி.24). 8. ***அறைதல்;*** to drive, as a nail. ''பொன்னெறிந்த நலங்கிளர் பலகையொடு'' (புறநா.15). 9. ***கொடுக்காற் கொட்டுதல்;*** to sting, as a scorpion ''விடத்தே ளெறிந்தா லேபோல'' (திவ். நாய்ச்.3,6). 10. ***ஒதுக்கிவிடுதல்;*** to reject, brush aside, as advice 11 ***உண்ணாமல் நீக்கிவிடுதல்;*** to leave uneaten, said of part of food ஏன் சோற்றை யெறிகிறாய்? 12. ***ஓட்டுதல்;*** to drive off, scare away, as birds

from corn "கிளியைச் செப்பேந்திள முலையா ளெறிசீ பர்ப்பதம்" (தேவா.1148,7). 13. *வெல்லுதல்;* to throw into the shade, outvie "மின்னெறிசெஞ்சடைக் கூத்தப்பி ரான்" (திருக்கோ.49). 14. *கொள்ளையிடுதல்;* to rob, plunder, sack, pillage 15. *பொழிதல்;* to shower, as rain. "நீர் கல்குறைபட வெறிந்து" (பரிபா.20,1). 16. *செறித்தல்;* to fasten as a ring on an elephant's tusk "யானைவான்மருப் பெறிந்த வெண்கடை" (புறநா. 39,2). 17. *நுகர்வித்தல்;* to cause to experience. "எச்சத்துளாயினு மஃதெறியாது விடாதேகாண்" (கலித்.149) 18. *சீறுதல்;* displease irritate, insult எறிசொல்லாகச் சொல்லுகிறான் (வின்.). 19. *தெறித்தல்;* to finger the string of a musical instrument as a Yāl. "குறுநரம் பெறிவுற்றெழுவு யாழ்" (கம்பரா.சித் திர.28).

*[எறு → எறி.]*

**எறி²-தல்** *eri,* 4 செ கு வி. (vi) 1. *காற்று வீசுதல்;* to blow, as the wind "ஊதை யெறிய வொசிபூங் கொடியொப்பார்" (கம்பரா.நகர்நீ.98). 2. *அலையெறிதல்;* to surge, as waves of the sea "எறியு நேமிசூ ழுலகத்து" (கந்தபு.அவைபுகு 114) 3. *இரையைப் பாய்ந்தெடுத்தல்;* to pounce or dart upon, as a bird on its prey. "எறிபருந்துயவும்" (அகநா.81). 4. *உதைத்தல்;* to kick கழுதை எறிகிறது.

ம. எறி; க. இரி, கோத. எய்ரல்; துட. ஈர்க்; தெ. ஏடு; கட. எய்; கோண். ஏரிசுதானா

*[எறு → எறி.]*

**எறி³-தல்** *eri,* 2.செ.குன்றாவி. (vt) 1, *இடித்துரைத்தல்;* to rebuke "தெவ்வர்போலத் தீதறவெறிந்தும்" (சீவக. 1895). 2 *தடவுதல்;* to stroke, pat "தாய்தன் கையின்... குறங்கின் எறிய ... துஞ்சும்.... குழவி போல" (சீவக.930).

*[எல் → எறு → எறி.]*

**எறி⁴** *eri,* பெ. (n) 1 *வீச்சு;* throw, fling ஓர் எறியில் விழச்செய்தான் 2. *உதை;* kick 3 *அடிக்கை;* blowing as the wind "சூறை மாருதத் தெறியது வளியின்" (திருவாச.3,11). 4. *குறிப்பாகச் சொல்லுகை;* hint, allusion, insinuation, innuendo ஓர் எறி எறிந்து வைக்க வேண்டும். (யாழ்ப்.).

ம. எறி.

*[எறு - எறி.]*

**எறி⁵-த்தல்** *eri,* 4.செ.கு.வி. (vi) 1. *ஒளி வீசுதல்;* to shine, to glitter. "காட்டுக் கெறித்த நிலா" (தமிழ்நா.237). 2. *தைத்தல்;* to nail, fasten with nails, pin. "மாண்டவெ றித்த படைபோல்" (கலித் 94) 3. *உறைத்தல்;* to irritate, suffocate, as smoke, to affect "வாடுக... நின் கண்ணி... நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே" (புறநா.6). 4. *பரத்தல்;* to spread "உணர்வுசென் றெறித்தலானும்" (சீவக 380).

ம. எறிக்குக.

*[எல் → எறு → எறி. எல் = ஒளி, கதிரவன். இல் → எல் = குத்துதல்; தைத்தல், செறித்தல்.]*

**எறிகண்** *erikan,* பெ. (n) *ஓரப்பார்வை;* side-glance, flirting glance. (சேரநா.).

ம. எறிகண்ணு.

*[எறி + கண்.]*

**எறிகண்ணன்** *erikannan,* பெ. (n) 1. *சினப்பவன்;* one who frowns, an angry man 2. *உற்று நோக்குபவன்;* one who ogles, (சேரநா.).

ம. எறிகணணன்.

*[எறி + கண்ணன்.]*

**எறிகால்** *eri-kāl,* பெ. (n) *மோதுங் காற்று;* violent wind

*[எறு → எறி + கால்.]*

**எறிகாலி** *eri-kāli,* பெ. (n) *உதைகால்மாடு, பால்கறக்கும் போது உதைக்கும் மாடு;* cow that kicks.

*[உதை + காலி . கால் + இ - காலி = காலுடையது.]*

**எறிச்சலூர்மலாடனார்** *ericcalūrmalāḍanār,* பெ. (n.) *கடைக்கழகக்காலப் புலவர்களு ளொருவர்;* bard of Sangam age

*[இறைச்சல் + ஊர் - இறைச்சலூர் → எறிச்சலூர் = மழைச்சாரல் மிகுந்த ஊர் மலை + நாடன் + ஆர். மலை நாடனார் → மலாடனார். மலைநாடு → மலாடு (மரூஉ).]*

**எறிப்பு** *erippu,* பெ. (n.) 1. *ஒளிர்வு;* lustre, brightness, glitter. "எறிப்பொழிந்தாங் கருக்கன் சுருக்கி' (திருக்கோ.218). 2 *கடுவெயில்* (வின்.); hot sun.

ம. எறிப்பு.

*[எல் → எரி → எறி → எறிப்பு.]*

**எறிபடு-தல்** *eri-padu-,* 20.செ.கு.வி. (v.i.) *ஒதுக்கப்படுதல்;* to be rejected, cast off. எறிபட்ட பொருள்.

*[எறி + படு (து.வி.).]*

**எறிபடை** *eri-padai,* பெ (n.) *வீசும் கொலைக்கருவி, கைவிடுபடை;* missile "ஆன்றமை யெறிபடை யழுவத்து" (கம்பரா.கரன்வதை.52).

*[எறி + படை. படை = படைக்கலம், கொலைக்கருவி.]*

**எறிபத்தநாயனார்** *eri-patta-nāyanār,* பெ. (n) *அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்* (பெரியபு.); canonized Saiva saint, one of 63.

*[எறி + பத்தன் + நாயனார்.]*

**எறிபாவாடை** *eri-pā-vādai,* பெ. (n.) *தெய்வங்களுக்கு முன்னும் பெரியோர் முன்னும் வீசும் பாவாடை விருது* (கோயிலோ.88); cloth waved before an idol or a great person, as an act of reverence.

*[எறி + பாவாடை. பா + ஆடை - பாவாடை = விரித்த ஆடை.]*

**எறிமணி** *eri-mani,* பெ. (n) ***கொட்டி ஒலியெழுப்பும் வட்டத்தகட்டு வெண்கல இசைக்கருவி*** (பிங்); gong for striking the hours, also used in temples in daily worship

*[எறி + மணி.]*

**எறியாலம்** *eriyālam,* பெ. (n.) ***எண்ணெய் எடுக்க உதவும் மீன் வகைகளுளொன்று;*** a kind of fish from which oil is extracted. (சா.அக.).

**எறியீட்டி** *eri-y-itti,* பெ. (n.) ***முனையில் கூர்மையான இரும்பாணியையுடைய நீளக்கம்பு;*** javelin, lance.

மறுவ. குந்தம்.

*[எறி + ஈட்டி - எறியீட்டி.]*

**எறியுப்பு** *eri-y-uppu,* பெ. (n.) ***கல்லுப்பு*** (மூ.அ.); rock-salt

*[எறி + உப்பு - எறியுப்பு = வெட்டியெடுக்கும் உப்பு ]*

**எறிவல்லயம்** *eri-vallayam,* பெ. (n) ***சுற்றிவீசி எறியும் கற்காலக்கருவி, வளைதடி*** (வின்); boomarang, that is hurled opp to குத்துவல்லயம்

*[எறிவல்லயம் என்பது பழந்தமிழர் பயன்படுத்திய ஆத்திரேலிய பூமராங் வளைதடி போன்றது. எறி + வல்லயம் - எறிவல்லயம். வீசியெறிந்து கொல்லும் படைக்கலம் கைவிடுபடை எனப்படும். படைக் கலத்தைக் கையில் இறுகப் பற்றிய வாறே பகையைக் குத்திக் கொல்லும் படைக்கலம் குத்துவல்லயம் (கைவிடாப்படை) எனப்படும்.]*

**எறிவளையம்** *eri-valaiyam,* பெ (n.) ***சக்கரப்படை*** (வின் ); discus, used as a missile

ம. எறிவளயம்

*[எறி + வளையம் - எறிவளையம் வடமொழியாளர் இதனைச் சக்கராயுதம் என்பர் ]*

**எறிவாள்** *erivāl,* பெ. (n.) ***எறிந்து போரிட ஏந்தாக இருக்கும் கருவி;*** a kind of missile. (சேரநா.).

ம. எறிவாள்.

*[எறி + வாள் ]*



எறிவாள்

**எறும்பி**[1] *erumbi,* பெ. (n.) ***எறும்பு;*** ant "எறும்பி யளையற் குறும்பல் சுனைய" (குறுந்.12).

ம. எறும்பு, உறும்பு, க. இறுபு, எறுப

*[எல் → எறு → எறும்பு → எறும்பி.]*

**எறும்பி**[2] *erumbi,* பெ. (n.) ***யானை*** (திவா.); elephant.

*[இறும்பு → எறும்பு → எறும்பி. இறும்பு = வலிமை.]*

**எறும்பு** *erumbu,* பெ. (n.) ***நான்கு சிறகுகளை யுடைய புழுபூச்சியினப் பிரிவில் ஓயாது உழைப்பில் இருக்கும் ஓர் சிற்றுயிரி;*** ant, emmet. "எறும்புமூசா விறும்பூது மரபின்... பலி" (பதிற்றுப்.30,38).

ம. எறும்பு, க. இறும்பெ, இருவெ; குட. உருபீ; பட. இறுப்பு.

*[எல் → எறு (தாக்குதல், கொட்டுதல், கடித்தல்) எறு → எறும்பு.]*

**எறும்புப் புற்று** *erumbu-p-purru,* பெ. (n) ***எறும்பி னிருப்பிடம்;*** ant-hill, habitation of ants. (சா.அக.).

*[எறும்பு + புற்று.]*

**எறும்பு விழுங்கி** *erumbu-vilungi,* பெ (n) ***எறும்பை விழுங்கும் ஒருயிரி;*** ant eater. (சா.அக.).

ம. எறும்பு தீனி.

*[எறும்பு + விழுங்கி.]*

**எறுழ்** *erul,* பெ (n) 1 ***வலிமை;*** strength, might "சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி" (தொல் சொல் 388, உரை ) 2 ***மரத்தண்டு*** (தண்டாயுதம்) (பிங்), club 3 ***தூண்*** (அக நி ), pillar, post 4 ***செந்நிறப் பூவுடைய குறிஞ்சிநிலத்து மரவகை;*** hill tree with red flowers "காலெறுழொள்வீ" (ஐங்குறு.308).

ம. எறுள்.

*[உறு → எறு → எறுழ். எறுழ் = வலிமை, திண்மை ]*

**எறுழ்வலி** *erul-vali,* பெ. (n) 1 ***மிகுந்த வலிமை;*** great strength. "இரும்பினாற் பின்னியன்ன வெறுழ்வலி முழவுத் தோளார்" (சீவக.785). 2. ***மிக்க வலியுடையோன்;*** mighty hero "எறுழ்வலி யுரைத்த மாற்றம்" (சீவக.1723).

*[உறு → எறு → எறுழ் + வலி - எறுழ்வலி = எறுழ்மரத்தை போன்ற வலிமை.]*

**எறுழம்** *erulam,* பெ. (n) ***எறுழ்*** பார்க்க; see *erul.* "எரிபுரை யெறுழம்" (குறிஞ்சிப்.66).

*[எறுழ் → எறுழம். எறுழம் = எறுழ் மரம் ]*

**எறுழி** *eruli,* பெ. (n) ***பன்றி;*** pig "காதெயிற் றெறுழிவேந் தன்" (திருவிளை.பன்றி முலை.26).

*[உறு → எறு → எறுழ் → எறுழி (தாக்கிக் கொல்லும் இயல்புடைய பன்றி).]*

**எறே** *erē,* இடை. (part) ***இறே*** பார்க்க; see *irē.*

*[இறே → எறே.]*

**எறைக்கான்** *eṟaikkāṉ*, பெ. (n.) *துன்பம் நேரும் பொழுது தப்பி ஓட ஏதுவாக இருக்கும் எலிவளையி லுள்ள கள்ளவழி;* escape place in a rat-hole

*[இறை → எறை + கால் - எறைக்கால் → எறைக்கான் (கொ.வ.) இறை = தங்குதற்கான பொந்து ]*

**என்**[1] *eṉ*, கு.வினா (inter adv) *என்ன;* Why, wherefore? நீ வந்ததென்? - இடை. (int.) *ஓரிகழ்ச்சிக் குறிப்பு* (பிங்); exclamation expressive of contempt - இடை. (part) *எது அல்லது எதையெனப் பொருள்படும் இடைச்சொல்;* particle having the force of whatever, whichever. "என்னுடைய ரேனு மிலர்" (குறள்.430).

ம. என்.

*[எவன் → என்.]* .

**என்**[2] *eṉ*, பெ (n) *வெளிப்பட்ட தவசக் கதிர்;* grown corn.

தெ. என்னு.

*[எல் → என் = வெளிப்படுதல், மேலுயர்தல். பொதிதோகையி லிருந்து பூட்டையாய் வெளிப்பட்ட தவசக் கதிர்.]*

**என்**[3] *eṉ*, பெ. (n) 1. *தன்மை ஒருமையின் வேற்றுமை யடி* (நன்.331); oblique form of the 1st per sing. pron. நான் or யான். 2 *ஓர் அசை* (யாப்.74,உரை.); expl ending in nilai-mandila-āśiriyappā

ம. என; க. என், என்று, யென், நன், கோத. என், துட. என்; குட. என்; து. என், என; தெ. நா, நன்; கொலா. அன்; நா. அன், பர். அன், கட. அனு; கோண். நா; கூ. நா; குவி. நா; குரு. எங்க; மால். என்க; பிரா. கன்

*[நான் → நன் → அன் → என்.]*

**என்(னு)-தல்** *eṉ(ṉu)-*, 14.செ.குன்றாவி. (vt) *என்று சொல்லுதல்;* to say, utter, express "என்னா மரபின வெனக்கூறுதலும்" (தொல்.சொல்.422).

க. அன்னு; படட. என்னு; தெ. அனு.

*[அல் → எல் → என் → என்னு = நாக்கூட்டிக் குரலுயர்த்திப் பேசு. அல்லுதல் = பின்னுதல், முடைதல், பொருத்திப் பேசுதல் ]*

**என்கை** *eṉgai*, பெ. (n) *என்று சொல்லுகை;* saying that. "அகிலமெல்லா மவனென்கை" (கந்தபு.மேடு.26).

*[என் → என்னுதல் = பேசுதல். என்னு + கை = என்னுகை → என்கை.]*

**என்ப**[1] *eṉba*, பெ. (n.) *என்று சொல்வன;* what are said to be; being said that. "எண்ணென்ப வேனை யெழுத் தென்ப" (குறள்.392).

*[என் + ப - என்ப. என்பர் என்பதன் கடைக்குறை. 'அர்' பலர் பாலீறு. 'ப' பலர்பாலீறு என்பது பொருந்தாது.]*

**என்ப**[2] *eṉba*, இடை. (part.) *அசைச்சொல்* (தொல். சொல்.298,உரை.); expletive

*[என் + ப - என்ப. இசைநிறைக்கும் சொல்லாகவந்து அசைச் சொல்லாயிற்று.]*

**என்பது** *eṉbadu*, இடை (part) 1. *நன்றுரைத்தற்கண் ணும் இழித்தற்கண்ணும் வரும் அசைநிலை* (தொல். சொல் 280,சேனா ); expletive word used to express either approval or disapproval of a statement. 2. *சார்ந்து நின்று சொல்லின் பொருளை யுணர்த்தும் பிரிவில் அசைநிலை* (தொல் சொல் 282,உரை ), expletive word used as an adjunct and having more attributive force

*[என் + ப் + அது - என்பது தொடரில் பொருள் நிறைக்கும் சொல்லசையாக வந்து அசைநிலை யாயிற்று ]*

**என்பவன்** *eṉbavaṉ*, பெ. (n) *என்பான்* பார்க்க; see *eṉbāṉ*.

*[என் + ப் + அவன் - என்பவன் ]*

**என்பான்** *eṉbāṉ*, பெ (n) 1. *என்று சொல்பவன்;* he who says "வள்ளுவ னென்பானோர் பேதை." (வள்ளுவமா 8). 2 *என்று சொல்லப்படுபவன்;* he who is said to be. "இல்வாழ்வா னென்பான்" (குறள்.41).

*[என் + ப் + அவன் = என்பவன் → என்பான் ]*

**என்பி**[1]**-த்தல்** *eṉbi-*, 4.செ குன்றாவி. (vt) *சொல்லச் செய்தல்;* to make one speak or prove, as a statement. அதை அவன் வாயினாலே என்பிப்பேன் (யாழ்ப்.).

தெ. அனிபின்க.

*[என் → என்பி = சொல்லச்செய், வெளிப்படுத்து.]*

**என்பி**[2]**-த்தல்** 4.செ.குன்றாவி. (vt) *புகழ்பெறுதல்;* to cause to be known, to proclaim "என் சொல்லால் யான்சொன்ன இன்கவி யென்பித்து" (திவ்.திரு வாய்.7,9,2)

*[என் → என்பி (சொல்லச் செய், புகழ்) ]*

**என்பியல்** *eṉbiyal*, பெ. (n) *எலும்பின் இயல்புகளைப் பற்றிக்கூறும் நூல்;* that branch of science which treats of the nature of bones and bony tissues - Osteology. (சா.அக.).

*[என்பு + இயல் - என்பியல்.]*

**என்பிலி** *eṉbili*, பெ. (n.) *புழு* (நாமதீப.); worm devoid of bones. "என்பிலதனைவெயில் போலக் காயுமே" (குறள்.77).

*[என்பு + இலி - என்பிலி. இல்லி → இலி (இல்லாதது).]*

**என்பு**[1] *eṉbu*, பெ. (n) 1. *எலும்பு;* bone. "என்பு நைந்துருகி" (திருவாச.4,80). 2. *உடம்பு;* body. "ஆரு யிர்க் கென்போ டியைந்த தொடர்பு." (குறள்.73).

ம. எலிம்பு, எலும்பு, க. எலும்பு; குட. எலிம்பி; தெ. எம்மு, எம்முக.

*[எல் + பு - என்பு. 'பு' பண்புப் பெயரீறு.]*

**என்பு**[2] *eṉbu*, பெ. (n.) *புல்* (அக.நி.); grass.

**என்பு**[3] *eṉbu*, பெ. (n.) *புலி;* tiger. (ஆ.அக.).

**என்மனார்** *eṉmaṉār*, பெ. (n.) *என்று சொல்லுவார்;* it is said so. "கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்" (இறைய-1).

*[என் + மன் + ஆர் - என்மனார். என் = பேசுதல். மன் - அசைநிலை. 'ஆர்' பலர்பாலீறு.]*

**என்ற** *eṉṟa,* இடை. (part) ***ஓர் உவம வாய்பாடு;*** adjectival expression signifying comparison. வாயென்ற பவளம் (தொல்.பொருள்.286,உரை).

*[என் - என்ற (பெ.எ) எனக் கூறப்பட்ட என்னும் சொல்லாட்சி ஒத்த தன்மைக்காகி உவம வாய்பாட்டு இடைச் சொல்லா யிற்று.]*

**என்றவன்**[1] *eṉṟavaṉ,* பெ. (n.) ***கதிரவன்;*** sun. "என்றவன் மதலையேவும்" (பாரத பதினே 102).

*[எல் → என்று → என்றூழ் + அவன்.என்றூழவன் → என்றவன். எல் = ஒளி. என்றூழ் = வெயில், பகல். தெ. எண்ட (வெயில்) என்றூழவன் → என்றவன் (கொ.வ.).]*

**என்றவன்**[2] *eṉṟavaṉ,* பெ. (n) ***என்று கூறியவன்;*** one who said so

*[என்ற + அவன் - என்றவன்.]*

**என்றா** *eṉṟā,* இடை. (part) ***ஒரெண்ணிடைச்சொல்;*** numerical connective particle "ஒப்பிற் புகழிற் பழியி னென்றா" (தொல்.சொல்.73).

*[என்று → என்றா (என்றாகின்ற).]*

**என்றால்** *eṉṟāl,* இடை (conj) 1. ***என்று சொல்லின்;*** if (it is) said so 2. ***ஆனால்*** (அப்படி); if (it is) so

ம. என்னால்; க. எந்தரெ; தெ. ஐதெ; பட. எந்தலெ.

*[என்று + ஆல்]*

**என்றாலும்** *eṉṟāl-um,* இடை (conj.) 1. ***என்று சொன்னா லும்;*** though (it is said so). 2. ***ஆயினும்;*** though (it is so), notwithstanding "உடலு நடுங்காநின்றா ரென்றா லும்" (கம்பரா.தைல 71).

ம. என்னாகிலும; என்னாலும.

*[என்று + ஆல் + உம்.]*

**என்றிசினோர்** *eṉṟiciṉōr,* பெ. (n) 1. ***என்று சொன்ன வர்;*** it is said so 2. ***என்று சொல்வோர்;*** those would say so

*[என்று + இசின் + ஓர் - என்றிசினோர். 'இசின்' துணைவினை யாகி இடவழக்கு வேறுபாடுகளால் இறப்பும் எதிர்வும் சுட்டி வருதலும் அசைநிலையாக வருதலும் உண்டு.]*

**என்றிய** *eṉṟiya,* கு.வி.எ. (adv) 1 ***எதற்காக*** (ஈடு 7,9,2); what for. 2. ***எப்படி;*** in what way, how, by what means "என்றிய வென்னில்" (ஈடு 4,10,11).

*[என்று → என்றிய.]*

**என்று**[1] *eṉṟu,* இடை. (part) 1. ***என்று சொல்லி;*** relative part. ending a quotation and connecting it with the following part of the sentence 2 ***வினை, பெயர், குறிப்பு, இசை, பண்பு எண் என்ற பொருள் பற்றி வரும் இடைச்சொல்*** (தொல்.சொல் 261,உரை.நன். 424); in special or elliptical constructions, in which it is used as a connective part (a) between verbs, as in "நரைவரு மென்றெண்ணி" (நாலடி.11). (b) between a noun and a pronoun, as in பாரியென் றொருவனுளன். (c) between an onom. word and verb, as in திடீரென்று வந்தான். (d) between an abstract noun and a verb, as in பச்சென்று பசந்தது (e) between words defining things enumerated, as in நிலனென்று நீரென்று. (f) between an imitative sound and a verb, as in ஒல்லென் றொலித்தது. 3. ***ஒரு சொல்லசை;*** expletive கலியாணத் துக்கென்று பணம் வைத்திருக்கிறேன்.

ம. எனனு; க. இந்து, பர். என், எத்த.

*[என் → என்று.]*

**என்று**[2] *eṉṟu,* பெ. (n) ***எந்த நாள்;*** what day, when, what time. "இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னா து" (நாலடி.36).

ம. என்னு, க., பட. எந்து; கோத. எந்த்; துட. எத்வின்; குட. எக்க; து. ஏனி; தெ. எபுடு, எப்புடு, என்னடு; பர். எதாட், எத்தெல்; கட. எசென்ட; கொண். எசன்; கூ. எசெக; குவி. எசெல்; குரு. எகாகெ

*[எ + ஞான்று - எஞ்ஞான்று → என்று . ஞான்று = பொழுது.]*

**என்றும்** *eṉṟum,* பெ. (n) ***என்றைக்கும்*** பார்க்க; see *eṉṟaikkum.* "என்றுந்தான் இவ்வகையே இடர் செய்கின் றீர்" (அப்-தேவா).

ம. என்னுகம், க. எந்தும்.

*[எஞ்ஞான்றும் → என்றும்.]*

**என்றுமின்மை** *eṉṟumiṉmai,* பெ (n) ***ஒரு போதுமில்லா மையைத் தெரிவிக்கும் இன்மை*** (சி.சி அளவை.1, மறைஞா), negation of an impossible thing as in the hare has horns never existing

*[என்று + உம் + இன்மை.]*

**என்றூழ்** *eṉṟūḻ,* பெ. (n.) 1. ***கதிரவன்;*** sun. "என்றூழ்மா மலை மறையும்" (குறுந்.215). 2. ***வெயில்;*** sunshine. "என்றூழ் நின்ற குன்றுகெழு நன்னாட்டு" (சிலப்.14, 121). 3. ***கோடைக் காலம்;*** summer. "என்றூழ் வாடுவ றல்போல" (புறநா.75). 4. ***காற்று*** (அக.நி.); wind.

*[என்றூழ் = ஒளி, வெப்பம் மிகுந்த கதிரவன், பகல், வெயில். எல் + ஊழ் - எல்லூழ் → என்றூழ். எல் = ஒளி, கதிரவன். ஊழ்த்தல் = மிகுதல், அதிகரித்தல். 'ற்' எழுத்துப்பேறு.]*

**என்றைக்கு** *eṉṟaikku,* கு.வி.எ. (adv) ***எந்நாள்;*** what day, when. "அல்லலொழிவ தென்றைக்கு" (தாயு.பரா. 305).

க. யாவாக, ஆவாக, பட. ஏகுவ.

*[என்று → என்றை + கு]*

**என்றைக்கும்** *eṉṟaikkum,* கு.வி.எ (adv.) 1. ***எக்காலத் தும்;*** (with affirmative verb) for ever; always. 2. ***ஒரு நாளும்;*** (with negative verb) even a day. 3. ***ஒரு பொழுதும்;*** even once, at any time.

ம. என்னேக்கும்; க. எந்திகூ, பட. ஏகூ.

*[என் → என்று → என்றை + கு + உம்.]*

**என்ன**[1] *eṉṉa,* வி.பெ (inter pron.) 1. ***யாது?*** What. 2. ***என்ன பயன்;*** tenseless verb signifying what avail.

"என்ன போதித்தும் என்ன" (தாயு.தேசோ.7). 3. ***எத்தகைய;*** of what kind (சு.வி.84).

ம. என்ன, க. எந்தா, என்ன, **கோத.** என, **துட.** இன்; **குட.** என்னதெ, என்தெ; **து.** எஞ்சி; **தெ.** ஏகி, ஏலாகி; **கொலா.** எண்டோவ்; **பர்.** எத்னி, பட. ஏன.

*[என் → என்ன]*

**என்ன**[2] *enna,* இடை. (part) ***ஓர் உவம உருபு;*** sign of comparison "அடித்தேரல ரென்ன வஞ்சுவ னின் னைய ரென்னின்" (திருக்கோ.216)

*[அன்ன → என்ன]*

**என்னணம்** *ennanam,* கு.வி.எ. (adv) ***எவ்வகையாக;*** how, in what manner. "என்னணஞ் சென்றனள்" (திருக்கோ.231).

*[என்ன + வண்ணம் - என்ன வண்ணம் → என்னணம்.]*

**என்னது** *ennadu,* சு.பெ. (pron) ***எது;*** what. நீ என்னது சொல்கிறாய் (செ அக.).

ம. என்னது.

*[என் + அது = என்னது (எத்தகையது)]*

**என்னதும்** *ennadum,* கு.வி.எ. (adv) ***சிறிதும்;*** even a little "என்னதூஉம் கடிமரந் தடிதலோம்பு" (புறநா 57).

*[என் → எனை → எனைத்து → எனைத்து + உம் - எனைத்தும் → என்னதும்]*

**என்னர்**[1] *ennar,* சு.பெ. (pron) ***யாவர்;*** who?. "அருந்தொடைச் சித்திர மதனை யென்னரே யளந்தறி பவர்." (இரகு.திக்கு.196).

*[என் → என்னர்.]*

**என்னர்**[2] *ennar,* கு.வி.எ. (adv.) ***சிறிதும்;*** even a little. "என்னருங் கருதான்" (பெருங்.நரவான.2,41).

*[என் → (எனை) → எனையல் → என்னல் → என்னர் + உம்.]*

**என்னவன்**[1] *ennavan,* வினாசு.பெ (inter pron) 1. ***யாவன்;*** who? 2. ***எப்படிப்பட்டவன்;*** what kind of a man "நீத்தோ ரென்னவர் தங்கட்கேனும்" (கந்தபு. கிரவுஞ்.4).

*[எவன் → என்னவன்.]*

**என்னவன்**[2] *en-n-avan,* பெ. (n.) ***எனக்குரியவன் எனக்குற்றவன்;*** one who is mine; my friend "என்ன வன்ன கைப்பூண் மார்பகஞ் சேரக்கருது" (மறைசை.94).

*[யான் → என் + அவன்.]*

**என்னன்** *ennan,* பெ. (n.) ***என்னவன்***[1] பார்க்க; see *ennavan.* "என்ன னெவ்விடத்தன்" (இரகு.யாக.96). (வே.க.104).

*[என்னவன் → என்னன்.]*

**என்னாங்கு** *en-n-āngu,* கு.வி.எ. (adv.) ***என்னிடத்து;*** to me, let., to my place. "என்னாங்கு வாரா தோம்பினை' (கலித்.23).

*[என் + ஆங்கு - என்னாங்கு.]*

**என்னுக்கு** *ennukku,* வி.எ. (adv.) ***எதற்கு;*** What for? "என்னுக் கின்னும் பெருக்கினறதே" (திருக்கோ.121).

*[ஏன் → என் → என்னு + கு.]*

**என்னுங்காட்டில்** *ennun-kāttil,* இடை (conj) ***என்பதைக்காட்டிலும்*** (ாடு ); more than saying that

*[என் → என்னுதல் = சொல்லுதல். என்னும் + காட்டில் - என்னுங்காட்டில் (கொ.வ ) காண்கிலும் → காண்டிலும் → காட்டிலும் → காட்டில்.]*

**என்னும்**[1] *en-n-um,* பெ. (n) ***என்று சொல்லப்படுவது;*** thus called, known as, such, that (சேரநா.).

ம. என்னும்.

*[என் + உம் - என்னும் (கு.வினையா.பெ.)]*

**என்னும்**[2] *en-n-um,* கு.வி எ (adv) 1. ***யாவும்*** (குறள்.430,உரை.); all 2. ***சிறிதும்;*** even a little "என்னு மிமையாள்" (சீவக 1658).

*[இல் → இல்லும் → இன்னும் → என்னும். இல் = சிறிது. எல் = எழுதல், உயர்தல், பெருகுதல், நிறைதல், எல்லாம்.]*

**என்னென்ன** *ennenna,* கு.வி எ. (adv) ***எதுயெது, எவையெவை;*** Whatever உமக்கு என்னென்ன வேணும்?

**தெ.** ஏதைனா.

*[என்ன + என்ன.]*

**என்னே** *ennē,* இடை. (int.) 1. ***என்ன;*** what? 2. ***ஓர் வியப்பு விரக்கக் குறிப்பு;*** what, an exclamation of pity, wonder or surprise "என்னேயெனே கருணை விளையாட்டிருந்தவாறு" (தாயு.எங்குநிறை.2).

**ம.** என்னே; **க.** எண்ட, **தெ.** எவிதி.

*[என் + ஏ - என்னே. 'ஏ' வினா, வியப்பிடைச்சொல்.]*

**என்னை**[1] *ennai,* பெ. (n.) 1. ***என் தந்தை;*** my father; "என்னைக்குக் கலத்தொடு செல்வதோ" (கலித்.108). 2. ***என் தலைவன்;*** my master, my lord. "நிரையொடுவருஉ மென்னைக்கு" (புறநா.262). 3. ***என் தாய்;*** my mother. "நின்னெஞ்ச மென்னை நெஞ்சாகப் பெறின்" (கலித்.107)

*[என் + ஐ - என்னை. என் = என்னுடைய. ஐ = தலைவன், தந்தை, தாய்.]*

**என்னை**[2] *ennai,* வி.பெ. (inter.pron) ***என்ன***[1] பார்க்க, see *enna*[1].

*ம. என்னே; **க.** என்னம், நன்னன்னு; **கோத.** என்னே; **து.** எனன்; **தெ.** நன்னு, நனு, நன்; **நா.** ஆனான்; **கூ.** நன்னு.*

*[என்னே → என்னை. 'ஐ' சொல்லாக்க ஈறு.]*

**என்னோ** *ennō,* இடை. (int.) ***என்னே*** பார்க்க; see *ennē.*

ம. என்னோ.

*[என்னே → என்னோ.]*

**என்னோரும்** *eṉṉōrum*, பெ. (n.) 1. ***எத்தன்மையோரும்;*** persons of whatever kind. 2. ***எல்லாரும்;*** all persons ''என்னோருமறிய வெடுத்துரைத்தன்று'' (பு.வெ. 9,6,கொளு.).

*[என் → என்னர் (எத்தகையர்) → என்னோர் + உம்.]*

**என** *eṉa*, இடை. (part.) 1. ***என்று***[1-2] பார்க்க; see *eṉṟu*[1-2]. (தொல்.சொல்.260). 2. ***ஓர் உவமவுருபு;*** a sign of comparison. புலியெனப் பாய்ந்தான். (உ.வ.).

ம. என.

*[என் → என.]*

**எனது** *eṉadu*, பெ. (n.) ***என்னுடையது;*** mine.

*[என் + அது - எனது. 'அது' ஆறன்உருபு.]*

**எனவ** *eṉava*, பெ. (n) ***என்னுடையவை;*** mine, elliptical equivalent to 'my' with a substantive supplied from the context. ''எனவ கேண்மதி'' (புறநா.35).

*[என் + அவை - எனவை.]*

**எனவே** *eṉavē*, இடை. (conj) 1. ***அவ்வாறு சொன்னதால்;*** when it was so said; therefore. 2. ***போல; ஒன்றை ஒத்திருப்பது;*** just like.

ம. எனவெ, எனவே.

*[என + ஏ - எனவே. 'ஏ' தேற்றேகாரம்.]*

**எனா** *eṉā*, இடை. (part.) ***ஒரெண்ணிடைச்சொல்*** (நன்.428); connective of things enumerated as in நிலனெனா நீரெனா.

*[என் → என்றா → எனா.]*

**எனாது** *eṉādu*, பெ. (n) ***எனது*** பார்க்க; see *eṉadu*.

*[என் + அது - எனது → எனாது. அது → ஆது என நெடு முதலாகியது செய்யுள் திரிபு.]*

**எனில்** *eṉil*, இடை. (conj.) ***என்று சொன்னால்;*** if it is said so.

*[என் + இல் - எனில். 'இல்' இடப் பொருளில் வந்த பொருள் நிறைச் சொல்லீறு. எனில் = என்று கூறிய விடத்து.]*

**எனின்** *eṉiṉ*, இடை. (conj) 1. ***என்று சொல்லின்;*** if (it is ) said so 2. ***என்கையால்;*** in consideration of. ''அவையவை முனிகுவமெனினே'' (பொருந.107).

*[என் + இல் - எனில் → எனின். இல் → இன் (திரிபு).]*

**எனினும்** *eṉiṉum*, இடை (conj) 1. ***என்ற சொல்லினும்;*** even if (it is said so) 2 ***ஆனாலும்;*** even if (it is so); nevertheless. ''யாவரே யெனினும்'' (கந்தபு.அரசு.5).

*[என் + இன் + உம்.]*

**எனும்**[1] *eṉum*, கு.வி.எ. (adv.) ***சிறிதும்;*** even a little. ''வழுவெனும் பாரேன்'' (சிலப்.16,69).

*[இன்னும் → என்னும் → எனும். இல் → இன் (சிறிது).]*

**எனும்**[2] *eṉum*, கு.வி.எ. (adv.) ***என்கின்ற;*** known as, said as.

ம. எனும்.

*[என் → என்னும் → எனும்.]*

**எனை**[1] *eṉai*, கு.வி.எ. (adv.) ***என்ன, எந்த, எத்தகைய;*** what, why

*[என் → எனை.]*

**எனை**[2] *eṉai*, கு.பெ.எ. (adj) ***எல்லாம்;*** all. ''சுட்டுணர் வெனப்படுவ, தெனைப் பொருளுண்மைகாண்டல்'' (மணி.27,62) - கு.வி.எ. (adv.) ***எவ்வளவு;*** however much. ''எனைப்பகை யுற்றாரும்'' (குறள்.207).

*[அல் → அனை → எனை.]*

**எனைத்து**[1] *eṉaittu*, கு.வி.எ. (adv.) ***எனை***[2] பார்க்க; see *eṉai*[2]. ''எனைத்துள கேட்பன துன்பம்'' (கம்பரா. பள்ளி.60). ''எனைத்து நினைப்பினும் காயார்'' (குறள்.) (வே.க.105).

*[அல் → அனை → அனைத்து.]*

**எனைத்து**[2] *eṉaittu*, வி.பெ. (inter.pron.) ***எத்தன்மைத்து*** (யாழ்.அக ); of what kind?

*[எ → என் → எனை → எனைத்து.]*

**எனைத்துணை** *eṉai-t-tuṇai*, வி.எ. (adv ) ***எவ்வளவு;*** how much. ''எனைத்துணை'' (குறள்.144).

*[எனை + துணை - எனைத்துணை.]*

**எனைத்தும்** *eṉaittum*, பெ. (n ) ***முழுதும்;*** all the whole. ''சூர்கிளை யெனைத்தும் பொன்றும்'' (கந்தபு.மேரு.78).

*[அல் → எல் → என் → எனை → எனைத்து + உம்.]*

**எனைப்பல** *eṉai-p-pala*, கு.பெ.எ. (adj.) ***எத்தனையோ பல;*** how many, very many எனைப்பல தீர்த்தங்கட்கும் (திருவிளை.தீர்த்த.11).

*[எல் → என் → எனை + பல.]*

**எனையதும்** *eṉaiyadum*, கு.வி.எ. (adv.) ***சிறிதும்;*** even a little ''நினையாது கழிந்த வைக லெனைய தூஉம் வாழலென்'' (அகநா.29).

*[இல் → எல் → என் → எனை + அது + உம்.]*

**எனையவன்** *eṉaiyavaṉ*, சு.பெ. (pron ) ***எனைவன்*** பார்க்க; see *eṉaivaṉ*.

**எனையன்** *eṉaiyaṉ*, சு.பெ. (pron.) ***எனைவன்*** பார்க்க; see *eṉaivaṉ*.

*[எனையவன் → எனையன்.]*

**எனைவர்** *eṉaivar*, சு.பெ. (pron.) ***யாவர்; எனைவராயினும்*** (பெருங்.வத்தவ.3,22); who ever; whatever persons

*[எனை + அவர்.]*

**எனைவன்** *eṉaivaṉ*, சு.பெ. (pron ) ***யாவன்;*** who, what person

தெ. எவர, எவரு.

*[எனை + அவன் - எனையவன் → எனைவன்.]*

# ஏ

**ஏ**[1] *ē*, ***தமிழ் வண்ணமாலையில் எட்டாம் உயிரெழுத்து, முன்னண்ணக் குவியாச் செறிவு உயிர்நெடில்;*** eighth letter and vowel of the Tamil alphabet, the half-close front tense unrounded vowel in Tamil.

*[இஅ → ஏ.]*

அஇ → ஐ ஆகவும், அஉ → ஔ ஆகவும் இருகுறில் கூட்டுயிரொலி உயிர்நெடில்களாக உயிர்பெற்றதைப்போன்று, இஅ → ஏ எனவும் உஅ → ஓ எனவும் கூட்டுயிர் நெடில்கள் தோன்றின. ஒ.நோ. இய = செல். இய → ஏ (ஏகு) = செல். உவ = உவத்தல், மகிழ்வு. உவ → ஓ (ஓசை) மகிழ்வு. ஏ, ஓ என்னும் கூட்டுயிர்கள் இயல்பு வினையடிகளைத் தோற்று விப்பதில்லை இயலுதல் - ஏலுதல் என்றவாறு 'ஏல்' திரிபு வினையடியாதலன்றி இயல்பு வினையடியாகாதென்க ஒரு சார் ஒலிக்குறிப்பு நெட்டெழுத்தாகி ஆக்கச்சொல்லாதலே மிகுதியாம்.

**ஏ**[2] *ē*, பெ. (n) 1. ***உயர்ச்சி;*** height, elevation. 2. ***மேனோக்குகை;*** looking upward. "கார்நினைந் தேத்தரு மயிற்குழாம்" (*சீவக*.87). 3. ***அடுக்கு*** (தொல். சொல்.305.உரை); pile, row, tier, series 4. ***பெருக்கம்;*** increase, abundance, "ஏ பெற்றாகும்" (தொல்.சொல். 305). 5. ***இறுமாப்பு;*** pride, self-conceit, arrogance. "ஏக்கழுத்த நாணால்" (பரிபா.7,55). 6. ***உழையிசையின் எழுத்து*** (திவா.); letter of the 4th note of the gamut usu denoted by ம.

ம., க. ஏ, எத்தர. *L, E* ex, *Gr* ec, ex, exo. *Fr, Sp* ex out (Pf f.) up. out.

*[உ → எ → ஏ.]*

**ஏ**[3] *ē*, பெ. (n) 1. ***எய்யுந்தொழில்;*** shooting, as an arrow "ஏமாண்ட நெடும்புரிசை" (பு வெ.5.5) 2. ***துன்பம்;*** suffering, affliction 3. ***அம்பு;*** arrow. "ஏமுத லாய வெல்லாப் படைக்கலத் தொழிலுமுற்றி" (*சீவக*.370).

*[எய் → ஏ.]*

**ஏ**[4] *ē*, இடை. (part.) 1. ***பிரிநிலையேகாரம்;*** suffix having the force of (a) disjunction, as அவருள் அவனே சொன்னான் வினாவேகாரம், (b) interrogative as நீயே கொண்டாய்; (c) எண்ணேகாரம்; copulative, as. நிலமே நீரே தீயே; (d) தேற்ற வேகாரம்; emphasis, as in அது மெய்யே; (e) ஈற்றசை யேகாரம்; terminative expletive, as சென்னைப் பட்டணத்திலே (இ.வ.). 2. ***இசைநிறை யேகாரம்*** (நன்.432); poetic expletive for completing the metre, as "ஏயே இவளொருத்தி பேடி".

ம., க. ஏ.

*['ஏ' ஒலிக்குறிப்பு நெட்டெழுத்தாயினும் தொடராட்சியில் குறித்த பொருளை வெளிப்படவுணர்த்தும் இடைச்சொல்லாகப் பொருட்பாட்டுப்புடைபெயர்வு பெறுதலான் ஏகாரம் பல்வேறு பொருளுணர்த்துவதாயிற்று பொருளுணர்த்தாத ஏகாரம் இசைநிறை, அசைநிலைகளாகும்.]*

**ஏ**[5] *ē*, இடை. (int.) 1. ***ஒரு விளிக்குறிப்பு;*** exclamation inviting attention. "ஏயெம் பெருமான்" (தேவா.746,7). 2. ***ஓர் இகழ்ச்சிக் குறிப்பு;*** exclamation of contempt.

க., ம. ஏ.

*[ஈ → ஏ, ஒலிக்குறிப்பு, உணர்வு வெளிப்பாட்டு இடைச்சொல் லாயிற்று.]*

**ஏ**[6] *ē*, பெ. (n) ***இரண்டு மாத்திரையளவுள்ள நேரம்;*** measure of time, two mättirais. "ஏ யெனும் மாத்திரத்து எற்றுகின்றிலன்" (கம்பரா.).

*[ஏ - ஒலிக்குறிப்பாகி இரண்டு மாத்திரையளவைக்குறித்தது.]*

**ஏ**[7] *ē*, பெ. (n) ***கருப்பு;*** blackness.

*[இல் → ஏ.]*

**ஏஎ** *ēe*, பெ. (n.) 1. ***இரக்கக்குறிப்பு;*** exclamation of pity. "ஏஎ பாவம்" (*சீவக*.290). 2. ***வடமொழியாளரின் மறையாகிய சாமம்;*** Sama veda

*[ஏ - இரக்கத்தை மிகுவிக்கும் குறிப்புச்சொல் பிற்காலத்தில் மனத்தை நெகிழ்விக்கும் பண்ணோசை குறித்துச் சாம மறைக்கு ஆகுபெயராயிற்று.]*

**ஏஏ** *ēē*, பெ. (n.) ***இகழ்ச்சிக் குறிப்பு;*** interjection denoting displeasure, disapproval, contempt.

*[ஏ → ஏஏ· அடுக்கிவந்த ஒலிக்குறிப்பு உணர்வுவெளிப்பாட்டு இரட்டைக்கிளவியாயிற்று.]*

**ஏக்கப்பேர்** *ēkkappēr*, பெ. (n.) ***புறப்பெயர்;*** bad name, nick name, infamy, ill-fame (சேரநா.).

ம. ஏக்கப்பேறு.

*[ஏக்கம் + பெயர் - ஏக்கப்பெயர் → ஏக்கப்பேர் = வருத்தம் மிகுவிக்கும் பெயர், இழிவுப்பெயர்.]*

**ஏக்கம்** *ēkkam*, பெ. (n) 1. ***விரும்பியது பெறாமையால் வரும் வருத்தம்;*** despondency, depression of spirits. "வானவ ரேக்கமுஞ் சிதைய" (கந்தபு.துணைவர் வரு.30). 2. ***அச்சம்;*** fear, fright, panic "ஏக்கம் ... அமராபதிக்குஞ்செய் மதுராபுரி" (மீனாட்.பிள்ளைத்.77). 3. ***ஆசை;*** craving, eager, desire. 4. ***மனமயக்கம்;*** stupor caused by grief. 5. ***அதிர்ச்சி;*** trembling of the limbs, as in paralytic affections - trepidation. 6. ***திடுக்கிடுதல்;*** sudden fear 7. ***சோர்வு;*** languishing. 8. ***பசி;*** hunger. (சேரநா.).

ம. ஏக்கம்.

*[ஏங்கு → ஏக்கம்.]*

**ஏக்கம்பிடி-த்தல்** *ēkkam-pidi-*, 4.செ.கு.வி. (v.i) ***வருத்த மிகுதல்;*** to be in low spirits; to languish, used impers. மகன் செத்ததினாலே அவளுக்கு ஏக்கம்பிடித்தது (உ.வ.).

*[ஏங்கு → ஏக்கம் + பிடி.]*

**ஏக்கழுத்தம்** *ē-k-kaḻuttam,* பெ. (n.) 1. ***தலையெடுப்பு;*** superciliousness, strutting, lit., stretching the neck. "காதி ரண்டு மில்லாதா னேக்கழுத்தஞ் செய்தலும்" (சிறு பஞ்.5). 2. ***இறுமாப்பு;*** arrogance, pride. 3. ***வீற்றிருக்கை*** (சூடா.); sitting majestically.

*[ஏ + கழுத்தம். ஏ = உயர்வு. கழுத்து + அம் - கழுத்தம் (கழுத்து நிற்கும் நிலை).]*

**ஏக்கழுத்து** *ē-k-kaḻuttu,* பெ. (n.) ***ஏக்கழுத்தம்*** பார்க்க; see *ē-k-kaḻuttam* "மோட்டுடைப் போர்வையோ டேக்க ழுத்தம்." (ஆசாரக்.92).

*[ஏ + கழுத்து. ஏ = உயர்வு, நிமிர்வு. ஏக்கழுத்து = நிமிர்ந்த கழுத்து, இறுமாப்பு.]*

**ஏக்கறவு** *ēkkaṟavu,* பெ. (n.) ***விருப்பம்;*** desire, lust "ஒருத்தி முலைக்கிடந்த வேக்கறவால்" (கம்பரா. மாயாசன.83).

*[ஏங்கு+ உறு - ஏங்குறு → ஏக்குறு → ஏக்குறவு → ஏக்கறவு.]*

**ஏக்கறு[1]-தல்** *ēkkaṟu-,* 4.செ.கு.வி. (v.i.) 1. ***இளைத்து இடைதல்;*** to suffer from weariness, to languish.. "கடைக்கணேக்கற" (சீவக 1622) 2. ***ஆசையால் தாழ்தல்;*** to bow before superiors, as one seeking some favour at their hands "ஏக்கற்றுங் கற்றார்" (குறள்.395).

தெ. ஏகரு

*[ஏங்கு + உறு - ஏங்குறு → ஏக்குறு → ஏக்கறு. 'உறு' துணை வினை 'அறு' எனத் திரிவது கூட்டு வினைகளில் இயல்பு.]*

**ஏக்கறு[2]-தல்** *ēkkaṟu,* 4.செ.குன்றாவி. (v.t.) ***விரும்புதல்;*** to desire "மதியேக்கறூஉ மாசறு திருமுகத்து" (சிறு பாண்.157).

*[ஏக்கறு[1] - ஏக்கறு[2].]*

**ஏக்கன் போக்கன்** *ēkkaṉ-pōkkaṉ,* பெ. (n) ***ஒன்றுக்குமுதவாதவன்*** (யாழ்ப்.); man of no consequence, worthless fellow

*[இயங்கு → இயக்கு. இயக்குபோக்கு (இணைமொழி) → ஈக்குபோக்கு → ஏக்குபோக்கு → ஏக்கன்போக்கன் - கண்டபடி திரிபவன் ஏக்கு → ஏக்கன். போக்கு → போக்கன்.]*

**ஏக்கிபோக்கி** *ēkki-pōkki,* பெ. (n) ***ஒன்றுக்குமுதவாதவள்*** (யாழ்ப்.); woman of no consequence.

*[ஏக்கு → ஏக்கி. ஏக்கிபோக்கி (இணைமொழி).]*

**ஏக்கு** *ēkku,* பெ. (n.) ***ஏக்கம்;*** desire, longing.

*[ஏங்கு → ஏக்கு.]*

**ஏக்கெறி[1]-தல்** *ēkkeṟi-,* 2.செ.கு.வி. (v.i.) ***கவலைநீங்குதல்;*** to cast away care, get rid of anxiety

*[ஏங்கு → ஏக்கு + அறு-. ஏக்கறு → ஏக்கறி → ஏக்கெறி.]*

**ஏக்கெறி[2]-தல்** *ēkkeṟi,* 2.செ.கு.வி. (v.i.) ***அச்சமுறுதல்;*** to be frightened "ஏக்கெறிந் துலகெங்கு மிரைத்திட" (இரகு.ஆற்று 3).

*[ஏங்கு → ஏக்கு + உறு - ஏக்குறு → ஏக்கறு → ஏக்கெறு → ஏக்கெறி.]*

**ஏக்கை** *ēkkai,* பெ. (n) ***இகழ்ச்சி*** (சங்.அக.); contempt, abuse.

*[ஏங்கு → ஏங்கை → ஏக்கை.]*

**ஏகப்பட்ட** *ēga-p-paṭṭa,* கு.வி.எ. (adj.) 1. ***மிகுதியான;*** plenty; numerous. அவனிடம் ஏகப்பட்ட பணம் உள்ளது. 2. ***இகப்பட்ட*** பார்க்க; see *igappaṭṭa.*

*[இகப்பட்ட → ஏகப்பட்ட. இகத்தல் = மிகுதல், பெரிதாதல்.]*

**ஏகல்[1]** *ēgal,* பெ. (n.) ***உயரம்*** (யாழ்ப்.); height.

*[ஏ → ஏகல்.]*

**ஏகல்[2]** *ēgal,* பெ. (n.) ***நடத்தல்;*** walking.

*[இய → ஏக → ஏகல்.]*

**ஏகாரம்** *ēgāram,* பெ. (n) ***'ஏ' என்னும் நெட்டுயிரெழுத்து;*** letter or sound 'ē'

ம. ஏகாரம்.

*[ஏ + காரம் - ஏகாரம். 'காரம்' எழுத்துச் சாரியை.]*

**ஏகாலி** *ēgāli,* பெ. (n.) ***சலவைத்தொழிலாளி;*** washerman.

*[ஈரங்கொல்லி → ஈங்காலி → ஏகாலி.]*

**ஏகியன்** *ēgiyaṉ,* பெ. (n) ***தோழன்*** (யாழ்.அக.); friend.

*[இகுளன் → இகியன் → ஏகியன் (கொ.வ.).]*

**ஏகு-தல்** *ēgu-,* 7.செ.கு.வி. (v.i) 1. ***போதல்;*** to go, pass. "தாய்த் தாய்க்கொண் டேகுமளித்திவ் வுலகு"(நாலடி.15). 2. ***நடத்தல்*** (பிங்.); to walk. 3. ***கழலுதல்;*** to become loose, to slip off. "நல்வளையேக" (பு.வெ.11, பெண்பாற்.12).

ம. ஏருக; தெ. ஏகு.

*[இய → ஏ → ஏகு.]*

**ஏகை** *ēgai,* பெ. (n.) ***வயிரக் குற்றங்களு ளொன்று;*** streak, a fault in a diamond. "ஏகையுநீங்கி" (சிலப்.14,181).

*[இல் → ஈல் → ஈகு → ஏகு → ஏகை.]*

**ஏங்கல்** *ēṅgal,* பெ. (n.) 1. ***பேரொலி செய்தல்; ஆரவாரிக்கை;*** shout, clamour. "ஈட்டிய சமபல வீர ரேங்கலால்" (இரகு.திக்குவி.251). 2. ***மயிற்குரல்*** (பிங்.); screaming, as of a peacock. 3. ***யாழ் நரம்பினோசை*** (பிங்.), sound, as of the strings of a lute. 4. ***அழுகை*** (பிங்.); weeping, 5. ***குழந்தைகட்கு வருங்காசநோய்;*** asthma in children.

ம. ஏங்ஙல்.

*[ஏங்கு → ஏங்கல்.]*

**ஏங்கிப்போ-தல்** *ēṅgi-p-pō-,* 8.செ.கு.வி. (v.i) ***ஏக்கம் பிடித்தல்;*** to be in low spirits, to languish, used impers தாயைப் பிரிந்ததனால் குழந்தை ஏங்கிப் போயிற்று. (உ.வ.).

*[ஏங்கு → ஏங்கி + போ.]*

**ஏங்கு-தல்** *ēṅgu-*, 7.செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்;*** to sound, as a lute; to roar; to scream, as a peacock. 2. ***இளைத்தல்;*** to pine, languish. ''தாழ்ந்து தளர்ந் தேங்கி'' (சீவக.2012). 3. ***மனம் வாடுதல்;*** to long for, yearn after. ''மக்கட்கென்றேங்கி'' (நாலடி.130). 4. ***அழுதல்*** (சூடா.); to weep, cry, wail, sob. 5. ***அஞ்சுதல்;*** to be in fear, to be panic-stricken. ''நேரலன் படையை நோக்கி யேங்கினர்'' (கந்தபு.சூரபன்.வதை.50). 6. ***இரங்கல்;*** it is said of a devotee whose mind is always longing for God, as in ... ''ஏங்குதே நெஞ்ச மையோ'' (தாயுமான.). (செ.அக.).

**க.** ஏங்கு; **பட.** ஏங்கு; **ம.** ஏங்குக; **கோத.** ஏங்; **தெ.** ஏக்கு, வெக்கு; **பர்.** நேஞ்ஞ்; **கேண்.** நேசுகானா; **கூ.** நேஞ்ச; **குரு.** நாக்னா; **மால்.** நகாயெ.

*[ஏ → ஏங்கு → ஏங்கு-தல்.]*

**ஏங்குறல்** *ēṅguṟal*, பெ. (n.) ***கவலையடைதல்;*** state of being sorrowful or thoughtful. (சா.அக.).

*[ஏங்கு + உறல்.]*

**ஏச்சம்** *ēccam*, பெ. (n.) ***ஒருங்கிணைதல், கூடியிருத் தல், தொடர்பு, கூட்டு*** (சேரநா.); connection, tie.

**ம.** ஏச்சம்.

*[இயை → இயைத்து → இயைச்சு → ஏச்சு → ஏச்சம் (கொ.வ.).]*

**ஏச்சு** *ēccu*, பெ. (n.) 1. ***வசவு;*** abuse, insult, calling names. 2. ***பழிப்பு;*** reproach. ''எமர்கள் குடிக்கோ ரேச் சுக்கொ லாயிடுங் கொலோ'' (திவ்.பெரியாழ்.3,8,2). 3. ***புறக்கணிப்பு;*** negligence. 4. ***புறங்கூறுதல்;*** backbiting.

**ம.** ஏச்சு; **தெ.** ஏகு.

*[ஏ → ஏச்சு.]*

**ஏச்சுக்கட்டு-தல்** *ēccu-k-kaṭṭu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***சேர்த்துக் கட்டுதல்; இணைத்துக்கட்டுதல்;*** tying together. (சேரநா.).

**ம.** ஏச்சுக்கெட்டு.

*[இயை → இயைத்து → இயைச்சு → ஏச்சு + கட்டு.]*

**ஏச்சுக்கட்டை** *ēccu-k-kaṭṭai*, பெ. (n.) ***மாட்டுவண் டியை நிறுத்தப் பயன்படுத்தும் கட்டை;*** a kind of device serving as a brake of a bullock-cart. (சேரநா.).

**ம.** ஏச்சுக்கட்டை.

*[இயைத்து → இயைச்சு → ஏச்சு + கட்டை.]*

**ஏச்சுக்காட்டு-தல்** *ēccu-k-kāṭṭu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***பழிப்பைச் சுட்டிக் காட்டிப் பேசுதல்*** (இ.வ.); to reproach pointing to one's fault, twit.

*[ஏ → ஏச்சு + காட்டு.]*

**ஏச்சுரை** *ēccurai*, பெ. (n.) ***பழிப்புரை;*** opprobrium, calumny. ''ஏதிலார் தாங்கூறு மேச்சுரையுங் கேட்டேங்கி'' (சிலப்.29,அடித்தோழியரற்று).

*[ஏ → ஏச்சு + உரை.]*

**ஏச்சோறு** *ēccōṟu*, பெ. (n.) ***தண்டச்சோறு;*** food given gratis. ''ஏச்சோறு பொங்கி யிட்டே'' (ஆதியூரவதானி.3).

*[எள்ளல் → எள் + சோறு - எச்சோறு → ஏச்சோறு.]*

**ஏசல்** *ēcal*, பெ. (n.) 1. ***இகழ்கை;*** reproaching, abusing. ''ஏசலொப்பன கோகிலப் பறவைகளிசைத்தல்'' (கந்தபு. நாட்டு.44). 2. ***பழிமொழி*** (சூடா.); slander. 3. ***ஒருவ ரையொருவர் ஏசிக்கூறும் பாட்டு;*** poem or song in which each of two parties extols himself and depreciates the other. ''சிந்து கலித்துறைக ளேசல்'' (திருப்பு.198).

**ம.** ஏச்சல் (குற்றம் சுமத்துதல்).

*[ஏ → ஏத்து → ஏச்சு → ஏச்சல் → ஏசல். ஏத்து = பிறர்மீது பழி சுமத்து.]*

**ஏசறவு¹** *ēcaṟavu*, பெ. (n.) 1. ***விருப்பம், அன்பு;*** desire, longing. ''தாமுற்ற வேசறவைத் தோழியர்முன் பேசுவார்'' (பதினொ.ஆளு.திருவுலா.138). 2. ***போற்றி வழிபாடு;*** praise, adoration. ''முனிசண்முகனை யேசறவு பேசிநின்று'' (சிவதரு.பாயி.11).

*[ஆசை + உறு - ஆசையுறு → ஆசுறு → ஏசறு → ஏசறவு (கொ.வ.).]*

**ஏசறவு²** *ēcaṟavu*, பெ. (n.) 1. ***பழித்தல்;*** slander. 2. ***இழிவுபடுத்துதல்;*** reproaching. 3. ***துன்பம்; துயரம்;*** compunction, penitence, regret.

*[ஏ → ஏத்து → ஏச்சு → ஏசு. ஏசு + உறு - ஏசுறு → ஏசறவு.]*

**ஏசறு¹-தல்** *ēcaṟu-*, 4.செ.கு.வி. (v.i.) ***ஆசைப்படுதல்;*** to long for desire, ''வரைத்தோள் கூடுதற் கேசற்ற கொம் பினை'' (பதினொ.ஆளு.திருவந்.45).

*[ஆசை + உறு - ஆசையுறு → ஆசுறு → ஏசறு.]*

**ஏசறு²-தல்** *ēcaṟu-*, 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***பழித்தல்;*** to blame, reproach. ''ஏசறு மூரவர் கவ்வை'' (திவ்.திரு வாய்.5,3,1). 2. ***வருத்த முறுதல்;*** to be troubled, to feel sorry.

*[ஏ → ஏத்து (பழிசுமத்து) → ஏச்சு → ஏசு + உறு - ஏசுறு → ஏசறு.]*

**ஏசி¹** *ēci*, பெ. (n.) ***இகழ்ச்சி*** (அக.நி.); contempt.

*[எள் → ஏள் → ஏசு → ஏசி.]*

**ஏசி²** *ēci*, பெ. (n.) ***கிளி;*** parrot. (அக.நி.).

**குரு.** எடெர்.

*[விள் → எள் → ஏளி → ஏசி.]*

**ஏசிக்காட்டு-தல்** *ēci-k-kāṭṭu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***ஏச்சுக் காட்டு*** பார்க்க; see *ēccukkāṭṭu.*

*[ஏசி + காட்டு.]*

**ஏசு¹-தல்** *ēcu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***இகழ்தல்;*** to abuse, reproach, rail at, insult. ''ஏசவெண்டலையிற் பலிகொள் வதி லாமையே'' (தேவா.425,6).

**தெ.** ஏகு.

*[எள் → ஏள் → ஏசு.]*

**ஏசு²-தல்** *ēsu-*, 5.செ.குன்றாவி. (v.t) ***செலுத்துதல்;*** to hurl, dart. "கொல்லம் பேசி" (தேவா.380.6).

*[எய் → ஏ → ஏவு → ஏசு.]*

**ஏசு³** *ēsu*, பெ. (n) ***இயேசு*** பார்க்க; see *iyēsu.* "ஏசுநாம மொன்றை நம்புவீர்" (கிறித்.).

*[இயேசு → ஏசு.]*

**ஏசு⁴** *ēsu*, பெ. (n.) ***குற்றம்*** (திவா.); fault, blemish.

*[மாசு → ஆசு → ஏசு (கொ.வ.)]*

**ஏட்சி¹** *ētci*, பெ. (n) ***தோற்றம்;*** "ஏட்சிதொட் டெண்ண" (சினேந்.காண்டப்.3); rising of a heavenly body.

*[எழுச்சி → ஏட்சி (கொ.வ.).]*

**ஏட்சி²** *ētci*, பெ (n.) ***உறுதி;*** stability, firmness. "ஏட்சியின் விளக்கிடு மென்றனிச் சித்தே" (அருட்பா.vi,அருட்பெருஞ்சோதியக).

*[ஏல் + சி - ஏற்சி → ஏட்சி (கொ.வ.).]*

**ஏட்டன்** *ēttan*, பெ. (n) ***மேலோன்;*** virtuous man.

*[ஏ → ஏட்டன் (மு.தா 77).]*

**ஏட்டிக்குப்போட்டி** *ēttikku-p-pōtti*, பெ. (n) ***நேருக்குமா றான செயல்*** (கொ.வ.); logomachic retort or tit for tat

**தெ.** ஏடிகிபோடி.

*[ஏண் → ஏட்டு → ஏட்டி + கு + போட்டி - ஏட்டிக்குப்போட்டி. ஏண் = நேரானது, செவ்விது.]*

**ஏட்டிற்கல்வி** *ēttiṟkalvi*, பெ. (n.) ***ஆசிரியர் இல்லாக் கல்வி;*** learning not by teacher, self-education.

*[ஏடு + இல் - ஏடில் + கல்வி - ஏட்டிற்கல்வி (கொ.வ.) = நூலின் துணைமட்டும் கொண்டு அதில் உள்ளதைத் தனக்குப் புலப்பட்டவாறு விளங்கிக் கொள்ளும் படிப்பு. 'இல்' ஏழன் உருபு ]*

**ஏட்டுச்சுரைக்காய்** *ēttu-c-curai-k-kāy*, பெ. (n.) 1. ***பட்டறிவோடு கூடாத கல்வியறிவு;*** book-learning that is devoid of practical wisdom "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது" (பழ.) 2. ***பட்டறிவு இன்றி நூலறிவுமட்டு முள்ளவ-ன்-ள்;*** person with such book learning அவனொரு ஏட்டுச்சுரைக்காய். அவனால் எதுவும் செய்து காட்ட முடியாது. (உ.வ.).

*[ஏடு + சுரை + காய் - ஏட்டுச்சுரைக்காய் = ஏட்டில் வரையப் பட்ட சுரைக்காய் ஓவியம். ஏட்டுச் சுரைக்காய் - பிறிது பொருளுணர்த்திய குறிப்புத்தொடர்.]*

**ஏட்டுப்படிப்பு** *ēttu-padippu*, பெ (n.) (உலக) ***பட்டறிவு இல்லாத கல்வி;*** book-learning without practical knowledge.

*[ஏடு + படிப்பு - ஏட்டுப்படிப்பு = ஏட்டில் அல்லது நூலில் உள்ளவாறு படித்தறிந்த கல்வி.]*

**ஏட்டுப்பொறி** *ēttu-p-pori*, பெ. (n.) ***ஓலைச்சுவடியில் பதித்த முத்திரை;*** seal set on a letter written on palmyra leaf. "ஏட்டுப் பொறி நீக்கி மெல்லென விரித்து" (பெருங்.வத்தவ.10,109).

*[ஏடு + பொறி - ஏட்டுப்பொறி.]*

**ஏட்டுவினை** *ēttu-viṉai*, பெ. (n) ***ஓலையேட்டி லெழு துந் தொழில்;*** occupation as writer on palmyra leaves "ஏட்டு வினைக் கணக்கன்" (பெருங்.வத்தவ.10,95).

*[ஏடு + வினை - ஏட்டுவினை.]*

**ஏட்டை¹** *ēttai*, பெ. (n) 1. ***வறுமை;*** poverty, necessitous state or condition "ஏட்டைப் பருவத்து மிற்பிறந்தார் செய்வன" (நாலடி.358). 2. ***தளர்வு;*** weakness. 3. ***இளைப்பு;*** drooping, pining. "வெண்ணிணத்த செந்த டிக்கே யேட்டைப்பட்டு" (சீவக.1552).

*[இள் → இட்டை → ஏட்டை.]*

**ஏட்டை²** *ēttai*, பெ. (n.) 1. ***இளமை;*** youthfulness. 2. ***இளங்கதிர்;*** young ears of corn.

*[இள் → இட்டை → ஏட்டை.]*

**ஏட்டை³** *ēttai*, பெ. (n.) ***விலங்கேற்றின் பெயர்*** (திவா.); male of animals, as of the buffalo

*[ஏறு → ஏற்றை → ஏட்டை (கொ.வ.).]*

**ஏட்டை⁴** *ēttai*, பெ. (n.) ***விருப்பம்*** (பிங்.); intense desire.

*[இள் → இட்டை → ஏட்டை (கொ.வ.).]*

**ஏட்டைப்படல்** *ēttai-p-padal*, பெ. (n.) ***இளைத்தல்;*** reduce in growing thin.

*[ஏட்டை + படல்.]*

**ஏட்டைப்பருவம்** *ēttai-p-paruvam*, பெ. (n) ***இளம் பருவம்;*** period of youth; youthhood. 2. ***தளர்ந்த பருவம்;*** helpless state.

*[ஏட்டை + பருவம்.]*

**ஏட** *ēda*, இடை. (part.) ***தோழனையும், தாழ்ந்தோனை யும் விளிக்குஞ்சொல்;*** exclamation addressed familiarly to a friend or an inferior.

*[ஏல → ஏழ → ஏட. **எல்லா, எலா** பார்க்க; **see ellā, elā.**]*

கலந்த அன்பின் வெளிப்பாடு புலப்படுத்தும் எல்லா எலா என்னும் கெழுதகைப் பொதுச் சொற்கள் உலகவழக்கில் ஏட, ஏடா, அடா, அடே எனத்திரிந்தன. தோழனை விளித்த இதே சொல் பணியாளரையும் விளிக்கப் பயன்படடதால் பழந் தமிழர் பணியாளரை இழிவாக நடத்தவில்லை என அறியலாம்.

**ஏடகணி** *ēdakaṉi*, பெ. (n.) ***ஓலையீர்க்கு*** (தைலவ. பாயி.20); rib of a palm leaf.

*[ஏடு + அகணி - ஏட்டகணி → ஏடகணி. ஏடு = பனையோலை. அகணி = நடுவிலிருக்கும், ஈர்க்கு.]*

**ஏடகப்பை** *ēdagappai*, பெ. (n.) ***ஏடு அல்லது வண் டலை வழிக்கப் பயன்படுத்து மகப்பை;*** ladle used for removing the scum of liquids, skimmer. (சா.அக.).

*[ஏடு + அகப்பை.]*

**ஏடகம்**[1] *ēdagam,* பெ. (n.) ***மதுரைக்கருகிலுள்ள திருவேடகம் என்னும் ஒரு சிவத்தலம்;*** Siva shrine near Madurai.

*[ஏடு + அகம்.]*

சமணர்க்கும் சம்பந்தர்க்கும் இடையே நடந்த புனல்வாதத்தில் சம்பந்தர் விட்ட ஏடு வையை நீரில் எதிர்த்துச் சென்று அக்கரையை அடைந்த இடம் ஏடகம் எனப் பெயர் பெற்றது.

**ஏடகம்**[2] *ēdagam,* பெ. (n) ***செம்மறியாட்டுக்கடா;*** ram.

*[மேழகம் → ஏழகம் → ஏடகம்.]*

**ஏடகம்**[3] *ēdagam,* பெ. (n) 1. ***பூ;*** flower. "ஏடகக்குலஞ் சேருமைக் குழலொடு" (திருப்பு.730). 2. ***தெங்கு*** (திவா.); coconut-palm 3. ***பனை*** (மலை.); palmyra--palm.

*[ஏடு + அகம் - ஏடகம். ஏடு = இதழ்.]*

**ஏடகம்**[4] *ēdagam,* பெ. (n.) ***ஒரு வகைத் துணி*** (சூடா.); a kind of cloth.

*[ஆடை → ஆடகம் → ஏடகம்.]*

**ஏடகம்**[5] *ēdagam,* பெ. (n.) ***பலகை*** (அக.நி.); plank.

*[ஏடு + அகம்.]*

**ஏடணை** *ēdaṇai,* பெ. (n.) ***ஆசை;*** ardent desire. "ஏடணையு மேவலெழுவாயு முதனூலும்" (சிவதரு. சிவஞானயோ.112).

*[ஈடணை → ஏடணை (கொ.வ.).]*

**ஏடல்** *ēdal,* பெ. (n.) 1. ***உள்ளீடு;*** inner content. 2. ***கருத்து*** (திவா.); meaning, intention, thought.

*[ஏல் = எழுதல், தோன்றுதல். ஏல் → ஏள் → ஏளல் → ஏடல். ஏடல் = உள்ளே வளர்ந்து வடிவம் பெற்ற உள்ளீடு, வித்து, கருத்து.]*

**ஏடலகம்** *ēdalagam,* பெ. (n.) 1. ***அதிமதுரம்*** (மூ.அ.); liquorice-plant. 2. ***குன்றி;*** crab's-eye.

*[ஏடல் + அகம் - ஏடலகம்.]*

**ஏடலர்** *ēdalar,* பெ. (n.) ***தாமரைப் பூ;*** lotus flower. (சேரநா.).

ம. ஏடலர்.

*[ஏடு + அலர் - ஏடலர் = அகன்ற மலர்.]*

**ஏடன்**[1] *ēdaṉ,* பெ. (n.) 1. ***ஏழை;*** poorman. 2. ***செவிடன்*** (யாழ்.அக.); deaf man.

க. ஏட.

*[ஏழை → ஏழன் → ஏடன்.]*

**ஏடன்**[2] *ēdaṉ,* பெ. (n.) ***தோழன்*** *(யாழ்.அக.); companion, friend.*

*[ஏல → ஏள → ஏடன்.]*

**ஏடன்**[3] *ēdaṉ,* பெ. (n.) ***தொழும்பன்;*** slave "ஏடர்களை யெங்கு மாண்டுகொண்ட வியல்பறிவார்" (திருவாசக.43,4).

Skt. sēsa.

*[ஏட → ஏடன்.]*

**ஏடாகூடம்** *ēdākūdam,* பெ. (n) 1. ***தாறுமாறு;*** perverseness, contradiction, confusion 2. ***குழப்பம் உண்டாக்கும் நிலை;*** trouble 3. ***அழிவு, சிக்கல்;*** danger, risk, hazard 4. ***எதிர்ப்பு;*** objection, opposition, calamity.

ம. எடாக்கூடம்; க. ஏடா கோட; தெ. ஏடாகோடமு

*[ஏண் → ஏடு → ஏடம். கோண் → கோடு → கோடம். ஏடம் + கோடம் - ஏடாகோடம் → ஏடாகூடம். 'ஏண்கோண்' என்னும் யாழ்ப்பாண வழக்கை ஒப்புநோக்குக.]*

**ஏடாசிரியன்** *ēdāsiriyaṉ,* பெ. (n) ***ஆசான்துணையின்றி ஏட்டின் உதவி கொண்டே கற்றோன்.*** (யாழ்.அக.); one who has learnt from books and not from a teacher.

*[ஏடு + ஆசிரியன்.]*

**ஏடார்மலர்** *ēdārmalar,* பெ. (n.) ***தாமரைப்பூ;*** lotus flower. (சேரநா.).

ம. ஏடார்மலர்.

*[ஏடு + ஆர் + மலர்.]*

**ஏடி**[1] *ēdi,* பெ. (n.) ***கடல்பன்றி;*** porpoise, dolphin.

ம. ஏடி.

*[ஏடு → ஏடி (அகன்ற வடிவினது).]*

**ஏடி**[2] *ēdi,* பெ. (n.) ***தோழி போன்ற பெண்பாலாரை விளிக்கும் விளியிடைச்சொல்;*** an exclamation addressed familiarly to a woman friend or to a woman of lower status than one who addresses her

*[ஏல → ஏழ → ஏடா → ஏடி.]*

**ஏடு**[1] *ēdu,* பெ. (n.) 1. ***பூவிதழ்*** (திவா.); petal. 2. ***மலர்;*** flower. "ஏடமர் பொழில்" (தேவா.249,11). 3. ***கண்ணிமை*** (அக.நி.); eyelid. 4. ***பனையோலையிதழ்;*** strip of palmyra leaf for writing 5. ***ஏட்டுப்புத்தகம்;*** book of palymra leaves 6. ***புத்தகவிதழ்;*** leaf of a book. "எழுதாத புத்தகத்தேட்டின்" (திருமந்.2885). 7. ***வாழையிலைத் துண்டு;*** section of a plantain leaf cut near the base, for use as a plate. 8. ***பாலின் ஆடை;*** cream. "பாலினேடுதேன்" (உத்தரா.சந்திரகே.71). 9. ***உடம்பு;*** body. "ஏடுநிலத்தி விடுவதன் முன்னம்" (திவ். திருப்பல்.4). 10. ***மேன்மை;*** greatness, excellence. "ஏடுடைய மேலுலகோடு" (தேவா.539,2). 11. ***குற்றம்*** (திவ்.பெரியதி.4,1,7,வியா.); fault, blemish. 12. ***விசும்பு***

***சையருலகம்;*** celestial world.

ம. ஏடு; க. ஏடு.

*[ஏ → ஏடு. ஏ = உயரம், நீட்சி, அகலம். ஏடு = அகன்று நீண்ட ஓலை, இலை, பூவிதழ், பொத்தகம், பாலாடை.]*

**ஏடு**[2] *ēdu,* பெ. (n.) 1. ***உலகம்*** (அக.நி.); world. 2. ***பாதத்தின் அடிப்பக்கம்*** (திவா.Ms.); sole of foot.

*[இடு → ஏடு.]*

**ஏடு கட்டல்** *ēḍu-kaṭṭal,* பெ. (n.) **ஏடு படர்தல்;** formation of a scum on the surface of any liquid. (சா.அக.).

*[ஏடு + கட்டல்.]*

**ஏடுகம்**[1] *ēḍugam,* பெ. (n.) **கல்லறை** (யாழ்.அக.); grave.

*[ஏடு → ஏடுகம். ஒருகா. பலகைக் கற்களால் அமைத்த புதைகுழி ஆகலாம்.]*

**ஏடுகம்**[2] *ēḍugam,* பெ. (n.) 1. **மலை;** mountain. 2. **குன்று;** hill.

*[ஏ → ஏண் → ஏடு → ஏடுகம்.]*

**ஏடுக முருங்கை** *ēḍuga-muruṅgai,* பெ. (n.) **மலை முருங்கை;** hill moringa - Hedysarum sennoides. (சா.அக.).

*[ஏடுகம்[2] + முருங்கை.]*

**ஏடுகோ-த்தல்** *ēḍu-kō-,* 4.செ.கு.வி. (v.i.) **பனையோலைகளினாலமைந்த பொத்தக விதழ்களைக் கயிற்றிற் கோத்தல்;** to string together the leaves of a palmyra leaf-book.

*[ஏடு + (கோர்) கோ.]*

**ஏடுகோளாளன்** *ēḍu-kōḷāḷaṉ,* பெ. (n.) **கணக்கன்;** accountant. "ஏடுகோளாள ரெனையரென்றெண்ணி" (பெருங்.உஞ்சைக்.37,153).

*[ஏடு + (கொள்) கோள் + ஆளன்.]*

**ஏடுசேர்-த்தல்** *ēḍu-śēr-,* 4.செ.கு.வி. (v.i.) **பனையோலைகளை ஏடுகளாகச் சீவிப் பொத்தகமாக்குதல்;** to make up a book of the strips of palmyra leaves.

*[ஏடு + சேர்.]*

**ஏடுதயிர்** *ēḍu-tayir,* பெ. (n.) **ஆடை நீக்காத தயிர்;** curd from which cream has not been removed. (சா.அக.).

*[ஏடு + தயிர்.]*

**ஏடுதூக்கு-தல்** *ēḍu-tūkku-,* 5.செ.கு.வி. (v.i.) **ஆசிரியரிடம் ஏட்டை எடுத்துப் படித்தல்;** to take up and read a book of palmyra leaves, before one's teacher.

*[ஏடு + தூக்கு.]*

**ஏடுபடர்தல்** *ēḍu-paḍardal,* பெ. (n.) **ஆடையுண்டாதல்;** formation of coating on the surface of some liquids (சா.அக.).

*[ஏடு + படர்.]*

**ஏடுபடு-தல்** *ēḍu-paḍu,* 20 செ.கு.வி (v.i.) 1. **பாலில் ஆடையுண்டாதல்;** to form as cream. 2. **பாசிபடிதல்;** to spread, as moss over the surface of water.

*[ஏடு + படு.]*

**ஏடுவாரு-தல்** *ēḍu-vāru-,* 7.செ கு.வி. (v.i) **பொத்தக ஏடுகளாக்குதற்குப் பனையோலைகளைச் சீவுதல்;** to pare palmyra leaves into uniform strips for being made up into a book.

*[ஏடு + (வார்) வாரு. வகிர் → வார் → வாருதல் = பிளத்தல்; நறுக்குதல்.]*

**ஏடெழுது-தல்** *ēḍeḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **எழுத்துக் கற்பிக்க முதலில் ஏடு எழுதித் தருதல்;** to write out the alphabet for a child on an auspicious day with appropriate ceremonies. 2. **புதுப்பொத்தகமெழுதத் தொடங்குதல்;** to write or begin to copy a book for learning.

*[ஏடு + எழுது.]*

**ஏடை** *ēḍai,* பெ. (n.). **ஆசை** (சூடா.); ardent desire, eager longing.

*[ஈடு → ஈடை → ஏடை.]*

**ஏண்**[1] *ēṇ,* பெ. (n.) 1. **உயர்ச்சி;** exaltation greatness, excellence. "ஏணிலேனிருந்தேன்" (திவ்.பெரியதி. 1,6,1). 2. **எல்லை** (திவ் திருவாய்.2,8,8,பன்னீ.); boundary, limit 3. **பெருமை;** praisworthiness worth. 4. **ஆணவப்பேச்சு;** haughty words. "ஏண்பல பகர்ந்தனை" (கந்தபு.அவைபுகு.153). 5. **செருக்கு;** pride.

*[ஏ → ஏண்.]*

**ஏண்**[2] *ēṇ,* பெ. (n.) 1. **திண்ணம்;** firmness, stability. "நெஞ்சத்தே ணிகந்து" (சீவக.770). 2. **வலிமை;** strength, energy "ஏணிலான் சேவகமும்" (சிறுபஞ்.12).

*[ஏ → ஏண்.]*

**ஏண்**[3] *ēṇ,* பெ. (n.) **வளைவு;** crookedness, bend.

*[இல் → இள் → ஈள் → ஏள் → ஏண்.]*

**ஏண்**[4] *ēṇ,* பெ. (n) **கருநிற மான்;** black deer having prominent large eyes. ஏணி, ஏணம், ஏணகம்.

மறுவ. நவ்வி; **க., து.** ஏடி; *Skt.* Harin.

*[ஏ → ஏண்.]*

**ஏண்கோண்** *ēṇ-kōṇ,* பெ. (n.) **ஒழுங்கின்மை;** unevenness, crookedness, inconsistency. ஏண்கோணான பேச்சு. (யாழ்ப்.).

*[ஏ → ஏண் = செங்குத்து, நெட்டு, உயரம். கோள் → கோண் = வளைவு, சரிவு. ஏண் + கோண் = ஏண்கோண், மேடும் பள்ளமுமாய் இருத்தல், ஒழுங்கின்மை.]*

**ஏண்டன்** *ēṇḍaṉ,* பெ. (n.) **முட்டாள்;** ruffian, brute. (சேரநா.).

ம. ஏண்டன்.

*[ஏ → ஏண் → ஏண்டு → ஏண்டன் = செருக்கினால் அறிவிழந்தவன்.]*

**ஏண்டாப்பு** *ēṇḍāppu,* பெ. (n.) **இறுமாப்பு** (யாழ்ப்.); self-conceit, arrogance, pride.

*[ஏ → ஏண் → ஏணாப்பு ('ஆப்பு' - சொல்லாக்க ஈறு). ஏண் = செருக்கு. ஏணாப்பு → ஏண்டாப்பு (இடைத்திரிபு).]*

**ஏணகம்**[1] *ēnagam*, பெ. (n) ***கருப்பு நிறமான்;*** a species of black deer (சா.அக.).

*[ஏ → ஏண் → ஏணகம்.]*

**ஏணகம்**[2] *ēnagam*, பெ. (n.) ***ஒரு வகை மருந்துச் சரக்கு*** (நாமதீப.395); drug.

*[ஏண் → ஏணகம்.]*

**ஏணம்**[1] *ēnam*, பெ. (n.) ***நிலைபேறு*** (பிங்.); firmness, stability.

ம. ஏணம்.

*[ஏ → ஏண் → ஏணம்.]*

**ஏணம்**[2] *ēnam*, பெ. (n.) 1. ***அகன்ற கண்களையுடைய கருநிற மான்;*** black deer having prominent large eyes. 2. ***மான்தோல்*** (வின்.); deer skin.

*[ஏ → ஏண் → ஏணம் (உயரமான அல்லது மேடான காட்டுப் பகுதிகளில் வாழ்வது. ஏணம் என்னும் தமிழ்ச் சொல் வடமொழியில்* ஹரின் எனத் திரிந்தது).]*

**ஏணம்**[3] *ēnam*, பெ. (n) 1. ***வலிமை;*** strength. 2. ***எலும்பு;*** bone (செ.அக.).

*[ஏண் → ஏணம்.]*

**ஏணம்**[4] *ēnam*, பெ. (n.) ***அழகு;*** beauty (சேரநா.).

ம. ஏணம்.

*[ஏண்[2] → ஏணம் = மானைப்போன்ற அழகு.]*

**ஏணல்** *ēnal*, பெ. (n) ***வளைவு*** (யாழ்ப்.); curvature, bend.

*[ஏணல் கோணல் என்பதன் குறுக்கம். இணைமொழியாக உள்ள கூட்டுச் சொற்களில் பின்சொல் மறைய முன்சொல் மட்டும் வழக்கூன்றுவது உண்டு.]*

**ஏணல்கோணல்** *ēnal-kōnal*, பெ. (n) ***ஒழுங்கின்மை*** (வின்.); unevenness, irregularity, crookedness.

*[ஏண் → ஏணல். கோண் → கோணல். **ஏண்கோண்** பார்க்க; see ēṇkōṇ]*

**ஏணாப்பு** *ēnāppu*, பெ. (n.) ***இறுமாப்பு.*** (யாழ்.அக.); haughtiness

*[ஏண் → ஆப்பு - ஏணாப்பு.]*

**ஏணி**[1] *ēni*, பெ. (n.) 1. ***அடுக்கு;*** tier "அண்டத்தேணியின் பரப்பும்" (கந்தபு.சூரன்வதை.485). 2. ***எண்;*** number "ஏணிபோகிய கீழ்நிலைப் படலமும்" (ஞானா. 54,1). 3. ***ஏணி;*** ladder "மண்டலத்தூ டேற்றிவைத் தேணிவாங்கி" (திவ்.பெரியாழ்.4.9,3). 4. ***எல்லை;*** limit, boundary. "நளியிரு முந்நீரேணியாக" (புறநா. 35,1). 5. ***நாடு*** (திவா.); country, territory.

ம., க., து. ஏணி; தெ. நிச்சேண. *Skt.* sreni; *PKT.* sēṇi.

*[ஏண் → ஏணி (மு.தா.72).]*

**ஏணி**[2] *ēni*, பெ. (n.) 1. ***மான்*** (சூடா.); deer, antelope. 2. ***மான்கன்று*** (திவா.); young deer, fawn.

ம. ஏணி.

*[ஏண் → ஏணி.]*

**ஏணி**[3] *ēni*, பெ. (n.) 1. ***குன்று;*** hill. 2. ***மலை;*** mountain. 3. ***செங்குத்தாக வளரும் மரம்;*** tall tree.

*[ஏண் → ஏணி]*

**ஏணிக்காணம்** *ēnikkānam*, பெ. (n.) ***ஏணி வைத்து மரமேறும் ஈழவர்க்குரிய வரி*** (S.I.I.ii.67); tax paid by toddy tappers.

ம. ஏணிக்காணம்.

*[ஏணி + காணம். காணம் = காணத்தின் (கொள்ளின்) வடிவாகச் செய்யப்பட்ட பொற்காசு.]*

**ஏணிநிலை** *ēninilai*, பெ. (n) ***பகைவர் மதில் மீது ஏணி சார்த்துதல்;*** placing ladder on the side of the rampart of the enemy, literary convention describing a heroic tradition

*[ஏணி + நிலை.]*

பகைவர் கோட்டையைக் கைப்பற்றியே தீருவோம் என்னும் மறவர் துணிவைக் காட்டும் புறத்துறை. "இட்டவீரக்கழலை உடைய கொடுவினையாளர் செறிந்து, செறியாதார் மண்ணின் ஏவறைகளை யுடைய மதிலிலே ஏணியைச் சார்த்தியது." (பு.வெ.).

**ஏணிப்படிகால்** *ēni-p-padi-kāl*, பெ. (n.) ***ஏணிப்படுகால்*** பார்க்க; see *ēni-p-padukāl*.

**ஏணிப்படுகால்** *ēni-p-padu-kāl*, பெ. (n.) ***மேகலை;*** woman's jewelled girdle. "ஏணிப்படுகா லிறுகிறுகத் தாளிடீஇ" (பரிபா.10,11).

*[ஏணி + படு + கால் - ஏணிப்படுகால் = ஏழு அல்லது எட்டு வடங்களாகத் தொங்கல் அமைத்த இடையணிகலன்.]*

**ஏணிப்பந்தம்** *ēni-p-pandam*, பெ. (n.) ***தோளிற் சுமக்கும் ஒருவகைத் தீவட்டி வரிசை;*** row of torches set in a beam and carried on men's shoulders in night processions.

*[ஏணி + பந்தம்.]*



ஏணிப்பந்தம்

**ஏணிப்பழு** *ēṇi-p-paḻu,* பெ. (n.) ***ஏணிப்படி*** (வின்.); step or rung of a ladder

*[ஏணி + பழு. பள் → பழு = கிடக்கைப்படி.]*

**ஏணிமயக்கம்** *ēṇi-mayakkam,* பெ. (n.) ***கோட்டைக்கு உள்ளும் புறமுமுள்ளார் ஏணிமிசைநின்று போர்செய் தலைக் கூறும் புறத்துறை*** (தொல்.பொருள் 68,உரை); theme of the fighting of opposing parties climbing on ladders placed against the opposite sides of the wall of a fort.

*[ஏணி + மயக்கம். மயக்கம் = கைகலத்தல், போர்.]*

**ஏணிமிசைமயக்கம்** *ēṇi-miśai-mayakkam,* பெ. (n) ***ஏணிமயக்கம்*** பார்க்க (தொல் பொருள் 68); see *ēṇima-yakkam.*

**ஏணுக்குக்கோண்** *ēṇukku-k-kōṇ,* பெ. (n) ***எதிரிடையான பேச்சு*** (யாழ்ப்.); thwarting, gainsaying, logomachic talk

*[ஏண் → ஏணுக்கு + கோண்.]*

**ஏணை**[1] *ēṇai,* பெ (n.) ***தொங்கும் தொட்டில், புடவைத் தொட்டில்;*** cloth-cradle hung from a cross piece or branch, children's hammock. "ஏணைநின் றெடுத்த கைப் பிள்ளை" (அருட்பா.vi.பற்றறுத்தல்.2).

மறுவ. தூளி.

*[ஏல் → ஏள் → ஏண் → ஏணை. (வே.க.35).]*

**ஏணை**[2] *ēṇai,* பெ. (n.) ***உறுதி நிலை;*** firmness, stability. "ஏணை பெற்றிட வெனக்கருள் புரிந்த" (அருட்பா. vi அபயநி.1).

*[ஏ → ஏண் → ஏணை.]*

**ஏணை**[3] *ēṇai,* பெ. (n) ***ஆடு*** (யாழ்.அக.); goat or sheep

*[ஏண்[4] → ஏணை = மானைப் போன்றிருக்கும் வரையாடுகளுள் ஓரினம்.]*

**ஏணைக்குக் கோணை** *ēṇaikku-k-kōṇai,* பெ. (n) ***ஏட்டிக்குப் போட்டி;*** contradiction merely for the sake of contradicting, tit for tat.

*[ஏண் → ஏணை. கோண் → கோணை. ஏணை + கு + கோணை.]*

**ஏத்தம்வாழை** *ēttam-vāḻai,* பெ. (n) ***நேந்திரம் வாழை*** (நாஞ்.); a kind of banana popular in Kerala

*[ஏற்றம் → ஏத்தம் + வாழை ]*

**ஏத்தன்** *ēttaṉ,* பெ. (n) ***நேந்திர வாழை;*** a kind of plantain (சேரநா.).

ம. ஏத்தன்.

*[ஏற்றம் → ஏற்றன் → ஏத்தன்.]*

**ஏத்தனம்** *ēttaṉam,* பெ. (n) 1. ***கருவி;*** tool, instrument 2. ***ஏனம்*** (பாத்திரம்); vessel, utensil.

ம. ஏத்தனம்.

**ஏத்தாளன்** *ēttāḷaṉ,* பெ. (n) ***ஏத்தாளி*** (சிலப்.26,124, அரும்.) பார்க்க; see *ēttāḷi*

*[ஏத்து + ஆளன்.]*

**ஏத்தாளி** *ēttāḷi,* பெ. (n) ***புகழ்ந்து பாடுபவன்;*** panegyrist, bards, singers

ம. ஏத்தாக்கள்.

*[ஏத்து + ஆள் + இ - ஏத்தாளி. ஏத்துதல் = புகழ்தல்.]*

**ஏத்தியலாளன்** *ēttiyal-āḷaṉ,* பெ. (n) ***எத்தாளி*** பார்க்க (பெருங்.நரவாண 6,87); see *ēttāḷi.*

*[ஏத்து + இயல் + ஆளன்.]*

**ஏத்து-தல்** *ēttu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***வாழ்த்துதல்;*** to bless. "பகைதவ நூறு வாயென... ஏத்தினாள்" (சீவக.324). 2. ***புகழ்கை;*** praising, extolling. "இழிப்பு மெடுத்தேத்தும்" (நாலடி.163).

*[ஏ → ஏத்து.]*

**ஏதண்டை** *ēdaṇḍai,* பெ. (n) 1. ***பலகைத்தூக்கு;*** shelf suspended by cords, rack for books 2. ***நீர்த்துறையிற் கட்டிய பரண்;*** platform raised over a body of water, or at a ford for passengers waiting for a ferry 3. ***கட்டடங்கட்ட உதவும் சாரம்;*** scaffold

*[ஏந்து → ஏந்தண்டை → ஏதண்டை.]*

**ஏதப்பாடு** *ēda-p-pāḍu,* பெ. (n.) ***குற்றம் உண்டாகுகை;*** fault, defect "இளிவென்னு மேதப்பா டஞ்சுபவர்" (குறள்.464).

*[ஏதம் + பாடு. படு → பாடு.]*

**ஏதம்**[1] *ēdam,* பெ (n) 1. ***துன்பம்*** (திவா.); suffering, affliction, distress. "ஏதம் படுபாக்கறிந்து" (குறள், 136) 2. ***குற்றம்*** (திவா.); fault, defect, blemish 3. ***கேடு;*** calamity, ruin. "அரவும் உருமும் புலியும் யானையு மிவற்றது ஏதமுடைத்து" (இறை.18,உரை).

ம. ஏதம்

*[ஏறு → ஏறம் → ஏதம். ஏறு = குத்துதல், தாக்குதல், துன்புறுத்து தல், துன்பம்.]*

**ஏதம்**[2] *ēdam,* பெ. (n) 1. ***மான்;*** deer, a species of deer or antelope of black colour with beautiful eyes and short legs. 2. ***ஆடு;*** sheep.

ம. ஏதம்.

*[ஏண் → ஏணம் → ஏதம் (கொ.வ.).]*

**ஏதர்** *ēdar,* பெ. (n) ***தீயோர்*** (வின்.); blameworthy persons, evil-minded people.

*[ஏதம் → ஏதர்.]*

**ஏதல்** *ēdal,* பெ. (n) 1. ***போகை;*** going. 2. ***மரக்கலம்;*** vessel, ship

*[இய → ஏ → ஏகு → ஏகுதல் → ஏதல். இய = செல். நட.]*

**ஏதலன்** ēdalaṉ, பெ (n) ***பகைவன்;*** foe, enemy "ஏதல னின்னுயிரை வவ்வி" (திவ்.பெரியதி.1,7,4).

ம. ஏதலன்.

*[எள்ளல் → ஏளல் → ஏதல் → ஏதலன் = எள்ளும் பகைவன்.]*

**ஏதலிடு-தல்** ēdāl-idu-, 20.செ.கு.வி. (v.i.) 1. ***பொறாமையொடு பேசுதல்*** (வின்.); to speak with envy. 2. ***எள்ளி உரையாடுதல்;*** mocking

*[எள்ளல் → ஏளல் → ஏதல் + இடு.]*

**ஏதன்** ēdaṉ, பெ. (n.) ***மூலகாரணன்;*** he who is the first cause. "ஏதனை யேதமிலா விமையோர் தொழும் தேவனை" (தேவா.471,3).

*[ஏந்து → ஏது → ஏதன்.]*

**ஏதனம்** ēdaṉam, பெ. (n.) ***மூச்சு விடுகை*** (யாழ்.அக.); breathing.

ம. ஏதனம்.

*[ஏங்கு → ஏந்து → ஏந்தல் → ஏதல் → ஏதலம் → ஏதனம் (கொ.வ.).]*

**ஏதாகிலும்** ēdāgilum, சு.பெ. (pron) ***ஏதேனும்;*** something, whatever.

*[ஏது + ஆகிலும்.]*

**ஏதாகுதல்** ēdāgudal, சு.பெ. (pron) ***ஏதாவது*** (யாழ்ப்.); something, whatever, ever so little.

*[ஏது + ஆகுதல்.]*

**ஏதி**[1] ēdi, பெ. (n.) 1. ***படைக்கலப் பொது;*** weapon. "மருப்பினுதி யேதிகொளுத்தி" (இரகு.திக்கு.35). 2. ***வாள்*** (திவா.); sword

*[எய் → எய்தி → ஏதி (கொ.வ.). எய்தி = எய்வது, கொல்லும் கருவி.]*

**ஏதி**[2] ēdi, பெ. (n.) ***துண்டம்*** (பிங்.); piece, fragment.

*[எய் → எய்தி → ஏதி = வெட்டியது, குத்தியது, துண்டாக்கியது.]*

**ஏதில்** ēdil, பெ. (n.) ***அயல்;*** alien.

*[ஏது + இல் - ஏதில் (ஏதும் இல்லாதது, உறவு கொள்ளாதது 'இல்' - எ.ம.இ.நி.).]*

**ஏதிலன்** ēdilaṉ, பெ. (n.) ***பிறன், வேற்றவன்; stranger, neutral, one who does not mingle in others' affairs.***

*[ஏது + இல் + அன் - ஏதிலன் (ஏதும் இல்லாதவன், உறவும் பகையும் அற்றவன்) 'இல்' - எ.ம.இ.நி.]*

**ஏதிலார்** ēdilār, பெ. (n.) 1. ***பிறர்*** (அன்னியர்); others, foreigners, strangers, those who do not mingle in others' affairs. "ஏதிலார் பக்கமாகி" (கந்தபு.தவங்காண்.22). 2. ***பகைவர்;*** foes, enemies. "ஏதிலவேதிலார் நூல்" (குறள்.440). 3. ***பரத்தையர்;*** prostitutes. "ஏதிலார்ப் புணர்ந்தமை" (கலித்.78). 4. ***வறுமையாளர்;*** poor men.

*[ஏது + இல் + ஆர் - ஏதிலார் = ஏதுமற்றவர், எவ்வகை உறவும் இல்லாதவர். 'இல்' எ.ம.இ.நி.]*

**ஏதிலாள்** ēdilāḷ, பெ. (n) ***பிற பெண்;*** strange, unfamiliar woman 2 ***மாற்றாள்;*** co-wife "ஏதிலாள்வாய் நவையபி னிற் காத்தியென்ன" (திருவிளை.வன்னியுங்.42).

*[ஏது + இல் + ஆள் - ஏதிலாள் (ஏதும் இல்லாதவள், எவ்வகை நெருங்கிய உறவும் இல்லாதவள். 'இல்' - எ.ம.இ.நி.).]*

**ஏதிலாளன்** ēdil-āḷaṉ, பெ. (n.) ***பிறன்*** (அன்னியன்); stranger. "ஏதிலாளற் கிழந்தனெ னெழிலே" (பு.வெ.11, பெண்பாற்.4).

*[ஏது + (இல்லாளன்) இலாளன்.]*

**ஏதிலான்** ēdilāṉ, பெ. (n.) ***வறியவன்*** (யாழ்.அக.); poor man.

ம. ஏதிலான் (பகைவன்).

*[ஏது + இல் + ஆன் - ஏதிலான் (ஒன்று மற்றவன்). 'இல்' - எ.ம.இ நி]*

**ஏதின்மை** ēdiṉmai, பெ. (n) 1. ***அயன்மை;*** strangeness, foreignness 2. ***பகைமை;*** enmity, hatred, alienation. "அறிவுடையா ரேதின்மை கோடி யுறும்" (குறள்.816).

*[ஏது + இன்மை.]*

**ஏதீடு** ēdīḍu, பெ. (n) ***தோழி அறத்தோடு நிற்கையில், தலைவி, தலைவனை மணத்தற்கு அவன் செய்த உதவிகளைக் காரணமாக இட்டுரைக்கை,*** "ஏதீடுதலைப்பாடு" (தொல் பொருள்.207); literary theme in which the lady companion of a heroine explains that the reasons for the choise of her man by her mistress are to be found in the risks he had taken to save her in times of imminent danger, and other tokens of his regard for her.

*[ஏது + ஈடு. இடு → ஈடு. ஏது = காரணம்.]*

**ஏது**[1] ēdu, பெ. (n.) 1. ***விளக்கம்;*** illustration. "ஏதுக்கள் காட்டி முடித்தா ளிணையில்ல நல்லாள்" (நீலகேசி. 423). 2. ***தொடர்பு;*** connection, relation. "புலிகொண்மார் நிறுத்த வலையுளோ ரேதில் குறுநரி பட்டற்றால்" (கலித்.65,25). 3. ***ஒரு கருமம் அல்லது முடிவு செய்யத் தூண்டுவது;*** stimulating one to act or decide.

*Skt.* hetu.

*[ஏ → ஏது. (வே.க.54).]*

**ஏது**[2] ēdu, பெ. (n.) ***ஏவுகை, தூண்டுகை, காரணம்;*** inciting, urging, cause,basis. "ஏது நிகழ்ச்சி யெதிர்த்துள தாதலின்" (மணி.3,4).

*[ஏ → ஏவு → ஏது (வ.மொ.வ.98).]*

**ஏது**[3] ēdu, 1. ***ஏது;*** which, what. உனக்கேது வேணும் (இ.வ.). 2.. ***ஏன்;*** why. அவன் உன்னையப்படிப் பேசவேண்டியதேது? (இ.வ.). 3. ***எங்கிருந்து, எப்படி;*** hence, how. அவனுக்குப் பணமேது? (உ.வ.).

ம. ஏது; **க.** யா, ஆ, எ, ஏ, யாவ, தாவ; **கோத.** ஏத்; **துட.** ஏத்; **குட.** ஏதி; **து.** தா, தானெ, சானெ; ஈதவு, வா, ஓவு; **தெ.** ஏதி, எதி, ஏத்தி; **கொலா.** ஏத், ஏத்வ்; **பர்.** ஏத்; **கூ.** அனெ, ஏகனெ; **கொண்.** எம்; **நா.** நா, நானெ; **குவி.** ஏன; **குரு.** எக்நா; **மால்.** இந்திர, இகிர், இகம்; **பிரா.** அரா, அராத்.

*[ஏ → ஏது. ஏ = வினாச்சொல். "ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா" (தொல்.எழுத்.32). ஏது - சுட்டடியாகப் பிறந்தவினாச்சொல். ஏது - காரணங்கருதிய வினாச் சொல்.]*

**ஏது**[4] *ēdu*, பெ. (n.) ***ஏதம்;*** fault, defect. "ஏதிலாக் கற்பம்" (கந்தபு.அவை.15).

*[எய் → எய்தி → ஏதி → ஏது.]*

**ஏது**[5] *ēdu*, பெ. (n.) 1. ***காரணம்;*** cause, origin, basis ultimate cause. "ஏதுவி னுணர்த்தலும்" (தொல்.பொருள்.168). 2. ***துணைக்காரணம்*** (திவா.); instrumental cause. 3. ***முதற்காரணம்*** (வின்); primitive cause, or the material of which a thing is made. 4. ***செல்வம்;*** wealth. அவன் ஏதுவுள்ளவன் (யாழ்ப்.). 5. ***கருதளவை*** (அனுமான) ***உறுப்புகளைந்தனுள் இரண்டாவது;*** (Log.) statement of reason, the second member of an Indian Syllogism, middle term 6. ***காரண காரியங்களை ஒரு சேரக் கூறும் ஓர் அணி வகை*** (தண்டி.57); (rhet) figure of speech which brings together cause and effect and which is sub-divided into Kārakam and ñāpakam 7. ***ஏதுநிகழ்ச்சி*** பார்க்க; see *ēdu-nigalcci* "ஏது முதிர்ந்த திளங்கொடிக் காதலின்" (மணி.7,20). 8. ***பொருட்டு*** (நிமித்தம்); foreboding, foreshadowing, omen, augury

*[ஏந்து → ஏது.]*

**ஏதுஅணி** *ēdu-aṇi*, பெ. (n.) ***யாதானும் ஒரு பொருட்டிற மிதனினிது நிகழ்ந்ததென்று காரணம் விதந்து சொல் லும் அணி*** (அபி.சிந்.); figure of speech

*[ஏது + அணி.]*

**ஏதுக்கருத்தன்** *ēdu-k-karuttaṉ*, பெ. (n) ***ஏவுதற்கருத் தன்*** (இறை 18,பக்.110); indirect agent.

*[ஏது + கருத்தன்.]*

**ஏதுக்கருத்தா** *ēdu-k-karuttā*, பெ. (n.) ***ஏதுக்கருத்தன்*** பார்க்க (தொல்.சொல்.248,உரை); see *ēdukkaruttaṉ*.

**ஏதுங்கெட்டவன்** *ēduṅ-keṭṭavaṉ*, பெ. (n) ***பயனற்ற வன்;*** person of no worth whatever, a good for nothing fellow

*[ஏதுவும் → ஏதும் + கெட்டவன்.]*

**ஏதுநிகழ்ச்சி** *ēdu-nigalcci*, பெ. (n) ***கன்மங்களாகிய காரணங்கள் தத்தம் பயனைக் கொடுத்தற்குத் தோற் றுகை;*** events as the concomitant fruits of previous deeds. "ஏதுநிகழ்ச்சி யெதிர்த்துள தாதலின்" (மணி 3,4).

**ஏதுப்பண்ணு-தல்** *ēdu-p-paṇṇu-*, 15.செ.கு.வி. (v.i.) ***நாடியபொருள் கிடைத்தற்கு வகைசெய்தல்*** (உ.வ.); to endeavour to attain an end, to take steps to achieve one's aim.

*[ஏந்து → ஏது + பண்ணு.]*

**ஏதுப்பார்-த்தல்** *ēdu-p-pār-*, 4.செ.கு.வி. (v.i.) ***நேரம் பார்த்தல்*** (வின்.); to wait for a suitable opportunity.

*[ஏந்து → ஏது + பார்.]*

**ஏதுப்போலி** *ēdu-p-pōli*, பெ. (n.) ***ஏதுவுக்குரிய இலக்க ணமின்றி ஏதுப்போலத் தோன்றுவது*** (மணி.29,141); fallacy, fallacious middle term

*[ஏந்து → ஏது + போலி.]*

**ஏதும்** *ēdum*, பெ. (n) 1. ***சிறிதும்;*** even a little. "ஏதும் நீரிலா தழல்படு வெய்யகான்" (கந்தபு.சுரம்புகு.22). 2. ***ஏதுவும்;*** anything, everything without exception.. கற்பகம் ஏதுந் தரும். 3. ***ஏதாவது;*** something 4. ***ஏதுவாகிலும், எல்லாம்;*** whichever, whatever, whatsoever, all, any.

ம. ஏதும்.

*[ஏது + உம் - ஏதுவும் → ஏதும்.]*

**ஏதுமலைவு** *ēdu-malaivu*, பெ. (n.) ***செய்யுட் குற்றங்களு ளொன்று*** (யாப்.வி.525); defect in poetry.

*[ஏது + மலைவு.]*

**ஏதுவின்முடித்தல்** *ēduviṉ-muḍittal*, பெ. (n.) ***முன் காரணம் விளங்கப் பெறாத தொன்றைப் பின் கார ணத்தால் முடிவு செய்வதாகிய உத்தி*** (நன்.14); (Gram.) subsequent vindication of that which had not been justified previously, one of 32 utti.

*[ஏது + இன் + முடித்தல்.]*

**ஏதேது** *ēdēdu*, பெ. (n.) ***எதுவாயினும்;*** which all, whatsoever.

ம. ஏதேது.

*[ஏது + ஏது - ஏதேது.]*

**ஏதேனும்** *ēdēṉum*, பெ. (n.) ***ஏதாவது, குறைந்த வளவாவது;*** somewhat, a little of something, at least anything.

ம. ஏதேனும்.

*[ஏது + ஆயினும் → ஏதாயினும் → ஏதேனும்.]*

**ஏதை** *ēdai*, பெ. (n.) 1. ***வறிஞன்*** (யாழ்.அக.); poor man. 2. ***பேதை;*** innocent person; ignoramus.

*[ஏழை → ஏதை.]*

**ஏந்தல்**[1] *ēndal*, பெ. (n.) 1. ***மலை*** (அக.நி.); hill. 2. ***முதல்*** (அக.நி.); that which is first. 3. ***உதவி;*** assistance, helpfulness. அவனிருந்தது எவ்வளவோ ஏந்தலாயிருந்தது. 4. ***எளிதிற் செய்துமுடிக்குந் தன்மை;*** ease in accomplishment. அந்தக் காரியம் செய்வது எனக்கு ஏந்தலாயிருக்கிறது

*[ஏ → ஏல் → ஏத்து → ஏந்தல்.]*

**ஏந்தல்**[2] *ēndal*, பெ. (n.) ***இளமை;*** youthfulness.

*[இளந்தை → ஏந்தை → ஏந்தல்.]*

**ஏந்தல்**[3] *ēndal*, பெ. (n.) 1. ***கையேந்துகை;*** stretching out the hands, as a beggar. 2. ***தாங்குகை;*** holding up, raising, supporting. 3. ***தேக்கம்*** (திவ்.திருச்சந்.6,

வியாக்.); wide shallow pool 4. *ஆழமின்மை;* shallowness, as of a utensil. 5. *பயிர்செய்தற்காதாரமாக அமைக்கப்பட்ட ஏரி* (CG), irrigation tank in a flat country 6. *ஏந்திசை* (காரிகை.செய்.1,உரை); rhythm in verse. 7. *உயர்ச்சி;* height, eminence "ஏந்தற் பொற் றோளினாய்"(கம்பரா.சூர்ப்ப.54) 8. *பெருமை* (பிங்.); dignity, greatness 9. *மேடு* (சூடா.); mound 10. *பெருமையிற் சிறந்தோன்;* great man, noble "ஏந்தல்காணா" (கந்தபு.தாரகன்வதை 76). 11. *அரசன்* (திவா.), king 12. *உட்கிடைச் சிற்றூர்;* hamlet or big village 13 *ஊதை நோய்* (இராசவைத்.); paralysis 14. *ஊன்றி நடத்தல், முடம்;* staggering, lameness

*[ஏல் → ஏந்து.]*

**ஏந்தல்வண்ணம்** *ēndal-vannam,* பெ. (n.) *விளக்கத்தின் பொருட்டும் வற்புறுத்துதற் பொருட்டும் மறித்துவரும் சொற்சீர்* (தொல்.பொருள்.543); (pros) rhythm produced by repeating the same word for greater clearness and emphasis, as in. "வைகலும் வைகல் வரக்கண்டும்" (நாலடி.39).

*[ஏ → ஏந்து → ஏந்தல் + வண்ணம்.]*

**ஏந்தானம்** *ēndānam,* பெ (n) 1. *பொருளைத் தாங்குமாறு தொங்கும் தட்டுப்பலகை;* hanging shelf or rack, to set things on 2. *தூக்குதற்கு ஏந்திய கை;* hands or arms extended forward or hooked with another's to carry a child, or a burden

*[ஏந்து + ஏனம் - ஏந்தேனம் → ஏந்தானம் (கொ.வ.).]*

**ஏந்தி** *ēndi,* பெ. (n) *தாங்குபவன்;* bearer, possessor, one enriched with, used in compounds, as புகழேந்தி.

*[ஏந்து → ஏந்தி.]*

**ஏந்திக்கொள்(ளு)-தல்** *ēndi-k-kol-,* 10.செ.குன்றாவி. (vt) 1. *கையாற் றூக்குதல்;* to lift by the hands. 2. *கையாற்றாங்குதல்;* to support by the hands. 3. *கைகொடுத்தல்;* to lend a hand

*[ஏந்தி + கொள்.]*

**ஏந்திசை** *ēndišai,* பெ. (n.) *செய்யுளோசை வகை;* rhythm in verse

*[ஏந்து + இசை.]*

**ஏந்திசைச்செப்பல்** *ēndišai-c-ceppal,* பெ. (n) *வெண்சீர் வெண்டளையாற் பிறக்கும் ஓசை* (காரிகை. செய்.1,உரை); rhythm generally found in Venpa verse and produced by ... நேரசை following any காய்ச்சீர்.

*[ஏந்து + இசை + செப்பல்.]*

**ஏந்திசைத்தூங்கல்** *ēndišai-t-tūngal,* பெ. (n) *ஒன்றிய வஞ்சித்தளையாற் பிறக்கும் ஓசை* (காரிகை.செய்.1, உரை); (pros.) rhythm found in kali verse and produced by நிரையசை following any கனிச்சீர்.

*[ஏந்து + இசை+ தூங்கல்.]*

**ஏந்திசையகவல்** *ēndišai-agaval,* பெ (n) *நேரொன்றாசிரியத் தளையாற் பிறக்கும் ஓசை* (காரிகை.செய்.1, உரை); rhythm found in agaval verse and produced by நேரசை following either of the மாச்சீர்.

*[ஏந்து + இசை + அகவல்.]*

**ஏந்திரம்[1]** *ēndiram,* பெ. (n) 1. *மாவரைக்குந் திரிகை* (பிரபோத.11,34); hand-mill 2. *கரும்பாலை;* sugarcane press

ம. ஏந்த்ரம்; *Skt* yantra.

*[இய → இயந்திரம் → ஏந்திரம்.]*

**ஏந்திரம்[2]** *ēndiram,* பெ. (n.) *மாயக்கலை, கண்கட்டுக் கலை;* magic "ஏந்திர நூழில் செய்யா" (சீவக.2283).

*[இய → இயந்திரம் → ஏந்திரம் (செலுத்துதல், ஏவுதல்).]*

**ஏந்திரம்[3]** *ēndiram,* பெ (n) 1 *மதிலுறுப்பு* (அக.நி.); bastion of a fortified wall 2. *தேர்;* car, chariot.

*[ஏ → ஏண் + திரம் - ஏந்திரம். 'திரம்' - சொல்லாக்க ஈறு.]*

**ஏந்திரவச்சு** *ēndira-v-accu,* பெ. (n) *திரிகையச்சு;* axis or upright shaft about which the upper stone of a hand mill is turned.

*[இயந்திரம் → எந்திரம் + அச்சு - எந்திர அச்சு → ஏந்திரஅச்சு.]*

**ஏந்திலை** *ēndilai,* பெ. (n.) *வேல்;* spear, lance. "ஏந்திலை சுமந்து" (பரிபா.17,2).

*[ஏ → ஏந்து (உயரம்). ஏந்து + இலை - ஏந்திலை (நெடிய இலை முகட்டுவேல்).]*

**ஏந்திழை** *ēndilai,* பெ. (n.) 1. *அழகிய அணிகலன்;* beautiful ornament "ஏந்திழையாட் டருகென்னும்" (பு.வெ.4,24). 2. *பெண்;* woman beautifully decked with jewels. "ஏந்திழை யிவளுக்கு" (திவ்.பெரியதி. 2,7,3).

ம. ஏந்திழ.

*[ஏந்து = உயர்வு, சிறப்பு. ஏந்து + இழை - ஏந்திழை = சிறந்த அணிகலன் அணிந்தவள்.]*

**ஏந்து[1]-தல்** *ēndu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. *உயரத்தூக்குதல்;* to lift 2. *உயரத்தூக்கிப் பிடித்தல்;* to hold a thing after lifting it 3. *கைநீட்டுதல்;* to stretch out the hands நீ தர நான் ஏந்தி வாங்கினேன். 4. *கையிலெடுத்தல்;* to receive in the hands நீரை ஏந்திப் பருகினான். 5. *தாங்குதல்;* to hold in the hands. "அங்குசபாச மேந்தி" (சூடா.). 7. *சுமத்தல்;* to support as a beam. உத்திரத்தைத் தூண் ஏந்தி நிற்கிறது.

*[ஏ → ஏல் → ஏந்து.]*

**ஏந்து[2]-தல்** *ēndu-,* 10.செ.கு.வி. (v.i.) 1. *ஓங்குதல்;* to rise high; to be elevated. "நிலனேந்திய விசும்பும்" (புறநா.2,2). 2. *சிறத்தல்;* to be eminent, excellent, exalted, of fine quality. "ஏந்தியகொள்கையார் சீறின்" (குறள்.899). 3. *மிகுதல்* (தொல்.பொருள்.543,உரை); to be abundant.

ம. ஏந்துக.

*[ஏ → ஏண் → ஏந்து.]*

**ஏந்து³** *ēndu,* பெ. (n.) 1. ***வாய்ப்பானது, வாகு*** (வசதி); convenience. 2. ***காரணம்;*** reason.

*[ஏ → ஏல் → ஏந்து.]*

**ஏந்து⁴** *ēndu,* பெ. (n.) ***முடம்;*** lameness (சேரநா.).

ம. ஏந்து.

*[ஏல் → ஏந்து (காலை ஏந்தி வைத்து நடத்தல்).]*

**ஏந்துகால்** *ēndukāl,* பெ. (n.) ***முடக்கால்;*** lameness. (சேரநா.).

ம. ஏந்துகால்.

*[ஏந்து + கால்.]*

**ஏந்துகுழந்தை** *ēndu-kuḻandai,* பெ. (n.) ***கைக்குழந்தை;*** infant in arms

*[ஏந்து + குழந்தை - ஏந்து குழந்தை (வினைத்தொகை).]*

**ஏந்துகொம்பன்** *ēndu-kombaṉ,* பெ. (n.) 1. ***வளைந்த கொம்பையுடைய யானை;*** elephant with curved tusks. 2 ***நிமிர்ந்து முன் வளைந்த கொம்புள்ள மாடு;*** ox with horns rising abruptly and projecting forward at the points

*[ஏந்து + கொம்பு + அன்.]*

**ஏந்துகொம்பு** *ēndu-kombu,* பெ. (n.) 1. ***யானைக் கொம்பு;*** tusk of an elephant curved upward. 2. ***தாங்கு கொம்பு*** (வின்.); curved pole of the palanquin; pole for carrying a load.

*[ஏந்து + கொம்பு.]*

ஏந்துகொம்பு

**ஏந்துமாந்து** *ēndumāndu,* பெ. (n.) ***உதவி;*** help, assistance (சேரநா.).

ம. ஏந்துமாந்து

*[ஏந்து → ஏந்துமாந்து (எதுகை குறித்த இணைமொழி).]*

**ஏந்தெழில்** *ēndeḻil,* பெ. (n) ***மிக்க அழகு;*** surpassing beauty. ''பூங்குழைக் கமைந்த வேந்தெழின் மழைக் கண்.'' (நெடுநல்.38).

*[ஏந்து + எழில். ஏந்து = உயர்ந்த, சிறந்த.]*

**ஏப்பம்** *ēppam,* பெ. (n) ***தேக்கெறிவு;*** eructation, belch. ''நிணமுண் டேப்ப மிட்டு'' (திருவிசை.கரு.பதி.10,6).

ம. ஏம்பல்.

*[ஏ → ஏப்பம். (வே.க.35).]*

**ஏப்பம்பறி-தல்** *ēppam-paṟi-,* 4.செ.கு.வி. (v.i.) ***ஏப்பம் விடு*** பார்க்க; see *ēppamviḍu.*

*[ஏ → ஏப்பம் + பறி-.]*

**ஏப்பம்விடு-தல்** *ēppam-viḍu-,* 20.செ.கு.வி. (v.i.) ***தேக் கெறிதல்;*** to belch, to eject as of wind, from the mouth - eructate.

*[ஏ → ஏப்பம் + விடு.]*

**ஏப்பமிடு-தல்** *ēppam-iḍu-,* 20.செ.கு.வி. (v.i.) ***ஏப்பம் விடு*** பார்க்க; see *ēppamviḍu.*

*[ஏப்பம் + விடு - ஏப்பம்விடு → ஏப்பமிடு.]*

**ஏப்பமெடு-த்தல்** *ēppam-ēḍu-,* 4.செ.கு.வி. (v.i.) ***ஏப்பம் விடு*** பார்க்க; see *ēppamviḍu.*

*[ஏப்பம் + எடு.]*

**ஏப்பாடு** *ē-p-pāḍu,* பெ. (n.) ***அம்பு விழும் எல்லை*** (பெருங்.உஞ்சைக்.53,68); distance to which an arrow can fly.

*[ஏ + பாடு. படு → பாடு. ஏ = அம்பு. பாடு = படுமிடம், விழும் இடம்.]*

**ஏப்பியன்** *ēppiyaṉ,* பெ. (n.) ***பேதை*** (கொ.வ.); simpleton fool.

*[ஏ → ஏய்ப்பு + அன் - ஏய்ப்பியன் → ஏப்பியன். (எளிதில் ஏமாற்றப்படுபவன்).]*

**ஏப்பிராசி** *ēppirāśi,* பெ. (n.) ***ஏப்பியன்*** பார்க்க; see *ēppiyaṉ.*

க. ஏப்ராசி, எப்ராசி, எப்ரேசி; து. எபுளந்தெ, தெ. எப்பெராசி.

**ஏப்புழை** *ē-p-puḻai,* பெ. (n) ***அம்பு எய்யக் கோட்டை மதிலில் அமைக்கப்பட்டிருக்கும் துளைமாடம்*** (சீவக.105,உரை); loop-hole in a fort-wall for discharging arrows through.

*[ஏ + புழை - ஏப்புழை. ஏ = அம்பு. புழை = துளைமாடம்.]*



ஏப்புழை

**ஏப்பைசாப்பை** *ēppai-šāppai,* பெ. (n.) ***பயனற்றது*** (உ.வ.); that which is useless

*[ஏ → ஏண் → ஏண்பு → ஏப்பு = (உயரம்). சாய் → சாய்ப்பு → சாப்பு (சாய்வு, சரிவு). ஏப்புசாப்பு = ஏற்றத்தாழ்வு, கோணல் மாணல், ஒழுங்கற்றது.]*

**ஏம்**[1] *ēm,* பெ. (n.) 1. ***இன்பம்;*** pleasure,delight. "ஏமுற வினிதி னோம்பி" (கம்பரா.வீபீட.114). 2. ***காப்பு;*** guard "எஞ்சிய பொருள்களை ஏமுறநாடி" (திரு முரு.97).

*[ஏ → ஏம் (வ.மொ.வ.99).]*

**ஏம்**[2] *ēm,* பெ (n.) 1. ***குழப்பம், மயக்கம்;*** perplexity, distraction. "வேனிலத்த மென்னா தேமுற்று" (அகநா.69). 2. ***துன்பம்;*** affliction, suffering.

*[ஏ[3] → ஏம்.]*

**ஏம்பல்**[1] *ēmbal,* பெ. (n.) 1. ***ஆரவாரம்*** (பிங்.); bustle, uproar 2. ***களிப்பு;*** pleasure "ஏம்பலோ டுறையு மாயன்" (காஞ்சிப்பு.சலந்தரீ.17). 3. ***வருத்தம்;*** pain, physical or mental. "மத்திசைதாக்க வேம்பலுற்றனம்" (திருவிளை.பரிநரி.12).

ம. ஏம்பல்.

*[ஏம் → ஏம்பு → ஏம்பல் (சு.வி.77).]*

**ஏம்பல்**[2] *ēmbal,* பெ. (n.) ***உட்கிடைச் சிறுகுடி;*** hamlet attached to a village. நிலமும் ஏம்பல்களும் (S.1.1 viii.209).

*[ஏ → ஏம்பல். ஊரார்க்குத் துணையாகப் பாதுகாப்பு தரும் நோக்கில் அருகில் தோன்றிய குடியிருப்பு.]*

**ஏம்பல்**[3] *ēmbal,* பெ. (n) ***ஏரிப்பாசனமாக அமைந்த நிலம்;*** land cultivated by irrigation from lake 'குடிகாடு அரநிருவி ஏம்பலில் கடமையும்' 'கல்லாத்தான் ஏரிக் கீழை ஏம்பலின் தென்கடைக்கேய் ஏறப்போகவும்' (S.I.I-.VIII,410).

*[ஏ → ஏம்பு → ஏம்பல் = உயர்த்திக்கட்டிய மதகு அல்லது ஏரிக்கரை.]*

**ஏம்பலி-த்தல்** *ēmbali-,* 4.செ கு வி. (v.i.) ***அவாக் கொள் ளுதல்;*** to feel intense ardour, to long ardently. "நின்றாள் சரணென் றேம்பலிப்பார்கட்கு" (தேவா. 1040,8).

*[ஏ → ஏப்பு → ஏம்பல் → ஏம்பலி]*

**ஏம்பு**[1]**-தல்** *ēmbu-,* 5 செ கு வி. (v.i) 1 ***பெருகக்களிப்ப டைதல்;*** to rejoice, to be overjoyed. "மள்ள ரேம்பலோ டார்க்கு மோதை" (கந்தபு ஆற்று.33).

*[எழும்பு → ஏம்பு]*

**ஏம்பு**[2]**-தல்** *ēmbu-,* 5.செ.கு வி. (v.i.) 1. ***வருந்துதல்;*** to suffer "மத்திகை தாக்க வேம்பலுற்றனம்" (திருவிளை பரிநரி.12) 2 ***மனங்கலங்குதல்;*** to be confused in mind

*[ஏ → ஏல் → ஏலல் = அசைதல், தொங்குதல், வருந்துதல், மனம்கலங்குதல். ஏல் → ஏம்பு.]*

**ஏமங்கோலா** *ēman-gōla,* பெ (n) 1. ***மயில்மீன்;*** peacock fish, graj, Histiophorus unmaculatus. 2 ***ஒரு கடல் மீன்;*** sword fish, greyish, Histiphorus breviostris.

*[ஏ → ஏமம் + கோலா. ஏமம் = உயரம், நீளம்]*

**ஏமம்**[1] *ēmam,* பெ (n) 1. ***கலக்கம்*** (பிங்.); perplexity 2. ***உன்மத்தம்*** (திவா.); imbecility, madness, bewilderment "ஏமுறறவரினுமேழை" (குறள் 873)

*[ஏ → ஏம் → ஏம்பல் → ஏமல் → ஏமம் = கவலை, கலக்கம், வருத்தம்.]*

**ஏமம்**[2] *ēmam,* பெ. (n) ***இடுதிரை*** (திவா ); curtain.

*[ஏ → ஏமம் (உயர்த்துவது).]*

**ஏமம்**[3] *ēmam,* பெ. (n) 1. ***காப்பு, பாதுகாப்பு;*** safety "ஏமப்பேரூர்" (தொல்.982). 2. ***இன்பம்*** (திவா.); delight, enjoyment, gratification 3. ***களிப்பு*** (பிங் ); jollity, mirth 4. ***காவல்;*** defence, protection, guard "எல்லா வுயிர்க்கு மேம மாகிய" (புறநா 1,11). 5. ***பொருள் வைப்பு, நலக்குவை*** (சேமநிதி) (திவா ); hoarded treasure, welfare fund

*[ஏ = உயர்வு, உயர்த்தல், தூக்கல், காத்தல். ஏம் → ஏமம் (காவல்).]*

**ஏமம்**[4] *ēmam,* பெ. (n.) ***திருநீறு*** (பிங்.); sacred ashes.

*[ஈம் → ஏம் → ஏமம் (ஈமக்காட்டுச் சாம்பல்).]*

**ஏமம்**[5] *ēmam,* பெ. (n) ***இரவு;*** night; "புறங்காட்டி லேமந்தோறு மழலாடுமே" (தேவா.965,7).

*[இரு → இருள் → இரும் → ஏம் → ஏமம் = இருள், இரவு]*

**ஏமம்**[6] *ēmam,* பெ. (n) ***பொன்;*** gold; "ஏம மீத்த வியல்பினனாகி" (பெருங்.வத்தவ.1,28).

*[எல் = ஒளி. எல் → ஏல் → ஏம் → ஏமம் = பொன்.]*

**ஏமம்**[7] *ēmam*, பெ. (n) 1. ***காவலையுடைய இடம்;*** guarded place "எழின்மணி விளக்கி னேமம் போகி." (பெருங்.உஞ்ஞைக் 34,2). 2. ***வலிமை;*** strength 3. ***மலை;*** mountain

*[ஏ → ஏம் → ஏமம்]*

**ஏமமணல்** *ēma-maṇal*, பெ. (n.) ***பொன்மணல்.***(மூ.அ.); alluvium.

*[ஏமம் + மணல்]*

**ஏம மலை** *ēmamalai*, பெ. (n) ***பொன் விளையும் மலை;*** mountain containing gold ore (சா அக).

*[ஏமம் + மலை.]*

**ஏமரு**[1]**-தல்** *ēmaru-*, 2:செ.கு.வி. (v.i) 1 ***காக்கப்படுதல்;*** to be protected, to be supported "இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்" (குறள் 448). 2. ***களிப்புறுதல்;*** to rejoice, to be elated "ஏமரு புவனமூன்றும்" (கந்தபு மேரு 24).

*[ஏம் + மருவு - ஏமருவு → ஏமரு (கொ.வ.).]*

**ஏமரு**[2]**-தல்** *ēmaru-*, 2 செ.கு வி (vi) ***திகைத்தல்*** (யாழ் அக); to be bewildered or perplexed.

*[ஏம்→ ஏமம் + அறு-தல் - ஏமறு-தல் → ஏமரு-தல் (கொ.வ.).]*

**ஏமல்** *ēmal*, பெ. (n) ***மனக்கலக்கம்.***(இ.வ.); confusion of mind

ம. ஏமல

*[ஏ → ஏம்பு → ஏம்பல் → ஏமல்.]*

**ஏமவெருமை** *ēmaverumai*, பெ (n) ***மன்னர் குடைகள் தம்மில் தலைமயங்கிய வாட்போரில் தானெறிந்த வேல்;*** theme of unyeilding resistance ஒ நோ எருமை மறம்

*[ஏமம் + எருமை]*

**ஏமன்** *ēmaṉ*, பெ. (n.) ***இயமன்*** (சங்.அக.); God of Death

ம. எமன

*[இயமன → ஏமன்]*

**ஏமா**[1]**-தல்** *ēmā-*, 18 செ கு.வி (vi) 1. ***அரணாதல்;*** to be protected by, guarded by "ஏமாப்ப முன்னே யபயறப கை தூண்டி விடுத்து" (பழ.306). 2 ***ஆசைப்படுதல்;*** to desire "அருந்தேமாந்த நெஞ்சம்"(புறநா 101) 3 ***இன்புறுதல்;*** to be exhilarated, be overjoyed, be in an ecstasy, to experience the highest delight "காமர் நெஞ்ச மேமாந் துவப்ப" (புறநா 198,8). 4 ***செருக்குறுதல்;*** to feel proud, to be highly elated "இரங்கு நமக்கம்பலக் கூத்த னென்றென் றேமாந்திருப்பேனை" (திருவாச 21,7)

*[ஏமம + ஆர் ஏமமார் → ஏமார் → ஏமா, (பாதுகாவல் பொருநதுதல், மகிழ்தல், மகிழ்ச்சியில் திளைததல், செருக்கடைதல்). ஏமார்ப்ப, ஏமார்ந்த என்பவை ஏமாப்ப, ஏமாந்த, என இடைக்குறைந்து வழக்கூன்றின. ஏமா என்பது வழுவினை. ஏமமார் என்பதே செவ்விய வினை வழுவினைகளைக் குறைவினை (defective verb) என்பர்.]*

**ஏமா**[2]**-த்தல்** *ēmā-*, 18 செ.கு.வி. (vi.) ***கலக்கமுறுதல்;*** to be distressed "புணர்ந்தோர் நெஞ்சேமாப்ப வின்றுயி றுறந்து" (மதுரைக்.575).

*[ஏமம் + அறு - ஏமமறு → ஏமாறு → ஏமா. (பாதுகாப்பு அறுதல், துன்புறுதல், கலங்குதல்) ஏமா (குறைவினை - defective verb)]*

**ஏமா**[3]**-த்தல்** *ēmā-*, 15.செ குன்றாவி (v.t) ***உறுதிப்படுத்துதல்;*** to be certain "கனவென மருண்ட வென்னெஞ் சேமாப்ப" (பொருந.98).

*[ஏமம் + ஆர் - ஏமமார் → ஏமார் → ஏமா. (குறைவினை) ஆர்த்தல் = சேர்த்தல் ஏமம் = இன்பம், நலம், உறுதி]*

**ஏமாந்துபோ-தல்** *ēmāndu-pō-*, 8.செ.கு.வி. (v.i) ***ஏமாறுதல்;*** to be disappointed அவன் ஏமாந்து போனான். (உ.வ).

ம. ஏமாறுக.

*[ஏமம் + அறுதல் = ஏமாறுதல். ஏமாறு → ஏமாறி → ஏமாந்து + போ.]*

**ஏமாப்பு** *ēmāppu*, பெ. (n) 1. ***அரணாதல்;*** security, safeguard "எழுமையு மேமாப்புடைத்து" (குறள்.126) 2 ***வலியாகை;*** support, stay, strength "எச்சத்திற்கே மாப் புடைத்து" (குறள் 112). 3. ***இறுமாப்பு;*** hauteur, pride "ஏமாப் பிரலை விலங்கலை" (ஞானா.43,25). 4. ***கருத்து*** (திவா.), object, intention, purpose

*[ஏமம் + ஆப்பு - ஏமாப்பு 'ஆப்பு' சொல்லாக்க ஈறு]*

**ஏமார்**[1]**-தல்** *ēmār-*, 18.செ.கு.வி. (vi) ***மனங்கலங்குதல்;*** to be confused, bewildered. "ஏமார்ந் தனமெனச் சென்றுநா மறியின்" (நற்.49).

*[ஏமம் + அறு-தல் - ஏமறு-தல் → ஏமாறு-தல் → ஏமார்-தல்]*

**ஏமார்**[2]**-த்தல்** *ēmār-*, 15.செ.குன்றாவி. (vt) ***வலுப்படுத்துதல்;*** to strengthen, establish firmly, make secure "சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல்" (குறள்.660).

*[ஏமம் + ஆர்-த்தல் + ஏமார்-த்தல்]*

**ஏமாளி** *ēmāḷi*, பெ. (n) ***பேதை;*** simpleton, dunce, fool "நெறியிலாத வேமாளி" (திருப்பு.530).

ம. ஏமாலி

*[ஏமம் + அறு - ஏமறு → ஏமாறு → ஏமாறி →.ஏமாளி.]*

**ஏமாற்றம்** *ēmāṟṟam*, பெ (n) 1 ***ஏய்க்கப்படுதல்;*** state of being defrauded, disappointment. 2. ***ஏய்ப்பு;*** deceit, fraud 3 ***மனக்கலக்கம்;*** confusion of mind, perplexity. "ஏமாற்ற மென்னைத் தவிர்த்தாய்" (திவ் பெரியாழ். 2,7,8).

ம. ஏமாற்றம், **கோத.** ஏமான், **தெ.** ஏமறு, ஏமாறு

*[ஏமம் + அறு - ஏமமறு → ஏமாறு → ஏமாற்றம்.]*

**ஏமாற்று[1]-தல்** *ēmāṟṟu-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***ஏய்த்தல்;*** to hoodwink, disappoint, deceive. "மகனுத்தியினா லவரை யேமாற்ற" (இராமநா.உயுத்த.57).

ம. ஏமாற்றுக.

*[ஏமாறு → ஏமாற்று.]*

**ஏமாற்று[2]-தல்** *ēmāṟṟu-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***ஏமஞ் செய்தல்;*** to defend, protect. "மாற்றே மாற்றலிலையே" (பரிபா.4,53).

*[ஏமம் + ஆற்று - ஏமாற்று.]*

**ஏமாறு[1]-தல்** *ēmāṟu-,* 2.செ.கு.வி. (v.i.) ***அலமருதல்*** (யாழ்.அக.); to be confused, bewildered.

*[ஏமம் + அறு-தல - ஏமமறு-தல் → ஏமறு-தல் → ஏமாறு-தல்.]*

**ஏமாறு[2]-தல்** *ēmaṟu-,* 2.செ.கு.வி. (v.i) ***ஏய்க்கப்படுதல்;*** to be guiled; to be inveigled, defrauded "மோக வலை யூடே யேமாறி" (திருப்பு.622).

*[ஏமம் + அறு - ஏமமறு → ஏமாறு.]*

**ஏமிலாந்தி** *ēmilāndi,* பெ. (n.) 1. ***திகைத்து நிற்பவன்*** (யாழ்ப்.); one who is despondent, confounded, disappointed. 2. ***மனமயக்கமுடையவன்;*** absent-minded, forgetful person

*[ஏம் +இல் - ஏமில் + (ஆழ்ந்தி) ஆந்தி.]*

**ஏமிலாந்து-தல்** *ēmilāndu-,* 10.செ.கு.வி. (v.i.) 1. ***திகைத்து நிற்றல்;*** to despair, stand aghast. 2. ***மனந்தடுமாறுதல்;*** to stare about, not knowing what to do; to be in a fix; to be amazed.

*[ஏம் + இல் - ஏமில் + (ஆழ்ந்து) ஆந்து.]*

**ஏமிலாப்பு** *ēmilāppu,* பெ. (n.) ***மனத்தடுமாற்றம்*** (யாழ். அக.); confusion, bewilderment.

*[ஏமிலாந்து → ஏமிலாப்பு.]*

**ஏமினி** *ēmiṉi,* பெ. (n.) ***இடுதிரை.*** (அக.நி.); curtain.

*[எழினி → ஏமினி (கொ.வ.).]*

**ஏமுறு[1]-தல்** *ēmuṟu-,* 13.செ.கு.வி. (v.i.) 1. ***மகிழ்வுறுதல்;*** to be delighted. "ஏமுறு விளையாட் டிறுதிக்கண்ணும்" (தொல்.பொருள்.147). 2. ***தன்மை திரிதல்;*** to be changed in nature or disposition. "ஏமுறு விரண்டு முளவென மொழிப" (தொல்.பொருள்.109). 3. ***காப்ப டைதல்;*** to be protected, saved. "எஞ்சிய பொருள் களை யேமுற நாடி" (திருமுருகு.97). 4. ***பொருத்தமுறு தல்;*** to be suited, be appropriate. "காமமும் பொருளு மேமுறத் தழுவி" (இலக்.வி.704).

*[ஏம் + உறு.]*

**ஏமுறு[2]-தல்** *ēmuṟu-,* 13.செ.கு.வி. (v.i.) 1. ***வருத்தமுறு தல்;*** to suffer, to be vexed. "ஏமுறுகிளவி" (தொல்.பொ ருள்.146). 2. ***பித்துறுதல்;*** to be mad, insane. "ஏமுற்ற வரினு மேழை" (குறள்.873). 3. ***மயக்கமுறுதல்;*** to be perplexed, bewildered. "ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றி" (திருமுருக.163).

*[ஏம் + உறு.]*

**ஏய்[1]-தல்** *ēy-,* 4.செ.கு.வி. (vi) 1. ***பொருந்துதல்;*** to be suited. "ஏய்ந்த பேழ்வாய்" (திவ்.பெரியதி.1,7,3). 2. ***தகுதல்;*** to be fit "தில்லையூரனுக்கின் றேயாப்பழி" (திருக்கோ.374).

*[இயை → ஏய்.]*

**ஏய்[2]-தல்** *ēy-,* 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஒத்தல்;*** to be similar to. "சேலேய் கண்ணியரும்" (திவ்.திரு வாய்.5,1,8). 2. ***எதிர்ப்படுதல்;*** to meet "போயினசின் னான் புனத்து மறையினா லேயினா ரின்றியினிது" (ஐந்.ஐம்.11).

*[இயை → ஏய்.]*

**ஏய்[3]** *ēy,* இடை. (part.) ***மறுத்தற்கும் கூப்பிடுதற்கும் பயன்படுத்தும் இடைச்சொல்;*** interjection for negation and for calling attention.

*[ஏ → ஏய் (ஒலிக்குறிப்பு).]*

**ஏய்[4]-த்தல்** *ēy-,* 4 செ குன்றாவி. (v t) 1 ***பொருந்தச் சொல்லுதல்;*** to tell a seeming truth. "பொய்குறளை யேய்ப்பார்" (பழ.77). 2. ***ஒத்தல்;*** to resemble, to be like, be similar to. "அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்ப" (புறநா.33,17). 3. ***வஞ்சித்தல்;*** to deceive cheat, defraud.

ம. ஏ.

*[இயை → ஏய் → ஏய்த்தல்.]*

**ஏய்ப்ப** *ēyppa,* இடை.. (part.) ***ஓர் உவமவுருபு*** (தொல். பொருள்.290); adverbial word of comparison.

*[இயை → இயைப்ப → ஏய்ப்ப.]*

**ஏய்ப்பிலேவட்டன்** *ēyppilēvaṭṭaṉ,* பெ. (n.) ***மதிகேடன்*** (யாழ்.அக.); one who is easily duped; dupe; fool.

*[எய்ப்பு → ஏய்ப்பு + இல் + ஏ + வட்டன்.]*

**ஏய்ப்பு** *ēyppu,* பெ. (n.) ***ஏமாற்று;*** deceit, fraud.

*[இயைப்பு → ஏய்ப்பு.]*

**ஏய்ப்புக்காட்டு-தல்** *ēyppu-k-kāṭṭu-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***ஏமாற்றம் செய்தல்;*** to dupe, circumvent, deceive, defraud.

*[ஏய்ப்பு + காட்டு.]*

**ஏய்வு** *ēyvu,* பெ. (n.) ***உவமை*** (திவா.); comparison, likeness, resemblance.

ம. ஏய்வு (இணைப்பு).

*[இயைவு → ஏய்வு.]*

**ஏய[1]** *ēya,* இடை. (part.) ***ஓர் உவமவுருபு*** (தண்டி.33); adverbial word of comparison.

*[இயை → இயைய → ஏய.]*

**ஏய²** *ēya-*, பெ.எ. (adj.) ***பொருந்திய, ஏற்புடைய;*** appropriate, suitable "ஏயதன்மை இருவருந்தேர்ந் தரோ" (கந்தபு.அசுரேந்திரன்.மகேந்திரஞ்.47).

*[இயைய → ஏய.]*

**ஏயம்** *ēyam*, பெ. (n.) ***தள்ளத்தக்கது;*** that which deserves to be abandoned. "இது ஏயம், இது உபாதேயம்... என்று நிச்சயித்து" (சி.சி.258,சிவாக.).

*[இய → ஏ = செல்லுதல், நீங்குதல், ஏ → ஏயம் = நீக்கத்தக்கது.]*

**ஏயர்** *ēyar*, பெ. (n) ***வடபுலத்து ஆயர்குடியின் கிளைமரபினர்;*** descendants of Hehaya, one of Yadhava races. "ஏயர்க்கென்று நிலத்தொடு தொடர்ந்த குலப்பகை" (பெருங்.வத்தவ.8,44).

*[ஆயர் → ஏயர் (கொ.வ.).]*

**ஏயர்குலம்** *ēyarkulam*, பெ. (n.) ***மிருகாவதியின் தந்தை குலம்*** (பெருங்.) (அபி.சிந்.); paternal lineage of Mrugavathi of Perungathai

*[ஆயர் → ஏயர் + குலம்.]*

**ஏயர்கோன்கலிக்காம நாயனார்** *ēyar-koṉ-kalikkāma-nāyaṉār*, பெ. (n.) ***அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்*** (பெரியபு.); name of a canonized Śaiva Śaint.

*[ஆயர் → ஏயர் (வடதமிழ்). ஏயர் + கோன் + கலி + காமன் + நாயனார்.]*

**ஏயான்** *ēyāṉ*, பெ. (n.) ***ஒரு தொழிலைச் செய்யத்தகாதவன்*** "மாவலியை யேயானிரப்ப" (திவ்.பெரியதி. 1,5,6); he who is too exalted to do an act.

*[இயை + ஆ + அன் - இயையான் → ஏயான் (கொ.வ.).]*

**ஏயில்** *ēyil*, பெ. (n.) ***இசை*** (ஈடு.4,6,2); song, music.

*[ஏழில் → ஏயில் (கொ.வ.).]*

**ஏயெனல்** *ē-y-eṉal*, பெ. (n.) ***ஒரு விரைவுக் குறிப்பு;*** onom, expr. of rapidity as uttering the sound "ஏயெனு மாத்திரத்து" (கம்பரா.பள்ளி.72).

*[ஏய் + எனல்.]*

**ஏயே** *ē-y-ē-*, இடை. (int.) ***இகழ்ச்சிக் குறிப்பு*** (திவா.); exclamation expressive of ridicule.

*[ஏ + ஏ.]*

**ஏர்¹-தல்** *ēr-*, 2.செ.கு.வி. (v.i.) ***எழுதல்;*** to rise. "பனிக்கடல் பருகி வலனேர்பு" (முல்லை.4).

*[எல் → (எழு) → ஏர்.]*

**ஏர்²-தல்** *ēr-*, 2.செ.குன்றாவி. (v.t.) ***ஒத்தல்;*** to be like, similar. "முத்தேர் முறுவலார்" (இனி.நாற்.2).

*[எல் → (எழு) → ஏல் → ஏர்.]*

**ஏர்³** *ēr*, பெ. (n.) 1. ***கலப்பை;*** plough. "ஏரி னுழாஅ ருழவர்" (குறள்.14). 2. ***ஒரு கலப்பையும் ஓரிணைமாடும்;*** team of oxen and plough. "ஏருமிரண்டுளதாய்" (தமிழ்நா.60). 3. ***உழவுமாடு*** (சூடா.); yoke of oxen. 4. ***உழவு;*** ploughing, agriculture, as an occupation "ஏரினு நன்றா லெருவிடுதல்" (குறள்.1038). 5. ***ஒரு நாளி லுழக்கூடிய நிலம்;*** as much land as can be ploughed in a day

ம. ஏர்; க. ஏரு, ஆர், கோத. ஏர்; துட. ஏர்; தெ. ஏரு, கொலா. சேர், பர். இரெர், கோண். சேர்; கூ. சேரு; குவி. கேரு; பிரா. அரே.*E* ear to plough, *AS* erian, *L* aro, *Gr* aroo-(rootar), to plough, *E* arable = that can be ploughed

*[இல் → ஈல் → ஈர் → ஏர் (மண்ணைப் பிளப்பது, மண்கட்டிகளை உடைத்து இழுத்துச் செல்வது).]*

**ஏர்⁴** *ēr*, பெ (n.) 1. ***எழுச்சி;*** development, growth. "ஏரு மெழிலு மென்றா" (தொல்.பொருள்.247). 2. ***தோற்றப் பொலிவு;*** handsome appearance, bearing. "சீய மன்னானிளமையும் வனப்பு மேரும்" (சீவக. 1721). 3. ***அழகு;*** beauty. "கடனறிவார் முன்னின் றிரப்புமோரே ருடைத்து" (குறள்.1053). 4. ***நன்மை;*** goodness "ஏரளவில்லா வளவினர்" (திருக்கோ.308).

*[ஏ → ஏர்.]*

**ஏர்⁵** *ēr*, பெ. (n.) ***நற்சீரகம்;*** cummin seed - cuminum cyminum. (சா.அக.).

*[ஈர் → ஏர். ஏ → ஏர். ஏர் = நீட்சி.]*

**ஏர்க்கட்டு** *ēr-k-kaṭṭu*, பெ. (n.) ***ஏர்ப்பூட்டு;*** first ploughing.

*[ஏர் + கட்டு.]*

**ஏர்க்களம்** *ēr-k-kaḷam*, பெ. (n) ***நெற்களம்;*** threshing floor. "ஏர்க்களம் பாடும் பொருநரும் போர்க்களம் பாடும் பொருநரும்" (தொல்.பொருள்.91,உரை).

*[ஏர் + களம்.]*

**ஏர்க்களவுருவகம்** *ēr-k-kaḷa-vuruvagam*, பெ. (n.) ***போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகப்படுத்தும் புறத்துறை*** (புறநா.369); (Purap) literary theme of metaphorically describing the battle-field as a threshing floor.

*[ஏர் + களம் + உருவகம்.]*

**ஏர்க்காடி** *ēr-k-kāḍi*, பெ. (n.) ***ஏர்க்காணிக்கை, வரி வகை.*** (S.1.1.vi.155); tax

*[ஏர் + காணி. காணம் → காணி → காடி.]*

**ஏர்க்காணிக்கை** *ēr-k-kāṇikkai*, பெ. (n.) ***ஏர்வரி*** (m.m.); plough tax.

*[ஏர் + காணிக்கை.]*

**ஏர்க்கால** *ēr-k-kāl*, பெ. (n.) 1. ***கலப்பை, வண்டியிவற்றின் நுகங் கொளுவும் உறுப்பு;*** shaft, as of a plough or of a carriage; thill. 2. ***ஆரக்கால்;*** spoke of a wheel.

ம. ஏர்க்கால்.

*[ஏர் + கால்.]*

**ஏர்க்குளி** *ērkkuḷi,* பெ. (n) ***சீப்பு முதலியன செய்யவுத வும் மரவகை;*** (Nels), white hard wood

*[ஈர் + கொளி - ஈர்க்கொளி → ஈர்க்குளி → ஏர்க்குளி (கொ வ.)]*

**ஏர்க்குறிப்பு** *ēr-k-kuṟippu,* பெ. (n) ***ஏர்விடுதலைக் குறிக்கும் அன்றாடக் கணக்கு*** (MM.); daily account of ploughs at work

*[ஏர் + குறிப்பு.]*

**ஏர்கட்டு-தல்** *ēr-kaṭṭu-,* 5.செ.கு.வி. (vi) ***நிலத்தில் உழவுமாட்டைப் பூட்டி உழத் தொடங்குதல்;*** to yoke the plough நல்ல அந்தியோர் கட்டுகிற நேரம். (உ.வ.).

*[ஏர் + கட்டு.]*

**ஏர்ச்சீர்** *ēr-c-cīr,* பெ. (n) 1. ***உழவுத் தொழிலுக்குரிய கருவிகள்;*** implements or husbandry. ஏர்ச்சீரில்லாத வன். 2. ***வேளாண்மையால் வருஞ்செல்வம்*** (வின்.); wealth produced by husbandry

ம. ஏருசீரு.

*[ஏர் + சீர்.]*

**ஏர்த்தாயம்** *ēr-t-tāyam,* பெ. (n.) ***பருவகாலத்து உழவு*** (வின்.); ploughing in season.

*[ஏர் + தாயம்.]*

**ஏர்த்தொழில்** *ērttoḻil,* பெ. (n.) ***உழவுத் தொழில்;*** husbandry, calling of a tiller.

*[ஏர் + தொழில்.]*

**ஏர்த்தொழிலர்** *ēr-t-toḻilar,* பெ. (n.) ***உழுதுண்போர்*** (திவா.); agriculturists, husbandmen, tiller.

*[ஏர் + தொழில் + அர்.]*

**ஏர்நாழி** *ēr-nāḻi,* பெ. (n.) ***கலப்பை யினோருறுப்பு*** (வின்.); small circular piece of wood with a hole in the centre to receive the cord, vaḍa-k-kayiṟu, by which polughmen can regulate the depth of a furrow.

*[ஏர் + நாழி.]*

**ஏர்ப்ப** *ērppa,* இடை. (part.) ***ஓர் உவமவுருபு*** (தொல்.பொருள்.286,உரை); adverbial word of comparison.

*[ஏல் → ஏர் → ஏர்ப்ப.]*

**ஏர்ப்பண்** *ēr-p-paṇ,* பெ. (n.) ***பூட்டாங்கயிறு*** (வின்.); ropes for attaching the oxen to the plough and the plough-beam to the yoke.

*[ஏர் + பூண் - ஏர்ப்பூண் → ஏர்ப்பண் (கொ.வ.).]*

**ஏர்ப்பு** *ērppu,* பெ. (n.) ***ஈர்ப்பு***[2] பார்க்க; see *īrppu*[2].

**ஏர்ப்பூட்டு** *ēr-p-pūṭṭu,* பெ. (n.) ***முதலுழவு;*** ploughing for the first time in the season on an auspicious day, begun with appropriate ceremonies.

*[ஏர் + பூட்டு.]*

**ஏர்ப்பொன்** *ēr-p-poṉ,* பெ. (n.) ***வரிவகை*** (S.1.1.vi.155); tax.

*[ஏர் + பொன்.]*

**ஏர்பு** *ērpu,* பெ. (n.) ***எழுச்சி*** (பிங்.); ascent, elevation rising of a heavenly body.

*[ஏர் → ஏர்பு.]*

**ஏர்பூட்டு-தல்** *ēr-pūṭṭu-,* 5.செ.கு.வி. (v.i.) ***ஏரில் மாடு கட்டுதல்;*** to yoke the oxen to the plough. "ஏர்பூட்டி னல்லது" (ஏரெழு.17).

*[ஏர் + பூட்டு. பூண் (த.வி.) → பூட்டு (பி.வி.).]*

**ஏர்மங்கலம்** *ēr-mangalam,* பெ. (n) ***பொன்னேர்பூட்டிப் பாடும் மங்கலப் பாட்டு;*** ancient song of benediction sung at the commencement of ploughing. "ஏரொடு நின்றோ ரேர்மங்கலமும்" (சிலப்.10,135).

*[ஏர் + மங்கலம்.]*

**ஏர்வாரம்** *ēr-vāram,* பெ. (n.) 1. ***ஏருக்காகக் கொடுக்கும் விளைவுப் பங்கு*** (வின்.); share of produce allowed for the team and agricultural implements used in cultivating the land

*[ஏர் + வாரம்.]*

**ஏர** *ēra,* இடை. (part) ***ஓர் உவம உருபு*** (தொல். பொருள்.286,உரை); adverbial word of comparison.

*[ஏல் → ஏல → ஏர.]*

**ஏரகம்** *ēragam,* பெ. (n.) 1. ***திருவேரகம்;*** Udipi in S. Kanara, sacred to Skanda, one of the six paḍaiviḍu. "ஏரகத் துறைதலுமுரியன்" (திருமுரு.189). 2. ***சுவாமி மலை*** (Mod.); Swamimalai in the Tanjavūr Dist.

*[ஏர் + அகம் - ஏரகம். ஏர் = அழகு.]*

**ஏரங்கம்** *ēraṅgam,* பெ. (n.) ***மீன் வகை*** (சங்.அக.); a kind of fish.

ம. ஏரங்கம்.

*[ஏர் → ஏரங்கம்.]*



ஏரங்கம்

**ஏரங்காடு** *ēraṅ-gāḍu,* பெ. (n.) ***எரங்காடு*** பார்க்க (இ.வ.); ; see *eraṅgāḍu.*

*[எரி → எர → ஏரங்காடு = செம்மண் பாங்கான நிலத்திலுள்ள காடு.]*

**ஏரடம்** *ēraḍam*, பெ. (n.) ***இடி*** (சங்.அக.); thunder.

*[ஏறு + இடி - ஏறிடி → ஏறிடம் → ஏறடம் → ஏரடம் (கொ.வ.).]*

**ஏரடி-த்தல்** *ēr-aḍi-*, 4.செ.கு.வி. (v.i.) ***உழுதல்;*** to plough.

**ம.** ஏரடிக்குக.

*[ஏர் + அடி.]*

**ஏரண்டப்புள்** *ēranḍappuḷ*, பெ. (n) ***ஏரண்டம்²*** பார்க்க; see *ēranḍam.²*

**ஏரண்டம்¹** *ēranḍam*, பெ. (n.) 1. ***ஆமணக்கு*** (பிங்.); castor-plant. 2. ***ஆமணக்கிலிருந்து உண்டாகும் பொருள்கள்*** (தைலவ.தைல.9&54); products of the castor plant.

**ம.** ஏரண்டம்.

*[எரி + அண்டம் - எரியண்டம் → ஏரண்டம். (செவ்வாமணக்கு).]*

**ஏரண்டம்²** *ēranḍam*, பெ. (n) ***கண்ட பேரண்டப் பறவை;*** two-headed bird "ஏரண்ட வென்றிப் புள்ளுக் கிரையாவாய்" (வேதாரணி.தேவல.12).

**ம.** ஏரண்டம்

*[ஈர் + உண்டு - ஈருண்டு → ஈரண்டி → ஏரண்டி → ஏரண்டம் (நகத்தால் குத்தி அலகால் பிளந்து கொன்றுண்ணும் பறவை) ]*

**ஏரண்டன்** *ēranḍan*, பெ (n.) ***ஓர் இயற் பெயர்;*** name of a person ஏரண்டமுனிவர்.

**ஏரணம்¹** *ēraṇam*, பெ. (n) ***காரணங் காட்டி மெய்ப்பிக்கும் அறிவியல்;*** logic. "ஏரணங் காணெனன்ப ரெண்ணர்" (திருக்கோ.நூற்சிறப் )

*[ஏர் = நேர், பொருத்தம், செப்பம். ஏர் + அணம் - ஏரணம் 'அணம்' சொல்லாக்க ஈறு. ஏரணம் = நேரே பொருத்திக் காரணங்காட்டி உண்மைகளை உறுதிப்படுத்திச் சொலலாடும் கலைத்திறன்.]*

**ஏரணம்²** *ēraṇam*, பெ. (n) ***மறைந்துபோன சொற்போர்*** (தருக்கம்) ***கலைநூல்;*** an extinct treatise in Tamil on logic "ஏரணம் உருவம் ஓகம் இசைகணக்கு... அன்ன நூல் யாவும் வாரி, வாரணம் கொண்ட தந்தோ வழி வழிப் பெயரும் மாள." (தனிப்பா.).

*[ஏர் → ஏரணம்.]*

**ஏரம்பம்¹** *ērambam*, பெ. (n) 1. ***யானை*** (நாமதீப.); elephant 2 ***வேளாண்மை;*** agriculture

*[ஏ → ஏர் → ஏரம்பம் (உயரமானது, உழவு).]*

**ஏரம்பம்²** *ērambam*, பெ (n) ***ஒரு கணித நூல்*** (குறள் 392,உரை); treatise on mathematics

*[ஏர் → ஏரம்பம். கீழ்வாயிலக்கக் கணக்கிற்கு எதிரான மேல் வாயிலக்கக் கணக்கு, வடிவக் கணக்கு, வானநூல் கணக்கு போன்றவை பற்றிய நூலாகலாம்.]*

**ஏரரத்தை** *ērarattai*, பெ. (n.) ***பேரரத்தை;*** greater galangal. (சா.அக.).

*[ஏர் + அரத்தை.]*

**ஏரல்** *ēral*, பெ. (n.) ***கிளிஞ்சில்*** (திவா.); mussel or other bivalve animal, snail ஏரல் எழுத்துப் போல்வ தோர் விழுக்காடு (குறள்.பரி.உரை).

**ம.** ஏரல்.

*[ஈர் → ஏர் → ஏரல்.]*

**ஏரா¹** *ērā*, பெ. (n.) ***கப்பலின் அடிப்பொருத்து மரம்*** (யாழ்ப்.); keel of a ship.

**ம.** ஏரா.

*[ஆர் → ஏர் → ஏரா. ஆர் = பொருத்துதல்.]*

**ஏரா²** *ērā*, பெ. (n.) ***ஏராக்கள்*** பார்க்க (யாழ்ப்.); see *ērākkaḷ.*

**ஏராக்கள்** *ērākkaḷ*, பெ. (n) ***பனை மரத்துப் பாளையிலிருந்து இறக்கும் இனிய பனஞ்சாறு;*** sweet sap extracted from the spathe of the palmyra tree (சா.அக.).

*[எர் → ஏரா (கள்ளின் தன்மை நிரம்பாத) + கள்.]*

**ஏராண்மை** *ērāṇmai*, பெ. (n) ***உழவு*** (யாழ்ப்.); ploughing, tillage, agriculture.

*[ஏர் + ஆண்மை ]*

**ஏராப்பலகை** *ērā-p-palagai*, பெ. (n) ***கப்பலின் அடிமரம்*** (யாழ்ப்.); keel of a ship

*[ஆர் → ஏர் → ஏரா + பலகை.]*

**ஏராமரம்** *ērā-maram*, பெ. (n.) ***ஏராப்பலகை*** பார்க்க; see *ērāppalagai.*

**ஏராளட்டவணை** *ēr-āḷ-aṭṭavaṇai*, பெ. (n) ***ஏரையும் உழவுசெய்வோரையுங் காட்டும் குறிப்பு*** (m.m.); list of the ploughs and labourers in a village

*[ஏர் + ஆள் + அட்டவணை.]*

**ஏராளம்** *ērāḷam*, பெ (n) ***மிகுதி;*** abundance, plenitude "ஏராளமாக் கோலமெழுதிய தரைகளும்" (இராமநா. சுந்.3).

**தெ.** ஏராளமு, பேராளமு; **க.** ஹேராள, **து.** ஹேராள

*[ஏர் + ஆளம் - ஏராளம். ஏரை ஆள்வதால், வேளாண்மை செய்வதால் உண்டாகும் மிகுவிளைச்சல். ஒன்றுக்கு நூறாக விளைதல்.]*

**ஏராளர்** *ēr-āḷar*, பெ. (n) 1. ***உழவர்;*** husbandmen, agriculturists, cultivators, ploughmen 2. ***வீரர்;*** brave men, heroes (சேரநா.).

**ம.** ஏராளன்.

*[ஏர் + ஆள் + அர்.]*

**ஏரி** *ēri*, பெ. (n) 1. ***இயற்கையாகப் பள்ளத்தில் தேங்கிய பெரிய நீர்நிலை;*** lake 2. ***செய்கரை நீர்நிலை;*** embanked lake 3. ***பாசனத்திற்குப் பயன்படும் நீர் நிலை;*** reservoir for irrigation. 4. ***பக்கக்கரைகளைக் காப்பாகக் கொண்ட பெரிய நீர்நிலை;*** large tank, a lake with banks. "ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்

லால்'' (திவ்.இயற்.2,16). 5. *எருத்துத்திமில்;* hump of a bull ஏரி நிமிர்ந்தா லிடையனையும் பாராது. (யாழ்ப்.). 6. *கொழுத்துள்ள பிடர்;* prominence on the nape of the neck, through corpulence அவனுக்கு ஏரி முற்றிப் போயிற்று (வின்.). 7. *கழை* (புனர்பூசம்); star

ம., க., குட., து. ஏரி

*[ஏ → ஏர் → ஏரி (உயர்ந்த கூரையை உடையது).]*

**ஏரிப்பட்டி** *ēri-p-paṭṭi,* பெ. (n) *ஏரியைக்காக்கும் பணிக் காகக் கொடுக்கப்படும் மானியம்* (S 1 1 III,225), endowment made for carrying out repairs to the tank

*[ஏரி + பட்டி.]*

**ஏரிப்பாய்ச்சல்** *ēri-p-pāyccal,* பெ. (n) *ஏரிநீர்ப்பாசனம்;* irrigation from a tank

*[ஏரி + பாய்ச்சல்.]*

**ஏரிப்பாய்ச்சி** *ēri-p-pāycci,* பெ. (n) *மீன்பிடி வரி.* (MNAD 1,287); fish rent.

*[ஏரி + பாய்ச்சி. பாய்ச்சி = மீன்.]*

**ஏரிமேரை** *ēri-mērai,* பெ. (n) *ஏரி, மதகு, கலிங்கல் இவைகளின் புதுப்பிக்கும் செலவிற்காக ஒதுக்கப்படும் விளைச்சலின் பகுதி* (WG), portion of the crop set apart to meet the expense of keeping the reservoir, watercourses etc in good repair

*[ஏரி + மேரை. மேலி → மேரி → மேரை (மேலாக அல்லது கூடுதலாகத் தரப்படும் வரி, பங்கீடு).]*

**ஏரிவாரியத்தார்** *ēri-vāriyattār,* பெ. (n) *ஏரியை மேற்பார்வையிடும் குழுவினர்* (Insc ), local committee of ancient times which functioned as a supervising body over tanks and irrigation

*[ஏரி + வாரியம் + அத்து + ஆர். 'அத்து' - சாரியை.]*

**ஏரிவாரியம்** *ēri-vāriyam,* பெ. (n.) *ஏரிவாரியத்தார்.* (IMPNA 17) பார்க்க; see *ērivāriyattār*

**ஏரிவாளை** *ēri-vāḷai,* பெ. (n) *வாளைமீன்வகை;* fresh-water fish



ஏரிவாளை

**ஏரின்வாணர்** *ērin-vāṇar,* பெ. (n) *ஏரின்வாழ்நர்* பார்க்க (திவா.); see *ērinvāḻnar.*

**ஏரின்வாழ்நர்** *ērin-vāḻnar,* பெ. (n.) *உழவுத் தொழில் செய்து அதனால் வாழ்பவர்* (திவா.); agriculturists, as those who live by the plough.

*[ஏர் + இன் + வாழ்நர். 'இன்' ஐந்தன் உருபு.]*

**ஏருழவர்** *ēr-uḻavar,* பெ. (n) *ஏர்கொண்டுழுபவர்;* plough tillers. ''வில்லே ருழவர் பகை கொளினும்'' (குறள்.872).

*[ஏர் + உழவர்.]*

**ஏருழவு** *ēr-uḻavu,* பெ. (n.) 1. *வேளாண்மை;* ploughing, tillage, agriculture. 2. *ஒரு நாளில் இரண்டேரைக் கொண்டு உழக்கூடிய நிலம்* (G.Sm.D.1,288), extent of land that can be ploughed by two pairs of the plough.

*[ஏர் + உழவு.]*

**ஏரெழுபது** *ēr-eḻupadu,* பெ. (n) *ஏரைப்புகழ்ந்து கம்பர் பாடிய ஒரு நூல்;* poem by Kamban containing 70 stanzas in praise of the plough

*[ஏர் + எழுபது.]*

**ஏரோட்டு-தல்** *ēr-ōṭṭu-,* 5.செ.குன்றாவி (vt) *உழுதல்;* to plough

*[ஏர் + ஓட்டு-தல்.]*

**ஏரோர்** *ērōr,* பெ (n.) *உழுவோர்;* ploughmen. ''ஏரோர் களவழித் தேரோர் தோற்றிய'' (தொல்.பொருள்.76).

*[ஏர் + ஆர் - ஏரார் → ஏரோர்.]*

**ஏல்¹(ற்)-த(ற)ல்** *ēl-,* 14 செ.கு வி. (vi) 1. *தகுதல்;* to be suitable convenient, just ''ஏலா விடரொருவ ருற்றக்கால்'' (நாலடி 113). 2. *மாறுபடுதல்;* to change. ''ஏலாதான் பார்ப்பான்'' (நான்மணி.54).

*[ஈல் → ஏல்.]*

**ஏல்²(ற்)-த(ற)ல்** *ēl-,* 14.செ கு.வி. (vi) 1. *துயிலெழுதல்;* to awake from sleep ''நீ துஞ்சியேற்பினும்'' (கலித்.12) 2 *நிகழ்தல்;* to happen, occur. ''ஏற்றதை யுணர் கிலமென்று'' (பாரத.வாரணாவத 21). 3 *மிகுதல்;* to be excessive to abound, ஏற்கக் கொடுத்தான்.

*[எல் → ஏல்.]*

**ஏல்³(ற்)-த-(ற)-ல்** *ēl-,* 9.செ.குன்றாவி. (vt) 1. *எதிர்கொள்ளுதல்* (சூடா.); to receive, welcome. 2. *ஒப்புக்கொள்ளுதல்;* to admit, accept, consent, concede; to embrace, adopt ''செய்வெனென் றேன்றபின்'' (கம்பரா. கிளை 126) 3 *மேற்கொள்ளுதல்;* to undertake, enter upon, engage in, take charge of ''என்றேனடிமை'' (திவ்.இயற்.4,95). 4 *அன்புகூர்தல்;* to love ''ஏற்ற துணைப் பிரிந்தார்'' (திணைமாலை.106). 5. *இரத்தல்;* to stretch out the hands in supplication, to beg, as alms

*[இல் → எல் → ஏல்.]*

**ஏல்⁴(ற்)-த-(ற)-ல்** *ēl-*, 9.செ.குன்றாவி. (vt.) 1. ***எதிர்த்தல்;*** to oppose in battle, to encounter, as a foe "ஏன்றடு விறற்களம் பாடி" (திருமுருகு 55). 2. ***சுமத்தல்;*** to bear, lift up, carry. "விறகேற்று விலைகூறி யதை" (அருட்பா.1,நெஞ்சறி.255). 3. ***ஒத்தல்*** (தண்டி.33); to be equal, similar

**க.** ஏர் (போரில் எதிர்த்தல்); **து.** ஏர்சாவுண் (அடித்தல்).

*[இல் → எல் → ஏல்.]*

**ஏல்⁵** *ēl*, பெ. (n) 1. ***பொருத்தம்;*** suitability, appropriateness, fitness "மாலை யேலுடைத்தாக.. அணிந்தும்" (திருவாச.2,114). 2. ***உணர்ச்சி;*** revival, esp of one in swoon or in depressing grief "ஏல்பெற்று... கண்ணாள் புலம்பா வெழுந்திருப்ப" (சீவக.1810).

**ம.** ஏல்.

*[உல் → இல் → எல் → ஏல்.]*

**ஏல்⁶** *ēl*, பெ. (n) ***ஏரல்*** பார்க்க; see *ēral*.

**ஏல்⁷** *ēl*, இடை. (part) ***எதிர்மறை யேவலொருமை ஈறு;*** neg im sing, ending, as in ஈவது விலக்கேல்

*[ஆ → ஆல் → ஏல்.]*

**ஏல்⁸** *ēl*, வி.எ. (adv) ***என்றால்;*** if, used as an ending in a conjunctional sense as in வந்தாயேல்.

*[ஆல் → ஏல்.]*

**ஏல்⁹** *ēl*, பெ. (n) ***கிளிஞ்சில்;*** bivalve shell-fish. (சா.அக.).

*[ஏரல் → ஏல்]*

**ஏல்வை¹** *ēlvai*, பெ (n) ***காலம்;*** time, period, season, occasion "அரசாள்கின்ற வேல்வை" (உத்தரரா.சம்பு வன்.6). 2 ***நாள்*** (சூடா.); day. 3. ***நீர்நிலை*** (பிங்.); tank; large expanse of water

*[எல் (பொழுது) → ஏல் → ஏல்வை]*

**ஏல்வை²** *ēlvai*, பெ. (n) ***வரிவகை*** (S.1 1 v 96); a tax

*[ஏல்வை - நீர்நிலைக்காக வாங்கப்பட்ட வரியாகலாம்]*

**ஏல** *ēla*, கு வி.எ. (adv) 1. ***முன்னமே;*** already, beforehand "பிரளயம் வருமென் றேலக் கோலி" (ஈடு 2,8,7). 2. ***மிக;*** liberally, vastly. "கல்வியேலவ மைந்த பெருமை பெற்றும்" (திருக்காளத்.4,3,8).

*AS* oer, *E* ere, before, *Goth* air, soon, *E* early, from oer

*[ஏல் → ஏல (க.வி.78)]*

**ஏலக்கம்** *ēlakkam*, பெ (n.) ***கடினவேலையின் பொழுது ஊக்குவிக்க எழுப்பும் ஒலி;*** cry to encourage one another in hard work (சேரநா.).

**ம.** ஏலக்கம்

*[ஏல → ஏலக்கம். ஏல - கெழுதகைப் பொதுச் சொல்லாக வரும் விளி.]*

**ஏலக்காய்** *ēla-k-kāy*, பெ. (n) ***ஏலச்செடியின்காய்;*** cardamom

**க.** ஏலக்கி, ஏளக்கி, யாலக்கி; **து.**, **குட.** ஏலக்கி; **தெ.** ஏலகி. *Guj* ēlaci; *Beng* ilāyaja; *Hin* ilāyacī; *Mar* elāci, ēlāci, *Skt* ēlika.

*[ஏலம் + காய். ஏ → ஏல் → ஏலம் (உயர்ந்த மணம் வீசுவது).]*

**ஏலக்கோலம்** *ēla-k-kōlam*, பெ. (n.) ***அணியம்*** (யாழ். அக.); readiness, preparedness.

*[ஏல் + கோலம் - ஏலக்கோலம்.]*

**ஏலங்கேள்(ட்)-த(ட)ல்** *ēlaṅ-kēl-*, 12.செ.கு.வி. (v.i) ***ஏலவிலையை ஏற்றி அல்லது குறைத்துக் கேட்டல்;*** to bid at an auction

*[ஏலம் + கேள்.]*

**ஏலச்சீட்டு** *ēla-c-cīttu*, பெ. (n.) ***ஏலங்கேட்டெடுக்குங் கூட்டுச் சீட்டு;*** periodical deposit of money, the net collections being auctioned away to the lowest bidder on each occasion

*[ஏலம் + சீட்டு]*

**ஏலப்பாட்டு** *ēla-p-pāttu*, பெ. (n) ***படகோட்டிகளின் பாட்டு*** (வின்.); boatmen's song in which the words ēlo, ēlēlō occur again and again

*[ஏல + பாட்டு - ஏலப்பாட்டு. ஏலேலோ என இசைத்தவாறு பாடும் பாட்டு.]*

**ஏலம்¹** *ēlam*, பெ. (n) 1. ***செடிவகை;*** cardamom plant 2 ***ஒரு மணப் பொருள்*** (திவா.); cardamom seeds 3. ***மயிர்ச்சாந்து;*** unguent for perfuming the hair of women "ஏலவார்குழலிமார்" (திருவாச.29).

**ம.** ஏலம் **க.** ஏலக்கி, யாலக்கி, யாலகி, **குட.** ஏலக்கி, **தெ.** ஏலக்கி, ஏல. *Mar* ēlaci, vēlaci, vēladōḍa, *or* eḷā, olāy.

*[ஏ → ஏல் → ஏலம்.]*

**ஏலம்²** *ēlam*, பெ (n) ***போட்டியிற் பலர்முன் ஏற்றும் விலை;*** auction

**ம.**, **து.**, **க.** ஏலம், **தெ.** ஏலமு, பாலமு, வேலமு *Hin* nilām; *Mar* lilām, lilām, *Port* lēilām

**ஏலரிசி** *ēlariši*, பெ. (n) ***ஏலவரிசி*** பார்க்க; see *ēla-v-ariši*.

*[ஏலம் + அரிசி]*

**ஏலரிசிமணி** *ēlariši-mani*, பெ. (n.) ***பரவ மகளிர் கழுத்தணிகளுளொன்று;*** a kind of necklace worn by parava women

*[ஏலம் + அரிசி + மணி]*

**ஏலவரிசி** *ēla-v-ariši*, பெ. (n.) ***ஏலக்காயின் உள்ளீடு*** (S.1 1 ii 121), cardamom seed

**க.** ஏலககி

*[ஏல + அரிசி]*

**ஏலவார்குழலியம்மை** *ēlavārkuḻaliyammai*, பெ (n) ***திருக்காஞ்சியிற் கோயில் கொண்ட அம்மையார்;*** deity in Kanchipuram temple

*[ஏலம் + வார்குழலி + அம்மை]*

**ஏலவே** *ēla-v-ē,* கு.வி.எ. (adv.) ***ஏல்[1]*** பார்க்க; see *ēla[1]*

*[ஏல + ஏ - ஏலவே ]*

**ஏலன்** *ēlaṉ,* பெ. (n) ***தினையரிசி;*** millet

*[இல் → எல் → ஏல் + அன் - ஏலன் = சிறியது. 'அன்' - ஒருமை குறித்த ஈறு.]*

**ஏலா** *ēlā,* விளி (int) 1. ***தோழன் தோழியை முன்னிலைப் படுத்துஞ் சொல்*** (பரிபா 8,69,கந்தபு அசமுகிப்.12); exclamation of familiar address to a companion, whether man or woman 2. ***மனைவியை விளிக்கும் கெழுதகைப் பொதுச்சொல்*** (கரூர்.வ.); word of endearment. ஏலா, இங்கே வா (இ.வ.).

**க.** எலா, லே; **தெ.** எலா.

*[எல்லா → எலா → ஏலா.]*

கணவன் மனைவி ஆகிய இருவரும் ஒருவரையொருவர் ஏற்றத்தாழ்வின்றி அன்பும் மதிப்பும் ஒருபடித்தரமாகப் புலப்படும் வகையில் எலா என அழைப்பது முந்து தமிழ்ப் பண்பாடு அஃது இன்றும் நாட்டுப்புறங்களில் ஒதுக்கபபட்டுப் புறக்கணிக்கப்பட்ட மக்களிடை மறையாமல் நின்று நிலவுகிறது மேனாட்டார் ஒருவரையொருவர் Hallo என விளித்துக் கொள்வதை இதனொடு ஒப்பிடுக.

**ஏலாதி** *ēlādi,* பெ. (n) (இலக் ) ***ஒவ்வொரு பாடலிலும் ஆறு நற்பண்புகளைக் கூறும் முறையில் நூறு பாடல்களினால் கணிமேதாவியார் என்னும் புலவரால் இயற்றப்பட்ட "ஏலாதி" என்னும் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று;*** lit cardamom and other ingredients', name of an ancient didactic work by Kaṉi-Mētāviyār, containing 100 stanzas and mentioning six virtues in each stanza, one of Padiṉ-eṉ-kīḻ-kaṇakku.

*[ஏலம் + ஆதி ]*

**ஏலாதிகடுகம்** *ēlādi-kaḍugam,* பெ. (n.) ***மருந்துவகை*** (யாழ்.அக.); a medicine

*[ஏலம் + ஆதி + கடுகம்.]*

**ஏலாப்பு** *ēlāppu,* பெ. (n.) ***துன்பம்*** (யாழ்.அக.); distress.

**மறுவ.** பொல்லாப்பு; **ம.** ஏலாப்பு.

*[இயலாப்பு → ஏலாப்பு.]*

**ஏலாப்புறம்** *ēlāppuṟam,* பெ. (n.) ***வயலைச்சுற்றியுள்ள இடம்;*** place adjoining and around paddy-fields. (சேரநா.).

**ம.** ஏலாப்புறம்.

*[எல்லைப்புறம் → ஏலாப்புறம் (கொ.வ.).]*

**ஏலாமுள்** *ēlāmuḷ,* பெ. (n) ***வேலியமைக்கப் பயன்படுத்தும் ஒருவகை முட்செடி;*** a species of thorny plant. (சேரநா.).

**ம.** ஏலாமுள்ளு,

***[வேல் → வேலா + முள் - வேலாமுள் → ஏலாமுள் (கொ.வ.).]***

**ஏலாமை** *ēlāmai,* பெ. (n) 1. ***கூடாமை;*** inability, impossibility 2. ***பொருந்தாமை;*** unsuitableness, incongruity, inconsistency "பூதமுதலாய தத்துவங்களென வுரைத்தல் ஈண்டைக்கேலாமையறிக." (சி.போ. சிற்.1,1).

*[இயலாமை → ஏலாமை.]*

**ஏலு[1]-தல்** *ēlu-,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***நிகழ்தல்;*** to happen, occur 2. ***பொருந்துதல்;*** to join, mingle 3. ***செய்ய முடிதல்;*** to be possible இது உன்னாற் செய்ய ஏலுமா.

**ம.** ஏலுக.

*[இயல் → ஏல் → ஏலு-தல் ]*

**ஏலே** *ēlē,* விளி. (int.) 1. ***சிறுவனையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல்;*** exclamation or familiar address to inferior and young ஏலே! என்னலே அது? (நெல்லை.) 2. ***பழங்குடி மக்கள் ஒருவரையொருவர் அன்பொடு விளிக்கும் கெழுதகைப் பொதுச் சொல்;*** word of endearment among Harijans and other most Backward Communities

*[ஏல் → ஏலா → ஏலே.]*

**ஏலேலசிங்கன்** *ēlēlasiṅgaṉ,* பெ. (n.) ***திருவள்ளுவ நாயனார் காலத்தில், அப்பெருமானிடம் பேரன்பு பூண்டு ஒழுகி, தன் மகளை வள்ளுவருக்கு வாழ்க்கைத் துணையாகக் கொடுத்த ஒரு வேளாளப் பெருமகனார்;*** a vēlāla chief, a contemporary of Tiruvalluvar fascinated by Tiruvalluvar's excellence and gave his daughter in marriage to him (Tiruvalluvar) as a token of respect.

*[ஏலேலன் + சிங்கன். ஏலேலன் என்பது படகோட்டிக்கும் கப்பல் உடைமையாளனுக்கும் பண்டு தொட்டு வழங்கிய பெயராகலாம்.]*

**ஏலேலம்** *ēlēlam,* விளி. (int.) ***ஏலேலோ[1]*** பார்க்க; see *ēlēlō.[1]*

**ஏலேலோ[1]** *ēlēlō,* விளி. (int) ***படகு முதலியன தள்ளுவோர் பாடும் ஏலப்பாட்டில் வரும் ஒரு சொல்;*** onom expression that occurs again and again in songs sung by boatmen or others while pulling or lifting together. 'மண்ணை நம்பி ஏலேலோ - மரமிருக்க - ஏலேலோ. மரத்தை நம்பி ஏலேலோ - கிளையிருக்க - ஏலேலோ."

*[ஏலோ + ஏலோ - ஏலேலோ (ஒலிக் குறிப்பு).]*

**ஏலேலோ[2]** *ēlēlō,* பெ. (n) ***சோழமன்னனொருவனின் பெயர்;*** name of a Chola King. (செ.அக.).

**ஏவங்கேள்[1](ட்)-த(ட)ல்** *ēvaṅ-kēḷ-,* 12.செ.கு.வி. (v.i.) ***ஏவல் செய்தல்;*** to do as directed.

*[ஏவல் → ஏவம் + கேள்.]*

**ஏவங்கேள்²(ட்)-த(ட)ல்** *ēvaṅ-kēḷ-*, 12 செ கு வி (v i) 1. ***குற்றத்தைச் சுட்டிப் பேசிப் பழித்தல்*** (உ வ.); to taunt a person specifying his faults 2 ***இடைமறித்து வினவுதல்;*** to intermiddle when an injury is done அரசன் செய்ததற்கு ஏவங்கேட்பவரார்? (வின்).

*[எவ்வம் → ஏவம் + கேள்.]*

**ஏவஞ்ச** *ēvañja*, கு.வி.எ (adv.) ***ஏறத்தாழ;*** so that, it being so ஏவஞ்ச இந்தக்காரியம் முடியலாம் (Brah.).

*[ஏற + எஞ்ச - ஏறஞ்ச → எவஞ்ச ]*

**ஏவதும்** *ēvadum*, சு.பெ. (pron) 1. ***ஒவ்வொன்றும்;*** everything. ''செய்வினையேவது மெண்ணி லாதகடந் தொறும்'' (கந்தபு.சுக்கிரனுப.36). 2. ***ஏதுவும்;*** whatsoever

*[ஏ + அதுவும் - ஏவதுவும் → ஏவதும்.]*

**ஏவம்¹** *ēvam*, பெ. (n) ***குற்றம்;*** fault, blemish. ''ஏவமிக்க சிந்தையோடு'' (தேவா.2306).

*[எவ்வம் → ஏவம்.]*

**ஏவம்²** *ēvam*, கு.வி எ. (adv.) ***இவ்விதம்;*** thus, exactly so.

ம. ஏவம்

*[இவ்வம் → ஏவம் (கொ.வ.).]*

**ஏவர்** *ēvar*, வி.சு.பெ. (interr pron ) ***எவர்;*** which persons, who

ம. ஏவா.

*[எவ் + அர் - எவர் → ஏவர்.]*

**ஏவல்¹** *ēval*, பெ. (n) 1. ***தூண்டுகை;*** instigation, incitement 2. ***ஓதுகை;*** recital. ''ஏவலின் முதுமொழி'' (பரிபா.13,40) 3. ***ஆணை*** (திவா.); command, order, authority. 4. ***பணிவிடை;*** service ''ஏவல் முற்றி'' (அரிச்.பு.மயான 1) 5. ***ஏவலாள்;*** servant, attendant ''முனிவர்க் கேவலாய்'' (தாயு தேசோ 1) 6. ***தீய ஆவியை ஏவிவிடுகை;*** inciting a devil against an enemy by witchcraft 7. ***ஏவல் வினைமுற்று*** (நன்.145); (gram) imperative finite verb. 8. ***வறுமை*** (சூடா.); poverty, want.

*[ஏவு → ஏவல்.]*

**ஏவல்²** *ēval*, பெ. (n.) ***பல்லிகொட்டுகை;*** propitious chirpings of a lizard.

*[ஏவு → ஏவல்.]*

**ஏவல்கேள்(ட்)-த(ட)ல்** *ēval-kēḷ-*, 12.செ.கு.வி. (v.i.) ***ஏவியபணி செய்தல்;*** to serve, obey orders, perform duties assigned, to wait upon, as an attendant.

*[ஏவல் + கேள்.]*

**ஏவல்கொள்(ளு)-தல்** *ēval-koḷ-*, 12.செ.கு.வி. (v.i.) ***வேலை வாங்குதல்;*** to get work done by others.

*[ஏவல் + கொள்.]*

**ஏவல்சிலதியார்** *ēval-šiladiyār*, பெ (n.) ***சமையலறை ஏவற்பெண்டிர், மடைப்பள்ளியாரடியார்;*** kitchen maids

*[ஏவல் + சிலதி + ஆர் சிலதி = ஏவிய பணி செய்யும் சிற்றாள்.]*

**ஏவல்மேவல்** *ēval-mēval*, பெ. (n.) ***கட்டளை*** (வின்.); commands

*[ஏவல்மேவல் (எதுகை குறித்த இணைமொழி).]*

**ஏவல்விடை** *ēval-vidai*, பெ (n) ***வினாவுக்கு விடையாக ஒரு ஏவல் இடுவது;*** answering a question by an imperative retort, as when asked, 'will you do this?' to say 'Do it yourself!' 'சாத்தா, இது செய்வாயோ?' என்ற வழி 'நீ செய்!' என்பது போன்ற விடை. (நன்.386, உரை)

*[ஏவல் + விடை - ஏவல் விடை = ஏவலே விடையாக அமைவது ]*

**ஏவல்வினா** *ēval-viṉā*, பெ. (n) ***ஏவும் நோக்கத்தோடு கேட்கும் வினா*** (நன் 385); questioning with a view to give a command as 'Had you your dinner?' சாத்தா உண்டாயா?

*[ஏவல் + வினா - ஏவல் வினா. ''நீ உண்டாயா?'' என்னும் வினா, ''போய் உண்'' என்னும் ஏவற்குறிப்பை உள்ளடக்கிய ஏவல் வினாவாயிற்று ]*

**ஏவல்வினை** *ēval-viṉai*, பெ. (n) 1 ***முன்னின்றாரை ஏவும் வினை;*** verb in the imperative mood 2. ***மந்திரத் தொழில்;*** act of commanding a devil by witchcraft to do harm to a person

*[ஏவல் + வினை ]*

**ஏவலன்** *ēvalaṉ*, பெ. (n.) ***பணிவிடை செய்வோன்;*** attendant, servant. ''ஏவலர் தொழின்முறை யியற்ற'' (கந்தபு.உரைபுனை.17).

ம. ஏவலன்.

*[ஏவல் + அன் - ஏவலன்.]*

**ஏவலாள்** *ēval-āḷ*, பெ. (n.) ***ஏவலன்*** பார்க்க; see *ēvalaṉ*

*[ஏவல் + ஆள்.]*

**ஏவள்** *ēvaḷ*, பெ. (n.) ***எப்பெண்;*** which woman.

ம. ஏவள்.

*[எவ் + அள் - எவள் → ஏவள்.]*

**ஏவற்சிலதி** *ēvaṟ-šiladi*, பெ. (n.) ***குற்றேவல்புரியும் பெண்;*** maid servant of a household; kitchen-maid. ''பூவிலை மடந்தைய ரேவற்சிலதியர்'' (சிலப்.5,51).

*[ஏவல் + சிலதி - ஏவற்சிலதி. சிலதி என்னும் சொல்லே ஏவற்பணி யாளைக் குறிக்கும். 'ஏவல்' மிகையான முன்னடை. சிலதி = குற்றேவல் செய்யச் செலுத்தும் பெண். செல் → செலவு + ஆளி - செலவாளி → செலவாதி → செலதி → சிலதி. செலவாதிபார்க்க; see šelavādi ]*

**ஏவற்பணி** *ēvaṟ-paṇi*, பெ. (n) ***ஏவியவேலை*** (வின்), services commanded, often used as a compliment in epistolary writings and in polite conversation

*[ஏவல் + பணி - ஏவற்பணி]*

**ஏவறவு** *ēvaṟavu*, பெ. (n) ***துன்பம், கவலை;*** sorrow, distress (சேரநா.).

ம. ஏவறவு

*[ஏசறவு → ஏவறவு (கொ.வ).]*

**ஏவறை**[1] *ēvaṟai*, பெ. (n) ***மறைந்து அம்பெய்தற்குரிய மதிலுறுப்பு*** (பு.வெ.6,5,உரை); retreat constructed in the battlement of a fort from where bowmen might shoot arrows against the enemy unobserved

*[ஏ + அறை - ஏவறை ஏ = அம்பு]*

**ஏவறை**[2] *ēvaṟai*, பெ (n) ***ஏப்பம்*** (யாழ்ப்.); belching, eructation

*[ஏ + உறு - ஏவுறு → ஏவறை. ஏ = ஏப்பம்.]*

**ஏவன்** *ēvaṉ*, வி.பெ (pron) ***யாவன்;*** who?

ம. ஏவன்; **க.** யாவன், தாவன்; **து.** எரு; **தெ.** எவ்வண்டு; பட. எம

*[எவன் → ஏவன்]*

**ஏவிவிடல்** *ēvividal*, தொ.பெ. (vbl.n.) ***ஏவிவிடு*** பார்க்க; see *ēvividu*

**ஏவு**[1]**-தல்** *ēvu-*, 8 செ குன்றாவி. (vt) 1. ***ஆணையிடுதல்;*** to command, order, direct 2. ***தூண்டிவிடுதல்;*** to incite, prompt, urge, instigate, to conjure and set on, as a demon 3. ***திருவருளால் தூண்டப்படுதல்;*** chr to inspire, as God ஆவியானவர் பவுலை யேவினார் (கிறித்.). 4. ***செலுத்துதல்*** (பிங்), to discharge, as an arrow, to throw, as a dart 5. ***சொல்லுதல்;*** to speak, say. "ஏவா விருந்த வடிகள்" (சீவக.3036).

ம. ஏவுக; **க.** ஏக.

*[எய் → ஏ → ஏவு.]*

**ஏவு**[2] *ēvu*, பெ. (n.) ***உயரம்;*** height.

**க.** ஏ *Ger* heben *AS* hebban, *E* heave, *Goth* hefian, to lift. *E* heaven, *O Ice* hifinn. *AS.* heofon, the air, the abode of the Deity. Lit. the 'heaved' or 'lifted up'.

*[ஏ → ஏவு.]*

**ஏவு**[3] *ēvu*, பெ. (n.) ***அம்பு;*** arrow. "மாறிலேவு பூட்டி" (கந்தபு.காமதக.66).

*[எய் → ஏ → ஏவு.]*

**ஏவு**[4] *ēvu*, பெ. (n.) ***துன்பம்;*** misery.

*[எவ்வம் → (எவ்வு) ஏவு.]*

**ஏவுகணை** *ēvukaṇai*, பெ. (n.) ***குறிதவறாமல் இலக்கைச் சென்று தாக்கும் படைக்கலம்;*** missile.

*[ஏவு + கணை.]*

**ஏவுகாரன்** *ēvukāraṉ*, பெ. (n) ***எய்பவன், வில்லாளி;*** archer (சேரநா.).

ம. ஏவுகாரன்.

*[ஏவு + காரன்.]*

**ஏவுகை** *ēvugai*, பெ. (n) ***ஏவுதல்;*** inciting, driving.

ம. ஏவு

*[ஏ → ஏவு → ஏவுகை.]*

**ஏவுண்ணு-தல்** *ēvuṇṇu-*, 12.செ.கு வி. (vi) ***அம்பு தைத்தல்;*** to be injured by an arrow "பகழியினே வுண்டு" (இறை.6,64).

*[ஏ + உண் - ஏவுண் → ஏவுண்ணு ஏ = அம்பு.]*

**ஏவுதற்கருத்தன்** *ēvudaṟ-karuttaṉ*, பெ (n) (இலக்.) ***செய்விக்கும் வினைமுதல்;*** (gram) indirect agent who causes a thing to be done, அரசன் கோயில் கட்டினான் (உ.வ.).

*[ஏவுதல் + கருத்தன் - ஏவுதற்கருத்தன்.]*

**ஏவுவான்** *ēvuvāṉ*, பெ. (n) ***கட்டளையிடுபவன்*** (பிங்.); master, director

*[ஏவு + ஆன் - ஏவுவான்.]*

**ஏவூர்தி** *ēvūrdi*, பெ. (n) ***விண்ணில் செலுத்தும் ஊர்தி;*** vehicle which is sent through sky.

*[ஏவு + ஊர்தி - ஏவூர்தி]*

**ஏழ்**[1] *ēḻ*, பெ. (n) ***ஏழிலைப் பாலைமரம்*** (ஏழில்மரம்); seven leaved milk plant

*[ஏ → ஏழ் = உயர்ந்தமரம், நெடியமரம்.]*

**ஏழ்**[2] *ēḻ*, பெ. (n.) ***ஏழு*** பார்க்க (தொல்.எழுத்.388); see *ēḻu*.

**ஏழ்ச்சி** *ēḻcci*, பெ. (n.) ***தோற்றம்;*** appearance, advent, manifestation. "ஏழ்ச்சிக் கேடின்றி" (திவ்.திருவாய்.3,24).

*[எழு → ஏழ் → ஏழ்ச்சி.]*

**ஏழ் பிறப்பு** *ēḻpiṟappu*, பெ. (n.) ***ஏழு பிறப்பு*** பார்க்க; see *ēḻupiṟappu*.

**ஏழ்புழை** *ēḻ-puḻai*, பெ. (n.) ***வேய்ங்குழல் வகை;*** reed pipe that has seven holes. "ஏழ்புழையைம் புழை யாழிசை கேழ்த்தன்ன" (பரிபா.8,22).

*[ஏழு → ஏழ் + புழை. புழை = துளை.]*

**ஏழ்மை** *ēḻ-mai*, பெ. (n.) ***ஏழு;*** seven. "ஏழ்மைப் பிறப்புக்குஞ் சேமம்." (திவ்.திருவாய்.4.69).

*[ஏழு → ஏழ் + மை.]*

**ஏழ (ஏழா)** *ēḻa*, விளி. (int.) ***பழங்குடியினர் தம் மனைவியை விளிக்குஞ்சொல்*** (நெல்லை); exclamation used by tribals to address or call attention to their wives.

*[ஏல → ஏழ ( → ஏழா).]*

**ஏழகத்தார்** *ēḻagattār*, பெ. (n.) ***படைவகுப்பாருள் ஒரு வகையார்;*** class of military men

*[ஏழகம் = மெய்ம்மறை (கவசம்). ஏழகம் + அத்து + ஆர் - ஏழகத்தார். "அத்து" - சாரியை 'ஆர்' - ப.பா.ஈறு.]*

**ஏழகநிலை** *ēḻaganilai*, பெ (n) ***ஏழகத்தகரினைப்போல் எழுச்சி கொண்ட மறவர் பண்பு*** (அபி.சிந்); literary theme, dealing with kings and chieftains 'உயரும் புகழையுடைய ஞாலத்தில் இளமையைப் பாராதே அரசன் பூமி காவல் பூண்டு நிற்பினும் ஏழக நிலையேயாம்' (பு.வெ.பொதுவியல்)

*[ஏழகம் + நிலை - ஏழகநிலை. ஏழகம் = ஆட்டுக்கிடா.]*

**ஏழகம்** *ēḻagam*, பெ. (n.) 1. ***செம்மறியாடு;*** ram or ewe 2. ***துருவாட்டேறு;*** ram of the species of sheep called Durvadu (துருவாடு), fleecy sheep. (சா.அக.).

*[மேழகம் → ஏழகம்.]*

**ஏழடுக்குமீன்** *ēḻadukku-mīṉ*, பெ. (n.) ***ஓரின மீன்;*** a kind of fish. (சேரநா.).

ம. ஏழடுக்கு மீன்.

*[ஏழ் + அடுக்கு + மீன்.]*

**ஏழத்தனை** *ēḻattaṉai*, பெ. (n) ***ஏழுமடங்கு;*** seven times

*[ஏழு + அத்தனை.]*

**ஏழமை** *ēḻamai*, பெ (n) ***ஏழைமை*** பார்க்க; see *ēḻaimai*.

**ஏழரை** *ēḻarai*, பெ. (n) 1. ***ஏழும் அரையும்;*** seven and half. 2. ***ஏழரை நாழிகை உள்ள கால அளவு;*** 3 AM (at night) (சேரநா.).

ம. ஏழர.

*[ஏழு + அரை.]*

**ஏழரைக்கோழி** *ēḻarai-k-kōḻi*, பெ. (n) ***ஏழரை வெளுப்பில் கூவும் கோழி*** (சேரநா.); cock crowing at 3 A.M.

ம. ஏழரக்கோழி

*[ஏழு + அரை + கோழி.]*

**ஏழரைச்செப்பு** *ēḻarai-c-ceppu*, பெ. (n) ***பொற்காசு வைக்கப் பயன்படுத்தும் ஏழரை இடங்கழி கொள்ளளவுள்ள செப்புப் பெட்டி;*** coper vessel which will contain seven and a half measures (paras or itangalis) for the safe-keeping of gold coins or the like. (சேரநா.)

ம. ஏழரச்செப்பு

*[ஏழு + அரை + செப்பு.]*

**ஏழரைநாட்டுச்சனி** *ēḻarai-nāttu-c-caṉi*, பெ. (n) ***ஏழரையாண்டுக்காரி*** பார்க்க; see *ēḻarai-y-āṇdu-k-kāri*.

*[ஏழு + அரை + ஆண்டு - ஏழரையாண்டு → ஏழரையாட்டு → ஏழரைநாட்டு + சனி. ஆண்டு → ஆட்டு.]*

**ஏழரையாண்டுக்காரி** *ēḻarai-y-āṇdu-k-kāri*, பெ. (n.) ***நிலை வோரையிலிருந்து 12, 1, 2ஆம் இடங்களில் ஏழரையாண்டு வருத்தும் காரி*** (சனி). (வின்.); (Astrol) Saturn in his malign influence for 7½ years when passing through the zodiacal sign of one's star at birth, the one previous and the one after

ம. ஏழரஞ்சனி, க. ஏழரெயாடசனி.

*[ஏழு + அரை + ஆண்டு + காரி.]*

**ஏழாங்காப்பு** *ēḻ-āṅ-kāppu*, பெ. (n) ***குழந்தை பிறந்த ஏழாம் நாளில் செம்பிலும் வெள்ளியிலுமான நாணினால் புனைந்த ஒருவகைக் கால்கொலுசைக் காப்பாக அணிவிக்கும் நிகழ்ச்சி*** (இ.வ.); bracelets or anklets of a particular pattern, of copper and silver wire twisted together, put on the ankles of a baby on the seventh day after birth, as an amulet.

*[ஏழு + ஆம் + காப்பு.]*

**ஏழாங்காய் விளையாட்டு** *ēḻāṅgāy-vilaiyāttu*, பெ. (n.) ***பெண்கள் வீட்டிற்குள் விளையாடும் ஒருவகை விளையாட்டு*** (வின் ); indoor game played by girls.

மறுவ. ஈரி.
ம. ஏழாமுத்தின் விளையாட்டு.

*[ஏழு + ஆம் + காய் + விளையாட்டு.]*

**ஏழாங்கால்** *ēḻaṅ-kāl*, பெ. (n) ***திருமணத்திற்கு ஏழுநாளின் முன்பு நடும் பந்தற்கால்*** (வின்.); auspicious first post, for erecting the marriage pavilion, planted seven days before the date of the wedding

*[ஏழு + ஆம் + கால்.]*

**ஏழிசை** *ēḻ-isai*, பெ. (n.) ***குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு வகை நரம்பு இசையொலி*** (திவா.); seven notes of the diatonic scale

*[ஏழு → ஏழ் + இசை.]*

**ஏழிசையெழுத்துகள்** *ēḻ-isai-y-eḻuttukaḷ*, பெ. (n) ***ஏழிசைகளின் குறியீடாக வழங்கும் ஏழு நெட்டுயிர்*** (திவா.); seven long vowels of the alphabet significative of the seven notes of the diatonic scale. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ - என்பன.

*[ஏழு → ஏழ் + இசை + எழுத்துகள்.]*

**ஏழிசைவாணர்** *ēḻ-isai-vāṇar*, பெ. (n) ***யாழோர்*** (கந்தருவர்), Gandharvas, noted for their superb music "ஏழிசை வாணருஞ் சித்தரும்" (சேதுபு விதூம.4).

*[ஏழு → ஏழ் + இசை + வாணர்.]*

**ஏழியன்** *ēḻiyaṉ*, பெ. (n) ***நெற்கதிர்களைத் தாக்கும் சிறிய புழு;*** canker-worm, palmer-worm, letocorisa acuta, the ricesapper, an insect pest destructive to the growth of paddy

ம. ஏழியன்

*[அழியன் → ஏழியன்.]*

**ஏழில்**[1] *ē̱il*, பெ (n) ***ஏழிலைப்பாலை*** (குறுந்.138, உரை), seven-leaved milk-plant

*[ஏழ் + இலை - ஏழிலை → ஏழில்.]*

**ஏழில்**[2] *ē̱il*, பெ (n) ***இசை;*** music, as consisting of seven notes "ஏழி லியம்ப வியம்பும் வெண்சங் கெங் கும்" (திருவாச 7,8)

*[ஏ → ஏழ் → ஏழில் (எழும் இசை)]*

**ஏழில்**[3] *ē̱il*, பெ (n) ***நன்னன் என்னும் தலைவனது மலை;*** name of a hill which belonged to Nannan, an ancient chief of the Tamil country "நன்ன னேழினெடு வரை" (அகநா 152)

ம. ஏழில்

*[ஏழு → ஏழில் (ஏழு குன்றங்களின அடுக்கு)]*

**ஏழிலைக்கிழங்கு** *ē̱-ilai-k-kiḻangu*, பெ (n) ***மரவள்ளி;*** tapioca, whose leaves divide at the top into several forks

**மறுவ.** மரவள்ளி, குச்சி, கப்பல்கிழங்கு, ஆழ்வள்ளிக்கிழங்கு, **ம.** ஏழிலைக்கிழங்கு

*[ஏழு + இலை + கிழங்கு]*

**ஏழிலைப்பாலை** *ē̱-ilai-p-pālai*, பெ (n) ***ஏழிலைகளைக் கொண்டதும் நெடுந்தொலைவு மணம் பரப்பும் பூக்களைக் கொண்டதுமான மரம்;*** seven leaved milk plant, m.tr Alstonia Scholaries

ம. ஏழிலம்பால

*[ஏழிலை + பாலை. முட்டுகள்தோறும் ஏழிலை கொண்டது]*

**ஏழிலைம்பாலை** *ē̱-ilai-m-pālai*, பெ. (n) ***ஏழிலைப்பாலை*** பார்க்க, see *ē̱-ilai-p-pālai* "பூத்த வேழிலைம் பாலையைப் பொடிப்பொடியாகத் தேய்த்த" (கம்பரா வரை 6)

*[ஏழிலை + பாலை - ஏழிலைப்பாலை → ஏழிலைம்பாலை (மெலித்தல்திரிபு)]*

**ஏழு** *ē̱u*, பெ (n) 1 ***ஏழு என்னும் எண்ணுப்பெயர், ஆறின் மேல் ஒன்று;*** number seven, one more than six 2 ***'எ' என்னும் எண்ணுக்குறியீட்டுக்குரிய தமிழ் எண்ணுப்பெயர்;*** name of the seventh numerical symbol 'எ' in Tamil

**மறுவ.** ஏழ் - (எழு பெயரடி; oblique)

**ம.** ஏழு. **க.** ஏழு, ஏளு. **தெ.** ஏடு, யேடு, **துத.** ஏல், **து.** ஏள், ஏளு, **இரு.** ஏலு, **கை.** யல் **எரு.** யெகு, **கோத.** யேயெ, ஏய், **குரு.** யெலலு, **துட.** ஏழ், ஒவ. **குட.** ஏளி, **பட.** இய்யு, **கொலா.** எட, ஏட், **கோண்.** ஏறுங்க, ஏனு, ஏழுங்க, **குவி.** ஒதகி, **கோல்.** இய, **சாந்.** ஏ, ஏா, **குரி.** ஏயகு, **பிராகு.** ஆப்த் *Turk* yedi, *Sinh* hathai, *Hung* het, *Mag* heb, *Gk* epta]

ஏழ் = ஏழிலைப் பாலைமரம் ஏழிலைகளின பெயரால் தோனறிய ஏழிசைபபண்கள், ஏழு நரமபுகள கட்டிய யாழுககும் பெயராய அமைந்திருத்தலான், ஏழு பிரிவுகளாக அமைநத ஏழிலைபபாலை மரத்தின இலையமைப்பே ஏழு என்னும எணணுபபெயா தோன்றக காரணமாயிற்று

ஏழு விண்மீன் கூட்டததிற்கு இப்பொழுது கனனியோரை (கன்யாராசி) எனப்பெயரிருபபினும் பண்டைக் காலததில் ஏழ் → ஏழை என்னும் சொலலே பெணணைக குறிககும சொல்லாக வும் பயினறதால், ஏழிலைபபாலை மரததின் இலையமைப் பால் தோனறிய எணணுப்பெயா விண்மீன் கூட்டததுக் கன்னி யோரைக்கும் பழம்பெயராயிற்று

**ஏழ்** → சேழ் → சேத் அடிநிலைத்திரிபுற்றவை

*Norw* sju, *Pol* oeidem, *L* septem, *G* seiben, *GK* sept, *Dut* zoven, *Iri* seacht, *Sp* siete, *Fin* seit, *Port* sete, sett, *Czech* sedm, *Esp* sep, *Russ* syem, *Rum* sapte, *O E* seofen, E seven, *Serbo* sedam, *Goth* sibeen, *It* seck, *Swe* bju, *Dan* syu; *Basq* zaspi, *Slav* sedmi, *Serbo* sedan, *F* sept

*Heb* schivah, *Ar* saab, sab, sabat, *Iraq* sebat, *Georg* shwidi, *Yid* sibben, *Akkad* siber, *Egy* sfh, sph, *Copt* saht, *Afri* sewe, set, *Swahili* seber, saba

*Jap* schi-chi, *Anna* chet, *Siam* chet; *Laos* tset; *Indo-china* chet, tsit

*Skt* sapta, *Hind*, *Sind*, *Urd*, *Mara*, *Guj*, *Beng*, *Ori* sāt, *Punj*, *Kash* sat, sath, *Ass* sāt, hāt, *Nep* sāt, *Pali* satta, *Pkt* satta, *Burm* sari, saru.

*ஏழு - டு - து - நு. முடிநிலைத்திரிபுறறவை*

*Circ* dley, *Mongol* lebet, dotoghan, *Malay* tujuk, *Tib* (sokpu) tolo, *Tib* dun, *Nep* dyun, dun, nush, nhe, nis, nuchi, Naga tani, thene, tanet, *Siam* tset, nwai, nwi

**ஏழு (ஐந்து + இரண்டு) கூட்டுச்சொல்லானவை.**

உலக மொழிகளில ஒனறு முதல் ஐந்துவரையிலான எணணுப் பெயாகளின ஊடாட்டம ஒரு சீரான போக்கை எய்தியுளளன ஐநதுககு மேற்பட்ட எண்ணுப் பெயர்கள் அமெரிக்கப பழங் குடி மககளிடையிலும் பருமியப் பழங்குடி மககளிடையிலும் அறிமுகபபடுததபபடாததால அவாகள் ஐநதையும இரணடை யும் கூட்டி ஏழு எனபபொருள கொணடனர்

*American-Aztec* shek- ume (5 + 2)
Khuan - nhach (5 + 2)
Khun-nith (5 + 2)

**ஏழூசிக்காந்தம்** *ē̱ūsi-k-kānadam*, பெ (n) ***ஒன்றிற்கீழ் ஒன்றாக ஏழூசிகளைப் பிடிக்கவல்ல ஓர்வகைக் காந்தம்;*** powerful magnet capable of attracting seven needles which hang one below the other (சா அக)

*[ஏழு → ஏழ + ஊசி + காந்தம]*

**ஏழேழு** *ē̱ē̱u*, பெ (n) ***ஏழில் ஏழு மடங்கு;*** seven times seven, forty-nine

ம. ஏழேழு

*[ஏழு + ஏழு]*

**ஏழை** *ē̱ai*, பெ (n) 1 ***அறிவிலான்;*** foolish, silly person, one of weak intellect 2 ***அறியாமை;*** ignorance, simplicity, harmlessness, mental weakness "ஏழைத்தன்மை யோவில்லை தோழி" (கலித் 55,232) 3 ***பெண்;***

woman "எருதேறி யேழை யுடனே" (தேவா.1171,2) 4. ***வறியவன்*** (சூடா.); indigent person, poor wretch, helpless fellow.

**ம.** ஏழ

*[எள் → ஏள் → ஏழ் → ஏழை.]*

**ஏழைக்குறும்பு** *ēḷai-k-kuṟumbu,* பெ (n) ***பேதை போலக் காட்டிச் செய்யும் குறும்பு;*** mischief perpetrated under an exterior cloak of innocence

*[ஏழை + குறும்பு.]*

**ஏழைத்தன்மை** *ēḷai-t-taṉmai,* பெ. (n) 1. ***அறியாமையாகிய பண்பு;*** state of ignorance "ஏழைத்தன்மையோ வில்லை தோழி" (கலித்.55,23). 2. ***வறுமை நிலை;*** state of poverty

*[ஏழை + தன்மை ]*

**ஏழைமை** *ēḷaimai,* பெ. (n) 1 ***அறியாமை*** (தொல் பொருள் 274), ignorance, simplicity, innocence 2. ***வறுமை;*** poverty

*[எள் → ஏள் → ஏழை → ஏழைமை.]*

**ஏழைமைகாட்டு-தல்** *ēḷaimai-kāṭṭu-,* 5.செ.கு வி. (vi) ***கோழையாதல்*** (வின்.), to be timid, cowardly, effeminate

*[ஏழை → ஏழைமை + காட்டு.]*

**ஏழையாளன்** *ēḷai-y-āḷaṉ,* பெ. (n.) ***வறியவன்;*** poor, miserable man "பாம்பென வுயிர்க்கு மேழையாளனை" (தமிழ்நா 168).

**ம.** ஏழன்

*[ஏழை + ஆளன்.]*

**ஏழொத்து** *ēḻ-ottu,* பெ. (n) (இசை) ***தாளவகை,*** (திவ்.திருவாய்.2,6,பதிகத் தலைப்பு); (Mus) variety of time-measure

*[ஏழு + ஒத்து. ஒற்று → ஒத்து.]*

**ஏளனம்** *ēḷaṉam,* பெ. (n) ***இகழ்ச்சி*** (சூடா ); mockery, jeer.

*[எள் → ஏள் → ஏளனம். 'அனம்' - சொல்லாக்க ஈறு.]*

**ஏற்க** *ēṟka,* கு.வி எ. (adv) ***ஏற்கவே*** பார்க்க (யாழ்ப்.); see *ēṟkavē*

*[ஏல் + க ]*

**ஏற்கநட-த்தல்** *ēṟka-naḍa-,* 3.செ.கு வி (vi) ***ஒழுங்காய் நடத்தல்,*** (வின்.); to behave properly

*[ஏல் + க - ஏற்க + நட.]*

**ஏற்கவே** *ēṟkavē,* கு.வி எ (adv) ***முன்னமே;*** before hand, early, in good time "ஆபத்து வந்தபோது நம்மைத் தேடித் திரியவொண்ணாதென்று ஏற்கவே கடலிடங் கொண்டவனை" (ஈடு 3,6,2).

*[ஏற்க + ஏ.]*

**ஏற்குமட்கலம்** *ēṟkumaṭ-kalam,* பெ. (n) 1. ***கடிஞை;*** bowl 2. ***ஐயமேற்கும் கலம்;*** bowl for receiving alms

*[ஏற்கும் + மண் + கலம்.]*

**ஏற்கெனவே** *ēṟkeṉavē-,* கு வி எ (adv) ***ஏற்கவே*** பார்க்க; see *ēṟkavē*

*[ஆ (முன்பு) → ஏ → ஏல் → ஏற்கு (முன்பு) → ஏற்கனவே → ஏற்கெனவே ]*

**ஏற்கை** *ēṟkai,* பெ. (n) 1 ***இணங்குகை;*** consent, agree to 2. ***வாங்குந் தன்மை;*** receiving capacity

*[ஏல் → ஏற்கு → ஏற்கை ]*

**ஏற்ப** *ēṟpa,* இடை. (part) ***ஓர் உவம உருபு*** (தண்டி.33), adverbial word of comparison - கு.வி.எ (adv) ***தக்கபடி;*** in accordance with

*[ஏல் = பொருந்துதல். ஏல் → ஏற்ப.]*

**ஏற்படு-தல்** *ēṟpaḍu-,* 20 செ கு வி. (vi) 1. ***உண்டாதல்;*** to come into existence, to become formed, to be produced or created அந்த ஊர் அவனால் ஏற்பட்டது. 2. ***தலைப்படுதல்*** (யாழ்ப்.), to be engaged in, to enter upon, as a business 3 ***உடன்படுதல்*** (யாழ்ப்.); to agree, consent, become a party to a contract

**ம.** ஏர்ப்பெடுக, **க.** ஏர்படு, **கோத.** ஏர்பட்த, **து.** ஏர்படு, ஏபுண; **தெ.** ஏர்படு; **பர்.** ஏப் (அடைதல்); **கோண்.** ஏதானா (எடுத்தல்), **கூ.** ஏண்ப (வாங்குதல்).

*[ஏல் = பொருந்துதல், பொருத்தல், எழுப்புதல், உண்டாக்குதல் ஏல் + படு - ஏற்படு. படுதல் = செய்தல் ஏற்படு = உண்டாகச் செய், உளதாக்கு.]*

**ஏற்படுத்து-தல்** *ēṟpaḍuttu-,* 5 செ குன்றாவி. (vt) 1. ***உண்டுபண்ணுதல்;*** to create, make, form, construct, establish அவன் அந்த ஊரை ஏற்படுத்தினவன் 2 ***இணங்கச்செய்தல்*** (யாழ்ப்); to persuade, prevail upon, induce 3 ***நிறுவுதல்;*** to find, as guilty or not guilty அவனைக் குற்றவாளியென் றேற்படுத்தினார்கள் (பே.வ.). 4 ***அமர்த்துதல்;*** to ordain, appoint, assign, institute, put into office அவனை அச்செயலுக்குத் தலைவனாக ஏற்படுத்தினார்கள் 5. ***அணியப்படுத்துதல்*** (வின் ); to prepare, arrange, get ready

**ம.** ஏாப்பெடுத்துக, **க.** ஏர்படிசு, **தெ.** ஏர்பரசு

*[ஏல் = எழுப்பு, உண்டாக்கு, ஏல் + படு - ஏற்படு → ஏற்படுத்து ]*

**ஏற்பாடு**[1] *ēṟ-pāḍu,* பெ. (n) 1 ***ஒழுங்கு;*** arrangement, method, system, rule, established custom அந்த ஏற்பாடு நன்றாயிருக்கிறது 2 ***அமர்த்தம்;*** appointment to an office அந்த வேலைக்கு அவனை ஏற்பாடு பண்ணினான். 3. ***உடன்படிக்கை;*** engagement, covenant 4 ***கிறித்தவர் பழைய, புதிய விவிலிய நூலின் இருபகுதிகளான பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடுகளில் ஒன்று;*** testament, as the old and new testament in the Bible (Chr).

ம. ஏர்ப்பாடு; க. ஏர்பாடு; **கோத.** ஏர்பட்த்; **துட.** ஏவர்; **து.** ஏர்பாடு; **தெ.** ஏர்பாடு.

*[ஏற்படு → ஏற்பாடு]*

**ஏற்பாடு**[2] *ēṟ-pāḍu,* பெ. (n) ***பொருத்தம்*** (யாழ்.அக.); fitness, appropriateness.

*[இயல் → ஏல் + பாடு - ஏற்பாடு. படு → பாடு.]*

**ஏற்பி-த்தல்** *ēṟpi-,* 4.செ.குன்றாவி. (vt.) ***ஒப்படைத்தல்*** (இ.வ); to entrust.

ம. ஏல்பிக்குக.

*[ஏல் → ஏற்பு → ஏற்பி.]*

**ஏற்பு** *ēṟpu,* பெ (n.) 1. ***பொருத்தம்;*** appropriateness, fitness "ஏற்புற வணிதலும்" (நம்பியகப்.125). 2. ***ஏற்றுக்கொள்கை, வரவேற்பு;*** acceptance, reception

*[ஏல் → ஏற்பு]*

**ஏற்புழி** *ēṟpuḻi,* கு.வி.எ. (adv.) ***ஏற்குமிடத்து;*** at appropriate place "அடைகளை ஏற்புழி யெங்கும் ஒட்டுக" (சிலப்.13,155,உரை).

*[ஏற்பு + உழி.]*

**ஏற்புழிக்கோடல்** *ēṟpuḻi-k-kōdal,* பெ. (n.) ***(இலக்.) பொருந்துமிடங்களில் கொள்ளுகையென்னும் உத்தி*** (நன் 227,விருத்.); (gram) application of rules and definitions to cases where they might suitably apply, allowing of exceptions, one of 32 utti.

*[ஏற்பு + உழி + கோடல். கொளல் → கோடல்.]*

**ஏற்புறவணிதல்** *ēṟpuṟavaṇidal,* பெ. (n.) ***மணமகளை அழகுசெய்தல்;*** decorating a bride.

*[ஏற்பு + உற + அணிதல்.]*

**ஏற்போன்** *ēṟpōṉ,* பெ. (n.) ***இரவலன்*** (சூடா.); beggar, mendicant

*[ஏல் → ஏற்பான் → ஏற்போன்.]*

**ஏற்றக்கால்** *ēṟṟa-k-kāl,* பெ. (n.) ***துலாவைத் தாங்கும் கால்;*** frame for supporting a sweep or picottah for irrigation

ம. ஏற்றக்கால்; க. ஏதகோலு.

*[ஏற்றம் + கால்.]*

**ஏற்றக்குறைச்சல்** *ēṟṟa-k-kuṟaiccal,* பெ. (n) 1. ***உயர்வு தாழ்வு;*** superiority and inferiority; highness and lowness; greatness and smallness. 2. ***ஒவ்வாமை*** (பே.வ.); disparity, difference, disagreement.

ம. ஏற்றக்குறச்சில்.

*[ஏற்றம் + குறைச்சல். குறைத்தல் → குறைச்சல்.]*

**ஏற்றக்கோல்** *ēṟṟak-kōl,* பெ. (n) ***துலாமரத்தில் நீரிறைக்கும் கழி;*** pole attached to a well sweep or picottah and supporting the bucket for drawing water.

க. ஏத கோலு; ம. ஏத்தக்கோல்

*[ஏற்றம் + கோல்]*

**ஏற்றச்சால்** *ēṟṟac-cāl,* பெ. (n) ***துலாக்கால்;*** bucket used for irrigation by picottah.

*[ஏற்றம் + சால்.]*

**ஏற்றணை** *ēṟṟaṇai,* பெ. (n.) ***அரியணை;*** throne, supported by legs carved with the figure of the lion. "ஏற்றணையி னீங்கி" (கந்தபு.இரண்.சூரப.யுத்.29).

*[ஏறு + அணை ஏறு = அரிமா ஏறு.]*

**ஏற்றப்பட்டரை** *ēṟṟa-p-paṭṭarai,* பெ. (n.) ***ஏற்றமிட்டிறைக்குங் கிணற்றைச் சூழ்ந்த விளைநிலம்*** (இ.வ.); cultivable land surrounding a well from which water can be drawn by a sweep or picottah for purposes of irrigation.

*[ஏற்றம் + பட்டரை. பட்டடை → பட்டரை.]*

**ஏற்றப்புவாரம்** *ēṟṟa-p-pu-vāram,* பெ. (n.) ***நீர்க்கூலி*** (W.G), share of the produce, charge for watering lands.

*[ஏற்றம் + அப்பு + வாரம். அப்பு = நீர்.]*

**ஏற்றபடி** *ēṟṟa-paḍi,* வி.எ. (adv.) 1. ***தக்கவாறு;*** as is fit, meet, becoming, proper. 2. ***விரும்பியவாறு*** (வின்.); as one likes; according to one's own pleasure.

*[ஏல் → ஏற்ற + படி.]*

**ஏற்றம்** *ēṟṟam,* பெ. (n) 1. ***மேல் ஏறுகை;*** mounting, as on a ladder, a horse, ascending 2. ***மேடு;*** ascent, acclivity 3. ***உயர்கை, கொடியேற்றம்;*** hoisting, as a flag, raising up 4. ***நீர்ப்பெருக்கு;*** rising, as the flowing tide. "ஆணையாலே யேற்றந்தொடங்காக் கடலின்" (கம்பரா.நகர்நீ 141). 5. ***புகழ்*** (திவா.); praise, eulogy. 6. ***இடிமரம்;*** heavy wooden rammer set to a frame for pounding parched rice 7 ***அதிகப்படி;*** increase, increment "மேல் ஏற்றம் ஒரு நாளைக்கு மூன்று மாவாக" (S.I.I.ii,129). 8. ***மிகுதி;*** excess "ஏற்றம் நெல்லுக்குறுணி எழுநாழியும்" (S.I.I.ii 705) 9. ***மேன்மை;*** distinction, superiority, exaltation, pre-eminence "பத்தர்கட் கேற்ற நல்கினீர்" (தேவா 599,6). 10 ***நினைவு;*** remembrance "ஏற்ற நினைவுந் துணிவுமாகும்" (தொல் சொல் 337). 11. ***துணிவு;*** courage. ஏற்ற மிலாட்டியென் னேமுற்றாள் (தொல்.சொல்.337.உரை). 12. ***ஏற்ற மரம்;*** well sweep, picottah "ஏற்றமிரண்டுள" (திருமந்.2873).

ம. ஏத்தம்; க. ஏத, யாத, தெ. ஏதமு

*[ஏறு → ஏற்று → ஏற்றம் (சு.வி.78).]*

**ஏற்றம்போடு-தல்** *ēṟṟam-pōdu-,* 20.செ.கு.வி. (vi) 1. ***துலாமரம் அமைத்தல்;*** to set a well sweep or picottah. 2. ***தோப்புக்கரணம் போடுதல்;*** to punish or humble one's self by taking hold of the right ear with the left hand and the left ear with the right hand and then raise and lower the body many times in quick succession.

*[ஏற்றம் + போடு.]*



ஏற்றம்போடு-தல்

**ஏற்றமடல்** *ēṟṟa-maḍal,* பெ. (n) ***துலாமரந் தாங்குங் கோல்*** (வின்.); fulcrum on which the well sweep or picottah is pivoted and which is attached to a pillar planted in the ground.

*[ஏற்ற + மடல்.]*

**ஏற்றமரம்** *ēṟṟamaram,* பெ. (n.) ***துலாமரம்;*** long lever or yard pivoted on an upright post in an irrigating machine as the well sweep or picottah

*[ஏற்றம் + மரம்.]*

**ஏற்றமொழி** *ēṟṟa-moḻi,* பெ. (n) ***புகழ்ச்சியுரை*** (திவா.); praise, eulogy.

*[ஏற்ற + மொழி.]*

**ஏற்றரவு** *ēṟṟaravu,* பெ. (n.) 1. ***அண்மைக் காலம்;*** near future 2. ***முதல்;*** front, first in place or time 3. ***அதிகம், மிகுதி;*** much, very many, excessive.

ம. ஏற்றரவு.

*[ஏல் + தரவு - ஏற்றரவு.]*

**ஏற்றல்**[1] *ēṟṟal,* பெ. (n.) ***ஒப்புக்கொள்ளுதல்;*** agreeing, accepting

*[ஏல் → ஏற்றல்.]*

**ஏற்றல்**[2] *ēṟṟal,* பெ. (n.) ***எதிர்க்கை;*** disputation, polemics "அறுவகைச் சமயமு மேற்றல்" (பெருங். உஞ்சைக்.36,243).

*[ஏறு → ஏற்று → ஏற்றல். ஏறு = குத்துதல், தாக்குதல், எதிர்த்தல்.]*

**ஏற்றல்**[3] *ēṟṟal,* பெ. (n) ***ஊசி ஏற்றல்;*** thrusting a needle into the body for introducing a liquid medicine; to inject. (சா.அக.).

*[ஏற்று → ஏற்றல்.]*

**ஏற்றவாறு** *ēṟṟa-v-āṟu,* கு.வி எ. (adv.) 1. ***ஏற்றபடி;*** suitably 2. ***முறைப்படி;*** proportionately.

*[ஏற்ற + ஆறு - ஏற்றவாறு.]*

**ஏற்றார்** *ēṟṟār,* பெ. (n.) ***பகைவர்;*** foes, enemies "ஏற்றார் மூதூரெழினகை யெரியின் வீழ்வித்து" (திருவாச. 3,158).

ம. ஏற்றார்.

*[ஏற்றல்[2] + ஆர் - ஏற்றலார் → ஏற்றார்.]*

**ஏற்றாளி** *ēṟṟāḷi,* பெ. (n) ***எதிராளி;*** enemy, adversary. (சேரநா )

ம. ஏற்றாளி

*[ஏற்றல்[2] + ஆளி - ஏற்றலாளி → ஏற்றாளி ]*

**ஏற்றாற்போல** *ēṟṟāṟ-pōla,* கு.வி.எ. (adv) ***ஏற்றபடி;*** appropriately, in accordance with.

*[ஏல் → ஏற்றல் ஏற்றால் + போல்.]*

**ஏற்றான்** *ēṟṟāṉ,* பெ. (n.) ***வகுப்புக்கு முதலில் வரும் மாணவன்*** (நெல்.); first boy to be present at school, on a day

*[ஏ → ஏற்று (உயரம், சிறப்பு) ஏற்று + அன் - ஏற்றன் → ஏற்றான்.]*

**ஏற்றியல்** *ēṟṟiyal,* பெ. (n.) ***விடை*** (இடப) ஓரை; Taurus, a sign of the Zodiac. "உருகெழு வெள்ளி வந்தேற்றியல் சேர" (பரிபா.11,4).

*[ஏறு + இயல் ]*

**ஏற்றியிறக்கு-தல்** *ēṟṟi-y-iṟakku-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***கண்ணேறு கழிக்குஞ் சடங்கு நிகழ்த்துதல்;*** to perform the ceremony of waving lights, etc, before a person to avert the evil eye

*[ஏற்று + இறக்கு.]*

**ஏற்றிலக்கை** *ēṟṟilakkai,* பெ. (n.) ***அதிகச்சம்பளம்;*** high salary "ஏற்றிலக்கை பெற்றுண்கிற மிடுக்கையுடைய" (ஈடு 7,4,5).

*[ஏறு + இலக்கை.]*

**ஏற்றிவா-தல் (ஏற்றிவருதல்)** *ēṟṟi-vā-,* 15.செ.குன்றாவி. (v.t.) ***கூடிவருதல்;*** to add. "தடிமூன்றினால் ஏற்றிவந்த நிலம்" (S.I.I vi,11)

*[ஏறு → ஏற்று → ஏற்றி + வா.]*

**ஏற்றிழிவு** *ēṟṟiḻivu,* பெ. (n.) 1. ***பெருமை சிறுமை*** (தொல்.பொருள்.உரை); greatness and smallness 2. ***மேடுபள்ளம்*** (இறை.18,உரை); hill and dale, mountain and valley; up and down, uneven surface.

ம. ஏற்றிறக்கம்.

*[ஏறு → ஏற்று + இழிவு.]*

**ஏற்றிறக்கம்** *ēṟṟiṟakkam,* பெ. (n.) 1. ***மேடும் பள்ளமும்;*** up and down spot, hill and dale. 2. ***ஏற்றலும் இறக்கலும்;*** increase and decrease, fluctuation in position or status 3. ***ஏற்றுமதியும் இறக்குமதியும்;*** export and import.

4. *கடலில் அலை ஏற்றமும் இறக்கமும்;* ebb and flow of tide. (சேரநா.).

ம. ஏற்றிறக்கம்

*[ஏற்று + இறக்கம்.]*

**ஏற்று[1]-தல்** *ēṟu-*, 5.செ.குன்றாவி (vt) 1. ***தூக்குதல்;*** to lift up, raise, hoist உத்தரத்தை யேற்றினான் 2 ***மிகைப்படுத்துதல்; விலையை ஏற்றுதல்;*** to increase, as price 3 ***சுமத்துதல்;*** to load as a cart or ship, to impose as a responsibility 4 ***ஏறச் செய்தல்;*** to run over, as a wheel over a person காலில் வண்டியை ஏற்றிவிட்டான். 5. ***அடுக்குதல்*** (திவா.), to pile up, stow away, pack 6. ***மேம்படுத்துதல்;*** to eulogise, praise "ஏற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்" (தொல்.பொருள் 147). 7. ***குடியேற்றுதல்;*** to colonize, populate.கொண்டு வந்து ஏற்றின தளிச்சேரிப்பெண்டுகளுக்கும் (SIIii,261) 8 ***நிலைநிறுத்தல்;*** to found, establish 'நம் பெயரால் ஏற்றின வீரசோழன் திருமடை விளாகத்தில்' (SIIiii,47). 9 ***உட்செலுத்துதல்;*** to put in, cause to enter, insert, to drive in, as a nail நகத்தில் ஊசியை ஏற்றினான். 10. ***மேற்செலுத்துதல்;*** to ascribe, foist upon தன் குற்றத்தை அவன் மேலேற்றினான் 11. ***ஏற்றுமதி செய்தல்;*** to export 12. ***சுடர் கொளுவுதல்;*** to light, as a lamp. "விளக்கேற்றினேன்" (திவ்.இயற்.2,1). 13. ***நினைத்தல்;*** to think, consider. "கானலஞ் சேர்ப்பன் கொடுமை யேற்றி" (தொல் சொல் 337). 14. ***துணிதல்*** (தொல்.சொல்.337); to decide 15. ***படைத்தல்;*** to offer, as an oblation "ஏற்றிக் கழித்த வெண்சோற்றையருந்தி" (காசிக.ஓங்காரவி.கி.11).

ம. ஏற்றுக; **து.** ஏராவுனி; **தெ.** ரெச்சு; **கொலா.** எத்; **நா.** எத்த்; **கூ.** எத; **குவி.** எதலி

*[ஏறு → ஏற்று.]*

**ஏற்று[2]** *ēṟu*, பெ. (n) ***மரத்தினாற் செய்த மேடை*** (யாழ்.அக.); wooden platform.

*[ஏ → ஏல் → ஏற்று (உயரமானது).]*

**ஏற்று[3]-தல்** *ēṟu-*, 5 செ.குன்றாவி. (vt) ***மெய்ப்பித்தல்;*** to establish by evidence, substantiate "அடிமையென்ற வெவ்வுரை யெம்முன் னேற்ற வேண்டும்" (பெரியபு. தடுத்தாட்.55).

*[ஏல் → ஏற்று.]*

**ஏற்றுக்குறி** *ēṟu-k-kuṟi*, பெ. (n.) 1. ***ஆண்குறி;*** penis. 2. ***எருதின் இலச்சினை;*** symbol of an ox. (சா.அக.).

*[ஏறு + குறி.]*

**ஏற்றுக்கொண்டுவா** *ēṟu-k-koṇḍu-vā-*, 18.செ.கு.வி. (vi) ***ஒருவனைத் தாங்க வருதல்;*** to come forward to support another. அவனுக்கு ஏற்றுக் கொண்டு வந்தான். (உ.வ.).

*[ஏல் → ஏற்று + கொண்டு + வா.]*

**ஏற்றுக்கொள்(ளு)-தல்** *ēṟu-k-koḷ-*, 10 செ குன்றாவி (vt) 1 ***ஒத்துக்கொள்ளுதல்; இசைதல்;*** to receive, admit, accept, acknowledge 2 ***மேற்கொள்ளுதல்;*** to undertake, engage in, take charge of

*[ஏல் → ஏற்று + கொள்.]*

**ஏற்றுத்தொழில்** *ēṟu-t-toḻil*, பெ. (n) ***யானை முதலிய வற்றில் ஏறிநடத்துந் தொழில்*** (சீவக 1758,உரை); art of riding on elephants, horses, etc

*[ஏறு + தொழில்.]*

**ஏற்றுதுறை** *ēṟu-turai*, பெ. (n) ***சரக்கைக் கப்பலிலேற்றுந் துறைமுகம்*** (வின்.); place of export or embarkation

*[ஏறு → ஏற்று + துறை.]*

**ஏற்றுப்பனை** *ēṟu-p-paṉai*, பெ. (n) ***ஏற்றைப்பனை*** பார்க்க; see *ēṟai-p-paṉai.* "ஏற்றுப் பனையெல்லாம் நிறைந்த குலைகளாய்" (பெரியபு.திருஞான.980).

*[ஏறு → (ஏற்றை) ஏற்று + பனை.]*

**ஏற்றுமண்** *ēṟu-maṇ*, பெ. (n) ***பிற இடங்களினின்று கொண்டு வந்து போட்டமண்;*** deposited soil. (சேரநா.).

ம. ஏற்றுமண்ணு.

*[ஏறு → ஏற்று + மண்.]*

**ஏற்றுமதி** *ēṟumadi*, பெ. (n) 1. ***கப்பலிற் பண்டமேற்றுகை;*** export 2. ***ஏற்றுமதிப் பண்டம்;*** exported cargo.

ம. ஏற்றுமதி; **க., தெ.** எகுமதி.

*[ஏற்று + மதி. 'மதி' அளவு குறித்த சொல் முதனிலைப்பொருள் குறித்த ஈறாயிற்று.]*

**ஏற்றுமதிச்சீட்டு** *ēṟumadi-c-cīṭṭu*, பெ. (n.) ***கப்பலிலுள்ள நாவாய்களின் பெயர், பயணியர் தொகை, சரக்குகளின் விளக்கம் முதலிய குறிப்புகள் அடங்கியுள்ள சீட்டு*** (M Navi 123); manifest, cargo list and list of passengers.

*[ஏற்றுமதி + சீட்டு]*

**ஏற்றுமுதல்** *ēṟu-mudal*, பெ. (n.) ***தோணி முதலியவற்றிலேற்றப்படுஞ் சரக்கு*** (சங்.அக.); cargo exported in boats, etc.

*[ஏற்று + முதல்.]*

**ஏற்றெழு-தல்** *ēṟeḻu-*, 2.செ.கு.வி. (v.i) 1. ***மயக்குந்துயில்களினின்றும் எழுதல்;*** to rise after recovery of consciousness from a swoon, from sleep. "மெய்யறிந் தேற்றெழு வேனாயின்" (கலித்.37). 2. ***ஓங்கி யெழும்புதல்;*** to ascend, as a flame. "ஏற்றெழு வன்னிமேலினிது துஞ்சலாம்" (கந்தபு.விடைபெறு.31). 3. ***மேற்செல்லுதல்;*** to proceed against.

*[ஏல் → ஏற்று + எழுதல்.]*

**ஏற்றை** *ēṟṟai,* பெ. (n) ***ஆற்றலோடு கூடிய ஆண்பால் விலங்கு*** (தொல்.பொருள்.604); male of any animal remarkable for physical strength.

*[ஏறு → ஏற்றை.]*

**ஏற்றைப்பனை** *ēṟṟai-p-paṉai,* பெ. (n.) ***ஆண் பனை;*** male palmyra "இடுகாட்டு ளேற்றைப்பனை" (நாலடி.96).

*[ஏறு → ஏற்றை + பனை.]*



ஏற்றைப்பனை

**ஏற்றோற்றம்** *ēṟṟōṟṟam,* பெ. (n) ***காலை அல்லது உதய முதல் 10 நாழிகை வரை, பனைப்பொழுது;*** period from sun rise till 10 A.M. (சா.அக.).

*[எல் + தோற்றம் - எற்றோற்றம் → ஏற்றோற்றம். எல் = கதிரவன்.]*

**ஏற** *ēṟa,* கு.வி.எ. (adv.) 1. ***அதிகமாக;*** so as to exceed, more than. அரைப்படிக்கு ஏறக்கொடு. 2 ***உயர;*** on high, in the air, above "அந்தரமாறா... ஏறப்பறக்கெனிற் பறந்திடும்" (சீவக.2156). 3. ***முழுவதும்;*** completely, entirely "என்னுடையிருளை யேறத்துரந்தும்" (திரு வாச.2,6). 4. ***முற்பட;*** in advance, forward "மானிடத்து ஏறச்செல்லு நிலைமையை விரும்பும்" (சீவக.1932, உரை).

*[ஏறு → ஏற.]*

**ஏறக்கட்டித்தூக்கு-தல்** *ēṟa-k-katti-t-tūkkū-,* 5.செ.குன்றாவி. (vt) 1 ***தொங்கும்படி உயரக் கட்டி வைத்தல்;*** to hang up 2. ***தண்டனைக்காகத் தொங்கக் கட்டுதல்;*** to hang up by the hands in order to flog.

*[ஏற + கட்டி + தூக்கு.]*

**ஏறக்கட்டு[1]-தல்** *ēṟa-k-kattu-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***வலுப்படுத்துதல்*** (யாழ்.அக.); to strengthen by hands, etc.

*[ஏற + கட்டு.]*

**ஏறக்கட்டு[2]-தல்** *ēṟa-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t) 1. ***உயரக்கட்டுதல்;*** to build up. 2. ***விலையேறுதற்காகச் சரக்கை விற்காமல் வைத்தல்;*** to put off selling so that price may rise 3 ***மேகம் பெய்யாமற் கரத்தல்;*** to withhold or keep back, as clouds their showers வானம் மழையேறக் கட்டிவிட்டது. 4. ***இறைந்த பொருள்களைக் குவித்தல்;*** to collect together scattered articles, as grain into a heap. 5. ***அடியோடு நிறுத்துதல்;*** to give up altogether, as a person his studies

ம. ஏற வய்க்குக.

*[ஏற + கட்டு.]*

**ஏறக்குறைய** *ēṟa-k-kuṟaiya,* கு.வி.எ. (adv.) ***சற்றொப்ப*** (சுமார்); more or less, about

ம. ஏறக்குறெ.

*[ஏற + குறைய.]*

**ஏறக்குறையப்பேசு-தல்** *ēṟa-k-kuṟaiya-p-pēsu-,* 5.செ.குன்றாவி. (vt) ***இகழ்ந்து கூறுதல்*** (இ.வ.); to vilify, abuse

*[ஏற + குறைய + பேசு.]*

**ஏறங்கோட்பறை** *ēṟaṅ-kōt-paṟai,* பெ. (n) ***ஏறுகோட் பறை*** பார்க்க; see *ēṟukōt-paṟai.*

*[ஏறு + கோள் + பறை - ஏறங்கோட்பறை. 'அம்' சொல்லினிமை கருதி வந்த அசைநிலைச் சாரியை.]*

**ஏறங்கோள்** *ēṟaṅ-gōl,* பெ. (n.) ***ஏறுகோட்பறை*** பார்க்க; see *ēṟukōtparai.* "ஏறங்கோண் முழங்க" (சீவக.489).

*[ஏறு + கோள் - ஏறங்கோள் 'அம்' அசை நிலைச் சாரியை.]*

**ஏறச்சங்கு** *ēṟa-c-caṅgu,* பெ (n) ***கோயிற்குக் கொடையளித்த பெரியோர், பல்லக்கு, சிவிகை முதலியவற்றில் ஏறும்போது மதிப்புரவு கருதி ஊதப்படும் சங்கு*** (இ.வ). conch that is blown in honour of a chief or a liberal donor of a temple as he mounts his vehicle.

*[ஏற + சங்கு.]*

**ஏறட்டுக்கொள்-தல்** *ēṟattu-k-kol-,* 7.செ.குன்றாவி. (v.t) ***உரிமைப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுதல்;*** to assume a responsible post. 'எப்பேறபட்ட இறைகளும் நாங்களே ஏறட்டுக் கொண்டு இறுக்கக்கடவோம்' (S.I.I. VII-40).

*[ஏற + அட்டுக்கொள் = மேற்கொள்தல்.]*

**ஏறடவு** *ēṟadavu,* பெ. (n.) ***வரவு செலவுக் கணக்கு;*** accounts entry. (சேரநா.).

ம. ஏறடவு.

*[ஏறு + (அடைவு) அடவு.]*

**ஏறடு-தல்** *ēṟaḍu-,* 19.செ.குன்றாவி. (v.t) 1. ***மேல் வைத்தல்;*** to place over. "கொம்பினிடத்தே யேறட்ட தம்கையிடத்தே" (முல்லைப்.34,உரை). 2. ***மேற்கொள்ளுதல்;*** to take upon one's self இவை சுண்ண மென்பதொரு பெயரை யேறட்டுக் கொண்டு (சீவக.876,உரை).

*[ஏற + அடு.]*

**ஏறத்தாழ** *ēṟa-t-tāḻa,* கு.வி.எ. (adv.) ***ஏறக்குறைய*** பார்க்க; see *ēṟakkuṟaiya*

*[ஏற + தாழ.]*

**ஏறப்பற-த்தல்** *ēṟa-p-paṟa-,* 3.செ.கு.வி. (v.i) 1. ***உயரப் பறத்தல்;*** to fly on high "அந்தரமாறா... ஏறப்பறக்கெனில்" (சீவக.2156). 2. ***ஏலாதவற்றைச் செய்ய முயலுதல்;*** to attempt the impossible.

*[ஏற + பற.]*

**ஏறப்போ[1]-தல்** *ēṟa-p-pō-,* 8.செ.குன்றாவி. (v.t.) ***குறித்துச் செல்லுதல்;*** to go towards, proceed in the direction of. ஊரேறப்போக (சீவக.1875,உரை).

*[ஏற + போ.]*

**ஏறப்போ[2]-தல்** *ēṟappō-,* 8.செ.கு.வி. (v.i) ***குறுக்கிட்டுச் செல்லுதல்;*** to intersect 'தேவரடியார் மத்தவாணச் சேரியேறப்போன தெருவுக்குக் கிழக்கும்' (S.I.I. iii-i, - 15)

*[ஏற = மேலே, மீதாக, குறுக்காக. ஏற + போ.]*

**ஏறல்** *ēṟal,* பெ. (n) ***கிளிஞ்சில்;*** bivalve shell fish (சா.அக.).

*[இறல் → ஏறல் (பிளவுண்டது, கிளிஞ்சில்).]*

**ஏறவாங்கு[1]-தல்** *ēṟa-vāṅgu-,* 7.செ.கு.வி. (v.i) 1. ***விலகியிருத்தல்;*** to be aloof. "சர்வேசுரன்... ஏறவாங்கி நிற்குமாகில்" (ஈடு.). 2. ***சுளுக்குதல்*** (வின்.); to be drawn up, twisted, as the neck by cold

*[ஏற = உயர, பிறழ. ஏற + வாங்கு.]*

**ஏறவாங்கு[2]-தல்** *ēṟa-vāṅgu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***முழுதும் விலைக்குப் பெறுதல்;*** to purchase outright அவன் இந்தப் பண்டங்களை ஏறவாங்கிவிட்டான். 2. ***நயமாக வாங்குதல்;*** (வின்.), to buy cheaply.

*[ஏற + வாங்கு ஏற = மிகுதி.]*

**ஏறவிடு-தல்** *ēṟa-viḍu-,* 18.செ.குன்றாவி. (v.t) 1. ***ஏறும் படிச் செய்தல்;*** to make climb, to allow to ascend. ஏறவிட்டேணியை வாங்கினதுபோல. 2. ***மரக்கலத்தைக் கரைக்குத் தொலைவாக விடுதல்*** (வின்.); to keep off from the shore, as a vessel 3. ***காற்றுமுகமாய்க் கப்பலை விடுதல்*** (வின்.); to sail along with the wind 4. ***கரை சேர மரக்கலத்தை விடுதல்*** (வின்.), to turn towards the shore, as a vessel 5. ***மேற்போக விடுதல்;*** to allow to spread, to circulate, as poison. நஞ்சு ஏறவிடக்கூடாது. (உ.வ.).

*[ஏறு → ஏற + விடு.]*

**ஏறவிறங்கப்பார்-த்தல்** *ēṟa-v-iṟaṅga-p-pār-,* 4.செ.குன்றாவி. (v.t.) ***கீழும் மேலும் பார்த்தல்;*** to stare at, survey from head to foot அவன் என்னை ஏறவிறங்கப் பார்த்தான்.

*[ஏற + இறங்க + பார்.]*

**ஏறாங்கடை** *ēṟāṅgaḍai,* பெ. (n.) ***ஒவ்வாச்செயல்*** (வின்.); inconvenient engagement, unsuitable contrast.

ம. ஏறாங்கடை.

*[ஏறு[7] + ஆம் + கடை - ஏறாங்கடை.]*

**ஏறாட்டம்** *ēṟāṭṭam,* பெ. (n) ***போட்டி;*** competition.

க. ஏறாட்ட.

*[ஏறு + ஆட்டம். ஏறு = எதிர்ப்பு.]*

**ஏறாடி** *ēṟāḍi,* பெ. (n.) ***காளைகளை மேய்ப்பவன்;*** cowherd (சேரநா.).

ம. ஏறாடி.

*[ஏறு + (ஆளி) ஆடி. ஏறு = காளை.]*

**ஏறாண்முல்லை** *ēṟāṉ-mullai,* பெ. (n) ***ஆண்மை மிகுந்த வீரக்குடியினொழுக்கத்தைப் புகழும் புறத்துறை*** (பு.வெ.8,22), (Puṟap.) literary theme of eulogising the traditional military renown of an eminent warrior lineage family

*[ஏறு + ஆண் + முல்லை.]*

**ஏறாந்தலை** *ēṟān-talai,* பெ. (n.) ***ஏரியின் நீர்ப்பிடியிறுதி;*** outer catchment limits of the water of a tank

*[ஏறு + ஆம் + தலை.]*

**ஏறாப்பாடு** *ēṟā-p-pāḍu,* பெ. (n.) ***வீட்டின் முற்றத்தைச் சுற்றியுள்ள இடம்;*** place adjoining the yard of a house (சேரநா.).

ம. ஏறப்பாடு.

*[இறை → இற → ஏற + பாடு - ஏறப்பாடு → ஏறாப்பாடு (கொ.வ.). இறை = இறைப்பு, இறைவாணம்.]*

**ஏறாப்பு** *ēṟāppu,* பெ. (n.) ***மாராப்பு, ஏத்தாப்பு;*** apron, breast cloth of women. (சேரநா.).

ம. ஏறாப்பு.

*[ஏறு + ஆப்பு. 'ஆப்பு' - சொல்லாக்க ஈறு.]*

**ஏறாமேடு** *ēṟā-mēḍu,* பெ. (n) 1. ***உயர்ந்த மேடு;*** high level which one cannot reach or to which water cannot rise 2. ***செய்யமுடியாத செயல்;*** enterprise beyond one's power. 3. ***ஏறாங்கடை*** பார்க்க (வின்); see *ēṟāṅgaḍai.*

*[ஏறு + ஆ + மேடு. 'ஆ' - எ.ம.இ.நி.]*

**ஏறாவழக்கு** *ēṟā-vaḻakku*, பெ (n) ***அடா வழக்கு;*** unreasonable dispute "ஏறாவழக்குத் தொடுக்கின்றார்" (அருட்பா.1,இங்கித.13)

*[ஏலா + வழக்கு - ஏலா வழக்கு → ஏறாவழக்கு.]*

**ஏறாவேணி** *ēṟā-vēṇi*, பெ. (n) ***கோக்காலி;*** horizontal beam set against the wall and used as a shelf "நிரம்பகல் பறியா வேறா வேணி" (பதிற்றுப் 43,33).

*[ஏறு + ஆ + ஏணி.]*

**ஏறாளர்** *ēṟāḷar*, பெ. (n) ***படை வீரர்*** (திவா.); warriors, soldiers.

**ம.** ஏறாள், ஏறாளர்.

*[ஏறு + ஆளர். ஏறு = அம்பு.]*

**ஏறான்** *ēṟāṉ*, பெ. (n) ***பள்ளிக்கூடத்துக்கு முதன்முதல் வருபவன்;*** first boy to be present at school

*[ஏறு + ஆன். ஏறு = சிறப்பு, தலைமை.]*

**ஏறிட்டுக்கொள்(ளு)-தல்** *ēṟiṭṭu-k-koḷ-*, 10 செ குன்றாவி. (vt) ***ஏற்றிக்கொள்ளுதல்;*** to accept or assume responsibility "என்னுடை இரட்சை உனக்கே பரமாக ஏறிட்டுக் கொள்ளவேணும்" (இரகசிய.338).

*[ஏறிடு → ஏறிட்டு + கொள்.]*

**ஏறிட்டுப்பார்[1]-த்தல்** *ēṟiṭṭu-p-pār-*, 4.செ.கு.வி. (v.i) ***நிமிர்ந்து பார்த்தல்;*** to look up.

*[ஏற + இட்டு + பார்.]*

**ஏறிட்டுப்பார்[2]-த்தல்** *ēṟiṭṭu-p-pār-*, 4.செ.குன்றாவி. (v.t) ***கவனித்தல்;*** to take notice of, care for. அவர் என்னை ஏறிட்டுப் பார்க்கவில்லை

*[ஏற + இட்டு + பார்]*

**ஏறிடு[1]-தல்** *ēṟiḍu-*, 18 செ.குன்றாவி. (vt) 1. ***குற்றம் சாட்டுதல்;*** to cast upon, to superimpose, as blame. 2. ***நாணேற்றுதல்;*** to bend, as a bow. ஏறிட்ட வில் (சீவக 657,உரை). 3. ***தூக்குதல்;*** to lift up "கருமுகை மாலைபோலே எடுத்து ஏறிட்டுக் கொண்டு போனான்" (ஈடு 1,3,1). 4. ***உயர்த்துதல்;*** to raise "தூசு நீக்கி யேறிட வார்த்தபோது" (கம்பரா இந்திர.56). 5 ***புகப் பண்ணுதல்;*** to probe into, to cause to penetrate பருவிற் சலாகையை யேறிட்டான் (வின்.).

**ம.** ஏறிடுக.

*[ஏறு + இடு - ஏறிடு.]*

**ஏறிடு[2]-தல்** *ēṟiḍu-*, 18.செ குன்றாவி. (v.t) ***கணக்கிலிடு தல்;*** to enter on the credit side of account "வரும் மாடை நாட்டிலே ஏறிட்டுக் கொண்டு" (SII V,493)

**ம.** ஏறிடுக

*[ஏறு + இடு - ஏறிடு.]*

**ஏறியருளப்பண்ணு-தல்** *ēṟi-y-aruḷa-p-paṇṇu-*, 12 செ குன்றாவி. (vt.) 1. ***நூல் எழுதுதல்;*** to transcribe on a palm leaf as the sacred books "பட்டோலை பிடித்து ஏறியருளப் பண்ணிக்கொண்டு வருகையில்" (குருப ரம்.172,ஆறா.). 2. ***படிமம்*** (விக்கிரகம்) ***அமைத்தல்;*** to cast, as an idol or image திருப்பள்ளிநாய்ச்சியார் முதலாகவுள்ள திருவுடம்புகளும் ஏறியருளப்பண்ணு வித்து (TAS 91).

*[ஏறி + அருள + பண்ணு.]*

**ஏறு[1]-தல்** *ēṟu-*, 5.செ கு வி. (vi) 1. ***உயர்தல்;*** to go up, as the eyebrows, in anger "ஏறியு மிழிந்து மூளும் புருவங்கண் முரிய" (சீவக.2507). 2. ***மேலேறுதல்;*** to rise, ascend, as the heavenly bodies, to mount, climb. "குன்றேறி யொளிப்பினும்" (நாலடி.90). 3. ***முற்றுப் பெறுதல்;*** to terminate, end. "ஆண்டெலா மின்றொ டேறுமோ" (கம்பரா.கிளை.114). 4. ***மிகுதல்;*** to abound in number, weight or measure, to increase in price, quality 5. ***பரவுதல்;*** to spread, to be diffused, as poison நஞ்சேறுகிறது. 6. ***மருளுறல், தெய்வமேறப் பெறல்;*** tobecome possessed "கடல் ஞாலத் தீசன்வந் தேறக்கொலோ" (திவ் திருவாய்.5,6,1). 7. ***வளர்தல்;*** to grow பயிரேறிவிட்டது. 8. ***உட்செல்லுதல்;*** to enter, to penetrate, to run into, as a thorn அவன் சொன்னது மனத்திலேறவில்லை 9. ***குடியேறுதல்;*** to settle, to be domiciled திருக்கோயிலைச் சூழ்ந்த இடத்திலும் சன்னதியிலும் ஏறின பல குடிக்கும் (SII 1.93). 10. ***ஏற்றிவைக்கப்படுதல்;*** to be laden, as cargo மூட்டை கள் கப்பலில் ஏறின.

**ம.** ஏறுக, **க.** ஏறு; **கோத.** ஏர்; **துட.** ஓர்; **குட.** ஏர் (தலைக்கு உயர்த்து); **து.** ஏருனி, **தெ.** ரேகு; **கொலா.** லேப்; **நா.** லேப்; **குவி.** ரெனெய்.

*[ஏ → ஏல் → ஏறு]*

**ஏறு[2]-தல்** *ēṟu-*, 5.செ குன்றாவி. (vt.) ***கடத்தல்;*** to cross, pass over. "அருளாற் காவிரியை யேறி" (பெரியபு.திரு நாவு.303).

*[ஏல் → ஏறு.]*

**ஏறு[3]** *ēṟu-*, து வி. (aux v) ***ஒரு துணை வினை;*** auxiliary verb as in நடந்தேறுதல்.

*[ஏல் → ஏறு (மேற்செலல், வினைமுடித்தல்).]*

**ஏறு[4]** *ēṟu*, பெ. (n) 1 ***உயரம்;*** height "ஏறுடை வானந்தன்னுள்" (பெரியபு கண்ணப்ப.6) 2. ***முதல் விண்மீன், இரலை*** (அச்சுவினி); 1st nakṣatra.

*[ஏ → ஏல் → ஏறு ஏ = உயர்ச்சி]*

**ஏறு[5]** *ēṟu*, பெ. (n) 1. ***காளை*** (இடபம்); bull "ஊர்தி வால்வெள் ளேறே" (புறநா 13). 2. ***விலங்குகளின் ஆண்;*** males of certain animals as, பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமை, மரை, பெற்றம் (தொல்.பொ ருள்.593.594). 3 ***துருவாடு*** (திவா.); male of the sheep 4. ***சுறாவின் ஆண்*** (தொல் பொருள்.595); male

shark. 5. ***சங்கின் ஆண்*** (பிங்.); male conch. 6. ***ஆண் பனை;*** male palmyra 7. ***விடை ஓரை*** (இடப ராசி) (திவா.); Tauras, a sign of the Zodiac

*[ஏ → ஏறு.]*

**ஏறு**[6] *ēṟu,* பெ. (n.) 1. ***எறிகை;*** throw "காயாத மரமீது கல்லேறு செல்லுமோ" (தாயு.சச்சி.8). 2. ***அடிக்கை;*** beating, as of a drum. "எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்" (பதிற்றுப்.41,23). 3 ***வாள், தேள்களின் எறிகை;*** stroke, as of a sword, sting, as of a scorpion "வாளேறு காணத் தேளேறு மாயுமா போலே" (ஈடு.3,9, பர). 4. ***பருந்தின் கவர்ச்சி;*** pouncing upon, as an eagle "பருந்தி னேறுகுறித் தொரீஇ" (புறநா.43,5). 5. ***இடி;*** thunderbolt "அதிர்குர லேறொடு" (புறநா. 160,3). 6. ***அழிக்கை;*** destroying "அவ்வெயில் ஏறு பெற் றுதிர்வனபோல்" (கலித்.2). 7. ***எறிந்ததனாலான வடு;*** scar. இஃதோ ரேறு (தொல்.சொல்.119,உரை).

*[இல் → எல் → ஏ → ஏறு = குத்துதல், தாக்குதல், அழித்தல், பகைத்தல்.]*

**ஏறு**[7] *ēṟu,* பெ. (n.) ***பகைமை;*** enmity.

*[ஏறு[6] → ஏறு[7]. ஏறு = எதிர்ப்பு.]*

**ஏறு**[8] *ēṟu,* பெ. (n.) ***மர வகை*** (அக.நி.); a kind of tree.

*[ஏ → ஏறு.]*

**ஏறுக்குமாறு** *ēṟukku-māṟu,* பெ. (n.) ***தாறுமாறு;*** improper, unruly behaviour, perverseness, contrariety.

*[ஏறு + கு + மாறு.]*

**ஏறுகடை** *ēṟu-kaḍai,* பெ. (n.) ***கடைசி முடிவு*** (வின்.); very end, extremity.

*[ஏ → ஏறு + கடை.]*

**ஏறுகண்** *ēṟu-kaṇ,* பெ. (n.) 1. ***பக்கப் பார்வை;*** glance. 2. ***சரிந்து பார்க்கும் பார்வை;*** side glance, ogle. (சேரநா.).

ம. ஏறுகண்ணு.

*[ஏறு + கண்.]*

**ஏறுகாலி** *ēṟu-kāli,* பெ. (n.) ***சிறிய கலப்பை;*** a kind of plough smaller than the ordinary one. (சேரநா.).

ம. ஏறுகாலி.

*[ஏறு + காலி - ஏறுகாலி = ஆழமாக உழாமல் மேலோட்டமாக உழும் கலப்பை.]*

**ஏறுகோட்பறை** *ēṟu-kōṭ-paṟai,* பெ. (n.) ***ஏறுதழுவுதற் குரிய முல்லைநிலப்பறை*** (இறை.1,பக்.18); drum, used in ēṟu-kōḷ (bull fight) tournaments in forest-pasture tracts.

*[ஏறு + கோள் + பறை. ஏறு = காளை.]*

**ஏறுகோடல்** *ēṟu-kōḍal,* பெ. (n) ***காளையைத் தழுவி அடக்குதல்;*** subduing the bull as a sport. கைக்கிளை யுள் ஆசுரமாகிய ஏறுகோடல் (தொல்.பொருள்.53, உரை).

*[ஏறு + கோடல். ஏறுகோள் பார்க்க; see ēṟu kōḷ]*

**ஏறுகோள்** *ēṟu-kōḷ,* பெ. (n) ***ஆயர்குல வழக்கின்படி ஒரு பெண்ணை மணந்து கொள்வதற்காக அவள் வளர்த்த காளையைத் தழுவி அடக்குதல்*** (திருக்கோ. 136,உரை); capture of the bull at large as a proof of bravery, by a man seeking in marriage the hand of a woman, a custom among herdsmen in ancient times.

*[ஏறு + கோள். ஏறு = காளை.]*

முல்லைநிலக் குடியில் பெண் பிறந்தால் பெற்றோர் தம் தொழுவில் அன்று பிறந்த சேங்கனறுகளைத் தம்முட்டியாக விட்டு வளர்த்து அவ்வாறு வளர்ந்த ஒனறைத தழுவி அடக்கின வனுக்குப் பெண்ணைக் கொடுத்தல் மரபு. இது ஏறுகோள் எனப்படும்.

**ஏறுங்கூறுமாய்** *ēṟuṅ-kūṟum-āy,* வி.எ. (adv.) ***தாறுமா றாய்*** (இ.வ.); improperly, indecently.

*[ஏறும் + கூறும் + ஆய். ஏறு = உயர்வு, செம்மை. கூறு = பிளவு, பிரிவு.]*

**ஏறுசலாகை** *ēṟu-śalāgai,* பெ. (n.) ***கைம்மரம் கோக்கும் சட்டம்*** (யாழ்ப்.); large wooden peg passing through the ends of rafters in a building

*[ஏறு + சலாகை சாலாக்கு → சலாகு → சலாகை (நீண்டது).]*

**ஏறுசாத்து** *ēṟu-śāttu,* பெ. (n) ***செட்டிமாருள் ஒருவகை யார்*** (SII vii,232), a sect of chetty caste (lit merchants dealing in export business)

*[ஏறு + சாத்து - ஏறுசாத்து = பண்டைக் காலத்தில் ஏற்றுமதி வாணிகம் செய்து வந்த கடல் வாணிகப் பிரிவினர் இறக்குமதி வாணிகத்தில் ஈடுபட்டோர் இறங்கு சாத்து எனக் குறிக்கப்பட்ட னர். சார்த்து → சாத்து (குழுவாகச் சென்று வணிகம் செய்வோர்]*

**ஏறுண்(ணு)-தல்** *ēṟuṇ-,* 12.செ.கு.வி. (v.i) 1. ***அறுக்கப் படுதல்;*** to be cut off. வாளுந் திகிரியு முதலியவற்றா லேறுண்ட தலை (தொல் பொருள்.71,உரை). 2. ***அம்பு முதலியன தைத்தல்;*** to be pierced, transfixed "எய்யே றுண்டவாறு" (திருவிளை.பழியஞ்சி.24). 3. ***தள்ளப்ப டுதல்;*** to be thrown down. "பொறியினேறுண்டு... வீழ்ந்தான்" (சீவக.2183).

*[ஏறு + உண்.]*

**ஏறுதழுவு-தல்** *ēṟu-taḻuvu-,* 9.செ.கு.வி. (v.i.) ***ஆய்க்கு லக் காளையர் மணமுடிக்கும்பொருட்டு எருதினைத் தழுவிப் பிடித்தல்;*** capture a bull at large as proof of bravery in ēṟu-kōḷ contests, a custom among herdsmen in ancient times. அந்நிலத்தியல்பு பற்றி ஏறுதழுவி (தொல்.பொருள்.53,உரை).

*[ஏறு + தழுவு. ஏறு = காளை.]*

**ஏறுநாகம்** *ēṟu-nāgam,* பெ. (n) ***மாட்டுச் சுழிவகை*** (பெரிய.மாட்.); a kind of circular mark on the head or body of cattle

*[ஏறு + நாகம்]*

**ஏறுநீர்** *ēṟu-nīr,* பெ (n) ***கடல் நீரின் ஏற்றம்:*** flow, flood - tide "கடகடற்கு ஏறுநீர இழி நீருளவோ என்னில்" (தக்கயாகப் 122,உரை)

*[ஏறு + நீர்.]*

**ஏறுநெற்றி** *ēṟu-neṟṟi,* பெ. (n) ***அகன்ற நெற்றி*** (இ வ); broad forehead.

*[ஏறு + நெற்றி.]*

**ஏறுபடி**[1] *ēṟu-padi,* பெ (n) 1 ***அதிகப் படித்தரம்.*** (வின்), extra batta to a servant, extra allowance for expenditure in the temple 2 ***தாழ்வாரம்*** *(யாழ் அக), sloping roof, verandah.*

*[ஏறு + படி. ஏறு = மேன்மேலுயர்தல்.]*

**ஏறுபெட்டி** *ēṟu-petti,* பெ (n) ***மரமேறிகள் கருவிகள் வைப்பதற்காக அரையிற் கட்டிக்கொள்ளும் பெட்டி*** (யாழ்ப்.); basket containing tools for tapping toddy which a toddy drawer carries about his waist while engaged in tree tapping.

*[ஏறு + பெட்டி.]*



ஏறுபெட்டி

**ஏறுபொழுது** *ēṟu-poḻudu,* பெ. (n.) ***முற்பகல்;*** forenoon, time of the sun's advancing towards the meridian.

*[ஏறு + பொழுது.]*

**ஏறுமாடம்** *ēṟu-mādam,* பெ. (n.) 1 ***மரத்தின் மீதமைந்த பரண்*** (இ.வ.); loft. 2. ***காட்டு விலங்குகளினின்று தப்பிக்க மரக்கிளையின்மீது அமைக்கப்பட்ட சிறு குடிசை;*** small cottage or hut constructed on the bifurcated branches of a tree as an asylum from wild animals (in forests).

ம. ஏறுமாடம்.

*[ஏறு + மாடம்]*

**ஏறுமாநாட்டு நல்லியக்கோடன்** *ēṟumānāttu-nalliya-k-kōdaṉ,* பெ (n.) ***ஓவியர் குடியில் பிறந்த ஓய்மா நாட்டு நல்லியக்கோடனுக்குரிய ஒருபெயர்;*** surname of Ōymā nāttu Nalliyakkōdaṉ, Tamil chieftain of Sangam age

*[ஏறு + மா + நாட்டு + நல்லியன் + கோடன். ஏறுமா = பொலிகாளை.]*

**ஏறுமாறு** *ēṟu-māṟu,* பெ. (n.) 1. ***முட்டுக்கட்டை;*** impediment to progress 2. ***உண்மை நெறியினின்று மாறுதல்;*** deviation from the path of truth or justice 3. ***குழப்பம்;*** disorder. 4. ***முரணியல்;*** contrary to nature. 5 ***வயிற்றிலேற்படும் குழப்பம்;*** disordered condition of the stomach. (சா.அக). 6 ***தாறுமாறு;*** improper, unruly behaviour "ஏறுமாறாக விருப்பாளே யாமாயின்" (தனிப்பா.1,95,24). 7. ***இகலுகை;*** competing, rivalling "ஏறுமாறேற்குமிக்குன்று" (பரிபா.18,6). (செ.அக.).

*[ஏறு + மாறு]*

**ஏறுமிராசி** *ēṟumirāśi,* பெ. (n) ***ஏறுமோரை*** பார்க்க; see *ēṟumōrai*

*[ஏறும் + இராசி]*

**ஏறுமுகஅக்கமணி** *ēṟu-muga-akkamaṇi,* பெ. (n) ***உருத்திராக்க மணிகள் முறையே முகங்கள் அதிகம்பெறக் கோக்கப்படும் மாலை;*** garland of rudrākṣa beads in which the number of faces of the beads is in a progressively ascending scale

*[ஏறு + முகம் + அக்கமணி]*

**ஏறுமுகக்கண்டிகை** *ēṟu-muga-k-kandigai,* பெ. (n.) ***ஏறுமுகஅக்கமணி*** பார்க்க; see *ēṟu-muga-akkamaṇi.*

*[ஏறு + முகம் + கண்டிகை.]*

**ஏறுமுகம்**[1] *ēṟu-mugam,* பெ. (n) ***வளருநிலை;*** waxing state, state of increase "என்றுன்ப மனைத்தும் ஏறுமுகங்கொண்ட தல்லால்" (அருட்பா 5,தனித்திருத் 12) (செ.அக)

*[ஏறு + முகம்.]*

**ஏறுமுகம்**[2] *ēṟu-mugam,* பெ. (n.) 1. ***சினமிகு முகம்;*** angry face 2 ***மேனோக்கிய முகம்;*** anything facing upwards (சா.அக.).

*[ஏறு + முகம்.]*

**ஏறுமோரை** ēṟu-mōrai, பெ. (n) ***கதிரவன் வடதிசைச் செலவிற்கு இடமாய், சுறவம் முதல் ஆடவை*** (மகர முதல் மிதுனம்) ***வரையுள்ள ஆறு ஓரைகள்*** (இருக்கை) (வின்.); six signs of the Zodiac through which the sun passes in its northern course, dist fr இறங்கு மோரை.

*[ஏறும் + ஓரை]*

**ஏறுவட்டம்** ēṟu-vaṭṭam, பெ. (n) 1. ***விண்மீன் முதலி யன நாழிகையேறும் முறை;*** difference, less or more than 60 Indian hours in the passage of the moon through any of the nakṣatra, also the difference in the karanam and yokam as affected thereby 2. ***பங்கின்அளவுக்கு அதிகமான நிலம் முதலியவை;*** excess above, or deficiency in, equal shares in the division of the inheritance of lands, etc

*[ஏறு + வட்டம்.]*

**ஏறுவாசி**[1] ēṟu-vāśi, பெ. (n) 1. ***ஏற்றம்;*** increase, as of price விலை ஏறுவாசியாயிருக்கிறது 2. ***உத்தரம் சுவரில் செல்லுதற்கு வேண்டிய அளவு*** (இ.வ.); length of a groove in a wall into which is inserted the edge of a beam or rafter.

ம. ஏறுவாசி

*[ஏறு + வாசி வாய் → வாயி → வாசி.]*

**ஏறுவாசி**[2] ēṟu-vāśi, பெ. (n.) ***ஒரு வரியிலுள்ள செங்கல் இணைப்புகள் அதன் மேல்வரியிலுள்ள செங்கல் இணைப்புகளுடன் சேராதபடி கட்டும் கட்டிட வேலை*** (உ.வ.); breaking of joints, in brickwork.

ம. ஏறுவாசி.

*[ஏறு + வாசி. வாய் → வாயி → வாசி.]*

**ஏறுவாணம்** ēṟu-vāṇam, பெ. (n.) ***வாணம்;*** a kind of fire-work. (சேரநா.).

ம. ஏறுவாணம்.

*[ஏறு + வாணம்.]*

**ஏறுவால்** ēṟu-vāl, பெ. (n) ***நீண்ட வால்;*** long tail. பசு ஏறுவாலும் எருது கூழைவாலும் (வின்.).

*[ஏறு + வால்.]*

**ஏறுவிடு-தல்** ēṟu-viḍu-, 20.செ.கு.வி. (v.i.) ***ஆயர் தம்மகளை மணம்புரியத் தக்கோர், தழுவிப் பிடிக்கும் பொருட்டு எருதுவிடுதல்;*** to set a bull at large to be captured, as a test of bravery, by a man who seeks the hand of a woman in marriage, a custom among herdsmen in ancient times.

*[ஏறு + விடு.]*

**ஏறுவிடுத்தல்** ēṟu-viduttal, பெ. (n) ***முப்பத்திரண்டறங் களுட் பொலியெருதுகளை உதவும் அறச்செயல்*** (திவா.); charitable act of furnishing covering bulls, one of muppattiraṇḍaṟam

*[ஏறு + விடு]*

**ஏறுவெயில்** ēṟu-veyil, பெ. (n) ***முற்பகல் வெயில்;*** increasing heat and sunshine, as the sun advances towards the meridian, dist fr. இறங்குவெயில்.

*[ஏறு + வெயில்]*

**ஏறுழவன்** ēṟuḻavaṉ, பெ. (n.) ***படை வீரன்*** (வின்.); warrior

*[ஏறு + உழவன். ஏறு = அம்பு.]*

**ஏறூர்ந்தோன்** ēṟūrndōṉ, பெ. (n.) ***சிவன்*** (சூடா.); Śiva who rides on the bull

*[ஏறு + ஊர்ந்தோன்.]*

**ஏறெடு-த்தல்** ēṟedu-, 4.செ.குன்றாவி. (v.t) 1. ***மேலெ டுத்தல்;*** to lift up, as the head, eyes (செ.அக.). 2. ***தலை நிமிர்தல்;*** to be in an upright or a perpendicular posture 3. ***உயர்த்துதல்;*** to highten (சா.அக.).

*[ஏறு + எடு.]*

**ஏன்**[1] ēṉ, கு.வி.எ. (adv.) ***எதற்கு;*** why? what? wherefore? how? "அடுத்த வினையுளதாயி னிறையே னென்னில்" (சிவப்பிர.2,6).

ம. ஏன்; க. ஏன்; து. தானே; தெ. ஏமி; பட. ஏக.

*[ஏ → ஏன். (வே.க.103).]*

**ஏன்**[2] ēṉ, இடை. (part) 1. ***தன்மை யொருமைப் பெயர்வினைகளில் வரும் ஈறு;*** first pers sing suffix (a) of a verb, as in வந்தேன்; (b) of a noun, as in அடியேன். 2. ***ஒழிதற் பொருளில் வரும் இடைச் சொல்*** (நன்.420,மயிலை.); particle of exclusion, as in ஏனோன்.

ம. ஏன்; க. ஆன், என், நான், யான்; கோத. ஆன்; துட. ஒன்; குட. நானி; து. யான், நேன்; தெ. ஏன், நேன்; கொலா. ஆன்; நா. ஆன்; பர். ஆன்; கட. ஆன்; கோண். அனா; கொன். நான்; கூ. ஆன்; குவி. நானு; குரு. ஏன்; மால். ஏன்; பிரா. ஈ.

*[நான் → ஆன் → ஏன்.]*

**ஏன்**[3] ēṉ, பெ. (n.) ***பன்றி;*** pig. "ஏனொருவ னாயெயிற் றில் தாங்கியதும்" (திவ்.இயற்.நான்.70).

*[இல் → எல் → ஏல் → ஏன். இல் = கருமை. ஏன் = கருநிறப்பன்றி.]*

**ஏன்றுகொள்(ளு)[1]-தல்** *ēṉṟu-koḷ-,* 7.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஏற்றுக்கொள்ளுதல்;*** to receive, accept, to entertain. "அடியேனையு மேன்றுகொணீ" (தேவா.323,6). 2. ***பிறனைத் தாங்குதல்;*** to defend, plead the cause of. அவனுக்காக ஏன்றுகொண்டு வருகிறான்.

*[ஏல் → ஏன்று + கொள்.]*

**ஏன்றுகொள்(ளு)[2]-தல்** *ēṉṟu-koḷ-,* 7.செ.குன்றாவி. (v.t.) ***எதிர்த்து நிற்றல்;*** to confront, oppose."அபிமன்னுவையுங்கண்டு துரியோதனன் மகன்... ஏன்றுகொள்ள" (பாரதவெண்பா.795).

*[ஏ → ஏல் → ஏன்று + கொள். ஏ = உயர்தல், எதிர்தல்.]*

**ஏன்றுகோள்** *ēṉṟu-kōḷ,* பெ. (n.) ***ஆதரித்தல்;*** supporting, defending. "எனக்குறுப்பான ஏன்றுகோளையுடையனாய்" (திவ்.திருவாய்.2,7,6,பன்னீ.).

*[ஏல் → ஏன்று + கோள். கொள் → கோள்.]*

**ஏன** *ēṉa,* சு.பெ. (pron.) ***பிற;*** others, the rest. "முதலா வேன" (தொல்.எழுத்து.66).

*[ஏ = உயர்தல், மிகுதல், எஞ்சுதல். ஏ → ஏல் → ஏல → ஏன = எஞ்சியவை.]*

**ஏனப்படம்** *ēṉa-p-paḍam,* பெ. (n) ***பன்றிமுகக் கேடகம்;*** shield in the shape of a boar's head "ஏனப்படமும் கிடுகின் படமும்" (சிலப்.14,172).

*[ஏனம் + படம்.]*

**ஏனபானம்** *ēṉa-pāṉam,* பெ. (n.) ***தட்டுமுட்டு;*** utensils, implements.

*[ஏனம் + பானம். 'பானம்' எதுகை குறித்த இணைமொழி.]*

**ஏனம்[1]** *ēṉam,* பெ. (n) ***வாய்ப்பு;*** opportunity, convenience, happiness. (சேரநா.).

ம. ஏனம்.

*[ஏல் → ஏனம்.]*

**ஏனம்[2]** *ēṉam,* பெ. (n.) 1. ***கள் குடிப்பதற்கு ஓலையாலான கலம், ஓலைக்குடலை*** (திவா.); palm-leaf-vessel for drinking toddy from 2. ***கலம்;*** utensil, vessel 3. ***கருவி*** (வின்.); tool. 4. ***அணிகலன்*** (இ.வ.); jewel.

ம. ஏனம்.

*[ஏல் → ஏனம் (ஏற்பது).]*

**ஏனம்[3]** *ēṉam,* பெ. (n.) 1. ***பன்றி;*** pig, wild hog. (தொல்.பொருள்.623). 2. ***தினையரிசி;*** millet.

*[ஏனல் = கருமை. ஏனல் → ஏனம்.]*

**ஏனம்[4]** *ēṉam,* இடை. (part.) ***ஆய்தவெழுத்தின் சாரியை*** (தொல்.எழுத்து.134,உரை.); enumerative particle added to ஃ, as in அஃகேனம்.

*[அன் → ஆன் → ஆனம் → ஏனம் (சாரியை).]*

**ஏனம்[5]** *ēṉam,* பெ. (n.) 1. ***கரிசு*** (பாவம்); sin, offence (சூடா.). 2. ***குற்றம்*** (யாழ்.அக.); fault.

*[ஈனம் → ஏனம்.]*

**ஏனல்** *ēṉal,* பெ. (n.) 1. ***செந்தினை*** (திவா.); red millet 2. ***கருந்தினை*** (சூடா.); black-millet 3. ***தினைப் புனம்*** (பிங்.); millet field. 4. ***கதிர்*** (வின்.); ear of corn

*[இல் → எல் → ஏல் (கருமை). ஏலல் → ஏனல் = கருந்தினை. கருந்தினைக்குரிய பெயர் தினைகளுக்குரிய பொதுப்பெயராகிச் செந்தினையையும் தினைப்புனத்தையும் குறித்தது.]*

**ஏனவாயன்** *ēṉa-vāyaṉ,* பெ. (n) ***பேதை*** (இ.வ.); dolt, fool.

*[ஈனம் → ஏனம். ஈனம் + வாயன் - ஈனவாயன் → ஏனவாயன்.]*

**ஏனாதி[1]** *ēṉādi,* பெ. (n.) ***ஓர் இளகியம்*** (இலேகியம்) (வின்.); a kind of electuary.

*[ஏலாதி → ஏனாதி.]*

**ஏனாதி[2]** *ēṉādi,* பெ. (n.) 1. ***விற்படைத்தலைவன்;*** general of archery wing. 2. ***படைத்தலைவன்*** (பிங்.); general 3. ***மறவன்*** (பிங்.); soldier, warrior 4. ***அமைச்சர்;*** ancient title conferred by a king on his minister. "சோழிக வேனாதி தன்முக நோக்கி" (மணி.22,205).

ம. ஏனாதி, தெ. ஏனாதி.

*[ஏ = அம்பு. ஏனன் = வில்லாளி. ஏனன் + அதி = ஏனதி → ஏனாதி = விற்படைத்தலைவன்.]*

**ஏனாதி[3]** *ēṉādi,* பெ. (n) 1. ***முடி திருத்தாளன்*** (பிங்.); barber 2. ***சாணாரில் ஒரு வகுப்பு;*** division among shāṉārs (Tj).

தெ. ஏனாதி.

*[ஏனன் + அதி - ஏனதி → ஏனாதி. ஏனாதி = விற்படைத் தலைவன். ஏனாதி[2] பார்க்க; see ēṉādi[2]]*

தோற்ற படைத் தலைவர்கள் சிறைப்பிடிக்கப்பட்டுப் பகைவர்க்கு மழித்தல் தொழில் செய்யும் பணிக்கும் பிற துணைப் பணிகளுக்கும் ஏவப்பட்டதால் தோன்றிய புதிய குலப்பெயர்களை இச்சொல் சுட்டுவதாயிற்று.

**ஏனாதி[4]** *ēṉādi,* பெ. (n) ***வடார்க்காடு, நெல்லூர் மாவட்டங்களில் வாழும் ஒரு பழைய வகுப்பினர்*** (ET.); primitive tribe in North Arcot and Nellore Districts.

தெ. யேனாதி.

*[ஏ + அம்பு. ஏ → ஏனன் = வில்லாளி. ஏனாதி = வில்லாளி இனத்துத் தலைவன், விற்படைத் தலைவன்.]*

**ஏனாதிதிருக்கிள்ளி** *ēṉāditiru-k-killi,* பெ. (n) ***கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனால் பாடப்பெற்றவன்; கொடையும், வீரமும் கொண்ட சிற்றரசன்.*** (அபி சிந்.); chieftain, beneficient and heroic, being sung by the poet Kōṉāṯṯu eṟi-c-calūr māḏalaṉ Madurai-k-Kumaraṉ.

*[ஏனாதி + திரு + கிள்ளி. ஏனாதி = விற்படைத்தலைவன். படைத் தலைவருள் ஒருவனாகவிருந்து சோழராட்சியில் சிற்றரசனாக மாறிய குறுநில மன்னனாகலாம்.]*

**ஏனாதிநாதநாயனார்** *ēṉādi-nāda-nāyaṉār,* பெ. (n) ***அறுபத்து மூவர் நாயன்மாருள் ஒருவர்.*** (பெரியபு.); canonized Šaiva Šaint, one of 63 (அபி.சிந்.).

*[ஏனாதி + நாதன் + நாயனார். **ஏனாதி** பார்க்க, **see** ēṉādi]*

**ஏனாதி மோதிரம்** *ēṉādi-mōdiram,* பெ (n) ***ஏனாதிப் பட்டத்தார்க்கு அரசரளிக்கும் மோதிரம்.*** (சீவக.2569, உரை), ring being the insignia of the title of ēṉādi

*[ஏனாதி + மோதிரம்]*

**ஏனும்** *ēṉ-um,* இடை. (part.) ***என்றாலும்;*** an affix having the force of "even if", "தாமரை முதல்வற்கேனும்" (கந்தபு காமதகன.83)

*[ஆல் → ஏல் → ஏலும் → ஏனும்.]*

**ஏனென்றால்** *ēṉ-eṉṟāl,* இடை. (conj.) ***எதற்காக என்றால்;*** because. நான் அப்படிச் சொல்வது ஏனென்றால். (உ.வ.).

*[ஏன் + என்றால்]*

**ஏனென்(னு)-தல்** *ēṉ-eṉ-,* 14 செ.குன்றாவி. (v.t.) ***இடரில் உதவக் கேட்டறிதல்;*** to make kind enquiries in times of need with a view to offer help அவரை ஏனென்று கேட்க ஆளில்லை (உ.வ.).

*[ஏன் + என்.]*

**ஏனை**[1] *ēṉai,* கு.வி.எ. (adj.) ***மற்றை.*** (சூடா.); other, the rest

*[ஏல் → ஏல → ஏன → ஏனை]*

**ஏனை**[2] *ēṉai,* பெ (n) 1. ***மலங்கு மீன்.*** (திவா.); eel, anguilla 2. ***ஓர் இசைவகை.*** (திவா.); musical note

*[ஏல் → ஏனை]*

**ஏனைக்குமோனை** *ēṉaikku-mōṉai,* பெ (n) ***ஏணைக் குக்கோணை*** பார்க்க; see *ēṉaikku-k-kōṉai*

**ஏனையவர்** *ēṉaiyavar,* பெ (n) ***மற்றையோர்;*** others.

*[ஏல் → ஏல → ஏன → ஏனை + அவர்.]*

**ஏனையுவமம்** *ēṉai-y-uvamam,* பெ. (n) ***வெளிப்படையுவமம்*** (தொல்.பொருள்.49); explicit comparison, dist fr உள்ளுறை யுவமம்.

*[ஏனை + உவமம்]*



ஐ[1] *ai*, *தமிழ் வண்ண மாலையில் அகரமும் இகரமும் கூடிப்பிறந்த ஒன்பதாம் உயிர்நெடில்;* ninth letter and vowel of the Tamil alphabet, diphthong of 'a' and 'i' ''அகர இகரம் ஐகாரமாகும்.'' (தொல்.எழுத்.54)

ம., க., தெ. ஐ.

*[அ + இ - அஇ → ஐ.]*

'ஐ' என்பதே ஒப்பமுடிந்த வரிவடிவம் எனினும் தொன்முது காலத்தில் தமிழ்மொழி உருவெழுத்தாகவும் அசையெழுத்தாக வும் எழுதப்பட்டுவந்ததால், 'அஇ' என்னும் கூட்டுயிர் 'அய்' என மாற்றுக் கூட்டுயிர் வடிவம் பெற்றது இதனை (அஇ), (அய்) என்னும் சிந்துவெளியில் கிடைத்த எழுத்துகளாலும் அறியலாம். ''அகரத்திம்பர் யகரப் புள்ளியும் ஐயென் நெடுஞ் சினை மெய்பெறத் தோன்றும்'' (தொல் எழுத்.56) எனத் தொல்காப்பியர் நூற்பா இயற்றினார் ஆதலால் இது இலக்கண வழக்கன்று என்பதும் உலகியல் வழக்கை ஒருபுடை தழுவிய தன் நோக்கம பண்டையோர் ஏட்டுச்சுவடிகளில் உள்ள எழுத் துப்பாங்கு பின்னையோர்க்குப் புலப்படுத்தற்கே என்பதும் அறிதல் வேண்டும்

அசையெழுத்துக்காலத்தில் தமிழில் நெட்டுயிர் அனைத்தும் இருஉயிர்க்குறில்களின் இணைப்பெழுத்துகளாக எழுதப்பட் டன. எ-டு. அஅ → ஆ; இஇ → ஈ. உஉ → ஊ; எஎ → ஏ (அல்லது) இஅ → ஏ, அஇ → ஐ அல்லது அய் → ஐ; ஒஒ → ஓ அல்லது உஅ → ஓ, அஉ → ஔ அல்லது அவ் → ஔ ஏகார ஐகார ஓகார ஔகாரங்களை ஈரெழுத்துக் குறில்களாக எழுதாமல ஓரெழுத்து நெடிலாக எழுதும் முறையை இலக்கண வல்லுநர் புகுத்தியபோது பண்டைய ஈரெழுத்து நெடில்களுக்கு இலக்கண அமைதி கூறுவதற்கா கவே தொல்காப்பியர் அகரஇகரம் ஐகாரம் ஆகும் என்றார். நெட்டுயிர்களை ''ஈரள பிசைக்கும் நெட்டெழுத்தென்ப'' எனக் குறிப்பிடுவதும், இருகுறில் இணைந்து நெட்டுயிர் வரிவடிவம் பெறும் என்னும் பண்டைய அசையெழுத்து நிலையைக் குறிப்பால் புலப்படுத்துவதாகும். **எழுத்து**[2] பார்க்க, see eluttu[2].

ஐ[2] *ai*, இடை (part) 1. (அ) *வினைமுதற்பொருள் ஈறு;* suff of nouns formed from verbs to express, that which does an action as in பறவை (ஆ) *செயப்படு பொருள் ஈறு,* that which is acted upon, as in தொடை (மாலை) (இ) *கருவிப்பொருள் ஈறு* (நன் 140,உரை), the instrument, as in பார்வை. 2 *தொழிற் பெயர் ஈறு;* suff of verbal nouns, as in கொலை. 3 *பண்புப்பெயர் ஈறு* (நன் 140,உரை), suff of abstract nouns, as in தொல்லை 4. *முன்னிலை யொருமை ஈறு* (நன்.140, உரை); ending of 2nd pers sing verb, as in சென்றனை. 5. *ஒரு சாரியை.* (நன்.185,உரை), euphonic augment, as in பண்டைக்காலம். 6 *முன்னிலைக் குறிப்பு வினை முற்று ஈறு;* 2nd pers. appellative verb ending அல்லை.

ம. ஐ, எ; க. அம், அன்னு, அன், அண்ண, ன்ன, ன; து. நு. ன, தெ. நுனி; கோண். துன்; கூ. ஐ; குரு. இன்; பிரா. னெ, எ. *Guj* ne, *Punj.* நு, நும் *Turk, Mong* nī, ī; *Fin.* en, an.

*[ஐ[3] → ஐ[2].]*

ஐ[3] *ai*, இடை. (part) *இரண்டாம் வேற்றுமையுருபு* (நன் 296); accusative case-ending ''இரண்டாகுவதே, ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி'' (தொல். சொல்.71).

ம. எ; க. அன்னு; தெ. னி, இ.

*[இ → ஐ. இ - அண்மைச்சுட்டு, கீழிறங்குதற் குறிப்புத் திரிபு வேர். அண்மைச்சுட்டு நெருங்குதல், ஒத்தல், இழிதல், உடைமை, ஆக்கப்பொருள்களையும், இழிதற்குறிப்பு அழித் தல், நீத்தல் குறிப்புப்பொருள்களையும் வினைமுதலுக்குச் சேர்க்கும். தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் வினை முதலுக்குச் செயப்படுபொருட்பாங்கைச் சேர்க்க 'ஐ' உருபு உதவுதலின் ''எவ்வழிவரினும் வினையே வினைக்குறிப்பு அவ்விரு முதலின் தோன்றும் அதுவே'' (தொல்.சொல்.71) எனத் தொல்காப்பியர் விளக்கிக் கூறினார். வினைப்பயனை எழுவாய்க்கு ஏற்றும் பொருட்பாங்கை 'ஐ' உருபு புலப்படுத்து கிறது என்பதே இதன் பொருள்.]*

ஐ[4] *ai*, பெ (n) 1. *வியப்பு;* wonder, astonishment ஐதே யம்ம யானே (தொல்.சொல்.385,உரை). 2. *பெருமை;* largeness 3. *உயர்வு;* elevation, height.

*[ஆ → ஆய் → அய் → ஐ.]*

ஐ[5] *ai*, பெ. (n) 1 *மென்மை;* slenderness. ''ஐதுவீ ழிகுபெயல்'' (சிறுபாண்.13). 2. *அழகு;* beauty. 3. *நுண்மை;* minuteness, subtleness ''அணுத்தருந் தன்மையி லையோன்'' (திருவாச.3,45). 4. *கூர்மை;* sharpness

*[அள் → அய் → ஐ.]*

ஐ[6] *ai*, பெ (n) 1 *தந்தை;* father ''தன்னை சேவடித் தாமரை'' (சீகாளத்திபு நான்முக 124). 2. *தலைவன்;* lord, master ''என்னைமுன் நில்லன்மின்'' (குறள் 771) 3 *கணவன்;* husband ''எனக்கு மாகா தென்னைக்கு முதவாது'' (குறுந்.27). 4 *அரசன்* (சூடா.); king 5. *ஆசான்* (அக நி.); guru, priest, teacher 6. *சிவன்;* Śiva 7. *கொற்றவை;* goddess Durga 8. *முதலாளி, ஆண்டை;* boss ''விடைதாரும் ஐயே'' (நந்தனார்).

ம. ஐ: க. ஐகன்: தெ. ஐவாரு

*[ஆ → ஆய் → அய் → ஐ. ஆ = முதன்மை, தலைமை.]*

ஐ[7] *ai*, பெ (n) 1. *சளி, கோழை;* phlegm ''ஐயினான் மிடறடைப் புண்டு'' (தேவா 812-7). 2. *வெண்மை;* white colour

ம. ஐ

*[அள் → அய் → ஐ. (மு.தா.333).]*

ஐ⁸ *ai,* பெ. (n.) 1. ***கருமை;*** collyrium 2 ***கடுகு;*** mustard 3. ***கம்மாறு வெற்றிலை;*** dark green betal leaf 4. ***தும்பை;*** bitter lucos

*[இல் → இய் → அய் → ஐ இல் = கருமை.]*

ஐ⁹ *ai,* பெ (n) ***சருக்கரை;*** sugar (சா.அக.).

*[இக்கு → ஐக்கு → ஐ ]*

ஐ¹⁰ *ai,* பெ. (n) ***பருந்து;*** kite

*[ஐ⁴ → ஐ¹⁰ (உயரப்பறப்பது).]*

ஐ¹¹ *ai,* பெ. (n.) ***ஐந்து;*** five.

ம. ஐ.

*[கை → ஐ (த.வ.146).]*

கையிலுள்ள ஐந்து விரல்கள் ஐந்து எண்ணும் எண்ணுப்பெயர் தோன்றக்காரணமாயின நாட்டுப்புறங்களில் இன்றும் பழங் களை எண்ணும்போது ஐந்தைந்தாக எடுத்துப்போட்டு ஒரு கை (5) இருகை (10) என எண்ணுதலைக் காணலாம்.

**ஐக்ககம்** *aikkagam,* பெ. (n) ***வீட்டினுள் முற்பகுதியில் அமைந்த பெரிய அறை;*** drawing room. (சேரநா.).

ம. ஐக்ககம்.

*[ஐ → ஐக்கு + அகம் - ஐக்ககம். ஐ⁴ = உயர்வு. ஐக்கு = பெரிய.]*

**ஐக்கணச்சூலை** *aikkana-c-cūlai,* பெ. (n) ***சளியால் குழந்தைகளுக்குக் காணும் ஓர்வகைக் கணச்சூலை;*** form of tabes in new born infants. (சா.அக ).

*[ஐ + கணம் + சூலை.]*

**ஐக்குரம்** *aikkuram,* பெ. (n.) ***கருப்பஞ்சாற்றாற் செய்யப் பட்ட கருந்தேன்*** (ஆ.அக.); honey made of sugarcane-juice.

*[இக்கு = கரும்பு. இக்கு → ஐக்கு → ஐக்குரம்.]*

**ஐகாரக்குறுக்கம்** *aigāra-k-kuṟukkam,* பெ. (n) ***சார்பெ முத்துகளுள் இரண்டு மாத்திரை அளவினும் குறைந்து ஒலிக்கும் ஐகாரம்*** (நக்.95,உரை); letter 'ஐ' shortened which, except when it is treated as a distinct letter in the alphabet, never receives its full measure of two mattirai, one of ten cārpeḻuttu.

*[ஐ + காரம் + குறுக்கம். காரம் - எழுத்துச்சாரியை.]*

**ஐகான்** *ai-gāṉ,* பெ. (n) ***ஐயென்னுமெழுத்து;*** the letter ஐ. "ஐகான் யவ்வழி" (நன்.124) (செ.அக.).

*[ஐ + கான். கான் - சாரியை.]*

**ஐங்கணை** *ai-ṅ-ganai,* பெ. (n) ***காதற்கடவுளின் அம்புகள்;*** arrows of kāma, the god of sexual love tipped with five kinds of flower. "விரைமல ரைங்கணை" (மணி.5,5). (செ.அக.) "ஐங்கணை அரியத்தக்க புண ணெல்லாம் எனக்கேயாக்கி" (கம்ப.).

**ம. ஐங்கண, அய்கண; க. அய்கண (ஐந்து அம்புகளை உடையவன்).**

***[ஐ + கணை - ஐங்கணை. தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்பன ஐந்து மலர்கள்.]***

**ஐங்கணைக்கிழவன்** *ai-n-kanai-k-kiḻavan,* பெ. (n) ***காமன்;*** Kāma, the god of sexual love who uses ai-ṅ-kanai "ஐங்கணைக்கிழவன் காட்சியுண் மகிழ" (கல்லா.19,10) (செ அக.).

*[ஐந்து + கணை + கிழவன் ]*

**ஐங்கணையல்லல்** *ai-ṅ-kanai-y-allal,* பெ (n) ***காம நோய்; ஐங்கணையவத்தை;*** effect produced by aiṅkanai

*[ஐந்து + கணை + அல்லல்.]*

**ஐங்கணைவில்லி** *ai-ṅ-kanai-villi,* பெ. (n) ***காமன்; ஐந்து வகை மலர்களை அம்பு முனையில் வைத்து எய்பவன்;*** Kāma, the god of sexual love, the archer who uses arrows tipped with five kinds of flowers "ஐங்கணை வில்லித னாண்மை" (திவ்.பெரியதி. 9,5,7). (செ.அக ).

*[ஐந்து + கணை + வில்லி.]*

**ஐங்கதி** *ai-ṅ-gadi,* பெ. (n) ***குதிரை நடை;*** five kinds of pace of the horse. "ஐங்கதி நடத்திக் காட்டி" (திரு விளை மெய்க்கா.37). (செ.அக.).

*[ஐந்து + கதி. (கது = கதுவுதல்) கது → கதி (நிலைமை).]*

**ஐங்கரற்கிளையோன்** *ai-ṅ-garaṟ-kilaiyōṉ,* பெ. (n.) 1. ***முருகன்;*** Lord Muruga 2. ***வீரபத்திரன்;*** Veerabadra

*[ஐந்து + கரன் + கு + இளையோன்.]*

**ஐங்கனி** *aiṅgaṉi,* பெ. (n.) ***ஐந்து வகைப் பழங்கள்;*** the five kinds of fruits.

*[ஐந்து + கனி.]*

**ஐங்காயக்கூறு** *aiṅgāya-k-kūṟu,* பெ. (n.) ***ஐந்துவகை உசிலைச்*** (சம்பாரச்) ***சரக்கு;*** five constituent parts in the mixture of drug (சா.அக.).

*[ஐந்து + காயம் + கூறு.]*

**ஐங்காயம்** *ai-ṅ-gāyam,* பெ. (n.) ***கடுகு, ஓமம், வெந்த யம், உள்ளி, பெருங்காயம் முதலிய ஐந்து உசிலைச் சரக்குகள்*** (தைலவ.தைல.135,வரி.111); five vegetable stimulants, viz., mustard, bishop-weed, fenugreek, garlic, asafoetida

*[ஐந்து + காயம். காள் → காளம் → காயம் = கார்ப்புச் சுவையுடையது.]*

**ஐங்குரவர்** *ai-ṅ-kuravar,* பெ. (n.) ***மதித்துப் போற்றுதற் குரிய பெரியோர் ஐவர்;*** five elders entitled to respect viz., அரசன், ஆசிரியர், தாய், தந்தை, தமையன். "ஐங்குர வராணை மறுத்தலும்" (திரிகடு.97). (செ.அக.).

*[ஐந்து + குரவர்.]*

**ஐங்குறுநூறு** *aiṅguṟu-nūṟu,* பெ. (n) ***எட்டுத்தொகையு ளொன்று, அகம் பற்றிய ஐந்நூறு அகவற் பாக்கள்***

*ஐந்திணை வகுப்புக்கு ஏற்பப் புலத் துறை முற்றிய கூடலூர் கிழாரால் தொகுக்கப்பட்டது;* the short five hundred, an ancient anthology of love-lyrics, containing 500 short agaval verses, one of ettu-t-togai, compiled by kūdalūr-kiḻār

*[ஐந்து + குறு - ஐங்குறு + நூறு.]*

ஒவ்வொரு பகுதியும் முறையே ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் ஆகிய ஐவரால் இயற்றப்பட்டது

**ஐங்கூந்தல்** *ai-n-kūndal,* பெ. (n) ***ஐந்து வகையாக ஒப்பனை பெறும் கூந்தல்;*** women's hair, as dressed in five modes ''நாறைங் கூந்தலு நரைவிரா வுற்றன'' (மணி.22,130). (செ.அக ).

*[ஐந்து + கூந்தல் ]*

**ஐங்கோலான்** *ai-ṅ-kōlāṉ,* பெ (n) ***ஐங்கணைக்கிழவன்*** பார்க்க; see *aiṅganai-k-kiḻavaṉ* ''ஐங்கோலா னடத்துங் கொடுங்கோலை'' (பிரபோத 6,39) (செ.அக ).

*[ஐந்து + கோல் + ஆன. கோல் = அம்பு, கணை ]*

**ஐச்செலவு** *aiccelavu,* பெ. (n) ***கணவன் மனைவிக்குக் கொடுக்கும் படி;*** subsistance allowance (given to one's wife) (சேரநா ).

ம. ஐச்செலவு

*[ஐ + செலவு - ஐஞ்செலவு → ஐச்செலவு ஐஞ்செலவு பார்க்க, see aiñcelavu இது ஆகுபெயராய் உணவுச் செலவைக் குறித்தது.]*

**ஐசு** *aišu,* பெ. (n.) ***மல்லிகை;*** jasmine bud (சா.அக ).

*[ஐ = அழகு, மணம். ஐ → ஐயு → ஐசு ]*

**ஐசுகைசா-தல்** *aišu-gaišā-,* 19 செ கு வி (vi) ***மிகச் சிறிதாதல்;*** to be exceedingly small or minute ''ஐசுகைசான இருட்கொ ழுந்துகளை'' (திவ்.இயற் திருவிருத்.69,வ்யா.பக்.361). (செ அக.).

*[ஐசு + கைசு + ஆதல். ஐசுகைசு - எதுகை குறித்து வந்த இணைமொழி. ஐ → ஐசு = சிறியது.]*

**ஐஞ்சந்தி** *ai-ñ-jandi,* பெ. (n) ***ஐந்து தெருக்கள் கூடுமிடம்*** (திருமுரு.225,உரை); junction of five streets. (சா.அக.).

*[ஐந்து + சந்தி.]*

**ஐஞ்சிறப்பு** *aiñjiṟappu,* பெ. (n.) ***ஐந்து மங்கலப் பூசை;*** ceremonies on the five auspicious occasions in the life of a tīrttaṅgara ''ஐஞ்சிறப் பயருந் தேவர்'' (மேரு மந்.1,8).

*[ஐந்து + சிறப்பு - ஐஞ்சிறப்பு.]*

**ஐஞ்செலவு** *aiñcelavu,* பெ. (n.) ***குழம்பு, கூட்டு போன்றவை செய்வதற்காகச் சேர்க்கப்படும் உசிலைப்*** (மசாலா) ***பொருள்கள்;*** spices, condiments, curry-stuffs

*[ஐந்து + செலவு - ஐஞ்செலவு.]*

ஐந்தறைப் பெட்டியில் (அஞ்சறைப் பெட்டியில) உசிலைப் பொருள்களைச் சமையலறையில் வைத்திருக்கும் பழக்கம் இதனை வலியுறுத்தும் இக்காலத்தும் நாட்டுப்புறங்களில் இதனைச் சந்தைச் செலவு எனபர்

**ஐஞ்ஞூறு** *ai-ñ-ñ-ūṟu,* பெ. (n) ***ஐந்நூறு*** பார்க்க; see *ainnūṟu.*

*[ஐந்நூறு → ஐஞ்ஞூறு.]*

**ஐஞ்ஞை**[1] *aiññai,* பெ. (n) ***அறிவுகேடன்*** (அக.நி); ignorant, foolish person (சா.அக.).

*[அழிஞன் → அஞ்ஞை → ஐஞ்ஞை ]*

**ஐஞ்ஞை**[2] *aiññai,* பெ (n.) ***அழகு;*** beauty (சா.அக.).

*[ஐ → ஐம்மை → ஐன்னை → ஐஞ்ஞை.]*

**ஐணம்** *aiṇam,* பெ. (n.) ***மான் தோல்*** (Pond.); deer-skin (செ.அக.).

*[ஐ = அழகு. ஐ → ஐணம்.]*

**ஐதபயிர்** *aida-payir,* பெ. (n.) ***அடர்த்தியற்ற பயிர்*** (வின்.); thin crop of growing corn (செ.அக.).

*[ஐ → ஐது = மெல்லிது, பரவலானது. ஐது + பயிர் = ஐது பயிர் → ஐதபயிர்.]*

**ஐதி** *aidi,* பெ. (n.) ***உலகுரையாகிய அளவை*** (யாழ். அக.); tradition, as an authority (செ.அக.).

*[ஐ → ஐது = உயர்வு, சிறப்பு, மேன்மை. ஐது → ஐதி.]*

**ஐது** *aidu,* பெ. (n) 1. ***அழகுள்ளது;*** that which is beautiful ''பெற்றியு மைதென'' (மணி 10,2). 2. ***அழகு;*** beauty (கூர்மபு தக்கனைச் சாத்.3) 3. ***நுண்ணியது;*** that which is minute, fine, subtle ''ஐதமர் நுசுப்பினாள்'' (கலித் 52) 4. ***மெல்லியது;*** that which is thin, light, slender, soft ''ஐதுவீ ழிகுபெயல்'' (சிறுபாண்.13). 5. ***வியப்புடையது;*** that which is wonderful. ''ஐதே யம்ம'' (தொல் சொல் 385,உரை). 6 ***இளகிய தன்மை;*** fluidity ''சுண்ணம் . . நான நீரி னைதுபட் டொழுகி'' (சீவக. 117) 7 ***செறிவின்மை;*** sparseness, standing near but not in contact. ''ஐதது நெல், அடர்ந்தது சுற்றம்'' (யாழ்ப் ) (செ அக )

*[ஐ → ஐது (தமி வ 279).]*

**ஐது அம்மை** *aidu-ammai,* பெ. (n.) ***அடர்த்தியாக இல்லாது காணப்படும் அம்மை;*** form of small pox in which the pustules remain more or less distinct and separate

*[ஐது + அம்மை.]*

**ஐதுகன்** *aidukaṉ,* பெ. (n) ***மறை*** (வேத) ***முறைகளை மறுத்துக் காரணமுறையான் வழக்காடுபவன்;*** one who is a hētu-vādin and denies the authority of the vēdas ''ஆரண நூல்வழிச் செல்வை யழித்திடு மைதுகர்க் கோர் வாரணமாய்'' (ரஹஸ்ய.61). (செ.அக.).

*[ஏது → ஐது → ஐதுகன்.]*

**ஐதுநொய்தாக** *aidu-noydāga,* கு.வி.எ. (adv) *மிகக் குறைவாக;* very little ''அனந்தன் பாலுங்கருடன்பாலு மைதுநொய்தாக வைத்து'' (திவ் பெரியாழ் 5,4,8). (செ.அக.)

*[ஐது + நொய்து + ஆக.]*

**ஐந்தஃகல்** *aindakkal,* பெ. (n) *ஐம்புலன்களை ஒடுக்குதல்;* curtailing the five senses and restricting their activities to a limit (சா.அக.).

*[ஐந்து + அஃகல்.]*

**ஐந்தடக்கு-தல்** *aindadakku-,* 7.செ.கு.வி. (vi) *ஐம்புலன்களையும் ஒடுக்குதல்;* to control the five senses ''ஆமைபோலைந்தடக்க லாற்றின்'' (குறள் 126). (செ.அக.)

*[ஐந்து + அடக்கு.]*

**ஐந்தமுதம்** *aindamudam,* பெ. (n) *சருக்கரை, தயிர், தேன், நெய், பால் இவைகளைக் கலந்து செய்த அமுதம்;* five nectars i.e., the five sweet substances viz., sugar, curd, honey, ghee and milk (சா.அக.)

*[ஐந்து + அமுதம் - ஐந்தமுதம்.]*

**ஐந்தரம்**[1] *aindaram,* பெ. (n) *பனை* (யாழ்.அக.); palmyra (சா.அக.).

*[ஐ = உயரம். ஐ → ஐந்து → ஐந்தரம்.]*

**ஐந்தரம்**[2] *aindaram,* பெ. (n) 1. *அழகுள்ளது;* that which is beautiful 2. *செறிவின்மை;* sparseness.

*[ஐ → ஐந்து → ஐந்தரம்.]*

**ஐந்தல்** *aindal,* பெ. (n.) *அருள், இரக்கம்;* mercy, pity, sympathy. (சேரநா.).

ம. ஐந்தல்

*[ஐ → ஐந்தல். ஐ = மென்மை, இரக்கம்.]*

**ஐந்தவி-த்தல்** *aindavi-,* 4 செ.கு.வி. (vi) *ஐந்தடக்கு* பார்க்க; see *aindadakku.* ''ஐந்தவித்தா னாற்றல்'' (குறள்.25).

*[ஐந்து + அவி.]*

**ஐந்தறிவுயிர்** *aindarivuyir,* பெ. (n) *ஐயறிவுயிர்* (திவா.) பார்க்க; see *aiyarivuyir.*

*[ஐந்து + அறி + உயிர்.]*

**ஐந்தனுருபு** *aindan-urubu,* பெ. (n) *ஐந்தாம் வேற்றுமையினுருபு;* case ending of the ablative, viz., இல் or இன் denoting separation, similitude, limit or means. (சா.அக.).

*[ஐந்து + அன் + உருபு.]*

**ஐந்தாங்கல்** *aindāngal,* பெ. (n) *ஐந்து கற்களைக் கொண்டு விளையாடும் ஒரு வகை விளையாட்டு* (இ.வ.); forfeit game which consists in throwing five stones up into the air and catching them in various ways

*[ஐந்து + ஆம் + கல்.]*

**ஐந்தாங்கால்** *aindāngāl,* பெ. (n) *திருமணத்திற்கு ஐந்துநாள் முன்பு நடும் பந்தற்கால்* (வின்.); first auspicious post of the marriage pavilion planted on the fifth day before the date fixed for the marriage

*[ஐந்து + ஆம் + கால்.]*

**ஐந்திணை** *ai-n-dinai,* பெ. (n) 1. *அன்புடைக்காமம்* (நம்பியகப் 4,உரை.); love between man and woman as manifested in five situations pertaining to the five tracts of land 2. *குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை நிலங்கள்* (திவா.); the five tracts of land ''அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவது'' (இறை கள.நூற்பா.1).

*[ஐந்து + திணை.]*

**ஐந்திணைச்செய்யுள்** *ai-n-dinai-c-ceyyul,* பெ. (n.) *உரிப்பொருள் தோன்ற ஐந்திணையையுங் கூறும் சிற்றிலக்கியம்* (இலக் வி 849); poem describing the ain-tinai, along with their characteristics (சா.அக.)

*[ஐந்து + திணை + செய்யுள்.]*

**ஐந்திணைத் தெய்வம்** *ai-n-dinai-t-teyvam,* பெ. (n) *ஐந்து நிலங்கட்குமுரிய தெய்வம்: முருகன், கொற்றவை, திருமால், வேந்தன், வருணன் என்பவர்;* presiding deities of the five tracts of land viz. Murugan, Korravai, Tirumāl, Vēndan and Varuṇan

*[ஐந்து + திணை + தெய்வம்.]*

**ஐந்திணையெழுபது** *ai-n-dinai-y-elupadu,* பெ. (n.) *பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் மூவாதியார் செய்த நூல்; எழுபது (14 x 5) பாடல்களைக் கொண்டது;* ancient love poem of 70 stanzas by Mūvādiyār, one of Patinen-kīl-k-kanakku, (சா.அக.).

*[ஐந்து + திணை + எழுபது.]*

**ஐந்திணையைம்பது** *ai-n-dinai-y-aimpadu,* பெ. (n) *பதினெண்கீழ்க் கணக்குநூல்களுள் ஒன்று; மாறன் பொறையனார் இயற்றியது; 50 பாடல்களைக் கொண்டது;* ancient love poem of 50 stanzas by Māraṉ-poraiyaṉār, one of Padinen-kīl-k-kanakku

*[ஐந்து + திணை + ஐம்பது.]*

**ஐந்திரம்**[1] *aindiram,* பெ. (n) 1. *தொல்காப்பியத்திற்கு முந்து நூலாக வழங்கி மறைந்த பண்டைத் தமிழிலக்கணம்;* an ancient treatise on Tamil grammar, being

the basic and source work for ancient extant Tamil grammar Tolkappiyam. ''ஐந்திரம் நிறைந்த தொல்காப்பி யன் எனத் தன்பெயர் தோற்றி'' (தொல் எழுத்.பாயி )
2. *இந்திய மொழிகளுக்கு இலக்கணம் வகுக்க எடுத்துக்காட்டாக விளங்கியதும் பாணினியின் வட மொழியிலக்கணத்துக்குக் காலத்தால் மிகவும் தொன் மையானதுமாகிய முந்து தமிழ் இந்தியப் பொது இலக்கணநூல்;* a pan Indian proto-Tamil grammar, which set an example for later grammarians in different languages in ancient India, many centuries prior to Pāṇini's Sanskrit grammar.

**க.** ஐந்தரவியாகரண; **தெ.** ஐந்த்ரவியாகரணமு. *Pkt, Pali.,* aindra *Nep Tib.* aindra.

*[ஐ = மேன்மை, உயர்வு. ஐ → ஐயன் → ஐந்தன் → ஐந்திரன் → ஐந்திரம். (ஒ.நோ.) புலம் → புலத்தன் → புலந்தன் → புலந்திரன், மாந்தன் → மாந்தரன்.]*

ஐந்திரனால் இயற்றப்பட்ட தமிழிலக்கணம் ஐந்திரம் எனப்பட்டது ஐந்தன் என்னும் பெயர் இன்றும் துளுமொழியில் ஐத்து, ஐத்தப்ப என வழங்குகிறது ஐத்தக்க, ஐத்தம்ம, ஐத்தை எனும் பெண்பாறபெயர்களும் ஒப்புநோக்கத்தக்கன 'ஐந்தரம்' ஒருவகைப் பனைமரததையும் குறிப்பதால் பனையன் என்னும் பொருளிலும் இப்பெயர் வந்திருக்கலாம் தொல்காப்பியர் ஐந்திர இலக்கணத்தை நிறைவாகக் கற்றவராதலால் முந்து நூல் மரபு நன்கு பேணிக்காக்கப்பட்டுள்ளது. தொன்முதுகாலத்தில் முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை, இசைநுணுச்கம் போன்ற இசையிலக்கண நூல்களும் அகத்தியர் இயறறியதாகக் கூறப்படும் அகத்தியம் என்னும் இயற்றமிழிலக்கணமும மறைந்துபோன நிலையில் வரலாற்றுகெட்டிய அளவில் ஐந்திரமே தொன்முது தமிழ் நூலாக இந்திய நாடு முழுவதிலும் அறியப்பட்டுள்ளது ஆரியர் வருகைக்கு முன்பு இந்தியப் பெருநிலம் முழுவதும் தமிழே பேசசு மொழியாகவும் எழுத்து மொழியாகவும் நிலவியதற்கான சானறுகள் அறிஞா பெருமக்கள் பலராலும் நிறுவப்பட்டுள்ளன பிராகிருத மொழிகளிலும் பாலி மொழியிலும் எகர ஒகரக குறில் எழுத்துககள் இருநதன. கௌதம புத்தாதம் இளமைக்காலத்தில் கற்ற மொழிகளில் தமிழும ஒன்று எனபதை லலிதவிகத்தாரம் என்னும் நூலால் அறிகிறோம சாரிபுத்தர் தம 16 ஆம் அகவையில் ஐநதிரவிலக்கணம் கற்றார் என்று புத்த சாதகக் கதைகள் கூறுகின்றன ஐந்திர இலக்கணம் கற்ற பெருமக்கள் கி மு ஆறாம நூற்றாண்டு வரை இந்தியா முழுவதும் இருந்திருக்கிறார்கள் என்பதும் பாணினியின் காலத்தில் கங்கைசசமவெளிப்பகுதியில் ஐந்திரம் கற்பிக்கப்படடது என்பதும் தெரியவருகின்றன பாணினி விந்தியமலைக்குத் தெற்கே எதனையும் குறிபபிடவில்லை கிழக்குத்திசையில் உச்சயினி முதல் பாடலிபுத்திரம் வரையிலுள்ள பகுதிகளில் ஐநதிர இலக்கணம் பிராகிருதம் பேசுவோராலும் பயிலப்படுதலால் அதனைக் கிழக்கிநதிய இலக்கணம் என்றும் அதனைப் பாணினி முழுமையாக ஏற்கவில்லை என்றும் கூறப்படுகிறது

பண்டைய இந்திய இலக்கணத்தன்மை பற்றி ஆய்வுக்கட்டுரை எழுதி பம்பாய்ப் பல்கலைக்கழகத்தில் (1915) பொற்பதக்கம் பெற்ற வடமொழி ஆராய்ச்சியாளர் கிருட்டிணபெல்வால்கரின் பின்வரும் கூற்று இக்கருத்தை அரண் செய்வதாகும்.

*Aindram* - Panini mentions this name except under the general appellation of "the easterners" an often quoted passage from the fourth taranga of the *Kathasarith Sagara* informs us that the school which Panini supplanted was known as Aindra school .. that technical terms used by the so called Aindra treatises are connected with one another and are, further, simpler and more primitive than those of Panini is quite evident, and on this ground it is not unlikely that they represent a school of grammarians prior to Panini's

— Sripad krishna Belwalkar (1915), "Systmes of Sanskrit Grammar" University of Bombay (pp 10-11).

வடமொழியிலக்கணத்தினின்றும் முற்றிலும் வேறுபட்ட ஐந்திர இலக்கணம் தமிழ் மொழிக்கே உரியது என்பதை ஆராய்ச்சி வல்லுநர் பருனலும் தெளிவுபடுத்தியுள்ளார்.

ஐந்திரத்தைப் பிராகிருத மொழியில் மொழியாக்கம் செய்தவர் முதல் சாகடாயனர் அது பின்னர் இந்திரன் என்பவரால் வடமொழியிலும் ஆக்கம் பெற்றது இவை மட்டுமன்றி சந்திர கோமினின் பௌத்த இலக்கணமும், பாலி மொழியில் இயற்றப்பட்ட சக்சாயனமும், திரவிட சங்கம் நிறுவிய சமண சாகடாயணராகிய தேவநந்தி பூச்சியபாதர் இயற்றிய சைனேந்திர இலக்கணமும் சாதவாகன மன்னர் காலத்தில சருவவருமனால் இயற்றப்பட்ட கலாபவியாகரணம் எனப்படும் காதந்திர இலக்கணமும், ஐந்திர இலக்கணத்தை அடியொற்றி வடபுல மொழிகளுக்கு இலக்கணம் வகுக்க உதவின.

தென்னாட்டு ஐந்திர இலக்கணம் வடநாட்டிலும் கற்பிக்கப்பட்டதைத் தாரானாதரும் யுவான்சுவாங்கும் குறிப்பிட்டுள்ளனர். வான்மீகி இராமாயணத்தில் (இராமா உத்தர.36,43) அனுமன் ஐந்திர இலக்கணம் கற்றவனாகக் கூறப்பட்டிருக்கிறான் கி பி. 10ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட பழங்கன்னட இலக்கண நூலாகிய சப்தமணி தருப்பணம் ஐந்திரநெறியில் வந்த காதந்திர இலக்கணத்தை அடியொற்றி எழுதப்படடுள்ளது.

பாணினியின் இலக்கணத்தைத் திருத்தியும் ஒழுங்குபடுத்தியும் வார்த்திக உரையெழுதிய காத்தியாயனர் ஐந்திர இலக்கணம் கறற தென்னாட்டவர் என்றும் இவர் நந்தர்களொடு தொடர்பு கொண்டிருந்தார் என்றும் கதாசரித் சாகரம் என்னும் நூல் குறிப்பிடுகிறது மராட்டிய மாநிலதது வடமொழிப் பேராசிரியர் வகாங்கர் தென்னாட்டிலிருந்தே இலக்கண அறிவு இந்தியா முழுவதும் பரவியுளளது என்றும் வடமொழிக்கு வளஞ்சேர்த்த பதஞ்சலி, யாககர், சாகடாயனர் போன்றோர் தென்னாட்டவர்கள் என்றும குறிப்பிடுகிறார்

''இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்'' என்று உரையாசிரியர்கள் மேற்கோள்காட்டியிருப்பதும் ''கப்பத்து இந்திரன் விழுநூல்'' என்று சிலப்பதிகாரத்தில் கூறப்படுவதும் சைனேந்திர இலக்கணத்தைச் சுட்டியதேயன்றிப் பண்டைத்தமிழ் ஐந்திரத்தை நேரடியாகச் சுட்டியதன்று பணடைத்தமிழ் ஐந்திரத்தை அடியொற்றித் திபேத்திய மொழிக்கு உயிரும மெய்யுமாக முப்பது முதலெழுத்துகள் அமைக்கப்பட்டிருந்தன என அறிகிறோம்

தொல்காப்பியர் காலத்தில் வடவேங்கடம் தென்குமரியாகத் தமிழ் வழங்கும் எல்லை சுருங்கிவிட்டது எனினும் ஐந்திர இலக்கணம் இந்தியப்பெருநிலம் முழுவதும் இலக்கண ஒளிக்கதிர் வீசிப் புகழ்பெற்றிருநதது எனபது நிறுவப்பட்டுளளது

தமிழிலக்கணத்தை விரித்துக்கூறும் அடிப்படை வகைமைகள் தொன்று தொட்டுத் தமிழில் காக்கப்பட்டுவருவது போலவே ஐந்திரத்தை அடியொற்றி எழுதப்பட்ட வடபுல இலக்கணநூல்க ளிலும் கையாளப்பட்டுள்ளது.

தமிழிலக்கணம் சொற்களை, பெயர், வினை, இடை, உரி என நான்கு இயல்களாகப் பிரித்துக் கொள்வது போலவே ஐந்திர வழிவந்த காதந்திரம் போன்ற பிராகிருத இலக்கண நூல்க ளும் நாமம், ஆகயாதம், நிபாதம், உபசர்கம் எனச் சொற்களை (பெயர், வினை, இடை, உரிசசொற்களாக) வகைப்படுத்து கின்றன. வேற்றுமைகளை முதல்வேற்றுமை, இரண்டாம் வேற் றுமை என எணணிட்டு வரிசைபபடுத்திககூறுவது தமிழ்மரபு இதனையே வடபுல மொழிகளின் இலக்கணநூலகள் பின்பற் றின. பாணினியும் இந்த இலக்கணபபாங்கையும புணர்ச்சி இலக்கணத்தையும் ஐந்திரநெறியாரிட மிருநது தெரிந்து கொண் டிருக்கிறார். ஐந்திர வழிவந்த தொல்காபபியம் ''எல்லாச்சொல் லும் பொருளகுறிததனவே'' என்று குறிப்பிடுகிறது இதே கருத்தைக் கல்பசந்திர வியாகரணம் என்னும் காதநதிர இலக்க ணமும் சுட்டிக்காட்டி ''பொருள்குறித்ததே சொல் என்று ஐந்திரம் கூறுகிறது'' (அருத்த பதம் இத்தி ஐந்தராணாம்) என்று தெளிவாக மூலநூலாகிய ஐந்திரத்தின் பெயரைக் குறிப்பிடுகி றது. இதிலிருந்து இந்திய மொழிகளில் இலக்கணம் எழுதும் பாங்கு தமிழிலிருந்தே பிராகிருதம் உள்ளிட்ட வடபுல மொழி களுக்குப் பரவியது என்பதும் அதன்பிறகே சமற்கிருதத்துக்குத் தமிழிலக்கணத்தை அடியொற்றி உயிரெழுத்து மெய்யெழுத்து வகைப்படுத்துதல் தோன்றியது என்பதும் தெரிகின்றன

எழுத்துகளை உயிரெழுத்து மெய்யெழுத்து என்று தனித்தனி யாக வகைப்படுத்துவதும், தோன்றல், திரிதல், கெடுதல் எனக் கூட்டுச்சொற்களின் இருசொற்களிடைப் புணர்ச்சி (சந்தி) இலக் கணம் கூறுவதும் மேலையாரிய மொழிகளில காணப்படாததும் முற்றிலும் தேவைப்படாததுமான இலக்கண வகைமை. ஆயின் தமிழுக்கு அடிப்படையான இந்த இலக்கண அமைதிகள் சமற்கிருதத்துக்குத் தேவையில்லை என்பதறியாமல் பாணினி தமிழிலக்கணங்களின் கூறுகளையே தேவையின்றிச் சேர்த்துக் கொண்டிருப்பதால் தமிழிலக்கணத்தின் தொன்மையும் வட மொழியிலக்கணத்தின் பினமையும் உணரப்படும்

இலத்தீனில் ஐந்துவேற்றுமைகளும் கிரேக்கத்தில் ஆறுவேற்று மைகளும் இடம்பெற்றிருக்கும் நிலையில் சமற்கிருதத்தில் மட்டும் தமிழைப்போல் எட்டு வேற்றுமை இடம் பெற்றிருப்ப தும் இக்கருத்தை வலுப்படுத்துவதாகும்

ஐந்திரம் முற்றிலும் தமிழிலக்கணம் என்பதை அறியாமல் இதனை வடமொழி இலக்கணங்களுள் ஒன்றாகச் சிலர் கருதி னர் பாணினி பழைய சமற்கிருத இலக்கண நூல்களுள் ஒன்றாக ஐந்திரத்தை எங்கும் குறிபபிடவில்லை; மகாபாசியம் எழுதியவர்களும் குறிப்பிடவில்லை பாணினியாத்ததைவிட ஐந்திரம் பன்மடங்கு பெரியது என்று மாபாரதத்தின் உரையாசி ரியரான தேவபோதர் குறிப்பிட்டிருக்கிறார் உலகமொழிகள் வேறெவற்றிலும் இல்லாத பொருளிலக்கணம் தமிழிலிருப்ப தால் ஐந்திரம் 25,600 நூற்பாக்களைக் கொண்டிருந்ததையும் சொல்லியிருக்கிறார்.

வடபுலமொழிகளில் ஐந்திர இலக்கணத்தை அடியொற்றி இலக் கணம் எழுதியவர்கள் அவ்வம் மொழிக்கு முதன்முதலாக வரிவடிவம் உண்டாக்கித் தந்து இலக்கணம் எழுதியவராவர். ஆதலின் தமிழிலக்கணத்தில் எழுத்திலக்கணம், சொல்லிலக்க ணப் பகுதிகளை மட்டும் வடபுல மொழிகளில் மொழியாக்கம் செய்தனர் வடபுலத்தில் புதிய மொழிகளின் அகப்பொருள் புறப்பொருள் தழுவிய இலக்கியங்கள் வெறும் நாட்டுப்பாடல் களாகவே நிலவியதால் பொருளிலக்கணம் வடபுலமொழிக ளுக்கு அக்காலத்தில் உடனடித் தேவையாக நிலவவில்லை.

ஐந்திரத்தைத் தழுவிய தொல்காப்பியர் எழுத்ததிகாரம், சொல் லதிகாரம், பொருளதிகாரம் என முப்பிரிவாக இலக்கணம் வகுத்திருக்கும் நிலையில் அதே ஐந்திரத்தைத் தழுவிய வடபு லத்து இலக்கண நூல்கள் எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டும் இலக்கணம் கூறிப் பொருளதிகாரத்தைப்பற்றி ஒன்றும் கூறா மல் விட்டுவிட்டதற்கு இதுவே காரணமாகும்.

மராட்டிய மாநிலத்து வடமொழிப் பேராசிரியர் வகாங்கர் இந்திய மொழிகள் பலவும் எழுதப்பட்டு வந்தநிலையில், புதிதாகச் சமற்கிருதத்தை உண்டாக்கி எழுதத்தொடங்கிய போது அதற்கெனத் தனித்த வரிவடிவத்தை உண்டாக்கிக் கொள்ளவில்லையென்றும், அந்தந்தப் பகுதிகளில் வழங்கிய உள்நாட்டு மொழிக்குரிய எழுத்துக்களை சமற்கிருதம் எழுதப் பயன்படுத்திக் கொண்டார்கள் என்றும் நீண்ட வரலாற்றில் இன்று வரை சமற்கிருதத்துக்கு என்று தனித்த எழுத்து வடிவம் தோன்றியதே இல்லையென்றும் கூறுகிறார்.

வடபுலத்தில் இலக்கண அறிவு வளர்வதற்கு வெகுகாலத்திற்கு முன்பே தமிழகத்தில் பல்வகை இலக்கணங்கள் முழுமையாக வளர்ச்சி பெற்றிருந்தன. இதனைப் பருனல் பெருமகனாரும் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

"As I have shown elsewhere there are strong reasons for believing that the Tamil people had an independent system of writing in use before theirs was analysed by grammarians in the north

— Dr Burnell, The Andira School of Sanskrit Grammar (p 20).

ஐந்திரத்தைவிடத் தொல்காப்பியம் நூற்பாக்களின் எண்ணிக் கையளவில் பத்திலொருபகுதியாகக் குறைந்துள்ளது. தொல் காப்பியர் பொருளதிகாரத்தில் இலக்கிய வகைமைகளுக்குரிய உரிப்பொருளை மட்டும் விரித்துரைத்து ஏனைய முதற்பொ ருள் கருப்பொருள்களைப் பற்றிய பொருளிலக்கணங்களைக் கூறாமல் விட்டுவிட்டார் ஐந்திரம் இவற்றையும் உள்ளடக்கிப் பெரிய நூலாக இயற்றப்பட்டிருக்கலாம்

பாண்டிய நாடு பன்னிரண்டாண்டுகளாகத் தொடர்ந்து மழை பெறாமல் வறங்கூர்ந்தபோது மக்கள் பலரும் பல திசைகளில் குடிபெயர்ந்தனர் என்றும், மீண்டும் நாடுமலிய மழை பெய்து நாடு நாடாயினபோது, அரசன் நாலாப்புறமும் ஆட்போக்கித் தமிழ்நூல்களைக் கொணர்க என ஆணையிட்டும், எழுத்திலக் கண சொல்லிலக்கண நூலகள் மட்டும் கிடைத்தன வென்றும் எப்பாடு பட்டும் பொருளிலக்கண நூல்களில் ஒன்றேனும் கிடைக்கவில்லை யென்றும் இறையனார் களவியல் நூல் கூறுகிறது ஐந்திரகாலத்திற்குப்பின் முதற்பொருள் கருப்பொ ருள் நூல்கள் தனித்தனியாக எழுதப்பட்டன என்பதும், இறைய னார் களவியல் நூல் எழுதப்பட்ட காலத்தில் தொல்காப்பியம் இருந்தாலும் அதிலுள்ள உரிப்பொருள் தழுவிய பொருளதிகா ரத்தைப் பொருள் நூலாக அரசன் முழுதும் ஒப்பவில்லையென் பதும் உய்த்துணரலாம். ஐந்திரம் என்னும் பெயரில் ஒரு சிறபநூல் இருந்ததும், இசைநூலைத் தொலகாப்பியர் நரம்பின் மறை என்று குறிப்பிடுவதும், மொழிமரபுக்கு அப்பாற்பட்ட பொருள் மரபு நூல்களின் பெருக்கத்தைச் சுட்டுவனவாம்.

**ஐந்திரம்²** *aindiram,* பெ. (n) ***ஒரு கற்றச்சு மரத்தச்சு நூல், சிற்பநூல்;*** treatise on architecture in stone and wood carving (w).

*[ஐந்திரம்¹ → ஐந்திரம்²]*

ஐந்திரநூல் இயற்றப்பட்ட காலத்திற்குப் பிறகு உரிப்பொருள் மட்டுமன்றி முதற்பொருள் கருப்பொருள் பற்றிய நூற்பிரிவுக ளின் கிளைநூலாக வளாநத கலைநூலாகலாம்

**ஐந்திரவிலக்கணம்** *aindira-v-ilakkanam,* பெ (n.) ***முந்து தமிழ் ஐந்திர இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு இந்திரவியாகரணம் என்னும் பெயரில் இயற்றப்பட்ட வடமொழி இலக்கணநூல்.*** (சில்ப.11-99,உரை.); Sanskrit grammar ascribed to Indra modelled after the ancient Tamil treatise

*[ஐந்திரம் + இலக்கணம் ]*

**ஐந்து¹** *aindu,* பெ (n) 1 ***ஐந்து என்னும் எண்ணுப்பெயர், நான்கின்மேல் ஒன்று;*** number five 2 ***'ரு' என்னும் எண்ணுக்குறியீட்டுக்குரிய தமிழ் எண்ணுப் பெயர்;*** name of the fifth numerical number 'ரு' in Tamil.

**மறுவ.** கை, கைந்து, ஐந்து, அஞ்சு, பாதம், பாஞ்சு, பஞ்ச.

ம. ஐந்து, அஞ்சு, **க.** ஐது, **து.** அய்ன், குட. அஞ்சி; **தெ.** அயிது, கொலா, அய்த், அயித், பட. அய்து, **கைக்.** அஞ்; கட. அயிது, எரு. அஞ்சு, **கோத.** அஞ்செ, குரும். அய்து; **இரு.** அய்ந்து

*Siam* (karen) yai, yea, *Laos* ha, *Mithan Naga* aga, *Chinese* (cauton) ng, *Mag* ot, *Hung* ot; *Tib* ina, *Malay* dima, *Anna* n-an, *Viet* n-an

*[கை → கைந்து → ஐந்து கையிலுள்ள ஐந்து விரல்களின் அடிப்படையில் தோன்றிய எண்ணுப்பெயர் தொடக்கத்தில் கை - கைந்து என வழங்கிப் பின்னர் ஐந்து எனத் திரிந்தது பாதத்தின் ஐந்து விரல்களை எண்ணிய மக்கள் கூட்டத்தினர் அதிலிருந்து penta - panch என்னும் சொறகளைத் திரித்துக் கொண்டனர் எனினும் அவற்றின் மூலமாகிய பாதம் என்ப தும் தமிழ்ச் சொல்லாகவே இருப்பது அறியத்தக்கது ]*

**கை (ஐந்து)** முதலவகை அடிநிலைத்திரிபுற்றவை

*Jap* go, *Amoy* go, *Tib* (gyarung) kung, *Tib* (horpa) gme, *Tib* gna, *Nep* gno, gna, *Burm* nga, *Buta* nga

**கை → கைந்து → கைன்க் → சைன்க்.**

இரணடாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை

*Georg* khouthi, *Heb* Chamischah, *Ar* kh-am-seh, chams, *Iraq* kh-am-set, *O Ir* coic, *Ir* curf, *L* quin-que, *F* cinf, *Port* cinco, *Sp* cinco, *It* cinque, *Rum* cinci, *Esp* kvin, *Thai* har

**கை → கைந்து → ஐந்து**

மூன்றாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை திரவிடமொழிகளில் பெருக வழங்குகின்றன. எனினும் இவற்றின 'ஊடாட்டம் .கிழக்காசிய மொழிகளிலும அங்கேரி மொழியிலும் காணப்படு கிறது இவை திரவிட இனச்சொறபட்டியலில் முன்னர்த் தரப் பட்டுள்ளன.

**ஐந்து - து** முதல்வகை முடிநிலைத்திரிபுற்றவை.

*O Egy*, dyw; *Copt* tw; *Mangol* tunnya; *Afri* (swahili). tano.

**ஐந்து - து - உ - வு.** இரண்டாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை

*Chine* (mand) wu, *Korea* oo; *Tib* (Gyami). wu, wuku; *Fin.* wusi.

**ஐந்து - து - சு** மூன்றாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை.

*Afri* (somal) san; *Gondi* seiung *Gayeti* seiyung

**பாதம் - பெண்தெ - பை** (பாதத்திலுள்ள ஐந்து விரல்கள்)

முதல் வகை அடிநிலை முடிநிலைத் திரிபுற்றவை.

*L* pente, *Poli* pents; *Serbo* pet, *O sla* peti; *Russ* pyat; *Basq* bost, bortz; *Czech* pet, *Turk* bes, *Gk* ponti, *Nep-(Khaling)* bhong; *Nep(Tharu)* pacher *Naga* pangu, pungu, banga, *Burm* (Kumi) pan, *Burm*-(kami) pangna *Sinh* phai, pahai

**பாதம் - பாஞ்சு - பஞ்ச - விசு**

இரண்டாம் வகை அடிநிலை முடிநிலைத் திரிபுற்றவை.

*Skt* panj (vedic pansa), *Sind* punj, *Brah* panj, *Kash* panch, pamb, *Assa* paach, *Mar*, *Arj*, *Ori*, *Beng* paanch *Nep* panch, *Beng* (Kocch) panch, *Gond* panchu, *Chentu* panch, *Lith* penk, *G* funf, *Yid* finef, *Swe*, *Dan*, *Norw* fem; *OE* fiv, *E* five; *Goth* finf, *Dut* visf, *Fin*-vishi, viden

ஐந்தின் தொடக்க நிலைச்சொறகளான கை - கைந்து என்பவை தமிழில் வழக்கிழநதன கைவிரல்களின் அடிப்படையில் தோனறிய ஐந்தைககுறிக்கும் எண்ணுப்பெயர்களே போதும் என்ற நிலையில் பாதத்தின் விரல்களைக்குறித்த மற்றொரு எணணுப்பெயர் ஐந்தைக குறிககத் தோன்றியது ஏன் என்று வினாவுவாரும் உளர் இருபது வரை எண்ணுவதற்காக இரு கைகளிலும் இரு பாதஙகளிலும் உள்ள விரலகளை எண்ணு வது மரபாக இருந்தது ஆதலால் இந்தைரோப்பிய மொழியில் நாளடைவில பாதத்தையும் ஐந்தைக் குறிக்கும் எண்ணுப்பெய ராக்கிக் கொண்டனர் பாதத்தின் அடியாகத் தோன்றிய எண் ணுப்பெயர் அடிநிலை முடிநிலை ஆகிய இருவகைத் திரிபுக ளும் ஒருசேரப் பெற்றிருப்பதால் இச்சொலலை வழங்கிய மக்கள பிறமொழியாளரொடு பெருக ஊடாடியிருக்கினறனர் எனத்தெரிகிறது

கையின் அடியாகத் தோன்றிய எண்ணுபபெயர் அடிநிலைத்தி ரிபுகளையும் பின்னர் முடிநிலைததிரிபுகளையும் பெற்றிருப்ப தால இசசொலலை வழங்கிய மககள வாழையடி வாழையாக ஒரு குடும்பத்திலிருந்து பல்வேறு திசைகளில் சென்றவர்கள் எனத தெரிகிறது முடிநிலைத திரிபுபெற்ற மொழிகள் ஆப்பி ரிககா, எகுபது, நட்டாசியம, கிழக்காசியா ஆகிய தொலைவி டஙகளில் ஊடாட்டம பெற்றிருப்பதால ஐந்து என்னும் சொல் லும் அதற்கு மூலமான கை - கைந்து என்னும் சொற்களும் தோனறிய காலம் ஞாலமுதன்மொழியின் தொடக்ககாலம் எனலாம் இவற்றைச சிற்சில மொழிகள் தக்கவைத்துக்கொண டிருப்பது உடன் கொண்ட சொல்வளமாகிய முன்னோர் சொற்காபபைக் காட்டும் ஒரு சில தொன்முது சொற்களைத் தக்க வைத்துக்கொண்டிருபபதால் விடுபட்ட சொல் வரலாற்றுத் தொடர்பைக் காண உதவுகிறது.

**ஐந்து**[2] *aindu,* பெ. (n) ***நைந்துபோதல்;*** being worn out, unfit for use. இந்தத் துணி ஐந்து ஐந்தாகக் கிடக்கிறது (இ.வ).

*[நை → நைந்து → ஐந்து. நைதல் = பழையதாகித்தானே கிழிதல், பயனற்றுப்போதல்.]*

**ஐந்துகில் போர்ப்போர்** *aintugil-pōr-p-pōr,* பெ (n) ***ஐந்து துணிகளைப் போர்த்துக் கொள்ளும் பௌத்தர்;*** Buddhists, as those who cover themselves with five clothes "ஐந்துகில் போர்த்துழலு நீதர்" (தேவா 239,10). (செ அக).

*[ஐந்து + துகில் + போர்ப்போர்.]*

**ஐந்து சுண்ணம்** *aindu-śunnam,* பெ (n) 1 ***கடல் நுரை, கிளிஞ்சல், குக்குடம், வலம்புரி, வெள்ளைக் கல் முதலியவைகளை நீற்றிய சுண்ணங்கள்;*** calcium carbonates obtained by calcining sea-froth, bi-valve shell, egg-shell, conch (turning to the right) and lime stone 2. ***நண்டு, நத்தை, சங்கு, வெடியுப்பு, கடல்நுரை ஆகிய இவ்வைந்தையும் தாளித்த சுண்ணாம்பு;*** lime (chunam) obtained by burning the following five substances viz., crab-shell, snail shell, conch, nitre and sea froth.

*[ஐந்து + சுண்ணம்.]*

**ஐந்துண்டி** *aindundi,* பெ. (n.) ***ஐந்துணவு*** (திவா.12,71) பார்க்க; see *aindunavu.*

*[ஐந்து + உண்டி.]*

**ஐந்துணவு** *aindunavu,* பெ. (n.) ***கடித்தல், நக்கல் பருகல், விழுங்கல், மெல்லல் முதலிய ஐந்து வகை யால் உண்ணுதற்குரிய உணவுப்பண்டம்*** (சூடா.); five kinds of food differentiated according to the manner of taking them viz., biting, licking, drinking, swallowing and munching. (செ.அக.).

*[ஐந்து + உணவு].*

**ஐந்துபல்நங்கூரம்** *aindu-pal-naṅgūram,* பெ. (n) ***நங்கூர வகை;*** graphnel anchor, having five flukes or prongs (செ.அக.).

*[ஐந்து + பல் + நங்கூரம். நாஞ்சில் கூர் → நாங்கூர் → நங்கூரம்.]*



ஐந்து பல்நங்கூரம்

**ஐந்துபா** *aindu-pā,* பெ. (n) ***வெண்பா, அகவல், கலி, வஞ்சி, மருட்பா யெனும் ஐ வகையான பாக்கள்*** (காரிகை); five varieties of verse (செ.அக.).

*[ஐந்து + பா]*

**ஐந்தெழுத்து** *aindeluttu,* பெ. (n) ***நமசிவாய எனும் ஐந்தெழுத்து;*** five sacred syllables of saivites -Namaśivāya

*[ஐந்து + எழுத்து]*

**ஐந்தை** *aindai,* பெ (n) ***சிறுகடுகு;*** Indian mustard "மறுமையை யைந்தை யனைத் தானுஞ்... சிந்தியார்" (நாலடி.329) (செ.அக).

*[ஐ = சிறியது ஐ → ஐந்தை (சிறிய கடுகு).]*

**ஐந்தொகை**[1] *aindogai,* பெ. (n) ***வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத் தொகை, உம்மைத்தொகை என்பன;*** five compounds in Tamil Grammar "ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி" (நன்னூல்-369)

*[ஐந்து + தொகை]*

**ஐந்தொகை**[2] *aindogai,* பெ. (n) ***விழுமுதல், வரவு, செலவு, இருப்பு, ஆதாயம் முதலிய ஐவகை விளக் கங் காட்டுங் கணக்கு*** (இ வ); balance sheet, containing five particulars (செ அக).

*[ஐந்து + தொகை]*

**ஐந்தொழில்** *aindolil,* பெ. (n) ***ஐந்து தொழில்;*** five functions of God "ஐந்தொழிற்கு மப்புறமாய்" (குமர.பிர.கந்தர்.5). (செ.அக.).

*[ஐந்து + தொழில் - ஐந்தொழில். படைத்தல், காத்தல், அழித் தல், மறைத்தல், அருளல் என்பன.]*

**ஐந்தொழிலன்** *aindolilan,* பெ. (n.) ***ஐந்து தொழிலையு டைய சிவன்;*** Śiva who performs five functions. (செ அக.).

*[ஐந்து + தொழிலன்.]*

**ஐந்நிலை** *ainnilai,* பெ. (n.) ***உடம்பினுட்பட்ட ஆதன் பயன்துய்க்கும், நனவு, கனவு, உறக்கம்*** (சுழுத்தி) ***பேருறக்கம்*** (துரியம்), ***உயிர்ப்படக்கம்*** (துரியாதீதம்) ***என்ற ஐவகை நிலை*** (திருமந்.); five conditions or states of the embodied soul

*[ஐந்து + நிலை.]*

**ஐந்நூறு** *ain-nūṟu,* பெ. (n.) ***ஐந்து நூறு;*** five hundred. (சா.அக.).

க. ஐநூறு, அய்நூறு, அயிநூறு; ம. அஞ்ஞூறு; கு. அஞ்ஞபாரி; து. அய்நூரு; தெ. ஏநூறு; பட. ஐநூறு.

*[ஐந்து + நூறு.]*

**ஐம்படைத்தாலி** *ai-m-badai-t-tāli*, பெ. (n) ***கழுத்திலே பிள்ளைகளணியும் ஐந்து படைக்கலன் உருவமைந்த அணி;*** gold pendant worn by children in a necklace bearing in relief of five weapons of Viṣṇu, as an amulet "ஐம் படைத்தாலி... குறுநடைப் புதல்வர்க்கு" (மணி. 7,56). (அபி சிந்.).

*[ஐந்து + படை + தாலி. சங்கு, சக்கரம், வில், வாள், மறத்தண்டு (கதை) என்பவற்றின் உருப்பொறித்த தாலி.]*

**ஐம்படைப்பருவம்** *ai-m-badai-p-paruvam*, பெ. (n) ***ஐம்படைத்தாலியையணிதற்குரிய குழந்தைப்பருவம்;*** stage of childhood appropriate for wearing the aimbadai-t-tāli. "ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி" (SIIii,310). (செ அக.).

*[ஐந்து + படை - ஐம்படை + பருவம்]*

**ஐம்பது** *aimbadu*, பெ. (n) ***ஐந்து பத்துகள் கொண்ட எண்;*** fifty, numeral fifty (செ அக).

**ம.** ஐம்பது, அம்பத்து, குட. அயிம்பதி; **து.** ஐவ; **தெ.** என்பதி, யாபய், யாபை, **க.** அய்வத்து, அயிவத்து, ஐவத்து; பட. ஐவத்து, **துட.** என்பொத், **இரு.** அம்படு; **கோத.** எய்வத், அய்வத்

*[ஐந்து + பத்து.]*

**ஐம்பருத்தி** *aimbarutti*, பெ. (n) ***ஐந்து வகைப் பருத்தி;*** five varities of cotton

*[ஐந்து + பருத்தி - ஐம்பருத்தி.]*

ஐவகைப் பருத்திகள் வெண்பருத்தி, செம்பருத்தி, உப்பம் பருத்தி, தாளிப்பருத்தி (கொடிப்பருத்தி), இலாடன் பருத்தி. போலிப் பருத்திகளைந்து - பூப்பருத்தி, வேளப்பருத்தி, எருக்கம்பருத்தி, பேய்ப்பருத்தி, காட்டுப்பருத்தி

**ஐம்பால்**[1] *ai-m-bāl*, பெ (n) ***ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற ஐந்து பால் பிரிவுகள்*** (தொல்.பொருள் 644), the five parts in which nouns and finite verbs are divided

*[ஐந்து + பால் - ஐம்பால்.]*

**ஐம்பால்**[2] *ai-m-bāl*, பெ (n) ***ஐந்து வகையாக முடிக்கப்படும் மகளிர் கூந்தல்;*** woman's hair, from its being dressed in five modes "வண்டினங்கள்... அம்பராவுங் கண்மடவாரைம்பாலணையும்" (திவ்.பெரியதி.7,5,3). (செ.அக.).

*[ஐந்து + பால் - ஐம்பால். பால் = வகை. ஐம்பான்முடி பார்க்க; see aimpāṉmuḍi]*

**ஐம்பான்முடி** *ai-m-bāṉ-muḍi*, பெ. (n.) ***மகளிர் கூந்தலின், கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள்*** (திவா.) ***என்ற ஐவகை முடி;*** five modes of dressing woman's hair

*[ஐந்து + பால் + முடி - ஐம்பான்முடி.]*

கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்பனவற்றுள் முடி, சுருள் என்னும் இரண்டை அளகம் துஞ்சை எனக் குறிப்பிடுவதுண்டு. கொண்டை = பக்கங்களில் முடிவது குழல் = சுருட்டி (முறுக்கி) முடிக்கப்படுவது பனிச்சை = உச்சியில் கூராகக்கோபுரம் போல் முடிவது அளகம் (முடி) = நெளிகூந்தல் ஒழுங்கு துஞ்சை (சுருள்) = பின்னித்தொங்கவிட்ட பின்சடை



ஐம்பான்முடி

**ஐம்புலம்** *ai-m-bulam*, பெ. (n) ***ஐந்து உறுப்புகளுக்கும் உரிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து உணர்ச்சிகள்;*** sensations of the five sensory organs "ஐம்புலனுமொண்டொடி கண்ணே யுள" (குறள்.1101). (செ.அக.).

*[ஐந்து + புலம்.]*

**ஐம்புன்னை** *aimpuṉṉai*, பெ. (n) ***ஐந்து வகைப் புன்னை மரங்கள்;*** five kinds of poon tree

*[ஐந்து + புன்னை - ஐம்புன்னை.]*

அவை: 1. புன்னை அல்லது புன்னாகம், 2. சுரபுன்னை; 3. காட்டுப்புன்னை; 4 சிறுபுன்னை, 5. மூவிலைப்புன்னை.

**ஐம்பூதம்** *ai-m-būdam*, பெ (n) ***இயற்கையின் ஐவகைப் பாகுபாடுகள்*** (மணி.27,89); five elements (செ.அக.).

*[ஐந்து + பூதம்]*

**ஐம்பெருங்காப்பியம்** *ai-m-peruṅkāppiyam*, பெ. (n.) ***சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐம்பெரும் இலக்கியங்கள்*** (நன்.387,மயிலை); the five great epics viz, Śīvaga Śintāmaṇi, Śilappadigāram, Maṇimēgalai, Vaḷayāpati and Kuṇḍalakēśi. (செ.அக.).

*[ஐந்து + பெரும் + காப்பியம்.]*

**ஐம்பெருங்குழு** *ai-m-peruṅkuḻu*, பெ. (n) ***அரசர்க்கு இன்றியமையாதவரான அமைச்சர், அந்தணர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் என்னும் ஐவகை அரசியற்றலைவர்;*** five chief officers of a king. "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" (மணி.1,17). (செ.அக.).

*[ஐந்து + பெரும் + குழு.]*



ஒட்டாம்பாரை மீன்






ஐம்படைத்தாலி

## ஐம்பான் முடி

1. பனிச்சை
2. கொண்டை
3. துஞ்சை
4. குழல்
5. அளகம்

**ஐம்பெருங்குற்றம்** *ai-m-perunkuram,* பெ. (n) ***கொலை, பொய், களவு, கள்ளுண்ணுதல், சூது என்ற ஐவகைத் தீச்செயல்கள்;*** the five heinous sins. (செ அக )

*[ஐந்து + பெரும் + குற்றம் ]*

**ஐம்பொறி** *ai-m-pori,* பெ (n) ***மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்துறுப்புகள்*** (திவா ); five organs of sense viz , body, mouth, eye, nose and ear (செ அக )

*[ஐந்து + பொறி ]*

**ஐம்பொன்** *ai-m-pon,* பெ. (n) ***பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்ற ஐவகை மாழைகள்*** (வின் ); five chief metals, viz , gold, silver, copper, iron, aluminium

ம. ஐம்பொனனு

*[ஐந்து + பொன் ]*

**ஐம்மீன்** *ai-m-mīn,* பெ. (n) 1. ***கைம்மீன்*** (அத்தம்) (பிங்.); 13th naksatra, so called because of its five principal stars 2 ***உருள்*** (ரோகிணி); fourth naksatra (செ.அக.).

*[ஐந்து + மீன் ]*

**ஐம்முகக்கணை** *ai-m-muga-k-kanai,* பெ. (n) ***ஐந்து முனைகளைக் கொண்ட ஒருவகை அம்பு*** (வின்.); arrow with five points

*[ஐந்து + முகம் + கணை ]*

**ஐம்முகன்** *ai-m-mugan,* பெ. (n) ***ஐந்து முகங்களையுடைய சிவன்;*** Siva, the five-faced (செ.அக.).

ம. ஐம்முகன்.

*[ஐந்து + முகன்.]*

**ஐம்மை** *ai-m-mai,* பெ. (n) 1. ***தகட்டு வடிவு*** (பிங்.); thinness and flatness, as of a plate 2. ***நெருக்கம்*** (வின்.); closeness, crowdedness (செ.அக.).

*[ஐ → ஐம்மை.]*

**ஐய**[1] *aiya,* கு.பெ.எ. (adj.) ***வியக்கத்தக்க;*** wonderful "ஐயகோங்குறைத்தர" (கலித்.25).

*[ஐ = பெருமை, வியப்பு. ஐ → ஐய.]*

**ஐய**[2] *aiya,* கு பெ.எ. (adj ) 1. ***நொய்ய;*** small, weak. "ஒரு தனக்குள்ள வைய படையையும்" (திருவாலவா.46,12). 2. ***அழகிய;*** beautiful.

*[ஐ = நுண்மை, சிறுமை. ஐ → ஐய.]*

**ஐய**[3] *aiya,* இடை. (int ) 1. ***வியப்புக்குறிப்பு;*** exclamation of wonder "ஐய விண்ணதொ ரற்புத மாயையை" (திருவிளை.விடை.23). 2. ***இரக்கக்குறிப்பு;*** exclamation of pity, concern "ஆதுல ரானீ ரந்தோ வையவென் முது" (திருவிளை.மாமனாக.23) (செ.அக.).

*[ஐ → ஐய.]*

**ஐயக்கடிஞை** *aiya-k-kadiñai,* பெ. (n) ***இரப்போர் கலம்;*** alms bowl. "ஐயக் கடிஞை கையிளேந்தி" (மணி.13,109) (செ அக )

*[ஐயம் + கடிஞை குடிகை → கடிகை → கடிஞை ]*

**ஐயக்காட்சி** *aiya-k-kātci,* பெ (n) 1 ***தோன்றினதொரு பொருளை அதுவோ இதுவோ என்று இரண்டுறக் கருதுகை*** (சி சி அளவை 3,மறைஞா ); vision or perception too dim to decide whether a thing is this or that 2. ***கண்மாயம்;*** illusion (செ அக ).

*[ஐயம் + காட்சி - ஐயக்காட்சி ]*

**ஐயகோ** *aiyagō,* இடை (int ) ***இரக்கம், துயரம் ஆகிய வற்றை வுணர்த்துங் குறிப்பு;*** exclamation of pity, sorrow "ஐயகோ வென றலம்வருவாள்" (வெங்கைக்கோ 246) (செ அக )

*[ஐயன் → ஐயவோ → ஐயகோ.]*

**ஐயங்கார்** *aiyangār,* பெ (n) 1 ***திருமாலிய ஆசான்;*** learned Vaisnava priest 2. ***திருமாலிய வகுப்பாரின் பட்டப்பெயர்*** (T A S i,145), title of Sri Vaiṣnavas

தெ. அய்யகாரு, ஐவாரு

*[ஐயன் + கார் - ஐயங்கார். அவர் → வார்> தெ. வாரு → காரு ஐயர், ஐயனார், ஐயன்மார் என்பன தமிழ்வடிவங்கள். ஐயங்கார் என்பது தெலுங்கு வாயிலாக இராமானுசர் காலத்திற் குப்பின் தமிழில் புகுந்த திசைச்சொல் ]*

**ஐயங்கொள்(ளு)-தல்** *aiyankol-,* 16.செ.கு.வி. (v.i) ***நம்பிக்கை தளர்தல்;*** to have doubt, to lose faith

*[ஐயம் + கொள்.]*

**ஐயடிகள்** *aiyadigal,* பெ. (n) 1. ***மதிக்கத்தக்க பெரியோர்க்கு வழங்கும் மதிப்புரவு உயர்மொழி;*** honorific title of respectable religious persons 2. ***சமணமுனிவர்;*** Jain Monk

*[ஐயம் = இரந்து உண்ணுதல். ஐயம் + அடிகள் - ஐயடிகள். ஐயம் ஏற்று உண்ணும் சமண முனிவர்.]*

**ஐயடிகள் காடவர் கோன்நாயனார்** *aiyadigal-kādava-r-kōnnāyanār,* பெ (n) ***அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்*** (பெரியபு.); ***பல்லவ குலத்து மன்னராக இருந்தவர்;*** canonized Saiva saint, one of 63,author of the Kṣettira-t-tiru-venpā and a Pallava Prince. (செ.அக.).

*[ஐயடிகள் + காடவர் கோன் + நாயனார். ஐயடிகள் = முனிவர், சமணமுனிவர்க்குரிய மதிப்புரவு உயர்மொழி. காடவர் = பல்லவர்க் குரியபெயர். இவர் பல்லவ அரசர் குடியைச் சார்ந்தவரும் சமண முனிவராக இருந்து பின்னர், சிவனடியாராக மாறியவரும் ஆகிய நாயனார்.]*

**ஐயப்படு-தல்** *aiya-p-padu-,* 20.செ.கு.வி. (v.i.) ***ஐயங்கொள்*** பார்க்க; see *aiyankol.*

**ஐயப்பாடு** *aiya-p-pāḍu,* பெ. (n.) **ஐயம்**[2] பார்க்க; see *aiyam.*[2] "அறிந்தவை யையப்பா டில்லதே யொற்று" (குறள்.587). (செ.அக.).

*[ஐயம் + பாடு. படு → பாடு.]*

**ஐயபூழி** *aiya-pūḻi,* பெ. (n.) **பருமணல்** (யாழ்.அக.); grit, coarse sand (செ.அக.).

*[ஐ → ஐய + பூழி. ஐ = பெரிய.]*

**ஐயம்**[1] *aiyam,* பெ. (n.) 1. **ஒரு பொருளை அதனின்று வேறுபட்ட பல பொருள்களாக உணர்தல்** (தொல் பொருள்.260); doubt, uncertainty, suspense, scepticism. 2. **அகப்பொருட்டுறைகளுள் ஒன்று** (இறை.2,உரை.32); theme of doubt arising in one's mind as to whether a damsel seen is human or some other lovable object (செ.அக.).

ம. ஐயம்.

*[ஐ → ஐயம். ஐ = சிறுமை ஐயம் = சிறுகுதல், ஒன்றைப் பற்றிய தெளிவு குறைவுபடுதல், நன்கு புலப்படாமை, தடுமாற்றம்.]*

**ஐயம்**[2] *aiyam,* பெ. (n.) **சிறுபொழுது** (பிங்.); short duration of time (செ.அக.).

*[ஐ = சிறுமை, ஐயம் = சிறியது, சிறுபொழுது.]*

**ஐயம்**[3] *aiyam,* பெ. (n.) **உய்த்தறிதல்** (பொதி நி.); inference (செ.அக.).

*[ஐ = சிறுமை, ஐயம் = சிறியது, சிறிய பற்றுக்கோடு, நம்பிக்கைக் குரிய சிறு காரணம்.]*

**ஐயம்**[4] *aiyam,* பெ (n.) 1. **இரப்புணவு** (பிச்சை); alms "தாபதவேடத்தரையம் புகுவரால்" (திருவாச.17,9). 2. **இரப்போர்கலம்;** beggar's bowl

*[ஐயன் - சமண சமயம் பரவியபோது சமணத்துறவிக்குரிய மதிப்புரவுச் சொல் (ஒ.நோ ஐயன் ஆரிதன்) ஐயன் → ஐயம் = சமணத்துறவிகளுக்கு இடும் உணவு ஒ.நோ ஐயன் + அடிகள் - ஐயடிகள் = ஐயமேற்றுண்ணும் அடிகள்.]*

**ஐயம்**[5] *aiyam,* பெ. (n) **மோர்** (யாழ்.அக.); buttermilk (செ அக)

*[ஐ = மென்மை, இளக்கம், ஐ → ஐயம் = இளக்கமான அல்லது நீராளமான மோர்]*

**ஐயம்பிடாரி** *aiyam-piḍāri,* பெ. (n) **சிற்றூர்த் தெய்வம்** (இ வ); female demon of the village. (செ.அக.).

*[ஐயம் + பிடாரி = ஐயம்பிடாரி.]*

**ஐயம்புகு-தல்** *aiyam-pugu-,* 21 செ.கு வி. (v.i) **இரந் துண்ணுதல்;** to ask alms, beg "ஐயம் புகுவரா லன்னே யென்னும்" (திருவாச.17,9).

*[ஐயம் +.புகு.]*

**ஐயமறுத்தல் வினா** *aiyam-aṟuttal-viṉā,* பெ (n) **ஐயம் நீக்குதற்குக் கேட்கும் வினா** (திவா.); question with a view to clearing a doubt (செ அக.).

*[ஐயம் + அறுத்தல் + வினா.]*

**ஐயமுறல்** *aiyamuṟal,* பெ. (n.) **ஐயங்கொள்-தல்** பார்க்க; see *aiyaṅkol.*

*[ஐயம் + உறல்.]*

**ஐயர்** *aiyar,* பெ. (n) 1. **பெரியோர்;** men worthy of respect "ஐயரே யம்பலவ ரருளாலிப் பொழுதணைந் தோம்" (பெரியபு.திருநாளை 30). 2. **முனிவர்;** sages. 3 **தேவர்** (திவா.); celestials 4. **பார்ப்பார்** (திவா.); brāhmans "பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே" (பாரதியார்) 6 **வீரசைவர் பட்டப்பெயர்;** title of Lingāyats விசாகப் பெருமாளையர் 7. **கிறித்தவ விடை யூழியரின்** (பாதிரிமார்) **பட்டப்பெயர்;** title of ordained ministers in the protestant churches 8. **மறவர்;** warrior. 8. **அரச மரபினர்** (செ அக.); member of royal family

ம. ஐயன்; க. ஐகள்; தெ. ஐவாரு, ஐயவாரு. *Pāli* ayya; *Skt* ārya

*[ஐயன் → ஐயர்.]*

**ஐயவணி** *aiya-v-aṇi,* பெ. (n.) **உவமைப் பொருள்களின் ஒப்புமையினால் ஐயுறுவதுபோற் பேசும் அணி** (அணியி 10); figure of speech in which close resemblance between two objects leads to one of them being spoken of as if it were mistaken for the other. (செ.அக.).

*[ஐயம் + அணி - ஐயவணி.]*

**ஐயவி** *aiyavi,* பெ. (n) 1. **வெண்சிறு கடுகு;** white mustard. "ஐயவி-புகைப்பவும்" (புறநா.98,15) 2. **கடுகு** (திவா ), Indian mustard 3. **ஒரு நிறை** (தொல்.எழுத். 164); a weight 4. **கடுக்காய்** (மலை ); chebulic myrobalan. 5 **கதவிற்குக் காவலாகப் புறவாயிலிலே தூக்கப்ப டும் துலாமரம்;** upright bar for the gate of a fort. "பூணாவையவி தூக்கிய" (பதிற்றுப் 16). 6. **அம்புக ளின் கட்டு** (பதிற்று.16,உரை); bundle of arrows (செ.அக.).

ம. ஐயவி.

*[ஐ = சிறுமை, ஐ → ஐயவி = சிறிய கடுகு, கடுகுபோல் கார்ப்புள்ள கடுக்காய். ஐ = உயர்வு. ஐயவி = துலாமரம். அம்புக் கூடு]*

**ஐயவிக்காய்** *aiyavikkāy,* பெ. (n) **கடுக்காய் என்பதற் குக் குழூஉக் குறி;** secret name for gall-nut. (சா.அக.).

*[ஐயவி + காய்.]*

**ஐயவித்துலாம்** *aiyavi-t-tulām,* பெ. (n) **தலைகளைப் பிடித்துத் திருகும்படி அமைந்திருக்கும் ஒரு மதிற் பொறி** (சீவக.102,உரை); machine set on the walls of a fort to operate as twisting heads (செ.அக.).

*[ஐ → ஐயவி = உயரம். ஐயவி + துலாம் - ஐயவித்துலாம் = உயர்த்திக்கட்டிய துலாம்.]*

**ஐயவினா** *aiya-viṉā,* பெ. (n) **ஐயமறுத்தல் வினா** (நன்.385,உரை) பார்க்க; see *aiyam-aṟuttal-viṉā.* (செ அக.)

*[ஐயம் + வினா.]*

**ஐயவுணர்வு** *aiya-v-unarvu,* பெ. (n.) ***நிலையில்லா வறிவு*** (இறை.7,70); uncertain knowledge, dist. fr. துணிவுணர்வு (செ.அக.).

*[ஐயம் + உணர்வு.]*

**ஐயவும்மை** *aiya-v-ummai,* பெ. (n.) ***உம்***[1] பார்க்க; see *um*[1] (செ.அக.).

*[ஐயம் + உம்மை.]*

**ஐயவுவமை** *aiya-v-uvamai,* பெ. (n.) ***அணிவகை*** (வின்); figure of speech (செ.அக.).

*[ஐயம் + உவமை.]*

**ஐயள்** *ai-y-al,* பெ. (n) ***வியக்கத்தக்கவள்;*** remarkable, wonderful woman. "ஐயள்" (ஐங்குறு.253).

*[ஐ → ஐயள் (தமி.வ 280).]*

**ஐயறிவுயிர்** *aiyari-vuyir,* பெ (n) ***ஐம்புலன்கள் வழியாய் அறிவடையுமுயிர்*** (நன் 449), being that acquires knowledge through five senses, as a beast or a man of low intellect. (செ.அக.)

*[ஐந்து + அறிவு - ஐயறிவு + உயிர்.]*

**ஐயன்**[1] *aiyan,* பெ. (n) 1 ***முனிவன்*** (பிங்.); sage 2 ***ஆசான்*** (பிங்.); priest, teacher, preceptor 3.. ***அண்ணன்;*** brother "முன்னின்று மொய்யவிந்தார் என் ஐயர்" (பு வெ 8,22). 4. ***தந்தை*** (பிங்), father. உங்கள் ஐயன் எங்கே? (கொங் வ). 5. ***உயர்ந்தோன்*** (கொ.வ.); superior person, man of dignity, of respectability 6 ***தலைவன்;*** master 7 ***அரசன்;*** king 8. ***கடவுள்;*** god. (செ.அக).

ம. ஐயன். *Pāli,* ayya; *Skt* ārya

*[ஐ → ஐயன் (தமி.வ.279).]*

ஐயன் என்னும் சொல் ஐயா என்னும் விளிவடிவில் பாண்டி நாட்டு வெள்ளாளர், முதலியார் முதலிய பலகுலத்தாரும் தந்தையைக் குறிக்க ஆளும் சொல்லாகும்

**ஐயன்பாத்தி** *aiyan-pātti,* பெ. (n) ***ஐயனார் கோயில் மானியம்*** (புது.கல்.333); lands granted to an Aiyanār temple (செ.அக.).

*[ஐயன் + பாத்தி. பகுதி → பாத்தி.]*

**ஐயன்பாழி** *aiyan-pāli,* பெ. (n) ***அய்யனார் கோயில்;*** shrine of Aiyanār. "ஐயன்பாழியி லானை" (ஈடு.1,1,5) (செ.அக.).

*[ஐ → ஐயன் + பாழி.]*

**ஐயன்மார்** *aiyanmār,* பெ. (n.) ***தமையன்மார்*** (கலி.107); elder brothers (சங் இலக்.சொற்.).

*[ஐ → ஐயன் + மார்.]*

**ஐயனாரிதனார்** *aiyanāridanār,* பெ. (n.) ***புறப்பொருள் வெண்பாமாலையாசிரியர்;*** author of the pura-p-porul-venpā-mālai (செ.அக.)

*[ஐயன் + ஆரிதன் + ஆர் - ஐயனாரிதனார். ஐயன் = சமணமுனி வர்க்கு வழங்கிய மதிப்புரவு உயர்மொழி. அருகதன் → ஆரிதன். ஆர் - உயர்வுப் பன்மையீறு.]*

**ஐயா**[1] *aiyā,* பெ. (n) 1. ***மதிப்புரவு குறித்த விளிப்பெயர்;*** sir. 2. ***தலைவன்;*** master. அந்த ஐயா என்ன சொன்னார்? (கொ.வ.) (செ அக.).

*[ஐயன் → ஐயா (விளி) விளிப்பெயரை எழுவாயாக ஆள்வது முற்றிலும் வழு.]*

**ஐயாதிச்சிறுவெண்டேரையார்** *aiyādi-c-ciruvenderaiyār,* பெ (n) ***"இருங்கடலுடுத்த" எனப் பெருங்காஞ்சி பாடியவர்;*** poet, author of Peruṅkāñji (அபி.சிந்.);

*[ஐயாதி + சிறு + வெண் + தேரையர் ஐயர் → ஐயார் → ஐயாரி → ஐயாதி. (கொ.வ).]*

**ஐயாளம்** *aiyālam,* பெ. (n.) ***அரிமா;*** lion (செ.அக.).

**ஐயாறு** *ai-y-āru,* பெ. (n) ***திருவையாறு*** (தேவா.); Tiruvaiyāru, a town in Tañjavur District with a Śiva shrine.

*[ஐந்து + ஆறு - ஐந்தாறு → ஐயாறு. ஐந்து ஆறு பாய்வதால் ஐயாறு என்று பெயர்பெற்றது.]*

**ஐயிருவட்டம்** *ai-y-iru-vattam,* பெ. (n) ***கேடகம்;*** shield "ஐயிருவட்டமொடு எஃகு" (திருமுருக 111). (செ.அக)

*[ஐ + இரு + வட்டம்.]*

**ஐயுணர்வு** *ai-y-unarvu,* பெ. (n) ***ஐம்புலவறிவு;*** knowledge from the five senses "ஐயுணர்வெய்தியக் கண்ணும்" (குறள்.354) (செ அக.).

*[ஐந்து → ஐ + உணர்வு.]*

**ஐயுறவு** *aiyuravu,* பெ (n) ***தெளிவின்மை;*** doubt, suspicion "தெளிந்தான்கண் ஐயுறவும்" (குறள்.510). (செ அக)

*[ஐயம் + உறவு - ஐயுறவு. உறு → உறவு.]*

**ஐயுறு-தல்** *ai-y-uru-,* 17 செ குன்றாவி. (vt) ***தெளிவுபெறாமை;*** to doubt or suspect. "ஐயுற்றெ ண்ணமுஞ் செயலும் வேறாய்" (பாரத.நிரைமீட்சி.128). (செ.அக.)

*[ஐயம் + உறு.]*

**ஐயூர்முடவனார்** *aiyūr-mudavanār,* பெ. (n) ***பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியைப் பாடிய புலவர்;*** ancient poet.

*[ஐயூர் + முடவன் + ஆர்.]*

**ஐயூர்மூலங்கிழார்** *aiyūr-mūlaṅgilār,* பெ. (n) ***கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியைப் "புலவரை யிறந்த" என்று பாடிய புலவர்;*** Sangam poet

*[ஐயூர் + மூலம் + கிழார். ஐயூர் - இடப்பெயர். மூலங்கிழார் - பிறந்த நாண்மீன் காரணமாகப் பெற்ற பெயர்.]*

**ஐயெனல்** *ai-y-enal,* பெ. (n) 1. (அ) ***வியப்புக்குறிப்பு;*** uttering. "ஐ"! expressive of wonder "ஐயென்றா ளாயர் மகள்" (சிலப் 17,எடுத்துக்காட்டு). (ஆ) ***வருத்தக்***

*குறிப்பு;* of distress or mental suffering. "ஐயெனமேவிப் பூ நிலமிசை யிருக்கும்" (சீவக.1025). (இ) *உடன்பட்டுக் குறிப்பு;* of assent "ஐயென மன்ன னேவ" (சீவக. 907). 2. *விரைவுக்குறிப்பு;* onom expression of haste, hurry "ஐயெனத்தோன்றுவர்" (சீவக.1225). 3. *அதட்டற்குறிப்பு* (கொ.வ.); exclamation expressive of rebuke intended to frighten elephant, horse, bull, etc (செ.அக.).

*[ஐ + எனல் - ஐயெனல். 'ஐ' - ஒலிக்குறிப்பு இடைச்சொல் ]*

**ஐயே** *aiyē*, பெ (n) 1. *கீழ்மக்கள் தலைவனை விளிக்கும் ஒரு விளிப்பெயர்;* a form of address used by low caste people towards their masters or persons of higher rank in the social scale "ஐயே நானுங் கொன்றவ னல்லேன்" (திருவிளை.பழியஞ்சின.24). 2. *ஒரு வியப்புக்குறிப்பு;* an exclamation of wonder.

*[ஐயன் → ஐயே (தமி வ 280) ]*

**ஐயை**[1] *aiyai*, பெ. (n.) 1. *மலைமகள்* (பிங்.); Pārvati. 2. *கொற்றவை* (பிங் ); Durgā 3. *தவப்பெண்* (சூடா.); female ascetic 4. *ஆசிரியன் மனைவி;* wife of one's teacher 5. *தலைவி* (திவா ); mistress 6. *மகள்* (பிங்.); daughter 7. *தாய்;* mother. (செ.அக ).

*[ஐ → ஐயை ]*

**ஐயை**[2] *aiyai*, பெ. (n) 1. *பெண்பால் இயற்பெயர்;* fem proper name 2. *மாதரியின் மகள்* (சிலப்.); daughter of Madari 3. *தித்தனின் மகள்* (அக.6); daughter of Tittan.

*[ஐ → ஐயை.]*

**ஐயைந்து** *ai-y-aindu*, பெ. (n.) *இருபத்தைந்து;* five fives "ஐயைந்து மறியாத மானிடரை வையம் சுமப்பது வம்பு" (திருப்பா தனியன்).

*[ஐந்து + ஐந்து - ஐயைந்து.]*

**ஐயையோ** *aiyaiyō*, இடை (int) *ஐயோ இரக்கக்குறிப்பு;* exclamation of pity, or grief (செ.அக.).

தெ., க., ம., து. அய்யய்யோ

*[ஐயோ + ஐயோ - ஐயையோ.]*

**ஐயோ** *aiyō*, இடை. (int) 1. *வியப்புக்குறிப்பு* (சூடா.); exclamation of wonder. 2. *இரக்கக்குறிப்பு* (சீவக 2622, உரை); exclamation of pity, concern 3. *வருந்தற் குறிப்பு;* exclamation expressive of poignant grief "ஐயோ விதற்கோ வருந்தவமுன் செய்தாயே" (கந்தபு அசுரேந் 7) (செ அக )
தெ., க., ம., து. அயயோ
*[ஐயன் → ஐயோ (தமி வ 280) ]*

**ஐயோன்** *aiyōn*, பெ (n) *நுண்ணியன்;* God, lit, a being of subtle essence "அணுத்தருந் தன்மையி லையோன்" (திருவாச 3,45). (செ.அக ).

*[ஐ → ஐயோன் ]*

**ஐராவணன்** *airāvaṇan*, பெ (n) 1. *இராவணனின் மாமன்;* uncle of Rāvana (சேரநா ). 2. *இந்திரன்;* Indra

**ஐரி** *airi*, பெ. (n.) *வைக்கோல் தூறு, படப்பை;* haystack.

*[வை + இரி - வையிரி → ஐயிரி → ஐரி.]*

**ஐரை** *airai*, பெ. (n) *அயிரை* பார்க்க; see *ayirai*.

**ஐலை** *ailai*, பெ. (n.) *அயிலை* பார்க்க; see *ayilai*.

**ஐவகைத்தாயர்** *ai-vagai-t-tāyar*, பெ. (n.) *ஈன்றதாய், ஊட்டுந்தாய், சீராட்டுந்தாய், கைத்தாய், செவிலித்தாய் முதலிய ஐவகைத்தாயர்* (பிங்.); five kinds of mothers (செ.அக.)

*[ஐந்து + வகை + தாயர்.]*

**ஐவகைமலடு** *ai-vagai-maladu*, பெ (n) *ஐந்து வகை மலட்டு நோய்கள்: ஆதி மலடு, காக மலடு, கதலி மலடு, கருப்பு மலடு, ஆண் மலடு* (சா.அக.); five kinds of barrenness

*[ஐந்து + வகை - ஐவகை + மலடு.]*

**ஐவகைமன்றம்** *ai-vagai-manram*, பெ. (n.) *வெள்ளிடை, இலஞ்சி, நெடுங்கல், பூதசதுக்கம், பாவை என்னும் பெயர்களில் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஐந்து வகையான மன்றங்கள்;* names of five city - squares in ancient Poompugār

**ஐவகைவினா** *ai-vagai-vinā*, பெ. (n) *அறியான் வினா, அறிவொப்புக் காண்டல் வினா, ஐய மறுத்தல் வினா, அவனறிவு தான்காண்டல் வினா, மெய்யவற்குக் காட்டல் வினா முதலிய ஐந்து வகை வினா* (திவா.12,73); five kinds of questions. (செ.அக.).

*[ஐந்து + வகை + வினா.]*

**ஐவண்ணம்**[1] *ai-vannam*, பெ. (n.) *வயிரக்கல்வகை* (யாழ் அக.), a kind of precious stone (செ அக.)

*[ஐந்து + வண்ணம் - ஐவண்ணம்.]*

**ஐவண்ணம்**[2] *ai-vannam*, பெ. (n) *மருதோன்றி* (திருவிளை மாணிக்கம்.40); henna (செ.அக.).

மறுவ. அழகுவண்ணம், அழவணம்

*[ஐ + வண்ணம் - ஐவண்ணம். ஐ = அழகு.]*

**ஐவண்ணம்**[3] *ai-vannam*, பெ (n) *பரவமகளிர் கால் விரல்களில் அணியும் நகமூடி, சலங்கைமுன் தாங்கி, மயிலடி, இடைக்காற்பீலி, நகரைமீன் என்னும் ஐவகை விரலாழிகள்;* five toe - rings worn by parava women (செ.அக.).

*[ஐந்து + வண்ணம் - ஐவண்ணம்.]*

**ஐவண்ணம்**[4] *aivannam*, பெ (n) *கொடுக்கப்பெற்ற நெல்லை உரலில் குற்றிய பின்னர் அரிசி, நொய், நொறுக்கு (குறுணை) உமி, தவிடு என்று ஐவகையாகப் பிரித்து வைத்தல்;* classifying husked rice into five kinds.

*[ஐந்து → ஐ + வண்ணம். இங்கு வண்ணம் என்பது வகை.]*

**ஐவணம்** *ai-vaṇam,* பெ. (n.) ***ஐவண்ணம்*** (வின்.) பார்க்க; see *ai-vaṇṇam* (செ.அக.).

*[ஐவண்ணம் → ஐவணம்]*

**ஐவர்** *ai-var,* பெ. (n) 1. ***பாண்டவர்கள்;*** five Pāndavās, "ஐவ ரென்றுல கேத்து மரசர்கள்" (கலித்.25) 2. ***ஐந்து பேர்;*** five persons (செ.அக.) 3 ***ஐம்புலன்களை ஐவராகக் கூறும் குறிப்பு;*** personification of five sense organs as five persons "ஐவரொடுங் கூடாமல்" (தாயு பராபரக்.252).

ம. ஐவர்.

*[ஐந்து → ஐ + அர் = ஐவர்.]*

**ஐவர்களி** *aivarkaḷi,* பெ. (n.) ***கோலாட்டம்;*** a game of five in which they sing and dance in a ring, marking time with beats of short coloured sticks (சேரநா.).

*[ஐ → ஐவர் + களி.]*

**ஐவர்ணம்** *ai-varṇam,* பெ. (n.) ***ஐவண்ணம்***[2] பார்க்க; see *ai-vaṇṇam*[2]

*[ஐ + (வண்ணம்) வர்ணம்.]*

**ஐவளம்** *ai-vaḷam,* பெ. (n) ***மிளகு, அகில், கோட்டம், தக்கோலம்*** (வால் மிளகு) ***குங்குமம் என்னும் மலை வளம் ஐந்து. அரக்கு, இறலி, செந்தேன், மயிற்பீலி, நாவி என்பாரும் உளர்.*** (பரி.18,15) (சங்.இலக். சொற்.); five products of mountain forest.

*[ஐந்து + வளம் - ஐவளம்.]*

**ஐவனம்** *aivaṉam,* பெ. (n.) ***மலைநெல்;*** mountain paddy, wild rice, Oryza mutica. "ஐவனம் வித்தி" (புறநா. 159,17) (செ.அக.).

ம. ஐவனம்.

*[ஐ = மென்மை, சன்னம், ஐ → ஐவனம் = சன்னமான மூங்கில் நெல்வகை.]*

**ஐவாய்க்கள்ளி** *ai-vāykkaḷḷi,* பெ. (n.) ***மான்செவிக் கள்ளி;*** spiral-leafy milk-hedge. (சா.அக.).

*[ஐவாய் மான் → ஐவாய் + கள்ளி. ஐவாய்க்கள்ளி = ஐவாய் மானின் செவி போன்ற கள்ளி.]*

**ஐவாய்மான்** *ai-vāy-māṉ,* பெ. (n.) 1. ***அரிமா;*** lion. "கரிமருப்பு ஐவாய் மான்கை" (திருவிளை.மாணிக் கம்.54).

*[ஐ + வாய் + மான் - ஐவாய் மான். ஐ = பெரிய. மா → மான் = விலங்கு.]*

**ஐவாய்மிருகம்** *ai-vāy-mirugam,* பெ. (n.) ***ஐவாய் விலங்கு*** பார்க்க; see *ai-vāy-vilaṅgu.*

**ஐவாய்விலங்கு** *ai-vay-vilaṅgu,* பெ. (n.) ***கரடி;*** Indian black bear, melursus ursinus, so called from the prehensile power of his four feet and mouth.

**ஐவி** *aivi,* பெ. (n.) 1. ***சிறு கடுகு;*** small mustard. 2. ***கடுக்காய்;*** gall-nut. (சா.அக.).

*[ஐயவி → ஐவி]*

**ஐவிரல்** *ai-viral,* பெ. (n.) 1. ***கைம்மீன்*** (அத்தம்): 13th nakṣatra, resembling the five fingers, hastha. (செ.அக.). 2. ***ஐந்து விரல் அளவு;*** five finger breadth

ம. ஐவிரல்

*[ஐந்து + விரல்.]*

**ஐவிரலி** *ai-virali,* பெ. (n.) 1. ***கொடி வகை*** (மூ.அ.); creeper bearing a red fruit (செ.அக.). 2. ***கடலாமணக்கு;*** plant jatropha curcas

ம. ஐவிரலிக்கோவ.

*[ஐந்து + விரலி.]*

**ஐவிரலிச் சங்கு** *ai-virali-c-caṅgu,* பெ. (n) ***ஐந்து முட் பாய்ந்த சங்கு;*** conch with five spikes (சா.அக.).

*[ஐந்து + விரலி + சங்கு.]*

**ஐவிரை** *aivirai,* பெ. (n) ***ஐந்து வகை மணப்பொருள் கள்;*** five kinds of aromatic drugs viz 1. ***கோட்டம்;*** a perfume 2. ***துருக்கம்;*** the resin of olibenum tree. 3. ***தாரம்;*** fragrant wood of deodor tree 4. ***அகில்;*** fragrant wood of agil tree. 5. ***சந்தனம்;*** sandal-wood. (சா.அக.).

*[ஐந்து + விரை - ஐவிரை. விரை = நறுமணம்.]*

**ஐவேலி** *aivēli,* பெ. (n) 1 ***திருவாரூர்;*** Thiruvārūr. "ஐவேலியாந்திருவாரூர்" (திருவாரூர்க் கோவை). 2. ***ஐந்து வேலி நிலம்;*** five veli land.

*[ஐந்து + வேலி - ஐவேலி.]*

திருவாரூரில் கோயில், குளம், நந்தவனம் ஆகிய ஒவ்வொன் றும் ஐந்துவேலி நிலப்பரப்புடையது (ஒரு வேலி = 20 மா. நூறு குழி = 1 மா.)

**ஐன்** *aiṉ,* பெ. (n) 1. ***அழகு;*** beauty. 2. ***நேர்த்தி;*** fineness. இது ஐனான துணி (கொங்.க.). 3. ***சிறப்பு, மேன்மை;*** excellence. ஐனான தேன் (இருள.).

*[ஐ → ஐன். ஐ = அழகு.]*

**ஐனவர்** *aiṉavar,* பெ. (n.) ***சேரநாட்டு மலை வாழ்நர்;*** hill tribe in Kerala.

*[ஐன் → ஐனவர்.]*

**ஐனூண்** *aiṉūṇ,* பெ. (n.) ***மாப்பிள்ளைக்குச் செய்யும் சிறப்பு விருந்து;*** special feast given to the bridegroom. (சேரநா.).

ம. ஐனூண்.

*[ஐ → ஐன் + ஊண் - ஐனூண்.]*



**ஒ** *o*, *தமிழ் வண்ணமாலையில் பத்தாம் உயிரெழுத்தாகிய அரை அங்காப்பு இதழ்குவியாப் பின்னண்ணத் தாழ் உயிர்க்குறில்;* tenth letter and vowel of the Tamil alphabet, the half-close back lax unrounded vowel in Tamil.

*[உ → ஒ.]*

உகரச்சுட்டு 'வேர்முதலானபோது வேரடித்திரிபுகளால் பெற்ற திரிபு வடிவமே ஒகரம். உகரவேர்முதற்பொருள்களை ஒகர வேர் முதல்களும் பெறும் ஆ, ஈ, ஊ எனும் நெடுஞ்சுட்டுகளே அஇஉ எனும் குறுஞ்சுட்டுகளானவாறுபோல ஏகார ஓகார நெடில்கள் எகர ஒகரங்களாகக் குறுகவில்லை எகர ஒகரங்கள் ஏகார ஓகாரங்களாக நீட்சியும் பெறவில்லை இவற்றின் குறில் நெடில் தோற்றங்கள் ஒன்றற்கொன்று தொடர்பற்றவை

அசையெழுத்துக்காலத் தொன்முது தமிழில் இருஉயிர்க்குறில் இணைந்து நெட்டுயிர் வடிவம் பெற்றதால் ஏகார ஓகாரங்கள் இஅ-(ஏ) எனவும் உஅ-(ஓ) எனவும் எழுதப்பட்டன ஈரெழுத்துக்கு ஒருவடிவம் தந்து நெடிலாக்கியபின் எகரஒகரக் குறிலெழுத்தை எழுதுவதற்குத் தனியெழுத்தைப் படைக்காமல் ஏகார ஓகார நெட்டெழுத்தின் மேல் மெய்யெழுத்தைப்போல் புள்ளி வைத்துக்குறிலாக்கினர் இதனாற்றான் தொல்காப்பியர்

''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்'' (தொல். எழுத்து 15)
''எகர ஒகரத் தியற்கையு மற்றே'' (தொல்.எழுத்து.16)
என நூற்பா யாத்தார் என்க.

**ஒ[1]-த்தல்** *o-*, 4.செ.குன்றாவி. (v.t) 1. *போலுதல்;* to resemble ''உறுப்பொத்தல் மக்களொப்பன்றால்'' (குறள்.993). 2. *சமமாதல்;* to be equal. ஒத்தாருமிக்காருமில்லாதவர் (உ.வ.).

*[உல் → ஒல் + தல் - ஒத்தல்.]*

**ஒ[2]-த்தல்** *o-*, 4.செ.கு.வி. (v.i) 1. *தகுதியாதல்;* to be suited, to be consistent with, to be appropriate ''ஒப்பநாடி யத்தக வொறுத்தி'' (புறநா.10,4). 2. *இசைதல்;* to be acceptable அவனுக்கு ஒத்த செய்தி. 3 *ஒழுக்கமுடையராதல்;* to be of good character; to be well behaved ''ஒப்பார் மற்றெனைவர்'' (சீவக.1543). 4. *ஒற்றுமைப் படுதல்;* to be harmonious, be in happy concord 'எத்தால் வாழலாம்; ஒத்தால் வாழலாம். 5 *இல்லாத தொன்று இருந்தாற் போலுதல்;* to appear as if it were. ''கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே'' (திவ்.அமலனாதி 1). (செ.அக.).

ம. ஒக்குக; க. ஒர்பு, ஒப்பு; கோத. ஒப்; துட. உப்; குட. ஒ; து. ஒப்பியுனி; தெ. ஒப்பு; குரு. ஒக்னா.

*[உல் → ஒல் + தல் - ஒத்தல். ஒல் → ஒத்து → ஒத்தல்.]*

**ஒ[3]-த்தல்** *ŏ-*, 4.செ.கு.வி. (v.i.) *விலகல்;* to get aside.

*[உல் → ஒல் + தல் - ஒத்தல். ஒ.நோ. பொல் + தல் - பொத்தல், பொத்துதல்.]*

**ஒஃகல்** *okal*, பெ. (n) *ஒதுங்கல்* (ஆ.அக.); keeping away from

*[ஒல்கு → ஒஃகு → ஒஃகல்.]*

**ஒஃகு-தல்** *okku-*, 7.செ.கு வி. (v.i.) 1. *பின்வாங்குதல்;* to retreat, fall back ''ஏற்ற தெவ்வருக்கொஃகினன்'' (கம்பரா பள்ளிபடை.106) 2 *குறைதல்* (ஆ.அக.); to diminish (செ.அக.)

*[ஒல் → ஒல்கு → ஒஃகு ]*

**ஒக்க** *okka*, கு வி எ. (adv) 1 *ஒருசேர;* together, along with, in company with ''ஒக்கதொழுகிற்றி ராகிற் கலியுக மொன்று மில்லையே'' (திவ் திருவாய் 5,2,10) 2 *மிகுதியாக;* plentifully, bountifully, numerously. ஒக்கக் கிடக்கிறது. 3. *சமமாக;* equally ''பக்கமும் பிடருமொக் கமுட்டிகள் படப்பட'' (பாரத வேத்திரகீய.56). 4. *ஒத்திருத்தல்;* to be similar to ''கொக்கொக்க கூம்பும் பருவத்து'' (குறள்.490). (செ அக.).

ம. ஒக்க, குட. ஒக்க, ஒக்கசெ; தெ. ஒகட; பிரா. ஒக

*[ஒல் → ஒருங்கு → ஒருக்கு → ஒக்கு → ஒக்க ]*

**ஒக்கட்டு** *okkattu*, பெ. (n) *மாதர் கழுத்திலணியும் பாசிமணிக் கோவை;* small string of beads, worn round the neck by women (செ.அக.).

*[உள் + கட்டு - உட்கட்டு → ஒக்கட்டு ]*

**ஒக்கடி[1]-த்தல்** *okkadi-*, 4.செ.கு.வி. (v.i) *தாளங்கொட்டுதல்* (சீவக 156,உரை.); to keep time either with hands or with cymbals

*[ஒருங்கு → ஒருக்கு → ஒக்கு + அடி.]*

**ஒக்கடி[2]-த்தல்** *okkadi-*, 4 செ குன்றாவி. (v.t.) *செப்பனிடுதல்;* to repair, renovate ''திருவாபரணங்கள் ஒடிந்தது ஒக்கடிக்கிறதும்'' (கோயிலொ.93). (செ.அக.).

*[ஒருங்கு → ஒருக்கு ஒருக்கு + அடி - ஒருக்கடி → ஒக்கடி.]*

**ஒக்கநோக்கு-தல்** *okka-nōkku-*, 5.செ.குன்றாவி. (v.t) *சமமாகப் பார்த்தல்;* to look at dispassionately, to treat impartially ''ஒக்க நோக்கினரல்லவ ரதனிலை யுணரார்'' (கம்பரா.இரணிய.44). (செ.அக.).

*[ஒல் → ஒக்க + நோக்கு.]*

**ஒக்கப் பண்ணு-தல்** *okka-p-pannu-*, 12.செ.குன்றாவி. (v.t) *செப்பனிடுதல்;* to repair, renew. (செ.அக.).

*[ஒருங்கு → ஒருக்கு → ஒருக்க → ஒக்க + பண்ணு.]*

**ஒக்கப்பாடு-தல்** *okka-p-pādu-*, 5.செ.கு.வி. (v.i) *பிறன் கூற்றுக்கு ஒத்துக் கூறுதல்;* lit, to sing in unison, to cross the t's and dot i's of another with a view to please him; to say ditto (செ.அக.).

*[ஒல் → ஒக்க + பாடு.]*

**ஒக்கம்**[1] *okkam,* பெ. (n) *ஓமம்* பார்க்க (மலை.), see *ōmam* (செ அக.)

**ஒக்கம்**[2] *okkam,* பெ. (n) 1. ***ஊர்*** (பிங்.); village 2. *அற்பம்* (அருநி.); trifle 3. ***கரை*** (யாழ்.அக.); shore, bank (செ.அக.).

*[ஒக்கல் → ஒக்கம் (ஊர்.) ஒல்கு → ஒல்கம் → ஒக்கம் (சிறுமை) ஓரம் → ஓக்கம் → ஒக்கம் (கரை)]*

**ஒக்கம்**[3] *okkam,* பெ (n) 1. ***அகலம்;*** breadth 2. *பொலிவு;* grandeur (செ.அக.).

*[ஓக்கம → ஒக்கம் (அகலம்)]*

**ஒக்கம்**[4] *okkam,* பெ. (n) ***இடை, இடுப்பு;*** the waist, hip, loins (சேரநா.).

ம. ஒக்கம்.

*[உக்கு → ஒக்கம்]*

**ஒக்கரை** *okkarai,* பெ. (n) ***விலா*** (நாமதீப.); side of the body (செ அக.).

*[ஒக்கலை → ஒக்கரை.]*

**ஒக்கல்**[1] *okkal,* பெ. (n) 1 ***சுற்றத்தார்;*** relations, kinsfolk "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்" (குறள்,43). 2 ***குடும்பம்;*** family 3. ***குடியிருப்பு;*** settlement (செ அக.)

*[ஒல் = ஒத்தல், பொருந்துதல், கூடுதல். ஒல் → ஒல்க → ஒல்கல் → ஒக்கல்.]*

**ஒக்கல்**[2] *okkal,* பெ. (n) ***காளைகளைக்கொண்டு பிணையடித்துத் தவசமணிகளைப் பிரிக்கச் செய்தல்;*** driving oxen to trample upon sheaves of corn for threshing (சேரநா.).

ம. ஒக்கல், க. ஒக்கலதன (வேளாண்மை).

*[உல் → உக்கு → ஒக்கு → ஒக்கல்.]*

**ஒக்கல்**[3] *okkal,* பெ. (n) ***ஒக்கலை*** பார்க்க; see *okkalai.* (செ.அக ).

ம. ஒக்கு.

*[ஒல் → ஒல்கு → ஒல்கல் → ஒக்கல்.]*

**ஒக்கல் போற்றல்** *okkal-pōṟṟal,* பெ. (n.) ***சுற்றத்தாரைப் போற்றுவதாகிய வேளாண்மாந்தரியல்பு*** (திவா.); supporting or maintaining one's relations, one of the qualities of the vēlālas (செ.அக.).

*[ஒக்கல் + போற்றல்.]*

**ஒக்கலி**[1]**-த்தல்** *okkali-,* 4.செ.கு.வி. (v.i.) 1. ***ஆவலங் கொட்டுதல்;*** to shout in joy, hulla-baloo, as a mark of triumph. "பேய்கள் கூடி யொன்றினை யொன்றடித்து ஒக்கலித்து" (பதினொ.திருவாலங்காட்டு மூத்த.1,11). 2. ***உறவினரோடு கலந்து பேசுதல்;*** to converse freely, hold friendly communion with one's relations. (W).

*[ஒக்கல் → ஒக்கலி.]*

**ஒக்கலி**[2]**-த்தல்** *okkali-,* 4 செ.கு வி (v.i) 1 ***இனத்தாருடன் உறவாடுதல்;*** to encourage one's class or community maintain them, give them medical aid, etc 2. ***ஒத்துப்போதல்;*** to become reconciled (செ.அக ) 3 ***ஒப்பாதல்;*** to become equal

*[ஒக்கல் → ஒக்கலி. (வே.க.111) (மு தா.215).]*

**ஒக்கலிடு-தல்** *okkal-iḍu-,* 20 செ.கு.வி. (vi) ***ஒக்கலி***[1] பார்க்க, see *okkali*[1] (செ அக ).

*[ஒக்கல் → ஒக்கலிடு (சு.வி.66).]*

**ஒக்கலை** *okkalai,* பெ. (n) ***இடுப்பு;*** hip; side of the body "ஒக்கலை வேண்டியழல்" (பழ.290). (செ.அக.).

*[ஒல்கு → ஒக்கு → ஒக்கல் → ஒக்கலை. ஒல்கு = சுருங்கு, ஒடுங்கு. ஒக்கலை = ஒடுங்கிய இடுப்பு]*

**ஒக்களித்தல்** *okkaḷittal,* பெ (n) ***கக்கலுக்கு முந்திய வாயசைவு;*** inclination to vomit

*[ஒ → ஒக்களி. (மு தா 6).]*

**ஒக்கிடு**[1]**-தல்** *okkiḍu-,* 18.செ.குன்றாவி. (v t.) ***செப்பனிடுதல்;*** to repair (செ.அக.).

*[ஒக்கு + இடு]*

**ஒக்கிடு**[2]**-தல்** *okkiḍu-,* 18 செ குன்றாவி. (v.t.) ***ஒழித்தல்;*** to ruin, to do away with (செ அக.).

*[ஒக்கு + இடு]*

**ஒக்கிலியன்** *okkiliyaṉ,* பெ. (n.) ***தமிழ் நாட்டிற் குடியேறிய ஒரு மரபினர், கன்னட நாட்டார்;*** member of a caste of cultivators from the Kannada province who have settled in the districts of Madurai and Coimbatore. (செ அக ).

ம. ஒக்கிலியன்; க. ஒக்கலிக; குட. ஒக்க (கூட்டுக் குடும்பம்); து. ஒக்கெலு.

*[ஒக்கு[2] → ஒக்கல் → ஒக்கலியன் → ஒக்கிலியன். (உழவன்).]*

**ஒக்கு**[1]**-தல்** *okku-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***கொப்புளித்தல்;*** to gargle 2. ***பிற்பட விடுதல்;*** to leave behind. (செ.அக.).

ம. ஒக்குக.

*[உல் → ஒல் → ஒக்கு = பொங்குதல், மேற்படுதல், வழிதல்.]*

**ஒக்கு**[2]**-தல்** *okku-,* 5.செ.குன்றாவி (vt) 1. ***உழுதல்;*** to till the land. 2. ***குத்துதல், கழித்தல்;*** to pierce, dig.

க., து. உக்கு, ஒக்கு.

*[உல் → ஒல் → ஒக்கு = உட்செலுத்துதல், நிலத்தை ஏரால் உழுதல்.]*

**ஒக்கு**[3]**-தல்** *okku-,* 5.செ.குன்றாவி. (v.t.) ***அதரி திரித்தல்; ஏர்க்களத்தில் பிணையடித்துக் கதிரினின்று தவசம் பிரித்தல்;*** to drive oxen to trample upon sheaves of corn for threshing. கம்பு ஒக்கினான் (இ.வ.).

*[உகு → உக்கு → ஒக்கு = உருக்கச்செய்தல், உதிரச்செய்தல்.]*

**ஒக்கு⁴-தல்** *okku-*, 5.செ.குன்றாவி. (v.t) 1. ***சமப்படுத்து தல்;*** to equalize. 2. ***செப்பனிடுதல்;*** to set right, repair 3. ***மூட்டுதல், தைத்தல்;*** to sew together two pieces of any material (வின்.).

*[உல் → ஒல் → ஒக்கு. உல் = பொருந்துதல்.]*

**ஒக்கூர்மாசாத்தனார்** *okkūrmāšāttaṉār*, பெ. (n) ***கடைக் கழகக்காலத் தமிழ்ப் புலவர்;*** poet of Šangam age.

*[ஒக்கூர் + மா + சாத்தன் + ஆர். ஒக்கூர் = உழவரூர். மாசாத்தன் = தரைவழி வாணிகக்குழுவின் தலைவன். 'ஆர்' உயர்வுப்பன்மையீறு.]*

**ஒக்கூர்மாசாத்தியார்** *okkūr-māšāttiyār*, பெ. (n) ***கடைக் கழகக் காலத் தமிழ்ப்புலவர்;*** poetess of sangam age

*[ஒக்கூர் + மா + சாத்தி + ஆர். ஒக்கூர் = உழவரூர். மாசாத்தி தரைவழிவாணிகக் குழுத்தலைவனாகிய மாசாத்தனின் மனைவி. 'ஆர்' - உயர்வுப் பன்மையீறு.]*

**ஒக்கை** *okkai*, பெ. (n) ***பாண்டிநாட்டிலுள்ள ஒக்கூரெ னுமொரு நகரம்;*** an other name for Okkur of Pandiya kingdom

*[ஒக்கல் → ஒக்கை.]*

**ஒகரம்** *ogaram*, பெ. (n.) 1. ***'ஒ' என்னும் உயிரெழுத்து;*** vowel 'ஒ' of Tamil alphabet 2. ***ஓங்காரப்பறவை என்னும் மயில்*** (சூடா.); name of the peacock from the similarity of form 'ஒ'.

*[ஒ + கரம் - ஒகரம். 'கரம்' - எழுத்துச்சாரியை.]*

தொன்முது காலத்தில் தமிழ் உருவெழுத்தாக எழுதப்பட்ட போது ஒகரம் மயிலின் வடிவமாக எழுதப்பட்டது. ஒலியல் என்னும் தோகை வடிவமாகவும் வரையப்பட்டது அதுவே அசையெழுத்துக்காலத்தில் √ எனவும ⊟ எனவும் எழுதப்பட்டு மயிலையும் தோகையையும் குறித்த ஒகர வரிவடி வாயின

**ஒச்சட்டை** *occaṭṭai*, பெ. (n) ***ஒஞ்சட்டை*** பார்க்க (செ.அக.); see *oñjaṭṭai*.

*[உச்சட்டை → ஒச்சட்டை (வே.க 81).]*

**ஒச்சந்தம்** *occandam*, பெ (n.) ***உச்சந்தம்*** பார்க்க; see *uccandam* (செ.அக )

*[உச்சந்தம் → ஒச்சந்தம் (வே.க.65).]*

**ஒச்சம்¹** *occam*, பெ (n) ***நாணம்*** (வின்.); bashfullness; shyness (செ அக.),

ம. ஒச்சம்; க. ஒச்சய, தெ. ஒச்செமு.

*[உஞ்சு → ஒஞ்சு → ஒச்சு → ஒச்சம்.]*

**ஒச்சம்²** *occam*, பெ. (n) ***குற்றம், குறைவு;*** defect, deficiency. அவனுடைய வடிவத்தில் ஓர் ஒச்சமும் சொல்ல முடியாது (செ.அக.).

தெ. ஒச்செமு.

*[எச்சம் → ஒச்சம்]*

**ஒச்சம்³** *occam*, பெ. (n.) ***கவனித்தல்*** (யாழ்.அக.); listening with attention. (செ.அக.).

*[உல் → உத்து → ஒத்து → ஒசு → ஒச்சம்.]*

**ஒச்சி¹** *occi*, பெ. (n.) ***ஒஞ்சி*** பார்க்க; see *oñji*. (செ.அக.).

**ஒச்சி²-த்தல்** *occi-*, 4.செ.கு.வி. (v.i.) ***ஒஞ்சி*** பார்க்க. (வின்.); see *oñji*. (செ.அக.).

**ஒச்சியஞ் சொல்(லு)-தல்** *occiyañ-jol-*, 13.செ.கு.வி. (v.i.) ***காமஇச்சையாய்ப் பேசுதல்*** (வின்.); to speak libidinously. (செ.அக.).

*[ஒச்சியம் + சொல்.]*

**ஒச்சியம்** *occiyam*, பெ. (n.) 1. ***கூச்சம்;*** bashfulness; shyness. 2. ***இனியமொழி;*** amorous speech, tender, loving words 3. ***பழிப்பு;*** contempt (செ.அக.).

*[ஒச்சு → ஒச்சியம்.]*

**ஒச்சினி** *occiṉi*, பெ. (n.) ***கருவின் ஒன்பதாம் மாதம்*** (சங்.அக.); ninth month, as of pregnancy (செ.அக.).

*[ஒன்பது → ஒச்சு → ஒச்சினி.]*

**ஒச்சை¹** *occai*, பெ. (n.) ***உற்றுக் கேட்கை;*** listening attentively, as to a distant sound.

*[உத்து → ஒத்து → ஒச்சு → ஒச்சை.]*

**ஒச்சை²** *occai*, பெ. (n.) ***காந்தற்சோறு;*** charred food. (செ.அக.).

*[உல் → உத்து → உச்சு → உச்சை → ஒச்சை.]*

**ஒச்சைக்கொடுத்துக்கேள்(ட்)-த(ட)ல்** *occai-k-koduttu-k-kēl-*, 11.செ.குன்றாவி. (v.t) ***உற்றுக்கேட்டல்;*** to listen attentively. ஒச்சைகொடுத்துக் கேட்காதே (வின்.) (செ அக.).

*[ஒச்சை + கொடுத்து + கேள்.]*

**ஒசத்தி** *ošatti*, பெ. (n.) ***உயர்வு;*** greatness, excellence, superiority.

ம. ஒசத்தி.

*[உயர்த்தி → ஒசத்தி. (கொ.வ.) **உயர்த்தி** பார்க்க; see uyartti]*

**ஒசி¹-த்தல்** *oši-*, 2.செ.குன்றாவி. (v.t.) ***கொடுத்தல்*** (அக.நி.); to give. (செ.அக.).

*[ஒல் → ஒய் → ஒயி → ஒசி.]*

**ஒசி²-த்தல்** *oši-*, 2.செ.குன்றாவி. (v.t.) 1. ***முறித்தல்;*** to break, as a stick. "யானைபோர்க்கோ டொசித் தனவும்" (திவ் இயற்.1,27). 2. ***அசைத்தல்;*** to move, shake, wave. (வின்.) (செ.அக.).

*[ஒடி → ஒசி.]*

**ஒசி³-தல்** *oši-*, 2.செ.கு.வி. (v.i) 1. ***முறிதல்*** (பிங்.); to break, become broken, as a stick 2. ***நுடங்குதல்;*** to bend under a weight, as the tender branch of a tree or the waist of a woman "மாந்துண ரொசிய வேறி" (குளா.இரத.44). 3. ***சாய்தல்;*** to lean, incline "வாயருகு வந்தொசிந்து மறிய" (சீவக.595). 4. ***நாணுதல்;*** to be coy, bashful. "கண்ணரக்கி நோக்கா தொசிந்து" (சீவக. 2541). 5. ***வருந்துதல்;*** to suffer. "உருகு நுண்ணிடை

யொசியப் புல்லினாள்'' (சீவக.989). 6. **ஒய்தல்** (திவா.); to become tired or weary. (செ.அக.).

*[ஒடி → ஒசி. (த.வ.72).]*

**ஒசிந்தநோக்கு** *osinda-nōkku,* பெ. (n.) ***ஒதுங்கிப் பார்க்கும் பார்வை;*** side-glance ''உரையினர் பாட்டின ரொசிந்த நோக்கினர்'' (சிலப்.1,55). (செ.அக.).

*[ஒசி → ஒசிந்த + நோக்கு.]*

**ஒசிப்பு** *osippu,* பெ. (n) 1. ***முறிக்கை;*** act of breaking 2. ***எலும்பு முறிதல்;*** breaking of a bone, fracture. (சா.அக.).

*[ஒசி → ஒசிப்பு.]*

**ஒசியல்** *osiyal,* பெ. (n) ***கிளை முறிக்கப்பட்ட மரம்;*** tree, a branch of which has been broken. ''நிலம்படாஅ நாருடை யொசியலற்றே'' (குறுந்.112) (செ.அக.).

*[ஒசி + அல்.]*

**ஒசிவு** *osivu,* பெ. (n.) 1. ***அசைவு;*** waving. 2. ***முறிவு;*** breaking (ஆ.அக.).

*[ஒசி + உ.]*

**ஒஞ்சட்டை** *oñjattai,* பெ. (n.) ***ஒல்லி;*** being tall and lean. (செ.அக.).

*[உஞ்சட்டை → ஒஞ்சட்டை (வே.க.81).]*

**ஒஞ்சட்டையன்** *oñjattaiyan,* பெ. (n.) ***ஒல்லியானவன்;*** tall, lean man (செ.அக.).

*[ஒஞ்சட்டை + அன்.]*

**ஒஞ்சரி[1]-த்தல்** *oñjari-,* 4.செ.குன்றாவி. (v.t.) ***கதவைச் சிறிது சாத்துதல்;*** to close the door slightly. 'மதனசுந்தரி கதவை யொஞ்சரி'. (செ.அக.).

*[ஒஞ்சு → ஒஞ்சலி → ஒஞ்சரி.]*

**ஒஞ்சரி[2]-த்தல்** *oñjari,* 4.செ.கு.வி. (v.i.) ***ஒருபக்கஞ் சார்தல்*** (வின்.); to go sideways. (செ.அக.).

**ஒஞ்சரி[3]-த்தல்** *oñjari,* 4.செ.கு.வி. (v.i.) ***ஒரு பக்கமாய்ச் சாய்தல்;*** to lie on one side ''இடது கைப்புறமாய் ஒஞ்சரித்துச் சயனிக்க வேண்டும்'' (ஜீவப் பிரம்மைக்ய. பக்.634) (செ.அக.).

*[ஒஞ்சு → ஒஞ்சலி → ஒஞ்சரி.]*

**ஒஞ்சரி தீர்ப்பு** *oñjari-tirppu,* பெ. (n.) ***ஒரு சார்பான தீர்ப்பு;*** partial; one-sided decision (W.). (செ.அக.).

*[ஒஞ்சரி + தீர்ப்பு.]*

**ஒஞ்சரி வழக்கு** *oñjari-valakku,* பெ. (n.) ***ஒஞ்சரி தீர்ப்பு*** பார்க்க; see *oñjari-tirppu.* (செ அக.).

*[ஒஞ்சரி + வழக்கு.]*

**ஒஞ்சான்** *oñjān,* பெ. (n.) ***மீன்வகை;*** a kind of fish. ''கோளை யாள லொஞ்சான்'' (குருகூர்ப்.7) (செ.அக.).

**ஒஞ்சி[1]-த்தல்** *oñji-,* 4.செ.கு.வி. (v.i.) ***நாணுதல்;*** to feel abashed, to be shy. ஒஞ்சித்துச் சாப்பிடாமல் விட்டு விட்டான் (வின்.) (செ.அக.).

*[ஒஞ்சு (த.வி.) → ஒஞ்சி (பி.வி.) (வே.க.83).]*

**ஒஞ்சி[2]-த்தல்** *oñji-,* 4.செ.கு.வி. (v.i.) ***மனத்தை யடக்கு தல்*** (யாழ்.அக.); to control one's mind.

*[ஒஞ்சு (த.வி.) → ஒஞ்சி (பி.வி.).]*

**ஒஞ்சி[3]** *oñji,* பெ. (n.) ***முலை;*** woman's breast. (nurs.) (செ.அக.).

*[மொஞ்சி → ஒஞ்சி.]*

**ஒஞ்சியழற்சி** *oñji-y-alarci,* பெ. (n.) ***முலைக்காம் பழற்சி;*** inflammation of the nipple - thelalsia. (செ.அக.).

*[மொஞ்சி → ஒஞ்சி + அழற்சி. முலை → மொஞ்சி → ஒஞ்சி (கொ.வ.).]*

**ஒஞ்சிவலி** *oñjivali,* பெ. (n.) ***முலைக்காம்பில் குத்தல்;*** pain in the region of the nipple - thelitis. (சா.அக.).

*[ஒஞ்சி + வலி.]*

**ஒஞ்சு[1]-தல்** *oñju-,* 5.செ.கு.வி. (v.i.) ***குறுகுதல், சுருங்கு தல்*** ; to shorten, shrink.

*[உல் → ஒல் → ஒங்கு → ஒஞ்சு.]*

**ஒஞ்சு[2]-தல்** *oñju-,* 5.செ.கு.வி. (v.i.) ***அடங்குதல்;*** to subdue.

*[உல் → ஒல் → ஒங்கு → ஒஞ்சு.]*

**ஒட்ட** *otta,* கு.வி.எ. (adv.) 1. ***அடியோடே;*** completely, to the very end. வாலை யொட்ட அறுத்துவிட்டான். 2. ***நெருங்க;*** near to, intimately 3 ***இறுக;*** closely, tightly. 'ஒட்டக்கட்டு'. 4. ***போல*** (தொல்.பொருள்.290); similar to, as. (செ.அக.).

*[ஒடு → ஒட்டு + அ.]*

**ஒட்டக்காய்** *ottakkāy,* பெ. (n.) 1. ***ஆணின்விதை;*** testicle. 2. ***குதிரை ஒட்டக்காய், குதிரைப்பிடுக்கன் என்னும் மரம்;*** a tree.

க. உட்டகாய், வெட்டகாய்.

*[உட்டை → ஒட்டை + காய் - ஒட்டைக்காய் → ஒட்டக்காய். உருண்டை → உண்டை → உட்டை.]*

**ஒட்டக்கூத்தர்** *otta-k-kūttar,* பெ. (n) ***பிற்காலச் சோழ ரவையில் விளங்கிய ஒரு பெரும்புலவர்;*** a great poet in the Cōla court, who flourished about the 12th c.

*[ஒட்டு + கூத்தர் - ஒட்டுக் கூத்தர் → ஒட்டக்கூத்தர் ஒட்டு ஆணை, சூள், பந்தயம். பலர்முன் ஒட்டேறறு (சூளுரைத்துப்) பாடிவெல்லும் கூத்தன புலவர், அரசரால் பெரிது மதிக்கப்பட்ட தால் உயர்வுப் பன்மையீறு 'அர்' சேர்ந்து கூத்தன் கூத்தர் ஆயிற்று இவரியற்றியன, ஈட்டியெழுபது, மூவருலா, தக்கயா கப்பரணி, இராமாயண உத்தரகாண்டம் பிறர் பாதிமுடித்த செய்யுளை, ஒட்டப்பாடி முடிக்கும் திறமையால், ஒட்டக்கூத்தர் எனப்பட்டார் என்பது பொருந்துவதன்று ஒட்டப்பாடும் திறன் பலர்க்கும் கைவந்த கலை. சூளுரைத்துப் பாடி முடிப்பதே அரிய திறன்.]*

**ஒட்டகக்கோழி** *ottagakkōḻi*, பெ. (n.) ***நெருப்புக்கோழி;*** ostrich. (சேரநா.).

ம. ஒட்டகக்கோழி.

*[ஒட்டகம் + கோழி.]*



ஒட்டகக்கோழி

**ஒட்டகப் பறவை** *ottagapparavai*, பெ. (n) ***கழுத்து நீண்ட பறவை. அதாவது கொக்கு, நெருப்புக்கோழி முதலியன;*** birds with long necks like crane, ostrich etc. (சா.அக.).

*[ஒட்டகம் + பறவை ]*

**ஒட்டகப் பாரை** *ottaga-p-pārai*, பெ. (n.) ***ஒட்டாம்பாரை மீன்;*** horse mackerel. (செ.அக.).

*[ஒட்டகம் + பாரை.]*

**ஒட்டகம்** *ottagam*, பெ. (n.) ***பாலைவனப் பயணத்திற்கு தவும் நீண்டநாள் உண்ணாதிருக்கும் ஒரு விலங்கு*** (தொல்.பொருள் 573); camel, camelus dromedarius (செ அக.).

ம. ஒட்டகா; கொர. வண்டி; கை. வாண்டி; க. ஒண்டெ; துட. வொட்டி; பட. வொட்ட; து. வொண்ட; தெ. ஒண்டெ; கோண். ஊட்டு; கொண். லோட்டி; கூ. ஒடெ; குரு. உண்ட; மால். உடே *Pkt.* ottaga, *Pali* ஒட்ட். *Skt.* uṣṭa

*[ஒட்டு → ஒட்டகம். ஒட்டு = பட்டினி, ஒட்டகம் = பட்டினி கிடக்கவல்ல விலங்கு.]*

**ஒட்டகை** *ottagai*, பெ. (n) ***ஒட்டகம்*** பார்க்க (திருநெல். பு.விட்டுணு.25); see *ottagam.* (செ.அக.).

*[ஒட்டு → ஒட்டகம் → ஒட்டகை.]*

**ஒட்டங்காய்ப்புல்** *ottaṅ-gāy-p-pul*, பெ. (n.) ***ஆடையி லொட்டும் ஒருவகைப் புல்;*** a kind of grass with prickly seeds which stick to the clothes (J.) (செ.அக.).

*[ஒட்டும் + காய் + புல்.]*

**ஒட்டங்கி** *ottaṅgi*, பெ. (n) ***உலையாணிக்கோல்*** (C.E.M.), tool of metal-workers; beak-iron

*[ஒட்டு → ஒட்டங்கி. ஒட்டுதல் = தொடுதல்.]*

**ஒட்டச்சி** *ottacci*, பெ. (n.) ***ஒட்டர் குடிப்பெண்;*** woman of the ottan caste. (செ.அக.).

*[ஒட்டரம் + அத்தி - ஒட்டரத்தி → ஒட்டத்தி → ஒட்டச்சி. ஒட்டரம் = ஒரிசா.]*

**ஒட்டடஞ்சாகுபடி** *ottatañ-jāgupadi*, பெ. (n.) ***ஒட்டடை நெற்பயிர் உண்டாக்கற்குரிய வேளாண் முறை*** (G.Tj.D. 195), method of cultivation in which the ottaḍai paddy is raised.

*[ஒட்டன் + சாகுபடி. ஒட்டன் = ஒட்டடைநெல். ஆகுவழி → ஆகுவடி → சாகுவடி → சாகுபடி.]*

**ஒட்டடை**[1] *ottaḍai*, பெ. (n.) 1. ***நூலாம்படை;*** spider's web and dust; cob-web 2. ***சம்பாநெல் வகை;*** a variety of campā paddy cultivated in the Thanjavur district and maturing in eight months. (செ.அக.). 3. ***மெல்லிய சுட்டப்பம்;*** a thin rice cake. (சா.அக.).

*[ஒட்டு + அடை. ஒட்டு = மெல்லியது.]*

**ஒட்டடை**[2] *ottaḍai*, பெ. (n.) ***பொலிதூற்றி அளப்பதற்கு ஏந்தான நிலை;*** condition of being ready for measurement, as of harvested paddy (Madu.) (செ.அக.).

*[ஒட்டு + அடை - ஒட்டடை. ஒட்டு = பொட்டு, பதர். ஒட்டடை = ஒட்டும் பதரும் சேர்ந்தது.]*

**ஒட்டணி** *ottaṇi*, பெ. (n) ***உவமையால் பொருளைப் பெறவைக்கும் அணி*** (தண்டி.51); (Rhet) figure of speech in which the idea of the subject matter is sought to be conveyed suggestively by the description of that which resembles it. (செ.அக.).

*[ஒட்டு + அணி - ஒட்டணி பிறிதுமொழிதல் அணி என்றும் சொல்லப்படும்.]*

**ஒட்டத்தி** *ottatti*, பெ. (n.) ***ஒட்டுத்துத்தி*** பார்க்க (மலை.); see *ottuttutti* (செ.அக.).

**ஒட்டப்பம்** *ottappam*, பெ. (n.) ***தோசை;*** pan-cake. (செ.அக.).

*[ஒட்டு + அப்பம் - ஒட்டப்பம் → ஒட்டப்பம்.]*

**ஒட்டப்பிடி-த்தல்** *ottappiḍi-*, 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***இழுத்துப்பிடித்தல்;*** to hold fast or tight, as the reins of a horse 2. ***இழுத்துப் பிடித்தல்;*** to stretch hard as in measuring cloth (W.). 3. ***வலுக்கட்டாயம் செய்தல், தொல்லை செய்தல்;*** to apply pressure to, to compel. (Loc.) (செ.அக.).

*[ஒட்டு → ஒட்ட + பிடி.]*

**ஒட்டப்போடு-தல்** *otta-p-pōḍu-*, 19.செ குன்றாவி. (v.t.) 1. ***தன்னைத் தானே பட்டினி போடுதல்;*** to starve one's self 2. ***பட்டினி கிடக்கச் செய்தல்;*** to make a patient fast to cure his disease, to put a person, on short commons for disciplinary purposes. (W.). (செ.அக.).

*[ஒட்டு → ஒட்ட + போடு.]*

**ஒட்டம்**[1] *ottam,* பெ. (n) 1. ***பந்தயம்;*** wager, stake; "ஒட்டம் யாவுநீ கொடுக்க" (பாரத சூது.172). 2. ***வெட்டளவு காட்ட வைக்குந் திடர்;*** conical mass of earth left out by pit or tank diggers to show the depth excavated (W.) (செ.அக.).

*[ஒட்டு + அம் - ஒட்டம்.]*

**ஒட்டம்**[2] *ottam,* பெ (n.) ***ஒட்டரம்*** பார்க்க; see *ottaram.* (செ அக )

**ஒட்டம்**[3] *ottam,* பெ. (n) ***ஒப்பந்தம் (புது.);*** agreement (செ.அக.).

*[ஒட்டு → ஒட்டம் (வே.க.110).]*

**ஒட்டம்**[4] *ottam,* பெ. (n.) ***ஓடு*** (யாழ்.அக.); potsherd (செ.அக.).

*[ஒல் → ஒள் → ஒடு → ஒட்டம். ஒடு = ஒடியத்தக்கது.]*

**ஒட்டமொட்டு-தல்** *ottam-ottu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***பந்தயம் போடுதல்;*** to wager (செ.அக.).

*[ஒட்டம் + ஒட்டு.]*

**ஒட்டர்**[1] *ottar,* பெ. (n.) ***ஒட்டர நாட்டவர்*** (பாரத. முதற்போ.35); people of the Orissa country. (செ.அக.).

ம. ஒட்டர்; க. ஒட்ட; தெ. ஒட்டெவாடு.

*[ஒட்டரம் (ஒரிசா) → ஒட்டர்.]*

**ஒட்டர்**[2] *ottar,* பெ. (n) ***நீரோடை, ஆறு முதலியவற்றின் குறுக்கே கல்லணை கட்டும் பணியாளர்;*** skilled labourers in constructing dam.

*[ஒட்டு + அர் - ஒட்டர். ஒட்டு = அணை, கற்களால் கட்டும் நீர்த்தடுப்பு.]*

**ஒட்டர்**[3] *ottar,* பெ. (n.) ***பகைவர்;*** foes.

*[ஒட்டார் → ஒட்டர்.]*

**ஒட்டரம்** *ottaram,* பெ. (n) ***இன்றைய ஒரிசா மாநிலத்தின் பழைய தமிழ்ப்பெயர்;*** ancient Tamil name for Orissa (செ.அக.)

*[ஒட்டு → ஒட்டரம். ஒட்டு = சிறுகுன்று. ஒட்டரம் = குன்றுகள் நிறைந்த பகுதி. இனி, ஒட்டு (கல்லணை) கட்டும் பணியில் வல்ல ஒட்டர் வாழும் பகுதி என்னும் பொருளில் ஒட்டரம் எனப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஒட்டல்** *ottal,* பெ. (n.) 1. ***சேர்க்கை;*** adhesion, contact; attachment, conjunction 2. ***உள்ளொடுங்குகை;*** shrinking, contracting "ஒட்டற்கவுள்" (கோயிறபு நடரா 30) 3. ***உடன்பாடு*** (திவா.), consent, assent. (செ.அக.).

ம. ஒட்டல்; க. ஒட்டெ; கோத. ஒட்; து. ஒட்டு; தெ. ஒட்டு; பர். ஒட்ப் (வெள்ளையடித்தல்).

*[ஒட்டு + அல்.]*

**ஒட்டலரி** *ottalari,* பெ. (n.) ***கல்லலரி;*** wild - oleander. (சா.அக.).

*[ஒட்டு + அலரி.]*

**ஒட்டலன்**[1] *ottalan,* பெ. (n.) 1. ***பகைவன்;*** lit, one who will not unite, foe, enemy. "ஒட்டலன்றொ டவுற்ற தண்டத்தின்" (கந்தபு.சிங்கமு.416) (செ.அக.). 2. ***மெலிந்தவன்;*** lean man (ஆ.அக.).

ம. ஒட்டலன்.

*[ஒட்டு + அல் + அன் - ஒட்டலன். 'அல்' - எ.ம.இ.நி.]*

**ஒட்டவிடு-தல்** *otta-vidu-,* 18.செ.குன்றாவி. (v.t.) 1. ***சேரவிடுதல்;*** to let one join, permit access. 2. ***பொரவிடுதல்;*** to set up one against another, to bait, as in a cock-fight (W). (செ.அக.).

*[ஒட்ட + விடு.]*

**ஒட்டற்காது** *ottar-kādu,* பெ. (n) 1. ***குறுகிய காது;*** short ears (W.). 2. ***ஒட்டவைத்த காது;*** stretched ear-lobe shortened by surgical operation (செ.அக.).

*[ஒட்டல் + காது.]*

**ஒட்டற்பலா** *ottarpalā,* பெ. (n.) ***ஒட்டப் பிலவு;*** devils nettle (சா.அக.).

*[ஒட்டல் + பலா.]*

**ஒட்டற்ற பொன்** *ottarrapon,* பெ. (n.) 1. ***கலப்பில்லாத பொன்;*** unalloyed or refined gold. 2. ***மாற்றுயர்ந்த பொன்;*** pure gold

*[ஒட்டற்ற + பொன். ஒட்டு = கலப்பு.]*

**ஒட்டறை** *ottarai,* பெ. (n.) 1. ***ஒட்டடை.1.*** பார்க்க; see *ottadai 1.* "அற்பவகி நஞ்சிவைகள் ... ஒட்டறை யாற் போம்" (பதார்த்த.1142). (செ.அக.).

*[ஒட்டடை → ஒட்டறை (கொ.வ.).]*

**ஒட்டன்**[1] *ottan,* பெ. (n.) ***ஒட்டர (ஒரிசா) நாட்டிலிருந்து வந்த பணியாளன் அல்லது தொழிலாளி;*** a worker or a labourer originally belongs to Orissa state (செ.அக.)

ம. ஒட்டன்; தெ. ஒட்டெ வாடு; க. ஒட்ட.

*[ஒட்டரம் → ஒட்டான் → ஒட்டன்.]*

**ஒட்டன்**[2] *ottan,* பெ. (n.) ***நெல்வகை;*** variety of paddy cultivated in the Thanjavur district and maturing in six and a half months. (செ.அக.).

*[ஒட்டு → ஒட்டன்.]*

**ஒட்டாக்கொற்றி** *ottā-k-korri,* பெ. (n.) 1. ***கன்றை யணுக விடாத கறவைமாடு;*** cow that repels its calf 2. ***அன்பில்லாத பெண்;*** woman unkind to her child or to her husband. (செ.அக.).

*[ஒட்டாத → ஒட்டா + கொற்றி - ஒட்டாக்கொற்றி. கொற்றி = மாடு.]*

**ஒட்டாங்கிளிஞ்சில்** *ottāngiliñjil,* பெ. (n.) 1. ***உடைந்த சிப்பி;*** broken oyster shell. 2. ***ஒருவகை மீன்;*** a kind of shell fish.

*[ஒடு → ஒட்டாம் → ஒட்டாம் + கிளிஞ்சில்.]*

**ஒட்டாங்குச்சு** *ottānguccu,* பெ (n) 1. ***ஒட்டாங் காய்ச்சில்*** பார்க்க, see *Ōttāngāyccil* 2. ***மண்கல ஓடு;*** broken piece of a pot

**ஒட்டாங்கொடி** *ottāngodi,* பெ. (n) ***ஓடாங்கொடி*** பார்க்க; see *odāngodi* (செ.அக.).

**ஒட்டாநோய்** *ottānōy,* பெ (n) ***தொற்றாநோய்கள்;*** disease which do no infect persons. (சா.அக.).

*[ஒட்டாத + நோய்]*

**ஒட்டாம் பாரை** *ottām-pārai,* பெ. (n.) ***கடல்மீன் வகை;*** horse mackerel of olive colour (செ.அக.).

*[ஒட்டாம் + பாரை.]*

**ஒட்டார்** *ottār,* பெ. (n) ***பகைவர்;*** foes, those who will not unite "ஒட்டார் சொலொல்லை யுணரப்படும்" (குறள்,826). "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்" (குறள்,967), (செ.அக ).

ம. ஒட்டார்

*[ஒண்டு → ஒட்டு → ஒட்டார் (வே.க.110).]*

**ஒட்டாரக் காரன்** *ottāra-k-kāran,* பெ (n) ***பிடிவாதமுள் ளவன்;*** obstinate fellow; contumacious man (செ.அக.).

*[ஒட்டாரம் + காரன்.]*

**ஒட்டாரங்கட்டு-தல்** *ottāraṅ-kattu-,* 5 செ.கு வி. (vi) ***பிடிவாதம் பண்ணுதல்;*** to be obstinate, to be perverse, head-strong "ஒட்டாரங் கட்டி நம் பல்லக்குக் கொம்பை யொடித்தெறிந்த" (தனிப்பா.1,223,13) (செ.அக.).

*[ஒட்டாரம் + கட்டு.]*

**ஒட்டாரம்** *ottāram,* பெ (n) ***முற்கூறியதையொட்டியே இறுதிவரை மாறாது நிற்றல்*** (பிடிவாதம்); constanton principles, obstinacy, stubbornness; perversity. (Loc.). (செ.அக )

ம. ஒட்டாரம், தெ. ஒட்டாரமு.

*[ஒட்டு → ஒட்டாரம்.]*

**ஒட்டாவுருவம்** *ottā-v-uruvam,* பெ. (n.) ***கற்படிமம்*** (யாழ் அக.); stone image, dist fr otturuvam (செ.அக.).

*[ஒட்டாத + உருவம்.]*

**ஒட்டி**[1] *otti,* பெ (n.) ***ஓரின மீன்*** (ஒட்டு மீன்); a kind of fish

ம. ஒட்டி.

**ஒட்டி**[2] *otti,* பெ. (n.) ***ஒருவகை அப்பம்;*** a kind of cake

குட., ம. ஒட்டி.

*[ஒட்டு → ஒட்டி = ஒட்டில் ஒட்டியவாறு வேகும் அப்பம். இது எலாட்டி → ரொட்டி எனத் திரிந்த வடபுலத்திரிபு கடுங் கொச்சை வழக்கு.]*

**ஒட்டி**[3] *otti,* பெ. (n.) 1. ***ஒட்டி நிற்கும் பொருள்;*** that which adheres to, coheres with "ஒட்டி யவனுளமாகில் லான்" (சி.போ.2,1,1). 2. ***ஒட்டொட்டி*** பார்க்க; see *ottotti* 3 ***ஒரு கடல் மீன்;*** a marine fish (J) (செ.அக.).

ம. ஒட்டி.

*[ஒட்டு → ஒட்டி.]*

**ஒட்டிக்கிரட்டி** *ottikkiratti,* பெ. (n) ***ஒன்றுக்கு இரண்டு பங்கு;*** twice as much. (colloq). (செ.அக ).

*[ஒன்று → ஒற்றை → ஒட்டை → ஒட்டி + கு + இரட்டி.]*

**ஒட்டிக்கொடு-த்தல்** *otti-k-kodu-,* 4.செ.குன்றாவி. (v.t) ***உறுதி பண்ணித் தருதல்;*** to give an assurance, to solemnly promise, guarantee "ஐங்கழஞ்சுபொன் மன்ற ஒட்டிக் கொடுத்தோம்" (S.II iii 99) (செ.அக.).

*[ஒட்டு → ஒட்டி + கொடு.]*

**ஒட்டிக்கொள்ளல்** *ottikkollal,* பெ. (n) 1. ***நோய் பற்றுதல். இது நோயாளியினின்று நேராகவும் அல் லது பிறிதொரு வழியாகவும் வந்துசேரும்;*** infection of disease by contact with a patient directly or transmitted through water,. food or other means of conveyance indirectly 2. ***ஒன்றோடொன்று மிகுதியாகப் பொருந் தல்;*** any abnormal joining of parts to each other - adhesion (சா.அக.). "ஒட்டாரை ஒட்டிக்கொளல்" (குறள்.679).

*[ஒட்டி + கொள்ளல்.]*

**ஒட்டி கக்குவான்** *otti-kakkuvān,* பெ. (n.) ***ஒருவகைப் புல்*** (யாழ் அக.); grass (செ.அக.).

**ஒட்டிடு-தல்** *ottidu-,* 20 செ கு.வி. (vi) 1. ***பந்தயம் போடுதல்;*** to lay a wager 2. ***ஆணையிடுதல்;*** to take an oath (செ.அக.).

*[ஒட்டு + இடு.]*

**ஒட்டிதற் கடமை** *otti-tar-kadami,* பெ. (n) ***குடியான வன் கொடுக்குங் கடமைகளுளொன்று*** (T.A.S iii 32); customary due payable by the cultivator (செ.அக.).

*[ஒட்டி + தன் + கடமை. ஒட்டி = உறுதி. கடமை = வரி. தான் செலுத்த வேண்டிய கட்டாயமான வரி.]*

**ஒட்டிப் பயறு** *ottippayaru,* பெ. (n.) ***எலிப்பயறு*** (சா.அக.); a kind of pulse, leguminous plant.

*[ஒட்டி + பயறு.]*

**ஒட்டிப்போ-தல்** *otti-p-pō-,* 8.செ.கு.வி. (v.i.) 1. ***கூடப் போதல்*** (வின்.); to go along with. 2. ***வற்றுதல்;*** to become lean; to get emaciated, to shrink. 'கன்னம் ஒட்டிப் போயிருக்கிறது' (செ.அக.).

*[ஒட்டி + போ-தல்.]*

**ஒட்டியம்** *ottiyam,* பெ. (n.) 1. ***ஒரு நாடு;*** Orissa. 2. ***ஒட்டர மொழி;*** Oriya, the language of Orissa. 3. ***ஒருவகை மந்திர வித்தை;*** kind of witchcraft.

4. *மந்திர வித்தை யுணர்த்தும் நூல்;* treatise on witchcraft (W) (செ.அக.).

ம. ஒட்டியம்; க. ஒட்டி, தெ. ஒட்டெ.

*[ஒட்டு → ஒட்டியம்.]*

**ஒட்டியர்** *ottiyar,* பெ. (n.) ***ஒட்டியன்*** பார்க்க; see *ottiyan.*

**ஒட்டியன்** *ottiyan,* பெ. (n) 1. ***ஒட்டர நாட்டவன்*** (பாரத இராசசூய.134); native of Orissa 2. ***ஒட்டரநாட்டரசன்;*** king of Orissa "ஒட்டியன் போற் பெண்" (தமிழ்நா.223). (செ.அக.).

ம. ஒட்டியன்

**ஒட்டியாக்கு-தல்** *ottiyākku-,* 5.செ.குன்றாவி. (vt.) ***இணையாக்குதல்;*** to equalize, to make equal.

*[ஒட்டு → ஒட்டி + ஆக்கு-தல]*

**ஒட்டியாணம்** *ottiyāṇam,* பெ. (n) 1. ***ஒகப்பட்டை*** (திருமந் 818); girdle worn by yogis while in a sitting posture, so as to bind the waist and the doubled-up legs together 2 ***மாதர் இடையில் அணியும் அணியு ளொன்று;*** gold or silver girdle or belt, an ornament worn by women round the waist "உடை தாரமு மொட்டி யாணமும்" (மீனாட்.பிள்ளைத் ஊசல்.10) (செ.அக.).

ம. ஒட்டியாண், ஒட்டிஞாண், க. ஒட்ட்யாண; து. ஒட்யாண்; தெ. ஒட்டாணமு; ஒட்யாண்டு

*[உடு → ஒடு + நாண் - ஒடடுநாண் (அரைஞாண்கயிறு) → ஒட்டியாண் + அம் - ஒடடியாணம் **உடைநாண்** பார்க்க, see udaināṇ]*

உடு = இடுப்பு. தெலுங்கிலும் கன்னடத்திலும் உடு → ஒடி எனத்திரியும் ஒடி = இடுப்பு. ஒடி → ஒட்டி → ஒட்டியாணம் எனத் திரிந்தது இதன் பழநதமிழ்ப் பெயர் உடு + நாண் - உடைநாண் அரை ஞாணைக் குறித்தசொல் மகளிர் இடையி லணியும் அணிகலனைத தெலுங்கில் குறித்தது. ஓகநிலையிலம ரும் முனிவர், இடுப்பொடு மடித்த பாதங்களைச் சேர்த்துக்கட் டும் துணி அல்லது நூற்கயிறு உடைநாண் (ஒட்டியாணம்) எனப்பட்டது. பிற்காலத்தில் இது பூணூல் என்னும் பெயர் பெற்றது என்பது திருமந்திரம் 818ஆம் பாடலால் தெரியவருகி றது.

**ஒட்டியாதேவி** *ottiyā-dēvi,* பெ. (n.) ***ஒட்டியக் காளி*** பார்க்க (வின்.); see *ottiyakkāli.* (செ.அக.).

**ஒட்டியான்** *ottiyāṉ,* பெ. (n.) ***கையாள்;*** attendant "ஒட்டியானும் இல்லை புட்டிக் கடுப்பால் உளைந்தேன்" (வள்ளி.கதை.Ms.).

*[ஒட்டு → ஒட்டியான்.]*

**ஒட்டியுப்பு** *otti-y-uppu,* பெ. (n.) ***வெடியுப்பு*** (மூ.அ.); saltpetre (செ.அக.).

*[ஒட்டி + உப்பு]*

**ஒட்டிரட்டி** *ottiratti,* பெ. (n) ***ஒற்றைக் கிரட்டை;*** double, twice as much. "இலங்கைப் போர்க் கொட்டிரட்டி கலிங்கப் போர்" (கலிங்.218,புது.) (செ.அக.).

*[ஒன்று → ஒற்று + இரட்டி = ஒற்றிரட்டி → ஒட்டிரட்டி (கொ.வ.).]*

**ஒட்டின்மரம்** *ottiṉmaram,* பெ. (n) ***ஓர் பூமரம். இதில் பூக்கள் பெரிதாயும் வெண்மையாயும், நறுமணமுள் ளதாயும் மூன்று பூக்களுடைய கொத்துக்கள் அமைந் ததாயு மிருக்கும். பிறிதொரு மரத்தை ஒட்டுவதனால் முளைத்த மரம்;*** tree propagated by grafting (சா.அக.).

*[ஒட்டு + இன் + மரம்]*

**ஒட்டினர்** *ottiṉar,* பெ. (n.) ***நண்பர் முதலியோர்*** (வின்.); those who are attached together, friends, relations, adherents (செ அக.).

*[ஒட்டு → ஒட்டினர்.]*

**ஒட்டு¹-தல்** *ottu-,* 5.செ.குன்றாவி. (v.t) 1. ***ஒட்டவைத்தல்;*** to stick, as with paste or gum, to glue on இந்தத் தாளைப் புத்தகத்திலே ஒட்டு (உ.வ). 2. ***தடுத்தல்; அணைகட்டுதல்;*** to obstruct, to construct a dam 3 *சார்தல்;* to be take one's self to, as for support, for protection, to be near to "திருவடியை யொட்டாத பாவித் தொழும்பரை" (திருவாச 10,7) 4. ***பந்தயம் வைத்தல்;*** to wager, stake "மாதுதன்னை யொட்டி" (பாரத.சூது 182). 5 ***துணிதல்;*** to resolve, make up one's mind, decide "காண்பதே கருமமாக வொட்டி" (சீவக 2143) 6. ***தாக்குதல்;*** to assail, attack, invade. "மாந்தருறை நிலத்தோ டொட்ட லரிது" (குறள் 499). 7. ***படைத்தல்*** (உரி நி), to create, make 8 ***கூட்டுதல்;*** to enhance, raise, as the sale price of an article விலையைச் சிறிதொட்டி வைத்தான். 9 ***கிட்டுதல்;*** to advance towards, come into close quarters with "ஒட்டித் தன் கையைப் பற்றி யீர்த்ததும்" (திருவிளை.அங் கம்.23). 10 ***இசைதல்*** (சம்மதித்தல்); to acquiesce, brook, tolerate, "ஒட்டேனரசோடொழிப்பேன் மதுரையை" (சிலப்.21,37) 11. ***அறுதியிடுதல்;*** to undertake, bind oneself to do a thing "யாதுமொழியாமலொட்டி ... முயல்கின்றார்" (சீவக.591). 12. ***நட்பாக்குதல்;*** to make friends with. "ஒட்டாரை யொட்டிக் கொளல்" (குறள்.679).

க., ம., து. ஒட்டு.

*[அண் → அண்டு → ஒண்டு → ஒட்டு.]*

**ஒட்டு²-தல்** *ottu-,* 5.செ.கு.வி. (v.i.) 1 ***ஒட்டிக் கொள்ளு தல்;*** to dry to become parched up, as the tongue; "ப்ரஜை தாய் முலையையகலில் நாக்கு ஒட்டுமாபோ லே" (ஈடு.1,3,9). 2. ***வஞ்சினம் கூறல்*** (சபதம் செய்தல்); to challenge, debate. "ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்" (மணிமே 1,60) 3 ***உள்ளொடுங் குதல்;*** to shrink, contract, ஒட்டிய வயிறு. 4. ***பதுங்கி நிற்றல்;*** to play the eaves-dropper, to lurk, to lie in ambush 5. ***பொருந்துதல்;*** to be suitable, appropriate. "பருவத்தோ டொட்ட வொழுகல்" (குறள் 482) (செ.அக.).

ம. ஒட்டுக; க. ஒட்டு; கோத. ஒட்; து. ஒட்டுனி; தெ. ஒட்டு; பர். ஒட்ப்.

*[ஒல் → ஒள் + து - ஒட்டு. அண் → அண்டு → ஒண்டு → ஒட்டு.]*

**ஒட்டு³** *ottu,* பெ. (n.) 1. ***இணைக்கப்பட்டது;*** patch, piece struck or fastened on, whether of cloth, board or metal 2. ***அணை;*** dam. ஆற்றில் ஒட்டு கட்டியிருக்கி றார்கள் (இ.வ.). 3. ***பறவை பிடிக்குங் கருவி;*** bird-lime. "ஒட்டில் பட்டகுருகு" (திருப்பு.1163). 4. ***நட்பு;*** union, friendship அவனுக்கும் இவனுக்கும் ஒட்டு அதிகம். 5. ***சார்பு;*** connection, attachment, love, affection. "ஒட்டறப் பொருட்பறிப்பவர்க்கு" (திருப்பு.615). 6. ***ஒப்பு;*** comparison, resemblance. "ஒட்டுரைத்திவ் வுலகுன்னைப் புகழ்வெல்லாம்" (தில்.திருவாய் 3,1,2). 7. ***படைவகுப்பு*** (திவா.); division of an army, battle array. 8. ***நற்சமயம்*** (வின்.); favourable opportunity.

**க., ம., து.** ஒட்டு.

*[அண் → அண்டு → ஒண்டு → ஒட்டு.]*

**ஒட்டு⁴** *ottu,* பெ. (n.) 1. ***பொட்டு, பதர்;*** husk. 2. ***சிறுமை*** (அற்பம்) (சூடா.); smallness, narrowness 3. ***ஓரம்;*** border, edge அந்தக் குழந்தை ஒட்டிலே இருக்கி றது. 3 ***கதிர்கொய்த தாள்*** (யாழ்ப்.); stubble

*[ஒட்டு = சேர்தல் , ஒட்டியிருத்தல், மேலோடு, உமி, பதர்.]*

**ஒட்டு⁵** *ottu,* பெ. (n.) ***ஆணை;*** oath. "ஒட்டு வைத்தே னும் மேல்வாரீர்," (அருட்பா,vi,வர்க்கமாலை.89).

தெ. ஒட்டு.

*[ஒட்டு¹ → ஒட்டு.⁵]*

**ஒட்டு⁶** *ottu,* பெ. (n.) ***இகலாட்டம்*** (வின்.); rivalry, emulation.

*[ஒல் → ஒற்று → ஒட்டு.]*

**ஒட்டு⁷** *ottu,* பெ. (n.) ***ஒட்டணி*** பார்க்க (குறள்.475, உரை.); see *ottaṇi.*

**ஒட்டு⁸** *ottu,* பெ (n.) 1. ***மரப்பட்டை;*** bark of a tree. "ஒட்டு விட்டுலறிய பராரை" (கல்லா.6,25). 2 ***தவசக் காய்கனிகளின் மேல் இருக்கும் தோல்;*** upper skin or rind of grains, vegetables etc 3. ***வேறுவகை மரக்கிளையுடன் ஒட்டவைத்துண்டாக்கிய செடி;*** graft. இந்தச் செடி ஒட்டு. 4 ***புல்லுருவி***(மலை.); species of loranthus.

*[ஒட்டு¹ - ஒட்டு.⁸]*

**ஒட்டு⁹** *ottu,* பெ. (n.) 1. ***மொத்தம், கூடுதல்;*** total 2. ***விலை கூட்டுகை*** (வின்.); raising the bid, as at an auction

*[ஒட்டு¹ → ஒட்டு.⁹]*

**ஒட்டு¹⁰** *ottu,* பெ. (n.) 1. ***சிறிய குன்று;*** hill. 2. ***செய்குன்று;*** artificial hill.

*[ஒட்டு¹ → ஒட்டு ¹⁰]*

**ஒட்டுக்கடுக்கன்** *ottu-k-kadukkaṉ,* பெ (n.) ***சிறு கடுக் கன் வகை*** (வின்.), small ear-ring sticking close to the ear (செ.அக.).

**தெ.** ஒண்டு; **க., து.,** ஒண்டி.

*[ஒட்டு + கடுக்கன்.]*

**ஒட்டுக்கண்** *ottu-k-kaṇ,* பெ. (n.) ***இமையொட்டு நோயுள்ள கண்*** (வின்.); eye disease with the lids adhering or sticking together on account of inflammation. (செ.அக.).

*[ஒட்டு + கண்.]*

**ஒட்டுக் கண்ணாள்** *ottukkaṇṇāl,* பெ. (n) 1. ***பெரு வெண்டை;*** big variety of bendy or lady's fingers. 2. ***பீளைக்கண்ணி;*** sore-eyed woman (சா.அக.).

*[ஒட்டு + கண்ணாள்.]*

**ஒட்டுக் கணவாய்** *ottu-k-kaṇavāy,* பெ. (n) ***மீன்வகை;*** a species of cuttle fish, (செ.அக.).

*[ஒட்டு + கணவாய்.]*

**ஒட்டுக் காந்தம்** *ottukkāndam,* பெ. (n.) 1. ***இரும்பிற்குச் சத்துக் கொடுத்து மாற்றிய காந்தம்;*** any soft iron converted into a magnet by induced magnatism - artificial magnet 2. ***பொதுவாகவே இரும்பைத் தன்னிடத்தே ஒட்டிக்கொள்ளச் செய்யும் காந்தம்;*** an ordinary magnet which naturally attracts iron. (சா.அக.).

*[ஒட்டு + காந்தம்.]*

**ஒட்டுக்காய்ச்சல்** *ottu-k-kāyccal,* பெ. (n) 1. ***தொற்றுக் காய்ச்சல்*** (வின்.); contagious fever. 2. ***உடம்போ டொட்டிய காய்ச்சல்;*** chronic, lowfever. (செ.அக.).

*[ஒட்டு + காய்ச்சல்.]*

**ஒட்டுக்காயம்** *ottu-k-kāyam,* பெ. (n.) ***பட்டினி கிடக்கை;*** complete starvation (Tinn.) (செ.அக.).

*[ஒட்டு + காயம்.]*

**ஒட்டுக்கால்** *ottukkāl,* பெ. (n.) 1. ***ஒடிந்து அல்லது முறிந்து போய்ப் பிறகு ஒட்டிய அல்லது பொருந்திய கால்;*** a broken or fractured leg which was set right afterwards 2. ***பொய்க்கால்;*** false leg. (சா.அக.).

*[ஒட்டு + கால்.]*

**ஒட்டுக்குஞ்சு** *ottu-k-kuñju,* பெ. (n.) 1. ***சிறுகுஞ்சு*** (வின்.); very young bird, nestling 2. ***பேன்குஞ்சு*** (யாழ்ப்.); young louse. (செ.அக.).

*[ஒட்டு + குஞ்சு.]*

**ஒட்டுக்குடி** *ottu-k-kudi,* பெ. (n.) ***பிறரிடத்திற் கூடிவாழுங் குடி*** (வின்.); co-tenancy in a house. (செ.அக.).

*[ஒட்டு + குடி.]*

**ஒட்டுக்குடுமி** *ottu-k-kuḍumi,* பெ. (n.) ***உச்சிச் சிறு குடுமி;*** tiny tuft or lock of hair on the crown of the head (செ.அக.).

*[ஒட்டு + குடுமி.]*

**ஒட்டுக்குருத்து** *ottukkuruttu,* பெ. (n.) ***சந்துகளிலன்றி வேறு இடங்களிலு முண்டாகுங் குருத்துகள்;*** (in botany) buds coming out from other than natural places - adventitious - bud. (சா.அக.).

*[ஒட்டு + குருத்து.]*






ஒட்டியாணம்



ஒட்டுக் கணவாய்



ஒட்டு மீன்



ஒட்டுத் துத்தி

**ஒட்டுக்கேள்(ட்)-த(ட)ல்** *ottu-k-kēḷ-,* 11.செ.குன்றாவி. (v.t.) *ஒற்றுக் கேள்-தல்* பார்க்க; see *oṟukkēḷ-.* (செ.அக.).

*[ஒட்டு + கேள்.]*

**ஒட்டுக்கை** *ottu-k-kai,* பெ. (n.) ***துண்டுக்கைமரம்*** (C.E.M.); jack rafter. (செ.அக.).

*[ஒட்டு + கை.]*

**ஒட்டுக்கொடு-த்தல்** *ottu-k-kodu-,* 4.செ.கு.வி. (v.i.) 1. ***அணுக இடங் கொடுத்தல்;*** to allow access, to be accessible 2. ***கேட்டது கொடுத்தல்;*** to comply with, yield to, grant to a request (செ.அக.).

*[ஒட்டு + கொடு.]*

**ஒட்டுச்சம்பா** *ottu-c-cambā,* பெ. (n) ***நெல்வகை*** (விவசா.1); a kind of paddy. (செ.அக.).

*[ஒட்டு + சம்பா.]*

**ஒட்டுச்சல்லடம்** *ottu-c-calladam,* பெ. (n.) ***குறுங்காற் சட்டை;*** short trousers, athletic drawers (செ.அக.).

*[ஒட்டு + சல்லடம்.]*

**ஒட்டுச்சுண்ணாம்பு** *ottuccunnāmbu,* பெ. (n.) ***நூற்றுக்கு 40 பங்கு களிமண் சேர்ந்த சுண்ணாம்பு*** (கட்டட.சா.); hydralic cement.

*[ஒட்டு + சுண்ணாம்பு.]*

**ஒட்டுச்செடி** *ottu-c-cedi,* பெ. (n.) 1. ***ஒட்டொட்டி*** பார்க்க; see *ottotti.* 2. ***ஒட்டுக்கட்டி உண்டாக்குஞ் செடி;*** graft plant. (செ.அக.).

ம. ஒட்டுச்செடி.

*[ஒட்டு + செடி.]*

**ஒட்டுச்சேர்வை** *ottu-c-cērvai,* பெ. (n) ***புண் அல்லது கட்டிகளில் ஒட்டிக்கொள்ளும்படி யிடும் சீலை மருந்து;*** adhesive plaster (சா.அக.).

*[ஒட்டு + சேர்வை ]*

**ஒட்டுஞாண்** *ottuñān,* பெ. (n) 1 ***ஒட்டியாணம்;*** girdle worn round the loins by women. 2 ***அரைக்குப் புறத்தே தோன்றும் ஒரு வகைச் சொறி;*** cuitaneous eruption on the loins. (சேரநா.).

ம. ஒட்டு ஞாண்.

*[ஒட்டு + ஞாண்.]*

**ஒட்டுடந்தை** *ottudandai,* பெ. (n) 1. ***சிறுதொடர்பு;*** slight participation, a little connection, as in an act 2. ***தொலைவுறவு;*** distant relationship

*[ஒட்டு + உடந்தை ]*

**ஒட்டுத்தரவு** *ottuttaravu,* பெ. (n.) ***சுற்றாணை, சுற்றுத்தரவு*** (C.G.), circular (செ.அக.).

ம. ஒட்டுத்தரவு.

*[ஒட்டு + தரவு.]*

**ஒட்டுத் திண்ணை** *ottu-t-tinnai,* பெ. (n.) 1. ***பெருந் திண்ணைக்குச் சார்பாகக் கீழ்ப்புறங் கட்டப்படும் சிறு திண்ணை;*** raised masonry projection along side the pial 2. ***வாசலுக்கும் பக்கத்துச் சுவருக்கும் இடையிலுள்ள மிகச் சிறிய தெருத்திண்ணை;*** narrow strip of raised projection or pial between the entrance door of a house and the side wall, narrow pial in an Indian dwelling house "ஒட்டுத் திண்ணையிலே படுத்த கடைச் சிறியேன்" (அருட்பா,vi.அருள்விளக்க.45) (செ.அக.).

*[ஒட்டு + திண்ணை.]*

**ஒட்டுத்துணி** *ottu-t-tuni,* பெ. (n.) ***ஒட்டிவைத்துத் தைக்கப்படும் துணித் துண்டு;*** piece of cloth for patching (செ.அக.).

*[ஒட்டு + துணி.]*

**ஒட்டுத்துத்தி** *ottu-t-tutti,* பெ. (n.) 1. ***செடிவகை;*** angle-leaved burr mallow. 2. ***துத்திப் பூண்டு வகை*** (மலை.); lobe-leaved burr mallow. (செ.அக.).

*[ஒட்டு + துத்தி.]*

**ஒட்டுத்தையல்** *ottu-t-taiyal,* பெ. (n) ***ஒட்டுத்துணியிட்டுத் தைக்குந் தையல்;*** patching needle work. (செ.அக.).

*[ஒட்டு +தையல்.]*

**ஒட்டு நத்தை** *ottunattai,* பெ. (n.) ***காலிலொட்டிக் கொண்டு துன்பத்தை யுண்டாக்கும் ஓர்வகை நத்தை*** (சா அக.); a kind of snail which gives trouble by sticking on legs.

**ஒட்டுநர்** *ottunar,* பெ. (n.) ***நண்பர்*** (திவா.); friends, adherents. (செ.அக.).

*[ஒட்டு → ஒட்டுநர்]*

**ஒட்டுநோய்** *ottunōy,* பெ. (n.) ***தொத்துநோய்;*** infectious or contagious disease.

*[ஒட்டு + நோய்.]*

**ஒட்டுப்பழம்** *ottu-p-palam,* பெ. (n.) ***ஒட்டுமரத்தின் பழம்;*** graft fruit, esp. the mango. (செ.அக.).

*[ஒட்டு + பழம்.]*

**ஒட்டுப்பற்று** *ottu-p-parru,* பெ. (n.) 1. ***அவாக்கட்டு*** (ஆசாபாசம்); attachment, tie of affection, as to one's family. 'அவனுக்குக் குடும்பத்தில் ஒட்டுப் பற்றில்லை' (செ.அக.).

*[ஒட்டு + பற்று.]*

**ஒட்டுப்பார்-த்தல்** *ottu-p-pār-,* 4.செ.குன்றாவி. (v.t.) ***உளவு பார்த்தல்;*** to spy. (ஆ.அக ).

*[ஒட்டு + பார்.]*

**ஒட்டுப்பிசின்** *oṭṭu-p-pišiṉ*, பெ. (n) *பறவைகளைப் பிடிப்பதற்கு வைக்கப்படும் பிசின் தடவிய கண்ணி;* bird-lime (இ வ.) (செ.அக.).

*[ஒட்டு + பிசின்.]*

**ஒட்டுப் பிரிமொழி** *oṭṭu-p-piri-moḻi*, பெ. (n) *செய்யுட் குற்றங்களுளொன்று* (யாப் வி.525); (Rhet.) defect in poetry. (செ அக.).

*[ஒட்டு + பிரி + மொழி.]*

**ஒட்டுப்புண்** *oṭṭuppuṇ*, பெ. (n) 1. *தொட்டவுடன் ஒட்டுகின்ற புண்;* sticky sore as ulcer. 2. *தொத்துப் புண்;* infectious itch 3. *தொற்றுச்சிலந்தி;* contagious ulcer 4 *ஏற்கனவேயுள்ள புண்ணினருகே தொந்தத்தினாலேற்படும் பல புண்கள்;* contiguous sores appearing near an original sore (சா.அக.).

*[ஒட்டு + புண்.]*

**ஒட்டுப்புதவம்** *oṭṭu-p-pudavam*, பெ. (n.) *இரட்டைக் கதவு;* double door "ஒட்டுப் புதவமொன்றுண்டு" (சிலப் 11,120) (செ.அக.).

*[ஒட்டு + புதவம்.]*

**ஒட்டுப்புல்** *oṭṭu-p-pul*, பெ. (n.) *புல்வகை (வின்.);* sticking-grass (செ.அக.).

*[ஒட்டு + புல்.]*

**ஒட்டுப்புழு** *oṭṭu-p-puḻu*, பெ. (n) *புறாமுட்டி* பார்க்க; see *purāmutti*. parakeet-bur, a widespread weed. (L). (செ.அக.).

*[ஒட்டு + புழு ]*

**ஒட்டுப்பொறுக்கி** *oṭṭupporukki*, பெ. (n) *எச்சிற்பொறுக்கி;* beggar who lives on leavings of food ஒட்டுப் பொறுக்கி நட்டுவக்காலி (நெல்லை.). (செ.அக.).

*[ஒட்டு + பொறுக்கி ]*

**ஒட்டுப்பொறுக்கு-தல்** *oṭṭu-p-porukku-*, 5.செ குன்றாவி. (v t) *சிதறியவற்றைச்சேர்த்தல்;* to glean scattered remains, as of food, to scrape together (செ அக.).

*[ஒட்டு + பொறுக்கு ]*

**ஒட்டுப்போடு-தல்** *oṭṭu-p-pōḍu-*, 20.செ கு வி. (v i) 1. *துண்டு வைத்து இணைத்தல்;* to stick on, as a piece, to sew on, as a patch 2 *சமயம் பார்த்தல்* (வின்.); to lie in wait, to bide one's time (செ.அக.).

*[ஒட்டு + போடு ]*

**ஒட்டுமயிர்** *oṭṭu-mayir*, பெ (n) 1 *குடுமியுடன் கூடாத மயிர்;* hair clipped or new grown about the tuft on the head 2 *வைத்துக் கட்டும் மயிர்;* false hair (செ அக.).

*[ஒட்டு + மயிர்.]*

**ஒட்டுமருந்து** *oṭṭumarundu*, பெ. (n) 1. *ஒட்டவைக்கும் மருந்து;* plastic materials used in medicine, plaster. 2. *துணித்த சதைப் பாளங்களையும், முறித்த வெலும்புகளையும் பொருந்திக் கொள்ளும்படி தமிழ் மருத்துவத்தில் பயன்படும் சதையொட்டி, எலும்பொட்டி முதலிய மூலிகைகள்;* (in Tamil medicine) drugs that are used for purposes of curing incised wounds and for setting right the fractured bones. (சா.அக.).

*[ஒட்டு + மருந்து.]*

**ஒட்டுமா** *oṭṭumā*, பெ. (n.) 1. *ஓர்வகைத் தித்திப்பு மாங்காய்;* graft mango 2. *ஒட்டவைத்து முளைத்த இனக் கலப்பான மாமரம்;* mango-tree propagated by grafting (செ.அக.).

ம. ஒட்டுமாவு.

*[ஒட்டு + மா.]*

**ஒட்டுமீன்** *oṭṭumīṉ*, பெ. (n.) *ஒருவகை மீன்;* sucker fish. (சேரநா.).

ம. ஒட்டுமீன்

*[ஒட்டு + மீன்.]*

**ஒட்டுமேகம்** *oṭṭumēgam*, பெ. (n) *தொற்றுவதனாலும் அல்லது வேறுவகைத் தொடர்பினாலு முண்டாகும் மேகத் தொடர்பான நோய்;* a contagious syphilis or other venereal disease aquired by direct venereal contact. (சா.அக.).

*[ஒட்டு + மேகம்.]*

**ஒட்டுமொத்தம்** *oṭṭu-mottam*, பெ. (n.) *முழுமொத்தம்;* grand total (செ.அக.).

*[ஒட்டு + மொத்தம்.]*

**ஒட்டுரிமை** *oṭṭurimai*, பெ. (n.) *ஒட்டுடந்தை*[2] பார்க்க (வின்.); see *oṭṭuṇḍai*.[2] (செ.அக.).

*[ஒட்டு + உரிமை.]*

**ஒட்டுருவம்** *oṭṭuruvam*, பெ. (n.) *மரப்பதுமை* (யாழ். அக.); wooden image, dist. fr. oṭṭū-v-uruvam. (செ.அக.).

*[ஒட்டு + உருவம்.]*

**ஒட்டுரோகம்** *oṭṭurōgam*, பெ. (n.) *ஒட்டுநோய்* பார்க்க; see *oṭṭunōy*

**ஒட்டுவட்டில்** *oṭṭu-vaṭṭil*, பெ. (n.) *வழிபாட்டு வட்டில்* (S.I.I ii,3 );small vessel for holding water, etc., placed before the idol in worship (செ அக.).

*[ஒட்டு + வட்டில் ]*

**ஒட்டுவாரொட்டி** *oṭṭuvār-oṭṭi*, பெ. (n) *ஒட்டுநோய்* பார்க்க, see *oṭṭunōy*. (செ.அக.).

*[ஒட்டுவார் + ஒட்டி. ஒட்டுவார் = ஒட்டுபவர், தொடுபவர்.]*

**ஒட்டுவிடு-தல்** *ottu-vidu-*, 20.செ.கு.வி. (v.i.) 1. ***பொருத்து நீங்குதல்;*** to become loose, disjoined as boards that had been glued together. 2. ***பற்றுவிடுதல்;*** to cease to be a friend or kinsman; to become dissociated. (செ.அக.).

*[ஒட்டு + விடு-தல.]*

**ஒட்டுவித்தை** *ottu-vittai*, பெ. (n.) ***இடத்தைவிட்டுப் பெயராதிருக்கச் செய்யும் வித்தை;*** magic art of rendering persons incapacitated to move and making them transfixed to the ground. (செ.அக.).

*[ஒட்டு + வித்தை.]*

**ஒட்டுவியாதி** *ottu-viyādi*, பெ. (n.) ***ஒட்டுநோய்*** பார்க்க; see *ottunōy*. (செ.அக.).

**ஒட்டுவிரல்** *ottuviral*, பெ. (n) ***கைவிரல்கள் ஒன்றோ டொன்று ஒட்டியிருத்தல்;*** fingers united by folds of skins or of membrances-webfingers. (சா.அக.).

*[ஒட்டு + விரல்.]*

**ஒட்டுவேகம்** *ottuvēgam*, பெ. (n.) ***முகைப் புல்;*** hare-grass. (சா.அக.).

*[ஒட்டு + வேகம். ஊகம் → வேகம்.]*

**ஒட்டுவேர்** *ottuvēr*, பெ. (n) ***மரத்தண்டுகளிலுண்டா கும் வேர்;*** root that springs up from the stem of a tree to the surface of the earth. (சா.அக.).

*[ஒட்டு + வேர்.]*

**ஒட்டுவேலை** *ottu-vēlai*, பெ. (n.) 1. ***இணைக்கும் வேலை*** (வின்.); joining, sticking on, patching. 2. ***போலிவேலை;*** deceptive, dishonest work. 3. ***மச்சுப் பாவும் வேலை;*** terracing. (செ.அக.).

*[ஒட்டு + வேலை.]*

**ஒட்டுவை-த்தல்** *ottu-vai-*, 4.செ.கு.வி. (v.i) 1. ***பறவை களைப் பிடிக்க ஒட்டுப்பிசின் வைத்தல்;*** to set bird-lime in order to ensnare birds. 2. ***ஆணையிடுதல்;*** to swear, take an oath 3. ***அகழ்தோண்டுதல்*** (R.); to dig trenches or moats round a city. (செ.அக.).

ம. ஒட்டுவய்க்குக.

*[ஒட்டு + வை.]*

**ஒட்டுறவு** *otturavu*, பெ. (n.) ***நெருங்கிய தொடர்பு;*** close relationship. (செ.அக.).

*[ஒட்டு + உறவு.]*

**ஒட்டெறும்பு** *otterumbu*, பெ. (n.) ***ஒருவகைக் கட்டெ றும்பு;*** stick ant. (சா.அக.).

*[ஒட்டு + எறும்பு.]*

**ஒட்டை**[1] *ottai*, பெ. (n) 1. ***ஒட்டைச்சாண்*** பார்க்க; see *ottai-c-cān*. "மன்னிய வொட்டை மாத்திரையாகி வயங்குவன்" (திருக்காளத்.பு.6,18). 2. ***ஒத்த அகவை அல்லது உயரம்;*** equal age or height.

க., து., ஒத்தெ; ம. ஒட்டெ.

*[ஒட்டு → ஒட்டை.]*

**ஒட்டை**[2] *ottai*, பெ (n) ***ஒட்டகம்;*** camel "இலகெயி றொட்டைக் களம்" (கோயிற்பு நட.30) (செ.அக.)

க. ஒன்டெ. *Hind ūnt*.

*[ஒட்டம் → ஒட்டை.]*

**ஒட்டை**[3] *ottai*, பெ. (n.) 1. ***ஒத்தஅளவு;*** equal. 2. ***விளையாட்டில் உதவுவோன்;*** helper in a game. (செ.அக.).

தெ. உட்டி.

*[ஒட்டு + ஐ.]*

**ஒட்டைக்கழுத்து** *ottaikkaluttu*, பெ. (n.) ***ஒட்டையைப் போல் நீண்ட கழுத்து;*** neck unusually long like the one of a camel (சா.அக.).

*[ஒட்டை + கழுத்து.]*

**ஒட்டைச்சாண்** *ottai-c-cān*, பெ (n.) ***பெருவிரல் முனையிலிருந்து சுட்டுவிரல் முனைவரைக்கும் உள்ள நீளம்;*** short span between the tips of the thumb and fore finger extended கட்டைவிரல் நுனியி னின்று சிறுவிரல் நுனிவரை உள்ள அளவு சாண் ஆகும். அதனின்று அளவில் சிறியது, கட்டைவிரல் நுனியி னின்று சுட்டுவிரல் நுனிவரையிலான அளவு ஒட்டைச் சாண் எனப்பட்டது.

*[ஒட்டை + சாண்.]*

**ஒட்டைத்திருக்கை** *ottai-t-tirukkai*, பெ. (n.) ***திருக்கை மீன் வகை*** (R); a kind of tirukkai fish. (செ.அக.).

*[ஒட்டை + திருக்கை.]*

**ஒட்டொட்டி** *ottotti*, பெ. (n.) ***ஒட்டங்காய்ப்புல்;*** a kind of grass with prickly seeds which stick to the clothes. (செ.அக.).

*[ஒட்டு + ஒட்டி.]*

**ஒட்டோலக்கம்** *ottōlakkam*, பெ. (n.) 1. ***பேரவை;*** great assembly. 2. ***ஆரவாரம்*** (வின்.); show, pomp, magnificence. (செ.அக.).

தெ. ஒட்டோலக்கமு; க. ஒட்டோலக.

*[ஒல் → ஓலகம் → ஓலக்கம். ஒட்டு + ஓலக்கம் - ஒட்டோலக்கம். (வே.க.114) ஓலக்கம் பார்க்க; see ōlakkam.]*

**ஒட்டோலம்** *ottōlam*, பெ. (n.) ***பெருந்தெள்ளுக்கொடி;*** giant-rattle. (செ.அக.).

*[ஒட்டு + ஓலம்.]*

**ஒட்பம்**[1] *otpam,* பெ. (n.) *அறிவு;* intelligence, prescience; wisdom "கல்லாதா னொட்பம் கழியநன் றாயினும்" (குறள்.404) (செ அக ).

*[ஒள் + பு - ஒட்பு + அம் - ஒட்பம் ]*

**ஒட்பம்**[2] *otpam,* பெ. (n.) 1 *அழகு;* beauty. 2. *நன்மை;* benefit. 3 *மேன்மை;* excellence. (செ.அக.)

*[ஒள் → ஒளி. ஒள் + பு - ஒட்பு + அம்.]*

**ஒடி**[1]**-தல்** *odi-,* 4 செ.கு.வி. (vi) 1. *முறிதல்;* to break, as a stick, a branch, a rib, to break off, snap; "விலா வொடிந்து" (பாரத.வேத்திரகீய் 61) 2. *கெடுதல்;* to be broken in strength, ruined "ஒடியாப் பருவத்து" (கலித் 93,25). 3. *இடையறுதல்;* to cease for a time, break off, discontinue, suspend. "ஒடியா முறையின் மடிவிலையாகி" (புறநா 29) (செ அக.).

**ம.** ஒடியுக; **க.** ஒடி. உடி. **கோத.** ஒட்வ்; **துட.** வட்; **குட.** ஒடெ; **து.** ஒடியுனி. ஒடெயுனி; **தெ.** ஒடியு, **கொலா.** ஒட்; **நா.** நாட், நாக், **கட.** ஒட்; **கூ.** ஒச. ஒக்ப்; **பர்.** ஒட், **கோண்.** வோடானா.

*[ஒடு → ஒடி.]*

**ஒடி**[2]**-த்தல்** *odi-,* 4.செ.குன்றாவி. (vt) 1. *முறித்தல்;* to break, short off; to snap, as a branch, a stick, to cause to fracture, as a limb of the body. "தோள்களைத் தமது கைகளாலொடித்தன ராமென" (கந்தபு. திக்குவிசய.110). 2 *அழித்தல்;* to destroy, devastate "காள கூடமொடிக்கு முலகங்களை" (தேவா.614,10) (செ.அக.).

*[ஒடு → ஒடி ]*

**ஒடி**[3]**-த்தல்** *odi-,* 4.செ.கு வி. (v.i) *ஒளிசெய்தல்;* to sparkle, shine "ஒடிக்கச் சுடர்கால் குருமணி" (வாயுசங். மகளிருற் 3) (செ.அக.).

*[ஒள் → ஒளி → ஒடி ]*

**ஒடி**[4] *odi,* பெ (n.) 1 *கவண்* (யாழ்.அக.); brick-bat 2. *வலை;* net 3. *மரத்துண்டு;* log of a tree. 4. *காட்டுப்புதல்;* bush (ஆ.அக.).

*[ஒடு → ஒடி.]*

**ஒடிசல்**[1] *odišal,* பெ. (n.) *முறிந்தது;* broken piece. (செ.அக.).

**ம.** ஒடிச்சில்; **க.** ஒடகு, ஒடக; **துட.** விட்ய; **கோத.** ஒட்; **குட.** ஒடவெ; **து.** ஒடக; **தெ.** ஒடு.

*[ஒடி + அல் - ஒடியல் → ஒடிசல்.]*

**ஒடிசல்**[2] *odišal,* பெ (n) *ஒல்லியாயிருப்பவ-ன்-ள்;* thin or slender person. (செ அக.).

*[ஒடி + அல் - ஒடியல் → ஒடிசல்.]*

**ஒடிசில்** *odišil,* பெ. (n.) *கவண்* (பிங்.); brick-bat. (செ.அக.).

**தெ.** வடிசெல; **ம.** ஒடிசில்.

*[ஒடி + சில் - ஒடிசில்.]*

**ஒடிசிறகு** *odiširagu,* பெ. (n.) *ஒரு சிறிய பறவை;* a kind of bird. (சேரநா.).

**ம.** ஒடிசிறகு.

*[ஒடி + சிறகு.]*

**ஒடிபு** *odibu,* பெ. (n) *இடைமுறிகை;* breaking off in the middle, leaving unfinished "ஒடிபொன்று துறையன்றி முடிபொன்று துறையில்லை" (சேதுபு. பாலோ.10) (செ அக.).

*[ஒடி → ஒடிபு ]*

**ஒடியல்** *odiyal,* பெ. (n.) 1. *முறிகை* (வின்.); breaking, fracturing 2 *பனங்கிழங்கின் காய்ந்த பிளவு* (யாழ்ப்.); split tender palmyra roots dried and used as food (செ.அக.).

*[ஒடி → ஒடியல்.]*

**ஒடியல்மா** *odiyal-mā,* பெ. (n) *பனங்கிழங்கின் மாவு* (யாழ்ப்.); flour made of the palmyra root.

*[ஒடியல் + (மாவு) மா ]*

**ஒடியல்வால்** *odiyal-vāl,* பெ. (n.) *காய்ந்த பனங்கிழங்கின் நுனி* (வின்.); end of a dried palmyra root ஒடியல் வா லொடிக்க (வின்.) (செ அக )

*[ஒடியல் + வால்.]*

**ஒடியற்கிழங்கு** *odiyarkilangu,* பெ. (n.) *பனங்கிழங்கு;* palmyra root. (சா.அக.).

*[ஒடியல் + கிழங்கு.]*

**ஒடியற்படவு** *odiyar-padavu,* பெ. (n.) *பக்கம் அல்லது விளிம்பு முறிந்த தோணி* (வின்.); boat broken on the gunwale or edge. (செ.அக.).

*[ஒடியல் + (படகு) படவு.]*

**ஒடியன்** *odiyan,* பெ. (n) *ஆமை;* tortoise. (சா.அக.).

*[ஒட்டியன் → ஒடியன் ]*

**ஒடியிடை** *odiyidai,* பெ. (n.) *ஒடுங்கிய இடுப்பு;* narrow waist. (சா அக.).

*[ஒடி + இடை.]*

**ஒடியெறி-தல்** *odi-y-eri-,* 2.செ.குன்றாவி. (v.t.) 1. *காட்டுப் புதர்களை வெட்டி யெறிதல்;* to cut down a forest thicket while hunting "நெறியினை யொடியெறி கிற் பவரொத்து" (கலிங்.411,புது.) 2. *மரக்கொம்பைப் பாதி குறைத்தல்;* to snap or break, as a short branch that it might hang down within easy reach of the flock. "ஒடி யெறிந்தவர்வயின்" (கலித்.68). 3. *குற்றுயிராக்குதல்;* to beat within an inch of a person's life. "கண்ணழகாலேயாயிற்று இவரை ஒடியெறிந்தது" (ஈடு.3,4,2) (செ.அக.).

*[ஒடி + எறி.]*

**ஓடிவான்** *odivān,* பெ. (n) ***அற்பன்;*** wretch "இந்த ஓடிவான்களுக் கெல்லாம் நான் பயப்படுவேனா" (பிரதாப.விலா.104) (செ.அக.).

*[ஓடி + ஆன்.]*

**ஓடிவு** *odivu,* பெ. (n) 1. ***முறிகை;*** breaking, fracturing 2. ***கெடுகை;*** decaying, becoming damaged "ஓடிவியமாதி சம்பத்தி யுள்ளோனாகி"(சூத ஞானயோ ஞான பிரத்த 3) 3 ***குறைவு;*** decreasing, diminution. "ஓடிவில் பொற்கிழி நல்கி" (திருவிளை.இரசவா.10). 4 ***அழித்தல்*** (சங்காரம்.); periodical annihilation, destruction of the universe. "முதல் கெடலொடிவிடை" (திவ். திருவாய்.1,3,3). 5. ***தவிர்வு;*** cessation. "ஓடி விலை வெறாயிரம்" (சீவக 76) (செ அக.).

ம. ஒடிவு, க. ஒடக, ஒடெ; கோத. ஒட்; துட. விட்ய; குட. ஒடெவெ; து. ஒடகு, தெ. ஒடபி.

*[ஓடி → ஓடிவு]*

**ஒடு**[1] *odu,* பெ. (n) 1. ***நிலப்பாலை;*** round-leaved discous featherfoil. "ஒடுமரக் கிளவி" (தொல்.எழுத் 262) 2. ***முதுபுண்*** (சீவக 2881,உரை), festering sore, spreading abscess 3. ***ஒடுக்கட்டி*** பார்க்க; see *odukkatti.* (செ.அக.)

*[ஒது → ஒடு]*

**ஒடு**[2] *odu,* இடை (part) 1. ***மூன்றாம் வேற்றுமை யுருபு*** (தொல் சொல் 74), (Gram.) instr ending 2. ***எண்ணுப் பொருளில் வரும் இடைச்சொல்*** (நன்.428), connective particle (செ அக).

ம. ஒடு, து. டு, ட, தெ. தோடு; க. ஒடம்; பட. ஒட; பிரா. துட், அட்

*[ஒல் → ஒள் → ஒடு.]*

**ஒடு**[3] *odu,* பெ. (n) ***வளைவு, நெளிவு;*** bend, bruise

*[உடு → ஒடு (மு.தா.266,க.வி.69).]*

**ஒடுக்கட்டி** *odu-k-katti,* பெ. (n.) ***அக்குட்புண்;*** boil in the armpit (colloq.) (செ.அக.).

ம. ஒடிக்குரு; க. ஒடிசெ; து. ஒடி; தெ. ஒடிசெகட்ட, வடிசெகட்ட.

*[ஒடு + கட்டி.]*

**ஒடுக்கத்தம்பிரான்** *odukka-t-tambirān,* பெ. (n.) ***சிவனியத் திருமடத்தின் அகப்பணி பார்க்குந் தம்பிரான்;*** ascetic who functions as a private secretary to the head of a Śaiva mutt. (Loc.) (செ.அக.).

*[ஒடுக்கம் + தம்பிரான்.]*

**ஒடுக்கநாடி** *odukkanādi,* பெ. (n.) ***தாக்குண்ட நாடி;*** oppressed pulse. (சா.அக.).

*[ஒடுக்கம் + நாடி.]*

**ஒடுக்கம்**[1] *odukkam,* பெ. (n) 1. ***குறுக்கம்;*** narrowness, closeness 2 ***அடக்கம்;*** self-restraint, self-control, self-mastery. "ஒடுக்கமு மற்றுள குணமும்" (ஞானவா.சிகித் 225). 3. ***சுருங்கை;*** reduction, contraction. "போந்திடை யொடுக்க முறலால்" (தாயு சித்தர்கண.9). 4. ***பதுக்கம்;*** biding one's time. "ஊக்க முடையானொடுக்கம்" (குறள் 486). 5. ***தனிமையான இடம்;*** place of seclusion, retired sport 6. ***மறைவிடம்;*** place of concealment. "கண்மாறாடவ ரொடுக்க மொற்றி" (மதுரைக். 642). 7. ***மெய்யறிவு நிலைக்காக*** (ஞானகிருத்தியங்களுக்காக) ***ஒடுங்கியிருக்கை;*** retreat, retirement for spiritual exercises 8 ***ஒன்றிலடங்குகை;*** involution, as of the elements one into another, absorption, dissolution, disappearance, as of salt in water "உமையோ விறைவர் பாகத் தொடுக்கம்" (தனிப்பா.i,112,56). 9 ***சிறிது சிறிதாகக் குறைந்தொடுங்குகை;*** gradual sinking, reduciton step by step, as of circumstances, of the powers of the body 10. ***முடிவு;*** end, close, termination. "ஒடுக்கங் கூறார்... முழுதுணர்ந்தோரே" (சிலப்.1,18). 11. ***மந்தணம்*** (இரகசியம்); secret (செ அக.).

ம. ஒடுக்கம்.

*[ஒடு → ஒடுக்கு + அம்.]*

**ஒடுக்கம்**[2] *odukkam,* பெ. (n) 1. ***புழுக்கம்;*** sultriness. 2 ***இடைஞ்சல்*** (யாழ்.அக.); trouble, distress. (செ.அக)

*[உடு → ஒடு → ஒடுக்கம்]*

**ஒடுக்கம்**[3] *odukkam,* பெ. (n.) ***வழிபாடு*** (யாழ்.அக.); worship (செ.அக.).

*[ஒடு → ஒடுக்கம்]*

**ஒடுக்க மதிப்புரவு** *odukka-madippuravu,* பெ. (n.) ***விழா முடிவில் கோயில் அதிகாரிக்குச் செய்யும் மதிப்புரவு;*** honours rendered at the close of a festival to the trustees of a temple (Loc) (செ.அக.).

**ஒடுக்க வணக்கம்** *odukka-vanakkam,* பெ. (n.) ***அடங்கி வழிபடுகை*** (வின்.); deferential behaviour, reverential submission (செ.அக.).

*[ஒடுக்கம் + வணக்கம்.]*

**ஒடுக்கிக்கட்டு-தல்** *odukki-k-kattu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1 ***நெருக்கிக் கட்டுதல்;*** to wrap closely; to bind tightly, to tuck up and fasten behind, as the skirts 2. ***ஓலைப் பெட்டி முதலியவற்றின் விளிம்புகட்டுதல்*** (வின்.); to bind the hem, as of a palmyra-leaf basket or fan. 3. ***சிறுகக் கட்டுதல்;*** to build within a small extent of space. (செ.அக.).

*[ஒடுக்கி + கட்டு.]*

**ஒடுக்கிடம்** *odukkidam,* பெ. (n.) 1. ***மறைவிடம்;*** secret place 2. ***மூலை;*** corner. 3. ***நெருக்கமானவிடம்;*** narrow place (செ.அக.).

*[ஒடுக்கு + இடம்.]*

**ஒடுக்கு[1]-தல்** *odukku-*, 5.செ குன்றாவி. (vt) 1. ***அடக்குதல்;*** to subjugate; to bring down, as another's pride, to keep down, suppress, subdue பகைவரை ஒடுக்கி விட்டான். 2. ***வருத்துதல்;*** to cause distress, as cold or dew குளிர் மிகவும் ஒடுக்குகிறது. 3. ***ஒன்றச்*** (லயிக்கச்) ***செய்தல்;*** to dissolve, as the elements, to cause, to merge one in another, to cause to destroy as the world, at the close of an age 4. ***செலவு முதலியன குறைத்தல்;*** to reduce or retrench, as expenses 5. ***உடம்பு சிறுகுதல்;*** to grow thin or lean, as the body 6. ***சுருக்குதல்;*** to thrust within a shorter compass, to epitomize "ஒடுக்கி யொடுக்கிச் சொன்னாலும் ராமன் கீர்த்தி" (இராமநா.கிஷ்கிந்.3). 7. ***கருவூலத்தில் சேர்த்தல்;*** to remit or lay up, as in to a treasury; to deposit or garner, as in a storehouse "தம் பண்டாரத்தி லடைவுற வொடுக்கி" (பெரியபு.குங்கிலிய 13) 8 ***கீழ்ப்படுத்துதல்;*** to restrain, subdue "அடிக்குடில் ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்" (திருவாச 3,161). 9. ***திருடுதல்;*** to rob 'நாணும் நிறையுமான ஒடுக்கு மாட்டைப் பாரித்துக் கொண்டு' (ஈடு.5;3,9) (செ.அக.).

**ம.** ஒடுக்குக; **க.** உரிகிடு; **தெ.** ஒடுக்கின்சு.

*[ஒடுங்கு → ஒடுக்கு ]*

**ஒடுக்கு[2]-தல்** *odukku-*, 5.செ.குன்றாவி. (vt) ***முடிவுபெறச்செய்தல்;*** to close down, to terminate. (செ.அக.).

*[ஒடு→ ஒடுக்கு ]*

**ஒடுக்கு[3]** *odukku*, பெ (n) 1. ***அடக்கம்;*** contraction, compression 2 ***இடுக்குமூலை*** (வின்.); corner, narrow strip of space 3 ***ஒடுக்கமாயிருப்பது;*** that which is narrow, of little breadth ஒடுக்குப் பாதை. 4 ***கலங்களின் அடுக்கு;*** dent or depression in a metal utensil குடம் ஒடுக்கு விழுந்து போயிற்று. 5. ***தொடைச்சந்து;*** groin (செ.அக )

*[ஒடு → ஒடுக்கு (வே.க.84).]*

**ஒடுக்கு[4]** *odukku*, பெ. (n) 1. ***உணவு*** (புது.கல்.); food 2. ***பணஞ்செலுத்துகை;*** payment. (Nān.) (செ.அக.).

*[ஒடு → ஒடுக்கு ]*

**ஒடுக்குச்சீட்டு** *odukku-c-cīttu*, பெ. (n) ***செலுத்தியவர்க்குக் கொடுக்கும் பற்றுச்சீட்டு*** (வின் ); receipt given by the recipient acknowledging the money paid (செ அக.).

*[ஒடுக்கு + சீட்டு.]*

**ஒடுக்குத்துண்டு** *odukku-t-tundu*, பெ. (n) ***ஒடுக்குச் சீட்டு*** பார்க்க, see *odukku-c-cīttu* (செ அக ).

**ஒடுக்குப்படி** *odukku-p-padi*, பெ (n) ***ஒரு பழையவரி;*** ancient tax (Insc ) (செ.அக ).

*[ஒடுக்கு + படி ]*

**ஒடுக்குமருந்து** *odukkumarundu*, பெ. (n.) ***பருத்த உடம்பை யொடுக்கிப் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்குக் கொள்ளும் மருந்து;*** medicine which reduces the body and brings it to the normal size (சா.அக ).

*[ஒடுக்கு + மருந்து.]*

**ஒடுக்குமாடு** *odukku-mādu*, பெ. (n) ***கொள்ளைப் பொருள்;*** plundered property, booty. "ஒடுக்கு மாட்டைப் பாரித்துக் கொண்டு" (ஈடு 5,3,9) (செ.அக.)

*[ஒடுக்கு + மாடு. மாடு = செல்வம் ]*

**ஒடுக்குவாகை** *odukku-vāgai*, பெ. (n) 1. ***வெண்வாகை;*** small leaved white sirissa - albizzia procera (alata) 2 ***பன்றிவாகை;*** bastard rose wood. (சா.அக.).

*[ஒடுக்கு + வாகை.]*

**ஒடுக்குவாய்** *odukku-vāy*, பெ. (n) 1 ***கோணல்வாய்*** (வின்.); wry mouth; crooked mouth 2. ***சிறுகிய வாய்;*** small mouth, as of a vessel. (செ.அக.).

*[ஒடுக்கு + வாய்.]*

**ஒடுக்கெடு-த்தல்** *odukkedu-*, 4 செ குன்றாவி (vt) ***நெளிவெடுத்தல்;*** to remove a dent, smooth out the dented surface of a metal utensil (செ.அக.).

*[ஒடுக்கு + எடு.]*

**ஒடுகு** *odugu*, பெ. (n.) ***ஒடு[1]*** பார்க்க; see *odu[1]* (செ.அக.).

**ஒடுங்க** *ōdunga*, இடை (part) ***உவமஉருபு*** (தொல்.பொருள்.290); adverbial word of comparison

*[ஒடு → ஒடுங்க. ஒடு = ஒட்டுதல், பொருந்துதல்.]*

**ஒடுங்கல்[1]** *odungal*, பெ. (n) ***கட்டுப்பாடு, தடை;*** obstacle, impediment. (செ அக.).

*[ஒடு → ஒடுங்கு + அல்.]*

**ஒடுங்கல்[2]** *odungal*, பெ. (n) 1. ***கீழ்ப்படிதல்;*** obeying. 2. ***சுருங்கல்;*** shrinking 3. ***பதுங்கல்;*** hiding

*[ஒடு → ஒடுங்கு + அல்.]*

**ஒடுங்கி** *odungi*, பெ. (n) ***தன் உறுப்புகளை உள்ளொடுக்கும் இயல்புள்ள ஆமை;*** lit that which contracts, tortoise. "ஒடுங்கி யோடு" (பாலவா.306) (செ.அக.).

*[ஒடு → ஒடுங்கி (வே.க.84).]*

**ஒடுங்கியோடு** *odungiyōdu*, பெ. (n) ***ஆமையோடு;*** tortoise shell (சா.அக.).

*[ஒடுங்கி + ஓடு ]*

**ஒடுங்கு-தல்** *odungu-*, 7.செ.கு.வி. (v.i.) 1. ***அடங்குதல்;*** to be restrained, as the senses or the desires, to calm down; to become tranquil "என்னிதயமு மொடுங்க வில்லை" (தாயு.ஆனந்தமா.9) 2. ***குறைதல்;*** to become reduced, to grow less; "ஊனொடுங்க வீணொடுங்கும்" 3 ***சுருங்குதல்;*** to shrink, shrivel. 4 ***ஒதுங்குதல்;*** to respectfully slide on to one side, as when meeting a superior, to move to a side "மேலையோன் புடைதனி லொடுங்கியே" (கந்தபு.தாரகன் வதை.164). 5. ***மறைந்திருத்தல்;*** to be concealed, hidden "தொழுத கையுள்ளும் படையொடுங்கும்" (குறள் 828). 6. ***கீழ்ப்படிதல்;*** to be subservient அவன் அவனிடத்து ஒடுங்கியிருக்கின்றான் 7 ***சோம்புதல்;*** to be lazy, inactive "ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகை" (புறநா 8,4) 8 ***குவிதல்;*** to close, as the petals of the lotus flower "தாமரையின் றடம்போதொடுங்க" (திவ் இயற் திருவிருத் 76) 9 ***அமைதல்;*** to cease, as noise, bustle, to be quiet, silent ஊர் ஒடுங்கிவிட்டது 10. ***சோர்தல்;*** to be weary, exhausted, to sink உடல் ஒடுங்கி விட்டது 11 ***ஒன்றுதல்;*** to become dissolved, involved one within another, as the elements, worlds, till all is absorbed in the great infinite காரியங்கள் காரணத்தில் ஒடுங்கும். 12 ***ஒளி மங்குதல்*** (வின்.), to grow dim, as light (செ அக ).

**ம.** ஒடுங்ஙுக, **க.** உடுகு, உடகு; **கோத.** ஒட்க்; **துட.** வீட்க்; **து.** ஒடுங்கெடு, **தெ.** உடுகு; **கொலா.** ஊட்ப்; **கூ.** யும்ப், **குரு.** ஒடொக்னா, **மால்.** ஒட்கெ

*[ஒடு → ஒடுங்கு.]*

**ஒடுங்குமேனி** *odungumēni*, பெ. (n.) ***இளைக்குமுடம்பு;*** emaciated body. (சா.அக ).

*[ஒடுங்கு + மேனி.]*

**ஒடுத்தங்கு-தல்** *odu-t-tangu-*, 7.செ.கு.வி. (v.i.) ***புண்ணிற் சீழ்த்தங்குதல்*** (வின்.); to remain unremoved, as pus in a boil (செ.அக ).

*[ஒடு + தங்கு.]*

**ஒடுதடங்கல்** *odudadangal*, பெ. (n.) ***நெளிவு*** (வின்.); crook, bend, flexure. (செ.அக.).

*[ஒடு + தடங்கல் ]*

**ஒடுதலாம்** *odudalām*, பெ. (n ) ***புதினா;*** mint -menthagenus. (சா.அக.).

*[ஒடு → ஒடுதல் → ஒடுதலை → ஒடுதலாம்.]*

**ஒடுநில்-தல்** *odunil-*, 14.செ.குன்றாவி. (v.t.) ***பருவிற் சீழ்த் தங்கல்;*** to remain unremoved, as pus in a pimple

*[ஒடு + நில்.]*

**ஒடுப்பை** *oduppai*, பெ. (n.) ***ஒடு***[1] பார்க்க; see *odu*[1] (செ.அக.).

**ஒடுவடக்கி** *odu-v-vadakki*, பெ. (n) 1. ***குப்பைமேனி;*** Indian acalypha 2. ***திராய்*** (மலை ); a profusely branching prostrate herb. 3 ***பெருந்தும்பை*** (சித்.அக.); large species of white dead nettle. (செ.அக.).

*[ஒடு + அடக்கி.]*

**ஒடுவன்** *oduvan*, பெ. (n.) ***ஒடு***[1] பார்க்க; see *odu*[1] (செ அக.).

**ஒடுவு** *oduvu*, பெ. (n.) ***புண் புரை;*** sinus in a sore. (சா.அக.).

*[ஒடு → ஒடுவு.]*

**ஒடுவெண்ணெய்** *odu-v-enney*, பெ. (n) ***புண்ணுக்கிடும் ஒருவகையெண்ணெய்*** (வின்.); oil applied to cure a boil or eruption. (செ.அக.).

*[ஒடு + எண்ணெய்.]*

**ஒடுவை** *oduvai*, பெ. (n.) ***ஒடு***[1] பார்க்க; see *odu*[1]. "தான்றியு மொடுவையும் ஒடுங்கி" (மணிமே.6,80) (செ.அக.).

*[ஒடு → ஒடுவை.]*

**ஒடுவைப்புண்** *oduvaippun*, பெ. (n.) ***மேல்வாயைப் பற்றி வரும் புண்;*** ulcer or a wound in the Palāte. (சா.அக.).

*[ஒடுவை + புண்.]*

**ஒடுளகம்** *odulagam*, பெ. (n.) ***குடைவேல்;*** umbrella thorn, babool (சா.அக.).

*[ஒடுளம் + அகம்.]*

**ஒடை** *odai*, பெ. (n.) ***உடை***[5] பார்க்க; see *udal*[5] (செ.அக.).

**ஒடைச்சி** *odaicci*, பெ. (n.) ***ஒடு***[1]-1 (L.) பார்க்க; see *odu*[1]-1. (செ.அக.).

**ஒண்டன்** *ondan*, பெ. (n.) ***நரி*** (பிங்.); jackal. (செ.அக.).

*[ஒண்டு + அன்.]*

**ஒண்டி**[1] *ondi*, பெ. (n.) 1. ***தனிமையானது;*** that which is single இந்த மாடு ஒண்டி. 2. ***துணையில்லாதவன்;*** solitary, single person; one who is all alone, without any companion "ஒண்டியாய்த் தேர்விட்டு" (இராமநா. யுத்த 29) (செ.அக.).

**க.** ஒண்டி; **து.** ஒண்டி; **தெ.** ஒண்டி, ஒண்டரி; **குரு.** ஓண்டா; **பட.** ஒட்டி.

*[ஒன்று → ஒன்றி → ஒண்டி (கொ.வ.).]*

**ஒண்டி**[2] *ondi*, பெ. (n.) ***ஊற்றாணி என்னும் கலப்பையுறுப்பு*** (பிங்.); spike that fastens the pole to the plough (செ.அக.).

*[ஊன்றி → ஒன்றி → ஒண்டி (கொ.வ.).]*

**ஒண்டிக்காரன்** *ondi-k-kāran,* பெ. (n.) ***தனிமையானவன்;*** single person, lonely, companionless man (செ.அக.).

**தெ.** ஒண்டிகாடு, **க.** ஒண்டிகார.

*[ஒன்றி → ஒண்டி + காரன்]*

**ஒண்டிக்குடி** *ondi-k-kudi,* பெ. (n) ***ஒண்டுக்குடி*** பார்க்க; see *ondukkudi.* (செ அக ).

*[ஒண்டு → ஒண்டி + குடி.]*

**ஒண்டிப்புலி** *ondi-p-puli,* பெ. (n) 1. ***கைக்கோளப் பிச்சைக்காரன்;*** beggar of the kaikkōlar caste 2. ***நோக்கனென்னும் மரபினன்;*** person of the Nōkkan caste (செ.அக.).

*[ஒண்டி + புலி]*

**ஒண்டிமூலி** *ondimūli,* பெ. (n.) 1. ***ஒரு பூண்டு;*** plant. 2. ***தனியாக முளைக்கும் பூண்டு;*** solitary plant. (சா அக.)

*[ஒன்றி → ஒணடி + மூலி.]*

**ஒண்டு-தல்** *ondu-,* 5 செ.கு.வி. (vi) 1. ***மரம், சுவர் முதலியவற்றைச் சார்தல்;*** to lean or sit closely to a tree, wall etc 2 ***ஒளிந்து கொள்ளுதல், மறைந்து கொள்ளுதல்;*** to hide

**ம.** ஒண்டுக, **க.** ஒண்டு; **தெ.** ஒணடு

*[அண் → ஒண் → ஒண்டு. (வே க.110,மு.தா.214).]*

**ஒண்டுக்குடி** *ondukkudi,* பெ (n) ***ஒட்டுக்குடித்தனம்;*** tenancy in a portion of a house. (செ.அக.)

*[ஒண்டு + குடி.]*

**ஒண்டுக்கேள்-தல்** *ondu-k-kēl-,* 12 செ.கு.வி. (v.i.) ***ஒற்றுக்கேட்டல்;*** to eavesdrop. (Loc.) (செ அக.)

*[ஒண்டு + கேள்]*

**ஒண்டொடி** *ondodi,* பெ. (n) ***பெண்*** (வீரசோ.வேற்றுமை 3), lit, shining bracelet, fig, woman adorned with shining bracelets "ஒண்டொடி கண்ணேயுள" (குறள்,1101)

*[ஒள் → ஒண் + தொடி. (அன்மொழித் தொகை.).]*

**ஒண்ணடி மண்ணடியாய்** *onnadi-mannadiy-āy,* கு வி எ. (adv) ***ஒன்றடி மன்றடியாய்*** பார்க்க; see *onradi manradiyāy* (செ.அக.).

**ஒண்ணல்** *onnal,* பெ (n) ***ஒன்றல்*** பார்க்க; see *onral* (செ அக ).

**ஒண்ணார்** *onnār,* பெ (n) 1. ***பொருந்தார்;*** rival, adversaries 2 ***பகைவர்;*** foes

*[ஒள → ஒண்ணு → ஒணணார் (வே க.109) ஒன்னார் எனவும் வழங்கும் (குறள் 264, காண்க.)]*

**ஒண்ணி** *onni,* பெ (n) ***பொன்;*** gold (சா.அக.).

*[ஒள் → ஒள்ளி → ஒண்ணி ஒள் = ஒளிர்தல்.]*

**ஒண்ணு-தல்** *onnu-,* 15.செ.கு.வி. (vi.) 1. ***இயலுதல்;*** to be possible, feasible. "ஒண்ணுமோ வவர்தஞ் செயலோதவே" (கந்தபு பாயி.15). 2. ***தக்கதாதல்;*** to be fit, proper அப்படிச் செய்ய ஒண்ணாது. 3. ***பொருந்துதல்;*** to be united (செ.அக.)

*[ஒள் → ஒண்ணு. (வே.க 109).]*

**ஒண்ணுதல்** *onnudal,* பெ (n.) ***ஒள்ளிய நெற்றியள், பெண்;*** lit., bright forehead, fig, woman, having a beautiful forehead. "உலகருள் காரணனொண்ணுதலோடும்" (கந்தபு.தெய்வயானை.252). (செ.அக.).

**ம.** ஒன்னுதல்.

*[ஒள் + நுதல் - ஒண்ணுதல் (அன்.தொ.)]*

**ஒண்ணுதலாள்** *onnudalāl,* பெ. (n.) ***ஒண்ணுதல்*** பார்க்க; see *onnudal.* (சேரநா.).

**ம.** ஒண்ணுதலாள்

*[ஒண்ணுதல் + ஆள்]*

**ஒண்மை** *onmai,* பெ. (n) 1 ***விளக்கம்;*** brilliancy, splendour, brightness "ஒப்பின் மாநக ரொண்மை" (சீவக 535). 2. ***இயற்கையழகு;*** natural grace, beauty. "ஒண்மையு நிறையுமோங்கிய வொளியும்" (பொருங் உஞ்சைக் 34,151) 3. ***நன்மை*** (பிங் ); good, goodness, excellence 4. ***நல்லறிவு;*** knowledge, clearness of understanding, wisdom "ஒண்மை யுடையம் யாம்" (குறள் 844) 5. ***மிகுதி*** (திவா.); luxuriance, fullness, abundance 6. ***ஒழுங்கு*** (சூடா.); order, regularity. (செ அக.)

**ம.** ஒண்மை.

*[உல் → உள் → ஒள் → ஒண்மை (செல்வி.77,திச.171).]*

**ஒத்தடம்** *ottadam,* ***ஒற்றடம்*** பார்க்க; see *orradam* (செ அக )

*[ஒற்று → ஒத்து → ஒத்தடம் (சு வி 66).]*

**ஒத்தது** *ottadu,* பெ (n) 1. ***தகுதியானது;*** that which is commensurate with, fit, consistent "ஒத்த தறிவா னுயிர் வாழ்வான்" (குறள்,214). 2. ***உலகத்தார் ஏற்றுக் கொண்டது;*** that which has the approval of the world. (செ அக ) 3. ***நிகரானது அல்லது துல்லியமானது;*** that which equal to or suitable 4 ***ஏற்றது அல்லது சரியானது;*** that which is proper

**ம.** ஒத்தது

*[ஒல் → ஒத்து + அது]*

**ஒத்தபடி** *otta-padi,* கு வி எ. (adv.) ***ஏற்றவாறு;*** agreeably, suitably (செ அக ).

*[ஒல் → ஒத்த + படி.]*

**ஒத்தமலங்கொட்டு-தல்** *ottamalankottu-,* 5 செ.கு.வி. (vi) ***இடக்குச் செய்தல்;*** to behave improperly, rudely, insolently (செ.அக )

**ஒத்தல்**[1] *ottal,* பெ (n) 1. ***கேள்வியால் தெளிந்தவற்றில் மனம் ஊன்றிநிற்கை*** (பிங்.), conduct or behaviour in strict conformity with one's own convictions or settled persuasion, one of kēlvi 2 ***நடு*** (திவா ); middle, centre 3. ***பொருந்துதல்;*** uniting 4. ***போலுதல்;*** resembling "வில்லினை ஒத்த புருவம்" (பாரதியார்) (செ.அக.)

*[உ → ஒ → ஒத்தல் (மு தா 168.த ம.4) ]*

**ஒத்தவன்** *ottavan,* பெ (n) ***சமமானவன்;*** one who is equal

ம. ஒத்தவன்

*[ஒல் → ஒத்து → ஒத்த + அவன்.]*

**ஒத்தறு-த்தல்** *ottaru-,* 4 செ.குன்றாவி. (v.t) ***தாள வரையறை செய்தல்*** (பிங்.); to measure time (செ அக ).

*[ஒற்று → ஒத்து + அறு-த்தல் ]*

**ஒத்தன்** *ottan,* பெ. (n) 1. ***ஒருவன்;*** someone. "எல்லாவிஃதொத்தன்" (கலித்.61). 2. ***ஒருத்தன்*** பார்க்க; see *oruttan.* (செ.அக ).

*[ஒருத்தன் → ஒத்தன் (கொ வ.).]*

**ஒத்தாங்கு** *ottāṅgu,* கு வி.எ (adv) ***ஒத்தபடி*** பார்க்க; see *ottapadi* "ஒத்தாங் கொறுப்பது வேந்து" (குறள்,561). (செ.அக.).

**ஒத்தாசை** *ottāšai,* பெ. (n) ***உதவி;*** aid, help, assistance. (colloq ) (செ.அக.).

ம. ஒத்தாச; க. ஒத்தாசெ; கொ. ஒதாச்; துட. விதொஸ்.

*[உறு → உற்று → உற்றாயம் → ஒத்தாயம் → ஒத்தாசம் → ஒத்தாசை (கொ.வ.).]*

**ஒத்தாப்பு** *ottāppu,* பெ (n) 1 ***மறைவு;*** slanting shed in a field or garden to screen from the sun or wind. 2. ***குடில்;*** small building with a sloping roof on three out of its four sides (செ.அக.).

*[ஒல் → ஒது → ஒத்து → ஒத்தாப்பு 'ஆப்பு' சொல்லாக்க ஈறு.]*

**ஒத்தாழிசை** *ottāl-išai,* பெ. (n) ***கலிப்பாவின் வகை*** (தொல்.பொருள்.442); a kind of kali verse. (செ.அக.).

*[ஒல் + தாழிசை - ஒத்தாழிசை.]*

**ஒத்தி**[1] *otti,* பெ. (n.) ***ஒரு பெண்;*** one woman. "இஃதொத்தி யென் செய்தாள் கொல்." (கலித்.143) (செ.அக.).

*[ஒருத்தி → ஒத்தி (கொ.வ.).]*

**ஒத்தி**[2] *otti,* பெ. (n.) ***ஒற்றி***[2] பார்க்க; see *orri.*[2] (செ.அக.).

*[ஒற்றி → ஒத்தி.]*

**ஒத்தி**[3] *otti,* பெ. (n.) 1. ***பொருத்தம் பார்க்கும் பயிற்சி;*** experience of seeing proper occasion etc. 2. ***நிலத்தை ஒருவரிடம் பொருத்தி வைக்கும் அடைமானம்;*** mortgage. hypothecation 3. ***ஒத்து வாங்குதல்;*** pledging.

*[ஒத்து → ஒத்தி (சு.வி.66,67).]*

**ஒத்திகை** *ottigai,* பெ (n) 1 ***ஒப்பு;*** resemblance, reciprocal adaptation அதற்கும் இதற்கும் ஒத்திகை யிருக்கிறது 2. ***நாடகத்தை முன் ஆடிப்பார்க்கை;*** rehearsal 3 ***சரிபார்க்கை:*** to verify the correctness எழுதின பிரதிகளை ஒத்திகை பார் 4 ***உதவி;*** assistance (W ). (செ அக.).

*[ஒத்து → ஒத்திகை. (வே:க 112).]*

**ஒத்திகை பண்ணு-தல்** *ottigai-pannu-,* 15 செ கு.வி. (v.i) ***மகிழச் செயல்;*** to amuse by amorous sports. "ஒருநாட் பகலிலெனை யொத்திகை பண்ணி" (தெய்வச் விறலி.425) (செ அக.).

*[ஒத்திகை + பண்ணு.]*

**ஒத்திசை** *ottišai,* பெ (n) ***இசையின்*** (இலயம் ) ***ஒன்றும் தன்மை;*** harmony in music, symphony, concert (W ) rhythm (செ அக.).

*[ஒத்து + இசை.]*

**ஒத்திடம்** *ottidam,* பெ. (n) ***ஒற்றடம்*** பார்க்க; see *orradam* "கொங்கையை யொத்திடங் கொடுத்து" (தனிப்பா.). (செ அக.).

*[ஒற்றடம் → ஒத்தடம் → ஒத்திடம் (கொ.வ.).]*

**ஒத்திப்போடு-தல்** *ottippōdu-,* 19.செ.குன்றாவி. (v.t.) ***தவணை தள்ளி வைத்தல்;*** to adjourn, as a hearing, postpone (செ.அக ).

*[ஒத்தி + போடு.]*

**ஒத்தியம்** *ottiyam,* பெ. (n.) ***நச்சு மூங்கில்;*** asiatic poison bulb (சா.அக.).

*[உல் → ஒல் → ஒத்தியம்.]*

**ஒத்திரு**[1]**-த்தல்** *ottiru-,* 3.செ.கு.வி. (v.i.) ***இசைந்திருத்தல்;*** to live in harmony, concord, friendship. "ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்" (குறள்.) (செ அக.).

*[ஒத்து + இரு-த்தல்.]*

**ஒத்திரு**[2]**-த்தல்** *ottiru-,* 3.செ.குன்றாவி. (vt) ***போன்றிருத்தல்;*** to be similar to. (செ.அக.).

*[ஒத்து + இரு-த்தல்.]*

**ஒத்து**[1]**-தல்** *ottu-,* 10.செ.கு.வி. (v.i.) 1. ***தாளம் போடுதல்;*** to keep time with cymbals or with the hands. "குணலைக் கொத்தின பாணி" (கோயிற்.நட 30). 2. ***தாக்குதல்;*** to strike against each other, butt against, bunt "புயசயில மொன்றோ டொன் றொத்தினார்" (பாரத.வேத்திர.14). 3. ***ஒற்றுதல்;*** to forment பூவைக் கண்ணில் ஒத்திக் கொண்டான். 4. ***தள்ளுதல்;*** to push. (செ.அக.).

ம. ஒத்துக; க. ஒத்து; குட. ஒத்த; து. ஒத்துனி; தெ. ஒத்து; குரு. ஒத்னா

*[உத்து → ஒத்து.]*

**ஒத்து²-தல்** *ottu-*, 10.செ கு.வி. (vi) ***விலகுதல், ஒத்தி நிற்றல்;*** to make room for, to take on to one side. (செ அக).

**க., தெ.** ஒத்து.

*[ஒல் → ஒத்து.]*

**ஒத்து³** *ottu*, பெ (n) 1. ***தாளவொற்று;*** time in music for singing and dancing, keeping time for singing. ''ஒத்தளந்து'' (பரிபா 12,42) 2 ***நாதசுரத்துக்குச் சுருதி கூட்டும் ஓர் ஊது குழல்;*** a reed instrument conical in shape and enlarging downwards used for playing the drone note accompanying a nāka-curam. ''ஒத்தையூ துநரை யேய்க்கும்'' (திருவாலவா.49,18). 3. ***கையணி வகை;*** thin bangle **தெ.** ஒத்துலு. (செ.அக.).

**ம.** ஒத்து.

*[ஒற்று → ஒத்து (வே.க.108).]*

**ஒத்துக்கொடு-த்தல்** *ottu-k-kodu-*, 4 செ கு.வி (vi) 1 ***பொறுப்பேற்றல்;*** to be answerable, to guarantee 2. ***ஒப்புவிக்கப்பட்ட கணக்குகளுக்கு வகை சொல்லு தல்;*** to render an account for matters entrusted, as to an accountant (செ.அக.).

*[ஒத்து + கொடு]*

**ஒத்துக்கொள்(ளு)¹-தல்** *ottu-k-kol-*, 7.செ குன்றாவி. (v.t) 1. ***ஏற்றுக் கொள்ளுதல்*** (சம்மதித்தல்), to admit, concede 2 ***பிழையை ஒப்புக் கொள்ளுதல்;*** to acknowledge one's mistake or confess one's guilt தன் குற்றத்தை ஒத்துக்கொண்டான். 3. ***கணக்கிலேற்றுக் கொள்ளுதல்;*** to credit.

*[ஒத்து + கொள்]*

**ஒத்துக்கொள்(ளு)²-தல்** *ottu-k-kol*, 2.செ.கு வி (vi) 1. ***இணங்குதல்;*** to agree, concur அவர்கள் இருவரும் ஒத்துக்கொண்டு சாட்சி சொன்னார்கள். 2. ***ஏற்றதாதல்;*** to suit, to be adapted தண்ணீர் ஒத்துக் கொள்ள வில்லை (செ அக).

*[ஒத்து + கொள்.]*

**ஒத்துநட-த்தல்** *ottu-nada-*, 3.செ கு வி. (vi) 1. ***ஒரே வகையாய் நடத்தல்;*** to walk together at the same pace; to march, as soldiers 2 ***இசைந்தொழுகுதல்;*** to act agreeably to the wishes of another, live in harmony. (செ.அக).

*[ஒத்து + நட.]*

**ஒத்துப்பாடு-தல்** *ottu-p-pādu-*, 5.செ.கு.வி. (vi) 1. ***இசையப்பாடுதல்;*** to sing in concert, in unison 2 *பிறர் சொல்லுவன எல்லாவற்றையும் ஏற்று வழிமொழிதல்* (ஆமோதித்தல்); to assent to everything said by another, always say ditto to another's words (செ.அக.).

*[ஒத்து + பாடு.]*

**ஒத்துப்பார்-த்தல்** *ottu-p-pār-*, 4.செ.குன்றாவி. (v.t.) ***ஒப்பிட்டுப்பார்த்தல், சரிபார்த்தல்;*** to compare, collate, to verify the correctness எழுதியதை மூலப்படியோடு ஒத்துப் பார்க்கிறான். (செ.அக)

**ம.** ஒத்து நோக்குக.

*[ஒத்து + பார்.]*

**ஒத்துப்பிடி-த்தல்** *ottu-p-pidi-*, 4.செ.கு.வி. (vi.) 1. *குறிப்புச்செய்தியைக் காற்றுக்கருவி வாயிலாக ஊதி தொலைவிலுள்ளவனுக்குத் தெரிவித்தல்;* to convey the hints by blowing pipes 2 ***ஒத்தூதுதல்;*** to sound the keynote with the ottu or drone (W) 3. ***ஒருவர் கூறியதையே மற்றவரும் முழுமையாக ஏற்றுப் பேசு தல்;*** to be in total agreement with another (செ.அக.).

*[ஒத்து + பிடி.]*

**ஒத்துப்போடு-தல்** *ottu-p-pōdu-*, 20.செ.கு.வி. (v.i.) ***தாளம் போடுதல்;*** to keep the time with cymbals as an accompaniment to singing or dancing. (செ.அக.).

*[ஒத்து + போடு.]*

**ஒத்துவா(வரு)-தல்** *ottu-vā-*, 18.செ.கு.வி. (v.i.) ***இணங்கி வருதல்;*** to come to an agreement, to become conformable (செ.அக.).

**ம.** ஒத்துவரிக.

*[ஒத்து + வா.]*

**ஒத்துவாழ்-தல்** *ottu-vāl-*, 12.செ.கு.வி. (v.i.) ***மன மொத்து வாழ்தல்;*** to live in harmony as a family, relations, fellow-servants. (செ அக.).

*[ஒல் → ஒத்து + வாழ்.]*

**ஒத்துழை-த்தல்** *ottulai-*, 4.செ.கு.வி. (v.i.) ***பலர்கூடி மனமொத்து வினைசெய்தல்;*** to co-operate; to work together. (செ அக.).

**ம.** ஒத்துழய்க்குக.

*[ஒத்து + உழை.]*

**ஒத்துழைக்கை** *ottulaikkai*, பெ. (n.) ***கூடிவினை செய்கை;*** co-operation. working in union (செ.அக.).

**ம.** ஒத்துழப்பு.

*[ஒத்து + உழைக்கை.]*

**ஒத்துழைப்பு** *ottulaippu*, பெ. (n.) **ஒத்துழைக்கை** பார்க்க; see *ottulaikkai.* (செ.அக.).

*[ஒத்து + உழைப்பு.]*

**ஒத்துழையாதார்** *ottulaiyādār*, பெ. (n.) ***பிறகொள்கை யாரோடு இணங்கி நடவாதவர்;*** non-co-operators, dissenters (செ.அக.).

*[ஒத்து + உழையாதார்.]*

**ஒத்துழையாமை** *ottulaiyāmai,* பெ. (n) ***பிறகொள்கையோடு இணங்கி நடவாமை;*** non co-operation, dissent (செ.அக.)

*[ஒத்து + உழையாமை]*

**ஒத்தெழுத்திடு-தல்** *otteluttidu-,* 18.செ.குன்றாவி. (vt) ***யாவரும் மனமொத்துக் கையெழுத்திடுதல்;*** to sign in token of agreement 'வினாப் போக்கி ஒத்தெழுத்திட்டுக் கொடுத்த பரிசாவது' (SII.Vii,412) (செ.அக.)

*[ஒத்து + எழுத்து + இடு-.]*

**ஒத்தை** *ottai,* பெ. (n.) ***ஒற்றை*** பார்க்க (இ.வ.); see *orrai* (செ.அக.).

**ஒத்தைநாடி** *ottaināḍi,* பெ. (n) ***ஒற்றைநாடி*** பார்க்க, see *orraināḍi* (சா.அக.)

*[ஒற்றை → ஒத்தை + நாடி.]*

**ஒத்தைப்பூண்டு** *ottaippūndu,* பெ. (n) ***ஒற்றைப் பூண்டு*** பார்க்க; see *orraippūndu* (சா அக.).

**ஒத்தையடிப்பாதை** *ottaiyadippādai,* பெ. (n.) ***ஒற்றையடிப்பாதை*** பார்க்க; see *orraiyadippādai*

**ஒதளை** *odalai,* பெ (n) ***காசுக்கட்டி*** (m m), downy foliaged cutch (செ அக.).

*[உதள் → ஒதள் → ஒதளை.]*

**ஒதி** *odi,* பெ. (n) ***ஒருவகை மரம்;*** Indian ash tree "ஒதியம் பணைபோல் விழுவர்" (பதினொ.ஆளுடைய மும்.6) (செ.அக.).

*[உதி → ஒதி. உதிமரம் எனத் தொல்காப்பியர் வழங்குவர். "ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே" (தொல்.எழுத்து.262).]*

**ஒதுக்கம்[1]** *odukkam,* பெ. (n) 1. ***தனிமை;*** retreat, privacy; seclusion, solitude 2. ***நடை;*** walk, gait "ஊழடி யொதுக்கத் துறுநோய்" (சிலப் 10,92). 3. ***பதுங்குகை;*** crouching, stooping 4 ***பின்னிடுகை;*** retiring, receding, retreating, withdrawing (W) 5. ***இருப்பிடம்;*** abode, habitation, dwelling place "திணியிமிலேற்றினுக் கொதுக்கஞ் செல்வ நின்னிணைமலர்ச் சேவடி கொடுத்த" (சீவக 3100) 6 ***மறைவிடம்*** (சூடா.); hiding place. 7. ***மகளிர்பூப்பு;*** catamenia (W) 8. ***தங்குமிடம், சாவடி;*** rest house 9 ***ஓர் அமங்கல இசை*** (திருவாலவா.57,14, அரும்.); dirge (செ.அக.).

**ம.** ஒதுக்கம், **க.** ஒதகு; **தெ.** ஒதகு.

*[ஒதுக்கு + அம்]*

**ஒதுக்கம்[2]** *odukkam,* பெ. (n) (யாழ்.அக.) 1. ***தாழ்மை;*** humility 2. ***ஒழுக்கம்;*** conduct. (செ.அக.).

*[ஒதுக்கு + அம்]*

**ஒதுக்கம்[3]** *odukkam,* பெ (n) ***சேர்ந்து கிடத்தல்*** (சங்.இலக்.சொற்.); accumulation.

*[ஒதுக்கு + அம்.]*

**ஒதுக்கல்[1]** *odukkal,* பெ (n) ***எழுச்சி*** (சூடா.); rising, springing or sprouting forth.

ம. ஒதுக்கல்

*[உது → ஒது → ஒதுக்கல்.]*

**ஒதுக்கல்[2]** *odukkal,* பெ. (n.) ***ஒரிக்கல்*** பார்க்க; see *orikkal* (செ அக.).

**ஒதுக்கிடம்** *odukkidam,* பெ (n) 1. ***ஒதுங்குமிடம்;*** place of retirement "தண்சார லொதுக்கிடந் தந்து" (தஞ்சைவா 11). 2. ***தங்கும் விடுதி;*** temporary abode (Loc) 3 ***அண்டி வாழுமிடம்*** (பிங்.); shelter, refuge, inn (செ அக.)

ம. ஒதுக்கிடம் (இடைவழி).

*[ஒதுக்கு + இடம்]*

**ஒதுக்கிப்போடு-தல்** *odukki-p-pōḍu-,* 19.செ குன்றாவி. (vt) 1 ***தீர்த்து விடுதல்;*** to settle, close up (W). 2. ***இனத்தினின்று நீக்கி விடுதல்;*** to expel, as from caste 3 ***கேள்வியைத்*** (விசாரணையைத்) ***தள்ளி வைத்தல்;*** to adjourn, as a hearing 4. ***சொத்தை மறைத்துவிடுதல்;*** to conceal, as property (Loc) அவன் சொத்தையெல்லாம் ஒதுக்கிப் போட்டான். (செ.அக.).

*[ஒதுக்கி + போடு.]*

**ஒதுக்கிரு-த்தல்** *odukkiru-,* 13 செ.கு.வி. (v.i.) ***பிறர் வீட்டிற் குடியிருத்தல்*** (குறள்.340,பரி.உரை.); to be a tenant in another's house. (செ.அக.).

*[ஒதுக்கு + இரு.]*

**ஒதுக்கு[1]-தல்** *odukku-,* 5.செ.குன்றாவி. (v.t) 1. ***ஒதுங்கச் செய்தல்;*** to put on one side, as the hair; to cause to get out of the way, as cattle, in the road; to wash ashore, as floating or other bodies, to push into a corner, to cast to one side, to a hedge, as dry leaves. 2. ***பிணக்கை விலக்குதல்;*** to separate, as persons in a quarrel சண்டையிடாமல் இருவரையும் ஒதுக்கினார்கள். 3. ***அணைத்துக்காத்தல்;*** to shelter, as a bird its young, to brood (Loc.). கோழிதன் குஞ்சுகளைச் செட்டைகளுக்குள் ஒதுக்குகிறது'. 4. ***ஒரு புறமாய்ச் சேர்த்தல்;*** together on one side; to tuck up, as one's clothes while crossing a river. நீ ஆடையை யொதுக்கிக் கொண்டு நீரிலிறங்கு. 5. ***சொத்துக்களை மறைத்தல்;*** to place out of reach, remove by unfair means, secure for one's self clandestinely. சொத்துக்களையெல்லாம் வழக்குக்காக ஒதுக்கி விட்டான். 6. ***விலக்குதல்;*** to separate; to put away, to expel, as from caste. அவனைச் சாதியினின்று ஒதுக்கி யிருக்கிறார்கள். 7. ***தீர்த்தல்;*** to despatch, as a business (W). வழக்கைத் தங்களுக்குள் ஒதுக்கிக் கொண்டார்கள். 8. ***கொல்லுதல்;*** to kill ஆள்களை யொதுக்க (வின்.). 9. ***வறுமைக்குட்படுத்துதல்;*** to impoverish (W) (செ.அக.).

**ம.** ஒதுக்குக; **க.** உடுகிசு, உடகிசு; **தெ.** உடிகின்சு, டுங்க; **கூ.** டுப்ப; **குரு.** ஒடொக்னா; **மால்.** ஒட்கெ.

*[ஒதுங்கு → ஒதுக்கு.]*

**ஒதுக்கு**[2] *odukku,* பெ. (n.) 1. ***விலகியிருப்பது;*** that which is apart, separate. 2. ***பிறர் வீட்டிற் குடியிருக்கை*** (குறள்.340,உரை); living as a tenant in another's house 3 ***புகலிடம்;*** refuge, shelter "எவ்வொதுக் கெய்துவாயே" (இரகு.கடிமண.50). 4. ***மறைப்பு;*** screen, hiding place. 5 ***நடை;*** walking, gait. "தகைமெல் லொதுக்கின் ... விறலி" (புறநா.135,3). (செ.அக.).

*[ஒதுங்கு → ஒதுக்கு.]*

**ஒதுக்குக்கடல்** *odukku-k-kaḍal,* பெ. (n) 1. ***குடாக்கடல்;*** bay, gulf 2. ***இயற்கையிலமைந்த துறைமுகம்;*** natural harbour (செ.அக).

*[ஒதுக்கு + கடல்]*

**ஒதுக்குக்கல்** *odukku-k-kal,* பெ. (n.) ***படிக்கல்;*** step-stone (சேரநா.).

ம. ஒதுக்குகல்.

*[ஒதுக்கு + கல்.]*

**ஒதுக்குக்குடி** *odukku-k-kuḍi,* பெ. (n) ***ஒட்டுக்குடி*** பார்க்க (வின்.); see *oṭṭukkuḍi.* (செ.அக.).

*[ஒதுக்கு + குடி.]*

**ஒதுக்குப் பச்சை** *odukku-p-paccai,* பெ. (n) ***புழுங்கலில் வேகாத நெல்;*** paddy that is not well boiled and is adhering to the sides of the vessel. Loc. (செ அக.).

*[ஒதுக்கு + பச்சை.]*

**ஒதுக்குப் படல்** *odukku-p-paḍal,* பெ. (n) ***காற்றைத் தடுக்குங் கிடைப்படல்*** (வின்.); shed to screen cattle from the wind (செ.அக.).

*[ஒதுக்கு + படல்]*

**ஒதுக்குப்பாடு** *odukku-p-pāḍu,* பெ. (n) ***மரவேலியுள்ள செய்கால் நிலம்*** (யாழ்ப்.); cultivable land enclosed by tree (செ.அக)

*[ஒதுக்கு + பாடு]*

**ஒதுக்குப்புறம்** *odukku-p-puṟam,* பெ. (n.) 1 ***ஒதுங்கும் புறவிடம்;*** side of a building or a hedge or a tree, as affording shelter from wind and rain 2. ***தனித்த இடம்;*** solitary place (செ.அக.).

*[ஒதுக்கு + புறம்.]*

**ஒதுக்குப்பொதுக்குப்பண்ணு-தல்** *odukku-p-podukku-p-paṇṇu-,* 12 செ குன்றாவி. (v.t.) 1 ***பண ஏமாற்றுச் செய்தல்;*** to embezzle 2. ***சொத்தை மறைத்து வைத்தல்;*** to conceal property by omitting to insert it in the list or schedule, as of a person sued for debt (செ அக).

*[ஒதுக்குப்பொதுக்கு + பண்ணு. ஒதுக்குப் பொதுக்கு - எதுகை குறித்த இணைமொழி.]*

**ஒதுக்குமுளை** *odukku-muḷai,* பெ. (n) ***தேய்ந்த வெள்ளிக்காசு;*** small silver coin worn off by use (செ.அக.).

*[ஒதுக்கு + முளை. தேய்ந்ததால் ஒதுக்கத்தக்க காசு.]*

**ஒதுக்குவயல்** *odukku-vayal,* பெ. (n) ***வயலிற் கால்நடைகளைக் கட்டுமிடம்*** (வின்); place set apart in a paddy field behind the lodging hut, for penning cattle

*[ஒதுக்கு + வயல்.]*

**ஒதுங்கு-தல்** *oduṅgu-,* 7.செ.கு.வி. (v.i) 1. ***விலகுதல்;*** to get out of the way, as to well 2. ***கரையிற் சார்தல்;*** to drift ashore. 3. ***அடைக்கலம் புகுதல்;*** to seek refuge, take shelter "நின்றளிக்கும் குடைநிழற்கீ ழுதினொதுங்கி" (கம்பரா.கையடை.8). 4. ***ஒடுங்குதல்*** (பிங்.); to step aside and bow as a mark of respect, before a superior. 5. ***நடத்தல்;*** to tread, step, walk "கோல்காலாகக் குறும்பல வொதுங்கி" (புறநா.159,3). 6. ***பின்னடைதல்;*** to lag behind "செந்தளி ரொதுங்க மிளிர்சீறடி" (கந்தபு தெய்வயானை.232). 7 ***தீர்தல்;*** to be finished, settled, adjusted, completed காரிய மொதுங்கிவிட்டது. 8. ***வறுமைப்படுதல்*** (யாழ்ப்.); to be impoverished, to be in want 9. ***இறத்தல்*** (யாழ்ப்.); to die. ஆள் ஒதுங்கிப் போயிற்று (செ.அக.).

ம. ஒதுங்கு; **க.** ஒதுகு, ஒதகு; **து.** ஒதுங்க; **தெ.** ஒடுசு.

*[ஒடுங்கு → ஒதுங்கு → ஒதுங்கு-தல் (வே.க.84).]*

**ஒதுங்குபுறம்** *oduṅgu-puṟam.* பெ. (n.) ***புறம்போக்கு;*** uncultivated land (Loc.) (செ.அக.).

**ஒதுப்புறம்** *odu-p-puṟam,* பெ. (n) ***ஒதுக்குப்புறம்*** பார்க்க; see *odukku-p-puṟam.* (செ அக).

**ஒப்ப** *oppa,* இடை. (part) ***உவம வாய்பாடுகளுள் ஒன்று*** (தொல்.பொருள்.291); adverbial word of comparison "கற்பிளவோடு ஒப்பர் கயவர்" (நல்வழி).

*[ஒ → ஒல் → ஒப்ப.]*

**ஒப்பக்கதிர்** *oppa-k-kadir,* பெ (n.) ***அணிகலனை மெருகிடுங் கருவி*** (வின்.); jeweller's polishing instrument (செ அக.).

*[ஒப்பம் + கதிர்]*

**ஒப்பங்கூறு** *oppaṅ-kūṟu,* பெ. (n.) ***பங்கு ஓலை*** (பத்திரம்) (C.G.), partition deed showing division of property (செ.அக.).

மறுவ. பங்கோலை, பங்காவணம், (பங்குபத்திரம், பாகபத்திரம்).

*[ஒப்பம் + கூறு. ஒப்பம் = செப்பம், ஒழுங்கு.]*

**ஒப்பங்கூறுச்சீட்டு** *oppaṅ-kūṟuccīṭṭu,* பெ (n) ***ஒப்பங்கூறு*** பார்க்க (C.G), see *oppaṅ-kūṟu* (செ.அக)

*[ஒப்பம் + கூறு + சீட்டு.]*

**ஒப்பங்கொடு-த்தல்** *oppan-kodu-,* 4.செ.கு.வி. (v.i) ***கட்டளை கொடுத்தல்*** (யாழ்ப்.); to grant an order, issue a summons (செ.அக.).

*[ஒப்பம் + கொடு-த்தல்.]*

**ஒப்பச்செய்-தல்** *oppa-c-cey-,* 1 செ.குன்றாவி (vt) ***ஒத்துக் கொள்ளச் செய்தல்;*** to cause to agree. (ஆ.அக.).

*[ஒப்ப + செய்-தல்.]*

**ஒப்பசெப்பம்** *oppa-šeppam,* பெ. (n.) ***சமம்*** (வின்.); levelness, as of ground. (செ.அக.).

*[ஒப்பம் + செப்பம்.]*

**ஒப்படி**[1] *oppadi,* பெ. (n) 1. *அறுவடை* (உ.வ.): harvest. 2 *ஒருவகைக் கூட்டுநிதி;* (G.Tn.D.i.103), a kind of common good fund raised by proportionate contributions from all land owners. (செ.அக)

தெ. ஒப்பிடி.

*[ஒப்பு → ஒப்படி (வே.க.112).]*

**ஒப்படி**[2] *oppadi,* பெ. (n.) ***தூய்மை; துப்புரவு;*** cleanliness, neatness வீட்டை ஒப்படியாக வைத்துக் கொள் (இ.வ.).

*[உவப்படி → ஒப்படி ]*

**ஒப்படி**[3] *oppadi,* பெ. (n) ***அணியமானது*** (m.m.); that which is ready (செ.அக.).

*[ஒப்பம் → ஒப்படி ]*

**ஒப்படிமிசுக்கு** *oppadi-mišukku,* பெ. (n) ***நில விளைச்சற் கணக்கு*** (இ.வ.); computation of the actual value of a crop. (செ.அக.).

*[ஒப்படி + மிசுக்கு.]*

**ஒப்படியிருக்கை** *oppadi-y-irukkai,* பெ. (n.) ***யாழ் மீட்டும் இருக்கை நிலை யொன்பதனுள் ஒன்று*** (சிலப்.8,25,உரை.); a posture, one of nine irukkai. (செ.அக ).

*[ஒப்படி + இருக்கை.]*

**ஒப்படை**[1]**-த்தல்** *oppadai-,* 4.செ.குன்றாவி. (vt) 1. *ஒப்புவித்தல்;* to entrust, consign, deliver, give over to the charge of another. அவனிடத்தில் எல்லாப் பொறுப்பையும் ஒப்படைத்திருக்கிறான் (உ.வ.). 2. *ஈடுகொடுத்தல்;* to make amends give satisfaction, furnish a security, compensate, indemnify பணம் வாங்கத் தன் சொத்துக்களையெல்லாம் ஒப்படைத்தான். (உ.வ.). 3. *பரிந்துரைசெய்தல்* (வின்.); to recommend (செ.அக.).

*[ஒப்பு + அடை-த்தல்.]*

**ஒப்படை**[2] *oppadai,* பெ. (n) 1 ***ஒப்புக் கொடுக்கை;*** entrusting, surrender, commitment, delivery, pledging, giving charge 2. ***ஒப்படைப்பு*** பார்க்க; see *oppadaippu.* (செ அக ).

*[ஒப்பு + அடை.]*

**ஒப்படைப்பு** *oppadaippu,* பெ. (n.) ***முறைமன்ற ஆணையை நிறைவேற்றுகை;*** (Legal) delivery in execution court proceedings (செ.அக.).

*[ஒப்பு + (அடை) அடைப்பு.]*

**ஒப்பணி**[1]**-தல்** *oppani-,* 4.செ.குன்றாவி (vt.) ***ஒப்பனை செய்தல்;*** to decorate, embellish "ஒப்பணிதலிற் சிவப்பாதல்" (திவ்.பெரியாழ்.3,6,8,வ்யா.பக்.690) (செ.அக.).

*[ஒப்பு + அணி - ஒப்பணி.]*

**ஒப்பணி**[2] *oppani,* பெ. (n.) ***உவமையணி;*** (Rhet.) simile. (செ.அக.).

*[ஒப்பு + அணி.]*

**ஒப்பந்தம்**[1] *oppandam,* பெ. (n.) 1. ***உடன்படிக்கை;*** agreement, stipulation, contract. 2. ***கட்டுப்பாடு;*** unanimity, accord ஊரெல்லாம் ஒப்பந்தமாயிருக்கிறது. 3. ***நடு*** (வின்.); middling quality, mediocrity. 4. ***சமன்;*** smoothness, evenness, levelness. ஒப்பந்தமான நிலம் (வின்.). (செ.அக.).

ம. ஒப்பந்தம்; க. ஒப்பந்த; து. ஒப்பந்த; தெ. ஒப்பந்தமு.

*[ஒப்பு → ஒப்பந்தம். 'அந்தம்' - சொல்லாக்க ஈறு ]*

**ஒப்பந்தம்**[2] *oppandam,* கு வி.எ. (adv ) ***ஒப்பாக;*** similarly, equally அவனுக்கு ஒப்பந்தம் நீ செய்ய வேண்டும். (இ வ.) (செ.அக ).

*[ஒப்பு + அந்தம் - ஒப்பந்தம். பெயர்ச்சொல் வினை யெச்சப் பொருள் தந்தது ]*

**ஒப்பந்தம்பண்ணு-தல்** *oppandam-pannu-,* 15.செ.கு.வி. (vi) 1. ***உடன்படிக்கை செய்தல்;*** to agree, to contract, covenant 2. ***ஈடாகக் கொடுத்தல்*** (வின்.); to give as equivalent for 3. ***சமம்பண்ணுதல்*** (வின்.); to level, smooth on (செ.அக.).

*[ஒப்பந்தம் + பண்ணு-.]*

**ஒப்பந்தமானகாணி** *oppandam-āṉa-kāṇi,* பெ. (n.) ***வரியொழுங்கு செய்யப்பட்ட நிலம்*** (வின்.); land for which the tax or tithe has been commuted into a lump sum by agreement (செ.அக.).

*[ஒப்பந்தம் + ஆன + காணி.]*

**ஒப்பம்**[1] *oppam,* பெ. (n.) 1. ***ஒப்பு*** (வின்.); parallel, comparison, resemblance. 2. ***ஒருதன்மை;*** unchangeability, oneness. "ஒப்பமா யிரண்டறற்றொன்றாய்" (கைவல்ய தத்துவவி 28). 3. ***சமம்*** (வின் ); levelness 4. ***மெருகு*** (புறநா.147,7,உரை.); gloss, polish. 5. ***ஒப்பனை*** (கலித்.117,1,உரை.); ornamentation, make-up. (செ.அக.).

ம. ஒப்பம்; க. ஒப்ப; கோத. ஒப்; துட. உப்; குட. ஒப்ப; து. ஒப்பி; தெ. ஒப்ப; பர். ஒபிப்; குரு. ஒக்னா.

*[ஒப்பு → ஒப்பம்.]*

**ஒப்பம்**[2] *oppam,* பெ. (n.) 1. ***கையொப்பம்;*** signature 2. ***கட்டளை*** (யாழ்ப்); writ, summons, citation, order

3. ***ஆணை ஓலை*** (அதிகார பத்திரம்) (யாழ்ப்); written grant of privileges or honours; sanad. (செ.அக.).

*[ஒப்பு → ஒப்பம்.]*

**ஒப்பமிடு[1]-தல்** *oppam-idu-*, 18.செ.குன்றாவி. (v.t.) 1. ***சமமாக்குதல்;*** to smoothen, level, make even 2. ***மணி முதலியன துலக்குதல்*** (புறநா.147,7); to polish, as a gem 3. ***ஒப்பனை செய்தல்*** (அலங்கரித்தல்); to ornament பொன்னிலே நீலமணியை அழுத்திப்பேணி ஒப்பமிட்டாற் போன்ற (கலித்.117,உரை.) (செ.அக.).

ம. ஒப்பமிடுக.

*[ஒப்பம் + இடு.]*

**ஒப்பமிடு[2]-தல்** *oppam-idu-*, 18.செ.குன்றாவி (v.t.) 1 ***கையொப்பமிடுதல்;*** to subscribe one's name to 2. ***ஆணை ஓலை*** (அதிகார பத்திரங்) ***கொடுத்தல்;*** to grant a certificate of privileges or honours, to grant a diploma or sanad (செ அக.).

*[ஒப்பம் + இடு.]*

**ஒப்பரக்காரன்** *oppara-k-kāraṉ*, பெ. (n) ***ஒப்புரவுக் காரன்*** பார்க்க; see *oppuravukkāraṉ* (செ.அக.).

**ஒப்பராவி** *opparāvi*, பெ. (n) ***துலாக்கோல் செய்வோன்*** (வின்.); one who makes balance. (செ.அக.).

*[ஒப்பு + அராவி - ஒப்பராவி.]*

**ஒப்பராவு-தல்** *opparāvu-*, 9.செ கு.வி. (v.i.) ***துலை*** (தராசு) ***செய்தல்*** (வின்); to make a balance

*[ஒப்பு + அராவு - ஒப்பராவு = ஒப்பாகத் துலைக்கோலை அராவிச் சமன்செய்தல்.]*

**ஒப்பளவை** *oppalavai*, பெ. (n.) ***உவமையளவை*** (உபமானப்பிரமாணம்.) (சி.சி.அளவை.1); (Log.) analogy (செ.அக.).

*[ஒப்பு + அளவை.]*

**ஒப்பன்** *oppaṉ*, பெ. (n.) ***மெருகிடப்பட்டது;*** that which has been burnished "ஒப்பன் திருக்கைக் காறை... ஒப்பன் திருவடிக்காறை" (SII ii 7) (செ அக.).

*[ஒப்பு → ஒப்பன் (வே க.112) ஒப்பு = செப்பம், அழகு.]*

**ஒப்பனை** *oppaṉai*, பெ. (n) 1. ***உவமை;*** simile, comparison 2. ***சான்று*** (சாட்சியம்); proof, evidence 3. ***மேற்கோள், எடுத்துக்காட்டு*** (திருட்டாந்தம்); instance, example, parallel 4. ***போலி*** (பாவனை.) (வின்.); likeness, effigy. 5. ***சமம்;*** levelness, evenness (W). 6. ***அழகு;*** adornment, decoration, beautification. "வடிவை யொப்பனை செய்தவாறு" (பாரத இந்திர.26). (செ.அக.).

ம. ஒப்பன.

*[ஒ → ஒப்பு → ஒப்பனை. (வே க.112).]*

**ஒப்பனை காட்டு-தல்** *oppaṉai-kāttu-*, 5.செ.கு.வி. (v.i.) 1. ***ஒப்புக் காட்டுதல்;*** to exhibit a likeness, by drawing a picture or by making a bust. 2. ***மேற்கோள் காட்டுதல்*** (வின்.); to adduce an illustration or parallel (செ.அக.).

*[ஒப்பனை + காட்டு.]*

**ஒப்பா-தல்** *oppā-*, 6.செ கு.வி (v.i.) 1. ***உவமையாதல்;*** to be similar. 2 ***நேராதல்;*** to equal (செ அக.).

*[ஒப்பு + ஆ(கு)தல் ஒப்பாதல்.]*

**ஒப்பாக்கு-தல்** *oppākku-*, 5.செ குன்றாவி (v.t) ***இணையாக்குதல், சமனாக்குதல்;*** to make equal, level

*[ஒப்பு + ஆக்கு.]*

**ஒப்பாசாரக்காரன்** *oppāśāra-k-kāraṉ*, பெ (n) 1. ***ஒப்புக்குப் பழக்கவழக்கங்களைக் கடைபிடிப்பவன்;*** one who conforms merely to external rites or usage 2. ***மாயக்காரன்;*** hypocrite, dissembler

*[ஒப்பு + ஆசாரம் + காரன் Skt ācāra]*

**ஒப்பாசாரம்** *oppāśāram*, பெ (n) 1. ***உடன்படிக்கை;*** agreement, covenant அவனுக்கும் உனக்கும் ஒப்பாசார மென்ன? 2 ***ஒத்த ஒழுக்கம்;*** conformity, proper conduct 3. ***ஏய்ப்பு*** (வின்), hypocrisy 4 ***கண்டுங் காணாதது போலிருக்கை*** (யாழ்ப்), winking at an act, connivance 5. ***புறவொழுக்கம்;*** formal, external conduct (செ அக.).

*[ஒப்பு + ஆசாரம் Skt ācāra]*

**ஒப்பாரி[1]-த்தல்** *oppāri-*, 4 செ குன்றாவி (v.t) ***ஒத்தல்;*** to resemble, look like "பொன்னை யொப்பாரித்து" (தேவா 1200,10). (செ அக)

*[ஒப்பு + ஆரி - ஒப்பாரி. ஆரி = பொருந்து, ஆரித்தல் = பொருத்தல், செய்தல்]*

**ஒப்பாரி[2]** *oppāri*, பெ. (n) 1. ***ஒப்பு;*** equal "அவரன்ன ஒப்பாரி" (குறள்,1071). 2 ***போலி;*** pretence, hoax, imposture "நாளு மொப்பாரியாய்வந்த புத்துறவுக்கு நன்மை பலவே செய்குவார்" (அறப்.சத.30). (செ.அக).

க. ஒப்பாரி, தெ. ஒப்பாரி.

*[ஒ → ஒப்பு → ஒப்பாரி. (வே க.112)]*

**ஒப்பாரி[3]** *oppāri*, பெ (n) ***அழுகைப்பாட்டு;*** lamentation by women making doleful reference to the personal appearance and good qualities of the deceased "மகனே யென்றொப்பாரி சொன்னாள்" (இராமநா.யுத்த.81). (செ அக.).

ம. ஒப்பாரி.

*[ஒப்பாரி = ஒப்புமையான பண்புகள், உள்ளம் ஒத்த தன்மை, நெருங்கிய நல்லியல்புகளைச் சொல்லிப் புலம்புதல்]*

**ஒப்பாரிக்காரன்** *oppāri-k-kāraṉ*, பெ. (n) ***இறந்தவனுக்கு ஒப்பாயிருத்தல் பற்றி நெருங்கிய உறவினனாக மதிக்கப்படுபவன்*** (வின்), one regarded as a near relative because of his resemblance to a deceased member of the family

*[ஒப்பாரி = ஒத்த இயல்பு, ஒப்புமை. ஒப்பாரி + காரன்.]*

**ஒப்பாரிகொள்ளு-தல்** *oppāri-koḷ-,* 7.செ.குன்றாவி. (v.t.) *இறந்தவனுக்கு ஒப்பாயிருத்தல் பற்றி ஒருவனை நெருங்கிய உறவாகமதித்தல்* (வின்.); to regard one as a near relation because of his resemblance to a deceased member of the family (செ அக.).

*[ஒப்பாரி + கொள்]*

**ஒப்பாரிச்சுவர்** *oppāri-c-cuvar,* பெ (n) ***சம உயரத்தில் எழுப்பப்படும் சுவர்;*** walls raised at equal height (கொங் வ ).

*[ஒப்பாரி + சுவர்.]*

**ஒப்பாரியிடு-தல்** *oppāri-y-iḍu-,* 20.செ.கு.வி. (vi) *இறந்தவரை நினைத்துப் புலம்பியழுதல்;* to lament the death of a person making numerous reference to his or her personal appearance and excellent qualities. (செ அக )

*[ஒப்பாரி + இடு ]*

**ஒப்பாரிவை-த்தல்** *oppāri-vai-,* 4.செ.கு.வி. (v.i) ***ஒப்பாரியிடுதல்*** பார்க்க; see *oppāriyiḍu.* (செ.அக.).

*[ஒப்பாரி + வை ]*

**ஒப்பான்** *oppāṉ,* பெ. (n) ***ஒழுங்கான இயல்புடையவன்;*** man who walks in the path of rectitude "ஈங்கிவ ரொப்பார் போல யாவையும் விட்டு" (திருவாலவா. 27,43) (செ.அக.).

*[ஒப்பு + ஆன் ]*

**ஒப்பி[1]-த்தல்** *oppi-,* 4.செ.குன்றாவி. (v.t.) 1. ***உவமித்தல்;*** to liken, compare. "இத்துணையே ஒப்பிக்கப்பட்டது" (இறை 1,23). 2 ***விழுக்காடிடுதல்;*** to distribute in an equal measure among many "பகழியொப்பித் துள்ளவா றூட்டினானே" (சீவக 798) 3 ***மெய்ப்பித்தல்;*** to prove, demonstrate 4. ***ஒப்பனைசெய்தல்;*** to embellish, to adorn. "மரகதத்தைக் கடைந்தொப்பித்த தொத்தன" (அட்டப்.திருவேங்கடத்தந்.93). (செ.அக.).

*[ஒப்பு → ஒப்பி-.]*

**ஒப்பி[2]-த்தல்** *oppi-,* 4.செ.குன்றாவி. (vt) 1 ***ஒத்துக் கொள்ளச் செய்தல்;*** to cause to agree 2. ***ஏற்கும்படிச் சேர்ப்பித்தல்;*** to deliver, surrender, handover, make over 3. ***பாடத்தை மனனஞ்செய்து சொல்லுதல்;*** to recite by recalling to mind what has been learnt, as a lesson. (செ அக.).

ம. ஒப்பிக்குக.

*[ஒப்பு → ஒப்பி.]*

**ஒப்பிடு-தல்** *oppiḍu-,* 18.செ.குன்றாவி. (vt) 1. ***உவமித்தல்;*** to liken. 2. ***ஒத்துப் பார்த்தல்;*** to compare with other copies, as manuscripts; to collate. (செ.அக.).

*[ஒப்பு + இடு ]*

**ஒப்பித்துக்கொள்(ளு)-தல்** *oppittu-k-koḷ-,* 7.செ.குன்றாவி. (vt) ***ஏற்றுக்கொள்ளுதல்*** (உ.வ.); to receive; to take charge of, as an office. (செ.அக.).

*[ஒப்பி → ஒப்பித்து + கொள்.]*

**ஒப்பிதம்** *oppidam,* பெ. (n) 1 ***பொருத்தமாயிருக்கை;*** acceptability, propriety 2. ***சமம்;*** smoothness, levelness 3 ***நேர்மையாயிருக்கை;*** fairness, justice, equity (செ அக.).

தெ. ஒப்பிதமு.

*[ஒப்பு → ஒப்பிதம். (வே க 112) ]*

**ஒப்பில்போலி** *oppil-pōli,* பெ. (n) ***ஒப்புமைப் பொருளைக் காட்டாத, போல் என்னும் இடைச்சொல்*** (தொல் சொல் 280), the particle of comparison, pōl, used as a mere expletive without indicating any comparison as in அவன் இங்கு வந்தான் போலும் (உ.வ ) (செ அக ).

*[ஒப்பு + இல் + போலி ]*

**ஒப்பின்முடித்தல்** *oppiṉ-muḍittal,* பெ (n) ***ஒன்றனதிலக்கணத்தை அதுபோன்ற வேறொன்றற்கும் முடிவு செய்தலாகிய உத்தி*** (நன் 14), (Gram ) application of a rule appertaining to one thing to other things also of a similar character, one of 32 utti (செ அக.).

*[ஒப்பு + இன் + முடித்தல் ]*

**ஒப்பின்மை** *oppiṉmai,* பெ. (n) 1 ***நிகரின்மை;*** incomparableness, peerlessness, the quality of being unequalled or unparalleled 2 ***வேறுபாடு;*** dissimilarity, variation (செ அக.).

*[ஒப்பு + இன்மை.]*

**ஒப்பு[1]-தல்** *oppu-,* 5.செ.குன்றாவி. (vt) ***ஏற்றுக்கொள்ளுதல்*** (சம்மதித்தல்); to agree, accede to, assent, approve (செ அக ).

தெ., க. ஒப்பு, து. ஒப்பி

*[ஒல் → ஒப்பு.]*

**ஒப்பு[2]** *oppu,* பெ. (n) 1. ***போலுகை;*** likeness, similarity, resemblance. "உறுப்பொத்தல் மக்களொப் பன்றால்" (குறள் 993). 2. ***அழகு;*** beauty, loveliness, grace "ஒப்புடை யொருவனை யுருவழிய" (தேவா.474,7). 3. ***கவனம்;*** attention, alertness "ஒப்பொடு கேட்பமென் றுள்ளம் பற்றியே" (திருவாலவா 42,13). 4 ***ஒரு தன்மை;*** uniformity, oneness, consonance 5 ***ஏற்புடையது;*** that which is fit, appropriate, proper "தீர்த்த யாத்திரைக்குச் செல்கை யொப்பல" (திருக்காளத் 1,20). 6. ***உவமையளவை*** (சி.சி.அளவை.1); analogy. 7. ***உடன்பாடு;*** consent, approval. 8. ***ஒப்பாரி[2]*** பார்க்க; see *oppāri[2]* (செ அக )

ம. ஒப்பு; க. ஒப்பு; கோத. ஒப்; துட. கொய்உபம் (கைஒப்பம்); குட. ஒப்பு; குரு. ஒக்னா; து. ஒம்பு; தெ. ஒப்பு.

*[ஒல் → ஒப்பு.]*

**ஒப்பு[3]** *oppu,* பெ. (n.) ***கையெழுத்து;*** signature (tinn) (செ.அக.).

ம. ஒப்பு.

*[ஒல் → ஒப்பு.]*

**ஒப்பு**[4] *oppu,* பெ. (n.) *ஒத்தடம்* (இ.வ.); fomentation (செ.அக.).

*[ஒல் → ஒப்பு]*

**ஒப்புக்கழு**[1]**-தல்** *oppukkalu-,* 1 செ.கு.வி. (v.i.) *போலியாக அழுதல்;* to lament the death of a person for the sake of convention.

*[ஒப்பு + கு + அழு - ஒப்புக்கழு. 'கு' - நான்கன் உருபு.]*

**ஒப்புக்கழு**[2]**-தல்** *oppukkalu-,* 1 செ.குன்றாவி. (v.t.) *மனமொவ்வாமற் செய்தல்;* to perform a task without putting one's heart into it, to do a thing reluctantly (செ.அக.).

*[ஒப்பு + கு + அழு - ஒப்புக்கழு. 'கு' - நான்கன் உருபு.]*

**ஒப்புக்கொடு-த்தல்** *opp-k-kodu-,* 4.செ.குன்றாவி. (v.t.) *ஒப்புவித்தல்;* to deliver, hand over, make over (செ.அக.).

*[ஒப்பு + கொடு]*

**ஒப்புக்கொப்பாரம்** *oppukkoppāram,* பெ. (n.) *விருந்தினரைப் பேணுதல்* (இ.வ.); entertainment of guests, hospitality (செ.அக.).

*[ஒப்புக்கு + ஒப்பாரம் - ஒப்புக்கொப்பாரம். ஒப்புக்கு = விரும்பும் அளவுக்கு. ஒப்பாரம் = செம்மை, நிறைவு.]*

**ஒப்புக்கொள்(ளு)தல்** *oppu-k-kol-,* 7.செ.குன்றாவி. (v.t.) 1. *ஏற்றுக் கொள்ளுதல்;* to take charge accept. அந்த வேலையை ஒப்புக்கொண்டான். 2. *மனத்துக்குப் பிடித்தல்;* to be agreeable to அந்தக் கிழவிக்கு ஒன்றும் ஒப்புக்கொள்ள வில்லை (வின்.). 3. *ஒத்துக்கொள்ளுதல்;* to admit, confess (செ.அக.).

தெ. ஒபபுகொனு

*[ஒப்பு + கொள்.]*

**ஒப்புகுத்து-தல்** *oppukuttu-,* 5.செ.குன்றாவி. (v.t.) *கையொப்பம் இடுதல்;* to sign, to affix one's signature. (சேரநா.).

ம. ஒப்புகுத்துக.

*[ஒப்பு + குத்து. குத்துதல் = இடுதல்.]*

**ஒப்புச்சரக்கு** *oppu-c-carakku,* பெ. (n.) *அகப்படாச்சரக்கிற்கு மாற்றாகத் தேர்ந்தெடுக்கும் அக்குணம் வாய்ந்த வேறொரு போலிச்சரக்கு;* replacement of one drug or substance by another in place of a non-available drug-substitute. (சா.அக.).

*[ஒப்பு + சரக்கு.]*

**ஒப்புதல்பற்றுச்சீட்டு** *oppudal-parruccittu,* , பெ. (n.) 1. *சொத்தை முறைமன்ற ஏலத்தில் எடுத்தற்குப் பற்றுச்சீட்டு;* (legal) delivery receipt for property purchased in court sale 2. *அனுப்பியதைப் பெற்றுக் கொண்டதற்குத் திரும்பிவரும் அஞ்சல் பற்றுச்சீட்டு* (இ.வ.); postal acknowledgement receipt. (செ.அக.).

*[ஒப்புதல் + பற்று + சீட்டு.]*

**ஒப்புதல்ரசீது** *oppudal rašīdu,* பெ. (n) *ஒப்புதல் பற்றுச் சீட்டு* பார்க்க, see *oppudal parruccittu* (செ.அக.)

**ஒப்புப்பொருவு** *oppu-p-poruvu,* பெ. (n) *உவமப்பொரு* பார்க்க; see *uvama-p-poru* (செ.அக.)

**ஒப்புமுத்து** *oppu-muttu,* பெ. (n) *நல்லுருவமைந்த முத்து* (S.I.I.ii.143), well shaped pearl, pearl of a round, symmetrical shape (செ.அக.).

*[ஒப்பு + முத்து]*

**ஒப்புமுறி** *oppu-muri,* பெ. (n) *ஒப்புக்கொண்டதைக் குறிக்குஞ் சீட்டு;* deed of consent (Pudu insc.) (செ.அக.).

ம. ஒப்புமுரி.

*[ஒப்பு + முறி.]*

**ஒப்புமை** *oppumai,* பெ. (n) *சமம்;* likeness, resemblance, similarity "ஒப்புமை தோன்றச் செப்புவதுவமை" (தண்டி. 29) (செ.அக.).

*[ஒப்பு → ஒப்புமை 'மை' - பண்புப்பெயரீறு]*

**ஒப்புமைக்கூட்டம்** *oppumai-k-kūttam,* பெ. (n) *புகழ்தலிலும் இகழ்தலிலும் ஒன்றை அதனினும் மிக்க வேறொன்றொடு உவமிக்கும் ஓரணி* (தண்டி. 78); (Rhet.) bringing together several objects which have an attribute in common among them for comparison, figure of speech in which an object is compared with several other objects to render the comparision effective and telling

*[ஒப்புமை + கூட்டம்.]*

**ஒப்புமொழி** *oppu-moli,* பெ. (n.) *உடன்படிக்கை* (வின்.); agreement, covenant. (செ.அக.).

*[ஒப்பு + மொழி.]*

**ஒப்புரவறி-தல்** *oppuravari-,* 2 செ.கு.வி. (v.i.) *உலக நடைக்கேற்ற பாங்குகளைத் தெரிதல்* (குறள். அதி.22); to know what is accepted by the world as proper, as in relation to gifts. (செ.அக.).

*[ஒப்புரவு + அறி-தல்.]*

**ஒப்புரவா-தல்** *oppuravā-,* 6.செ.கு.வி. (v.i.) *அமைவுறுதல்* (chr.); to be reconciled. (செ.அக.).

*[ஒப்புரவு + ஆ(கு)தல் - ஒப்புரவாதல்.]*

**ஒப்புரவாக்கு-தல்** *oppuravākku-,* 5.செ.குன்றாவி. (v.t.) *அமைவு செய்தல்* (விவிலி.2,கொரிந்.5,18); to reconcile. (செ.அக.).

*[ஒப்புரவு + ஆக்கு.]*

**ஒப்புரவாயிரு-த்தல்** *oppuravāy-iru-,* 3.செ.கு.வி. (v.i.) *நலமுடனிருத்தல்* (வின்.); to be fairly well in health or circumstances. (செ.அக.).

*[ஒப்புரவு + ஆய் + இரு.]*

**ஒப்புரவு** *oppuravu*, பெ. (n) 1 *ஒற்றுமை;* agreement, union 2 *ஒத்துப்போகும் மெல்லியல்பு, சமன்;* smoothness, levelness, evenness 3 *உலகப் பொது ஒழுகலாறு;* custom, usage, duties enjoined by long established custom, caste rules "ஒப்புரவொழுகு" (ஆத்திசூ.) 4 *உலகநன்மை;* philanthropy "ஒருயிர்க்கே யுடம்பளித்தா லொப்புரவிங் கென்னாகும்" (பெருந்தொ.188) (செ அக.)

ஒப்பு + ஊர் - ஒப்பூர → ஒப்புரவு (சு வி.67).

ம. ஒப்புரவு

*[ஒப்பு → ஒப்புரவு.]*

**ஒப்புரவுக்காரன்** *oppuravu-k-kāran*, பெ (n) 1 *குலமகன்;* clansman 2. *பங்காளி* (இ வ.); relative, he that has an equal share with others in inheritance, co-parcener (செ அக.).

*[ஒப்புரவு + காரன்]*

**ஒப்புவமை** *oppuvamai*, பெ. (n) *அணிவகையுளொன்று;* ornament (ஆ அக.).

*[ஒப்பு + உவமை.]*

**ஒப்புவி-த்தல்** *oppuvi-*, 4 செ.குன்றாவி. (v.t) 1 *ஏற்கும்படி சேர்த்தல்;* to surrender, deliver, consign, hand over "அன்னைபால் வினையேனை யொப்புவித்து" (தாயு சச்சிதா 9). 2 *மெய்ப்பித்தல்;* to prove, demonstrate 3. *எடுத்துக்காட்டுத் தருதல்;* to illustrate. 4. *கடன்சாட்டுதல்* (வின்.); to transfer, as a debt. (செ.அக.).

*[ஒப்பு → ஒப்புவி]*

**ஒப்பூண்** *oppūṇ*, பெ. (n) *பிறருடன் ஒத்த பட்டறிவு;* sharing pleasure along with others, experiencing a thing in common with others instead of solely by oneself. "ஒப்பூண் உண்ணமாட்டாதே" (ஸ்ரீவசன.83) (செ.அக.)

*[ஒப்பு + ஊண் - ஒப்பூண். (குறிப்புப் பொருளாக ஒத்த பட்டறிவைக் குறித்தது.]*

**ஒப்போலை** *oppōlai*, பெ. (n.) *உடன்படிக்கைச் சீட்டு;* deed of agreement, contract "ஒப்போலை எழுதிக் கொண்டு ... பிரவிருத்தியுறும் மகாசனங்கள்" (சிவசம.58). (செ.அக.).

ம. ஒப்போல.

*[ஒப்பு + ஓலை.]*

**ஒப்போன்** *oppōṉ*, பெ. (n.) *ஒத்தவன்;* one who is equal to.

ம. ஒப்போன்.

*[ஒப்பான் → ஒப்போன்.]*

**ஒம்மல்** *ommal*, பெ (n.) *ஊர்ப்பேச்சு;* rumour (Loc) (செ அக.).

*[ஒம் → ஒம்மல்]*

**ஒம்மெனல்** *om-m-eṉal*, பெ (n) *ஒலிக்குறிப்பு;* onom expr of the sound of a ball that is tossed about "ஒம்மென்பந்தும்" (பதினொ.திருவிடை மும்.1, வரி.39) (செ.அக.).

*[ஒம் + எனல் 'ஒம்' = ஒலிக்குறிப்பு இடைச்சொல்]*

**ஒமை** *omai*, பெ. (n) *மா* (மலை); mango (செ.அக.).

*[மா → மாம் → ஆம் → ஒம் → ஒமை]*

**ஒய்[1]-தல்** *oy-*, 2 செ குன்றாவி. (vt) 1 *பெய்தல், ஊற்றுதல்;* to pour 2 *இடுதல்;* to put, keep

*[உள் → ஒள் → ஒய்.]*

**ஒய்[2]-தல்** *oy-*, 2.செ குன்றாவி. (vt) 1. *இழுத்தல்;* to drag along, as flood "கன்றுகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்" (அகநா.68). 2. *செலுத்துதல்;* to launch, as a boat, to send forth "ஒய்யுநீர்வழிக்கரும்பினும்" (பதிற்றுப் 87,4) 3 *கொடுத்தல்;* to give "வளராப் பார்ப்பிற் கல்கிரை யொய்யும்" (நற்.356). 4 *போக்குதல்;* to wipe out, efface "ஒய்யா வினைப்பயனுண்ணுங்காலை" (சிலப்.14,33).

*[உய் → ஒய்.]*

**ஒய்[3]-தல்** *oy-*, 2.செ.கு.வி. (vi) 1 *விட்டொதுங்குதல்;* to be off, to go away from ஒய்யெனத் தெழித்தாங்கு (சிலப் 15,48,உரை). 2. *தப்புதல்;* to escape, get into safety. "ஒடியொளித் தொய்யப்போவா னிலைகாண்மின்" (பரிபா.20,39) (செ அக). 3 *வளைதல்;* to bend.

*[உய் → ஒய் → ஒய்-தல் (வே.க 49).]*

**ஒய்[4]-தல்** *oy-*, 2.செ.குன்றாவி. (vt.) *அடித்தல், தாக்குதல்;* to strike, attack

க. ஒய்; பட. ஊய்.

*[உல் → ஒல் → ஒய்.]*

**ஒய்[5]** *oy*, இடை. (int) *யானையைப் பாகர் வையும் குறிப்பு மொழி* (சிலப்.15,48,உரை.); hey! onom expr. used by mahouts to frighten an elephant. (செ.அக.).

*[உய் → ஒய்.]*

**ஒய்யல்** *oyyal*, பெ. (n.) 1. *செலுத்துகை* (பிங்.); forwarding 2. *கொடுக்கை;* giving. (செ.அக.).

*[உய் → ஒய் → ஒய்யல்.]*

**ஒய்யாரக்காரன்** *oyyāra-k-kāraṉ*, பெ. (n.) *ஆரவார* (ஆடம்பர) *முள்ளவன்;* fop, dandy. (செ.அக.).

க. ஒய்யாரகார; தெ. ஒய்யார காடு.

*[ஒய் → ஒய்யாரம் + காரன்.]*

**ஒய்யாரக்கொண்டை** *oyyāra-k-kondai,* பெ (n) ***அழகாக*** (அலங்காரமாக) ***முடிக்கும் மயிர்முடி;*** tuft of hair gracefully tied up "ஒய்யாரக் கொண்டை யாம் தாழம்பூவாம், உள்ளேயிருக்குமாம் ஈரும் பேனும்" (செ அக )

*[ஒய்யாரம் + கொண்டை.]*

**ஒய்யாரநடை** *oyyāra-nadai,* பெ (n.) 1 ***அழகான நடை;*** graceful gait 2 ***பிலுக்கு நடை;*** affected giat (செ.அக )

*[ஒய்யாரம் + நடை.]*

**ஒய்யாரம்** *oyyāram,* பெ. (n) 1. ***மகிழ்வான நிலை;*** gracefulness of movement, elegant bearing "ஒய்யாரமாக நடந்து" (குற்றா குற 16,3) 2 ***ஆரவாரம்*** (ஆடம்பரம் ) (வின் ). affection, foppery (செ அக )

**ம.** ஒய்யாரம், **க.** ஒய்யார; **து.** ஒய்யார, **தெ.** ஒய்யாரமு, *Skt* upacāra.

*[ஒய் → ஒய்யாரம்.]*

**ஒய்யென**[1] *oy-y-ena,* கு.வி.எ. (adv.) ***விரைவாக;*** quickly "ஒய்யென வாங்கே யெடுத்தனன்" (கலித்.37) (செ.அக.)

*[ஒய் + என.]*

**ஒய்யென**[2] *oy-y-ena,* கு.வி எ. (adv ) ***மெல்ல;*** slowly (செ அக.).

**குரு.** அயா.

*[ஒய் + என.]*

**ஒயில்** *oyil* பெ. (n.) 1 ***ஒய்யாரம்;*** grace of form, posture or movement "பிலுக்கிலே செய்யும் ஒயிலாலே" (திருப்பு 158) 2 ***ஒருவகைக் கூத்து*** (இ வ ), dancing of persons on festival occasions by moving round and round in a circle to the accompaniment of a song, bowing to the ground and waving little towels or handkerchiefs (செ அக )

**தெ.** கொயலு, ஒயயாரமு; **க.** ஒய்யார

*[ஒய் + இல் - ஒயில் (வளைந்தாடும் ஆட்டம்).]*

**ஒயில்வண்டி** *oyil-vandi,* பெ (n) ***மகிழ்வான பயணத் திற்கேற்ற வண்டி;*** carriage for a pleasant outing "சரீர முறுநோய்போம் . ஒயில் வண்டி யேறுவார்க்கென் றோர்" (பதார்த்த.1455) (செ.அக ).

**தெ.** கொயலு பண்டி

*[ஒயில் + வண்டி ]*

**ஒயிற்கும்மி** *oyir-kummi,* பெ. (n) 1 ***ஒயிலாட்டத்துப் பாடும் பாட்டு:*** song sung in oyil. முருகர் ஒயிற்கும்மி 2. ***ஒயில்***[2] பார்க்க; see *oyil*[2] (செ அக.).

*[ஒயில் + கும்மி.]*

**ஒயின்மரம்** *oyinmaram,* பெ (n) ***தொழுமரம்;*** pillory, stacks ஒயின்மரத்திலே மாட்டினான் (வின்.). (செ அக )

*[உய் → ஒய் + இன் ஒயின் + மரம் ஒயின்மரம் ]*

**ஒரட்டுக்கை** *orattu-k-kai,* பெ (n) ***இடக்கை*** (இ வ.); left hand

*[உரட்டு → ஒரட்டு + கை ]*

**ஒரணை** *oranai,* பெ (n) ***இரட்டை;*** pair. "திருக்கைக் காறை ஒரணை" (SII ii,226) (செ அக )

*[ஓர் + இணை - ஓரிணை → ஒரணை ]*

**ஒராங்கு** *orāngu,* கு வி எ. (adv ) ***ஓராங்கு*** பார்க்க, see *ōrāngu* "மாந்த ரொராங்குக் கைசுமந்தலறும் பூசல்" (பதிற்றுப் 31,2) (செ அக )

**ஒரால்** *orāl,* பெ. (n) ***நீங்குகை;*** withdrawing, receding "வேந்தர் தாரழிந் தொராலின்" (பதிற்றுப் 23,17) (செ அக ).

*[ஒருவு → ஒருவல் → ஒரால் ]*

**ஒரானொரு** *orān-oru,* கு பெ எ (adj ) ***ஏதோ ஒன்று;*** a certain, some one at some point "ஒரா னொருநாளில்" (குருபரம்.217,பன்னீ ) (செ அக ).

*[ஓர் → ஒரான் → ஒரானொரு ]*

**ஒரி-த்தல்** *ori-,* 4 செ கு வி (v i ) ***ஒற்றுமையாயிருத்தல்*** (யாழ் அக.); to be united, in harmony (செ.அக )

*[ஓர் → ஒரி → ஒரி-த்தல் (வே க 106) ]*

**ஒரு**[1] *oru,* கு.பெ எ (adj ) ***ஒன்று என்பதன் பெயரெச்சம்;*** a or an, one, unique; special. ஒரு மகன். (செ.அக )

**ம.** ஒரு. **க.** ஒர், ஓர், **கோத.** ஒர், **துட.** வீர், **குட.** ஒரி, ஓ; **து.** ஒ, ஒரு, **தெ.** ஒகட்டி, ஒண்டு, **கோண்.** ஓர், **கொன்.** ஓர், **கூ.** ரோ, **குவி.** ரோ, **குரு.** ஓர், **மால்.** ஓர், **பிரா.** அசி

*[ஒன்று → ஓர் → ஒரு ]*

**ஒரு**[2] *oru,* கு.பெ.எ. (adj ) ***ஒப்பற்ற, சிறந்த;*** excellent

*[ஒன்று → ஓர் → ஒருவு → ஒரு (ஒன்றே தனித்துச் சிறப்படைதல்).]*

**ஒரு**[3] *oru,* பெ. (n.) ***செம்மறி*** (பிங்.); sheep

*[உரு → ஒரு = செம்மறி (கொ வ ).]*

**ஒருக்க** *orukka,* கு.வி.எ. (adv ) 1 ***எப்பொழுதும்;*** ever, always "காமமொருக்க வொருதன்மை நிற்குமோ" (பரிபா 6,72) 2 ***ஒவ்வொன்றுக்கும்;*** for each வாக்குமூலத்துக்கு ஒருக்க ஓர் அடி அவனுக்குக் கொடுத்தான் (இ.வ ) 3. ***ஒருமுறை, ஒன்றுபோல்;*** once, like one (செ.அக.).

*[ஒருக்கு → ஒருக்க ]*

**ஒருக்கடி-த்தல்** *orukkadi-*, 4 செ.கு.வி. (vi) ***ஒருக்களி-த்தல்*** பார்க்க; see *orukkali-* ''ஒருக்கடித்தென்ன வொண்ணாதே'' (திவ்.அமலனாதி.7,வ்யா பக்.86) (செ.அக )

*[ஒருக்களி → ஒருக்கடி ]*

**ஒருக்கடு-த்தல்** *orukkadu-*, 4.செ குன்றாவி. (vt) ***சமமாக நினைத்தல்;*** to make no distinction, to consider equally ''திருக்கடித் தானமு மென்னுடைச் சிந்தையும், ஒருக்கடுத்து'' (திவ் திருவாய் 8,6,2). (செ.அக.).

*[ஒருக்கு + அடு ]*

**ஒருக்கணி[1]-த்தல்** *oru-k-kani-*, 4 செ கு வி (vi) ***ஒரு பக்கமாய்ச் சாய்தல்;*** to lie on one side ''ஒருக்கணித்தோ மல்லாந்தோ கண் வளர்ந்தருளுகிறது'' (திவ். திருமாலை,23,வ்யா 81)

*[ஒருக்களி → ஒருக்கணி.]*

**ஒருக்கணி[2]-த்தல்** *orukkani-*, 4.செ.குன்றாவி. (vt) ***ஒருச்சரித்தல்;*** to shut partially, to set slantingly; to put sidewise, to leave ajar, as a door. கதவை ஒருக்கணி (யாழ்ப் ). (செ அக.)

*[ஒருக்களி → ஒருக்கணி ]*

**ஒருக்கணிப்பு** *orukkanippu*, பெ. (n) ***ஒரு பக்கமாய்ச் சாய்கை*** (யாழ்ப் ); lying or leaning on one side (J) (செ அக.)

*[ஒருக்களி → ஒருக்கணி → ஒருக்கணிப்பு ]*

**ஒருக்கம்** *orukkam*, பெ (n) 1. ***மனவொடுக்கம்;*** concentration of mind ''மனத்தை யொருக்கு மொருக்கத் தினுள்ளே'' (பதினொ திருவி மும்.24). 2. ***ஒரு தன்மை;*** oneness, sameness ''ஒருக்கப் பெயரானுரைக்கப்படும்'' (காரிகை.ஒழிபி 6) (செ அக.).

ம. ஒருக்கம்

*[ஒருக்கு → ஒருக்கம் (வே க.106) ]*

**ஒருக்கல்[1]** *orukkal*, பெ. (n) ***ஓர் அமங்கலப்பண்*** (ஓர் அபசுரம் ) (திருவாலவா.57,26); dirge, defective note in music (செ அக )

*[உருக்கல் → ஒருக்கல்.]*

**ஒருக்கல்[2]** *orukkal*, பெ (n) ***அணியமாதல்;*** preparation, getting ready (சேரநா ).

ம. ஒருக்கல்

*[ஒருக்கு → ஒருக்கல்.]*

**ஒருக்களி-த்தல்** *orukkali-*, 4 செ.கு.வி. (v.i.) ***ஒரு பக்கம் சாய்தல்;*** to lie on one side, to lean on one side. (செ.அக.).

*[ஒருக்கு + உளி - ஒருக்குளி → ஒருக்களி.]*

**ஒருக்கால்** *oru-k-kāl*, வி எ. (adv) ***ஒருகால்*** பார்க்க; see *orukāl* ''ஒருக்காலழிதோன்றியும்'' (பாரத.பதின் மூன் 111) (செ அக ).

*[ஒருகால் + ஒருக்கால்.]*

**ஒருக்காளி** *oru-k-kāli*, பெ. (n) ***ஒரே கொட்டையுடைய பனம்பழம்;*** palmyra fruit having a single seed (Tinn.) (செ.அக.).

*[ஒரு + காழி - ஒருக்காழி → ஒருக்காளி. காழ் = கொட்டை. காழி = கொட்டையுடையது.]*

**ஒருக்கு-தல்** *orukku-*, 7 செ.கு.வி (vi) 1. ***ஒன்று சேர்த்தல்;*** to bring together; to gather. ஒருக்கின பண்டங்களைக் கொண்டு போகின்றமை (சீவக.60, உரை ) 2 ***அடக்குதல்;*** to subdue, control ''மனத்தை யொருக்கு மொருக்கத்தினுள்ளே'' (பதினொ.திருவிடை. மும்.24) 3. ***அழித்தல்;*** to kill, slay. ''இன்றொருக்கினே னித்தனை வீரரை'' (கம்பரா பிரமா.195) (செ.அக.).

ம. ஒருக்குக

*[ஒரு → ஒருக்கு → ஒருக்கு-தல் (வே.க.106).]*

**ஒருக்குத்து** *orukkuttu*, பெ. (n) ***ஒருபக்கத் தலைவலி, ஒற்றைத் தலைவலி;*** headache on one side, migraine.

ம. ஒரிச்செனி, ஒரிச்சென்னி .

*[ஒருக்கு + குத்து - ஒருக்குக்குத்து → ஒருக்குத்து.]*

**ஒருகட்பகுவாய்** *oru-kat-pagu-vāy*, பெ (n.) ***பறை வகை*** (பிங்.); a kind of drum with one large face for beating (செ.அக.).

*[ஒரு + கண் + பகு + வாய்.]*

**ஒருகட்பறை** *oru-kat-parai*, பெ. (n.) ***ஒருகட்பகுவாய்*** பார்க்க (பிங்.); see oru-kat-pagu-vāy (செ.அக.).

*[ஒரு + கண் + பறை.]*

**ஒருகணக்கு** *oru-kanakku*, பெ. (n) 1. ***ஒரே முறை;*** uniform manner ஒரு கணக்காய் நடந்து வருகிறது. 2. ***நாட்டுக்கோட்டைச் செட்டிமார் செய்யும் மூன்று ஆண்டுத் தொலை நாட்டு வாணிகம்*** (இ.வ.); a triennial trade carried on in a foreign country by an agent of a Nāttukkōttai Chetti. (செ.அக.).

*[ஒரு + கணக்கு.]*

**ஒருகணை** *orukanai*, பெ. (n) ***ஒப்பற்ற அம்பு.*** (சங். இலக் சொற் ), unique arrow

*[ஒரு + கணை.]*

**ஒருகால்** *oru-kāl*, வி எ (adv.) 1. ***ஒருமுறை.*** (திருவாலவா.நூல்வர.3); once 2. ***ஒருவேளை;*** perhaps ஒருகால் அது நடக்கலாம். 3. ***சிலவேளை;*** some times ''ஒரு காலுமையாளொர் பாகனுமாம்'' (தேவா.405,1) ''பொருளற்றார் பூப்பர் ஒருகால்'' (குறள்.248).

ம. ஒரிக்கல்; க. ஒர்ம்மெ, ஒம்மெ; குட. ஒம்ம; து. ஒம்மமெ, ஒர; பர். ஒபொட்.

*[ஒரு + கால். கால் = பொழுது, முறை.]*

**ஒருகாலில்நில்(ற்)-த(ற)ல்** *orukālil-nil-*, 14 செ கு வி (vi) ***உறுதியாயிருத்தல்;*** to be firmly resolved, to be unflinching, a simile from an ascetic standing resolutely as one leg while doing penance. அதை முடிக்க ஒரு காலில் நிற்கிறான் (செ அக )

*[ஒரு + கால் + இல் + நில்.]*

**ஒருகாலும்** *oru-kāl-um*, கு வி எ (adv) ***எந்தக் காலத்திலும்;*** at any time whatsoever, used with a negative, never. ஒருகாலும் நடவாது (செ அக.).

*[ஒரு + கால் + உம்]*

**ஒருகாலே** *oru-kāl-ē*, கு வி எ. (adv) ***ஒரேமுறையில்;*** at once, at one stroke ஒருகாலேயெல்லாம் வாங்குக (செ அக )

*[ஒரு + கால் + ஏ]*

**ஒருகிடை** *oru-kiḍai*, பெ. (n) 1 ***கிடந்தகிடை;*** being bedridden, state of being unable to move from bed 2. ***ஒருபக்கமாய்ச் சாய்ந்து படுக்கை;*** lying on one side ஒருகிடையாய்ப் படுத்துக் கிடக்கிறான். (செ.அக.).

*[ஒரு + கிடை ஒரு = ஒருபக்கம்]*

**ஒருகுடி** *oru-kuḍi*, பெ. (n) ***பங்காளி*** (யாழ் அக.); agnate (செ.அக ).

*[ஒரு + குடி]*

**ஒருகுழையவன்** *oru-kuḻaiyavaṉ*, பெ. (n) ***பலராமன்;*** Balarāma, who wore a ring in only one of his ears "ஒருகுழையவன் மார்பிலொண்டார்போ லொளிமிக" (கலித் 105,11) (செ அக.).

*[ஒரு + குழை + அவன்.]*

**ஒருகுழையொருவன்** *orukuḻaiyoruvaṉ*, பெ. (n.) ***ஒரு குழையவன்*** (பரி.1.5) பார்க்க; see *orukuḻaiyavaṉ*

*[ஒரு + குழை + ஒருவன்]*

**ஒருகுறி** *oru-kuṟi*, கு வி எ (adv) ***ஒருமுறை;*** once "ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்" (நன்.42) (செ அக )

*[ஒரு + குறி.]*

**ஒருகூட்டு** *oru-kūṭṭu*, பெ. (n) ***ஒருசேர்க்கை;*** close union, compact (செ.அக.).

*[ஒரு + கூட்டு]*

**ஒருகை[1]** *orukai*, பெ. (n) 1. ***கட்சியின் இணக்கம்;*** united party 2 ***ஒருகட்சி;*** clique. (செ.அக.).

*[ஒரு + கை - ஒருகை.]*

**ஒருகை[2]** *orukai*, பெ. (n) ***ஒரு ஆள்;*** one person ஆட்டத்திற்கு ஒரு கை குறைகிறது (உ வ )

*[ஒரு + கை - ஒருகை. 'கை' - சினையாகுபெயராய் ஆளைக் குறித்தது.]*

**ஒருகைபரிமாறு-தல்** *oru-kai-parimāṟu-*, 5.செ கு.வி. (vi) 1 ***விருந்தினர் வரிசையில் ஒருபுறமாகப் பரிமாறுதல்;*** to serve food in one of two opposite rows at dinners 2 ***ஒருமுறை பரிமாறுதல்*** (வின் ), to deal out one course at a feast (செ அக ).

*[ஒரு + கை + பரிமாறு]*

**ஒருகைபார்-த்தல்** *oru-kai-pār-*, 4.செ கு.வி (vi) ***வெல்லமுயலுதல்;*** to make a determined effort to win "உனக்காச்செனக காசசெனறொரு கை பாராமல்" (இராமநா யுத்த 2) (செ அக )

*[ஒரு + கை + பார்.]*

**ஒருகையாயிரு-த்தல்** *oru-kai-y-āy-iru-*, 3.செ கு.வி. (vi) ***எதிர்க்கட்சிக்குப் பகையாக ஒற்றுமையாயிருத்தல்;*** to join hands as against a common enemy (செ அக )

*[ஒரு + கை + ஆய் + இரு]*

**ஒருகைவிளையாடு-தல்** *oru-kai viḷaiyāḍu-*, செ.கு வி. (vi) ***எல்லாருக்கும் ஒருமுறைவர ஆடுதல்*** (வின் ); to play one round of a game

*[ஒரு + அக + விளையாடு]*

**ஒருகோலுடையார்** *oru-kōl-uḍaiyār*, பெ (n) ***ஒருகோலுடைய துறவிகள்*** (ஏகதண்டி சந்நியாசிகள் ) (தொல். பொருள் 625,உரை ), a class of Brahman ascetics holding a single staff in hand (செ அக ).

*[ஒரு + கோல் + உடையார்.]*

**ஒருங்கணையாக** *oruṅganaiyāga*, வி எ (adv) ***ஒரே நேரத்தில், அதே நேரத்தில்;*** simultaneously

*[ஒருங்கு + அணையாக]*

**ஒருங்கவிடு-தல்** *orunga-viḍu-*, 18 செ.குன்றாவி (vt) ***பலவற்றை ஒன்றுசேர்த்தல்;*** to bring together, unite "அவற்றை யொருங்கவிட்டு" (திவ் திருநெடுந். 17,வ்யா 134) (செ அக )

*[ஒருங்கு → ஒருங்க + விடு]*

**ஒருங்கியலணி** *oruṅgiyal-aṇi*, பெ. (n) ***புணர்நிலையணி.*** (வீரசோ அல 13), (Rhet) figure of speech connecting different ideas together (செ அக ).

*[ஒருங்கு + இயல் + அணி]*

**ஒருங்கு[1]-தல்** *oruṅgu-*, 7 செ கு வி (vi) 1. ***ஒருபடியாதல்;*** to be concentrated, to have a singleness of aim of purpose "நினதா ளொருங்கப்பிடித்து" (திவ்.திருவாய் 5,8,8) 2 ***ஒன்றுகூடுதல்;*** to join together. "மருத்து மிரும்புனற்கிறை வருமாகிச் செவ்விதி னொருங்கி" (கந்தபு சூரனரசிரு.11) 3. ***ஒடுங்குதல்;*** to sink, decline, to become reduced "உரமொருங்கி

யது... வாலியது மார்பு'' (கம்பரா.யுத்த.மந்தி 90). 4. ***அழிதல்;*** to be ruined, to perish. ''நமரெல்லோரு மொருங்கினர்'' (பிரபோத 38,1).

க. ஒர்கூடு, ம. ஒருங்நு

*[ஒல் → ஒருங்கு → ஒருங்குதல். ஒடுங்கு → ஒருங்கு = அழிதல்.]*

**ஒருங்கு²** *orungu,* கு வி எ (adv) 1 ***முழுதும்;*** altogether. ''தூணிப்பதக்கென் றொருங் கொப்பக் கொண்டானாம்'' (நாலடி 387) 2 ***ஒரேகாலத்தில்;*** simultaneously

*[ஒல் → ஒரு → ஒருங்கு.]*

**ஒருங்கு³** *orungu,* பெ. (n.) 1. ***முழுமை*** (திவா.); entirety, totality 2 ***அடக்கம்*** (பிங்.), suppression, restraint (செ அக )

*[ஒல் → ஒரு → ஒருங்கு ]*

**ஒருங்கு⁴** *orungu,* பெ (n.) ***அழிவு*** (யாழ்.அக.); destruction, ruin (செ.அக.).

*[ஒடுங்கு → ஒருங்கு.]*

**ஒருங்கே** *orungē,* வி.எ. (adv.) 1. ***முழுதும்;*** thoroughly, fully. 2 ***ஒருசேர;*** to the fullest extent or measure. ''நம்மே லொருங்கே பிறழ வைத்தார்'' (திவ்.இயற்.திருவி ருத்.45) (செ.அக.).

*[ஒருங்கு + ஏ.]*

**ஒருச்சரி¹-தல்** *oru-c-cari,* 4.செ.கு.வி. (vi) ***ஒரு பக்க மாய்ச் சாய்தல்;*** to lean or one side.

*[ஒரு + சரி.]*

**ஒருச்சரி²-த்தல்** *oru-c-cari,* 4.செ.குன்றாவி. (v.t.) ***ஒரு பக்கமாய்ச் சாய்த்தல்;*** to shut partially, as a door. ''கதவை ஒருச்சரித்து'' (ஈடு.10,8,3).

*[ஒரு + சரி ]*

**ஒருச்சாய்-த்தல்** *oru-c-cāy-,* 4.செ.குன்றாவி. (vt) ***ஒருபக்கஞ் சாய்த்தல்;*** to tilt to one side, to shut partially, as a door (செ.அக.).

*[ஒரு + சாய்.]*

**ஒருச்சாய்வு** *oru-c-cāyvu,* பெ. (n) ***ஒருபுறமாகச் சாய்கை;*** leaning on one side. (செ.அக.).

*[ஒரு + சாய்வு.]*

**ஒருசந்தி** *oru-šandi,* பெ. (n) ***ஒரு நாளைக்கு ஒருமுறை மட்டும் உணவு கொள்ளும் நோன்பு;*** vow of taking only one meal in a day. ''நாயறி யாதொருசந்தி'' (தண்டலை 23) (செ.அக.).

மறுவ. ஒருபொழுது

*[ஒரு + சந்தி - ஒருசந்தி. சாந்தி → சந்தி = விழா, நோன்பு.]*

**ஒருசாய்வு** *oru-sāyvu,* பெ (n) 1 ***ஒருதலை, ஓரம்*** (பட்சபாதம் ), leaning to one side, partiality - கு வி எ. (adv ) 1. ***ஒருமிக்க*** (யாழ்ப்.); altogether 2. ***இடைவிடா மல்*** (வின்.); continuously. (செ.அக ).

*[ஒரு + சாய்வு.]*

**ஒருசாயல்** *oru-šāyal,* பெ. (n) ***உருவொப்பு;*** likeness, having the same features, resemblance. இக்குழந்தை தந்தையோ டொருசாயலாக இருக்கிறது. (செ.அக.).

*[ஒரு + சாயல் - ஒருசாயல் = ஒருமித்த வடிவமைப்பு ]*

**ஒருசார்** *oru-šar,* பெ. (n) 1. ***ஒருபக்கம்;*** one side ''ஒருசா ரருவியார்ப்ப'' (புறநா.115,1). 2. ***ஒரு (கட்சி) சார்பு;*** *one party* 3 ***ஒருதலை;*** partiality. (செ.அக.).

*[ஒரு + சார் ]*

**ஒருசார்பு** *oru-šārpu,* பெ. (n) ***ஒருசார்*** பார்க்க; see *oru-sār* (செ.அக.).

**ஒருசாராசிரியர்** *oru-šār-āširiyar,* பெ (n) ***ஆசிரியருள் ஒரு கொள்கையினர்;*** authors or commentators belonging to one particular school of thought. (செ.அக.).

*[ஒரு + சார் + ஆசிரியர்.]*

**ஒருசாரார்** *oru-sārār,* பெ. (n) ***ஒரு பக்கத்தவர்;*** persons on one side; those belonging to one party. ''அஞ்சின ரார்த்தா ரொருசாரார்'' (காரிகை.செய்.6,உரை.). 2. ***சிலர்;*** some (செ.அக.).

*[ஒரு + சாரார்.]*

**ஒருசாலுழு-தல்** *oru-šāl-ulu-,* 1.செ.குன்றாவி. (vt.) ***ஒருமுறை உழுதல்;*** to turn once with the plough. (செ.அக ).

*[ஒரு + சால் + உழு.]*

**ஒருசாலைமாணாக்கர்** *oru-sālai-mānākkar,* பெ. (n.) ***ஒருபள்ளியிற் படித்த மாணாக்கர்*** (தொல்.பொ ருள்.666,உரை.பக்.653); pupils of the same school, schoolmates (செ.அக.).

*[ஒரு + சாலை + மாணாக்கர்.]*

**ஒருசிம்புப்புகையிலை** *oru-šimbu-p-pugai-y-ilai,* பெ. (n) ***புகையிலை நறுக்கு*** (யாழ்ப்.); small bit of tobacco, single leaf of tobacco. (செ.அக.).

*[ஒரு + சிம்பு + புகையிலை.]*

**ஒருசிறிது** *oru-siridu,* பெ. (n.) ***அற்பம்;*** a little. ''உய்த்துணர்ந்திடு நீரரே யொருசிறிதுணர்வார்'' (கந்த பு.சூரனமைச்.129) (செ.அக.).

*[சிறு + து - சிறுது → சிறிது.]*

**ஒருசிறை** *oru-širai,* பெ. (n) 1. ***ஒருபக்கம்;*** one side; ''கோயி லொருசிறைத் தங்கி'' (பொருந 90). 2. ***வேறி டம்*** (பிங் ); separate place. 3. ***ஒரு பகுதி;*** one part or portion. ''இருவர் நூற்குமொருசிறை தொடங்கி'' (நன் 8) (செ அக.).

*[ஒரு + சிறை.]*

**ஒருசிறைநிலை** *oru-śirai-nilai,* பெ (n) ***சொல்லப்பட்ட பொருள் ஒருவழிநிற்கப் பாடலமைந்துள்ள முறை*** (இறை 56,உரை பக்கம் 194), style of verse whose composition follows the sequence of the events narrated (செ.அக )

*[ஒருசிறை + நிலை ]*

**ஒருசீரானவன்** *oru-śir-ānavan,* பெ (n) ***ஒரே தன்மையாக இருப்பவன்*** (வின் ), one who maintains a uniform character, he who has moderation of temper (செ அக )

*[ஒரு + சீர் + ஆனவன் ]*

**ஒருசுடர்** *oruśudar,* பெ. (n) ***கதிரவன்;*** sun

*[ஒரு + சுடர் ஒரு = ஒப்பற்ற, தனித் தன்மை வாய்ந்த ]*

**ஒருசேர** *oru-śēra,* கு வி எ (adv) ***ஒருமிக்க;*** entirely, completely (செ அக )

*[ஒரு + சேர.]*

**ஒருசொல்** *oru-śol,* பெ. (n) 1. ***உறுதிச்சொல்;*** word of assurance. "அவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ" (கம்பரா.குகப் 15) 2. ***பலசொல்லாயிருந்தும் ஒரு சொன்னீர்மைப்பட்டது*** (சீவக 190,உரை ), expression which while consisting of two or more words connotes but a single idea (செ அக ).

*[ஒரு + சொல்.]*

**ஒருசொல்விழுக்காடு** *oru-śol-viḻukkādu,* பெ. (n) ***யாதொரு பொருளுமின்றித் தொடரியத்தில் வழங்கும் சொல்*** (சீவக 1886,உரை.); superfluous, expletive word in a sentance (செ அக.)

*[ஒரு + சொல் + விழுக்காடு. விழுக்காடு = விழுதல், வழங்குதல் ]*

**ஒருசொற்பல்பொருள்** *oru-soṟ-pal-poruḷ,* பெ. (n.) ***ஒரு சொல்லுக்குரிய பல பொருள்கள்*** (பிங்.); different meanings of the same word. (செ.அக.).

*[ஒரு + சொல் + பல் + பொருள்.]*

**ஒருசொன்னீர்மை** *oru-sonnīrmai,* பெ. (n) ***சொற்கள் இணைந்து ஒரு பொருளே தருந்தன்மை*** (புறநா.206, உரை ); nature of the compound word which expressess a single idea (செ அக.).

*[ஒரு + சொல் + நீர்மை.]*

**ஒருஞார்** *oruñār,* பெ. (n.) ***பண்டைக்காலத்து வழங்கிய ஓர் அளவுப் பெயர்*** (தொல் எழுத்.170,உரை.); ancient measure (செ.அக.).

*[ஒரு + ஞார்.]*

**ஒருஞான்று** *oruñāṉṟu,* பெ. (n) ***ஒருநாள்;*** one day. "ஒரு ஞான்று வந்தானை" (கலி.37-14) (சங்.இலக். சொற் ).

*[ஒரு + ஞான்று.]*

**ஒருத்தல்** *oruttal,* பெ (n) ***ஒருசார் விலங்கின் ஆண் பெயர்;*** male of certain animals, viz , புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம் யானை, பன்றி, எருமை (தொல் பொருள் 590,591,592) (செ அக )

*[ஓர் → ஓரி → ஒருத்தல் ]*

**ஒருத்தலை** *oru-t-talai,* பெ (n) ***ஒருபக்கம்;*** one side "ஒருத்தலைப்பாரத் தொருத்தலை பங்குவினூர்தி" (கம்பரா அயோத் மந் 66) (செ.அக )

*[ஒரு + தலை தலை பகுதி, பக்கம் ]*

**ஒருத்தலைநோவு** *oru-t-talai-nōvu,* பெ (n) ***ஒற்றைத் தலைவலி*** பார்க்க; see *oṟṟai-t-talaivali* "ஒருத்தலை நோவா முடம்பு சுரத்தால் வருத்தமாம்" (பணவிடு 248) (செ அக )

*[ஒரு + தலை + நோவு ]*

**ஒருத்தலையிடி** *oru-t-talai-y-idi,* பெ. (n) ***ஒற்றைத் தலைவலி*** பார்க்க, see *oṟṟaittalaivali* (செ அக )

*[ஒரு + தலை + இடி தலை பக்கம், பகுதி ]*

**ஒருத்தலைவலி** *oru-t-talai-vali,* பெ (n) ***ஒற்றைத் தலைவலி*** பார்க்க, see *oṟṟaittalaivali* (செ அக ).

ம. ஒரிசசெனி, ஒருச்சென்னி

*[ஒரு + தலை + வலி தலை பக்கம், பகுதி ]*

**ஒருத்தளி-த்தல்** *oruttaḷi-,* 4 செ கு வி (v i) ***வயலிற் பயிர் முழுவதிலும் கதிர் பரிதல்*** (இ வ ); to shoot simultaneously, as ears of corn in a field (Loc) (செ.அக )

*[ஒரு + தளிர் - ஒருத்தளிர் → ஒருத்தளி.]*

**ஒருத்தன்** *oruttaṉ,* பெ (n) 1 ***ஒருவன்;*** a certain man "வடமொழியிலே வல்லா னொருத்தன் வரவும்" (தாயு சித்தர்.கண.10). 2. ***ஒப்பற்றவன்;*** unique being, incomparable one "ஒருத்தனே புன்னை யோல மிட்டலறி" (திருவாச.29,2) (செ அக )

ம. ஒருத்தன், பட. ஒப்பு; க. ஒப்பு, ஒர்பு; து. ஒரி, ஒரியே; குவி. ருசி, கூ. ரொஅன்சு; குருக். ஓர்த்; மால். ஒர்தெ

*[ஒன்று → ஒள் → ஒரு → ஒருவ → ஒருவன் → ஒருத்தன் = பலரினும் மேம்பட்டு விலகித்தனித்து விளங்குபவன்.]*

**ஒருத்தி** *orutti,* பெ. (n.) ***ஒருபெண்;*** a woman. "ஒருத்திமகனாய்ப் பிறந்து" (திவ்.திருப்பா.25) (செ.அக ).

ம. ஒருத்தி. து. ஒர்தி, தெ. ஒர்தி, குரு. ஒரொத். மால. ஒர்தி; குவி. ஏராந்த, எரொந்தி; க. ஒர்வெ, ஒப்புளு, ஒப்புரகெ.

*[ஒரு → ஒருத்தி.]*

**ஒருத்து** *oruttu,* பெ. (n) ***மனவொருமைப்பாடு;*** concentration of mind. "ஒன்று சொல்லி யொருத்தினி னிற்கிலாத வோரைவர்" (திவ் திருவாய்.7,1,7) (செ.அக.).

*[ஒரு → ஒருத்து (ஒருமிப்பு) (வே.க.106).]*

**ஒருதந்தை யீன்றமகள்** *orudandai-y-inramagaḷ*, பெ (n) ***தந்தையின் மனைவியருள் ஒருத்திக்குப் பிறந்த மகள்;*** daughter of one of the wives of the father "அந்துவற்கு ஒருதந்தை யீன்றமகள் பொறையின் பெருந்தேவி யீன்றமகன்" (பதிற்றுப்.7,பதிக )

*[ஒரு + தந்தை + ஈன்ற + மகள்.]*

பதிற்றுப்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனை அநதுவனுக் குப் பொறையன் பெருந்தேவியீன்ற மகன் எனக குறிப்பிடும் போது. அவன தாயை 'ஒரு தநதை யீன்ற மகள்' எனறு கபிலர் குறிப்பிடுகிறார அநதுவனின மாமனார் ஒரு தந்தை எனப்படு கிறார்

இடையறாப் போர்களால இளைஞர் எணணிலார மடிதலின் மகளிர் எண்ணிக்கை மிகுந்த காலத்தில ஒரு ஆண், பெண்கள் பலரை மணநது கொளளும வழககம வளாநதபோது. மனைவி யர் பலாகரும் பிறநத குழநதைகள ஒரு தாயப்பிளளைகள (உடனவயிறறுப பிறநதோர்) எனக் கூற முடியாத சூழல் உணடானதால ஒருதந்தை மக்கள் என வேறுபடுத்தி அழைக கப்பட்டனர் இது ஐந்திணை மரபாகிய அன்புகெழு தமிழ் மரபுக்குரிய இல்லற வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட பெருந் திணை யொழுக்கம இதனை வடநாட்டுமரபு எனபர் தயரத னுககுப் பட்டத்தரசியா மூவரின் வயிற்றுப பிறந்த இராமன் முதலாயினோர ஒரு தந்தை மக்கள் பாஞ்சாலி பாணடவர்களா கிய கணவர் பலர்க்குப் பெற்ற பிளளைகள் ஒரு தாயீன்ற மக்கள பல்கணவ மணம், பல் மனைவியர் மணம் பெருந்தி ணைககுரிய ஒழுகலாறெனக் கடியப்பட்டவை

பெண்களின கற்டக்குத தெய்வத்தனமை யூட்டிப் பெருமைப்ப டுத்திய தமிழப் பண்பாட்டில் பல்கணவர் மணம் உட்புகமுடிய விலலை ஆதலால் ஒரு தாயீன்ற மக்கள் என்னும் சொல்லாட்சி தோனறவில்லை

**ஒருதமர்க்கலயம்** *orudamar-k-kalayam*, பெ. (n) ***அடியில் ஒரே துளைறையிட்ட மண்குடுவை;*** small earthen pot with a whole at the bottom used in the manufacture of medicated oils (சா அக.).

*[ஒரு + தமர் + கலயம். திவுள் → திவுர் → திமுர் → தமர் = திருகியிடப்பட்ட துளை.]*

**ஒருதரம்** *oru-daram*, பெ (n) 1. ***ஒருதடவை;*** once 2. ***ஒரே முறை*** (யாழ்ப் ), one and the same kind (செ.அக )

*[ஒரு + தடம் - ஒருதடம் → ஒருதரம் தடம் = வழிமுறை, பாங்கு.]*

**ஒருதலை**[1] *orudalai*, பெ. (n) ***ஒரு சார்பு;*** one sidedness. "ஒருதலையா னின்னாது காமம்" (குறள்.1196).

*[ஒரு + தலை. தலை = பக்கம், பகுதி ]*

**ஒருதலை**[2] *orudalai*, பெ (n) ***உறுதி;*** positiveness, certainty, "ஒருதலை யுரிமை வேண்டியும்" (தொல் பொருள்.225) . "பாம்பாற் கோட்படுதல் ஒருதலை" (குறள் 890,பரி.உரைக்குறிப்பு) (செ அக.)

*[ஒரு + தலை. தலை = முடி, முடிவு.]*

**ஒருதலைக்காமம்** *oru-dalai-k-kāmam*, பெ (n) ***ஒருபக்கமான காதல்;*** onesided love, unreciprocated love "கைக்கிளை யுடையதொருதலைக் காமம்" (நம்பிய கப் 3) (செ அக ).

*[ஒருதலை + காமம்.]*

**ஒருதலைக்குழவி** *orudalai-k-kuḻavi*, பெ. (n) ***ஒரு பக்கம் தலைபோல் உருண்டையாயும் மற்றொரு பக்கம் கூர்மையாயும் அமைந்த குழவி;*** stone pestle shaped like a cone having a bulb at one point and a handle at the top (செ அக ).

*[ஒருதலை[1] + குழவி. குழைவி → குழவி = குழையுமாறு அரைக்கப் பயன்படும் ஆட்டுகல்.]*



ஒருதலைககுழவி

**ஒருதலைச்சாயல்** *orudalai-c-cāyal*, பெ. (n) 1. ***ஒருபுறம் கூருள்ள கத்தி;*** one edged knife. 2. ***தலை ஒருபுறமாகச் சாய்ந்திருத்தல்;*** inclination of the head to one side (சா.அக.).

*[ஒருதலை[1] + சாயல். சாள் → (சாண்) → சாய் → சாயல் = கூர்மை ]*

**ஒருதலைதுணிதல்** *oru-dalai-dunidal*, பெ. (n) ***மாறுபாடான இரண்டு கொள்கைகளில் ஒன்றை ஏற்றலாகிய உத்தி*** (நன் 14); (gram ) decision, accepting either of two contrary opinions or views one of 32 utti. (செ.அக.).

*[ஒரு + தலை[1] + துணிதல்.]*

**ஒருதலைநயன்** *oru-dalai-nayan*, பெ. (n.) ***ஒருதலை வழக்கு*** பார்க்க, see *oru-dalai-vaḻakku*. (செ.அக.).

*[ஒருதலை[1] + நயன்.]*

**ஒருதலை நியாயம்** *orudalainiyāyam*, பெ. (n) ***ஒருதலை நயன்*** பார்க்க; see *orudalai nayan*.

**ஒருதலைப்படு-தல்** *oru-dalai-p-paḍu-*, 20.செ.கு.வி. (v.i ) ***ஒரு முடிவு பெறுதல்;*** to come to a conclusion "எத்துணை யுரைப்பினு மொருதலைப்படாது" (இறை.1,7) (செ.அக.).

*[ஒருதலை + படு.]*

**ஒருதலைப்பூண்டு** *orudalai-p-pūndu,* பெ. (n) *ஒரு தலை வெள்ளைப் பூண்டு;* garlic with one clove or bulb (சா.அக.).

*[ஒருதலை[1] + பூண்டு.]*

**ஒருதலையன்** *orudalaiyan,* பெ. (n.) *கொக்கு;* stork (சா அக ).

**ஒருதலையுள்ளுதல்** *oru-dalai-y-ulludal,* பெ (n.) *உளப் பாங்கு* (அவத்தை) *பத்தனுள் ஒன்றாகிய இடைவிடா நினைவு* (நம்பியகப் 36,உரை ); (Akap) constant thought of the lover, a mood in love, one of ten kinds of 'aganilai' (avattai).(செ அக.).

*[ஒரு + தலை + உள்ளுதல்.]*

**ஒருதலை வழக்கு** *oru-dalai-valakku,* பெ (n) *ஒருபக்க மான தீர்ப்பு;* judgement showing partiality, one sided or biased description or statement, leaning to one side or party (செ அக ).

*[ஒருதலை[1] + வழக்கு.]*

**ஒருதன்மை** *oru-danmai,* பெ (n) 1 *ஒரே முறை;* being of one and the same kind 2 *ஒப்பற்ற தன்மை;* incomparableness 3. *மாறாத்தன்மை;* unchangeableness (செ அக.).

*[ஒரு + தன்மை ]*

**ஒருதனி** *oru-dani,* பெ. (n) 1. *ஒப்பில்லாத தனி* (சீவக 280,உரை ), peerlessness, uniqueness 2 *தன்னந்தனி;* quite alone, in absolute solitude "ஒருதனி உழந்தவித்திருத்தகு மாமணி" (சிலம்பு) (செ அக.).

*[ஒரு + தனி ]*

**ஒருதனிநிலை** *orudaninilai,* பெ (n) *போரொரவாரம் மிகுந்த படுகளத்தில் வெள்ளம் தள்ளாதபடி கல்லாற் கட்டினகரையைப் போலப் பெரும் படையை ஒரே வீரன் தடுத்த துணிவுநிலையைப் புலப்படுத்தும் புறத்துறை;* literary theme describing one of the strategies of warfare where a soldier opposing and challenging a big army all alone

*[ஒருதனி + நிலை ஒருதனி = யாருமற்ற தன்னந்தனிமை.]*

தன்படையினர் புறமுதுகிட்டு ஓடுவது கண்டும் தானொருவனே பகைவரை எதிர்த்துப் போரிடும் எருமை மறத்தினும் இது வேறானது.

**ஒருதாரை** *oru-dārai,* பெ. (n) 1. *ஒருமுறை* (ரீதி); one form, one method அந்தநூல் ஒரு தாரையாய் நடந்து வருகிறது (இ.வ.). 2. *ஒரு பக்கக் கூர்மை;* sharp edge on one side 'ஒரு தாரைக் கத்தி' (வின்.) 3 *இடையீடில் லாத நீரொழுக்கு (வின்.);* uninterrupted downpour of water. (Loc.) (இ வ ) (செ அக.)

*[ஒரு + தாரை. தடம் → தரம் → தாரை.]*

**ஒருதாரைக்கத்தி** *orudārai-k-katti,* பெ. (n) *ஒருபுறம் கூருள்ள கத்தி;* a knife sharpened on one edge (சா அக ).

*[ஒரு + தாரை + கத்தி ]*

**ஒருதிறம்** *oru-diram,* பெ (n) *ஒருகூறு;* a part "ஓர்வுற் றொரு திற மொல்காத நேர்கோல்" (கலித் 42,14).

*[ஒரு + திறம்.]*

**ஒருதிறம்பற்று-தல்** *oru-diram-parru-,* 5 செ.கு வி (v.i) *ஒரு பக்கமாக இருத்தல்;* to range oneself on oneside "அறங்கூ றவையத் துரைநூல் கோடி யொருதிறம் பற்றினும்" (சிலப் 5,136) (செ அக ).

*[ஒரு + திறம் + பற்று ]*

**ஒருதிறன்** *oru-diran,* பெ (n) *ஒருபக்கம்;* one side "ஒய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க" (அக.91)

*[ஒரு + (திறம்) திறன் ]*

**ஒருதுட்டெடை** *orudutteḍai,* பெ (n.) *நான்கு காசெடை;* weight equal to 1/3 of an anna or 1/48 of a rupee (சா அக.).

தெ. ஒகதுட்டு

*[ஒரு + துட்டு + எடை ஒருதுட்டெடை ஒரு உருபாய்க்கு 192 விடுகாசுகள் (தம்பிடிகள்) இருந்த காலத்தில் 4 விடுகாசு கள் ஒரு துட்டு எனப்பட்டது ]*

**ஒருதுவலி** *oruduvali,* பெ (n.) *பண்டைக் காலத்து வழங்கிய ஓர் அளவுப் பெயர்* (தொல் எழுத்.170, உரை.). ancient measure (செ.அக ).

*[ஒரு + துவலி ]*

**ஒருநாள்** *oru-nāl,* பெ. (n.) *ஒருநாள்;* one day, once. "ஒரு நாள் உணவை ஒழி என்றால் ஒழியாய்" (நல்வழி).

ம. ஒருந்நாள்.

*[ஒரு + நாள்.]*

**ஒருநாளும்** *oru-nālum,* வி.எ. (adv.) *எப்பொழுதும்;* at any time (used in negative sense)

ம. ஒருநாளும்.

*[ஒரு + நாள் + உம் ]*

**ஒருநாளைக்கொருநாள்** *oru-nālaikkoru-nāl,* வி.எ. (adv ) *நாள் செல்லச் செல்ல;* day by day. (செ.அக.).

*[ஒரு + நாள் + ஐ + கு + ஒரு + நாள்.]*

**ஒருநிலை** *oru-nilai,* பெ. (n) *ஒன்றாகிய நிலை,* (ஐக்கியம்); unity, harmonious state (சேரநா.).

ம. ஒருநில.

**ஒருநிலைப்பொய்கை** *orunilai-p-poygai,* பெ. (n.) *வற்றாத பொய்கை* (பரி.8,15); never drying tank or hand (சங் இலக் சொற்.).

*[ஒரு + நிலை + பொய்கை.]*

**ஒருநிறத்தோற்றம்** *oruniṟattōṟṟam*, பெ. (n) *எல்லா நிறமும் கண்ணுக்கு ஒரே நிறமாகக் காணப் படல்;* colour blindness in which different colours are seen as one.

*[ஒரு + நிறம் + தோற்றம்.]*

**ஒருநினைவு** *oruninaivu*, பெ. (n) 1 *வேறொன்றையும் கருதாது ஒன்றையே சிந்தித்தல்;* condition in which the mind is occupied by one idea to the exclusion of others - hyperprosexia 2 *ஒரே சிந்தை;* (philo.) concentration of mind on one object (சா.அக.).

*[ஒரு[1] + நினைவு]*

**ஒருநெறிப்படு-தல்** *oru-neṟi-p-paḍu-*, 20.செ.கு.வி. (vi) *ஒருவழிப்படுதல்* (தொல் பொருள்.510); to stand together, to be placed together. (செ.அக.)

*[ஒரு + நெறி + படு.]*

**ஒருநேரம்** *oru-nēram*, பெ. (n) 1. *காலமல்லாத காலம், அகாலம்;* unseasonable time இவன் இரவு ஒரு நேரத்தில் என் வீட்டுக்கு வந்தான் (இ வ.). 2 *பாதிப்ப கல்;* half-day இன்றைக்கு ஒரு நேரப்பள்ளி (உ வ.) (செ.அக.).

*[ஒரு + நேரம்.]*

**ஒருப்படு-தல்** *oru-p-paḍu-*, 20 செ.கு.வி. (vi) 1. *ஒரு தன்மையாதல்* (சி.சி 2,5,மறைஞா); to become one, unite, coalesce 2. *ஒத்துக்கொள்ளுதல்* (இறை.1, உரை.7), to consent, agree 3. *ஒருநினைவாதல்* (வின்.), to have the mind fixed on one object, to be abstracted from outward objects (W) 4. *துணிதல்;* to venture, dare. "போக்கொருப்பட்டு நின்று" (தொல்.பொருள்.41, உரை.) 5. *முயலுதல்;* to attempt, try "போகவேணு மென்றொருப்பட" (ஈடு 7,3,ப்ர.). 6. *ஒன்றுகூடுதல்;* to come together "ஆட்பட்டீர் வந்தொருப்படுமின்" (திருவாச.45,1). 7. *தோன்றுதல்;* to appear "ஒளியொ ளியுதயத் தொருப்படுகின்றது" (திருவாச.20,3) (செ.அக.)

*[ஒரு + படு]*

**ஒருப்படுத்து-தல்** *oru-p-paḍuttu-*, 14.செ.குன்றாவி. (vt) 1 *ஒன்று கூட்டுதல்;* to bring together, reconcile 2. *வழிவிடுதல்;* to bid adieu "திருவணுக்கன் திருவாச லளவும் ஒருப்படுத்தி மீள" (ஈடு 7,3,ப்ர.). 3 *முடிவு செய்தல்;* to finish, settle "ஒருப்படுத் தூர்க்கு மீள்வான்" (சீவக 505) 4. *ஏற்றுக்கொள்ளச் செய்தல்;* to bring to an agreement, cause to consent (இறை 6,65). (செ.அக.).

*[ஒரு + படுத்து.]*

**ஒருப்பாடு[1]** *oru-p-pāḍu*, பெ. (n) 1. *முயற்சி;* endeavour, effort "உங்களொருப்பாடு கண்டேனுக்கு" (ஈடு 6.1,8). 2. *உடன்பாடு;* consent "சீரிதென்றொருப் பாடுற்றாள்" (கந்தபு.வள்ளி.163). 3. *ஒருதன்மையாகை;* unanimity, concord "உலகெலா மொருப்பா டொன்றி" (கந்தபு. மேரு 18) 4 *ஒன்றி நிற்கை;* fixing the mind on a single aim, concentration of mind "தன்னுள மொருப்பா டெய்த நிமலனை யுன்னி" (கந்தபு மேரு.32) 5 *மனத் திண்மை;* resoluteness, constant "கலயனார்த மொருப்பாடு கண்ட போதே" (பெரியபு குங்கிலிய.28) (செ.அக.).

*[ஒரு + பாடு. படு → பாடு. (மு.தி.தொ.பெ.).]*

**ஒருப்பாடு[2]** *oruppāḍu*, பெ. (n) 1 *ஒருபக்கம், ஒருபாகத் தில்;* on one side 2 *தாராளம், அதிகம், மிகுதி;* great quantity, excess, ample (சேரநா.).

ம. ஒருபாடு

*[ஒரு + பாடு. பாடு = பக்கம். பகுதி. ஒரு[1], ஒரு[2] பார்க்க; see oru,[1] oru[2]]*

**ஒருப்பார்வை** *oru-p-pārvai*, பெ. (n) *உற்றுப்பார்த்தல், விடாது பார்க்கும் பார்வை* (யாழ்.அக.); intent gaze, attentive look (செ.அக.):

*[ஒரு + பார்வை]*

**ஒருப்பிடி** *oruppiḍi*, பெ (n.) *உறுதிப்பிடி;* firm grasp.

*[ஒரு + பிடி]*

**ஒருப்பு** *oruppu*, பெ. (n) *ஒருவந்தம்* பார்க்க; see *oruvandam*. "ஓதினார்க்குமுணர்வொருப்பாயதே" (நீல கேசி.212) (செ அக.).

*[ஒரு → ஒருப்பு.]*

**ஒருப்புறவன்** *oru-p-puṟavaṉ*, பெ. (n.) *முத்துவகை* (S I I ii,206), a kind of pearl (செ.அக.).

*[ஒரு[2] + புறவன்.]*

**ஒருபக்கவாரம்** *oru-pakka-vāram*, பெ. (n) *ஒருசார்பாகச் செய்தல், ஒருதலையாகச் செய்தல்* (யாழ்.அக.); partiality (செ.அக.).

*[ஒருதலை[1] + வாரம்.]*

**ஒருபடம்** *oru-paḍam*, பெ. (n) *இடுதிரை* (திவா.); curtain. (செ.அக.).

*[ஒருவு + படம் - ஒருவுபடம் → ஒருபடம். ஒருவு = நீங்கு, விலகு. படம் = துணி]*

**ஒருபடி[1]** *oru-paḍi*, பெ. (n.) 1. *ஒருவகை;* a kind 2. *ஒரே முறை;* the same manner "ஒருபடிப்பட்டிருக்கு மவனை" (ஈடு.6,8,4). - வி.எ. (adv) *ஒருவாறு;* tolerably, in some degree, to some extent; with some difficulty (செ.அக.).

ம. ஒருபடி.

*[ஒரு + படி. படி = தன்மை, வகை.]*

**ஒருபடி[2]** *oru-paḍi*, பெ. (n.) *தாராளம், மிகுதி;* plenty, a large quantity, a good many or good deal (சேரநா.).

ம. ஒருபடி.

*[ஒரு[2] + படி.]*

**ஒருபத்து** *orupattu,* பெ. (n.) ***பத்து;*** ten. (சேரநா.).

ம. ஒருபது

*[ஒரு + பத்து.]*

**ஒருபடித்தாய்**[1] *oru-padittāy,* கு.வி.எ. (adv) 1 ***ஒரே முறையாய்;*** in the same way "உள்ளும் புறம்பு மொருபடித்தாய்" (அருட்பா,1,நெஞ்சறி.621) 2 ***இருக்கவேண்டிய நிலைக்குச் சிறிது மாறுதலாய்;*** passably, tolerably எனக்கு உடம்பு ஒரு படித்தாயிருக்கிறது. (செ.அக.).

*[ஒரு + படித்து + ஆய்.]*

**ஒருபடித்தாய்**[2] *oru-padittāy,* கு.வி.எ. (adv) ***முயற்சியாய்*** (யாழ் அக.); with effort (செ அக.)

*[ஒருபடித்து + ஆய் ஒருபடித்து = ஒருசீராய், தொடர்ச்சியாய்.]*

**ஒருபடிப்பட** *oru-padi-p-pada,* கு.வி.எ. (adv) ***இடைவிடாமல்;*** uninterruptedly "ஏழுநாள் ஒருபடிப்பட மலையைச் சுமந்து" (திவ் பெரியாழ்.3,4,4,வ்யா.பக்.602) (செ அக.).

*[ஒரு + படி + பட.]*

**ஒருபது** *oru-padu,* பெ. (n) ***பத்து;*** ten. "தாய்தந்தைக் கொருபதாகு நாளுளதாம்" (கூர்மபு.உத்.22,5) (செ அக).

ம. ஒருபது

*[ஒரு + பத்து - ஒருபத்து → ஒருபது.]*

**ஒருபாட்டம்** *oru-pāttam,* பெ. (n) ***ஒருபாறல் மழை;*** heavy downpour of rain once at a stretch "ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே" (ஈடு,4,5,2) (செ.அக).

*[ஒரு*[1] *+ பாட்டம்.]*

**ஒருபாவொருபஃது** *oru-pā-v-oru-pakdu,* பெ (n.) ***அகவல், வெண்பா, கலித்துறை என்பவற்றுள் ஏதேனும் ஒருபாவிற் பத்துப்பாடல்களால் அமைக்கப் பட்ட ஒரு சிற்றிலக்கியம்;*** minor literature in anyone of the 3 kinds of versification "அகவல் வெண்பாக் கலித்துறை அதுகொண்டு ஒருபா ஒருபஃது உறின்அப் பெயராம்" (இலக் வி 823) (செ.அக.).

*[ஒரு + பா + ஒரு + பஃது.]*

**ஒருபான்** *oru-pān,* பெ. (n) ***ஒருபது*** (தொல்.எழுத்.199, உரை.) பார்க்க; see *orupadu.* (செ அக.)

ம. ஒருபது

*[ஒரு + பான். பத்து → பதின் → பான். ஒ.நோ. இருபதின் → இருபான்.]*

**ஒருபிடி** *oru-pidi,* பெ. (n) 1. ***கைப்பிடியளவு;*** a handful. "முடிவிலொரு பிடிசாம்பராய்" (பட்டினத் திருப்பா.திருத்தில்லை.7) 2. ***உறுதி;*** firm determination, unshakeable resolve. 3. ***விடாப்பற்று;*** firm trust or dependence 4. ***விடாப்பிடி*** (பிடிவாதம்); stubbornness, obstinacy. (செ அக)

*[ஒரு*[1] *+ பிடி]*

**ஒருபுடை** *oru-pudai,* கு பெ எ (adj) ***சற்றொப்ப;*** partial, imperfect, approximate ஒருபுடை யுவமை - கு வி எ (adv) ***ஒருபக்கமாய்;*** to one side "ஒரு புடை பாம்பு கொளினும்" (நாலடி 148) (செ அக)

மறுவ. ஒருமருங்கு, ஒருசார், ஒருபக்கம்; ம. ஒருபாடு

*[ஒரு*[1] *+ புடை]*

**ஒருபுடையுவமை** *oru-pudai-y-uvamai,* பெ (n) ***முழுவதும் ஒப்பாகாமல் சில தன்மைகளில் மாத்திரம் ஒத்திருக்கும் உவமை;*** simile in which comparison applies only partially and not fuly, dist fr முற்றுவமை "ஒருபுடையுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானும்" (சி போ சிற் 1,2,3) (செ அக.)

*[ஒரு*[1] *+ புடை + உவமை]*

**ஒருபுடையொப்புமை** *oru-pudai-y-oppumai,* பெ (n) ***ஒருபுடையுவமை*** பார்க்க; see *orupudaiyuvamai.* (செ.அக.).

*[ஒரு*[1] *+ புடை + ஒப்புமை]*

**ஒரு பூ** *oru-pū,* பெ. (n) ***ஒருவிளைச்சல், ஒருபோகம்*** (S I I ii 114), single crop (செ.அக.)

ம. ஒரு பூ

**ஒருபொருட்கிளவி** *oru-porut-kilavi,* பெ. (n) ***ஒரு பொருள் சுட்டும் பலசொல்*** (தொல் சொல் 1,சேனா.); synonym (செ அக)

*[ஒரு + பொருள் + கிளவி.]*

**ஒருபொருட் பன்மொழி** *oru-porut-pan-moli,* பெ (n) 1. ***ஒரு பொருளைத் தரும் பல சொற்கள்;*** different words connoting the same thing ? ***மீமிசைச் சொல்*** (நன் 398); tautology for greater effect and emphasis (செ அக).

*[ஒரு + பொருள் + பன்மொழி]*

**ஒருபொருண்மொழி** *oru-porun-moli,* பெ. (n) ***செய்யுட் குற்றங்களுள் ஒன்று*** (யாப் வி.525); defect in poetry (செ அக.).

*[ஒரு + பொருள் + மொழி.]*

**ஒருபொருள்** *oru-porul,* பெ. (n) ***கடவுள்*** (வின்.); god, the one reality (செ அக.).

*[ஒரு*[1] *+ பொருள்.]*

**ஒருபொழுது** *oru-poludu,* பெ. (n) 1. ***ஒருவேளை;*** a division of time "ஒருபொழுதும் வாழ்வ தறியார்" (குறள்.). 2. ***ஒருவேளை மட்டும் உணவுகொள்ளும் தெய்வ வழிபாட்டு நோன்பு;*** vow of taking one meal in a day

*[ஒரு*[1] *+ பொழுது. பொழுது = நேரம், வேளை.]*

**ஒருபோக்கன்** *oru-pōkkan*, பெ. (n) ***வேறுபட்ட நடையுள்ளவன்;*** man whose behaviour is of a singular or peculiar nature (செ அக )

*[ஒரு¹ + போக்கு + அன் ]*

**ஒருபோக்காய்ப்போ-தல்** *oru-pōkkāy-p-pō-*, 8.செ கு வி (v.i) ***திரும்பி வாராது போதல்;*** to be gone once and for ever never to return, an expression used in anger or cursing (செ அக )

*[ஒரு + போக்கு + ஆய் + போ-தல் ]*

**ஒரு போக்கு¹** *oru-pōkku*, பெ. (n) 1 ***ஒருவகை;*** one kind 2 ***ஒரே முறை;*** the same manner 3 ***மாறான நடை;*** peculiar, singular conduct அவனுடைய செய்கையெல்லாம் ஒருபோக்கு (உ வ ) (செ.அக.)

ம. ஒருப்போக்கு

*[ஒரு¹ + போக்கு - ஒருபோக்கு = ஒருவகை, முறை. ஒரு² + போக்கு ஒருபோக்கு = மாறான நடை ]*

**ஒருபோகம்** *oru-pōgam*, பெ (n) ***ஆண்டுக்கு ஒரு முறை விளைவு*** (RT), single crop (செ.அக.)

ம. ஒருபூ

*[ஒரு + போகம். பூ → பூகம் → போகம்.]*

**ஒருபோகி** *oru-pōgi*, பெ. (n) ***ஒரே நிகழ்வு;*** the ever constant entity, that which remains the same without variation, as time divested of all phenomena, like day, night, etc "காலத்தையடைய ஒருபோகியாக்கி" (ஈடு.9,3,10) (செ.அக.).

*[ஒரு¹ + போகி. போக்கு → போகு → போகி ]*

**ஒருபோகு** *oru-pōgu*, பெ. (n) 1. ***ஒருபடித்தான நிலம்*** (தொல் பொருள் 460,உரை ); land of uniform character, whether in regard to level or soil content 2. ***ஒத்தாழிசைக் கலி வகையுளொன்று*** (தொல்.பொருள்.451,உரை.); a kind of verification. (செ.அக.).

*[ஒரு¹ + போகு ]*

**ஒருபோது** *oru-pōdu*, பெ. (n.) ***ஒருபொழுது*** பார்க்க; see *oru-poḻudu* (செ அக.).

*[ஒரு¹ + (பொழுது) போது ]*

**ஒருமட்டம்** *oru-maṭṭam*, பெ. (n.) ***ஒருமட்டு*** பார்க்க; see *oru maṭṭu*. (செ.அக.).

*[ஒரு¹ + (மட்டு) மட்டம்.]*

**ஒருமட்டு** *oru-maṭṭu*, பெ. (n.) ***ஒத்த அளவு;*** equality in size or measure - கு.வி.எ. (adv ) ***ஒருவாறு;*** in a way; to some extent. காரியம் ஒருமட்டு முடிந்தது (செ.அக.).

*[ஒரு¹ + மட்டு.]*

**ஒருமடைசெய்-தல்** *oru-maḍai-cey-*, 1.செ குன்றாவி. (v.t ) ***ஒருமுகமாக்குதல்;*** lit, to bring many streams under one sluice, to conceive the various aspects of a thing together பகவதகுணங்களை ஒருமடைசெய்து பூஜிக்கை. (திவ் திருப்பா.12,வ்யா 130) (செ அக.).

*[ஒரு¹ + மடை + செய் ]*

**ஒருமனப்படு-தல்** *oru-maṉa-p-paḍu-*, 20.செ.கு.வி. (v.i ) 1. ***ஒருமன மாதல்;*** to be unanimous 2. ***மனத்தை ஒன்றிலே செலுத்துதல்;*** to concentrate the mind intensely upon an object, to be deeply engaged in the pursuit of one idea (செ அக ).

*[ஒரு + மனம + படு.]*

**ஒருமனப்பாடு** *oru-maṉa-p-pāḍu-*, பெ. (n) 1. ***மனவிணக்கம்;*** unanimity, concord 2 ***மனத்தை ஒன்றிற் செலுத்துகை;*** close or undivided application of mind to an object 3 ***மனவடக்கம்;*** mental restraint (செ.அக ).

*[ஒரு + மனம் + பாடு படு → பாடு.]*

**ஒருமனம்** *oru-maṉam*, பெ (n ) ***வேறொன்றும் நாடாத மனம்;*** mind without variation; unanimity, one mindedness (சா.அக.).

ம. ஒருமனம்.

*[ஒரு + மனம்.]*

**ஒருமா** *oru-mā*, பெ. (n) ***இருபதில் ஒருகூறாகிய பின்னவெண்*** (ப.); fraction 1/20. (செ அக.).

ம. ஒருமா(வு).

*[ஒரு + மா ]*

**ஒருமாதிரி** *oru-mādiri*, பெ. (n.) ***ஒருவகை;*** a kind. - கு பெ.எ. (adj ) ***குணம்வேறுபட்ட;*** singular, peculiar. அவன் ஒரு மாதிரி ஆள் (உ.வ.) (செ.அக.).

*[ஒரு¹ + மாதிரி. மாத்திரி → மாதிரி. மா = அளத்தல், மாத்திரி = அளவு, அளவு வேறுபாடு.]*

**ஒருமாரை** *orumārai*, பெ. (n.) ***ஒருமாவரை*** பார்க்க; see *orumāvarai*.

*[ஒரு + மா + அரை - ஒருமாவரை → ஒருமாரை (மருஉ.).]*

**ஒருமாவரை** *orumāvarai*, பெ. (n) ***ஒருமாவும் அரைமாவுஞ் சேர்ந்த 3/40 என்னும் கீழ்வாயிலக்கம்*** (தொல். எழுத்.171,உரை.); mā and a half 1/20 + 1/40 - 3/40.

*[ஒரு + மா + அரை.]*

**ஒருமி-த்தல்** *orumi-*, 4.செ.கு.வி. (v.i.) ***ஒன்றுசேர்தல்;*** to be in unison, to unite. "காதலிருவர் கருத்தொருமித்து" (பெருந்தொ.221) (செ.அக.).

ம. ஒருமிக்குக; க. ஒம்மு, ஒக்கு; து. ஒம்மெபுனி, ஒக்கூபினி, ஒர்குனி; தெ. ஒம்மு, ஒருமு.

*[ஒருமு → ஒருமி.]*

**ஒருமிக்க** *orumikka,* கு.வி.எ. (adv) *ஒருசேர;* together "மக்க ளொருமிக்கத் தொடர்ந்தும்" (திருப்பு 49) (செ அக.)

*[ஒருமு → ஒருமி → ஒருமிக்க.]*

**ஒருமிடறா-தல்** *oru-midarā-,* 6.செ.கு.வி (vi) 1. *ஒரு குரலாதல்;* to join in one voice "இப்படியெல்லாரும் ஒருமிடறாயேத்தினாலும்" (ஈடு,4,3,10). 2. *ஒரு சிந்தையாதல்;* to be of one mind "நீயென்னோ டொருமிடறான பின்பு" (ஈடு,1,10,4).

*[ஒரு + மிடறு + ஆகு - ஒருமிடறாகு → ஒருமிடறாதல்.]*

**ஒருமிடறு** *oru-midaru,* பெ (n) *ஒருவாய்க்குள் அடங்கும் படி பருகுமளவு;* one draught-of liquid இன்னும் ஒருமிடறு குடி (யாழ்ப்.) (செ.அக.).

*[ஒரு[1] + மிடறு.]*

**ஒருமிப்பு** *orumippu,* பெ. (n) 1. *ஒற்றுமைப்படுகை;* union, harmony 2. *மனத்தை ஒன்றிற் செலுத்துகை;* close or undivided attention to an object "அப்பாலேபோ யொருமிப்பா யிருக்கையில்" (குற்றா குற 103,2) (செ.அக.).

ம. ஒருமிப்பு; குட. ஓர்மெ; து. ஒம்முத; தெ. ஒரிம, ஒரிமிக

*[ஒருமு → ஒருமி → ஒருமிப்பு.]*

**ஒருமுகம்** *oru-mugam,* பெ. (n) 1 *நேர்வழி;* direct route, the same direction ஒருமுகமாய்ப்போ. (உ.வ.). 2. *ஒற்றுமை;* union, harmony ஒருமுகமாய்ப் பேசினார்கள் (உ.வ.). 3. *ஒருகட்சி;* same party. எல்லாரும் ஒருமுக மாயிருந்தார்கள் (வின்.) (செ.அக.).

*[ஒரு[1] + முகம்.]*

**ஒருமுகமாய்ப்பேசு-தல்** *oru-mugamāy-p-pēsu-,* 5.செ.கு.வி. (v.i.) *பலர் ஒரு மனத்தராய்ப் பேசுதல்* (வின்.); to speak with one voice (செ.அக.).

*[ஒரு + முகம் + ஆய் + பேசு.]*

**ஒருமுகவெழினி** *oru-muga-v-eḻini,* பெ. (n.) *ஒருபக்கமாக இழுக்கப்படும் திரைச்சீலை* (சிலப்.3,109); stage screen drawn from one side. (செ.அக.).

*[ஒரு + முகம் + எழினி.]*

**ஒருமுற்றிரட்டை** *oru-murrirattai,* பெ. (n) *ஓரடி முற்றெதுகையாய் வருவது* (யாப்.வி.51); verse in which all the feet in one line have the same edugai. (செ.அக.).

*[ஒரு + முற்று + எதுகை.]*

**ஒருமுறைக் காய்ச்சல்** *oru-murai-k-kāyccal,* பெ. (n.) 1. *நாளொன்றில் ஒருமுறை வருங்காய்ச்சல்;* attack of fever once in a day. 2. *ஒருதடவை காய்ந்து பின்பு நின்றுபோகுங் காய்ச்சல்;* only one attack of fever which never appears afterwards 3. *ஒரே தடவை காய வைத்தல்;* drying only once. 4. *ஒரே தடவை அடுப்பு மேலேற்றிக் காய்ச்சுதல்;* boiling only once or at a stretch, as in the preparation of decoction or medicated oils (சா அக.)

*[ஒரு + முறை + காய்ச்சல்.]*

**ஒருமூச்சாய்** *oru-mūccāy,* கு.வி.எ (adv) *ஒரே தொடர்ச்சியாய்;* with sustained, continuous manner, at one stretch ஒருமூச்சாய் வேலை செய்தான் (செ.அக.).

*[ஒரு + மூச்சு + ஆய்.]*

**ஒருமை** *orumai,* பெ (n) 1 *ஒற்றுமை* (பிங்.); oneness, union 2. *தனிமை;* singleness, loneliness "என்னொருமையுங் கண்டுவத்தி" (கம்பரா.கிளை 30) 3. *ஒரே தன்மை;* unchangeableness 4. *ஒப்பற்ற தன்மை;* peerlessness, uniqueness "உண்மைபிறர்க் கறிவரிய வொருமையானும்" (சிவப்பிர முதற்கு 3,பக்.91). 5. *ஒருமை எண் கூற்று;* singular number "ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல், ஒருமைக்கல்லது எண்ணுமுறை நில்லாது" (தொல் சொல் 44) 6 *மனமொன்றுகை;* concentration of mind "ஒருமையாலுன்னையுள்கி" (தேவா 478,4) 7 *இறையுணர்வு* (பிங்.), knowledge of God 8 *கருத்துரை முடிவு;* decision, determination "கொடுத்து நம் முயிரென வொருமை கூறினான்" (கம்பரா மூலபல.177) 9. *துறக்கம்* (மோட்சம்), final emancipation "எம்மொடா மொருமை யெய்துவான்" (தணிகைப்பு.நந்தியு.17). 10. *மெய்ம்மை;* truthfulness, veracity "ஒருமையே மொழியுநீரார்" (கம்பரா.அயோத்.மந்திர.9). 11. *ஒருபிறப்பு;* one birth in the round of births "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி" (குறள்.398) (செ அக.)

ம. ஒரும; க. ஒரகெ, குட. ஓர்மெ; து. ஒம்முத (சேர்ப்பு), ஒக்கட (ஒருமை); தெ. ஒரிம, ஒரிமிக.

*[ஒரு → ஒருமு → ஒருமை.]*

**ஒருமைப்படு-தல்** *orumai-p-padu-,* 20 செ.கு வி. (vi) 1 *ஒற்றுமைப்படுதல்;* to become united 2 *மனம் ஒருமுகப்படுதல்;* to become concentrated "சாஸ்திரங்களிற் சொல்லுகிறவழியே நெஞ்சு ஒருமைப் பட்டு" (ஈடு.10,4,10). (செ.அக.).

*[ஒருமை + படு.]*

**ஒருமைப்பாடு** *orumai-p-pāḍu,* பெ. (n) 1. *ஒற்றுமைப்படுகை;* being united 2. *ஒருமித்திருக்கை;* combining to become a whole. நாட்டின் ஒருமைப்பாடு. (செ.அக.).

*[ஒருமை + பாடு. படு → பாடு.]*

**ஒருமை பன்மை மயக்கம்** *orumai-panmai-mayakkam,* பெ. (n.) *சொற்றொடரில்* (வாக்கியத்துள்) *ஒருமை பன்மைகள் மயங்கி வழங்குகை* (சீவக.2210,உரை.); use of the singular for the plural, or vice versa, as sanctioned by usage. (செ.அக.).

*[ஒருமை + பன்மை + மயக்கம்.]*

**ஒருமைமகளிர்** *oruma-magalir,* பெ (n) ***பிற ஆடவர் பாற் செல்லாத மனமுடைய மாதர்*** (குறள்.974 உரை); chaste, faithful women (செ.அக).

*[ஒருமை + மகளிர்.]*

**ஒருமொழி** *oru-moli,* பெ (n) 1. ***ஆணை;*** royal command, the authoritative word of a king ஒருமொழி வைத்துல காண்ட சேரலாதற்கு (சிலப் வாழ்த்துக் உரைப்பாட்டு.) 2. ***பல சொற்களாய்ப் பிரிக்க முடியாத சொல்*** (நன் 259), simple word, dist fr (தொடர்மொழி (செ அக) 3. ***ஒரு பொருளையே விளக்கி நிற்குஞ் சொல்*** (ஆ. அக), word which has single meaning

*[ஒரு + மொழி]*

**ஒருலாகை** *orulāgai,* பெ (n) ***ஒருவகை*** (வின்); a kind of, one sort

தெ. லாகு

*[ஒரு + அலகு - ஒரு அலகு → ஒருலாகு → ஒருலாகை (கொ வ.)]*

**ஒருவண்ணம்** *oru-vannam,* கு வி எ (adv) ***ஒருவாறு;*** in some manner, to a certain extent, in some degree. "ஒருவண்ணந் துயர்நீங்கி" (கம்பரா கையடை 12) (செ அக.).

ம. ஒருவண்ணம்

*[ஒரு + வண்ணம்]*

**ஒருவந்தம்**[1] *oru-v-andam,* பெ. (n) 1. ***ஒற்றுமை;*** similarity, agreement 2. ***உறுதி;*** certainty, indubitableness "ஒருவந்த மொல்லைக் கெடும்" (குறள் 563). 3 ***நிலைபேறு;*** firm footing, stability. "ஊக்க மொருவந்தங் கைத்துடையார்" (குறள் 593). 4. ***தொடர்பு*** (வின்.); connection, relation (செ.அக.)

*[ஒரு[1] + அந்தம் அந்துதல் = சேர்தல். ஒருவந்தம் = ஒன்றுபடல், ஒற்றுமை]*

**ஒருவந்தம்**[2] *oru-v-andam,* பெ எ. (adj) 1. ***ஒருசேர;*** all at a time 2. ***முடிவாக, உறுதியாக;*** cetainly, undoubtedly "ஒருவந்தம் ஒல்லைக் கெடும்" (குறள்).

*[ஒரு + அந்தம் - ஒருவந்தம் (பெயரே பெயரெச்சமாயிற்று).]*

**ஒருவந்தம்**[3] *oru-v-andam,* பெ. (n.) ***தனியிடம்*** (சூடா.); lonely place, place of retirement.

*[ஒருவு + அந்தம். ஒருவுதல் = நீங்குதல், தனித்திருத்தல். 'அந்தம்' - பெயரீறு.]*

**ஒருவயிற்றோர்** *oru-vayirrōr,* பெ. (n.) ***உடன்பிறப்பாளர்*** (சகோதரர்); children of the same parents "ஒரு வயிற்றோர் செய்கடனும்" (கந்தபு. சிங்கமு.471) (செ.அக.).

*[ஒரு + வயிறு + ஓர்]*

**ஒருவர்** *oruvar,* பெ. (n) ***உயர்சொற்கிளவி, ஒருவன் அல்லது ஒருத்தியைச் சிறப்பு கருதி உயர்வுப் பன்மையில் வழங்கும் பெயர்*** (நன்.289); a person, male or female indicated in plural as an honorific term. (செ.அக.)

*[ஒரு[1] + அர் - ஒருவர் 'அர்' - உயர்வுப் பன்மையீறு]*

முறைப்படி. 'அா' - பலர் பாலுக்குரிய ஈறு "ஒருவரைக கூறும் பனமைக் கிளவியும் ஒன்றனைக கூறும பனமைக் கிளவியும் வழக்கினாகிய உயர்சொற் கிளவி இலககண மருங்கின சொல் லாறலல" (தொல் சொல் 27) என்று தொல்காபபியா கூறியி ருக்கிறார் ஒருவனைட பலர் பாலாகக கூறுவது பொருளில் வறுமொழியாய் இலக்கண வழுவுடையதாயினும், பலராலும் போறறப்படும் புகழும் பெருமையும பெற்றவனை நன்கு மதிககும நாகரிகம கருதிப பலா பாலுககுரிய 'அா' ஈறு சேர்க்கபபடடது ஒன்று பலவாகவோ ஒருவனைப் பலராகவே மாற்றும பொருட்பாஙகு 'அா' ஈற்றுககு இன்மையின இதனை உயர்வுப பனமையீறு எனப புதிய இலக்கண வகையீடு தந்து வழங்கினா 'அ' - எனனும பலவின் பாலீறும பனமை யீறாதலின் அதனினறும வேறுபடுதத 'அா' உயாவுப் பனமை யீறு எனப்பட்டது **ஒருவர்** எனபதிலுள்ள 'அர்' ஈறு, பலாபா லீறு அனறு எனவும் 'ஒருவன்' எனபதிலுள்ள அன் அா எனத் திரியாது எனவும் அறிதல வேண்டும

**ஒருவழித்தணத்தல்** *oru-vali-t-tanattal,* பெ (n) ***அலரடங்குதற் பொருட்டுத் தலைமகன் சிலநாள் வேற்றிடத்துச் சென்று உறையும் அகத்துறை*** (திருக்கோ 181, அவ), literary theme, in which the lover's temporary absence from the place of his lady - love to avoid all tittle-tittle about him, is depicted (செ அக.) (அபி சிந்)

*[ஒரு + வழி + தணத்தல்.]*

**ஒருவழிப்படு-தல்** *oru-vali-p-padu-,* 20.செ.கு வி (vi) 1 ***ஒருமுகப்படுதல்;*** to concentrate படிப்பில் மனம் ஒருவழிப்பட வேண்டும். (உ.வ). 2. ***ஒன்று படுதல், ஒற்றுமையாதல்;*** to be united மாறுபட்டவரெல்லாம் இப்போது ஒருவழிப்பட்டுவிட்டார்கள். (உ. வ.). (செ.அக.).

*[ஒரு + வழி + படு.]*

**ஒருவழியுறுப்பு** *oru-vali-y-uruppu,* பெ. (n) ***ஒருபகுதி*** (தொல் சொல்.81); portion of the whole (செ அக.).

*[ஒரு + வழி + உறுப்பு.]*

**ஒருவன்** *oruvan,* பெ. (n.) 1. ***ஒருத்தன்;*** person of the male sex, man or demon. "குடிசெய்வ லென்னு மொருவற்கு" (குறள்.1023). 2. ***ஒப்பற்றவன்;*** the incomparable one "ஒருவன் வயமானடித் தேர்வான் போல" (கலித்.37) (செ அக.).

ம. ஒருவன், க. ஒர்பு, ஒப்புனு, ஓர்வன், ஒம்பு; பட. ஒப்பு; குட. ஒப்பெ, து. ஒரி, தெ. ஒருடு, ஒகடு, கோண். ஓர்ன்; கூ. ரொன்அன்சு, குவி. ரோஓசி, ருசி; கொன். ஒரென், நா. ஒக்கொ; கொலா. ஒக்கொன்; பர். ஒகுர்; கட. உகர்; மால். ஓர்னெ.

*[ஒரு[1] + அன் - ஒருவன். ஒரு[2] + அன் - ஒருவன்.]*

**ஒருவாக்காக** *oru-vākkāga,* கு.வி.எ. (adv) 1. ***ஒரு வகையாக;*** in a peculiar way. 2. ***ஒரேபடியாக;*** in the same manner "ஒருவாக்காகப் படுத்துக் கொண்டிருக் கை" (ஈடு.6,8,4,ஜீ). 3. ***ஒரேமுறையில்;*** once for all.

ஒருவாக்காகத் தொலைந்துபோனான் (இ.வ.). 4. *ஒருசேர;* all together, in toto, யாவரும் ஒருவாக்காகப் போய்விட்டார்கள். (செ.அக.).

*[ஒரு + வாக்கு + ஆக.]*

**ஒருவாக்கு** *oru-vākku,* பெ. (n) 1. ***உறுதிமொழி;*** one word, truth, certainty, assurance 2. ***ஒன்றுசேர்ந்து கூறுஞ் சொல்;*** united voice. (செ.அக.).

*[ஒரு[1] + வாக்கு]*

**ஒருவாமை** *oruvāmai,* பெ (n) 1. ***பிறழாமை;*** unchangeableness "ஒருவாமை வைத்தற்கு ஒள்ளியான் ஒருபுலவனால் உரைக்கப்படுவது" (இறை.1,12). 2. ***நீங்காமை;*** stability, invariability, permanence (செ.அக.).

*[ஒருவு + ஆ + மை. ஒருவுதல் = நீங்குதல்; 'ஆ' - எ.ம.இ.நி.]*

**ஒருவாய்கொள்ளல்** *oru-vāy-kollal,* பெ. (n.) ***ஒரு தடவை வாய் கொள்ளுமளவு உட்கொள்ளல்;*** taking one mouthful. (சா.அக.).

*[ஒரு[1] + வாய் + கொள்ளல்]*

**ஒருவாய்க்கோதை** *oru-vāy-k-kōdai,* பெ. (n) ***ஒருகட் பறை;*** drum with one face in the shape of a marakkāl "மரக்காலன்ன வொருவாய்க் கோதை" (கல்லா.8,27) (செ.அக.).

*[ஒரு + வாய் + கோதை.]*

**ஒருவாய்ப்படு-தல்** *oru-vāy-p-padu-,* 20.செ.கு.வி. (v.i) ***ஒருகுரலாகப் பேசப்படுதல்;*** to be spoken of with one voice. (செ.அக.).

*[ஒரு[1] + வாய் + படு]*

**ஒருவாயுணவு** *oru-vāyunavu,* பெ. (n) ***ஒரு கவளம்;*** one morsel of food (சா.அக.).

*[ஒரு[1] + வாய் + உணவு]*

**ஒருவாற்றான்** *oru-v-āṟṟāṉ,* கு.வி.எ. (adv) ***ஒருவாறு 1,2*** பார்க்க, see *oruvāṟu 1,2* (செ.அக.).

*[ஒரு + ஆறு + ஆன் ஆறு = வழி, வகை]*

**ஒருவாறு** *oru-v-āṟu,* கு.வி.எ. (adv) 1. ***ஒருவகையாக;*** in a way; somehow 2. ***ஓரளவாக;*** to a certain extent, in some degree 3. ***ஒருசேர;*** entirely, altogether "ஒருவா றொளியீண்டி நின்றால்" (பழ.201) (செ.அக.).

*[ஒரு[1] + ஆறு - ஒருவாறு. ஆறு = வழி, வகை.]*

**ஒருவி** *oruvi,* பெ. (n) ***ஒருத்தி, ஒருபெண்;*** one woman.

ம. ஒருவி.

*[ஒருவன் → ஒருவி. (இ.வ.).]*

**ஒருவிசை** *oruviśai,* பெ. (n) ***ஒருமுறை;*** once, at one time. (ஆ.அக.).

*[ஒரு[1] + விசை, வீச்சு → வீசு → வீசை → விசை.]*

**ஒருவிதமா-தல்** *oru-vidam-ā-,* 6 செ.கு.வி (v.i) 1. ***புதியவகையாதல்;*** to be peculiar 2. ***வேறுபடுதல்;*** to be of a different kind or attitude "பாங்கி யொருவித மாக நடந்தாள்" (அருட்பா,VI,தலைவி வருந்தல் 12, பக்.645). 3. ***கவனியாமை, மாறுபாடாக இருத்தல்;*** to be indifferent இப்போது அவர் என்னிடம் ஒருவிதமா யிருக்கிறார். (செ.அக.)

*[ஒரு + விதம் + ஆதல்]*

**ஒருவியாழவட்டம்** *oruviyāḻavaṭṭam,* பெ. (n) ***வியாழன் ஞாயிற்றைச் சுற்றி வர ஆகும் 12 ஆண்டுக்காலம்;*** time taken by Jupiter to make one orbit around the sun. (ஆ.அக.).

*[ஒரு[1] + வியாழன் + வட்டம்.]*

**ஒருவு[1]-தல்** *oruvu-,* 5.செ.குன்றாவி. (v.t) 1. ***நீங்குதல், விடுதல்;*** to abandon, renounce "ஒருவுக வொப்பிலார் நட்பு" (குறள் 800) 2. ***கடத்தல்;*** to cross, pass over. "இருவினை வேலை யொருவினைநீ" (திருநூற் 67). 3. ***ஒழிதல்;*** to be expected "வேந்தனி னொரீஇய வேனோர்" (தொல்.பொருள்.32) 4. ***தப்புதல்;*** to escape "பருந்திளேறு குறித்தொரீஇ" (புறநா 43,5) (செ.அக.)

*[உருவு → ஒருவு → ஒருவுதல்.]*

**ஒருவு[2]-தல்** *oruvu,* செ.கு.வி. (v.i.) ***ஒப்பாதல், ஒத்தல்;*** to resemble, equal. (பரிபா.3,32,பி-ம்.) (செ.அக.).

*[ஒல் → ஒரு → ஒருவு]*

**ஒருவு[3]** *oruvu,* பெ. (n.) ***செம்மறியாடு;*** sheep (செ.அக.).

மறுவ. உரு, ஒரு, துரு.

*[உரு → ஒரு → ஒருவு. துரு = செம்மறியாடு.]*

**ஒருவேளை** *oru-vēlai,* கு.வி.எ. (adv) 1. ***ஒருமுறை;*** on one occasion, once 2. ***ஒருகால்;*** perhaps நான் ஒருவேளை அங்கே போகலாம் (செ.அக.).

ம. ஒருவேளை, க. ஒருவேளெ; தெ. ஒக்கவேட, பட. ஒந்துபேளெ.

*[ஒரு[1] + வேளை]*

**ஒருவை** *oruvai,* பெ. (n.) 1. ***செம்மறியாடு;*** sheep. 2. ***ஓர் பூடு;*** a kind of shrub or plant (சா.அக.).

*[உரு → உருவை → ஒருவை. உரு → துரு = செம்மறியாடு. செந்நிறமுள்ள பூண்டும் அப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஒரூஉ[1]-தல்** *orūu-,* 7 செ.கு.வி (v.i) 1 ***நீங்குதல்; விலகுதல்;*** to remove, separate. 2. ***ஓடுதல்;*** to run flee

*[ஒருவு → ஒரூஉ.]*

**ஒரூஉ**[2] *orūu,* பெ (n) 1 ***ஆற்றினின்றும் நீராடும் குளம் அல்லது ஊர்க்குளத்திற்கு நீர் கொணரும் கால்வாய்;*** channel through which water of a river runs through to the tank or swimming pool 2. ***விளைநிலங்களுக்குப் பாயும் ஆற்று வாய்க்கால்;*** water channel brought to village from tank or river to feed the fields 3 ***ஆற்று நீரால் நிரம்பும் குளம்;*** tank fed with river water 4 ***வடிகால், இட்டாலி;*** drain or gutter to drain out sewage water in a town

க. ஒரு. ஓரிமோரி, குச். ஓரியோ.

*[ஒருவு → ஒரூஉ.]*

**ஒரூஉ**[3] *orūu,* பெ. (n.) 1. ***இடைவிட்டிருப்பது, விலகியிருப்பது;*** keeping apart 2 ***உருக்குலைவு, வடிவச் சிதைவு;*** deformation

*[ஒருவு → ஒரூஉ ]*

**ஒரூஉத்தனார்** *orūuttanār,* பெ (n) ***ஒரு தமிழ்ப்புலவர்;*** poet of Sangam age (அபி.சிந்.)

*[ஒரூஉ[2] → ஒரூஉத்தன் + ஆர் - ஒரூஉத்தனார் ஒரூஉ = ஆற்று நீர் பாயும் கால்வாய் ஒரூஉத்தன் = ஆற்றுநீர் பாயும் கால்வாயை மேற்பார்க்கும் பணியாளன், நீர்க்கட்டி. ஒரூஉத்தனார் = ஆற்றுக்கால்வாய்களை மேற்பார்க்கும் பணியிலிருந்த தமிழ்ப்புலவராகலாம் நாடெங்கும் வாழும் சிற்றூர் மக்களிடை இன்றும் நீருகட்டி எனனும் கால்வாய்ப பணியாளர் உள்ளனர் ]*

**ஒரூஉத்தொடை** *orūu-t-todai,* பெ (n) ***அளவடியுள் நடுவிருசீர் களொழிய முதற்சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது*** (இலக் வி 723); alliteration etc in the first foot and the fourth of a line of verse (செ.அக.).

*[ஒரூஉ + தொடை.]*

**ஒரூஉவண்ணம்** *orūu-vannam,* பெ. (n) ***யாற்றொழுக்காகப் பொருள் கொண்டு செல்லும் சந்தம்*** (தொல். பொருள 539), rhythm of verse effected by composing like the flow of a river (செ.அக.).

*[ஒரூஉ + வண்ணம். ஒரூஉ = ஓட்டம்]*

**ஒரூஉவளபெடை** *orūuvalabedai,* பெ. (n) ***முதற்சீர்க் கண்ணு நான்காஞ் சீர்க்கண்ணு மளபெடை பயிலுவது;*** prolongation of vowel in verse (ஆ அக.).

*[ஒரூஉ + அளபெடை. ஒரூஉ = விலகுதல்.]*

**ஒரூஉவியைபு** *orūuviyeibu,* பெ. (n.) ***ஈற்றுச்சீரினும் முதற் சீரினுமியைபு வருவது;*** rhyming at the last line of a verse (எ-டு) "நிழலே இனியத னயலது கடலே" (ஆ அக ).

*[ஒரூஉ + இயைபு ஒரூஉ = விலகுதல்.]*

**ஒரூஉவெதுகை** *orūuvedugai,* பெ. (n.) ***முதற்சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணு மெதுகை வருதல்;*** appearance of 'edukai' in the first and fourth feet of a line in verse (எ-டு) "மின்னவி ரொளிவடந் தாங்கி மன்னிய"

*[ஒரூஉ + எதுகை ]*

**ஒரே** *orē,* கு பெ எ (adj ) ***ஒன்றேயான;*** only, the one அவனுக்கு ஒரேமகன். (உ.வ ). 2. ***மற்றொரு தரத்தில் இல்லாதது;*** the same, not of a different kind (சேரநா.).

ம. ஒரே. க. ஒந்தே. தெ. ஒகே

*[ஒரு + ஏ.]*

**ஒரோவழி** *orō-vali,* கு.வி எ. (adv) ***சிறுபான்மையாய்;*** sometimes in some places, smaller number or part 'யாதானும் ஒரோவழி ஒருசாரார் மாட்டு . நிகழும் ஒழுக்கத்தினை' (தொல்.பொருள்.3,உரை.) (செ.அக.).

*[ஒரு + ஓ + வழி ]*

**ஒரோவொரு** *orōvoru,* பெ. (n) ***ஏதோவொரு;*** something, somebody.

*[ஒரு + ஓ + ஒரு - ஒரோவொரு.]*

**ஒரோவொருவர்** *orō-v-oruvar,* பெ. (n) ***தனித்தனி ஒவ்வொருவர்;*** each person, individual. "ஒரோ வொருவர்க் கொல்காதோ ரொன்று படும்" (சிறு பஞ்.27) (செ அக )

*[ஒரு + ஓ + ஒருவர்.]*

**ஒரோவொன்று** *orō-v-onru,* பெ. (n.) ***ஒவ்வொன்று;*** one in each ஒரோவொன்றே அறமுந் துறக்கமும் பொருளும் பயத்தற் சிறப்பு நோக்கி (தொல்.பொருள்.25, உரை.) (செ.அக.).

*[ஒரு + ஓ + ஒன்று.]*

**ஒல்**[1] *ol,* பெ. (n) 1. ***முன்மை, முதன்மை;*** foremost. 2. ***தொன்மை;*** antiquity

*[உல் → ஒல்.]*

**ஒல்**[2] *ol,* பெ. (n) ***முடிவிடம்*** (திவா.); limit, end. (செ.அக.).

*[உல் → ஒல்.]*

**ஒல்**[3] *ol,* பெ. (n) ***தொல்லை, துன்பம்;*** trouble, affliction.

*[உல் → ஒல்.]*

**ஒல்**[4] *ol,* இடை. (part) 1. ***ஒலிக்குறிப்பு இடைச்சொல்;*** expression of invitative sound 2. ***விரைவு சுட்டும் ஒலிக்குறிப்பு:*** onom expressing speed

*[ஒ → ஒல்.]*

**ஒல்**[5] *ol,* பெ. (n.) ***பொருத்தம்;*** suitability, fitness.

*[உல் → ஒல்.]*

**ஒல்**[6] *ol,* பெ. (n.) ***மெலிவு, தளர்ச்சி;*** thinness.

*[உல் → ஒல்.]*

ஒல்[7] *ol*, பெ. (n.) 1. ***தழைவு, செழிப்பு;*** shooting forth, prosperity 2. ***பொலிவு;*** attractiveness 3.* ***அழகு;*** beauty.

*[உல் → ஒல்.]*

ஒல்கல் *olgal*, பெ. (n.) ***ஒல்கு-தல்*** பார்க்க; see *olgu-*

ஒல்கு[1]-தல் *olgu-*, 7 செ.கு.வி. (v.i.) 1 ***தளர்தல்;*** to grow weak, or faint; to pine, to be disheartened "ஒல்கலுள்ள மொடு" (புறநா.135, 8). 2 ***மெலிதல்;*** to become reduced, thin, slender, to be emaciated "ஒல்கு தேவியை" (கந்தபு காமதகன.61). 3. ***குழைதல்;*** to become soft, mellow "ஒல்குதீம்பண்டம்" (***சீ***வக.62). 4. ***நுடங்குதல்;*** to tremble as from weakness or from being over-burdened, to bend with trembling "ஒல்கு . . நுண்மருங்குல்" (சிறுபாண் 135) 5. ***சுருங்குதல்;*** to shrink, to flinch "ஒழுக்கத்தி னொல்காருரவோர்" (குறள்.136). 6 ***அசைதல்;*** to shake, move "இயலினொல்கினளாடு மடமகள்" (பதிற்றுப்.51,10) 7 ***ஒதுங்குதல்;*** to wave, move to a side "பொன்னலங்கல் காலசைப்ப வொல்கி" (***சீ***வக 595) 8 ***சாய்தல்;*** to incline. "நெடுந்தூ ணொல்கத் தீண்டி" (பட்டினப் 250). 9. ***நடத்தல்;*** to walk, tread "நீலந்தழீஇத் தளர்பொல்கி" (கலித்.115,14). 10 ***வளைதல்;*** to become bent "புள்ளொற்ற வொசிந் தொல்கி" (கலித் 77-5) 11. ***வறுமைப்படுதல்;*** to be impoverished "ஒல்கிடத் துலப்பிலா வுணர்விலார்" (கலித் 25,20) 12. ***மேலேபடுதல்;*** to come in contact "அசைவளி வந்தொல்க" (கலித் 126,12) 13 ***மனமடங்குதல்;*** to be self-controlled. "ஒல்காதார் வாய்விட் டுலம்புப" (நீதிநெறி 72). 14. ***கெடுதல்;*** to be injured, spoilt. "ஒல்கிய வெழில் வேழம்" (கலித்.8,4).

ம. ஒல்குக; தெ. ஒல்லாம் போவு.

*[ஒல் → ஒல்கு.]*

ஒல்கு[2]-தல் *olgu*, 5.செ.குன்றாவி. (v.t.) ***எதிர் கொள்ளுதல்;*** to receive, meet. "ஒல்கி ... மைந்தனைக் கொண்டு புக்கார்" (***சீ***வக.472) (செ.அக.).

*[உல் → ஒல்.]*

ஒல்லட்டை *ollattai*, பெ. (n) ***ஒல்லியானவன்*** (யாழ்ப்.); thin, slender person; one reduced by disease or age (செ.அக).

*[உல் → ஒல் → ஒல்லட்டை. (வே.க.82).]*

ஒல்லல் *ollal*, பெ (n) 1. ***இயலுகை*** (திவா.); being able, possible. 2. ***ஊடல் தீர்க்கை*** (சூடா.); reconciling after a love quarrel. (செ அக.).

ம. ஒல்லல்.

*[ஒல் + அல்.]*

ஒல்லாங்கு *ollāṅgu*, கு.வி.எ. (adv.) ***பொருந்தும் வழியால்;*** appropriately, in the proper way, befittingly. "ஒல்லாங்கியாமிரப்பவும்" (கலித்.3,11). (செ.அக).

*[ஒல் + ஆங்கு.]*

ஒல்லாடி *ollāḍi*, பெ. (n) ***ஒல்லட்டை*** பார்க்க; see *ollattai* (யாழ்ப்.) (செ அக.).

ம. ஒல்லாடி

*[ஒல் + ஆடி.]*

ஒல்லாதவர் *ollādavar*, பெ. (n) ***பகைவர்;*** enemies. "ஒல்லாத வரிற் பொருதே சில வும்பர் வீழ" (கந்தபு. திருவிளை 60) (செ.அக.).

*[ஒல் + ஆ - ஒல்லாத + அவர். 'ஆ' - எ.ம.இ.நி.]*

ஒல்லாமை[1] *ollāmai*, பெ. (n) 1. ***இயலாமை;*** inability. 2 ***இகழ்ச்சி*** (திவா); contempt 3. ***அவாவின்மை*** (திவா), lack of desire (செ.அக.).

*[ஒல் + ஆ + மை - ஒல்லாமை 'ஆ' - எ.ம.இ.நி.]*

ஒல்லாமை[2] *ollāmai*, பெ. (n.) 1. ***பொருந்தாமை;*** unsuitability 2 ***வெறுப்பு;*** disgust, loathsomeness.

*[ஒல் + ஆ + மை - ஒல்லாமை 'ஆ' - எ.ம.இ.நி.]*

ஒல்லார் *ollār*, பெ. (n) ***பகைவர்;*** foes, enemies "ஒல்லார் நாண" (தொல்.பொருள்.76) (செ.அக.).

ம. ஒல்லார்

*[ஒல் → ஒல்லார்.]*

ஒல்லி[1] *olli*, பெ. (n) 1. ***மெலிந்தவன்;*** thin person 2. ***மென்மை;*** thinness, slenderness 3. ***ஒல்லித்தேங்காய்*** (யாழ்ப்.) பார்க்க, see *ollitteṅgāy*. 4. ***துடைப்பம்*** (வின்.), broom (செ.அக.).

ம. ஒல்லி.

*[ஒல் → ஒல்லி.]*

ஒல்லி[2] *olli*, பெ. (n.) ***மேன்மை;*** excellence, eminence

*[ஒல் → ஒல்லி.]*

ஒல்லிக்காய்ச்சி *olli-k-kāycci*, பெ. (n) ***உள்ளீடில்லாத காயுள்ள தென்னை*** (யாழ்ப்.); coconut-palm that yields blighted fruit (செ.அக.).

*[ஒல்லி + காய்ச்சி.]*

ஒல்லிட்டை *ollittai*, பெ. (n.) ***ஒல்லியானவன்;*** slender or thin person.

*[ஒல்லட்டை → ஒல்லிட்டை.]*

ஒல்லித்தேங்காய் *ollitteṅgāy*, பெ. (n.) ***உள்ளீடில்லாத தேங்காய்;*** blighted or empty coconut (ஆ.அக.).

ம. ஒல்லித் தேங்ங.

*[ஒல்லி + தேங்காய்.]*

ஒல்லிநாடி *ollināḍi*, பெ. (n) ***ஒற்றை நாடி;*** thin or slender habit of the body, lank.

*[ஒல்லி + நாடி.]*

**ஒல்லிமேய்-தல்** *olli-mēy-*, 2.செ கு.வி (vi) ***தேங்காயில் உட்பசையறுதல்;*** to be empty, be blighted, as coconuts ஒல்லிமேய்ந்த தேங்காய் (யாழ்ப்.) (செ.அக.).

*[ஒல்லி + மேய்.]*

**ஒல்லியன்** *olliyan*, பெ. (n.) ***மெல்லியவன்;*** thin man (செ அக)

*[ஒல்லி + அன்.]*

**ஒல்லு$^{1}$-தல்** *ollu-*, 8.செ குன்றாவி (vt) 1. ***இயலுதல்;*** to be able, possible, practicable "ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே" (குறள்,673). 2 ***உடன்படுதல்;*** to agree "பாசறை யல்லது நீயொல்லாயே" (புறநா 31,6) 3 ***தகுதல்;*** to be fit, suitable "கங்குற்போதி லீங்கு வந்திடுவ தொல்லாது" (கந்தபு வள்ளியம் 162) 4. ***பொருந்துதல்;*** to combine, unite, join "கானத் தொல்லும் பேரழல்" (கந்தபு ஆற்று 7) 5. ***நிகழ்தல்*** (வின்.); to occur, happen, take place 6 ***ஒத்தல்;*** to resemble. 7 ***நிறைவேற்றல்;*** to effectuate 8 ***பொறுத்தல்;*** to tolerate, endure "ஒல்லுவ சொல்லாது" (பரிபா 12-65)

*[உல் → ஒல]*

**ஒல்லு$^{2}$-தல்** *ollu-*, 8 செ குன்றாவி (vt) 1 ***குத்துதல்;*** to pierce 2 ***ஓலைப்பெட்டி முதலியன பொத்துதல்*** (வின்). to mend, as a net, to braid, as a basket (செ அக)

ம. ஒலலுக. க. ஒல். கோத. லொந். துட. வலொத்; து. ஒல்புனி; தெ. வலசு, கூ. ஒர்ப

*[உல் → ஒல்]*

**ஒல்லுநர்** *olunar*, பெ. (n) ***நண்பர்*** (திவா.); friends; associates (செ அக).

*[ஒல் → ஒல்லுநர்]*

**ஒல்லென** *ol-l-ena*, கு வி எ (adv) 1. ***விரைய;*** quickly "வல்வினை ஒல்லெனவொப்ப" (ஞானா.1,33). 2. ***வெளியாக*** (சீவக 757,உரை), publicly, openly (செ.அக)

*[ஒல் + என, ஒல் - ஒலிக்குறிப்பு.]*

**ஒல்லெனல்** *ol-l-enal*, பெ (n) ***ஒலிக்குறிப்பு;*** onom. sounding by shepherds etc in a certain way. "ஆயரொல்லென வொலிப்ப" (சீவக 438) (செ.அக.).

*[ஒல் + எனல், ஒல் - ஒலிகுறிப்பு]*

**ஒல்லே** *ollē*, கு வி.எ. (adv) ***சுருக்காக, விரைவாக;*** quickly "நங்கை யென்னொ டுரையாய் நனியொல்லே" (சீவக.898) (செ.அக.).

*[ஒல் → ஒல்லே (வே.க.116).]*

**ஒல்லை$^{1}$** *ollai*, கு வி எ. (adv) 1. ***விரைவாக*** (சூடா.); rapidly, quickly 2 ***காலத்தாழ்வின்றி, உடனே;*** promptly "ஒல்லைக்கெடும்" (குறள்,563). 3 ***சுருக்காய்*** (திவா), in a little while (செ.அக).

ம. ஒல்ல

*[ஒல் → ஒல்லை.]*

**ஒல்லை$^{2}$** *ollai*, பெ. (n) ***பழமை;*** antiquity, oldness. "ஒல்லை போற் கருங்காவியென" (இரகு இரகு.3) (செ அக.).

*[உல் → ஒல் - ஒடுங்கற் கருத்துவேர், உள்ளொடுங்குதல் காலத்தால் தொன்மைப் படுதலையும் குறிக்கும். ஒல் → ஒல்லை (பழங்காலம்) ஒ.நோ ஒல் → தொல் → தொன்மை, தொல்லை]*

**ஒல்லை$^{3}$** *ollai*, பெ. (n) ***தொந்தரவு*** (அக.நி.); trouble (செ.அக.)

*[ஒல் - உள்ளொடுங்கற் கருத்துவேர், உள்ளொடுங்கல், வறுமைப்படுதல், இலம்படுதல், துன்புறல். ஒல் → ஒல்லை (துன்பம்).]*

**ஒல்லையூர்** *ollaiyūr*, பெ. (n.) ***கடைக்கழக வள்ளலின் ஊர்;*** a town of Tamil Cheiftain of Sangam age.

*[ஒல்லை + ஊர் - ஒல்லையூர் ஒல்லை = பழமை, தொன்மை.]*

**ஒல்லையூர் கிழான்** *ollaiyūr-kiḻān*, பெ. (n) ***தொடித்தலை விழுத்தண்டினாற் பாடப்பட்ட பெருஞ்சாத்தனின் தந்தை;*** Sangam personage

*[ஒல்லையூர் + கிழான்.]*

**ஒல்லொல்லி** *ololli*, பெ. (n.) ***மிக்க வொல்லி;*** extreme thinness (செ.அக.).

*[ஒல் + ஒல்லி.]*

**ஒல்வழி** *ol-vaḻi*, கு.வி.எ. (adv.) 1. ***பொருந்தியவிடத்து;*** in a suitable place "ஒல்வழி யொற்றிடை மிகுதல்" (தொல்.எழுத்.114). 2. ***பொருந்தியகாலத்தில்;*** at the suitable time. (செ.அக.).

*[ஒல் + வழி.]*

**ஒலி$^{1}$-தல்** *oli-*, 4. செ.கு.வி. (v.i.) ***தழைத்தல்;*** to shoot forth; to be luxuriant, to prosper, thrive. "ஒலிந்த கூந்தல்" (பதிற்றுப்.31,24) (செ.அக.).

*[உல் → ஒல் → ஒலி.]*

**ஒலி$^{2}$-த்தல்** *oli-*, 4.செ.குன்றாவி. (v.t) ***ஒலி$^{1}$*** பார்க்க; see *oli$^{1}$* "கரும்பின் ஒலிக்குந்து" (புறநா.137,6).

*[உல் → ஒல் → ஒலி.]*

**ஒலி$^{3}$-த்தல்** *oli-*, 4.செ.கு.வி. (v.i.) ***ஓசையெழுப்புதல்;*** to sound, as letter; to roar, as the ocean. "ஒலித்தக்கா லென்னாமுவரி" (குறள்,763).

*[ஒல் → ஒலி.]*

**ஒலி⁴-த்தல்** *oli-,* 4 செ குன்றாவி (v.t) 1 ***துப்புரவாக்குதல்;*** to remove, as dirt, to clean ''உதிர்துகளுக்க நின்னாடை யொலிப்ப'' (கலித் 81,31) (செ.அக.)

ம. ஒலி, க. உலி; கோத. ஒச், குட. ஒலி, து. உரி, தெ. உலியு, குரு. ஒலொக்னா (புலம்புதல்), மால். ஒல்கெ (அழு)

*[ஒல் → ஒலி → ஒலித்தல. (வே.க 115)]*

**ஒலி⁵** *oli,* பெ. (n) 1 ***ஓசை*** (திவா.); sound, noise, roar; articulate sound 2 ***இடி*** (பிங்.), thunder, thunderbolt 3 ***காற்று*** (திவா.); wind 4 ***சொல்;*** word, speech ''நின்னுருவமு மொலியு மாகாயத்துள'' (பரிபா. 4,31). 5. ***பிறர்கேட்கச் செபிக்கை*** (சைவச பொது. 151,உரை.); loud or audible recitation of a mantra (செ.அக.).

*[உல → ஒல் → ஒலி (வே.க.116)]*

**ஒலிக்கல்** *olikkal,* பெ. (n) ***பல்;*** tooth as it helps in the pronunciation (சா.அக.).

*[ஒலி + கல்-]*

**ஒலிக்குறிப்பு** *oli-k-kurippu,* பெ. (n) ***குறிப்பிட்ட ஓசையைக் குறிக்கும் சொல்;*** symbol of a sound, as கலகலெனல் (செ.அக.).

*[ஒலி + குறிப்பு]*

**ஒலிசை** *olišai,* பெ. (n.) ***மணமகனுக்கு மணமகள் சுற்றத்தார் திருமணத்தின் நான்காநாளிற் கொடுக்கும் வரிசை*** (வின்.); presents given by the near relations of the bride to the bridegroom on the fourth day of the marriage (செ.அக.).

*[ஒலி → ஒலிசை. (வே.க.116) ஒலி = செழிப்பு, தழைப்பு, மகிழ்ச்சி.]*

**ஒலிப்பு** *olippu,* பெ. (n) 1. ***பெருமொழி;*** sonorousness, roar ''சொன்மறை யொலிப்புடைமுனி'' (இரகு.இரகுவுற்.30) (செ.அக.). 2. ***ஒழுகல், ஒழுக்கு, ஊற்று, சிறிய அருவி;*** leak, flowing, a flow, a small stream or fountain. (சேரநா.).

*[ஒலி → ஒலிப்பு.]*

**ஒலிமுகம்** *oli-mugam,* பெ. (n.) ***ஒலிமுகவாயில்*** பார்க்க (செ.அக.), see *olimugavāyil.*

**ஒலிமுகவாயில்** *oli-muga-vāyil,* பெ (n.) ***நகரம் அல்லது கோயிலின் முன்புறவாயில்*** (விவிலி.2,இரா.7,17); outer gate of a city, fort or temple, where the guard is stationed (செ.அக.)

*[ஒலி + முகம் + வாயில். ஒலி = ஆராய்ச்சிமணி. ஒலிமுகம் = தலைவாயில்.]*

**ஒலியல்¹** *oliyal,* பெ. (n.) 1. ***தழைக்கை;*** luxuriance. ''ஒலியற்கண்ணிப் புலிகடிமாஅல்'' (புறநா.201,15). 2. ***தளிர்*** (புறநா.202,10,உரை.); shoot, sprout. 3. ***மாலை;*** garland of flowers. ''மல்லிகை யொலியல் சூடினார்'' (சீவக.2682). 4. ***வளைவு மாலை;*** chaplet of flowers. ''கண்ணி யொலியன்மாலையொடு பொலியச் சூடி'' (புறநா.76,7) 5 ***ஈயோட்டுங் கருவி;*** fly whisk ''ஒலியலுங் கவரியும் புரள'' (திருவிளை நரிபரி 40) (செ.அக.)

*[ஒலி + அல் - ஒலியல் 'அல்' தொ.பெ.ஈறு]*

**ஒலியல்²** *oliyal,* பெ (n) 1 ***தழை;*** foliage, leafage. 2. ***தோல்*** (பிங்.), skin, hide 3. ***ஆடை*** (பிங்.), cloth, garment

ம. ஒலியல (அரச உடை), தெ. ஒலியு, து. ஒலிலு, ஒல்லி, க. ஒல்லி (சிறுசெடி)

*[ஒல → ஒலி → ஒலியல்]*

**ஒலியல்³** *oliyal,* பெ. (n) 1. ***தெரு*** (பிங்.); street 2. ***ஆறு;*** river. ''அவ்வொலியற் கொப்பாகுவதோ வுவராழியதே'' (கந்தபு காளிந்தி 6) (செ.அக.)

*[ஒல் → ஒலி → ஒலியல்.]*

**ஒலியல்⁴** *oliyal,* பெ (n) 1. ***நோய்*** (அக.நி.); illness. 2. ***தீ*** (யாழ்.அக.), fire. (செ.அக.).

*[உல் → ஒல் → ஒலி → ஒலியல்]*

**ஒலியல்⁵** *oliyal* பெ. (n.) ***கடப்பமாலை*** (பரி.19,97), garland of kadappa flowers (சங்.இலக்.சொற்.).

*[ஒலி → ஒலியல்]*

**ஒலியறிகுழல்** *oliyarikulal,* பெ. (n) ***நெஞ்சத்துடிப்பறியும் கருவி;*** instrument by which the cardiac sounds are heard - stethoscope (சா.அக.).

*[ஒலி + அறி + குழல்.]*

**ஒலியன்¹** *oliyan,* பெ. (n) ***ஆடை*** (கோயிலொ.88); cloth (செ.அக.).

*[ஒலி → ஒலியன்.]*

**ஒலியன்²** *oliyan,* பெ. (n) ***ஒருமொழியில் அமைந்த அடிப்படைத் தனி ஒலி;*** a unit of significant sound in a given language phoneme

*[ஒலி + அன்]*

**ஒலியெழுத்து** *oli-y-eluttu,* பெ. (n) ***ஒலிவடிவான எழுத்து*** (நன் 256,மயிலை.); articulate sound considered as a symbol of a certain state of consciousness. dist fr. வடிவெழுத்து. (செ.அக.).

*[ஒலி + எழுத்து]*

**ஒலியொலியென்றொலி-த்தல்** *oli-y-oli-y-enroli-,* 4.செ.கு.வி. (v.i) ***மிக்கபயன் தருதல்;*** to yield abundantly மரம் ஒலியொலியென் றொலிக்கிறது. (வின்.) (செ.அக.).

*[ஒலி + ஒலி + என்று + ஒலித்தல்.]*

**ஒலிவடிவு** *oli-vadivu,* பெ. (n.) ***எழுத்துக்குள்ள ஒலி வடிவம்,*** (நன்.89,விருத்.); the graphic-configuration of an articulate sound, dist fr. வரிவடிவு. (செ.அக.).

*[ஒலி + வடிவு.]*

**ஒலிவல்ஈந்து** *olival-indu,* பெ. (n.) ***தழைத்த ஈத்தமரம்*** (நற்.2); a kind of tree. (சங்.இலக்.சொற்.).

*[ஒலியல் + ஈந்து.]*

**ஒலிவிதை** *olividai,* பெ. (n) ***ஈரமான நிலத்தில் விதைத்தல்;*** sowing in wet field. (சேரநா.).

ம. ஒலிவித.

*[ஒலி + விதை. ஒலி = நன்கு முளைக்கத்தக்க செழிப்பான ஈர நிலம்.]*

**ஒலுகு** *olugu,* பெ. (n) ***திண்டு*** (இ.வ.); bolster, cushion for the back of a chair (செ.அக.)

*[ஒலி → ஒலு → ஒலுகு.]*

**ஒலுங்கு** *olungu,* பெ. (n) ***பெருங்கொசுகு;*** big mosquito. (செ.அக.)

ம. ஒலுங்கு.

*[உலங்கு → ஒலங்கு → ஒலுங்கு.]*

**ஒலோவு-தல்** *olōvu-,* 7 செ.கு.வி. (v.i) ***குறைவாதல்;*** to be wanting, deficient, lacking "கீறுமுடை கோவண மிலாமையி லொலோவிய தவத்தர்" (தேவா.413,10) (செ.அக.)

*[ஒல் (ஒல்கு) → ஒலவு → ஒலாவு → ஒலோவு.]*

**ஒவ்வாப் பக்கம்** *owā-p-pakkam,* பெ. (n) ***ஏரணத்தில்*** (தருக்கம்) ***பொருந்தாத பக்கம்*** (வின்.); strained or forced comparison, incongruity. (செ.அக.).

*[ஒவ்வு + ஆ + பக்கம்.]*

**ஒவ்வாமை**[1] *owāmai,* பெ. (n) 1. ***ஒப்பாகாமை;*** unlikeness, inequality 2. ***இசையாமை;*** discord, disagreement (செ.அக.). 3. ***தகுதிக்குறைவு*** (ஈனம்); being not equal to. 4. ***உண்மையல்லாமை;*** not true or right, not agreeable

ம. ஒவ்வாத்து.

*[ஒவ்வு + ஆ + மை.]*

**ஒவ்வாமை**[2] *owāmai,* பெ. (n) 1. ***இசையாமை, பொருந்தாமை;*** unsuitablity. 2. ***உடல் நலத்திற் கொவ்வாமை;*** allergy.

*[ஒவ்வு + ஆ + மை.]*

**ஒவ்வான்** *owāṉ,* பெ. (n.) ***ஒப்பாகாதவன்*** (கலி.104); peerless, uncomparable (சங் இலக்.சொற்.).

*[ஒவ்வு + ஆ + ஆன். 'ஆ' - எ ம.இ.நி. (புணர்ந்துகெட்டது).]*

**ஒவ்வு-தல்** *owu-,* 5. செ.கு.வி. (v.i) 1. ***பொருந்துதல்;*** to be congruous, consistent "ஊகமனுபவம் வசனமூன் றுக்கு மொவ்வும்" (தாயு.எங்கு.3). 2. ***ஒத்திருத்தல்;*** to be like; to be similar (செ.அக.).

ம. ஒவ்வு; க. ஒப்பு; கோத. ஒப்; குட. ஒ; து. ஒம்புனி; தெ. ஒவ்வு, ஒப்பு, குரு. ஒக்கனா.

*[உல் → ஒல் → ஒவ் → ஒவ்வு.]*

**ஒவ்வுறு-தல்** *owuṟu-,* 4.செ.கு.வி. (v.i.) ***ஒப்பாதல்;*** to agree; to be like, equal. "இதற்கொவ்வுறாதால்" (பாரத.) (செ.அக.).

ம. ஒவ்வுக.

*[ஒவ்வு + உறு.]*

**ஒவ்வொன்று** *owoṉṟu,* ப.பெ (pron.) 1. ***ஒன்று மேனி;*** one each 2. ***சில;*** one here and there அந்த எண்களில் ஒவ்வொன்று விடப்பட்டிருக்கும் (செ.அக.).

*[ஒன்று + ஒன்று.]*

**ஒவ்வோக்குழி** *owō-k-kuḻi,* பெ. (n.) ***நிலத்திலே விரலால் சிறுவர் எழுதும் அரிக்குழி;*** depression made in the earth by repeatedly tracing with the finger in the same groove the outline of the letter ஓ when children begin to learn the letters of the alphabet "பகவத் விஷயத்தில் ஒவ்வோக்குழியிடாதேயிருக்கிற உங்களுக்கு" (ஈடு,5,6,2) (செ.அக.).

*[ஓ + ஓ + குழி - ஒவ்வோக்குழி எழுதக் கற்பிக்கும் தொடக்கத்தில் ஓம் எழுதிய பின் தமிழ் நெடுங்கணக்கு கற்பிக்கும் வழக்கம் தழுவி ஒவ்வோக்குழி எனப்பட்டது.]*

**ஒவ்வோன்** *owōṉ,* பெ. (n) ***ஒப்பில்லாதவன்;*** one who has no equal. "யாருமொவ்வோன் ... உணர்தலுற் றான்" (பாரத.பதினெட்.111) (செ.அக.).

*[ஒவ்வு + ஆ + ஆன் - ஒவ்வான் → ஒவ்வோன். 'ஆ' -எ ம.இ.நி. (புணர்ந்து கெட்டது).]*

**ஒழி**[1]**-தல்** *oḻi-,* 4 செ.கு.வி (v.i.) 1. ***தீர்தல்;*** to cease, desist, stop, to discontinue, to be finished, ended "பொய்க்கோலஞ் செய்ய வொழியுமே" (நாலடி 43). 2. ***அழிதல்;*** to decline, to become extinct, annihilated "ஒழிந்திடு மனுருபங்கள்" (சி.சி 1,11) 3. ***சாதல்;*** to die, perish. "ஈரைம்பதின்மரும் பொருது களத்தொழிய" (புறநா.2,15). 4. ***வெளிச்செல்லாது தங்குதல்;*** to remain. "அரசர் வாய்மொழி நம்பா லொழிகு வதாயின்" (சிலப்.26,11). 5. ***முடிவாதல்*** (தீர்மானமாதல்); to be settled, decided "தமக்கொழிமரபின் ... நல்லறம்" (மணி.16,110). 6. ***தவிர்தல்;*** to be excepted 7. ***விட்டு நீங்குதல்;*** to leave off, forbear "இற்பிறப்பு நாணு மிடையொழிய" (பு.வெ.7,27). 8. ***வேலைசெய்யாது இருத்தல்;*** to be at leisure ஒழிந்த வேளையில் வா. (உ.வ.). 9. ***வெறுமையாதல்;*** to be empty, unoccupied. இந்த வீடு ஒழிந்திருக்கிறது (உ.வ.) - ஓர் துணை வினை; auxiliary verb. "கெடுத்தொழிந்தனை யென் னையு முன்னையும்" (கம்பரா.இரணியன்.24) (செ.அக.).

ம. ஒழி.

*[ஒல் = உள்ளொடுங்கல், மறைதல், அழிதல். ஒல் → ஒள் → ஒளி → ஒழி.]*

**ஒழி**[2]**-த்தல்** *oḻi-,* 2.செ.குன்றாவி. (v.t.) 1. ***முடித்தல்;*** to bring to an end, finish எல்லாவேலையையும் ஒழித்துக் கொண்டு வா. 2. ***அழித்தல்;*** to ruin, destroy, kill. 3. ***நீக்குதல்;*** to put away, cast off, expel, dismiss, exclude. அவனை வீட்டைவிட்டு ஒழித்தேன். 4. ***தவிர்த்தல்;*** to except, avoid, omit. அதை யொழித்து மற்றெல்லாம் சரி. (உ.வ.). 5. ***வெறுமையாக்கல்;*** to clear out, empty, vacate. பெட்டியை ஒழித்தாயிற்றா? (உ.வ.). 6. ***ஒடுக்கு***

**தல்;** to contain. 7. **துறத்தல்;** to renounce. 8. **குறைத்தல்;** to reduce. 9. **போக்குதல்;** to remove. (செ.அக.).

ம. ஒழிக்குக, க. உழிக, உழிபு, குட. ஒய்.

*[உல் → ஒல் → ஒள் → ஒளி → ஒழி.]*

**ஒழி**[3] *oli*, பெ. (n) **அரிக்கட்டு** (யாழ்.அக.); bundle of corn sheaves (செ.அக.)

*[அரி → அழி → ஒழி]*

**ஒழிகடை** *oli-kadai*, பெ (n) 1. **பெரும்பான்மை முடிந்த நிலை** (வின்.); state of being almost exhausted as stores, almost ended, nearly over. (செ.அக.). 2. **ஈறு;** termination

*[ஒல → ஒல்லு → ஒலு → ஒழு → ஒழி + கடை]*

**ஒழிச்சு-தல்** *oliccu-*, 5 செ குன்றாவி (vt) 1 **போக்குதல்;** to put an end to, to banish, remove "பல்பிறவியை யொழிச்சுவன்" (பதினொ ஆளு திருக்கலம் 35). 2 **வெறுமையாக்கல்** (இ.வ.), to vacate. 3. **அழித்தல்** (இ.வ). to destroy (செ.அக.).

*[ஒழி → ஒழித்து → ஒழிச்சு (கொ.வ.).]*

**ஒழித்துக்காட்டணி** *olittu-k-kāttani*, பெ (n) **ஒருபொருளை ஓரிடத்தில்லையென மறுத்து மற்றோரிடத்துண்டென்று பொருத்திக் காட்டும் அணி** (அணியி 53). (Rhet) figure of speech which consists in denying the existence of a thing in a particular place by showing its existence elsewhere (அபி.சிந) (செ.அக.)

*[ஒழித்து + காட்டு + அணி]*

**ஒழிந்தவேளை** *olinda-vēlai*, பெ (n) **வேலையில்லாத காலம்;** leisure time (செ.அக.).

*[ஒழி → ஒழிந்த + வேளை]*

**ஒழிந்தார்** *olindār*, பெ. (n) **மற்றவர்;** others, the rest "ஒழிந்தாரைப் போற்றி" (நாலடி 49) (செ.அக.).

*[ஒழி → ஒழிந்தார்]*

**ஒழிப்பணி** *olippani*, பெ (n) **ஒன்றன் தன்மையை மறுத்து வேறொன்றன் தன்மையை ஏற்றிக்கூறும் அணி** (தண்டி.73); a figure of speech which denies to an object one of its own attributes and ascribes another which is foreign to it (செ.அக)

*[ஒழிப்பு + அணி]*

**ஒழிப்பு-தல்** *olippu-*, 5 செ குன்றாவி. (vt) **ஒழித்தல்;** to destroy, remove "அவல மொழிப்பியவன் வயிற்றிசையா" (பெருங் இலாவாண.9,229) (செ.அக)

*[ஒழி → ஒழிப்பு]*

**ஒழிப்பு** *olippu*, பெ. (n) **விலக்கு;** exclusion, dismissal, expulsion (செ.அக.).

*[ஒழி → ஒழிப்பு.]*

**ஒழிபியல்** *olipiyal*, பெ. (n.) **நூலின்கண் முன்னியல்களிற் சொல்லா தொழிந்தவற்றைக் கூறுமியல்** (நம்பியகப்.); residuary chapter of a work giving various items of information not mentioned in the several preceding chapters (செ அக)

*[ஒழி → ஒழிபு + இயல்]*

**ஒழிபு** *olibu*, பெ (n) 1 **எச்சம்;** remainder 2 **ஒவ்வொன்றாகத்தள்ளி உரியதைத் தேரும் நெறி, தேர்நெறி;** law of selection by elimination (செ.அக.).

*[ஒழி → ஒழிபு]*

**ஒழிய** *oliya*, கு.வி.எ (adv) **தவிர;** except, save. "பாடியென் . . எந்தை பெம்மானை யொழியவே" (திவ்.திருவாய்.3,9,2). (செ.அக.).

*[ஒழி → ஒழிய]*

**ஒழியாவிளக்கம்** *oliyā-vilakkam*, பெ. (n) **ஒழியாவிளக்கு** பார்க்க, see *oliyāvilakku* "மொழிபெயர் தேத்தோரொழியா விளக்கமும" (சிலப் 6,143) (செ அக)

**ஒழியாவிளக்கு** *oliyā-vilakku*, பெ (n) **விடிவிளக்கு** (சிலப் 6,143.உரை), lamp that burns throughout the night (செ அக)

*[ஒழியாத → ஒழியா + விளக்கு]*

**ஒழியிசை** *oli-y-iśai*, பெ (n) **ஒழிந்த பொருள்தருஞ் சொற்களைத் தருவது** (நன் 423), that which suggests an implied meaning (செ அக).

*[ஒழி + இசை]*

**ஒழியிசையெச்சம்** *oliyiśai-y-eccam-*, பெ (n) **ஒழியிசை** பார்க்க; see *oliyiśai*

*[ஒழி + இசை + எச்சம்]*

**ஒழியிசையெஞ்சணி** *oliyiśai-y-eñjani*, பெ (n) **ஒழியிசை** பார்க்க see *oliyiśai* (ஆ.அக)

*[ஒழி + இசை + எஞ்சு + அணி]*

**ஒழியிசை யேகாரம்** *oliyiśai-y-ēkāram-*, பெ (n) **ஒழிபொருளைக் காட்டும் 'ஏ' காரம். *'ē' which suggest an implied meaning***

*[ஒழியிசை + ஏகாரம்]*

**ஒழிவி-த்தல்** *olivi-*, 4 செ குன்றாவி (vt) **அழிவித்தல்;** to cause to destroy, annihilate 2 **முடித்தல்;** to cause to terminate

*[ஒழி → ஒழிவி (பி வி)]*

**ஒழிவிலொடுக்கம்** *olivil-odukkam*, பெ (n) **கண்ணுடைய வள்ளலார் செய்த ஒரு சிவனிய நூல்;** a Śaiva treatise by Kannudaiyavallalār, about 18th c (செ.அக).

*[ஒழிவு + இல் + ஒடுக்கம் ஒழிவிலொடுக்கம்.]*

**ஒழிவு**[1] *olivu*, பெ (n) 1 **ஒழிகை;** ceasing, forsaking. 2. **முடிவு;** end, termination "ஒழிவில்காலமெல்லா

முடனாய்மன்னி" (திவ்.திருவாய்.3,3,1). 3. *பேரழிவு;* final dissolution of the world "பண்டப்பி லொழிவில்" (வேதா சூ 139). 4. *குறைவு* (வின்.); want, defect, deficiency 5. *தேர்நெறி;* law of selection by elimination 6. *மிச்சம்;* residue தீயினை தொழிவு போலப் பின் வளர்ந்து கெடுக்கும் (குறள் 674 உரை). 7 *ஓய்வு;* leisure எனக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலை யிருக்கி றது (உ. வ) 8 *பற்றின்மை;* non-attachment "பிர விர்த்தி யொழிவோ டபயமச்சம்" (பிரயோத.27,81) (செ அக)

*[ஒழி → ஒழிவு.]*

**ஒழுக்கம்** *oḻukkam,* பெ (n) 1 *நடை;* conduct, behaviour, demeanour நல்லொழுக்கந் தீயொழுக்கங்கள் (உ வ). 2 *நல்லியல்பு, நன்னடை;* good conduct, morality, virtue, decorum. "ஒழுக்க முயிரினு மோம்பப் படும்" (குறள் 131) 3 *வகித்த கடமைகளினின்று வழுவாது நடக்கை;* keeping the rules (குறள் உரைப் பாயிரம்) 4 *உலகத்தோடொட்ட ஒழுகுகை* (சி சி 2,23,சிவஞா), conduct in conformity with the world 5. *செல்லுகை;* going, passing 6 *வழி* (திவா), way, method 7. *உயர்ச்சி* (சூடா), height, elevation 8 *குலம்* (பிங்), caste, tribe, family (செ அக).

*[ஒல்கு → ஒழுகு → ஒழுக்கு → ஒழுக்கம்]*

**ஒழுக்கல்**[1] *oḻukkal,* பெ. (n) 1. *நீர்கசிதல், ஊறுதல்;* leaking, oozing மழையால் வீட்டில் ஒழுக்க லுண்டு 2. *பொருந்துகை;* applicability "ஆயிருபண்பி னொழுக் கல்" (தொல் எழுத் 112) (செ.அக.).

*[ஒழுகு → ஒழுக்கு → ஒழுக்கல்]*

**ஒழுக்கல்**[2] *oḻukkal,* பெ (n) 1 *வரிசையாக வைக்கை;* arranging in a row "ஓங்கிய கல்லுய்த் தொழுக்கல்" (பு வெ 10,11,கொளு) 2 *வார்க்கை;* pouring, as into the mouth "இறுமுயிர்க்கு மாயுண் மருந்தொழுக்க நீதன் றால்" (நீதிநெறி 49) (செ அக)

*[ஒழுகு → ஒழுக்கு → ஒழுக்கல்]*

**ஒழுக்கல்**[3] *oḻukkal,* பெ. (n) *எழுச்சி* (யாழ்.அக.); rising, elevation (செ அக).

*[ஒழுக்கு → ஒழுக்கல்]*

**ஒழுக்கவண்ணம்** *oḻukka-vaṇṇam,* பெ. (n) *ஒழுக்கவ ணக்கம்* பார்க்க, see *oḻukka-vaṇakkam* (ஆ அக)

**ஒழுக்க வணக்கம்** *oḻukka-vaṇakkam,* பெ (n) *நல்லொ ழுக்கம்* (யாழ் அக); good conduct. (செ அக).

*[ஒழுகு → ஒழுக்க + வணக்கம்.]*

**ஒழுக்கவி** *oḻukkavi,* பெ (n) *கோயிலில் நாடோறும் படைக்கும் சமைத்த உணவு* (S I I,150), usual, daily offering of food in a temple (செ அக).

ம. ஒழுக்கவி

*[ஒழுக்கு + அவி]*

**ஒழுக்கறை** *oḻukkaṟai,* பெ. (n.) *உருக்கு* (நாமதீப.); steel. (செ.அக.).

*[ஒழுக்கு + அறை. 'அறை' - பெயரீறு. ஒழுக்கல் = உருக்கிவார்த் தல்.]*

**ஒழுக்கு**[1]**-தல்** *oḻukku-,* 5.செ.குன்றாவி. (v.t.) *மிதந்து போக விடுதல்;* to cause to float along or flow down. பேராற்றிடை மிதவைப் பேழை யினிட்டு ஒழுக்கின இளங்குமரனும் (பாரத.வெண்.195,உரை.) (செ அக.). 2. *புடைத்தல்;* to winnow. 3. *ஊற்றுதல்;* to pour. (சேரநா.)

*[ஒழுகு + ஒழுக்கு.]*

**ஒழுக்கு**[2]**-தல்** *oḻukku-,* 5.செ குன்றாவி. (v t) 1. *வார்த் தல்;* to cause to drop, drip "ஒழுக்க வெண்கணுக் கொருமருந்து" (தேவா 1110,1). 2. *நடப்பித்தல்;* to help to conduct "ஆற்றினொழுக்கி" (குறள்,48) 3. *நீள இழுத்தல்;* to draw out, as gold thread "அச்சிலுறுத்தி யன பொற்கயிறொழுக்கியன போலும்" (இரகு. தேனு 5) (செ அக).

*[ஒழுகு → ஒழுக்கு]*

**ஒழுக்கு**[3] *oḻukku,* பெ. (n) 1 *பொள்ளல் வழியாக நீர் சொட்டுகை;* leaking, dripping, as from a hole or crack 2 *நீரோட்டம்;* flowing "ஆற்றொழுக்கு" (நன்.19) 3 *நடத்தை;* conduct "பொல்லா வொழுக் கும்" (திவ் இயற் திருவிருத்.1) (செ.அக.).

ம. ஒழுக்கு, க. ஒழுகு; து. உக்குனி, தெ. ஒலுக.

*[ஒழுகு → ஒழுக்கு.]*

**ஒழுக்குநீர்ப்பாட்டம்** *oḻukku-nīr-p-pāṭṭam,* பெ. (n.) *ஆற்றுக்காற் பாசனவரி* (கல்வெ); tax on running water that is used for irrigation opp to நிலைநீர்ப்பாட்டம். (செ அக)

*[ஒழுக்கு + நீர் + பாட்டம்.]*

**ஒழுக்குப்பீளை** *oḻukku-p-pīḷai,* பெ. (n) *பீளையைப் பெருக்கும் கண்ணோய் வகை* (தைலவ.தைல 57); blennorrhoea, acuta catarhal opthalmia (செ.அக.).

*[ஒழுக்கு + பீளை.]*

**ஒழுக்குமாற்று-தல்** *oḻukku-māṟu-,* 5.செ.கு.வி. (v.i.) *நீரொழுகும் ஓட்டையை அடைத்தல்* (யாழ்ப்.); to stop a leak (செ அக.).

*[ஒழுக்கு + மாற்று]*

**ஒழுக்குவிழு-தல்** *oḻukku-viḻu-,* 2.செ.கு.வி (v.i.) 1. *பொள்ளல் வழியாக நீர்சொட்டுதல்;* to drop, as water from a leak, to leak 2. *நீர் ஒழுகும் படி பொள்ளலுண்டா தல்;* to become leaky, as a roof (செ.அக.).

*[ஒழுக்கு + விழு]*

**ஒழுக்கெறும்பு** *oḻukkeṟumbu,* பெ. (n.) ***ஒன்றன்பின் னொன்றாய்த் தொடர்ந்து செல்லும் எறும்பு;*** ant that moves in a train. (செ.அக.).

*[ஒழுங்கு → ஒழுக்கு + எறும்பு ஒழுங்கு - வரிசை]*

**ஒழுக்கை** *oḻukkai,* பெ. (n.) ***சந்து;*** lane ஒழுக்கை கிழக்கினின்றும் மேற்குநோக்கிப் போகிற செவ்வை (S.I.I.V 138) (செ.அக.)

*[ஒல் = ஒடுங்குதல். ஒல் → ஒழு → ஒழுக்கை]*

**ஒழுக** *oḻuga,* கு.வி.எ. (adv.) ***மெதுவாக;*** slowly. ஒழுக வுயிரை வாங்காது (கலித் 58,உரை) (செ.அக.)

*[ஒல் → ஒல்கு → ஒள்கு → ஒழ்கு → ஒழுகு → ஒழுக]*

**ஒழுகல்**[1] *oḻugal,* பெ. (n.) 1. ***ஒழுக்கு;*** leaking, dripping, leak. 2. ***நீர் பாய்கை;*** flowing 3. ***நீளம்*** (திவா.), length 4. ***உயரம்*** (பிங்.); height 5. ***திடுமென வெளிப்படல்;*** spurt.

க. ஒழ்கு; ம. ஒழுகல்

*[ஒழுகு + அல்]*

**ஒழுகல்**[2] *oḻugal,* பெ. (n.) 1. ***நடக்கை;*** conduct, behaviour "அளவின்கணின் றொழுகலாற்றார்" (குறள் 286) 2. ***பரவுதல்;*** spreading 3. ***நேராகச்செல்லல்;*** walking or going straight 4. ***இடைப்பட்டதாதல்;*** being in middle "உலகத்தோடு ஒட்ட ஒழுகல்" (குறள்,140).

*[ஒழுகு + அல்]*

**ஒழுகலாறு** *oḻugalāṟu,* பெ. (n.) ***ஒழுக்க நெறி;*** the path of good conduct "காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினை" (தொல்.பொருள் 75,உரை.) (செ.அக.).

*[ஒழுகு → ஒழுகல் + ஆறு]*

**ஒழுகிசை** *oḻugišai,* பெ. (n.) ***வெறுத்திசையில்லாமல் செவிக்கினிய மெல்லிசையுடைமையாகிய தன்மை*** (தண்டி 19), kind of flowing rhythm, in which nothing discordant occurs (செ.அக.)

*[ஒழுகு + இசை. ஒழுகிசை வண்ணம் பார்க்க, see oḻugišaiva-ṇṇam]*

**ஒழுகிசைச்செப்பல்** *oḻugišai-c-ceppal,* பெ. (n.) ***இயற் சீர் வெண்டளை வெண்சீர் வெண்டளையிரண்டும் விரவிவந்த வெண்பாவினோசை*** (காரிகை செய் 1, உரை), rhythm noticeable in the species of venbā verse in which ven-cīrvendalai comes in along with iyaṟ-cīr-ven-ḍalai (செ.அக.)

*[ஒழுகு + இசை + செப்பல்]*

**ஒழுகிசையகவல்** *oḻugišai-y-agaval,* பெ. (n.) ***நேரொன் றாசிரியத் தளையும் நிரையொன்றாசிரியத்தளையும் விரவி வந்த அகவ லோசை*** (காரிகை செய்.1,உரை), rhythm noticeable in agaval verse when it contains both nēr-onṟāširiya-t-taḷai and nirai-y-onṟāširiya-t-taḷai. (செ.அக.).

*[ஒழுகு + இசை + அகவல்]*

**ஒழுகிப்போ-தல்** *oḻugi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. ***நீர்ப்பண்டஞ் சிந்தி விழுதல்;*** to spill 2. ***மனங்கரைந் துருகுதல்;*** to brood over sorrow of disappointment, pine இவனென்ன ஒழுகிப் போகிறானே (இ.வ.) (செ.அக.)

*[ஒழுகு → ஒழுகி + போ]*

**ஒழுகு**[1]**-தல்** *oḻugu-,* 7 செ.கு.வி. (v.i.) 1. ***நீர்பாய்தல்;*** to flow, as a stream "ஒழுகு தீம்புனல்" (நைடத நாட்டு 6) 2. ***நீர்ப்பண்டம் சொட்டுதல்;*** to leak, drop, as water, to fall by drops, trickle down "அசும்பொழுகிய பொய்க்கூரை" (திருவாச 26,7) 3. ***நடத்தல்;*** to go, pass, walk 4. ***முறைப்படி நடத்தல்;*** to act according to laws as the subject of a state "வையங்காவலர் வழிமொழிந் தொழுக" (புறநா 8,1) 5. ***நேர்மைப் படுதல்;*** to be arranged in regular order "ஒழுகுகொடி மருங்குல்" (தொல் சொல் 317,உரை) 6. ***நெடுமையா தல்;*** to be long or tall மால்வரை யொழுகியவாழை (தொல் சொல் 317,உரை) 7. ***பரத்தல்;*** to spread out, extend, to be diffused "மின்னொழுகு சாயல" (சீவக 494) 8. ***வளர்தல்;*** to grow "ஒழுகு பொற்கொடிமூக்கும்" (சீவக 165) 9. ***மிகுதல்;*** to increase, become intense "மன்னற்கொழுகு மனம் கொண்டு" (உபதேசகா சிவத் துரோ 175) 10. ***அமிழ்தல்;*** to sink "இட்டதொன் றொழுகா வண்ணம்" (கம்பரா வருணனை 84) 11. ***இளகுதல்;*** to melt ஒழுகக் காய்ந்த இரும்பு (சிவப்பிர 4,1,பக் 385,உரை) (செ.அக.)

க. ஒழுகு. *E* walk, *OE* wealcal, *OHG* walckan, *MDU MLG* walken, *ON* walka

*[உல் → ஒல் → ஒள → ஒழ்கு → ஒழுகு]*

**ஒழுகு**[2] *oḻugu,* பெ. (n.) 1. ***நிலத்தின் வரலாறு குறிக்குங் கணக்கு;*** land record containing particulars of the ownership, etc., of lands "நாடுபிடித்தார்க்கு ஒழுகைக் காட்டி" (திவ் திருமாலை 3,வ்யா.) 2. ***கோயிலின் வர லாறு கூறுவது;*** register of a temple giving an account of its properties, and its history கோயிலொழுகு (செ.அக.)

*[உள் → ஒள் → ஒழுகு. (வே.க 93)]*

**ஒழுகு**[3] *oḻugu,* பெ. (n.) 1. ***வரிசை;*** row 2. ***வண்டி;*** (யாழ் அக.), cart, carriage

*[ஒழுகை → ஒழுகு (வரிசையாகச் செல்லும் வண்டிகளின் ஒழுங்கு)]*

**ஒழுகுகொண்டை** *oḻugu-kondai,* பெ. (n.) ***ஒருவகை மயிர்முடி*** (வின்.); coil of hair tied in a special way (செ.அக.).

*[ஒழுகு + கொண்டை.]*

**ஒழுகுசங்கிலி** *olugu-saṅgili*, பெ. (n.) ***தொடர்சங்கிலி;*** a kind of chain "தன்னோடொக்க ஒழுகு சங்கிலியிலே கட்டுண்டுழலுகின்ற க்ஷேத்ரக்ஞர் காலிலே விழப்பண்ணியும்" (ரஹஸ்ய.194) (செ அக.).

*[ஒழுகு + சங்கிலி]*

**ஒழுகுநீட்சி** *olugu-nīṭci*, பெ. (n) ***நேராக நீண்டிருக்கை;*** being stretched out. "ஒழுகுநீட்சி யாலே கொடியென்ன வுமாய்" (ஈடு 7,7,2) (செ அக)

*[ஒழுகு + நீட்சி]*

**ஒழுகுமாடம்** *olugu-māḍam*, பெ (n) ***உடம்பு;*** the humanbody, as a house from which impurities flow out through nine excretory passages "ஒழுகுமாடத்து ளொன்பது வாய்தலும்" (தேவா 338,7) (செ அக.).

*[ஒழுகு + மாடம் - ஒழுகுமாடம் உடம்பை ஒட்டை மாளிகை யாகச் சொன்ன உருவகம்.]*

**ஒழுகுவண்ணம்** *olugu-vaṇṇam*, பெ. (n.) ***ஒழுகிய லோசையாற் செல்லுஞ் சந்தம்*** (தொல். பொருள் 538); rhythm that flows evenly in a harmonious manner (செ.அக.).

*[ஒழுகு + வண்ணம்.]*

**ஒழுகை** *olugai*, பெ (n) 1. ***சகடவொழுங்கு;*** train of carts "பெருங்கயிற் றொழுகை" (பெரும்பாண்.63). 2. ***வண்டி;*** cart "உமணர் உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ" (புறநா.116) (செ.அக.).

*[ஒழுகு → ஒழுகை]*

**ஒழுங்கரம்** *oluṅgaram*, பெ. (n) ***ஒருவகை அரம்*** (CEM), parallel file (செ.அக.).

*[ஒழுங்கு + அரம் - ஒழுங்கரம் = ஒருசீரான அகலமுள்ள அரம்.]*

**ஒழுங்கல்** *oluṅgal*, பெ. (n.) ***ஒழுங்காயிருத்தல்*** (வின்.); being right, correct, straight, orderly (செ.அக.).

*[ஒழுகு → ஒழுங்கு → ஒழுங்கல்.]*

**ஒழுங்கீனம்** *oluṅgīnam*, பெ. (n) ***சீர்கேடு;*** disorder, confusion (செ அக.).

*[ஒழுங்கு + ஈனம்.]*

**ஒழுங்கு**[1]**-தல்** *oluṅgu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***நேர்படுத்துதல்;*** to place in line, set in order. "ஒழுங்கி முன்னர்த் திருமுறை வகுத்த காலை" (திருவாலவா.38,19).

*[ஒழுகு → ஒழுங்கு.]*

**ஒழுங்கு**[2] *oluṅgu*, பெ. (n.) 1. ***வரிசை;*** row, rank, line, series. "சகடவொழுங்கு" (சிறுபாண்.55,உரை.). 2. ***நேர்மை;*** order, regularity 3. ***முறை;*** rule of action, method, plan, model, system. 4 ***நன்னடை;*** good conduct, propriety, decorum. 5. ***முறை*** (விதி.); regulation, law, precept, canon 6. ***அளவு முதலியன காட்டும் நில விளத்தக் கணக்கு*** (C G), register of the measurement and extent of fields and holdings. 7. ***நிலத்தீர்வைக் கணக்கு*** (C G), standard rate, for assessment of tax or for the price of grain (செ அக)

ம. ஒழுங்கு, க. ஒய்யனெ (மெதுவாக) *L.* Longus, *E* Long, *Ger* land, *AS* lang

*[ஒழுக்கு → ஒழுங்கு (சு வி.65)]*

**ஒழுங்குகட்டு-தல்** *oluṅgu-kaṭṭu-*, 5.செ.கு வி. (vi) ***நெறியேற்படுத்துதல்*** (வின்), to make a regulation, to frame a law (செ அக).

*[ஒழுங்கு + கட்டு]*

**ஒழுங்குபடுத்து-தல்** *oluṅgu-paḍuttu-*, 5 செ குன்றாவி. (vt) ***நேராக்குதல்;*** to set in order, to arrange, to regulate (செ அக)

*[ஒழுங்கு + படுத்து.]*

**ஒழுங்கு வழக்கு** *oluṅgu-valakku*, பெ. (n) ***முதன்முறை தொடங்கும் வழக்கு;*** proceeding by way of original suit originated by a plaint as dist fr one originated by a petition, regular suit (செ அக).

*[ஒழுங்கு + வழக்கு]*

**ஒழுங்கை** *oluṅgai*, பெ. (n) 1. ***இடுக்குவழி*** (யாழ்ப்.); lane, alley 2 ***மண்டபநடைமுகப்பு;*** porch, portico "ஆயிரக்கால் திருமண்டபத்தி னொழுங்கையில்" (கோயிலொ 1346) (செ.அக.). 3. ***நீண்ட இடைகழி;*** long side walk

*[ஒழுங்கு → ஒழுங்கை (வே.க.93).]*

**ஒள்**[1] *ol*, பெ (n) 1 ***உட்செல்லுதல், நுழைதல்;*** penetrating, entering 2. ***மறைதல், ஒளிந்து கொள்ளுதல்;*** hiding, concealing (சு வி.68)

*[உள் → ஒள்.]*

**ஒள்**[2] *ol*, பெ. (n.) 1. ***வெளிச்சம்;*** light. 2. ***அழகு;*** beauty. 3. ***வெண்மை;*** whiteness

*[உல் → உள் → ஒள்.]*

**ஒள்**[3] *ol*, பெ. (n.) 1. ***கூர்மை;*** sharpness. 2. ***அறிவு;*** knowledge, intelligence.

*[உல் → ஒல் → ஒள்.]*

**ஒள்**[4] *ol*, பெ. (n.) 1. ***செறிவு;*** density. 2. ***மிகுதி, பெருக்கம்;*** excess, surplus

**ஒள்**[5] *ol*, கு.பெ.எ. (adj.) 1. ***நல்ல;*** nice, good. 2. ***மேன்மை;*** nobility. 3. ***மிகுதியான;*** vast, enormous.

*[ஒல் → ஒள்.]*

**ஒள்வாளமலை** *olvāḷamalai*, பெ. (n.) ***உரம் பொருந்திய தோளினையுடைய வாள் வீரர் ஆர்க்கும் வீரக்கழலி னையுடையானுடன் ஆடியது*** (பு.வெ.); literary theme pertaining to heroic verse.

*[ஒள் + வாள் + அமலை - ஒள்வாளமலை. அமலை = ஆரவாரம், ஆடல்.]*

**ஒள்ளி** *olli,* பெ (n) 1 ***செம்பொன்;*** red gold 2 ***வெள்ளி*** (சுக்கிரன்), Sukra, Venus (செ அக)

*[உள் → ஒள் → ஒள்ளி (ஒளியது)]*

**ஒள்ளிமை** *ollimai,* பெ (n) ***அறிவின் ஒட்பம்;*** bright-intelligence ஒருவனுக்கு ஒள்ளிமையாவது உலகத்தோடு பொருந்தினது (குறள் 425,மணக்) (செ அக)

*[உள் → ஒள → ஒள்ளி → ஒள்ளிமை]*

**ஒள்ளிய** *olliya,* பெஎ (adj) 1 ***ஒளியுள்ள;*** bright, lustrous 2 ***அறிவுமிக்க;*** intelligent, wise 3 ***நல்ல;*** good 4 ***அழகிய;*** beautiful

*[ஒள் → ஒள்ளிய]*

**ஒள்ளியர்** *olliyar,* பெ (n) ***மாசற்றவர்;*** good people, noble men "ஒளியார்முன் ஒள்ளியராதல்" (குறள் 714) (ஆ.அக)

*[ஒள்⁵ → ஒள்ளி + அர்]*

**ஒள்ளியன்** *olliyan,* பெ. (n) 1 ***அறிவுடையோன்;*** wise, intelligent man "ஒளியார்முன் னொள்ளியராதல்" (குறள் 714) 2 ***நல்லவன்;*** gentleman "சீவகன்வீணை வென்றா னொள்ளிய னென்று" (சீவக.741)

க. ஒள்ளித, படு. ஒளளியம

*[உள → ஒள → ஒள்ளி + அன்]*

**ஒள்ளியோன்** *olliyōn,* பெ (n) 1 ***வெள்ளி*** (திவா); planet Venus so called because it is apparently the brightest of the stars (செ அக) 2 ***கதிரவன்;*** sun 3 ***அறிவுடையோன்;*** wise intelligent man (ஆ.அக)

*[ஒள் → ஒள்ளி + (ஆன்) ஓன்]*

**ஒள்ளொளி** *ol-l-oli,* பெ (n) ***மிக்கவொளி*** (வின்); brilliant light (செ.அக).

*[ஒள்⁴ + ஒளி]*

**ஒளறி** *olari,* பெ (n) ***உலரிமீன்;*** greenish river-fish (செ அக)

*[உலரி → ஒளறி (கொ வ).]*

**ஒளி¹** *oli,* பெ (n) 1 ***வெளிச்சம்*** (திவா); light, brightness, splendour, brilliancy, lustre 2 ***கதிரவன்*** (பிங்), sun 3. ***நிலா*** (பிங்), moon 4 ***விண்மீன்*** (திவா), star 5 ***தழல்நாண்மீன்*** (கேட்டை); 18th naksatra 6 ***தீ;*** fire 7 ***எரிக்குந் தன்மை;*** scorching "வெஞ்சுடரொளியுநீ" (பரிபா 3,67). 8 ***மின்னல்*** (பிங்), lightning 9 ***வெயில்*** (பிங்.), sunshine 10 ***விளக்கு;*** lamp, light "உடையானாம் வேந்தர்க் கொளி" (குறள் 390) 11 ***கட்புலன்;*** sense of sight-, one of aim-pulam "சுவையொளி" (குறள 27). 12 ***கண்மணி*** (வின்); apple of the eye 13. ***பெருமை;*** conspicuousness, distinction excellence "நீற்றி னொளிதழைப்ப" (பெரியபு திருஞான 1019) 14 ***புகழ்;*** fame, celebrity, renown "ஒளியு மாற்றலு மோம்பா வீகையும்" (பு.வெ 9,1) 15 ***செயற்கையழகு;*** artificial beauty "ஒண்மையு நிறைபு மோங்கிய வொளியும்" (பெருங் உஞ்சைக் 34,151) 16 ***அரசனது கடவுட்டன்மை;*** divinity of king-ship "மன்னவன்றன் னொளி வையகங்காக்கு மால்" (சீவக.248) 17 ***அறிவம்*** (ஞானம்), illumination of mind, wisdom "தனையறிநதோர்க் கொளியுருவாய்" (ஞானவா தாசூர 6) 18 ***சொன்மாலை*** (பிங்); eulogy in verse (செ அக)

ம. ஒளி, க. உளகு, ஒளி, ஒள, ஒளபு; **கோத.** ஒள்ய (நல்லது). **துட.** விளய (நல்லது), குட. பொளி, **து.** ஒலி, ஒளி; **தெ.** ஒளியு (தோனறு), படு. ஒள்ளிய (நலல)

*[உல → ஒள் → ஒளி.]*

**ஒளி²-தல்** *oli-,* 4 செ கு வி (vi) 1 ***மறைதல்;*** to hide, steal away, flee into concealment "ஒளியாவெண்ணெ யுண்டா னென்று" (திவ் பெரியதி.6,7,4). 2. ***தவிர்தல்;*** to fail "ஒளியாது செல்வா ரென்றாய்" (திணை மாலை 86) (செ அக.).

ம. ஒளியுக, **க.** உளி, **கோத.** ஒய்ள், குட. ஒளி, **து.** ஒள (மந்தணம்); **தெ.** ஒலமு (தங்கிடம்); **குரு.** ஒல்தாநன்னா, படு. உணி

*[உள் → ஒள் → ஒளி. உள் → உள்கு = உட்கருங்கு, உட்செல், மறைதல்.]*

**ஒளி³-த்தல்** *oli-,* 4.செ குன்றாவி. (v.t.) 1. ***மறைத்தல்;*** to hide, conceal, keep out of sight "கன்றொளித் தகலவைத்த கறவையின்" (சீவக.371). 2 ***மனத்தில டக்குதல்;*** to keep in mind, to disguise ஒளிக்காமற் சொல் (உ.வ).

*[உள் → ஒள் → ஒளி.]*

**ஒளி⁴-த்தல்** *oli-,* 4.செ.கு வி. (v.i.) ***பதுங்குதல்;*** to lie, hide, conceal one's self, lurk unseen "மதி . ஒளிக்குஞ் சடை மன்னவனே" (திருவாச 6,42) (செ அக)

ம. ஒளிக்குக, **க.** உளி, **கோத.** ஒய்ள், **துட.** விள்ய, குட. ஒளி, **து.** ஒள (மந்தணம்); **தெ.** ஒளவு (மந்தணம்); படு. உணி

*[உள் → ஒள் → ஒளி ஒளி² பார்க்க, see oli²]*

**ஒளி⁵** *oli,* பெ (n) 1 ***மறைகை;*** hiding, withdrawing from view "ஒளிகொள் காரண முன்னாதோரே" (ஞானா 29,13) 2 ***மறைவிடம்*** (பிங்); lurking place, covert 3 ***வேட்டைக்காரர் பதிவிருக்கு மறைப்பு;*** screen, a cover for a fowler 4 ***பார்வை விலங்கு;*** decoy animal ஒளிவைத்துப் பிடித்தான் (வின்) (செ அக.).

**க.** உளி

*[உள் → ஒள் → ஒளி.]*

**ஒளி⁶** *oli,* பெ (n) ***பாடற்பயன்களுள் ஒன்று*** (சிலப். 3,16,உரை.); one of qualities of verse, one of pādar payangal (செ.அக.).

*[ஒள் → ஒளி]*

**ஒளிச்சாயல்** *oli-c-cāyal,* பெ (n) ***சாய்ந்து வீசும் ஒளி;*** the light which falls obliquely on a surface - oblique light (செ அக)

*[ஒளி + சாயல் சாய்தல் → சாயல்]*

**ஒளிச்சாயை** *oli-c-cāyai,* பெ (n) ***உருவத்தின்போலி கையாலும்*** (பிரதிபிம்பத்தினாலும்) ***வளைவினாலும் ஏற்படும் ஒளிப்பரப்பு;*** light which has been scattered by reflection and refraction - diffused light. (சா அக.).

*[ஒளி + சாயை]*

**ஒளித்துத்திரி-தல்** *olittu-t-tiri-,* 2 செ.கு வி (vi) ***மறைந்துதிரிதல்*** (வின்); to go about incognito, wander in concealment (செ அக)

*[ஒளித்து + திரி]*

**ஒளித்துவிளையாடு-தல்** *olittu-vilaiyādu-,* 5.செ கு.வி. (vi) ***கண்பொத்தி விளையாடுதல்;*** to play hide-and seek (செ அக.)

ம. ஒளிச்சு களிகுக

*[ஒளி → ஒளித்து + விளையாடு.]*

**ஒளிநாடு** *oli-nādu-,* பெ (n) ***பழந்தமிழகத்தில் செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரு நாடுகளுள் ஒன்று*** (தொல் சொல்.400,உரை.); one of the 12 nādu lying on the outskirts of the Šen-Tamil-nādu in the ancient Tamil country. (செ அக.).

*[ஒளி[1] + நாடு]*

**ஒளிநூல்** *olinūl,* பெ (n) ***கண்ணொளியையும் பார்வையையும் பற்றிக் கூறும் நூல்;*** a science which treats of the nature and properties of light and vision - optics (சா.அக.).

*[ஒளி[1] + நூல்]*

**ஒளிப்பாட்டம்** *olippāttam,* பெ. (n.) ***ஏமாற்று;*** fraud, deceit "இவர்களது ஒளிப்பாட்டம் நம்மனோர் அனைவரும் அறிவர்" (மதி க.1.112) (செ.அக.).

*[ஒளி[1] → ஒளிப்பு + ஆட்டம்.]*

**ஒளிப்பிடம்** *olippidam,* பெ. (n) ***மறைவிடம்*** (பிங்.); ambush; covert, hiding place. (செ.அக).

ம. ஒளிப்பிடம், க. உளி; தெ. ஒலமு; குரு. ஓலா.

*[ஒளி[1] → ஒளிப்பு + இடம்.]*

**ஒளிப்பிழம்பு** *olipilambu,* பெ. (n.) ***தீச்சுடர்த்திரள்;*** flame. (ஆ.அக.).

*[ஒளி + பிழம்பு.]*

**ஒளிப்பு[1]** *olippu,* பெ. (n.) 1. ***பதுங்கி மறைகை;*** absconding; slinking or stealing away. 2. ***மறைவு*** (வின்.); covert. (செ.அக.).

ம. ஒளிப்பு; க. உளி; து. ஒள; தெ. ஒலமு.

*[ஒளி[1] → ஒளிப்பு.]*

**ஒளிப்பு[2]** *olippu,* பெ. (n) 1 ***ஒளிக்கை;*** hiding, concealing 2. ***மனத்துள் அடக்குகை;*** keeping secret, as one's thoughts 'ஒளிப்பு மறைப்புப் பண்ணாமற் சொல்' (வின்) (செ அக.)

*[ஒளி[3] → ஒளிப்பு.]*

**ஒளிப்புடம்** *oli-p-pudam,* பெ. (n) ***வெயிலில் இட்டுச் செய்த மருந்துப் பொடி*** (மூ.அ); calcination by exposure to the sun (செ.அக.).

*[ஒளி[1] + புடம்]*

**ஒளிப்பொலி** *oli-p-poli,* பெ (n) ***களத்தில் நீட்டமாகத் தூற்றிய நெற்குவியல்*** (இ வ.); long heap of paddy on the threshing - floor (செ.அக.).

*[ஒருகா ஒளி → ஒளி + பொலி. ஒளி = உயரம், நீளம்.]*

**ஒளிப்போர்** *oli-p-pōr,* பெ (n) ***மறைந்து நின்று நடத்தும் போர்;*** guerilla warfare (சேரநா.).

ம. ஒளிப்போர்.

*[ஒளி + போர்]*

**ஒளிமங்கு-தல்** *oli-mangu-,* 9.செ.கு.வி. (vi) ***ஒளிகுறைதல்;*** to grow dim, as light, splendour, or lustre. (செ.அக.).

*[ஒளி + மங்கு. மழுங்கு → மங்கு.]*

**ஒளிமங்கை** *olimangai,* பெ. (n.) 1. ***ஒளியுள்ளமங்கை;*** beautiful woman 2 ***வைப்பாட்டி;*** paramour (woman), concubine. (சேரநா.).

ம. ஒளிமங்க.

*[ஒளி + மங்கை.]*

**ஒளிமணல்** *olimanal,* பெ. (n.) 1. ***மாழை*** (உலோக) ***மணல்; sand mixed with iron. 2. கருமணல்;*** black sand. (சா.அக.).

*[ஒளி + மணல்.]*

**ஒளிமயக்கம்** *olimayakkam,* பெ. (n) ***வெளிச்சத்தைப் பார்க்க முடியாத ஓர்வகைக் கண்ணோய்;*** eye disease due to abnormal intolerance of light-photophobia. (சா.அக.).

*[ஒளி + மயக்கம்.]*

**ஒளிமரம்** *oli-maram,* பெ. (n.) ***இருளில் ஒளிவிடும் மரம்;*** tree that is said to shine in the dark. "பொங்கொளிமரத்திற் சீர்சால் புள்ளினம் பொறையுயிர்த்து" (பிரபுலிங்.கோரக்கர்.19) (செ.அக.).

ம. ஒளிமரம்.

*[ஒளி + மரம்.]*

**ஒளிமழுங்கு-தல்** *oli-malungu-,* 9.செ.கு.வி. (vi.) ***ஒளி குறைதல்;*** to grow dim, as light, splendour, or lustre. (செ.அக.).

*[ஒளி + மழுங்கு.]*

**ஒளிமறைவு** *oli-maraivu*, பெ (n) 1. ***ஒளித்துத்திரிகை;*** wandering in disguise. அவன் ஒளி மறைவாய்த்திரிகிறான் (உ.வ.). 2 ***கமுக்கம்;*** secrecy இவனிடம் ஒளிமறைவு இல்லை (உ.வ.).

ம. ஒளிமர; க. உளி; தெ. ஒலமு.

*[ஒளி + மறைவு - ஒளிமறைவு (ஒருபொருட் பன்மொழி).]*

**ஒளி மின்னல்** *oliminnal*, பெ. (n) 1. ***ஒளிர்வு;*** splendour 2. ***திகழ்வொளி;*** the lighting (as a weapon of Indira) (சேரநா.)

ம. ஒளிமின்னல்.

*[ஒளி + மின்னல் - ஒளிமின்னல்.]*

**ஒளியம்பு** *oliyambu*, பெ (n) 1 ***மறைந்து நின்று எய்யும் அம்பு;*** arrow shot from ambush 2 ***வெளிப்படாமல் தாக்குதல்;*** covert attack (சேரநா.).

ம. ஒளியம்பு

*[ஒளி + அம்பு]*

**ஒளியர்** *oliyar*, பெ (n) ***ஒளிநாட்டிற் சிறந்துவிளங்கிய வேளாளர்;*** Vēlālas who were the dominant people, in Oli-nādu "பல்லொளியர் பணி பொடுங்க" (பட்டினப் 274) (செ.அக.)

*[ஒளி + அர் = ஒளியர்]*

**ஒளியவன்** *oliyavan*, பெ. (n) ***கதிரவன்;*** sun, lit., the shining one "உம்பர்நா டிறந்து வீழ்ந்த வொளியவன்" (கம்பரா நாகபா.202) (செ.அக.).

*[ஒளி + அவன்.]*

**ஒளியிரு-த்தல்** *oli-y-iru-*, 2 செ.கு.வி. (v.i) ***பதுங்கியிருத்தல்;*** to lie in concealment, to lie in ambush, to lurk "கிளிக்குலங்கள் ... ஒளி யிருந் தனுதினம் பயிலும்" (காஞ்சிப்பு.திருநாட்டு.41) (செ.அக.)

*[ஒளி + இரு]*

**ஒளியிழை** *oliyilai*, பெ (n) 1. ***அணிகலன்;*** jewels, ornament 2. ***அணிகலன் அணிந்த பெண்;*** lady since wearing jewels

*[ஒளி + இழை - ஒளியிழை]*

**ஒளியுணர் வேற்றுமை** *oli-y-unarvērrumai*, பெ (n) ***இரண்டு கண்களின் ஒளியுணர்ச்சியைப் பற்றிய வேறுபாடு;*** the difference between the two eyes in their sensitiveness to light-light difference (சா.அக.).

*[ஒளி + உணர் + வேற்றுமை]*

**ஒளியுருவியகல்** *oli-y-uruviya-kal*, பெ. (n) ***வயிரக்கல்*** (வைடூரியம்) (வின்.); cat's-eye, a stone of value found in Ceylon (செ.அக.)

*[ஒளி + உருவிய + கல்.]*

**ஒளியுள்ளுருவம்** *oliyulluruvam*, பெ. (n.) ***கண்ணாடியுளுருவம்;*** image in mirror (ஆ.அக.).

*[ஒளி + உள் + உருவம்.]*

**ஒளியூடுருவல்** *oliyūduruval*, பெ. (n) ***வெளிச்சம் ஊடுருவிப் பாய்ந்து செல்லல்;*** light passing through an object, as through a glass - transmission of light (சா.அக.).

*[ஒளி + ஊடு + உருவல்.]*

**ஒளியோன்** *oliyōn*, பெ. (n) ***ஒளியவன்*** (பிங்.) பார்க்க; see *oliyavan*.

*[ஒளி + ஆன் - ஒளியான் → ஒளியோன்]*

**ஒளிர்[1]-தல்** *olir-*, 2 செ.கு.வி (v.i) ***ஒளிசெய்தல்;*** to shine, to emit light, to be resplendent "உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே" (திருவாச 37,5) (செ.அக.).

*[ஒளி → ஒளிர்.]*

**ஒளிர்[2]-த்தல்** *olir-*, 2 செ.குன்றாவி. (v.t) ***ஒளிரச்செய்தல்;*** to shed light upon "ஊனமின்மினியு நானீ தொளிர்ப்ப வென்று ரைத்தல் போலாம்" (விவேக சூடா.பாயி 7) (செ.அக.)

*[ஒளி + ஒளிர்]*

**ஒளிர்முகம்** *olir-mugam*, பெ. (n) ***வயிரக்கல்*** (வின்.), diamond (செ.அக.)

*[ஒளிர் + முகம் - ஒளிர்முகம் = ஒளி வீசும் பக்கங்களைக் கொண்டது]*

**ஒளிர்வா(வரு)-தல்** *olir-vā-*, 18 செ.கு.வி (v.i) ***ஒளிர்*** பார்க்க; see *olir* "கண்ணொளிர் வருஉங் கலின்சாபத்து" (புறநா 7,4).

*[ஒளிர் + வா.]*

**ஒளிர்வு** *olirvu*, பெ (n.) ***வெளிச்சம்;*** brightness, radiance 'அவருடைய முக வொளிர்வைப் பார்' (வின்.) (செ.அக.).

*[ஒளி → ஒளிர் → ஒளிர்வு.]*

**ஒளிவட்டம்** *oli-vattam*, பெ (n) 1. ***கண்ணாடி;*** mirror "ஒளிவட்டத்துப் பாவையின்" (இரகு குச 17). 2 ***ஆழிப்படை*** (சக்கராயுதம்) (பிங்.); discus 3. ***தெய்வ உருவங்களின் தலையைச் சுற்றியுள்ள ஒளிவட்டம்*** (பிரபை), halo of light "சுற்று மொளிவட்டஞ் சூழ்ந்து சோதி பரந்து" (திவ் பெரியாழ 1,4,3) 4. ***நிலவு;*** moon "ஊர்களோடுடன் முளைத்த வொளிவட்டத்து" (யாப் வி 83,288) (செ.அக.).

*[ஒளி + வட்டம்]*

**ஒளிவடி-த்தல்** *olivadi-*, 4.செ.கு.வி. (v.i.) ***மின்னுதல்*** (இ.வ.), to flash lightning (செ.அக.)

*[ஒளி → ஒளிவு + அடி-த்தல்.]*

**ஒளிவளவாய்** *olivalavāy*, கு.வி.எ. (adv.) ***கமுக்கமாய்*** (இரகசியமாய்) (வின்.); privily. (செ.அக.)

*[ஒளி → ஒளிவு + அளவாய்]*

**ஒளிவிடம்** *olividam*, பெ. (n) ***மறைவிடம்;*** a hiding place, ambush.

ம. ஒளிவிடம், **க.** உளி; **கோத.** ஒய்ன் (வேட்டைக்கான உயர்மரப்பரண்); **தெ.** ஒலமு; **குரு.** ஒலா.

*[ஒளி + இடம்.]*

**ஒளிவிடு-தல்** *oli-vidu-*, 20.செ.கு.வி. (v.i.) ***ஒளிர்*** (திவா.) பார்க்க; see *olir.* (செ.அக.).

*[ஒளி + விடு.]*

**ஒளிவீச்சு** *oliviccu*, பெ. (n.) ***ஒளி வீசுதல்;*** emitting rays of light (சா.அக.).

*[ஒளி + வீச்சு.]*

**ஒளிவீசு-தல்** *oli-visu-*, 5 செ.கு.வி. (v.i.) ***ஒளிர்*** பார்க்க; see *olir* (செ.அக.)

**ஒளிவு**[1] *olivu*, பெ. (n) ***மறைவிடம்*** (வின்.); place of concealment (செ.அக.).

ம. ஒளிவு, **க.** உளி, ஒளவு, ஒளகு; **து.** ஒள, ஒளவு, ஒளாவு; **தெ.** ஒலமு, ஒளவு, **குரு.** ஒலா

*[ஒளி → ஒளிவு.]*

**ஒளிவு**[2] *olivu*, பெ. (n.) ***ஒளிர்வு*** (வின்.) பார்க்க; see *olirvu* (செ.அக.)

ம. ஒளிவு.

*[ஒளி → ஒளிர் → ஒளிர்வு → ஒளிவு.]*

**ஒளிவை-த்தல்** *oli-vai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***கண்ணி வைத்தல்;*** to set a snare for animals or birds 2. ***பார்வை விலங்கு வைத்தல்;*** to place a decoy (செ.அக.)

*[ஒளி + வை.]*

**ஒளிவைத்துப் பார்**[1]**-த்தல்** *olivaittu-p-pār-*, 4.செ.கு.வி. (v.i.) ***கண்ணிவைத்துக் காத்திருத்தல்*** (வின்.); to lie in wait for game after having set a snare (செ.அக.).

*[ஒளி + வைத்து + பார்.]*

**ஒளிவைத்துப் பார்**[2]**-த்தல்** *olivaittu-pār-*, 4.செ.குன்றாவி. (v.t) ***உற்றுப்பார்த்தல்;*** to stare at a person. (செ.அக.).

*[ஒளி + வை.]*

**ஒளிவைத்துப் பார்**[3]**-த்தல்** *oli-vaittu-p-pār*, 4 செ.குன்றாவி (v.t) ***கைசெறித்துவைத்துக் கூர்ந்து பார்த்தல்*** (யாழ்.அக.); to look intently, shading the eyes with the palm over the eyebrows (செ.அக.).

*[ஒளி + வைத்து + பார்.]*

**ஒளிறு**[1]**-தல்** *oliru-*, 2. செ.கு.வி. (v.i.) ***விளங்குதல்;*** to shine, glitter. ''ஒளிறுவாண் மறவரும்'' (மணிமே.1,68) (செ.அக.).

*[ஒளி → ஒளிர் → ஒளிறு → ஒளிறு-தல். (வே.க.57,58).]*

**ஒளிறு**[2] *oliru*, பெ. (n.) ***பேரொளி, அதிக வெளிச்சம்;*** splendour, light. ''ஒளிற்றுறு கலன் மார்பெய்தி'' (கந்தபு. அசமுகிநகர்.24) (செ.அக.).

*[ஒளி → ஒளிர் → ஒளிறு.]*

**ஒற்கம்**[1] *orkam*, பெ. (n) 1. ***வறுமை*** (தொல்.சொல்.360); poverty, indigence, destitution, want 2. ***தளர்ச்சி;*** feebleness, weakness ''ஒற்கத்தி னூற்றாந் துணை'' (குறள்,414) 3. ***குறைவு;*** deficiency, dearth. ''ஒற்க மில்வளன்'' (கந்தபு.மேரு.70). 4. ***அடக்கம்;*** diffidence, modesty ''ஒற்கமின் றூத்தைவா யங்காத்தல்'' (நீதி நெறி.23) (செ.அக.).

*[ஒல் → ஒல்கு → ஒற்கு → ஒற்கம்.]*

**ஒற்கம்**[2] *orkam*, பெ. (n) 1. ***பொறுமை*** (யாழ்.அக.); patience 2. ***ஒடுக்கம்;*** restraint (செ.அக.).

*[ஒல் → ஒல்கு → ஒற்கு → ஒற்கம்.]*

**ஒற்கு-தல்** *orku-*, 7 செ.கு.வி. (v.i.) 1. ***குறைதல்;*** to be deficient, to be wanting ''ஒற்காமரபிற் பொதியி லன்றியும்'' (சிலப் 25,117). 2. ***தளர்தல்;*** to fall short, droop ''ஒற்காவுள்ளத் தொழியா னாதலின்'' (மணிமே.15,18) (செ.அக.).

*[ஒல் → ஒல்கு → ஒற்கு.]*

**ஒற்றடம்** *orradam*, பெ. (n.) ***வெப்பம்பட ஒற்றுகை*** (உ.வ.); fomentation (செ.அக.).

ம. ஒத்தல், ஒத்தணம், **க.** ஒத்தல, ஒத்தட, ஒத்தன, **குட.** ஒத்த்; **து.** ஒத்துனி; **தெ.** ஒத்தடமு, **பட.** ஒத்தண.

*[ஒற்று + அடம். 'அடம்' - சொல்லாக்க ஈறு.]*

**ஒற்றடிச்செருப்பு** *orradi-c-ceruppu*, பெ. (n.) ***ஒற்றைத் தோலட்டை யாலமைந்த செருப்பு*** (வின்.); slippers, sandals. (செ.அக.).

*[ஒற்றை + அடி - ஒற்றடி + செருப்பு.]*

**ஒற்றளபு** *orralabu*, பெ. (n) ***ஒற்றளபெடை*** பார்க்க; see *orralabedai.* (செ.அக.).

*[ஒற்று + அளபு.]*

**ஒற்றளபெடை** *orralapedai*, பெ. (n.) ***ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள், ஃ ஆகிய பதினோரு எழுத்துகளும் தமக்குரிய மாத்திரையின் மிக்கு ஒலிக்கை*** (நன் 92); lengthening the mutes ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள், ஃ after one or two short syllables for the sake of metre, as in கண்ண், இலங்ங்கு, the said consonant being doubled in writing, to indicate the prolongation, one of ten cārpeluttu. (செ.அக.).

*[ஒற்று + அளபெடை - ஒற்றளபெடை = இனிய பண்ணோசைக் காகச் செய்யுளில் இரட்டித்து அல்லது பன்முறை அடுக்கிவரும் மெய்யெழுத்து நெட்டோசை. ஒற்று = மெய்யெழுத்து.]*

**ஒற்றறு-த்தல்** *orraru-*, 4 செ.கு.வி. (v.i) ***தாளத்தை அறுதியிடுதல்*** (திவா.); to keep time with the hands or with cymbals in singing (செ.அக.).

*[ஒற்று + அறு.]*

**ஒற்றன்**[1] *orran*, பெ. (n) ***உளவு பார்ப்பவன், வேவுகாரன்;*** male spy. "ஒற்றனிவனென வுரைத்து" (மணிமே.26,27). "மற்றுமோர் ஒற்றினால் ஒற்றிக் கொளல்" (குறள்,588).

*[ஒற்று + அன்.]*

**ஒற்றன்**[2] *orran*, பெ. (n) ***தூதன்*** (யாழ்.அக.); messenger

*[ஒற்று + அன்]*

**ஒற்றாடல்** *orrādal*, பெ (n.) ***வேவுகாரரை விடுத்து வினை செய்கை*** (குறள்,59,அதி); employing and directing spies.

*[ஒற்று + ஆடல்]*

**ஒற்றாள்** *orrāl*, பெ. (n.) ***வேவுகாரன்;*** spy "ஒள்ளிய வொற்றாள் குணம்" (திரிகடு.85)

ம. ஒறறாள்

*[ஒற்று + ஆள்]*

**ஒற்றி**[1]**-த்தல்** *orri-*, 4 செ.கு.வி (v.i) 1 ***ஒற்றுமைப்படுதல்;*** to be united with, to become one with "அவற்றினான் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது" (சி.போ.சிற் 5,1). 2. ***ஒற்றையாயிருத்தல்;*** to be odd, as numbers "ஒற்றித் தொத்தலும் இரட்டித் தொத்தலும்" (சிலப் 3,152,அரும்.)

*[ஒற்று → ஒற்றி → ஒற்றி-த்தல்.]*

**ஒற்றி**[2] *orri*, பெ (n) 1 ***உடைமையை நுகரும் உரிமையுடன் கூடிய அடைமானம்*** (தொல் சொல் 81, உரை); mortgage with possession, as of land, trees, cattle, etc 2 ***ஒற்றியூர்;*** place name, Orriyūr "நானொற்றி யிருந்தே னென்றாரே" (அருட்பா.111,சல்லாபவி.5) (செ அக)

ம. ஒற்றி. க. ஒதெதெ. து. ஒத்து. தெ. ஒத்து.

*[ஒன்று → ஒற்று → ஒற்றி]*

**ஒற்றிக்கரணம்** *orri-k-karanam*, பெ. (n.) ***ஒற்றிச் சீட்டு*** பார்க்க; see *orri-c-cīttu* (செ.அக.).

ம. ஒற்றிக்கரணம்

*[ஒற்றி + கரணம்]*

**ஒற்றிக்கலம்** *orri-k-kalam*, பெ. (n) ***ஒற்றிச்சீட்டு*** பார்க்க; see *orri-c-cīttu* நிலத்த தொற்றிக்கலம் (தொல் சொல் 81, உரை).

*[ஒற்றி + கலம்.]*

**ஒற்றிக்காணி** *orri-k-kāni*, பெ. (n) ***அடைமான நிலம்*** (உ வ.); mortgaged land. (செ.அக.).

*[ஒற்றி + காணி.]*

**ஒற்றிக்கொள்(ளு)-தல்** *orri-k-kol-*, 10.செ குன்றாவி. (v.t) 1 ***உடலிற் படும்படி அழுத்துதல்;*** to press on one's body, get anything applied or impressed on one's person "சக்கரப்பொறி யொற்றிக் கொண்டு" (திவ் பெரியாழ்.5,4,1). 2. ***வயப்படுத்திக் கொள்ளுதல்*** (வின்.); to take possession of, annex (செ அக)

*[ஒற்றி + கொள்]*

**ஒற்றிச்சீட்டு** *orri-c-cīttu*, பெ. (n.) ***ஒற்றி ஆவணம்;*** usufructuary mortgage deed (செ.அக.)

ம. ஒற்றிச்சீட்டு.

*[ஒற்றி + சீட்டு]*

**ஒற்றிடு-தல்** *orridu-*, 20.செ.கு வி. (v.i) ***ஒற்றடமிடுதல்*** (வின்); to apply fomentation (செ.அக.).

*[ஒற்று + இடு]*

**ஒற்றித்தவெண்** *orrittaven*, பெ. (n.) ***ஒற்றைப் பட்ட கணக்கு;*** odd number (ஆ.அக.)

*[ஒஙறித்த → ஒற்றித்த + எண்]*

**ஒற்றிநறுக்கு** *orri-narukku*, பெ. (n) ***பனையோலையில் எழுதிய அடைமான ஆவணம்*** (வின்.); mortgage deed, lease deed, written out on a palmyra - leaf. (செ அக)

*[ஒற்றி + நறுக்கு.]*

**ஒற்றிப்பிரசாதம்** *orri-p-pirašādam*, பெ. (n) ***கோயிற்தேவுணா*** (பிரசாத) ***வகை;*** boiled rice, etc., offered to a deity ஒற்றிப்பிரசாதம் குறுணியும் (S.I.I.i,85) (செ.அக)

*[ஒற்றி + பிரசாதம் பிரசாதம் = படையல்.]*

**ஒற்றிப்போ-தல்** *orri-p-pō-*, 8.செ கு.வி. (v.i.) ***விலகிச் செல்லுதல்;*** to go away from. (செ.அக.).

க., தெ. ஒத்து

*[ஒற்றி + போ]*

**ஒற்றிப்போடு-தல்** *orri-p-pōdu-*, 19.செ.குன்றாவி. (v.t.) ***ஒத்திப்போடு*** பார்க்க; see *otti-p-pōdu*. (செ.அக.).

*[ஒதுக்கி → ஒத்தி → ஒற்றி + போடு.]*

**ஒற்றிமீட்டு-தல்** *orrimittu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***அடகு வைத்ததை மீட்டல்;*** to cause to redeem a mortgage.

*[ஒற்றி + மீட்டு. மீள் (த வி.) → மீட்டு (பி வி.).]*

**ஒற்றிமீள்(ட்)-த(ட)ல்** *orri-mīl-*, 16 செ.கு.வி. (v.i.) ***அடைமானந் திருப்புதல்;*** to redeem a mortgage. (செ.அக.).

*[ஒற்றி + மீள்.]*

**ஒற்றியாட்சி** *orri-y-ātci*, பெ. (n) ***அடைமான நிலப்பயன் நுகர்தல்;*** enjoying the usufructs of mortgaged property (செ அக).

*[ஒற்றி + ஆட்சி.]*

**ஒற்றியிரு-த்தல்** *orri-y-iru-*, 2.செ கு.வி (v.i.) ***விலகி யிருத்தல்;*** to keep at a distance "ஒற்றியிருமென்று ரைத்தேன்" (அருட்பா.111,சல்லாபவி 5) (செ அக.)

*[ஒதுங்கு → ஒத்து → ஒற்று → ஒற்றி + இரு.]*

**ஒற்றியூர்** *orri-y-ūr,* பெ (n) ***திருவொற்றியூர்*** (தேவா 1105,1), ancient shrine of Śiva, a few miles to the north of Madras (செ அக.)

*[ஒற்றி + ஊர் ஒற்றியூர் (வடசென்னையிலுள்ள, பாடல் பெற்ற, சிவனகோயில் கொண்ட இவ்வூர், ஒற்றியாகப் பெற்ற வூராகலாம்).]*

**ஒற்றியூரன்** *orriyūran,* பெ (n) 1. ***சிவன்;*** Śiva 2. ***வல்லாளை வென்ற ஒரு செங்குந்த வீரன்;*** legendary hero (ஆ அக.)

*[ஒற்றி + ஊர் + அன்.]*

**ஒற்றியெடு-த்தல்** *orri-y-edu-*, 4 செ குன்றாவி. (v.t.) 1. ***ஒற்றி ஈரம்வாங்குதல்;*** to absorb moisture with a blotter, sponge, etc 2. ***ஒற்றிப் படியெடுத்தல்;*** to take an impression or copy from (செ.அக.)

*[ஒற்றி + எடு.]*

**ஒற்றிவை[1]-த்தல்** *orri-vai-*, 4 செ குன்றாவி (v.t.) ***அடைமானம் வைத்தல்;*** to mortgage, as land, as trees "விற்றுக்கொ ளொற்றிவை யென்னினல்லால்" (திருவாச 6,18) (செ.அக.)

க. ஒதெயிடு

*[ஒற்றி + வை.]*

**ஒற்றிவை[2]-த்தல்** *orri-vai-*, 4.செ குன்றாவி (v.t.) 1. ***தொலைவில் வைத்தல்;*** to place out of the way 2. ***தவணை தள்ளி வைத்தல்;*** to adjourn, as a hearing to postpone (செ அக.)

தெ. ஒதது

*[ஒதுங்கு → ஒத்து → ஒற்று → ஒற்றி + வை.]*

**ஒற்று[1]-தல்** *orru-*, 5 செ குன்றாவி (v.t.) 1. ***ஒன்றிப்படும்படிச் சேர்த்தல்;*** to bring into contact, to press, hug close "வீணை மாத ரணி முலைத் தடத்தி னொற்றி" (சீவக 1746) 2. ***முத்திரையிடுதல்;*** to stamp, as a seal "கொடுவரியொற்றி" (சிலப் 5,98). 3. ***உளவறிதல்;*** to spy out "கண்மா றாடவ ரொடுக்க மொற்றி" (மதுரைக் 642) 4. ***தாளம் போடுதல்;*** to beat, as cymbals in keeping time "காமரு தாளம் பெறுதற் கொற்றுவதுங் காட்டுவபோல்" (பெரியபு திருஞான 46) 5. ***தீண்டுதல்;*** to touch "கதவொற்றிப் புலம்பியா முலமர" (கலித் 8,2) 6. ***தழுவுதல்;*** to embrace "சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த் தொற்றும்" (கலித்.103,51). 7. ***மறைதல்;*** to hide 8. ***உய்த்துணர்தல்;*** to pry into "உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவர்" (குறள் 927) 9. ***கட்டுதல்;*** to tie, fasten "வலைவலி தொற்றினர்க்கு" (கல்லா.66,6) 10 ***தீர்மானித்தல்;*** to decide, to determine "ஒன்று நினைந் தொற்றி" (அகநா.5,20) (செ அக.).

ம. ஒற்றுக

*[ஒல் → ஒன்று → ஒற்று → ஒற்று-தல்.]*

**ஒற்று[2]-தல்** *orru-*, 5 செ குன்றாவி (v.t.) 1. ***அடித்தல்;*** to strike "வேணுக்கோலின் மிடைந்தவ ரொற்றலின்" (சீவக 634) 2 ***அமுக்குதல்;*** to press down, to press upon "வெங்கணைசெவிட்டி நோக்கி, யொற்றுபு திருத்தி" (சீவக 2191) 3 ***தாக்குதல்;*** to attack "பழனத்த புள்ளொற்ற வொசிந் தொல்கி" (கலித் 77,5) 4. ***எய்தல்;*** to shoot, as an arrow "கோலொற்றக் குனிந்த வாறே" (சீவக 797).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று[3]-தல்** *orru*, 5 செ குன்றாவி (v.t.) 1. ***துடைத்தல்;*** to wipe away, as tears "கொடியனாடன் கண்பொழி கலுழி யொற்றி" (சீவக 1597) 2 ***தள்ளுதல்;*** to push, as a door "பாவையன்னா ளறிவுறா வகையி னொற்றி" (சீவக 1505) 3. ***வீழ்த்துதல்;*** to fell down "புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்" (புறநா.237,16). 4. ***வலித்தல்;*** to tug, to strain 'எருதுகயிற்றை யொற்றி யிழுக்கின்றது' (வின்.).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று[4]-தல்** *orru-*, 5 செ கு வி (v.i.) 1. ***மெய்யெழுத்தாய் நிற்றல்;*** to appear, as a pure consonant "யரழவென்னு மூன்று மொற்ற" (தொல் எழுத் 48). 2 ***தத்துதல்;*** to move by jerks to starts, as an animal when its forelegs are tied together மாடு ஒற்றி யொற்றிப்போகிறது (யாழ்ப்.). 3 ***காற்று வீசுதல்;*** to blow, as wind. "கடிகாவிற் காலொற்ற வொல்கி" (கலித் 92,51). 4. ***ஒட்டிக்கொள்ளுதல்;*** to stick, to adhere "தாளொற்றித் தப்பி வீழ்ந்தார்" (சீவக.2768). 5. ***ஒற்றடம் போடுதல்;*** to apply fomentation 6 ***நினைதல்;*** to think "வந்தது வளர்த்து வருவ தொற்றி" (சிலப்.3,65).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று[5]-தல்** *orru,* 5. செ.குன்றாவி (v.t.) ***உடுத்தல்*** (யாழ்.அக.); to clothe. (செ.அக.).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று[6]** *orru,* பெ. (n.) 1. ***உடம்பு*** (அக.நி.); body. 2. ***ஒற்றன்*** (யாழ்.அக.) பார்க்க; see *orran.* (செ.அக.).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று[7]** *orru,* பெ. (n.) 1. ***மெய்யெழுத்து*** (தொல். எழுத் 411); consonant. 2. ***வேவு;*** espionage, spying. "ஒற்றி னாகிய வேயே" (தொல்.பொருள்.58). 3. ***வேவுசெல்வோன்;*** spy, secret agent "ஒற்று முரை சான்ற நூலும்" (குறள்,581) 4. ***ஒற்றடம்;*** fomentation 'ஒற்றுக் கொடுத்தால் வீக்கம் நீங்கும்'. 5 ***குழந்தை கையணிவகை;*** flat bracelet for a child (தெ.ஒத்து). 6. ***ஒற்றுறுப்பு*** பார்க்க; see *orruruppu.* "ஒற்றுறுப்புடை மையில" (சிலப்.13,108) (செ.அக.).

*[ஒல் → ஒற்று.]*

**ஒற்று**[8] *oṟṟu,* பெ. (n) ***ஒற்றியிடும் பொட்டணி, மாவுத்துணிக் கட்டு*** (யாழ்.அக.), poultice. (செ.அக.)

*[ஒல் → ஒற்று]*

**ஒற்று**[9]**-தல்** *oṟṟu-,* 5. செ.கு.வி (vi) ***ஒத்து***[3] பார்க்க; see *ottu*[3]. (செ.அக.).

**ஒற்றுக்கேள்(ட்)-த(ட)ல்** *oṟṟu-k-kēḷ-,* 12 செ.கு.வி (vi.) ***பிறர் பேச்சை மறைந்து நின்று கேட்டல்;*** to play the eavesdropper (செ.அக.)

*[ஒல் → ஒற்று + கேள்.]*

**ஒற்றுகை** *oṟṟugai,* பெ (n) 1. ***ஒற்றல்*** பார்க்க, see *oṟṟal* 2. ***மருந்து தேய்த்தல்;*** embrocation (சா.அக.).

*[ஒற்று → ஒற்றுகை]*

**ஒற்றுணர்ச்சி** *oṟṟuṇarcci,* பெ. (n) ***ஒற்றுமையுணர்வு;*** common feeling, seeing eye to eye, agreeing in sentiment (செ.அக.)

*[ஒல் → ஒன்று → ஒற்று + உணர்ச்சி]*

**ஒற்றுப்பெயர்த்தல்** *oṟṟu-p-peyarttal,* பெ (n) ***ஒருமொழியுந் தொடர்மொழியுமாக நின்று வெவ்வேறு பொருள் தருவதாகப் பாடப்படும் மிறைக் கவி*** (தண்டி.95,உரை); verse composed in such a way as to admit of the words being interpreted by artful analysis to convey more than one meaning. (செ.அக.)

*[ஒற்று + பெயர்த்தல்.]*

**ஒற்றுமை**[1] *oṟṟumai,* பெ. (n) 1. ***ஒன்றாயிருக்குந் தன்மை;*** union, agreement, concord; oneness. "ஒற்றுமை கொள்ளாதார் நட்பு" (நாலடி,237). 2. ***மனம் ஒருநிலைப்படுகை;*** application of the mind to one object, close attention concentration of thought. "ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்து" (திருவாச.3,128) "ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு" (பாரதியார்.).

*[ஒல் → ஒன்று → ஒற்று → ஒற்றுமை.]*

**ஒற்றுமை**[2] *oṟṟumai,* பெ. (n) ***ஒற்றரின்தன்மை;*** qualities requisite in a spy. "ஒற்றுமையால் விண்ணாடர் பொருட்டிவண் மேவியுளான்" (கந்தபு.அக்கினிமு,வதை.7) (செ.அக.).

*[ஒற்று = ஒற்றன். ஒற்று → ஒற்றுமை.]*

**ஒற்றுமை**[3] *oṟṟumai,* பெ. (n.) 1. ***உரிமை;*** right. 2. ***குறிப்பு;*** indication. 3. ***தகுதி;*** fitness. 4. ***செல்வம்;*** wealth. (செ.அக.).

*[ஒல் → ஒன்று → ஒற்று → ஒற்றுமை.]*

**ஒற்றுமைகோடல்** *oṟṟumai-kōdal,* பெ. (n.) ***வேளாண் மாந்த ரியல் புகளு ளொன்று*** (திவா.); living in peace with others, characteristic of the Vēḷāḷas. (செ.அக.).

*[ஒல் → ஒற்று → ஒற்றுமை + கோடல்.]*

**ஒற்றுமைநயம்** *oṟṟumai-nayam,* பெ (n) 1. ***ஒற்றுமைத் தன்மை;*** intimate connection, opp to வேற்றுமைநயம் "ஒற்றுமை நயத்தினொன் றெனத் தோன்றினும்" (நன்.451). 2. ***காரணகாரியங்கள் ஒன்றாயிருக்கை*** (மணி 30,220), identity of cause and effect (செ.அக.)

*[ஒற்றுமை + நயம்]*

**ஒற்றுவன்** *oṟṟuvaṉ,* பெ (n) ***ஒற்றன்*** பார்க்க, see *oṟṟaṉ.* "ஐயன தொற்றுவன்" (கந்தபு.நகரழி 36) (செ.அக.)

ம. ஒற்றன்

*[ஒற்று → ஒற்றுபவன் → ஒற்றுவன]*

**ஒற்றுவி-த்தல்** *oṟṟuvi-,* 1 பி.வி (cv) ***ஒற்றுமூலமறிதல்;*** to keep oneself informed of events through spies or secret emissaries ஒற்றி னானே ... ஒற்றுவித்து (குறள்.583,உரை) (செ.அக.)

*[ஒற்று → ஒற்றுவி (பி.வி.)]*

**ஒற்றுறுப்பு** *oṟṟuṟuppu,* பெ (n) ***செங்கோட்டியாழில் நரம்பினும் பத்தரினும் தாக்குவதோர் கருவி*** (சிலப்.13,108,அரும்.), piece in the yāḻ adjoining the strings and the belly, prob. fret. (செ.அக.)

*[ஒற்று + உறுப்பு.]*

**ஒற்றெழுத்து** *oṟṟeluttu,* பெ. (n.) ***மெய்யெழுத்து*** (திவா.); consonant. (செ.அக.).

*[ஒற்று + எழுத்து.]*

**ஒற்றை** *oṟṟai,* பெ (n) 1. ***ஒன்று*** (நன்.185,விருத்.); one; one of a pair. 2 ***ஒற்றைப்பட்ட எண்;*** odd number "மறையோ ரொற்றைப்பட வரித்துப் வேண்டும்" (மச்சபு.சபிண்டீ.27) "இரட்டைப்பட எண்ணியதில் ஒற்றைப்பட்டதம்மே" (குற்றா.குறவஞ்சி.) 3. ***தனிமை;*** singleness, soleness, uniqueness அவன் ஒற்றை யாயிருக்கிறான் 4. ***ஒப்பின்மை;*** incomparableness "ஒற்றைச் சேவகனே" (திருவாச.36,10) 5 ***தனியேடு;*** loose leaf of a book கீழே விழுந்த ஒற்றையை எடு 6. ***ஒரு துளைக்கருவி;*** a kind of musical instrument. "முன்னொற்றை யிருசங்க முடனூத" (பாரத.நிரை மீட்சி 5) (செ.அக.).

**க.** ஒத்தெ; **து.** ஒத்தெ.

*[ஒன்று → ஒள்றை → ஒற்றை.]*

**ஒற்றைக்கண்** *oṟṟai-k-kaṇ,* பெ. (n.) 1. ***ஒருகண்;*** one eye or a single eye. 2. ***ஒருகண் பார்வை;*** strabismus. (சா.அக.).

*[ஒற்று → ஒற்றை + கண்.]*

**ஒற்றைக் கண்ணன்** *oṟṟai-k-kaṇṇaṉ,* பெ. (n.) 1. ***ஒரு கண் தெரிந்தவன்;*** one-eyed person. 2. ***வெள்ளி*** (சுக்கிரன்) (வின்.); Šukra, the priest of the asuras having only one eye. (செ.அக.).

*[ஒற்றை + கண்ணன்.]*

**ஒற்றைக்கை** *oṟṟai-k-kai,* பெ. (n.) *ஒருகையாற் காட்டற் குரிய முத்திரை* (அபிநயம்) (பாரத பாவ 19); gesture with one hand (செ.அக.)

*[ஒற்றை + கை.]*

**ஒற்றைக்கொம்பன்** *oṟṟai-k-komban,* பெ. (n.) 1 *ஒற்றைக் கொம்புள்ள யானை;* elephant with one tusk 2. *பிள்ளையார்;* Pillaiyār (Ganēša) who has only one tusk (செ.அக.)

*[ஒற்றை + கொம்பன் உச்சிக் கொம்பன் பார்க்க.]*

**ஒற்றைச்சார்** *oṟṟai-c-cār,* பெ. (n.) *இடையில் திறந்த இடமில்லாத வீடு* (யாழ்ப்.), house without an open space in the centre. (செ.அக.)

*[ஒற்றை + சார்.]*

**ஒற்றைத்தலைவலி** *oṟṟai-t-talai-vali,* பெ. (n.) *ஒற்றைத் தலைநோய்;* headache on one side (செ.அக.).

*[ஒற்றை + தலை + வலி.]*

**ஒற்றைத்தாலி** *oṟṟai-t-tāli,* பெ. (n.) *தாலிமட்டுமான கழுத்தணி* (வின்.), marriage badge, without any other accompanying jewels, pendants, etc. (செ.அக.).

ம. ஒற்றத்தாலி

*[ஒற்றை + தாலி.]*

**ஒற்றைத்தாழ்ப்பூட்டு** *oṟṟai-t-tāḻ-p-pūṭṭu,* பெ. (n.) *ஒற்றைத்தாழுள்ள பூட்டு* (வின்.); lock with a single bolt; single lock (செ.அக.).

*[ஒற்றை + தாழ் + பூட்டு.]*



ஒற்றைத் தாழ்ப்பூட்டு

**ஒற்றைத்துலா** *oṟṟai-t-tulā,* பெ. (n.) *ஒற்றையேற்றம்* (வின்.); well-sweep made of one solid timber. (செ.அக.).

*[ஒற்றை + துலா.]*

**ஒற்றைநாடி**[1] *oṟṟai-nāḍi,* பெ. (n.) *ஒல்லியான உடம்பு;* lean or spare body. ஒற்றை நாடி மனிதன் (செ.அக.).

*[ஒற்றை + நாடி.]*

**ஒற்றைநாடி**[2] *oṟṟai-nāḍi,* பெ. (n.) *மாட்டுக்குற்றவகை* (பெரிய.மாட்.17); defect in cattle. (செ.அக.).

*[ஒற்றை + நாடி.]*

**ஒற்றைநின்றாள்** *oṟṟai-niṉṟāḷ,* பெ. (n.) *கைம்பெண்* (விதவை.); widow "ஒற்றை நின்றாடுணை யூறுபடுத்து" (நீலகேசி.332) (செ.அக.).

*[ஒற்றை + நின்றாள்.]*

**ஒற்றைநூல்வளைவு** *oṟṟai-nūl-valaivu,* பெ. (n.) *கட்டட வளைவு வகை;* (CEM), segmental arch. (செ.அக.).

*[ஒற்றை + நூல் + வளைவு.]*



ஒற்றை நூல்வளைவு

**ஒற்றைநூற்புடைவை** *oṟṟai-nūṟ-puḍai-vai,* பெ. (n.) *தனியிழையாற் செய்த சீலை* (வின்.); single-threaded cloth (செ.அக.).

*[ஒற்றை + நூல் + புடைவை.]*

**ஒற்றைப்பட்டுமணி** *oṟṟai-p-paṭṭu-maṇi,* பெ. (n.) *ஒற்றைவட மணி* (வின்.); necklace of single beads strung on silken string. (செ.அக.).

*[ஒற்றை + பட்டு + மணி. பட்டு = மணிகோக்கும் பட்டு நூல்.]*

**ஒற்றைப்படவெண்ணு**[1]**-தல்** *oṟṟai-p-paḍa-v-eṇṇu-,* 11.செ.கு.வி. (v.i.) *ஒற்றை யெண்களை மாத்திரம் எண்ணுதல்;* to enumerate only the odd number.

*[ஒற்றை + பட + எண்ணு.]*

**ஒற்றைப்படவெண்ணு**[2]**-தல்** *oṟṟai-p-paḍa-veṇṇu-,* 12.செ.குன்றாவி. (v.t.) *பண்டங்களை ஒவ்வொன்றாக எண்ணுதல்* (வின்.); to count things one by one. (செ.அக.).

*[ஒற்றை + பட + எண்ணு.]*

**ஒற்றைப்படை** *oṟṟai-p-paḍai,* பெ. (n.) *ஒற்றையான எண்* (உ.வ.); odd number. (செ.அக.).

*[ஒற்றை + படை. படு → படை.]*

**ஒற்றைமுலைச்சி** *oṟṟai-mulaicci,* பெ. (n.) *கண்ணகி, சிலப்பதிகாரத் தலைவி;* single-breasted goddess. Kannagi. (சேரநா.).

ம. ஒற்றமுலச்சி.

*[ஒற்றை + (முலைத்தி) முலைச்சி.]*

**ஒற்றையடிப்பாதை** *oṟṟai-y-aḍi-p-pādai,* பெ. (n.) ***நடந்த காற்றடம்பட்டு அமைந்த வழி;*** foot-path. (செ.அக.).

*[ஒற்றை + அடி + பாதை ]*

**ஒற்றையலகுசாகுபடி** *oṟṟai-y-alagu-ć-ćāgupaḍi,* பெ. (n) ***ஒற்றையாக நாற்றுகளை நட்டுப் பயிர்செய்கை;*** cultivation by transplanting single seedlings (செ.அக.).

*[ஒற்றை + அலகு + சாகுபடி ] .*

**ஒற்றையாள்** *oṟṟai-y-āl,* பெ. (n.) ***சுற்றத்தாரெவருமில்லாத தனியாள்;*** single person, one having no relations. (செ.அக.).

*[ஒற்றை + ஆள்.]*

**ஒற்றையான்** *oṟṟaiyāṉ,* பெ. (n) 1. ***கூட்டத்தினின்று பிரிந்து தனியாகத் திரியும் காட்டு யானை;*** rogue-elephant 2. ***ஆண் பன்றி, காட்டுப்பன்றி;*** wild boar 3. ***சுற்றத்தாரற்ற தனியாள்;*** sole member without a family. (சேரநா.).

ம. ஒற்றயான

*[ஒற்றை + ஆன் ]*

**ஒற்றையிதழ்ப்பூ** *oṟṟai-y-idaḷ-p-pū,* பெ. (n.) ***ஓரிதழுள்ள மலர்;*** monopetalous flower (செ.அக.).

*[ஒற்றை + இதழ் + பூ ]*

**ஒற்றையிரட்டை பிடிக்கை** *oṟṟai-y-iraṭṭai-piḍikkai,* பெ (n) ***ஒருவகை விளையாட்டு;*** playing at odd and even. (செ.அக ).

*[ஒற்றை + இரட்டை + பிடிக்கை.]*

**ஒற்றைவலி** *oṟṟaivali,* பெ. (n) ***ஒரு பக்கத்து வலி;*** neuralgia on one side only-hemialgia. (சா.அக.).

*[ஒற்றை + வலி.]*

**ஒற்றைவலிப்பு** *oṟṟaivalippu,* பெ. (n.) ***ஒரு பக்கத்து இழுப்பு;*** chorea or convulsion which affects only one side-hemichorea. (சா.அக.).

*[ஒற்றை + வலிப்பு.]*

**ஒற்றைவலை** *oṟṟai valai,* பெ. (n.) ***ஒருவகைப் பெரிய வலை;*** a kind of fishing-net. (சேரநா.).

ம. ஒற்றவல.

*[ஒற்றை + வலை.]*

**ஒற்றைவாய்க்கணக்கு** *oṟṟai-vāy-k-kaṇakku,* பெ. (n.) ***ஒரேவகையாய்த் தீரும் கணக்கு*** (வின்.); calculation made by a single operation, as by once adding, subtracting, multiplying, or dividing. (செ.அக.).

*[ஒற்றை + வாய் + கணக்கு.]*

**ஒற்றைவாள்** *oṟṟaivāḷ,* பெ. (n.) ***ஒருவகை வாள்;*** a kind of sword (சேரநா.).

ம. ஒற்றவாள்.

*[ஒற்றை + வாள்.]*

**ஒற்றொழிபாட்டு** *oṟṟoḻi-pāṭṭu,* பெ (n) ***மெய்யெழுத்தில்லாப்பாட்டு*** (சூடா.); verse, the words of which do not contain any pure consonants (செ.அக ).

*[ஒற்று + ஒழி + பாட்டு.]*

**ஒறு[1]-தல்** *oṟu-,* 4.செ குன்றாவி (vt) ***குறைதல்;*** to be reduced, to diminish

*[ஒல் (ஒல்கு) = குறைதல் (த வி.) ஒல் → ஒறு (குறைத்தல்) பி.வி குறைவு. பிறவினை பெயருமாகும்.]*

**ஒறு[2]-த்தல்** *oṟu-,* 4. செ குன்றாவி (vt) 1 ***உறுப்புக் குறைத்துத் தண்டித்தல்;*** to punish, chastise by cutting the limbs "ஒப்பநாடி யத்தகவொறுத்தி" (புறநா 10,4). 2 ***கடிதல்;*** to rebuke, reprove "ஒறுப்ப வோவலை" (அகநா 342). 3 ***வெறுத்தல்*** (திவா.), to dislike, to be disgusted with 4. ***இகழ்தல்;*** to deride, ridicule "யாரே பிழைத்த தொறுக்கிற்பவர்" (குறள்,779) 5 ***அழித்தல்;*** to destroy "ஒறுத்தானா மொன்னார் புரங்கண் மூன்றும்" (தேவா 407,11). 6 ***ஒடுக்குதல்;*** to suppress, as the desires, to restrain, as the senses, to mortify, as the body, to curb, as the appetite, to subdue, as the passions. 'சற்றும் வாயொறுக்கிறா னில்லை' (வின்.). 7. ***வருத்துதல்;*** to afflict, distress, cause pain to "ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்" (குறள் )

*[ஒல் → (ஒல்கு) ஒடுங்குதல், ஒடுக்குதல், சுருக்குதல், குறைத்தல், அடித்தல், துன்புறுத்துதல். ஒல் → ஒறு - வருத்துதல். தண்டித்தல் ஒல் (த வி.) → ஒறு (பி வி ). ஒறுத்தல் உறுப்புக்குறைக்கும் தண்டனை.]*

**ஒறு[3]-த்தல்** *oṟu,* 4 செ கு வி (vi) ***குறைதல்*** (வின்.); to become scarce, scanty, as crops, as rain, to fail 2. ***ஊனமாதல்;*** to be defective ஒறுவாய் (செ.அக.).

*[ஒல் → ஒறு.]*

**ஒறு[4]-த்தல்** *oṟu-,* 4. செ.குன்றாவி. (v.t.) ***இவறுதல்;*** to be stingy, miserly "நூறுபொன்னு முத்தார மென்றே னொறுப்பேனோ" (தெய்வச்.விறலி 295) (செ.அக.).

*[ஒல் → ஒறு.]*

**ஒறு[5]** *oṟu,* பெ. (n) ***குறைவு;*** deficiency, shortage

*[ஒல் → ஒறு.]*

**ஒறுப்பு** *oṟuppu,* பெ. (n) 1 ***தண்டனை;*** chastisement, punishment 2 ***கடிந்துபேசுகை;*** rebuke, reproof 3. ***வெறுப்பு*** (வின் ); dislike, aversion, disgust 4. ***அடக்குகை;*** bridling the passions, self-mortification, self-denial 5. ***அருமை*** (வின்.) scarcity, dearness 6. ***குறைவு*** (வின்.); privation, lack. (செ.அக.).

ம. ஒறுப்பு. தெ. ரோயு.

*[ஒறு[2] → ஒறுப்பு.]*

**ஒறும்பு** *oṟumbu,* பெ. (n) ***வயல்களுக்கு வேண்டுமளவு குளத்தில் பாசன நீரில்லாமை;*** scarcity of water in the irrigation tank (செ.அக.).

*[ஒல் → ஒறு[1] → ஒறும்பு (குறைபடுதல்) ஒல் = சுருங்குதல். ஒறு = சுருக்கு, சுருக்கம், குறைவு.]*

**ஒறுவனை** *oṟuvaṉai*, பெ (n) *குறைவு* (நாஞ்.): scarcity (செ அக.).

ம. ஒறுவன (பஞ்சம்).

*[ஒல் → ஒறு¹ → ஒறுவு → ஒறுவனை. ஒறும்பு பார்க்க; see oṟumbu]*

**ஒறுவாய்** *oṟu-vāy*, பெ. (n) 1. ***சிதைவடைந்த வாய்;*** mouth with congenital fissure of lips, sunken mouth "பாதிநாக்கு முதடுகளிற் பாதியுந் தின்றொறுவாயேம்" (கலிங் 204) 2 ***ஒடிந்த விளிம்பு;*** broken edge of a pot "ஒறுவாய்த்தலையிற் பலி" (தேவா.1125,6) (செ.அக.).

*[ஒறு + வாய்]*

**ஒறுவாய்ப்பல்** *oṟu-vāy-p-pal*, பெ. (n) ***சிதைவடைந்த பல்வரிசை;*** row of teeth with one of more gaps (செ அக.).

*[ஒறு + வாய்ப்பல்.]*

**ஒறுவாய்ப்பானை** *oṟu-vāy-p-pāṉai*, பெ. (n) ***விளிம்பு சிதைந்த பானை;*** pot chipped along its mouth (செ அக)

*[ஒறு¹ + வாய் + பானை]*

**ஒறுவாய்போ-தல்** *oṟu-vāy-pō-*, 8.செ கு வி. (vi) 1. ***வாயொடிதல்;*** to be broken at the edge, to be chipped off ஒறுவாய் போன பானையிலே (பெரும்பாண் 99, உரை). 2. ***குறைவடைதல்;*** to be defective. 'உம்முடைய நாராயணத்தவமும் ஒருவாய்போய்' (அஷ்டாத ச.பக்.158) (செ அக.).

*[ஒறு + வாய் + போ.]*

**ஒறுவாயன்** *oṟu-vāyaṉ*, பெ. (n) ***உதடு சிதைந்த வாயுடையவன்*** (வின்.); harelipped man. (செ.அக.).

*[ஒறு¹ + வாயன்.]*

**ஒறுவினை** *oṟu-viṉai*, பெ. (n.) 1. ***தீராத் துன்பம்;*** unending trouble or difficulty 2. ***நாட்பட்ட நோய்;*** long continuous illness (செ அக.).

*[ஒறு² + வினை]*

**ஒறுவு** *oṟuvu*, பெ. (n) ***வருத்தம்*** (சங்.அக.); trouble; distress (செ.அக.).

ம. ஒறுவு

*[ஒறு¹ + ஒறுவு.]*

**ஒறுவுகலம்** *oṟuvu-kalam*, பெ. (n) ***ஒருவாய்ப்பானை*** பார்க்க; see *oṟu-vāy-p-pāṉai.* "ஒறுவுகலங்காடி" (சினேந்.175) (செ.அக.).

*[ஒறு¹ → ஒறுவு + கலம்.]*

**ஒன்¹** *oṉ*, இடை. (part.) ***ஒருசாரியை*** (தொல்.எழுத்.180); expletive. (செ அக.).

*[அன் → ஒன்.]*

**ஒன்²** *oṉ*, 4.செ.கு.வி. (vi.) 1. ***பொருந்துதல்;*** to join. 2. ***ஒன்றுதல்;*** to unite

*[ஒல் → ஒன். (சு.வி.6).]*

**ஒன்பதினாயிரப்படி** *oṉpadiṉ-āyira-p-padi*, பெ. (n.) ***திருவாய் மொழிக்கு நஞ்சீயர் செய்த விரிவுரை*** (வியாக்கியானம்), ***ஒன்பதினாயிரம் நூற்பாக்களைக்*** (கிரந்தங்களைக்) ***கொண்டது;*** name of a commentary by Nañjīyar on the Tiruvāy-moḻi, consisting of 9000 granthas (செ.அக)

*[ஒன்பது + இன் + ஆயிரம் + படி.]*

**ஒன்பது** *oṉbadu*, பெ. (n) 1. ***ஒன்று குறைந்த பத்து, எட்டின்மேல் ஒன்று;*** the number nine, i e one from ten or one before ten ஒன்பது (தொல்.). 2 ***'கூ' என்னும் எண்ணுக்குறியீட்டுக்குரிய தமிழ் எண்ணுப்பெயர்;*** name of the ninth numerical symbol in Tamil

மறுவ. ஒன்பஃது, ஒன்பான், தொண்டு, தொண், தொல்; ம. ஒன்பது; க. ஒம்பத்து; தெ. தொம்மிதி; து. ஒர்ம்ப; பட. ஒம்பத்து; கைக். வம்பெரு, வந்தி, எரு, ஒப்து, இரு. வெம்பது, குட. ஒயிம்பது, கோத. ஒனபாத், ஒர்பாத், குற. ஒம்லுதி, துட. வின் பொத், ஒன்பத்; கோண். உண்மா, உண்ம, உண்மாக், கட. தொம்மிதி

*[ஒன்று + பத்து - ஒன்பத்து → ஒன்பது 'ஒன்று' ஈறுகுறைந்தது கடைக்குறை. பத்து → பது எனத்திரிந்தது இடைக்குறை. ஒன்று குறைந்த பத்து என்பதே மரூஉமுடிபாகி ஒன்பது எனப் பேச்சுவழக்கில் ஈரசைச் சொல்லாகக் குறுகிற்று இனி ஒன்பதுக் குமுன் பழந்தமிழில் வழங்கிய தொண்டு என்னும் ஒன்பதைக் குறித்த சொல்லும், பத்தினும் குறைவுற்றது என்னும் பொருளை வெளிபபடுததும் 'தொள்' (குறைபடுதல்) வினையினின்றே தோன்றியிருததலைத்'தொண்டு' என்னும் சொல்லை நோக்கி அறியலாம் ]*

ஒன்பது தொண்டு என்னும் எண்ணுப் பெயர்கள் அடிநிலைத்திரிபுற்றும் முடிநிலைத்திரிபுற்றும் உலக மொழிகளில் வழங்கி வருகின்றன.

ஒன்பது கூட்டுச் சொல்லாகலான்; மூவசையும் மூவசைக்கு மேற்பட்டதுமான கூட்டுச்சொல் பேச்சுவழக்கில் ஓரசை அல்லது ஈரசை மரூஉச் சொல்லாகததிரியும் என்னும் சொற்பிறப்புப் பொதுநெறியின் வணணம் திரவிடம் தவிர்ந்த மொழிகளில் அடிநிலைத்திரிபினும் முடிநிலைத்திரிபினையே மிகுதியாகப் பெற்றுள்ளது இதன் விளக்கத்தைச் சொற்பிறப்பு விதிமுறை களில் காண்க

ஒன்பஃது, ஒன்பது, ஒன்பான் என மூவேறு இடவழக்குகளின் விளைவாகப் பல்வேறு கிளைமொழிகளில் ஊடாடிப்பின் வரும் நிலைகளில் இச்சொல முடிநிலைத்திரிபுற்றுள்ளது அடி நிலைத்திரிபு அருகிக் காணப்படுகிறது.

**ஒன்பது ஒ(உ)-ஓ ஆ:** அடிநிலைத்திரிபுற்றவை,

Mitun Naga āku, santali āre, ārē; *Georg* utsgu

**ஒன்பஃது - ஒஃது - கொது:** முதல்வகை முடிநிலைத்திரிபுற்றவை

*Chine* kiu, kau, chiu, *Nep* (Gyamai) chyu, *Sikk* kyot, *Thai* kno; *Siam* kau, kaut; *Laos* kau, kew; *Anna* kyin, *Shan* kaut, *Burm.* ko; *Bali* kutus; *Buta* gu, *Tibd*-gu, guh; *Jap* ku, ko, konotru;

*Mag* ki-lene, *Mongol* killien, *Mag Hung*, Kilenc; *Nep* (serpa) Guh, (Murmi) Kuh

**ஒன்பது - பது - ப:** இரண்டாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை

*Nep* (limbu) phangbh, (kiranti) phanghya, *Circ* bughu; *O Egy* psj, pst; copt psyt.

**ஒன்பது - பது - து - தொ:** மூன்றாம் வகை முடிநிலைத்திரிபுற்றவை.

*Naga* thu, thaku, taku, *Burm* (kunaj) takau, *Heb* tischah, *Afr* (swahili) ti-sa, *Ara* tissa-ha, tisâ, *Iraq* tisa, *Turk* do-kuz

**ஒன்பது - பது - து - சு:** நான்காம் வகை முடிநிலைத்திரிபுற்றவை

*Chine* (Mand ) Chiu, jiu, *Jawa* sanga, ngoho, *Malay* sambitan

**தொண் (தொண்டு) - தெள:** முதல்வகை அடிநிலைத்திரிபுற்றவை.

*Te* tommidi, *Savara* tinji; *Tib* dugu, dgu, czech devet, *Turk* dokuz, *Russ* dyeryat, *pol* dziewiec, *Beng* (Deoria chutia) dugu, (Garo) ju; *Serbo* denet

**தொள் (தொண்டு) - தெள - நெள:** இரண்டாம் வகை அடிநிலைததிரிபுற்றவை

*L* navem, *G* neutv, *OE* nigon, *E* nine, *GK* ennea, *Iri* naoi, *It port*, nove, *F* neuf, *Sp* nuene, *Rum* noua, *Dut* negen, *Swed* nio, *Dan, Norw* ni, *Esp* nau, *yid* nein, *Goth* nian, *African* nege

*Brah* nul, *Sind* nava, *Sinh* nawa, nama, *Skt* navan, nava, *Nep* nou, nau, *Kola* nau, *Pkt, Pali Hind Guj Mar Ori Beng Punj Kosh Ass Urd*, nav

**கூட்டுச்சொல்லாக வழங்குவன**

ஒன்பது, தொள் (தொண்டு) எனனும் எண்ணுப்பெயர்களைப் பத்திலிருந்து ஒன்றைக்கழித்துக் கூட்டுச்சொலலாகப் பழங்குடிமக்களுள் சிலா வழங்கியபோது அவை மரூஉச் சொல்லாகக் குறுகாத நிலையில் இருசொல்புணர்ந்த நிலைதத கூட்டுச்சொல் நிலையிலேயே நிலைத்துவிட்டன ஒன்று முதல் ஐந்து வரையிலான எணணுப்பெயாகளும் பத்தினைக் குறித்த எணணுப்பெயரும் அவரவா மொழிகளில மிகவும் திரிபுறற பிறகு இந்தக் கூட்டுச்சொற்கள் உருவாக்கப்பட்டுளளன இவை பெருக வழங்கும் வணிக ஊடாட்டம் பெறாததால் மரூஉமுடிபு எயதவில்லையெனலாம்

பின்னிசு, பாசுக்கு மலையம், இந்தோனேசிய மொழிகளில் இந்நிலை காணப்படுகிறது

| | | |
|---|---|---|
| Finn | yk - dekson | (ஒனறு குறைந்த பத்து) |
| *Basq* | hed - etarsi | (ஒனறு குறைநத பதது) |
| *Malay* | sem - bilan | (ஒன்று குறைநத பத்து) |
| *Indsne* | sem - bilan | (ஒன்று குறைநத பத்து) |

அமெரிக்கபபழங்குடியினருள் ஒரு பிரிவினராகிய அசுதெக்கு மக்களும் நகுவாத்திமக்களும் ஒன்பதை ஐந்தும் நான்கும் என்னும கூட்டுச்சொல்லால் குறித்தனா கிரேககரின் முன்னோா எட்டும் ஒன்றும் என்னும் கூட்டுச் சொல்லால் ஒன்பதைக குறித்தனர்

| | | | |
|---|---|---|---|
| Amer's | (aztec) shek-nowe | | (ஐந்தும் நான்கும் 5 + 4) |
| | (Nahuatl) chek-nawe | | (ஐந்தும் நான்கும் 5 + 4) |
| *Greek* | | en + nea | (எட்டும் ஒனறும் 8 + 1) |

கிரேக்கமொழியில் எட்டுக்குரிய 'எண' எனனும பழந்தமிழச் சொல்லே வழககூன்றியிருபபதும் அமெரிககப பழங்குடிமக்களின் மொழிகளில் ஐநதைக் குறித்த பழநதமிழச சொலலாகிய 'கை' எனபதன் திரிபாகிய செய (செக்) வழக்கூன்றியிருப்பதும் கூர்ந்து நோக்கத்தககது

ஒன்று முதல் பத்து வரையிலான தமிழ் எண்ணுப்பெயர்கள உலக மொழிகளில் வியககத்தகக வகையில் ஊடாட்டம பெற்றிருப்பது ஞால முதன்மொழிக கொளகைக்கு அரண்சேர்ப்பதாயுள்ளது

**ஒன்பதொத்து** *onpadottu*, பெ (n) ***ஒருவகைத்தாளம்*** (திவ் திருவாய் ); mode of beating time (செ.அக ).

*[ஒன்பது + ஒத்து ]*

**ஒன்பான்** *onbān*, பெ (n) ***ஒன்பது*** பார்க்க; see *onbadu* "ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே" (தொல். எழுத் 465) (செ அக )

*[ஒன்பது → ஒன்பதின் → ஒன்பான். பதின் → பான்.]*

**ஒன்ற** *onra*, இடை. (part) ***ஓர் உவமைச் சொல்*** (தொல் பொருள் 286), sign of comparison (செ அக.).

*[ஒல் → ஒன்று → ஒன்ற ]*

**ஒன்றடிமன்றடி** *onradi-manradi*, பெ. (n) ***குழப்பம்;*** mixture of various things, topsy turvydom, confusion, lack of order or system (செ அக )

*[ஒன்று + அடி - ஒன்றடி = ஒன்றாகக் குழப்புதல். ஒன்றடி மன்றடி - எதுகை குறித்த மரபு இணைமொழி ]*

**ஒன்றடிமன்றடியாய்** *onradi-manradiyāy*, கு.வி.எ. (adv) ***ஒருசேர;*** in toto, completely (செ.அக.)

*[ஒன்றடி + மன்றடி + ஆய் ]*

**ஒன்றரைக்கண்ணன்** *onrarai-k-kannan*, பெ (n) ***ஒரு பக்கஞ் சரிந்த பார்வையன்;*** one who looks obliquely with half an eye shut; lit, man with an eye and a half, one who squints "ஒன்றரைக்கண்ணன் கண்டீர்" (அப்பர்தேவா )

*[ஒன்று + ஆரை + கண்ணன் - ஒன்றாரைக் கண்ணன் → ஒன்றரைக் கண்ணன் ஆரை = ஆர்ந்த, சரிந்த.]*

**ஒன்றலர்** *onralar*, பெ. (n) ***பகைவர்*** (பிங் ), lit those who are not one with a person, foes, enemies (செ.அக.).

*[ஒன்று + அல் + அர் 'அல்' - எ ம இ நி ]*

**ஒன்றறவாடம்** *onrara-vādam*, பெ (n) ***ஒன்றுவிட்டொரு நாள்;*** alternate days (செ.அக.).

*[ஒன்று + அறு + வாடம் ]*

**ஒன்றறிசொல்** *onran-col*, பெ. (n) ***ஒன்றன்பாற்சொல்;*** sign, of the impersonal class (செ அக.).

*[ஒன்று + அறி + சொல் ]*

**ஒன்றன் கூட்டம்** *onran-kūttam*, பெ. (n.) ***ஒரேபொருளின் கூட்டம்*** (நன் 300); collection of things of the same kind (செ அக.).

*[ஒன்று + அன் + கூட்டம்.]*

**ஒன்றன்பால்** *onran-pāl*, பெ (n.) ***அஃறிணையொருமைப்பால்;*** sign. of the impersonal class. (செ.அக.).

*[ஒன்று + அன் + பால்]*

**ஒன்றனை யொன்றுபற்றுதல்** *onranai-y-onru-parru-dal*, பெ (n) ***ஒருவகைக் குற்றம்*** (தொல்.சூ விருத். பக் 50); fallacy of mutual dependence. (செ.அக.).

*[ஒன்று + அன் + ஐ + ஒன்று + பற்றுதல்.]*

**ஒன்றா-தல்** *onrā-*, 6 செ கு வி. (v i) 1. ***முதலதாதல்;*** to be first "ஒன்றா வுயர்கொடி யொன்றின்று" (பரிபா.4,41) 2. ***ஒன்றுபடுதல்;*** coalesce 3 ***ஒன்றனுள் ஒன்று நிலைப்படல்*** (லயமாதல்); to be amalgamated 4. ***இணையின்றாதல்;*** to be without an equal. "ஒன்றாவுலகத்து" (குறள்.233) (செ.அக.).

*[ஒன்று + ஆ(கு).]*

**ஒன்றாக** *onrāga*, வி.எ. (adv.) ***உறுதியாக*** (குறள்.233, உரை.); certainly, surely, positively. "ஒன்றாக நல்லது கொல்லாமை" (குறள்.) (செ.அக.).

*[ஒன்று + ஆக.]*

**ஒன்றாதவஞ்சித்தளை** *onrāda-vañji-t-talai*, பெ. (n.) ***நிரையீற்றுரிச் சீர்ின்முன் நேரசைவருந்தளை*** (இலக் வி 718,உரை.); combination of two metrical feet, the first of which is a kani-c-cīr and the next a foot beginning with nēr-asai. (செ.அக.).

*[ஒன்று + ஆ + த + வஞ்சி + தளை.]*

**ஒன்றாமை** *onrāmai*, பெ (n) ***பகைமை;*** rivalry, enmity. "ஒன்றாமை யொன்றியார் கட்படின்" (குறள்,886) (செ.அக.).

*[ஒன்று + ஆ + மை. 'ஒன்றாமை' = பொருந்தாமை, சேராமை. 'ஆ' - எ.ம.இ.நி.]*

**ஒன்றார்** *onrār*, பெ. (n.) ***பகைவர்;*** foes, opponents. "ஒன்றார் மும்மதி லெய்தவன்" (தேவா.1062,8) (செ.அக.).

*[ஒன்று + ஆ + ஆர் - ஒன்றார். 'ஆ' - எ.ம.இ.நி.]*

**ஒன்றாலொன்றும்** *onrāl-onrum*, கு.வி.எ. (adv) ***யாதொன்றினாலும்;*** by whatever means, at all, used with a negative 'ஒன்றாலொன்றுங் குறைவில்லை' (வின்.) (செ.அக.).

*[ஒன்றால் + ஒன்றும்.]*

**ஒன்றி[1]-த்தல்** *onri-*, 5. செ.கு.வி. (v.i.) ***பொருந்துதல்;*** to unite, combine. 'ஒன்றித்து வாழவேண்டும்' (வின்.) (செ.அக.).

*[ஒன்று → ஒன்றி.]*

**ஒன்றி[2]** *onri*, பெ. (n) 1. ***தனிமை;*** solitariness; singleness; loneliness 2. ***தனித்த ஆள்;*** one who is alone; solitary person (செ அக )

க. ஒண்ட்டி; தெ. ஒண்டு

*[ஒன்று → ஒன்றி]*

**ஒன்றி[3]** *onri*, பெ (n) ***மாணி*** (பிரமசாரி); celibate (செ.அக ).

*[ஒன்று → ஒன்றி.]*

**ஒன்றிக்கட்டை** *onrikkattai*, பெ. (n.) ***தனித்த ஆள்;*** single person, individual (சா.அக.).

*[ஒன்றி + கட்டை.]*

**ஒன்றிக்காரன்** *onri-k-kāran*, பெ (n) ***மனைவியில்லாதவன்*** (வின்.); bachelor or widower (செ.அக.).

*[ஒன்றி + காரன் - ஒன்றிக்காரன்]*

**ஒன்றிப்பு** *onrippu*, பெ. (n.) ***ஒருமிப்பு;*** union, harmony; concord; unity (செ.அக.).

*[ஒன்றி → ஒன்றிப்பு.]*

**ஒன்றியவஞ்சித்தளை** *onriya-vañji-t-talai*, பெ. (n) ***நிரையீற்றுரிச் சீர்ின்முன் நிரையசை வருந் தளை*** (இலக் வி 718,உரை ); combination of two metrical feet, the first of which is a kani-c-cīr and the next a foot beginning with nirai-y-asai (செ.அக.).

*[ஒன்றிய + வஞ்சி + தளை.]*

**ஒன்றியார்** *onriyār*, பெ. (n.) ***தன்னைச்சேர்ந்தவர்;*** friends; associates. "ஒன்றாமை யொன்றி யார்கட்படின்" (குறள்.886) (செ.அக.).

*[ஒன்றி + அவர் - ஒன்றியவர் → ஒன்றியார்.]*

**ஒன்றியாள்** *onri-y-āl*, பெ. (n.) ***ஒற்றையாள்;*** single person (செ.அக.).

*[ஒன்றி + ஆள்.]*

**ஒன்றிரண்டாய் அரைத்தல்** *onrirandāy araittal*, பெ. (n) ***பொடியாக்காமல் சிறிய துண்டுகளாகும்படி அரைத்தல்;*** grinding into several small rough granular pieces without making into a fine powder. (சா.அக.).

*[ஒன்று + இரண்டு + ஆய் + அரைத்தல்.]*

**ஒன்றிரண்டு** *onrirandu*, வி.எ. (adv.) ***மிகக்குறைவு;*** one or two, a few.

ம. ஒண்ணுரண்டு.

*[ஒன்று + இரண்டு - ஒன்றிரண்டு. எண்ணிக்கைக் குறைவு குறித்த குறிப்பு மொழி.]*

**ஒன்றிலொன்றின்மை** *onrilonrinmai*, பெ (n) ***ஒன்றித்த பாங்கு இரண்டிலும் இன்மை*** (சி.சி.அளவை. மறைஞா.); mutual negation of identity of two things. (செ.அக.).

*[ஒன்றில் + ஒன்று + இன்மை.]*

**ஒன்றினமுடித்த றன்னினமுடித்தல்** *onrinamudit-tarannina-mudittal-*, பெ. (n) *ஒருபொருளைக் கூறி முடிக்கையில் அதற்கினமான பொருளையும் அங்குத்தானே கூறி முடிக்கையாகிய உத்தி* (நன் 14), treating of some item of the subject matter of a treatise in such a way as to bring within its purview other items akin to it, one of 32 utti (செ அக)

*[ஒன்றினம் + முடித்தல் + தன்னினம் + முடித்தல்]*

**ஒன்று[1]-தல்** *onru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***ஒன்றாய்ச் சேர்தல்;*** to unite, to coalesce, to grow together, as two trees, to become one 2. ***ஏற்றுக்கொள்ளுதல்;*** to agree 3. ***மனங்கலத்தல்;*** to be on intimate terms with "நிரயங்கொளொடுவரோ டொன்றாது" (புறநா 5,6) 4. ***ஒருமுகப்படுதல்;*** to set one's mind solely on an aim or object "நன்புல னொன்றி நாதவென் றரற்றி" (திருவாச 4,82) 5. ***உவமையாதல்;*** to resemble, to be similar வேயொன்றுதோ ளொருபால் (தொல் பொருள்.286,உரை) (செ அக)

ம. ஒன்னுக, க., பட. ஒந்து, தெ. ஒனருட, ஒண்டு

*[ஒல் → ஒன் → ஒன்று]*

**ஒன்று[2]** *onru*, பெ. (n) 1. ***ஒற்றைப்படை முதல் எண், இரண்டில் பாதி, மேல்வாயிலக்கத்தின் மிகச் சிறு முதல் எண்ணிக்கை;*** the first of the odd number and the lowest integer, half of two "ஒன்றறிவதுவே உற்றறிவதுவே" (தொல் பொருள் மரபு 27) 2. ***'க' என்னும் எண்ணுக் குறியீட்டுக்குரிய தமிழ் எண்ணுப் பெயர்;*** name of the numerical symbol 'க' in Tamil

ம. ஒன்னு, க. ஒந்து, தெ. ஒக, ஒக்க, ஒகட்டி, ஒண்டு, து. ஒன்சி, பட. ஒந்து, கோத. ஒத், கொற. ஒண்ட், இரு. வொந்து, கை. வனு, வண்ட, எரு. ஒண்டு, துட. வித், குட. ஒந்தி, பர். ஒக, கோண். உந்தீ, ஒணட், உண்டி, கொலா. ஒக்கொத், குரு. ஒண்டா, ஒன், மால். ஒன்த், எண்ட், ஒணட், பிரா. அசிட்

*[உல் → ஒல் → ஒன்று ஒல்லுதல் = ஒன்றுசேர்தல், ஒன்றாகத் திரளுதல், ஒரேகட்டில் அல்லது அமைப்பில் உருப்பெறுதல், ஒரேபொருளாகக் காணப்படுதல் என்னும் கருத்துப் பொருளில் ஒன்றைக் குறித்தது]*

ஒன்று என்னும் சொல் தமிழில் எண்ணுப் பெயரெச்சமாகும் போது ஓர், ஒரு, ஒற்றை, ஒண்டி, ஒக்க, ஒக்கமை, ஒக்கி, ஒட்டை, ஒத்தை, ஒவ, ஒள் எனப்பலவகை உலகவழக்குத்திரிபுகள் பெறும் இவற்றை அடிநிலைத்திரிபுகள் என்பர் பேச்சு வழக்கில் முடிநிலைத்திரிபு பெறுவது காலத்தால் பிற்பட்ட மொழிவளர் நிலைகளைச் சுட்டும். அதனபடி இச்சொல்லின் முதனிலை எழுத்தாகிய ஒகரம் மறைந்து அடுத்து எழுத்துகளின் திரிபால் வளர்ந்த சொல்லாட்சிகள் முடிநிலைத்திரிபுகள் எனப்படும் இதன் மூலம் ஒன்று என்னும் மூலச்சொல் உலகமொழிகளில் அடிநிலைத்திரிபுகள் நிலவழிப்பரவல்களாக ஊடாடிய காலத்தையும் முடிநிலைத்திரிபுகளாக ஊடாடிய மொழிகளின் அல்லது மொழிபேசும் பகுதிகளின் வரலாற்று வழித்தடங்களையும் கண்டறியலாம்

**ஒன்று → ஒல் → ஒ** - முதல்வகை அடிநிலைத்திரிபுற்றவை

*O Egyp* we, *Chinese Mand* yi, i, *Tib* (ayami) i, iku, *Manipuri* ania

**ஒன்று → ஒள்** - இரண்டாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை

*L* unus, *F* un, *G* ein, *Gk* ena, en, *ON* einn, *Dut* een, *Kore* han, *It* uno, *Portu* um, *Sp* uno, *OE* ān, *E* one, *Goth* ains, *Afn* ean, *Siam* neen, nung, *Laos* nung, *Rum* un, *Swed* en, *Dan* ēn, *Esp* unu, *Yid* ein

**ஒன்று → ஒரு → ஓர்** மூன்றாம வகை அடிநிலைத்திரிபுற்றவை

*Afn*-(Nubi) wer, *Iraq* ferd, *Georg* erthi, *Turk* bir

**ஒன்று → ஒற்றை → ஒத்தை** - நான்காம் வகை அடிநிலைத்திரிபுற்றவை

*Jap* hitotsu, hito, *Nawnsang Naga* vanthe, *Uraon* unta, *Russ* adin, adyin, *Poli* yedna, yednoo, *Serbo* jedan, *Indone* satu, *Jawa* setu, *Malay* satu, *Basq* bot, *Vietn* mot, *Copt* vot, *Burm* at

**ஒனறு → ஒக்க, ஒக** ஐந்தாமவகை அடிநிலைத்திரிபுற்றவை

*Mag Hung* egy, *O Ar* ughad, ahad *Ar* vaahid, wahid *Iraq* wrhid, *Mangol* okan, niken, voka

**ஒன்று → ஏக், ஏக, கே, கெத், சே.** - ஆறாம்வகை அடிநிலைத்திரிபுற்றவை

*Heb* ekad, *Basg* ika, *Mag* egy, *Fin* yaksi, *O In* ahaon, *Pkt Pali*, eka, *Skt* ekam, eka, *Hin Urd Mar Guj Beng Ass Punj Ori* ek, *Nep* ēka, *Sinh* ēka, *Sik* kat, chi, *Buta* chi, *Sum* ges, *Cauc* aka, *Tib* chik, *Afn-bank* ika, *Moraco* igat

ஒன்று எனபதன தொன்முது வடிவம் 'ஒல்' என்பதே இது உலக மொழிகளில மலைவாழ்மககளிடை ஓரிரு மொழிகளில் மட்டும எஞ்சியுள்ளது வடகிழககு வங்காளத்தில் திமல மொழியில் 'எலங்' என்றும், சையாம் இனமொழியான பொக்காரென் மொழியில் 'லுங்' என்றும் பருமிய தௌங்மொழியில் 'லௌங' எனறும், சையாம் வாவோக மொழிகளில் 'நுங்' என்றும், நேப்பாளக்கிளை மொழிகளான வயு, சௌராசிய மொழிகளில் ககர முன்னொட்டு பெற்று 'கொலு', 'கோலோ' என்றும வழங்குகிறது

ஒன்றைக் குறித்த 'ஒல்' என்னும் தொன்முது வடிவம் லகரம் நீங்கி 'ஒ' என நின்றும் ஒ → உ → இ எனத்திரிந்தும் ஒன்றைக் குறித்த நிலைகளைப் பழைய எகுபது மொழியிலும் திபெத்தியக் கிளை மொழியிலும் இனமொழிககுடும்பக் கிளைமொழிகள் அனைததிலும காணமுடிகிறது இதனை முதனிலை அடிநிலைத்திரிபுகள எனலாம்

ஒல் → ஒன் எனத்திரிந்து ஒன்றைக் குறித்த காலத்திற்குரிய சொல்லாட்சி நிலைகளைத் தமிழிலும் ஐரோப்பிய மொழிகளிலும் காணமுடிகிறது இதனை இரண்டாம் அடிநிலைத்திரிபுகள் எனலாம் ஒல் → ஒன் எனத்திரிநத பின் அதன வழிநிலைத் திரிபுடன் துகர ஈறு சேர்ந்து ஒல் + து ஒன்று என முடிநிலைத்திரிபும் பெற்ற நிலையே பழந்தமிழிலும் திரவிட மொழிகளிலும் தெளிவாகக் காணப்படுகிறது

ஒல் → ஒரு → ஓர் எனத்திரிந்து ஒன்றைக்குறித்த காலத்திற்குரிய சொல்லாட்சி நிலைகளை ஆப்பிரிக்க ஈராக்கிய சார்க்கிய துருக்கிய மொழிகளில காணமுடிகிறது இதனை மூன்றாம் அடிநிலைத்திரிபுகள் எனலாம் ஒரு ஓர் என்பன ஒன்று என்று

எண்ணுப்பெயரின் பெயரடியாக (oblique terms) தமிழில் வழங்கும் இந்தப் பெயரடிகளையே எண்ணுப்பெயராக ஏற்றுக்கொண்ட மொழிகள் மேற்றிசையில் வழக்கூன்றியவை

இதைப் போன்றே ஒன்று → ஒறறை, ஒததெ எனத்திரிந்து ஒன்றைக்குறித்த சொல்லாட்சிநிலைகளை சப்பானியத்திலும், தென்கிழக்காசிய மொழிகளிலும், சோவியத்து மொழிகளிலும், போலந்து செமியமொழிகளிலும் காணமுடிகிறது இதனை நான்காம்வகை அடிநிலைத்திரிபுகள் எனலாம்

ஒன்று → ஒக்க → ஒக எனத்திரிந்து ஒன்றைக் குறித்த சொல்லாட்சிகளை அரேபிய, அங்கேரிய, மங்கோலிய மொழிகளில் காணமுடிகிறது திரவிட மொழிகளில் தெலுங்கில் இச்சொல் இவ்வடிவத்தில் பெருக வழங்குகிறது இதனை ஐந்தாம் வகை அடிநிலைத்திரிபுகள் எனலாம்.

ஒன்று → ஒக்க → ஏக் → கே → கெத் → சிக்சே எனத்திரிந்து ஒன்றைக் குறித்த சொல்லாட்சிகளை வடநாட்டு மொழிகளிலும் சமற்கிருதத்திலும் பூட்டான, சிக்கிம, மியான்மார் (பர்மா) திபேத்து, இந்தோனேசியா, மலாய், ஆப்பிரிக்க பண்டுமொழிகளிலும காணமுடிகிறது இதனை ஆறாம் வகை அடிநிலைத்திரிபுகள் எனலாம

ஒல் + ஒது - ஒன்று எனத்திரியாமல ஒத்து எனவும் ப,ம,வ, முன்னெழுத்துப் பெற்றுப் பொத், மொத்து, வொத் எனவும் திரிந்து ஒன்றைக் குறித்த சொல்லாட்சிகளை பாக்கரு, வியட்நாம், எருபதிய சாப்திக்கு ஆகிய பல்வேறு திசைகளில் சிதறிய தனிநிலை மொழிகளில காணமுடிகிறது இதனை ஏழாம் வகை அடிநிலைத்திரிபுகள் எனலாம்

உலகமொழிகளில் ஒன்று என்னும் எண்ணுப்பெயர் வழக்கூன்றிய இவ்வரலாறு அவ்விடம் மொழிகள் பிரிந்துசென்ற காலங்களை உணாத்துவன எனக்கொள்ளலாம்.

**ஒன்று**[3] *onru*, பெ (n) 1 ***ஒற்றுமை;*** union "வேந்தர் வேந்த னிதயமு மொன்றாய் நின்ற வியற்கையை" (பாரத சூதுபோர் 7) 2 ***மதிப்பிற்குரிய பொருள்;*** object of consequence "ஒன்றே செய்தலும் வேண்டும், ஒன்றும் நன்றே செய்தலும், நன்றும் இன்றே செய்தலும் வேண்டும்." 3. ***மதிப்புக்குரிய மாந்தன்;*** person worthy of regard "ஒறுத்தாரை யொன்றாக வையாரே" (குறள்.155). 4. ***ஒப்பற்றது;*** that which in uncomparable ஒன்றேயாக நிறைந்த இறைவன் (வ.வ.) 5. ***வீடுபேறு*** (திவா.); attaining salvation. 6. ***வாய்மை;*** truth. "ஒன்றுரைத்து" (கம்பரா கிளை.24).

*[ஒல் → ஒன் → ஒன்று ]*

**ஒன்று**[4] *onru*, பெ. (n) 1. ***சிறுநீர் கழித்தலுக்கு ஆகுபெயராய் வழங்கும் சொல்;*** enphemism for urination ஒன்றுக்குப்போய்வா (உ.வ.). 2. ***விள்ளு (விந்து.);*** semen. "இரண்டடக்கார் ஒன்று பலகாலமும் விட்டிடார்" (திருவேங்.சத.74).

*[ஒல் → ஒன் → ஒன்று.]*

**ஒன்று**[5] *onru*, இடை. (conj.) ***அயற்படு பொருளைச் சுட்டும் இடைச்சொல்;*** or, else ஒன்று தீவினையை விடு; ஒன்று அதன் பயனை நுகர் (உ.வ.).

*[ஒல் → ஒன்று.]*

**ஒன்றுக்கிரு-த்தல்** *onrukkiru-*, 2.செ.கு.வி. (v.i) ***சிறுநீர் கழித்தல்;*** to urinate (செ.அக.).

*[ஒன்று[4] + கு + இரு-த்தல் ]*

**ஒன்றுக்குப்போ-தல்** *onrukku-p-pō-*, 8.செ.கு.வி. (v.i.) ***ஒன்றுக்கிரு*** பார்க்க, see *onrukkiru.*

*[ஒன்று[4] + கு + போ ]*

**ஒன்றுக்குமற்றவன்** *onrukkum-arravan*, பெ. (n) ***பயனற்றவன்;*** good-for-nothing fellow, useless person. (செ அக.).

*[ஒன்றுக்கும்[3] + அற்றவன்.]*

**ஒன்றுக்கொன்று** *onrukkonru*, பெ. (n) 1. ***ஒன்றோடொன்று;*** mutuality, one with another ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாயிருக்கிறது (உ வ.). 2 ***ஒன்றினொன்று;*** comparison of one thing with another ஒன்றுக்கொன்று மேல் 3 ***ஏட்டிக்குப்போட்டி*** பார்க்க; see *ēttikkuppōtti.* நான் பேசினால் ஒன்றுக்கொன்று சொல்லுவேன் (உ.வ.) (செ.அக ).

*[ஒன்று[1] + கு + ஒன்று.]*

**ஒன்றுகட்டு-தல்** *onru-kattu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***சரிப்படுத்துதல்*** (யாழ்.அக.); to square up, to balance. (செ.அக ).

*[ஒன்று[1] + கட்டு.]*

**ஒன்றுகுடி** *onru-kudi*, பெ. (n) ***ஒட்டுக்குடி*** (வின்.); family or person living in another's house or garden. (செ.அக.).

*[ஒன்று[1] + குடி ]*

**ஒன்றுகூட்டு**[1]**-தல்** *onru-kūttu-*, 5.செ.குன்றாவி. (v.t) 1. ***ஒன்றாய்ச் சேர்த்தல்;*** to gather together, collect. 2. ***ஒருமனதாக்குதல்;*** to bring about an agreement.

*[ஒன்று[1] + கூட்டு.]*

**ஒன்றுகூட்டு**[2] *onru-kūttu*, பெ. (n.) ***ஒருசேர்க்கை*** (வின்.); concord; harmony; living on terms of friendship. (செ.அக.).

*[ஒன்று[2] + கூட்டு.]*

**ஒன்றுகூட்டு**[3] *onru-kūttu*, பெ. (n.) ***கொண்டுகூட்டு*** (யாழ்.அக.); mode of construing a verse. (செ.அக.).

*[ஒன்று[1] + கூட்டு.]*

**ஒன்றுகூடு-தல்** *onru-kūdu-*, 5.செ.கு.வி. (v.i.) 1. ***ஒன்றாய்ச் சேர்தல்;*** to meet one another; to gather in an assembly, to assemble together. 2. ***ஒன்றுபடுதல்;*** to be united in harmony. (செ.அக.).

*[ஒன்று[2] + கூடு.]*

**ஒன்றுகை** *onrugai*, பெ. (n.) ***இசைகை;*** fitting together. (செ.அக.)

*[ஒன்று → ஒன்றுகை.]*

**ஒன்றுகொத்தையா-தல்** *oṉṟu-kottai-y-ā-*, 6.செ கு.வி. (v.i.) ***அரைகுறையாதல்;*** to be defective, incomplete. 'ஒன்றுகொத்தையாய்க் காரியஞ்செய்கிறான்' (கொ.வ.) (செ அக.).

*[ஒன்று² + கொத்தை + ஆ(கு).]*

**ஒன்றுநன்** *oṉṟunaṉ*, பெ. (n) ***நண்பன்*** (பிங்.); he who is at one with a person, friend (செ அக.).

*[ஒன்று¹ → ஒன்றுநன்.]*

**ஒன்றுபடு¹-த்தல்** *oṉṟu paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) ***ஒப்புரவாக்கல்;*** to bring about friendship. (ஆ அக.).

*[ஒன்று² + படுத்தல்]*

**ஒன்றுபடு²-தல்** *oṉṟu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. ***ஒருதன்மையாதல்;*** to coalesce "ஒன்றுபட்டு வழிமொழிய" (புறநா.17,4). 2. ***இணக்கமாதல்;*** to become reconciled, to make peace இருபாலாரும் ஒன்றுபட்டார்கள் (செ அக.)

*[ஒன்று² + படு.]*

**ஒன்றுபாதி** *oṉṟupādi*, பெ. (n) 1. ***பாதி*** (இ.வ.), a moiety, a half 2. ***ஏறக்குறையப் பாதி*** (இ.வ.), roughly half. 3. ***நடுஇரவு;*** mid night. 4. ***சிலபல;*** some (செ.அக.).

ம. ஒன்றுபகுதி.

*[ஒன்று² + பாதி.]*

**ஒன்றும்** *oṉṟum*, பெ. (n.) ***சிறிதும்;*** anything, even onething (used with negative predicates) ஒன்றும் செய்யவில்லை (உ.வ.).

ம. ஒன்னும்.

*[ஒன்று + உம்.]*

**ஒன்றுமண்டடி** *oṉṟu-maṇḍaḍi*, பெ. (n) ***ஒன்றடிமன்றடி*** பார்க்க; see *oṉṟaḍimaṉṟaḍi* (யாழ்ப்.) (செ அக.).

**ஒன்றுமற்றவன்** *oṉṟum-aṟṟavaṉ*, பெ (n) 1. ***ஏழை, வறியவன்*** (தரித்திரன்); destitute, poorman (செ.அக.). 2. ***பயனற்றவன்;*** good for nothing fellow, useless person (ஆ.அக.).

*[ஒன்றும் + அற்றவன்.]*

**ஒன்றுமன்றடி** *oṉṟu-maṉṟaḍi*, பெ. (n) ***ஒன்றடிமன்றடி*** (யாழ்ப்.) பார்க்க; see *oṉṟaḍimaṉṟaḍi* (செ அக.)

**ஒன்றுமொழி-தல்** *oṉṟu-moḻi-*, 2 செ.கு.வி (v.i) ***வஞ்சினங்கூறுதல்;*** to declare with an oath "இடியிசைமுரசமொடொன்று மொழிந்து" (பதிற்றுப் 66,4) (செ.அக.).

*[ஒன்று² + மொழி-தல்]*

**ஒன்றுமொழிகோசர்** *oṉṟumoḻi-kōsar*, பெ (n) ***சொன்ன சொல் தவறாத ஒற்றுமையுடைய கோசர்;*** Kosar, a community known for their integrity and truthfulness.

[ஒன்று + மொழி + கோசர்]

**ஒன்றுவிட்ட** *oṉṟu-viṭṭa*, கு.பெ.எ (adj) ***உறவு முறையில் ஒரு தலைமுறை விட்ட;*** one step removed, in relationship அவன் எனக்கு ஒன்று விட்ட அண்ணன் (உ.வ.) (செ.அக.).

*[ஒன்று + விட்ட.]*

**ஒன்றுவிடாமல்** *oṉṟuviḍāmal*, வி.எ. (adv.) ***முழுமையாக ஒன்றும் விடாமல்;*** not leaving out anything, everything included, entirely, fully

ம. ஒன்னொழியாதெ

*[ஒன்று + விடாமல்]*

**ஒன்றொழிபொதுச்சொல்** *oṉṟoḻi-podu-c-col*, பெ (n) ***இருதிணையாண்பெண்ணுள் ஒன்றினையொழிக்கும் பொதுச் சொல்*** (நன் 269), term common to both genders, one of which is intended, the other being excluded by the context

*[ஒன்று + ஒழி + பொதுச்சொல்]*

**ஒன்றோ** *oṉṟō*, இடை (part) 1. ***எண்ணிடைச்சொல்;*** not only, but also, connective between nouns and sometimes verbs "பொய்படு மொன்றோ புனைபூணும்" (குறள்,836) 2. ***அயற்படு பொருள் தரும் இடைச்சொல்;*** either-or "ஏவலா ளரச னொன்றோ விருபிறப்பாளன" (சீவக 1682)

*[ஒன்று + ஓ ஒன்றோ ஓகாரம் பிரிநிலை]*

**ஒன்னப்பூ** *oṉṉap-pū*, பெ (n) ***காதணியுளொன்று*** (வின்.), an ear-ornament worn by women (செ அக.).

*[உன்மை → ஒன்னம் + பூ - ஒன்னப்பூ]*

**ஒன்னலன்** *oṉṉalaṉ*, பெ (n) ***பகைவன்;*** enemy, foe "ஒன்னலர் மணிமுடி யுரிஞ்சு தாளினான்" (நைடத நகரப்.39) (செ அக.).

*[ஒன்று + அல + அன் - ஒன்றலன் → ஒன்னலன்]*

**ஒன்னாதோர்** *oṉṉādōr*, பெ. (n) ***பகைவர்;*** foes, enemies "இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே" (புறநா.94,5) (செ.அக.)

*[ஒன்று + ஆ + த + அவர் - ஒன்றாதவர் → ஒன்றாதார் → ஒன்னாதார் → ஒன்னாதோர்.]*

**ஒன்னார்** *oṉṉār*, பெ (n) ***ஒன்னாதோர்*** பார்க்க see *oṉṉādōr* "தன்னொன்னார்" (நாலடி,129) "ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்" (குறள்) (செ.அக.).

*[ஒன்னாதார் → ஒன்னார்.]*

**ஒன்னான்** *oṉṉāṉ*, பெ. (n) ***பள்ளிக்கூடத்திற்கு ஏறானை யடுத்துவரும் பையன்;*** the boy who comes second to school and next to the first boy called ēṟāṉ (செ அக.)

*[ஒன் → ஒன்று + ஆன் - ஒன்றான் → ஒன்னான் = ஒன்றிவருபவன், ஒத்து வருபவன்.]*

**ஒன்னு¹-தல்** *oṉṉu-*, 12.செ குன்றாவி (v.t) ***பொறுத்தல்;*** to endure "ஒன்னா முனையோர்க் கொழிகவினித்துயில்" (பு வெ.4,21) (செ.அக.)

*[ஒல் → ஒன் → ஒன்னு]*

**ஒன்னு²-தல்** *oṉṉu-*, 15 செ.கு.வி. (v.i.) ***பொருந்துதல்;*** to agree, to be friendly "ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்" (பதிற்று.85-3).

*[ஒல் → ஒன் → ஒன்னு]*

**ஓ**[1] ō. *தமிழ் வண்ணமாலையில் பதினொன்றாம் உயிரெழுத்தாகிய அரையங்காப்பு இதழ்குவியா பின்னண்ணச் செறிவு உயிர்நெடில்;* 11th letter and vowel of the alphabet the half-close back tense unrounded vowel in Tamil

*[உ-அ → ஓ]*

அஇ → ஐ ஆகவும், அஉ → ஔ ஆகவும் இருகுறில கூட்டுயிரொலி உயிர்நெடிலகளாக உருபபெற்றதைபபோனறு, இஅ → ஏ எனவும், உஅ → ஓ எனவும கூட்டுயிா நெடிலகள் தோனறின ஒ.நோ இய செல, இய → ஏ (ஏகு) - செல உவ உவததல, மகிழதல உவ → ஓ (ஓகை) - மகிழவு

ஏ, ஓ எனனும கூட்டுயிாகள இயலபு வினையடிகளைத் தோறறுவிபபதிலலை இயலுதல → ஏலுதல எனறவாறு 'ஏல' திரிபு வினையடியாதலனறி இயலபு வினையடி ஆகா தெனக ஒருசாா ஒலிகுறிபபு நெடடெழுததாகி ஆககச்சொலலாதலே மிகுதியாம

**ஓ**[2] ō,- *விளரியென்னும் இசையின் எழுத்து* (திவா). (mus) symbol representing the sixth note of the gamut

**ஓ**[3]**-தல்** ō-, 6 செ.கு.வி (vi) 1 *முளைத்தல்;* to sprout 2 *தோன்றுதல்;* to originate 3 *எழுதல்;* to rise

*[உ → ஊ → ஓ]*

**ஓ**[4]**-தல்** ō-, 6 செ.கு.வி (vi) 1 *உயர்தல், ஓங்குதல்;* to become high, rise, go up 2 *தொலைவு ஆதல்;* to become distant

*[உ → ஊ → ஓ]*

**ஓ**[5]**-தல்** ō-, 6 செ.கு.வி (vi) *நீங்குதல், கடத்தல், விலகுதல்;* to be removed, pass off, to keep away

*[ஒருவு → ஒரு → ஓ]*

**ஓ**[6]**-தல்** ō-, 5 செ.குன்றாவி (vt) *தடுத்தல்;* to abstract

*[உல் → ஒல் → ஓ உல் : குத்தல், தடுத்தல்]*

**ஓ**[7]**-தல்** ō-, 5 செ.குன்றாவி (vt) *விடுத்தல்;* to leave, abandon

*[ஒரு(வு) → ஓ]*

**ஓ**[8] ō, பெ (n) *தொலைவு;* distance.

*[ஊ → ஓ.]*

**ஓ**[9] ō, பெ (n) *ஒப்பு, பொருத்தம்;* suitability, comparison, appropriateness, resemblance

*[உ → ஒ → ஓ (முதா 218)]*

**ஓ**[10] ō, பெ (n) 1 *சென்று தங்குகை;* going and staying "ஓவற இமைக்கும் ஒளி" (திருமுரு 3). 2 *மதகுநீர் தாங்கும் பலகை* (தொல் எழுத் 180,உ.ரை.), shutter or other means to stop the flow of water

*[உய் → ஒய் → ஓ]*

**ஓ**[11] ō, பெ (n) 1 *முளை;* sprout 2 *தோற்றம்;* origin 3 *எழுதல்;* rising

*E* origin, *fr* origine, *L* origo, originis, orior, to rise

*[உல் → ஒல் → ஓ]*

**ஓ**[12] ō, இடை (int) 1 *உயர்விழிவுகளின் சிறப்புக் குறிப்பு* (நன் 423), oh! expressing superiority or inferiority ஓஓ பெரியன், ஓஓ கொடியன் 2 *கழிவிரக்கக் குறிப்பு;* also! ah! expressing bereavement "ஓஓ தமக்கோ ருறுதி யுணராரோ" (நன் 423,விருத) 3. *மகிழ்ச்சிக் குறிப்பு;* ha! expressing joy "ஓ பெரிதுவர்ப் பக கேட்டேன" (சீவக 905) 4 *வியப்புக் குறிப்பு;* oh! expressing wonder "முகந் திங்களோ காணீர்" (சிலப் 7,பாடல் 11) 5 *நினைவுக் குறிப்பு;* o! expressing recollection 'ஓ தெரிந்தது' 6 *அழைத்தற் குறிப்பு;* halloa! calling attention 'ஓ கண்ணா! 7 *உரத்த ஓசையைக் குறிக்கும் எழுத்தொலி அல்லது ஒலிக்குறிப்பு;* expression or prolonged 'ō' sound 'ஓ வென வையகத் தோசையோ யுயர்ந்ததே" (சீவக 1843).

ம., க. ஓ, தெ. ஓரே

*[ஊ → ஓ (வே.க 112).]*

**ஓ**[13] ō, இடை (part) 1 *ஒழிபிசை, வினா, எதிர்மறை, தெரிநிலை, ஐயம் ஆகிய பொருள்களில் வரும் சொல்லீறு;* ending of words signifying ellipsis of a counterpart, interrogation, negation, discrimination, distinctiveness, doubt 2. *அசைநிலை* (நன்.423,விருத்.); expletive

ம., க. ஓ

*[ஓ - ஒலிக்குறிப்பு, தொடராட்சி பொருளைக் குறிப்பால் புலப்படுத்தியது]*

**ஓ**[14]**-த்தல்** ō-, 5 செ.குன்றாவி. (vt) *புணர்தல்* (அக.நி.); lit, to be of one mind, transf, to copulate

ம. ஒக்குக, க., குட. ஒள்

*[உ → உல் → ஒல் → ஒள் → ஓ.]*

**ஓஓ** ōo, இடை (int) *வியப்புக்குறிப்பு* (பிங்.); oh! o! expressing wonder

*[ஓ + ஓ.]*

**ஓக்கம்**[1] ōkkam, பெ (n) 1 *உயரம்;* height 2 *எழுச்சி;* elevation "ஓக்கநீள் விசும்பு" (சீவக 866) 3. *பெருமை;* increase, enlargement, bigness, largeness "சுருங்கிற்றி ரண்டடி யோக்கமிரட்டி" (காரிகை ஒழிபி.7).

*[ஓங்கு → ஒக்கு → ஓக்கம் (க வி 61)]*

**ஓக்காளம்** ōkkāḷam, பெ. (n) *கக்கலுக்கு முந்திய வாயசைவு;* retching, heaving, involuntary effort of the stomach in nausea 'உள்ளியை மோந்தால் எனக்கு ஓக்காளம் வரும்'. (உ.வ.)

ம. ஒக்கானம், க. ஒகரி, ஒகாள, ஒகரிகெ, ஒகரிசுக, ஒகடிகெ, து. ஒங்ககெ, தெ. ஒகர, ஒகிலி, ஒகரிதை, ஒகிலிதை

*[ஒக்களி → ஒக்காளம் (த வ 53) ]*

**ஒக்காளி-த்தல்** *ōkkāli-*, 4 செ கு வி (vi) ***வாய்க்குமட்டல்;*** to heave, to nauseate, to retch from sickness - 4.செ குன்றாவி (vt) ***கக்கல்;*** to vomit ''குழந்தை பாலையெல்லாம் ஒக்காளித்து விட்டது''

ம. ஒக்காளிக்குக, ஒக்கானிகருக, க. ஒகரிசு, ஒகளிசு, ஒககரிசு, ஒகடிசு, து. ஒங்கதெ, தெ. ஒகரின்சு

*[ஒககளி → ஒக்காளி ]*

**ஒக்காளிப்பு** *ōkkālippu*, பெ (n) ***குமட்டல்;*** retching, incipient sickness, squeamishness காய்ச்சல் விட்டும் ஒக்காளிப்பு விடவில்லை

ம. ஒககாளம், க. ஒகரி, ஒகான, து. ஒங்கதெ, தெ. ஒகர, ஒகிலி.

*[ஒக்காளி → ஒக்காளப்பு ]*

**ஒக்கியம்** *ōkkiyam*, பெ (n) ***ஏற்றது;*** that which is fit, appropriate ''உடலாக்குந் தன்மைத் தோக்கிய சக்தி யுண்டாய்'' (சி சி 2,48)

*[ஒல் → ஒக்கு → ஒக்கியம் → ஒககியம இச்சொல் வடமொழியில் யோக்கியம் எனத்திரிந்தது. வடநூலார் yogya - (from 'Yug') - fit for the yoke என்ப பொருட்காரணம் கூறுதலின் உழுதலுக்கும் பொருத்துதலுக்கும் பொருத்தமின்றாதல் அறிக ]*

**ஒக்கு-தல்** *ōkku-*, 5 செ குன்றாவி (vt) 1 ***உயர்த்துதல்;*** to raise, lift up ''ஒக்கிய வொள்வாள்'' (நாலடி,129) 2 ***எழும்பச் செய்தல்;*** to cause to rise ''வேலினோக்கிய விளக்குநிலையும்'' (தொல் பொருள் 90) 3 ***வரைந்து வைத்தல்;*** to set apart ''நிணப்பலி யோக்குவல்'' (திருக்கோ 235) 4 ***தருதல்*** (திருக்கோ 235, உரை ); to give, bestow 5. ***எறிதல்;*** to throw ''சந்தனத் தளிர் நன்மாலை யோக்கினார்'' (சீவக 2661). 6 ***ஆக்குதல்;*** to make, produce ''ஒக்கினே வெண்ணையும்'' (திவ் இயற் 2,59) 7 ***கொடுத்தல்;*** to give

*[ஒ → ஒங்கு → ஒக்கு ]*

**ஒகணம்** *ōganam*, பெ (n) ***மூட்டைப்பூச்சி*** (யாழ் அக ); bug

*[உகணை → ஒககணை → ஒகணம் → ஒகணம் உகணை → இகணை → திகணை எனத்திரிந்து திரவிட மொழிகளில் வழங்குகிறது **உகணை** பார்க்க see uganai ]*

**ஒகணி** *ōgani*, பெ (n) 1. ***பேன்;*** louse 2 ***மூட்டைப் பூச்சி;*** bug (சா.அக.).

*[உகணி → உகணை → ஒகணை → ஒகணி → ஒகணி **உகணி** பார்க்க, see ugani ]*

**ஓகம்**[1] *ōgam*, பெ (n) 1 ***வெள்ளம்*** (சூடா ), flood 2. ***பெருங்கூட்டம்;*** crowd, multitude ''ஓகவெஞ் சேனையும்'' (கம்பரா அதிகாய 2)

*[உகு → ஒகு → ஓகம் ]*

**ஓகம்**[2] *ōgam*, பெ (n) 1 ***அடைக்கலம்;*** refuge 2 ***அறிவுரை;*** counsel 3 ***திரட்சி;*** condensation 4 ***வீடு;*** house (ஆ அக )

*[உல் → ஒல் → ஒக்கு → ஓகம ]*

**ஓகம்**[3] *ōgam*, பெ (n) ***அடைக்கலங் குருவி;*** sparrow (சா அக )

*[புகம → போகம → போகம் → ஓகம **புகலாங்குருவி** பார்க்க, see pugalānkuruvi ]*

**ஓகாரம்**[1] *ōgāram*, பெ (n) ***மயில்;*** letter used as a symbol for the peacock among the panca-paksi ''ஓகார பரியின்மிசை வருவாயோ'' (திருப்பு 142)

*[ஓம → ஓங்காரம → ஓகாரம ]*

தோகைவிரித்த மயிலின் வடிவு ஓகாரத்திற்கு ஒப்பானதென்றும், ஓங்காரப் பொருளான இறைவனின் ஊர்தியாதலின் அப்பெயர் பெற்றதென்றும் கூறுவது தொன்மம். தொன்முது காலத்தில் தமிழ்மொழி உருவெழுத்தாக (ஓவிய எழுத்தாக) எழுதப்பட்ட காலத்தில் மயிலின் வடிவமே ஓகார ஒலிப்பின் வரிவடிவமாக இருந்தது என்பதும் பின்னர் அசையெழுத்துக் காலத்தில் மயிலின் வடிவம் [illegible] சுருங்கி ஒருகோட்டோவியம் போல அசையெழுத்துச் சுருக்கமாக மாறியதென்பதும் (Z - Z) அஃது பிராமி எனப்படும் முந்துதமிழ் எழுத்திலும் நிலைத்தது என்பதும் அறியத்தக்கது

**ஓகாரம்**[2] *ōgāram*, பெ (n) ***'ஓம்' என்னும் மந்திரவெழுத்தின் சுருக்கம்;*** letter 'ō' representing 'ōm'

*[ஓம → ஓ → ஓகாரம 'காரம்' எழுத்துச்சாரியை ]*

**ஓகாளம்** *ōgālam*, பெ (n) **ஒக்காளம்** பார்க்க, see *ōkkālam* ''சூளையர்க ளோகாளஞ் செய்யாமுன்'' (பதினொ சேத் 13)

*[ஒக்காளம் → ஓகாளம் ]*

**ஓகுலம்** *ōgulam*, பெ (n) ***அப்பம்*** (யாழ் அக ); sweet cake

*[உருள் → உருளம் → ஒருளம → ஓகுலம் ]*

**ஓகை**[1] *ōgai*, பெ (n) ***ஆரவாரம்;*** loud noise, shouting ''பொருதோகை சுரராசபர மேற விடுகாளை'' (தக்கயா கப் 5)

*[ஓதை → ஓகை ]*

**ஓகை**[2] *ōgai*, பெ (n) ***வருவது சொல்வது, விரிச்சி*** (அக நி ); prediction, prognostication

*[ஓர்கை → ஓகை ]*

**ஓகை**[3] *ōgai*, பெ (n) ***மகிழ்ச்சி;*** delight, joy ''ஓகையோ டிருத்தி'' (பாரத குருகுல 93)

*[உவகை → ஓகை.]*

**ஓகோ** *ōgō*, இடை (int) ***வியப்பு, மருட்கை, வெறுப்பு, இரக்கம், வருத்தம் ஆகிய உணர்வுகளைக் காட்டும்***

**ஓதிமம்** *ōdimam,* பெ (n) 1 ***அன்னம்;*** swan "ஓதிம மொதுங்கக் கண்ட வுத்தமன்" (கம்பரா சூர்ப்ப 5) 2 ***மலை;*** hill, mountain "மழைக்காக் கோட்டோதிம மெடுத்தா" (அஷ்டப் அழக 63)

**ம.** ஓதிமம

*[1 ஒ → ஓதி → ஓதிமம் 2 ஓதி³ → ஓதி ]*

**ஓதிமவிளக்கு** *ōdima-vilakku,* பெ (n) ***அன்னப்பறவை யுருவாகச் செய்யப் பெற்ற விளக்கு;*** swan-shaped pendent lamp "யவன ரோதிமவிளக்கின்" (பெரும் பாண் 317)

*[ஓதிமம் + விளக்கு ]*

**ஓதிமன்** *ōdiman,* பெ. (n) ***நான்முகன்;*** Brahma, who rides on a swan "ஓதிமனை யோர்சிர மறச்செய்தது" (பிரபோத 26,26)

*[ஓதிமம் → ஓதிமன் ]*

**ஓதியிடு-தல்** *ōdi-y-idu-,* 18 செ.குன்றாவி (v.t.) ***திருமண முதலியவற்றில் வாழ்த்துக்களுடன் வழங்கப்படும் அன்பளிப்பு;*** to present gifts on occasions like marriage with blessings. (brah.)

*[ஓதி + இடு ]*

**ஓதியிறை-த்தல்** *ōdi-y-irai-,* 4.செ.கு.வி. (v.i) ***மந்திரநீர் தெளித்தல்*** (வின்); to sprinkle, as consecrated water.

*[ஓதி + இறை.]*

**ஓதியுடை-த்தல்** *ōdi-y-udai-,* 4.செ குன்றாவி. (v.t.) ***மந்திரித்துத் தேங்கா யுடைத்தல்*** (வின்.); to break coconuts with mantras.

*[ஓதி + உடை ]*

**ஓது-தல்** *ōdu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***படித்தல்;*** to read, recite audibly in order to commit to memory. "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும்" (குறள் 834). 2 ***சொல்லுதல்;*** to speak, say, declare "ஓதரிய சுகர் போல" (தாயு.ஆகார.32). 3. ***வேதமோதுதல்;*** to recite the Vēda with the appropriate intonation. 4. ***மந்திரம், வழிபாடு முதலியன செய்தல்;*** to utter mantras, repeat prayers. 5. ***கமுக்கமாகக் கூறுதல்;*** to persuade clandestinely, to breathe out; to whisper, as communicating information. அவன் காதில் அடிக்கடி ஓதுகிறான். 6. ***பாடுதல்;*** to sing. "ஓதி ... ... ... ... களிச்சுரும் பரற்றும்" (சிறபாண்.22).

**ம.** ஓதுக, **க.,** பட. ஓது; **கோத.** ஒத். துட. வீத்; குட. ஒத்; **து.** ஒதுனி; **தெ.** சதுவு.

*[ஊது → ஓது → ஓதல்.]*

**ஓதும்பள்ளி** *ōdum-palli,* பெ. (n.) ***பள்ளிக்கூடம்*** (திவா.); school.

*[ஓது → ஓதும் + பள்ளி.]*

**ஓதுவார்** *ōduvār,* பெ. (n.) ***திருக்கோயில்களிலும் மடங்களிலும்' தேவாரமுதலிய அருட்பாக்களைப் பாடுஞ் சைவவேளாளர்;*** Śaiva Vēlālas appointed to recite sacred Tamil hymns in Śaiva temples and monasteries

*[ஓது → ஓதுவார் ]*

**ஓதுவான்** *ōduvān,* பெ. (n) 1 ***ஆசான்;*** teacher 2 ***மாணாக்கன்;*** pupil

*[ஓது + ஆன் ]*

**ஓதுவி-த்தல்** *ōduvi-,* 1 பி வி (c.v) 1 ***சிறந்தநூல் முதலியன கற்பித்தல்;*** to teach the standard book and subject to others "ஓதுவித்த தக்கணையா" (திவ். பெரியாழ் 4,8,1). 2 ***படிப்பித்தல்;*** to teach, instruct.

**ம.** ஓதிககுக. **க.** ஓதிசு. **து.** ஓதாவுது.

*[ஓது → ஓதுவி ]*

**ஓதை**¹ ōdai, பெ. (n) 1 ***பேரோசை*** (ஆரவாரம்) (திவா ), sound, noise, clamour, din 2. ***எழுத்தொலி*** (பிங் ); sound of a letter

*[ஒ → ஓசை → ஓதை (சு.வி 99).]*

**ஓதை**² *ōdai,* பெ (n) ***காற்று;*** wind "ஓதை அலைத்தன தரையிற்றள்ளி" (கந்தபு.கடல்பாய்.8).

*[ஊதை → ஓதை.]*

**ஓதை**³ *ōdai,* பெ. (n.) 1. ***மதில்*** (திவா ); surrounding wall, rampart 2. ***மதிலின் ஆள்வாரி நிலம்*** (பிங்.); paved passage along the walls within a fortification. 3. ***மலை*** (யாழ்.அக.);mountain.

*[ஒ → ஓதை.]*

**ஓதைவாரி** *ōdai-vāri,* பெ. (n.) ***சிறகு*** (சங்.அக.); wing.

*[ஊதை → ஓதை (காற்று) + வாரி.]*

**ஓந்தான்** *ōndān,* பெ. (n.) ***ஓணான்;*** blood sucker.

*[ஓணான் → ஓந்தான்.]*

**ஓந்தி** *ōndi,* பெ. (n.) ***ஓணான்*** (திவா.); blood-sucker, a common agamoid lizard

**ம.** ஒந்து; **க.** ஓதி, கோசும்பெ; **துட.** ஓச்; குட. ஒந்தி; **து.** ஒந்தி, **தெ.** தொண்ட; **மால்.** உதெ; **பட.** ஓசி.

*[ஓணான் → ஒந்து → ஓந்தி ]*

**ஓநாய்** *ōnāy,* பெ. (n.) ***கோநாய்*** (பழ.292,உரை.); Indian wolf.

**ம.** ஒநாய்.

*[ஓ → பெரியது, அஞ்சத்தக்கது. ஓ + நாய்.]*

**ஓப்படியாள்** *ōppadiyāl,* பெ (n) ***ஓர்ப்படியாள்*** (வின்.) பார்க்க; see *ōrppadiyāl.*

**ஓப்படைச்சி** *ōppadaicci,* பெ. (n.) ***ஓர்ப்படியாள்*** பார்க்க (இ.வ.); see *ōrppadiyāl.*

**ஓப்பு-தல்** *ōppu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஓட்டுதல்;*** to drive away; to cause to flee; to scare away, as birds. "கழனிப் படுபுள் ளோப்புநர்" (புறநா.29,13). 2. ***உயரவெடுத்தல்*** to raise. "கொடிக ளோப்புவும்" (சூளா.அரசி.144); (செ.அக.). 3. ***நீக்குதல்;*** to remove. "குருவி ஓப்பியும் கிளி கடிந்தும்" (சிலப்பதிகாரம்).

ம. ஒப்புக.

*[ஓ → ஒப்பு]*

**ஓபாதி** *ōbādi,* பெ (n.) *பகுதி;* portion. 'நம்மோபாதியா லுள்ள ரட்சணம்' (ஈடு.5,4,ப்ர.) இடை. (part.) *உவமஉ ருபு;* particle of comparison ''அவனைப்பெறுகையோ பாதி தேட்டமாம்படி'' (ஈடு.5,4,ப்ர.).

க. ஒபாதி

*[ஒருபகுதி → ஓபாதி.]*

**ஓபு** *ōpu,* பெ. (n) *கதவு* (பிங்.); door.

*[ஓ = மதகுப்பலகை. ஓ → ஓவு → ஓபு]*

**ஓம்**[1] *ōm,* பெ. (n.) *பாதுகாத்தல், காப்பாற்றுதல்;* protecting, guarding.

*[ஓ → ஓம்]*

**ஓம்**[2] *ōm,* இடை. (part.) *தன்மைப்பன்மையீறு* (நன்.140); ending of the first pers. pl வந்தாம் → வந்தோம்.

*[ஆம் → ஓம்.]*

**ஓம்**[3] *ōm,* பெ. (n) *மூலமந்திரம்;* mystic syllable, preceding all the mantras of worship, writings, etc. ''ஓமெனு மோரெழுத்து'' (கம்பரா.இரணி.76).

*[அ + உ - ஓ + ம் - ஓம்.]*

மங்கல அடையாளமாகக் கருதப்படும் ஓம் இலச்சினை (Swastika) உலகமுழுவதும் பரவியுள்ளது. சிந்துவெளி முத்திரைக ளில் பெருகக் காணப்படுகிறது இது அந்தக் காலத்திய எழுத்துகளில் ஒன்றாக இருக்கலாம் என்னும் கருத்தினை திரு. கிருட்டிணா வேணுகோபால் என்பவர் (Mirror-Apr 1985) வெளியிட்டிருந்தார். இதனை உணராத பவர் மந்திரம், தாயத்து, தகட்டு ஏவலெழுத்து என்றெல்லாம் விரித்துரைக்க லாயினர். நான்கு கால் இலச்சினையென்று இங்கிலாந்திலும், தோர் கடவுளின் கையிலுள்ள படைக்கலம் என்று காண்டிநேவி யாவிலும், உயிரளிக்கும் நீர் வடிவம் என்று சப்பானிலும், பெருங்கடலையும் தொடக்கமும் முடிவுமில்லாத பெருக்கத்தை யும் குறித்தது என்று சீனத்திலும் மக்கள் நம்பினர். எல்லா நாடுகளிலும் இது நன்மையின் அடையாளமாகவே கருதப்பட் டது. எல்லாச் சமயங்களிலும் இது மங்கலச் சின்னமாகிவிட் டது. செருமானிய நாட்டில் இட்டலரும் இதனைப் பொறிக்கச் சொன்னதாகவும் இலச்சினை செய்தவர்கள் தவறுதலாக வல நோக்காமல் இடப்பக்கம் நோக்கிய சுழற்சியில் அமைத்துக்கெ பத்திகா வடிவமாக்கி விட்டதாகவும். இது தீமையின் அடையா ளம் என்று பிறகு தெரிந்ததாகவும் கூறுவர்.

சுவகதிகாவின் உண்மையான ஒலிப்பு 'ஓம்' என்னும் தமிழ்ச் சொல்லே என்பது கண்டறியப்பட்டுள்ளது. 'ஓம்' என்னும் தமிழ்ச்சொல் (ஓம்பு) காப்பாற்று என்று பொருள்படுகிறது. சிந்துவெளியெழுத்தமைப்பின்படி 'ஓ' என்னும் நெடில் உயிரெ ழுத்தை ஒஒ என இரண்டு குறில் எழுத்துகளால் குறிப்பர். சிந்துவெளியெழுத்திலும் தமிழ் பிராமி எழுத்திலும் ᘔ என் பதே ஒகரக்குறிலைக் குறிக்கும் எழுத்தாக இருந்தது. ஓகார நெடிலுக்கு இரண்டு ஒகரங்கள் ᘔᘔ அடுத்தடுத்து எழுதப்ப டும், கூட்டல் குறி + மகரத்தின் அடையாளம். ஆதலின் நடுவில் மகரமும் ஒகரம் ஒன்றையொன்று வெட்டுமாறு 卐 ஓம் என்னும் சொல் சிந்துவெளி மொழியில் எழுதப்பட்டுள் ளது.

இதனைப் பானைத் தொழிலாளர், அணிகலத் தொழிலாளர், ஏனங்கள் செய்வோர் கலைப்பணியாளர்கள் ஆகிய அனைத் துப் பிரிவினரும் பயன்படுத்தியிருக்கின்றனர். ஓம் என்று இதனைப் படித்தது முற்றிலும் சரி என்பதற்குச் சான்றாக மொகஞ்சதாரோவில் கிடைத்த (M 482) மற்றொரு முத்திரை யும் சான்றாகிறது இதில் 'ஓமன்' என்பவனின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. 'ஓம்' என்பதற்குரிய சுவகதிகா இலச்சினையே அதிலும சொல்லின் முதலசையாகவும், 'அன்' ஈற்றசையாகவும் காணப்படுகிறது

**ஓம்**[4] *ōm,* கு.வி.எ. (adv.) *ஆம் என்னும் உடன்பாட்டை உணர்த்துஞ் சொல்;* yes, the expression of affirmation or of consent ''ஓமோ மெனவோங்கியதோர் சொல்'' (திருவாலவா.38,4).

*[ஆம் → ஓம்.]*

**ஓம்படு**[1]**-தல்** *ōm-badu-,* 18.செ.குன்றாவி. (v.t.) *உடன்ப டுதல்* (யாழ்ப்.); to express assent, to consent.

*[உடம் + படு - ஓம்படு.]*

**ஓம்படு**[2]**-த்தல்** *ōmbadu-,* 4.செ.குன்றாவி. (v.t) 1. *பாதுகாக்குமாறு சேர்த்தல்;* to protect. சிறைப்புறமாக வோம்படுத்தது (தொல்.பொருள்.114,உரை.). 2. *ஒதுங் குதல்;* to avoid. ''படைத்தலைக் கொள்ளாமை யோம்ப டுத்த வுயர்வு'' (பு.வெ.7,3,கொளு.). 3. *உறுதிகூறு தல்;* to confirm, to encourage. ''பூம்பொழிற்புறங் காவலனை யோம்படுத்தற்கும்''

*[ஓ = தடுத்தல், காத்தல். ஓ → ஓம் = தடுத்துநில், காப்பாற்று. ஓம் + படு - ஓம்படு = பாதுகாப்பு செய்தல்.]*

**ஓம்படை** *ōmbadai,* பெ. (n.) 1. *பாதுகாப்பு;* protection, safeguard ''ஓம்படையுளப்பட'' (தொல்.பொருள்.91). 2. *பாதுகாக்குமிடம்;* place of protection. ''அறனோம்ப டையும்'' (சிலப்.5,179,அரும்.). 3. *சமயக்கருத்துகள் கற்பிக்குமிடம்* (சிலப்.5,179,உரை.); place where religious instruction is imparted 4. *தீர்வு;* remedy. ''ஓம்படை யொன்றுஞ் செப்பாள்'' (சீவக.232). 5. *மறவாமை;* keeping in mind, retaining in memory. தலைவற் கோம் படை சாற்றல் (தஞ்சைவா.139,உரை.).

*[ஓம்பு + அடை.]*

**ஓம்படைக்கிளவி** *ōmbadai-k-kilavi,* பெ. (n.) 1. *தலை வியைப் பாதுகாத்துக் கொள்ளெனத் தலைவற்குத் தோழிகூறுங் கூற்று* (தொல்.பொருள்.114); (erot.) entrustment of the heroine to her lover by her companion for protection. 2. *பெரியோர் பாதுகாவலாகச் சொல் லுஞ் சொல்;* sage advice given by wise men.

*[ஓம்படை + கிளவி.]*

**ஓம்பு**[1]**-தல்** *ōmbu-,* 5.செ.குன்றாவி. (v.t.) 1. *பாதுகாத் தல்;* to protect, guard, defend, save. ''குடிபுறங் காத்தோம்பி'' (குறள்.549). 2. *பேணுதல்;* to preserve, to keep in mind, to cherish, nourish. ''ஈற்றியாமை தன்பார்ப்போம்பவும்'' (பொருந.186). 3. *தீதுவராமற் காத்தல்;* to remove, separate, to keep off; to ward off as from evil. 4. *பரிகரித்தல்;* to dispel. ''எனைத்துங்

குறுகுத லோம்பல்." (குறள்.820). 5. ***வளர்த்தல்*** (தேவா.1,1); to maintain, support; to cause to increase; to bring up, "கற்றாங் கெரி யோம்பி" (தேவா.1,1).

*[ஓ → ஓம் → ஓம்பு.]*

**ஓம்பு²-தல்** *ōmbu-*, 5.செ.குன்றாவி. (v.t.) 1. ***சீர்தூக்குதல்;*** to consider, discriminate "ஓம்பாவீகையும்" (பு.வெ 9,1). 2. ***மனத்தை யொருக்குதல்;*** to concentrate the mind "தெரிந்தோம்பித் தேரினு மஃதே துணை" (குறள்,132). 3. ***இவறுதல்;*** to clutch or grasp tightly, as a miser. "பெற்றேமென் றோம்புத றேற்றாதவர்" (குறள் 626).

**ம.** ஓமன, **து.** ஓமன, **தெ.** ஓமு.

*[ஓ → ஓம் → ஓம்பு. ஓம்புதல்.]*

**ஓம்பு³-தல்** *ōmbu-*, 5.செ.குன்றாவி. (v.t.) ***உண்டாக்குதல்*** (யாழ்.அக.), to create

**ஓமநீரம்** *ōmanīram*, பெ. (n.) ***ஓமச்சாறு;*** essence of oman, (Bishop's weed)

*[ஓமம் + சாறு]*

**ஓமப்பொடி¹** *ōma-p-podi*, பெ (n.) 1 ***தின்னும் பலகாரவகை;*** omam confectionery, fashioned like vermicelli 2 ***ஓம மருந்து*** (வின்); medicinal ōmam. powder

**ம.** ஓமப்பொடி; **க.** ஓமப்புடி, **தெ.** ஓமப்புடி.

*[ஓமம் + பொடி]*

**ஓமம்¹** *ōmam*, பெ. (n.) ***ஓர்வகைக் காரமான மருந்துச்செடி*** (மலை.); Bishop's weed, herbaceous plant.

**ம.** ஓமம், **க.** ஓம, ஓமு, ஓவு, வாம, வோம, கோம, **து.** ஓம; **தெ.** ஓமமு

*[உம் → உமல் → உமறு = காரச்சுவை உம் → ஒம் → ஓம் → ஓமம் = காரச்சுவையுடையது]*

**ஓமம்²** *ōmam*, பெ (n) ***வேள்வித்தீயில் நெய் முதலியன பெய்கை;*** offering an oblation to the gods by pouring ghee, etc into the consecrated fire "ஓமம் வேள்வி யுதவி தவஞ்செபம்" (சேதுபு சேதுச.51).

*[ஓம்பு → ஓமு → ஓமம் Skt hōma]*

ஓமு = (ஓம்பு) நெய்யூற்றித தீயை அணையாமல் காத்தல், தீவளர்த்தல், தீயைபபேணுதல, தீயோம்புதல் என்றாயிற்று

**ஓமல்¹** *ōmal*, பெ (n.) 1. ***ஊர்ப்பேச்சு;*** rumour, bruit. "ஊருக்கு ஓமல், வீட்டுக்கு வயிற்றெரிச்சல்". 2. ***புகழ்ச்சி;*** reputation.

*[ஓ = உயர்தல், மிகுதல் ஓ → ஓம் → ஓமல.]*

**ஓமல்²** *ōmal*, பெ (n) 1 ***புகையெழுதல்;*** to rise as smoke 2 ***பரவுதல்;*** spreading

*[ஓ → ஓமு → ஓமல்]*

**ஓமலிப்பு** *ōmalippu*, பெ (n) ***ஊர்ப்பேச்சுப்பரவுகை;*** spreading, as a rumour "ஐயையோ ஊரெங்கு மிதுவோ ஓமலிப்பு" (சர்வ கீர்த் 186)

*[ஓமல் → ஓமலிப்பு]*

**ஓமற்கோரை** *ōmar-kōrai*, பெ. (n.) ***கோரைவகை;*** a kind of sedge

*[ஓமல் + கோரை.]*

**ஓமற-த்தல்** *ō-mara-*, 4.செ.கு.வி. (vi.) ***ஒழிவறுதல்;*** to be unceasing, incessant "ஓமறந்து ... கண்ணும் படுகுவம்" (அகநா 11)

*[ஒய்வு → ஒவு → ஓ + மற = ஓமற]*

**ஓமாலிகை** *ōmāligai*, பெ (n) ***நறும் புனலுக்குப் பயன்படும் 32 வகை பொருட்கள்*** (அவை இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதாவரிசி, தக்கோலம், நன்னாரி, வெண்கோட்டம், கத்தூரி, வேரி, இலாமிச்சம், கண்டில்வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக்கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, புன்னைநறுந் தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், நுண்ணேலம், கொடுவேரி முதலியன) (சிலப் 6,77, வரை); fragrant substances put in water used for drinking and bathing, of which those are 32.

*[ஓமல்² → ஓமலிகை → ஓமாலிகை = மணம் பரவும் இயல்பினது.]*

**ஓமான்** *ōman*, பெ. (n) ***ஓந்தி*** பார்க்க (திவா), see *ōndi*

*[ஓணான் → ஓமான் (கொ.வ.)]*

**ஓமிடி¹-தல்** *ōmidi-*, 4 செ கு வி (vi) ***கேடுறுதல்;*** to be ruined, destroyed, to perish. 'நீ ஓமிடிந்து போவாய்' (வின்.)

ம. ஓமிடிச்சல்.

*[ஓம் + இடி - ஓமிடி பாதுகாப்புக்கேடு. ஓம் = பாதுகாப்பு. இடி = இடிதல், கெடுதல்.]*

**ஓமிடி²** *ōmidi*, இடை (int) ***ஓ, நாசம்*** (வின்.); O! ruin

*[ஓம்பு → ஓம் (பாதுகாப்பு) ஓம் + இடி = பாதுகாப்பு கெடுதல், அழிவு.]*

**ஓமை** *ōmai* பெ (n) 1. ***உகா*** (பிங்.); uga tree 2. ***மாமரம்;*** mango tree "வெண்குன்றிப்பருப்போமைக் கொட்டை" (தைலவ.தைல 33)

ம. ஓம

*[ஓ = உயர்ச்சி, ஓ → ஓமை]*

**ஓய்¹-தல்** *ōy-*, 2 செ.கு.வி. (vi) 1. ***முடிவுறுதல்;*** to cease, to come to an end மழை ஓய்ந்தது 2 ***மாறுதல்;*** to change "செய்வினை யோயற்க" (பரிபா 10,128). 3. ***முன்நிலை சுருங்குதல்*** (தொல்.சொல்.330); to diminish; to be reduced, to become small 4. ***தளர்தல்;*** to become tired, weary, weak, infirm, as a limb of the body கை ஓய்ந்து போயிற்று. 5. ***அழிதல்;*** to expire, perish "ஊனையானிருந் தோம்பு கின்றேன் கெடுவேனு யிரோ யாதே" (திருவாச.5,38). 6. ***இளைப்பாறுதல்;*** to rest ஓய்ந்தவேளை (செ.அக.)

ம. ஒயுக

*[உய் → ஒய் → ஓய் = செல்லுதல், போதல், முடிதல்.]*

**ஓய்**² *ōy,* இடை. (int.) **ஒரு விளியுருபு** (வீரசோ.வேற்றுமை.8); hallo! an int. used in calling attention. (ஆ.அக.).

**ம.** ஓய்; **தெ., க., து.** ஓயி.

*[ஓ → ஓய்.]*

**ஓய்ச்சல்** *ōyccal,* பெ. (n.) 1. ***ஓய்வு;*** ceasing, resting. 2. ***தளர்ச்சி;*** weariness, debility. கைகாலோய்ச்சல்.

*[ஓய்¹ → ஓய்ச்சல்.]*

**ஓய்ச்சலொழிச்சலில்லாமை** *ōyccal-oliccal-illāmai,* பெ. (n.) ***சிறிதும் ஒழிவில்லாமை*** (உ.வ.); utter lack of rest or breathing time.

*[ஓய்ச்சல் + ஒழிச்சல் + இல்லாமை.]*

**ஓய்ச்சலொழிவு** *ōyccal-olivu,* பெ. (n.) **இளைப்பாறுகை** (உ.வ.); rest, leisure.

*[ஓய்ச்சல் + ஒழிவு.]*

**ஓய்மான்** *ōymān,* பெ. (n.) ***குடிப்பெயர்;*** name of a dynasty.

*[ஆய் →. ஓய் + (மகன்) மான். ஆய்க்குடியின் பிரிவினை ஓய்க்குடியினராகலாம்.]*

**ஓய்மான்வில்லியாதன்** *ōymānvilliyādan,* பெ. (n.) ***நன்னாகனால் பாடப்பெற்றவன் இலங்கை என்னும் ஊருக்குத் தலைவன்;*** Sangam noble.

*[ஓய்மான் + வில்லி + ஆதன்.]*

ஆய் → ஓய் + மான். மகன் → மான். ஓய்மானுக்குரிய நாடு ஓய்மா நாடு எனப்பட்டது. ஆநிரைகளைக் காக்கும் ஆய்க்குடியின் வழிமரபினன் ஆகலாம். ஓய்மான் - குடிப்பெயர். வில்லி - தொழிற்பெயர், ஆதன் - இயற்பெயர்.

**ஓய்மானல்லியக்கோடன்** *ōymānalliyakkōdan,*.பெ. (n.) ***நன்னாகனால் பாடப்பெற்ற மாவிலங்கையை ஆண்ட சிற்றரசன்;*** Sangam noble.

*[ஓய்மான் + நல்லியன் + கோடன். **ஓய்மான** பர்ர்க்க; see ōymān.]*

**ஓய்மானல்லியாதன்** *ōymānalliyādan,* பெ. (n.) ***புறத்திணை நன்னாகரால் பாடப்பெற்ற கொடையாளி;*** Sangam noble.

*[ஓய்மான் + நல்லி + ஆதன். **ஓய்மான்** பார்க்க; see ōymān.]*

**ஓய்மானாடு** *ōymānādu,* பெ. (n.) ***திண்டிவனத்தைச் சூழ்ந்த நாடு*** (S.I.I. III,201,12); small tract of country in Tamil-agam situated about Tindivanam.

*[ஓய்மான் + நாடு.]*

**ஓய்வு**¹ *ōyvu,* பெ. (n.) 1. ***ஒழிவு;*** cessation, ceasing, relinquishment, rest. 2. ***தளர்வு;*** weariness. 3. ***முடிவு;*** termination.

**ம.** ஓய்வு.

*[உய் → ஓய் = செல்லுதல், போதல், முடிதல், களைத்தல், சோர்தல். ஓய் → ஓய் → ஓய்வு.]*

**ஓய்வு**² *ōyvu,* பெ. (n.) 1. ***ஓரினப்பொருளை வரிசைபட வைப்பது*** (ஆ.அக.); serializing a class of objects. 2. ***நீட்சி;*** length. 3. ***எல்லை;*** border, limit.

*[1. ஓரியைவு →. ஓய்வு (கொ.வ.). 2. 3. ஓ → ஓய்வு. ஓ = நீட்சி.]*

**ஓய்வுகரை** *ōyvu-karai,* பெ. (n.) ***அளவுமுடிவு*** (யாழ். அக.); limit.

*[ஓய்வு² + கரை.]*

**ஓய்வுநாள்** *ōyvu-nāl,* பெ. (n.) ***வேலை செய்யாது இளைப்பாறும் நாள்.*** (chr.); day of rest, Sabbath.

*[ஓய் → ஓய்வு + நாள்.]*

**ஓய்வொழிச்சல்** *ōyvoliccal,* பெ. (n.) ***ஓய்ச்சலொழிவு*** பார்க்க; see ōyccalolivu.

*[ஓய்வு + ஒழிச்சல்.]*

**ஓயாமணி** *ōyā-mani,* பெ. (n.) ***விடாதடிக்கு மணி*** (இ.வ.); temple bell kept ringing continuously.

*[ஓய் + ஆ + மணி.]*

**ஓயாமாரி** *ōyā-māri,* பெ. (n.) ***இடைவிடாமை*** (யாழ். அக.); continuity.

*[ஓய் + ஆ + மாரி - ஓயாமாரி. 'ஆ' - எ.ம.இ.நி. மாரி = மழை. இடைவிடாத மழையைப் போன்ற இடைவிடாமை என்பது பொருள்.]*

**ஓர்**¹**-தல்** *ōr-,* 2.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஆய்ந்தறிதல்;*** to consider attentively, examine, investigate. ''ஒரும் வையத்தியற்கை'' (சீவக.888). 2. ***அறிதல்;*** to know. (செ.அக.).

*[ஓல் → ஓர் → ஓர் → ஓர்-தல் (வே.க.107).]*

**ஓர்**²**-த்தல்** *ōr-,* 2.செ.குன்றாவி. (v.t.) 1. ***ஆராய்தல்;*** to consider. 2. ***தெரிந்தெடுத்தல்;*** to select, choose. ''ஆயிரத் தோர்த்த விப்பத்தே'' (திவ்.திருவாய்.1,2,1). 3. ***நினைத்தல்;*** to think, regard. ''வேள்வியோர்க் கும்மே யொருமுகம்'' (திருமுரு.96). 4. ***கூர்ந்து கேட்டல்;*** listen attentively. ''புலிப்புகர்ப்போத்தோர்க்கும்'' (புறநா.157.12).

**ம.** ஓர்.

*[ஓர்-தல் → ஓர்-த்தல்.]*

**ஓர்**³ *ōr-,* பெ.எ. (adj.) ***ஓர் அசைநிலை*** (சிலப்.2,37, உரை.); 'a', 'an', the form used before substantives beginning with vowels. ஓர் அரசன் - இடை. part. an expletive. (செ.அக.).

*[ஒல் → ஒன்று → ஒரு → ஓர்.]*

**ஓர்க்கோலை** *ōrkkōlai,* பெ. (n.) ***கடல்படு பொருட்களுள் ஒன்று;*** amber, one of the five kinds of kadal padu-tiraviyam. (products of the sea) அம்பர் என்றும் அழைக்கப்படும்.

*[ஒருகா. ஓர்க்கு + ஓலை.]*

**ஓர்கட்புள்** *ōrkatpul,* பெ. (n) ***காகம்;*** crow.

*[ஓர் + கண் + புள்]*

**ஓர்குடிமணாளன்** *ōr-kudi-maṉālaṉ,* பெ. (n.) ***ஓர்குடியிற்கொண்டோன்*** பார்க்க; see *ōrkudiyirkondōṉ.*

**ஓர்குடியிற்கொண்டோன்** *ōr-kudiyirkondōṉ,* பெ. (n) ***ஓர்ப்படியான்*** (சகலன்) (பிங்.); husband of the wife's sister

*[ஓர் + குடியில் + கொண்டோன்.]*

**ஓர்கை** *ōrgai,* பெ (n) ***யானை;*** elephant "ஓர்கை யுரியான்" (கடம்பர்.உலா 364).

*[ஓர்கை = யானை ஒருகை (தும்பிக்கை) உடைமையின் ஓர்கை எனப்பட்டது.]*

**ஓர்ச்சி**[1] *ōrcci,* பெ (n) 1. ***ஆராய்ச்சி;*** investigation, research 2. ***அறிவு;*** knowledge, wisdom. "ஓர்ச்சி யின்புருவாகி" (வேதாரணி வரன்.25). 3. ***உணர்ச்சி;*** consciousness, feeling "ஒய்ந்த வோர்ச் சிவந் தெழுதலும்" (விநாயகபு.75,443). 4 ***சூழ்வுரை, அறிவுரை;*** consultation, rumination (செ அக.).

ம. ஓர்ச்சி (நினைவு).

*[ஓர் → ஓர்ச்சி]*

**ஓர்ச்சி**[2]**-த்தல்** *ōrcci-,* 4.செ.கு.வி. (v.i) ***நினைவூட்டுதல்;*** to cause, to remember, remind

ம. ஓர்ப்பிக்குக

*[ஓர் → ஓர்ச்சி.]*

**ஓர்ப்படி** *ōr-p-padi,* பெ. (n) ***ஓர்ப்படியாள்*** பார்க்க; see *ōrppadiyāl*

**ஓர்ப்படியாள்** *ōr-p-padiyāl,* பெ (n.) ***கணவனுடன் பிறந்தான் மனைவி;*** wife of the husband's brother

*[ஓர் + படி + ஆள் படி = வாசல் ஒருவாசலுக்குள் மூத்தவளோடு வாழ்பவள்]*

**ஓர்ப்பிலந்தை** *ōrppilandai,* பெ (n) ***காட்டிலந்தை;*** wild jujube (சா.அக.).

*[ஓர்ப்பு + இலந்தை.]*

**ஓர்ப்பு**[1] *ōrppu,* பெ (n) ***ஆய்ந்துணர்கை*** (இறை.2,29); investigation, research, careful consideration, one of the four kinds of ādūu-k-kuṉam 2 ***தெளிவு*** (திவா), clear under-standing 3 ***பொறை*** (திவா), patience, forbearance.

ம. ஓர்ப்பு; தெ. ஓர்பு.

*[ஓர்[2] → ஓர்ப்பு.]*

**ஓர்பு** *ōrbu,* பெ. (n) ***ஆராய்கை*** (சங்.அக.); consideration, reflection, research

*[ஓர் → ஓர்ப்பு → ஓர்பு]*

**ஓர்மம்** *ōrmam,* பெ. (n) 1 ***மனத்திண்மை*** (யாழ்ப்.), fortitude, courage, bravery. 2 ***சிந்தனை;*** reflection 3 ***ஓர்மை*** பார்க்க, see *ōrmai.*

*[ஓர்மி → ஓர்மம் (வே க 107).]*

**ஓர்மி-த்தல்** *ōrmi-,* 4.செ.கு வி. (v.i) ***மனந்திடப்படுதல்*** (வின்.); to be courageous, daring, brave, valiant, adventurous

ம. ஓர்மிக்குக (நினைவுபடுத்துதல்)

*[ஓர் → ஓர்மி → ஓர்மி-த்தல் (வே.க 107).]*

**ஓர்மிப்பு** *ōrmippu,* பெ. (n.) ***ஓர்மம்*** பார்க்க; see *ōrmam.* (ஆ அக.)

*[ஓர்மி → ஓர்மிப்பு.]*

**ஓர்மை** *ōrmai,* பெ (n) 1 ***ஒற்றுமை;*** unity 2 ***துணிவு;*** fortitude, bravery, intrepidity 3. ***ஆரவாரம்*** (ஆடம்பரம்); pomp; parade, as of a festival

*[ஓர் → ஓர்மை (வே க 107)]*

**ஓர்வம்**[1] *ōrvam,* பெ. (n) ***ஒருபாற் சார்கை;*** partiality. "ஓர்வமே செய்யுமுலோபமே" (ஏலா.61)

*[ஓரம் → ஓர்வம்]*

**ஓர்வம்**[2] *ōrvam,* பெ. (n) ***சுவர் கட்டும்பொழுது இரண்டு கற்கள் சேரும் இடம்;*** joining ends of two bricks (inlaying) (சேரநா).

ம. ஓர்வ

*[ஓர் → ஓர்வம்]*

**ஓர்விதைப்பூடு** *ōrvidaippūdu,* பெ (n) ***ஒரே விதையை யுடைய பூடு;*** plant having but a single seed-lobe. (சா.அக.).

*[ஓர் + விதை + பூ.]*

**ஓர்வு** *ōrvu,* பெ. (n) ***ஓர்ப்பு*** பார்க்க, see *ōrppu.*

**ஓரக்கட்டை** *ōra-k-kattai,* பெ (n) 1 ***அணைந்துத்தாங்குங் கட்டை;*** (CEM) abutment, support. 2. ***தேரைத் திசைமாற்றுவதற்காகச் சக்கரத்தின் அடியிலிருக்கும் சாய்வுக்கட்டை;*** block of wood placed under the wheels of the temple chariot to direct its course

*[ஓரம் + கட்டை]*

**ஓரக்கண்ணன்** *ōra-k-kannaṉ,* பெ (n.) 1. ***சாய்ந்த பார்வையுடையவன்;*** squint-eyed man 2. ***ஒருதலைச் சார்பானவன்;*** partisan; one who is biassed

*[ஓரம் + கண்ணன்]*

**ஓரக்காரன்** *ōra-k-kāraṉ,* பெ. (n) ***ஓரக்கண்ணன், 2*** பார்க்க; see *ōrakkannaṉ, 2*

*[ஓரம் + காரன்.]*

**ஓரகத்தாள்** *ōr-agattāl,* பெ. (n) ***ஓரகத்தி*** பார்க்க; see *ōragtti*

*[ஒரு → ஓர் + அகம் + அத்து + ஆள்]*

**ஓரகத்தி** *ōr-agatti,* பெ (n) ***கணவனுடன் பிறந்தான் மனைவி;*** husband's brother's wife (செ அக)

க. ஓரகித்தி

*[ஓர் + அகத்தி (அகம் + அத்தி) அகம் = வீடு]*

**ஓரங்கல்** *ōrangal* பெ (n) ***தெலுங்கு நாட்டு வாரங்கல் நகரம்;*** ancient capital of Andhra, now called Warangal, so called because it was surrounded by a single stone wall "உருத்தரா நின்னுடைய வோரங்கல் நாட்டில்" (தமிழ்நா 89)

தெ. ஓரங்கல

*[ஓர் + அம் + கல் - ஓரங்கல் ஓரங்கல் = ஒற்றைக்கல்.]*

**ஓரசைச்சீர்** *ōr-asai-c-cīr,* பெ. (n) ***அசைச்சீர்*** பார்க்க, see *asai-c-cīr*

*[ஓர் + அசை + சீர்]*

**ஓரட்டாங்கை** *ōrattān-gai,* பெ (n) ***இடக்கை*** (இ.வ.), left hand

*[ஒருஉதல் → நீக்குதல். ஒருவு → ஒருட்டு → ஒருட்டாம் + கை நற்செயல்களுக்குப் பயன்படுத்தாமல் விலக்கும் இடக்கை]*

**ஓரட்டும்** *ōrattum,* பெ (n) ***எல்லாம்*** (p): altogether

*[ஓர் → ஓரட்டும் (வே க 107).]*

**ஓரடி** *ōr-adi,* பெ. (n) ***ஒருபோகம்*** single crop

*[ஓர் + அடி]*

**ஓரடிக்கோரடி** *ōr-adikkōr-adi,* கு.வி எ. (adv.) ***அடிக்கடி;*** frequently "அவனி யாளுகவென் றோரடிக்கோரடி புரிந்து" (பாரத குரு 88)

*[ஓர் + அடிக்கு + ஓர் + அடி.]*

**ஓரடிப்பதம்** *ōr-adi-p-padam,* பெ (n) ***ஓரடித்தரவு அமைந்த இசைப்பாட்டு;*** musical composition or taru consisting of pallavi, anu-pallavi and one caranam.

*[ஓர் + அடி + பதம்]*

**ஓரடிமடக்கு** *ōradimadakku,* பெ. (n) ***நான்கடியுள்ளோரடியே மடங்கி வருவது;*** figure of speech (i.e.) pun appearing in one line of a stanza repeated four times

*[ஓர் + அடி + மடக்கு.]*

**ஓரடை** *ōradai,* பெ (n.) ***ஒரு சிற்றளவு*** (தொல் எழுத்து. 170.உரை ), ancient small measure

*[ஓர் + எடை = ஒரெடை → ஓரடை (கொ வ.).]*

**ஓரணை** *ōranai,* பெ (n) 1 ***ஓர் இணை; pair.*** *(S.I.I. ii.16).* 2. ***வரிசை, ஒழுங்கு;*** line, queue

க. ஓரண.

*[ஓர் + இணை - ஓரிணை → ஓரணை.]*

**ஓரத்துப்பட்டை** *ōrattu-p-pattai,* பெ (n) ***தட்டோட்டுக் கூரையில் ஓரத்திற்கட்டும் சுண்ணாம்புப்பட்டை*** (C.E.M.); side rafter of plaster on tiled roof

*[ஓரம் + அத்து + பட்டை.]*

**ஓரம்**[1] *ōram,* பெ. (n.) 1. ***விளிம்பு;*** edge, border, margin, brim, brink. 2. ***ஒருதலைச்சார்பு;*** partiality in speaking, pleading. "மன்றோரஞ் சொன்னார் மனை" (நல் வழி.23). 3. ***பெண்குறி*** (யாழ்ப்.); pudenda muliebre. 4 ***ஒருபக்கம் பொருந்திய இடம், நெருங்கிய தன்மை;*** on one side, towards the edge

ம. ஓரமி, க. பட., ஓர, கோத. ஓய, து. ஓர, தெ. ஓர, ஓரமு L ōra

*[ஓர் → ஓரம் = ஒன்றின்பக்கம் (வே.க.107)]*

**ஓரம்**[2] *ōram,* பெ (n) ***சலுகை*** (அக.நி ); help, aid, support

**ஓரம்பம்** *ōrambam,* பெ (n) ***ஒரு கணிதநூல்*** (கணக்கதி.3), mathematical work.

*[ஏரம்பம் → ஓரம்பம (கொ.வ ).]*

**ஓரம்பேசல்** *ōrampēsal,* பெ (n) ***ஒருபக்கஞ் சார்பாகப் பேசுதல்;*** biased statement (ஆ அக )

**ஓரம்போகியார்** *ōram-pōgiyār,* பெ (n) ***ஐங்குறுநூற்றில் மருதப்பகுதியைப் பாடிய புலவர்;*** Sangam poet, author of Marudam in Ai-n-kuru-nūru

*[ஓரம் + போகி + ஆர் ஓரம்போகி என்பது ஊர்ப்பெயராகலாம்.]*

**ஓரங்கட்டு-தல்** *ōrankattu-,* 5.செ.கு வி. (v i) 1. ***ஓரமாகச் சேர்த்தல்;*** to gather to one side 2 ***ஒரு ஓரமாகச் செல்லுதல்;*** to go along the edge 3 ***வேண்டாதவரை ஒதுக்கிவைத்தல்;*** to avoid the unwanted

*[ஓரம + கட்டு-தல்]*

**ஓரம்வை-த்தல்** *ōram-vai-,* 4 செ.கு வி (v i) ***ஆறும் புண்ணைச் சுற்றிச் தசை வளர்தல்;*** to form proud flesh around a healing wound (செ அக.)

*[ஓரம் + வை]*

**ஓரவஞ்சனை** *ōra-vañjanai,* பெ. (n) ***ஒருதலைச்சார்பாக ஏய்த்தல்;*** deceitful partiality ***ஓரவாரம்*** பார்க்க; see *ōravāram*

*[ஓரம் + வஞ்சனை.]*

**ஓரவாரம்** *ōra-vāram,* பெ. (n) ***ஒருபக்க சாய்வு;*** partiality "வழக்கினிடை யோரவாரமு ரைத்தே" (அருட்பா.1, விண்ணப்பக்.309).

*[ஓரம் + வாரம். வாரம் = சாய்வு.]*

**ஓரற்று** *ōr-arru,* பெ (n) ***ஒரு தன்மையானது;*** thing of the same kind. "அதனோரற்றே" (தொல் சொல்.136).

*[ஓர் + அற்று.]*

**ஓரறிவுயிர்** *ōr-arivuyir,* பெ. (n) ***தொடுவுணர்வு ஒன்றேயுடைய புல் மரமுதலியன*** (நன்.444,உரை.); living organisms having only one sense of perception, as plants, supposed to have only the sense of touch.

*[ஓர் + அறிவு + உயிர்.]*

**ஓரன்மை** *ōr-anmai,* பெ. (n.) ***ஒருதன்மையல்லாமை;*** dissimilarity. "பிறப்போரன்மை யறிந்தனம்" (நற்.328).

*[ஓர் + அல் + மை.]*

**ஓரா** *ōrā,* பெ. (n) 1. ***முள்ளுப்பலாச்சிமீன்;*** sea porcupine, light brown fish 2. ***ஒருவகைக்கடல் மீன்;*** sea-fish, light brown (செ.அக.)

*[உல் → ஒல் → ஓர் → ஓரா]*



ஓரா

**ஓராங்கு** *ōr-āṅgu,* வி.எ. (adv) 1. ***ஒரு சேர;*** united jointly ''இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்'' (கலித்.18) 2. ***ஒன்றுபோல;*** in the same manner, like wise ''நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த'' (பதிற்றுப் 69,16) 3. ***இடைவிடாமல்;*** unintermittently, ceaselessly ''ஓராங்குப் படிதலுடைய ரீண்டே'' (ஞானா.41,19).

*[ஓர் → ஓராங்கு (வே.க.107).]*

**ஓராட்டு-தல்** *ōrāttu-,* 5.செ.குன்றாவி. (v.t) 1. ***தாலாட்டு தல்*** (யாழ்ப்.); to lull, lullaby 2. ***ஓலாட்டு-தல்*** பார்க்க; see *ōlāttu-*

*[ஓலாட்டு → ஓராட்டு (கொ.வ.).]*

**ஓராட்டுப்பட்டோலை** *ōrāttu-p-pattōlai,* பெ. (n.) ***ஆண் டுக்கணக்குப்பட்டியல், சதுர்ப்பட்டோலை;*** (p) complete balance sheet.

*[ஓர் + ஆட்டு + பட்டோலை. ஆண்டு → ஆட்டு.]*

**ஓராண்காணி** *ōr-āṉ-kāṇi,* பெ. (n.) ***ஒருவனுக்கே உரிய நிலம்;*** estate under a single owner. ''ஓராண்காணியா யரசாள'' (இராமநா.உயுத்த.74).

*[ஓர் + ஆள் + காணி.]*

**ஓராண்டு** *ōrāṇḍu,* பெ. (n.) 1. ***ஓர் ஆண்டு;*** one year 2. ***இறந்தார்க்கு ஓராண்டு முடிவில் செய்யும் நீர்க்க டன்;*** anniversary of death (சேரநா.).

ம. ஓராண்டு.

*[ஓர் + ஆண்டு]*

**ஓராண்வழி** *ōr-āṉ-vaḻi,* பெ. (n) ***ஒரே தொடராய்வரும் மரபு வழி*** (பரம்பரை.); unbroken lineage from individual to individual. 'நம்மாசாரியர்கள் ... ஓராண்வழி யாய்க் கொண்டு போந்த இத்தை' (ஈடு.6,10,4).

*[ஓர் + ஆண் + வழி.]*

**ஓராம்** *ōrām,* பெ.எ. (adj) ***முதலாம்;*** first.

*[ஓர் → ஓராம் (வே.க.107)]*

**ஓராயம்** *ōr-āyam,* பெ. (n) 1. ***சேர்க்கை;*** combination, union ''ஓராயமே யுலகம் படைத்தது'' (திருமந் 407). 2. ***சாய்வு*** (வின்.), obliqueness, slant 3. ***தோணியின் சாய்ந்த ஓர்புறம்*** (வின்), the leeward or leaning side of a boat or other vessel 4. ***இணைப்பு*** (வின்.); the close joining of two boards

ம. ஓராயம்.

*[ஓர் + ஆயம்]*

**ஓராயிரம்** *ōrāyiram,* பெ. (n) 1. ***ஓர் ஆயிரம்;*** one thousand 2. ***பன்முறை அல்லது எண்ணிறந்த தடவை எனப் பொருள்படுவதோர் குறிப்பு மொழி;*** expression denoting many times or on numerous occasions அவ னுக்கு நான் ஓராயிரம் சொன்னேன்; கேட்கவில்லை (உ.வ.)

ம. ஓராயிரம்

*[ஓர் + ஆயிரம்]*

**ஓராவொட்டி** *ōrāvotti,* பெ. (n) ***மீன்வகை*** (யாழ்.அக.); a kind of fish

*[ஓரா → ஓராவொட்டி.]*



ஓராவொட்டி

**ஓரானொரு** *ōrāṉ-oru,* பெ.எ. (adj.) ***ஏதாவது ஒரு;*** certain, someone. ''ஓரானொருநாளில்'' (குருபரம்.217, பன்னீ.).

*[ஓர் → ஓராம் + ஒரு - ஓரானொரு (வே.க.107) ம் - ன் (திரிபு.) ஆகும் → ஆம் (உறுதிப் பொருள் தந்து சாரியையாயிற்று).]*

**ஓரி**[1] *ōri,* பெ. (n.) 1. ***திருமணமாகாதவன்;*** celibate. 2. ***கணவனுடன் பிறந்தான் மனைவி;*** wife of the husband's brother. ''ஓரிமகன் றனக்கு மோர் சரடு போட வேண்டும்'' (ஆதியூரவ.5).

ம. ஓரி (பங்கு).

*[1. ஓர் → ஓரி (தனித்திருப்பவன்). 2. ஓரகத்தி → ஓரி.]*

**ஓரி**[2] *ōri*, பெ. (n.) **தேன்முதிரும்போது தோன்றும் நீலநிறம்;** dark blue colour of the matured honey. ''அணிநிறவோரி பாய்தலின்'' (புறநா.109,7).

*[ஊரி → ஓரி.]*

**ஓரி**[3] *ōri*, பெ. (n.) 1. **வலிமை பொருந்தியது;** that which is strong. 2. **விலங்குகளின் ஆண்;** male of animals. 3. **காளை;** ox. 4. **முதுநரி;** old jackal. 5. **ஆண் குரங்கு;** male lemur. 6. **ஆண்களின் தலைமயிர்;** man's hair. 7. **குதிரையின் பிடரிமயிர்;** mane. ''ஓரி நுடங்க'' (பொருள்.164).

**க.** ஓரி.

*[உல் → ஒல் → ஓல் → ஓர் → ஓரி.]*

**ஓரி**[4] *ōri*, பெ. (n.) 1. **தமிழகப் பெருவள்ளல்களில் ஒருவன்;** Sangam philanthrophist. 2. **ஓரியின் குதிரைக் குரியபெயர்;** name of horse owned by the Tamil chieftain Ōri. 3. **ஒப்பற்றவன்;** man of excellence.

*[ஓரி[3] → ஓரி[4] சேரக்கிளை. மரபினர்க்கும் நாகருள் ஒரு சாரார்க் கும் 'ஓரி' குடிப்பெயராக விளங்கியதால் இதனைக் குடிப்பெ யர் என்றே குறிப்பிடலாம்.]*

**ஓரி**[5] *ōri*, பெ. (n.) 1. **உயரம்;** height. 2. **முதிர்வு;** matured or ripened stage.

**து.** ஓரிகெ.

*[உயர் → ஓர் → ஓரி.]*

**ஓரி**[6] *ori*, பெ. (n.) **நீரோடை, வாய்க்கால்களில் மேல் உயர்த்திக்கட்டிய பாலம்;** bridge.

*[ஊ → ஓ → ஓரி.]*

**ஓரிஆ** *ōriā*, பெ. (n.) **அடங்காத காளை;** unmanageable ox.

**க.** ஓரை ஆவு, ஓரி.

*[ஓரி + ஆ, ஆ = மாடு, காளை.]*

**ஓரிதலம்** *oridalam*, பெ. (n.) **சவுட்டு மண்;** fuller's earth. (சா.அக.).

*[உவர் → உவரி → ஓரி + தலம்.]*

**ஓரிதழ்த்தாமரை** *ōr-idal-t-tāmarai*, பெ. (n.) **ஒரு சிறு பூண்டு** (பதார்த்த.318); pasture weed.

*[ஓர் + இதழ் + தாமரை.]*

**ஓரிபிடி-த்தல்** *ōripidi-*, 4.செ.கு.வி. (v.i.) 1. **ஓட்டாரம் செய்தல், அடம்பிடித்தல்;** to be obstinate. 2. **ஓயாமல் அழுதல்;** to weep continuously. 3. **நச்சரித்தல்;** to give trouble.

**க.** ஓரெ.

*[ஓரி = காளை. ஓரி + பிடி - ஓரிபிடி. அடங்காத காளைபோல் தொல்லை தருதல்.]*

**ஓரிபூ-த்தல்** *ōri-pū-*, 4.செ.கு.வி. (v.i.) **தேடுவாரற்று அல்லது கேட்பாரற்றுக் கிடத்தல்** (யாழ்.அக.); to lie unwanted or unsought for.

*[ஓரி + பூத்தல். முதிர்ந்து நிறம்மாறி உண்பாரற்றுத் தானாகச் சிதையும் தேனடை போல் தேடுவாரற்றுக் கிடக்கும் நல்ல பொருளும் ஓரிபூத்தது எனக் குறிப்பிடுவது மரபு.]*

**ஓரியர்** *ōriyar*, பெ. (n.) 1. **குறிஞ்சிநிலத்தலைமக்களுள் சேரக்கிளைமரபினர்க்குரிய 'ஓரி' என்னும் குடிவழியி னர்;** name of a clan among the Chera Dynasty. 2. **பழந்தமிழ்க் கிளைமரபுகளுள் ஒன்றான நாகர்க்குரிய பெயர்;** name of clan of the ancient Tamil known as Nāgās. (புறநா.175,உரை.).

*[ஓரி + அர். ஓரி = குடிப்பெயர்.]*

**ஓரியாட்டம்** *ōri-y-āttam*, பெ. (n.) **ஓரியாடு-தல்** பார்க்க; see *ōri-y-āḍu*.

*[ஓரியாடு → ஓரியாட்டம்.]*

**ஓரியாடு-தல்** *ōri-y-āḍu-*, 5.செ.கு.வி. (v.i.) 1. **பிறர் தொடாத வண்ணம் நெடுநேரம் வலிமைகாட்டி நீருள் மூழ்கி விளையாடும் நீச்சல் விளையாட்டு;** game of swimming. இவன் ஓரியாடுவதில் கெட்டிக்காரன் (திருச்சி.). 2. **துணைக்கு எவரும் வராத நிலையில் ஒருவரே பெரும்பணியை நெடுநேரம் செய்தல்;** to work all alone to finish a heavy task. அவள் ஒருத்தியே இவ்வளவு பெரிய கலியாணச் சமையல் வேலையில் ஓரியாடுகிறாள். யாராவது உதவி செய்யுங்கள். (உ.வ.).

*[ஓரி = காளை. ஓரியாடுதல் = வலிமை வாய்ந்த காளை போல் ஒருவரே தனித்து நின்று திறமை காட்டுதல்.]*

**ஓரிலைத்தாமரை** *ōr-ilai-t-tāmarai*, பெ. (n.) **ஒரு சிறு பூண்டு** (பதார்த்த.317); small plant.

*[ஓர் + இலை + தாமரை.]*

**ஓரிலைத்துத்தி** *ōr-ilai-t-tutti*, பெ. (n.) **துத்திச்செடிவகை** (வின்.); a species of Mallow.

*[ஓர் + இலை + துத்தி.]*

**ஓரீற்றா** *ōr-īṟṟā*, பெ. (n.) **ஒருமுறையீன்ற மாடு;** cow that has calved but once.

*[ஓர் + ஈற்று + ஆ.]*

**ஓரு**[1] *ōru*, பெ. (n.) **நொடி** (அக.நி.); instant, as the time measure of the snap of the finger.

*[ஒல் → ஓர் → ஓர் → ஓரு.]*

**ஓரு**[2] *ōru*, பெ. (n.) **மணற்றிட்டு;** heap of sand. 2. **நீர்க்கால்களில், நீர்நிலைகள், கால்வாய்கள் ஆகிய வற்றின் அடியில் படியும் வண்டல்;** sediment.

*[ஊர் → ஓர் → ஓரு. ஓர் = உயரம்.]*

**ஓரும்** *ōrum*, இடை. (part.) 1. **எல்லாம்;** all, altogether. 2. **ஓர் அசைச்சொல்** (குறள்.40); poetic expletive ''செயற்பால தோரும் அறனே'' (குறள்.40).

*[ஓர் → ஓரும். ஓரும் என்னும் சொல் ஒன்றுபட்ட அனைத்தும் அல்லது எல்லாம் எனப்பொருள் தந்து, அதே பொருளில் சொல்லின் பின்னடையாகும் இடைச்சொல்லாயிற்று. செயற்பா லதோரும் என்பதற்குச் செயற்பாலதெல்லாம் என்று பொருள்.]*

**ஒருமம்** *ōrumam,* பெ. (n.) 1 ***நீர்நிலை*** (அக.நி.); pool, sheet of water. 2. ***ஆற்றுக்கால்வாய்;*** channel from the river.

*[வாலுகம் → வாருமம் → ஒருமம் (கொ.வ.) வாலுகம் = நீண்ட மணல்மேடுகளிடையிலமைந்த நீர்நிலை. ஒருவு → ஒருமம் → ஒருமம் = ஆற்றிலிருந்து விலக்கிக் கொணரும் நீர்க்கால்.]*

**ஒருயிர்ப்புள்** *ōr-uyir-p-pul,* பெ. (n) ***இருதலைப்புள்;*** fabulous bird having two heads "ஒருயிர்ப் புள்ளி னிருதலையுள்ளொன்று போரெதிர்ந்தற்றால்" (கலித் 89)

*[ஓர் + உயர் + புள்.]*

**ஒருள்ளிப்பூடு** *ōr-ulli-p-pūdu,* பெ (n.) ***பலபல்லில்லாத உள்ளி*** (வின்); solid root of garlic, not divided into cloves

*[ஓர் + உள்ளி + பூடு.]*

**ஒரெடை** *ōredai,* பெ (n) ***ஓர் அளவை*** (தொல்.எழுத்து 28,இளம்பூர.); ancient small measure

*[ஓர் + எடை.]*

**ஓரெலியீரெலி** *ōr-eli-y-īr-eli,* பெ. (n) ***பரவர் விளையாட்டு வகை;*** game among paravas

*[ஓர் + எலி + ஈர் + எலி.]*

**ஓரெழுத்தினம்** *ōr-eluttinam,* பெ (n) ***மிறைக்கவி வகை*** (பிங்), a variety of metrical composition

*[ஓர் + எழுத்து + இனம்]*

**ஓரெழுத் தீசன்** *ōreluttīsan,* பெ. (n) ***ஈ;*** fly (சா அக.)

*[ஓர் + எழுத்து + ஈசன். ஈ என்னும் பெயரில் ஈசன் பெயரிலுள்ள முதல் ஓரெழுத்து மட்டும் இருப்பதால் பெற்ற நகைச்சுவைக் குறிப்புப் பெயர்]*

**ஓரெழுத்துமடக்கு** *ōr-eluttu-madakku,* பெ. (n) ***வந்த எழுத்தே மடக்கி வரும் சொல்லணி*** (தண்டி 94), (Rhet.) figure of orthography consisting in the consecutive repetition of the same letter in a verse, as in நாநாநாநாதங்கூடிசைநாடுந் தொழிலோவோ

*[ஓர் + எழுத்து + மடக்கு]*

**ஓரெழுத்தொருமொழி** *ōreluttorumoli,* பெ (n) ***ஓரெழுத்தே நின்று பொருள் தரும் சொல்;*** word comprising of a single letter.

*[ஓர் + எழுத்து + ஒரு + மொழி.]*

**ஓரை**[1] *ōrai,* பெ. (n.) 1 ***பெண்கள் கூட்டம்*** (பிங்.); concourse of women 2 ***மகளிர் விளையாட்டு;*** woman's play "ஓரையாயத் தொண்டொடி மகளிர்" (புறநா 176,1) 3 ***மகளிராடுங்களம்*** (திவா.); playground for woman 4 ***கைபிணைந்தாடும் குரவைக் கூத்து;*** a kind of ancient dance with hands joined in a circle, the performers singing while dancing (பிங்).

*[ஓர் → ஓரை (ஒருங்குற்ற கூட்டம்) ஒரு = மணற்றிட்டு. ஓரை = மணலில் ஆடும் விளையாட்டு]*

**ஓரை**[2] *ōrai,* பெ (n) 1 ***நாண்மீன்மண்டலம்;*** sign of the Zodiac "ஓரையுநாளுந் துறநத வொழுக்கம்" (தொல்.பொருள் 135) 2 ***ஒரு முழுத்தம்;*** division of time commencing with the rising of zodiacal sign "மங்கலப் பெருங்கணி வகுத்த வோரையான்" (சீவக 2411). 3. ***நேரம்;*** time, occasion, period "விடிவோரையி லெழுந்து" (குருபரம் 115,பன்னீ) 4 ***இரண்டரை நாழிகை கொண்ட காலம்;*** an hour of 60 minutes 5 ***விண்மீன் கூட்டம்;*** constellation

*[ஓர் → ஓரை = ஓரிடததில் சேர்நத திரள், கூட்டம் ஓர் → ஓரை (மு தா 170 ஒ மொ 358)]*

"மறைநத ஒழுககத்து ஓரையும் நாளும் துறந்த ஒழுக்கம் கிழவோறகிலலை" (தொல களவு 44) ஓரை = கோள்நிலை. தீயகோள்நிலைககு ஆயிறறு இலததீன மொழியில வழஙகிய பன்னிரு ஓரைப்பெயாகளும தமிழப பெயாகளின மொழிபெயர்ப்பாகவே யிருக்கின்றன i Aries (ram) ii Taurus (bull), iii Gemini (twins), iv Cancer (crab), v Leo (lion) vi Vergo (virgin), vii Libra (balance) viii Seorpin (scorpion), ix Sagittarius (archer or bow), x Capricorn (the goat - horned = shark), xi Aguarius (water - bearer = pitcher), xii Pisces (fish)

**ஓரை**[3] *ōrai,* பெ (n) ***புளிச்சாறு, எள் கலந்த சோறு வகை எள்ளோரை;*** boiled rice, general term used to indicate rice that is mixed up with other edibles such as tamarind, sesamum, cocoanut, etc

தெ. ஒரெமு

*[உறை → ஓரை.]*

**ஓரை**[4] *ōrai,* இடை (part.) ***ஓர் இடைச்சொல்*** (பிங்.); connective particle

*[ஓர் → ஓரை. ஒ.நோ ஒரும்.]*

**ஓரை**[5] *ōrai,* பெ. (n) ***கூகை வகை*** (வின்), a kind of owl

*[ஓரி → ஓரை = முதிர்ந்தது, பெரியது]*

**ஓரை**[6] *ōrai,* பெ. (n) ***அணிகலன்*** (அக நி); ornament

*[ஒலி → ஓரி → ஓரை.]*

**ஓரைப்பாவை** *ōrai-p-pāvai,* பெ. (n) ***மகளிர் விளையாட்டுப் பாவை*** (கலித் 82,உரை.); doll used by girls in their plays.

*[ஓரை + பாவை ஓரை = மகளிர் கூடியாடும் விளையாட்டு]*

**ஓரையயர்-தல்** *ōrai-y-ayar-,*2 செ கு வி (vi) ***ஓரைப்பாவையை வைத்து மகளிர் விளையாடுதல்;*** to play with dolls "மடக்குறு மாக்களோடோரை யயரும்" (கலித் 82,9)

*[ஓரை + அயர்]*

**ஓரையாயம்** *ōrai-y-āyam,* பெ (n) ***பொம்மைகளை வைத்து விளையாடும் பாவையாடல் மகளிர்குழு;*** a group of girls at play

ஓரை + ஆயம்]

**ஒரொட்டு** *ōr-oṭṭu,* கு வி எ. (adv) 1 ***முழுதும்;*** altogether by the lump, wholesale. 2 ***சராசரியாக*** (வின்), on an average, in general

*[ஓா + ஒட்டு]*

**ஓரொருதாளி** *ōroruṭāḷi,* பெ. (n.) ***நெருஞ்சி;*** small caltrope (சா.அக.)

*[ஓா → ஒரு + தாளி]*

**ஓரொற்றுவாரம்** *ōr-oṟṟu-vāram,* பெ (n) ***ஒரு மாத்திரை பெற்று வருஞ் செய்யுள்*** (சிலப் 3,136,உரை), musical composition sung to a single beat, a variety of vāram

*[ஓா + ஒற்று + வாரம]*

**ஓரொன்று** *ōr-oṉṟu* பெ (n) ***ஒவ்வொன்று*** (சிறு பஞ் 27), each one, one of each; one at a time; one for each

ம. ஓரொன்று, ஓரொன்னு

*[ஓர் + ஒன்று]*

**ஓரோடத்துக்கந்தரத்தனார்** *ōrōḍattukkandarattaṉār,* பெ (n) ***கடைச் சங்க மருவிய புலவர்;*** Sangam poet (அபி சிந்)

*[உரகடம → ஒரோடம் + அத்து + கந்தரத்தன் + ஆர்]*

**ஓல்**[1] *ōl,* பெ (n) 1 ***குத்துதல், அசைதல்;*** piercing, moving 2 ***ஒலி;*** sound "ஓலுறு பெருக்கின்" (இரகு நகர 42) 3 ***தாலாட்டு;*** lullaby "ஓலுடனாட்டப் பாலுடனுண்டு" (இறை 2,27) 4 ***ஓலம்;*** wailing (செ அக.)

*[ஒல → ஓல்.]*

**ஓல்**[2] *ōl,* இடை (part) ***ஒரு விளியுருபு;*** vocative ending. "சாத்தாவோல்" (வீரசோ.வேற்றுமைப் 8,உரை).

*[ஓ → ஓல் (விளிக்குறிப்பு) இது இக்காலத்து ஓல் → ஓய் எனததிரிந்தது ]*

**ஓல்**[3] *ōl,* 14 செ குன்றாவி. (vt) 1. ***குத்துதல்;*** to pierce 2 ***துளையிடுதல்;*** to make hole. 3 ***புணர்தல்;*** to have intercourse

*[உல → ஒல் → ஓல்.]*

**ஓலக்கஅரசர்** *ōlakka-arasar,* பெ (n) 1 ***அரிச்சந்திரன்;*** Harischandra 2 ***நளன்;*** Nala 3. ***முசுகுந்தன்;*** Musugunda 4 ***காத்தவீரியன்;*** Karthavīriya 5. ***சிபி;*** Sibi 6 ***பரதன்;*** Bharta 7 ***இராமன்;*** Rama 8 ***இரகு;*** Ragu 9. ***யயாதி;*** Yayadi 10 ***பகீரதன்;*** Bageeratha 11. ***மாந்தாதா;*** Mandatha 12 ***அனங்கன்;*** Ananga 13. ***அரியணையில் வீற்றிருக்கும் அரசன்;*** king on the throne

*[ஓலக்கம் + அரசர். **ஓலக்கம்** பார்க்க; see ōlakkam]*

**ஓலக்கங்கொடு-த்தல்** *ōlakkaṅ-koḍu-,* 4.செ.கு.வி. (v.i.) ***அத்தாணியிலிருந்து காட்சிகொடுத்தல்;*** to grant an audience, as a king

*[ஓலக்கம் + கொடு.]*

**ஓலக்கச்சூளை** *ōlakka-c-cūlai,* பெ. (n.) ***அத்தாணியில் தொண்டு செய்யும் பணிப்பெண்டிர்;*** servants at the audience hall "உந்திநின்றா ருன்ற னோலக்கச் சூளைகள்" (தேவா.1041,10)

க. ஓலகதசூளெ.

*[ஓலக்கம் + சூளை. ஓலக்கம் = அரசனின் திருவோலக்க மண்டபம் சூளை = நெற்றியில் தலைவகிடு வழியாகச் சூளாமணி என்னும் முத்துப் பதித்த அணிகலன் சூடிய நாட்டியப்பெண். கூத்தர் குழுவைச் சார்ந்த விறலி ]*

**ஓலக்கம்** *ōlakkam,* பெ (n) 1 ***அத்தாணிக்காட்சி;*** assembly of state, audience, royal presence, durbar "நாளோலக்க மருள" (திவ் திருப்பள்ளி 9) 2 ***அவைக் கூடம்;*** assembly hall "அந்த வோலக்கந் தன்னி லருந்தவ முனிவ ரெல்லாம் வந்தனர்" (அரிச் பு.வி வாக 37)

க. ஓலக, து. ஓலக, தெ. ஓலகமு

*[ஓலகம் → ஓலக்கம் ]*

ஓலகம் = நாதசுரம் என்னும் விரிவாய் வங்கியம் இது மங்கல இன்னியமாகக கருதபபடுகிறது ஓலகம முழஙக அரசனை வரவேறகும அத்தாணி மணடபம ஓலகக மணடபம் எனப்பட்டது இன்றும் தெலுங்கு கருநாடக மாநிலஙகளில் நாதசுரத்தை ஓலகம் என்றும் ஓலகம இசைப்பவரை ஓலகத்தா என்றும் அழைப்பதைக் காணலாம்

**ஓலக்கமண்டபம்** *ōlakka-mandabam,* பெ (n) ***அத்தாணி மண்டபம்;*** place of assembly, durbar hall, hall "எம்பெருமா னோலக்க மண்டபத்துள்" (தாயு எந்நாட் அருளியல்பு.10).

*[ஓலக்கம் + மண்டபம் **ஓலக்கம்** பார்க்க, see ōlakkam ]*

**ஓலக்கமொழி** *ōlakka-moḻi,* பெ. (n) ***கூட்டத்திற் சொல்லப்படும் ஆரவாரச்செய்தி*** (ஈடு); pompous speech in an assembly.

*[ஓலக்கம் + மொழி.]*

**ஓலக்கவார்த்தை** *ōlakka-vārttai,* பெ. (n) ***ஓலக்கமொழி*** பார்க்க; see ōlakka-moḻi

*[ஓலக்கம் + வார்த்தை.]*

**ஓலம்**[1] *ōlam,* பெ (n) 1 ***தொடர்ந்து எழுப்பப்படும் நெட்டோசை*** (பிங்), sound, noise, roar 2 ***அடைக்கலம் வேண்டுங் குறிப்பு மொழி;*** cry of lamentation, appeal, exclamation entreating succour "ஞானநாயகனே யோலம்" (கந்தபு சூர வதை.460). 3. ***கடல்;*** (வின்.); sea.

ம. ஓலம், க. ஒலெ; து. ஒரு; தெ. ஓல; குரு. ஓலொக்னா, மால். ஓல்கெ.

*[ஓல் → ஓலம் (வே.க.113).]*

**ஓலம்படு-தல்** *ōlampaḍu-,* 20.செ கு.வி. (vi) ***பிறரிடம் உதவி கேட்டு அழுது நின்று இரத்தல்;*** to beg weeping.

*[ஓலம் + படு.]*

**ஓலம்போழ்** *ōlam-pōḻ*, பெ. (n) ***வகிர்ந்த ஓலை;*** split leaf of the palmyra prepared for writing "ஓலம் போழிற் பொறித்து" (விநாயகபு 3,3)

*[ஓலை → ஓலம் + போழ். போழ் = போழ்ந்தது, கிழிந்தது ]*

**ஓலமிடு-தல்** *ōlam-iḍu*, 20.செ கு.வி. (v.i) 1 ***காப்பு வேண்டுதல்;*** to call for succour, cry for protection, appeal "சிவனேசிவனேயென் றோலமிடினும்" (திருவாச.7,5). 2 ***சத்தமிடுதல்;*** to make a noise "ஓலமிட்டிரியல் போக" (ஞான.பாயி.6,24)

**ம.** ஓலமிடுக

*[ஓலம் + இடு ]*

**ஓலன்** *ōlaṉ*, பெ (n) ***குழம்புக் கூட்டு வகை;*** a kind of vegetable dish (செ.அக.).

**ம.** ஓலன்

*[ஓல் → ஓல → ஓலன் (ஒன்று கூட்டியது).]*

**ஓலாட்டு-தல்** *ōl-āṭṭu-*, 5.செ.கு வி. (v.i) ***தாலாட்டுதல்*** (யாழ்ப்.); to lull a child, sing a lullaby.

*[ஓல் → ஓலாட்டு.]*

**ஓலாடு-தல்** *ōlāḍu*, 5 செ கு வி. (v i) ***முன்பின்னாக அசைதல், தாலாட்டுதல்;*** to move back and forth, rocking the cradle

**க.** ஓலாடு

*[ஓல் + ஆடு - ஓலாடு ஓல் = அசைவு, ஓசை, (ஓலம்), **ஓலாலம்** பார்க்க, see ōlālam ]*

**ஓலாலம்** *ōlālam*, பெ (n) ***தாலாட்டு;*** lullaby.

*[ஓல் + ஆலம் ஓலம் = ஓசை. ஆலுதல் = சுற்றுதல், தொடர்தல். ஓலாலுதல் = ஓலாடுதல்.]*

ஆலம், ஆரம் - சொல்லாக்க ஈறுகள் ஓலமிடல, இடையறாது ஓசை யெழுப்புதல், குழந்தையைத் தூங்கச்செய்ய தாய் எழுப்பும் தொடாந்த ஓலம் அல்லது ஓசை ஓலாலம் எனப்பட்டது ஓலாலம் பிற இந்திய மொழிகளில் **லாலி** எனவும் மேலையாரிய மொழிகளில் **lull, lullaby** எனவும் மருவிற்று **lull** என்னும் ஆங்கிலச் சொல்லுக்குத் தொட்டிலாட்டுதல் (to rock the cradle) என்னும் பொருளிருத்தல் காண்க

**ஓலிடல்** *ōliḍal*, பெ (n) ***ஊளையிடுதல்;*** to hawl.

*[ஓல் + இடல்.]*

**ஓலிடு-தல்** *ōl-iḍu-*, 20 செ.கு.வி. (v i) ***ஓசையிடுதல்;*** to make a noise. "பணைவித மோலிட" (பாரத.மணிமான்.20).

**க.** ஓலிசு

*[ஓல் + இடு ]*

**ஓலு-தல்** *ōlu-*, 5 செ.கு.வி. (v.i) ***முழங்குதல்;*** to make noise. "நத்தோலும் வாரியன்ன" (மான்விடு.102).

*[ஓல் → ஓல் → ஓலு.]*

**ஓலுறு[1]-த்தல்** *ōl-uṟu-*, 4 செ.கு வி (v i) 1 ***இன்னோசை யுண்டாக்குதல்;*** to emit a pleasant sound "மணியருவி மருங்கோலுறுத்த" (இறை.2,42,உரை.). 2. ***தாலாட்டுதல்;*** to lull a child to sleep 'அஃது ஓலுறுத்தலாற் றுயில் கொள்ளும்' (கலித்.42,உரை.).

*[ஓல் + உறு.]*

**ஓலுறு[2]-தல்** *ōl-uṟu-*, 2 செ.கு.வி. (v.i.) ***ஒலிபொருந்துதல்;*** to be filled with sound; to resound. "ஓலுறுபெருக்கின்" (இரகு.நகர.42).

*[ஓல் → ஓல் + உறு.]*

**ஓலை[1]** *ōlai*, பெ. (n) 1 ***பனை, தென்னை முதலியவற்றனோலை*** (தொல் பொருள்.641); palm leaf 2. ***ஓலைமுடங்கல்;*** letter or any writing on a palmyra leaf; palmyra leaf on which something in written. 3. ***காதிலணியும் ஓலைச்சுருள்;*** rolled palm-leaf used as an ear ornament 4 ***காதணி;*** ornament worn in the lobe of the ear, as of gold often set with precious stones. "பொன்செ யோலை யொருகாது" (தேவா 1180,10). 5. ***ஓலைக்குடை;*** umbrella made of palm-leaf "உறை பனி கதிர்போற்று மோலையன்" (கந்தபு.தவங்.2).

**ம.** ஓல; **க.** ஓலெ, **கோத.** ஓல்; **துட.** ஓல், **குல.** ஓலெ, **து.** ஓலெ.

*[ஓல் = ஓசையிடுதல், ஒலியெழுப்புதல், அசைதல். ஓலாடு = அசைந்தாடு. ஓலம் = ஓசை ஓலை = அசைந்து ஒலி எழுப்புவது.]*

**ஓலை[2]** *ōlai*, பெ. (n) ***பேய்முன்னை மரம்;*** charcoal-tree

*[ஓல் → ஓல் → ஓலை.]*

**ஓலைக்கண்** *ōlai-k-kaṇ*, பெ (n) 1. ***ஓலைச்சட்டத்தில் விழுந்துள்ள பதிவு அல்லது கீறல்*** (வின் ); scallop or indentation of the palmyra-leaf 2. ***ஓலைத் தளிர்;*** tender leaf of palm trees.

*[ஓலை + கண்.]*

**ஓலைக்கணக்கர்** *ōlai-k-kaṇakkar*, பெ. (n) 1. ***பள்ளியிற்படிப்போர்;*** learners at school "ஓலைக்கணக்கரொலியடங்கு புன்செக்கர்" (நாலடி.397). 2 ***புலவர்;*** scholar (ஆ அக ).

*[ஓலை + கணக்கர்.]*

**ஓலைக்கணாட்டு** *ōlaikkaṇāṭṭu*, பெ. (n.) ***ஓலைத்தளிர்;*** tender leaf of palm trees

*[ஓலைக்கண் → ஓலைக்கணாட்டு. 'ஆட்டு' சொல்லாக்க ஈறு ]*

**ஓலைக்கதவு** *ōlai-k-kadavu*, பெ. (n.) ***ஓலையாலாகிய படல்;*** palm leaf screen, used as a door.

*[ஓலை + கதவு ]*

**ஓலைக்காந்தல்** *ōlai-k-kāndal*, பெ. (n) ***ஓலையின் நெருப்புப் பொறி*** (வின் ); cinder of palm-leaf, as burning, floating flakes; dry pieces of palm leaf.

*[ஓலை + காந்தல் ]*

**ஓலைக்காரன்** *ōlai-k-kāraṉ,* பெ. (n.) ***செய்தியறிவிப் போன்;*** messanger

ம. ஓலகார; க. ஒலெகார.

*[ஓலை + காரன்.]*

**ஓலைக்கால் நண்டு** *ōlaikkāl-nanḍu,* பெ. (n.) ***ஒரு வகைக் கடல் நண்டு;*** a kind of sea-crab. (சா.அக.).

*[ஓலை + கால் + நண்டு.]*

**ஓலைக்கிணாட்டு** *ōlai-k-kiṇāṭṭu,* பெ. (n.) ***ஓலைச் சிறு துண்டு*** (யாழ்ப்.); chip or small piece of the palmyra leaf.

*[ஓலை + கிணாட்டு. கிள் → கிள்ளாட்டு → கிண்ணாட்டு → கிணாட்டு.]*

**ஓலைக்கிளிஞ்சில்** *ōlai-k-kiliñjil,* பெ. (n.) ***கிளிஞ்சில் வகை*** (வின்.); flat chank like a palm-leaf

*[ஓலை + கிளிஞ்சில்.]*

**ஓலைக்குடை** *ōlai-k-kuḍai,* பெ. (n.) ***மழையைத் தாங்கும்படி ஓலையால் முடையப்பட்ட கூடு;*** palm-leaf hood used as an umbrella ''மறைப்புழி ஓலைபோல மறைக்குவன்'' (குறள்.பரி.மேற்.).

ம. ஓலக்குட.

*[ஓலை + குடை.]*

**ஓலைக்கூடு** *ōlai-k-kūḍu,* பெ. (n.) ***ஓலைக்குடை*** (யாழ்.அக.); palm-leaf umbrella.

ம. ஓலகுட.

*[ஓலை + கூடு.]*

**ஓலைக்கூலம்** *ōlai-k-kūlam,* பெ. (n.) ***எழுத்திடுவதற் குரியதாகப் பக்குவம் செய்யப் பெற்று விற்பனை செய்யும் பனையோலைக்குரிய வரி;*** tax for palm leaves prepared for writing.

*[ஓலை + கூலம். ஓலை = பனையோலை. கூலம் = தவசமாகக் கொடுக்கப்படும் வரி.]*

**ஓலைக்கொடி** *ōlai-k-kodi,* பெ. (n) ***பறக்கவிடும் ஓலைப்பட்டம்*** (யாழ்ப்.), kite made of palmyra leaf

*[ஓலை + கொடி.]*

**ஓலைக்கொம்பு** *ōlai-k-kombu,* பெ. (n.) ***மாட்டுக்கொம் பின் குற்றவகை*** (மாட்டு வா.); defect in the horns of cattle

*[ஓலை + கொம்பு.]*

**ஓலைக்கோள்** *ōlai-k-kōl,* பெ (n) ***மடல் போக்குவரத்து*** (P.T.L); correspondence, communication by letters.

*[ஓலை + கோள்.]*

**ஓலைகிழி-த்தல்** *ōlaikiḻi-,* 4 செ.குன்றாவி. (v.t) ***இறக்கச் செய்தல்;*** to bring about the death (சா.அக.)

*[ஓலை + கிழி. ஓலை = ஓலையில் எழுதப்படும் கணக்கு.]*

**ஓலைகூறு-தல்** *ōlai-kuṟu-,* 5.செ.கு.வி. (v.i.) ***திருமண வறிக்கை வெளியிடல்;*** to publish the banns, (chr.), notice in church of intended marriage.

*[ஓலை + கூறு.]*

**ஓலைச்சக்கரம்** *ōlai-c-cakkaram,* பெ. (n.) ***தாளிப்பனை;*** talipot. (சா.அக.).

*[ஓலை + சக்கரம்.]*

**ஓலைச்சரம்** *ōlai-c-caram,* பெ. (n.) ***ஓர் அணிகலன்;*** ornament

*[ஓலை + சரம்.]*

**ஓலைச்சிறகு** *ōlai-c-ciṟagu,* பெ. (n) ***பனையோலை யின் பாதி*** (வின்.); the half of palmyraleaf.

*[ஓலை + சிறகு.]*

**ஓலைச்சுருள்** *ōlai-c-curuḷ,* பெ. (n.) ***ஓலைமடல்*** (கடிதம்) (வின்.), letter written on a palmyra leaf, rolled up and enclosed in a centirikkam.

ம. ஓலச்சுருள்

*[ஓலை + சுருள்.]*

**ஓலைச்சுவடி** *ōlai-c-cuvaḍi,* பெ. (n.) 1. ***பனையோலை யில் எழுதிக் கோத்துக் கட்டிய பொத்தகம்;*** manuscript on palmyra leaf 2. ***மீன்வகை*** (மதி.க 11,39); a kind of fish

*[ஓலை + சுவடி. சுவடித்தல் = இணைத்தல், சேர்த்தல், கோத்துக் கட்டுதல்.]*

**ஓலைத்தூக்கு** *ōlai-t-tūkku,* பெ. (n) ***ஓலையில் எழுதப் பட்ட பாமடல்;*** note written on a palmyra leaf by a poet and addressed to a chief or a person of wealth, setting out his (poets) many attainments and praying to gifts ''மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்'' (நன்.53).

*[ஓலை + தூக்கு.]*

**ஓலைதீட்டல்** *ōlaidīttal,* பெ. (n) ***திருமுகம் வரைதல்*** (ஆ.அக); to write a letter on palmyra leaf

*[ஓலை + தீட்டல்.]*

**ஓலைதீட்டு-தல்** *ōlai-tīttu-,* 5.செ.கு.வி. (v.i) ***ஓலையி லெழுதுதல்*** (வின்.); to write on palm leaf

*[ஓலை + தீட்டு தீட்டுதல் = வரைதல், எழுதுதல். தொன்முது தமிழர் ஓவிய எழுத்தைக் கையாண்டதால், தீட்டுதல், வரைதல் எழுதுதல் என்பன ஓவியம் வரைதலைக் குறித்தன.]*

**ஓலைதீட்டும்படை** *ōlai-tīttum paḍai,* பெ. (n.) ***எழுத் தாணி*** (திவா.); style

*[ஓலை + தீட்டும் + படை. படை = கருவி, எழுத்தாணி.]*

**ஓலைநாயகம்** *ōlai-nāyagam,* பெ. (n) ***ஓலைநாயகன்*** பார்க்க; see *ōlaināyagaṉ*

*[ஓலை + (நாயகன்) நாயகம்.]*

**ஓலைநாயகன்** *ōlai-nāyagan,* பெ (n) **சோழருடைய தலைமைச் செயலாளன்** (insc); Chief Secretary in the time of the Chōlas

*[ஓலை + நாயகன் நயன → நாயன → நாயகன் ]*

**ஓலைநெல்** *ōlai-nel,* பெ. (n) **நெல்வகை** (A.); a kind of paddy

*[ஓலை + நெல் அகன்ற நெலவகை.]*

**ஓலைப்பாசுரம்** *ōlai-p-pācuram,* பெ (n) **ஓலைப்பாயிரம்** பார்க்க, see *ōlaippāyiram* ''வருக'' என்னு மளவும் ஓலைப் பாசுரம்'' (சீவக 2147,உரை.)

*[ஓலை + (பாயிரம்) பாசுரம் ]*

**ஓலைப்பாம்பு** *ōlai-p-pāmbu,* பெ. (n.) **ஒருவகைப் பாம்பு;** a kind of snake

ம. ஓலபபாமபு, ஓலசுருளன்

*[ஓலை + பாம்பு வயிறகன்ற பாம்பு ]*

**ஓலைப்பாயிரம்** *ōlai-p-pāyiram,* பெ (n) **மடலில் எழுதப்படும் செய்தி;** communication written on palmyra leaf ஓலைப்பாயிரமு முதலாயின வெல்லாங் கொசசகமாதற்கு இழுக்கென்னையெனின்'' (தொல் பொருள்.461,உரை.).

*[ஓலை + பாயிரம். பயிர்தல் = அழைத்தல் பயிர் → பாயிரம் ]*

**ஓலைப்பால்** *ōlaippāl,* பெ. (n) **பனங்கள்;** palmyra toddy. (சா.அக.).

*[ஓலை + பால்.]*

**ஓலைப்பிரண்டை** *ōlaippirandai,* பெ (n) **ஓர்வகைத் தட்டைப் பிரண்டை;** a kind of flat adamant creeper of the species of vitex quadranger laris (சா அக )

*[ஓலை + பிரண்டை ]*

**ஓலைப்பிள்ளை** *ōlai-p-pillai,* பெ. (n) **ஓலையினாற் செய்த பொம்மை;** (நாஞ்). doll made of ōlai, dist fr. cīlai-p-pillai. (சீலைப்பிள்ளை )

*[ஓலை + பிள்ளை.]*

**ஓலைப்புறம்** *ōlai-p-puram,* பெ (n) **கட்டளை;** command, order ''ஓலைப்புறத்துச் செல்லாத நாடு''. (குருபரம்.10,பன்னீ.).

*[ஓலை + புறம். ஓலைப்புறம் = ஓலையின்புறத்தே எழுதப்பட்ட கட்டளை ]*

**ஓலைப்பூ** *ōlai-p-pū,* பெ (n) **தாழம்பூ;** screwpine flower ''ஓலைப்பூவொ டுவகைமுத்துச் சோர.'' (திருப்பு.445).

*[ஓலை + பூ.]*

**ஓலைபோக்கு-தல்** *ōlai-pōkku-,* 7.செ.கு.வி. (v.i.) **ஓலையிற் செய்தியெழுதி யனுப்புதல்** (கம்பரா.கார் முக.66); to send a message written on a palmyra leaf.

*[ஓலை + போக்கு.]*

**ஓலைமுகப்பாசுரம்** *ōlai-muga-p-pāśuram,* பெ (n) மடலில் (கடிதம்) **தொடக்கத்தெழுதும் வக்கணை** (சிலப் 13,87,உரை ). prefatory address in a letter on a palmyra leaf

*[ஓலை + முகம் + பாசுரம் பாயிரம் → பாசுரம் ]*

**ஓலைமுத்திரை** *ōlai muttirai,* பெ (n) **ஓலைமுகப்பிலிடும் முத்திரை** (வின் ); stamp imprinted on a palmyra-leaf document

*[ஓலை + முத்திரை ]*

**ஓலைமுரி** *ōlai-muri,* பெ (n) **ஓலையின் செப்பமின்மை** (வின் ). unevenness of a palm-leaf

*[ஓலை + முரி ]*

**ஓலைமுறி** *ōlai-muṟi,* பெ. (n) **ஓலைச்சீட்டு;** memorandum on a palmyra leaf, chit

*[ஓலை + முறி முறி = இளந்தளிர், இளமடல், இளம் பனையோலை ]*

**ஓலைமூங்கில்** *ōlai-mūngil,* பெ (n) **மூங்கில் வகை** (யாழ் அக ), a kind of flat bamboo

*[ஓலை + மூங்கில் ]*

**ஓலையாவணம்** *ōlai-y-āvanam,* பெ (n) **ஓலையில் எழுதிய பதிவுச் செய்தி;** palm leaf document (SII 120)

*[ஓலை + ஆவணம் ]*

**ஓலையாள்** *ōlai-y-āl,* பெ. (n) **செய்திகொண்டு செல்பவன்** (வின் ), messenger who carries letters written on a palmyra leaf

*[ஓலை + ஆள்.]*

**ஓலை யெழுத்தன்** *ōlai-eluttan,* பெ (n) **எழுத்தர்;** scrivener, accountant (சேரநா ).

ம. ஓலயெழுத்தன

*[ஓலை + எழுத்தன் ]*

**ஓலையெழுத்து** *ōlai-y-eluttu,* பெ. (n.) **எழுத்தர்பணி;** office of clerk (I M P N A 676)

*[ஓலை + எழுத்து.]*

**ஓலையெழுது-தல்** *ōlai-y-eludu,* 5 செ கு வி (v i ) 1 **ஏடெழுதுதல்;** to inscribe on a palmyra leaf 2 **கடிதம் அனுப்புதல்;** to send a letter (செ.அக )

*[ஓலை + எழுது.]*

**ஓலையெழுது-தல்** *ōlai-y-eludu,* 5.செ.கு வி. (v.i ) **சீர்வரிசையை உறுதிப்படுத்தி சீட்டு எழுதுதல்** (யாழ்.அக.); to write a deed of gift, as sridhana

*[ஓலை + எழுது.]*

**ஓலைவரையன்** *ōlai-varaiyan,* பெ. (n.) **புலி, கடுவாய்;** tiger (சேரநா.).

ம. ஓலவரயன்.

*[ஓலை + வரையன். ஓலை - பட்டையானது வரை = கோடு ]*



ஓலைப் பாம்பு




ஓலைவாளை



ஓரிதழ் தாமரை



ஓலைவாலன்

**ஓலைவாங்கு-தல்** *ōlai-vāngu-,* 7 செ கு வி (v i) ***இறப்புச் செய்தியை ஏற்றல்*** (வின் ), to die; lit , to receive the summons of death

*[ஓலை + வாங்கு ]*

**ஓலைவாசி-த்தல்** *ōlai-vāsi-,* 4 செ கு வி (v i) ***திருமண அறிக்கை வைத்தல்;*** to publish the banns (Chr )

*[ஓலை + வாசி வாயித்தல் → வாசித்தல ]*

**ஓலைவார்-தல்** *ōlai-vār-,* 2.செ கு வி (v i) ***எழுதுவதற்கு உதவுமாறு ஓலைசீவுதல்;*** to trim a palmyra leaf for writing up on

*[ஓலை + வார் வார்தல் = மெல்லச்சீவுதல் ]*

**ஓலைவாரி** *ōlai-vāri,* பெ (n) ***ஓலைசீவுங் கத்தி;*** knife used for trimming palmyra leaves

*[ஓலை + வாரி ]*

**ஓலைவாலன்** *ōlai-vālan,* பெ (n) ***மீன்வகை*** (பறாளை பள்ளு 16), a kind of fish

*[ஓலை + வால் + அன் ]*

**ஓலைவாளை** *ōlai-vālai,* பெ (n) 1 ***வாளைமீன் வகை;*** cutlas fish, silvery, Trichiurus savala "ஓலை வாளைக்க ருவா டுண்டக்கால்" (பதார்த்த 926) 2. ***சாவாளை மீன்;*** cutlas-fish, greyish, Trichiurus hanmela

ம. ஒலமத்ச்யம்

*[ஓலை + வாளை ]*

**ஓலைவீடு** *ōlai-vīdu,* பெ (n) ***பனையோலையால் வேய்ந்த வீடு;*** house thatched over with palmyra leaves தென்னை ஓலையால் வேய்ந்த வீடுமாம் -

*[ஓலை + வீடு ]*

**ஓலைவெட்டுப்பனை** *ōlai-vettu-p-panai,* பெ. (n) ***ஓலையைத் தவிர வேறு ஒரு பயனையுந் தராத பனைவகை*** (G Tn D I 307); palmyra which has served no other purpose but that of providing leaves, one of the five idara-ayittam-panai

*[ஓலை + வெட்டு + பனை.]*

**ஓலைவேலி** *ōlai-vēli,* பெ. (n.) ***பனையோலையாற் பின்னப்பட்ட வேலி*** (வின்.); hedge, plaited with palm leaves

*[ஓலை + வேலி.]*

**ஓலோலப்படு-தல்** *ōlōla-p-padu-,* 20.செ கு.வி (v.i.) ***கண்ட இடத்தில் உதவிகேட்டுக் கிடைக்காமல் பெரிதும் துன்பப்படுதல்;*** to be driven from pillar to post

*[ஓலம் + ஓலம் - ஓலோலம் + படுதல். ஓலம்படுதல் = உதவிகேட்டு இரந்துநிற்றல். இச்சொல் இக்காலத்தில் லோல்படுதல் எனத் திரிந்து விட்டது.]*

**ஓலோலமென்றலை-தல்** *ōlōlamenralai-,* 4.செ கு.வி (v i) ***கண்ட இடத்தில் உதவிகேட்டு அலைதல்;*** to go from one resource to another seeking help

*[ஓலம் = புகலிடம் தேடும் இரககச்சொல் ஓலம், ஓலம் → ஓலோலம் இச்சொல் இக்காலத்தில் 'லோலோ என்றலைதல்' எனத் திரிந்துவிட்டது ]*

**ஓவம்**[1] *ōvam,* பெ (n.) ***ஓவியம்;*** picture, portrait "ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்" (பதிற்றுப் 88,28)

*[ஒவ்வு → ஒவ்வம் → ஓவம் → ஓவியம்.]*

**ஓவம்**[2] *ōvam,* பெ. (n) ***உயரம்*** (யாழ் அக ); height

ம. ஓரம்

*[ஓ + அம் - ஓவம் ]*

**ஓவர்** *ōvar,* பெ (n) 1 ***சித்திரகாரர்;*** painters, sculptors 2. ***ஏத்தாளர்;*** bards, eulogists employed by princes to proclaim their titles and sing their praises "ஓவரும் பாட" (சீவக 1844). 3 ***கம்மாளர்*** (சூடா ); smiths

*[ஓவம் → ஓவர் ]*

**ஓவல்** *ōval,* பெ (n) ***வருந்தல்;*** suffering (சா அக ).

*[ஓ → ஓவு + அல் - ஓவல் ஓ - இரக்கம் குறித்த ஒலிக்குறிப்புச் சொல். ஓவல் = துயருறுதல் ]*

**ஓவா(வரு)-தல்** *ōvā-,* 18.செ.கு.வி. (v.i.) ***ஒழிதல்*** (திருக்கோ 212,உரை.), to cease

*[ஓவு + வரு - ஓவரு → ஓவா. ஓ - தல் = நீங்குதல், ஒழிதல்.]*

**ஓவாப்பிணி** *ōvāppiṇi,* பெ. (n.) ***தீராத நோய்;*** incurable disease "உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்" (குறள்.734) (சா.அக )

*[ஓ + ஆ (எ ம இ.நி.) + பிணி ]*

**ஓவாமுயற்சி** *ōvā-muyarci,* பெ. (n) ***இடைவிடாமல் முயலுகையாகிய வேளாண்மாந்தரியல்பு*** (திவா.); perseverance, a characteristic of the Vēlālas

*[ஒய்வு → ஓவு + ஆ + முயற்சி 'ஆ' (எ ம.இ.நி.).]*

**ஓவாமை** *ōvāmai,* பெ. (n.) ***ஒழியாமை;*** unceasing effort (ஆ.அக.).

*[ஓ + ஆ + மை 'ஆ' (எ ம இ.நி )]*

**ஓவாய்** *ō-vāy,* பெ (n.) 1. ***பற்கள் போன வாய்;*** mouth lacking teeth. 2. ***மூளியான கலத்தின் வாய்;*** vessel with broken brim. (சா.அக.).

ம. ஓவாய்.

*[ஒறு + வாய் - ஒறுவாய் → ஓவாய்.]*

**ஓவாய்ப்பல்** *ō-vāy-p-pal,* பெ. (n.) ***ஒறுவாய்ப்பல்*** பார்க்க; see *oṟuvāyppal.*

*[ஒறுவாய் → ஓவாய் + பல்.]*

**ஓவாய்ப்பானை** *ō-vāy-p-pāṉai,* பெ. (n.) ***ஒறுவாய்ப் பானை*** பார்க்க; see *oṟuvāyppāṉai.*

*[ஒறுவாய் → ஓவாய் + பானை.]*

**ஓவாயன்** *ōvāyaṉ*, பெ. (n) ***உதடுசிதைந்த வாயுள்ள வன்;*** harelipped man ''ஓவாயன் கண்ணறைய னானா லும்'' (நெல்விடு 269).

**ம.** ஓவாயன்.

*[ஒறு + வாயன் - ஒறுவாயன் → ஓவாயன்.]*

**ஓவி** *ōvi*, பெ. (n) ***சித்திரம்;*** picture, painting ''ஓவிநல லார்'' (திவ்.பெரியதி.2,8,7)

*[ஓவம் → ஓவி.]*

**ஓவியகாயம்** *ōviya-kāyam*, பெ (n) ***புலி;*** tiger, lit. picturesque body ''ஆவி செகுத்தன ரோவிய காயத் தினை யம்மா'' (வரத பாகவத காரிந்தி 28)

*[ஓவியம் + காயம். காயம் = உடம்பு.]*

**ஓவியநூல்** *ōviya-nūl*, பெ. (n) ***சித்திரநூல்*** (மணி 2,31). treatise on painting

*[ஓவியம் + நூல்.]*

**ஓவியப்பேச்சு** *ōviya-p-pēccu*, பெ (n) ***இனிய பேச்சு;*** sweet speech

*[ஓவியம் + பேச்சு]*

**ஓவியம்** *ōviyam*, பெ (n) 1 ***சித்திரம்;*** picture, portrait ''கண்கவ ரோவியங் கண்டு'' (மணி 3,131) 2 ***சித்தி ரத்தொழில்;*** art of painting ''ஓவியத்துறை கைபோய வொருவனை'' (நைடத அன்னத்தைக்கண் 6) 3 ***அழகு, ஓவியமான பேச்சு;*** beauty, fineness, elegance in speech 4 ***படிமம்;*** statue, pupper (W)

**ம.** ஓவியம்

*[ஓ → ஓவியம் (முதா.218)]*

**ஓவியன்** *ōviyaṉ*, பெ (n) 1 ***சித்திரமெழுதுவோன்;*** painter ''ஓவிய னுள்ளத் துள்ளியது வியப்போன்'' (மணி 5,7). 2. ***படிமம் செய்பவன்*** (வின்); sculptor who fashions images of idols

**ம.** ஓவியர்.

*[ஓவியம் → ஓவியன்.]*

**ஓவு**[1] *ōvu*, பெ (n) ***கதவு;*** door (ஆ அக)

*[ஓ → ஓவு ஓவு = நீக்கு, திற.]*

**ஓவு**[2] *ōvu*, பெ. (n) ***சித்திரம்;*** painting, picture ''ஓவுறழ் நெடுஞ்சுவர்'' (பதிற்றுப் 68,17)

*[ஓவ்வு → ஓவு]*

**ஓவு**[3]**-தல்** *ōvu-*, 7 செ கு.வி (vi) 1 ***நீங்குதல்;*** to remove, separate ''மலங்க ளெல்லா மோவின போது'' (சி.சி 4,37). 2 ***முடிதல்;*** to cease, terminate, become extinct ''கூப்பீ டோவிற்று'' (ஈடு 2,9,1). - 5 செ.குன் றாவி (vt) ***நீக்குதல்;*** to shun, avoid, give up ''ஓ ஓதல் வேண்டும்'' (குறள்.653).

**ம.** ஓவுக

*[ஒருவு → ஓவு. இனி, ஓவு-தல் ஓ-தல் எனத் தனிநெடு முதலாகியும் வினையடியாகும்]*

**ஓவு**[4] *ōvu*, பெ. (n) ***ஒழிகை;*** separation, removal, cessation ''ஓவில்செல்வமும்'' (கந்தபு சுக்கிரனுப 46)

*[ஒருவு → ஓவு]*

**ஓவு**[5]**-தல்** *ōvu-*, 7 செ கு வி (vi) 1 ***இசைதல்;*** to consent 2 ***வருந்தல்;*** to suffer (ஆ அக)

*[ஓவவு → ஓவு]*

**ஓவென்றவெளி** *ō-v-eṉra-veḷi*, பெ (n) ***பரந்த இடம்*** (யாழ்ப்). broad, open space

*[ஓ + என்ற + வெளி]*

**ஓவெனல்**[1] *ō-v-eṉal*, பெ (n) ***ஓரொலிக்குறிப்பு;*** sounding ō ''ஓவென வையகத் தோசைபோ யுயர்ந்ததே'' (சீவக 1843)

*[ஓ + எனல்]*

**ஓவெனல்**[2] *ōveṉal*, பெ (n) ***முழுஇருட்டாதற் குறிப்பு;*** signifying absolute darkness இருள் ஓவென்றிருந்தது (இராட்)

*[ஓ + எனல் 'ஓ' - அச்சக்குறிப்பு, இங்கு இருட்டைக் குறித்தது]*

**ஓள்-தல்** *ōl-*, 15 செ கு வி (vi) ***ஆணும் பெண்ணும் கூடுதல், கலவுதல், புணர்தல்;*** to copulate

**க.** ஒள்

*[ஒல் → ஓல் → ஓள்.]*

**ஓளி**[1] *ōḷi*, பெ (n) 1 ***ஒழுங்கு;*** continuous line, row ''மாளிகையோளி'' (கம்பரா மிதி 22) 2 ***யானைக்கூடம்*** (பிங்). elephant stall 3 ***மணமகளுக்குத்தரப்படும் சீர்வரிசை;*** matrimonial gift given to the bride

**க.** ஒளி

*[ஒல் → ஓல் → ஓளி.]*

**ஓளி**[2] *ōḷi*, பெ (n) ***யானை நீருண்ணுமிடம்;*** place where elephants drink water. ''பரவையோளி வாளேறு படநடாவி'' (தக்கயாகப் 108).

**க.** ஒளி

*[ஓளி[1] - ஓளி[2]]*

**ஓனம்** *ōṉam*, இடை. (part) ***எழுத்தின்சாரியை*** (தொல். எழுத்து.134,உரை.); euphonic particle added by children after sounding the long letters

*[ஏனம் → ஆனம் → ஓனம்]*

**ஓனாய்** *ōṉāy*, பெ. (n) ***ஓநாய்*** பார்க்க; see *ōnāy*.

**ஔ**[1] *au,* **தமிழ் வண்ணமாலையில் பன்னிரண்டாம் உயிரெழுத்தாகிய அரையங்காப்பு இதழ்குவியா பின்னண்ணச் செறிவுக் கூட்டுயிர் நெடில்;** 12th letter and vowel of the Tamil alphabet, the half-close back tense unrounded compound vowel

*[அ + உ (அஉ) - ஔ]*

பழஙகாலத தமிழ நெடுங்கணக்கில் இருகுறில் தனி நெடிலா யிற்று அமமுறைபபடி அகரஉகரம் ஔகாரமாயிற்று ஔ பழஙகாலததில அஉ எனறே எழுதபபட்டது ஔகாரத்திற்கு அடையாளக குறியீடாக ஒகரத்தின அருகில் எழுதபபடும் ளகர வரிவடிவம டாதி உயரம் உடையதாகச சிறிது படுதத (ஔ எழுத வேணடும எனபது மரபு சம உயர எழுத்துகளாக எழுதினால ஔவையாரை ஒ ளவையார் (olavaiyar) எனப் பிற மொழியாளர் படிகக நேரிடும்

**ஔ**[2] *au,* பெ (n) ***விரைந்தோடும் வளர்ப்பு விலங்குகளை 'நில்' என்னும் நிறுத்தற்குறிப்பு ஏவல் வினை;*** expression to halt the cattle and other running animals

*[அவ் → அவு → அவி = கெடுதல், தவித்தல் அவு → ஔ.]*

கட்டவிழ்ந்து ஓடும் மாட்டை 'ஔ ஔ' எனறு கூறி நிறுத்துவது கொங்கு நாட்டு வழககு

**ஔ**[3] *au,* பெ (n) ***தாரவிசையினெழுத்து*** (திவா.); (mus ) symbol representing the seventh note of the gamut, usu ni (செ அக )

*[அஉ → ஔ இருமாத்திரை நெடில்.]*

ஆ, ா, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனபன ச, ரி, க, ம, ப, த, நி என்பனவற்றுக்கு நிகரான ஏழிசைப் பணணொலிகளாகக் (சுரம்) கருதப்பட்டன. ஈற்று ஔகாரம் தாரத்தின் அடையாள எழுத்தாயிற்று

**ஔ**[4] *au,* பெ. (n.) ***பெண்;*** woman.

**தெ.** அவ்வ, **க.** அவ்வ, அவ்வெ, **து.** அப்பெ; **இந்.** ஔரத்.

*[அம்மை → அவ்வை → ஔ. இச்சொல் வடபுலமொழிகளில் ஔரத் எனத் திரிந்தது.]*

மேலையாரிய மொழிகளில் வழங்கி வரும் முன்னொட்டு wo - ஔகாரத்தின் திரிபாகும் woman என்பதைப் பெண்மகன் என்னும் தொல்காப்பியர் கால வழக்கொடு ஒப்பு நோக்குக.

**ஔ**[5] *au,* பெ. (n) 1 ***அழைத்தல், வியப்பு, தடை இவற்றைக் காட்டுமோர் குறிப்புச் சொல்;*** indicative of summoning, excitation or halting 2. ***கடித்தல்;*** biting. (ஆ.அக.).

*[ஆ → ஆவ் → ஔ (அழைத்தல்). ஓ → ஓவி → ஔ (வியப்பு).]*

**ஔகம்** *augam,* பெ (n) ***நிறுத்தம், இடைப்பாடு*** (சிலப்.14,156,உரை.), repetition by a chorus of the leader's song in a dancing peformance (செ.அக.).

*[ஒருகா. ஔ - இடை நிறுத்தற்குறிப்பு இடைச்சொல். ஔகம் - நிறுத்தி மீண்டும் தொடங்குவது ]*

**ஔகாரக்குறுக்கம்** *augāra-k-kuṟukkam,* பெ. (n.) ***தன் மாத்திரை யிற்குறுகிய ஔகாரம்*** (நன்.95); shortened 'au' as in மௌவல், one of ten cārpeḻuttu (செ.அக.).

*[ஔ + காரம் + குறுக்கம்.]*

செய்யுளில் இடத்திற்கேற்பத் தன்னளவில் சுருங்காது பலுக்கப படும் ஔகாரம் இரு மாத்திரை யளவினின்றும் 1½ மாத்திரை யாகக் குறைந்தொலிக்கும்.

**ஔகி** *augi,* பெ (n) ***இடைப்பாட்டுக்கூத்தி;*** danseuse. (ஆ.அக.).

*[ஔகம் → ஔகி.]*

**ஔசரம்** *auśaram,* பெ. (n.) ***இரும்புக்கல்;*** iron stone. (சா.அக.).

*[ஔ + சரம். ஔ = தடுத்தல், தாங்குதல்.]*

**ஔடதம்** *auḍadam,* பெ. (n ) ***ஔதம்*** பார்க்க; see *audam.*

*[ஔ = நிறுத்துதல், நீங்குதல். ஔதம் = நோய் நீக்கும் மருந்து. ஔதம் வடமொழியில் ஔஷதம் எனத்திரிந்தது.]*

**ஔடதமுறிப்பு** *auḍadamuṟippu,* பெ. (n.) ***ஔதமுறிப்பு*** பார்க்க; see *audamuṟippu.*

**ஔடதவாதி** *auḍada-vādi,* பெ. (n.) ***மூலிகையிலிருந்து உயிர் தேன்றியதென்று கூறுவோன்*** (யாழ்.அக.); one who holds that life was created out of herbs (செ அக.).

**ஔடதி** *auḍadi,* பெ (n) ***செடி, பூண்டு, காய்கள்;*** plants, herbs and vegetables (சா அக.).

**ஔடவப்பண்** *auḍavappaṇ,* பெ. (n.) ***ஐந்து இசை*** (சுரம்) ***மட்டும் பயன்படுத்தும் பண்*** (இராகம்); musical mode which moves up and down within fine notes of the scale; pentatonis. (செ.அக.).

*[ஐ (ஐந்து) → ஐவம் → ஔவம் → ஔதம் → ஔடம் → ஔடவம் (ஐந்துவகை) + பண்.]*

**ஔடவம்** *auḍavam,* பெ. (n.) ***ஔடவராகம்*** (சிலப். 13,106,உரை.) பார்க்க; see *auḍavarāgam.* (செ.அக.).

*[ஔ → ஔடவம் = தாரத்தில் தொடங்கும் பெரும்பாலைப்பண் அல்லாத சிறுபாலைப் பண்களுள் ஒன்று.]*

**ஔடவராகம்** *audava-rāgam,* பெ (n) ***ஔடவப்பண்*** பார்க்க; see *audavappaṉ*

**ஔடும்பரம்** *auḍumparam,* பெ (n) ***அவுதும்பரம்*** பார்க்க, see *avudumparam*

*[அவ்வு → அவு + தும்பரம் - அவுதும்பரம → உதும்பரம் - ஔடும்பரம தும்பரம் = செந்நிறம் அவுதும்பரம் = செந்நிறம் பொருந்திய தாமிரம ]*

**ஔதக் கூறு** *audakkūṟu,* பெ (n) ***மூலிகை அல்லது மருந்துச் சரக்குகளின் தன்மை;*** nature of drugs or other medicines (சா அக ).

**ஔதகம்** *audagam,* பெ. (n) 1 ***நீராளமான உணவு*** (உதகம்); liquid diet 2 ***நீலமணி;*** blue diamond (ஆ அக.)

*[1 உதகம → ஔதகம = நீராளமான உணவு, கஞ்சி. 2. நீரின் நிறமாகிய நீலமணிக்கல ]*

**ஔதம்** *audam,* பெ. (n.) ***மருந்து*** (சிலப்.14,170,அரும்.) medicine, medicament, drug, antidote.

*[அவ்வு - (அவி) → ஔவுதல் - கெடுத்தல், நீக்குதல் ஔ = நிறுத்துதல், தடுத்தல், நீக்குதல், குணப்படுத்துதல் ஔ → ஔதம் = நோய் நீக்கும் மருந்து ஔதம் வட மொழியில் ஔஷதம் எனத்திரிநதது ]*

**ஔத முறிப்பு** *audamuṟippu,* பெ. (n.) ***மருந்து வேகங் களை முறித்தல்;*** neutralising the action of drugs (சா.அக ).

*[ஔதம் + முறிப்பு ]*

**ஔவி-த்தல்** *auvi-,* 4 செ.கு.வி (vi) ***அவ்வி-த்தல்*** பார்க்க, see *avvi* (செ அக.)

*[அவ்வி-த்தல் → ஔவி-த்தல்.]*

**ஔவியம்** *auviyam,* பெ (n) ***மனக்கோட்டம்,பொறாமை, ஏய்ப்பு;*** evil bent of mind, envy, depravity, deceit (செ அக )

*[அவ்வியம் → ஔவியம் (த.வ 110).]*

**ஔவு-தல்** *auvu-,* 5 செ கு வி (vi) 1 ***வாயாற்பற்றுதல்;*** to grasp, seize, take hold of, with the mouth கன்று புல்லை யௌவித் தின்கிறது 2 ***அழுந்தியெடுத்தல்;*** to graze, to rub off, as the skin, to burn, scald so as to excoriate (செ அக )

*[அவ்வு → வவ்வு → ஔவு ]*

**ஔவை** *auvai,* பெ (n) 1. ***அவ்வை*** பார்க்க; see *avvai.* mother, matron, old woman. 2 ***ஆரியாங்கனை;*** female ascetic, especially used of the Jaina sect ''கூந்தலை யௌவை மார்கடாம் பணிவிலர் பறித்தனர்'' (சீவக.2637) 3. ***ஔவையார்*** பார்க்க, see *auvaiyār.*

**க., தெ.** அவ்வ்

*[அம்மை → அவ்வை → ஔவை (த வ 110) ]*

**ஔவை நோன்பு** *auvai-nōṉbu,* பெ (n.) ***செவ்வாய் நோன்பு;*** secret ceremony performed by some Vēḷāḷa women twice a year on a Tuesday, at midnight, when no males, even babes in arms, are allowed to be present (செ அக )

*[ஔவை + நோன்பு.]*

**ஔவையார்** *auvaiyār,* பெ. (n) ***பழைய பெண்புலவரு ளொருவர்*** (புறநா ), name of a famous poetess, author of many verses found in ancient classics and to whom are ascribed some later popular minor moral works also (செ அக )

*[ஔவை + ஆர். ஆர் = உயர்வுப் பன்மையீறு. ஈண்டு மதிப்புரவு குறித்தது ]*

**ஔவையோ** *uvaiyō,* இடை. (int) ***அம்மையோ;*** alas! expressing pity ''ஔவையோ வென்று போக'' (சீவக. 1271) (செ அக ).

*[ஔவை + ஒ. 'ஓ' வியப்புக்குறிப்பு இடைச்சொல்.]*



**ஃ** *k*, ***ஆய்தவெழுத்து: 13-ஆவது எழுத்து;*** 13th letter of the Tamil alphabet occurring only after a short initial letter and before a hard consonant as அஃகம and pronounced sometimes as a vowel and sometimes as a consonant (செ அக)

**மறுவ.** ஆய்தம, அஃகேனம் முப்பாறபுள்ளி, தனிநிலை

*[புணர்மொழியில் ய,வ,ல,ள மெய்யீற்றுத்திரிபு]*

ஓரெழுத்தின ஒலிபபு, முதலெழுத்துகள முப்பதிலும இல்லாத பிறிதொரு வேறுபாட்டு ஒலிப்புத் திரிபாவது சார்பெழுத்து குற்றியலுகரம குற்றியலிகரம ஆயதம எனும மூன்றும இத்திறத தின

ய்,வ்,ல,ள் ஈறறுசசொறகள் வல்லின வருமொழியொடு புண ரும்போது பெறும் வேறுபாட்டு ஒலிப்புத்திரிபே ஆய்தமாகும் கல + தீது - கஃறீது, முள் + தீது - முஃடீது அவ + கடிய - அஃகடிய வெய் + கு - வெஃகு ஆயதம இடையின எழுததுக்களில ஒலிபபுத்திரிபாயினும் இடையின எழுத்துகள் போனறு மொழியீறாகவில்லை குற்றியலுகரம் ஒன்றே மொழி யீறாகிறது

ஆய்தவெழுத்து மொழிமுதலும மொழியிறுதியும் ஆகாமை யின் முதலெழுத்துகளுள் ஒன்றாகசசேரவில்லை மொழியிடை உயிரொலித்திரிபான குற்றியலிகரம குறறியலுகரம் போன றவை மெயயொடு புணர்நது உயிர்மெயயாகினறன ஆயின் ஆய்தம் மெயயோடு புணராமல் புணர்மொழியிடை மெய்யின் திரிபாகிய பிறிதொரு மெயயாகவே நிற்றலின் புள்ளியின் (மெய்யின்) தனமையுடையதாயிற்று

மொழியிடைத தோன்றும் புதிய ஒலிப்பே சார்பெழுத்தாகக் கொள்ளபடுதலின் இது சார்பெழுத்தாயிறறு குற்றுகரம் உகரத் தின் மெல்லோசையாதலபோல இது ககரததின நலிபோசை யாதலின், தன்மையால் மெய்யெழுததை ஒததிருநதாலும் உயிரேறி உயிர்மெய்யாக இடந்தராமையிலும உயிரளபெடை போன்று அளபெடுத்தலின செயலகையால உயிரெழுத்தை ஒத்தி ருக்கிறது எனவே முழுமையாக உயிரெழுத்தும் ஆகாமல் மெய்யெழுத்தும் ஆகாமல் இடைநிற்றலின் தன்மையும் செய் கையும் நோக்கித் தமிழ் வண்ணமாலையில் உயிரெழுத்து வரிசையின் பின்னும் மெய்யெழுத்து வரிசையின் முன்னும் வைக்கப்பட்டது

உயிரெழுததையும் மெய்யெழுத்தையும் அடுத்துவரும் வல்லி னமெய், நகம், நஙகை என்றாற்போன்று நலிபோசை யுடைய தாகும அதுபோனறு ஆய்தமும் அடுத்துவரும் வல்லின மெய்யை நலிபோசையுடையதாக்கும் வல்லெழுத்து மெல்லெ ழுத்து உயிரெழுதது ஆகிய முத்திறப்பாங்கும உட்கொணடிருத் தலின் முபபாறபுள்ளி எனப்பட்டது முதலெழுத்தின் வகைமை யுள் எந்த இனததிலும் சேராததால தனிநிலை எனப்பட்டது.

சாாபெழுத்துகளில் குறறியலுகரம் குறறியலிகரங்களுககுத் தனிவரிவடிவம இல்லை ஏனெனில அவற்றின் பிறப்பிடமும மாறவிலலை ஒலிபபணபு மடடும மாறியுள்ளது ஆயின். ஆயதம் 'ல ள வ ய' மெய்களின திரிபொலியெனினும், ககரம் பிறகுமிடத்தையொட்டித் தன பிறப்பிடத்தை மாற்றிக் கொள்கிறது முதலெழுததுகளிலலாத புதிய ஒலிப்பையும பெற்றுக கொளகிறது பிறப்பிடததையும் ஒலிப்பையும ஒருசேர மாற்றிக்கொள்வதால் ஆய்தத்திறகும் புதிய வரிவடிவம் படைத்திடடுககொளள நேர்ந்தது

சார்நது வரினலலது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்
தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியில் தம்மியல பியலும்
(தொல எழுத் 101)

தொல்காப்பியரும் பிறப்பிடமும் ஒலிப்பு முயற்சியும வேறுபடு வது கருதியே சார்பெழுததுகளை வகைப்படுத்தியிருப்பதைமேற் கண்ட நூறபா வலியுறுத்துகிறது

ஒத்த காட்சி எனபதறகு, ஒழிந்த ஆய்தம் தமககுப் பொருந்தின நெஞ்சுவளியாற் பிறக்கும் என்றும 'காட்சி எனறது நெஞ்சினை' யெனறும நச்சினார்ககினியர் கூறியிருப்பது அததுணைப பொருத் தமுடையதாகத் தோனறவிலலை ஒதத காட்சி எனபதற்குத் ''தத்தம் முதலெழுத்துகளின் பிறப்பிடம் ஒலிபபு ஆகியவற்றைச் சார்ந்து,'' எனபபொருள் கொள்வதே நேரிது

சொல்லுக்கு உறுப்பாகிப் பொருள் புலப்படுத்தும எழுத்தோசை கள் அனைத்துககும எழுத்தாம் தன்மை தரவேண்டுதலின் சார்பெ ழுதது என வகைப்படுத்த வேணடுவதாயிறறு

நகம், நஙகை என்னும் சொற்களில் ககரம் நலிந்து ஒலிக்கிறது எனவே வல்லெழுததுகளின் நலிபை ஏன் சார்பெழுத்துகளாக்கி வேறு பிரித்து ஓதவில்லை என வினவுவாருளர் தமிழில முதலெழுத்துகள, பிறகும் இடத்தாலும ஒலிக்கும கால அளவா லும் வகைப்படுததப்பட்டுள்ளன சார்பெழுததுகள் பிறகும் இடத்தாலும ஒலிக்கும் முறையாலும் ஒன்றுபோல் தோன்றினும் மொழியிடைத தோன்றிய மாறறொலியனகளாதலின் (allophone) சாாபெழுத்துகளாயின சாாபெழுததுகளின் மாற்றொலிபபு களால் சொலலின் பொருள் வேறுபடுவதில்லை

மேலையாரிய மொழிகளில் வல்லெழுத்துகளின் நலிபெழுத்துகள் prt, brt என்றாற்போன்று பொருள்வேறுபாட்டுக்கு அடிப்படை யான முதலெழுத்துகளாக உள்ளன தமிழில் வல்லின நலிபோசை கள் முதலெழுத்துகள வரிசையில் சேர்வதில்லை சாாபெழுத்துகள் எல்லாம் புணர்மொழித்திரிபகளாகும் நகம் நஙகை போனறவற் றிலுளள வல்லின ககரத்தின நலிபு புணர்மொழிததிரிபால விளைநத மாறறொலியன்களல்ல உயிரெழுத்தையும் மென்க ணத்தையும் அடுத்து வரும் இடப்பாங்கால் பெற்ற மெலியோசை யாதலின் சார்பெழுத்தாக வகைப்படுத்தப் படவில்லை.